# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்
**(1887-1987)**

தலைமைத் தொகுப்பாசிரியர்
கவிஞர் **முரசு. நெடுமாறன்**, எம்.ஏ.,
மலேசியா

தலைமைப் பதிப்பாசிரியர்
தமிழவேள், பேராசிரியர்
**இராம. சுப்பிரமணியன்**, எம். ஏ.,
தமிழ்நாடு

**அருள்மதியம் பதிப்பகம்**
5-பிஏ, சோலோக் பூலாய், ஆப் ஜாலான் தெலுக் பூலாய்,
41100 கிள்ளான், சிலாங்கூர், மலேசியா
தொ.பே. 03-3320003 தொ. நகல் 03-3320201

# நூற்குறிப்பு


| | | |
|---|---|---|
| தலைப்பு | : | மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம் (1887 - 1987) |
| முதற்பதிப்பு | : | தி. பி. 2028 (1997) |
| வெளியிட்டோர் | : | அருள்மதியம் பதிப்பகம் |
| பக்கங்கள் | : | 116 + 964 = 1080 |
| பதிப்புரிமை | : | **தமிழ்நெறி மன்றம்**<br>15, ஜாலான் 18-A,பண்டமாரான் ஜெயா,<br>42000 கிள்ளான் துறைமுகம், மலேசியா. |
| அ.நூ.த.எ. | : | 983-99226-0-2; 983-99226-1-0 (pbk)<br>1. மலேசியத் தமிழ்க் கவிதைகள்-மலேசியத் தமிழர் வரலாறு-மலேசியத் தமிழிலக்கிய வரலாறு.<br>I. முரசு. நெடுமாறன், II. இராம. சுப்பிரமணியன், 894,8111 |
| கிடைக்குமிடம் | | |
| மலேசியாவில் | : | **உமா பதிப்பகம்**<br>85, ஜாலான் பெர்கிந்தியான், செந்தூல்,<br>51100 கோலாலம்பூர். தொ.பே. 03-4415757 |
| சிங்கப்பூரில் | : | **ஜி.ஜி.எஸ். பதிப்பகம்**<br>48, சிராங்கூன் சாலை, #01-03-லிட்டல் இந்தியா<br>ஆர்கேட், சிங்கப்பூர் - 217959. தொ.பே.: 02-2969640 |
| இந்தியாவில் | : | **ஐந்திணைப் பதிப்பகம்**<br>எண் 279, பாரதி சாலை, திருவல்லிக்கேணி,<br>சென்னை - 600 005. தொ.பே.: 044-8549410 |

| விலை | : | | சிறப்புக் கட்டு | அட்டைக் கட்டு |
|---|---|---|---|---|
| இந்தியாவில் | : | உருபா | 1100.00 | 660.00 |
| பிறநாடுகளில் | : | US$ | 60.00 | 50.00 |

| | | |
|---|---|---|
| ஒளியச்சு | : | **கேஷ் எண்டர்பிரைஸ்** (முரசு தமிழ்க் கணினி முறை)<br>5-E, சோலோக் பூலாய், ஆப் ஜாலான் தெலுக் பூலாய்,<br>41100 கிள்ளான், சிலாங்கூர், மலேசியா<br>தொ. பே.: 03-3320212 தொ. ந.: 03-3320201<br>மின்னஞ்சல் : cache@cache.po.my |
| நூலச்சு | : | **மல்டிவிஸ்டா குளோபல் அச்சகம்**<br>36–ஏ, வேளச்சேரி முதன்மைச் சாலை<br>சென்னை – 600 042. தொ.பே. 044–24 506 20 |

# MALAYSIA TAMIL KAVITHAIK KALANJIAM

***(AN ANTHOLOGY OF MALAYSIAN TAMIL POETRY)***

**(1887 - 1987)**

Chief Compiler

**MURASU. NEDUMARAN**, M.A., Malaysia

Ph.D.Scholar, Pondicherry University, S. India

Chief Editor

Prof. **R. SUBRAMANIAN**, M.A.,

Tamil Nadu

Published By

**ARULMATHIYAM PUBLICATIONS**

5-BA, Solok Pulai, Off Jalan Teluk Pulai,

41100 Klang, Selangor, Malaysia

Tel: 03-3320003 Fax: 03-3320201

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **MALAYSIA TAMIL KAVITHAIK KALANJIAM (1887-1987)** (An Anthology of Malaysian Tamil Poetry) |
| First Edition | : | 1997 (Thiruvalluvar Year 2028) |
| Published By | : | **ARULMATHIYAM PUBLICATIONS** |
| Pages | : | 116 + 964 = 1080 |
| Copyright | : | **EDUCATIONAL & TAMIL CULTURAL SOCIETY** (Tamil Neri Mandram) 15, Jalan 18-A, Pandamaran Jaya, 42000 Port Klang |
| ISBN | : | Malaysia Tamil Kavithaik Kalanjiam: (An Anthology of Malaysian Tamil Poetry) (1887-1987) ISBN 983-99226-0-2; 983-99226-1-0 (pbk) 1. Tamil Poetry--Malaysia--History. 1. Murasu. Nedumaran II. Subramanian, R. 894,8111 |
| Copies available in Malaysia | : | **UMA PUBLICATIONS** 85, Jalan Perhentian, Sentul, 51100 Kuala Lumpur. Tel: 03-4415757 Fax: 03-4419395 |
| in Singapore | : | **G.G.S. PUBLICATION** 48, Serangoon Road, #01-03, Little India Arcade, Singapore - 217959. Tel: 02-2969640 Fax: 02-2975065 |
| in India | : | **AINTHINAI PATHIPPAGAM** 279, Barathi Salai, Thiruvallikkeni Chennai - 600 005, S. India. Tel : 044-8549410 |

| Price : | | | Special Binding | Normal Binding |
|---|---|---|---|---|
| India | : | Rs. | 1100.00 | 660.00 |
| Other countries | : | US$ | 60.00 | 50.00 |

| | | |
|---|---|---|
| Laser Setting | : | **CACHE ENTERPRISE SDN. BHD.** No. 5E, Solok Pulai off Jalan Teluk Pulai, 41100 Klang, Selangor, Malaysia. Tel. / Fax : (6 03) 3320201. email: cache@cache.po.my |
| Offset Print | : | **Multivista Global Limited** 36-A, Velachery Main Road, Chennai - 600 042. Tamilnadu. Ph: 044-2450620, Fax: 044- 2453858 |

# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

## (1887 - 1987)

## தொகுப்புக் குழுவினர்

**தலைமைத் தொகுப்பாசிரியர்:**

| | | |
|---|---|---|
| கவிஞர் முரசு. நெடுமாறன், எம். ஏ. | --- | மலேசியா |

**தலைமைப் பதிப்பாசிரியர்:**

| | | |
|---|---|---|
| பேராசிரியர் இராம. சுப்பிரமணியன், எம்.ஏ. | --- | தமிழ்நாடு |

**துணைப் பதிப்பாசிரியர்:**

| | | |
|---|---|---|
| தவத்திரு நக்கீர அடிகள், எம். ஏ. | --- | தமிழ்நாடு |
| செந்தமிழ்ப் பாவலர் தணிகை உலகநாதன் | --- | தமிழ்நாடு |

**துணைத் தொகுப்பாசிரியர்:**

| | | |
|---|---|---|
| புலவர் ப.மு.அன்வர் | --- | மலேசியா |
| தமிழ்மணி அரு. சு.ஜீவானந்தன் | --- | மலேசியா |
| கவிஞர் ரெ. சண்முகம் | --- | மலேசியா |

**உதவியாளர்:**

| | | |
|---|---|---|
| கவிஞரேறு அமலதாசன் | --- | சிங்கப்பூர் |
| திரு. சதாசிவம் வீரையா | --- | சிங்கப்பூர் |
| திரு. சை. பீர் முகமது | --- | மலேசியா |
| திரு. பி. கோவிந்தசாமி | --- | மலேசியா |
| மணிக்கவிஞர் பாதாசன் | --- | மலேசியா |
| கவிச்சுடர் காரைகிழார் | --- | மலேசியா |
| கவிஞர் மைதீ. சுல்தான் | --- | மலேசியா |

**நெறிப்படுத்துநர்:**

| | | |
|---|---|---|
| பேராசிரியர் முனைவர் க.ப.அறவாணன் | --- | தமிழ்நாடு |
| பேராசிரியர் முனைவர் ச. சிங்காரவேலு | --- | மலேசியா |

**தகவுரைஞர்:**

| | | |
|---|---|---|
| திரு. ஆ. சோதிநாதன், 'மயில்' நிருவாக ஆசிரியர் | --- | மலேசியா |
| டாக்டர் சி. கந்தையா | --- | மலேசியா |
| டாக்டர் சி.சொக்கலிங்கம் | --- | மலேசியா |
| பேராசிரியர் முனைவர் தமிழண்ணல் | --- | தமிழ்நாடு |
| முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் | --- | தமிழ்நாடு |
| முனைவர் ச.சாம்பசிவன், 'தமிழ்மாருதம்' ஆசிரியர் | --- | தமிழ்நாடு |
| சொற்கொண்டல் மீ. முருகு. சீனிவாசன் | --- | சிங்கப்பூர் |

**கணினி அச்சும் வடிவமைப்பும் :**

| | | |
|---|---|---|
| கேஷ் எண்டர்பிரைஸ் (முரசு தமிழ்க் கணினிமுறை) | --- | மலேசியா |

# MALAYSIA TAMIL KAVITHAIK KALANJIAM

(An Anthology Of Malaysian Tamil Poetry) (1887-1987)

## EDITORIAL STAFF

**Chief Compiler:**

Mr. Murasu. Nedumaran, M.A. --- Malaysia

**Chief Editor:**

Prof. R. Subramanian, M.A. --- Tamil Nadu

**Assistant Editors:**

His Holines A. Nakkira Adigal, M.A. --- Tamil Nadu
Pulavar Thanigai Ulaganathan --- Tamil Nadu

**Assistant Compilers:**

Mr. P.M. Anwar --- Malaysia
Mr. A.S. Jeevananthan --- Malaysia
Mr. Re. Shanmugam --- Malaysia

**Assistants:**

Mr. Amaladasan --- Singapore
Mr. Sathasivam Veeriah --- Singapore
Mr. S. Peer Muhammad --- Malaysia
Mr. P. Govindasamy --- Malaysia
Mr. Paadasan --- Malaysia
Mr. Kaaraikilar --- Malaysia
Mr. M. Sultan --- Malaysia

**Guides:**

Prof. Dr. K.P. Aravanan, B.O.I., M.Lit., Ph.D. --- Tamil Nadu
Prof. Dr. S. Singaravelu, M.A., Ph.D. --- Malaysia

**Advisers:**

Mr. A. Sothinathan, Managing Editor, 'Mayil' --- Malaysia
Dr. S. Kandiah, A.M., MD., FRCS. --- Malaysia
(Diplomate American Board Of Plastic Surgery)
Dr. S. Sockalingam, M.B.B.S. (Madras), M.C.G.P.(Mal.) --- Malaysia
Prof. Dr. Tamizhannal, M.A., Ph.D. --- Tamil Nadu
Dr. Selemboli S. Sellappan, M.A., Ph.D. --- Tamil Nadu
Dr. S. Sambasivan, Editor, 'Tamil Marutham' --- Tamil Nadu
Mr. M. Murugu Seenivasan --- Singapore

**Typesetting & Design:**

CACHE Enterprise Sdn. Bhd. --- Malaysia

# செந்தமிழ்ப் பரிசில்!

உலகுயிர்த் தொகுதிகள் பலப்பல படைத்து,
நிலைபெறக் காத்தருள் சுரக்கும் நீர்மையன்;
ஒருவ னன்றியோ ரிறைவன் இல்லையால்,
மருவி நின்றவன் முன்தொழு திறைஞ்சுவாம்!
பொன்கொழித் திருக்கும் தென்கிழக் காசிய
மன்பதைக் குள்ளோர் இன்பொழில் மலேசியக்
குறிஞ்சி நாட்டிடை வெறுஞ்சொல் பயிலா
உறுஞ்சீர்க் கொருதலை யாகிய பைந்தமிழ்
என்று புகுந்ததென் றியாரறி குவரோ?
அன்று தொடங்கிப் பாட்டும் கலையும்
மருத மழவரின் விருதென வளர்ந்து,
பருதிப் பந்தெனத் திரிதரல் அறிகுவம்;
வரலா றறியாப் பெருநாள் தொடங்கி,
விரியும் பாட்டுப் பரவையின் வியப்பில்
ஒருநூ றாண்டு கால எல்லையின்
அரியன சிலவும் உரியன சிலவும்
காலச் சுழற்சியின் காட்சிகள் சிலவும்
ஞாலத் தியற்கை நவில்வன சிலவும்
அழுகை சிலவும் மூன்றாம் பாலில்
விழுகை முதலா மெய்ப்பாடு சிலவும்
தேர்ந்து தொகுத்துத் தெவிட்டா உணர்வின்
ஆர்ந்த 'தமிழ்நெறி' மன்றஆ தரவில்
'மலேசியத் தமிழ்க்கவி தைக்களஞ் சிய'மென
இலகுபேர் தோற்றி இந்நூல் தொகுத்தனம்!
மழைவளம் பிழையா மலேசிய நாட்டில்
தழையச் செந்தமிழ்க் கவிதை வளர்த்த
பாவலர் தமக்கும் நாவலர் தமக்கும்
காவலாய் அமர்ந்துவழி காட்டியோர் தமக்கும்
கிழமை மாத நாளே(டு) எனத்தமிழ்
உழவுத் தலைத்தொழில் உஞற்றுநர் தமக்கும்
பூந்தாது தேர்ந்து புலம்பு தும்பியின்
ஆந்தோ(து) உரைக்கும் ஆய்திறன் வளர்க்கும்
கலைஞர் ஆயவர் தமக்கும்
சுவைக்கும் செந்தமிழ்ப் பரிசுஆ மாறே!

*11.10.1996* - தொகுப்புக் குழுவினர்



மலேசிய இந்தியர் காங்கிரசு தேசியத் தலைவரும்

மலேசியப் பொதுப்பணி அமைச்சருமான மாண்புமிகு

# டத்தோஸ்ரீ டாக்டர் ச. சாமிவேலு

அவர்கள் வழங்கிய

# வாழ்த்துச் செய்தி

'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சிய'த் தொகுப்பு நூலிற்கு வாழ்த்துச் செய்தி வழங்குவதில் யான் பெருமகிழ்ச்சியடைகிறேன்.

1887 முதல் 1987 ஆம் ஆண்டுவரை (நூறாண்டுகளில்) வெளிவந்த மலேசியத் தமிழ்க் கவிதைகளிலிருந்து தேர்ந்தெடுத்த சுவையான பாடல்களின் தொகுப்பாய் இந் நூல் வெளிவருகிறது. கவிதைத் துறை வரலாற்றையும் சமுதாயப் போராட்டங்களையும் இது சித்திரிக்கிறது.

குறிப்பிட்டதொரு நோக்கத்தை ஒட்டியோ, கொள்கையைச் சார்ந்தோ இல்லாமல் இந் நாட்டின் நூறாண்டு காலக் கவிஞர் உற்ற உணர்வுகளின் களஞ்சியமாய் இது மிளிர்கிறது.

பரந்த எண்ணத்தொடு, சாதி, சமய, விருப்பு, வெறுப்புகளைக் களைந்து, கட்சிக் கட்டுப்பாடுகளை எல்லாம் கடந்து, சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினரின் உணர்வுக ளெல்லாம் ஒன்றுசேர்த்த இதுபோன்றதொரு களஞ்சியம் தமிழிலக்கிய வரலாற்றில் இன்றுவரை மலர்ந்ததில்லை.

மலேசியக் கவிஞர் எவ்விதப் பயனையும் எதிர்பாராமல் உள்ளத் துணர்வுகளைப் படையலாக்கிச் சமுதாயத்திற்கு வழங்கிவருகின்றனர். சமுதாயத்தைப் பாடும் அவர்கள், நாட்டின்மேல் மாறாத பற்றுடையவர்களாய்ப் பல்லின ஒற்றுமையைப் பேணுபவர்களாய் விளங்கிவருகின்றனர். இதனை அவர்கள் பாடல்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன. அவர்கள் பாடல்களில் இறையுணர்வு மேலோங்கி நிற்பதுடன், சீர்திருத்தம் சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது; மறுமலர்ச்சி உணர்வு மணம் கமழ்கிறது.

இக் கவிதைக் களஞ்சியம் மலேசிய இந்தியச் சமுதாயத்தை - குறிப்பாகத் தமிழ்ச் சமுதாயத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது. அதனொடு உலகப் பார்வையும் இதில் தென்படுவது இதன் சிறப்பை மேலும் ஒருபடி உயர்த்துகிறது.

தமிழக இலக்கியங்கள் ஆயிரக்கணக்கில் மலேசியாவில் பரவியுள்ளன; தமிழ்நூல்கள் பல வெளியீடு கண்டுள்ளன. ஆனால், மலேசியக் கவிஞர்களின் உணர்வுகளில் மலர்ந்த ஓர் இலக்கியம் தமிழகத் தலைநகரான சென்னை மாநகரில் பெருஞ்சிறப்புடன் அரங்கேறுதல் இதுவே முதல்முறை. இருநாடுகளுக் கிடையே இலக்கியப் பரிமாற்றத்திற்கு இது பெருந்துணை புரியும் என்பதில் ஐயமில்லை.

“உலகெங்கும் அகன்று பரந்துள்ள தமிழ் இலக்கிய உலகிற்கு மலேசியா, தன் காணிக்கையாய்ப் படைக்கும் இம் 'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்', தமிழ்கூறு நல்லுல கெங்கும் பரவ வேண்டும்” என்பது எம் உள்ளக் கிடக்கையாகும். குறிப்பாகத் தமிழக நூலகங்கள், பல்கலைக்கழகங்கள், பள்ளிகள், கல்லூரிகள் முதலாய அனைத்து இடங்களிலும் இந் நூல் இடம்பெறவேண்டும். வெளிநாட்டுத் தமிழ்மாணவரும் கற்றுப் பயன்பெற இந் நூல் துணைசெய்யும் என்பதில் ஐயமில்லை. கல்வியாளர் அனைவரும் இதற்கு வழிவகுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வருங்காலத் தலைவர்களான நம் மாணவர், எழுச்சியுடன் வளரக் கடந்த பதினெட்டு ஆண்டுகளுக்கு மேலாய் இலவச வழிகாட்டி வகுப்புகள் வாயிலாயும் மாணவர் பண்பாட்டு விழாக்கள் வாயிலாயும் தமிழ்நெறி மன்றம், தொண்டாற்றி வருதலை நான் நன்கறிவேன். அதன் நிறுவனத் தலைவர் திரு முரசு. நெடுமாறன் அவர்களே இந் நூலின் தலைமைத் தொகுப்பாசிரியர். அவருக்கு என் நெஞ்சம் நிறைந்த பாராட்டுகள்! இத் துறையில் அவருக்குத் துணைநின்ற உள்ளங்களையும் வாழ்த்துகிறேன்.

கடந்த 40 ஆண்டுகளுக்கு மேலாய்த் திரு முரசு. நெடுமாறன், தாமே அரிதின் முயன்று திரட்டிய பல்லாயிரக் கணக்கான கவிதைகளிலிருந்தும், கடந்த சில ஆண்டுகளாய்க் கவிஞரிடமிருந்து பெற்ற கவிதைகளிலிருந்தும் உருவாக்கம் பெற்ற இத் தொகுப்பு நூல், ஒவ்வொரு தமிழர் இல்லத்திலும் இருப்பது அவசியமாகும்.

இக் கவிதைத் தொகுப்பு, நூல்வடிவம் பெறப் பல்வேறு வகைகளில் ஒத்துழைப்பு நல்கிய அனைவருக்கும் என் நன்றியைக் கூறுவதுடன் இம் மாபெரும் முயற்சியில் ஈடுபட்டு வரலாறு படைத்துள்ள தமிழ்நெறி மன்றத்துக்கு என் மனமார்ந்த வாழ்த்துகளைப் பெருமகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

கோலாலம்பூர் (ச. சாமிவேலு)




மாண்புமிகு தமிழக முதல்வர்,

முத்தமிழறிஞர், தமிழினத் தலைவர்,

# டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி

அவர்கள் வழங்கிய

# வாழ்த்துரை

'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்' எனும் தலைப்பில் அறுநூறுக்கு மேற்பட்ட கவிதைகள், ஆற்றல்மிகு கவிஞர் பலராலும் பாடப்பட்டவற்றைத் தொகுத்து, மிகப் பெரிய நூல்வடிவில் வழங்கிடும் தமிழ்நெறி மன்றத்தினரையும் தலைமைத் தொகுப்பாசிரியர் கவிஞர் முரசு. நெடுமாறன் அவர்களையும் மிகவும் பாராட்டுகிறேன்; வாழ்த்துகிறேன். இந்தப் பெருமுயற்சிக்கு உறுதுணையாகப் பதிப்பாசிரியர் பணியாற்றியுள்ள பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் அவர்களும் போற்றுதலுக் குரியவர்.

'பல்வகைப் பொருள்கொண்டு பலாச்சுளை,
மாங்கனிக் கீற்று, செம்மாதுளை முத்து'

எனத் தக்க பல்வேறு கவிதைச் செல்வங்களைக் கவிஞர் பெருமக்கள் வாரிவழங்கியுள்ளனர்.

இந்தத் தொகுப்பில் வீரக் கவிதைகள் உண்டு; விவேகக் கவிதைகள் உண்டு; காதல் கவிதைகள் உண்டு; காலமாற்றுக் கவிதைகள் உண்டு; பழம்பக்திப் பாடல்கள் உண்டு; தமிழ்ப்பற்றுப் பாடல்களும் உண்டு.

"எங்கிருப்பினும் எங்கு வாழினும் அங்குள்ள மண்ணுக்கு விசுவாசமுடையவனாயும், அதேசமயம் அவனை ஈன்ற தமிழன்னைக்குக் கடமைப்பட்டவனாயும் என் தமிழன் திகழ்கிறான்" என்பதனை எண்ணி மகிழ்கிறேன்.

இந்தப் பெருந்தொகுப்பில் ஒரு கவிஞன் பாடுகிறான்; இல்லை கதறுகிறான்.

"தமிழனுக்குத் தனைப்பெற்ற தாய்தெரிய வில்லை!
தன்னோடு பிறந்தவனின் முறைவிளங்க வில்லை!"

இந்தப் பெருமுச்சின் இறுதியில், அதே கவிஞன் எப்படி அழுகிறான் பாரீர்!

"இமயத்தில் கொடிபொறித்த இனமிவனாம் அந்தோ!
இவனோடு பிறந்திடநான் என்னவினை செய்தேன்?" (பா, 193)

இப்படித் தமிழ் உணர்வு இழையோடும் இத் தொகுப்பு, ஈக்களை விடுவித்தபின் எடுத்த தேன்கூடாக, ஆம்! தேன் பொங்கிவழியும் கூடாக விளங்குகிறது.

"தாழ்விற்குப் பாதைசொலத் தயங்காத உலகில்
தடம்புரளும் மனப்போக்கால் தவிக்கின்ற நெஞ்சர்
மேலோங்கப் பொதுவான ஒருநெறியைக் கூறி
மேன்மைபெற வழிகாட்டும் நூல்குறளே யாகும்"

(பா, 567)

என, இந்த நூலின் தொகுப்பாசிரியர் முரசு. நெடுமாறன் தீட்டியுள்ள கவிதை வரிகள், தமிழ்மக்களுக்குமட்டு மன்றித் தரணியில் வாழும் மக்கள் அனைவருக்குமே குறளின் மாண்பினை எடுத்துரைப்பனவாகும்.

ஒரு நந்தவனத்து மலர்களை மட்டுமல்ல; பல நந்தவனத்து மலர்களை என்முன்னே குவித்திருக்கும்போது, 'எந்த மலரை - எந்த மலரின் மணத்தை எப்படிப் புகழ்வது?' என்றே எனக்குப் புலப்படவில்லை.

அத்துணை மலர்கள்!
மணமலர்கள்!
என்மனம் மகிழ்விக்கும் மலர்கள்!

அன்புள்ள,

சென்னை- 600 009

(மு. கருணாநிதி)

# பொருளடக்கம்



## முதற்பகுதி - வரலாற்று வாயில்

### பிரிவு - 1 முன்னோர் வரலாறு



### பிரிவு - 2 மலேசியத் தமிழர் வரலாறு



### பிரிவு - 3 மலேசியத் தமிழிலக்கிய வரலாறு

## நிலப் படங்கள்



## புள்ளிவிவரப் பட்டியல்கள்



## இரண்டாம் பகுதி - *கவிதைகள்*

### க இயற்கை

## ௨ இறை



## ௱௨ நாடு

## ச தமிழ்



## ரு தோட்டப்புறம்

## சூ சமுதாயம்

## எ எழுச்சி

## அ காதல்

## கூ. வாழ்த்து



## கம. இரங்கல்

## கக இசை

## கஉ நாடகம்



## கங சிறுவர்

## கச பல்சுவை

## பிற்சேர்க்கை

தலைமைப் பதிப்பாசிரியர்
தமிழவேள், பேராசிரியர்

## இராம. சுப்பிரமணியன், எம். ஏ.

அவர்கள் வழங்கிய

# பதிப்புரை

உலக அரங்கில் பல்வேறிடங்களில் உயிரினங்கள் தோன்றின. என்றாலும், அவ் வுயிரினங்கள் முதற்கண் தோன்றிய பகுதி இந்தியத் தென் பீடபூமியே - பண்டைத் தமிழகமே எனலாம். அதற்குரிய தட்பவெப்ப நிலைகளும், பிற சூழல்களும் இப் பகுதியிலேயே முதற்கண் உருவாயின. உயிரினங்களுள் மக்களினம் குறிப்பிடத்தக்கது. பிற உயிரினங்கள் வாழ்க்கைப் போராட்டத்தால் வளர்ச்சியுற்றன; நிலைமாறின; எனினும், குறிப்பிட்ட வளர்ச்சிக்கு, மாற்றத்திற்குப்பின் ஒருநிலையில் நின்றுவிட்டன. மனித இனமோ, பல்வேறு வளர்ச்சிகளையும் மாற்றங்களையும் தொடர்ந்து அடைந்துகொண்டே யிருக்கிறது. அதற்கு அடிப்படைக் காரணம் மனித இனத்தின் பகுத்தறிவே எனின், அது மிகையன்று. அவ் வினமும் முதற்கண் தமிழகத்திலேயே உருவெடுத்தது. "கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு முன்தோன்றி மூத்த குடி" என ஐயன் ஆரிதனார் குறிப்பிடுதல் முழுக்க முழுக்க உண்மையாகும்.

தமிழினம் ஒரு தனி இனம்; அவன் பண்பு தனிப்பட்ட ஒன்று; அவன் மொழி அமிழ்தாகும்; அவன் வழி அன்பாகும்.

"தமிழன் என்றொரு இனமுண்டு
தனியே அவற்கொரு குணமுண்டு
அமிழ்தம் அவனுடை மொழியாகும்
அன்பே அவனுடை வழியாகும்"

என்றார் நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

அன்புவழி, இன்பவழியாய் - அகவழியாய்க் களவுவழியாய் மலர்ந்தது. காதலர் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்ட இன்பத்தையே அவன் பொருளாய்க் கருதினான். அப் பொருளினையே ஓதுவதால் தமிழிற்கும் 'அகவாழ்வு' எனும் பொருள் உண்டாயிற்று. "இந் நூல் என்னுதலிற்றோ என்பது தமிழ் நுதலிற்று" எனும் இறையனார் அகப்பொருள் உரை; ஈண்டுத் தமிழ் அகவாழ்வினைச் சுட்டுகிறது. அப் பொருளை உணர்த்தச் சொல்லினையும் எழுத்தினையும் உருவாக்கினான். இம் மூன்றனையும் முறையே எழுத்து, சொல், பொருள் எனும் தலைப்புகளால்

தொல்காப்பியர் ஓதினார். அதனால் தமிழன் அகவாழ்வு-பொருள்வாழ்வு என்றும் நிலைத்திருக்கிறது. அன்பு வாழ்விற்கு ஊறு நேரும்போது அவ் வன்பே வீரமாய் உருவெடுத்தது. அன்பு அகங்கை; வீரம் புறங்கை. வீரமும் அதனால் விளைவனவும் புறமாயின. அவ் வகப்புற வாழ்வுகளைப்பற்றித் தோன்றிய நூல்கள் கணக்கில. அவை இலக்கிய இலக்கணம் எனப் பிற்காலத்து வழங்கலாயின. தமிழன் அவற்றிற்கிட்ட பெயர் முறையே 'கணக்கு', 'வழக்கு' என்பனவாகும். கணக்கினை 'எண்' என்றும் வழக்கினை 'எழுத்'தென்று வழங்குதலும் உண்டு. அவனுக்குக் கணக்கு வழக்குத் தெரியுமா? எனும் வழக்கு இன்றும் ஊர்ப்புறங்களில் வழங்கிவருகிறது. "பதினெண் கீழ்க்கணக்கு, பதினெண் மேற்கணக்கு" எனும் தொடர்களிலும்,

"கணக்கறிந்தும் விடுவேனோ கண்டாய்என் தோழி" (வள்ளலார்)
". . . . . . . . . கணக்கினை
முற்றப் பகலும் முனியா(து) இனிதோதிக்
கற்றலின் கேட்டலே நன்று" (பழமொழி நானூறு)

எனும் செய்யுள் தொடர்களிலும் கணக்கு இலக்கியத்தை உணர்த்தலைக் காணலாம்.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்"
"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு" (குறள், 392)

எனும் சான்றோர் வாய்மொழிகளின்கண் 'எண்' இலக்கியத்தையும் 'எழுத்து' இலக்கணத்தையும் உணர்த்தலைக் காணலாம்.

உலக வழக்கு, செய்யுள் வழக்கு, இயல்பு வழக்கு, தகுதி வழக்கு எனும் தொடர்களின்கண் 'வழக்கு' இலக்கணத்தை உணர்த்தலைக் காணலாம்.

"கணக்கு வழக்கைக் கடந்தவ்வடி" (தேவாரம், 6-6-3)

"மூன்று கண்ணுடை யாயடி யேன்கண்
கொள்வ தேகணக் குவழக் காகில்" (தேவாரம், 7-54-4)

"எண்ணவன்காண் எழுத்தவன்காண்" (தேவாரம், 6-48-7)

"கண்ணே கருத்தேஎன் எண்ணே எழுத்தே" (தாயுமானவர்)

என்பன மெய்மறை.

'தமிழ்' எனும் சொல் மூவெழுத்துகளான் உருவாயது. தமிழ் எனும் சொல்லும், கணக்கு, வழக்கு எனும் சொற்களும் குறிப்பாய்த் தமிழ்க்கண் உள்ள எழுத்துகளையும்,

தமிழ்ச்சொற்களின் எழுத்து வரையறையையும் உணர்த்துகின்றன. தமிழ் எனும் சொல்லின்கண் அகர இகரச் சுட்டுகளும் வல்லின மெல்லின இடையின எழுத்துகளும் முறையே இடம்பெற்றுள்ளன. அகர இகர உகரச் சுட்டுகளினின்றே பிற எழுத்துகள் உருவாயின என்பது தொல்லியலார் கருத்து. சிவஞானமுனிவர் விருத்தி (நன்னூல் 73) இதனைத் தெளிவாய் விளக்குகிறது. குமிழ்-குமிழு, சிமிழ்-சிமிழு என்பன போலத் தமிழ் என்பதும் தமிழு என ஒலிக்கக் காண்கிறோம். அவ்வாறு ஒலிக்குங்கால் ஈற்றில் உகரம் ஒட்டி நிற்றலைக் காணலாம்.

வல்லெழுத்துகளுள் தகரம் டகரத்தையும் றகரத்தையும் தன்னுள் அடக்கிநிற்கிறது. ணகர, ளகரங்களின் முன் டகரமாகவும், லகர, னகரங்களின் முன் றகரமாகவும், தகரம் திரியும் என்பது வெளிப்படை. இத் தகுதி பிற வல்லெழுத்துகளுக்கு இல்லை.

மெல்லெழுத்துகளுள் மகரம் ஙகரத்தையும் ஞகரத்தையும் நகரத்தையும் தன்னுள் அடக்கிநிற்கிறது. கசத வருங்கால் மகரம் முறையே ஙஞந வாகத் திரியும் என்பது வெளிப்படை. இத் தகுதி பிற மெல்லெழுத்துகளுக்கு இல்லை.

ழகரம் தமிழ்ச் சிறப்பெழுத்து என்பது வெளிப்படை. இத் தகுதி பிற இடையெழுத்துகளுக்கு இல்லை.

மூவினங்களுள் சிறப்புடைய தகர மகர ழகரங்கள் முறையே நிற்க, முச்சுட்டுகளும் முறையே அவற்றை ஊர்ந்துவரத் தமிழ் (தமிழு) எனும் சொல் உருவாகியுள்ளது.

திரவிடத்திற்கும் தமிழ் எனும் இச் சொல்லிற்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை என்பது இதனால் தெளிவாகும்.

தமிழ் என்பது மூவெழுத்துகளால் இயன்று தமிழ்ச் சொற்களின் எழுத்தெண்ணிக்கை யைக் குறிப்பாய் உணர்த்துகிறது. தமிழ்ச் சொற்கள் ஓரெழுத்து ஒருமொழி, ஈரெழுத் தொருமொழி, தொடர்மொழி என மூவகைப்படும். தொடர்மொழி என்பது மூவெழுத்து மொழியினையும் நான்கெழுத்து மொழியினையும் குறிக்கும். நான்கெழுத்து மொழி பெரும்பாலும் உகர ஈற்றதாய்த் திகழும். கணக்கு, வழக்கு என்பன அதற்குச் சான்றுகளாகும். நெடிற்றொடர் ஒழிந்த ஐந்து குற்றுகர ஈற்றுத் தொடர்மொழிகளும் மூவெழுத்து மொழிகளே. இலக்கணம், இலக்கியம் இரண்டும் நான்கெழுத்தெனும் வரையறையை மீறியுள்ளனவேயெனின், அவை தமிழ்ச் சொற்கள் அல்ல; வடசொற்கள். லட்சியம் (இலட்சியம்), லட்சணம் (இலட்சணம்) எனும் சமஸ்கிருதச் சொற்களின் தற்பவமாகும். அவற்றைத் தமிழ் எனக் கருதிச் சிலர் வலிந்து தரும் விளக்கங்கள் ஏற்புடையனவல்ல. அவை பல சொற்களாய் நிற்றலொடு தெளிவான தமிழ்மரபினுக்கேற்ற பொருள்களையும் தருதல் இல்லை. அவ் விளக்கங்களை ஏற்று இலக்கிய இலக்கணம் எனும் இருசொற்களையும் தமிழ் எனக் கொள்ளின் தமிழின்கண் இலக்கிய இலக்கணங்களை உணர்த்தத் தனிச்சொற்கள் இல்லையா? எனும் வினா எழும். கழுத்து, குரங்கு என நான்கெழுத்து மொழிகள் அருகி வருதல் உண்டு.

தமிழின்கண் 33 எழுத்துகளே உள்ளன. ஒலிவடிவே எழுத்தாகும். அவ் வொலியினை உணர்த்துவது வரிவடிவு. எழுதப்படுதலால் அஃதும் எழுத்தாயிற்று. குற்றியலிகரக் குற்றியலுகரங்களை இகர உகரங்களில் அடக்க 31 எழுத்துகளே எஞ்சும். (உயிர்-12; மெய்-18; ஆய்தம்-1) இவ்வளவு குறைந்த ஒலிகளான் ஆய மொழி உலகெங்கும் இல்லை எனலாம். ஆங்கிலம் 26 எழுத்துகளான் இயங்குகிறதே யெனின், அது வரிவடிவுகளால் 26 எழுத்துகளே தவிர ஒலிவடிவுகளால் 45 எழுத்துகளைப் பெற்றுள்ளது. ஆங்கிலத்தில் ஏ, ஈ, ஜி முதலாய எழுத்துகள் பல்வேறு ஒலிகளைத் தருதலைப் பலரும் நன்கறிவர்.

அகவாழ்வினையே பொருள் எனக் கருதி வாழும் ஓரினம் உலகெங்கும் இல்லை. இயற்கையொடு இயைந்த வாழ்வே அகவாழ்வாகும். அதனையே வள்ளுவரும்,

“அருளில்லார்க்(கு) அவ்வுலகம் இல்லை பொருளில்லார்க்(கு)
இவ்வுலகம் இல்லாகி யாங்கு” (குறள், 247)

என உவமையாகச் சுட்டினார். இத்தகு சிறப்புடைய தமிழ்மகன் வாணிகம் கருதியும், பிழைப்பினை நாடியும் உலகெங்கும் சென்றான். உலக நாடுகளில் அவன் இல்லாத இடமே இல்லை எனலாம். எங்குச் சென்றாலும் அவன் அவ் விடத்தினைத் தன் சொந்த நாடாக, ஊராகக் கருதினான்; அதன் உயர்விற்குப் பெரும்பாடுபட்டான்; அதனால் அடைந்த நன்மையினும் துன்பங்கள் பல; அவை கணக்கில; என்றாலும், அத் துன்பங்களையும் தியாக - ஈக உணர்வால் இன்பமாய்க் கற்பனை செய்துகொண்டு வாழ்ந்து வருகிறான். சில பகுதிகளில் அவன் உழைப்பு, அவன் அறிவுத்திறன் நன்றியொடு போற்றப்படுகின்றன; சில பகுதிகளில் அவை பொறாமையை விளைத்துப் பகையாய் மாறுகின்றன. இதற்கு அடிப்படைக் காரணம் 'மண்ணின் மைந்தர்' எனும் உணர்வேயாகும். தமிழர்க்குமட்டும் அவ் வுணர்வு என்றும் இருந்ததில்லை; இருக்கவும் போவதில்லை; அவர்கள் நாடு, மொழி, சமய, இன, மதப்பொறையினர்.

உலகெங்கும் பரவிய தமிழருள் ஒருபகுதியினர் மலாய் நாட்டிற்கும் சுமார் 200 ஆண்டுகளுக்குமுன் சென்றனர்; அந் நாடு இன்றைய நிலை அடைதற்குப் பலவாறு முயன்றனர்; உழைத்தனர். அதற்காக அவர்கள் பட்டபாடு, சிந்திய குருதி, வடித்த கண்ணீர் சொல்லில் அடங்கா. இத்தகு இன்னல்களுக்கு இடையேயும் அவர்கள் தம் பொருள்வாழ்வினை-அகவாழ்வினைச் செம்மையாகவே நடத்திவந்தனர்; அதனால், ஓரளவிற்கு இன்பமும் கண்டனர். இவ் வின்பதுன்ப உணர்வுகள் அவ்வப்போது பாட்டாய் மலர்ந்தன. அவை எங்கெங்கோ சிதறிக்கிடந்தன; ஒவ்வொரு பாடலும் அரிய கருத்துகளைத் தன்னகத்தே கொண்டிருந்தது; அவற்றைக் கண்டவர் பலர்; கறிவேப்பிலையாய்ப் பயன்படுத்தியவர் பலர். ஒருவரும் அவற்றுக்கு நிலையாய வாழ்வினைத்தர முன்வந்தாரில்லை.

தமிழன்னையின் நல்வினைப் பயன்போலும்! என் அருமை மாணவர்களுள் ஒருவராய கவிஞர் முரசு. நெடுமாறன் மலேசியாவில் வாழும் பேறுபெற்றார்; அவர்

ஒருபிறவிக் கவிஞர்; அதனால், அவர் கண்ணாற் கண்ட, காதாற் கேட்ட கவிதைகள் அனைத்தும் புத்துயிர் பெற்றுப் புதுவாழ்வு பெறத் தொடங்கின. கடந்த 40 ஆண்டுகளுக்குமேல் அக் கவிதைகளுக்கு நிலையாய வாழ்வளிக்க, அவற்றின் வாயிலாய்க் கவிஞர் பெருமக்களின் உள்ளத்துணர்வுகளை இன்ப துன்ப உணர்ச்சிகளை உலகிற்குக் காட்ட அவர் பாடுபட்டுவருகிறார். அவர் தொகுத்த பாடல்கள் கணக்கில் அடங்கா. அவையனைத்தையும் வெளியிட அவர் விழைந்தாராயினும் அஃது எளிதில் நிறைவுறுவதன்றாகலின், 'தற்போதைக்குக் குறிப்பிட்ட பாடல்களையாவது வெளியிடலாம்' என முடிவுசெய்தார். அதனால், அவர், தகுதிவாய்ந்த தம் குழுவினர் பெருந்துணையுடன் ஆய்ந்து ஆய்ந்து 5000 பாடல்களைத் தேர்ந்தெடுத்தார்; அவற்றுள் 650 கவிதைகளைக் கவிதைக் களஞ்சியமாய் வெளியிட்டுள்ளார். அதற்காக அவர் பட்டபாடு, மேற்கொண்ட முயற்சி அளவில் அடங்கா. பெரும்பேராசிரியர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் தமிழ் நூல்கள் பலவற்றை அச்சேற்றுவதற்குப் பட்டபாடு-மேற்கொண்ட முயற்சி ஈண்டு நினைவுகூரத்தக்கது. இவரொடு இவர் இல்லத்தரசியாரும் மக்களும் இரவுபகலாய் உறுதுணையாய் நின்றுழைத்தனர். அவர்களுக்கு என் பாராட்டுகள்; வாழ்த்துகள்.

இக் கவிதைகளை அச்சிலேற்றிய பெருமை தலைமைத் தொகுப்பாசிரியர் முரசு. நெடுமாறன் அவர்கள் மூத்த மகன் திருமிகு முத்தெழிலன் அவர்களையே சாரும். அவர் ஒருபொறியாளர்; அறிவியல் அறிஞர். அவர் கண்டுபிடித்துள்ள 'முரசு' தமிழ்க் கணினி முறையே இத் தகுதிகளுக்குச் சான்றாகும். அதுவே இக் கவிதைகளை அச்சிட்டுத் தந்துள்ளது. அக் கணினி அச்சகத்தில் பணிபுரியும் ஒவ்வொருவரும் தத்தம் சொந்தப் படைப்பாய்க் கருதி இந் நூலினை உருவாக்கித் தந்துள்ளனர். அவர்களுக்கு என் பாராட்டுகள்.

இக் கவிதைக் களஞ்சியம் இவ்வளவு சிறப்பாய் வெளிவருதற்குத் தலைமைத் தொகுப்பாசிரியர் கவிஞர் முரசு. நெடுமாறன் அவர்களுக்குப் பெருமக்கள் பலர் துணைநின்றனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் புலவர் திரு. ப. மு. அன்வர் ஒருவர்; இக் கவிதைக் களஞ்சியத்தில் அவர் பாடல்கள் பல இடம்பெற்றுள்ளன. அவர் புலமைக்கும், கவிதைத் திறனுக்கும், உள்ளக் குறிக்கோள்களுக்கும் அவையே சான்று பகரும். அடுத்துக் குறிப்பிடத்தக்கவர் தமிழ்மணி திருமிகு அரு. சு. ஜீவானந்தன் அவர்கள்; அவர் தமிழ்ப் புலமை யொடு வரலாற்று அறிவும் மிக்குடையர்; பல வரலாற்றுக் குறிப்புகள் அவரால் இக் களஞ்சியம் வாயிலாய் வெளிவந்துள்ளன. அவருக்கு என் பாராட்டுகள்! அடுத்துக் குறிப்பிடத்தக்கவர் கவிஞர், செவ்விசைச் சித்தர் திருமிகு ரெ. சண்முகம் அவர்களாவார். அவர் இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழிலும் வல்லவர். அவர் பாடல்களும் இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. அவை அவர் முத்தமிழ்ப் புலமைக்கும் மூதறிவுடைமைக்கும் சான்று பகரும். அவருக்கு என் பாராட்டுகள்! இவ்வாறு மேலும் பலரை அறிமுகப்படுத்திப் பாராட்ட யான் கடமைப்பட்டுள்ளேன். பக்கம் பெருகுதலஞ்சி அவர்களுக்கெல்லாம் என் பாராட்டினைத் தெரிவித்து ஒருவாறு அமைதியடைகிறேன்.

அறிஞர் பெருமக்கள் பலர் அறிவுரை வழங்குநராய், தகவுரை தருபவராய் நின்று ஒத்துழைத்தனர். அவர்கள் உரை இக் களஞ்சியம் உருவாதற்குப் பெருந்துணை புரிந்தன; அவர்களுக்கு என் பாராட்டுகள்!

சுருங்கக் கூறுவதாயின் இம் மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியப் பணி ஒரு பெரும்பணியாகும்; அரசோ, பேரமைப்பொன்றோ, பல்கலைக்கழகமோ மேற்கொண்டு செய்து முடிக்கவேண்டிய மாபெரும் பணியாகும். இப் பெரும் பணியினை தாம் ஒருவராய் நின்று, தம் தமிழ்நெறி மன்றச் சார்பாய்க் கவிஞர் முரசு. நெடுமாறன் ஆற்றியுள்ளமை பெரிதும் போற்றத்தக்கதாகும். அயல்நாட்டில் வாழும் தமிழர்களுள் ஒருவரும் இந் நாள்வரை இத்தகு பணியை ஆற்றியதில்லை. இது வெளிப்படை.

'பலர் கூடி ஒரு பணியினைச் செவ்வனே செய்துமுடித்தல் என்பது தமிழரால் இயலாத ஒன்று' என்று பலர் கூறுவது உண்டு. 'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சிய' வெளியீட்டுக் குழுவினர் இக் கருத்தினை தகர்த்துவிட்டனர்' என்பது உண்மை.

"காரிகை கற்றுக் கவிபாடுதலின் பேரிகை கொட்டிப் பிழைப்பதுமேல்" என்பர். "கவி பாடுதல் எளிய செயலன்று" என்பது இதனால் புலனாகிறது. எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை எனும் செய்யுளுறுப்புகளையும் பா இனங்களையும் தெரிந்துகொண்டால் மட்டும் ஒருவர் கவிஞராகிவிட முடியாது; கவிதை புனையும் திறனும் கற்பனை வளனும் ஒருவருக்கு இயல்பாகவே அமைந்திருத்தல் வேண்டும். அவரே உண்மைக் கவிஞராய் விளங்கமுடியும்; அவர்க்குச் செய்யுள் உறுப்புகளும், பா இனங்களும் அவர் குறிப்பின்வழிப் பணிபுரியும். தம்மை மறந்த நிலையில் அவர் வாயிலாய்க் கவிதை வெள்ளம்போல் பெருக்கெடுத்துவரும். கம்பர், திருத்தக்கதேவர் போன்ற கவிஞர் பெருமக்கள் அசை சீர்களை எண்ணியா பாடினர்? அவையெல்லாம் அவர்களுக்கு ஏவல் செய்தன; குறிப்பின்வழி நின்றன.

"சென்ற இடத்தான் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு" (குறள், 422)

இக் குறளின்கண் 'செலவிடாது' என நிற்கவேண்டுவது 'செலவிடா' என நிற்கிறது. அதனொடு பழைய பதிப்புகளுள் வல்லொற்றும் மிகுவதில்லை. (வல்லெழுத்து மிகவேண்டும் என ஸ்ரீ.உ.வே.வை.மு. கோபால கிருஷ்ணமாச்சாரியார் குறிப்பிடுதல் சிந்தனைக்குரியது) 'செலவிடாது' என நிற்பின் காய்முன் நேர் நிற்க வெண்சீர் வெண்டளை வருகிறது; வெண்சீர் வெண்டளை வெண்பாவிற்குரிய தளையே; அவ்வாறிருக்கச் 'செலவிடாது' என்பது ஏன் 'செலவிடா' என நிற்கவேண்டும்?

"ஊறொரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்
ஆறென்பர் ஆய்ந்தவர் கோள்." (குறள், 662)

இக் குறளின் முதற்சீர், 'ஊறொராமை' என நிற்றல் வேண்டும். "இதுவும்

இரண்டென்னும் தொகைக்கு 'ஊறொராமை' எனப் பொருள் உரைக்க வேண்டும்” என்பது இளம்பூரணர் உரை (தொல். பொருள். பொருள்-1). இக் குறளுக்கு உரை வகுத்த பரிமேலழகரும் 'ஊறொரால்' என்பதை 'ஊறொராமை' எனக் கொண்டே உரை எழுதுகிறார். 'ஊறொரார்' என்று பாடம் ஓதுவாரும் உளர்; அஃது 'ஒல்காமை' என்னும் எண்ணொடும், 'இரண்டு' என்னும் தொகையொடும் இயையாமை அவர் அறிந்திலர்” என்பது பரிமேலழகரின் விளக்கவுரை. 'ஊறொராமை' என்பதனை மனத்துட் கொண்டே 'ஊறொரார்' என்னும் பாடத்தினை மறுத்துள்ளார்.

'செலவிடாது', ஏன் 'செலவிடா' என நின்றது? 'ஊறொராமை', ஏன் 'ஊறொரால்' என நின்றது? 'செலவிடாது, ஊறொராமை' என நிற்பினும் அசையும் சீரும் கெடவில்லையே? பொருளும் தெளிவாகத்தானே இருக்கிறது?

ஒரு செய்யுளின்கண் அசை, சீர் முதலாயன செப்பமாய் அமைந்தால் மட்டும் போதாது; அதனொடு உரிய இசையும் அமைதல் வேண்டும்.

“அசையுஞ் சீரு மிசையொடு சேர்த்தி
வகுத்தன ருணர்த்தலும் வல்லோ ராறே”

என்பது தொல்காப்பியம் (தொல். பொருள். 323-பேராசிரியம்).

'செலவிடாது' என்பதும் 'ஊறொராமை' என்பதும் அசையும் சீரும் செப்பமாய் அமைந்திருப்பினும் அவை உரிய இசையினைப் பயக்கவில்லை. அதற்கு அடிப்படைக் காரணம் காய்ச்சீர்க்கண் இடம்பெறும் இடையசை குறில்நெடிலா லாய நிரையசையாய் (கூவிளாங்காய், கருவிளாங்காய்) நிற்றல் கூடாது” என்பதே. இது மரபு.

'செலவிடாது, ஊறொராமை' எனும் காய்ச்சீர்களின்கண் இடையில் இடம்பெற்ற 'விடா', 'றொரா' எனும் இரண்டும் குறில்நெடிலா லாய நிரையசைகளாகும்.

பாரத வெண்பா, நளவெண்பா, புறப்பொருள் வெண்பாமாலை உள்ளிட்ட பண்டைச் சான்றோர் வெண்பாக்களின்கண் இவ் வுண்மையைக் காணலாம்.

இம் மரபினாலேயே,

“கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை” (குறள், 15)

எனும் குறளின்கண் 'கெடுப்பதூஉம், எடுப்பதூஉம்' எனும் சொற்களின் அளபெடைகள் அலகுபெறாமல் நிற்கின்றன; "அலகு பெற்றும் பெறாதும் இன்னிசை நிரைப்ப வருவனவும்" (நன்னூல் 91 விருத்தியுரை) எனச் சங்கரநமச்சிவாயர் உள்ளிட்ட

உரையாசிரியப் பெருமக்கள் குறிப்பிடுதல் ஏற்புடைத்தன்று; அலகு பெறுமாயின் அது செய்யுளிசை அளபெடை ஆகுமே தவிர இன்னிசை அளபெடை ஆகாது.

செய்யுளின்கண் இடம்பெறும் சொற்களின் பொருள் முக்கியமா? ஓசை முக்கியமா? எனின் ஓசையே முக்கியமானது. அதற்கே முதலிடம் தரவேண்டும். அவ் வோசைக்காக எச்சொல்லும் எவ்வாறேனும் திரியலாம். அக் கண்ணோட்டத்திலேயே 'செலவிடாது' என்பது 'செலவிடா' எனவும் 'ஊறொராமை' என்பது 'ஊறொரால்' எனவும் திரிந்தன.

"இசைதிரிந் திசைப்பினும் இயையுமன் பொருளே
அசைதிரிந் திசையா என்மனார் புலவர்"

என்பது தொல்காப்பியம் (தொல். பொருள். பொருள்-1 இளம்பூரணம்).

வெண்பாவின்கண் வெண்சீர் வெண்டளையும் இயற்சீர் வெண்டளையும் இடம்பெறலாம். ஆனால், வெண்சீர் வெண்டளையே இடம்பெறுதலைப் பேராசிரியர் உள்ளிட்ட உரையாசிரியப் பெருமக்கள் ஏற்றுக்கொள்ளவில்லை; ஏந்திசைச் செப்பல் முதலாய மூன்றும் அவர்களுக்கு உடன்பாடன்று; தொல்காப்பியரும் அதனை விதந்தோதவில்லை.

"மாசெல்வாய் மாசெல்வாய் மாசெல்வாய் மாசெல்வாய்"

கட்டளை அடிப்படி அளவடிக்கண் பத்துமுதல் பதினான்கு எழுத்துகள்வரை இடம்பெறலாம். இவ் வடிக்கண் 12 எழுத்துகளே இடம்பெற்றிருந்தாலும் இதனை 'வெள்ளடி' என்று பேராசிரியர் ஏற்றுக்கொள்ளவில்லை; "அசையும் சீரும் செம்மையாய் இருந்தாலும் இவ் வடிக்கண் வெள்ளோசை இல்லை" என்பதே அவர் குறிப்பிடும் குற்றச்சாட்டாகும். "அதனை ஓதிப்பார்த்து உணர்க" என்கிறார் அவர். அவர் கருத்துப்படி,

"யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு" (குறள், 397)

எனும் குறள் மறுக்கப்படுகிறது. இதனை ஒருமுறைக்கு இருமுறை ஓதிப்பார்ப்பின் வெள்ளோசைக்கு மாறாய்க் கலியோசை எழுதலைக் காணலாம். "ஒரு வெள்ளடிக்கண் (அளவடி) நான்கும் காய்ச்சீராய் நிற்றல் கூடாது; இரண்டு இயற்சீர்களாயினும் இடம்பெற வேண்டும்" என்பது பேராசிரியர் கொள்கை. திருக்குறளுள் பெரும்பாலன அவ்வாறே முடிந்திருத்தலைக் காணலாம்.

மலேசியக் கவிதைக் களஞ்சியப் பாடல்கள் செம்மையாய் அமைந்துள்ளன; செய்யுள் மரபினுக்கு இடமளித்துள்ளன; சில பாடல்கள் பிற்கால வளர்ச்சியினையும்

(மாற்றத்தினையும்) மேற்கொண்டுள்ளன. பதினான்கு தலைப்புகளில் 650 கவிதைகள் அடங்கியுள்ளன. சாதி மத இன வேறுபாடின்றித் 'தமிழ்க் கவிஞர்' எனும் உணர்வொடு மலேசியத் தமிழ்க் கவிஞர் பெருமக்கள் இப் பாடல்களை யாத்துள்ளனர். அவை பல்வேறு வடிவங்களில் (யாப்புகளில்) தம் கருத்துகளைத் தக்க சந்தத்தொடு தெளிவாய் வெளிப்படுத்துகின்றன. ஒவ்வொன்றும் படித்துச் சிந்தித்து மகிழ்தற்குரியது.

மேற்கொள்ளும் செயல் செம்மையாய் நிறைவுறுமானால் ஒவ்வொருவரும் தம் திறனாலேயே அது நிகழ்ந்தது எனக் கூறுவர்; இன்றேல், விதிமேற் பழிபோடுவர். இதனைப் புலவர் மு. சேதுராமன் தெளிவாய் விளக்கி “எல்லாம் இறையருளே எனக் கருதவேண்டும்” என்கிறார்.

“நன்றாய்ச் செயல்கள் நடந்தால், உடனேநான்
என்செயல்தான் என்றே இறுமாப்பேன்; - அன்றென்றால்
எல்லாம் விதிப்பயன்தான் என்றே நழுவுகிறேன்
வல்லான் அருளை மறந்து.” (பா, 34)

கவிஞர் முரசு. நெடுமாறன் கவிஞர் உலகில் குறிப்பிடத்தக்கவர்; சின்னஞ்சிறு குழந்தைமுதல் முற்றும் துறந்த முனிவர்வரை அவரவர் உளமறிந்து பாடும் திறன்படைத்தவர். ஒரு பாடலில் ஐவகைத் திணைகளை அவர் மங்கையராய் உருவகித்துள்ளார். ஒவ்வொரு திணைப் பாடலும் உள்ளத்தைக் கவரவல்லது. திணை என்றால் அது நிலத்தையும் ஒழுக்கத்தையும் (உரிப்பொருள்) குறிக்கும்; ஒவ்வொரு திணைப்பாடலும் இவ் விருபொருள்களையும் செம்மையாய் வெளிப்படுத்துகின்றன. சான்றாய்க் குறிஞ்சித்திணைப் பாடலையும், மருதத்திணைப் பாடலையும் காணலாம்.

"குறிஞ்சியிலே பெயரெடுத்த கோதையவள் வாழ்க!
கொழுமைமிகு மூங்கில்வளத் தோளுடையாள் வாழ்க!
உறிஞ்சிமுகில் அருவிமாலை உடலணிவாள் வாழ்க!
உவந்துநாணிப் புணரமெல்ல உளந்திறப்பாள் வாழ்க!

ஆறுபாய மேனியிலே அழகுமணி பொலியும்!
அருள்மருத அமுதளித்தே கைகள்பசி களையும்!
மீறியோடும் காளையினால் விளைந்திடுமே ஊடல்!
மேவுதுன்பம் பெருகுமுன்னே மலர்ந்திடுமே கூடல்!" (பா, 68)

மேலும் அவர், தமிழ்மக்களின் பொறுப்பற்ற நிலையினைத் தம்மேல் ஏற்றிப் பின்வரும் பாடல்களால் கூறுதல் சிந்தையைத் தொடுகிறது.

"வாழும் தோட்டம் சொந்த மென்றே
வாய்ப்பினைத் தேடா திருந்துவிட்டேன்;
சூழும் என்றும் இன்பம் என்றே
சொத்துகள் சேர்க்கத் தவறிவிட்டேன்!

நாளும் மழையும் பெய்யு மென்றே
நற்குளம் தோண்டா திருந்துவிட்டேன்
பாலுள கலமே போது மென்றே
பசுவொன்று வாங்கத் தவறிவிட்டேன்!" (பா,159)

கவிஞர் கரு. வேலுச்சாமி தமிழினைத் தம் உயிரினும், அன்னையினும் மேலாகக் கருதுவதனை,

"தன்னைப் பகைக்கும் தனதுயிரே யானாலும்
அன்னைப் பகையெனினும் ஆடோம்யாம் அம்மானை!
அன்னைப் பகையெனினும் ஆடோம்யாம்; ஆனாலும்,
உன்னைப் பகைப்போர்முன் ஓய்ந்துறவோ அம்மானை!
ஊறுனக்கு நேர்ந்தால் உயிரெமக்கேன்? அம்மானை!" (பா, 85)

எனும் அவரது பாடல் தெளிவுறுத்துகிறது.

மலேசிய நாடு சின்னஞ்சிறியதாயினும் அஃது இன்று உலகநாடுகளுள் குறிப்பிடத்தக்க ஒன்றாய்த் திகழ்கிறது. அதற்குத் தமிழ்ப்பெரு மக்களின் ஈடிணையற்ற பேருழைப்பும் பெருங்காரணம் எனின், அது மிகையன்று. அதனை இந் நிலைக்குக் கொண்டுவர அவர்கள் பட்டபாடு ஏட்டில் அடங்காது. என்றாலும், கவிஞர் மதுராந்தகன் அதனை ஐந்து விருத்தங்களால் செம்மையாய் விளக்குகிறார். அவற்றுள் ஒன்று,

"கொட்டுகின்ற இடிமின்னல் மழையில், தன்னைக்
கொத்துகின்ற நச்சரவம், வனவி லங்கு
கொட்டுகின்ற மடமைத்தேள், அறியா மைப்பேய்
கூடிநின்று கொக்கரிக்க; வெள்ளைக் காக்காய்க்
கட்டளைக்குத் தாள்பணிந்து கடமை யாற்றக்
கடும்புலியும் பெருமரமும் சிலரைக் கொல்ல
இட்டும்மனம் கலங்காத தமிழர் இங்கே
இன்னுயிரை விட்டவண்ணம் நாட்டைக் கண்டார்!" (பா, 138)

தாழ்சாதிக் கந்தனும் உயர்சாதி இளமதியும் காதலித்தனர். இதனை உயர்சாதியினர் ஏற்றுக்கொள்ளவில்லை; பஞ்சாயத்தார் முன்னிலையில் கந்தனை நிறுத்தினர். அவன்மீதே குற்றம் சாற்றினர். அவனுக்காகப் பரிந்துபேசுவார் ஒருவரும் இல்லை. அந் நிலையில் கந்தன் விடுக்கும் பதில் உள்ளத்தைத் தொடுகிறது.

"கன்னியரும் காளையரும் கண்ணால் நோக்கிக்
காதலித்து வாழ்வதிலே பாவம் என்ன?
என்றைக்கோ சாதியெனும் இருளை நாங்கள்
இடுகாட்டில் புதைத்துவிட்டோம் ஒளியில் வாழ்வோம்!

என்னையவள் ஏற்றுவிட்டாள்; இனியோர் வாழ்வு
இல்லையில்லை நானின்றேல் வாழ்வே இல்லை;
நன்றிதனைச் சீர்தூக்கித் தீர்ப்புச் சொல்வீர்
நடுவர்களே! என்றுமட்டும் கூறி நின்றான்" (பா,190)

இதனைப் பாடியவர் கவிஞர் கா. அருண்மொழி.

கவிஞர் ரெ. சண்முகம் அவர்கள் ஒரு சிறந்த கவிஞர். அவர் பாடல்கள் பல இக் களஞ்சியத்துள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொன்றும் கற்பார் உள்ளத்தைத் தொடவல்லது. அவற்றுள் சில :

"அன்னையைக் காலால் உதைத்துவிட்டு - அவள்
அன்பினை யேஎதிர் பார்க்கின்றான்!
கண்களைப் பிடுங்கி எறிந்துவிட்டு, - உயர்
காப்பியம் படித்திட முயல்கின்றான்
நெஞ்சத்தைத் தந்த ஆண்டவனோ - அதில்
நேர்மையைக் கொடுக்க மறந்துவிட்டான்!" (பா, 403)

"பெட்டியி லிருக்கும் பணத்தின் முன்னே
பாசமும் அன்பும் பெருகுமடா!
கட்டை விரலால் ரேகைவைத் தாலும்
கல்வியிற் சிறந்த அறிஞனடா!
அவனுக் கிருக்கும் வாழ்வைப் பார்த்து
ஆண்டவ னும்இங்கு வருவானடா!
இதுதான் உலகம் என்பதை அறிந்தால்
கலக்கம் அனைத்தும் தீருமடா!" (பா, 405)

புலவர் ப. மு. அன்வர் பாடல்கள் பல இக் களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ளன. அவை ஒவ்வொன்றும் சிந்தனைக்கும் உணர்ச்சிக்கும் விருந்தாவது. அவற்றுள் சில:

"கைதட்டும் கூட்டம் கணக்கினில் சேராது!.
பைதட்டுப் பாடடைந்தால் பத்துநொடி நில்லாது!
கால்நோக்கித் தாழும் கடைவிழியை மேலுயர்த்து!
மேல்நோக்கி நின்று விரிவானை உற்றுப்பார்!
யார்க்கும் அடிமைநீ அல்லை ! பெருமலையைப்
பேர்க்கும் நெடுந்தோளை மேலுயர்த்து! பெய்யென்று
நீசொன்னால் பொய்வானும் பெய்யுமடா! தோல்விகளைத்
தூசென்று தட்டித் துரத்து!" (பா, 234)

"நினைத்தாலே நெஞ்சினிக்கும் அந்தக் காலம்!
நிலவிற்கும் கவிதைக்கும் உறவுக் காலம்!
பனித்துளியில் ஓவியப்பூ மலர்ந்த காலம்!
பண்பாட்டுக் களஞ்சியங்கள் நிறைந்த காலம்!
தனித்தொருவன் வாழாத கூட்டுக் காலம்!
சமுதாயத் தழுவலிலே செறிந்த காலம்!
கனைத்தோடும் குதிரைகளின் சத்தி போலக்
காதலறம் உயிர்தழுவி நின்ற காலம்!" (பா, 644)

இவ்வாறே கவிஞர் ஒவ்வொருவர் பாடலும் எடுத்துக்காட்டத் தக்கது. தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களும், தமிழகக் கல்வி அமைச்சர் பேராசிரியர் டாக்டர் க. அன்பழகர் அவர்களும், தலைமைத் தொகுப்பாசிரியர் கவிஞர் முரசு. நெடுமாறன் அவர்களும் மேலும் பலர் கவிதைகளை எடுத்துக் காட்டியிருப்பதனாலும் காலம், இடம் கருதியும் இவற்றொடு அமைகிறேன்.

என் அருமை மாணவர், கவிதைத் தென்றல் திருமிகு முரசு. நெடுமாறன், எம்.ஏ. (பிஎச்.டி.) அவர்கள் சீரிய கவிஞர்மட்டுமல்லர்; சிறந்த எழுத்தாளரும், பரந்த வரலாற்றறிவு மிக்கவரும் ஆவார். தலைமைத் தொகுப்பாசிரியராய அவர்தம் வரலாற்று வாயிலும் அதனில் இடம்பெற்றுள்ள வரலாற்றுக் குறிப்புகளுமே அவற்றுக்குச் சான்றுகளாகும்.

உலகத் தோற்றமுதல் களஞ்சியம் பிறந்த கதை ஈறாய்ப் பல தலைப்புகளில் பல்வேறு வரலாற்றுக் குறிப்புகளைத் தம் உரையில் அவர் தந்துள்ளார். அவற்றில் ஆட்சிமுறை, மக்கள் வாழ்க்கை முறை, இறை வழிபாடு, தமிழ் இலக்கிய வளர்ச்சி முதலாய பொருள்கள் தெளிவாய் விளக்கப்படுகின்றன. அவர் எழுத்தாற்றலுக்குக் கருத்துகளைக் கோவையாய் இனிய - எளிய - தெளிவான நடையில் வெளியிட்டிருக்கும் அவர் வரலாற்று வாயிலே தக்க சான்றாகும்.

"இம் மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம் சிறப்பாய் வெளிவருதற்கு எனக்குதவியாய்ப் பெரும்பணியாற்றிய துணைப் பதிப்பாசிரியர் தவத்திரு நக்கீர அடிகளுக்கும், செந்தமிழ்ப் பாவலர் அமரர் தணிகை உலகநாதருக்கும், அமரர் கா. பெ. ஞானசம்பந்தன், அருட்கவி, கவிதைச் செம்மல் அரங்க. சீநிவாசன், புலவர் ப. கோவிந்தசாமி ஆகியோர்க்கும் கவிஞருலகமும் யானும் என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம்" என்பதனைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

வாழ்க தமிழ்! வாழ்க தமிழ்க்கவிஞர்!!
வளர்க தமிழர் நலம்!!!

இராம. சுப்பிரமணியன்

22.1.1997 (இராம. சுப்பிரமணியன்)
சென்னை - 600 106 தலைமைப் பதிப்பாசிரியர்




மாண்புமிகு தமிழகக் கல்வி அமைச்சர்

பேராசிரியர் டாக்டர்

## க. அன்பழகன், எம். ஏ.

அவர்கள் வழங்கிய

# அணிந்துரை

காணும் பொருளைச் சுட்டவும், கண்ட காட்சியைப் புலப்படுத்தவும், கருதும் செயலைக் குறிக்கவும் பிறந்த ஓசை, தெளிந்த வடிவுபெற்றபோது சொல்லாயிற்று. அந்தச் சொற்களைக்கொண்டு எண்ணத்தை வளர்க்கத் தலைப்பட்ட மனிதன், 'மொழி' கண்டான். மொழி வளர வளரச் சிந்தனை வளர்ந்தது. 'சிந்தனை'யை வெளிப்படுத்தும் முயற்சியில், மொழியை விரிவாய்ப் பயன்படுத்தப் பல வடிவம் கண்டான். எண்ணம், அந்தக் கருத்தளவில் வெளிப்படுவது உரை. கருத்துக் கேட்போரைக் கவர்ந்திடும் அழகுவடிவம் பெறுவது கலை. மொழியின் கலைவடிவே கவிதை. உரைநடை 'மலர்' எனின் கவிதை 'மணமிக்க மலர்'. மொழியை 'ஒரு நங்கை' எனின், கவிதையைக் 'கலைத் தேர்ச்சி பெற்ற நடனமிடும் நங்கை' எனலாம்.

உரைநடை எளியது; தெளிவிற்கு வாய்த்தது. கவிதைநடை எளிதன்று; தெளிவு தருவது கவிஞரின் ஆற்றலைப் பொறுத்தது; படிப்பவரை ஈர்க்கும் திறத்தால் மேம்பட்டது; கற்பனை வளம்காட்டி, உவமைநலம் காட்டி, அணிநலன் அழகு காட்டி, செஞ்சொற் பொருளுங் காட்டி, இசைத்திடும் ஓசைநயம் காட்டி, கற்போர் மனமேடையில் களிநடமிடும் காரிகையாவாள் கவிதைக் குமரி எனின், அறிஞர்தம் இதய ஓடையில் இன்பம் பெருகுமன்றோ!

புதுக்கவிதை வடிவு கொண்டுள்ள காலமிது. கற்பனை வளத்துடன் ஒரு கருத்தை மின்னலெனப் பாய்ச்சிட, நறுக்கெனப் பிறர் சிந்தையைக் கவர்ந்திட, உணர்ச்சி எழுப்பும் ஒருசில வரிகளே புதுக்கவிதை யாகின்றன. மரபுகவிதை வெண்பாவாய்ச் சுருங்கி நிற்பினும், கருத்தை மின்னலெனப் பாய்ச்சும் திறன் பெறுவதில்லை. புதுக்கவிதை வருணனையும், காரண காரிய விளக்கமும் கதையமைப்பும் பாத்திரப் படைப்பும் கொண்ட காவிய வனப்புப் பெறுவதும் இயல்வதில்லை.

மரபுகவிதை, யாப்பு இலக்கணத்தின் தளையுண்டு கிடப்பதால், வழிவழி வந்த வடிவே கொள்வதாகலின், 'சொற்சிலம்பம்' ஆடமுடிவதில்லை. ஆனால், தொடுத்திடும் செய்திகளைத் தாங்கி, விளக்கமாக உரைத்திடும் ஆற்றல் மரபு கவிதைக்கு உளதாகின்றது. மரபுகவிதையின் யாப்பும் இலக்கண வரம்பும் காலப்போக்கில் நெகிழ்ந்துவரினும், பாரதியும் பாவேந்தரும் புதிய வடிவங்கள் கண்டனர்; எனினும், பாநலன் ஆகும் பாவின ஓசை காத்திட வேண்டுமாதலின், எந்த மாற்றமும் வரம்பிலியாக முடியாது.

புதுக்கவிதை, எழுதப்படும் முறையாலும் ஓரளவு எதுகை மோனை தழுவலாலும் ஒவ்வொரு வகையில் வடிவுடையதாகத் தோன்றினும் யாப்பு இலக்கண வரம்புடைய தன்று. அது வரம்பிலியாகவே வளர்வது; எண்ணிய கருத்தினைப் பளிச்செனப் புலப்படுத்தும் திறன் ஒன்றே அதன் இலக்கணம்.

புதுக்கவிதை ஒன்று,

“கந்தை யானாலும் கசக்கிக் கட்டு;
அது சரிதான்;
அது காயும் வரையில்
எதைக் கட்டுவது?”

என்று அமைந்த துணுக்கொன்று நெஞ்சினைத் தொடுகிறது. அதுவே மரபு கவிதையாக வருமானால்,

“முந்தி வறுமை விஞ்ச மூப்பொடு பசித்தீ வாட்டக்
குந்தக் குடிசையும் இன்றிக் கும்பி கொதிக்கும் நிலையில்
கந்தை எனினும் அதனைக் கசக்கிக் கட்ட முயலின்
கந்தை பிறிதொன் றுண்டோ காயும் வரையிற் கட்ட?”

எனும் வகையில் - பல அடிகளாய் அமைவதே இயல்பாகும். அதனால்தான் மரபு கவிதையின் இடத்தைப் புதுக்கவிதை நிரப்பத் தலைப்பட்டுள்ளது எனலாம்.

காலத்தின் மாற்றத்தாலும் மக்கள் வாழ்க்கையில் விளையும் மாற்றங்களின் வேகத்தாலும் பரபரப்பு வளர்க்கும் சூழலாலும் இலக்கியச் சுவை நாடுவோரும், சிறுகதையும் ஒருபக்கக் கதையும், துக்கடாச் செய்தியும் படிப்பதில் காட்டும் ஆர்வத்தைப் போன்று புதுக்கவிதை படிப்பதிலும் ஆர்வம் காட்டுகின்றனர். அதனால், மரபுகவிதை மதிப்பினை இழந்துவிட்டதாகாது. அதனைப் படிப்போர் உள்ளத்தில் அதன் ஆழமான ஆட்சி நிலைக்கத்தான் செய்யும்.

மனித வாழ்வு, அதன் மேம்பாடும் வீழ்ச்சியும் எண்ணங்களின் தாக்குறவின் விளைவு என்பதால் சிந்தனையைக் கவர்ந்து, நல்ல நோக்கத்தையும் உலகியல் தெளிவையும் வளர்க்கும் எண்ண அலைகள் எந்த வடிவத்தில் எழும்பினும் அதன் பயன் கருதி ஏற்கலாவதே. கவிதை வடிவமும் வகையும் எதுவெனினும் கருத்தே அதன் உயிராதலின்

அதன் மாட்சி காக்கப்பட வேண்டும். 'காதல்' இன்பத்தைக் 'காம' நுகர்ச்சியாக ஆக்குவதும், 'ஒழுகலாறு' கெடுமாறு கயமைச் செயலை ஊக்கப்படுத்துவதும், மக்கள் பேச்சினைக் கொச்சைப்படுத்துவதும் எவ்வகை எழுத்திற்கும் ஏற்புடையனவாகா.

கவிஞர் பலவகையினர்; அவர்தம் சிந்தனையில் வடிவெடுக்கும் வண்ணங்கள் பலப்பல; அவர்தம் உள்ளத்தில் ஊற்றெடுக்கும் உணர்வுவெள்ளம் துள்ளிவரும் சொற்களாம் பூக்கள் பரப்பும் மணமும் வேறுவேறு. அந்த வேறுபட்ட இயல்புகளின் சங்கமமாகும் கவிதைப்படைப்பு, தனித்தனித் தன்மையுடையதாவதே கவிஞர்கட்குப் பெருமை; அவர்தம் கவிதைக்கு ஒளி!

ஒன்றனைக் காணும் போதும், கருதும் போதும் கவிஞனின் கலை உள்ளம், அதனை உணரும் திறத்திலும் உரைக்கும் வகையிலும் தனித்தன்மை காட்டி ஒளிர்கிறது. அவன் அதனை உணரும் திறத்தால், பிறர் காணாத உவமையைக் காண்கிறான்; உரைக்கும் திறத்தால் பிறர் உணராத உண்மையை உணர்த்துகிறான்; கற்பனை எழிற்கூடம் எழுப்பிப் பிறர் நினைவில் நிறுத்துகிறான். கலைவல்ல ஓவியனும் சிற்பியும் இசைவாணனும் நடம்பயில் நங்கையும் நடிகனும்கூட அவ்வக் கலையில் தனிவகை 'அகநோக்கு', 'கலைப்பார்வை' உடையவர்களே எனலாம்.

கவிஞர் எவரும் எல்லா வகையிலும் சிறப்பதில்லை; அஃது இயல்வதும் அன்று. ஒவ்வொரு வகையில் ஒவ்வொருவர் சிறப்பர். அதுவும் பயிற்சியால் அடைவது ஓர் அளவே. உண்மையில் 'கவிஞனான ஒருவன் வளர்ந்து உருவாகிறான்' என்பதனைவிடப் 'பிறக்கிறான்' என்பதே பொருத்தமாகத் தோன்றுகிறது. எல்லாருக்கும் எழுத்தறிவிக்கலாம்; கல்வி கற்பிக்கலாம்; பலரையும் அறிவாற்றல் பெறச் செய்யலாம்; ஆனால், ஓரிருவரைக்கூடக் கவிஞனாக உருவாக்குதல் அரிது. அதனால்தான் கவிஞரின் திறப்பாட்டை எண்ணும்போது இளமாணவர் சிலரிடைக் காணப்படும் 'கணிதமேதை'த் திறம் ஒப்பதாக இது விளங்குவதால், கவிஞன் பிறக்கிறான் என்று கருத நேரிடுகிறது. புலமையில் மேம்பட்ட அறிஞர் பலர் கவிஞராகாமையும், கல்வியில் எளியவர் ஆவார் பலர் கவிஞராக ஒளிர்வதனையும் காண்போர் சிந்தித்தற்கு இடனாவது இது. எனவே, உரிய உளப்பாங்கால் ஒளிர்பவர் கவிஞர் என்று கொள்ளலாமெனினும் 'கற்பனைக் கனவுகளும் கவிதை போன்று கருத்தைத் தொடுக்கும் திறனும் சிறிதும் இல்லாத மனிதன் இல்லை' என்பதும் கருதத்தக்கது. அப்படிப்பட்ட இயல்பு பலரிடமும் உளதாவதனால்தான் மற்றவர் எழுதும் - வெளியிடும் கவிதையைப் படிப்பதற்குரிய ஆர்வம் கொள்வோர் பலரைப் பெற்றுள்ளோம். கவிஞர்கட்கு ஊக்கம் தரவும், ஊட்டமளிக்கவும் அவர்தம் தொகை நாளும் பெருகுவதாகட்டும்!

கடந்த அரைநூற்றாண்டாகவே வளமையும் திருவும் நடம்புரியும் மலேசிய நாட்டில் தமிழ் ஆர்வம் தழைத்து, தமிழ் ஆக்கத்தொண்டு சிறந்து வருவதனை நான் உணர்ந்துள்ளேன். அவர்களிடையிலும் கதை, கட்டுரை, புதினம், இலக்கிய ஆய்வு முதலாயவற்றுடன் போட்டியிடும் வகையில் 'கவிதை' மலர்ந்து வந்துள்ளது. அரசியல், சமுதாயநிலை, சமய ஒற்றுமை, பகுத்தறிவு நோக்கு, சாதி ஒழிப்பு, பெண்ணுரிமை வாழ்வு, சமன்மைக் கோட்பாடு ஆகிய பல நோக்கிலும் சிந்தித்திடச் செய்யும் எழுத்து, ஏற்றம்

பெற்றுவருவதும் மகிழ்ச்சியளிப்பதாகும். அந்த மண்ணில் பிறந்த நாளேடுகளும் கிழமை ஏடுகளும் ஆற்றியுள்ள மொழி, கலை, இலக்கியத் தொண்டு பாராட்டத்தகுவது. அந்த ஏடுகள் இல்லையாயின் இலக்கிய விருந்து சிலர் படைப்பதும் அதனைப் பலர் சுவைப்பதும் வாய்த்திருக்குமோ? வாழ்வு நாடியும், வளந்தேடியும், உழைப்பினை நல்கிடும் உளத்துடன், உலகெங்கும் உள்ள நாடுகள் பலவற்றிலும் பரவிக் கிடக்கும் தமிழர் எல்லார்க்கும் 'தாய்மண்' என்னும் உறவால், தமிழகம் பெருமை கொள்கிறது என்றாலும், தலைமுறை தலைமுறையாக வேற்று மண்ணில் வாழ்ந்திருக்கும் தமிழ்வழிப்பட்ட மக்கட் கெல்லாம் பல வகையில் வழிகாட்டிகளாக விளங்கும் சிறப்புடையார் மலேசியத் தமிழர்கள். தாய்மொழி அடியாக வளர்ந்த கலைகளையும் பண்பாட்டையும் போற்றி வருவதொடு, தாம் வாழும் நாட்டின் பல இன மொழி மக்களுடனும் இணங்கி வாழ்ந்து, ஒற்றுமைக்கு ஊறுஇன்றிப் பொதுநலன் வளர்க்கும் சிறப்புப் பாராட்டத் தகுவது.

அவர்களிடையே மலர்ந்த கவிஞர் பலர்; மலர்ந்து மணம் பரப்பிடும் புகழுக்குரியோரும் பலர். 1887ஆம் ஆண்டு முதல், 1987ஆம் ஆண்டுவரை உள்ள ஒருநூறாண்டு காலத்தில், அந் நாட்டுக் கவிஞர் தீட்டிய கவிதைகளுள் தீஞ்சுவைக் கனிகளாய்ச் சுவைத்தவற்றைத் தெரிவுசெய்து, இந்தக் 'கவிதைக் களஞ்சியம்' என்னும் தொகுப்பு நூலை உருவாக்கியுள்ளார் திருவாளர் கவிஞர் முரசு.நெடுமாறன் அவர்கள். ஒருநூற்றாண்டு கால அளவில், வெளிவந்த கவிதைகளைத் தொகுப்பதும், அவற்றுள் சிறந்தவற்றைக் கண்டறிவதும், அவற்றை அச்சேற்றிக் களஞ்சியமாய் வெளியிடுவதும் பெருமுயற்சி வேண்டப்படும் அருஞ்செயல் ஆகும்.

ஒருகட்சி, ஒருசமயம், ஒருகொள்கை என்னும் சார்பு நோக்கின்றிப் பலதரப்புக் கவிஞர்களின் படைப்புகளாய வெவ்வேறு சார்புடைய கவிதை மலர்களும் இம் மாலையில் தொடுக்கப்பட்டுள்ளன. அது களஞ்சியத்தை அதன் நோக்கத்திற்கேற்ப நிறைவுடையதாக்குகிறது. அவ்வாறு தேர்ந்தெடுத்த கவிதைகளும் பாடல்களும் இயற்கை, இறை, நாடு, மொழி, காதல், சமுதாயம், தோட்டப்புறம், பல்சுவை முதலாய பல தலைப்புகளில் பொருத்தமுடன் பொதிந்து வைக்கப்பட்டுள்ளன. படிப்பவர் எளிதில் பாடற் கருத்தினை ஓர்ந்திட ஏதுவாக ஒவ்வொரு பாடலுக்கும் ஏற்ற தலைப்பும் தரப்பட்டுள்ளது.

பண்டைத் தமிழர் இயற்கையொடு இயைந்த வாழ்வினர்; அதனால், இயற்கையின் இயல்பும் அழகும் பெரிதாகச் சங்கத் தமிழ்ப் பாக்களில் இடம்பெற்றன. இந்த நூற்றாண்டின் புரட்சிக் கவிஞராம் பாவேந்தரின் 'அழகின் சிரிப்பு' இயற்கை எழிலைக் கவிதை எழிலாக எடுத்துக் காட்டும் திறத்தது. அவ் வகையினைச் சார்ந்தவை 'இயற்கை' என்னும் தலைப்பில் இடம்பெற்றவை.

கதிரும் கடலும், காலை, புல், பனித்துளி, காற்று, நிலாப் போன்று பல தலைப்புகளில் இயற்கையின் எழிற்கோலக் காட்சியும் அதனை வியக்கும் கவிஞனின் கற்பனை விரிவும் வண்ணத் தமிழில் தீட்டப்பட்டுள்ளன. 'மலேசியக் கடல்வளம்' என்னும்

தலைப்பில், அந் நாட்டின் அகமும் புறமுமாய் விளங்கும் எழில்நலத்தை நம் கண்முன் நிறுத்துகிறார் கவிஞர் ஞானதாசன்.

அப் பாட்டில்,

“கலையெழில் கொஞ்சக் கடிமணம் வீசுங்
கவினுறும் மலேசிய நாட்டின்
மலைகளும் சோலை வனங்களும் நெஞ்சை
மயக்குறச் செய்துளந் நாளும்
அலைபுரண் டோடி ஆர்த்திடுங் கடலின்
அழகுறு காட்சிகள் நம்மை
மலைத்திடச் செய்தே மனத்தினைக் கவரும்” (பா, 18)

என்று வரும் வரிகள் மலேசியாவின் எழிலுக்குச் சான்று.

“சங்குவெண் முத்துப் பவளமு மீன்று
சகத்தினர்க் கீந்திடும் கடலின்
பொங்குதண் ணீரில் பாயென விரித்துப்
படுத்துள்ள எண்ணெயின் வயலும்
........................................................
மங்கலப் பதியெம் மலேசிய நாட்டின்
மாட்சியே கடல்வள மாகும்” (பா,18)

என்னும் வரிகள் அதன் வளத்திற்கு விளக்கமாகின்றன. 'காற்று' என்னும் தலைப்பில் புலவர் மு. சேதுராமன் இளந்தென்றல் வீச்சின் விளைவை,

“மொட்டவிழும் தாமரையை முத்தமிட்ட போதையுடன்
கட்டவிழும் காரிகையர் கூந்தலிலே மோதுகிற
வெட்கமிலாக் காற்றினது வேட்கைவிளை யாட்டு”
(பா,15)

என்று வருணித்திருப்பது கவிதைச் சுவை நல்குவது.

'பனித்துளி' என்னுந் தலைப்பில் கவிஞர் ந. பழநிவேலு,

“காலை யெனுங்குயவன் காற்றினையும் கொண்டலையும்
சாலப் பிசைந்த தருணத்தில் மேலிருந்து
வெண்துளியாய் வந்து விழுந்தனையோ? உன்மேனி
புண்ணாகிப் போகப் பொறுக்காமல் - மண்வளரும்
புல்லன்பன் தன்மடியில் கொண்டானோ?” (பா, 6)

'இறை' என்னும் பகுதியில் இடம்பெற்ற பாடல்கள் சைவம், வைணவம், கிறித்தவம், இசுலாம் முதலான சமயச் சார்புடையனவாய், வெவ்வேறு தெய்வங்களைப் போற்றுவன; வாழ்க்கைத் தத்துவம்பற்றி உணர்த்துவனவும் உள்ளன. இறையைப் போற்றிப் பாடுவது இதயத்தைப் பக்குவப்படுத்திடும் முறையே என்று தெளியும் வகையில், வள்ளலாரைப் பின்பற்றி, அருட்பா நடையில் 'ஆளும் அருள்' எனும் தலைப்பில் இயற்றியுள்ள பாடலில் காணப்படும்,

"நாடுகின்ற பேருக்கு நல்லருளைத் தந்தாங்கு
நடுவாகி நிற்கு மரசே
பாடுகின்ற பைந்தமிழ்ப் பாவலர்க்குக் கற்பனையும்
பருப்பொருளும் ஆன இறையே!" (பா, 51)

என்னும் வரிகள் சிந்தனையை வளர்ப்பன.

'ஒரு சிந்தனை' என்னும் தலைப்பில் பாடியுள்ள கவிஞர் ரெ. சண்முகம்,

"சிறுதெய்வ பூசைதனைச் செய்து - கையில்
சிலபொருளைக் கொண்டுவந்து காட்டும்
திறமைக்கு அடிவணங்கும் மக்கள் - அன்னார்
செய்கின்ற தந்திரத்தை எண்ணார்" (பா, 49)

என்னும் வரிகளில், தெய்வநம்பிக்கை கொண்ட எளிய மக்களை ஏமாற்றும் தந்திரத்தைச் சுட்டுகிறார்.

"உண்பதுவும் உறங்குவதும் எல்லாம் - உள்ள
அமைதிக்குத் தான்என்னும் உண்மை
அன்பர்க்குத் தான்இங்குத் தோன்றும் - அந்த
அன்பென்னும் அறம்நிலைக்க வேண்டும்" (பா, 49)

என்று அவர் கவிதையை முடித்திருப்பதும் சிந்திக்கத் தக்கதாகும். இவ் வரிசையில் அம்மானை, அந்தாதி போன்ற சிற்றிலக்கியப் பாடல்களும் காலங்கடந்த சித்திரகவியும் இடம்பெற்றுள்ளன.

'நாடு' என்னும் பகுதியில் அமைந்த பாடல்கள் பலவும் மலேசியாவின் சிறப்பினையும் அங்கு வாழும் பல்வேறு இனமொழி மக்களிடையே நிலவும் நல்லுறவினையும் அழகுபட விளம்புகின்றன. 'எங்கள் மலாயா இது' என்னும் தலைப்பில், "தேன் பாயும் ரம்புத்தான்" எனத் தொடங்கும் பாடல் ஓசை நலத்தால் தேனெனச் சுவைப்பது.

'சுதந்திரம் வேண்டும்' என்னும் பாடலில் கவிஞர் ஏசையா,

"சுதந்திரம் ஒவ்வொரு மாந்தரின் உணர்விலும்
சொல்லிலும் செயலிலும் சுடர்ந்திட வேண்டும்" (பா, 555)

என்று விழைந்திட்ட குறிக்கோள் நாளும் வளர வேண்டும்! இத் தலைப்பில் மலேசிய நாட்டின் தனிச் சிறப்பினைக் காட்டும் வேறுசில பாடல்களும் இடம்பெறுகின்றன.

தமிழ் என்னும் பகுதியில் இடம்பெற்றுள்ள பாடல்கள் பல.

"பாழும் தமிழ்ச்சாதி பட்டதெல்லாம் போதாவோ?
வாழும் மொழிக்குமின்னல் வந்ததுவோ அம்மானை?
வாழும் மொழிக்குமின்னல் வந்ததுவோ என்றறிந்து
சூழும் கயமையெலாந் தோற்கடிப்போம் அம்மானை!
சூரருக்குத் தோல்வியில்லை சொல்லிவைப்போம் அம்மானை"!
(பா, 83)

என்னும் வரிகள் இடம்பெறக் கவிஞர் வீரமான் பாடியுள்ள 'தமிழுக்கோர் அம்மானை' என்னும் பாட்டு எழுப்பும் பாட்டோசை உணர்ச்சி தருவது. மொழிபற்றிய பாக்கள் பல. அவற்றைப் பாடிய புலவர் பலராயினும் 'அம்மானைப் பாடல்க'ளாக அமைந்துள்ளவை குறிப்பிட வேண்டியவைதாம்.

கவிஞர் சோமசன்மாவின் 'மொழியைக் காப்போம்' என்னும் பாடலில்,

"மொழிவாழ்ந்தால் வளமாக நாமும் வாழ்வோம்;
முனைப்போடு செயலாற்றத் துணிவும் காண்போம்;
விழிபோனால் சந்ததிக்கு விடிதல் கூட
விளங்காது............" (பா, 114)

என்று இடம்பெறும் இந்த வரிகள் மொழிகாக்கும் தேவைக்குத் தெளிவூட்டுவன. 'அறிவியல் தமிழ்' என்னும் தலைப்பில் கவிஞர் பொன்னுசாமி இயற்றியுள்ள பாடல் காலத்தின் தேவையாகும்.

"முத்தமொழி, இலக்கணத்தால் முதிர்ந்து நிற்கும்
உலகமொழி தமிழென்று மொழிதல் மட்டும்
மாற்றுவழி யாகாது! விஞ்ஞா னத்தின்
விருந்துமொழி மருந்துமொழி தமிழ்தான் என்று
போற்றுவதும் உலகத்தார் நாட்டார் எல்லாம்
புரிந்துகொள வைப்பதுவும் ஆகும்..." (பா, 110)

என்னும் வரிகள் நம்மைச் செயற்படத் தூண்டும் சிறப்புடையன.

'மார்க்க மொன்று சொல்லாய்' என்னும் கவிஞர் கா. பெருமாள் பாடலும் தமிழ் காக்கும் வழியதனை உணர்த்துவதுடன், நடையிலும் சிறந்து இலங்குகின்றது.

'பினாங்கிலே தமிழ்' என்னும் தலைப்புள்ள பாடலில்,

“பொதிகையில் பிறந்து, மதுரையில் வளர்ந்து, ஒருவிதி
கைப்பட பினாங்கு சென்று, கவிதைச் சுவைமி குந்து
கலைசூழ நின்றதமிழ்த் தாயவள், உடல்தூக் கிடவும்
ஓர்உறவோர் இலாதநிலை உளதாகுமோ? இந்தப் பினாங்கிலே!”
(பா, 112)

என மனம் நொந்து ரெ. கார்த்திகேசு பாடுவது, ஒப்பாற்ற முடியாத உள வேதனைதானோ! என்று துடிக்கச் செய்கிறது. தமிழ்க் கல்வியைப் பேணிக் காக்கச் செய்தற்கு,

“சிங்கையிலோர் தமிழ்ப்பள்ளி சீரழிந்து கடன்என்னும்
பெருநோய்ப் பட்டுப்
பங்கமுற அயலார்கள் பார்த்துநகை புரிவதைநாம்
பார்த்தும் உள்ளம்
பொங்கலையா?”

என்று கேட்டு,

“மாண்புறுநம் தமிழ்வாழ வகைகாண வரிந்துகட்டி
வருவீர் இன்றே!” (பா, 92)

என்று கவிஞர் கா. பெருமாள் அழைப்பதும் தமிழர்க் கெல்லாம் உணர்வேற்றும் பாட்டாகும்.

மலேசியத் தமிழ்மக்கள் பேச்சு வழக்கில் தமிழ்ச்சொற்கள் பல திரிபடைந்தும், பிறமொழிச் சொற்கள் பல குடிபுகுந்தும் உள்ளன என்பது, பேச்சுத்தமிழ் நடையில் உருவான பாடல்களில் தெளிவாகத் தெரிகிறது. “அவை கவிதைநயம் வாய்ந்தன வெனினும், படிப்போர்க்குச் சுவை பயக்கலாம் எனினும், தமிழ்மொழியின் இயற்கை ஓசை நலத்துக்குக் குறை விளைவிப்பனவே” என்பது கருத்திற் கொள்ள வேண்டியதாகும். இடம் பொருள் குறித்திடப் பிறமொழிச் சொற்கள் வருவதனைத் தவிர்க்க ஒண்ணாது எனினும், செயல் குறிக்கும் வினைகள் தமிழாகவே மலர்தல் தமிழ்மணம் காக்கும் வழியாம்.

'காதல்' என்னும் பிரிவில் சுவையான பல பாடல்கள் உள்ளன. காதலில்தான் எத்தனை வகை? அவற்றுள் எத்தனை மலர்ந்தவுடன் கருகிவிடுகின்றன? எத்தனை பேர் காதல் சிறக்கிறது? "காதல் என்பது சத்தியத்தின் சாரம்; சதைப் பசிக்குச் சமயத்தில் தேடுகின்ற தீனியன்று" என்றெல்லாம் காதல் வயப்படும் உள்ளங்களின் நிலைகளைக் கவிஞர் க.து.மு. இக்பால் (பா, 283) அழகாகச் சித்திரித்துள்ளார்.

உண்மைக் காதல் எது? என்பதனைக் கவிஞர் ஐ. உலகநாதன்,

"மனநிலத்தில் ஒருருவை விதைத்து விட்டால்
மரமாகிக் கனிவதுதான் வெற்றிக் காதல்
இனப்பெரியோர் தடுத்தாலும் சாவில் கூட
இணைபிரியோம் என்றிருத்தல் அழியாக் காதல்" (பா, 284)

என்றும், நல்ல பண்புள்ள பெண்ஒருத்தி வாய்த்தால்,

"இயங்காத மெய்யெழுத்தை இயக்கி வைக்கும்
ஏற்றமுள்ள உயிரெழுத்தாய் ஒருத்தி வந்தால்
முயங்காத ஆடவரும் உண்டோ? ஆங்கே
முகிழ்ப்பதுவே உயிர்மெய்யை மொழியும் காதல்" (பா, 284)

என்றும் பாடியுள்ளமை சுவைத்து இன்புறுதற் குரியது.

கடையநல்லூர்க் கவிஞர் ஜமீலா பாடிய 'பிழையென்ன செய்தேன்?' (பா, 317) என்னும் பாடலில் சீர்திருத்தக் கொள்கையினைச் சிந்தாமல் செம்மையாய்ப் பாடியுள்ளார். "ஆர்தடுப்பார் நமதன்பை?" என்று காதல்மொழி பேசிய காதலன், தன்னைக் கலங்கவிட்டுப் பிரிந்து செல்ல, வருந்தும் காதலியின் பாடலாக அஃது அமைந்துள்ளது. எந்த நாட்டில் வாழ்ந்தாலும் இந்த நிலைமை இருக்குமன்றோ! 'இதழ்ப்பத்து', 'இடைப்பத்து' என்னும் தலைப்புகளில் அமைந்த பகுதிகள் காதலியின் உறுப்புநலன்களை வருணிக்கும் பத்துப் பத்துப் பாடல்களாக விளங்குகின்றன.

'அடி' என்னும் தலைப்பில் அமைந்த பாடலில் கவிஞர் கரு. வேலுச்சாமி ,

"அடியென்ற சொல்தமிழில் அடிப்பாய் என்றும்
அடிப்பாகம் அங்குலம்பன் னிரண்டே என்றும்
படிகின்ற பாதமென்றும் புலவன் பாடும்
பாட்டுச்சீர்த் தொடுப்பென்றும் பலவாய்ச் சொல்ல
முடிகின்ற கலைச்சொல்லாம்...." (பா, 298)

"சீதையடி இட்டவனம் கம்பன் பாட்டில்
சிலம்படியைப் பயிலவிட்டான் இளங்கோ நாட்டில்"

என்றெல்லாம் இப் பாடல் முழுவதும் பல்பொருளில் பன்முறை 'அடி' என்ற சொல்லை எடுத்தாளும் பாங்கு படித்து மகிழ்தற்குரியது.

"எழுதுங்கால் கோல்காணாக் கண்ணேபோல்" என்னும் திருக்குறள் கருத்தை யொட்டிக் கவிஞர் ஐ. உலகநாதன்,

"கார்வந்தும் வாராக் கணவனவன் வந்தக்கால்
போர்செய்வேன் என்றுரைத்தாள் பூவையிவள் - போர்வீரன்
ஊர்வந்தான், கூடினாள்; ஒண்டொடியாள் கொண்டசினம்
நீர்மேல் எழுத்துக்கு நேர்" (பா, 305)

என்று பாடியுள்ளது பிரிவிற் பிறந்த ஊடல் கூடலில் முடிந்ததைச் சுவைபடச் செப்புகின்றது.

'சமுதாயம்' என்னும் பிரிவில் நூறுபாடல்கள் உள்ளன. பொதுவாகக் கலை, கவிதை என்பன காலத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. காலத்தை, வாழ்க்கையைப் படம்பிடித்துக் காட்டுவது மட்டுமேயன்றி விமர்சிப்பதும், சீர்தூக்கித் தீர்ப்பளிப்பதும், கண்டனங்கள் செய்வதும், புதிய வழிகளைக் காட்டுவதும் கவிதை போன்ற இலக்கிய வகைகளின் நோக்கமாக இருக்கின்றன.

இப் பிரிவில் உள்ள கவிதைகள் கல்வி, சாதி, அரசியல் போக்குகள், அதிகார வருக்க நிலைமைகள், மக்களின் பல்வேறு வாழ்க்கைச் சிக்கல்கள் போன்ற பல்வேறு நிலைகளைச் சமுதாயப் பார்வையுடன் அணுகி, கருத்துச் செறிவுடன் கலைஎழிலுங் காட்டுவனவாய்த் திகழ்கின்றன.

வாழ வழிதேடிக் கலமேறி அங்குச் சென்று அடிமையாகி, கூலியாக வேலை செய்யும் தமிழரின் துன்பநிலையைக் கவிஞர் மதுராந்தகன் பாடல் அப்படியே எடுத்தியம்புகிறது.

"விடிவெள்ளி தோன்றுமுன்னே பெரட்டில் நின்று
விடிவதற்கு முன்னாலே காடு சென்று
கடிக்கின்ற அட்டைகட்கும் குருதி தந்து
கடமைதனைச் செய்தாலும் கால்வ யிற்றுப்
பிடிசோறு கிடைக்காது என்ற போதும்
பேச்சாளத் தமிழரினம் உள்ளொ டுங்கி
நடமாடும் பிணமாக ஆன தய்யா
நாவிருந்தும் ஊமையென நின்ற தையா"

சமுதாயத்தில் இந் நிலை மாற, (பா,138)

"மனிதனை மனிதன் மிதித்து வாழ
இனிவரும் காலம் ஏற்க வேண்டுமோ? (பா,162)

"மருண்டு மருண்டு சாகும் கீழ்மையை
மாற்றல் நம்கடன் அன்றோ?" (பா, 243)

என வரும் பாடல் அடிகள் சிந்திக்கத் தூண்டுவன. தமிழர் சமுதாயத்தின் வாழ்வே இந்தப் பாடலின் நோக்கம் அன்றோ?

"வாழவந்த தமிழினத்தார் பலபேர் இன்று
வெண்ணிலவின் ஒளிபோலத் தூய்மை கொண்டு
ஆலமர விழுதினைப்போல் காலை ஊன்றி
அமைதியுடன் வாழ்கின்றார்; வாழையடி வாழையாய்
அந்நாட்டில் வாழ்தற்கே எண்ணமிட்டு உழைக்கின்றார்" (பா,140)

என்னும் கவிஞர் ப. நன்முல்லை கவிதையைப் படிக்கும்போது, வாழ வழிதேடி மலாயா நாடு சென்ற தமிழர்கள் ஒருநாணயத்தின் இருபக்கம் போல மேற்குறிப்பிட்ட இருவேறு நிலைகளில் வாழ்கின்றனர் என்பதனை உணர முடிகிறது. நல்ல சமுதாயம் அமைய விழைந்திடின்,

"திருவுடன் வாழ்வது தேவை - எனில்
சிந்தித்துச் சொற்படி செய்கநற் சேவை
ஒருமையில் வேற்றுமை கொன்று - மண்ணில்
ஒருள்ளங் கொண்டு ஒழுகுதல் நன்று" (பா,172)

என்னும் கவிஞர் தமிழ்த்தும்பியின் கூற்றுத் தமிழ்மக்கள் செவியிற் புகுந்திருக்கும் என்றே நம்புவோம்.

'பல்சுவைப் பாடல்கள்' என்னும் பிரிவில் நூற்று எட்டுப் பாடல்கள் உள்ளன. தலைப்புக்கு ஏற்ப இன்பம், தட்டச்சுப் பொறி, மனம், வீரம், மானம், தொழிலாளர், இனவெறி, சீர்திருத்தம், எச்சரிக்கை எனப் பல்வேறு பொருள்களில் அமைந்த கருத்தாழமுள்ள கவிதைகள் இப் பகுதியில் உள்ளன. அவற்றுள் பல்சுவை நிறைந்த பாடல்களும் கலந்துள்ளன. காட்டாகத் 'தட்டச்சுப்பொறி' பற்றி ஒருபாடல். தட்டச்சுப் பொறியே தன்னிலைபற்றிப் பாடுவதாக அமைகிறது, இப் பாடல்.

"தட்டாக நெஞ்சையும் தமிழாக எழுத்தையும்
வெட்டிஎன் உடலமைத் திட்டார் - சொல்
தட்டாத தமிழிலே தட்டச்சுப் பொறியென
இட்டமாய்ப் பெயரெனக் கிட்டார்" (பா, 543)

ஆண்மகன் ஒருவன் தட்டச்சுச் செய்வதை,

"கெட்டித்த விரல்களால் பட்டுப் பட்டெனத்
தட்டினான் என்முச்சு முட்ட"

என்றும், அதையே கலையெழில் கொஞ்சும் பெண்ணொருத்தி தட்டியபோது,

"தட்டுக்குத் தட்டவள் தருஞ்சுகம் அம்மம்ம!
திட்டமாய் உயிருள்ள மட்டும் - நான்
கெட்டாலும் வாழ்ந்தாலும் கிறுக்காகிப் போனாலும்
எட்டாதே என்நெஞ்சை விட்டு"

என்றும் உரைப்பதாக வரும் கவிஞர் செ. சீனி நைனாமுகம்மது பாடல் நகைச்சுவையொடு விளங்குகிறது.

'உலகந் தந்த பரிசு'(பா, 581) என்னும் தலைப்பில் ஒருமுதியவரின் அவலநிலையை அழகாகக் கவிஞர் அன்புடையான் சித்திரிக்கின்றார். அதிலும் முதியவர் சொல்வது போல அமைந்த பாடற் பகுதி குறிப்பிடத்தக்கது.

"காடென்ன மேடென்ன என்னைப் போன்றோர்
காட்டுமரத் தோப்பாகக் காட்சி தந்த
நாடெல்லாம் சோலையாய் மாற்ற மண்ணில்
நாடோறும் சிந்தியது வியர்வை யன்று
ஏடெல்லாம் புகழ்பாடும் உழைப்பே! நாளும்
எருவாகக் கொட்டியது செந்நீர் தம்பி!
ஓடொக்கும் என்னுடலும் எலும்புக் கூடாய்
உருவாக இவ்வுலகைச் செழிக்க வைத்தோம்"

என்று உரைப்பதுடன், மேலும்,

"பெரியபல ஆசைகளைப் பலபேர் விட்டால்
பேருலகில் பசியென்னும் நோயும் உண்டோ?"

என்பது போன்ற அறிவுரை கூறும் பாடற் பகுதிகளும், விடுகதை (பா, 624), சிலேடை வெண்பாக்களும் (பா, 645 முதல் 648 வரை) இப் பகுதியிற் சிறப்புற அமைந்துள்ளன.

'எழுச்சிப் பாடல்' என்னும் பிரிவில் 50 பாடல்கள் உள்ளன. இப் பகுதியில் முதற் பாடலே எழுச்சிமிகு பாடலாய்,

"விடுபடு கதிரென வில்விடு அம்பென
உடைபடு நீரென ஒளிகொடு வேலெனப்
படையினில் நடையிடப் புறப்படு, புறப்படு!" (பா, 233)

என விறுவிறுப்பாய்த் தொடங்கி,

"விடிகின்ற நாளெல்லாம் வீணாகும் போது
விழுகின்ற சமுதாயம் எழுகின்ற தேது?
அடிபட்ட மரமாக வாழ்ந்திட்ட நிலையின்
அடிதொட்டு வணங்காமல் அடிவெட்டிச் சாய்ப்போம்!" (பா, 242)

எனச் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் அமைகிறது, கவிஞர் இரா. பெருமாள் அவர்கள் பாடல்.

மலேசிய நாட்டில் வாழும் தமிழரின் நிலை மிக அழகாக 'என்ன செய்தோம்'என்னும் கவிதையில் பின்வருமாறு படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது.

"கன்றோடு தாய்சேராக் கதைதான் போலும்
கவிஎழுதிப் பொருள்சேரா எழுத்தைப் போலும்
கொன்றொழிக்கும் பசியில்லை என்ப தாலே
கோபுரத்தை எட்டியதாய் எண்ண லாமோ?"

"உருப்போட்டு எண்ணிடிலோ தமிழ ரெல்லாம்
ஒன்றேனும் செய்தாரா உரிமைக் கென்று?
பொருளீட்டும் பெருஞ்செல்வர் நம்மில் உண்டு
பொருளாகச் செய்ததென்ன....." (பா, 251)

"சரித்திரத்தில் மூத்தவன்தான் தமிழன்! அன்னான்
சங்கொலித்து வந்தவன்தான்; மலையம் தன்னில்
உரிமையுடன் கொடிகட்டிக் 'கடார' மென்றே
உயர்தமிழிற் சொல்லெடுத்து ஆண்ட வன்தான்!"

"தரித்திரத்தில் மூழ்கிவிட்டான் இன்று...."

'வாழ்த்து ' என்னும் பகுதியில் மலேசிய நாட்டு அமைச்சர், சான்றோர், தமிழ்நாட்டு அறிஞர் பெருமக்கள் போன்றோரை வாழ்த்திப் பாடிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இப் பிரிவில் 'ஓங்குக துங்குவின் புகழ்' என்னும் தலைப்பில் கவிஞர் கரு. வேலுச்சாமி கவிதை (பா, 324) சொல்லழகும் நடையழகும் மிக்கு விளங்குகிறது.

"ஒருசெயல் தொடுவதும் விடுவதும்
மறுசெயல் உடன்பட முனைவதும் நிலை
சிறுசெயல் படுவதும் கெடுவதும்
சிலர்மன வினைகளில் இணையறு கலை"

"கடவுள் கொள்கை காந்திக்(கு) இருப்பதால்
காந்தியும் கடவுளும் ஒன்றெனக் கொண்டேன்"

என்னும் கா. பெருமாளின் 'கடவுளா காந்தி?' (பா, 333) பாடல் போன்று, மலேசிய நாட்டின் முன்னாள் தலைமையமைச்சர் துன் அப்துல் ரசாக், பெருமகன் மகாதீர், தமிழ்நாட்டின் சாக்ரடீஸ் பெரியார், செந்தமிழ்த் திரு. வி. க., திருமுருக கிருபானந்த வாரியார் முதலாய சான்றோர்க்கு வாழ்த்துக் கவிதைகள் பாடப்பட்டுள்ளன.

'இரங்கல்' என்னும் தலைப்பில் உள்ள பாடல்கள் பல.

"கரும்பினைக் கடித்தேன் சாறோ
கண்களில் வழிந்த தம்மா!"

"ஓர்மையில் சீர்மை கண்ட
உத்தமன் ரசாக்கே! உன்றன்
வேர்வையில் பனிமுத் துக்கள்
விளைந்தவை கோடி கோடி
பார்வையில் தந்தை யாகிப்
படைப்பதில் தெய்வ மானாய்" (பா, 356)

என்னும் கவிதை போன்று ஒவ்வோர் இரங்கற்பாவும் உள்ளத்தை நெகிழ வைக்கிறது.

இசைப் பாடல்கள் பகுதியில் 72 பாடல்களும், நாடகப் பாக்கள் பகுதியில் 16 பாடல்களும் உள்ளன. "எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்தது மிந்நாடு" என்னும் பாடலைப் போன்று 'வளங்கொழிக்கும் நாடு' என்னும் தலைப்புப் பாடல் (428) விளங்குகிறது. இசைப் பாக்கள் சிலவற்றிற்குப் பண், தாளம் ஆகியவை அமைக்கப்பட்டுள்ளன. கீர்த்தனைப் பாடல்கள் போலப் பல்லவி, துணைப் பல்லவி, உருவடிகள் அமையப் பாடப்பட்டுள்ளன.

தற்காலத் திரைப்படப் பாடல்கள் அமைப்பை ஒட்டிக் "காற்றே இளங்காற்றே" (429) போன்ற பாடல்களும் உள்ளன. எளிய நடையில் அமைந்த காவடிச் சிந்து (466), கிளிக்கண்ணி (588), சந்தப் பாடல் (642) ஆகியவையும் இப் பகுதியில் இடம்பெற்றுள்ளன.

'சிறுவர் பாடல்கள்' என்னும் பகுதியில் 60 பாடல்கள் உள்ளன. அவை அனைத்தும் சிறுவர்கள் பாடி மகிழ்தற் கேற்ற சிங்காரப் பாடல்கள்; சில வேடிக்கைப் பாடல்கள் எளிய, சிறிய சொற்களால் பாடப்பட்டவை; அவற்றுள், அறிவுரைப் பாடல்கள் சில; கதை சொல்லும் பாங்கிலமைந்த கருத்தோட்டப் பாடல்கள் சில; 'கயவர் நெஞ்சில் பரிவேது?' என்னும் தலைப்பில்,

"கயவர் நெஞ்சில் அறிவுரை
காலம் முழுவதும் ஊட்டினும்

வயலில் வளரும் விழலுக்கு
வார்த்த நீர்போல் ஆகுமே" (பா, 542)

என்னும் வரிகள் இடம்பெற்றுள்ளன. இதனைப் போன்றே 'கவலை ஏனோ தவளையாரே?'(539), 'புத்தியுள்ள சின்னப் பையன்' (541), 'தாய்கோழியின் கதை'(540) போன்ற பாடல்கள் குறிப்பிடத்தக்கன.

பொதுநிலையில் கவிதையை மதிப்பிட, அதன் வடிவம், கற்பனை, கருத்து, நடை, சொல்லாட்சி, உணர்ச்சி, உணர்த்தும் முறை, அணிநலம், சுவை முதலாயன பலவும் அளவுகோல்களாகும். இவை அனைத்தையும் கொண்டு எல்லாக் கவிதைகளும் விளங்குவன என எண்ணுதல் கூடாது. என்றாலும், மேற்கூறப்பட்ட எல்லா அழகுகளும் வெவ்வேறு கவிதையில் காணுமாறு இக் கவிதைக் களஞ்சியம் விளங்குகிறது. 'எழுத்தாளன் என்பவன் சமுதாயம் தெளிவடையச் செய்யப் புதுப்புது கருத்துகளைப் படைக்க வேண்டும்' என்னும் நோக்கத்தையும் பலர் நிறைவேற்றியுள்ளனர். இக் கவிதைக் களஞ்சியம், மலேசிய நாட்டின் தமிழ்ச் சமுதாய எண்ணப் போக்கினைப் படம்பிடித்துக் காட்டுகிறது. அதனொடு உலகப் பார்வையும் இதில் தென்படுவது இதன் சிறப்பை மேலும் உயர்த்துகிறது. இக் கவிதைகளில் எதுகை, மோனை, சந்தம் போன்றவை நிறைவாக அமைந்துள்ளமையால் படிக்கும்போது, இன்னோசை தரவல்லனவாக அமைந்துள்ளன. இக் கவிதைக் களஞ்சியத்தில் கவிஞர் சோமசன்மாவின் பாடல்,

"கதைவேண்டும் கவிவேண்டும் என்றால் அன்று
கலைபொங்கும் தமிழ்நாட்டை நோக்க லுண்டு
விதைபோட்டோம் இந்நாட்டில் விளைச்சல் கூட
வேகமுடன் நடக்கிறது" (பா, 114)

என்று குறிப்பிடும் கருத்து மனநிறைவளிப்பதாம்.

இந்தக் கவிதைக் களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ள கவிதைகள் யாவும் கருத்தை ஈர்க்கும் சிறப்புடையன; கவிதை வடிவ வெற்றுரையோ வீணுரையோ அல்ல; தமிழ் ஆர்வமும் இலக்கிய வேட்கையும் தழைக்கச் செய்யும் தேன் அடையாகத் திகழ்வது இக் களஞ்சியம். இக் களஞ்சியத்திற்கு ஒரு முன்னுரை வழங்கக் கேட்ட ஞான்று, அதற்கு வேண்டும் 'ஆய்வுமிலன், ஓய்வுமிலன்' என்பதனைக் கருதி ஒல்லாமையைப் புலப்படுத்தினேன். என் நண்பர் பெரும்புலவர் இராம. சுப்பிரமணியன் (பதிப்பாளர்) அவர்களும் தலைமைத் தொகுப்பாசிரியர் கவிஞர் முரசு. நெடுமாறன் அவர்களும் வற்புறுத்திப் படித்திடத் தூண்டி, இந்த முன்னுரையை வரையச் செய்திட்டனர். அவர்கள் தமிழார்வத்திற்கு நான் கடமைப்பட்டவனாகி, இவ் வரிய களஞ்சியத்திற்கு இக் கடமையை ஒல்லும் வகையால் நிறைவேற்றியுள்ளேன்.

மலேசியா, சிங்கப்பூர்ப் பகுதிகளில் 1887 முதல் 1987 வரை வாழ்ந்த கவிஞர் உள்ளத்துணர்வுகளை வெளிப்படுத்தும் இவ் வரிய கவிதைக் களஞ்சியத்தைத் தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களும், கல்லூரிகளும், மேல்நிலை, உயர்நிலைப் பள்ளிகளும் வாங்கிப் பயன்படுத்தின் பெரும்பயன் விளையும் என்பது உறுதி.

முன்னுரையில் இடம்பெறும் கருத்துகள் யாவும், முற்றும் தெளிந்து வரைந்தவை அல்ல; முதிராக் கனியாய் இருத்தல்கூடும். ஒருவேளை சுவையாது போயினும், எவரும் சுவைத்தற்காம் கவிதைக் கனிகள் பலப்பல களஞ்சியத்தில் நிறைந்துள்ளமையின், அவை அக் குறையை மாற்றும் என்னும் உறுதி கொண்டேன். "தமிழே தம் உயிர்", "தமிழ்த் தொண்டே தம் மூச்சு" என்று உளங்கொண்டு அருந்தொண்டாற்றும் அன்பர்கள் இயக்கும் மலேசியத் தமிழ்நெறி மன்றம் தழைத்தோங்குக! தமிழ்க் கவிஞர் வாழ்வு நாளும் சிறந்தோங்குக! வாழ்க வண்டமிழ்! வளர்க தமிழ்நலம்! வணக்கம்.

அன்பன்,

க. அன்பழகன்

சென்னை - 600 009 (க. அன்பழகன்)

# Dr. S. N. KANDASWAMY,

M.A., M.Litt., Ph.D., Dip. in Lings., Dip. in Sanskrit,
PROFESSOR & HEAD, DEPARTMENT OF LITERATURE,
DEAN, LANGUAGE FACULTY, MEMBER OF THE SYNDICATE
TAMIL UNIVERSITY. THANJAVUR-613 005, S. INDIA.

## An Appreciation

Due to the earnest efforts of the popular Tamil poet of Malaysia, Thiru. Murasu. Nedumaran, the Anthology of Tamil Poems composed by different Poets of Malaysia and Singapore who belong to 1887 - 1987 has been brought to the limelight. It has been prepared on the model of ancient Sangam Anthologies though different in structure and substance. The Tamils being the sea-faring people had cultural, commercial and political intercourse with the people of South East Asia including Malaysia and Java, at least from the beginning of the Christian era. But in the recent centuries, when India was under the yoke of British Rule, most of the migrants to Malaysia and Singapore have been commissioned as labourers to work in the estates, and to engage in the construction of railways and highways. In this context, it is essential to note that the majority of these people evinced keen interest in the preservation and propagation of their religion, culture and literature. As a result, the budding poets of every region in the migrated land gave vent to their feelings and emotions in the artistic form of songs, poems and ballads. Due to the negligence and absence of partonage, at least some of them were dwindled into ablivion. However, a quiet number of poems that were published in the Tamil dailies and other magazines in the fresh soil have been identified and adequately documented by the present compiler, Thiru. Murasu. Nedumaran. In the preparation of this anthology, Murasu has steadfastly worked for many years. He is well known not only in Malaysia but also in Tamil Nadu, since his poems have been recommended in the syllabus of Tamil text books, meant for the primary classes.

When I was offering courses on Tamil Classics and Saiva Siddhanta in the Department of Indian Studies, University of Malaya during 1979 - 85, I had occasions to witness the creative talents of the local Tamil

poets among whom Karaikizhar, Veeraman, Maithi Sultan, Re. Shanmugam, Ilavazhagu, Amaladasan and Paadasan are worth mentioning. It is essential to note that the poet Anbanandam of Penang had won the meritorious prize for his creative work entitled "Maraimalai Adigal Pillai Tamil" at Madurai, in an open competition in which Dr. Tamizhannal has also participated.

Dato Seri Dr. S. Samy Vellu, the reputed Minister, able orator and patron of letters has been the source of inspiration for the Tamil writers in Malaysia. His unabated love for our language and admirable qualities have been instrumental for the historical event of conducting the Sixth International Tamil Conference at Kuala Lumpur during 15th -19th November, 1987. His benedictions to this anthology would boost the poets to embark on fresh literary creations.

This anthology, being the treasure-house of Tamil poems which have a life of 100 years, will thrive forever, since it has been the document and also monument of the History of Tamil Literature, germinated in the adopted soil. This volume has been properly prepared and the poems are classified on the basis of the themes and subject matter which are subsumed under fourteen heads. In the opening portion, we have poems on the different manifestations of nature, viz, sun and sea, dawn, grass, dew, flower, parrots, breeze etc. Next we find poems on the manifestations of God which include Vinayaka, Siva, Sakthi and Murugan. It is quite interesting that poems on Nabigal Nayagam, Jesus Christ and Buddha are also included in this anthology.

The Tamils are really patriotic and loyal to the land where they live. Hence there are poems, under the title "Nation", that sing the glory of Malaysia, fostering the sense of integrity and unity among the different ethnic groups who are portrayed to be kith and kin. The other titles include Tamil, Folk aspects, Society, Benediction, Elegy, Fine arts, poems for children etc. etc.

All in all, this anthology contains 650 poems contributed by about 254 poets who belong to Malaysia and Singapore. The significant poems of some poetesses are also found in this collection. The compiler has been assisted by a team of poets and lovers of Tamil, as noticed in the introductory portion of this anthology. It is proper to mention the service of the great Tamil Scholar Rama. Subramanian, the former

Professor of Pachaiyappa's College, who helped a lot in editing this anthology, and under whose guidance, Thiru. Murasu. Nedumaran has studied Tamil Classics and Tholkappiyam, the earliest extant Tamil grammar.

Thiru. P.M. Anwar, Thiru. Aru. Su. Jeevanandan and Thiru. Re. Shanmugam have sufficiently co-operated with Murasu in this noble venture. It is not out of place to record that almost all the poems are composed in conformity with the canons of versification, indicating the law abiding nature of the authors. Most of the poems are rich in themes, fertile in imagination, varied in style and structure. It is my sincere opinion that this anthology will be considered to be a land mark in the History of Tamil Literature. I would like to congratulate all the contributors to this volume and the popular poet, Murasu. Nedumaran who spared no pains to bring this volume as perfectly as possible.

The whole anthology has been prepared through "Murasu Tamil Computer Typing" a new technique evolved by Thiru. M. N. Muthelilan, a budding scientist and illustrious son of the Chief compiler Murasu. Nedumaran. He richly deserves our appreciation.

Thanjavur, 613 005

(S. N. Kandaswamy)

முனைவர் சிலம்பொலி

# சு. செல்லப்பன்

அவர்கள் வழங்கிய

# ஆய்வுரை

மலேசியா,

"பன்னாட்டு மக்களுமே வாழும் தீவு!
பலமொழியும் பலகலையும் வளரும் தீவு!
எல்லோரும் போற்றுகின்ற சிங்கைத் தீவு!" (பா, 264)

இதனில் வாழும் தமிழர்,

"செந்நீரைச் சிந்திச் செழுமலை நாடுதனைப்
பொன்னாடாய் ஆக்கிய பொற்றமிழன் எண்ணற்ற
ஏக்கத்தால்" (பா, 232)

வாடிய போதும்,

"எழுத்தாளர் கூட்டமொன்று மலைநாட்டில்
எழுந்ததுகா ணென்றே செப்பி" (பா, 255)

'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்' என்னும் பெயரால் 650 கவிதைகளைத் தொகுத்து நூலாக்கியுள்ளனர்.

மலேசிய நாடு மிக்க வளங்கொழிக்கும் நாடு என்பதனைத் தமிழ்க் கவிஞர் குஞ்சு பாகவதர் மூலம் கேட்போம்:

"இயற்கை வளம்கொழிக்கும் எம்நாடு
இன்ப மலேசியாஎனும் பெயரோடு

செயல்முறையால் வெற்றிகண்ட நன்னாடு
செறிந்தமலை வெளிகானம் உடைநாடு

பல்லின மாந்தர் பண்பால் ஒன்றுசேர்ந்து
பாங்குடன் தொழில்தனைப் படைக்கும் திருநாடு
கல்விப் பெருக்கால் கலைக்கோயில்கள் மலிந்து
கண்டவர் வியப்புற விளங்கும் பொன்னாடு

முப்புறமும் கடல்சூழ்ந்தே அலைமோதும்
ஒப்புமை ஏதும் இல்லா எழில்நாடு
நட்புற வுபல நாட்டிடை வைத்து
நன்மை பெருக்கி உயர்ந்த நன்னாடு (பா, 427)

என்று போற்றுகின்ற நாட்டிலுள்ள தமிழ்க் கவிஞர் தொகுத்தளிக்கும் இக் கவிதைக் களஞ்சியம், மெய்யாகவே பல்சுவைக் களஞ்சியமாகவே திகழ்கிறது.

'இயற்கை', 'இறை', 'நாடு', 'தமிழ்', 'தோட்டப்புறம்' எனத் தொடங்கிப் 'பல்சுவை' எனப் பதினான்கு பகுதிகளாய்ப் பிரித்து இக் களஞ்சியம் தொகுக்கப்பெற்றுள்ளது.

கவிதைகளின் பெரும்பகுதியில் தாய்தமிழகத்தின் மண்வாசனையே மணக்கிறது என்பதனை உணரும்போது, கவிஞரின் தாய்பாசத்தைச் செவ்வையாய்ப் புரிந்துகொள்ள முடிகிறது.

பாவேந்தரின் கவிதைத் தாக்கம் பாடல்களில் பெரிதும் உள்ளது; ஆங்காங்கே, சங்கப்பாடல் தொனிக்கிறது; பட்டுக்கோட்டையாரும் இடையிடையே வருகிறார்; நாட்டுப்புறப் பாடல்களின் மணமும் கமழ்கிறது என்றால் அது மிகையாகாது.

தாய்தமிழ் நாட்டின் தாக்கத்திற்கு ஆளான கவிஞரே மிகுதியாயுள்ளனர். 'மலேயா நாட்டின் இயற்கைச் சூழலையும் கவிஞர் காட்டியிருக்கலாம்' என்று எண்ணத் தோன்றுகிறது.

தூய தமிழ்ச் சொற்களைக் கவிதைகளில் காணும்போது, தாய்தமிழரைவிட மலையகத் தமிழரது தமிழ்ப்பற்றைப் போற்றாமல் இருக்க இயலாது; இது பெருமிதம் கொள்ளச் செய்கிறது.

'சிறுவர்' பகுதி சுவைமிக்க பகுதி; புரட்சிக் கவிஞரது இளைஞர் இலக்கியத்தையும், குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவையும் அது நினைவூட்டுகிறது. மலேசிய நாட்டில் வாழும் பிற இனத்தவர் குழந்தைகளின் பாங்குபற்றியும் ஒப்பிட்டுப் பாடியிருந்தால் தாய்தமிழகத்திற்குப் புதிய கருத்துகள் கிட்டியிருக்கும். இதனைக் குறையாய்க் கூறவில்லை; ஓர் எதிர்பார்ப்பு; அவ்வளவே!

அருவி, செல்வர் என்றும் ஏழை என்றும் வேறுபாடு கருதாது, அனைவருக்கும் குளிர்ச்சி நல்குகிறது. அதனைக் கவிஞர் ஒருவர்,

"அருவியே! நீதான் ஆடும் ஆடைபோல் காணு கின்றாய்;
வறியவர், செல்வர் யார்தான் வரினுமே தயக்கம் இன்றித்
தருகிறாய் குளிர்ச்சி! வெள்ளைத் தளிர்க்கையால் தழுவுகின்றாய்!"
(பா, 16)

என்று கவிநயத்தோடு கூறுகிறார்.

மேலும் ஒரு கவிஞர்,

"தென்பாங்கு இசையெழுப்பிச் சிந்துகவி பாடும்
தென்றல்மெல்ல வந்துவந்து திரைநுரையில் ஆடும்;
பெண்பாங்கின் நளினமொடு பின்னிஅலை போடும்
பிழைபொறுக்கா உள்ளமெனக் கரைதழுவி மீளும்!

அணியணியாய்த் தவழ்ந்துவரும் அழகுதனி அழகு!
அரைகுறையென் றுலகார்ப்பை அறிவுறுத்தும் பழகு!
..........................................................................
பசியஎழில் படர்பொழிலாய்ப் பார்ப்பவர்கண் ஈர்க்கும்!
பனிமலையில் முகில்குழுமிப் பாலமுதம் வார்க்கும்" (பா, 32)

என்று இயற்கையின் எழிலைப் பாடுவது நம் உள்ளத்தை ஈர்க்கவே செய்கிறது.

"பஞ்சமென் றபெரும் நோயுமங் கில்லை
பட்டினி என்றால தெப்படி என்பார்
நஞ்சக மிலைநய வஞ்சக மில்லை
நன்மை வளர்த்தற நிலையினைக் காப்பார்
தஞ்சமென் றார்க்கிங் காதர வுண்டு
சத்திரம் சாவடி போன்றவை இல்லை;
மஞ்சம் நிகர்நெடுஞ் செல்வமே கொழிக்கும்
மாவள நாடு மலாயிநன் னாடே!" (பா, 67)

என்னும் கவிதையைப் படிக்கும்போது, அந்த 'மலாய் நாட்டைக் காணாத கண்ணென்ன கண்ணோ?' என்னும் ஏக்கம் நம்மைக் கவ்வுகிறது.

அந்த மலாயா நன்னாட்டில்,

"கார்கறுத்துக் ககனமழை பொழியும் நேரம்
கானமயில் கனிவுடனே நடன மாடும்,
..........................................................................

பார்க்கின்ற பக்கமெல்லாம் பயிர்செ ழிக்கும்
பசுமைநிறப் பால்மரத்தின் அணிவ குப்புச்
சேர்க்கின்ற இன்பநிலை கோடி கோடி
செய்கின்ற அத்தனையும் இரப்ப ராலே;
வார்க்கின்ற ஈயமெல்லாம் கப்ப லேறி
வரும்போது மின்னுகின்ற பொருளாய் மாறி
ஊரெல்லாம் வணிகநிலை" (பா, 76)

பெருக்கும் எனப் பண்பாடும் புலமையிலே கவிஞர் காதிர் சுல்தான் பாடியுள்ளது நினைவுகூரத்தக்கது.

மலைநாட்டில் பல்வேறு இனத்தவர் வாழ்கின்றனர். இனவேறுபாடு அங்கில்லை; அவரவர், அவரவர் பணிகளைச் செவ்வனே செய்து இன்பமுடன் வாழ்கின்றனர்.

கவிஞர் வீரையா கைவண்ணத்தில் அதனை அறிந்துகொள்ள முடிகிறது:

"அன்னை மலையகமே! அகிலத்தின் ஓர்துளியே!
ஆழிசூழ் உலகினிலே அழகுமீன் வடிவமொடு
இன்னல் களைந்தே ஈட்டுகின்ற ஆட்சிமுறை
மின்னலின் வேகத்தில் மீட்டுகின்ற முன்னேற்றம்!
இன்பத்தின் எல்லையிலே இனம்பாரா ஒற்றுமையும்
இணைந்திருக்கும் மூவினத்தின் எடுப்பான உழைப்புமுறை
துன்பத்தின் சாயலின்றித் தூய்மையின் வழியினிலே
அன்பான நெறியினிலே ஆற்றுகிறார் தம்பணியை!" (பா, 77)

'தமிழ்' என்னும் பகுதி எழில்சேர் பூக்காடாய்த் திகழ்கிறது. அக் காட்டில், 'தமிழுக்கோர் அம்மானை', 'தலைமுறைக்கோர் அம்மானை', 'தமிழ்ப்பகைக்கோர் அம்மானை', 'தமிழ்நிதிக்கோர் அம்மானை' போலப் பலநிறப் பூக்கள், "உலகத்தமிழா! உனக்கோர் செய்தி, உன்னையும் என்னையும் படைத்தவள் தமிழ்த்தாய்! அலைகடல் மலைகள் நிலத்தைப் பிரிக்கலாம்; அனைத்தும் கடந்தது நம்தமிழ் உணர்வு!" (பா, 93) என்று கூவுகின்றன. அத்துணைக் கவிதைகளிலும் பாவேந்தரின் பாமணம் வீசுகிறது. மலையகக் கவிஞர்கள் உள்ளத்தில், எண்ணத்தில், எழுத்தில் புதுவைக்குயில் புரட்சிக்கவிஞர் பாவேந்தர் மிகுதியும் இடம்பெற்று நிலைத்து நிற்கிறார்!

மிகப்பல கவிதைகள், மலையகத் தமிழர்க்கா? தாயகத் தமிழர்க்கா? என்னும் ஐயப்பாட்டைத் தோற்றுவிக்கும் அளவிற்கு அமைந்துள்ளன.

"பெருமைக் குகந்தபெரும் புலவர்க்கு நம்மவர்கள்
பெருமையைச் சேர்க்க வேண்டும்;
புகழோ டிருந்துபுகழ் குன்றாதொ ளிர்ந்ததமிழ்ப்
பாணரைப் போற்ற வேண்டும்;
திறமைக்குத் தக்கதொரு பரிசாண்டி லொருதடவை
தருதற்கு முயல வேண்டும்" (பா, 107)

என்கிறார் ஒரு கவிஞர்.

தமிழர் குறைகளை எடுத்துச் சொல்லும் கவிதைகளும் உள்ளன:

"அறம்பேசும் மறங்கூறும் அறிவுக்(கு) உரம்சேர்க்கும்
அன்புமொழி தமிழ்கற்கத் தடையா?
.......................................
உறங்குகின்ற இனம்தானே உரசித்தான் பார்ப்போமே
உணர்ச்சிதனை என்றுமுனைந் தாரோ?"

"நாங்கள் கைகட்டி நில்லோம்" (பா, 103)

எனக் குமுறுகிறார்.

'வாழ்கதமிழ்' என்றிந்த வைய்ம்பி எக்க
வாழ்த்தொலிகள் முழங்குகின்றார் மலைநாட்டுத் தமிழர்!
வாழ்கதமிழ் என்பதனால் வாழ்ந்திடுமோ தமிழ்தான்
வகையாற்றும் தமிழ்க்கூட்டம் சோம்பிக்கி டந்தால்!
.....................................................................
பொன்மொழியாம் எங்கள்தமிழ்! புகழ்சார்ந்த தென்று
புலம்புவதால் தமிழ்வளர்ந்து பூத்திடுமா?" (பா, 102)

எங்களுக்கொரு வழிசொல் பைந்தமிழ்த்தாயே! என்று தமிழ்த்தாயிடம் வழிகேட்கிறார் ஒரு கவிஞர்.

"பொய்யைப் புனைசுருட்டைப் போற்றிப் புகழாமல்,
நாட்டு நடப்பறிந்து நாட்டவர்க்காய் எழுதுமய்யா!
.....................................................................
குறளெங்கள் மறையென்பீர்! குறைகண்டால் கோபிப்பீர்!
ஒல்காப் புகழ்படைத்த தொல்காப் பியமென்பீர்!
ஒருநாளும் அதனைநீர் கண்ணாலே கண்டறியீர்!
.....................................................................
பாடப் புத்தகங்கள் பிழைமலிந்து கிடக்கையிலே
படிக்கும் பிள்ளைகட்குத் தமிழறிவு எங்குவரும்"? (பா, 104)

என்னும் கவிஞரின் வரிகள் இன்றைய தமிழரது உண்மை நிலையை அப்பட்டமாய்ப் படம்பிடித்துக் காட்டுகின்றன என்றால் அது மிகையாகாது.

“காரளந்த கூந்தல்மகள் கண்ணகியின் காற்சிலம்பில்
கற்பைவைத்துக் காவியம் செய்தோன்,
சேரன்தம்பி இளங்கோவும் செத்திருக்க மாட்டானா?
‘செக்ஸ்’கவிஞர் கூட்டம் பார்த்தே
பாரளந்த வள்ளுவனும் பாவாடை அளக்கின்ற
பாவலரைக் கண்டி ருந்தால்
சீரழிந்த தமிழ்நாட்டை, சிறப்பிழந்த பண்பாட்டைத்
தீயாகி எரித்தி ருப்பான்” (பா, 111)

என ‘இலக்கியம் எங்கே போகிறது?’ என்று ஆவேசப்படுகிறார் ஒரு கவிஞர். இக் குமுறலைக் கண்டு எமது உள்ளமும் எரிமலையாகிறது.

அனைத்துக் கவிதைகளும், தமிழையோ, தமிழர்களையோ பாராட்டுவதோடு நின்றுவிடவில்லை. தோட்டப்புறத்தில் வேலை செய்யும் தமிழ்த் தோழரது அவல நிலையையும் உள்ளம் நொந்து பாடியுள்ள கவிஞர் கவிதைகள், நமது உள்ளத்தை நெகிழச் செய்கின்றன. தாய்தமிழகத்தில் உள்ளவர், மலையகத் தமிழர் அனைவருமே சீரும் சிறப்புமாக வாழ்வதாய் எண்ணிக் கொண்டிருக்கின்றனர். அது தவறு; அவ்வாறு எண்ணாதீர்; தோட்டப்புறத் தமிழரைப் பாருங்கள்; என்பதுபோல் பல கவிதைகள் நமக்குச் சொல்கின்றன.

தோட்டப்புறத் தொழிலாளரைக் கங்காணிகள் மூட்டெலும்பை முறித்துச் சாகடிப்பதாயும், தினக்கூலியைக் குறைத்துக் கொடுத்து ஏமாற்றுவதாயும் நாட்டுப்புறப் பாணியில் அமைந்துள்ள கவிதைகள் நம்மை மலையகத்துத் தோட்டப் புறங்களுக்கே அழைத்துச் சென்றுவிடுகின்றன.

“பாலுமரம் வெட்ட லான்னு, பழைய கப்பல் ஏறிவந்தேன்
நாப்பத் தஞ்சி காசப்போட்டு நட்டெலும்ப முறிக்கிறானே
முப்பத் தஞ்சி காசப் போட்டு மூட்டெலும்ப முறிக்கிறானே” (பா, 118)

என்னும் வரிகளைப் படிக்கும்போது நம் கண்கள் குளமாகின்றன.

ரப்பர்மரத்தைப் பாலெடுக்க வெட்டும்போது எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்; தவறான முறையில் வெட்டிவிடக் கூடாது. தவறாக வெட்டிவிட்டால் கூலியைக் குறைத்துவிடுவர். நன்கு நிறைந்து வரிசையாய் உள்ள ரப்பர்மரத் தொகுதியை, இளம்பெண்களுக்குக் காட்டுகிறார் கங்காணி; ஆண்களுக்கோ பள்ளத்தாக்கிலுள்ள கலப்பான வரிசையைக் காட்டுகிறார். அவ்வாறான ஓரவஞ்சனைபற்றிய ஓர் ஆணின் குரல் இது:

"காயம் பட்டதுன்னு கூலிக்காச வெட்டுறார்;
சின்னச் சின்ன பொண்களுக்கு நல்லநெர காட்டுறார்;
என்னப் போல ஆண்களுக்கு ஏதோபாசா காட்டுறார்
பாக்கப் பயமா இருக்குதடி - நமக்கும்
பாலு வெட்டு வேணாமடி - இந்தப்
பாழாப் போன தோட்டத்திலே!" (பா, 119)
(பாசா - பள்ளத்தாக்கு)

ரப்பர்த் தோட்டத்தில் வேலை செய்யும் பெண்களிடம் கங்காணி, வெள்ளைக்கார முதலாளி, 'கிராணி' ஆகியோர் நல்ல முறையில் நடந்துகொள்ளுவதில்லை என்பது நன்கு தெரிகிறது. அதற்கு அஞ்சி அடிக்கடி வேறு வேறு தோட்டங்களுக்குப் பெண்கள் மாறிமாறிச் செல்லும் வழக்கத்தையும் காணமுடிகிறது.

"தொடதொடத்தான் காடி போட்டுத்
தொரயும் வந்திட்டான் - அந்தக்
கிஸ்முஸ் என்றுபேசும் கிராணி வந்திட்டான்!" (பா, 121)
"..........................................................................
சங்குச்சத்தம் கேக்குதடி ஜல்தியா வாடி - அந்தச்
சதிகாரக் கங்காணி ஏசு வாண்டி!
குடுகுடுத்தான் வண்டியேறித் தொரயும் வந்திட்டான்
'குட்மார்னிங்' என்றுசொல்லிக் கிராணி வந்திட்டான்" (பா, 122)
"..........................................................................
அஞ்சா நம்பர் காட்டுக்குள்ளே
என்ன வெட்டச் சொல்லுறான்
மெத்தப்பய மாகுதையா - நானும்
வேற தோட்டம் போறனையா!" (பா, 121)

தோட்டப்புறத் தோழி ஒருத்தியைத் திருமணம் செய்வதாய்ச் சொல்லி ஒருவன் ஏமாற்றிவிட்டான். தாய்தமிழகத்திலும் அஃது அன்றாடம் நடக்கும் செயல்தான். இருந்தாலும், மலையகக் கவிஞர் நகைச்சுவையொடு கூறுகிறார்.

"பாசாவில் தண்ணி மொள்ளப்
பக்கம் பாத்துத் தடம்போனேன்"
அங்கே,
"முழுகவந்த மாமா! - என்ன
'முழுகாம' ஆக்கினீங்க!
குளிக்கவந்த மாமா - என்ன
'குளிக்காம' ஆக்கினீங்க!
ஆனாலும்,
ஜாதிபத்திப் பீத்துறீங்க - பெரிய
ஜாதகமே பாக்குறீங்க;
தீண்டாத ஜாதீன்னு - தெரிஞ்சே

திண்டுமெத்தை கேட்டீங்க
ஊர்உலகம் சிரிக்கும்படி - நீங்க
ஒய்யாரம் பேசுறீங்க!" (பா, 130)

கவிதை நம்மைச் சிரிக்க வைப்பதொடு சிந்திக்கவும் தூண்டுகிறது. சமுதாயச் சீர்கேடு எங்குமே நீக்கமற நிறைந்துள்ளது; தொழிலாளர் அவலம் மலையகத்தையும் விட்டபாடில்லை.

"முதலாளி வாழ்வை முதலாக உயர்த்த
முதலாக நின்று முழுமையாய் உழைப்பவன்;
.......................................................
சிந்தனைப் பயிரைச் சிந்தையின் உயிராய்
வந்தனை செய்தே வருந்தியே உழைப்பவன்;

ரப்பரொடு ரப்பராய் இழுபறியாய் இன்னமும்
கொப்பரையாய்க் காய்ந்தே குழைவதுதான் நீதியோ?" (பா, 137)

என்று முதலாளி வர்க்கத்தைக் கேட்கத் தோன்றுகிறது.

"ஆண்டாண்டு காலமாய் நாட்டை யாண்ட
அருந்தமிழர் கூட்டந்தான், சோற்றுக் கின்றிக்
கூண்டோடு கலமேறி அடிமை யாகிக்
கூலியாகக் கோழையாக வந்த பின்னால்,
காண்கின்ற நிலையென்ன? இந்த நாட்டில்
காடழிக்கும் வேலைதான் காத்தி ருக்க
நாண்பாய்ந்த மானானார் தமிழ ரெல்லாம்!
நமையோட்டி வந்தவர்தாம் கொழுக்க லானார்" (பா, 138)

என்னும் கவிஞரின் வரிகள், புரட்சிக்கவிஞர் பாவேந்தர் 1930இல் பாடிய 'உலகப்பன் பாட்'டின்

"கூலிமக்கள் அதிகரித்தார், என்ன செய்வேன்!
பொத்தல்இலைக் கலமானார் ஏழை மக்கள்
புனல்நிறைந்த தொட்டியைப்போல் ஆனார் செல்வர்"

என்னும் வரிகளை நம் கண்முன்னே கொண்டுவந்து நிறுத்துகின்றன.

மலையகத்தில் ஒரு தடவை புயல் வீசியபோது அல்லற்பட்ட ஒரு கவிஞரின் புலம்பல்:

"தந்தை குடிவெறியன்! தாயோ பெருந்தீனி!
வந்தெனக்கு வாய்த்தவளோ வன்குரங்கு! - எந்நாளும்
சூதாடி வம்பு தொடருமகன்! என்னில்லில்
போதாதோ வீசும் புயல்!" (பா, 167)

தாய்தமிழகத்தில் மாபெருங் கேடாய் விளைந்திருக்கும் சாதிக் கொடுமை, மலையகத் தமிழரையும் விட்டபாடில்லை என்பதனை மலையகத் தமிழ்க் கவிஞர் வரிகள் தெளிவாக்குகின்றன.

"மாண்புசால் பள்ளர் தம்மை மனத்தினி லிழிவா யெண்ணி
வீம்புகள் பேசு கின்ற வீணர்கா ளாய்ந்து பார்மின்!" (பா, 171)

"தொட்டாலும் தீட்டென்று சொன்னார்"
...............................................

"ஓடும் குருதியும் வேறா? - சிலர்
உடலத்தி லோடுதல் சாக்கடை நீரா?
வாடும் பிரிவினை ஏனோ? - இங்கு
வாழும் சகோதரர் தாழ்ந்தவர் தாமோ?" (பா, 172)

மலேசியத் தமிழ்க் கவிஞரும் பெண்களைக் கவர்ச்சிகாட்டிப் பாடியுள்ளனர் என்பது தெரிகிறது. அதனைக் கண்டித்து அங்குள்ள பெண்கள் குரல் கொடுத்த செய்திகள் அடங்கிய கவிதைகள் பலவும் இத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளமை பெருமகிழ்ச்சியைத் தருகிறது. பெண்கவிஞர் மாலிக் பேகம், அவ்வாறாய கவிதைகளைச் சாடியுள்ள கவிதைகளில் சில வரிகள் :

"துப்புக் கெட்ட ஆண்களுக்கு வெட்கமே இல்லை - அழகு
தோகையரைப் பழிக்காவிட்டால் தூக்கமே இல்லை"
..................................................................
"துறவியைப்போல் முடிவளர்த்துக் கொண்டு திரிவதும் - வெள்ளைத்
துரைகளைப்போல் 'சிகரெட்' துண்டை வீசி எறிவதும்
நிறையழகு என்றுயாரும் சொல்வதே இல்லை"
..................................................................
"பழையதமிழ் இலக்கியங்கள் படிச்சதும் உண்டா? - அழகு
பாவையரைப் புலவரெல்லாம் பழிச்சதும் உண்டா? (பா, 180)

இக் கவிதை 1968ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. தற்போது அந் நிலை மாறியிருக்கலாம்.

ஒரு பெண்ணின் பெண்மை கெடுவதற்குக் காரணமாக இருப்பவர் ஆண்களே. ஆண்கள் கற்புடன் வாழ்ந்தால் எப் பெண் கற்பு இழப்பாள்? ஒழுக்கமான வாழ்விற்கு இருபாலரும் பொறுப்பேற்க வேண்டும். அதனை உணர மறுப்பதேனோ?

“காவிய நாயகி ஆக்குவர் - தம்
காரியம் முடிந்ததும் ஓடுவர்!
ஓவியப் பாவையென் றோதுவர் - பின்
உலுத்திடச் செய்துமே தூற்றுவர்!
தாய்குலம் என்றுமே ஏத்துவர் - பின்
தறுதலை யாக்கியே ஏகுவர்!
நாய்க்குலம் என்றுபின் ஏசுவர்” (பா, 183)

என்று கவிஞர் கமலா லட்சுமி ஆண்களைச் சாடுகிறார். சாடுவதற்குப் பெண் கவிஞருக்கும் உரிமையிருக்கிறது. பெண்களும் தங்களைத் தற்காத்துக் கொள்ளத் தற்காப்புப் பயிற்சி பெறுதல் மேல். இக் கவிதை 1967ஆம் ஆண்டில் எழுதப்பட்டது. இக் காலம் திருந்தியதாக இருக்கலாம்.

‘இடும்பை தவிர்க்கும் குடும்பவிளக்கு’ என்னும் தலைப்பில் உள்ள கவிதை நீண்ட ஒன்று; 89 வரிகளைக் கொண்டது; இக் கவிதையில் ரப்பர்த் தோட்டத்தில் வேலை செய்யும் தோழியர் ஒருவரது குடும்பச் சுமை சித்திரிக்கப்படுகிறது. ‘ஒரு கவிதை நயம்’ என்றே இதனைச் சொல்லலாம்; உள்ளத்தைத் தொடுகிறது. மலையகத் தோட்டப்புறக் குடும்பத் தலைவியின் பொறுப்பினை நல்ல முறையில் புரிந்துகொள்ளுதற்கு இந்த ஒரு கவிதையே போதும்!

“காலையில் எழுந்திருந்து கைகால் முகங்கழுவி
வேலைக்குச் செல்ல விரைந்து கணவனையும்
நாலைந்து முறைகூவி நாள்காட்டி எழுப்பியபின்”

கணவன், குழந்தைகள், மற்றவருக்கும் காப்பியை ஆற்றிக் கொடுத்து, உணவும் கொடுத்துவிட்டு, வீட்டுவேலை செய்யும் அம்மையிடம் மற்றச் செய்திகளைச் சொல்லிவிட்டு,

“வெள்ளி முளைக்குமுன் விழிமலர்ந்த தோட்டமகள்
..............................................................
வாளி உளியுடன் வாய்சிவக்கும் வெற்றிலையும்
தோழியர் சூழத் தொழில்செய்யும் இடம்நோக்கிக்
..............................................................
கடுகி நடையோட்டிக் கடமைசெய்யும் இடம்வந்தால்
..............................................................
கையில் உளியெடுத்துச் சீவிடுவாள் பால்மரத்தை”

"செய்யும் இவள்பணிக்குச் செகத்தினில் ஏதுவமை?
பொய்யல்ல இதுபோல் குடும்பம் பலவுண்டு"

இவ்வாறான,

"தோட்டப்புறப் பெண்கள் தொழுகைக்கும் ஏற்றவரே" (பா, 189)

என்று நாம் பாராட்ட வேண்டும்.

தாய்தமிழகத்தவர்போல் மலையகத் தமிழரும் காளி, மாரி, முருகன் போன்ற கடவுள்களை வணங்குகின்றனர். ஒரு நாள் காளிக்குப் பலியிடுதற்குப் பக்தர் ஒருவர் ஆட்டுக்கடாவைப் பலிபீடம் நோக்கி ஓட்டிச் சென்றார். அக் கடா காளியை வேண்டுகிறது:

"என்னருமை அன்னையே! எழில்மிகு காளியே!
உன்னுடைய அருளினால் உலகெலாம் மலர்ந்தன;
அன்புடை உயிரெலாம் உன்னுடை மக்களே!
வன்புடன் எங்களைக் கொல்பவர் மக்களோ?
உன்னுடை மக்களுள் யானொரு வன்அன்றோ?
என்றனை என்அண்ணன் கொல்லுத லும்நன்றோ?
அன்பினும் அறத்தினும் அகப்பட்டும் அன்னையே!
.............................................................
என்பெரும் உயிரினைக் காத்திடு" (பா, 191)

என்று கூறியதாய்க் கவிஞர் பாடியுள்ளார். காளி கடாவைக் காப்பாற்றினாளா என்பதனை யார் அறிவார்?

அங்கிங்கு என்று இலாதபடி எங்கும் நிறைந்திருப்பவர் குண்டர். குண்டர் இல்லாத நாடே இல்லையென்று கூறலாம். ஏதோ ஒருவகையில் இக் குண்டர் களுக்குச் செல்வாக்கும் இருந்துகொண்டுதான் இருக்கிறது. இதனையறிந்த மலையகத்துக் கவிஞர் 'தெருக்குண்டர் புராணம்' ஒன்று பதினாறே வரிகளில் எழுதி முடித்துள்ளார்; சுவை மிகுதி.

"இருக்கின்ற சுகவாழ்வு போதா திங்கே
இருக்கின்ற அத்தனையும் எனக்கே வேண்டும்;
உருப்படியாய் நான்மட்டும் வாழ்ந்தால் போதும்;
ஊர்கெட்டு உலகழிந்து போனால் என்ன?
பெருமையொடு நானிருக்க வேண்டும்!" (பா, 206)

என்று எண்ணுகின்ற பேராசை உள்ளங் கொண்டவர்க்கும் அந் நாட்டில் பஞ்சமில்லை என்பதனைப் பல கவிஞர் படம்பிடித்துக் காட்டியுள்ளனர்.

'ஆ லேங்' என்ற சீனத்துக்காரரது மளிகைக் கடைக்கு, நம்மைக் கவிஞர் ஒருவர் அழைத்துச் செல்லுகிறார். அரசு குறித்த விலைக்கு அரிசி கிடைப்பதில்லை; மைதாமாவும் கிட்டவில்லை. ஒரு கட்டி மைதாவுக்கு ஒரு காசு விலை ஏறினால் ஒரு ரொட்டிக்குப் பத்துக் காசை ஏற்றிவிடுகின்றனர் வணிகர். விலை ஏற்றத்தையும் எவராலும் தடுத்து நிறுத்த முடியவில்லை. காரணம் கேட்டால் 'அவனவனும் கதை அளக்கிறான்' என்று கவிஞர் சொல்லுகிறார்:

"நேத்திருந்த சாமான்விலை இன்னைக்கு மாறுது! - அது
..........................................................................
அந்த ஆலேங் கடைச்சரக் கெடுக்க என்னை வெரட்டுறா!
அரிசி இருக்கு விலைஇதுன்னு அரசு சொல்லுது - அது
அறிவிக்கின்ற விலைக்கு எங்கே அரிசி கிடைக்குது?
..........................................................................
கட்டிக்கொரு பத்துக் காசு மாவு ஏறினா - அது
ரொட்டிக்கொரு பத்துக் காசா மாறி ஏறுது!
தட்டிக் கேட்டா அவனவனும் கதைய ளக்கிறான்!
..........................................................................
போற போக்கு எங்கே நிக்கும் சொல்ல முடியுமா?" (பா, 212)

'லாயர் பூரோ' என்பவர் ஒரு பெரிய மனிதர். 'லாயர் பூரோ' என்பது பெயரன்று. அது மலாய்மொழியில் ஒரு மரபுதொடர். 'லாயர் பூரோ' என்றால், தமக்கு 'எல்லாம் தெரியு'மென்று வெற்று வீறாப்புப் பேசுபவர். இந்த லாயர் பூரோவாகிய பெரிய மனிதர் எப்படிப்பட்டவர்?

"பேருக்கு முன்னாலே நல்லதொரு பட்டம் - இவர்
பேசுகின்ற பேச்செல்லாம் 'லாயர் பூரோ' சட்டம்!
சாருக்கு ஊருக்குள் தலைவரெனும் பட்டம் - பொழுது
சாய்கின்ற நேரத்தில் நடத்தைமகா மட்டம்!

வட்டிக்கு விடுவதிலே இவர்மிகவும் கெட்டி - இவர்
வழங்குகின்ற பணத்திற்கோ இரட்டிப்பு வட்டி
..........................................................................
சேயில்லா நங்கையர்மேல் வைப்பாரே சிந்தை - இவர்
திரிந்துவரும் இடமெல்லாம் வஞ்சியரின் சந்தை" (பா, 215)

கவிஞர், மலையக 'லாயர் பூரோ'க்களைப்பற்றிப் பாடியுள்ளார். தாயகத் தமிழகத்திலும் லாயர் பூரோக்களுக்குக் குறைவில்லை என்பதனையும் சொல்ல அவருக்கு ஆசை! வேறு ஒரு பெரிய மனிதரைப்பற்றிக் கேட்போம்:

சிங்காரம்,

"பனையைப் போல நீண்டிருப்பார்;
பச்சைச் சிரிப்புச் சிரித்திடுவார்;
சுனையிற் காணும் புல்லைப்போல்
சொட்டைத் தலையில் மயிரிருக்கும்!
.......................................................
தங்கத் தமிழால் பிழைத்திடுவார்;
'தமிழன் அல்லன்' என்றிடுவார்;
அங்கும் இங்கும் பார்த்துவிட்டே
அருகில் யாரும் இல்லையென்றால்
துங்கத் தமிழைப் பிழைப்பதற்கே
தொடர்ந்தேன் படிக்க; ஆனாலும்,
எங்கள் மொழியே வேறென்பார்;
என்னுடை இனமும் வேறென்பார்
சிறந்த பதவி தருகின்றோம்;
'சிங்கா ரம்'வா என்றிட்டால்
பறந்தே வந்து சேர்ந்திடுவார்
'பார்நான் தமிழன்' தானென்பார்." (பா, 216)

இந்த மாதிரியான 'சிங்காரங்கள்' தாய்தமிழகத்திலும் இருக்கிறார்களே! அவரை என்ன செய்வது?

மலையகத் தமிழர் பார்க்கும் 'சினிமா' தாய்தமிழ்நாட்டிலிருந்துதான் செல்லுகிறது. சினிமாவால் அங்குள்ள இருபால் இளைஞரும் கேடுறுகின்றனர்; தமிழ்ப் பண்பாட்டுக்குக் கேடு விளைவிக்கிறது; 'குணம்' என்னும் குன்று உடைக்கப்படுகிறது. அதுகண்டு,

"இலைமறை காயாய் இருக்கும் காமக்
கழிவை அந்தோ! கலையெனும் பெயரால்
கடைவிரிக் கின்றீர்; கால்மலம் தொட்டதோ(டு)
உடையெல்லாம் பூசி உவக்கின் றீரே!
இவற்றைக் காணும் இளையோர் நெஞ்சம்
துவண்டு போமோ! தூய்மைப் படுமோ!
திரைப்பட நடிக நடிகை யர்தம்
அரைகுறை ஆடை அலங்கோ லங்கள்
உருக்கி உள்ளத் துணர்வை நாளும் அரித்திடும்"
.......................................................
"உயர்ந்த நடிப்பும், உலகிய லறிவும்
இயற்கை உணர்வொடு ஏற்ற பண்பும்
ஏந்தித் திரைப்படம் வருநாள் என்றோ?" (பா, 218)

எனத் தமது உள்ளக் குமுறலைக் கவிதையாய்த் தருகிறார் கவிஞர் ஒருவர்.

தாய்தமிழகத்தில் புரையோடிப் போயிருக்கும் கேடுகள் அங்கேயும் சென்று அவர்களைச் சீரழிக்கின்றன. தமக்குத் தாமே பட்டங்கள் சூட்டிக்கொள்வது, மாலைகள், சால்வைகள் போடச் செய்துகொள்வது போன்ற கயமைக் குணத்தைச் சாடுகிறார் மலையகக் கவிஞர் ஒருவர்.

"......................................அவரே வாங்கிய,
போர்வையை ஒருவரைப் போர்த்திடச் செய்தும்
பொன்னா டைதனைப் பெற்றிடும் கூட்டமும்
மண்ணில் இன்று மிகுந்துள தாலே
பொன்னா டைக்குப் பெருமைதான் ஏது?" (பா, 219)

வறுமையில் வாடும் குடும்பத்தலைவன் மனைவியின் ஆவலை நிறைவேற்ற முடியாத நிலையில் இருக்கிறான். பொறுத்திரு; செல்வம்வரும்; அப்போது உன் ஆவலை நிறைவேற்றுகிறேன் என்கிறான் கணவன். பட்டுக்கோட்டைக் கவிஞரை நினைவுபடுத்துகின்றது மலையகத்துக் கவிஞர் வரிகள் :

"கிட்டாத பொருட்கெல்லாம் ஆசை வைத்துக்
கொட்டலாமோ கண்ணீரைப் பெண்ணே! நம்மின்
பெட்டிகளில் பணம்புரளும் காலம் தோன்றும்
பொறுத்திடுவாய் எதிர்காலம் நமக்கும் உண்டே" (பா, 252)

என்னும் வரிகள்,

"காடு வெளைஞ்சென்ன மச்சான் - நமக்குக்
கையும்கா லுந்தானே மிச்சம்?"

எனும் பட்டுக்கோட்டையார் வரிகளை நினைவூட்டவில்லையா?

தமிழன் பழம்பெருமை பேசுவதிலே வல்லவன். முத்தமிழ்பற்றி மூச்சுவிடாமல் பேசுவான். ஆனால், முத்தமிழ்பற்றி ஏதும் அறிந்திருக்கமாட்டான். அப்படிப்பட்டவர் முத்தமிழிற்கு ஓர் இலக்கணம் தருகிறார் கவிஞர்:

"பழம்பெருமை பேசிடுவார் ஒருவகையர்! மிக்க
படித்தவன்ஊர்க் குருவிஎனும் ஒருவகையர்! வாழ
வழிதேடாப் பாட்டாளி ஒருவகையர், ஆக
வகைமூன்றாய் வாழ்வதனால்; 'முத்தமிழர்' ஆனார்" (பா, 254)

முத்தமிழ்க்கு இலக்கணம் வகுக்கும் கவிஞரே! இற்றை நாளிலும் தங்கள் கருத்தினை மறுக்க முடியாத நிலைதான் நிலவுகிறது.

மலையகக் கவிஞர் நாட்டுக்குழைத்த நல்ல தலைவர் பலரைப்பற்றியும் பாடியுள்ள கவிதைகள், அவர்களின் வரலாற்றைத் தழுவி எழுதப்பட்டுள்ள பாங்கு நன்முறையில் அமைந்துள்ளன. தந்நாட்டுத் தலைவர்களைப்பற்றியதோ டல்லாமல் பன்னாட்டுத் தலைவர்களையும், - தமிழறிஞர், சமுதாயச் சீர்திருத்தக்காரர், அரசியல் சார்புடையார்பற்றியும் வேறுபாடு கருதாது போற்றிப் பாடியுள்ள மலையகக் கவிஞர்களின் பரந்த மனப்பாங்கைப் பாராட்டாமல் இருக்க முடியாது. கவிஞர் பார்வையில் பெரியவர் சிலர்:

"பன்னூலும் தேர்ந்தாய்ந்து பைந்தமிழ்க்குப்
பயன்தூக்கிப் பயிற்று வித்து
நன்னூற்கு உரைகண்டும் நல்விருத்தி
பதிப்பித்தும் நனிசி றக்க
முன்னேற்ற முறைபுகல முற்று,அரைப்
புள்ளிகளை முதுமொ ழிக்குத்
தன்னாற்றல் கொண்டுயர்த்தித் தமிழ்செழிக்கப்
புதுப்பாதை தந்த செம்மல்!" (பா, 326)

**ஆறுமுக நாவலர்,**

"ஆரியக் கொடுமையை ஆயிரங் காலமாய்
நேரிலே எதிர்த்துமுன் வெற்றியும் கண்டிலாப்
போரிலே ஒருவனாய்ப் பொருதுமே வென்றவன்

வெண்ணெடுந் தாடியன்

தன்மதிப் பியக்கியே தமிழரை எழுப்பினன்

பொய்யேற்றும் பார்ப்பனப் புரோகிதம் ஒழிப்பவன்
தமிழர் மேன்மையை விழை"ந்த (பா, 327)

**தந்தை பெரியார் ஈ.வே.இராமசாமி,**

"பன்னூ றாண்டுகள் பறங்கியர் கையில்
அன்னை இந்தியா அடிமைகொண் டிருந்த
அவல நிலையினை அகற்றிய வீரன்
அண்ணல் காந்தியின் அரும்பெரும் தோழன்;
.......................................................
நேர்மையின் சின்னம்; நீதியின் நண்பன்
அறிவின் சுடரவன்; ஆங்கில மேதை
அரசியல் வானில் அழகு வெண்ணிலா" (பா, 393)

**பண்டிட் ஜவஹர்லால் நேரு,**

"நெஞ்செல்லாம் வீரம் பொங்க, நினைவெலாம் உறுதி பூண,
விஞ்சிடும் ஆர்வத் தாலே மிகைவிழை வுடனே நாட்டை
அஞ்சிடா வண்ணம் காக்க அருந்தமிழ்ப் பெருமை" (பா, 340)

**சேர்த்த தேசியக் கவி பாரதி,**

"நீக்கிரோவின் மாபெரிய தலைவர், மண்ணில்
நிழல்பெற்றோர் அனைவர்க்கும் நண்பர், அன்பைத்
தேக்கிவந்த பெருந்தொண்டர், மேதை, நீதி
தெரிந்துரைக்கும் வல்லவராம்" (பா, 387)

**மாவீரர் மார்ட்டின் லூதர் கிங்,**

"குமுறும் எரிமலைபோல் கோடிதுயர் சூழ்ந்தும்
நிமிர்ந்தொளிர நெஞ்சுயர்த்தி" (பா, 391)

**நின்ற மாவீரன் லூமும்பா,**

"தர்மம் தழைக்கச் சமாதானம் மேலோங்கப்
பர்மாமண் உலகுக்குப் பரிந்தளித்த புனிதமகன்!
வானத்துக் கிழக்கில் வருங்கதிர்போல் வந்தபிரான்!
ஞானத்தில் புத்தன் நடந்ததுபோல் நடைபயில்வோன்!" (பா, 331)

**விந்தைப் பெருமனிதன் ஊ தாண்டு,**

"அருவியென வீழ்ந்துவரும் நெளிநதியாய் ஓடும்
ஆடியென உருக்காட்டும் குளம்போலத் தோன்றும்
பெரும்புயலும் சீறிவரும் பின்பொருகால் மாறிப்
பின்னிஉடல் உளமீர்த்துத் தென்றல்நடை போடும்
தமிழுக்கும் அமுதென்று பேர்சொன்ன " (பா, 349)

**புரட்சிக்கவிஞர் பாவேந்தர்,**

"இருந்தமிழின் இலக்கியத்திற் கிருப்பிடமாய்
இனிமைதரும் எழுத்தாளர்

விடுதலைப்போர் எரிகிளம்பித் தாயகத்தை
அந்நாளில் வெதுப்புங் காலைக்
கொடுமுடிபோல் தலைநிவந்து உரிமைதனை
நிலைநாட்டிய" (பா, 365)

**தமிழ்த் தென்றல் திரு. வி.க.,**

"வெற்றிலையும் பாக்கும் விளையாடும் நேரத்தும்
மற்றவரை மகிழ்விக்கும் குணக்குன்று
தீஞ்சுவையை அள்ளித் தெளிக்கின்ற திறமையோன்
பொடியள்ளிப் போடும் பூவிரலன்,
இடிமின்னல் போல இசைக்கின்ற குரலோன்
பச்சையப்பன் கல்லூரிப் பண்பாளன்" (பா, 355)

**பேரறிஞர் அண்ணா,**

"குவளையூர் முத்து வேலன்
கொதிப்பினில் குதித்துத் தாவிக்
கவலையே றாத நெஞ்சக்
காவிரி அஞ்சு கத்தாய்
குவளையிற் குடியி ருந்து
கொடியுண வருந்தி ஓர்நாள்
ஈரோட்டுப் பள்ளிக் கூடத்
திருந்துநீ கற்ற பாடம்
தேரோட்டும் செஞ்சொல் அண்ணா
தெருட்டிய கழகம் தன்னில்
சீராட்டத் துணையா யிற்று;
தேர்ந்துநீ கலைஞன் ஆனாய்" (பா, 332)

என்னும் பாராட்டுக்குரிய **டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி,**

"கல்லார்க்கும் திருக்குறளின் சிறப்புணர்த்திக்
கனிவிக்கும் கல்வியில் தெளிவானவன்
சொந்தமாய் உருவானவன் - தமிழர்
பல்லோரும் பணிந்தேத்தும் வகையினில் அறம்காட்டும்
பாட்டையில் நடைபோட்டவன் - தமிழ்க்குக்
கேடெனில் விளைத்தாரை எதிர்த்துச் சமர்புரி
கிழச் சிங்கமெனப் பாய்ந்த" (பா, 354)

**முத்தமிழ் காவலர் டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதம்,**

"கருமத்தின் வீர னாகிக் கடமையில் தொண்டனாய்,
உருவத்தில் கருமை பெற்றும் உள்ளத்தில் தும்பை ஒத்தவராய்
பெருந்தமிழ் நாட்டுமக்கள் பெற்றிக்கோர் விளக்காய்
எதுபுகழ் சேர்க்கு மென்ற எண்ணமே இல்லாமல்,
குலத்தொழில் பாகுபாட்டின் கொடுமையை எரித்த" (பா. 367)

**கர்மவீரர் காமராசர்,**

"தகநலம் புரிவதும் தகைமையை அறிவதும்
தலைமகன் துங்குவின் குணம்!
பகலவன் எனப்புகை படர்கையைத் துடைத்தொளி
பரப்பிய திங்கவர் மனம்!

தாகத்தை விடுதலையில் வைத்தார் நேற்று
தமிழ்சீனம் மலாய்மூன்று மொழிகள் ஏற்றுப்
பாகத்தைப் பிரிக்காமல் அண்ணன் தம்பி
பண்புரைத்த தந்தை யாவார்!

கால்நடையாய்ச் சிலநேரம் நடந்தும் செல்வார்
கடைத்தெருவில் மக்களிலே கலந்தும் கொள்வார்" (பா, 324)

என்றும் சிறப்புடன் போற்றப்படும் மலேசிய நாட்டு விடுதலைத் தந்தை **துங்கு அப்துல் ரகுமான்,**

"கலியோட்ட அறிவூட்டும் கவின்மிக்க கல்வி
கடிதென்று எளிதாக்கும் கலைத்திட்டம் தந்த
பொலிவான தொழிற்சாலை பொருளாக்கம் சேர்க்கப்
புதிதான உடன்பாடு புவியெங்கும் கொண்ட
வலிவான நிலத்திட்ட வகைகண்ட
வழுவாத இனம்மூன்றும் வடிவொன்றைக் கண்ட
நலம்பேணும் அமைச்சுக்கு நடுவான" (பா, 325)

**மேம்பாட்டுத் தந்தை துன் அப்துல் ரசாக்,**

"சங்கநதி தீரத்தில் தவழ்ந்து வந்தவன்
அஞ்சிக் கிடந்தவரை ஆதரித்தவன்
சங்கத் தமிழ்புரக்கும் சம்பந்தன்
மன்னும் தமிழ்க்குலத்தை வாழவைத்த சம்பந்தன்
காட்சிக் கெளியன்
மாட்சி மிகுந்த தமிழ்மன்னன்" (பா,345, 379)

என்னும் சிறப்புக்குரிய தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம் கண்ட **துன் சம்பந்தன்,**

"ஏனை யோர்போல் இந்தியரும் வாழச்
சிந்தித்துச் செயல்பட்டான்;
ம.இ.கா. கட்டி வளர்த்தவன்" (பா, 351)

என்னும் புகழுக்குரிய **டான்ஸ்ரீ மாணிக்கவாசகம்,**

"மும்மணிக் கருத்தினை முழக்கின மகாதீர்!
ஆசியான் கூட்டுக் கண்டான்!" (பா, 350)

என அனைவராலும் போற்றப்படும் தலைமை அமைச்சர் பெருமகன் **டத்தோஸ்ரீ மகாதீர்,**

"உலகமா மனிதர் என்னும்
உயரிய விருதுபெற்ற திலகம்!
மலேசியாவின் சிகரம்!
வெண்குளிர் நிலவு!
பினாங்குப் பாலம் கட்டிய பெருமான்!
பொதுப்பணித் துறைக்குப் புகழ்மணி சேர்த்தவன்
புதுப்புது வரலாறெல்லாம் பூக்கச் செய்தவன்!" (பா, 338)

என்னும் பெருமைக்குரிய **டத்தோஸ்ரீ ச. சாமிவேலு,**

"அறியாமை அகன்றால்தான் அருந்தமிழர்க் குயர்வென்ற
பெரியாரின் கருத்துகளை எதிரொலித்த பேச்சாளர்!
உரம்வாய்ந்த செந்தமிழுக் குயிர்தந்த தமிழவேள்
கறைபட்ட வரலாற்றைக் கடுமுழைப்பால் அழித்தெழுத
நிறைவான மனத்தோடு களம்புகுந்த நெறியாளர்!
சீர்திருத்தச் சங்கத்தைச் சிறப்பாக வழிநடத்தி
ஊர்திருத்தம் கண்டுயர உழைத்திட்ட பாட்டாளர்!

முரசென்னும் நாளேட்டை முனைப்போடு வெளியிட்டே
அரசாள முத்தமிழை அரியணையில் ஏற்றியவர்!
பலகலைசேர் கழகத்தில் பைந்தமிழ்க்குத் தடைபோட்டு
நலங்கெட்ட வடமொழியை நிலைநாட்ட முயற்சிசெய்த
நீலகண்ட சாத்திரியின் நேர்வைரி!" (பா, 339)

என்னும் மலையக மக்களின் பாராட்டுக்குச் சொந்தமான **தமிழவேள் கோ. சாரங்கபாணி,**

"முதறிவாளர் முத்தமிழ் வல்லார்
ஞானச் செல்வர்
அன்பொளிர் கின்ற தோற்றம்
அருளொளி பொங்கும் கண்கள்
பண்பொளிர் கின்ற பேச்சு
நண்பொளிர் கின்ற நெஞ்சம்
நடமாடும் கலையின் கூடம்

மண்ணெனப் பொறுமைகாட்டும் மாதவர்
சேர்ந்தோர் பொன்னெனக் கருதத்தக்க புகழினர்
கவிஞர்க் கெல்லாம் பண்ணெனத் திகழ்வார்
பாமுறை தேர்ந்த வள்ளல்
மாணவர்தம் கருத்தறிந்து ஒளிசெய்யும்" (பா, 328)

இன்பொளிர் இராமதாசர்

போன்றவர், மேலும் பலரது புகழ்பாடும் கவிதைகள் களஞ்சியத்துக்குச் சிறப்பினைச் சேர்க்கின்றன.

மலேசியத் தமிழர் தாம் வாழும் நாட்டை மேம்படுத்தப் பட்டபாடுகள், அவர்தம் நாகரிகம், பண்பாடு, கலை வளர்ச்சிகள், தமிழ்மொழிக்குச் செய்த தொண்டுகள், அவர்தம் வரலாறு போன்றவற்றை உலகத் தமிழர் அறிந்துகொள்ள இக் களஞ்சியம் பெரிதும் துணைபுரிகிறது.

களஞ்சியத்தின் தலைமைத் தொகுப்பாசிரியர் கவிஞர் முரசு. நெடுமாறன் 'வரலாற்று வாயில்' என்னும் தலைப்பில் வழங்கியுள்ள வரலாற்றுரை மலேசியத் தமிழர் வரலாற்றைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இதனை விரித்து எழுதினால் எதிர்காலத் தலைமுறைக்குப் பெரிதும் பயன்படும்.

தமிழர் மலேசியாவில் மட்டுமல்லாமல். இலங்கை, சிங்கப்பூர், ஆஸ்திரேலியா, பிஜித் தீவுகள், மொரீசியஸ், ஆப்பிரிக்கா போன்ற நாடுகளிலும் வாழ்கின்றனர். அவர்கள் வரலாறு இதுபோல் தொகுக்கப்படுமானால் 'உலகத் தமிழர் வரலாறு' ஒன்று கிடைக்க வாய்ப்புண்டு; பெரும்பயனும் உண்டு. அப்படிப்பட்ட ஒரு வரலாற்று நூல் உருவாக இக் களஞ்சியம் முன்னோடியாய் - வழிகாட்டியாய்த் திகழும் என்பதில் ஐயமின்று.

சு. செல்லப்பன்

சென்னை - 600 090 (சு. செல்லப்பன்)

# களஞ்சியம் பிறந்த கதை

முரசு. நெடுமாறன், தலைமைத் தொகுப்பாசிரியர்

‘களஞ்சியம் பிறந்த கதை’யானது, ஒரு கலைப்படையல் உருவாகக் கால்கோளிட்டகதை; அப் படையலுக்காக 100 ஆண்டு காலக் கவிதைகளைத் தேடியலைந்த கதை (1887-1987); கவிதைபடைத்த இனத்தின் தொன்மையை ஆராய்ந்த கதை; நிகழ்கால வாழ்வியலை நிறுத்துப்பார்த்த கதை; அரசியல் ஈடுபாட்டை அலசிப்பார்த்த கதை; பொருளாதார நிலைமைகளைப் புரட்டிப்பார்த்த கதை; கலை, இலக்கிய, பண்பாட்டுக் கூறுகளைக் கண்ணோட்டமிட்ட கதை; வரலாற்று வாயிலைத் திறக்க மேற்கொண்ட முயற்சிகளைப் பட்டியலிடும் கதை; அரிதின் முயன்று திரட்டிய செல்வங்களைப் படையலாக்க முயன்றபோது எதிர்ப்பட்ட தடைகளை எடுத்துரைக்கும் கதை; தடைகளையெல்லாம் உடைத்துத் தனிச்சிறப்பொடு களஞ்சியம் அரங்கேற உதவிய நன்னெஞ்சர்க்கு நன்றி கூறும் கதை; அனைத்தையும் விரித்து எழுதினால் அஃது ஒரு பெருநூலாய் விரியும். இருப்பினும் பல்வேறு வினாக்களுக்குத் தீர்வும், காலங் கடந்தமைக்குரிய காரணங்களும், இதுபோன்ற பணிகளில் ஈடுபடும் எதிர்காலத் தலைமுறையினர்க்கு வழிகாட்டுதலும் அமையும்வண்ணம் இக் கதை அமைய வேண்டும் என்பதனால், ஈண்டு அது சுருக்கமாய்த் தரப்படுகிறது.

கவிதைகளைப் படிப்பதிலும் படைப்பதிலும் பேரார்வம் மிக்கவராய இக் களஞ்சியத் தலைமைத் தொகுப்பாசிரியர், தம் கையில் கிடைத்த கவிதைகளை எல்லாம் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பிருந்தே (1953 முதலே) திரட்டித் தொகுத்துவரும் முயற்சியில் ஈடுபட்டு வந்தார். பல்லாயிரக் கணக்காய கவிதைகள் குவிந்தன. அவை வீட்டில் ஒரு பகுதியைக் குடிக்கூலி தாராமலேயே அடைத்துக்கொண்டன.

வீட்டில் காற்றோட்டம், வெளிச்சம், தூய்மை கருதிய அவர் துணைவியார் பல நாள் விடுத்த வேண்டுகோளுக்கு இணங்கி, ஏடுகளிலிருந்த கவிதைகளைமட்டும் நறுக்கிப் பல கோப்புகளாய்த் தொகுத்தார். அதனை அறிந்த தமிழ்நேசன் நாளேட்டின் முன்னாள் தலைமை ஆசிரியர் முருகு. சுப்பிரமணியன் மலேசியக் கவிதைகள்குறித்து ஒரு தொடர்கட்டுரை எழுதுமாறு அவரை ஊக்கினார். அதனால், தலைமைத் தொகுப்பாசிரியர் 1967இல் முதன்முதலாய்ப் பதினொரு கட்டுரைகளைத் தொடர்ச்சியாய் எழுதினார். அவை மலேசியக் கவிதைகள்குறித்து எழுதப்பட்ட முதல் கட்டுரைத் தொடராய் வெளிவந்தன. அக் கட்டுரைகள் பலராலும் பாராட்டப்பெற்றன. மேலும், தொடர்ந்து அப்

பொருள்குறித்தே கட்டுரைகள் எழுதப்பட்டன. அவற்றைக் கருத்தரங்குகளிலும் மாநாடுகளிலும் பல ஆய்வுரைகளாய் ஆசிரியர் நிகழ்த்திவந்தார்.

இவர் பட்டக் கல்வி பெறக் கருதினார். 1986 நவம்பரில் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்திற்குச் செல்லக் கருதி, மலேசிய அமைச்சர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவிடம் தகவுரை பெறச் சென்றார். இவரது நன்முயற்சியை அறிந்து மகிழ்ந்த அமைச்சர் போக்குவரத்துக்குரிய பயணச் சீட்டு ஏற்பாடு செய்து வாழ்த்தி வழியனுப்பினார்.

சொந்தப் படிப்பை முன்னிட்டுத் தமிழ்நாட்டுக்குப் புறப்பட்ட தமக்கு, அமைச்சர் தாமே முன்வந்து வழிவகுத்துத் தந்த பயணத்தால், ஏதேனுமொரு நற்பயன் சமுதாயத்துக்கு விளைவிக்க வேண்டுமெனும் எண்ணம் அவர் உள்ளத்தில் முகிழ்த்தது. மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் அவரை மதிப்பீடு செய்த குழுவின் தலைவர் முனைவர் தமிழண்ணல் ஆராய்ச்சி மாணவரிடையே மலேசியத் தமிழ்க் கவிதைகள்குறித்து எதிர்பாராவகையில் உடனே உரைநிகழ்த்தச் செய்தார். அவர் உரையைக் கேட்ட பேராசிரியர்களும் ஆய்வாளர்களும், பொருளிலும், நயத்திலும், இசையிலும் தம்மை மறந்தனர். பாடல்களில் சில அடிகளைப் பாடி விளக்கியபோது அவர்தம் கண்கள் எல்லாம் பனித்தன. முடிவுரை கூறிய தமிழண்ணல் "மலேசியக் கவிஞர் உணர்ச்சிநலஞ் சான்ற படைப்புகளைப் படைத்துள்ளனர்; குழந்தை இலக்கியத்தை நன்கு வளர்த்துள்ளனர்; சிறார்களுக்கு இசைப்பாடல் வழங்குவதில் தமிழகத்துக்கு முன்னோடியாய் விளங்குகின்றனர்" என்று பாராட்டினார்.

மறுநாள் பல்கலைக்கழக விருந்தினர் இல்லத்தில் இவர் தம்முடன் வந்திருந்த டாக்டர் செல்வராசுடன் தங்கி இருந்தார்; இவரைக் காணத் தியாகராசர் கல்லூரியைச் சேர்ந்த முனைவர் ந. மாரியப்பன் அங்கு வந்தார். "தாங்கள் ஆற்றிய மலேசியக் கவிதைப் பேருரைபற்றிக் கேள்விப்பட்டேன். அவ் வுரையைப் பலரும் பாராட்டினர். மலேசியத் தமிழ்க் கவிதைகளைத் தொகுத்து நூலாக்கித் தந்தால், அது தமிழ்கூறு நல்லுலகத்துக்கு ஒரு நிலையான கருவூலமாய் அமையும். தமிழக ஆய்வு மாணவர் மலேசியத் தமிழ்க் கவிதைகளை ஆய்வுப் பொருளாய் மேற்கொள்ள வழிபிறக்கும்" என்றார். அவர் உரைத்த கருத்து ஆசிரியருக்கு அடியெடுத்துக் கொடுத்தது போல ஆயிற்று; "மலேசியக் கவிதை உலகிற்கு ஏதாவது செய்ய வேண்டும்" என்னும் அவரது வேட்கை முனைப்புக்கொண்டது; "அதனைச் செய்து முடித்தே தீருவேன்" என உறுதிகொண்டது.

பல்கலைக்கழகப் பணிகளை முடித்துக்கொண்டு சென்னை திரும்பினார். இவர் எண்ணம், சொல், செயல் அனைத்தும் கவிதை உணர்வாகவே இருந்தன. தமிழ்வளர்ச்சி இயக்ககத்திற்குத் த.பெரியாண்டவனைக் காணச் சென்றார். எதிர்பாரா வகையில் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக முனைவர் ச. சாம்பசிவன் அங்கு வந்திருந்தார். அவர் இவரைக் கண்டதும் மகிழ்ந்து "ஐயா, தாங்கள் பல்கலைக்கழகத்தில் ஆற்றிய உரைகுறித்து, என் மகள் சிறப்பாய்த் தங்களைப்

பாராட்டினாள்; பாரதியையும் பாரதிதாசனையுமே சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்த எங்களுக்குப் புது விருந்து கிடைத்தது என்றாள்; நீங்கள் மலேசியக் கவிதைகளைத் தொகுத்து நூலாக்கினால், அது தமிழகத்துக்குப் பெரும் பயனைச் சேர்க்கும்" என்றார்.

அடுத்து ஆசிரியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முனைவர் அ. ந. பெருமாள் தலைமையில் 'மலேசியக் கவிதை இலக்கியம்' குறித்து உரைநிகழ்த்தினார். நிறைவுரை கூறுகையில் முனைவர் க. த. திருநாவுக்கரசு மலேசியக் கவிதைகளில் செறிந்திருந்த நயங்களைப் பெரிதும் பாராட்டினார்.

தொடர்ந்து சங்கத் தமிழ்மன்றச் சார்பில் புலவர் பெ. அ. இளஞ்செழியன் மேற்கொண்ட முயற்சியால் திருக்குறள் முனுசாமி தலைமையில் வள்ளுவர் கோட்டத்தில் மலேசியக் கவிதைபற்றிப் பேருரை நிகழ்த்தினார். அதனைக் கேட்டவர் பலரும் மெய்சிலிர்த்தனர். தொடர்ந்து பெரியார் திடலிலும் மலேசியக் கவிதைகள் குறித்தே உரையாற்றினார். அங்கும் பெருவரவேற்புக் கிடைத்தது.

ஒருநாள், தமிழக அரசின் பண்பாட்டுத்துறைச் செயலர் முனைவர் ஔவை நடராசனைக் கண்டு பேசினார் (1986 திசம்பர்); தாம் வெளியிடத் திட்டமிட்டுள்ள 'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்'பற்றி விளக்கினார்; தமிழக அரசு அத் திட்டத்திற்கு உதவ முடியுமா என்று வினவினார். கோரிக்கைகளைச் செவிமடுத்த அவர், "அரசு நேரடியாய் உதவ முடியாது; நூல் வெளிவந்தால் குறிப்பிட்ட படிகளை அரசு நூலகங்கள் வாங்க ஏற்பாடு செய்யலாம்" என்றார். இவ் வகையில் வேண்டிய உதவிகள் புரிய முனைவர் கு. இராசேந்திரனை ஏற்பாடு செய்தார். அவர் சில நாள் ஆசிரியருடன் இருந்து உதவினார்.

பல நாள்கள் ஆயிரக்கணக்காய கல் தொலைவு சுற்றியலைந்து பலரைச் சந்தித்துக் களஞ்சிய வெளியீட்டுத் தொடர்பாய் ஆராய்ந்ததில் ஒருவகை நம்பிக்கை பிறந்தது; நூல் தொகுக்கும் உறுதியொடு தாயகம் திரும்பினார்.

தாயகம் திரும்பியதும் கல்வித்துறை அறிஞர் ஆ. சோதிநாதனிடம் தம் திட்டம்குறித்துக் கருத்துக் கேட்டார். பெருமகிழ்வுடன் திட்டத்தை வரவேற்ற அவர், "உடனே செயலில் இறங்குங்கள். முழுமையாய் யான் ஒத்துழைப்பு நல்குவேன்" என்றார். பின்னர் அமைச்சர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவிடமும் கலந்துரையாடினார்; நூல் திட்ட வரைவினையும் காட்டினார். அவர், "நல்ல முயற்சிதான்; பெரும் பொருட்செலவாகுமே" என்றார். எங்ஙனமேனும் முயன்று களஞ்சியத்தைத் தாமே வெளிக்கொணர்ந்துவிடுவதாய்க் கூறினார் தலைமைத்தொகுப்பாசிரியர். ஆசிரியரின் உறுதியைக் கண்ட அமைச்சர் மகிழ்ந்து, "நூலை அச்சேற்றுங்கள்; அதனை வெளியிட்டுத் தரும் பொறுப்பை நான் ஏற்பேன்" என்று ஊக்கப்படுத்தினார். ஆசிரியர் உடனே பணியில் இறங்கினார்.

தொடக்க காலம்முதல் 1965வரை மலாயாவும் சிங்கப்பூரும் ஒரே நாடாய் விளங்கிவந்தன. அதனால், அக் காலம்வரை சிங்கப்பூர்க் கவிஞர் எழுதிய கவிதைகளையும் மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தில் சேர்ப்பதென முடிவு செய்தார். (சிறப்புக் கருதி அக் கால எல்லைக்குப் பிற்பட்ட சில பாடல்களும் பின்னர்ச் சேர்க்கப்பெற்றன).

மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்பற்றி விரிவான ஓர் அறிக்கையை அச்சிட்டார். அதனை 1987 சனவரியில் கூடிய கவிதைக் களத்தில் வெளியிட்டார், பல்வேறு இதழ்களும் இத் திட்டத்திற்கு மதிப்பளித்தன; அறிக்கைகளை வெளியிட்டன; பேராதரவு நல்கின, மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், கவிதைப் பண்ணை, பொன் பாவலர் மன்றம், வடமலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம், சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம், மலேசியத் தமிழ் எழுத்தாளர் பேரவை, தமிழ் இலக்கியக் கழகம் முதலாய அமைப்புகளும் ஆதரவளித்தன.

கவிதைக் களஞ்சியத்தைத் தாமே தனித்துத் தொகுத்திடத் தலைமைத் தொகுப்பாசிரியர் எண்ணவில்லை; தகுதிவாய்ந்தோர் குழு ஒன்றனை அமைத்துப் பணியைச் செய்வதே சிறப்பு எனக் கருதினார்; குழு ஒன்றனை அமைத்தார்.

## கவிதை தேடல்

'தமிழ்கூறு நல்லுலகெங்கும் மலேசியக் கவிதைகள் ஒலிக்கப் போவதால், கவிஞர் பலரும் தொகுப்பிற்குத் தத்தம் கவிதைகளைத் தந்துதவுவர்' என்று தொகுப்புக் குழு நம்பிற்று. ஆனால், பெரும் ஏமாற்றமே விளைந்தது.

வடபுலத்துப் பினாங்குக்கும் தென்புலத்துச் சிங்கப்பூர்க்கும் பலமுறை சென்றார்; தலைநகரில் பல கூட்டங்கள் கூட்டி வேண்டுகோள் விடுத்தார்; ஆனால் சில நூறு பாக்களே கிடைத்தன. இவ்வாறே ஓராண்டு கழிந்தது.

கவிதைகளைப் பெறும் முயற்சியில் ஏற்பட்ட பட்டறிவுகள் பலப்பல. "களஞ்சியம் வெளியிடும் அளவிற்கு இவர்களால் கவிதைகளைத் திரட்ட முடியுமா?" என்றனர் சிலர்; "கவிதைகளைச் சேர்த்து வைக்கும் பழக்கம் எனக்கில்லை; முடிந்தால் தேடிப் பெறுங்கள்" என்றனர் சிலர். "தருவேன்" என்று கூறி இழுக்கடித்தனர்; ஏமாற்றினர் சிலர். எதனையும் காதில் போட்டுக் கொள்ளாமல் வாளாவிருந்தனர் பலர். மேற்கொண்ட முயற்சிகளுள் பல தோற்றன. இறுதியில் த. தொ. ஆசிரியர்மேல் நம்பிக்கையுள்ள சிலர் "கவிதைகளைத் தேடி அலைவதேன்? பல்லாண்டுகளாய்ச் சேர்த்து வைத்துள்ள கவிதைகளைத் தெரிவு செய்தாலே போதுமே" என்றனர்.

## கவிதைக் கோப்புகள்

1966இல் த.தொ. ஆசிரியர் நெடுங்காலமாய்ச் சேர்த்துக் குவித்துவைத்திருந்த பழைய இதழ்களிலிருந்து கவிதைகளை எல்லாம் திரட்டிப்

பல கோப்புகளாய்த் தொகுத்து வைத்திருந்தார். 1970இல் பாரீசில் மூன்றாம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு நடந்தது. அதற்கு ஆய்வுக் கட்டுரை எழுதத் தமிழ்நேசன் நாளிதழ் முன்னாள் தலைமை ஆசிரியர் முருகு. சுப்பிரமணியன் அக் கோப்புகளைப் பெற்றார். பின்னர் மலேசியக் கவிதைகளை ஆய்வு செய்ய முனைவர் இரா. தண்டாயுதம் வேண்டவே அவை அவர் கைக்கு மாறின. அடுத்து மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்,'அரங்கேறிய கவிதைகள்' நூல் தொகுக்க அக் கோப்புகளைக் கோரிப் பெற்றது (1976). அங்குச் சென்ற கோப்புகள் திரும்பவே இல்லை.

எழுதிக் கேட்டபோது, "அவை கறையானுக்கு இரையாகிவிட்டன" என்ற பதில் வந்தது. த. தொ. ஆசிரியர் அடைந்த அதிர்ச்சிக்கு அளவே இல்லை. "காலமெல்லாம் சேர்த்த கிடைத்தற்கரிய அருஞ்செல்வம் கைவிட்டுப் போனதே" என்று கலங்கினார்; "எஞ்சிய பகுதிகளையாவது கொடுங்கள்" என்று வேண்டினார். 'அனைத்தும் முழுமையாய் அழிந்தன' என்று மறுமொழி வந்தது. இதனை 'ஓர் இலக்கியப் பேரிடர்' என்றார் செவ்விசைச் சித்தர் ரெ. சண்முகம். யாரையும் புண்படுத்தும் நோக்கில் இதனை எழுதவில்லை; நிகழ்ந்த வரலாற்றை மறைக்க வேண்டா என்னும் நோக்கிலேயே எழுதப்படுகிறது.

1950முதல் 1970வரை, மலேசியக் கவிதை உலகிற்கு ஒரு பொற்காலம் ஆகும் (மேலும் சிறிது காலம் அது நீண்டது). உயிர்ப்புள்ள, உணர்ச்சிச் செறிவுமிக்க கவிதைகள் பிறந்த காலம் அது. அக் காலத்தில் அரிதின் முயன்று திரட்டிய அச் செல்வம் கைவிட்டுப் போனமை பேரிழப்பே.

சோர்வினை உதறித் தள்ளிவிட்டுத் திட்டத்தை எவ்வாறேனும் நிறைவேற்ற உறுதிகொண்டார். இழந்தன போக எஞ்சியவற்றைத் தூசுதட்டித் தொகுத்தார்; இதழ்க் கட்டுகளில் முடங்கிக் கிடந்த கவிதைகளை எல்லாம் நறுக்கித் தொகுத்தார். இப் பெரும்பணிக்கு மட்டுமன்றி, இடையிடையே நிகழ்ந்த பணிகளுக்கும் ப. பழநிசாமி, திருமதி தமயந்தி இரகு, திருமதி மல்லிகா பரிமளம், ப. பரமசிவம், திருமதி சரோஜா, திருமதி விசயலட்சுமி, ப. செல்வம், இரா.பாரி முதலாயோர் பெரிதும் உதவினர்.

பல்லாயிரக்கணக்கில் கவிதைகள் திரண்டன எனினும் பொற்காலக் கவிதைகளில் மிகப் பல கிட்டவில்லை. நிகழ்ந்த நிலையை விளக்கி அறிக்கை வெளியிட்டார்; தனிப்பட்ட வகையில் பலர்க்குக் கடிதம் எழுதினார். முயற்சி வீண்போகவில்லை. இழந்த செல்வம் ஓரளவிற்கு மீண்டும் திரண்டது. இதனில் உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கத் தலைவர் இர. ந. வீரப்பன் பங்கு மிகுதி; அன்னார் சேர்த்துவைத்திருந்த நாளிதழ்களின் ஞாயிற்றுப் பதிப்புகளை எல்லாம் தந்தார். பொன்னி ந. தியாகராசனும் தம்மிடமிருந்த இதழ்களைத் தந்தார். பல நூறு பாக்கள் திரண்டன.

பழம்பெரும் இதழ்ச் செல்வங்களுக்குத் தம் வீட்டில் புகலிடம் அளித்திருந்த சிங்கைப் பெரியவர் மீ.முருகு. சீனிவாசன், ஒருவரும் நுழைய முடியாத கிடங்காய் இருந்த இதழ்க் குவியலுக்குள் முழு இசைவொடு ஆசிரியரை நுழையவிட்டார். அங்கிருந்த அனைத்தையும் திரட்ட வேண்டுமாயின் ஆண்டுகள் சிலவாகும். அத்துணைப் பெரிய இதழ்ச் செல்வம் கொண்ட பெட்டகம் அது. களஞ்சிய ஆசிரியர் குழுவைச் சேர்ந்த அமலதாசன், சதாசிவம் வீரையா ஆகியோர் துணையுடன் பழைய தமிழ்க்கொடி முதலாய இன்றியமையாச் சில செல்வங்களைமட்டும் திரட்டினார். பின்னர்ச் சிங்கை எழுத்தாளர் கழகத் தலைவர் அமலதாசன் தலைமையில் ஒரு குழுவினர் தேசிய நூலகத்திற்குப் படையெடுத்தனர்; அங்குப் பழைய இதழ்களைத் தேடினர். அரிய பாக்கள் அடங்கிய படிகள் சில கிடைத்தன. தேவையான கவிதைப் பக்கங்கள் பல நகல் எடுக்கப்பட்டன. அடுத்துக் குழு, தமிழ்முரசு அலுவலகம் சென்றது. தமிழவேள் கோ. சாரங்கபாணி மகன் செயராமன் அன்புடன் வரவேற்று ஆண்டுவாரியாய்த் தொகுத்து வைத்திருந்த தமிழ்முரசு இதழ்களைக் காட்டி “இவற்றை வெளியே எடுத்துச் செல்ல இயலாது; தேவையானவற்றைப் படி எடுத்துக்கொள்க” என்றார். அங்குப் பாக்கள் பல படி எடுக்கப்பட்டன. குறிப்பாய் வெண்பாக்கள் நிரம்பக் கிட்டின. இப் பணியில் சி.த.எ.க. தலைவர் அமலதாசன், சதாசிவம் வீரையா ஆகியோருடன் முருகதாசன், மெ.இளமாறன், பன்னீர்செல்வம் முதலாய நண்பரும் பேருதவி நல்கினர். சிங்கப்பூர்த் தேசியக் கல்விக் கழகத்தில் பணிபுரியும் எழுத்தாளர் ந. கோவிந்தசாமி மலேசிய மண்ணில் முதலில் தோன்றிய வண்ணை அந்தாதி, வண்ணைநகர் ஊஞ்சல், சிங்கைநகர் அந்தாதி, சித்திரகவிகள் ஆகிய நான்கு நூல்களின் படநகல்களைத் தந்துதவினார்.

பின்னர் த. தொ. ஆசிரியர், அமலதாசன், சதாசிவம் வீரையா ஆகிய நண்பரொடு கவிதைவேள் கா. பெருமாள் இல்லஞ் சென்றார். கவிதைவேள் துணைவியாரும் மகன் திருத்தக்கதேவனும், கவிஞரின் எழுத்துப் படிகளைக் கட்டுக் கட்டாய்க் கொண்டுவந்து அடுக்கினர். குழுவினர் தலையாயவற்றைப் படநகல் செய்துகொண்டனர். பின்னர் மறுமலர்ச்சிக் கவிஞர்களுள் மூத்தவரான கவிஞர் ந. பழநிவேல் இல்லம் சென்றனர். அப் பெருமகனார் தம் நூல்களையும், நாடகப் பாடல்களையும் தந்துதவினார்.

தொடர்ந்து சிங்கை முகிலன் இல்லம் சென்றனர். இரண்டாம் உலகப் போரின்போது இந்தியத் தேசிய இராணுவத்துக்காக (Indian National Army) அவர் எழுதிய படைநடைப் பாடலைப் பாடச் சொல்லி எழுதிக்கொண்டனர்; கவிதை நூல்களையும் பெற்றுக்கொண்டனர். திருமதி பார்வதி பூபாலன் இல்லம் சென்று சில பாக்களைப் பெற்றனர். மலர் மாணிக்கம், இக்பால், சக்கரவர்த்தி சோமசன்மா, பெரி. நீல. பழநிவேலன், மு. தங்கராசன், முத்துமாணிக்கம் தம் சொந்தப் பாக்களைக் கொடுத்துதவினர். மலர்மாணிக்கம் மாதவி இலக்கிய மன்றக் கவிதைப் பணிகளை விவரித்தார். மாதவி இதழின் வரலாற்று நிகழ்வுகளை எடுத்துரைத்தார்; அவ் விதழில் வெளிவந்த சில பாக்களை அளித்தார். தொடர்ந்து அமலதாசன் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத்தின் மூலம் பல கூட்டங்கள்

நடத்தினார்; கவிஞர்களுக்கு எடுத்துரைத்தார்; அவர் முயற்சியால் மேலும் பல சிங்கைக் கவிஞர்தம் பாக்கள் கிடைத்தன.

பினாங்கில், கரு. திருவரசு, வீ. கே. சுப்பிரமணியம், தனசேகரன் ஆகியோர் கவிஞர்களைக் கண்டு பேச ஏற்பாடுகள் செய்தனர்; கவிஞர் பலரின் தனிப்பாக்களையும் நூல்களையும் திரட்டித்தந்தார்.

கோலாலம்பூர்க் கவிதைக்களம், கவிதைப்பண்ணை முதலாயனவும் கவிதைகளும் நூல்களும் கிடைக்க உதவின. இப் பணிகள் ஒருமுறையிலோ, இருமுறைகளிலோ கைகூடவில்லை. சில ஆண்டுகளாய்ப் பலமுறை திரும்பத் திரும்பச் செலவு மேற்கொண்டு உழைத்ததன் பயனாய் இழந்த செல்வத்தை ஓரளவு பெறமுடிந்தது.

களஞ்சிய உருவாக்கப் பணி நிரல்படி நடந்தது; ஏறக்குறைய ஓரிலக்கம் கவிதைகளிலிருந்து, ஆய்வுக்கேற்ற கவிதைகளைத் தெரிவுசெய்யும் முதற் சுற்றுப் பணி முன்பே தொடங்கிவிட்டது. இடையிடையே கவிதைகள் கிடைத்த போதெல்லாம், அவற்றைத் தேர்வுசெய்யும் பணியும் தொடர்ந்தது; இப் பணி மாதக் கணக்கில், ஆண்டுக் கணக்கில் நீண்டது. இப் பணியில் ஆசிரியரொடு ப. மு. அன்வர், அரு. சு. ஜீவானந்தன், சை. பீர் முகம்மது, பி. கோவிந்தசாமி, பாதாசன், காரைகிழார், மைதீ. சுல்தான் ஆகியோரும் ஈடுபட்டனர். சிங்கைப் பேராளர் அமலதாசன், சதாசிவம் வீரையா ஆகியோரும் பேராதரவு தந்தனர்.

முதற்கட்டப் பணியில் 5000 கவிதைகள்வரை தேர்வுபெற்றன. பின் அவற்றை வடிகட்டும் இரண்டாங் கட்டப் பணி தொடர்ந்தது; இதில் ப.மு. அன்வரும், அரு.சு. ஜீவானந்தனும் சுவையான பாக்களைமட்டுமே தெரிவுசெய்ய வேண்டும் என விழைந்தனர்; அக் கருத்தில் மிகக் கடுமையாயும் இருந்தனர்; "நாம் திறனாய்வு செய்யவில்லை; நமது பணி, தொகுப்புப் பணியே; கடுமையாய் வடிகட்டும் நோக்கு வேண்டா' என்று த.தொ.ஆசிரியர் வேண்டிக்கொண்டார். இருப்பினும் செறிவுமிக்க பாக்கள் மட்டுமே களஞ்சியத்தில் இடம்பெற வேண்டுமென்னும் உறுதியில் இருவருமே சிறிதும் தளரவில்லை.

இரண்டாங் கட்டப் பணியிலும் பங்குகொண்ட பாதாசன், சை. பீர் முகம்மது, பி. கோவிந்தசாமி ஆகியோரும் கடுமையான வடிகட்டலை விரும்பவில்லை; விவாதங்களை வளர்க்கவும் அவர்கள் விழையவில்லை; நூல் சிறப்பாய் அமைந்தால் சரி என்று இறுதித் தேர்வுப் பணியை மூவரிடமே விட்டுவிட்டனர்.

தேர்விற்கு வந்த பாக்களுள் பெரும்பாலாயவை தள்ளுண்டன; தெரிவுபெற்ற பாக்களும் விருத்தங்கள் தாழிசைகளாயின; சிந்தியல் வெண்பாக்கள் குறள் வெண்பாக்களாயின; அளவடிகள் சிந்தடி குறளடிகளாய் மாறின; நீண்டிருந்த அகவற்பாக்கள் அளவில் குறுகின. இத் தேர்வு கவிஞரைப் பார்த்துச்

செய்யவில்லை; கவிஞர் பெயரை மறந்து, மறைத்துக் கவிதைகளை எடைபோட்டே செய்யப்பட்டது.

"................................... மாட்சியில்
பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"

என்னும் புறப்பாட்டின்(பா,192) நெறிப்படியே பணிகள் நடந்தன.

முடிவில் 150 பக்கங்களுக்குரிய பாக்களே தேர்வுபெற்றன. பெருஞ்சோர்வு கவ்வியது. 'களஞ்சியம் உருவாகுமா?' என்னும் ஏக்கமும் எழுந்தது; த.தொ.ஆசிரியர் தொடக்கத்தில் கூறியவாறே, "கடுமையான முறையில் திறனாய்வு செய்யவேண்டா; தொகுப்பாளராய்ச் செயல்பட்டால் போதும்; வடிகட்டித் துளைகளைச் சிறிது அகலப்படுத்தினால் களஞ்சியத்திற்குரிய பாடல்கள் எளிதில் கிட்டிவிடும்" என்றார்.

அதுவரை நூல்களிலிருந்தோ சிறப்பு மலர்களிலிருந்தோ, கிழமை, மாத இதழ்களிலிருந்தோ பாக்கள் தெரிவு செய்யப்படவில்லை. அவற்றில் ஆயிரத்துக்கு மேற்பட்ட பாக்கள் இருந்தன. அவற்றொடு, இசைப் பாக்கள், நாடகப் பாக்கள் எனப் பல நூறு பாக்களும் இருந்தன. அவற்றை நினைவுபடுத்தி, "அடுத்த கட்டப் பணியைத் தொடங்கலாம்" என்றார்.

இந் நிலையில் ப. மு. அன்வர் தமிழகம் செல்ல வேண்டியவரானார். மூன்றாங் கட்டப் பணியைச் செய்து முடிப்பதில் துணைத் தொகுப்பாசிரியருள் ஒருவராய அரு. சு. ஜீவானந்தன் பேரளவு ஒத்துழைப்புத் தந்தார்; இப் பணியும் பல மாதங்கள் நடந்தன; கடும் உழைப்பிற்குப்பின் எதிர்பார்த்ததற்கு இரட்டிப்பாய்ப் பாக்கள் கிடைத்தன. 464 பக்கங்களில் களஞ்சியத்தை அடக்குவது என்று போட்ட திட்டம் அகன்றது; இரட்டிப்பாயது.

தலைமைத் தொகுப்பாசிரியர் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத் தேர்வு எழுதத் தமிழகம் சென்றார் (1988-91); தொகுப்புப் பணியையும் கவனிக்க விழைந்து தேர்வுசெய்த பாக்களையும் உடனெடுத்துச் சென்றார்.

## தமிழகப் பெருமக்கள் தீர்ப்பு

"திறமான புலமையெனில் வெளிநாட்டார் அதைவணக்கம் செய்தல் வேண்டும்" என்னும் பாரதியார் கூற்றுக்கிணங்கப் பாடல்களைப் படியெடுத்துத் தந்து தகுதி வாய்ந்த பெருமக்களிடம் கருத்துக் கேட்டார்; களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியர் இராம. சுப்பிரமணியன், தணிகை உலகநாதன், அரங்க. சீனிவாசன், கா. பெ. ஞானசம்பந்தன், நக்கீர அடிகள், மதுரைக் காமராசர் பல்கலைக்கழக முன்னாள் பேராசிரியர்களாய முனைவர் தமிழண்ணல், முனைவர் ச. சாம்பசிவன், முனைவர் இராம. சண்முகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன

முன்னாள் இயக்குநர் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் முதலாயோர் கவிதைகளை ஆழ்ந்து படித்து நல்ல மதிப்பீடு வழங்கினர்; தமிழ்கூறு நல்லுலகில் இக் களஞ்சியம் தக்கதோர் இடத்தைப் பெறுமென்று தீர்ப்பளித்தனர்.

### சென்னையில் மலேசியப் பாக்கள்

தமிழறிஞர் தந்த ஊக்கம் த. தொ. ஆசிரியரை உந்திற்று; பெருமிதத்தொடு சென்னையில் அமைதியாய சூழலில் பாக்களைத் தொகுத்தார். ஒரு நாள் ஓரன்பர் வந்து, “தங்கள் நன்முயற்சியைத் தணிகை உலகநாதன் வாயிலாய் அறிந்தேன். என்னிடமுள்ள பனைக்குளம் அப்துல் மஜீது இயற்றிய ‘நாயக வெண்பா’, ‘கவிப் பூஞ்சோலை’ எனும் இரு நூல்களையும் கொண்டு வந்துள்ளேன்” எனக் கூறினார். ஆசிரியர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அரிய நூல்களைத் தந்த நண்பர் குழந்தைக் கவிஞர் செம்பை சேவியருக்குத் தம் நன்றியைத் தெரிவித்தார்.

பிறிதொரு நாள் ‘அச்சுக்கலை’ என்னும் நூலைத் தந்த பெரியவர் மா. சு. சம்பந்தனைக் கண்டார். “தங்கள் கவிதைக் களஞ்சிய முயற்சிபற்றிக் கேள்விப்பட்டேன். என்னிடமுள்ள பழைய இதழொன்றில் சிங்கப்பூர் அன்பர் எழுதிய பாடல் ஒன்று இடம்பெற்றுள்ளது” எனக் கூறித் தம் வீட்டிற்கு அழைத்துச் சென்று அவ் விதழையும் தந்துதவினார். 1866இல் வெளிப்போந்த அவ் விதழில் நாராயணசாமி நாயகன் எழுதிய இசைப் பாடல் ஒன்று இருந்தது; அதுவே களஞ்சியத்தின் மூத்த பாடலாகும் (பா, 399). களஞ்சியத்தின் கால வரையறைக்கு முந்திய பாடல் எனினும் அதன் சிறப்புக் கருதித் தொகுப்பில் சேர்க்கப்பட்டது. அஃதேபோல் காலவரையறைக்குப் பிற்பட்ட சில பாக்களும் முதன்மை கருதிச் (பாக்கள், 113, 352, 360) சேர்க்கப்பெற்றன.

இவ்வாறு படிப்படியே 650 பாக்கள் சேர்ந்தன. ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு குறிப்பினை உள்ளடக்கியுள்ளது. சிறந்த பொருள்நயங் கருதிச் சில பாக்கள் தெரிவுபெற்றன. உவமைநயம், தொடைநயம் முதலாய நயங்கள் கருதியும், வரலாற்றுக் குறிப்பு, ஒருமைப்பாடு, நாட்டுப் பற்று, சமுதாய நிலை முதலாயவை கருதியும் பாடல்கள் தெரிவுசெய்யப்பட்டன. 650 களஞ்சியப் பாக்களும் மலேசியத் தமிழர்களை ஓரளவு அடையாளங் காணத் துணைபுரியும் வண்ணம் அமைந்துள்ளன. அதனால் பக்கங்களின் விரிவு கவலை தரவில்லை.

### பாக்கள் செப்பம் பெறல்

தமிழ் இலக்கிய உலகில் நிலைத்த வாழ்வு பெறும் களஞ்சியம், இலக்கணச் செம்மையுடையதாய் அமைய வேண்டுமென்னும் நோக்கில் செப்பம் செய்யும் பொறுப்பினைத் தலைமைப் பதிப்பாசிரியர், பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் ஏற்றார்; வேறுபணிகளை மறந்து அச்சுப்படிகளின் மெய்ப்புகளையும் அவ்வப்போது திருத்தியருளினார். புலவர்கள் அ. நக்கீர அடிகள், தணிகை உலநாதன், கா. பெ. ஞானசம்பந்தன் ஆகியோர் அவருக்கு உதவினர்.

தொல்காப்பிய எழுத்துப் படலத்துக்குப் பேருரை எழுதும் பணியில் ஈடுபட்டிருந்தபோதும் பேராசிரியர், இதற்கு மிகுதியாய நேரத்தைச் செலவிட்டார்; இத் திருத்தத்துக்காய காரணங்களை எடுத்துரைத்ததொடு மலேசிய நாட்டு மரபிற்கேற்பச் சரிசெய்து கொள்ளுமாறும் கூறினார்; இப் பணி ஒரு கிழமையிலோ ஒரு திங்களிலோ முடியவில்லை; ஆண்டுக் கணக்கில் நீண்டது. ஆண்டிற்கு இருமுறை பள்ளியின் நீண்ட விடுப்புக் காலங்களில் த.தொ.ஆசிரியர் தமிழகச் செலவு மேற்கொண்டமை திருத்தப் பணிகளுக்கு ஆக்கம் தந்தது.

திருத்தம் பெற்ற பாக்களில் த. தொ. ஆசிரியரும் துணைத் தொகுப்பாசிரியருள் ஒருவராய ப. மு. அன்வரும் மலேசிய மரபிற்கேற்ப இன்றியமையாத் திருத்தங்களைச் செய்தனர்; இசைப் பாக்களைத் துணைத் தொகுப்பாசிரியருள் ஒருவராய ரெ. சண்முகம் செப்பம் செய்ய உதவினார்.

### வரலாறு தேடல்

தொகுப்புப் பணிக்குத் திட்டமிட்டபோதே பாடல்களுக்குப் பின்புலம் எழுத வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது; பின்புலத்தில் கவிதைப் பொருள், பாடல் பிறந்த சூழல், வரலாறு, குறியீட்டுப் பொருள், உவமை, உருவகம், நுட்பம், பாடல் வெளிவந்த இதழ், நூல், ஒலித்த மேடை, நாடகம், வானொலி, பாவரங்கம், பாடலாசிரியர், பாட்டுடைத் தலைவர் வரலாறுகள் முதலாய எல்லா விளக்கங்களும் அடங்கியுள்ளன.

### பயன்தரு குறிப்புகள்

வரலாற்றுக் குறிப்புகள் பெற நெடுங்காலம் ஆயது; கடிதம், தொலைபேசி, தொலைநகல் (Fax), தந்தி, மின்னஞ்சல் (E-Mail), இணையம் (Internet) முதலாய எல்லாத் தொடர்பு கருவிகள் வாயிலாயும் தரவுகள், விளக்கங்கள் பெறப்பட்டன; நேர்காணல் வாயிலாயும், களஆய்வு வாயிலாயும், தக்கார் சிலர் வாயிலாயும், நூல்கள், இதழ்கள், சிறப்பு மலர்கள், ஆண்டு அறிக்கைகள், அரசு வெளியீடுகள் மூலமும் பல குறிப்புகள் திரட்டப்பட்டன. முதன்மையாய வரலாற்றுக் குறிப்புகள் தேசிய நூலகம், பிரிட்டிஷ் கௌன்சில், பல்கலைக்கழகம் முதலாய இடங்களிலிருந்தும், வரலாற்று நூல்களிலிருந்தும் திரட்டப்பட்டன. இப் பணியில் அரு. சு. ஜீவானந்தன் கொட்டிய உழைப்பு மிகுதி.

சில பயனுடைய குறிப்புகளையும் நூல்கள் வாயிலாய்க் கிடைத்த தரவுகளையும் சில செவிவழிச் செய்திகளையும் திரட்டிக் கொணர்ந்தார் ப. மு. அன்வர்; கலை உலகத் தொடர்பாய பல குறிப்புகளைத் திரட்டித் தந்தார் ரெ. சண்முகம்; அமலதாசன், பாதாசன், மைதீ. சுல்தான் ஆகியோரும் குறிப்புகள் தந்து உதவினர்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க முன்னாள் செயலர் சி. வேலுசுவாமி தொகுத்த 'மலேசியாவில் தமிழ் எழுத்தாளர்', சோலை இருசன் தொகுத்த 'கிழக்காசிய நாடுகளில் தமிழ் மணக்கிறது', 'மலேசியத் தமிழ்ப் புரவலர்கள்', 'சிங்கப்பூர்க் கவிதைகள்' (Poetry of Singapore) என்னும் சிங்கப்பூர் அரசு வெளியீடு, முனைவர் இராம. சுப்பையா தொகுத்த 'தமிழ் மலேசியானா', முதலாம் உலகத் தமிழாராய்ச்சிக் கருத்தரங்க மாநாட்டின் போது ஏற்பாட்டுக் குழுவெளியிட்ட, 'யார்? எவர்?' (1966) (Who is Who?) முதலாய நூல்களும் பெரிதும் உதவின. மலேசிய ஆண்டுத் தொகுப்பு நூல்களும் (Year Books), செய்தித்துறை வெளியீடுகளும் உதவின. மலேசிய, சிங்கை, இலங்கை நாடுகளின் இதழ்களும் அரிய குறிப்புகள்பெற உதவின. தஞ்சைப் பெரிய கோயில், சரசுவதி மகால், கலைஞர் உருவாக்கிய பூம்புகார் முதலாய இடங்களில் குடவாயில் பாலசுப்பிரமணியம், பொறியாளர் சு. இராசேந்திரன் ஆகியோர் உதவியுடன் அரிய குறிப்புகள் திரட்டப்பட்டன. எம். ஏ. இளஞ்செல்வன் உதவியோடு பூஜாங் பள்ளத்தாக்கிலும் சில குறிப்புகள் திரட்டப்பட்டன. முனைவர் இ.ஜே.சுந்தர் நிரல்படுத்தித் தந்த காலக்குறிப்பும் பெருந்துணை புரிந்தது.

### பின்புலம் எழுதும் பணி

கவிதைகளுக்காய பின்புலம் எழுதும் பணி நீண்ட காலம் தொடர்ந்தது. இப் பணிக்குத் துணையாசிரியர்கள் சிறப்பாய் ஒத்துழைத்தனர். ப. மு. அன்வர் தலைமைத் தொகுப்பாசிரியருடன் சேர்ந்து பல மாதங்கள் பாடுபட்டார். அவர் மூளையில் பதிந்திருந்த அரிய சில குறிப்புகள் களஞ்சியப் பின்புலத்தில் பதிந்தன. நூலுக்காய பாயிரப்பா எழுதியவரும் அவரே. பின்புலம் எழுதுவதில் ரெ. சண்முகமும் நிறைவாய உழைப்பை ஈந்தார்; குறிப்பாகக் கலைஞர், கலை உலகம்பற்றி நிரம்பக் குறிப்புகள் வழங்கினார். பின்புலத்துக்காய வரலாற்றுத் தொடர்புடைய பல குறிப்புகளை ஜீவானந்தன் திரட்டித் தந்து உதவினார்.

### காலக் குறிப்பு

ஒவ்வொரு பாடலும் இடம்பெற்ற நூல், இதழ்களின் காலத்தை அறிய மேற்கொண்ட முயற்சிகள் அளவில. பாக்களில் 30 விழுக்காட்டுக்குமேல் மேற்படி குறிப்புகள் இல்லாதிருந்தன.

முரசு நெ. முத்தெழிலன் தலைமையில் தமிழ்நெறி மன்றத் தொண்டர் கூடினர்; கோப்புகள், நூல்கள், சிறப்பு மலர்கள், கையெழுத்துப் படிகள் முதலாயவற்றைத் துருவித்துருவி ஆராய்ந்தனர்; ஏறக்குறையப் பத்து விழுக்காட்டுப் பாடல்களுக்கு வெளிவந்த நாள், இடம் கண்டுபிடிக்கப்பட்டன. சில நாள் தொடர்ந்த இப் பணிக்கு முன்னிலை வகித்த களஞ்சியப் பணிகளுக்காய ஒருங்கிணைப்பாளர் அ. சிவசுப்பிரமணியத்தொடு ப. பழநிசாமி, மு. நெ. இளவரசு, ம. கிருஷ்ணமூர்த்தி, ப. செல்வம், ப. சம்பந்தன் முதலாயவரும் ஒத்துழைப்பு நல்கினர்.

களஞ்சியத்தைத் தமிழகத்திலேயே அச்சிடலாமென்று த. தொ. ஆசிரியர் முடிவெடுத்தார். களஞ்சியந் தொகுக்கத் தொடங்கியபோது மலேசியாவில் 'முரசு தமிழ்க் கணினி' உருவாயிற்று. அதனாலேயே அச்சேற்றித் தமிழகத்தில் மறுதோன்றி (Offset) முறையில் நூலாக்கம் செய்யலாம் என முடிவெடுக்கப்பட்டது. களஞ்சியம் மிகப் பெரியதாதலாலும் பதிப்புக் குழுவினர் தமிழகத்தில் இருப்பதனாலும், பல்வேறு வகையில் ஆராய்ந்து த. தொ. ஆசிரியரும் அதற்கிசைந்தார்.

தொகுக்கப்பட்டபின் விரைந்து வெளிக்கொணர வேண்டுமென்னும் தவிப்பில் கவிதைகள் அவ்வப்போது அச்சுக்குத் தரப்பட்டன; கணினி அச்சகத்தார் புதியர் ஆதலால், மனித ஆற்றல் குறைந்த நிலையில் அச்சேற்றுவதில் பல சிக்கல்கள் நேர்ந்தன; பல முறை பல பகுதிகள் கணினி வட்டிலிருந்து (டிஸ்கேட்) முழுமையாய் அழிந்தன; அவை மீண்டும் மீண்டும் அச்சேற்றப்பட்டன.

பதிப்புக் குழுவினர் திருத்திய பிறகும் புதிய பிழைகள் நேர்ந்தன; கணினி விசைப்பலகையைக் கண்ணுங் கருத்தொடும் நுட்பமாய்ப் பயன்படுத்தாவிட்டால் இவ்வாறு நேர்தலுண்டு. இது பதிப்புக் குழுவினரைச் சோர்வடையச் செய்தது; காலப் போக்கில் பட்டறிவு பெருகப்பெருக இக் குறை அகன்றது.

### குழப்பம்

களஞ்சியத்தின் எல்லாப் பாக்களையும் ஒருசேரத் தொகுத்துத் தாராமையாலும், இடையிடையே சுவை கருதிக் கிடைத்த பாக்களையும் கைவிட மனமின்றிச் சேர்த்துக்கொண்டே வந்தமையாலும் தொடக்கத்தில் கொண்ட நோக்கப்படி தொகுப்பு அமையவில்லை. பல பாக்களை இடமாற்றம் செய்ய நேர்ந்தது; கணினி வட்டில் பதிந்த பாக்களின் நிரலை மாற்றல் சற்றுத் தொல்லையான பணி. நிரலை மறுசீரமைப்புச் செய்யாவிடிலோ, தொகுப்பு ஒழுங்கற்றதாய்விடும். அதனால், தலைமைத் தொகுப்பாசிரியர் தயங்கித் தயங்கி இத் துறையின் மூலவராய முரசு. நெ. முத்தெழிலனிடம் இதுபற்றிக் கேட்டார். அனைத்தையும் நிரல்படுத்திக் கோப்பின்மேல் 'இறுதித் திருத்தம்' (Final correction) என்று எழுதித் தம்மிடம் தரச் சொன்னார் அவர்.

தமிழகத்தில் உட்கார்ந்து அரும்பாடுபட்டுத் தொகுக்கப்பட்ட பாக்கள் மீண்டும் நிரல்படுத்தப்பட்டன. இனி மாற்றம் இராதென்னும் குறிப்பும் கோப்பின்மேல் எழுதப்பட்டது. புதிய நிரல்படி நூற்றுக்கணக்காய பாக்களைக் கணினியில் வரிசைப்படுத்தல் ஓர் அரிய பணியாகும். கணினி வட்டுகளிலிருந்து பாக்களை முதன்மைக் (Main) கணினியில் புகுத்திப் பின் முறையான நிரல் வகுத்து (Programme) வரிசைப்படுத்த ஒரு கிழமையாயிற்று. இப் பணியில் எழிலுக்குப் ப. பழநிசாமி, ப. பாலகிருஷ்ணன் இருவரும் உதவினர். பணி முடிந்தபின் எழில் த. தொ. ஆசிரியரை அழைத்து, "நீங்கள் கோரிய நிரல்படி பாக்கள் அச்சேறுவதைப்

பாருங்கள்” என்று கூறிக் கணினி விசையை அழுத்தினார். என்ன விந்தை! முதல் பாட்டு முதல் 650ஆம் பாட்டுவரை உரிய நிரல்படி வந்தன. அவரால் நம்பவே முடியவில்லை; அறிவியலின் அருமை கண்டு வியந்தார். புதிய தெம்பும் நம்பிக்கையும் பிறந்தன. களஞ்சியம் உயிர்பெற்றுவிட்டதாய் மகிழ்ந்தார்.

இத்துணை நடந்தும் களஞ்சியத் தொகுப்புப் பணியும் அச்சீட்டுப் பணியும் முடிந்தபாடில்லை. தொடர்ந்து அச்சகத்தாருக்குத் தலைவலியொடு திருகுவலியும் ஏற்பட்டது. ‘போரும் அமைதியும்’ என்னும் டால்ஸ்டாயின் நூல், அச்சகத்தாரைப் படுத்திய பாடு வேறெந்த நூலும் படுத்தியதில்லை என்பர். அந்தப் பாட்டினைக் களஞ்சியம் உடைத்துவிட்டது என்றால், அது மிகையன்று.

### நக்கீர அடிகள் சுட்டிய நுட்பம்

தலைமைப் பதிப்பாசிரியர் இராம. சுப்பிரமணியன் எழுதிய தொல்காப்பிய எழுத்துப்படலப் பேருரை நூலைப் பதிப்பிப்பதில் உதவிபுரிய வந்த ‘காட்டூர் அடிகளார் கல்வி அறக்கட்டளை’த் தலைவர் புலவர் தவத்திரு நக்கீர அடிகள் களஞ்சியத்துக்குத் துணைப் பதிப்பாசிரியராய் அமைந்தார். அப் பெருந்தகை பதிப்புத் துறையின் ஆழத்தையும், அகலத்தையும், உயரத்தையும் உணர்ந்த ஒரு மேதை. அவர் கைக்கு ஏறக்குறைய முழு வடிவம் பெற்ற களஞ்சியம் சென்றது. பல நாள்கள், அதனை நுட்பமாய்ப் பார்வையிட்ட அடிகள் சில கருத்துகளை உரைத்தார்.

“இஃது ஓர் அரும் படையல்; தமிழில் இப்படியொரு நூல் இதுகாறும் வெளிவந்ததில்லை; அதற்கேற்பப் பதிப்புச் செப்பமும் பெற்ற நூலாய் இஃது அமையவேண்டும். இதுவரை யான் பதிப்பித்த எந்த நூலிலும் என் எண்ணங்கள் முழுமையாய்ப் பதியும் வண்ணம் அமையவில்லை; இதனைக் குறையற்ற ஒரு நூலாய் வெளியிட முழுமையாய் ஒத்துழைப்பீர் என்று நம்புகிறேன்” என்றார். “களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு கவிதைக்கும் தலைப்புக்கும் உள்ள இடைவெளி எல்லாக் கவிதைக்கும் ஒரே அளவினதாய் அமைதல் வேண்டும்; பாடலின் ஒரு கண்ணிக்கும் அடுத்த கண்ணிக்கும் இடையில் வரும் இடைவெளியும் அங்ஙனமே அமைதல் வேண்டும்; இவற்றைப்போலக் கவிஞர் பெயர், இதழ் முதலாயவற்றின் பெயர், அடிக்குறிப்பு முதலாய அனைத்தும் ஒரே சீரொழுங்கில் அமைதல் வேண்டும்” என்றார். தலைமைத் தொகுப்பாசிரியரும் தவத்திரு அடிகளார் கருத்தினை ஏற்றுக்கொண்டார்; நாடு திரும்பினார்; எடுத்த முடிவினைச் செயல்படுத்த முனைந்தார். அதிலிருந்த சிக்கல்கள் புரிந்தன. அன்வரும் உடனிருந்தார். அவர், “தலைமைப் பதிப்பாசிரியரும் அடிகளாரும் இத் துறையில் பெரும் வல்லுநர். அவர்கள் வகுத்தமைத்த அமைப்புமுறை போற்றத்தக்கது” என்றார்.

ஒரு நோக்கொடு, உணர்வுப் பாங்கொடு, அக அழகொடு தொகுக்கப்பட்ட களஞ்சியத்தைப் புற அழகும் தோன்றத் தொகுப்பு நிரலை மாற்றி அமைப்பது எளிய செயலன்று. கவிதைகளை இடமாற்றம் செய்யும்போது (உணர்ச்சிப்) படிமுறை மாறிற்று; என்ன செய்வதென்றே புரியவில்லை.

புதிய முறையைக் கருத்தில்கொண்டு கவிதைகளை நிரல்படுத்தும்போது, நீளமான பாக்களைக் குறைக்க முடிந்தால் குறைப்பது, சிறு பாடல்களைக் கூட்ட முடிந்தால் கூட்டுவது என்று முடிவு செய்யப்பட்டது. அதற்கேற்ப ஆங்காங்கே சிதறிக் கிடந்த பாடல்களின் மூலப்படிகள் திரட்டப்பட்டன.

நீளமாக்கப்பட வேண்டிய பாக்களுக்கு மூலப்படிகளிலிருந்தே புதிய பகுதிகள் சேர்க்கப்பட்டன. மிக நீண்ட பாக்களில் சிற்சில அடிகள் குறைக்கப்பட்டன. எனினும் பாட்டின் மையக்கரு, எப் பாடலிலும் சிதைக்கப்படவில்லை. இவ்வளவும் மட்டக்கோலினால் **(Ruler)** அளந்து வரையறுக்கப்பட்டன. பணி பெரும்பாலும் சனி ஞாயிறுகளில்மட்டுமே நடந்தது. இஃது ஆறு திங்களுக்குமேல் நடந்தது.

இங்கு ஒன்றைக் குறிப்பிட வேண்டும். இருவரும் பழையபடியே உணர்வுநல அடிப்படை மாறாவண்ணம் ஒரு படிமுறை வளர்ச்சியொடு தொகுப்பு அமையவேண்டும் என முடிவு செய்துகொண்டனர். அதன்படி ஒரு பாடல் இடம்பெற வேண்டும் எனின், அவ் வுணர்வினை ஒட்டிய அத்துணைப் பாடல்களும் வரிசை மாறாமல் இடம்பெற வேண்டும். அதனால், எல்லாம் தலைகீழ் ஆயின. இதனால் அடைந்த துன்பம் சொல்லிமுடியாது.

களஞ்சியம் அச்சிடும் பணிக்குத் தொடக்கத்திலிருந்தே தலைமை ஏற்றுச் செவ்வனே செய்துவந்த பழநிசாமியே இத் தொல்லைமிகும் பணியையும் ஏற்றார். ஒவ்வொரு கவிதையையும், இடமாற்றம் செய்தல் என்பது எளிதன்று. அதுவும் நூற்றுக்கணக்காய கவிதைகளை அடுக்கடுக்காய் இடமாற்றுதல் என்பது வன்கொலை உறுதற்கு ஒப்பாகும்.

இச் சிக்கல் நிறைந்த பெரும்பணியை இன்முகத்தொடு ஏற்றுப் பழநிசாமி செய்துமுடித்தார்; இதற்குப் பல மாதங்களைச் செலவிட்டார்; அவர் உழைப்புப் போற்றுதற்குரித்தாகும். மட்டக்கோல் உதவியொடு அளந்து எடுத்த பாக்களுள் சில அச்சேறுங்கால் எதிர்பார்த்த எல்லைக்குள் அடங்கவில்லை; அதனால் மீண்டும் பாக்களை இடமாற்றம் செய்ய வேண்டுவதாயிற்று.

பணியில் ஈடுபட்ட இருவரும் பெரும்பாடு பட்டனர். ஒரு பாடலைச் சரியாய் அமைக்க ஒன்பது பாடல்களை இடமாற்றம் செய்ய வேண்டிய சிக்கல் மீண்டும் ஏற்பட்டது. அதனை நீக்க இருவரும் பல மாதங்கள் உழைத்தனர். பல முறை குறிப்பிட்ட பாடல்களையே இடமாற்றி அமைத்தனர்; நிறுவனப் பணிகளை ஆற்றிக்கொண்டே இரவுநேரங்களில் தாமே, அப் பணியைச் செய்தல் பழநிசாமிக்கு எல்லையிலாத் துன்பத்தைத் தந்தது.

ஒருவகையாய்ப் புதிய நிரல்படி பாக்கள் அச்சேறி வந்தன. நக்கீர அடிகள் குறித்த அமைப்புமுறை ஏறக்குறைய அதனில் அமைந்திருந்தது. எனினும், நிரல்படுத்திய இருவரும் எண்ணிய சில நுட்பங்கள் சில இடங்களில்

அமையவில்லை. குறைந்த அடிகளைக்கொண்ட பாடல் ஒரே பக்கத்தில் இடம்பெற வேண்டும்; விருத்தம் போன்றன முழுமையாய் ஒரே பக்கத்தில் இடம்பெற வேண்டும்; எப் பாடலும் இரண்டு பக்கங்களுக்குமேல் நீளக்கூடாதென்று எண்ணினர். சிற்சில இடங்களில் இவ் வமைப்புக் குலைந்திருந்தாலும் இந் நிலைமையொடு நிறைவுகொண்டனர், அச்சகத்தார்க்கு மேலும் சிக்கலை உண்டுபண்ண விரும்பாத காரணத்தால்.

**பின்புல மாற்றம்**

தொடக்கத்தில் பாக்கள் அமைந்த நிரல்படியே பின்புலம் எழுதப்பட்டது. பாக்கள் இடமாற்றம் பெற்றமையால், பின்புலமும் இடமாற வேண்டுவதாயிற்று. அதனால் காலம் மேலும் நீண்டது. வரலாற்றுக் குறிப்புகளைப் பின்நாளிட்டு (update) எழுத வேண்டுவதாயிற்று. அதனால் பழைய அமைப்பு முறையே மாறிற்று.

பின்புலத்தில் எண்ணற்ற பிற்குறிப்புகள் சேர்ந்தன. நிரலை மறுசீரமைத்தல் சிக்கல் நிறைந்ததாயிற்று. புதிய பாடல் நிரல்படி பின்புல வரிசை மாற்றெண் பெற்றது. அச்சகத்தார்க்கு இப் பணி இமாலயப் பணியாயிற்று. பாடல்களை இடமாற்றம் செய்ததுபோல் இதனையும் செய்தல் எளிதன்று. அச்சகத்தார்க்குப் பல்வேறு சிக்கல்கள் நேர்ந்தன. வேலைச்சுமை கூடிற்று; மனித ஆற்றல் குறைந்தது; கணினியின் புதிய கண்டுபிடிப்புகளைச் செயல்படுத்தும் நுட்பம் வாய்ந்த பெரும்பணிகள் கணினியார்க்குக் குறிப்பாய் இதழ்த் துறையினருக்குக் குவிந்தன; இதனால் பணிச்சுமை அச்சகத்தாரை அழுத்தியது.

**அச்சகம் இடமாற்றம்**

இந் நிலையில் முரசு தமிழ்க் கணினி அச்சகத்தை நடத்திவந்த கேஷ் (CACHE Enterprise Sdn. Bhd.) நிறுவனம் இடம்மாறிற்று (1994); முன்னைய கட்டடத்தின் ஒரு பகுதியிலேயே களஞ்சியப் பணியகமும் தமிழ்நெறி மன்ற அலுவலகமும் அமைந்திருந்தன. அதனால், பணிகள் உடனுக்குடன் நடந்தன. கேஷ் நிறுவன இடமாற்றத்தால் நெருக்கடிகள் சூழ்ந்தன. துணைத் தொகுப்பாசிரிய நண்பர்க்கும் பல பணிகள் குவிந்தன. களஞ்சியப் பணியில் ஒத்துழைக்க அவர்க்குப் போதிய நேரம் வாய்க்கவில்லை.

முரசு தமிழ்க் கணினி நிறுவனத்துக்கும் பொறுப்புகள் கூடிக்கொண்டே வந்தன; புதிய கண்டுபிடிப்புகள் மலர்ந்த வண்ணமிருந்தன. களஞ்சியம் முதலில் முரசு-4 (M4) முறையில் அச்சேற்றப்பட்டது. பின் சாளர அமைப்புடன் (Windows Ver.) முரசு-5 வெளிவந்தது (1993). பின்னர் அதுவும் மாற்றங்கண்டது; பல புதிய நுட்பங்களுடன் முரசு-6 (1995) வெளியீடு கண்டது. தொடர்ந்து முரசு மின்அஞ்சல் (E-Mail) என அதன் வளர்ச்சி விரைந்து மேம்பாடு கண்டுகொண்டே சென்றது. ஆனால் கவிதைக் களஞ்சியம் முரசு-4இல் அச்சிட்ட நிலையிலேயே வட்டுகளில் பதிந்து கிடந்தது. பழையன கழிந்தன; புதியன புகுந்தன. முரசு-4 கணினி வட்டுகள்

புதிய மாற்றங்கண்ட பொறிகளில் பயன்படுத்த இயலா நிலையை எய்தின.

முரசு-4 அமைப்பிலேயே களஞ்சியத்தை அச்சேற்றிவிடலாமென்று முன்பு முடிவு செய்யப்பட்டது. கவிதைகள், வாழ்த்துரைகள், அணிந்துரை, பதிப்புரை முதலாயனவும் முழுச் செப்பத்தொடு (முன்னோடிப் பதிப்பாக) நூலாக்கத்திற்கேற்ற முறையில் அச்சேற்றப்பட்டிருந்தன (1993). ஆனால், பாடற் பின்புல வரிசை எண்கள் மாறி அலங்கோலமாய்க் கிடந்தன. அவற்றைச் சீர்செய்தாலும் அச்சேற்ற இயலா நிலைக்குத்தல் ஏற்பட்டுப் பணிகள் முடங்கின.

களஞ்சியப் பணிகளுக்காய ஒருங்கிணைப்பாளர் அ. சிவசுப்பிரமணியம், தலைமைத் தொகுப்பாசிரியருக்கும் அச்சீட்டாளருக்கும் இடையில் மாட்டிக்கொண்டு பெருந்துன்ப முற்றார். அவரால் ஏதும் செய்ய இயலவில்லை. காலம் ஓடிக்கொண்டே இருந்தது. தலைமைத் தொகுப்பாசிரியர் கண்ணீர் செந்நீராய் மாறிக்கொண்டிருந்தது. களஞ்சியம் உருவாகாமல் போய்விடுமோ என்று கலங்கினார். மீண்டும் தயங்கித் தயங்கி முரசு தமிழ்க் கணினி மூலவரிடம் நிலைமைகளை விளக்கினார்.

"களஞ்சிய அச்சுப்பணி குறிப்பிட்ட எல்லையொடு நின்றுவிடுமென்று எனக்கு முன்பே தெரியும். அச்சகத்தார் அலுப்பு அடைந்துவிட்டனர். இதற்குமேல் அவர்களால் களஞ்சியத்தை நகர்த்த இயலாது. அகரம்முதல் னகரம்வரை புதிய நிரல் (புரோகிராம்) எழுதி வடிவமைக்க வேண்டும். அஃது எளிய பணியன்று. இப்பொழுதாவது சிறு குறையுமின்றி அனைத்துப் பணிகளையும் முடித்து, 'இறுதித் திருத்தம்' என்று கோப்பின்மேல் எழுதி ஒப்படையுங்கள்" என்றார். மேலும், "புதிய தொழில்நுட்ப வளர்ச்சிக்கு ஏற்ப உருவான முரசு-6 சாளர (Windows) முறைக்கே அனைத்தையும் மாற்றிப் புதிய பொலிவொடு வடிவமைக்க ஏற்பாடு செய்வேன்" என்றும் உறுதியளித்தார்.

த. தொ. ஆசிரியருக்குப் புத்துணர்வு பிறந்தது. எழிலின் கருத்திற்கு இசைந்தார். "இறுதி மாற்றம் இதுவே; இனி மாற்றத்திற்கு இடமே இல்லை" எனும் முடிவிற்கு வந்தார்; அன்வர் துணையொடு கவிதை வரிசைக்கேற்பப் பின்புலத்தையும், களஞ்சியப் பிற்சேர்க்கைகளையும் நுட்பமாய் ஒப்புநோக்கிச் சீர்செய்தார். வாழ்த்துரை, அணிந்துரை, ஆய்வுரைகளில் இடம்பெற்ற பாடல்களும், புதிய வரிசை எண்களைப் பெற்றன. பொருளடக்கமும் மாறிற்று; அருஞ்சொல் அடிக்குறிப்பெண்களும் மாறின. பாட்டு முதற்குறிப்பு (அகரமுதலி) எழுதும் பணி நுட்பம் வாய்ந்தது. அதனை அத் துறையில் வல்லுநராய நக்கீர அடிகளே ஏற்றுச் செவ்வனே செய்தருளினார். இப் பணிகள் நீண்ட காலத்தை விழுங்கின.

**வரலாற்று வாயில்**

வரலாற்று முன்னுரை எப்படி அமைய வேண்டுமென முன்பே தொகுப்புக்குழுத் திட்டம் வகுத்தது. அதற்குரிய தரவுகள் திரட்டப்பட்டன. சிலம்பொலி செல்லப்பன்,

முனைவர் க.ப. அறவாணன் முதலாய அறிஞர் பெருமக்கள் அளித்த தகவுரைக்கேற்ப அவ் வுரைத்திட்டம் விரிவு கண்டது. அதற்காகப் பல்வேறு நூல்களைப் புரட்ட வேண்டி இருந்தது. புதுவைப் பல்கலைக்கழக நூலகம் அதற்குப் பெரிதும் பயன்பட்டது. அங்குத் தேவையான நூல்கள் பெறவும் குறிப்புகள் திரட்டவும் முனைவர்கள் அ. அறிவுநம்பி, இளமதி சானகிராமன் ஆகியோர் பெரிதும் உதவினர். தென்கிழக்காசிய வரலாற்றில் நிறைவாய புலமைபெற்று விளங்கும் முனைவர் ச. சிங்காரவேலு பல கருத்துகளை உரைத்தடொடு குறிப்புகளையும் தமிழ், ஆங்கில, மலாய் ஆய்வுக் கட்டுரைகளையும் நிறைய அள்ளித் தந்தார்.

பள்ளிப் பணி, இல்லப் பணி, முனைவர் பட்ட ஆய்வுப்பணி, கட்டணமில்லா வழிகாட்டி வகுப்புப் பணி, மாணவர் பண்பாட்டு விழாப் பணி முதலாயன தலைமைத் தொகுப்பாசிரியரை நெருக்கின. அவர் வரலாற்றார்வம் உடையவராய்ச் சில நூல்கள் கற்றவர். ஆனால், அவர் ஒரு வரலாற்றாசிரியர் அல்லர். எனினும் வரலாறு எழுத வேண்டுவது காலத்தின் கட்டாயம் ஆயது. அதனால், நிரம்பத் தரவுகளைத் திரட்டிப் பிழை நேராவண்ணம் கண்ணுங் கருத்துமாய் எதனையும் எழுத வேண்டுவதாயிற்று; இடையிடையே வல்லுநரைக் கண்டு தகவுரை பெறவேண்டியிருந்தது. சுமக்க முடியாச் சுமைகளைச் சுமந்துகொண்டே தரவுகளைத் திரட்டி 'வரலாற்று வாயில்' என்னும் தலைப்பிட்டு அதனை எழுதி முடிக்க மூன்று ஆண்டுகளுக்குமேல் ஆனது.எவ்வளவோ சுருக்கியும் அஃது ஒரு தனிநூல் எனும் அளவிற்கு விரிந்துவிட்டது.

மலேசியத் தமிழர், தம் தொல்பழம் வரலாற்றையும், தமிழ்கூறு நல்லுலகம் மலேசியத் தமிழர் சமுதாய, அரசியல், கல்வி, பொருளாதார, சமய, கலை, பண்பாட்டு வரலாற்றையும், இலக்கியத் தோற்ற வளர்ச்சியையும் தெரிந்துகொள்ள வேண்டுமென்று விழைந்ததால் ஆசிரியர் வரைந்த வரலாற்றுரை விரிந்துவிட்டது. பயனுடைய வரலாற்றுச் செய்திகளை அளவிற்குமேல் சுருக்கவும் விரும்பாது தக்க - ஏற்ற வகையில் 'வரலாற்று வாயில்' எழுதப்பட்டது. இதனை எழுதத் தலைமைத் தொகுப்பாசிரியர் மேற்கொண்ட முயற்சியைவிட உரையைச் செப்பம் செய்யத் தலைமைப் பதிப்பாசிரியர் இராம. சுப்பிரமணியனும், துணைப் பதிப்பாசிரியர் நக்கீர அடிகளும் மேற்கொண்ட பணி மிகுதி. விரிவாக எழுதப்பட்ட பகுதிகளைச் சுருக்கும்போது இன்றியமையாக் குறிப்புகள் விடுபட்டுவிடக் கூடாது என்பதில் அவர்கள் விழிப்பாய்ச் செயல்பட்டனர்.

## நூலக இடமாற்றம்

இங்கு இன்னொரு சிக்கலையும் குறித்தாக வேண்டும். 1995ஆம் ஆண்டு திசம்பர் தொடக்கத்திலேயே தமிழ்நெறி மன்ற அலுவலகமும் அதிலமைந்திருந்த நூலகமும் இடமாற்றம் கண்டன. அதனால் பெரும் சிக்கல்கள் எழுந்தன. புதிய இடத்தைக் கிடங்காகமட்டுமே பயன்படுத்த முடிந்தது. அதனால் எழுதவோ, படிக்கவோ, ஆய்வுமேற்கொள்ளவோ வாய்ப்பில்லாமற் போனது; அதனால்

பணிகள் முடக்கம் காணும் நிலை ஏற்பட்டது. இந் நெருக்கடியை உணர்ந்த ஏவா மக்களான த. தொ. ஆசிரியர் மூத்த மகள் அமுதும் மருமகர் நா. சுப்பிரமணியமும் தம் இல்லத்தில் ஓர் அறையை ஒதுக்கித் தந்ததொடு, தேவையான அனைத்து வசதிகளையும் வழங்கினர்; துணைப் பதிப்பாசிரியர் அடிகள் தங்குதற்கு அவர்கள் மற்றோர் அறையையும் ஒதுக்கித் தந்தனர்; இன்முகத்தொடு பல்லாற்றானும் உதவினர்; அதனால் பணிகள் முடக்கமின்றித் தொடர்ந்தன.

## நக்கீர அடிகள் வருகை

மலேசிய நாட்டின் இயற்கை அழகைக் கண்டு மகிழவும், களஞ்சியத்தின் இறுதி வடிவமைப்பினைப் பார்வையிட்டுச் செப்பம் செய்யவும் 1995 செப்டம்பரிலேயே நக்கீர அடிகள் மலேசியா வரவிருந்தார்; அடிகள் அன்னையார் தம் 98ஆம் அகவையில் உலக வாழ்வினை நீத்தமையால் அப் பயணம் தடைப்பட்டது. 1996 சூன் 11இல்தான் வந்தார். அடிகள் வந்ததும் உடனே பணியில் இறங்கினார்; அச்சுப்படிகளைத் திருத்திச் செப்பம் செய்யத்தொடங்கினார். பழநிசாமி 'வரலாற்று வாயி'லை அச்சேற்றும் பணியைத் தொடங்கினார். அடிகள் உடனுக்குடன் மெய்ப்புகளைத் திருத்தியருளினார். அடுத்த சில கிழமைகளுக்குள் களஞ்சியம் மலர்ந்து மணம்பரப்பத் தொடங்கிவிடும் என்னும் பூரிப்பில் ஆழ்ந்திருந்த வேளையில்...

## ஆலமரம் சாய்ந்தது

எத்தனையோ தடைகளை வென்று அரங்கேறும் நாளைக் களஞ்சியம் நெருங்கிக் கொண்டிருந்தபோது சற்றும் எதிர்பாரா வண்ணம் தண்ணிழல் தந்துகொண்டிருந்த 'அந்த ஆலமரம்' சாய்ந்துவிட்டது.

ஆம்! தலைமைத் தொகுப்பாசிரியர் அன்புத் துணைவியார் சானகி என்னும் மதி தம் 54ஆம் அகவையில் உலக வாழ்வு நீத்தார் (14.7.1996)

1953முதல் த.தொ. ஆசிரியர் திரட்டிவந்த இதழ்களையெல்லாம் அவர் அன்னை திருமதி முனியம்மை சுப்புராயன் (28.11.1993இல் மறைவு) வணக்கத்துக்குரிய பொருளாய்க் கருதிக் காத்து வந்தார். மணமான பின் (3.7.1960) துணைவி அப் பொறுப்பை ஏற்றார்; கவிதை நறுக்குகளைத் தம் 'குழந்தைகள்' போன்று கண்ணுங் கருத்துமாய்க் காத்தார்; ஆசிரியர் மேற்கொண்ட பணிகளுக்கெல்லாம் துணை நின்றார். அந்த ஆலமரம் சாய்ந்ததால் ஆசிரியர் அதிர்ந்து போனார். மருத்துவ வல்லுநர் கணிப்பையெல்லாம் பலமுறை பொய்யாக்கிக் கூற்றுவனைப் புறங்காணச் செய்தவர் அந்த வீராங்கனை. சற்றும் எதிர்பாரா வண்ணம் நின்றதுபோல் நின்று நெடுந்தூரம் பறந்து சென்றமை ஆசிரியரையும் இல்லத்தினரையும் மட்டுமல்ல களஞ்சியப் பணியில் ஈடுபட்டிருந்த நல்லுள்ளத்தினரையும் அதிரச் செய்தது; 'களஞ்சியப்பணிகளுக்கு ஆணிவேராய் நின்ற அந்த உள்ளத்தின் கண்கள் களஞ்சியத்தைக் காணாமலேயே சென்றுவிட்டனவே' என்று வருந்தச் செய்தது.

“இன்சொல்லால் இல்லில் எழில்பூக்க வைத்துவிட்டாய்
ஒன்றா உலகத்(து) உயிர்வாழ்ந்தாய் - மின்னலெனச்
சானகி யாய்வந்து தங்க மதியாகி
வானுலவச் சென்றாய் விரைந்து!”

என்று உருகினார்.

“பாய்சுவைப் பாடல் தொகுத்தேன் அவற்றையென்
தாய்சுமந்தாள்; பின்னர்த் தகுதுணைநீ - வாய்த்தபின்
பேணிச் சுமந்தாய்! பெருஞ்செல்வம் நூலாக்கம்
காணுமுன் மூடிவிட்டாய் கண்!”

என்று கையற்றுக் கலங்கினார்! துயரக்கடலில் ஆழ்ந்திருந்த ஆசிரியரை அன்பர் பலர் ஆறுதல் கூறித் தேற்றினர். குறிப்பாய்க் களஞ்சியத் துணைப் பதிப்பாசிரியர் நக்கீர அடிகள் உடனிருந்து தந்த ஆறுதலும் ஊக்கமும் மிகுதி.

“அம்மையார் மறைவதற்கு முதல்நாள் அரைமணி நேரத்திற்குமேல் அவருடன் பேசினேன். அவர், ‘அன்பான கணவர் எனக்கு அமைந்தார்; அறிவார்ந்த மக்கள் வாய்த்தனர்; அருமையான மருமக்கள் கிடைத்தனர்; நிறைவான இல்லறம் அமைந்தது; எனக்கு எக் குறையுமில்லை!’ என்று கூறிப் பூரித்தார்.

“தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது” (குறள், 68)

என்னும் குறளுக்கு இலக்கியமாய்க் குடும்பத்தை ஒரு பல்கலைக்கழகம்போல் ஆக்க உங்களுடன் அரும்பாடுபட்டு உழைத்திருக்கிறார். அவரின் வேட்கையான கவிதைக் களஞ்சியத்தை விரைந்து நிறைவு செய்ய ஊக்கம் பெறுக!” என்று தேற்றினார்.

## மூன்றாந் தலைமுறை முன்வந்தது

இரண்டு தலைமுறைகள் சுமந்த அப் பொறுப்பை மூன்றாந் தலைமுறையும் தன் தோள்மேல் சுமக்க முன்வந்தது. மக்களும் மருமக்களும் குடும்பத்தின் தலையாய பணியாய் அதனை ஏற்றனர். தமிழ்நெறி மன்றத்தினரும், முரசு கணினி - கேஷ் நிறுவனத்தினரும் தளரா ஆதரவைத் தொடர உறுதி பூண்டனர்; தொகுப்புக் குழுவினரும் பதிப்புக் குழுவினரும் துணை நின்றனர்; டாக்டர் சி. கந்தையா முதலாய நன்னெஞ்சினரும் பேருக்கம் தந்தனர்.

“தாய்சுமந்த பின்நீ தலைமேல் சுமந்திட்ட
தூய்தமிழ்ப் பாக்கள் தொடர்ந்தினிது - நேயமிக்க
நம்மக்கள் காப்பர் நயந்தென்றன் கைப்பட்டே
உன்பெயரைச் சொல்லும் உவந்து!”

என்று உறுதிகொண்டெழுந்தார்.

இவ் வேளையில் கேஷ் நிறுவனத்திற்குக் கடும்பணிகள் சூழ்ந்தன; களஞ்சியப் பணிகளில் முழுமையாய்க் கருத்துச் செலுத்த நேரம் வாய்க்கவில்லை. காலம் விரைந்து ஓடிக்கொண்டிருந்தது. த. தொ. ஆசிரியர் துடித்தார்; எத்தனையோ திட்டங்கள் வகுத்தார். எந்த மாற்றுவழியும் கைகொடுக்கவில்லை; காத்திருப்பதைத் தவிர வேறு வழியில்லை. அடிகள் பல்கலைக்கழகத்தில் இலக்கணத் தொடர்வகுப்பு நடத்தியதால் அவர் நேரம் பயனுடைய வழியில் கழிந்தது. காலக் காற்றும் திரும்பத் தொடங்கியது. தேங்கிக் கிடந்த பணிகள் மெல்ல மெல்லப் புத்துயிர் பெற்றன. பழநிசாமி உறக்கம் துறந்து இரவுகளைக் களஞ்சியப் பணிக்குக் கொடுத்தார். பகலிலும் நேரம் வாய்த்தபோது வந்து பணிகளில் ஈடுபட்டார். தவத்திரு அடிகளைக் கணினி அருகிலேயே உட்கார வைத்துக்கொண்டு அவர் சுட்டிய நுட்பங்களோடு கவிதைப் பதிவுகளைச் சீரமைத்தார்.

வரலாற்று வாயில் அச்சீட்டுப் பணியும் தொடர்ந்தது. அப் பணிக்குத் திருமதிகள் அமுதா சுப்பிரமணியம், சரோஜா சிவசுப்பிரமணியம், செல்வி மு. நெ. அல்லிமலர், வ. தங்கராசு, சு. அப்பாராவ் ஆகியோர் உதவினர்

வரலாற்று வாயில் அச்சுப்படிகள் முதலிரு திருத்தங்கள் பெற்றன. ஒவ்வொருமுறையும் த. தொ. ஆசிரியர் பழைய குறிப்புகளை நீக்குவதும் புதிய புதிய குறிப்புகளைச் சேர்ப்பதுமாய் இருந்தார். அதனால் முழுமை பெறுவதில் காலம் நீண்டது. எல்லாம் செப்பமாய் அமைய வேண்டுமென்பதில் ஆசிரியர் கொண்டிருந்த தவிப்பை மதித்து அச்சேற்றுநரும் சலிப்புக் கொள்ளாமல் புதிய மாற்றங்களை அச்சேற்றினர்.

**எழுத்துப் பணிகள் நிறைவுற்றன**

களஞ்சியத்தை 1996 திசம்பர்த் திங்களுக்குள் வெளியிட்டுவிட வேண்டுமென்று த.தொ. ஆசிரியர் உறுதிகொண்டார்; வரலாற்றுவாயிலை விரைந்து முழுமைப்படுத்தும் முயற்சியில் இறங்கினார்; வல்லுநர் தந்த அரிய குறிப்புகளைத் தக்க இடங்களில் சேர்த்தார்; 11.10.1996ஆம் நாள் நிறைவுரையை எழுதி முடித்தார். களஞ்சியத்தின் மற்றப் பகுதிகளுக்குரிய குறிப்புகள் 1993ஆம் ஆண்டே மறுசீரமைக்கப்பெற்றன. கால மாறுதலுக்கேற்ப அவை மீண்டும் திருத்தம் பெற வேண்டுவதாயின. அவற்றையெல்லாம் கண்ணுங் கருத்துமாய்ச் சீர்செய்தார்; புதிய குறிப்புகளையும் சேர்த்தார். அப் பணியையும் 9.11.1996இல் முடித்தார். குறிப்புகளெல்லாம் முன்பே கணினி வட்டுகளில் பதிந்திருந்ததால் சீரமைப்புப்பணி சிக்கலை ஏற்படுத்தவில்லை.

## அடிகள் தாயகம் திரும்புகை

இந் நிலையில் அடிகளின் குடிநுழைவு உரிமை (விசா) முடிவுக்கு வந்தது. அடிகள் இங்கு நீளத் தங்க ம.உ.த.ஆ.நி. சார்பில் அதன் தலைவர் முனைவர் இராஜா கிருஷ்ணன், செயலர் முனைவர் மு.இராசேந்திரன் ஆகியோர் முயன்று குடிநுழைவுத் துறையின் இசைவுபெற்றனர். மேலும் அத் துறைக்கு நெருக்குதல் தரவிரும்பாததால் அடிகள் சிங்கப்பூர் வழியாய்த் தமிழகம் திரும்ப 22.11.1996இல் புறப்பட்டார். அவர்கள் சிங்கப்பூரில் இரு கிழமைகள் தங்கியிருந்த காலத்தில் இங்கு உருவாகிவந்த தமிழ், மலாய், ஆங்கில மும்மொழி அகரமுதலியைச் செப்பம் செய்ய வேண்டியிருந்தது. அதனொடு களஞ்சிய அச்சுப் படிகளையும் மீண்டும் ஒருமுறை முழுமையாய்த் திருத்தியருளினார். த. தொ. ஆசிரியர் சிலநாள் அடிகளுடன் தங்கி அப் பணியை முடித்தார். அச்சுப் படிகளைத் திருத்தச் சிங்கப்பூர்த் தமிழர் இயக்கம் மனமுவந்து இடந்தந்து உதவியது.

## மாதவி இலக்கிய மன்றக் கலந்துரையாடல்

சிங்கப்பூர் மாதவி இலக்கிய மன்றம் அடிகளுடன் ஒரு கலந்துரையாடல் நடத்தவும், முழுமையடைந்த களஞ்சியம்பற்றிக் கருத்துப் பரிமாற்றம் செய்யவும் ஏற்பாடு செய்தது (7.12.1996); அக் கூட்டத்திற்கு மலர் மாணிக்கம் தலைமையேற்றார். அதனில் கலந்துகொண்ட த.தொ. ஆசிரியர், களஞ்சிய உருவாக்கத்திற்குப் பேராசிரியர் இராம. சுப்பிரமணியனும், தவத்திரு நக்கீர அடிகளும் ஆற்றிய பணிகளை விவரித்தார்; களஞ்சியத்தில் சிங்கப்பூர்க் கவிஞர்கள் கொண்டுள்ள பங்குபற்றி விளக்கினார்; கவிஞர் பட்டியலையும் படித்துக் காட்டினார். தொடர்ந்து பேசிய அவர் களஞ்சியத்திற்குப் பாடல் வழங்கிய கவிஞர்களையும் ஒத்துழைப்பு நல்கிய பெருமக்களையும் கண்டு நிறைவாயதொரு கருத்துப் பரிமாற்றம் செய்ய விரும்பியதையும்; தகவுரைஞர் முருகு. சீனிவாசன், கவிஞர்கள் அமலதாசன், மலர் மாணிக்கம், மெ. இளமாறன் ஆகியோர் மட்டுமே தம்மைக்கண்டு கருத்துரை வழங்கினர் என்பதையும் குறிப்பிட்டார். தொடர்ந்து "இப்பொழுதுகூடச் சிங்கப்பூர்த் தொடர்பாய குறிப்புகளைப் பார்வையிடலாம்; குறைகளைச் சுட்டலாம்" என்றார்; களஞ்சிய அச்சுப்படிகளையும் வழங்கினார். "நூல் வெளிவந்தபின் குறைகூறுவதில் பயன் இல்லை; கருத்துகளை இப்பொழுதே கூறுவது சிறப்பு" என்றார்.

"கவிதைக் களஞ்சியத்தில் சிங்கப்பூர்க் கவிதைகளும் இடம் பெறுவதால், 'மலேசிய, சிங்கப்பூர்க் கவிதைக் களஞ்சியம்'என நூற்பெயரை மாற்றுவது சிறப்பு என்றார் சி.த.எ.கழகத் தலைவர் அமலதாசன். சிலர் அதனை வழிமொழிந்தனர். "இதற்குத் தாம் ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பே விடைகூறிவிட்டதாயும் 1965ஆம் ஆண்டுவரை சிங்கப்பூர் மலேசியாவுடன் இணைந்திருந்த ஒருபகுதியே என்றும், அதனால் இப்போதுள்ள பெயர்

கவிதைக் களஞ்சியம் வெளிவந்து நல்ல வரவேற்பைப் பெற்றால் பின்னர் 'மலேசிய, சிங்கப்பூர்க் கவிதைக் களஞ்சியம்' வெளியிடுவதுபற்றி எண்ணமிடலாம்" என்றும் கூறினார்; மாதவி இலக்கிய மன்றத்திற்கும், கூட்டத்தில் கலந்து கொண்டோர்க்கும் நன்றி கூறி விடைபெற்றுக்கொண்டார்.

### வடிவமைப்புப் பணி

அடுத்துப் பணிகள் மின்னல் வேகத்தில் தொடங்கின. இந் நேரத்தில் அச்சேற்றுநர் ப. பழநிசாமி தமிழகம் செல்ல வேண்டியதாயிற்று; பணிகள் மீண்டும் முடங்கிவிடுமோ என்று த. தொ. ஆசிரியர் கலங்கினார். இக்கட்டான அச் சூழ்நிலையில் இறுதித்திருத்தப் பணியை அவர் மகன் மு. நெ. இளவரசு, மகள்கள் அமுது, அல்லிமலர் மூவரும் ஏற்றனர்; இரவுபகல் பாராது கடுமையாய் உழைத்தனர். களஞ்சியப் பணி நடந்த அறையில் ஏற்கெனவே இரு கணினிகள் இயங்கின; பணிகளை விரைந்து முடிக்க மேலும் ஒரு கணினியைப் பொருத்தினர். பல்வேறு வட்டுகளில் பதிந்துகிடந்த களஞ்சியப் பகுதிகளைப் பொருளடக்கத்திற்கேற்ப நிரல்படுத்தத் தொடங்கினர். பழநிசாமியும் தாயகம் திரும்பினார்; தம் பங்கை நிறைவுடன் ஆற்றத் தொடங்கினார். ஒருங்கிணைப்பாளர் அ. சிவசுப்பிரமணியம் முறையாய திட்டம் வகுத்து பணிகளை முடுக்கினார். த. தொ. ஆசிரியர் உடனிருந்து இறுதித் திருத்தப் பணிகளை மேற்பார்த்தார்; நிரல்படுத்தும் பணியைச் செவ்வனே முடிக்க முனைந்தார். ஓரிரு கிழமைகளுக்குள் நிரல்படுத்தும் பணி முடிந்துவிடுமென்ற நம்பிக்கை பிறந்தது.

இந் நேரத்தில் கேஷ் நிறுவனம் இடம் மாறவேண்டியதாயிற்று அதனால் சற்றுப் பின்னடைவு நேர்ந்தது. 1996ஆம் ஆண்டு இறுதிக்குள்ளாவது களஞ்சியத்தை வெளியிட்டுவிடவேண்டுமென்று த. தொ. ஆசிரியர் பெரிதும் விழைந்தார்; துடித்தார்; எத்தனையோ முயற்சிகள் மேற்கொண்டார்; ஆனால் அவ் வெண்ணம் நிறைவினை எய்தவில்லை (மறுபக்கங்கள் ஈண்டுக் காட்டப்படவில்லை). 'பருவத்தால் அன்றிப் பழா' என ஆறுதல் கொண்டார். பருவமும் வாய்த்தது; எத்தனையோ ஆண்டுகளை விழுங்கி இருளைவிட்டு வெளியே வாராமல் கிடந்த களஞ்சியத்திற்கு விடியல் தோன்றியது; அஃது ஒரு நிரலுக்கு வந்தது.

இறுதி வடிவமைப்பிற்கு மு. நெ. இளவரசிடம் சென்றது. கடுமையான பணிகளுக்கிடையே அவர் அப் பணியை ஏற்றார். புதிய தொழில் நுட்பத்திற்கேற்பக் களஞ்சியத்தை வடிவமைப்பதில் அவர் எதிர்கொண்ட இக்கட்டுகள் பல. எண்ணிய வண்ணம் உருவாக்க அவர் கொட்டிய உழைப்பு மிகுதி. ஒருவகையாய்க் களஞ்சியம் புத்துயிர் பெற்றது. வட்டில் வடிவம் பெற்ற அஃது ஒளியச்சேறி நூலாக்கத்திற்கு அணியமானது. எண்ணற்ற இடையூறுகள் நேர்ந்தும் இறுதிவரை உறுதியாய் நின்று களஞ்சியத்தை உருவாக்கித் தந்த 'கேஷ்' நிறுவனத்திற்கும், இப் பணியில் ஈடுபட்ட நெஞ்சினருக்கும் தலைமைத் தொகுப்பாசிரியர் ஆழ்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறார்.

## மலேசியக் கவிஞர்தம் விரிந்த பார்வை

மலேசியக் கவிஞர் தாய்நாடு, மொழி, இனம் என்னும் கட்டுக்குள்ளேயே முடங்கிவிடவில்லை. விரிந்த பார்வையொடு உலகத்தை நோக்கும் போக்கையும் அவர்தம் கவிதைகள் காட்டுகின்றன. தாயகத்து விடுதலைத் தந்தை துங்குவைப் பாடிய வாயால், இந்திய விடுதலைத் தந்தை காந்தியடிகளைப் பாட மறக்கவில்லை; ஆப்பிரிக்கக் கறுப்பின மக்களின் வாழ்வுயர்த்த இன்னுயிர் ஈந்த லுமும்பாவிற்கு, மார்ட்டின் லூதர் கிங்கிற்கு இரங்கத் தவறவில்லை; கென்னடிக்கு நடந்த கொடுமையைக் கண்டிக்க அஞ்சவில்லை; உலக அமைதிக்கு உழைத்த ஊ தாண்டை வாழ்த்தத் தயங்கவில்லை; தூக்குக் கயிறு இறுக்கிக் கொண்டிருந்த புட்டோ உயிரைக் காக்கும்படி விண்ணப்பம் செய்ய மறக்கவில்லை; போர்வீரன் அரபாத்திற்கு ஊக்கம் நல்கப் பின்வாங்கவில்லை; மலேசிய மண்ணின் வேழத்தைப் பாடிய கவிஞர் வாய் ஈழத்தையும் பாடியது; இந்த உலகத்தையும் வாழ்த்தியது!

## களஞ்சியமும் மலேசியக் கவிஞர் தரமும்

இக் களஞ்சியக் கவிதைகளைமட்டுமே கொண்டு மலேசியத் தமிழ்க் கவிதை உலகினை முழுமையாய் அளந்துவிட முடியாது. ஏனெனில், களஞ்சியக் கவிதைகளின் கால எல்லையான 1887-1987வரை வெளிப்போந்த கவிதைகள் அனைத்தும் தொகுப்புக் குழுவினருக்குக் கிடைக்கவில்லை. கிடைத்தவற்றுள் தேர்ந்தெடுத்த கவிதைகளைமட்டும் கொண்டதே இத் தொகுப்பு.

நாள், கிழமை, திங்கள் இதழ்கள், ஆண்டுமலர்கள், பருவ வெளியீடுகளில் வந்தவையும், இசைக்கோலம் பூண்டு மேடை, வானொலி தொலைக்காட்சிகளில் ஒலித்தவையும், நூல்வடிவில் வெளிவந்தவையும், கையெழுத்துப் படிகளாய் முடங்கிக் கிடப்பவையும் முழுமையாய்த் தொகுப்புக் குழுவினருக்குக் கிடைக்கவில்லை.

களஞ்சியத்தில் 254 கவிஞர் பாடல்களே இடம்பெற்றுள்ளன. எவ்வாறு நோக்கினும் நூறாண்டுகால (1887-1987) இடைவெளியில் 300 கவிஞர்க்குமேல் வாழ்ந்திருப்பர். கவிஞருள் சிலர் 1000முதல் 5000 கவிதைகளுக்கு மேல் பாடியோரும் உளர்.

மொத்தத்தில் இம் மண்ணில் இரண்டு இலக்கத்திற்கும் மேற்பட்ட பாக்கள் தோன்றி இருக்கலாம். தொகுப்புக் குழுவினர்க்கு இவற்றில் பாதிக்கும் குறைவாய பாக்களே கிடைத்தன. அதனால் இக் களஞ்சியத்தால் மலேசியத் தமிழ்க் கவிதைத் திறனை நூற்றுக்குநூறு விழுக்காடு கணித்தல் இயலாது.

களஞ்சியத்தில் தனிப்பாடல் மட்டுமே தொகுக்கப்பட்டன. சிறு காவியங்கள், கவிதை நாடகங்கள், நாட்டிய நாடகப் பாடல்கள், வில்லுப்பாட்டு, பிள்ளைத்தமிழ், சிறுவர் காவியங்கள், இசை நாடகங்கள் தொடர்பாய பாக்கள் களஞ்சியத்தில்

சேரவில்லை. இவை ஒவ்வொன்றும் தனித்தனியே வெளியிடத் தக்கவை; அவற்றுள் ஒரு பகுதியைமட்டும் வெளியிட்டால், அஃது ஒரு நூலை முடமாக்குதலை ஒக்கும். அதனொடு ஒரு களஞ்சியத்தில் அத்துணை வகைகளையும் அடக்குதல் முடியாது; இவை எல்லாம் தனித்தனிப் பகுதியாய் வெளிவருமாயின் தமிழ்கூறு நல்லுலகிற்குப் பெரும்பயன் விளையும்.

மலேசியாவில் 1964ஆம் ஆண்டுமுதல் வளர்ந்துவரும் உரைப்பா (புதுக்கவிதை) இதில் இடம்பெறவில்லை.

தமிழ்கூறு நல்லுலகில் செம்மாந்து நிற்கும் சங்க நூல்களுள்ளும் மற்ற இறவா நூல்களுள் பெரும்பாலாயன தொகுப்பு நூல்களே; ஒரு தொகுப்பு நூல் உருவாகத் தொகுப்பாளர் ஒருவர் இன்றியமையாதவர்; அவருக்குப் பலர் துணை நிற்பர்.

ஓர் அரசோ பல்கலைக்கழகமோ செய்ய வேண்டிய பணி இது. தனிப்பட்ட ஒருவர் பிறர் துணையின்றிப் பெரும் பொருளின்றி இதுபோன்ற முயற்சியில் ஈடுபடுதல் அரங்கின்றி வட்டாட முயலும் முயற்சி போன்றதே! ஏதோ ஓர் உந்துதலால் முன்பின் எண்ணிப் பாராமல் இந்த முயற்சியில் இறங்கினார் த. தொ. ஆசிரியர்; தமிழ்நெறி மன்றம் அவருக்கு உந்துதல் தந்தது; அறிஞர் பலர் ஊக்கினர்; நல்வாய்ப்புகள் சில அமைந்தன; பெருங்குழு ஒன்று முகம் சுளிக்காது எதனையும் எதிர்பாராது ஒத்துழைத்தது.

மேதையர் பலர் பதிப்புத்துறையில் ஈடுபட்டனர்; தொண்டர் பலர் தொகுப்பாசிரியர் குழுவில் இடம்பெற்றனர். அவர்கள் ஒவ்வொருவரும் உழைத்த உழைப்பிற்கு எல்லையே இல்லை; எவ்வகையானும் அஃது ஈடுசெய்ய முடியாதது.

முரசு கணினியில் களஞ்சியத்தை அச்சேற்றக் கேஷ் நிறுவனம் கொட்டிய உழைப்பினை, தியாகத்தைப் பட்டியலிடவும் முடியாது; கட்டணம் தரவும் இயலாது. அதற்கு உரிய வகையில் நன்றிகூறல் எளிதன்று.

## ஒன்றிய உணர்வொடு

தொகுப்புக் குழுவினர் எல்லாரும் தமிழ் என்னும் ஒரு கயிற்றால் கட்டுண்டனர்; எண்ணிக்கையால் பலராயினும் உணர்வால் ஒருவராயினர்! அதனால் களஞ்சியத்தை உருவாக்க முடிந்தது; தமிழ்கூறு நல்லுலகிற்கு வழங்க முடிந்தது!

## ஒருசொல் கேளீர்

தமிழில் ஓரளவு பயிற்சி இருந்ததே தவிரத் தொகுப்புப் பணியில் எவருக்கும் இத்தகு பயிற்சி இருந்ததில்லை. தகுதிமிக்க பதிப்புக்குழு அமைந்ததால் குறையில்லாத ஓர் அரும்படையலாய்க் களஞ்சியம் உருவாயிற்று. இனி இத்தகு பெருங்களஞ்சியம் ஒன்று தொகுக்கும் வாய்ப்பு வருமாயின் அது

பூஞ்சோலைக்கண் புகுந்து, பல்வேறு மலர்களைக் கொய்து, மாலை தொடுக்கும் பணியாய், இன்பம் நல்கும் பணியாய் அமையும் என்பதில் ஐயமில்லை. சமுதாயம் இதற்குப் பேராதரவு தருமானால் தொடர்ந்து பல்வேறு நூல்கள் அரங்கேறலாம்; கவிதைக் களஞ்சியம் பல மலரலாம்; சிறுகதைகள், புதினங்கள் கொண்ட தொகுப்புகள் பூக்கலாம்; மலேசியத் தமிழர் தொடர்புடைய வரலாற்றுக் களஞ்சியமும் வெளிவரலாம்.

எல்லா மொழிகளையும் எல்லாரும் படிக்க வேண்டுமென்று அரசு விரும்புகிறது; தாய்மொழியைக் கற்றுக்கொள்ள வாய்ப்பு நல்கியுள்ளது. உலகினை அறிய ஆங்கிலமும், நாட்டை அறியத் தேசிய மொழியும், தம்மை உணரத் தாய்மொழியும் கற்று ஒவ்வொருவரும் தம் வாழ்வினை நெறிப்படுத்திக்கொண்டால், இக் கணினி உலகில் கவின்மிகு வாழ்வினைப் பெறலாம்.

தமிழர் குடியேறிய அயலகங்களில், இதுபோன்ற மாபெரும் படையல் ஒன்றனை மலேசியத் திருநாடே தருகிறது. மேலும் பல இலக்கியக் கொடைகளைத் தரவேண்டுமென்பதே தொகுப்புக் குழுவினர் நோக்கமாகும். இதுபோன்ற பணிகளில் ஈடுபட விழைவோர்க்கு இக் களஞ்சியக் கதை ஒரு வழிகாட்டியாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

### முதல் சத்தி

களஞ்சியம் உருவாக எத்தனையோ சத்திகள் முன்நின்று ஊக்கின; உதவின. அவற்றுள் முதல் சத்தியாய் விளங்கியது ஒன்று; அஃது எல்லையற்ற ஆற்றலைக் கொண்டது. அதற்கு முதல் வணக்கம் செலுத்துதல் முதற் கடமையாகும். மெய்யன்பர் பலர் பத்திவுணர்வுடன் அன்பொழுக 'அம்மா' என்று வாய்குளிர அழைக்கும் மேல்மருவத்தூர்ச் சித்தர்பீட நாயகர் ஆன்மிக குரு அருள்திரு பங்காரு அடிகளாரே அச் சத்தி. அச் சத்தி ஆன்மிகத் துறையைத் தமிழால் குளிப்பாட்டிற்று; தமிழினை வழிபாட்டுக்கு உரியதாக்கிற்று; அஃது அருள்திரு அடிகள் என்றழைக்கப்படுகிறது. களஞ்சியத் திட்டத்தைக் கூறித் தகவுரை (ஆலோசனை) கேட்டபோது அருளாசி வழங்கிற்று; களஞ்சிய ஆக்கத்திற்கு அறநிலை வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளுமாறு உரிமை வழங்கிற்று. அதன்-அடிகளின் அருள் உள்ளத்தை என்றும் மறக்க இயலாது.

அடிகள் நிறுவிய அறநிலையை - குறிப்பாகக் கல்விக்கூடங்களை ஆளும் இன்னொரு சத்திக்கும் ஈண்டு நன்றி கூறியாக வேண்டும். அந்தச் சத்திதான் (அன்புத் தங்கை) புலவர் திருமதி இலக்குமி பங்காரு அடிகள். ஆழ்ந்த கல்விப்பே றமைந்ததால் அச் சத்தியால் களஞ்சியத்தின் அருமையை உணர முடிந்தது; உருவாக்கத்திற்கு உற்றுழி உதவ முடிந்தது. களஞ்சியப் பணி தொடங்கியது முதல் கடந்த பத்தாண்டுகளாய்த் தலைநாள் போல இன்றுவரையும் கிஞ்சித்தும் வேறுபாடின்றி அன்பும் ஆதரவும் காட்டி உதவிவரும் இவ் விருபெரும்

சத்திகளுக்கும் வாயால் நன்றி கூற இயலாது. இவர்தம் தலைமகனார் அறநிலைய இயக்குநருள் ஒருவராய ப. அன்பழகனின் உதவிகளும் மறக்கற்பாலன அல்ல. நூல் அச்சேற அவர் மேற்கொண்ட முயற்சிகள் மிகுதி. ஆழ்ந்த அன்புணர்வுடன் ஒரு மாபெரும் பணிக்கு உதவுகிறோமென்னும் கடமையுணர்வுடன் துணைபுரிந்த அவர்க்கு ஆழ்ந்த நன்றி.

### ஒத்துழைப்பீந்த உயர்ந்தோர்

களஞ்சிய உருவாக்கத்திற்கு மேற்படி அறநிலை அன்பர் பலர் உதவியுள்ளனர். அவர்களுள் டாக்டர் வ. செ. நடராசன், ஏ. கே. வெங்கடசாமி முதலாயோர் மறக்கவியலாதார் ஆவர்.

தொகுப்புக் குழுவில் இடம்பெறாதார் சிலரும் தலைமைத் தொகுப்பாசிரியருக்குப் பேருதவி புரிந்துள்ளனர். அவர்களுள் திருமதி சானகி இராசசேகரன், முனைவர் மு. இராசேந்திரன், சங்கு சண்முகம் ஆகியோர் நன்றியுடன் குறிப்பிடத்தக்கவராவர்.

### பதிப்பித்த பண்பாளர்

களஞ்சியத்தை ஓர் அரிய கலைப்படையலாய்ப் பதிப்பித்த தமிழவேள் இராம. சுப்பிரமணியன், அவருக்குத் துணைபுரிந்த புலவர் நக்கீர அடிகள், புகமுடம்பெய்திய புலவர் தணிகை உலகநாதன், புலவர் கா. பெ. ஞானசம்பந்தன், படியெடுத்துத் தந்த புலவர் ப. கோவிந்தசாமி ஆகியோருக்கு நன்றி.

### பதிப்புப் பற்றி ...

இந் நூலுள் 'அண்ணாமலை பல்கலைக்கழகம்' என்று வலிமிகாமலும், 'மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்' என்று வலிமிகுந்தும் வந்துள்ளன. "அங்ஙனம் வருவதே சரி" என்பார் இந் நூலின் தலைமைப் பதிப்பாசிரியர். இது குறித்துத் தம் தொல்காப்பியம் - எழுத்துப் படலப் பேருரையில் (1989) விரிவாய் விளக்கியுள்ளார் (பக். 194-98). இலக்கண விதிகளைப்பொறுத்தவரை தலைமைப் பதிப்பாசிரியர் முடிவின்படியே நூல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மலேசிய நாட்டு மரபையொட்டிய சில சொற்கள், தொடர்கள் அங்ஙனமே இடம்பெற அவர் மறுக்கவில்லை. இதனை ஓர் உயரிய பதிப்பாய் வெளியிடப் பெருமுயற்சி மேற்கொள்ளப்பட்டது. குறை ஏதும் நேர்ந்திருப்பின் பொறுத்தருள வேண்டுகிறார் தலைமைத் தொகுப்பாசிரியர்.

### நெறிப்படுத்திய நேரியர்

ஆராய்ச்சி வல்லுநராய முனைவர் க.ப. அறவாணன், முனைவர் ச.சிங்காரவேலு ஆகியோர் த.தொ. ஆசிரியரை நெறிப்படுத்திக் களஞ்சியம் நிறைவாய படையலாய் உருவாகப் பேருதவி புரிந்தனர்.

### தகவுரை தந்த தகைமையர்

தகவுரைஞர் ஒவ்வொருவரும் தலைமைத் தொகுப்பாசிரியருக்குத் தந்த ஊக்கம் மிகுதி. களஞ்சிய வளர்ச்சிப்படி ஒவ்வொன்றையும் கருத்துடன் பார்வையிட்டு வந்ததொடு எல்லாவற்றையும் எழுத்தெண்ணிப் படித்து ஏற்றமிகு கருத்துரைத்தார் ஆ.சோதிநாதன்; பயன்மிகு தகவுரைகள் வழங்கியும், நம்பிக்கை குன்றாமல் நடைபோட நல்லுணர்வூட்டியும், உள்ளார்ந்த வள்ளன்மையொடு உதவியும் வந்தார் டாக்டர் சி.கந்தையா; அடிக்கடி ஆர்வப் புனல் பாய்ச்சியும் வரலாற்றுக் குறிப்புகள் திரட்டியும் தந்தார் டாக்டர் சி. சொக்கலிங்கம்; முனைவர் தமிழண்ணல், முனைவர் சிலம்பொலி செல்லப்பன், முனைவர் ச. சாம்பசிவன் ஆகிய அறிஞர் பெருமக்கள் வழங்கிய கருத்துச் செல்வங்கள் பல; மிகப் பல. ஐயத்திற்குரிய பழைய வரலாற்றுச் செய்திகளுக்குத் தக்க விளக்கம் கூறித் தெளிவுபடுத்தினார் பெரியவர் மீ. முருகு. சீனிவாசன். இப் பெருமக்களுக் கெல்லாம் தம் உள்ளார்ந்த நன்றியைப் புலப்படுத்துகிறார் தலைமைத் தொகுப்பாசிரியர்.

### வாழ்த்துரைத்த மாண்பினர்

களஞ்சியத்தைத் தொகுக்க ஆர்வமூட்டி, வாழ்த்துரை தந்து ஊக்கியதொடு இடையிடையே அதன் வளர்ச்சிகுறித்து ஆர்வத்துடன் உசாவி வந்தவரும், விரைவில் அச்சேற்றுங்கள் வெளியிட்டுத் தருவேன் என ஊக்கம் தந்தவருமாய அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலுவுக்கு மனமார்ந்த நன்றி.

டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி முதல்வராய் அரசுகட்டிலில் வீற்றிருந்தபோது (1990-91) சிலம்பொலியார் வாயிலாய்க் கவிதைக் கோப்பு அவரிடம் சென்றது. அந் நேரத்தில் நடுவணரசால் அவர் கையிலிருந்த செங்கோல் பறிக்கப்பட்டது. அந் நிலையில் தலைமைத் தொகுப்பாசிரியர் அவரைச் சந்தித்துப் புதிய கோப்பினைத் தந்து வாழ்த்துரை அருளுமாறு வேண்டினார். ஆட்சியை இழந்தாலும் ஆற்றலை இழக்காத கலைஞர், களஞ்சியம் முழுவதையும் சுவைத்து ஓர் இனிய வாழ்த்துரை வழங்கி அணிசேர்த்தார். அன்னார் மீண்டும் (13.5.1996) தமிழகத்தின் முதல்வராயபின் (நான்காம்முறை) களஞ்சியம் வெளிவருகிறது; தொகுப்புக் குழுவினர் எண்ணமும் நிறைவேறியது. முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களுக்கு மலேசியக் கவிஞர் சார்பில் நன்றி.

பேராசிரியர் க. அன்பழகன் தமிழகக் கல்வியமைச்சராய் இருந்த காலத்திலேயே பலநாள் செலவிட்டுக் களஞ்சியத்தை ஊன்றிப் படித்து அரியதோர் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளார். அன்னார் பதவியிலில்லாத காலம் ஓடி, மீண்டும் பதவிபெற்றபின் களஞ்சியம் அரங்கேறுகிறது. அதனால் களஞ்சியம் புதிய பொலிவைப் பெறுகிறது.

உலகின் பல பாகங்களுக்கும் செல்லவிருக்கும் களஞ்சியத்திற்கு ஆங்கில முகவுரை ஒன்றனை வழங்கிய தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக முனைவர் சோ. நா. கந்தசாமிக்கு நன்றி.

தமிழக ஆய்வாளர் ஒருவரின் ஆய்வுரையொன்றும் களஞ்சியத்தில் இடம்பெற வேண்டுமென்று தொகுப்புக் குழு நினைத்தது. முனைவர் சிலம்பொலியார் அவ் வுரையை எழுதவேண்டுமென்று முடிவானது. அவரும் ஒப்புக்கொண்டார்; கவிதைக் கோப்பைப் பெற்று நெடுநாள் படித்துச் சுவைத்தார்; ஆய்வுரை எழுதியும் தந்தார். அவருக்கு நன்றி.

### பொருள்பொதிந்த ஊக்கம்

களஞ்சிய அமைப்புக் குறித்து மலேசிய இந்தியர் மூத்த தலைவர் டான்ஸ்ரீ எஸ். ஓ. கே. உபைதுல்லாவிடம் தொகுப்புக் குழுவினர் விளக்கியபோது, அவர் பெரிதும் மகிழ்ந்தார். "இப்படியொரு பெருமுயற்சியில் இதுவரை யாரும் இறங்கியதில்லை; என் மனம் பூரிக்கிறது. இதற்குரிய செலவின மதிப்பீடு (Estimate) எவ்வளவு? சொல்லுங்கள்; நான் உபைதி நிதியிலிருந்து பணம் தருவேன்" என்றார். "நூலை எப்படியும் அச்சேற்றிவிடுவோம். வெளியீடு செய்யும்போது உதவுங்கள்" என்றார் தலைமைத் தொகுப்பாசிரியர். "நீங்கள் செலவினத் திட்டத்தைக் காட்டி முன்கூட்டியே பணம் பெறலாம்" என்றார் டான்ஸ்ரீ. அவர் தமிழுள்ளத்துக்கும் கொடையுள்ளத்துக்கும் நன்றி.

மலேசிய இந்தியர்தம் பொருளாதாரக் கோட்டையென விளங்கும் தே. நி. நி. கூ. சங்கத் தலைமை இயக்குநர் டான்ஸ்ரீ கே. ஆர். சோமசுந்தரம் களஞ்சிய அமைப்பைக் கண்டு வியந்தார்; உழைப்பை மதித்துப் பாராட்டினார்; உரிய வகையில் உதவி புரிவதாய் வாக்களித்தார். அவருக்கும் நன்றி.

தமிழக, சிங்கைப் பெருமக்கள் சிலரும் இங்ஙனம் உறுதி வழங்கினர். அவர்களுள் தொழிலதிபர் அருளரசர் பெ. மருதைப்பிள்ளை, கேப்டன் ம.கோவிந்தராசு முதலாயோர் குறிப்பிடத்தக்கவராவர். அப் பெருமக்களுக்கும் நன்றி.

ஓவியங்களால் களஞ்சியத்திற்கு அணிசேர்த்த ஓவியப் பாவலர் அமுதோன் (அட்டை), ஓவியர் முத்து (பந்தப் பாடல்கள்) ஆகியோருக்கும் நன்றி.

### நூலாக்கிய நுண்மையர்

ஒளியச்சில் சிறந்த களஞ்சியம், நூலச்சேறிப் பொலிவுறத் துணைபுரிந்த உள்ளங்களை மறக்க முடியுமா? களஞ்சியமென்னும் படிமத்திற்குக் கண்திறந்தவர் அவரல்லரோ? நூலின் அருமையை நன்குணர்ந்து தமது

'மல்டிவிஸ்டா குளோபல் லிமிடெட்' அச்சகத்தில் கலைநுட்பத்தோடு செவ்வனே அச்சிட்டுத் தந்தார் இரா. ஜெயராமன். பொருளைப் பெரிதுபடுத்தாமல் கலைக்கு முதன்மையளித்த அப் பெருமகனுக்கு நன்றி. இவ்வகையில் துணைபுரிந்த என். சிவராமன், திருப்பூர் மு. நடராசன், ப. செந்தில் குமார், இரா. கருணாநிதி, ஆர்.இராமசாமி ரெட்டியார், இரா. தமிழ்மறவன் முதலாயோர்க்கும் நன்றி.

## துணைபுரிந்த தூயவர்

களஞ்சியத்திற்கு அகம், புறம் இருநிலைகளிலும் ஒத்துழைப்பு நல்கிய பெருமக்கள் பலர். சிலர் வரலாற்றுக் குறிப்புகள் தந்து உதவினர்; சிலர் ஊக்கம் நல்கித் தூண்டினர். சிலர் தொகுப்புக் குழுவுடன் இணைந்து ஒத்துழைத்தனர். அப் பெருமக்கள் நன்றியொடு நினைவுகூரப்பட்டுள்ளனர். பயன் கருதி, களஞ்சியம் உயிர்பெற உதவிய சான்றோர் குறிப்புகள் சேர்க்கப்பெற்றுள்ளன. நாள், கிழமை, திங்கள் இதழார், வானொலி (ஒலியலை ஆறு), தொலைக்காட்சி (நாதசுரா) நிலையத்தினர் தந்த ஒத்துழைப்பு மிகுதி. அத் துறையினருக்கும் நன்றி; துணைபுரிந்த சமுதாய, இலக்கிய, அரசியல் இயக்கத்தினர்க்கும் நன்றி.

## அஞ்சலி

களஞ்சிய உருவாக்கத்தில் பங்குகொண்ட பெருமக்களுள் சிலர் அது மலர்ந்து மணம்பரப்புவதைக் கண்டு மகிழுமுன் புகழுடம்பெய்தினர். அந்த நல்ல உள்ளத்தினருக்குத் தொகுப்புக் குழுவின் சார்பில் அஞ்சலி செலுத்துகிறார் தலைமைத் தொகுப்பாசிரியர்.

## மறக்க முடியுமா?

உயர்ந்தோங்கித் தழைத்த மரத்தின் ஆணிவேர் சல்லிவேர்கள் கண்ணுக்குப் புலனாவதில்லை; அவை மறைந்திருக்கலாம், ஆனால் அவற்றை மறந்துவிட முடியுமா? தொகுப்புப் பணி நடந்த பத்தாண்டு காலமாய் எல்லாப் பணிகளுக்கும் இன்முகத்துடன் தக்க ஒத்துழைப்புத் தந்த குடும்ப உறுப்பினர் அனைவர்க்கும் நன்றி கூறாதிருக்க முடியுமா? உடலிற்கும் உணர்ச்சிகளுக்கும் உரமூட்டியவர் இவரல்லரோ? இவர்கள் இன்றேல் களஞ்சியம் எவ்வாறு களஞ்சியமாய் இருக்கமுடியும்?

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு)
என்னாற்றும் கொல்லோ உலகு" (குறள், 211)

நன்றி உணர்வுடன்,

திபி. 2028 சுறவம் (தை). 5 (18.1.1997)
5-BA, Solok Pulai, off Jalan Teluk Pulai,
41100 Klang, Selangor, Malaysia.
தொ. பே. 03-3320003. தொ.ந 03-3320201

(முரசு. நெடுமாறன்)

# நன்றிக்குரிய நன்மக்கள்

அசோகன், ஆ. சு.
அரவிந்தன், கோ.
அருணாசலம், பூ.
அன்பழகன், சா.
ஆண்டியப்பன், நா.
ஆரோக்கியசாமி. அ.
ஆறுமுகம், நு. ரா.
இரவிச்சந்திரன், இரா.
இராச குமாரன்
இராசு, ரெ. கோ.
இராமசாமி, கே. ஆர்.
இராமசாமி, ப.
இராமச்சந்திரன்,இ.
இராமையா,சித்த மருத்துவர், அழ.
இராமையா, முனைவர், அழ.
இளங்கோவன், மு.
இளஞ்செழியன், க. இரா.
உமா சம்பந்தன், தோடிவான்
எல்லோன்
கங்காதரன், அ.
கணபதி, சி.
கண்ணன், ஏ. எம்.
கதிரேசன், குழ.
கலியபெருமாள், கா.
கார்த்திகேசு, முனைவர், ரெ.
கிருஷ்ணன், இரா.
கிருஷ்ணன், டத்தோ, பி.
குப்புசாமி, க.
குழந்தைசாமி, முனைவர், வா. செ.
கேசவன், ஆர்.
கோதண்டராமன், முனைவர், இரா.
கோவிந்தன், மா
சகாதேவன், ஏ.
சண்முகம், ப. கு.
சதாசிவம், டி.பி.
சரோஜினிதேவி கந்தையா, டாக்டர்
சாமி, பி. கே.
சாமிமூர்த்தி
சுப்பிரமணியம், இரா.
சுப்பிரமணியம், சீ.
செம்பை சேவியர்
செல்லத்துரை, ந.
செல்லகணபதி
சேதுகுமணன்
சேதுராமன், முனைவர், வா. மு.
சோமசுந்தரம், முனைவர், அ.
தமிழ்க்குடிமகன், முனைவர், மு.
திண்ணப்பன், முனைவர், சுப.
திருநாவுக்கரசு, வை.
திருவாசகம், என்.
திலகவதி, க., முனைவர்
துரைராஜ், எம்.
நாகப்பன், ஆறு.
நாராயணசாமி, சுப.
பரசுராமன், ந. ர.
பழநியப்பன்,எ.
பார்த்திபன்
பிள்ளை, டி, எஸ்.
பெருமாள், இரா. வடி
பெருமாள், ஜி
பொற்கோ, முனைவர்
பொன்முகம், ச.
பொன்னடியான்
பொன்னுசாமி, ஆர்.
பூவண்ணன்
மணி வெள்ளையன், மு.
மாயதேவன், மா. செ.
மாரிமுத்து, சு.
மாரிமுத்து, எஸ்.
மில்டன், ஜோ.
முத்தையா, சு. அ.
முத்தையா, ரெ. சு.
முஸ்தபா, மணவை
ரிச்சர்ட்டு சாமி, பி.
வீரப்பன், இர. ந.
வீரமணி, முனைவர், அ.
விவேகானந்தன், வே.
ஜெயபாரதி, டாக்டர்

# குறுக்க விளக்கம்

களஞ்சியத்திற்குப் பாட்டுக்கொடை கொடுத்த இதழ்கள், நூல்கள், சிறப்பு மலர்கள், நாடகங்கள், வானொலி முதலாயவற்றின் பெயர்கள் ஒவ்வொரு பாட்டின் அடியிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. பெயர் குறிப்பிடப்படாத பாட்டுகள் நேரடியாய்ப் பாவலரிடமிருந்து பெறப்பட்டவையும், வெளிவந்த ஏடு, காலம் முதலாய விவரங்கள் தெரியாதவையுமாகும். பாட்டுக்கொடை கொடுத்த மூலப்படிவப் பெயரின் குறுக்கங்கள் தரப்பட்டுள்ளன. பெயர்க்குறுக்கத்திற்கென்று ஒரு நெறியை மேற்கொண் டிருக்கின்றோம். அஃதாவது:

1. இதழ்களின் பெயர்கள்
   பெயரின் முதல் எழுத்தும் வருமொழியும் குறிக்கப்பட்டுள்ளன.
   எடுத்துக்காட்டு : 'தமிழ்முரசு' த. முரசு எனக் குறுக்கம் பெறும்.

2. நூல்களின் பெயர்கள்
   முதல்மொழி மட்டும் அல்லது நெடிய பெயரின் சில எழுத்துகள் மட்டும் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு: 'கவிப்பூஞ்சோலை' கவிப்பூ. எனவும் 'குமரன்மலை கவிப்பூக்கள்' குமர. எனவும் குறுக்கம் பெறும்.

3. சிறப்புமலர்களின் பெயர்கள்
   முதல் எழுத்துகள் மட்டும் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு: 'மலேசியத் தமிழர் மாநாட்டு மலர்' ம. த. மா. ம. எனக் குறுக்கம் பெறும்.

4. நாடகங்களின் பெயர்கள்
   முதல் எழுத்தும் கடை எழுத்தும் மட்டும் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு: 'அப்பளத்தின் காதல்' அ-ல் எனக் குறுக்கம் பெறும்.

5. வானொலி முதலாய நிறுவனப் பெயர்கள்
   ஒவ்வொரு சொல்லின் ஈரெழுத்துகள் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு: 'மலேசிய வானொலி' மலே. வானொ. எனக் குறுக்கம் பெறும்.

6. ஐந்தெழுத்துகளுக்கு உட்பட்ட பெயர்கள்
   ஐந்தெழுத்துகளுக்கு உட்பட்ட பெயர்கள் குறுக்கம்பெறா. எனினும், சில பெயர்கள் முழுமையாய்க் குறிக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டு : முன்னேற்றம், ஜனோபகாரி.

| | | |
|---|---|---|
| அ. உ. தி. ம. | ... | அப்பர் தமிழ் உயர்நிலைப் பள்ளித் திறப்புவிழா மலர் |
| அணி. | ... | அணிகலன்கள் |

| | | |
|---|---|---|
| அ.நூ.த.எ. | ... | அனைத்துலக நூல் தர எண் |
| அ. ம. த. சி. ம. | ... | அகில மலாயாத் தமிழர் சங்கச் சிறப்பு மலர் |
| அரங்க. | ... | அரங்கேறிய கவிதைகள் |
| அருளொளி. | ... | அருளொளி முருகன் வணக்கப் பாமாலை |
| அருள். | ... | அருள்புரிவாய் |
| அறிவு. | ... | அறிவுப்பாட்டு |
| அ-ல் | ... | அப்பளத்தின் காதல் |
| அன்புக். | ... | அன்புக்கனி |
| ஆ. தீ. | ... | ஆசிரியதீபம் |
| இசைக். | ... | இசைக்கொத்து |
| இசைமு. | ... | இசைமுலம் இன்ப ம. இ. கா. |
| இதய. | ... | இதய ஓசை |
| இதயகீ. | ... | இதய கீதம் |
| இளங்கோ. | ... | இளங்கோ கவிதைகள் |
| இளந். | ... | இளந்தமிழன் |
| உ. த. ஆ. மா. ம.-5 | ... | (5ஆம்) உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு (மலேசிய) மலர் |
| உ. த. ப.மா.ம. | ... | உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாட்டு மலர் |
| உ. த. ப. வெ. வி. ம. | ... | உமறுபுலவர் தமிழ்ப்பள்ளி வெள்ளிவிழா மலர் |
| உ. த. மா. ம. | ... | உலகத் தமிழ் மாநாட்டு மலர் |
| உதிரி. | ... | உதிரிப் பூக்கள் |
| உணர்வு. | ... | உணர்வுப் பூக்கள் |
| உலகத். | ... | (5ஆம்) உலகத் தமிழ் மாநாட்டுக் கட்டுரைத் தொகுப்பு |
| எ-கி | ... | எழுச்சியை நோக்கி |
| ஒ-ள் | ... | ஒரு காட்டிலே சில பூச்சிகள் |
| கடற்சோ. | ... | கடற்சோழன் கவிதைகள் |
| கத்தி. | ... | கத்திக் கப்பல் |
| கலாவள். | ... | கலாவள்ளி காவியம் |
| கவிக்குல. | ... | கவிக்குலம் போற்றும் தமிழவேள் |
| கவிதை. | ... | கவிதை மலர்கள் |
| கவிதைத். | ... | கவிதைத் திரட்டு |
| கவிம. | ... | கவிமஞ்சரம் |
| கவிப்பூ. | ... | கவிப்பூஞ்சோலை |
| கிள்.வெள். | ... | கிள்ளான் வெள்ளிவிழாத் தமிழர் திருநாள் |
| குமர. | ... | குமரன்மலைக் கவிப்பூக்கள் |
| கூட்டுற. | ... | கூட்டுறவுக் கவிதைகள் |
| கொ. முரசு | ... | கொள்கை முரசு |
| சந்தன. | ... | சந்தனக் கிண்ணம் |
| ச. மணி | ... | சங்க மணி |

| | | |
|---|---|---|
| ச. மே. ம. | ... | சங்கமணி மேதின மலர் |
| ச. வெ. ம. | ... | சங்கமணி வெள்ளிவிழா மலர் |
| சி. இ. ச. த. ம. | ... | சிங்கப்பூர் இந்து சபை தமிழ்ப் புத்தாண்டு மலர் |
| சிங்கப். | ... | சிங்கப்பூர்த் தெய்வங்களின் பக்திப் பாடல்கள் |
| சிங்கை. | ... | சிங்கை நகர் அந்தாதி |
| சிங். வானொ. | ... | சிங்கப்பூர் வானொலி |
| சி.த.எ.க. | ... | சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் |
| சித்திர. | ... | சித்திரகவிகள் |
| சி. வீ. கு. ம. | ... | 'செந்தமிழ்ச் செல்வர்'சி. வீ. குப்புசாமி சிறப்பு மலர் |
| சிறுவர். | ... | சிறுவர் இன்பம் |
| சு. இந்தியா | ... | சுதந்திர இந்தியா |
| சு. இ. ம. வி. ம. | ... | சுவாமி இராமதாசர் மணிவிழா மலர் |
| சு-மை | ... | சுகுணசுந்தரி அல்லது சாதிக் கொடுமை |
| சு-ம் | ... | சுதந்திரோதயம் |
| செ. செல்வி | ... | செந்தமிழ்ச் செல்வி |
| செழுஞ். | ... | செழுஞ்சுவைப் பாவாயிரம் |
| த. ஒளி | ... | தமிழ் ஒளி |
| த. ஓசை | ... | தமிழ் ஓசை |
| த. குயில் | ... | தமிழ்க்குயில் |
| த.கு.ம. | ... | தமிழ்க்குயில் மலர் |
| த. கொடி | ... | தமிழ்க்கொடி |
| த. நேசன் | ... | தமிழ்நேசன் |
| த. நே. மெ. ம. | ... | தமிழ்நேசன் மெர்டேக்கா மலர் |
| த. போதினி | ... | தத்துவ போதினி |
| த. மலர் | ... | தமிழ்மலர் |
| தமிழியக். | ... | தமிழியக்கப் பாடல்கள் |
| த. முரசு | ... | தமிழ்முரசு |
| தி. ம. நூ. ம. | ... | திருவள்ளுவர் மன்ற நூலகத் திறப்புவிழா மலர் |
| திருப்பு. | ... | திருப்புமுனை |
| திருமுருக. | ... | திருமுருகன் காவடிச் சிந்து |
| தீப்பொ. | ... | தீப்பொறியின் உள்ளூர்ப் பாடல்கள் |
| தெய்வ. | ... | தெய்வத் தமிழ் இசைவிருந்து |
| தே. தூதன் | ... | தேசதூதன் |
| தேனீ. | ... | தேனீயைப் பார் |
| தேன். | ... | தேன்சிட்டு |
| தொடக்க. | ... | தொடக்கத் தமிழ்ப்பள்ளிப் பாடல்கள் |
| தோரண. | ... | தோரண வாயில் |
| நயன. | ... | நயனங்கள் |
| ந-லை | ... | நவக்கிரக மாலை |
| நாட்டைக். | ... | நாட்டைக் காப்போம் |

| | | |
|---|---|---|
| நன்னெறி. | ... | நன்னெறிப் பாட்டு |
| நா-ம் | ... | நாளை நாளை வரும் |
| நாயக. | ... | நாயக வெண்பா |
| நே-ம் | ... | நேர்மை உள்ளம் |
| ப. | ... | பக்கம் |
| பக். | ... | பக்கங்கள் |
| ப-ன் | ... | பழிகாரன் |
| பா. குரல் | ... | பாரதியின் குரல் |
| பாடு. | ... | பாடு பாப்பா |
| பாட்டுப். | ... | பாட்டுப் பாடலாம் |
| பாதாச. | ... | பாதாசனின் கவிதைகள் |
| பாத்தே. | ... | பாத்தேறல் |
| பா. முரசு | ... | பாட்டாளியின் முரசு |
| பு. சமுதாயம் | ... | புதிய சமுதாயம் |
| பூங்கா. | ... | பூங்காராயா |
| ம.உ.த.ஆ.நி. | ... | மலேசிய உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் |
| ம. கா. நூ. ம. | ... | மகாத்மா காந்தி நூற்றாண்டு மலர் |
| ம.த.எ.ச. | ... | மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் |
| ம. த. எ. பே. ம | ... | மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கப் பேரவை மலர் |
| ம. த. மா. ம. | ... | மலேசியத் தமிழ் மாநாட்டு மலர் 68, 78 |
| ம. தே. கு. ம. | ... | மகாமாரியம்மன் கோயில் தேவஸ்தான குடமுழுக்கு விழா மலர் |
| மணிமு. | ... | மணிமுழக்கம் |
| ம. நண்பன் | ... | மலேசிய நண்பன் |
| ம. நாடு | ... | மலைநாடு |
| ம. பாதை | ... | மக்கள் பாதை மலர்கிறது |
| ம. மகள் | ... | மலைமகள் |
| மலாயா. | ... | மலாயாவில் தமிழ்க் கவிதைகள் |
| மலே. இந். காங். | ... | மலேசிய இந்தியர் காங்கிரஸ், சிலாங்கூர் |
| கலா. விழா | ... | கலாசார விழா |
| மலே. கல். | ... | மலேசியக் கல்வி ஒலிபரப்பு |
| மலேசியா. | ... | மலேசியாக் கழகப் பாடல்கள் |
| மலே. வானொ. | ... | மலேசிய வானொலி |
| மாணிக்க. | ... | மாணிக்கக் கற்கள் |
| மா. ப. வி. ம. | ... | மாணவர் பண்பாட்டு விழா மலர் |
| மு. த. க. வ. மா. ம. | ... | முதலாவது தமிழ்க் கல்வி வளர்ச்சி மாநாட்டு மலர் |
| முதல். | ... | முதல் மலர் |
| முத்து. | ... | முத்துக்கோவை |
| முத்துச். | ... | முத்துச்சரம் |
| மு. ம. த. க. மா. ம. | ... | முதலாவது மலேசியத் தமிழ்க் கலைஞர் மாநாட்டு மலர் |

| | | |
|---|---|---|
| மு. முரசு | ... | முஸ்லிம் முரசு |
| மைதீ. கவி. | ... | மைதீ. சுல்தான் கவிதைகள் |
| வ-டி | ... | வழிகாட்டி |
| வண்ண. | ... | வண்ணங்கள் |
| வண்ணைநகர். | ... | வண்ணைநகர் ஊஞ்சல் |
| வழிநடை. | ... | வழிநடைச் சிந்து |
| வள்ளல். | ... | வள்ளல் நாயகம் |
| வாடாம. | ... | வாடாமலர் நாடகப் பாடல்கள் |
| வா-ர் | ... | வாடாமலர் |
| விநாயக. | ... | விநாயகர் புகழ்மாலை |
| ஜமீலா. | ... | ஜமீலாவின் கவிதைகள் |
| ஜெ. பேரிகை | ... | ஜெயபேரிகை |
| ஸ்ரீமுனி. | ... | ஸ்ரீமுனீஸ்வரர் பாமாலை |

## இயக்கங்கள்

| | | |
|---|---|---|
| அம்னோ. | ... | ஐக்கிய மலாய் தேசிய சங்கம் |
| சி.த.எ.க. | ... | சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் |
| த.இ.ம.பே. | ... | தமிழ் இளைஞர் மணிமன்றங்களின் பேரவை |
| தே.தோ.தொ.ச. | ... | தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் |
| தே.நி.நி.கூ.ச. | ... | தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம் |
| ம.இ.கா. | ... | மலேசிய இந்தியர் காங்கிரசு |
| ம.சீ.ச. | ... | மலேசியச் சீனர் சங்கம் |
| ம.செ.க. | ... | மக்கள் செயல் கட்சி (சிங்கை) |
| ம.த.எ.ச. | ... | மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் |
| ம.தி.க. | ... | மலேசியத் திராவிடர் கழகம் |
| ஜ.செ.க. | ... | ஜனநாயகச் செயல் கட்சி |

| | | |
|---|---|---|
| A.M.N. | ... | Ahli Mangku Negara |
| F.R.C.S. | ... | Fellow of the Royal College of Surgeons |
| H.S.C. | ... | Higher School Certificate |
| I.N.A. | ... | Indian National Army |
| I.S.B.N | ... | International Standard Book Number |
| J.P. | ... | Jasa Pendamai ( Justice Of Peace ) |
| J.S.M. | ... | Johan Setia Mahkota |
| K.B.S.M. | ... | Kurikulum Bersepadu Sekolah Menengah |
| K.B.S.R. | ... | Kurikulam Baru Sekolah Rendah |
| K.M.N. | ... | Kesatria Mangku Negara |
| K.P.J. | ... | Koperasi Pekerja Jaya |

| | | |
|---|---|---|
| L.C.E. | ... | Lower Certificate of Education |
| M.C.A. | ... | Malaysian Chinese Association |
| M.C.P. | ... | Malayan Communist Party |
| M.I.C. | ... | Malaysian Indian Congress |
| M.I.E.D. | ... | Maju Institute of Educational Development |
| N.L.F.C.S.Ltd | ... | National Land Finance Cooperative Society Limited |
| N.U.P.W. | ... | National Union of Plantation Workers |
| N.U.T.P. | ... | National Union Of Teaching Profession |
| P.J.K. | ... | Pingkat Jasa Kebaktian |
| P.M.R. | ... | Penilaian Menengah Rendah |
| P.P.N. | ... | Pingkat Perkasa Negara |
| SINDA | ... | Singapore Indian Development Association |
| S.P.M. | ... | Sijil Pelajaran Malaysia |
| S.R.P. | ... | Sijil Rendah Pelajaran |
| S.T.P.M. | ... | Sijil Tinggi Pelajaran Malaysia |
| TAFE | ... | Technical And Further Education |
| U.M.N.O. | ... | United Malays National Organization |
| U.P.S.R. | ... | Ujian Pencapaian Sekolah Rendah |
| U.T.M. | ... | Universiti Teknologi Malaysia |

# வரலாற்று வாயில்

[தொல்தமிழர், தமிழ்மொழி, மலேசியத் தமிழ்ச் சமுதாய, அரசியல், கல்வி, பொருளாதார, கலை, பண்பாட்டு, சமய, இலக்கிய வரலாறடங்கியது]

**முன்னோர் வரலாறு**

## க தொல்பழங் காலம்

### வாயிலைத் திறக்குமுன்

தாயகத் தமிழகத்திலிருந்து மலேசிய சிங்கப்பூர் நாடுகளில் குடியேறிய தமிழர் பாடிய பாடல்கள் பல; அவற்றுள் 650 பாடல்களைமட்டும் தொகுத்து, "மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்" என்னும் பெயரில் இந் நூல் வெளிவருகிறது.

இந் நூலில் வந்துள்ள தேன்சுவைக் கவிதைகளைச் சுவைக்கத் தொடங்குமுன் அவை உருவாகக் காரணமாய் இருந்த தமிழினம், அதன் தோற்றம், வளர்ச்சி, நாகரிகம், பண்பாடு, ஆட்சி, பிற நாடுகளில் குடியேற்றம் போன்ற வரலாற்று நிகழ்ச்சிகளை ஓரளவிற்கேனும் தெரிந்துகொள்ளுதல் நலம் பயக்கும். அவ் வடிப்படையில் தமிழர், தங்களை யாரென்று அறிந்துகொள்ளும் வண்ணம் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தில் விரிவாய் வரலாற்று முன்னுரை ஒன்று எழுதிச் சேர்க்க வேண்டும் என்று தொகுப்புக் குழுவினர் கருதினர்; அதற்காய திட்டக் குறிப்புகளும் வரைந்தனர்; பதிப்புக் குழுவினரும் அவற்றை வரவேற்றனர்; தகவுரைஞரும் பாராட்டினர் ; ஊக்கினர். குறிப்பாய் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் "மலேசியத் தமிழர்பற்றிய முழுமையான வரலாறாகவே அஃது அமைய வேண்டும், அங்ஙனம் ஒவ்வோர் அயலகத் தமிழர் வரலாறும் கிடைத்தால் முழுமையான உலகத் தமிழர் வரலாற்றைத் தொகுக்க ஏதுவாயிருக்கும்" என்றார்.

இதுகுறித்துப் பேராசிரியர் முனைவர் க. ப. அறவாணன், "தமிழ் இனத்தின் தொடக்க வரலாற்றை மிக மிகச் சுருக்கமாய் எடுத்துக் கூறிப் பின்னர் மலேசியாவிற்கும் தமிழகத்திற்கும் இருந்துவந்த தொடர்புகளை விளக்கி, அடுத்து மலேசியத் தமிழர் வரலாற்றை-குறிப்பாய்க் கவிதைத் துறை வரலாற்றை விரிவாய்ச் சொல்லுதல் சிறப்பு" என்றார்.

ஒவ்வொருவர் கருத்தும் பயனுடைய கருத்தே. இக் களஞ்சியம் மலேசியத் தமிழர் வாழ்வினைப் படம்பிடித்துக் காட்டும் வரலாற்று ஏடாயும், நெடுங்காலம் நிலைத்து நிற்கக் கூடிய கருவூலமாயும் விளங்குமாதலின், எதிர்காலத்

தலைமுறையினர்க்குத் 'தாங்கள் யார்?' என்று உணர - தங்கள் அடையாளத்தைப் புரிந்துகொள்ள, இவ் வரலாறு பயன்படும் என்னும் நோக்கில் இது சற்று விரிவாய் எழுதப்படுகிறது; உள்ளுறைக்கேற்ப 'வரலாற்று வாயில்' எனத் தலைப்பும் அளிக்கப் பெற்றது.

'எதிர்காலத்தில் இது மலாய் மொழியிலோ, ஆங்கிலம் முதலாய பிற மொழிகளிலோ மொழிபெயர்க்கப்படுமானால் தமிழினம்பற்றிய ஒரு சுருக்க வரலாறு உலகிற்குக் கிடைக்கும்' என்பது இன்னொரு பயன். இனி, வாயிலைத் திறக்கலாம்; வரலாறு தரும் பயன்களை நுகரலாம்; தொடர்ந்து கவிதைகளைச் சுவைத்து இன்புறலாம்!.

## உலகத் தோற்றம்

ஒன்பது கோள்கள் இந்த ஞாலத்தைச் சுற்றிவருகின்றன; 500 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் ஞாயிற்றிலிருந்து சிதறிய அனற்பிழம்பே பின்னர் உயிர்கள் வாழும் பகுதியாயிற்று. சுழற்சி வேகத்தாலும், பல்லாயிர ஆண்டுகள் கடந்தமையாலும் ஞாலம், குளிர்ந்து உருண்டையாயிற்று; மேற்பகுதி பாறையாயிற்று; இப் பாறைகளே உலகத் தொன்மையை விளக்குகின்றன.

## உயிர்த் தோற்றம்

குளிரக்குளிர நிலம் உயிரினம் தோன்றுதற்கு ஏற்பப் பக்குவமடைந்தது; 80 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் உயிரினம் தோன்றிற்று.

## மக்கள் தோற்றம்

ஓரறிவுமுதல் ஐயறிவு ஈறாய உயிரினங்கள் பல உலகில் தோன்றின. ஒரு கோடி ஆண்டுகளுக்கு முன்பே குரங்குமாந்தன் (Oneopithecus) தோன்றினான் என்றும், ஐநூறாயிரம் ஆண்டுகளுக்கு முன் முதற்கற்காலம் தொடங்கிற்று என்றும், 5000 ஆண்டுகளுக்கு முன் சிந்துவெளி நாகரிகம் தோன்றிச் செழித்து வளர்ந்தது என்றும் வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர்.

## இலெமூரியா

இன்றைய ஆப்பிரிக்கா, இந்தியா, தென்கிழக்காசியா, ஆத்திரேலியா ஆகியவற்றை உள்ளடக்கிய நிலப்பகுதியே பண்டு இலெமூரியா என வழங்கப்பட்டது. இதனையே குமரிக் கண்டம் என்கின்றனர். இங்கேயே முதல் மனிதன் பிறந்தான் என்பர்.

ஸ்காட்டு, எலியட்டு, இராலே, எஃகேல், வயவர் யோவான், வான்சு முதலாய மேலைநாட்டு அறிஞரும், 'மறைந்த இலெமூரியாவே (The Lost of Lemuria) மக்கள் பிறப்பகம்' என்று வலியுறுத்தியுள்ளனர். இங்குத் தோன்றி வளர்ந்த

மனிதனே நாகரிகம் பெற்ற முதல் மனிதன்' என்பதனைக் கோந்தரகோவ் என்னும் சோவியத்து அறிஞர் தம் 'முக்கடல் புதிர்' (The Riddles of Three Oceans) என்னும் நூலில் குறித்திருப்பதனை அறிஞர் எடுத்துக் காட்டுகின்றனர்.[1]

## அன்றைய தமிழக எல்லை

வரலாற்றுக் காலத்திற்கு முந்தைய தமிழக எல்லை, மிக விரிந்த பரப்புடையதாய் விளங்கிற்று. தமிழகத் தென் எல்லையாய குமரி, ஒரு காலத்தில் 49 நாடுகள் உள்ளடக்கிய ஒரு கண்டமாய் விளங்கிற்று என இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. அங்கிருந்த மலைகளுள் 'குமரிமலை' ஒன்றென்றும், ஆறுகளுள் 'குமரி, பஃறுளி' என்பன தலைமை சான்றன என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது.[2] இப் பெரிய நிலப்பரப்பு 700 காவதம் (ஒரு காவதம்-பத்துக்கல்) அகன்று இருந்தது; அடுத்தடுத்து நிகழ்ந்த மூன்று கடல்கோள்களால் அந் நிலப்பரப்பு அழிந்தது என வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர்.[3]

## தொல்காப்பியர் காலத் தமிழகம்

"வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து"

எனும் பனம்பாரனார் பாடிய தொல்காப்பியப் பாயிர வரிகள் தொல்காப்பியர் காலத்துத் தமிழக எல்லையைச் சுட்டுகின்றன.

## சங்ககாலத் தமிழகம்

'இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், இமயம்வரை படையெடுத்து வென்றான்' என்பதனை அவன் பெயரே சுட்டுகிறது. அவன் மகன் செங்குட்டுவன் தமிழர் வீரத்தினை இகழ்ந்துரைத்த கனகவிசயர் எனும் வடபுல மன்னரை வென்று, அவர் தலையிற் கல் சுமத்திக் கொணர்ந்து பத்தினித் தெய்வம் கண்ணகிக்குக் கோயில் கட்டிச் சிறப்பித்தான். ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் வடக்கே படை நடத்திச் சென்று ஆரியரை வென்றான். கரிகாற்சோழன் இமயத்தில் தன் புலிக்கொடியைப் பொறித்தான்.

---

1 மதிவாணன், இரா., இலெமூரியாமுதல் அரப்பாவரை, ப. 77
*"The most surprising part of it is that a duty of the World's Earliest Civilization reveals whole series of riddles that can be solved only by using the hypothesis of Lemuria. A large land mass in the Indian Ocean that was inhabited most just by Lemuria and even by Rith tropi but by the human beings who had rendered a high level of civilization" - The Riddles of Three Oceans, p.13*

2 "பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள" - சிலம்பு, பதிகம் : 11

3 பரிதிமால் கலைஞர், வீ. கோ., தமிழ்மொழி வரலாறு. ப. 75

## இடைக்காலத் தமிழகம்

பிற்காலச் சோழருள் ஒருவனாய முதலாம் இராசேந்திர சோழன் (கி. பி. 11ஆம் நூற்றாண்டு) கங்கை நீரெடுத்துக் 'கங்கைகொண்டான்' எனும் சிறப்புப் பெயரைப் பெற்றான்; இந்தியா முழுவதும் தமிழ்க் கொடி பறந்தது என்பதனை இவ் வரலாற்றுக் குறிப்புகள் எடுத்துக் காட்டுகின்றன.

## இன்றைய தமிழகம்

பல்லாற்றானும் மிகப் பரந்து விரிந்திருந்த தமிழக எல்லைகள் காலப்போக்கில் குறுகின; வடவேங்கடமும் (திருப்பதி) விடுதலை இந்தியாவில் தமிழனிடமிருந்து பறிக்கப்பெற்றது. மிகப் பெரிய இனத்தினராய தமிழர் சுருங்கினர். இதற்கு வரலாற்றுப் பாதையில் நிகழ்ந்த பேரிடர்களே காரணங்களாகும். கடல்கோள்களும், கால மாறுதல்களும், தமிழ்வேந்தரிடையே ஒற்றுமையின்மையும் எல்லைகளைக் குறுக்கின.

கி.மு. 1500 ஆண்டுகளுக்கு முன்னர் வந்த ஆரியரால் மொழிக்கலப்பு நிகழ்ந்தது; அதனால் தெலுங்கு, கன்னடம், துளுவம், மலையாளம் எனத் தமிழ் பிரிந்தது. அஃது மொழிவாரி மாநிலங்கள் அமையக் காரணமுமாயிற்று. இதனாலும், தமிழக எல்லை குறுகிற்று. தமிழ்மொழி பேசுவார் சுருங்கினர். இருபது கோடிக்குமேல் இருக்க வேண்டிய தமிழர், ஆறரைக் கோடியாயினர். உலகின் எந் நாட்டிலும் இன்று சிறுபான்மையராகவே தமிழர் தள்ளாடிக் கொண்டிருக்கின்றனர்.

## வடபுலமும் தென்புலமும்

இந்திய வரலாறு, வடபுலத்திலிருந்தே தொடங்கி எழுதப்பட்டு வருகிறது. இதனால், வடபுலப் பெருமைகளே பெரிதும் பேசப்படுகின்றன; பரப்பப்படுகின்றன. பல நூற்றாண்டுகளாய், மேலைநாட்டு வரலாற்றாசிரியரும் அவற்றை அடிப்படையாய்க் கொண்டே இந்திய வரலாற்றை ஆய்ந்தனர். ஆனால், அண்மைக் கால வரலாற்று ஆய்வு தென்திசை நோக்கித் திரும்பியுள்ளது. தமிழக அரசும் தமிழ்நாட்டு வரலாற்றை எழுதுதற்கு டாக்டர் மு. வரதராசன் தலைமையில் ஒரு குழுவினை அமைத்தது. அதன் வாயிலாய்,

1. தமிழ்நாட்டு வரலாறு - தொல்பழங்காலம்
2. சங்ககாலம் (அரசியல்)
3. சங்ககாலம் (வாழ்வியல்)

ஆகிய அரிய வரலாற்று நூல்கள் உருவாயின. ஆனால் அப்பணி மேலும் தொடராது நீண்டகாலம் தேங்கிக் கிடந்தது. அது தொடருமென்றும், விரைவில் 'பல்லவ பாண்டியர் வரலாறு' வெளிவருமென்றும் தமிழக ஆட்சிமொழி - பண்பாட்டுத்துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடிமகன் அறிவித்திருப்பது மகிழ்ச்சி தருகிறது.

'இந்திய வரலாற்றுக்குத் தென்புலமே மணிமுடி' எனும் கருத்து இப்போது வலிமைபெற்று வருகிறது. "நிலநூலார் கருத்துப்படி தென்னிந்தியா பழைமையானது. இந்தியாவின் வடபகுதியும், இமயமலைத் தொடரும் கடலிலிருந்து வெளித்தோன்றுதற்கு நெடுங்காலத்துக்கு முன்பாகவே, தென்னிந்தியாவில் மக்கள் வாழ்ந்து வந்தனர்"[4] என்பது ஆராய்ச்சியாளர் முடிபு என்று கே. கே. பிள்ளை எடுத்துரைக்கின்றார்.

## தமிழர் தாயகம்

தமிழர் தாயகம்பற்றி உண்மை வரலாறு அறியாத சிலர், மாற்றுக் கருத்துக் கூறியிருந்தாலும் 'தமிழகம் தமிழர்தம் தாயகம்' என வரலாற்றுச் சான்றுகள் நிறுவுகின்றன. வரலாற்றறிஞர் பி. டி. சீநிவாசய்யங்கார், "தமிழர் தென்னிந்திய மண்ணுக்குரியவரே"[5] என்கிறார். இதுகுறித்து விரிவாய் ஆராய்ந்து நூல் எழுதியுள்ள முனைவர் க. ப. அறவாணன்,"தமிழர் வடஇந்தியாவிலிருந்தோ வடமேற்கு இந்தியாவிற்கு அப்பாலுள்ள ஆசியப் பகுதியிலிருந்தோ வந்தவரென்று ஊகிப்பதற்கு வலிவான சான்று ஏதும் இல்லை; மாறாகத் தமிழர் தென்னிந்தியாவில் தொன்றுதொட்டு வாழ்ந்து வரும் பழங்குடிகள் என்பதற்குச் சான்றுகளும், வாதங்களும் துணை நிற்கின்றன"[6] என்கிறார்.

## வடபுலம் பெயரல்

குமரிக்கண்டத்தில் தோன்றி, உயர்ந்த நாகரிகத்தையும் பண்பாட்டையும் வளர்த்துச் செம்மாந்திருந்த தமிழர், அடுத்தடுத்து நிகழ்ந்த கடல்கோள்களால் வடபுலம் நோக்கிப் பரவத் தொடங்கினர். அங்ஙனம் வடபுலம் சென்று தோற்றுவித்த நாகரிகமே மொகஞ்சதாரோ - அரப்பாப் பகுதிகளில் (இப்போது பாகிஸ்தானில் உள்ளன) பரவிய சிந்துவெளி நாகரிகமாகும்.

சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் திராவிடர் இனத்தைச் சேர்ந்தவரே என்பதனைச் சர் ஜான் மார்ஷல் முதலாய மேலைநாட்டு அறிஞர் பலர் குறிப்பிட்டுள்ளனர். இந் நாகரிகத்தைப்பற்றி மும்பை (பம்பாய்)த் தூய சவேரியர் கல்லூரி வரலாற்றுத்துறைத் தலைவராய் இருந்த திருத்தந்தை ஈராசு ஆராய்ந்து, "இந்த நாகரிகம் பழந்திராவிடர் நாகரிகம்" என்று தாம் எழுதிய "தொல்பழங்கால நண்ணில இந்துப் பண்பாட்டின் ஆய்வு" (Study of ProtoIndo Mediterraniean Culture) எனும் நூலில் குறிப்பிட்டுள்ளதனைப் "பழந்தமிழ் நாட்டில் சிந்துவெளி எழுத்தோவியம்"[7] எனும் நூலில் அதன் ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

---

4 தென்னிந்திய வரலாறு, முதற்பாகம், (1958) ப. 1

5 அ) தமிழர் வரலாறு (History of Tamils), (தமிழ் மொழிபெயர்ப்பு - 1989),பக்.11-14

ஆ) கோவிந்தன், கா., ஆரியர்க்கு முற்பட்ட தமிழ்ப் பண்பாடு - தமிழ் மொழிபெயர்ப்பு, ப. 34

6 தமிழரின் தாயகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் (1984), ப. 86

7 சர்மா, பி. எல்., பழந்தமிழ் நாட்டில் சிந்துவெளி எழுத்தோவியம்.

"நாகரிகம் முதலில் இங்குத் தோன்றிப் பின் சுமேரியாவிற்குச் சென்று பரவியது. பிறகுதான் அரேபிய, எகிப்திய, பாபிலோனிய நாகரிகங்கள் வளர்ந்தன" என்று ஈராசு பாதிரியார் உறுதிப்படுத்தியுள்ளதனையும், அப் பெருமகனார் 'தம்மை ஒரு திராவிடன்' என்று கூறிக்கொண்டதனையும் அறிஞர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர்.[8]

## பண்டைத் தமிழர் ஆட்சி

பண்டைத் தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு எனும் மூன்று பகுதிகளைக் கொண்டிருந்தது. இவற்றை முறையே சேர, சோழ, பாண்டிய வேந்தர் ஆண்டுவந்தனர்.

விற்கொடியும் பனம்பூ மாலையும் சேரர்க்கு உரியன. மீன்கொடியும் வேப்பமாலையும் பாண்டியர்க்கு உரியன; புலிக்கொடியும் ஆத்திமாலையும் சோழர்க்குரியன.

முடியுடை மூவேந்தரும் செங்கோலோச்சி வந்தனர்; மறங்கடிந்து அறம் பெருக்கினர்; நல்ல அமைச்சர் குழுவும், கூற்றுடன்று மேல்வரினும் எதிர்த்துத் தாக்கும் மறப்படையும் பெற்றிருந்தனர்; குடிபுரங்காக்குங் கோலராய் ஆண்டனர். இவர்தம் கொற்றக் குடைக்கீழ் மக்கள் இனிது வாழ்ந்தனர்.

புவியாண்ட இம் மன்னருள் சிலர் கவிபாடும் புலவராயும் திகழ்ந்தனர்; புலவரையும் கலைஞரையும் போற்றினர்; வளிதொழிலாண்டு மரக்கலஞ் செலுத்தி, அயல்நாடுகளுடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்தனர். பிறநாட்டுக் கலங்கள் "பொன்னொடு வந்து கறியொடு (மிளகு)" பெயர்ந்தன. சேரரது முசிறித் துறைமுகம், பாண்டியரது கொற்கைத் துறைமுகம், சோழரது புகார்த் துறைமுகம் சிறந்த துறைமுகங்களாய்த் திகழ்ந்தன; ஏற்றுமதியும் இறக்குமதியும் சிறந்து விளங்கின.

## தமிழின் தொன்மை

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி"[9]

தமிழ்க்குடி; அவர்கள் பேசிய மொழியும் மூத்த மொழியாய தமிழேயாம்.

பறவைகள், விலங்குகள் போன்று வாயால் ஒலித்துத் தன் உள்ளக் கிடக்கையைப் பிறர்க்குத் தெரிவித்து வந்த மனிதன், காலப்போக்கில் முகக்குறி, கைக்குறிகாட்டித் தன் எண்ணத்தைப் புலப்படுத்தினான். அதன் பின்னர்ப் படிப்படியே மொழி தோன்றியது. அதுவே தமிழ். மற்ற மொழிகட்கெல்லாம்

---

8 ஆராய்ச்சி நெறிமுறைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2ஆம் பதிப்பு (1991), ப. XII

9 புறப்பொருள் வெண்பாமாலை

நிலப்படம் 1 : கடல் கொண்ட குமரிநாடு (இலெமூரியா)

சான்று : இலெமூரியா முதல் அரப்பா வரை, முனைவர் இரா. மதிவாணன்




குறிப்பு : ஏழ்தெங்க நாட்டிலிருந்து குமரிமலைத் தொடர்வரை 700 காவதம் (சற்றொப்ப 7000 கல்) குமரிக்கண்டம் பரந்திருந்ததாகக் கூறப்படுகிறது.

நிலப்படம் 2 : சிந்துவெளி நாகரிகம்

சான்று : தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம் (வாழ்வியல்), ப. 472



முதலில் தோன்றியமையால், அதுவே முதன் மொழியாய், மூத்த மொழியாய்த் திகழ்கிறது.

"வையம் ஈன்றதொன் மக்கள் உளத்தினைக்
கையி னாலுரை காலம் இரிந்திடப்
பைய நாவை அசைத்த பழந்தமிழ்
ஐயை தாள்தலைக் கொண்டு பணிகுவாம்"[10]

என்னும் பாடலே இதனைப் புலப்படுத்தும்.

'இற்றைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் தமிழ்மொழி, முன்னைப் பழைமைக்கும் பழைமையாயது' என்பது அறிவுலகம் ஏற்றுக்கொண்ட உண்மையாகும். அஃது என்று தோன்றியது என்பதனை வரையறுத்துக் கூற வியலாது. "தமிழ்மொழியில் இலக்கியம் இருபது நூற்றாண்டுகளுக்கு முன்னமே வளம்பெற்று வளரத் தொடங்கியது" என்றும், "அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னமே தமிழ்மொழி பண்பட்டு விளங்கி இருந்ததால்தான் அத்தகைய இலக்கிய வளர்ச்சி பெற முடிந்தது" என்றும் கூறுகிறார் மு.வ.[11]

## முத்தமிழ்

தமிழர் 'மூன்று' என்னும் எண்ணில் விருப்பம் உடையவர்; இதனைப் பலவகையில் வெளிப்படுத்தினர்; தொல்காப்பியர் தம் இலக்கண நூலினை எழுத்து, சொல், பொருள் என மூன்றாய் வகுத்துள்ளார். மக்கள் உறுதிப்பொருளை அறம், பொருள், இன்பம் எனச் சான்றோர் வகுத்தனர். திருவள்ளுவரும் அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப்பால் என மூன்றாய்த் தம் நூலினைப் பகுத்தோதினார். தமிழகத்தை ஆண்ட மன்னரும் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவர்; ஆண்ட நாடுகளும் மூன்று; அவர் கொடிகளும் மூன்று; அடையாள மாலைகளும் மூன்று; இளங்கோவடிகளும் புகார்க்காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என நெஞ்சை அள்ளும் சிலம்பினை மூன்றாய்ப் பகுத்தோதினார்.

இவற்றைப் போலவே தமிழ் நெடுங்காலத்திற்கு முன்னமே இயல், இசை, நாடகம் எனும் முப்பிரிவுகளாய் வளர்ந்து இயங்கிவருகிறது. ஒவ்வொரு பிரிவிற்கும் தேவையான நூல்கள் பண்டு இருந்தன. கால வெள்ளம் பலவற்றை அடித்துச் சென்றுவிட்டது; எஞ்சியவை சில. இலக்கிய இலக்கணங்கள் இயற்றமிழைச் சாரும்; பண்ணொடு கூடின் இசைத்தமிழைச் சாரும்; பண்ணொடு பாடியும் நடித்தும் காட்டுவன நாடகத் தமிழைச் சாரும்; இம் மூன்றும் அமைந்த சிலப்பதிகாரம் முத்தமிழ்க் காப்பியம் எனப் போற்றப்படுகிறது.

10 கந்தசாமிப் பிள்ளை, நீ.
11 காலந்தோறும் தமிழ், இரண்டாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் (1968) படிக்கப்பட்ட கட்டுரை

## சமுதாய அமைப்பு

சங்ககாலச் சமுதாய அமைப்பில் சாதிப் பாகுபாடு இல்லை; பிறப்பினால் உயர்வு தாழ்வு இல்லை; சமய நம்பிக்கையை அடிப்படையாய்க் கொள்ளவில்லை; 'மனிதன் மனிதனாய் வாழ வேண்டும்' எனும் கோட்பாடே அடிப்படையாய் அமைந்திருந்தது; தன் ஆளுமையை வளர்த்துக்கொள்ளவும், அறநெறியில் நின்று வாழ்க்கைப் பயன்களை நுகரவும் சமுதாயம் வழிவகை கண்டு கடைப்பிடித்தது.

## சங்க இலக்கியம்

பண்டைத் தமிழர் தலை, இடை, கடை என முச்சங்கங்களைக் கண்டு தமிழை வளர்த்தனர் என்பது வரலாறு. இறையனார் களவியல் உரை கண்ட நக்கீரர் தம் உரையில் முச்சங்க வரலாற்றைத் தெளிவுபடக் குறிப்பிட்டுள்ளார்.

"கி.மு. நான்காம் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை சுமார் 600 ஆண்டுகளுக்கு மேற்பட்ட கால இடைவெளியைக் கொண்டது சங்ககாலம்"[12] என்று தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர் வரையறுக்கின்றனர். இதில் கருத்து வேறுபாடு உண்டு.

பேரழிவுகளுக்குப் பின் கிடைத்துள்ள அகச்சான்றுகளின்படி பார்த்தாலும் எண்ணற்ற இலக்கியங்கள் அக் காலகட்டத்தில் தோன்றியுள்ளமை தெரியவருகிறது. "பழைய ஏட்டுச் சுவடிகளை ஆடிப் பெருக்கில் இடுவதனாலோ, வேள்வித் தீயில் போடுவதனாலோ மோட்சம் கிடைக்கும்" எனும் மூடநம்பிக்கையால், அரும்பெரும் இலக்கியச் செல்வங்களைத் தமிழர் இழந்தனர். இதனை எண்ணுந்தொறும் நெஞ்சம் குமுறுகிறது. அழிந்தன போகப் பத்துப்பாட்டு[13], எட்டுத்தொகை[14] பதினெண் கீழ்க்கணக்கு[15] முதலாய சில நூல்களே எஞ்சின.

---

12 தமிழ்நாட்டு வரலாறு சங்ககாலம் (அரசியல்), தமிழ்நாடு அரசு வெளியீடு (1983), முதற் பதிப்பு, ப. 131

13 "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து."

14 "நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ(று)
ஒத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்துங் கலியே அகம்புறம்என்(று)
இத்திறத்த எட்டுத் தொகை."

15 "நாலடி நான்மணி நானாற்ப(து) ஐந்திணைமுப்
பால்கடுகம் கோவை பழமொழி மாமூலம்
இந்நிலைய காஞ்சியுடன் ஏலாதி என்பவே
கைந்நிலையு மாம்கீழ்க் கணக்கு."

பழந்தமிழர் அறிவாற்றலை, மொழித்திறனை, இலக்கிய இலக்கணப் புலமையை, வாழ்வியலை, கோட்பாடுகளை உருவாக்கிய நுண்மாண் நுழைபுலத் திறனை எண்ணுந்தொறும் எண்ணுந்தொறும் எண்ணுவார் நெஞ்சம் விம்முகிறது; வியக்கிறது; உலகினர் தத்தம் மொழிக்கு எழுத்து, சொல் இரண்டனுக்கே இலக்கணம் வகுத்தனர். தமிழரோ வாழ்விற்கும் இலக்கணம் வகுத்தனர்; வாழ்வினையே பொருளாய்க் கருதினர். அதனால், அதற்குப் 'பொருள்' எனப் பெயரிட்டனர்.

## தொல்காப்பியம்

தமிழ்நூல்கள் காலத்தால் முற்பட்டவை; மிகப் பழைமையானது தொல்காப்பியம்; 'தொல்' எனும் அடையே அதன் பழைமைக்குச் சான்று. அஃது ஓர் இலக்கண நூலாகும்.

"தொல்காப்பியர் மக்களுக்கு வாழ்க்கை முறையை அறிவுறுத்த விரும்பினார்; அதற்குச் சொற்களும், சொற்களுக்கு எழுத்துகளும், இன்றியமையாதனவாயின; எழுத்தால் சொல்லும், சொல்லால் பொருளும் உருவாதல் இயல்பு. பொருள் எனினும், வாழ்க்கைமுறை எனினும் ஒக்கும். வாழ்க்கை முறையினையே தொல்காப்பியர் பொருள் என்றார்" என்று தொல்காப்பியத்துக்குப் பேருரை வகுத்த (எழுத்துப்படலம்) பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

எழுத்தியலை (இலக்கணத்தை)[16] நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல், புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றியலுகரப் புணரியல் எனும் ஒன்பது ஓத்துகளானும்,

சொல்லியலைக் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல் எனும் ஒன்பது ஓத்துகளானும்,

பொருளியலை அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் எனும் ஒன்பது ஓத்துகளானும் யாத்துள்ளார். இயல்-இலக்கணம், ஓத்து - பிரிவு: ஒத்த கருத்தினையுடையது ஒத்து. ஒத்து - ஓத்து.

---

16 'இயல்' எனும் சொல் இலக்கணத்தைக் குறிப்பதாகும் என்பது பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் வலியுறுத்தும் கருத்தாகும். மேலும் 'இலக்கியம்', 'இலக்கணம்' ஆகியன வடசொற்களென்றும், அவற்றிற்குக் 'கணக்கு', 'வழக்கு' என்பனவே நேர் தமிழ்ச்சொற்கள் என்றும் தம் சொல்காப்பிய எழுத்துப்படல உரையில் (1993) எடுத்துக் காட்டியுள்ளார். மேலும் 'அதிகாரம்' என்னும் சொல்லிற்குப் படலம் என்பதே தமிழ் வடிவம் என்றும் அதிகாரம்பற்றித் தொல்காப்பியரோ, சங்கர நமச்சிவாயரோ குறிப்பிடவில்லை என்றும் சான்று காட்டுகிறார்.

பிற்காலத்து வளர்ந்த ஐந்தியல்களுள் (எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி) யாப்புச் செய்யுளியலிலும், அணி உவமவியலிலும் அடங்கும்.

“மக்கள் வாழ்க்கைக்குரிய கருவிகளையே (வீடு, நிலம், அணி, ஆடை போன்றவற்றைப்) பொருள் எனப் பலரும் கருதுகின்றனர். தொல்காப்பியர் கருத்து அதுவன்று; மக்கள் அகவாழ்வினையும் புறவாழ்வினையும், அவர் பொருள் எனக் குறிப்பிடுகிறார். அகப்பொருள், புறப்பொருள் எனும் வழக்கே அதற்குச் சான்றுகளாகும். இப் பொருள் தமிழில் தவிர வேறு எம்மொழியிலேயும் இல்லை எனலாம்” என்பார் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன்.

“தமிழ்க் கோட்பாடுகளே ஆழமாய் இடம்பெற்ற நிலையில் சங்க இலக்கியம் கிடைத்திருப்பது, தமிழர் தவப்பேறாகும். பழந்தமிழர் சிறந்த நாகரிகர்; பண்பாட்டினர்; பெருந்தகையினர்; அருள்நெஞ்சினர்; விருந்தோம்பும் பண்பினர்; ஒப்புரவாளர்; ஒழுக்கத்தாலன்றிப் பிறப்பால் உயர்வுதாழ்வு கருதாதவர்” எனும் செய்திகளைச் சங்க இலக்கியங்களில் உணர முடிகிறது.

## ஆரியர் தாக்கம்

சங்ககாலத்தில் (ஆரியர் வருகைக்கு முன்) தமிழர் வாழ்வு தூயதாய் இருந்தது; இயல்பாய இறைவழிபாட்டு முறை வழங்கிற்று; சமயப் பூசலற்ற ஆன்மிக உணர்வு மிளிர்ந்தது; சாதிப்பூசல் இல்லாத சமுதாய அமைப்புத் தழைத்தது.

ஆரியர் வருகைக்குப் பின்னர் இந் நிலை குலைந்தது. நாகரிகம், பண்பாடு சடங்கு முறைகளில் ஆரியக் கொள்கைகள் கலந்தன. இறைவழிபாட்டில் வேதநெறி வேள்விநெறி புகுந்தன. அறம் தருமமாய்த் தாழ்ந்தது; தமிழர் வாழ்வே தடுமாறலாயிற்று.

இதுபற்றி வரலாற்றாசிரியர், “வடமேற்கு இந்தியாவில் நுழைந்து அங்கிருந்த திராவிட நாகரிகத்தை அழித்துப் பின்பு தென்னிந்தியாவிலும் ஊடுருவிய ஆரியர்களின் சமற்கிருத மொழி தமிழ்நாட்டில் அறிமுகம் ஆயினமை தமிழ்மொழி வரலாற்றில், தமிழர் பண்பாட்டு வரலாற்றில் குறிப்பிடத்தக்க மொழிப்படையெடுப் பாகும்”[17] என்பர்.

## நீலகண்ட சாத்திரியார் கூற்று

“சங்ககால வாழ்க்கை ஆரியமயமாய் இருந்தது. வேதவேள்விகள், பழக்கவழங்கங்கள் சிறப்புமிக்கனவாய்ப் போற்றப்பட்டன; அவற்றை யாரும் எதிர்க்கவில்லை; ஒருவகைக் கலவை நாகரிகமாகவே சங்ககால நாகரிகம்

17 அறவாணன், க. ப., தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க்கோட்டம்

காட்சி தந்தது" என்று வரலாற்றாசிரியர் கே. ஏ. நீலகண்ட சாத்திரியார் கூற்று ஏற்கத்தக்க தன்று.

"ஆரியருக்கு முற்பட்ட தமிழர் வாழ்க்கைமுறை, இந்த வரலாற்று அறிஞர் கருத்து உண்மையன்று என்பதனை மெய்ப்பிக்கப் போதிய சான்றாகும்" எனக் குறிப்பிடுகிறார் க. த. திருநாவுக்கரசு.[18]

## பண்டைத் தமிழர் இறைவழிபாடு

தமிழர் இயற்கையொடு இயைந்த இறைநெறியைப் போற்றினர். அழகுணர்ச்சி (முருகியல்) மிக்க தமிழர், அழகினையே கடவுளாய் உருவகப்படுத்தி முருக (சேயோன்) வழிபாட்டினை மேற்கொண்டனர். குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்தவர் முருகனை முழுமுதற் கடவுளாய்க் கொண்டமை போல, முல்லை நிலத்தில் வாழ்ந்தவர், மாயோனை (திருமாலை)க் கடவுளாய்க்கொண்டு வழிபட்டனர். மருத நிலத்தினர் இந்திரனையும், நெய்தல் நிலத்தினர் வருணனையும் தெய்வமாய் வழிபட்டனர்.[19]

தமிழரிடம் - திராவிடரிடம் அன்னை வழிபாட்டு முறை பரவி இருந்தமைக்குக் 'கொற்றவை'யை அவர்கள் போற்றி வழிபட்டு வந்தமையே சான்றாகும். "அன்னை வழிபாடே தமிழ்மக்களிடம் முதலில் தோன்றிய வழிபாட்டு நெறி" என்பர் ஆராய்ச்சியாளர்.

இந்த அன்னை வழிபாடு இந்தியாவில் சிந்துவெளி நாகரிகக் காலத்திலேயே சிறப்புற்று விளங்கியதாய் அறிஞர் எடுத்துக் காட்டுகின்றனர். இருக்கு வேதத்தில் அன்னை வழிபாடுபற்றிய குறிப்பு யாதும் இல்லை என்பது ஆராய்ச்சியாளர் கருத்து.

"சேயோனையே (முருகன்) சிவனாய்ப் போற்றும் மரபும் நாளடைவில் அரும்பியது" என்பதும் அறிஞர் துணிபாகும்; இருக்கு வேதத்தில் அழித்தற் கடவுளாய் விளங்கும் உருத்திரன் வேறு; அன்பின் ஊற்றாய், அழகின் உறைவிடமாய், அறிவுக் களஞ்சியமாய், அருளே வடிவமாய் விளங்கும் முழுமுதற்கடவுளாய (பிறவாயாக்கைப் பெரியோன்)[20] சிவபெருமான் வேறு. ஆரியரும் திராவிடரும் காலப்போக்கில் நெருங்கிய தொடர்பின் விளைவாலும்

---

18 தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம் (வாழ்வியல்), ப. 232

19 "மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்" தொல் பொருள் 5

20 "பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்" சிலம்பு, 5 : 179-82

பண்பாட்டுக் கூறுகளின் கலப்பினாலும் தோன்றியதே ‘சிவன்’ எனும் பெருந்தெய்வமாகும்” என்பர் அறிஞர்.

முல்லை நிலத்தில் தொன்றுதொட்டு வாழ்ந்த தமிழர்க்கு வழிபடு தெய்வமாய் ‘மாயோன்’ விளங்கி வந்தான். ‘மாயோன்’ என்பதற்குக் கருநிறமுடையவன் என்பது பொருள். கருநிறக் கண்ணனே மாயோன் எனப்பட்டான். ஆரியப் பண்பாடு, திராவிடப் பண்பாட்டுடன் கலந்த காலத்துத் தமிழர் கண்ட ‘கண்ணன்’ ஆரியர் கண்ட ‘கிருஷ்ணன்’ ஆனான்; அவன் பண்புகளும் அதற்கேற்பச் சித்திரிக்கப்பட்டன.

## அறமும் ஆன்மிகமும்

மாந்தர் வாழ்வின் கோட்பாடுகளை - நோக்கங்களைத் தமிழர் அறம், பொருள், இன்பம் எனப் பகுத்தனர்; அவற்றை மும்முதற் பொருள் எனவும் கொண்டனர்; அறவழிப்பட்ட வாழ்க்கையே உண்மையாய சமய வாழ்க்கை - ஆன்மிக வாழ்க்கை எனத் தமிழ்ச் சான்றோர் போற்றினர்.

இன்பமும், பொருளும் அறத்தின்வழி வரவேண்டும் என்பதனைச் தமிழ்ச் சான்றோர் வலியுறுத்தினர். “அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை” என்றார் திருவள்ளுவர். அவரே “அறத்தான் வருவதே இன்பம்” என்றும் விளக்கினார்.

“பொருளிலார்க்கு இவ்வுலக மில்லை” என்ற திருவள்ளுவர், அப் பொருள் தீதற்ற வழியில் வரவேண்டும் எனவும் கூறுகிறார்.

அறம் செய்தற்கும், இன்பம் துய்த்தற்கும் பொருள் வேண்டுமென்றாலும், அப் பொருள் தீதற்ற வழியில் வரவேண்டுமென்பது வள்ளுவர் காட்டும் பண்பாடு ஆகும்.

“அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்” (குறள், 754)

## வாழ்வின் நோக்கம்

பழந்தமிழ் இலக்கியங்கள் வாழ்வின் நோக்கங்களை நன்கு சித்திரிக்கின்றன. அவை “வையத்துள் வாழ்வாங்கு வாழ”[21] வழிகாட்டுகின்றன; மக்கள் வாழ்க்கை நிலைகளை, சமூகப் பழக்கவழக்கங்களை இயல்பாய முறையில் விளக்குகின்றன. காதலையும் வீரத்தையும் தமிழர் எங்ஙனம் போற்றினர்[22] என்பதனை அக்கால இலக்கியங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

---

21 வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும் - திருக்குறள், 750

22 தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம் (வாழ்வியல்), பக். 214 - 23 இல் இடம்பெற்றுள்ள செய்திகள் அடிப்படையில் எழுதப்பட்டது.

அறிவியல் எத்துணையோ துறைகளில் வியக்குமாறு வளர்ந்துவரும் இக்காலத்திலும் தமிழர் வாழ்ந்த வாழ்க்கை, மேற்கொண்ட கொள்கை, போற்றிய நெறி, கடைப்பிடித்த நாகரிகம், கோலோச்சிய முறை, அறிவியல், மருத்துவம் முதலாய துறைகளில் சிறந்து விளங்கியமை போன்றன வியப்பினைத் தருகின்றன.

## உ. சங்ககாலம்
## (கி. மு. 400 - கி. பி. 250)

தொன்றுதொட்டுத் தமிழகம் சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு எனும் முப் பிரிவுகளாய் விளங்கி வந்தது. அவற்றைச் சேரர், சோழர், பாண்டியர் எனும் மூவேந்தர் முறையே ஆண்டுவந்தனர். அவர்கள் தமிழைப் போற்றி வளர்த்தனர்.

### சேரநாடு

இன்றைய கேரள மாநிலம் பண்டு சேரநாடாய்த் திகழ்ந்தது. அதன் தலைநகரம் வஞ்சி; துறைமுகப்பட்டினங்கள் முசிறி, தொண்டி.

சேர மன்னர் நெடுங்காலமாய்ச் சேரநாட்டை ஆண்டுவந்தனர். இவர் 'வானவர்' எனவும் அழைக்கப் பெற்றனர். இவருள், நெடுஞ்சேரலாதன் இமயம்வரை படையெடுத்துச் சென்று வென்றான். அதனால், 'இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்' என அழைக்கப்பெற்றான். அவன் மகன் செங்குட்டுவனோ தமிழர் வீரத்தைப் பழித்துரைத்த ஆரிய மன்னரை வென்றான்; இமயத்தில் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டினான்; பத்தினித் தெய்வம் கண்ணகிக்குக் கோயில் கட்டினான்.

பண்டைக் காலத்து வெளிநாடுகளொடும் தமிழர்க்கு வாணிகத் தொடர்பு இருந்துவந்தது; யானை மருப்பு (தந்தம்), மிளகு, தேக்கு, அகில், சந்தனம், மயிற்பீலி (தோகை) ஏற்றுமதியாயின.

சேர மன்னர் தமிழைப் போற்றிப் புரந்தனர்; புலவர் பலர் அவர்களைப் பாராட்டிப் பாடினர்; அவற்றுள் பதிற்றுப்பத்துக் குறிப்பிடத்தக்கது; அது சேர மன்னர் வரலாற்றைக் கூறுகிறது.

### சோழநாடு

இன்றைய தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி மாவட்டங்களும், கீழ்க்கடற்கரை வெளியும், பண்டைய சோழநாடாய்த் திகழ்ந்தன; இதனைச் சோழ மரபினர் ஆண்டனர்.

காவிரியாற்றால் வளம் பெற்றதனால் சோழநாடு 'வளநாடு' எனப்பட்டது; அதனை ஆண்ட மன்னரும் 'வளவர்' எனப்பட்டனர்.

உறையூர், காவிரிப்பூம்பட்டினம் தலைநகர்களாய் விளங்கின; காவிரிப்பூம்பட்டினம் துறைமுகமாயும் திகழ்ந்தது. கரிகாற்சோழன் காலத்தில், இத் துறைமுகம் உயர்ந்த நிலையில் விளங்கிற்று; இவன் ஈழத்தின்மீது படையெடுத்து வென்றான். சிறைப்பட்டவரைக் கொண்டு காவிரிக்குக் கரை எடுத்தான்; கல்லணை கட்டினான்; இமயத்தில் புலிக்குறி பொறித்தான். பத்துப்பாட்டில் பட்டினப்பாலையும், பொருநராற்றுப்படையும் இவன் பெருமையைக் கூறுகின்றன. அயல்நாட்டு வாணிகர் புகார்நகரில் குடியேறி வாழ்ந்தனர். ஏற்றுமதி இறக்குமதிப் பொருள்கள்மீது புலி இலச்சினை பொறிக்கப்பட்டது. யவனவீரர் அரசனிடம் பணியாற்றினர்.

## பாண்டிய நாடு

இன்றைய மதுரை, இராமநாதபுரம், சிதம்பரனார், திருநெல்வேலி, பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர், கட்டபொம்மன், குமரி மாவட்டங்கள் பண்டு பாண்டிய நாடாய்த் திகழ்ந்தன. தலைநகர் மதுரை; துறைமுகம் கொற்கை.

பொதுவாய்த் தமிழ்வேந்தர் மூவரும் தமிழைப் போற்றி வளர்த்தனர் என்றாலும் முச்சங்கம் கண்டு முறையுறத் தமிழ் வளர்த்த பெருமை பாண்டிய மன்னரையே சாரும்.

கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி, ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், அறிவுடை நம்பி முதலாய மன்னர் பலர் புலவராய்த் திகழ்ந்தனர்.

கொற்கை முத்து உலகப் புகழ் பெற்றது. எகிப்து அழகி கிளியோபத்திராவைக் கொற்கை முத்துகள் கவர்ந்தன. பாண்டிய வேந்தருள் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பெருவீரனாவான்.

மூவேந்தர் காலத் தமிழகம் முடியாட்சியின்கீழ் இருந்தாலும் குடியாட்சி போலத் திகழ்ந்தது; மன்னர் காட்சிக்கு எளியராயும், கடுஞ்சொல் அல்லராயும் விளங்கினர்; குடிமக்கள் கருத்தைத் தழுவிச் செங்கோலோச்சினர். அதனால், மக்கள் நிறைவாழ்வு வாழ்ந்தனர்.

சங்ககாலத்துப் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்கள் சங்ககால மக்கள் மாயோன், சேயோன், சிவன், கொற்றவை முதலாயவரைக் கடவுளாய் வழிபட்டனர் எனவும், இவருக்கு மரத்தாலும் மண்ணாலும் தளிகள் (கோயில்கள்)

எழுப்பினர் எனவும், அக் காலத்தில் சிறுதெய்வ வழிபாடும் இருந்தது எனவும், கல்லா மக்கள் உயிர்ப்பலியிட்டு வழிபட்டனர் எனவும் கூறுகின்றன.

சங்ககாலத்தைத் தமிழகத்தின் பொற்காலம் எனலாம். என்றாலும் அக் காலத்திலும் பல குறைபாடுகள் இருந்தன என்பதனையும் மறுக்க முடியாது.

மூவேந்தர்க்குள் பெரிதும் ஒற்றுமை இல்லை; ஒருவர்மேல் ஒருவர் போர் தொடுத்துக்கொண்டே இருந்தனர். இதனைப் புறநானூறு தெளிவாய் எடுத்துக் காட்டுகிறது என்றாலும், புலவர் பலர்க்கு வரையாது வாரி வழங்கினர்; தமிழினைப் போற்றிக் காத்தனர். வள்ளல் பாரிமேல் அழுக்காறுகொண்டு போர் தொடுத்தபோதுமட்டும் இம் மன்னர் மூவரும் ஒன்றுசேர்ந்தமை குறிப்பிடத்தக்கது.

வேள்வி செய்தலை மூவேந்தரும் பெருமையாய்க் கருதினர். பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் மன்னன் பெயரே இதனை வலியுறுத்தும்.

சங்ககால வேந்தர் நீதியை உயிரினும் மேலாய்க் கருதினர்; ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் அறியாது நிகழ்ந்த கோவலன் கொலைக்குத் தன் உயிரை விடுத்தமையே அதற்குச் சான்றாகும்.

சங்க காலத்தில் கடவுளர் பலர்க்குக் கோட்டங்கள் இருந்தன; சிலப்பதிகாரமும் மணிமேகலையும் அதற்குச் சான்று பகர்கின்றன.[23]

சங்ககாலத்தில் மகளிர் பெரிதும் போற்றப்பட்டனர். ஆடவர்களைப் போலப் பெண்டிருள்ளும் சிலர் கல்வியில் மேம்பட்டுத் திகழ்ந்தனர். ஔவையார், நச்செள்ளையார், குறமகள் இளவெயினியார், பெருங்கோப்பெண்டு, நக்கண்ணையார், காக்கைபாடினியார் போன்றவர் அதற்குச் சான்றாவர்.

காதல் மணம் போற்றப்பட்டது; புரோகிதர் இன்றித் திருமணம்

---

23 "காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்" - 637

"குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும்" - மணிமேகலை, 643

"அமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தம் கோட்டம் பகல்வாயில்
உச்சிக் கிழான்கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையாள் வாழ்கோட்டம்
நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம்" - சிலம்பு, 9:9-13

நடைபெற்றது. சங்கம் மருவிய காலத்துப் புரோகிதத் திருமணமும் நடந்ததாய்ச் சிலம்பு (சங்கம் மருவிய காலம்) செப்புகிறது; சாதிப் பாகுபாடும் வருணாசிரம முறையும் தலைகாட்டத் தொடங்கின.

## ௩ களப்பிரர் காலம் (கி.பி. 250 - 575)

சங்ககாலத்துக்குப்பின் களப்பிரர் ஆண்டனர். அவர்கள் கன்னடத்தில் 'களபரு' எனவும், வடமொழியில் 'களப்பிரா' எனவும் வழங்கப்படுகின்றனர். அவர் அரசமரபினர் அல்லர்; அவர் மூவேந்தரை வென்றதாய்ப் பாண்டியர், பல்லவர் பட்டயங்கள் குறிக்கின்றன. 63 நாயன்மாருள் கூற்றுவ நாயனாரைக் களப்பிர மரபினர் என்பர்.

"களப்பிரர் காலம் இந்திய வரலாற்றில் ஓர் இருண்ட காலம்" என வரலாற்றாசிரியர் இதுகாறும் கூறிவந்தனர்; அரசாண்ட மன்னர் வரலாறு கிடைக்கவில்லையே ஒழிய, அக் காலத்தில் எண்ணிறந்த தமிழ் இலக்கியங்கள் எழுந்தன; இதனை யாரும் மறுக்கவில்லை.

"இலக்கிய வளர்ச்சியைப் பொறுத்தவரை களப்பிரர் காலம் இருண்டகாலம் அன்று" என்று அறிஞர் சிலர் எடுத்துக்காட்டியுள்ளனர்.

"களப்பிரர் தமிழ்மண்ணை மணமற்றதாக்க வந்தவர் அல்லர்; பெருவீழ்ச்சியினின்று தமிழரை மீட்கவும், காக்கவும் வந்தவர். அவர்கள் பிறந்தகம் கருநாடகம்.

"மன்னரும் மக்களும் சமணத்தைத் தழுவித் தமிழ்மன்னரை வேத ஆதிக்கத்தினின்று மீட்க நடத்திய ஓர் இனப்போர்"[24] என்னும் குரல் நம் செவிகளில் விழுகிறது.

மேலும் "அன்றைய கருநாடகம் இன்றைய கருநாடகம் அன்று; பழந்தமிழ் எருமையூர் (மகிடாசுரம் - மைசூர்)"[25] என்று முனைவர் க. ப. அறவாணன் கூறுதல் சிந்தனைக்குரியது. அவர்கள் தமிழைத் தாய்மொழியாய்க் கொண்டவர் அல்லர் என்றும் பிராகிருதம், பாலி ஆகிய மொழிகளே அவர்காலத்தில் செல்வாக்குப் பெற்று விளங்கின என்றும் தெரிகிறது.

இலக்கியப் போக்கு எல்லாக் காலத்தும் ஒரே மாதிரி இருக்கவியலாது; கால மாற்றத்துக்கேற்ப இலக்கியக் கோட்பாடுகள் மாறும், வடிவங்கள் மாறும்.

---

24 அறவாணன், க.ப., பழந்தமிழ் நாடும் ஏடும், முன்னுரை.
25 மேலது

அவ் வகையில் 'பதினெண் கீழ்க்கணக்கு' என்னும் தொகுப்பிற்குப் பல நூல்களைத் தந்த களப்பிரர் காலம் தமிழ் இலக்கியத்திற்குச் சில வரவுகளைத் தந்துள்ளது" என்று அறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி, ச. வே. சுப்பிரமணியன், தமிழண்ணல் முதலாயோர் எடுத்துக்காட்டுகின்றனர். இக் காலத்தில் புதிய யாப்பு வடிவங்களாய தாழிசை, துறை, விருத்தம் ஆகியன தோன்றின என்பதும், கார் நாற்பது, இனியவை நாற்பது, ஐந்திணை ஐம்பது, சிறுபஞ்சமூலம், ஆசாரக்கோவை, ஏலாதி முதலாய நூல்கள் தோன்றின என்பதும் மகிழ்தற்குரிய செய்திகளாகும்.

புதுவைப் பல்கலைக்கழகத்தில் இளம் முனைவர் (எம். பில்.) பட்டத்திற்காக ஆய்வு மேற்கொண்ட இளம் ஆய்வாளர் ஒருவர், "புதிய பாவினங்களையும், இலக்கியக் கொள்கைகளையும் கொண்ட நூல்கள் தோன்றியுள்ளமை, பல்வேறு சமயங்கள் ஒரே காலத்தில் வழக்கிலிருந்தபோதும் அவற்றிடையே பூசல்கள் ஏதுமில்லாமல் அமைதியான சூழ்நிலை நிலவியமை மக்கள் எக்காலத்தையும்விடக் களப்பிரர் காலத்தில் அறத்தையும் ஒழுக்கத்தையும் கட்டுப்பாடுகளையும் கொண்டு வாழ்ந்தமை முதலாயவற்றைக்கொண்டு அது ஒரு நற்காலமே"[26] என்கிறார்.

## ச பல்லவர் காலம் (கி. பி. 575 - 846)

சங்க நூல்களில் பல்லவர்பற்றிய குறிப்புகளைக் காணல் இயலாது; கி. பி. 2ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட நூல்களிலேயே குறிப்புகள் காணப்படுகின்றன.

பல்லவர் 300 ஆண்டுகளுக்குமேல் தென்னிந்தியாவில் ஆட்சி செலுத்தி இருப்பினும், அவர்களைப்பற்றிய பல கல்வெட்டுகளும் பட்டயங்களும் கிடைத்திருப்பினும் அவர்கள் யார்? எங்கிருந்து வந்தனர்? என்பன போன்ற கேள்விகளுக்குச் சரியான விடை கிடைக்கவில்லை.

பல்லவ மன்னருள் முதலாம் மகேந்திர வருமனும் (கி. பி. 615 - 30), நரசிம்ம வருமனும் (கி. பி. 630 - 68) சிறந்தவராவர். இவர்கள் ஆட்சியில் வலிய படை இருந்தது; கலைகள் போற்றப்பட்டன; இலக்கியங்கள் எழுந்தன; காஞ்சி தலைநகராயும், மாமல்லபுரம் சிறந்த துறைமுகப்பட்டினமாயும் விளங்கின.

பல்லவ மன்னர், சாளுக்கிய வேந்தருடன் அடிக்கடி போரிட நேர்ந்தது. சாளுக்கிய மன்னன் இரண்டாம் புலிகேசியிடம் மகேந்திர வருமன் தோற்றான். புலிகேசி, பின்னர் அவன் மகன் நரசிம்ம வருமனிடம் தோற்றான். இப் படைக்குப்

26 மாதவி, அ., பழந்தமிழ் நாடும் ஏடும், பக். 59, 145

பரஞ்சோதி எனும் தமிழர் தலைமை பூண்டார். பிற்கால 63 நாயன்மாருள் ஒருவராய சிறுத்தொண்டர் இவரே. இவரே வாதாபியிலிருந்த பிள்ளையார் சிலையைத் தமிழகத்திற்குக் கொண்டு வந்தவர்.

### பத்தி இயக்கம்

பல்லவர் காலத்தில் தமிழ் மக்களிடையே சமண சமயம் செழித்தோங்கியது. அதனால், தமிழர் சமயமாய சைவம், வைணவம் நலியலாயின. இச் சமயத்தில் நாயன்மாரும், ஆழ்வாரும் தோன்றிப் பத்தி இயக்கத்தை மக்களிடையே பரப்பினர்.

தேவாரம் பாடிய மூவருள் அப்பரும் (திருநாவுக்கரசர்), சம்பந்தரும், திவ்வியப் பிரபந்தம் பாடிய பன்னிருவருள் திருமங்கை ஆழ்வாரும் பல்லவர் காலத்தில் வாழ்ந்தவராவர்.

சமணப்பற்று மிகுந்த மகேந்திர வருமன் திருநாவுக்கரசருக்குப் பல தொல்லைகளைக் கொடுத்தான். அவை யாவற்றையும் பொறுத்துக்கொண்டு அவர் பத்தி இயக்கத்தை வளர்த்தார். தேவாரம், திருவாசகம், நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் பல்லவர் காலத்தில் எழுந்தன. நாட்டியம், இசை, சிற்பம், ஓவியம் போன்ற நுண்கலைகள் வளர்ந்தன; குகைக்கோயில்கள் பல குடையப்பட்டன; மண்ணாலும் மரத்தாலும் கட்டப்பட்ட தளிகள் (கோயில்கள்) கற்றளிகளாய் மாற்றப்பட்டன; மாமல்லபுரச் சிற்பங்கள் உலகப் புகழ்பெற்ற சிற்பங்களாய் இன்றும் திகழ்கின்றன; உலகச் சுற்றுலாப் பயணிகளின் கவனத்தை ஈர்க்கின்றன.

## ரு பிற்காலச் சோழர் காலம் (கி.பி.846 - 1279)

சங்ககாலத்தில் செம்மாந்து விளங்கிய சோழர் இடையில் வீழ்ச்சி கண்டனர்; களப்பிரர், பல்லவர் காலத்தில் நீறுபூத்த நெருப்பாய் அடங்கிக்கிடந்தனர்; ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் மீண்டும் சுடர்விட்டு எரியத் தொடங்கினர்.

பிற்காலச் சோழப் பேரரசினை விசயாலயன் தோற்றுவித்தான்.[27] அவன் மரபில் தொடர்ந்து வந்தவரும் வீரமிக்கவராய்த் திகழ்ந்தனர். சங்ககாலம் மீண்டும் தலையெடுத்துப் பூத்ததுபோல் இவர்கள் ஆட்சி அமைந்தது.

இச் சோழ மரபினருள் முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன், முதற்குலோத்துங்கன் போன்றோர் ஆற்றல்மிக்க பேரரசர்களாய்த் திகழ்ந்தனர்; பகையரசரை வென்றனர்; கடல் கடந்து, அயல்நாடுகளைக் கைப்பற்றினர்; தமிழ்மொழியினைச் செம்மையாய் வளர்த்தனர்.

27 சதாசிவ பண்டாரத்தார் தி. வை., பிற்காலச் சோழர் சரித்திரம், பாகம் 1, அண்ணாமலை பல்கலைக்கழகம் (1954), ப. 14

## முதலாம் இராசராசன் (கி. பி. 985 - 1014)

தஞ்சைமா நகரைத் தலைநகரமாய்க்கொண்டு இவன் சோழநாட்டை ஆண்டான்; நிலங்களை முறைப்படி அளந்து வரிவிதித்தான். கப்பற்படையால் பல நாடுகளை வென்றான்; கேட்பாரற்றுத் தில்லைச் சிற்றம்பலத்தில் காப்பிட்டுக்கிடந்த தேவாரப் பதிகங்களை மீட்டுத் திருமுறைகளாய்த் தொகுத்தான்; தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலைக்[28] (பெரிய கோயில்) கற்றளியாய்க் கட்டினான்.

இவன் காலத்தில் இசைத்தமிழும் கூத்துத்தமிழும் சிறப்புற்று விளங்கின. கோயில்களில் முறைப்படி விழாக்கள் நடந்தன. உரிய காலங்களில் நாட்டிய மங்கையர் நாட்டியமாடினர். இவன் சிறப்புகளை மெய்க்கீர்த்திகள் பல பரக்கப் பேசுகின்றன.

## முதலாம் இராசேந்திரன் (கி. பி. 1012 - 69)

தன் தந்தை இராசராசனைப் போன்றே இவன் வீரமிக்கவனாய்த் திகழ்ந்தான். கங்கையில் நீர் எடுத்துப் புதிய தலைநகர் ஏற்படுத்தினான். அதற்குக் கங்கைகொண்ட சோழபுரம் எனும் பெயரிட்டு அதனைத் தன் தலைநகராய் ஆக்கிக்கொண்டான். தந்தையைப் போலவே கங்கைகொண்ட சோழேச்சுரம் எனும் விண்முட்டும் கோயிலைக் கட்டினான். அவனுக்குக் கங்கைகொண்டான், கடாரங்கொண்டான், மதுராந்தகன் எனும் சிறப்புப் பெயர்கள் உள. அவன் காலத்தில் தமிழ்மொழிக்கு நாடுதழுவிய ஒரு பொது எழுத்துமுறையை வகுத்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

ஈடு இணையற்ற கடற்படையை அவன் கொண்டிருந்தான்; அதனால் தென்கிழக்காசியாவில் ஸ்ரீவிசயம், பண்ணை, மலையூர், மாயிருடிங்கம், இலங்காசோகம், பப்பாளம், தலைக்கோலம், தமாலிங்கம், இலாமுரிதேசம், நக்கவாரம் (நிக்கோபார்த் தீவுகள்) முதலாய பல நாடுகளை வென்றான். அவற்றுள் முதன்மையானது கடாரமாகும். கடாரம், இன்று மேற்கு மலேசியாவின் வடபகுதியில் உள்ள 'கெடா' (Kedah) என்னும் மாநிலமாகும்.[29]

---

28 தஞ்சைப் பெரிய கோயில் நுழைவு வாயிலில் இந்திய அரசு எழுதி வைத்துள்ள குறிப்பு : "சர்வதேச இயற்கை மற்றும் கலாசாரப் பாரம்பரியப் பாதுகாப்புக் குழு (யுனெஸ்கோ), தஞ்சைப் பிரகதீஸ்வரர் ஆலயத்தினை உலக மரபு செல்வமாக அதன் பரப்பினைக் கருதித் தேர்வு செய்துள்ளது. இவ்வாறு தேர்வு செய்ததன் மூலம் இப் புராதனச் சின்னம் உலக அரங்கில் மிகச் சிறப்பும் தொன்மையும் வாய்ந்ததெனத் தெளிவுபடுத்துவதுமட்டுமன்றி இவற்றினை அனைத்து மனித சமுதாயத்தின் நலனுக்காகப் பாதுகாக்கும் பொறுப்பையும் தலையாய கடமையாக ஏற்றுக்கொண்டுள்ளது".

29 அப்பாத்துரை, கா., தென்னாட்டுப் போர்க்களங்கள், ப. 239

பிற்காலச் சோழர் காலத்தில் பன்னிரு திருமுறைகள் தொகுக்கப்பட்டன. சோழ அமைச்சர் சேக்கிழார் திருத் தொண்டர் புராணம் எனும் பெரியபுராணத்தை இயற்றினார். இது நாயன்மார் பெருமைகூறும் நூல்மட்டுமன்று; தமிழக வரலாற்று நூலாயும் திகழ்கிறது. முதற் குலோத்துங்கன் கலிங்க வெற்றியைச் செயங்கொண்டார் 'கலிங்கத்துப் பரணி' எனும் சிறந்த இலக்கியமாய்ப் படைத்தார்.

## சூ பிற்காலப் பாண்டியர் காலம் (கி. பி. 1279 - 1310)

மதுரையைத் தலைநகராய்க்கொண்டு பாண்டிய மன்னர் பாண்டிய நாட்டை ஆண்டனர். இவருக்குள் தாயத்தார் போர்கள் அடிக்கடி நிகழ்ந்தன. சுந்தரபாண்டியன் என்பவன் சிறந்த வேந்தனாய்த் திகழ்ந்தான். இவன் சோழரை வென்று அவர் நாட்டைக் கைப்பற்றிப் பின்னர் அவருக்கே வழங்கினான் என்பதனைச் "சோணாடு கொண்டருளிய சுந்தரதேவர்", "சோணாடு வழங்கியருளிய சுந்தரதேவர்" என்னும் அவனது மெய்க்கீர்த்தித் தொடர்களே காட்டும்.

மாணிக்கவாசகர் பாண்டிய மன்னனுக்கு முதலமைச்சராய்த் திகழ்ந்தார்; படை பெருக்கக் குதிரை வாங்கச் சென்றார்; திருபெருந்துறையில் சிவன்கோயிலைக் கட்டினார்; அதனால் மன்னன் வெகுளிக்கு ஆளானார்; தண்டனையும் பெற்றார். பின்னர்த் தன் தவறுணர்ந்தான் வேந்தன்; அவரை விடுவித்து, அவர் போக்கில் விடுத்தான். இவர் பாடிய திருவாசகம் சிறந்த பத்திநூலாய்த் திகழ்கிறது. "திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவாசகத்துக்கும் உருகார்" என்பது பழமொழி.

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்(து) உவட்டாமல் இனிப்பதுவே"

என்று உள்ளம் உருக இராமலிங்க வள்ளலார் பாடுகிறார்.

## எ முசுலிம்கள் காலம் ( கி.பி. 1310 - 1378)

"கி. பி. 1293 - க்கு முன்வரை தமிழகம் உள்ளிட்ட தென்னிந்தியாவை வடஇந்தியாவில் ஆட்சியிலிருந்த முசுலிம் ஆட்சியினரால் உட்படுத்த இயலவில்லை" என வரலாற்றுக் குறிப்புகள் கூறுகின்றன. 1294இல் அலாவுதீன் கில்ஜி யாதவ மன்னன் இராமச்சந்திரனுடன் போரிட்டு வென்றான்; பின்னர்

நிலப்படம் 3 : தென்னிந்திய அரசுகள் (கி.பி. 800 - 1200)



அமைதி ஒப்பந்தம் செய்துகொண்டான். அடுத்து அவன் தில்லிச் சுல்தானானான். தென்னிந்தியாவின்மீது நடந்த முதல் இசுலாமியப் படையெடுப்பு அவன் படையெடுப்பே.

மதுரையை ஆண்ட பாண்டிய வேந்தருள் மாறவருமன் குலசேகரன் ஒருவன்; அவனுக்குச் சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் என இரு மக்கள் இருந்தனர்; பட்டத்தரசிக்குப் பிறந்த சுந்தரபாண்டியன் ஆற்றலற்றவனாய் இருந்தமையால், பிறிதொரு மனைவிக்குப் பிறந்த வீரபாண்டியனைக் குலசேகரன் இளவரசனாக்கினான். இதனால், சுந்தரபாண்டியன் தந்தையொடு மாறுபட்டுப் போருக்கெழுந்தான். வீரபாண்டியன் சுந்தரபாண்டியனைத் தோல்வியுறச் செய்தான். தோற்ற சுந்தரபாண்டியனோ, அப்போது தென்னிந்தியாவின்மீது படையெடுத்து வந்த அலாவுதீன் கில்ஜி படைத்தலைவன் மாலிக்காபூர் உதவியை நாடினான். தில்லிச் சுல்தான் இசைவுடன் மாலிக்காபூர் கி. பி. 1311இல் தென்னாட்டின்மீது படையெடுத்து மதுரையைக் கொள்ளை அடித்தான்; சுந்தரபாண்டியனை மதுரைக்கு மன்னனாய் அறிவித்தான்.

இரண்டாம் முறையாய்த் தில்லிச் சுல்தான் படைத்தலைவன் குசுருகான் தமிழ்நாட்டின்மீது படையெடுத்தான். இப் படையெடுப்பால் குறுநில மன்னர் காட்டுக்குள் ஓடி மறைந்தனர்; நகர மக்கள் குடும்பத்துடன் வெளியேறினர். குசுருகான் தான் கைப்பற்றிய செல்வத்தால், தானே மதுரையை ஆள விரும்பினான். இதனை அறிந்த சுல்தான் உடனே தில்லிக்குத் திரும்புமாறு அவனுக்குக் கட்டளை இட்டான்.

மூன்றாம் முறையாய் அடிமை வமிசத்து அரசனாய முகம்மது - பின் - துக்ளக்கு ஒரு படையைத் தமிழகத்துக்கு அனுப்பினான். அப் படையை எதிர்த்த பராக்கிரம பாண்டியன் சிறைப்பிடிக்கப்பட்டுத் தில்லிக்கு அனுப்பப்பட்டான். இதன் பின்னர் மதுரை, தில்லிச் சுல்தானின் நேரடி ஆட்சியின்கீழ் வந்தது.

சுல்தான்கள் ஆட்சியில் தமிழ்நாடு பேரழிவுக்குள்ளாயிற்று; சமயப் பணிகள் நடவாதொழிந்தன; கோயில் சொத்துகள் கொள்ளைபோயின; பத்திநெறி மறைந்துபோயிற்று; வேளாண்மையும் நடக்கவில்லை; கோயில் கதவுகள் செல்லரிக்கப்பட்டன என்று வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர்.

முசுலிம்கள் படையெடுப்பால், தென்னிந்தியாவில் அரசியல், பொருளியல், சமயம், கலைகள் முதலாயவற்றில் தேக்கநிலையும், குழப்பமும், அழிவும் விளைந்தன.

## அ விசயநகரப் பேரரசு காலம் (கி. பி. 1378 - 1529)

16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் விசயநகரத்தைத் தலைநகரமாய்க்கொண்டு விசயநகரப் பேரரசு தோன்றிற்று. விசயநகர மன்னருள்

கிருஷ்ண தேவராயர் (கி. பி. 1509 - 29) வலிமையொடு நாட்டை ஆண்டார். இவர் வடமொழிப் புலமைமிக்கவர். பல நூல்களை இயற்றியவர்.

விசயநகரப் பேரரசர் கிருஷ்ண தேவராயர் காலத்தில் பாண்டிய நாட்டைச் சந்திரசேகரனும், சோழநாட்டை வீரசேகரனும் ஆண்டனர். இவர்கள் இருவரும் விசயநகரப் பேரரசுக்கு உட்பட்டவர்.

சோழமன்னன் பாண்டி நாட்டின்மீது படையெடுத்து அதனைக் கைப்பற்றிக் கொண்டான். அதனால், பாண்டியன் விசயநகர வேந்தனிடம் முறையிட்டான். கிருஷ்ண தேவராயர், நாகம நாயக்கன் தலைமையில் ஒரு பெரும் படை அனுப்பிச் சோழனை அடக்கினார்.

சில ஆண்டுகளுக்குப்பின் விசயநகரப் பேரரசு தமிழகம் முழுதும் பரவிற்று. கோயில் திருப்பணிகள் பல நடந்தன. தெலுங்குமொழிக்குப் புத்துயிர் அளிக்கப்பட்டது. இதனால், தமிழ்மயமாய் இருந்த செவ்விசை (Classical Music) தெலுங்குமயமாய் மாறிற்று; கருநாடக இசையாயிற்று. தமிழ் நடனப் பின்னணிப் பாடல்களில் பெரும்பகுதி இன்றும் தெலுங்கு, சமற்கிருதமாய் இருத்தல் வேதனைக்குரியது.[30]

பேரரசர் ஆணைப்படி நாகமனின் மகன் விசுவநாத நாயக்கன் தலைமையில் படை ஒன்று சென்று நாகமனைச் சிறைப்பிடித்து வந்தது; பாண்டிய மன்னன் சந்திரசேகரன் திறமையற்றவன் ஆதலால் விசுவநாதனே மதுரையை ஆளுமாறு பேரரசர் ஆணையிட்டார். இவ்வாறு தமிழராட்சி ஒழிந்து தெலுங்கர் ஆட்சி தலையெடுத்தது.

## கூ நாயக்கர் காலம் (கி. பி. 1529 - 1736)

### மதுரை நாயக்கர் (கி. பி. 1529 - 1736)

கிருஷ்ண தேவராயருக்குப்பின் அவர் பேராளர்களாய நாயக்க மரபினரால் தமிழகம் ஆளப்பட்டது. இவருள் மதுரையை ஆண்ட திருமலை நாயக்கரும், அவர் மரபில் வந்த மங்கம்மாளும் தலைசிறந்து விளங்கினர்.

---

30 செட்டிநாட்டரசர் அண்ணாமலை செட்டியார் தமிழிசையை மீட்கப் பேரியக்கம் கண்டும் தமிழர் முழுமையாய்த் தமிழிசையை ஏற்க முன்வரவில்லை; அடிமைப் போக்கிலேயே உள்ளனர்; மேலும் விரிவிற்கு 570ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

திருமலை நாயக்கர் பல போர்களில் வெற்றி பெற்றார். இவர் காலத்தில் நடந்த மூக்கறுப்புப் போர் கொடுமையானது. இவர் பல கோயில் திருப்பணிகளைச் செய்தார். மதுரை மீனாட்சியம்மன் கோபுரம் இவரால் கட்டப்பட்டது; இவர் எழுப்பிய திருமலை நாயக்கர் மகால் கட்டடக் கலைக்குப் பெயர்பெற்றது.

இவர் காலத்தில் குமரகுருபரர் வாழ்ந்தார்; திருமலை நாயக்கர் முன்னிலையில் மீனாட்சியம்மன் பிள்ளைத் தமிழினை அரங்கேற்றினார்; பல சிற்றிலக்கியங்களையும் இயற்றித் தமிழன்னைக்குச் சிறப்பூட்டினார். மங்கம்மாள் வீராங்கனையாய்த் திகழ்ந்தார்; அறச்செயல்கள் பல செய்தார்.

## தஞ்சை நாயக்கர் (1532-1675)

கிருஷ்ண தேவராயருக்குப்பின் அச்சுத தேவராயர் விஜயநகர மன்னராய்ப் பொறுப்பேற்றார். அவர் தம் மருமகன் சேவப்ப நாயக்கரைத் தஞ்சையின் மண்டலேசுவரராய் அமர்த்தினார். இவரே தஞ்சையை ஆண்ட முதல் நாயக்க மன்னர். இவர் பல அறச்செயல்கள் புரிந்துள்ளார்; மக்கட்கு நற்பணிகள் பல ஆற்றியுள்ளார்; தஞ்சைப் பெரியகோயிலின் வடபாலுள்ள சிவகங்கைக் குளத்தைச் செப்பனிட்டார்; பல கோயில்கள் கட்டினார்; பார்ப்பனச் சேரிகள் பல உருவாக்கினார்; திருவண்ணாமலையில் அருணாசலேசுவரர்க்குப் பதினொரு அடுக்குக் கோபுரங்கொண்ட கோயிலைக் கட்டினார்; திருப்பதி, ஸ்ரீசைலம் கோயில் விமானங்களுக்குப் பொன்ஓடு வேய்ந்தார்; காவிரிக்கரையில் சிவ, வைணவ ஆலயங்களை எழுப்பினார்; பல ஊர்களையும் நகைகளையும் கோயில்களுக்கு வழங்கினார்; தஞ்சை மண்ணில் போர்த்துகீசியர் வாணிகம் செய்ய, நாகப்பட்டினத்தில் இடம் அளித்தார். தஞ்சைக் கோயிலுக்கு மேல்பால் உள்ள ஏரி இவர் பெயரால் 'சேவப்ப நாயக்கன் ஏரி' என்று இன்றும் வழங்கப்பட்டு வருகிறது.

இவர் மரபினராய அச்சுதப்ப நாயக்கர், இரகுநாத நாயக்கர், விஜயராகவ நாயக்கர் தஞ்சையை ஆண்டனர். இவருள் இரகுநாத நாயக்கர் ஆட்சி பல வகையில் போற்றத்தக்கதாய் இருந்தது. இவர் ஆட்சிக் காலத்தில் மக்கள் அமைதியாயும் மகிழ்ச்சியாயும் வாழ்ந்தனர்.

யாழ்ப்பாணத்தை ஆண்ட சங்கிலி மன்னனுக்குப் போர்த்துகீசியர் பல தொல்லைகள் கொடுத்தனர். அதனால், அவன் இரகுநாதரின் உதவியை நாடினான். அவனுக்கு உதவியாகத் தம் படைகளை மும்முறை யாழ்ப்பாணத்துக்கு அனுப்பி உதவிசெய்தார்; இவர் கிருஷ்ண தேவராயருக்கு இணையாகப் போற்றப்படுகிறார். இவர் இசையில் வல்லவர். அதனொடு பல இலக்கியங்களையும் படைத்துள்ளார்.

நாயக்க மன்னர் இறைநம்பிக்கை மிகுந்தவர்; கோயில் திருப்பணிகள் பல

செய்தவர்; சைவ, வைணவ ஆலயங்களைப் புதுப்பித்தவர்; பெரும்பான்மையான மன்னர் கிறித்தவமதம் பரவ இடங்கொடுத்தனர்; சமயப்பொறை காத்தனர்; பிற சமயங்களுக்கு மானியம் வழங்கினர். தஞ்சையில் இருந்து இராமேசுவரம்வரை சாலைகள் அமைத்தனர்; சாலையின் இருபுறமும் நிழல்தரும் மரங்கள் வளர்த்தனர்; பயணிகள் தங்கி, உண்டு, இளைப்பாறுதற்குப் பல சத்திரங்களைக் கட்டினர்.

நாயக்கர் ஆட்சியின்போது புரோகிதர் பலர் தமிழ்நாட்டில் பேரளவில் குடிபுகுந்தனர். தமிழகம் முழுதும் ஊர்ப்பெயர்கள் பல மாற்றப்பட்டன; அவ்வாறு மாற்றம்பெற்ற நாயக்கன்பட்டி என்பது போன்ற பல ஊர்கள் இன்றும் உள்ளன.

தஞ்சை நாயக்கர் மரபு, செங்கமலதாசனொடு முடிவடைந்தது. பின்னர்த் தஞ்சை, மராத்திய மன்னர் ஆளுகைக்கு உட்பட்டது.

## ௧0 மராத்தியர் காலம் (கி. பி. 1736 - 1856)

நாயக்கர் ஆட்சிக்குப்பின் தஞ்சையைத் தலைநகரமாய்க்கொண்டு மராத்திய மரபினர் ஆண்டனர். இவர்கள் ஆட்சி ஏறத்தாழ 100 ஆண்டுகள் தொடர்ந்தது; இம் மரபில் வந்த துளசாஜி மன்னர் பழஞ்சுவடிகளைத் திரட்டிச் சரசுவதி மகால் நூல்நிலையத்தைத் தொடங்கினார். அவருக்குப் பின் வந்த இரண்டாம் சரபோஜி (கி. பி. 1798 - 1832) உலகில் சிறந்த நூல்நிலையமாக அதனை ஆக்கினார். தமிழ், தெலுங்கு, மராத்தி, சமற்கிருதமொழி ஏட்டுச் சுவடிகள் ஆயிரக்கணக்கில் சரசுவதி மகாலில் உள்ளன. இவற்றை நடுவண் அரசும், மாநில அரசும் போற்றிக் காத்து வருகின்றன.

இவர்கள் காலத்தில் நாட்டியக்கலையும், இசைக்கலையும் வளர்ந்தன. நிரம்ப நாடக நூல்கள் தோன்றின. அபிராமி அந்தாதி மராத்தியர் காலத்தில் எழுந்த ஒரு சிறந்த சிற்றிலக்கியமாகும். மராத்திய மன்னர் சிவனைக் கடவுளாய்க் கொண்டிருந்தாலும், பிற சமயத் தலைவரையும் போற்றினர்; இவர்கள் ஆட்சியில் சைவம், வைணவம், இசுலாமியம், கிறித்தவ சமயங்கள் வளர்ச்சி பெற்றன.

கதையை இசையுடன் பாடி மக்களை மகிழ்விக்கும் 'கதாகாலட்சேபம்' தமிழகத்துக்குப் புதிய வரவாகும். இக் காலத்தில் அறிமுகமான 'இலாவணி' எனும் யாப்பு வகையும் தமிழருக்குக் கிடைத்த ஓர் இலக்கிய வடிவமாகும்.[31]

அபிராமிப் பட்டர், கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர், சீர்காழி அருணாசலக் கவிராயர், வேதநாயக சாத்திரியார் முதலாயோர் மராத்தியர் காலத்தில் தமிழ் வளர்த்த சான்றோராவர்.

31 இளங்கோவன், மு., மராட்டியர் ஆட்சியில் தமிழகமும் தமிழும், ப. 84

பிரஞ்சு மன்னன் நெப்போலியனை 1815இல் ஆங்கிலேயர் வென்றனர். அதனைப் போற்றும் வண்ணம் சரபோசி கட்டிய வெற்றிச் சின்னம் 'மனோரா' இன்றும் தஞ்சைக்கு அருகில் உள்ள கடற்கரையில் தலைநிமிர்ந்து நிற்கிறது.

## கக ஆங்கிலேயர் காலம் (கி. பி. 1801 - 1947)

15ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மேலைநாட்டார், இந்தியாவுக்கு வரப் புதிய கடல்வழி கண்டு பிடித்தனர்; போர்த்துகீசிய மாலுமி வாஸ்கோட காமா கடல்வழிப் பயணஞ் செய்து கி. பி. 1468இல் மலையாளக் கடற்கரையிலுள்ள கள்ளிக்கோட்டையை அடைந்தார். அவரைத் தொடர்ந்து டச்சுக்காரர், பிரெஞ்சுக்காரர், ஆங்கிலேயர் இந்தியாவில் புகுந்தனர்.

தொடக்க காலத்தில் அனைவர் வருகையும் வாணிகத்தை முன்னிட்டே அமைந்தது. இந்தியாவின் செல்வவளம் அவர்களைக் கவர்ந்தது. வாணிகத்தால் அவர்கள் பெரும்பொருள் ஈட்டினர்; அவற்றைத் தம் நாட்டுக்குக் கொண்டுசென்றனர். இந்தியா அவர்கட்கு வாணிகச் சந்தையாயிற்று.

வாணிகம்பொருட்டு இந்தியா வந்த இவரிடையே போட்டி எழுந்தது. அதனால், தத்தம் பொருள்களைப் பாதுகாத்துக்கொள்ளச் சிறுசிறு படைகளை அமைத்துக்கொண்டனர்; அடிக்கடி போரிட்டுக் கொண்டனர்.

ஐரோப்பாவில் ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் அடிக்கடி போர் நிகழ்ந்தன; அப்பொழுதெல்லாம் இந்தியாவிலும் இருதிறத்தாருக்கும் போர் நிகழ்ந்தன. இறுதியில் ஆங்கிலேயர் வெற்றி பெற்றனர்.

வாணிகம்பொருட்டு வந்த ஆங்கிலேயர் காலப்போக்கில் நாட்டையே கைப்பற்றி ஆளத் தலைப்பட்டனர் (1801 - 1857 கிழக்கிந்திய கம்பெனி ஆட்சி; பின் நேரடி ஆட்சி). அதற்கு இராபர்ட் கிளைவ் அடித்தளமிட்டான். கி. பி. 1757இல் நடந்த பிளாசிப் போரால் கிளைவ் வலிமைபெற்று உயர்ந்தான்.

கிறித்தவ சமயத்தைப் பரப்பத் துறவிமார்களும் பலர் வந்தனர்; சமயத்தைப் பரப்பியதொடு பல பள்ளிக் கூடங்களை நிறுவி மக்களுக்குக் கல்வியையும் அளித்தனர். இந்தியாவில் கேரளந்தான் மிகுதியாய்ப் படித்த மக்களைக் கொண்டது. இதற்குக் காரணம் கிறித்தவ சமயத்தவர் அங்குத் தோற்றுவித்த பள்ளிகளே ஆகும். அவர்கள் சமயத்துடன் கல்வியையும் சேர்த்து வளர்த்தனர் என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

ஆங்கிலேயர் பல சிற்றரசரிடையேயும் சாதிகளிடையேயும் பிரிவினைகளை வளர்த்துத் தந்திரமாக இந்தியாவைக் கைப்பற்றி ஆண்டனர். இந்தியாவிலிருந்து பல்வேறு மூலப்பொருள்கள் ஏற்றுமதியாயின. அவை செய்பொருள்களாய்

இந்தியாவுக்கே மீண்டன. அதனால், இந்தியப் பணம் மிகுதியாய் வெளிநாடு சென்றது.

காலப்போக்கில் இந்திய நாடு (துணைக்கண்டம்) அடிமை நாடாயிற்று; ஆங்கிலேயர் வைத்ததே சட்டமாயிற்று; ஆங்கிலேயர்க்கும் அவர்கள் மதத்தைச் சார்ந்தவர்க்கும், வேலைவாய்ப்புகளிலும் உயர்பதவிகளிலும் முதலிடம் கிடைத்தன. அதனால் மதமாற்றம் மிகுதியாயிற்று. நாடு சுரண்டப்பட்டது. எங்கும் வறுமை தாண்டவமாடிற்று; ஆங்கிலரெல்லாரும் துரைகளாயினர்; அவர்கள் அனைவரும் அரசினால் மதிக்கப்பட்டனர்; இத்தகு செயல்களால் நாட்டுமக்கள் பல வகைகளில் துன்புற்றனர்; பசியால் வாடினர். இக் கொடுமைகளால் மக்களுள் சிலர் கொதித்தெழுந்தனர்; மாவீரன் புலித்தேவன், கட்டபொம்மன் போன்றோர் இதற்கு முன்னோடிகளாவர். அவர்கள் மக்களுக்கு விடுதலை உணர்வினை ஊட்டினர்; விடுதலைப் போராட்டம் தொடர்ந்து நடந்தது; அதற்குக் கணக்கற்ற இந்தியர் பலியாயினர்; அவற்றுள் ஜாலியன்வாலாபாக் படுகொலை குறிப்பிடத்தக்கது; கொடுமை மிக்கது.

இறுதியில் காந்தி அடிகள் (மோகனதாஸ் கரம்சந்த் காந்தி) அகிம்சைப் போராட்டத்தை மேற்கொண்டார்; மக்களிடையே அரசியல் விழிப்புணர்ச்சியை உண்டாக்கினார்; ஒத்துழையாமை உள்ளிட்ட பல போராட்டங்களை நடத்தினார்; ஆங்கில ஆட்சி செய்வதறியாது திகைத்தது; அடக்குமுறை வெற்றி பெறவில்லை; வேறு வழியின்றி, ஆங்கிலேயர் 15-8-1947இல் நாட்டைவிட்டு வெளியேறினர். இந்தியா விடுதலை பெற்றது என்றாலும், அஃது இந்தியா, பாகிஸ்தான் என இரண்டாய்ப் பிரிந்தது. அதற்கும் ஆங்கிலேயரே காரணம்; அதனால் விளைந்த விளைவுகள் பல. இன்றுவரை அவை நிலையாயதொரு முடிபிற்கு வந்தபாடில்லை.

ஆங்கிலேயர் காலத்தில் சில நன்மைகளும் விளைந்தன. போக்குவரத்து வசதியும், அஞ்சல் வசதியும் ஏற்பட்டன; அச்சகங்கள் பெருகின; ஓலைச் சுவடிகளாய் இருந்த இலக்கியங்கள் அச்சுவடிவம் பெற்றன. மேலும் நூல்கள் பல வெளிவந்தன; இதழியல்துறை உருவாகி வளர்ந்தது; ஓரிடத்துச் செய்திகள் நாடெங்கும் பரவின.

பெருங்கவி பாரதியார், நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம் பிள்ளை, பாவேந்தர் பாரதிதாசன் போன்றோர் கோழையும் மறவனாகும் வண்ணம் விடுதலையுணர்வுமிக்க புரட்சிப் பாக்களை யாத்தனர்; அதனொடு இலக்கியம் பலவும் இயற்றினர்.

சமயம் வளர்க்க வந்த பாதிரிமார் தம் கொள்கைகளைப் பரப்பத் தமிழினைக் கற்றுக்கொண்டனர்; சில காப்பியங்களும் இயற்றினர். வீரமாமுனிவர் தேம்பாவணி, சதுரகராதி, தொன்னூல் விளக்கம் முதலாய நூல்களை இயற்றினார். ஜி. யு. போப் திருக்குறளையும் திருவாசகத்தையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் தருமபுரம், திருப்பனந்தாள் போன்ற மடங்கள் தோன்றிச் சைவத்தையும் தமிழையும் வளர்த்தன; பாதுகாத்தன; திருப்பனந்தாள் மடம் தமிழ்க் கல்லூரி ஒன்றனையும் நடத்திவருகிறது.

உமறுபுலவர் சீறாப் புராணம் என்னும் சீரிய இசுலாமிய இலக்கியத்தை இயற்றி நபிகள் நாயகத்தின் பெருமையைப் பரப்பினார்; இலக்கிய இலக்கணத் திறனாய்வு நூல்களை இயற்றினார்.

சிவஞான முனிவர், மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை, வள்ளலார் இராமலிங்க அடிகள், வண்ணச் சரபம் தண்டபாணி அடிகள், பாம்பன் சுவாமிகள் முதலியோர் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் உழைத்தனர்.

உ. வே. சாமிநாத ஐயர், திவான் பகதூர் டி. எம். சரவணபவானந்தம் பிள்ளை, சி. வை. தாமோதரம் பிள்ளை, வ. உ. சிதம்பரம் பிள்ளை முதலாயோர் ஏட்டுச்சுவடி இலக்கியங்களை அச்சேற்றினர்.

### தமிழ் இலக்கியத்தில் புதுவரவு

ஆங்கிலேயர் இந்தியத் துணைக்கண்டத்தைக் கைப்பற்றியதனால், தென்னகத்தார் - குறிப்பாய்த் தமிழர் பல நாடுகளுக்குக் கூலிகளாய்ச் செல்ல வேண்டிய நிலை ஏற்பட்டது; தமிழர்க்குத் தனியுரிமை நாடு என்னும் பேறு இல்லாதொழிந்தது; தமிழிற்குத் தலைமை இடமும் கிட்டாமற் போனது; பழைமைக்கும் பழைமையதாய்ப் புதுமைக்கும் புதுமையதாய் மேம்பட்டு விளங்கும் அதற்குச் 'செம்மொழி' என்னும் தகுதிகூட வாய்க்கவில்லை. ஆனால், ஆங்கிலேயர் காலத்தும் தமிழ் இலக்கியம் சில வரவுகளைப் பெற்றது. இலக்கியம் என்றால் பாட்டே எனும் நிலை மாறியது; உரைநடை மிகுதியாய் வளர்ந்தது. அதனால், சிறுகதை தளிர்த்தது; புதினம் (நாவல்) கிளைத்தது; நாட்டுப் பாடலளவிலும் செய்யுள் வடிவிலும் இருந்த குழந்தை இலக்கியம் புதுமலர்ச்சி பெற்றது; உரைப்பாட்டு என்னும் புதுக்கவிதை முகிழ்த்தது; புலவர் மடிகளிலேயே தவழ்ந்துகொண்டிருந்த இலக்கியம் பாமரர் செவிக்கும், சிந்தனைக்கும் சென்றது. இக் காலம் இலக்கியத் துறைக்கு ஒரு திருப்புமுனையாய் அமைந்தது.

## கஉ உரிமைக் காலம் (1947...)

மலாயா விடுதலைக்குப் பத்தாண்டுகளுக்கு முன்பே இந்தியத் துணைக்கண்டம் விடுதலை பெற்றது (1947 ஆகஸ்டு 15); தமிழ்நாடு, கேரளம், ஆந்திரா, கருநாடகம் எனத் தென்னகம் மொழிவாரி மாநிலங்களாய் ஆயிற்று; இந்தியத் துணைக்கண்டத்தில் தமிழர் ஒரு சிறுபான்மையர் நிலையினை எய்தினர்.

இன்றுவரை மாநில அளவில்கூட ஆளும் தகுதியைத் தமிழ் முழுமையாய்ப் பெறவில்லை; தமிழைத் தாய்மொழியாய்க் கொண்டவரே அதனை உரிய வகையில் போற்றாமை வருந்தத்தக்கது. மக்கள் ஆங்கிலேயரிடமிருந்து விடுதலை பெற்றனர்; ஆனால் ஆங்கிலமொழி ஆதிக்கத்திடமிருந்து விடுதலை பெறவில்லை; ஆங்கில மோகத்தினின்று மீளவில்லை; அயலகத் தமிழர் தங்கள் மூலத் தாய்நாட்டை வழிகாட்டியாய்க் கொள்ளும் அளவிற்குக் கலை, இலக்கியம், பண்பாட்டு வகையில் வாழ்ந்து காட்டவில்லை.

## திராவிட இயக்கத் தாக்கம்

தந்தை பெரியார் உருவாக்கிய திராவிட இயக்கம் மொழி, இன, பண்பாட்டு உணர்வுகளை அழியாமல் காக்க உதவிவருகிறது; தனித்தமிழ் இயக்கம்[32] மொழித் தூய்மையை வளர்த்துவருகிறது. தமிழிசை இயக்கம்[33] தமிழிசைக் கலையை வளர்க்கிறது; பாவேந்தர்[34] பொழிந்த புரட்சிப் பெருமழை சமுதாயத்தை விழிக்கச் செய்தது; நாடகக் கலை புதிய போக்கில் வளர்ந்தது; திரு. வி. க.,[35] அறிஞர் அண்ணா[36] முதலியவரால், மேடைப்பேச்சு வளர்ந்தது. செய்தித்தாள் துறை தழைத்தது; நாள், வார திங்கள் இதழ்களாய் மலர்ந்தது.

விடுதலைக்குப்பின் இந்தியத் துணைக்கண்டத்தை இந்தியப் பேராயக் கட்சி (காங்கிரசு) ஆண்டது. மாண்புமிகு பண்டித சவகர்லால் நேரு முதல் தலைமையமைச்சரானார்; மூதறிஞர் இராசகோபாலாச்சாரியார் தலைமை ஆளுநரானார் (கவர்னர் ஜெனரல்).

தமிழ் மாநிலத்தையும் பேராயக் கட்சியே (காங்கிரசு) ஆண்டது; 1967இல் திராவிட இயக்கத்திடம் (தி.மு.க.) ஆட்சிப் பொறுப்புச் சென்றது. பேரறிஞர் அண்ணா முதலமைச்சரானார். ஆனால், ஒரே ஆண்டில் அவர் புகழுடம்பெய்தினார். (கி. பி. 1969) தொடர்ந்து திராவிட இயக்கமே (தி.மு.க., அ.அ.தி.மு.க.) தமிழகத்தை ஆண்டுவருகிறது.

தற்போது, (13-5-1996முதல்) டாக்டர் கலைஞர் மாண்புமிகு மு. கருணாநிதி (தி.மு.க.) தமிழக முதல்வராய் (நான்காம் முறை) விளங்குகிறார். இவர் மிகுந்த ஆட்சித் திறனுடையவர்; இன, மொழி உணர்வு மிக்கவர்; முத்தமிழறிஞர்; பட்டறிவு மிக்கவர்; சிறந்த எழுத்தாளர்; பேச்சாளர்; சொல்வன்மையர். இவர் ஆட்சியில் தமிழ் ஆட்சி அரங்கேறும்; இலக்கியம் புத்துயிர் பெறும். அது தமிழர்க்குப் புத்தொளி நல்கும்; உலகத் தமிழர்க்கும்,

---

32 விரிவிற்கு 346, 385ஆம் பாடகளின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.
33 விரிவிற்கு 570ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.
34 விரிவிற்கு 349ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.
35 விரிவிற்கு 365ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.
36 விரிவிற்கு 355ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

தமிழகத்துக்கும் பண்பாட்டுத் தொடர்பு இனி மலரும்; தமிழர் நாடுகளால் வேறுபட்டாலும் மொழியால் ஒருதாய் பிள்ளைகளாய் வாழ வாய்ப்புகள் கனியும் என்று உலகத் தமிழர் நம்புகின்றனர்.

## கஉ மலாயாவும் பழந்தமிழரும்

மலாயா[37]விற்கும் பழந்தமிழகத்திற்கும் கிறித்தவ ஆண்டு தொடங்குதற்கு முன்பிருந்தே (கி.மு. 500) தொடர்பு இருந்துவந்துள்ளது என்பதை அரசரத்தினம் முதலாய வரலாற்றறிஞர்கள் எடுத்துரைக்கின்றனர். அண்மையில் இதுகுறித்து ஆராய்ந்த இளம் ஆய்வாளர் ஒருவரும் இதனைச் சான்றுகளுடன் உறுதிப் படுத்தியுள்ளார்[38] அத் தொடர்பு தொடக்கத்தில் தமிழர்க்கு வாணிகத் தொடர்பாய் இருந்தது; பின்னர்ப் பண்பாட்டுத் தொடர்பாய் வளர்ந்தது; தொடர்ந்து அஃது அரசியல் தொடர்பாய் மாறிற்று. நீண்டகால ஓட்டத்திற்குப் பின் தொழில் நாடித் தமிழர் குடியேறும் தொடர்பாயிற்று; அத் தொடர்பால் அப்பழுக்கற்ற உழைப்பினைக் கொட்டிப் புதியதொரு நாட்டை உருவாக்கவும் அதன் அடிமை விலங்கை உடைத்தெறிந்து உரிமை பெற்ற குடிகளாய் நிலைத்து வாழவும் வாய்ப்புகள் தமிழர்க்கு உருவாயின.

### பழந்தொடர்பு

பழந்தமிழர் சிறந்த கடலோடிகளாய் விளங்கினர். அவர்கள் உலகின் பல பாகங்களுடன், வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். அவைபற்றிய குறிப்புகள் தமிழிலக்கியங்களில் அகச்சான்றுகளாய் ஆங்காங்கே படிந்துள்ளன; கல்வெட்டுகளிலும் செதுக்கப்பட்டுள்ளன; செப்பேடுகளில், மெய்க்கீர்த்திகளில் பதிந்துள்ளன. பிற நாட்டு வரலாற்று ஆசிரியரும் இவைபற்றிக் குறிப்பிட்டுள்ளனர்.

### பழந்தமிழரும் தென்கிழக்காசிய நாடுகளும்

தமிழகம் தென்கிழக்காசிய நாடுகளொடு சங்ககாலம் முதல் கொண்டிருந்த தொடர்பு பின்னர்ப் பல்லவர் காலத்தில் (கி.பி. 575 - 846) மேம்பட்டது; பிற்காலச் சோழர் காலத்தில் (கி.பி. 846 - 1279) உச்ச நிலையை அடைந்தது; பிற்காலப் பாண்டியர் காலத்தில் (கி. பி. 1279 - 1310) அது நீடித்தது; விசயநகர ஆட்சிக் காலம்வரை (கி. பி. 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிமுதல் 17ஆம் நூற்றாண்டின் முற்பகுதிவரை) நிலைத்திருந்தது என்று வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

---

37 1963ஆம் ஆண்டு ஆகஸ்டு 31ஆம் நாள்வரை மலாயா என்றே நாட்டின் பெயர் விளங்கிவந்தது. பின் சபா, சரவா, சிங்கப்பூர் ஆகிய பகுதிகள் இணைந்து பரந்த மலேசியாவாய் உருவாயிற்று; 1965இல் சிங்கப்பூர் பிரிந்து தனி நாடாயிற்று.

38 Rajantheran, M., *"Perdagangan awal di antara Alam Melayu dengan India". Jurnal Pengajian India, vol.6, (1996), p.81*

விசயநகர ஆட்சியின்போது கிருஷ்ணதேவராயர் (1509 - 29) காலத்தில் மலாக்காவின் தளபதியாய் விளங்கிய அங் துவா (Laksamana Hang Tuah) அரசப் பேராளராய்த் தமிழகம் சென்று இராயரைச் சந்தித்ததாயும், அங் துவா சரளமான தமிழில் பேசியதனைக் கேட்டு மன்னர் வியந்ததாயும் வரலாறு இயம்புகிறது.[39] இஃது இப் பகுதியில் தமிழ் வேரூன்றி இருந்தமையையும், ஆட்சித் துறையில் அது பெற்றிருந்த செல்வாக்கினையும் எடுத்துக்காட்டுகிறது.

பழந்தமிழர் மலாயா, சுமத்திரா, ஜாவா, போர்னியோ, சயாம், பர்மா (மியான்மார்) முதலாய தென்கிழக்காசிய நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர்; சில பகுதிகளைத் கைப்பற்றி அரசாண்டுள்ளனர். எனினும், கடாரத்துடன் (இன்றைய கெடா மாநிலம்) கொண்டிருந்த தொடர்பு முதன்மை வாய்ந்ததாகும். கங்கைகொண்ட முதலாம் இராசேந்திர சோழ மாமன்னனுக்குக் 'கடாரங் கொண்டான்' எனும் சிறப்புப் பெயர் வழங்குதல் இதனை மெய்ப்பிக்கும்.

தென்னகத்திலிருந்து வங்காள விரிகுடா வழியே செல்லும்போது 30 கல் தொலைவு இருக்கும் போதே கெடாவின் மலை உச்சியைக் (Kedah Peak - 3987 அடி) காண முடிந்ததாம்; அக் காலத்தில் அஃது அவர்களுக்கு ஒரு நில எல்லைக் குறியாகவும் (Land mark) திகழ்ந்ததாம். மேலும், கெடா (கடாரம்) பருவகாலம் (monsoon) வரும்வரை காத்திருக்கும் இடமாயும் விளங்கியது. மே மாதம்முதல் சூலை மாதம்வரை வீசும் தென்மேற்குப் பருவக்காற்றுக் காலத்தில்தான் தமிழகத்திலிருந்து பாய்மரக் கப்பல் வாயிலாய் மலாயாவிற்கு வர முடியும். அவ்வாறு வருவோர் உடனடியாய்த் தாயகம் திரும்ப இயலாது. அக்டோபர் மாதத்தில் தொடங்கும் வடகிழக்குப் பருவ காலத்தில்தான் அவர்கள் தமிழகம் திரும்ப இயலும். அதுவரை அவர்கள் இங்கேயே தங்கி இருப்பர்.

கெடாவிற்கு வந்தபின் தென்சீனக் கடல் வழியாய்ச் சீனா, இந்தோசீனா முதலாய நாடுகளுக்குச் செல்ல மலாயத் தீபகற்பத் தென்முனையைச் சுற்றி வருவதாயின் நெடுந்தொலைவு பயணம் செய்ய நேரும்; இடையிடையே கடற்கொள்ளையரை எதிர்கொள்ள வேண்டி இருக்கும். தங்கள் பொருள்களைக் (கப்பல் உட்பட) கிரா பூசந்தி வழியாக எடுத்துச் செல்லவும் கெடா தக்க இடமாய் விளங்கியது; காலப்போக்கில் நிலையாய்த் தங்கும் இடமாயும் மாறிற்று. மணிக்கிராமம்[40] முதலாய தமிழர் குடியேற்றப் பகுதிகள் பலவும் பண்டு இம் மண்டலத்தில் இருந்தன.

"கி. பி. 4ஆம் நூற்றாண்டில் தென்னிந்தியரின் அரசு தென்கிழக்காசியாவில் நிறுவப்பட்டதாய் வரலாற்றாசிரியர் குறிக்கின்றனர்.[41] தென்னிந்தியக் குடியேறிகள் மலாயத் தீபகற்பத்தில் மிகப் பழங் காலத்திலேயே தனிக்

---

39 Hikayat Hang Tuah, (அங் துவா வரலாறு - மலாய் நூல்) Kassim Ahmad, M.A. (Malaya), p. 339
40 Arasarathnam, S., History of Malaya and Singapore, pp. 28-29
41 மேலது

குடியரசுகள் பல அமைத்தனர். அவ் வரசுகளின் தோற்றத்தைப்பற்றித் தெளிவாய் அறிய இயலவில்லை. சீனாவின் காலவழிச் செய்திக் கோவைகள் அவ் வல்லரசுகளைப்பற்றிச் சில குறிப்புகளைத் தந்துதவுகின்றன[42]" என்கிறார் முனைவர் க. த. திருநாவுக்கரசு.

இப் பகுதியிலுள்ள மெர்போக் பூஜாங் ஆற்றுப் பகுதிகள் தென்னவர் - திராவிடர் குடியேற்றத் தலங்களாய்க் கி.பி. 4முதல் 12ஆம் நூற்றாண்டுவரை விளங்கின. இந்துமதம் மஜபாகித் அரசனது செல்வாக்கால் வளர்ந்தது. இந்து பௌத்தக் கோயில்கள் பல எழுந்தன. பூஜாங் பள்ளத்தாக்குப் புதைபொருள் ஆய்வுகள்[43] பல வரலாற்று உண்மைகளை வெளிப்படுத்தின. அப் பகுதிகளில் கண்டுபிடிக்கப்பட்ட பௌத்த, சைவ, வைணவ சமயச் சின்னங்கள், கலை, பண்பாட்டுச் சின்னங்கள், கோயில்கள், அரண்மனைகள் போன்றன தமிழர் இப் பகுதியில் பெற்றிருந்த வலிமைமிக்க செல்வாக்கினை மெய்ப்பிக்கின்றன.

பல்லவரும் சோழரும் இங்குப் பெரும் புகழுடன் விளங்கினர்; கடாரம் தென்னகத்தின் காலனியாய் - குடியேற்ற நாடாய் இல்லாமல் தென்னவர் நாகரிகத்தையும் பண்பாட்டையும் ஏற்றுக்கொண்ட இடமாய் - மையமாய் விளங்கியது. தென்னவராய திராவிடரால் இப் பகுதி மக்களின் வாழ்வில் பெருமளவு மாறுதல்கள் நிகழ்ந்தன.

தென்கிழக்காசிய நாடுகளின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றின் வரலாற்றைக் கூறும் நூல்களில் 'Indianization, Indian colonization' என்னும் சொற்கள் வழங்குகின்றன. இச் சொற்கள் குறிக்கும் பொருள் யாது என்பதனை அறிதல் நலம்.

"இந்திய நாட்டு அரசுகள் தென்கிழக்காசிய நாடுகளில் அரசியல் அல்லது காலனித்துவ ஆதிக்கம் செலுத்தின" என்னும் பொருளை 'Indianization' எனும் சொல்லாட்சி குறிப்பிடவில்லை. பின்னர் இச் சொல் எதனைக் குறிப்பிடுகிறது? இந்தியப் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றின் கூறுகளில் பலவற்றைத் தென்கிழக்காசிய நாடுகளின் அரசரும், அரசவையினரும், ஏனையோரும் விரும்பியேற்றுத் தம் பண்பாட்டுக் கூறுகளுடன் கலந்து தமக்கே உரிய பண்பாட்டையும் நாகரிகத்தையும் உருவாக்கிக் கொண்டனர். இம் முயற்சியில், இந்தியாவின் சமயக் கோட்பாடுகளும் வழிபாட்டு முறைகளும், அரசரை முக்கிய அம்சமாகக் கொண்டிருந்த இந்திய அரசியல் முறையும், சமற்கிருத மொழியும், இலக்கியமும் அடிப்படைக் கூறுகளாய் அமைந்தன" என்பதனைத்தான் 'Indianization' எனும் சொல் அல்லது 'இந்தியமயமாதல்' என்னும் சொற்றொடர் குறிப்பிடுகிறது.[44]

---

42 தென்கிழக்காசிய நாடுகளில் தமிழர் பண்பாடு, ப. 299

43 Warisan Lembah Bujang - Nik Hasan Shuhahni Abdul Rahim Othman Mohd Yeh University Kebangsaan Malaya (1992) பூஜாங் பள்ளத்தாக்கு - மலேசிய தேசியப் பல்கலைக்கழக வெளியீடு (மலாய்ப்புத்தகம்).

44 சிங்காரவேலு, ச., தென்கிழக்காசியாவில் இந்து சமயச் செல்வாக்கு, சென்னைப் பல்கலைக்கழகம், 1981 (தமிழ்த்துறை) வெளியிடும் 'தமிழாய்வு' - 12ஆம் தொகுதி

இங்ஙனம் கி. பி. 300ஆம் ஆண்டிலிருந்து மலாயாத் தீபகற்பம் மட்டுமல்லாது தென்கிழக்காசிய மண்டலம், தென்னவர் நாகரிகத்தையும் பண்பாட்டையும் தழுவிக்கொண்ட மையமாகவும் பகுதியாகவும் விளங்கிற்று. எட்டாம் நூற்றாண்டில் தென்கிழக்காசியாவின் பல பகுதிகள் தென்னிந்தியப் பண்பாட்டு மையமாக்கப்பட்டன.[45]

## மூன்றுவகைப் பண்பாட்டு அலைகள்

தமிழகத்திலிருந்து மூன்று வகைப் பண்பாட்டு அலைகள் அந் நாடுகளில் வீசியுள்ளன:

1. சங்க காலப் பண்பாட்டு அலைகள்
2. பல்லவர் காலப் பண்பாட்டு அலைகள்
3. சோழப் பெருவேந்தர் காலப் பண்பாட்டு அலைகள்[46]

அதனால், இப் பகுதி மக்களின் கலை, இலக்கியம், நாகரிகம், பண்பாடு, வாழ்வியல் முறைகள் புது உருவங் கொண்டன.

## முடிசூட்டு விழா

அரசர் முடிசூட்டு விழாச் சடங்குகள் முழுக்க முழுக்கத் தென்னிந்தியப் பண்பாட்டை ஒட்டியனவாகவே அமைந்துள்ளன. அக் கூறுகள் இன்றும் தொடர்கின்றன. அன்றாட வாழ்வில் பின்பற்றப்படும் பழக்க வழக்கங்களும் தொடர்ந்து வாழ்வு பெற்றே வருகின்றன. திருமணம் போன்ற சடங்குகளில் பன்னீர் தெளித்தல், அரிசி, மலர் தூவி வாழ்த்துதல் முதலாய மரபுகள் இன்றளவும் அவர்களொடு ஒன்றிக் கலந்துள்ளன; உணவுமுறைகளும் பெரிதும் ஒத்திருக்கின்றன.

## கலைகள்

மலாய்க்காரர் கலைகளில் - குறிப்பாக நடனங்களில் தென்னகக் கூறுகள் மிகுந்திருப்பதனைக் காணலாம். பினாங்கு வட்டாரத்தில் புகழ்பெற்று விளங்கும் டொண்டாங் சாயாங், கோத்தாபாரு பகுதிகளில் சிறப்புற்று விளங்கும் 'டிக்கிர்பாராட்' ஆகிய பாரம்பரிய இசைவடிவங்கள் தமிழகம் வழங்கிய கொடையாகும். இந்திய இசைக்கருவிகள் சிவவற்றையும் இன்றளவும் பயன்படுத்தி வருகின்றனர். பொம்மலாட்டம் தோற்பாவைக் கூத்து (Wayang Kulit) முதலாயவை இந்தியச் சார்புடையனவாகும்.

---

45 History of Malaya and Singapore

46 திருநாவுக்கரசு, க.த., தென்கிழக்காசிய நாடுகளில் தமிழர் பண்பாடு , ப. VI

### சமயம்

மலாயாவிலும் தொடக்க காலமுதல் இந்து சமயமே செல்வாக்குப் பெற்றதாய் விளங்கியது. கி.பி. 4, 5ஆம் நூற்றாண்டுகளில் சைவ, வைணவ சமயங்கள் உயர்நிலை எய்தின. கி.பி. எட்டாம் நூற்றாண்டு தொடங்கிச் சில நூற்றாண்டுகள் இவ் வட்டாரத்தில் (இந்தோனேசியா) சைலேந்திரர் (Sailandra) வலிமை பெற்று இந்து சமயத்தை வளர்த்தனர் என்பதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும்.

### சைலேந்திரா - ஒரு விளக்கம்

'சைலம்' என்றால் 'மலை' என்று பொருள். அது கைலங்கிரி எனப்படும் இமயமலையைக் குறிக்கும். சைலேந்திரர் என்பது சைலம் + இந்திரர் (சிவபெருமானின் பிரதிநிதி) என்று பிரிக்கப்படும். அரசரைக் கடவுளின் அம்சமாய்க் கொள்வது அவர்தம் மரபு (dewajara).

### தேவராஜன்

இறைவன் முறையே உலகைக் காப்பதுபோல் அரசனும் முறைசெய்து நாட்டைக் காப்பதால் அவன் இறைவனோடு ஒப்பிடப்படுகிறான்.[47] இதற்குரிய சான்றுகள் பின்னால் (பண்பாட்டுக்கலப்பு) காட்டப்பட்டுள்ளன.

பெரும்பாலும் தென்கிழக்காசிய மன்னர்கள் கடவுளின் திருவிறக்கம்போல் கருதித் தங்கள் பரம்பரையை நிறுவினர்; மேருமலையின் உச்சியிலிருந்து வந்ததாய்க் கூறுவர். எடுத்துக்காட்டாக மலாய்க்காரர் தங்கள் பரம்பரையை 'புக்கிட் சிகுந்தாங்' (Bukit Siguntang Mahameru) மகாமேருவில் இருந்து வந்ததாய்க் நிறுவுவர். 'Bukit seguntang' என்பது பலம்பாங்கிலுள்ள ஒரு மலையின் பெயர். அதனோடு மகாமேரு (Mahameru) என்ற பெயரை இணைத்துத் தங்கள் பரம்பரையின் மேன்மையைக் காட்டுவர் மலாய் மன்னர்[48].

### சைலேந்திரர் யார்?

சைலேந்திரர்பற்றி வலராற்றுப் பேராசிரியர் நீலகண்ட சாத்திரியார், மலையரசன் (King of the Kings) என்று சிவபெருமானே அதிகம் சொல்லப்படுவதால், அடிப்படையில் சைலேந்திரர் இந்தியப் பரம்பரையைச் சேர்ந்தவர்களாய் இருக்கக் கூடுமென்று உய்த்துணர்ந்துள்ளார்.·தமிழ்நாட்டில் பாண்டிய மன்னர்கள் மீன்கொடியினர்; அதனைச் சின்னமாயும் கொண்டவர்;

---

*47 Gonda, J., Ancient Indian Kingship from the religious point of view, Leiden : E.J. Brill, 1969, p.1*

*48 Rajantheran, M., Sejarah Melayu : Kesan Hubungan Kebudayaan Alam Melayu dan India. Tesis Ph.D. University Malaya, 1994, pp. 306, 313-14*

அதனைப்போலவே ஜாவாவின் சைலேந்திரரும் மீன்கொடியினர்; அதனைச் சின்னமாயும் கொண்டவர்; தொடக்கத்தில் சிவனை வழிபட்டவர். இந்த அடிப்படையில் ஜாவாவில் சைலேந்திரர் பாண்டியரோடு ஒற்றுமையுடையவராதலால், அவர்களுக்குப் பாண்டியர் முன்னோராய் இருக்கலாமென்பது சாத்திரியார் கருத்தாகும்[49]. ஆனால் இவர்கள் ஜாவானிய மரபினர் ஆவர்.

## சைலேந்திரர் ஆட்சியும் சமயமும்

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் பல குறுநில மன்னர்கள் ஜாவாவை ஆட்சி செய்தனர். அவர்களில் சஞ்சயன் (Senjaya) என்பவனும் ஒருவன். தனது ஆற்றலால் சஞ்சயன் (கி. பி. 732 - 760) மற்ற அரசர்களை வென்று பேரரசனாய் உருவானான்; சைலேந்திரர் தலைமுறையை நிலைநிறுத்தினான். இவனது ஆட்சியின் சின்னமாய் மாத்தாரம் (Mataram) என்று சொல்லக்கூடிய இடத்தில் பெரிய சிவன்கோயில் ஒன்றை எழுப்பினான். இதனைத் தவிர்த்து மிகுதியாய வேறு வரலாற்றுச் செய்திகள் கிடைத்ததாய்த் தெரியவில்லை.

இவர்களது ஆட்சியில்தான் போரேபோடார் (Borabodor) என்னும் மாபெரும் பௌத்த விகாரம் (Vihara) ஜாவாவில் எழுப்பப்பட்டது. இக் கட்டடம் மனிதன் கீழ்நிலையிலிருந்து விளக்கம் பெறுவதைக் காட்டுவதாய் அமைந்துள்ளது. அஃதாவது மனிதன் சாதாரண நிலையிலிருந்து புத்தனாகும் நிலையைக் காட்டுவதாகும். இந்துக்கள் 'வீடு' என்று சொல்கிறார்களே அதுபோல். ஆனால் புத்த மதத்தினர் கடவுள் மறுப்புக் கொள்கையினர் என்பது ஈண்டுக் கருத்தில் கொள்ளத்தக்கது. சைவர்களாய்த் தொடக்கத்தில் இருந்த சைலேந்திரர், பின் புத்த மதத்தைத் தழுவினர்; இடையிடையே சைவத்திற்கும் திரும்பியுள்ளனர்[50].

மலாயாவில் தொடக்ககாலத்தில் இந்து சமயமே செல்வாக்குப் பெற்றிருந்தது. கி.பி. நான்கு ஐந்தாம் நூற்றாண்டுகளில் சைவ வைணவ சமயங்கள் உயர்நிலை பெற்றிருந்தன. தென்கிழக்காசிய அறிஞர் பெருமக்கள் சமயங்களைப் பின்பற்றியோர் என்னும் அளவில் நின்றுவிடாது இந்து சமயங்களுக்குப் பெரு விளக்கம் எழுதும் வல்லுநராயும், தங்கள் மொழியில் மூலநூல் எழுதும் வல்லுநராயும் விளங்கினர். சடங்கு, வழிபாட்டொடு நின்றுவிடாமல் பல்வேறு நிலைகளில் மக்களது அன்றாட வாழ்வுடன் சமயம், ஒன்றி நிற்கின்றது; கலை, இலக்கியம் வாழ்வியல் அனைத்திலும் ஊடுருவி இருக்கிறது.

---

49 Nilakanta Sastri, History of Srivijaya, Madras : University of Madras, 1949, p. 49
50 a, Hall, D. G. E., A History of South-East Asia, London : MacMillan & Co., 1955, p. 47
b; Seeal Wolters, D.W., The Fall of Srivijaya in Malay History, Kuala Lumpur : Oxford University Press, 1970, pp. 90,100

## இசுலாம்

தொடக்க காலத்தில் இங்கு இந்துக்களாகவும் (சைவ, வைணவம்) இருந்த மலாய்க்காரர்கள், பின்னர்ப் பௌத்த மதத்தையும் தழுவி வாழ்ந்தனர்; 13ஆம் நூற்றாண்டில் இசுலாத்தைத் தழுவத் தொடங்கினர். இன்று தீபகற்ப மலேசியாவில் உள்ள மலாய்க்காரர் எல்லாருமே முசுலிம்கள் ஆவர்.

## மலாய்மொழியில் தமிழின் செல்வாக்கு

இவ்வாறு தொட்டில் முதல் சுடுகாடுவரை எல்லா நிலைகளிலும் தமிழ் - தமிழர் செல்வாக்கு மலாய்க்காரர் வாழ்வொடு பின்னிப் பிணைந்துள்ளது என்பதனை வரலாற்றாசிரியர் சான்றுகளுடன் தெளிவுபடுத்தியுள்ளனர்.[51] ஆராய்ச்சி வல்லுநர் முன்வந்து இருவர்தம் பண்பாடு, கலை, மொழி முதலாயவைபற்றி விரிவான ஒப்பீட்டாய்வு செய்தால் எத்தனையோ உண்மைகள் வெளிப்படும். ஆப்பிரிக்கர் - திராவிடர் ஒப்பீட்டு ஆய்வினால் அவர்களுக்கும் திராவிடர்களுக்கும் இடையே எத்துணை ஒற்றுமைக் கூறுகள் இருக்கின்றன என்பதனைத் தாயம்மாள் அறவாணன் (ஆப்பிரிக்க - திராவிடர் ஒப்பீடு) எடுத்துக்காட்டியுள்ளார் என்பது ஈண்டு நினைவுகூரத்தக்கது.

## இன்றைய மலாய்மொழி நிலை

மலாய்மொழியும் மலாய்க்காரரும் இன்று அடைந்திருக்கும் வளர்ச்சி வியந்து போற்றத்தக்க ஒன்று. விடுதலை பெறுதற்கு முன் மிகச் சாதாரண நிலையில் இருந்த மலாய்மொழி இன்று உலகறிந்த ஒன்றாய் ஆசியான் வட்டார மொழிகளுள் தலைமை சான்றதாய், பல்கலைக்கழகம்வரை பாடமொழியாய் உயர்ந்துள்ளது. தேசிய மொழி வளர்ச்சி நிறுவனம்[52] (Dewan Bahasa dan Pustaka) ஒன்றனை அமைத்து அதன் வளர்ச்சிக்கு அரசு செய்துள்ள ஏற்பாடுகள் வியந்து பாராட்டத்தக்கன; பிறரும் பின்பற்றத்தக்கன; இன்று தென்கிழக்காசிய வட்டாரத்தில் (மலேசியா, இந்தோனேசியா, சிங்கப்பூர், புருணை, மணிலா) மலாய்மொழி பேசுவோர் எண்ணிக்கை பதினைந்து கோடிக்கு மேலாகும் என்பது குறிப்பிடத்தக்கது. இலங்கை (Sri Lanka)யில்கூட இம் மொழி பேசுவோர் (சிறுபான்மையர்) வாழ்கின்றனர். உலகளாவிய அளவில் மலாய்க்காரரைப் பண்பாட்டு அடிப்படையில் ஒன்றிணைக்கும் முயற்சிகளும் நடந்து வருகின்றன.

---

51 *However the longterm contacts and influences left their traces in the large number of words adopted into the Malay language. Words of Mligi such as prayer and fasting shall and means; words of law courts, prison and punishment and words about monorchs and Royalty such as King, Minister, Home and Palace all come from the Tamil traders - Malaysia in Colour by David Day.*

52 இந் நிறுவனம் 'கள்ளோ காவியமோ' என்னும் டாக்டர் மு. வ. புதினத்தை மலாய்மொழியில் (Balada Cinta) பெயர்த்து வெளியிட்டுள்ளது (1993).

## இருவழித் தொடர்பு

சோழ மண்டலத்திற்கும் தென் கிழக்காசிய நாடுகளுக்கும் இடையே இருந்துவந்த தொடர்பு ஒருவழித் தொடர்பாய்மட்டும் இருந்ததில்லை; இருவழித் தொடர்பாயும் விளங்கிவந்தது. சோழ மண்டல வணிகர் ஸ்ரீவிசயத் துறைமுகங்களில் வணிகம் செய்தது போலவே இந்தோனேசிய ஜாவா வணிகர், சோழ மண்டலத் துறைமுகங்களிலும் குறிப்பாக நாகப்பட்டினத் துறைமுகத்திலும் தங்கியிருந்து நடவடிக்கைகளை மேற்கொண்டிருந்தனர்[53].

## கடாரப் படைஎடுப்பு (கி. பி. 1025)

"முதலாம் இராசராசசோழன் ஆட்சியின் பிற்பகுதியிலும், முதலாம் இராசேந்திரசோழன் ஆட்சியின் முற்பகுதியிலும் சோழப் பேரரசும் கடாரப் (பட்டினப்பாலையில் இது காழகம் என்று குறிக்கப்படுகிறது)[54] பேரரசும் நட்புக்கொண்டிருந்தன; அந் நிலையிலிருந்த அவ் விரு இராச்சியங்களும் ஒன்றன்மேல் ஒன்று போர் தொடுக்கும் நிலையை எய்தியமைக்குக் காரணம் நன்கு புலப்படவில்லை" என்று கூறுகிறார் தி. வை. சதாசிவ பண்டாரத்தார்.[55]

இவ் வட்டாரத்தின் சில பகுதிகளில் 'பல்லவரும் சோழரும் ஆட்சி புரிந்தனர்' என்னும் குறிப்புக் கிடைக்கிறது, என்றாலும் தமிழர் நாடு பிடிக்கும் நோக்கத்தோடோ தங்கள் சமயம், நாகரிகம், பண்பாடுகளைப் பரப்பும் நோக்கத்தோடோ கடாரத்துக்கு வந்ததாய்த் தெரியவில்லை. வணிகமும் இருவழி உறவுகளுமே நோக்கமாய் இருந்திருக்கின்றன. இந் நிலையில் கடாரத்தின்மேல் இராசேந்திர சோழன் படையெடுத்ததாய்க் கூறுதல் வியப்பாய் உள்ளது. சோழர் வரலாறு கூறும் மெய்க்கீர்த்திகளிலோ, கல்வெட்டுகளிலோ, செப்பேடுகளிலோ இதற்குத் தெளிவாய குறிப்புகள் இல்லை; "கடாரப் போரில் கடார மன்னன், சங்கிராம விசயோத்துங்க வர்மனை வென்றபின் நாட்டைக் கைப்பற்றி ஆண்டதாய்த் தெரியவில்லை. ஸ்ரீவிசய நாட்டை அடிமைப்படுத்திக் கடார மன்னனைக் கப்பம் கட்டும் சிற்றரசனாக்க இராசேந்திரன் எண்ணியதாயும் தெரியவில்லை"[56] என்று வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின்றனர்.

இப் போர் நிகழ்ந்ததற்கு வரலாற்றாசிரியர் ஒவ்வொருவரும், ஒவ்வொரு காரணத்தைச் சொல்கின்றனர். "சோழநாட்டின் கடல் வாணிகத்தைப் பெருக்கவும் தமிழ் வணிகர்க்கு இன்னல் புரிந்துவந்த கடார அரசனைத்

---

53 Rajantheran, M., Sejarah Melayu : Kesan Hubungan Kebudayaan Alam Melayu dan India, Tesis Ph.D. University Malaya, 1994, pp. 117-118

54 ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும், பட்டினப்பாலை, 191

55 பிற்காலச் சோழர் சரித்திரம் (முதற்பாகம்), அண்ணாமலை பல்கலைக்கழக வெளியீடு (1954), இரண்டாம் பதிப்பு, ப. 168

56 வாழ்வியற் களஞ்சியம் - தொகுதி நான்கு, தஞ்சைப் பல்கலைக்கழக வெளியீடு (1989), ப. 27

தண்டிக்கவும் இராசேந்திரன் கடாரத்தின்மீது படையெடுக்க நேர்ந்தது" என்கிறது வாழ்வியற் களஞ்சியம். வீரத்திலும் ஆட்சி நிருவாகத்திலும் ஈடுஇணையற்றவன் இராசேந்திர சோழன்; தந்தையைப் போலவே பெருவீரன்; வலிமைமிக்க மாபெரும் கடற்படையையும் கொண்டிருந்தான். "கிரேக்க நாட்டு வீரன் அலெக்சாந்தருடனும் இவன் ஒப்புமை கூறத்தக்கவன்" என்று வரலாற்றாசிரியர் இவனைப் புகழ்கின்றனர்; இலங்கையுடன் இந்தியாவின் பெரும் பகுதியையும் தன் ஆளுகைக்கீழ்க் கொண்டுவந்த அவன், மனம் வைத்திருந்தால் தென்கிழக்காசியா முழுவதையுமே கைப்பற்றித் தன் பேரரசுடன் இணைத்துக் கொண்டிருக்க முடியும். ஆனால், கடாரத்தை வென்ற பிறகு அந் நாட்டுப் பட்டத்து யானையையும், பெரும் பொருளையும், வித்தியா தோரணம் முதலாயவற்றையும் அவன் கவர்ந்துகொண்டு சென்றான்"[57] என்றுமட்டுமே மெய்க்கீர்த்தி கூறுகிறது.

இங்ஙனம் சொல்லப்படும் காரணங்களில் கீழ்க்காணும் காரணமும் ஒன்று. "ஸ்ரீவிஜயா (Srivijaya) மலாய் உலகின் (Malay World) வாணிகம் முழுமையையும் தன் கட்டுப்பாட்டில் வைத்துக்கொள்ளத் தொடங்கியது. இதன்வழிப் பொருள்களின் விலையைத் தானே நிருணயிக்கும் வலிமையைப் பெற்றிருந்தது. சோழநாட்டு வணிகர்களுக்கு இஃது ஒரு பேரிடியாய் ஆனது. வாணிகம் சரியாக நடைபெறாததால் சோழமன்னனுக்குக் கிடைத்துவந்த திறைப்பணம் குறைந்துபோயிற்று. நிலைமை மோசமடையவே சோழன் படையெடுத்து வந்தான்; அரசனைக் கண்டு நிலைமையைச் சீர்செய்தான்; ஏகபோகத் தனியுரிமையைப் போக்கினான்[58]. இது ஒப்புக்கொள்ளக் கூடிய காரணமாகவே படுகிறது.

மேற்சொன்ன செய்திக்குச் சான்றாய்ச் சுப்பிரமணிய ஐயர் எடுத்துக் காட்டும் சோழநாட்டுக் கல்வெட்டுக் குறிப்பு ஒன்று விளங்குகிறது. "கடாரத்துத் தூதுவர் இருவர் (ராஜ வித்தியாதரர், அபிமனோதுங்கன்) சோழநாட்டுக்கு வந்து நடந்து முடிந்த போரில் விரிசல் அடைந்த உறவை மேம்படுத்தினர். இது முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தில் (1070 - 1122) நடந்ததாய்க் குறிப்புச் சொல்கிறது"[59].

---

57 "அலைகடல் நடுவுள் பலகலஞ் செலுத்தி
சங்கிராம விசையோ துங்க வர்ம
னாகிய கடாரத் தரசனை வாகையும்
பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத்
துரிமையிற் பிறக்கிய பருநிதிப் பிறக்கமும்
ஆர்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமு மொய்த்தொளிர்
புனை மணிப் புதவமுங் கனமணிக் கதவமும்
........................................................"

58 *Nilakanta Sastri, K.N., History of Srivijaya, pp 80-82, 131*

59 *Subramania Aiyer, K.V., The Smaller Leiden Plates (of Kulottungan-1) Epigraphia India, Jil. 22, pp.213- 266*

## கடாரப் படையெடுப்பின் விளைவுகள்

“கடாரப் படையெடுப்பின்போது இராசேந்திரன் கடாரத்தைமட்டுமன்றி அதனொடு தொடர்புடைய எல்லாப் பகுதிகளையும் வென்றிருக்கிறான்”[60] என்று மெய்க்கீர்த்தி கூறுகிறது.

ஆயிரக் கணக்காய கல் தொலைவு கப்பற்படை நடத்திவந்து இந்த இடங்களை வென்ற மாபெரும் போர்வீரனாய இராசேந்திரன், வெறுமனே விட்டுவிட்டுச் சென்றிருப்பான் என்று எண்ணத் தோன்றவில்லை. ஏதோ ஒருவகையில், அந் நாடுகளைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்திருப்பான் என்றே தோன்றுகிறது. இதனைப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரையார் குறிப்புகளும் உறுதிப்படுத்துகின்றன[61].

இராசேந்திரன் படையெடுப்பிற்குப்பின் 43 ஆண்டுகள் கழித்து அவன் மரபில் வந்த வீர இராசேந்திரன் கி. பி. 1068இல் தன் படைத்தலைவர்களை அனுப்பி மீண்டும் அவற்றை வென்றான். அரசுரிமை காரணமாய் எழுந்த பூசலில், அரசிழந்து தன்னிடம் அடைக்கலம் புகுந்த கடார இளவரசனுக்கு உதவும்பொருட்டு இப் படையெடுப்பு நடந்தது. இந் நிகழ்வுகளெல்லாம் சோழப் பேரரசு கடாரத்தின்மீது கொண்டிருந்த மேலுரிமையை மெய்ப்பிக்கின்றன.

தென்கிழக்காசிய நாடுகளில் தென்னவர் ஆதிக்கம் நெடுங்காலம் நிலைத்து இருந்ததற்குரிய சான்றுகள் சமயக் கோட்பாடுகளாய், வழிபாட்டு உருவங்களாய், ஆன்மிகச் சிந்தனைகளாய், சிற்பங்களாய், கட்டடங்களாய்ப் பதிந்தன. அவற்றின் எச்சங்கள் இன்றும் காட்சியளித்துக் கொண்டிருக்கின்றன.

பர்மா, சயாம், மலாயா, இந்தோசீனா, இந்தோனேசியா, பாலி முதலாய நாடுகள் தமிழர் பண்பாட்டை ஆர்வத்தொடு தழுவிக்கொண்டன.

மேலும் ‘சைவ,[62] வைணவ, பௌத்த சமயங்களை இந் நாடுகளில் வேரூன்றச் செய்த தமிழரே, மேலை அரபுநாட்டார் சமயமாய இசுலாத்தையும் கொண்டுவந்து பரப்பினர்’[63] என்பது குறிப்பிடத்தக்கது.

---

60 1. ஸ்ரீவிசயம், 2. பண்ணை, 3. மணலூர், 4. மாயிருடிங்கம், 5. இலங்காசோகம், 6. பப்பாளம், 7. தலைக்கோலம், 8. தமாலிங்கம், 9. இலாமுரிதேசம், 10. நக்கவாரம் (நிக்கோபார்) வரலாற்றுச் சான்று : Krishnan, K.G. "*Chola Rajandra's Expedition to South-East Asia*" *Studies in South Indian History and Epigraphy*. *Madras: New Era Publications*, 1981, pp. 158-159

61 அப்பாத்துரை, கா., தென்னாட்டுப் போர்க்களங்கள், ப. 239

62 சைவம் 5000 ஆண்டுகளுக்கு முன்பே இப் பகுதியில் பரவியதாய் டான்ஸ்ரீ உபைதுல்லா கூறுகிறார்; இதற்காய ஆதாரம் சீன எழுத்தாளர் நூல்களில் உள என்கிறார் (கூட்டங்களில் பேசியவை; நேர்காணலில் கூறியவை).

63 சிங்காரவேலு, ச., தென்கிழக்காசியாவில் இந்துசமயச் செல்வாக்கு, சென்னைப் பல்கலைக்கழகம், 1981, தமிழாய்வு 12ஆம் தொகுதியிலிருந்து எடுத்தாளப்பட்டது.

நிலப்படம் 4 : முதலாம் இராசேந்திர சோழன் கடாரப் படையெடுப்பில் வென்ற இடங்கள்

**சான்று : பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி-1**



"தென்கிழக்காசிய மக்களிடையே தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் வெளிநாட்டாரின் வற்புறுத்தலினாலோ திடீரென்றோ பரவவில்லை. அக் கூறுகள் மக்களே விரும்பி ஏற்றுக்கொள்ளும் முறையில் அமைதியாய்ப் பரவுவதற்குப் பல நூற்றாண்டுகள் ஆயின" என்று மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் முன்னாள் பேராசிரியரும் தலைவருமான முனைவர் சிங்காரவேலு கூறும் கருத்துகள் ஈண்டுக் கருதத்தக்கன.[64]

சோழர் கடாரத்தொடும், தென்கிழக்காசிய நாடுகளொடும் கொண்டிருந்த அரசியல், கலை, பண்பாட்டுத் தொடர்புகள், அக் காலத்தொடு முற்றாய் அழிந்துவிடவில்லை; அரச குடும்பங்களுடன் அவர்களுக்குண்டாய தொடர்பு இன்றும்கூடத் தொடர்கிறது எனலாம். ஆம்! மலேசியாவின் விடுதலைத் தந்தை துங்கு அபுதுல் ரகுமான் புத்ரா அல்ஹாஜ் சோழ மரபினர் என்று மலேசிய இந்தியரின் முன்னாள் தலைவர் துன் சம்பந்தன் அடிக்கடி கூறுவார்.[65] அரச குடும்பங்களில் இன்றுவரை வழக்கிலிருக்கும் இராஜா சூலான்,[66] துங்கு,[67] ராஜா[68] முதலாய அடைமொழிகளும் சான்று பகர்கின்றன.

இவ்வாறு ஒரே குடும்பத்தினர்போல மலாய்க்காரரும் தென்னகத்தாரும் பழகிவந்த தொடர்பு அறுபடாமல் இன்றுவரை தொடர்கின்றதா என்றால் இல்லை. இப்போதைய தமிழர் - இந்தியர் அத் தொடர்ச்சியினர் அல்லர். தமிழகத்தில் சோழப் பேரரசு சரிந்தபின்னும் தொடர்பு தொடர்ந்ததெனினும் நாயக்கர் காலத்திற்குப் பிந்தைய நிலை சரியாய்த் தெரியவில்லை. பழந்தமிழரின் தொடர்ச்சியினர் என்று சுட்டிக் காட்டிச் சொல்லத்தக்க அளவில் உள்ளவர் மலாக்காச் செட்டிகளே.[69]

தமிழகத்துடன் இருந்த நேரடித் தொடர்பு நீங்கிய பின்னும் சுல்தான்கள் (மாநிலச் சிற்றரசர்) ஆட்சி பல்வேறு தடைகளொடு நீடித்துவந்தது. மலாயாத் தீபகற்பப் பதினொரு மாநிலங்களுள் ஒன்பது மாநிலங்களில் சுல்தான்கள் மரபு இன்றும் நீடித்துவருகிறது. பினாங்கிலும், மலாக்காவிலும் சுல்தான்கள் இல்லை; அம் மாநிலங்களின் ஆட்சித் தலைவர் ஆளுநர் ஆவர்.

---

64 நேர்காணலின்போது கூறியது

65 சென்னையில் 1977இல் நடைபெற்ற முதலாம் உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாட்டில் தலைமைத் தொகுப்பாசிரியர் முரசு. நெடுமாறன் படைத்த கட்டுரை. 'தென்கிழக்காசிய நாடுகளில் தமிழர் பண்பாடு' என்னும் நூலில் 'தமிழ் மணக்கும் மலேசியா' என்னும் தலைப்பின்கீழ் இடம்பெற்றுள்ள செய்திகள் யாவும் மேற்படி கட்டுரையில் உள்ளவை. பக்.343 - 361

66 இராசராச சோழன்

67 துங்கு - துங்கம், உயர்ச்சி, பெருமை. துங்கன்-மேன்மையுடையோன் என்பன அகரமுதலி கூறும் பொருள்கள். குலோத்துங்கன் முதலாய சோழவேந்தர் பெயர்கள் இங்கு நினைவு கூரத்தக்கன.

68 அரசன்

69 விரிவிற்கு 168ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

## மலாக்கா அரசமரபு

'மலாக்கா' என்பது தமிழ்ச்சொல் ஆகும். 'ஆமலக்காய்' என்றால் நெல்லிக்காய். முன்னுள்ள 'ஆ' கெட்டு, மலாக்கா என்று ஆயது; இதனை 'மரூஉ' என்பர். இப் பெயரைச் சூட்டியவன் பரமேசுவரன்[70]. இவன் பலம்பாங் என்னும் ஊரிலிருந்து வந்த ஓர் இந்து அரசன். இவன் 14ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் மலாக்காவில் தன் ஆட்சியை நிறுவி ஆண்டு வந்தான்; சீனாவொடு நெருங்கிய தொடர்பும் தென்னகத்தொடு ஓரளவு தொடர்பும் கொண்டிருந்தான். இவன் சுமத்திராவை ஆண்டு வந்த முசுலிம் மன்னன் மகளை மணந்து இசுலாத்தைத் தழுவினான்;[71] தன் பெயரையும் 'இஸ்கந்தர் ஷா' என மாற்றிக் கொண்டான். பின் இவன் தலைமுறையினர் முசுலிம் சமயத்தைச் சார்ந்தனர். அதனால், மிகுதியாய முசுலிம் வணிகர் மலாக்காவிற்கு வரத் தொடங்கினர்.

கி.பி. 1414இல் இவன் மறைந்தபின் இவன் தலைமுறை தொடர்ந்து ஆட்சிபுரிந்தது. இத் தலைமுறையினர் 100 ஆண்டுகள் மலாக்காவை ஆண்டனர். இறுதிச் சுல்தான் மாமூத் ஷாவுடன் மலாக்காச் சுல்தான்கள் ஆட்சி (கி. பி. 1511இல்) ஒரு முடிவிற்கு வந்தது.

| | |
|---|---|
| 1511இல் | - மலாக்கா போர்த்துகீசியர் வயமானது. அவர்கள் 130 ஆண்டுகள் ஆண்டனர். |
| 1641இல் | - மலாக்கா டச்சுக்காரர் கைக்கு மாறியது. |
| 1786இல் | - பினாங்கு பிரிட்டிஷார் கைக்கு வந்தது. பிரான்சிஸ் லைட் என்பவர் அரசாங்கத்துக்காகவும் கிழக்கிந்தியக் கம்பெனிக்காகவும் பதவி வகித்தார். |

தென்கிழக்காசிய மக்கள் ஒரு காலத்தில் தென்னாட்டுப் பண்பாட்டை விரும்பித் தழுவிக்கொண்டனர். இன்று தமக்கெனத் தனித்த நாகரிகத்தையும் பண்பாட்டையும் உடையவராய்த் திகழ்கின்றனர். எனினும், அவர்களது வாழ்வில் பழைய கூறுகள் இழையோடி இருப்பதனை மறுக்க, மறைக்க இயலாது; ஈண்டுச் சில கூறுகளை ஆய்வாம்.

## மலாய்மொழியில் தமிழின் செல்வாக்கு

"மலாய்மொழி பாலினீசிய மொழிக் குடும்பத்தைச் சேர்ந்தது" என்பார் மொழியியலார்; இம் மொழிக் கென்று சொந்த வரிவடிவம் இல்லை. கி.பி. 12ஆம்

---

70 சோழர்குலப் பெண்ணொருத்தியை இவன் மரபினருள் ஒருவன் மணந்ததாய்க் குறிப்புள்ளது.

71 *Singaravelu, S., Hubungan antara kaum India dengan negeri Melaka - suatu tinjauan berdasarkan sumber-sumber India dan sumber-sumber lain. "Esei - esei budaya dan sejarah Melaka, 1989, pp.27*

நூற்றாண்டில் இம் மொழியில் இராமாயண பாரதக்கதைகள் கிரந்த எழுத்து வடிவில் எழுதப்பட்டன. ஆனால், பின்னாளில் சாவக எழுத்துமுறை செல்வாக்குப் பெற்றது. சாவக எழுத்து முறை பல்லவ கிரந்த எழுத்து வடிவிலிருந்து வளர்ந்ததாகும். அது வடக்கு மலேசியாவிலும் தாய்லாந்திலும் கி.பி. 4ஆம் நூற்றாண்டிலிருந்து 9ஆம் நூற்றாண்டுவரை வளர்ந்து ஓங்கிற்று. 14ஆம் நூற்றாண்டில் மலாய்மொழி அரபு எழுத்துமுறையை மேற்கொண்டது. இப்பொழுது ரோமன் எழுத்தும் நடைமுறைக்கு வந்துள்ளது. அலுவல் முறைகளுக்கு இவ் வெழுத்துப் பயன்படுகிறது.

தென்னாட்டார்க்கும் மலாய்க்காரருக்கும் இருந்துவந்த நீண்ட தொடர்பினால் நாகரிகமும் பண்பாடும் ஈண்டுப் பரவியதனைப் போல, மலாய்மொழியிலும், தமிழ்ச்சொற்கள் கலந்தன; சமய வழிபாட்டுச் சொற்கள், உறவுச் சொற்கள், அரசியல், ஆட்சித்துறைச் சொற்கள் என எண்ணற்ற சொற்கள் கலந்தன. மலாய்மொழியில் தமிழ்ச்சொற்கள் கலந்து மலாய்மொழிச் சொல்போலவே வடிவம் பெற்றன. சில சொற்களின் பொருளும் தேவைக் கேற்ப மாற்றம் பெற்றன. சில எடுத்துக்காட்டுகள்.[72]

### உணவு தொடர்பாய சொற்கள்

| தமிழ் | மலாய் | பொருள் |
|---|---|---|
| அப்பம் (Appam) | - Apam | (மலாய் சுய பலகாரம், இனிப்பு நீர்) |
| கஞ்சி (Kanji) | - Kanji | கஞ்சி நீர்ச் சோறு |
| கறி (Kari) | - Kari | குழம்பு |
| மாங்காய் (Mangkay) | - mangga | மாங்காய் |
| மாம்பழம் (Mampalam) | - Mampalam | மாம்பழம் |
| வெண்டை (Vendi) | - Bendi | வெண்டைக்காய் |
| முருங்கை (Murunkai) | - Murunggai | முருங்கைக்காய் |

### வணிகச் சொற்கள்

| | | |
|---|---|---|
| கடை (Katai) | - Kedai | கடை |
| கிடங்கு (Kitanku) | - Gudung | கிடங்கு |
| கப்பல் (Kappal) | - Kapal | கப்பல் |

72 On the phonetic and grammatical aspects of Tamil loan words in Bahasa Malaysia, Asmah Haji Omar, "The Nature of Tamil Loan Words in Malay" proceeding of the First International Conference. Seminar of Tamil Studies, Vol. 2, Kuala Lumpur, 1967, pp.534 - 58
(முதலாம் உலகத் தமிழ் மாநாட்டில் (1966) அஸ்மா ஹாஜி ஓமார் "தமிழிலிருந்து மலாய்மொழி பெற்ற கடன் சொற்கள்" என்னும் தலைப்பில் படித்த கட்டுரை.)

**அலங்காரம் / அணிகலன்கள்**
**Ornaments / adornments**

| | | |
|---|---|---|
| கொண்டை (Kontai) | - Konde | கொண்டை |
| மாலை (Malai) | - Male | மாலை, பூச்சரம் |
| மாணிக்கம் (Manikkam) | - Manikam | மாணிக்கம் |
| மீசை (Misai) | - Misai | மீசை |
| தாலி (Tali) | - Tali | கயிறு, தாலி |

**வீட்டுப் பொருள்கள்**

| | | |
|---|---|---|
| கட்டில் (Kattil) | - Katil | கட்டில் |
| கெண்டி (Kendi) | - Kendi | கெண்டி |
| பெட்டி (Petti) | - Peti | பெட்டி |
| தாம்பாளம் (Tambalam) | - Talam | தட்டு |

**உறவுச் சொற்கள்**

| | | |
|---|---|---|
| அம்மா (Amma) | - Emak | அம்மா |
| அப்பா (Appa) | - Bapa | அப்பா |
| ஐயா (Ayya) | - Ayah | தந்தை, உயர்ந்தோர் |
| மாமா (Mama) | - Mamah | மாமா |

**பிறசொற்கள்**

| | | |
|---|---|---|
| செருப்பு (Ceruppu) | - Cerpu | Sandals Shoes used in royal court |
| சூறை (Curai) | - Curi | திருட்டு |
| சும்மா (Cumma) | - Cuma | விடுதலையான நிலை |
| காவல் (Kaval) | - Kawal | காவல் |
| குளம் (Kulam) (pond) | - Kolam | குளம், நீர்த்தொட்டி |
| கும்பல், கூட்டம் (Kumpal) | - Kumpul | கூட்டம், கூடல் |
| வகை (Vakai) | - Bagai | வகை |
| வாடை (Vadai) | - Badai | புயல் |
| விலங்கு (Vilanku) | - Bilanggu | விலங்கு, காப்பு |

இங்குச் சில சொற்கள் எடுத்துக் காட்டப்பட்டன. சில தமிழ்ச்சொற்கள், மலாய்மொழியில் கலந்து எவ்வகை ஒலிமாற்றமும் அடையாமல் அதே பொருளில் கலந்துள்ளன; சில சற்று ஒலிமாற்றம் பெற்றுள்ளன.

## வடமொழிச் செல்வாக்கு

மலாய்மொழியில் வடசொற்களும் மிகுதியாய்க் கலந்துள்ளன. ஆனால், அச் சொற்கள் தமிழர் மூலமே மலாய்மொழிக்குச் சென்றன. வடவர், இங்கு ஆட்சியாளராகவோ, வணிகராகவோ வரவில்லை. தமிழ் மன்னர்களின் குருக்களாகவோ சமயச் சான்றோராகவோதாம் வந்தனர்.

பல்லவர் காலத்தில் தெலுங்கு தமிழைவிட்டுப் பிரிந்து நெடுந்தொலைவு சென்றிருக்க முடியாது. அவர்கள் திராவிடரே. அதனாலும், வடமொழிமேல் தனிப் பற்றுக்கொண்டிருந்தமையாலும், தம் ஆட்சியில் தமிழ் வடமொழி இரண்டனுக்கும் சமயவாய்ப்பு நல்கினர் என்பது கல்வெட்டுகளால் தெரியவருகிறது. பல்லவர்கள் இங்குத் தொடர்புகொண்டிருந்தபோது வடசொற்கள் மிகுதியாய் மலாய்மொழியில் கலந்தன. முற்கால மலாய் அரசாட்சியில், மலாய்மொழியும் வடமொழியும் அரசியல் மொழிகளாய் விளங்கின என்பது குறிப்பிடத்தக்கது. வடமொழிச் சொற்கள் இந்தியர் காவிய இலக்கிய வழியாயும் மலாய்மொழி இலக்கியத்தில் இடம்பெற்றன.

கி. பி. ஏழாம் நூற்றாண்டில் சுமத்திரா பலம்பாங் (Palambang) என்னுமிடத்தில் கிடைத்த ஸ்ரீவிசயப் பேரரசின் கல்வெட்டு வடமொழியில் உள்ளதென்பது குறிப்பிடத்தக்கது.

இங்குச் சோழர் ஆண்டபோதும் அவர்கள் வடமொழிக்குத் தனிச் சிறப்பளித்து வந்தனர். அதனாலும் வடமொழிச் சொற்கள் மலாய்மொழியில் கலந்தன.

## 'கிளிங்' எனும் சொல் விளக்கம்

இச் சொல் ஒருகாலத்தில் இங்குத் (உயர்ந்த நிலையினர் எனும் பொருளில்) தென்னாட்டவரைக் குறித்தது. கலிங்கத்திலிருந்து வந்தவர் என்பதனைக் குறிக்கப் பயன்பட்டதாயும் கூறுவர். கலிங்கம் எனும் சொல் பொதுவாய்த் தென்னிந்தியக் கடற்கரையோரப் பகுதியைக் (சோழமண்டலம்) குறித்தது. ஆதலான் அப் பகுதி மக்களிடையே வழங்கிய (தமிழ், தெலுங்கு போன்ற) மொழிகளே கலிங்கர் மொழி எனலாம்.

இதுகுறித்து முனைவர் சு. வீரமணி, “சோழ மண்டலக் கரையுடன் (Coramandal) பல நூற்றாண்டுகள் தொடர்பு வைத்திருந்த தென்கிழக்காசியர், ‘தமிழர்’ எனும் சொல் தெரியாமல் இருந்திருப்பர் என்பது சிந்தித்துப் பார்க்க வேண்டுவதொன்று. ‘கூலியன்’ (சோழியர்) என்னும் சொல், சோழமண்டலக் கரையிலிருந்து வருவோரைக் குறிக்கப் பயன்படுகிறது” என்கிறார்[73] அவர்.

---

73 வீரமணி, அ., வட சுமத்திராவில் இந்தியர் குடியேற்றம், ப. 7

'சூலியன்' எனும் சொல்லே காலப்போக்கில் 'கிளிங்' என்று ஆகியிருக்கலாம் என்று கருதுகிறார். எவ்வாறு இருப்பினும் இஃது உயர்ந்த பொருளிலேயே வழங்கப்பட்டது என்பது தெளிவு.

தளபதி அங் துவா, கிருஷ்ணதேவராயரொடு பேசிய மொழியை (தமிழை)க் 'கிளிங்மொழி' (Bahasa Keling) என்று வரலாற்றாசிரியர் குறிக்கின்றனர். கடந்த நூற்றாண்டில் தமிழர் தலைவராய் இருந்த தம்புசாமிப் பிள்ளை 'கிளிங்குகளின் தலைவர்' (Captain Keling) என்று அழைக்கப்பட்டார். இங்ஙனம் உயர்ந்த பொருளில் வழக்கப்பட்டு வந்த இச் சொல், இப்பொழுது பொருள்தாழ்ச்சியுற்றதாய் - ஏளனப் பொருள் குறிப்பதாய்க் கருதப்படுவது வரலாற்றுப் பேரவலம் ஆகும்.

### பண்பாட்டுக் கலப்பு

ஒரு காலத்தில் ஓரினத்தவரிடையே கலந்து நிலைத்துவிட்ட பண்பாட்டை, பழக்கவழக்கங்களை இடையில் மாற்றிக்கொள்வது என்பது எளிதன்று. 13ஆம் நூற்றாண்டிற்கு முன்னர்ப் பௌத்தர்களாய், இந்துக்களாய், சைவர், வைணவர்களாய் இருந்த மலாய்க்காரர் அந் நூற்றாண்டிற்குப் பின்னர் முசுலிம்களாய் மாறிவிட்டாலும், பழைய பண்பாட்டைப் பழக்கவழக்கங்களை அவர்களால் முற்றிலும் கைவிட முடியவில்லை.

அரசரை இறைவன் நிலைக்கு உயர்த்திப் போற்றுவது தமிழர் மரபு.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"[74]

"முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்(கு)
இறையென்று வைக்கப் படும்"[75]

இத் தமிழர் மரபினை மலாய்க்காரர் இன்றும் கடைப்பிடித்து வருகின்றனர். முடிசூட்டுவிழா நிகழ்ச்சிகளில் செய்யப்படும் சடங்குகளில், தமிழர் பண்பாட்டுக் கூறுகள் இழையோடி நிற்கின்றன.

தாய்லாந்து மன்னர் முடிசூட்டு விழாவில் திருப்பாவை, திருவெம்பாவை, திருமுறைப் பாடல்கள் ஓதப்படுதல் முதன்மையாய நிகழ்ச்சியாகும். இவ் விழாவின்போது, தெய்வபக்திப் பாடல்களைப் பாடுதற்குரிய காரணம் "அரசன் தெய்வத்தன்மை வாய்ந்தவன்" என்பதனை உணர்த்தவேயாகும்.

---

*74 புறநானூறு, 186 : 1-2*
*75 திருக்குறள், 388*

திருமண உறுதிப்பாட்டின்போது (Pertunangan / Betrothol Ceremony) வெற்றிலைபாக்கு மாற்றிக்கொள்ளுவது மரபு. வெற்றிலை மெல்லும்போது உண்டாகும் செந்நீர் குருதித் தொடர்பினைக் குறிப்பதாகும்.

மேலும் மணவறையில் 'Bersanding" (சந்தி எனும் தமிழ்ச்சொல்லின் மலாய் வடிவம்) நடக்கும்போது பன்னீர் தெளித்தலும், மஞ்சள் அரிசி தூவி வாழ்த்துதலும் நடக்கும். இவை யாவும் தமிழர் மரபாகும். இங்கு இன்னொன்றையும் குறிப்பிடுதல் நலம். மணமகனைக் குறிக்கும் 'மாப்பிள்ளை' எனும் சொல் மலாயில் "Mempelai" மணமகளைக் குறிக்கிறது. மணமகனை "Pengantin" (Lelaki) என்று சொல்கின்றனர். திருமணத்தில் பயன்படுத்தப்படும் மாலதி அல்லது மல்லிகைப்பூச் சற்றுச் சிதைந்து 'மெலாத்தி' என்று வழங்கப்படுகிறது.

## வெற்றிலை

மலாய்க்காரர் வெற்றிலை போடும் பழக்கம் உடையவர்; இப் பழக்கம் தமிழரிடம் ஒன்றிக் கலந்த பழக்கமாகும். வீடு நாடி வரும் விருந்தினர்க்குத் தாம்பூலம் (வெற்றிலைபாக்கு) அளித்தல் தமிழர் பழக்கங்களில் ஒன்று; திருமண உறுதிப்பாட்டின்போது வெற்றிலைபாக்கு மாற்றிக்கொள்வது மிகவும் அழுத்தம் வாய்ந்த சடங்காகும். திருமணத்திற்கு அழைக்கும்போது வெற்றிலைபாக்கு வைத்து அழைப்பதும், மணமக்கள் கைகளில் தாம்பூலம் மடித்துக் கொடுப்பதும், மணமக்கள் மாமன்மார்க்கும் உறவினர்க்கும் தாம்பூலம் மடித்துக் கொடுப்பதும் தொடர்ந்துவரும் வழக்கமாகும். இறைவழிபாடு முதலாய சடங்குகளில் வெற்றிலைபாக்கு வைத்தலும், நீக்க முடியாத செயலாய் விளங்குகிறது. இப் பழக்கம் தமிழரிடமிருந்து மலாய்க்காரருக்குப் பரவியதா மலாய்க்காரரிடமிருந்து தமிழர்க்குப் பரவியதா என்பதில் ஐயப்பாடு நிலவிவருகிறது.

வரலாற்றுப் பேராசிரியர் பி. டி. சீனிவாச ஐயங்கார் "சீனாவே வெற்றிலையின் தாயகம். அங்கிருந்து மலாயா சென்று பின் தமிழ்நாட்டில் பரவியிருக்கவேண்டு" மென்று தம் 'தமிழர் வரலாறு' (History of Tamils ப. 101-102) என்னும் நூலில் குறிப்பிடுகிறார். இது குறித்து முனைவர் தாயம்மாள் அறவாணன் தம் ஆய்வு நூலில் குறிப்பிடும்போது, "சீனாவில் வெற்றிலைபோடும் பழக்கம் இல்லை. தமிழ்நாட்டில் இப் பழக்கம் பரவலாக உள்ளது. எனவே, தமிழரிடமிருந்து இப் பழக்கம் வெளிநாடுகளுக்குச் சென்றிருக்கலாம். மேலும் சங்க இலக்கியமான மதுரைக்காஞ்சியில் கொடியிலை, பாக்கு, சுண்ணம்பற்றிய செய்தி உள்ளது. சிலம்பு வெற்றிலை சாப்பிடும் பழக்கத்தைக் காட்டுகிறது. பாக்குப் பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில் நிரம்ப உள்ளது. எனவே, தமிழ்நாடே வெற்றிலையின் தாயகம் ஆகலாம் என்று உறுதியாக அறியலாம்"[76] என்கிறார்.

---

76 திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, ப. 76

வெற்றிலை போடும் பழக்கம் பழந்தமிழகத்தில் இருந்ததென்பதற்குக் கலித்தொகையிலும் சான்று உள்ளது. குறிஞ்சிக்கலி 29ஆம் பாட்டில் 'தாம்பூலம்'[77] கூறப்பட்டுள்ளது. ஒரு பழக்கம் இலக்கியத்தில் இடம்பெறவேண்டுமானால், அப் பழக்கம் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தொடர்ந்து வந்திருக்க வேண்டும். ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டிற்கு முற்பட்ட இப் பழக்கம் தமிழரிடம் உள்ளமை உணரலாம். ஆகவே, இப் பழக்கம் மலாய்க்காரரிடமிருந்து தமிழகத்திற்குப் பரவியது என்பதை ஏற்க இயலவில்லை; மாறாகத் தமிழரிடமிருந்து இப் பழக்கம் மலாய்க்காரர்க்குப் பரவியது என்ற முடிவிற்குவரச் சான்றுகள் நிரம்பவுள்ளன.

## பல்லாங்குழி ஆட்டம்

தமிழரின் பழம் விளையாட்டுகளில் பல்லாங்குழி ஆட்டம் ஒன்றாகும். மலாய்க்காரரிடையே இவ் வாட்டம் சிறப்பிடம் பெற்றுள்ளது. இன்று பள்ளிகளிலும் இஃது ஊக்குவிக்கப்படுகிறது. உலக நாடுகள் பலவற்றிலும், பல்வேறு மாறுபாடுகளுடன் இவ் வாட்டம் ஆடப்படுகிறது. "செனகால் - தமிழகப் பல்லாங்குழி ஆட்டம் சிலவகைகளில் வேறுபட்டாலும் பலவகைகளில் ஒன்றுபடுகிறது"[78] என்னும் முனைவர் தாயம்மாள் அறவாணன் "ஆப்பிரிக்கரைவிடத் தமிழரே தென்கிழக்கு ஆசியரோடு மிகத் தொடர்பு உடையவர் என்பதை அறியலாம். ஆகையால் தமிழர் பல்லாங்குழி ஆட்டத்தை மலேசியா மற்றும் தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கும், இலங்கைக்கும் அறிமுகப்படுத்தினர் என்று கூறலாம்[79]." என்கிறார்.

## மருதோன்றி இடுதல்

மருதோன்றி இடுதல் தமிழர் பழக்கங்களுள் ஒன்று. இது மலாய்க்காரரையும் பற்றிக்கொண்டுள்ளது.

## மண்டி சபார் (Mandi Safar)

மண்டி சபார் என்பது கடலிலும் ஆறுகளிலும் நீராடும் விழாவினைக் குறிக்கிறது. (மண்டி - குளித்தல்) இப் பழக்கம் பண்டைக் காலத்திலிருந்தே தமிழரிடம் இருந்துவந்ததாகும்.

"தேறுநீர்ப் புணரியொடு யாறுதலை மணக்கும்
மலியோதத் தொலிகடற்
றீதுநீங்கக் கடலாடியும்
மாசுநீங்கப் புனல்படிந்தும்

77 "தையால் தம்பலம் தின்றியோ என்றுதன்
பக்கு அழித்துக் கொண்டு எனத்தரலும்...." கலி. குறிஞ்சி, 29 : 13,14
தம்பலம் - தாம்பூலம் (வெற்றிலை பாக்கு), பக்கு - பாக்குப்பை

78 திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு, ப. 105

79 மேலது, ப. 124

அலவ னாட்டியும் உரவுத்திரை உழக்கியும்”[80]

“நெல்லரியும் இருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையின்
தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து”[81]

மேலும், பரிபாடலில் ‘மண்டியாடல்’ குறித்துவரும் ஒரு பாடல் (பா, எண் 10) இன்னும் தெளிவாய் எடுத்துரைக்கிறது.

“.....................................................
புனல்மண்டி ஆடல்புரிவாய், சனம் மண்டி”

என்னும் அடியில் ‘மண்டி’ என்னும் சொல் ஆளப்பட்டிருப்பது கருதத்தக்கது. மேலும் பாடல் கூறும் கருத்துகள் முழுமையும் மலாய்க்காரரின் ‘மண்டி சபார்’ நீராடலின் நோக்கத்தையும் பயன்பாட்டையும் அங்ஙனமே எடுத்துரைக்கின்றன. இதுகுறித்து, ‘இரண்டாம் உலக இந்துப் பெருங்கடல் ஆய்வு மாநா’ட்டில் ஆய்வுக் கட்டுரை படைத்த முனைவர் ச. சிங்காரவேலு மேற்படி பாடலை எடுத்துக் காட்டித் தமிழ்ப் பண்பாட்டுடன் மண்டி சபாரையும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார்; பாடலையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வழங்கியுள்ளார்[82] என்பன ஈண்டுச் சுட்டத்தக்கன.

## தென்னகக் கூறுகள்

மலாய்க்காரர் வாழ்வின் துறைதோறும் இங்ஙனம் தென்னகக் கூறுகள் மிளிர்வதனை இன்றும் காணமுடிகிறது.

---

80 பட்டினப்பாலை, 97 - 101
81 புறநானூறு, 24:1-3
82 பரிபாடல், பா, 10

# மலேசியத் தமிழர் வரலாறு

## க சமுதாய அமைப்பு

1957இல் விடுதலை பெற்ற மலேசியா இன்று உலகில் வளரும் நாடுகளுள் ஒரு தனிச் சிறப்புப் பெற்ற நாடாய்த் திகழ்கிறது. உலகமே இதனை வியப்போடு நோக்குகிறது; 2020ஆம் ஆண்டிற்குள் ஒரு வளர்ச்சியடைந்த நாடாய் உலகில் தலைநிமிர வேண்டுமென்னும் நம்பிக்கையொடு நொடிக்கு நொடி விரைந்து செயல்பட்டு வருகிறது.

1963 ஆம் ஆண்டுவரை 'மலாயா' எனும் பெயரில் 11 மாநிலங்களைமட்டும் கொண்ட நாடாய் விளங்கிற்று; பின் 16.9.1963இல் சிங்கப்பூர், சரவா, சபா ஆகிய மாநிலங்களையும் உள்ளடக்கிய மலேசியாவாய் விரிந்தது. 1965இல் சிங்கப்பூர் தனிக் குடியரசாயிற்று. பின்னர் 13 மாநிலங்களொடு கூட்டரசு வளாகமும் சேர 14 மாநிலங்களாய் விளங்கிவருகிறது.

இதன் பரப்பளவு 330,435 சதுரக் கிலோ மீட்டர். 1991ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட கணக்குப்படி மக்கள்தொகை ஏறக்குறைய இரண்டு கோடியே பத்து இலக்கம். இந்தியர் தொகை ஏறக்குறைய 16 இலக்கம்.

இனவாரியாக மக்கள்தொகை :

| | | |
|---|---|---|
| மலாய்க்காரர் | ... | 59 % |
| சீனர் | ... | 32 % |
| இந்தியர்[1] | ... | 8 % |
| இதரர் | ... | 1 % |

இதர இனத்தார்: இலங்கையர், கடாசான், பாஜாங், காயான், கெஞ்யா, கெடாயான், முருட் மெலானாங், செராணி, ஓராங் அஸ்லி (பழங்குடியினர்). பழங்குடியினருள் செனாய், புரோட்டோ மலாயு, ஜக்கூன், நெக்ரிடோ ஆகிய பிரிவினரும் உளர்.

---

1 ஒரு காலத்தில் தமிழர் இங்குப் பெருந்தொகையினராய் வாழ்ந்தனர். வரலாற்றுப் பேரிடர்கள் பெரும்பான்மையைக் குறைத்தன; 12 விழுக்காடாக்கின; இது பின்னர் 10 விழுக்காடானது. இப்போது 8 விழுக்காடாய்த் தாழ்ந்துள்ளது. விரிவான விளக்கங்கள் உள்ளே.

இன்று வியத்தகு வளர்ச்சிபெற்று உலகில் தலைநிமிர்ந்து நிற்கும் மலேசியாவின் உயர்நிலைக்கு இந்தியர் ஆற்றிய பங்கு அளப்பரிது. இந்தியர் என்னும்போது ஏறக்குறைய 85 விழுக்காட்டினர் தமிழரே என்பதும் இந்தியர்க்குரிய மொழியாகத் தமிழையே அரசு ஏற்றுக்கொண்டிருக்கிறது என்பதும் குறிக்கத்தக்கன.

மலேசியாவிற்கும் தென்னிந்தியாவிற்கும் வாணிக, கலை, பண்பாடு, அரசியல் அடிப்படைகளில் மிக நீண்டகாலத் தொடர்பு இருந்துவந்துள்ளது. ஆனால், இன்று வாழும் தமிழர் அத் தொடர்ச்சியினர் அல்லர்; சற்றேறக் குறைய 200 ஆண்டுகளுக்கு முன்பிருந்து குடியேறியவர் கால்வழியினர். இவர்கள் சுமார் நான்காம் ஐந்தாம் தலைமுறையினராவர்.

இன்று தமிழகத்தையும் இலங்கையையும் அடுத்து, தமிழர் மிகுதியாய் வாழும் நாடு மலேசியாவே. இன்று விடுதலை பெற்ற நாட்டின் உரிமைக் குடிமக்கள் என்னும் மதிப்புடன் வாழும் தமிழரது தொடக்க கால வரலாறு செந்நீரால் எழுத வேண்டிய ஒன்று; குமுறல் நிறைந்த வரலாறு அது.

இந் நாட்டிற்கு வாணிகத் தொடர்பாய் வந்த வெள்ளையர், ஆயுதம் ஏந்தாமலேயே தந்திரமாய் இம் மண்ணில் தம் கொடியை நாட்டினர். இந் நாட்டு ஆட்சியாளரான மாநிலச் சுல்தான் (சிற்றரசர்)களுக்கு உதவுபவரைப் போலத் தகவுரைஞர்களாய் (Adviser) அமர்ந்து படிப்படியே நாட்டைத் தமக்கு அடிமைப்படுத்திவிட்டனர். தமிழரைப்போல விருந்தோம்பலும், விட்டுக்கொடுத்தலு முடைய தம் பண்பு நலன்களாலேயே வெள்ளையரிடம் நாட்டைப் பறிகொடுத்தனர்.

வெள்ளையர் முதன்முதலில் பினாங்குத் தீவினைக் (துறைமுகம்) கைப்பற்றினர். 1786இல் பினாங்கில் வேரூன்றிய அவர்கள், 1914ஆம் ஆண்டிற்குள் மலாயா முழுவதையும் தம் ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தனர். 1819 இல் சிங்கப்பூரும் அவர்கள் பிடிக்குள் வந்தது.

மலேசியா, நிலநடுக்கோட்டிற்கு அருகில் அமைந்தது; வளம் நிறைந்தது; பொன் விளையும் பூமி எனலாம்; ஆண்டு முழுவதும் ஏறக்குறைய ஒரே சீரான தட்பவெப்ப நிலையைக் கொண்டது; இதனை மேலும் வளமாக்கிப் பொருள் ஈட்டக் கருதினர் ஆங்கிலேயர்; அதற்குக் கடுமையாய் உழைக்கவல்ல தொழிலாளர் தேவைப்பட்டனர்.

1786இல் வெள்ளையர் பினாங்கைக் கைப்பற்றியதும் அவர்களது வீட்டு வேலைக்கும், காப்பி, கரும்புத் தோட்டங்கள் போடற்கும், மேலும் வெவ்வேறு பணிகளுக்கும் பணியாளர் தேவைப்பட்டனர். குறைந்த கூலியில் வஞ்சகமின்றி, மிகுதியாய் உழைக்க, உரிமைகோரத் தெரியாத பாமரரை விரும்பினர். அத் தகுதியர் இந்தியரே; சிறப்பாய்த் தென்னாட்டவரே என்றறிந்தனர். பல நாடுகள் அடங்கியிருந்த இந்தியத் துணைக் கண்டத்தை வளைத்துப் பிடித்துத் தங்கள் ஆட்சியின்கீழ் அப்போது வைத்திருந்தனர். அங்கிருந்து பணியாளரைக் கொணர்தலை எளிதாய்க்

கருதினர். தமிழர்தம் இரக்க குணத்தையும், நன்றி உணர்வையும் வஞ்சகமில்லா வெள்ளை உள்ளத்தையும் தங்களுக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக் கொண்டனர் ஆங்கிலேயர்.

## இந்தியர் - தமிழர் குடியேற்றம்

வெள்ளையர் நினைத்ததுபோல இந்தியாவிலிருந்து தொழிலாளரை அத்துணை எளிதில் கொண்டுவர முடியவில்லை; என்றாலும், அங்கு நிலவிய வறுமையும், நிலக்கிழார்களிடம் அகப்பட்டுத் துடித்த கொத்தடிமை நிலையும், பல்வேறு சமுதாய நெருக்குதல்களும் இந்தியரைப் பிழைப்பு நாடிப் புலம்பெயரத் தூண்டின. வெள்ளையர் முகவர் (Agent) வாயிலாய்க் காட்டிய கவர்ச்சிகளும் அவர்களைக் கவர்ந்தன.

தொடக்கத்தில் தொழிலாளர் குறைந்த அளவினரே தேவைப்பட்டனர். காடு திருத்தவும், கரும்பு, கொக்கோ, மிளகுதோட்டங்கள் போடவும், தென்னந் தோப்புகளை உருவாக்கவும் தொழிலாளர் வரவழைக்கப்பட்டனர். 1790களில் மிளகு தோட்டங்கள் போடவும், 1830களில் கரும்புத் தோட்டங்கள் உருவாக்கவும், 1870களில் காப்பித் தோட்டங்கள் ஏற்படுத்தவும் கொண்டுவரப்பட்டனர்.[2] மேலும், நகரங்களைத் தூய்மை செய்யவும், சாலைகள் அமைக்கவும், இருப்புப் பாதைகள் போடவும், பொதுப்பணி பல புரியவும் எண்ணற்ற தொழிலாளர் தேவைப்பட்டனர். ரப்பர்த்தோட்டங்கள் உருவாகத் தொடங்கியபின் 1870களில் தொழிலாளர் தேவை பன்மடங்கு மிகுந்தது.

1786இல் தொடங்கிய இந்தியர் குடியேற்றம் 1938வரை தொடர்ந்தது. இங்குக் குடிபெயர்ந்து வந்தவருள் மிகப் பெரும்பான்மையினர் தமிழரே.

## மலாயாவில் குடியேறிய இந்திய மக்கள்தொகை

கல்வியறிவற்ற, உரிமைகோரும் திறமற்ற, உழைக்கமட்டுமே தெரிந்த பாமரரோடு பின்னர் வணிகர், கட்டடக் கலைஞர், சிற்பியர், தச்சர், மருத்துவர், பொறியாளர், புலவர் முதலாயோரும் வந்தனர். (பட்டியல் 1,2,3, காண்க)

இவ்வாறு வந்தவருள் ஒரு பகுதி உடலுழைப்புத் தொழிலாளர், ஒப்பந்தம் முடிந்ததும் தாயகம் திரும்பினர்[3] . ஒப்பந்தம் முடிந்தவரைத் திருப்பி அனுப்பத் 'தென்னிந்தியத் தொழிலாளர் நிதி' எனும் நிதித்திட்டம் ஒன்றையும் ஏற்படுத்தி இருந்தனர். தொடக்க காலத்தவரைப்போல் அடுத்தடுத்து வந்தவர் திரும்பிச் செல்லாமல் நிலையாய்த் தங்கிவிட்டனர். அதனால் பின்னாளில் தென்னிந்தியத் தொழிலாளர் குழந்தைகள் மேற்கல்வி கற்க 1958இல் தென்னிந்தியத் தொழிலாளர்

---

2 Sandhu, K. S., Indians in Malaya Immigration and Settlement 1786 - 1957, University of Cambridge 1969, p. 50

3 பட்டியல் எண்கள் 1,2,3,4,5 காண்க.

நிலப்படம் 5 : மலேசிய மாநிலங்கள்



நிலப்படம் 6 : மலாயா, வடசுமத்திராத் தமிழர்களின் பயண வழி
சான்று : வடசுமத்திராவில் தமிழர்கள், முனைவர் அ. வீரமணி



நிதி மறு சீரமைப்புச் செய்யப்பட்டது.[4] இத் திட்டப்படி தொடக்கத் தமிழ்ப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி, தொழில்நுட்பக் கல்லூரி, மலாயாப் பல்கலைக்கழகம் போன்றவற்றில் கற்போர்க்கு இந் நிதியிலிருந்து உதவிச்சம்பளம் வழங்கப்பட்டது. இந் நிதிநிலை என்னவாயிற்று என்பது தெரியவில்லை. டாக்டர் வி. டேவிட்டும் இது குறித்து நாடாளுமன்றத்தில் குரல் எழுப்பினார்.[5] தென்னிந்தியர்க்கே உரிமையுடைய அந் நிதியைக்கூட மற்றவர்க்குப் பயன்படுத்த முயற்சி நடந்துகொண்டிருக்கிறது[6] என்பது வேதனைக்குரியது.

## காலந்தோறும் மலேசியத் தமிழர் நிலை

மலேசியத் தமிழர் வரலாற்றை ஐந்து பெருங் காலகட்டங்களாய்ப் பிரிக்கலாம்:

1. இரண்டாம் உலகப் போருக்கு முந்திய காலம் (1940-க்குமுன்)
2. சப்பானியர் ஆட்சிக்காலம் (1941 - 45)
3. போருக்குப்பிந்திய காலம்(1946 - 56)
4. விடுதலைக்குப்பிந்திய காலம்(1957 - 89)
5. தொலைநோக்குத் திட்டத்துடன் 2020 - க்கு நடைபோடும் காலம்

இவ் வைந்து காலங்களைப் பல உட்பிரிவுகளாய்ப் பிரிக்கலாம்.

## 1. இந்திய - தமிழ்ச் சமுதாய அமைப்பு

கல்வி, பொருளாதாரப் பின்னணி இல்லை; ஆணிவேர், சல்லிவேர் போன்ற எவ்விதப் பற்றுக்கோடும் இல்லை; எவ்வித அடிப்படையுமில்லை; தற்காப்பு உணர்ச்சியும் இல்லை; உரிமை வேட்கைக்கு இடமே இல்லை; எவ்விதப் பாதுகாப்பும் இல்லை; வழிகாட்ட ஒருவரும் இல்லை; வஞ்சிக்கும் நிலையே தலைவிரித்தாடிற்று.

மாபெரும் எதிர்பார்ப்பொடும் மூடநம்பிக்கையொடும் வந்த இந்திய - தமிழ்ச் சமுதாயம் இங்குக் கண்டது யாது? ‘மலாயா வளங்கொழிக்கும் நாடு; ஆங்குச் சென்றால் சொகுசாக வாழலாம்; சீனிக்குக் காக்காய் ஓட்டினால் போதும்; கைநிறையச் சம்பளம் கிடைக்கும்; ரப்பர் மரத்தில் பணம் காய்க்கும்’ என்பன போன்ற ஆசைமொழிகளை அள்ளி வீசிப் பாமர மக்களை இங்குக் குடியேறச் செய்தனர். அவற்றை நம்பி வந்த அப்பாவித் தமிழர் அடைந்த ஏமாற்றத்தை அவர்கள் வெளியிட்ட நாட்டுப்புறப் பாடல்களே எடுத்துரைக்கின்றன.

---

4 Arasaratnam, S., Indians in Malaysia and Singapore. Oxford University Press, 1970, pp.149,191

5 மலேசியா - நம் நாடு, நம் மக்கள், நம் உரிமைகள், பக். 197, 198

6 உபைதுல்லா, டான் ஸ்ரீ, எஸ். ஓ. கே., தமிழ்நேசன் 70ஆம் ஆண்டு மலர், ப. 60

“சீனிக்குக் காக்காய் ஓட்ட - கூட்டிக்கினு வந்த
கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி ...

ஒருதட்டு அப்பத்துக்கு ஒருதட்டு வெள்ளின்னு சொன்ன
கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி ...

வாழப்பழத்துக்குக் குரங்கோட்டக் கூட்டிக்கினு வந்த
கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி ...

லாலான் முள்ளு டிங்குன்னுதே - இங்கு
லப்பர்க் கொட்டை டப்புன்னுதே”[7]

அவ் வப்பாவி மக்கள் வாழ்வினைச் சித்திரிக்கும் பாடல்களில் இதோ ஒன்று.

“பகடியான வார்த்தையிலே
பால்மரத்தில் பணம்காய்க்கும்
ஆவடியில் முந்திக்கிட்டா
அதிர்ஷ்டமும் தானேவரும்
இப்படியும் ஜாலாக்கு
எப்படியும் போட்டாங்க”

“பொய்சொல்லிக் கப்பலேத்திப்
பொழப்பெல்லாம் போச்சுங்க
கருங்கடல் தாண்டிவந்து
கைகட்டி நின்னோமுங்க
கல்பமும் உண்டுன்னு
கையேந்தி ஊமையானோம்!”[8]

‘கைகட்டி நின்னோமுங்க’ எனும் பாடல்அடி எத்தனையோ குமுறல்களை - மரண ஓலங்களைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கின்றது.

‘மலாயா சொர்க்க பூமி’ என்ற கனவுகளை மனத்தில் தேக்கி இன்பமான கற்பனைகளொடு வந்தவரை வரவேற்றவை கொடிய விலங்குகளும் கொன்று மாய்க்கும் மலேரியாக் கொசுக்களும், ஒளி புகமுடியாத அடர்ந்த காடுகளுமே. காட்டு விலங்குகளுக்கு அஞ்சி, மனித விலங்குகளுக்கு நடுங்கி, கொசுக்களுக்கும் அட்டைகளுக்கும் குருதியைக் கொட்டி ஒரு புதிய நாடு

7 பாடலில் இடம்பெற்றுள்ள பிறமொழிச் சொற்களுக்குரிய விளக்கங்களுக்கு 115ஆம் பாடலின் அடிக்குறிப்பும் பின்புலம் - குறிப்புரையும் காண்க.

8 விரிவிற்கு 129ஆம் பாடலின் அடிக்குறிப்பும் பின்புலம் - குறிப்புரையும் காண்க.

## இந்தியர்கள் மலாயாவுக்குக் கொண்டு வரப்பட்ட முறை




மீதமுள்ள 29.9% - தாங்களாகவே மலாயா வந்தவர்கள். இவர்கள் ஆங்கிலேயரால் எந்த உதவியும் பெறாமல், வியாபாரம் முதலாய காரணங்களுக்காக வந்தவர்கள். வந்தவர் மொத்த எண்ணிக்கை 27,25,917.

சான்று : SANDHU, K.S., Indians in Malaya : Immigration and settlement 1786 - 1957. University of Cambridge, 1969. p.97.

பட்டியல் - 1

## மலாயாவுக்கு வந்தவர்களும் திரும்பிச் சென்றவர்களும்

| ஆண்டு | மலாயாவுக்கு வந்த இந்தியர்களின் மொத்த எண்ணிக்கை | மலாயாவிலிருந்து திரும்பிய இந்தியர்களின் மொத்த எண்ணிக்கை | ஐக்கிய மலாய் நாடுகளில் இருந்த தோராயமான இந்தியர் எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1905 | 39,539 | 19,754 | 75,000 |
| 1906 | 52,041 | 21,878 | 95,000 |
| 1907 | 60,542 | 30,522 | 1,15,000 |
| 1908 | 54,522 | 30,921 | 1,23,000 |
| 1909 | 49,817 | 31,374 | 1,33,000 |
| 1910 | 83,723 | 39,080 | 1,40,000 |
| 1911 | 1,08,471 | 48,103 | 1,90,000 |
| 1912 | 1,06,928 | 63,885 | 2,10,000 |
| 1913 | 1,18,583 | 70,090 | 2,20,000 |

குறிப்பு : ஐக்கிய மலாய் நாடுகளாவன (Fedarated Malay States) :
(பேரா, சிலாங்கூர், நெகிரி செம்பிலான், பகாங் ஆகிய மாநிலங்கள்)

சான்று : Indians in Malaysia and Singapore, Arasaratnam

பட்டியல் -2

## 1921ஆம் ஆண்டுமுதல் 1957ஆம் ஆண்டு வரையிலான இந்திய மக்கள் தொகை

| | 1921 | 1931 | 1947 | 1957 |
|---|---|---|---|---|
| தமிழர் | 3,87,509 | 5,14,778 | 4,60,985 | 6,34,681 |
| மலையாளி | 17,190 | 34,898 | 44,339 | 72,971 |
| தெலுங்கர் | 39,986 | 32,536 | 24,093 | 27,670 |
| மற்றவர் | - | - | 15,968 | - |
| வடஇந்தியர் | 25,495 | 39,635 | 54,231 | 84,934 |
| மொத்தம் | 4,70,180 | 6,21,847 | 5,99,616 | 8,20,256 |

*சான்று* : Indians in Malaysia and Singapore, Arasaratnam, p. 48

பட்டியல் - 3

சமைக்க வேண்டிய பணி தமிழருடையது என்னும் பொறுப்புத் தலையில் விழுந்தபோது, அவர்கள் தள்ளாடிப் போயினர். இதுகுறித்துக் கீழ்க்காணும் நாட்டுப்புறப் பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது.

## குடியிருப்புகள்

“சஞ்சிக் கூலிகளுக்குச்
சொர்க்கம் காட்டத்தான்
பொறமலையில் தள்ளினாங்க
சொர்க்கமும் காணலீங்க
சொகுசும் காணலீங்க
கொசுவாலே குடிச்சமிச்சம்
கொள்ளையிலும் போனாங்க” [9]

“வாய்பிளந்த மலைப்பாம்பு
வளைபெயர்ந்த கருநாகம்
பேய்உலவும் வெளிக்காடு
பீதியன்று மறைந்ததுண்டோ?
புதர்அடர்ந்த மேடுபள்ளம்
புலிஉலவக் கூடுபயம்
உதறவைக்கும் பனியிருட்டு...” [10]

என்றும் பாராமல் நாள்தோறும் ஓய்வு ஒழிச்சலின்றிப் பத்துப் பன்னிரண்டு மணி நேரத்திற்குமேல் உழைக்க வேண்டிய கட்டாயத்திலும் ஒரு புதுநாடு சமைக்கப் புறப்பட்டவர் வாழ்க்கைச் சூழல், உயிரை வாட்டும் கொடுமைகள் பல நிறைந்ததாய் இருந்தது.

உணவும் உடையும் போல ஒருவர் வாழ்விற்கு உறையுளும் இன்றியமையாததாகும். இங்கிருந்த நிலை சொல்லுந் தரமன்று; வந்தவரை வெள்ளையர் மனிதராய் மதிக்கவில்லை; ஆடுமாடுகளாய்க் கருதினர்; அவர்களை ஓலைக்கூரை வேய்ந்த சிறு குடில்களிலும், தகரக்கூரை போட்ட நீண்ட வீடுகளிலும் மிகுந்த எண்ணிக்கையில் அடைத்துவைத்தனர். குடியிருப்புகள், அதுவும் சாதிவாரியாய்த் தனித்தனியாய் அமைந்திருந்தன. ஒரு குடும்பத்துக்கு ஒரே ஓர் அறைகொண்ட வீடுதான், ‘எல்லாம்’ அந்த அறையுள்ளேதான். காற்றோ, வெளிச்சமோ அங்கு நுழைதற்கு அஞ்சும். அக் குடிலுக்கு, அவர்கள் இட்ட பெயர் லைன்ஸ் (Lines). மேலும், சுற்றுப்புறத் தூய்மையோ தண்ணீர், விளக்கு வசதிகளோ இல்லை. தூய்மை இன்மையால் மலேரியாக் கொசுக்களுக்கு இரையானோர் கணக்கற்றோர்.

---

9 களஞ்சியப் பாடல் எண்129

10 கவிஞர் வீரமான்

இக் கொடியநிலை 1926வரை நீடித்தது; பின்னர் ஓரளவு திருந்தியது. என்றாலும், தேவையான வசதிகளெல்லாம் ஏற்பட்டுவிட்டதாய்ச் சொல்ல முடியாது.

'உழைப்பிற்கேற்ற ஊதியம் இல்லை; வருவாய் அரைவயிற்று உணவுக்கே போதவில்லை; இந் நிலையில் தமிழ்ச் சமுதாய வாழ்க்கைநிலை எவ்வாறு இருந்திருக்கும்?' என்பதனைக் கூறத் தேவை இல்லை.

இக் கொடிய நிலையிலிருந்து தொழிலாளரை மீட்க அன்று வலிமை மிக்க சமுதாய அமைப்புகளோ தொழிற்சங்கங்களோ தோன்றவில்லை; பெருங் கெடுபிடியும் அடக்குமுறையும் கட்டவிழ்த்து விடப்பட்டிருந்தன. இந்தியத் துணைக் கண்டமும் வெள்ளையர் பிடியில் சிக்குண்டு கிடந்ததால், எதிரிகள்போல அவர்களை ஆட்டிப் படைத்தனர்.

## சீனர் நிலை

சீனர் தாயகமும் அவர்கள் புலம்பெயர வேண்டிய நிலையிலிருந்தது. என்றாலும், அவர்கள் நிலை சற்று மாறுபட்டதாகும். இந்தியத் தொழிலாளர் இங்குக் குடியேறிய பின்னரே அவர்கள் குடிபெயர்ந்து வரத்தொடங்கினர்; அவர்களும் கடும் உழைப்பாளரே என்றாலும், தம் உயர்வினையே முன்வைத்து அவர்கள் உழைத்தனர்; பிறர் உயர்விற்காகத் தங்களை அழித்துக்கொள்ளவில்லை. அவர்களுக்கு வலிமை வாய்ந்த தாயகப் பின்னணியும் இருந்தது. அதனால், அவர்களைப் பிரிட்டிசார் நடத்திய முறையே வேறு. தொடக்கத்தில் (1799) அவர்களும் கரும்பு, காப்பி, தென்னை, மிளகுதோட்டங்களில் வேலை செய்தனர். ஆனால், ஈயம் அலசும் தொழிலில்தான் அவர்கள் மிகுதியாய் ஈடுபட்டனர். இந்தியர் ரப்பர்த் தோட்டங்களிலேயே மிகுந்திருந்தனர்.

1820இல் சீனர் பெருமளவில் குடிபெயர்ந்து வந்தனர்; அவர்களுடன் குண்டர் கும்பல்களும் வந்தன. 1898ஆம் ஆண்டிற்குப் பின் இங்கு ஈய வயல்கள் பெருகின. ஈயத்தொழில் முழுமையும் அவர்கள் வயமாயிற்று. அவர்களுக்கு இந்தியத் தொழிலாளரைவிட மிகுந்த ஊதியம் வழங்கப்பட்டது. இந்தியர் - தமிழர் ரப்பர்த் தோட்டங்களையே பெரிதும் சார்ந்திருந்தனர்; அத் தொழில் வளர்ச்சிக்குத் தங்களை அர்ப்பணித்துக் கொண்டனர். மலாயாவின் வளத்திற்கு இந்தியர்-தமிழர் மிகுதியாய் ஈடுபட்டிருந்த ரப்பர் உற்பத்தியும் சீனர் வயமிருந்த ஈய உற்பத்தியும் இரு கண்களாய் விளங்கின; மலாயாவை வளங்கொழிக்கும் நாடாய் ஆக்கின.

இவ் விருபெரு இனங்களுக்கும் தங்கள் தொழில் பாதுகாப்பிற்காகவும் உரிமையைக் கோரிப் பெறுதற்காகவும் தொழிற்சங்க அமைப்புத் தேவையாயிற்று; ஆனால், தோட்ட நிருவாகம் அதற்கு இடந்தரவில்லை. அரசாங்கமும் அதற்கு வழிவிடவில்லை.

1910, 1920களில் தொழிற்சங்கங்கள் அமைக்கும் முயற்சிகள் தோன்றின; போராட்ட உணர்வுகள் தலைதூக்கின; அங்கொன்றும் இங்கொன்றுமாய் வேலை நிறுத்தங்களும் நடந்தன; அவை கடுமையான நடவடிக்கைகளால் ஒடுக்கப்பட்டன.

1920இல் சீனர் தங்களுக்குள் சிறுசிறு அமைப்புகளைத் தோற்றுவித்துக் கொண்டனர். பொதுவாகவே அவர்களுக்கு இந்தியர்க்கு இல்லாத ஒரு பாதுகாப்பு நிலை இருந்துவந்தது. அவர்கள் தாய்நாட்டில் ஏற்பட்ட அரசியல் மாற்றமும் அவர்களுக்கு ஊக்கம் நல்கியது. இதனால், மலாயாப் பொதுவுடைமைக் கட்சி (M.C.P) உருவாயிற்று; மலாயாவிலிருந்த சீனத் தொழிற்சங்கங்கள், இக் கட்சியின் (கம்யூனிஸ்டு) செல்வாக்கிற்கு உட்பட்டன.[11] ஆங்காங்கே போராட்டங்கள் வெடித்தன. அதனால் அச்சமும் சினமும் அடைந்த ஆங்கிலேயர் அவற்றை நசுக்கினர்.

1930இல் இந்தியத் தொழிலாளரிடையே ஓர் எழுச்சி பீரிட்டதனால் மலாயா மத்திய இந்தியர் சங்கம் (C.I.A.M - Central Indian Association of Malaya) தோன்றியது. இது பொதுவாக இந்தியர் சங்கமெனினும் தொழிலாளர் பிரச்சினையில் தலையிட்டது. இதனை ஆர்.எச். நாதன் முன்னின்று இயக்கினார். இவ் வியக்கம் அனைத்திந்தியத் தொழிலாளர் சங்கத்தொடு தொடர்புகொண்டு இங்குள்ள நிலைமைகளை எடுத்துக் கூறிப் பரிகாரம் காண முயன்றது. அங்கிருந்து ஒரு தூதுக் குழுவினையும் வரவழைத்து இங்கிருந்த நிலைமைகளை விரிவாக ஆராய்ந்து கண்டறிய ஏற்பாடு செய்தது. அதனாலும் இங்குத் தொழிலாளர் உற்ற துன்பங்கள் குறைந்ததாய்த் தெரியவில்லை.

மிகக் குறைந்த சம்பளம் பெற்று வந்த இந்தியத் தொழிலாளர்க்குச் சம்பள உயர்வு வேண்டும் என்று அச் சங்கத் தலைமை கோரிக்கை விடுத்துவந்தது. அதனால் இந் நாட்டுத் தொழிலாளர் நிலைமைகளைக் கண்டறிய இந்திய பிரிட்டிசு அரசு ஒரு பேராளரை அனுப்பியது (1936 திசம்பர்).

அப் பேராளர் இங்கு வந்ததால் ஏற்பட்ட விளைவுகள்பற்றித் திரு. கே.பி. சுப்பையா, 'யுத்தத்தால் வந்த யுத்தம்' எனும் தம் நூலில் கூறியுள்ளதை (பக். 135 - 40) மு. வரதராசு தம் நூலில் எடுத்துக் காட்டியுள்ளார்.[12]

பிரிட்டிசு இந்திய சர்க்கார் பிரதிநிதியாய் சீநிவாச சாத்திரி மலாயாவிற்கு வந்தார்; ஐரோப்பிய முதலாளிகள் வீட்டில் விருந்துண்டார்; "மலாயாவில் நாளொன்றுக்கு இந்திய ஆணுக்கு 50 காசும், பெண்ணுக்கு 40 காசும் சம்பள விகிதம்

---

11 வரதராசு,மு., மலேசியத் தோட்டத் தொழிலாளர்கள் வரலாறும் பிரச்சினைகளும், ப.79

12 மேலது , பக். 81-82

சரியாய் இருக்கும்" என்று சொல்லிச் சென்றுவிட்டார். அஃது இந்தியருக்குப் பெரும்வயிற்றெரிச்சலை உண்டுபண்ணியதில் சிறிதும் வியப்பில்லை; இந்தியரின் இதரப் பிரச்சினைகளைப்பற்றிச் சாத்திரியார் கவனிக்கவே இல்லை.

சீநிவாச சாத்திரியார் வஞ்சக அறிக்கையால் (Report on The Condition of Indian Labour in Malaya) இந் நாட்டுத் தொழிலாளர்க்கு ஏற்பட்ட இன்னல்களுக்கு அளவே இல்லை. ரப்பர் விலை ஏறிய நேரத்தில் தொழிலாளர் சம்பளம் இருந்ததைவிட ஆணுக்கு 40 காசு, பெண்ணுக்கு 32 காசுகளாய்க் குறைந்தன. ஆனால், சீனத் தொழிலாளர் சம்பளம் ஒன்றரை மடங்கு மிகுதியாய் இருந்தது. அதனால் தொழிலாளரிடையே பெருங்கொந்தளிப்பு ஏற்பட்டது. எரிகின்ற கொள்ளியில் எண்ணெய் ஊற்றியது போலாயிற்று.

சீநிவாச சாத்திரிக்குப் பின் முன்னாள் இந்திய விடுதலைப் போராட்டத் தளபதி நேரு வந்தார் (1937 மே); அவர் இந்தியக் குடியேற்றத் தொழிலாளர் நிலையை ஆராய்ந்து ஒரு பரிந்துரை வழங்கினார். அதனாலும் இந்தியத் தொழிலாளர்க்கு நன்மை விளையவில்லை. அதனால், ஆங்காங்கே கிளர்ச்சிகள் கிளர்ந்தன (1940 மார்ச்சு). குறிப்பாய்க் கிள்ளான், அதனை ஒட்டிய பகுதிகளில் பெரியதொரு போராட்டம் வெடித்தது. சீனத் தொழிலாளர்க்கு வழங்கும் சம்பளத்தைப் போலவே தங்களுக்கும் வழங்க வேண்டுமெனும் கோரிக்கையை முதலாய் வைத்துத் தொடர்ந்து தொழிலாளர் தன்மானத்தொடு தலைநிமிர்ந்து வாழ்வதற்கு ஏதுவான 14 கோரிக்கைகளுக்காகப் போராட்டம் நடந்தது. எனினும் அவற்றை ஒரு பொருட்டாய் மதிக்காமல் இகழ்ச்சிப்படுத்திக் கோரிக்கைகளைத் தோட்ட நிருவாகங்களும் ஆங்கில அரசும் புறக்கணித்தன.

இம் முறை தொழிலாளர் பின்வாங்கவில்லை; தோட்ட நிருவாகச் சார்பாய் அரசு எத்துணையோ அடக்குமுறைகளை ஏவிவிட்டது. எனினும், தொழிலாளர் அஞ்சாது எதிர்ப்பட்ட துன்பங்களை எல்லாம் ஏற்றுக்கொண்டனர்; வன்முறைக்கு வணங்காது வேலைநிறுத்தத்தில் இறங்கினர். வேலைநிறுத்தப் போராட்டம் 15 நாள்களுக்குமேல் நடந்தது; வெறுங்கையினரான தொழிலாளர்மேல் காவல் துறை பாய்ந்தது. ஆயுதம் ஏந்திய போர்ப்படையும் (இராணுவமும்) தன் வல்லமையை வெளிப்படுத்திற்று. கவச இயங்கிகள், டாங்கிகள் முதலாயனவும் பயன்படுத்தப்பட்டன; எண்ணற்றார் சிறைப்பிடிக்கப்பட்டனர்; கணக்கற்றார் இன்னுயிர் விட்டனர்.

இடைவிடாத - பின்வாங்காத தொழிலாளர் போராட்டம், இறுதியில் ஓரளவிற்கு வெற்றியைத் தந்தது. (இந்தியத்) தொழிலாளர்க்கு 5 காசு ஊதிய உயர்வுதர நிருவாகம் முன்வந்தது. ஆனால், ஆங்கில அரசு போராட்டத்தை முன்னின்று நடத்திய தலைவர் ஆர்.எச். நாதனையும் டி. சுப்பையாவையும் கைதுசெய்து நாடுகடத்திற்று. தொழிலாளர் நலனுக்குப் போராடிய கணபதியைக் கம்யூனிஸ்டு எனக் குற்றஞ்சாட்டித் தூக்கில் போட்டது பிரிட்டீசு அரசு.

மலாயாத் தொழிற்சங்க வரலாற்றில் அதற்கு முன்பு இத்தகு போராட்டம் நடந்ததில்லை. ஆர்.எச். நாதனைப் போன்ற அஞ்சா நெஞ்சமும், கொள்கைப் பிடிப்பும், ஒப்புக்கொடுக்கும் மனமும் கொண்ட தலைவர் தோன்றியதில்லை. இவர் தமிழ்நேசன் நாளிதழின் முன்னாள் துணையாசிரியர்களுள் ஒருவர் என்பதும் சிறந்த எழுத்தாளர் என்பதும் குறிக்கத்தக்கன.

## இரண்டாம் உலகப்போர்க் காலம் (1939 - 45)

கிள்ளான் பகுதிப் போராட்டத்திற்குப்பின் நாட்டைப் போர்முகில் சூழ்ந்தது; இரண்டாம் உலகப்போர் மூண்டது. மலாயாவை வெள்ளையரிடமிருந்து சப்பானியர் கைப்பற்றினர் (1941 திசம்பர்). அவர்கள் ஆட்சியில் பள்ளிகள் எல்லாம் மூடப்பட்டன; தோட்டத் தொழிலாளர் பணி பறிபோயிற்று; உண்ணும் உணவிற்கும், உடுக்கும் உடைக்கும் பஞ்சம் ஏற்பட்டது; தொழிலாளர் தோட்டங்களிலிருந்த வீடுகளிலேயே முடங்கிக்கிடந்தனர். வயிற்றுப் பாட்டுக்காகத் தோட்டங்களில் பயிரிடப்படாதிருந்த நிலப்பகுதிகளைத் தொழிலாளர் பயன்படுத்தத் தொடங்கினர்.

உடனடிப் பயன் நல்கும் மரவள்ளிக் கிழங்கே அவர்கள் உயிர்காக்கும் அமுதாயிற்று. தமிழகத்தில் பெற்றிருந்த வேளாண்மைப் பயிற்சி, அவர்களுக்குக் கைகொடுத்தது. நெல் முதலாய கூல வகைகளையும், காய்கறிகளையும், கிழங்கு வகைகளையும் பயிரிட்டுத் தங்கள் பசியைப் போக்கிக்கொண்டனர். சப்பானியரால் சீனர் பெருந்துன்பங்களுக்கு ஆளாயினர். இந்தியர் நேரடியாய்த் துன்புறுத்தப்பட வில்லை. மாறாக, இந்தியர்மேல் சப்பானியர் மதிப்புக் கொண்டிருந்தனர். காரணம், காந்தியடிகள்மேல் அவர்கள் வைத்திருந்த மதிப்பும், நேதாஜிமேல் கொண்டிருந்த நம்பிக்கையுமாகும். ஆனால், தாய்லாந்தில் காஞ்சனபுரியிலிருந்து தென்பர்மாவின் மோல்மின்வரை (Kanchana - Moulmein) மரண ரயில்பாதை (Death Railway) என்று வரலாற்றாசிரியர் வருணிக்கும் தொடர்வண்டிப் பாதை அமைக்கத் தமிழரை வலிய இழுத்துச் சென்றனர். அவர்களுள் 75 விழுக்காட்டினரைச் சாகடித்தனர். அதனால் சப்பானியர் கொடுங்கோலர் எனும் இலச்சினையைப் பதித்துக் கொண்டனர். மேலும் படையினர் என்றாலே பொதுவாய் ஈவு இரக்கமற்றவர் என்பர். சப்பானியப் படையினரோ அவ்வகையில் மிகக் கொடியராய் விளங்கினர். அவர்கள் ஆட்சிபற்றிக் கவிஞர் ஒருவர்,

"………………. தாய்லாந்தின் எல்லையிலே
கப்பிச் சடக்கிடக் கத்தி முனையினிலே

ஈவிரக்க மில்லாமல் இழுத்துச்செல்லப் பட்டார்கள்;
பாவிகள் கொட்டத்தால் பண்டுலகே ஆடிற்று;
பெற்றோர் உளந்துடிக்க, பிள்ளைமனந் துவண்டுவிழ

உற்ற மனையாளும் ஒப்பாரி வைத்தழவே
ஆட்டைப்போல் மாட்டைப்போல் அடித்துத் துன்புறுத்திக்
காட்டு விலங்காண்டி கசக்கிப் பிழிந்திட்டான்;
அங்கவர்க் கேற்பட்ட அவலத்தைக் கண்டேதான்
பொங்கி வெடித்தனவாம் பூதலத்தில் எரிமலைகள்!
உற்ற கஞ்சிதான் உணவாக வாய்த்திருக்கும்;
தப்புகள் பண்ணிவிட்டால் தலையே இருக்காது;
தொற்றுநோய் ஏற்பட்டுத் துடிக்கவே நேர்ந்திட்டால்
குற்றுயி ராகவே குழிக்குள்ளே வைப்பார்கள்"[13]

எனக் குமுறிப் பாடியுள்ளார்.

இவர்கள் ஆட்சி மூன்றே முக்கால் ஆண்டுகளுக்குள் ஒரு முடிவுக்கு வந்தது. 1945 ஆகஸ்டு 6, 9 ஆம் நாள்களில் அமெரிக்கர் சப்பானிய ஹிரோஷிமா (Hiroshima), நாகசாகி (Nagasaki) நகரங்கள்மீது அணுக்குண்டுகளை வீசினர். இக் கொடிய மனிதத் தன்மையற்ற நடவடிக்கையால் இரண்டு நகரங்களும் தரைமட்டமாயின.[14] அதனால், சப்பான் வலிமை இழந்தது; வேறு வழியின்றித் தோல்வியை ஒப்புக்கொண்டது (15.8.1945).

சப்பான் ஆட்சியில் சமுதாய நிலை மிகமிக இரங்கத்தக்கதாய் இருந்தது. ஆனால், இக் காலத்தில் இங்கு நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ்[15] மேற்கொண்ட இந்திய விடுதலைக்குரிய நடவடிக்கைகள் புதிய உணர்வலைகளை வீசின.

இந்தியாவை மீட்கக் காந்தியடிகள் மேற்கொண்ட அறப்போராட்டத்தில் சுபாஷ் சந்திரபோஸ் நம்பிக்கை இழந்தார்; வீரப்போர் புரிந்தே இந்தியாவை ஆங்கிலேயரிடமிருந்து மீட்க எண்ணினார்; அவர் திட்டத்தைக் காந்தியடிகள் தலைமை ஏற்கவில்லை. உடனே அங்கிருந்து அவர் வெளியேறினார்[16] (1939). பின் சப்பானியரொடு மலாயா - சிங்கப்பூர் வந்து, அவர்கள் துணையொடு இந்தியாவை மீட்கப் படைதிரட்டினார். இங்கு இந்திய விடுதலைக் கழகம் (Indian Independent League) உருவானது. இந்திய தேசிய இராணுவமும் (Indian National Army) உருவாயிற்று. இந்தியத் துணைக்கண்டத்தை மீட்க, அத் துணைக் கண்டத்திற்கு வெளியே மேற்கொள்ளப்பட்ட இரண்டாவது முயற்சி இதுவாகும். முதல் முயற்சி டாக்டர் செண்பகராமனால் தொடங்கப்பெற்றது என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. (டாக்டர் செண்பகராமன் பற்றிய மேல் விவரங்களை 128, 277ஆம் பாடல்களின் பின்புலம் - குறிப்புரைகள் பகுதியில் காண்க).

---

13 கவிஞர் அமலதாசன், களஞ்சியப் பாடல் எண் 135
14 மன்சுலேன்கோ. வி. அ., இரண்டாம் உலகயுத்தம் (மொழிபெயர்ப்பு), ப. 490
15 விரிவிற்கு 302ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.
16 திரு. வி. க., இந்தியாவும் விடுதலையும், ப. 372

## தோட்டங்களில் அமர்த்தப்பட்டிருந்த தொழிலாளர் எண்ணிக்கை

| | 1967 | | | 1975 | | | 1980 | | | 1982 | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தோட்ட வகை | ஆண் | பெண் | சிறுவர் | ஆண் | பெண் | சிறுவர் | ஆண் | பெண் | சிறுவர் | ஆண் | பெண் | சிறுவர் |
| ரப்பர் | 114770 | 108590 | 8840 | 88670 | 95420 | 3160 | 72820 | 92730 | 1660 | 63702 | 83713 | 880 |
| தென்னை | 2710 | 1900 | 120 | 1850 | 1510 | 90 | 1920 | 1770 | 20 | 2210 | 2150 | 18 |
| செம்பனை | 16630 | 9940 | 1180 | 42820 | 21070 | 3390 | 51460 | 24370 | 2020 | 55410 | 36740 | 300 |
| தேயிலை | 2210 | 2240 | 370 | 1460 | 1770 | 240 | 1140 | 1580 | 60 | 836 | 1091 | 24 |
| அன்னாசி | 2030 | 1180 | 160 | 660 | 340 | ... | 780 | 820 | 30 | 683 | 688 | 5 |

சான்று : மலேசியத் தொழிலாளர் மனிதவள அமைச்சின் அறிக்கை 1981 / 82

பட்டியல் - 4

## மலேசியா : 1980 - 1984 இல் இனவாரியாகப் பதிவுபெற்ற தொழில்முறை அலுவலர்

| | 1980 | | | | | 1984 | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| தொழில் | பூமிபுத்ரா | சீனர் | இந்தியர் | மற்றவர் | மொத்தம் | பூமிபுத்ரா | சீனர் | இந்தியர் | மற்றவர் | மொத்தம் |
| கட்டடக்கலைஞர் | 57 | 461 | 7 | 8 | 533 | 103 | 539 | 7 | 9 | 658 |
| (%) | (10.7) | (86.5) | (1.3) | (1.5) | (100.0) | (15.6) | (81.9) | (1.1) | (1.4) | (100.0) |
| கணக்கர் | 120 | 1,261 | 116 | 122 | 1,619 | 286 | 2,678 | 195 | 75 | 3,234 |
| (%) | (7.4) | (77.9) | (7.2) | (7.5) | (100.0) | (8.9) | (82.8) | (6.0) | (2.3) | (100.0) |
| பொறியாளர் | 1,533 | 5,904 | 526 | 321 | 8,284 | 3,500 | 9,294 | 752 | 335 | 13,881 |
| (%) | (18.5) | (71.3) | (6.3) | (3.9) | (100.0) | (25.2) | (67.0) | (5.4) | (2.0) | (100.0) |
| பல் மருத்துவர் | 117 | 744 | 241 | 30 | 1,132 | 194 | 444 | 286 | 33 | 957 |
| (%) | (10.3) | (65.7) | (21.3) | (2.7) | (100.0) | (20.3) | (46.4) | (29.9) | (3.4) | (100.0) |
| மருத்துவர் | 341 | 1,534 | 1,467 | 172 | 3,514 | 753 | 1,881 | 1,745 | 126 | 4,505 |
| (%) | (9.7) | (43.7) | (41.7) | (4.9) | (100.0) | (16.7) | (41.8) | (38.7) | (2.8) | (100.0) |
| விலங்கு மருத்துவர் | 63 | 98 | 164 | 28 | 353 | 128 | 123 | 198 | 37 | 486 |
| (%) | (17.8) | (27.8) | (46.5) | (7.9) | (100.0) | (26.3) | (25.3) | (40.8) | (7.6) | (100.0) |
| அளவியலாளர் | 130 | 245 | 30 | 12 | 417 | 237 | 369 | 39 | 17 | 662 |
| (%) | (31.2) | (58.7) | (7.2) | (2.9) | (100.0) | (35.8) | (55.7) | (5.9) | (2.6) | (100.0) |
| வழக்கறிஞர் | 173 | 565 | 412 | 15 | 1,165 | 272 | 826 | 557 | 43 | 1,698 |
| (%) | (14.8) | (48.5) | (35.4) | (1.3) | (100.0) | (16.0) | (48.7) | (32.8) | (2.5) | (100.0) |
| மொத்தம் | 2,534 | 10,812 | 2,963 | 708 | 17,017 | 5,473 | 16,154 | 3,779 | 675 | 26,081 |
| (%) | (14.9) | (63.5) | (17.4) | (4.2) | (100.0) | (21.0) | (61.9) | (14.5) | (2.6) | (100.0) |

*சான்று : தொழிலாளர் , மனிதவள அறிக்கை, 1984 / 1985, - ப. 40. மலேசியத் தொழிலாளர் அமைச்சு.*

பட்டியல் - 5

நேதாஜிக்கு இங்கு மிகுந்த ஆதரவு பெருகிற்று. இளைஞருடன் இளமங்கையரும் படையில் அணி அணியாய்த் திரண்டனர். படை (ஜான்சி இராணிபடை) இம்பால்வரை சென்றது.[17] அவப்பேறாய்ச் சப்பான் தோல்வி அடைந்தது. நேதாஜியும் விமான விபத்தில் மறைந்தார் (18.8.1945).

மாமறவர் நேதாஜி ஊட்டிய வீரம் மலாயா இந்தியரிடையே ஒரு புதிய வேகத்தை ஏற்படுத்தியது; விழிப்புணர்விற்கும் வழிவகுத்தது. அதனால், மீண்டும் ஆட்சிக்கு வந்த பிரிட்டிசார் முன்போல் வெறியாட முடியவில்லை. தோட்ட நிருவாகங்களும் முன்போலத் தான்தோன்றித்தனமாய் நடக்க இயலவில்லை. நாட்டில் அரசியல், சமுதாய இயக்கங்கள் தோன்றலாயின; தொழிற்சங்கங்கள் கால்கொள்ளத் தொடங்கின.

1945 - 47-க்கிடையே, பல தொழிற்சங்கங்கள் ஒருங்கிணைந்தன. அகில மலாயாத் தொழிற்சங்க சம்மேளனம் (Pan-Malayan Federation of Trade Union - P.M.F.T.U.) உருவானது. அது பல போராட்டங்களைச் சந்தித்தது. வேலை நிறுத்தங்கள் பல நடந்தன; அடிதடிகளும் துப்பாக்கிச் சூடுகளும் நடந்தன; பலர் கைது செய்யப்பட்டனர்; போராட்டம் தொடர்ந்தது. 13.6.1948இல் அ.ம.தொ.ச. தடை செய்யப்பட்டது.[18]

பிரிட்டிஸ் காலனி அரசு 18.6.1948இல் நெருக்கடி நிலையை அறிவித்தது. பொதுவுடைமை இயக்கத்தாரை ஒடுக்கக் கொண்டுவந்த நெருக்கடிநிலை 1960வரை தொடர்ந்தது.

போராட்ட உணர்வுகொண்ட தொழிற்சங்கங்கள் நாட்டில் உருவாகத் தோட்ட நிருவாகங்களோ, காலனி அரசோ விரும்பவில்லை; போராட்ட உணர்வில்லாத - இணக்கப் போக்குடைய தொழிற்சங்கங்களையே அவை வரவேற்றன. அந் நிலையில் அப் போக்குகளைக் கொண்ட தொழிற்சங்கங்கள் சில மாநிலங்களில் தோன்றின. இதில் இந்தியரே முன்னோடிகளாய் விளங்கினர். பின் அவை ஒன்றிணைந்து (2.11.54இல்) தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமாய் (National Union of Plantation Workers-N.U.P.W.) மாறிற்று. அதற்குப் பி. பி. நாராயணன் பொதுச் செயலாளர் ஆனார் (1952 - 93). அமைப்புத் தலைவராய் ஏ. வேணுகோபால் பொறுப்பேற்றார். தொடர்ந்து எஸ். பி. எஸ். நாதன் தலைவராய்த் தேர்வு பெற்றார் (1952 - 72).

இருவரும் தொடக்க காலத்தில் தோட்டத் தொழிலாளர் மேம்பாடு காணப் பலவழிகளில் பாடுபட்டனர். இவர்களின் அயராப் பணியால் தோட்டத் தொழிலாளரிடையே ஒரு மறுமலர்ச்சி தோன்றிற்று.

---

17 வேலுசாமி, சுப., நேதாஜியின் வீர வரலாறு, ப. 105

18 வரதராசு,மு.,தேசியத் தோட்டத் தொழிலாளர்கள் வரலாறும் பிரச்சினைகளும்,ப.90

சங்கத்திற்கெனப் பெட்டாலிங் ஜெயாவில் தோட்ட மாளிகை மிடுக்கோடு எழுந்தது; (இந்த மாளிகை இப்போது தே.நி.நி.கூ.சங்கத்திற்கு விற்கப்பட்டுவிட்டது). சங்க ஏடான சங்கமணி[19] (1951 மே 1முதல்) கிழமை இதழாய் வெளிவந்தது; பின்னர்க் கிழமை இருமுறை ஆனது. (இப்போது கிழமை இதழ்). தோட்டத் தொழிலாளர்க்கு எல்லா நாளும் வேலை என்ற நிலைமைபோய் வாரம் ஒருநாள் விடுமுறையாய் மலர்ந்தது. மேலும்,

- தொழிலாளர் குடியிருப்புகள் மாற்றம் கண்டன.
- ஓரளவு சம்பள உயர்வு கிடைத்தது.
- தொழிலாளரிடையே ஒருவித நம்பிக்கை மனப்பான்மையும் ஒற்றுமையும் ஏற்பட்டன.
- உலகளாவிய புகழைத் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் பெற்றது.

பி. பி. நாராயணன் அனைத்துலகச் சுதந்திரத் தொழிற்சங்க சம்மேளனத்தின் தலைமைப் பொறுப்பினை ஏற்றார் (1975 - 89); எஸ்.பி.எஸ். நாதன் தொழிலாளர் பேராளராய் நாடாளுமன்ற மேலவை (செனட்டர்) உறுப்பினரானார்; (1962 - 67). இவை மலேசியத் தொழிலாளர் சமூதாயத்திற்குப் பெருமை சேர்த்தன.

இந் நிலைமைகளால் சமுதாயம் முழு விடுதலை பெற்றுவிடவில்லை. என்றாலும், ஓரளவிற்கு மூச்சுவிடத் தொடங்கிற்று; தொழிலாளரைக் கீழறுக்கும் வஞ்சகச் செயல்கள் முற்றாக ஒழிந்துவிடவில்லை. எனினும், முன்னைய நிலையினும் பல்வேறு மாறுதல்களைச் சமுதாயம் பெற்றது.

எனினும் வளம்பெற்ற சமுதாயம் என்னும் நிலையை அஃது எய்தவில்லை. 75 விழுக்காடு உடல் உழைப்புத் தொழிலாளரைக்கொண்ட அச் சமுதாய நிலை குறித்து 'இன்சான்' (INSAN - Institute For Social Analysis) என்னும் நிறுவனம் 1989இல் 'உறிஞ்சப்பட்ட ஆரஞ்சுப் பழங்கள்' (Sucked Oranges, 1989, p. 4) என்னும் வெளியீட்டில் குறிப்பிட்டுள்ள தகவல்கள் உண்மை நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. (பொருளாதாரப் பகுதியில் வந்துள்ள பட்டியல் எண் - 9 காண்க).

தரமற்ற குடியிருப்புகள், சத்துணவு உண்ண வருவாய் போதாமை, குழந்தைகள் கற்பதற்கேற்ற சூழ்நிலை அமையாமை முதலாயவை சமுதாயத்தை உயரவிடாமல் அழுத்தியே வைத்துள்ளன என்பதனை ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.

---

19 விரிவிற்குக் கவிதைக் கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

தொழிற்சங்கமும் இதனை உணர்ந்துள்ளது எனினும் தோட்ட நிருவாகங்களுக்கோ, அரசுக்கோ கடுமையான நெருக்கடிகளைத் தாராமல் அமைதியான வழிகளிலேயே அதன் நடவடிக்கைகள் நிகழ்ந்து வந்தன.

இலட்சக் கணக்காய தொழிலாளரை ஒரு தலைமையின்கீழ் இணைய வைப்பதில் வெற்றிகண்ட தொழிற்சங்கம், மேலும் பல வசதிவாய்ப்புகள் ஏற்பட வழி கண்டிருக்கலாம்; மறுமலர்ச்சிக்கு வித்திட்டிருக்கலாம். தொழிலாளர்களுக்கு ஓரளவு சம்பள உயர்வு, தொழில் தொடர்பாய சிக்கல்களைத் தீர்த்தல் எனும் இரண்டுமே அதன் முதல் நோக்கங்களாய் இருந்தன. விடுதலை உணர்வு மிக்க, தன்மான உணர்வு மிக்க, பொருளாதார வளம்கொண்ட, தற்காப்பு உணர்வுகொண்ட சமுதாயம் காண்பதிலும் அது போராடப் புகுந்திருந்தால், இன்று இந் நாட்டின் வலிமை மிக்க சமுதாயமாய் இந்திய - தமிழ்த் தொழிலாளர் சமுதாயம் வாழ வழிபிறந்திருக்கலாம். தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தில் பின்னாளில் சீனரும் மலாய்க்காரரும் உறுப்பினர் ஆயினர்; எனினும், பெரும்பான்மையோர் இந்தியரே. அதிலும் 90 விழுக்காட்டிற்கு மேல் தமிழரே ஆவர்.

இஃது ஏன் இங்குக் குறிக்கப்படுகிறது எனின், சமுதாய இயக்கங்களுக்கு, அரசியல் கட்சிகளுக்கு இல்லாத ஓர் அழுத்தமான உறவு, நெருங்கிய தொடர்பு தொழிற்சங்கத்துக்கும் தொழிலாளர் சமூகத்திற்கும் இடையே இருந்தது. இஃது, எளிதில் அமையாப் பெருவாய்ப்பாகும் என்பதனைச் சுட்டுதற்கே ஆகும்; தன் பணி, சமுதாயச் சீர்திருத்தப் பணியன்று என்று தொழிற்சங்கம் இவற்றில் கருத்துச் செலுத்தவில்லை போலும்! தொடக்க காலத்தில் அது தொழிலாளர் நலத்திற் கொண்டிருந்த நல்லெண்ணம், அக்கறை, தொண்டுணர்வு காலப்போக்கில் நீர்த்துக்கொண்டே வந்தன. அண்மைக் காலத்தில் அது மேலும் நீர்த்தது. உழைப்பாளர் வர்க்கத்திலிருந்து, உழைப்பின் அருமையை, தொழிலாளர் துன்பக் காதையை உணர்ந்தோர் சங்கத் தலைமைக்கும், நிருவாகப் பணிகளுக்கும் வரவாய்ப்பில்லாமற் போனது இதற்கு முதன்மைக் காரணமாய் இருக்கலாம்.

எத்தனையோ தோட்டப் பாட்டாளிகளின் தியாகத்தால் உருவானது தொழிற்சங்கம். தலைவர் சிலரின் தன்வரலாற்றோடு அதன் 'கதை' அடங்கிவிடாது. அஃது ஒரு தனி வரலாற்றுக்குரிய பேரியக்கமாகும். தடயங்கள், தரவுகள் மறைந்தொழிவதற்குள் அதன் உண்மை வரலாறு விரிவாக எழுதப்பெறல் வேண்டும்.

தோட்டங்களில் பல, நாட்டு மேம்பாட்டுத் திட்டங்களுக்காக அழிந்துபட்டன வெனினும் தொழிற்சங்கத்துக்கு இன்றும்கூடப் பெருங்கடமை இருக்கிறது. தோட்டப்புறத் தொழிலாளர் வாழ்வு மறுமலர்ச்சி பெற்றுவிட்டதென்று சொல்லிவிட முடியாது. நாடு கண்டுவரும் மாறுதல்களுக்கேற்பத் தோட்டப் பாட்டாளிப் பெருமக்களும் உயர்வுபெற, மேலும் உழைக்கும் கடப்பாடு தொழிற்சங்கத்துக்கு உண்டு.

சமுதாயத்தின் பலவீனத்தையும் இங்குச் சுட்டிக் காட்டத்தான் வேண்டும். இத்துணை நடந்தும் சமுதாயம் இன்றும் விழிப்புணர்ச்சி பெறாமை ஒரு பெருங்குறையேயாகும். சேமித்துச் சிறப்பாய் வாழ்வோம்; 'சம்சா' (கள்ளச்சாராயம்) சமுதாயமா? என்று தோட்டந்தொறும் முழங்கியும், அம் முழக்கங்களை நூலாய் வெளியிட்டும்[20] சமுதாயம் திருந்தியதாய்த் தெரியவில்லை. எனினும் அச் சமுதாயத்தை அங்ஙனமே விடமுடியாது; விடக்கூடாது. உள்ளார்ந்த உணர்வுடன் புதிய வழிமுறைகளைக் கண்டறிந்து செயல்படுத்த வேண்டும். நல்வாழ்வுக்கு வழிகாட்டவேண்டும்.

## பொது இயக்கங்கள்

தோட்டப்புறத் தமிழர் மேம்பாட்டிற்கு அடிநாளிலிருந்து சமுதாய இயக்கங்களும் பேரளவு பங்காற்றியுள்ளமையை மறந்துவிட முடியாது. தொழிற்சங்கங்கள் செய்யமுடியாத, அவற்றின் எல்லைக்கப்பாற்பட்ட பணிகளையும் சமுதாய அரசியல் இயக்கங்கள் ஆற்றியுள்ளன. சமுதாய இயக்கங்களில் அகில மலாயாத் தமிழர் சங்கமும்[21] மலேசியத் திராவிடர் கழகமும்[22] பழைய அமைப்புகளாகும். இந்தியர் அரசியல் கட்சியான மலேசிய இந்தியர் காங்கிரசு[23] 1946இல் தோன்றியது. மலேசியத் திராவிடர் கழகம் 1946 இல் பதிவுபெற்றது; சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்டது; மூடநம்பிக்கைகளிலிருந்து, சமுதாயம் விடுதலைபெறப் பாடுபட்டது; தோட்டப் புறங்களிலும் அதன் முற்கால நடவடிக்கைகள் ஊடுருவின; சமுதாய மாற்றங்களுக்குத் துணைபுரிந்தன.

1929, 1954ஆம் ஆண்டுகளில் இங்குத் தந்தை பெரியார்[24] மேற்கொண்ட சுற்றுலா, கழகத்தின் பணிகளுக்குப் புத்துணர்வினை நல்கியது. அகில மலாயாத் தமிழர் சங்கமும், நாடெங்கும் கிளைகளைக் கொண்டிருந்தது; அதன் நோக்கங்களும் கொள்கைகளும் சமுதாய மேம்பாட்டிற்குப் பெரிதும் உதவியுள்ளன.

அடுத்து நாடெங்கும் பரவலாய் அமைந்த தமிழ் இளைஞர் மணிமன்றப்[25] பணிகளும் சிறப்பாய்க் குறிக்கத்தக்கன. இவ்வகையில் ம.இ.கா. வின் பணி அளப்பரியது. அடுத்தடுத்த படலங்களில் அவை விளக்கப்பெறும்.

இப்பொழுது, இந்திய - தமிழ்த் தொழிலாளர் தோட்டப்புறங்களை விட்டுப் பெரும் அளவில் வெளியேறி வருகின்றனர். அவ்வாறு வெளியேறுவோர் புறம்போக்கு நிலங்களில் புகுந்து குடிசைகளைப் போட்டுக்கொண்டு அன்றாடம் காய்ச்சிகளாய்

---

20 ஜி. பெருமாள், (முன்னாள் துணைப் பொதுச்செயலர்) எழுதிய நூல்கள்.
21 விரிவிற்கு 414ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.
22 விரிவிற்கு 422ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.
23 விரிவிற்கு 417ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.
24 விரிவிற்கு 327ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில்காண்க.
25 விரிவிற்கு 420ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

வாழ்க்கையை ஓட்டிவருகின்றனர். இது தோட்டப்புற வாழ்வைவிட மோசமான நிலையில் உள்ளது இளைஞரிடையே குற்றச் செயல்கள் மிகுந்துவருகின்றன; பண்பாடு சிதைந்து வருகிறது; வாழ்க்கையில் அவர்களுக்கு ஒரு பிடிப்பில்லாப் போக்கு வளர்ந்துவருகிறது.

தமிழகத்திலிருந்து இறக்குமதியாகும் தரமற்ற வாணிக நோக்குடைய திரைப் படங்களே இந் நிலைக்குக் காரணம் என்று பெரும்பாலோர் சொல்கின்றனர். இவற்றொடு கள்ளச் சாராயப் பெருக்கமும் காரணம் எனப் பினாங்குப் பயனீட்டாளர் சங்கம்[26] (Penang Consumers' Association) போன்ற சமுதாயப் பொறுப்புணர்ச்சி மிக்க இயக்கங்கள் சுட்டிக்காட்டுகின்றன.

இங்கு இன்னொன்றையும் கருத்தில் கொள்ள வேண்டும். நாட்டின் மேம்பாட்டுக்காகத் தோட்டங்கள் அழிக்கப்பட்டன; அழிக்கப்படுகின்றன. இதனை மற்றொரு துண்டாடல் என்று சொல்லத்தக்க அளவு நிலைமை கடுமையானது. அதனால் "வேளாண்மைத் துறையில் இந்தியர் வேலைவாய்ப்பை இழந்தனர். வீடற்றோர் எண்ணிக்கை பெருகிவருகிறது. இது பல்வேறு சமூகச் சிக்கல்களை அதன் சமூகத்துக்குள்ளேயே உருவாக்குகிறது" என்பதைப் 'சன்' நாளேடு (Sun,16.7.1995) சுட்டிக்காட்டியுள்ளதும் ஈண்டு நினைவு கூரத் தக்கது.

சரியான வழிகாட்டி இன்மை, போதிய வருவாய் இன்மை, எதிர்பார்க்கும் வாழ்வு அமைய வழியின்மை, ஆதங்கம், ஏமாற்றம், விரக்தி போன்றனவும் சமுதாயத் தாழ்ச்சிக்குக் காரண மென்பதனை மறத்தல் கூடாது. இதனை ஆய்வாளர்களும் சுட்டியே வருகின்றனர். "இத் தலைமுறை இவ்வாறு அழிவதனை முற்றாகத் தடுத்து நிறுத்தமுடியாது" என்னும் ஆய்வாளர், "அடுத்த தலைமுறையின் வாழ்வு கண்டிப்பாய்ச் சிறக்கும்"[27] என்று பெருநம்பிக்கையுடன் எடுத்துரைக்கின்றனர்.

## மலையாளிகள்

தென்னகத்திலிருந்து குடிபெயர்ந்துவந்த திராவிட இனத்தவருள் தமிழரை அடுத்து மிகுதியாய எண்ணிக்கைகொண்டவர் மலையாளிகள் ஆவர். இப்போது இவர்கள் எண்ணிக்கை 44,215 (1991 ஆம் ஆண்டு மக்கள் கணக்கு). இவர்களும் தோட்டப்புறங்களில் தொழிலாளராய் வேலை செய்தனர் எனினும் பெரும்பாலோர் தோட்டங்களில் 'கிராணி'களாயும் மருத்துவமனை உதவியாளராயும் பணியாற்றினர்; தோட்ட முதலாளிகளின் வலக்கையாய்த் திகழ்ந்தனர்; முதலாளிகள் தோட்டத் தொழிலாளரைத் தங்கள் முழுக்கட்டுப்பாட்டில் வைத்திருக்கப் பெருந் துணைபுரிந்தனர். இவர்கள் அழுத்தமான இனப்பற்றும்,

---

26 விரிவிற்கு 222ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

27 நேர்காணலின்போது டான்ஸ்ரீ எஸ். ஓ. கே. உபைதுல்லா, டான்ஸ்ரீ கே. ஆர். சோமசுந்தரம், ஜி. பெருமாள், முனைவர் ரெ. கார்த்திகேசு ஆகியோர் கூறிய கருத்துகளும் இப் பகுதியில் சேர்க்கப்பெற்றன.

ஒற்றுமையுணர்வும் மிக்கவர்; தங்களைத் தற்காத்துக்கொண்டு வாழ்வதில் வல்லவர்; பொருளாதாரத்தைப் பெருக்கிக் கொள்வதில் கருத்துடையவர்; அடிநாளிலிருந்தே அரசியலிலும் ஈடுபாடு காட்டி வருபவர்.

இப்போது சொந்தத் தொழில்களில் நாட்டம் செலுத்தி முன்னேறி வருகின்றனர்; உயர்ந்த பதவிகளும் வகிக்கின்றனர். இவர்கள் இயக்கமான 'அம்மா' (All Malaysia Malayalee's Association) ஒரு வலிமை பொருந்திய இயக்கமாகும். இவர்களின் முதன்மையான திருவிழாவான ஓணம் பண்டிகையை மிகச் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். கலைத்துறையிலும் இவர்கள் பேரார்வத்துடன் ஈடுபட்டு அதனைக் காத்து வருகின்றனர். இவர்களில் பலர் தமிழ் எழுதப் படிக்க அறிந்தவராவர். தமிழ் எழுத்துத் துறையில் ஈடுபட்டு இலக்கியம் படைப்போரும் உளர். தமிழ் ஆசிரியர்களாயும் சிலர் பணியாற்றுகின்றனர். தமிழ்த் தொடர்புடைய சில அரசு துறைகளிலும் பணி புரிகின்றனர்.

## தெலுங்கர்

தென்னகத்திலிருந்து இங்கு வந்தோரில், திராவிட மரபினராய தெலுங்கரும் ஒரு பிரிவினர். இவர்களில் இப்போதைய எண்ணிக்கை 34,615 (1991). இவர்களில் பெரும்பாலோர் தோட்டப்பாட்டாளிகளே. பேரா மாநிலத் தோட்டங்களில் இவர்கள் மிகுதியாய் வாழ்கின்றனர்; நல்ல உழைப்பாளிகள்; சிக்கனத்தில் சிறந்தவர்கள். தமிழர்களைப் போலவே இவர்களும் பல சிக்கல்களை எதிர்நோக்கவே செய்கின்றனர்.

தங்களுக்கென மலேசியத் தெலுங்கு சங்கம் என்னும் (Persatuan Telugu Malaysia) ஓர் உறுதியான அமைப்பைக் கொண்டுள்ள இவர்கள். ஆண்டுதோறும் தெலுங்குப் புத்தாண்டைச் சிறப்பாகக் கொண்டாடி வருகின்றனர். இந் நாட்டில் உலகத் தெலுங்கு மாநாட்டையும் சிறப்பாய் நடத்தியுள்ளனர். தாய்மொழிப் பற்றுக்கொண்ட இவர்களுள் சிலர் தமிழ் ஆசிரியர்களாயும் எழுத்தாளர்களாயும் பேச்சாளர்களாயும் விளங்குகின்றனர்.

## கன்னடர்

திராவிட இனத்தவராய கன்னடர் மலேசியாவில் மிகவும் குறைந்த எண்ணிக்கையினரே உள்ளனர். அவர்களுள்ளும் நேரடியாய்க் கன்னடத்திலிருந்து வந்தவர்களைவிடத் தமிழகத்திலிருந்து வந்தவரே மிகுதி. மக்கள் கணக்கெடுப்பில் இவர்கள் தனி இனமாகக் கணக்கிடப்படுவதில்லை; இதர இந்தியர்களில் சேர்க்கப்படுகின்றனர்.

இவர்களில் பெரும்பாலோர் தமிழரைப் போன்ற வாழ்க்கைச் சூழல் கொண்டவரே. காலமாறுதலையொட்டி இவர்கள் முன்னேற்றம் கண்டு வருகின்றனர். இவர்களுள் பெரும்பாலோர் தமிழ் அறிந்தவர்களாய் உள்ளனர்.

### வடபுல இந்தியர்

இந்தியத் துணைக் கண்டத்திலிருந்து இந்நாட்டிற்குப் புலம் பெயர்ந்தோரில் தென்னாட்டவரே பெரும் எண்ணிக்கை கொண்டவர் ஆவர். வடவர் குறைந்த எண்ணிக்கையினரே. வடவர் என்னும் பிரிவில் நேப்பாளி, குஜராத்தி, பஞ்சாபியர் முதலாயோர் அடங்குவர். மக்கள் தொகைக் கணக்குப்படி இவர்களின் இப்போதைய எண்ணிக்கை 44,815 (1991). இவர்களில் பெரும்பாலோர் காவல் துறையைச் சார்ந்திருந்தனர்; வணிகராய் விளங்கினர்; வட்டித் தொழிலில் முன்னிலை வகித்தனர். எதிர்காலத் தலைமுறையைக் கல்வியறிவு மிக்கவராய் ஆக்குவதில் வெற்றிகண்டனர்.

இவர்கள் அரசியலிலும் பங்கு கொள்ளத் தவறவில்லை. ஆளும் தேசிய முன்னணியில் ஒரு பங்காளிக் கட்சியான ம.இ.கா. வில் மட்டுமல்லாமல் எதிர்க்கட்சிகளிலும் அன்று முதல் இன்றுவரை பங்கு பெற்றுத் தொண்டாற்றி வருகின்றனர். மலேசிய இந்திய சமுதாயத்தின் வலுவான ஒற்றுமைக்குக் கேரள, ஆந்திர, கன்னட, வடஇந்தியர்களின் பங்கும் சிறப்பாய்க் குறிப்பிடத் தக்கதாகும்.

## உ அரசியல்

மலேசிய அரசியலில் இந்திய சமூகம் ஆர்வத்தொடு ஈடுபட்டு வந்தது. மலாயாவில் வெள்ளையர் ஆட்சி நடந்தபோது தமிழர் நகராண்மைக் கழகம், சட்டமன்றம், பெடரல் சட்டப் பேரவை முதலாயவற்றில் உறுப்பினராய் விளங்கினர்.

### கா. தம்புசாமிப் பிள்ளை

1890இல் தலைநகர் கோலாலம்பூரில் நலவழி வாரியம் தொடங்கப்பட்டது. பின்னர் அது நகராண்மைக் கழகமாயிற்று. அதனில் முதல் உறுப்பினராய் (1894) தமிழர் கா. தம்புசாமிப் பிள்ளை திகழ்ந்தார். இவர் கோலாலம்பூர் உருவாக்கத்தில் பெரும் பங்கு வகித்தார். இவர், சிலாங்கூர் மாநிலக் கருவூல அதிகாரியாயும் பணிபுரிந்தார்; இவர் பெயரால் தலைநகரில் சாலை ஒன்று அமைந்துள்ளது; தமிழ்ப்பள்ளி ஒன்றும் இயங்கிவருகிறது.

### பி. கே. நம்பியார்

1923இல் பினாங்கு ஸ்ட்ரெயிட்ஸ் சட்டப் பேரவை உருவாயிற்று; அதில் இந்தியப் பேராளராய் வழக்கறிஞர் பி.கே. நம்பியார் நியமனம் பெற்றார்; பின்னர் உச்ச நீதிமன்ற வழக்கறிஞராய் விளங்கினார். இவரது ஆற்றலைப் பிரிட்டிஷ் அரசு பெரிதும் மதித்துப் பாராட்டிற்று.

### எச். ஏ. அப்துல் காதர்

சட்டப் பேரவையில் வழக்கறிஞர் எச்.ஏ. அப்துல் காதர் 1930இல் நியமனம் பெற்றார். இவர் சிறந்த பொதுப் பணியாளராய் விளங்கினார். அதனால், இவர் பிரிட்டிஷ் மன்னர் முடிசூட்டு விழாப் பதக்கமும் (1937), வெள்ளிவிழாப் பதக்கமும் (1938) பெற்றார். இவர் இந்தியப் பம்பாய் (மும்பாய்)ப் பகுதியைச் சேர்ந்தவர்.

### லூயிஸ் திவி (திவ்வியநாதன்)

இவர் பேரா மாநிலச் சட்டப் பேரவையில் 1929இல் ஓர் உறுப்பினரானார். இவர் தொண்டைப் பாராட்டிப் பேராச் சுல்தான் இவருக்குச் சமாதான நீதிபதி (Justice of Peace) விருதளித்துச் சிறப்பித்தார். மலேசிய இந்தியர் காங்கிரசு இயக்கத்தின் முதல் தலைவரும் (1946 - 47) மலாயா-சிங்கப்பூரின் முதல் இந்தியத் தூதருமாய ஜான் திவியின் தந்தையே திரு. லூயிஸ் திவி.[28]

### டாக்டர் எஸ். ஆர். கிருஷ்ணன்

1932 இல் இவர் நெகிரி மாநிலச் சட்டப்பேரவைக்கு நியமனம் பெற்றார். இவர் சிறந்த பொதுப்பணியாளராய் விளங்கினார்.

### எஸ். என். வீராசாமி

இங்கு 1909 இல் பெடரல் சட்டப் பேரவை உருவாயிற்று. அதில் இடம்பெற இந்திய சமுதாயத்திற்கு 1928 இல் வாய்ப்புக் கிடைத்தது. அவ் வாய்ப்பினைப் பெற்ற முதல் இந்தியர் - தமிழர் வழக்கறிஞர் எஸ். என். வீராசாமி. இவர் மலாயா இந்திய சங்கங்களின் பேரவைத் தலைவராய் விளங்கினார். இவர் இந்தியர் நலனுக்காக உழைத்த தலைவர்களுள் ஒருவர். பின்னர் இப் பெடரல் சட்டப் பேரவையில் டாக்டர் எஸ். ஆர். கிருஷ்ணன் இடம்பெற்றார்.

### இரண்டாம் உலகப் போருக்குப் பின்

மேற்படி பதவிகள், உரிமைக் குரல் எழுப்ப வாய்ப்பில்லாப் பதவிகள் என்பது சொல்லித் தெரிய வேண்டுவதில்லை. இந் நிலை படிப்படியாய் மாறத் தொடங்கிற்று. இதற்கு வழிவகுத்தது இரண்டாம் உலகப் போரே.

உலகில் தங்களை வெல்ல வல்லார் ஒருவருமிலர் என்று இறுமாந்திருந்த வெள்ளையர் முதுகெலும்பினை உடைத்துச் சிங்கப்பூர், மலாயாவிலிருந்து

---

*28 Arasaratnam, S., Indians in Malaysia and Singapore, p. 86*
*Rabindra Daviel, J., Indian Christians in Peninsular Malaysia, Kuala Lumpur, TAC, Methodist Church, 1992, p. 173*

அவர்களை விரட்டினர் சப்பானியர் (1941). சப்பானியர் உதவியொடு இந்தியாவை மீட்க இங்குக் களம் அமைத்தார் நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் (1942 - 45). சப்பானியர் 1945இல் தோற்றனர். நேதாஜியும் விமானப் பேரிடரில் மறைந்தார். அவர் முயற்சியும் தோல்வியில் முடிந்தது. அதனால் மீண்டும் வெள்ளையர் மலாயாவைக் கைப்பற்றினர்.

பின்னர்ப் படிப்படியாய் எல்லாமே மாறுதல் அடையத் தொடங்கின. இந்தியாவை மீட்கத் திரண்ட இந்திய தேசிய இராணுவத்தினர் (இரண்டாம் உலகப் போர் ஒரு முடிவுக்கு வந்தபின்) நேதாஜியும் மறைந்ததால் நிலைகுலைந்தனர்; அடுத்து என்ன செய்வது என்று தெரியாது தவித்தனர்; படையினருள் பலர் சிறைபிடிக்கப்பட்டனர்.

இந் நிலையில் இந் நாட்டு இந்தியர்களுக்கு உதவ இந்தியாவிலிருந்து மருத்துவக் குழு ஒன்று வந்தது; சிறைப்பட்டவர்களை மீட்க வழக்கறிஞர் குழு ஒன்றும் வந்தது. இரு குழுக்களும் தம் பணியைச் சிறப்பாய் ஆற்றின. அக் குழுக்கள் இங்குத் தொண்டாற்றிக்கொண்டிருந்தபோதே இந்தியத் துணைக் கண்டத்தின் முன்னாள் தலைமை அமைச்சர் பண்டித நேரு வந்தார் (18.3.1946). சோர்ந்திருந்த மலாயா இந்தியருக்கு அவர் பெரும் ஊக்கம் நல்கினார்.

நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ஊட்டிய விடுதலை உணர்வும், பண்டித ஜவகர்லால் நேரு ஊட்டிய நம்பிக்கை உணர்வும் மலாயா நாட்டு இந்தியர் புதியதொரு வழியைப் பின்பற்ற ஊக்கின.

நேதாஜி அணியில் இணைந்து விடுதலைப் போர் நடத்திய ஜான் ஏ. திவி,[29] மலாயா இந்தியருக்குக் காலத்தின் கட்டாயத்தால் ஓர் அரசியல் கட்சியை அமைத்துப் புதியதொரு வழியைக் காட்ட முயன்றார். பெரும்பாலும் இந்திய விடுதலைக் கழகத்திலும், இந்திய தேசிய இராணுவத்திலும் தொண்டாற்றிய பலர் ஒத்துழைப்பொடு 1946 ஆகஸ்டு 3,4,5 நாள்களில் (செந்தூல் செட்டியார் மண்டபத்தில்) கூடிய மாநாட்டில் மலேசிய இந்தியர் காங்கிரஸ் (ம.இ.கா. - 4.8.46) பிறந்தது. அம் மாநாட்டில் நிறைவேறிய முடிபுகள் அதன் குறிக்கோளைத் தெளிவாய்ப் படம்பிடித்துக் காட்டுகின்றன.[30]

> "சுதந்திர மலாயாவை நிருமாணிப்பதில் மற்றச் சமூகங்களோடு ம.இ.கா. ஒத்துழைக்கக் காத்திருக்கிறது."

---

29 விரிவிற்கு 417ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க. ம.இ.கா. தலைவர் வரிசையும் இதனில் உண்டு.

30 Arasaratnam, S., Indians in Malaysia and Singapore, p. 114

> "தன் தாய்நாடு விடுதலை அடைய நடைபெறும் போராட்டத்தில் தன் சக்திக்கியன்ற வகையில் எல்லா உதவிகளையும் இக் காங்கிரஸ் செய்யும்."
>
> "மலாயா இந்திய மக்கள் தம் தேசத்தின்மீது அதிகப் பொறுப்புணர்ச்சி கொள்ளவும், தீவிர அரசியல் கல்வி சமூகச் சீர்திருத்தத்தை அபிவிருத்தி செய்யவும், தக்க கொள்கைகளை ம.இ.கா. வகுக்கும்"[31]

என்பன போன்ற முடிவுகள் அதன் கொள்கைகளை நன்கு எடுத்துக்காட்டும். இஃது ஒரு மாபெரும் மாறுதலாகும்; தலைகீழ் மாற்றமுமாகும். மொழிபெயர் தேயத்தைத் தாயகமாக ஏற்கவும், வாழும் நாட்டின்பால் முழுப் பற்றுக்கொண்டு அதன் விடுதலைக்கு உழைக்க மக்களை ஆயத்தப்படுத்தவும் ம.இ.கா. முயன்றது.

ம.இ.கா. அமைவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன் அஃதாவது 1946 மே 11 இல் டத்தோ ஓன் பின் ஜபார் தலைமையில் அம்னோ ஐக்கிய மலாய்க்காரர் தேசிய இயக்கமும் (United Malay National Organisation - UMNO), டத்தோ டான் செங் லொக் தலைமையில் ம.சீ.ச. மலாயா சீனர் சங்கமும் (Malay Chinese Association-MCA) அமைந்தன.

ம.இ.கா. 1954ஆம் ஆண்டுவரை முழுக்க முழுக்க மேல்மட்டத்தினர் பங்குகொண்ட அமைப்பாகவே இருந்துவந்தது; சாதாரணத் தொழிலாளராய்த் தோட்டப்புறங்களில் உழன்றவர் (85 விழுக்காட்டினர்) இடம்பெறவே இல்லை. அது நாட்டு விடுதலை இயக்கங்களுள் ஒன்றாதலின் பிரிட்டிசார் அதன்மேல் ஒருகண் வைத்திருந்ததும் அது விரிந்து பரவாமைக்கு ஒரு காரணமாய் இருந்திருக்கலாம்.

இரண்டாம் உலகப் போருக்குப்பின் 1948இல் இங்குச் சட்டப் பேரவை அமைந்தது. அதனில் இந்தியத் தனிப் பேராளராய் வழக்கறிஞர் ஆர். இரமணி ஓர் உறுப்பினராய் நியமனம் பெற்றார். வணிகச் சங்கப் பேராளராய் டான் ஸ்ரீ எஸ்.ஓ.கே. உபைதுல்லா நியமனம் பெற்றார்; ரப்பர்த் தோட்டத் தொழிலாளர் பேராளராய்ப் பி. பி. நாராயணன் இடம்பெற்றார். இரயில்வே தொழிலாளர் சங்கப் பேராளராய் இராசகோபால் இடம்பெற்றார். ரப்பர்த் தோட்ட 'உத்தியோகஸ்தர்' சங்கப் பேராளராய் வி.எம். மேனன் இடம்பெற்றார்.

---

31 சந்திரகாந்தம், ப., மலேசிய இந்தியர்களின் சமூக, அரசியல் வாழ்க்கைப் போராட்டங்கள், ப. 17

1951இல் பெடரல் சட்டமன்றத்தில் அமைச்சர் தகுதியுடைய உறுப்பினர் முறை (Membership System) தொடங்கிற்று.

அதனில் டத்தோ சர் ஓன் பின் ஜபார், டத்தோ நிக்காலே முதலாயவரொடு இலங்கைத் தமிழராய சர் கிளவ் துரைசிங்கம் (கல்வித்துறை) அவர்களும் இடம்பெற்றிருந்தார். இந்தியச் சமுதாயச் சார்பில் யாரும் நியமிக்கப்பட வில்லை. பெரும் போராட்டத்துக்குப் பின் வி. எம். மேனன் (தொடர்புத் துறை)[32] நியமனம் பெற்றார்.

## அரசியலில் புதிய எழுச்சி

நாட்டு விடுதலையை நோக்கி விரைந்துகொண்டிருந்த மலேசிய மக்களின் அரசியல் பாதையில் 1951ஆம் ஆண்டிற்குப் பின் புதிய மாறுதல்கள் தோன்றின; அம்னோ தலைவர் டத்தோ ஓன் பின் ஜபார் “இன அடிப்படையிலான கட்சிமுறை தேவையில்லை” என முடிவெடுத்தார். அம்னோ அதனை ஏற்கவில்லை, அதனால் அம்னோவிலிருந்து விலகிக்கொண்டார்; எல்லா இனங்களைச் சார்ந்தவரும் உறுப்பினராகும் வண்ணம் மலாயா விடுதலை இயக்கத்தை (I.M.P.) அமைத்தார்.

ம.இ.கா. வும் ம.சீ.ச.வும் அதற்கு ஆதரவு கொடுத்தன. ஆனால், 1952இல் நடந்த கோலாலம்பூர் நகராண்மைக் கழகத் தேர்தலில் அது படுதோல்வி அடைந்தது. அக் கட்சியின் சார்பில் தேர்தலில் நின்ற கே. எல். தேவாசரும், டான்ஶ்ரீ தேவகி கிருஷ்ணனுமே வெற்றி கண்டனர்.

பின்னர் டத்தோ ஓன் பின் ஜபார் ‘தேசியக் கட்சி’ (Party Negara) என்னும் பெயரில் ஓர் இயக்கத்தைத் தொடங்கினார். அதற்கும் இந்தியர் ஆதரவு தந்தனர். அக் கட்சியும் தோல்வியையே தழுவியது. அக் கட்சியிலிருந்த பெரும்பாலோர் அதிலிருந்து விலகினர்.

## துங்குவின் தலைமை

1951இல் அம்னோவின் தலைமைப் பொறுப்பினை மலேசிய விடுதலைத் தந்தையாய துங்கு அப்துல் ரகுமான்[33] ஏற்றார். பரந்த நோக்கும் மனிதநேய உணர்வும் மிக்க அப் பெருமானார் தம் கட்சியை வலுப்படுத்தினார். மலாய்க்காரர், சீனர், இந்தியர் சார்ந்த அரசியல் கட்சிகளை ஒன்றிணைத்துக் கூட்டணி (விரிவிற்கு 419 ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.) (Alliance) அமைக்க முயன்றார். முதலில் அதனில் இணைய மறுத்த ம.இ.கா. பின்னர் (1954) இணைந்தது. இதற்குரிய முயற்சியில் தீவிரமாய் ஈடுபட்டவருள்

---

32 உபைதுல்லா, டான்ஶ்ரீ, எஸ். ஓ. கே., தமிழ்நேசன் 70ஆம் ஆண்டுமலர், ப. 68

33 விரிவிற்கு 324ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

அப்போதைய தேசியத் தலைவர் குண்டன்லால் தேவாசரும், பொதுச் செயலர் க. குருபாதமும்[34] குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

## மலேசிய அரசியல்வானில் தமிழர்

நாடு விடுதலை பெறுதற்கு ஈராண்டுகளுக்கு முன் (27.7.1955) நாட்டின் முதலாவது பொதுத் தேர்தல் நடந்தது. 98 நாடாளுமன்ற இடங்களில் 52 இடங்களுக்குத் தேர்தல் நடந்தது; கூட்டணி 51 இடங்களில் வென்றது. சுயேச்சைகளில் ஒருவர் வென்றார். 19 பேர் நியமனம் பெற்றனர்.[35] இந்தியருக்கு வழங்கப்பட்ட இரண்டு தொகுதிகளில் ம.இ.கா. தேசியத் தலைவர் துன் வீ. திருஞானசம்பந்தன்[36], இலங்கைத் தமிழரான செல்வசிங்கம் மெக்கண்டையர் வெற்றி கண்டனர். குண்டன்லால் தேவாசரும், வழக்கறிஞர் குமாரசாமியும் நாடாளுமன்ற உறுப்பினராய் நியமிக்கப்பெற்றனர்.

## அமைச்சரவையில் இடம்

விடுதலைத் தந்தை துங்கு அப்துல் ரகுமான் தலைமையில் அமைந்த நாட்டின் முதலாவது அமைச்சரவையில் துன் வீ. திருஞானசம்பந்தன் தொழிலாளர் அமைச்சரானார். துங்குவின் சீரிய தலைமையும் எல்லா இனத்தவரும் ஒன்றிணைந்து மேற்கொண்ட முயற்சிகளும் 1957 ஆகஸ்டு 31இல் நாட்டுக்கு விடுதலையைத் தேடித் தந்தன.

விடுதலைக்குப் பின் நடந்த பொதுத் தேர்தலில் ம.இ.கா.விற்கு நான்கு இடங்கள் கிடைத்தன. துன் வீ.தி. சம்பந்தன், டான்ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம்[37], மகிமா சிங் ஆகிய மூவரும் போட்டியிட்டு வென்றனர். வணிகரான எ. எஸ். தாவூது தோல்வி கண்டார். அமைச்சரவையில் துன் வீ. தி. சம்பந்தன் பொதுப்பணி அமைச்சரானார்; டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் தொழிலாளர் துணை அமைச்சரானார்.

அடுத்து 1964, 69ஆம் ஆண்டுகளில் நடந்த பொதுத் தேர்தலில் நாடாளுமன்றத்தில் மும்மூன்று இடங்களும், 74, 78, 82 ஆகிய ஆண்டுகளில் நந்நான்கு இடங்களும், 86, 90 ஆகிய ஆண்டுகளில் அவ்வாறு (ஆறுஆறு)

34 விரிவிற்கு 369ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

35 விரிவிற்கு Tunku Abdul Rahman Putra, Looking Back, p. 50

36 விரிவிற்கு 345, 379ஆம் பாடல்களின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

37 விரிவிற்கு 386ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

இடங்களும், 1995இல் ஏழு இடங்களும் கிடைத்தன. இப்போதுள்ள நாடாளுமன்ற இருக்கைகள் 192. ஆளும் கட்சியின் ஒரு பங்காளியாய ம.இ.கா. பெற்றிருக்கும் இடங்கள் ஏழு. இன விழுக்காட்டு (விகிதாசாரம்) அடிப்படையில் இது மிகவும் குறைவான எண்ணிக்கையே. இக் குறை தொடர்ந்து நிலவிவருகிறது. பல நாடாளுமன்றத் தொகுதிகளில் வெற்றியை முடிவு செய்யும் வாக்குகள் (Casting Votes) இந்தியர் வாக்குகள் என்றாலும் எந்தத் தொகுதியிலும் தனித்து நின்று வெற்றி பெறத்தக்க அளவு இந்தியர் வாக்காளர் எண்ணிக்கை இல்லை என்று சுட்டிக் காட்டப்படுகிறது.

## மேலவையில்

மலேசிய நாடாளுமன்ற மேலவையில் இப்பொழுது 69 இருக்கைகள் உள. அவற்றில் 8 இருக்கைகள் இந்தியர்க்கு வழங்கப்பட்டுள்ளன. (இது நியமனப் பதவியாகும்). இது மனநிறைவளிக்கத் தக்கதாய் உள்ளது. மேலும் நாடாளுமன்ற மேலவையின் துணைத் தலைவராய் டான் ஸ்ரீ எஸ்.ஓ.கே. உபைதுல்லாவும் (1971 - 80), தலைவராய் டான்ஸ்ரீ ஜி. வடிவேலுவும் (1991 - 95) பொறுப்பு வகித்துள்ளனர் என்பது சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கது.

## மேலவையில் மகளிர்

நாடாளுமன்ற மேலவையில் தமிழ்மகளிரும் இடம்பெற்றமை குறிப்பிடத் தக்கது. இரண்டாம் உலகப் போரின்போது நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் தலைமையில் இயங்கிய இந்திய தேசிய இராணுவத்தின் மகளிர் பிரிவில் (டாக்டர் இலட்சுமி தலைமையேற்ற ஜான்சி ராணி படை) அரும் பணியாற்றியவரான புவான் ஸ்ரீ ஜானகி ஆதிநாகப்பன் மேலவை உறுப்பினராய்ப் பொறுப்பு வகித்தார். பின்னர் ம.இ.கா. மகளிர் பிரிவுத் தலைவி திருமதி வள்ளி முத்துசாமி மேலவை உறுப்பினரானார். இப்பொழுது புவான் ஸ்ரீ சரசா பாசமாணிக்கம் அப் பதவியை வகித்துவருகிறார். இம் முறை நாடாளுமன்றக் கீழவையிலும் (Dewan Rakyat) ஒரு பெண்மணி (டாக்டர் லீலாராமா) தேர்வு பெற்றுள்ளார்.

1964இல் துன் வீ. தி. சம்பந்தன், டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் ஆகிய இருவரும் முழு அமைச்சர்களாய் (கேபினட்) நியமனம் பெற்றனர்; இந் நிலை 1974ஆம் ஆண்டிற்குப் பின் மாற்றம் கண்டது; துன் சம்பந்தன் அரசியலில் இருந்து ஓய்வுபெற்ற பின் (1973) டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் தலைமை ஏற்றார். 1974 இல் நடந்த பொதுத் தேர்தலுக்குப் பின் அமைந்த அமைச்சரவையில், டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் முழுஅமைச்சராயும், டத்தோ ஆதிநாகப்பன்[38] சட்டத் துறைத் துணை அமைச்சராயும் இடம்பெற்றனர். மலேசியாவின் மூன்றாவது தலைமை

---

38 விரிவிற்கு 381ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

அமைச்சர் துன் உசேன் ஓன், அவரை 1976இல் முழு அமைச்சராய் நியமித்தார். ஆனால் அவர் குறுகிய காலத்தில் புகழுடம்பெய்தினார் (9.5.1976). அதன்பின் இந்திய சமுதாயத்துக்கு ஆட்சியில் ஒரு முழு அமைச்சர், இரு துணை அமைச்சர்கள் எனும் நிலையே தொடர்ந்தது.

டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் மறைந்த பின் (12.10.1979) டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு[39] தலைமை ஏற்றார். அப்பொழுது டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட வ. கோவிந்தராஜு நாடாளுமன்றச் செயலரானார். ஒரு முழு அமைச்சர், ஒரு துணை அமைச்சர் (டத்தோ கு. பத்மநாபன்), ஒரு நாடாளுமன்றச் செயலர் என்ற அளவிலேயே இடைக்காலம் முடிந்தது.

1986இல் தேசிய முன்னணி (Barisan Nasional) ம.இ.கா.விற்கு நாடாளுமன்றத்தில் 2 இடங்களைக் கூடுதலாய் வழங்கிற்று. எனினும் இரண்டு முழு அமைச்சர் என்ற நிலை மலரவில்லை. கூடுதலாய் நாடாளுமன்றக் கீழவையின் துணைத்தலைவர் பதவி ஒன்றும் (1990வரை), நாடாளுமன்றச் செயலர் பதவியொன்றும் ம.இ.கா.விற்குக் கிட்டின; நாடாளுமன்றத் துணைத்தலைவர் பதவிக்கு டி.பி. விஜேந்திரனும், நாடாளுமன்றச் செயலர் பதவிக்கு எம். ஜி. பண்டிதனும் நியமனம் பெற்றனர். ஆனால் அவப்பேறாய்த் தவணை முடிவதற்குள் விஜேந்திரன் பதவியிலிருந்து விலக வேண்டிய நெருக்கடி சூழ்ந்தது; கட்சியிலிருந்து விலக்கப்பட நேர்ந்ததால் பண்டிதன் பதவியிழக்க வேண்டியதாயிற்று.

அடுத்த பொதுத் தேர்தலுக்குப் பின் (1990) மேலும் சில பதவிகள் ம.இ.கா. வேட்பாளர்க்கு வழங்கப்பட்டன. இம் முறை மேலவைத் தலைவர் பதவியும் (டான்ஸ்ரீ ஜி. வடிவேலு -1995வரை), இரு நாடாளுமன்றச் செயலர் பதவியும் கிட்டின. 1995இல் நடந்த பொதுத் தேர்தலுக்குப் பின் (தற்போது) ஒரு முழு அமைச்சர் (டத்தோஸ்ரீ ச. சாமிவேலு), இரு துணை அமைச்சர் (டத்தோ சி. சுப்பிரமணியம், டத்தோ க. குமரன்), இரு நாடாளுமன்றச் செயலர் (டத்தோ எம். மகாலிங்கம், டத்தோ ஜி. பழநிவேலு) பதவி வகிக்கின்றனர். "பரவலாய் இத்தனை பதவிகள் இருப்பினும் சில முதன்மையாய அமைச்சுகளில் இந்தியப் பேராளர் இடம்பெறாமை வருந்தத்தக்கது" என ஏடுகள் சுட்டிக்காட்டத் தவறவில்லை. இனத்தின் பெரும்பகுதி தொழிலாளராய் இருந்தும், தொடக்கத்தில் அந்த அமைச்சின் தலைமைப் பொறுப்புத் தமிழரிடம் இருந்தும் காலப்போக்கில் அத் துறையில் நாடாளுமன்றச் செயலர் பொறுப்புக்கூட இல்லாமற் போனமை வருந்தத் தக்கதே. மேலும் கல்வித் துறையில், துணையமைச்சர் பொறுப்போ, நாடாளுமன்றச் செயலர் பொறுப்போ தரவேண்டுவதனைச் செய்தித்தாள்கள் சுட்டிக் காட்டின. குறிப்பாக மயில் (இதழ்) சுட்டிக் காட்டிற்று.

---

39 விரிவிற்கு 338ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

### சட்ட மன்றங்களில்

நாட்டின் தலைநகர்ப் பகுதியான கூட்டரசு வளாகத்தைத் (Wilayah Persekutuan - Federal Territory) தவிர்த்த பதின்மூன்று மாநிலங்களில் சட்ட மன்றங்கள் இயங்குகின்றன. அவற்றில் எட்டுச் சட்டமன்றங்களில் இந்தியப் பேராளர் இடம்பெற்றுள்ளனர்; இப்போது 13 சட்ட மன்றங்களில் கூடுதல் 394 தொகுதிகள் உள்ளன. தேசிய முன்னணியால் ம.இ.கா. விற்குத் தொடக்க நாளில் (1959) 13 இடங்கள் ஒதுக்கப்பட்டன. அவை அடுத்தடுத்து 11 (1964), 10 (1969), 8 (1974), 11 (1978), 9 (1982), 13 (1986), 13 (1990), 15 (1995) என ஏறுவதும் இறங்குவதுமாய் இருந்துவந்தன. நாடாளுமன்ற எண்ணிக்கையைப்போல், இவ் வெண்ணிக்கையும் நிறைவளிக்கவில்லை என்பதனை ஆய்வாளர் சுட்டிக் காட்டுகின்றனர். ஆனால் ம.இ.கா. வேட்பாளர்களில் சற்றேறக் குறைய 100 விழுக்காட்டினர் தேர்தல்களில் வெற்றி பெற்றுவிடுகின்றனர். தேசிய முன்னணி வெற்றி வாய்ப்புள்ள தொகுதிகளை வழங்குவதே இதற்குக் காரணமாகும்.

### ஆட்சிக் குழுக்களில்

சட்டமன்ற ஆட்சிக் குழு உறுப்பினர் (மாநில அமைச்சர்) பதவிகூட எல்லா மாநிலங்களிலும் வழங்கப் பெறவில்லை என்பது ஒரு பெருங்குறையே. இக் குறை படிப்படியாய்த் தீர்க்கப்பட்டு வருகிறது என்பது சற்று ஆறுதல் தருகிறது.

### நாட்டு உருவாக்கத்தில் இந்தியர்

நாட்டு உருவாக்கத்தில் இந்தியர் - தமிழர் பங்கு அளவிடற்கரியதாகும். தொடக்க நிலையில் காடழித்து நாடமைப்பதில், தொழிலாளர் தம்மை முழுமையாய் ஈடுபடுத்திக் கொண்டதனைப் போல அரசியல் தலைவர் பணிபுரிந்தனர். குறிப்பாய்த் துன் வீ. தி. சம்பந்தன், டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம், டான் ஸ்ரீ ஆதி நாகப்பன், டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு முதலியவர் ஆற்றிய பணிகள் பாட்டுடைத் தலைவர் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளன.

### சமுதாய நலன் நாடி

ம.இ.கா. ஆண்டு மாநாடுகளில் நாட்டுப் பிரதமரிடம் வழங்கும் தாக்கீதுகளில் இந்தியர் சிக்கல்களைத் துல்லியமாய் எடுத்துரைக்கத் தலைவர்கள் தயங்கிய தில்லை. அவற்றில் சில தீர்வு கண்டதுண்டு; பல தீர்வு காணாமற் போனதும் உண்டு.

நாடாளுமன்றக் கீழ், மேல் அவைகளில் பல உறுப்பினர் நாட்டு வளர்ச்சிக்கும், சமுதாய வளர்ச்சிக்கும் பல அரிய கருத்துகளை வழங்கினர்; மேலவை உறுப்பினராய் இருந்த சி. கிருஷ்ணன், "இலங்கையில் நடைபெறும் உயிர்ப்பலியை உடனடியாய்த் தடுத்து நிறுத்த, சிரீலங்காவும் இந்தியாவும் முன்வர வேண்டும் எனத் தமிழ் பேசும்

மலேசியர் கவலை கொள்வது மனிதாபிமானமே"[40] என்று பேசியமை ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. மேலவை உறுப்பினராய் இருந்த வீ. க. செல்லப்பன் தம் மேலவை உரைகளைத் தொகுத்து ஒரு நூலாய் வெளியிட்டுள்ளார்.

## எதிர்க்கட்சிகளில்

ஆளும் தேசிய முன்னணியில் மட்டுமன்றி எதிர்க்கட்சிகளிலிருந்தும் இந்தியர் நாடாளுமன்றச் சட்டமன்றங்களுக்குத் தேர்வுபெற்றுள்ளனர். சில ஆண்டுகளில் ஆளும் அணியில் இருந்தவர்களைவிட எதிர் அணியில் நாடாளுமன்றங்களிலும் சட்ட மன்றங்களிலும் மிகுதியானவர் இடம்பெற்றிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்களில் டி. ஆர். சீனிவாசகம், டத்தோ எஸ். பி. சீனிவாசகம் (மக்கள் முற்போக்குக் கட்சி - People's Progressive Party), டாக்டர் வி. டேவிட்,[41] பி. பட்டு, சி. தேவன் நாயர், கர்பால் சிங் (சனநாயகச் செயல்கட்சி-Democratic Action Party) முதலாயோர் மிகவும் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இந்தியர் - தமிழர் சிக்கல்பற்றி இவர்கள் அஞ்சா நெஞ்சொடு நாடாளுமன்றத்தில் குரல் எழுப்பினர்.

தொடக்க காலத்திலிருந்தே உரிமைக்குரல் கொடுத்து வந்த இவர்கள் குடியுரிமைச் சிக்கல்கள், கல்விச் சிக்கல்கள், தோட்டத் தொழிலாளர் சிக்கல்கள், தமிழ்மொழி, தோட்டத் துண்டாடல்,[42] வேலை இணக்கச் சீட்டு (Work Permit) முறை முதலானவைபற்றியும் ஆளுங்கட்சியினர்க்கு உணர்த்தினர்.

இவர்கள் மாநிலச் சட்ட மன்றங்களுக்கும் தேர்வுபெற்று முழக்கமிட்டவராவர். இவர்களுள் 15-3-69 இல் டி..ஆர். சீனிவாசகமும், 4.6.74 இல் எஸ்.பி. சீனிவாசகமும், 12-7-95 இல் பி. பட்டும் மறைந்தனர். டாக்டர் டேவிட் 1995இல் அரசியலைத் துறந்தார். இவர்களுக்குப் பின், இந்திய - தமிழச் சமுதாயம் குறித்து நாடாளுமன்ற எதிரணியில் குரல் எழுப்பச் சரியான ஆள் இல்லாமற் போனமை பெருங்குறையே.

## ம.இ.கா.வே துணை

மலேசியத் தமிழர் வரலாற்றின் அரசியல் பிரிவில் மட்டுமல்லாது, பரவலாய்ப் பல இடங்களில் ம.இ.கா. பற்றிய செய்திகள் பதிந்துள்ளன. "யாரும் உணர்ச்சியைத் தூண்டும் பிரச்சினைகளை எழுப்பக்கூடாது" என்னும் கட்டுப்பாடுடையது இந்நாட்டின் அரசியல் உரிமை. அக் கட்டுப்பாட்டுக் குட்பட்டுப் பொருளாதார வளமற்ற சிறுபான்மை இனத்தின் முன்னேற்றத்துக்காக அது தன்னாலியன்றவரை பாடுபட்டு வருகிறது என்பது ஈண்டு நினைவுகூரத் தக்கது.

---

40 வீரப்பன், இர. ந., மலேசியத் தமிழர், ப. 274

41 விரிவிற்கு 342ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

42 விரிவிற்கு 159ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

நாட்டில் எத்தனையோ அமைப்புகள் இருந்தாலும், எதிர்க்கட்சிகளில் இந்தியர் இடம்பெற்றிருந்தாலும், மலேசிய இந்தியர் - தமிழர் அரசியல் உரிமைகளைக் காப்பதில் மட்டுமன்றிச் சமுதாயக் கல்வி, பொருளாதார, சமய, பண்பாட்டு வளர்ச்சிகளுக்கும் ம.இ.கா. ஆலமரம் போன்று விளங்கிக் காத்துவருகிறது.

ம.இ.கா.விற்கு ஒரு மாற்றுக் கட்சியாக 1985ஆம் ஆண்டு வ.கோவிந்தராஜுவினால் ஜனநாயக மலேசிய இந்தியர் கட்சி (ஜ.ம.இ.க.) தொடங்கப்பட்டது (D.M.I.P. - Democratic Malaysian Indian Party). 1990 இல் எம்.ஜி.பண்டிதனால் இந்தியர் முன்னேற்ற முன்னணி (I.P.F - Indian Progressive Front) தொடங்கப்பட்டது. ஆயினும், நாட்டை ஆளும் தேசிய முன்னணியில் இந்திய சமுதாயத்தை ம.இ.கா. மட்டுமே பிரதிநிதிக்கிறது என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

## 12 கல்வி

விலங்கினின்று மனிதனை வேறுபடுத்திக் காட்டுவது கல்வி என்றார் திருவள்ளுவர்; ஒருவனை மாந்தர் நிலைக்கு உயர்த்துவது கல்வியே; அதனாலேயே கல்விக்கு முதன்மை தரப்படுகிறது. கல்வியறிவு இல்லாமல் - மிகக் குறைந்த கல்வியொடு வந்ததனால்தான் தமிழரை மற்றவர், கொத்தடிமைபோல் நடத்தினர்; ஏமாற்றினர்; வஞ்சித்தனர்; வாட்டிவதைத்தனர்.

"தங்களுக்குக் குற்றேவல் செய்ய வந்த தலைமுறையினர் இவர்கள். இவர்களை இந் நிலையிலேயே வைத்திருக்க வேண்டு"மென்று அவர்கள் எண்ணினர்; அடுத்தடுத்த தலைமுறையினரும் ஆக்கஞ் சேர்க்கும் கல்விபெற வழிவிடக்கூடாதென்று செயல் பட்டனர். இதனில் வியப்பொன்றுமில்லை; அவர்கள் உயர, கொள்ளையிட அந் நிலை அவர்க்குத் தேவைப்பட்டது.

இங்கு ஒப்பந்தக் கூலிகளாய் (Janji) வந்தவர்க்கு ஓலைக்குடில்களையோ, நீண்ட வீடுகளையோ கட்டிக் கொடுத்ததுபோல் குழந்தைகள் படிக்க உடனடியாய்ப் பள்ளிகளைக் கட்டித் தரவில்லை. வழிபாட்டுத் தலங்களையும் கள்ளுக்கடைகளையும் அமைக்க முன்வந்த அவர்கள், பள்ளிக்கூடங்களை அமைக்க விரும்பவில்லை; அமைக்க எண்ணங்கொண்டபோதும், அஃது உயர்ந்த நோக்கங் கொண்டதாய் இல்லை.

### காலனி அரசு

இங்குத் தமிழ்ப் பள்ளிகளை அமைத்த நோக்கம் தொழிலாளர் குழந்தைகளைக் கல்விச் செல்வராய் மாற்றுதற்கன்று. அவர்கள் தங்களுக்கு வரும் கடிதங்களை ஓரளவு படிக்கவும், மறுமொழி எழுதவும் தெரிந்துகொண்டால் போதும் என்ற அளவிற்கே ஆகும்.

இந் நாட்டில் தமிழ்க்கல்விக்கமைந்த சூழலை மூன்று கட்டங்களாய்ப் பிரிக்கலாம்:

1. போருக்கு முன்னைய கல்விச் சூழல் (1945-க்கு முன்)
2. போருக்குப் பின்னைய கல்விச் சூழல் (1946 - 56)
3. விடுதலைக்குப் பின்னைய கல்விச் சூழல் (1957-க்குப் பின்)

19ஆம் நூற்றாண்டின் முற்பகுதி 1816முதல் இரண்டாம் உலகப் போர் முடியும் வரை (1945) இங்கு அமைந்திருந்த கல்விச்சூழல் மிக மிக இரங்கத்தக்கதாகும். அப்போது ஒழுங்கான பாடத்திட்டமோ, முறையான கட்டடங்களோ இல்லை. கற்றல் கற்பித்தலில் உயர்ந்த நோக்கமோ, பயிற்சி பெற்ற ஆசிரியரோ இல்லை. எதிர்காலக் கூலிப்படைக்கு ஏதோ இரண்டெழுத்து என்னும் நோக்கிலேயே அப்போதைய கல்விமுறை இருந்தது.

ஒரு தோட்டத்தில் பணிபுரியும் தொழிலாளர் வேறு தோட்டங்களுக்குப் போய்விடக்கூடாது என்பதற்காக அவர்களுக்கு ஒரு பிடிப்பை ஏற்படுத்தத் தமிழ்ப் பள்ளிகள் தொடங்கப்பட்டன. அவ்வாறு தொடங்கப்பட்ட பள்ளிகள் அமைந்த இடம் "ஆயாகொட்டகைள் (குழந்தைகள் பராமரிப்பு நிலையம்), நாடகக் கொட்டகைகள், கோயில்கள், தொழிலாளர் விடுதிகள், தொழிற்சாலையின் ஒரு பகுதி ஆகியனவே. அவை தமிழ்ப்பள்ளிகள் எனும் அளவில் அலங்கோலமாய்க் காட்சியளித்தன.[43]

தமிழ்க் கல்விக்கு இந் நாட்டில் கிடைத்த முதல் இடமும் இலவசப் பள்ளி ஒன்றில் ஒரு சிறு பகுதிதான். பினாங்கு இலவசப் பள்ளியில் (Penang Free School) 1816இல் தமிழுக்காக ஒரு பகுதி ஒதுக்கப்பட்டது. இப் பள்ளி கீழ்த்திசை நாடுகளின் புகழ்பெற்ற பள்ளியாகும். இது நாட்டுத்தந்தை துங்கு அப்துல் ரகுமான் பயின்ற பள்ளி என்பது குறிப்பிடத்தக்கது. மறைத்திரு ஆர். எஸ். ஹட்சிங்ஸ் (R. S. Hutchings) ஏழைக் குழந்தைகளுக்கும், திக்கற்ற குழந்தைகளுக்கும் கல்வி கற்பிக்கும் நோக்கத்தில் இப் பள்ளியை அமைத்தார்; பினாங்கில் அன்று வாழ்ந்தவர்களுக்குத் தாய்மொழியையும் போதிக்க வேண்டும் என்ற நோக்கத்திலும், அரசு அனுமதியுடன் இந்தப் பள்ளியை நிறுவினார். பள்ளியில் பயின்ற குழந்தைகள் விரும்பினால் அவர்களுக்கு ஆங்கிலமும் கற்பிக்கப்பட்டது. உள்ளூர் ஆசிரியர்களைக்கொண்டு இப் பள்ளியில் தமிழும் மலாய்மொழியும் பயிற்றுவிக்கப் பட்டன என்று வரலாற்றுக் குறிப்புகள் காட்டுகின்றன.[44]

இருப்பினும் தொடக்கத்தில் ஐந்து தமிழ் மாணவரே சேர்ந்தனர். ஆனால் தொடர்ச்சியான ஆதரவின்மையால் அது மூடப்பட்டது. 1817இல் தொடங்கிய பெண்கள் பள்ளியிலும் தமிழ், மலாய்மொழி வகுப்புகள் தொடங்கப்பட்டன. காலப்

43 வெங்கடேசன், பி. எஸ்., ஆறாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடு (மலேசியா) மலர் (1987), ப. 198
44 Arasaratnam, S., Indians in Malaysia and Singapore, p. 178
45 கிருஷ்ணன், தமிழ் நேசன் 70ஆம் ஆண்டு நிறைவு மலர். ப.50

போக்கில் அவையும் மூடப்பட்டன.[45] 1850இல் ஓர் ஆங்கிலோ தமிழ்ப்பள்ளி (Anglo Tamil School) மலாக்காவில் இருந்ததாய்க் குறிப்பு உள்ளது. ஆனால் அது தொடரவில்லை. இதுபோன்ற பள்ளிகள் பினாங்கில்கூட இருந்து தொடராமற் போயின. 1859இல் சிங்கப்பூர் செயின்ட் பிரான்சிஸ் சேவியர் மலபார் பள்ளி (Singapore St. Francis Xavier Malabar School) தமிழ் வகுப்புகளைத் தொடங்கிற்று. இது கிறித்தவ இயக்கங்களால் தொடங்கப்பட்டதாய்த் தெரிகிறது. 1870களில் தமிழ்ப்பள்ளிகள் மலாக்கா, பினாங்கு, ஜோகூர், சிங்கப்பூர், புரோவின் வெல்லஸ்லி (செபராங் பிறை) ஆகிய இடங்களில் நிறுவப்பட்டன.[46] தொடர்ந்து தோட்டப் புறங்களில் தமிழ்ப் பள்ளிகள் தோன்றின. பட்டணங்களில் நகராண்மைக் கழகத் தொழிலாளர் குழந்தைகள் படிக்கப் பள்ளிகள் பல அமைந்தன.

இரயில்வே பணியாளர் குழந்தைகளுக்காகப் பல பள்ளிகள் அமைந்தன; இவற்றொடு தனிப்பட்டவரும் கலாசார, சமூக, சமய இயக்கங்களும் ஆங்காங்கே குறிப்பாக நகர்ப்புறங்களை ஒட்டித் தமிழ்ப்பள்ளிகளை அமைத்துத் தமிழ்மொழியைக் கற்றல் கற்பித்தலுக்குரிய சூழலை ஏற்படுத்தின. அக்கால நிலைகுறித்துத் தம் ஆய்வுக் கட்டுரையில் கோ. கிருஷ்ண பகவான், "தமிழ்மொழி, கற்றல் கற்பித்தல் இந் நாட்டில் ஆரம்பித்த பொழுது முதல் நான்கு வகுப்புவரையும், 1920ஆம் ஆண்டுகளில் ஐந்தாம் வகுப்பு வரையும் 30ஆம் ஆண்டுகளில் 6ஆம் வகுப்புவரையும் தொடர்ந்தன"[47] என்று கூறுகிறார். பின்னர் 1920ஆம் ஆண்டுகளில் போருக்கு முன்பு இங்குத் தமிழ்க்கல்வி முறையாய்க் கற்பிக்கப்படவில்லை. இதுகுறித்துப் பி. எஸ். வெங்கடேசன் தம் கட்டுரையில் "குடியேற்றத் தொழிலாளர் பிள்ளைகளுக்குக் கல்வி புகட்டக் கோயில் பூசாரிகள், கண்காணிகள், கிராணிமார் (Conductor), ஓரளவு தமிழ் படித்த தொழிலாளர் ஆகியோர் ஆசிரியர்களாய்ப் பணியாற்றினர்"[48] என்கிறார்.

இங்ஙனம் பெயருக்கு இயங்கிவந்த பள்ளிகளுக்குச் சற்று உயிரூட்டும் காலகட்டங்கள் மலர்ந்தன. 1923இல் வகுக்கப்பட்ட தொழிலாளர் சட்டம் (Labour Code), 1929இல் உருவான தமிழ்ப்பள்ளிகளின் அமைப்பு நிருவாக ஒழுங்கு முறை ஆகியன (Regulations for the Organization and Administration of Tamil Schools) தமிழ்ப்பள்ளிகளின் வளர்ச்சியை விரைவுபடுத்தின.[49]

இரண்டாம் உலகப் போருக்குப் பின் நிலை மேலும் சற்றுச் சீரடையத் தொடங்கிற்று; பள்ளிகளின் எண்ணிக்கை பெருகிற்று; மாணவர் எண்ணிக்கை உயர்ந்தது; பயிற்சி பெற்ற ஆசிரியர் தேவைப்பட்டனர்; முறையான ஒரு பாடத்திட்டமும் (ஓரளவு) உருவாயிற்று; 6ஆம் வகுப்பொடு நின்ற கல்வி 7ஆம் வகுப்புவரை நீண்டது.

---

46 Wong, F.H.K. & Gwee, Y.H. Perspectives : The Development of Education in Malaysia and Singapore, Kuala Lumpur: Heinemann, 1972, p. 10

47 16-19.11.1987இல் மலேசியாவில் நடந்த ஆறாவது உலகத் தமிழ் மாநாட்டில் படித்த கட்டுரை.

48 ஆறாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு (மலேசிய) மலர், (1987), ப. 199

49 Selvakumaran, R., Indian Plantation Labour in Malaysia, Kuala Lumpur, 1994, p. 183

அன்று வகுத்த பாடத்திட்டம் தமிழ்நாட்டுப் பாடத்திட்டத்தை ஒட்டியதாய் அமைந்தது. தமிழ்நாட்டுப் பாடநூல்களே பயன்படுத்தப்பட்டன. தமிழ்நாட்டிலிருந்தும் இலங்கையிலிருந்தும் வரவழைக்கப்பட்ட தமிழாசிரியர்களும் இங்கேயே ஓரளவு பயிற்சி பெற்றவர்களும் ஆசிரியர்களாய் அமைந்தனர்.

இலங்கையிலிருந்து தமிழ்ப் பணியாற்ற இங்கு வந்தவர், தமிழ்க் கல்வித் துறையை அன்று முழுமையாய்த் தங்கள் கட்டுப்பாட்டிலேயே வைத்திருந்தனர். எல்லா மாநிலங்களிலும் தமிழ்ப்பள்ளிகளின் அமைப்பாளர்களாய், உயர்நிலை அதிகாரிகளாய்ப் பெரும்பாலும் அவர்களே இருந்தனர். இலங்கைத் தமிழரான (டத்தோ) சர் கிளவ் துரைசிங்கம், காலனி அரசாங்கத்தில் கல்வித்துறை உறுப்பினராய்ப் (அமைச்சர் தகுதி) பணிபுரிந்தார் (1951) என்பது முன்பே குறிப்பிடப்பட்டது.

நாடு விடுதலை அடையும்வரை இந் நிலை தொடர்ந்தது. தமிழ்ப்பள்ளியில் பயின்றோர் தமிழ்மட்டும் அறிந்த ஒரு தனித்த கூட்டத்தினராயினர். அவர்கள் தமிழாசிரியர் பணி ஒன்றனையே பெறமுடிந்தது. தங்கள் அடுத்த தலைமுறையினர் விரிவான கல்வி பெற வேண்டும் என அவர்கள் எண்ணினர்; அதனால் ஆங்கிலப் பள்ளியை நாடத் தொடங்கினர். பட்டணங்களில் வாழ்ந்தார்க்கு அவ் வாய்ப்பு எளிதில் வாய்த்தது; தோட்டப்புறங்களில் தமிழ்ப் பள்ளிகள் நிலைத்திருந்தன.

## விடுதலைக்குப் பின்

நாடு விடுதலை பெறுவதற்கு ஓராண்டிற்கு முன்பே (1956) கல்வித் துறையில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. விடுதலை பெறப் போகும் நாட்டிற்கு அடிமை உணர்வினை வளர்க்கும் காலனி ஆட்சியினர் பாடத்திட்டம் பொருந்தாது என்று தலைவர்கள் அதற்குரிய நடவடிக்கைகளில் இறங்கினர். முன்னாள் பிரதமர் துன் அப்துல் ரசாக் தலைமையில் உருவான அத் திட்டம், 'ரசாக் கல்வித் திட்டம்' [50] எனும் பெயரைப் பெற்றது. அஃது எல்லாப் பள்ளிகளுக்கும் ஒரே பாடத்திட்டம் எனும் தேசிய நீரோட்டத்தைப் பாய்ச்சிற்று. தமிழ்ப் பள்ளிகளுக்கு உறுதிப்பாட்டையும், மாணவர் சிந்தனை விரிவிற்கு வாய்ப்பும் நல்கியது; அக் காலத்தில் ஏறக்குறையத் தொள்ளாயிரம் தமிழ்ப் பள்ளிகள்[51] இருந்தன.

ரசாக் கல்வித் திட்டத்தில் தமிழ்க் கல்வி ஆறாம் வகுப்பொடு நிறுத்தப்பட்டது. என்றாலும் இடைநிலைப் பள்ளிகளில், முதலாம் படிவம்முதல் ஐந்தாம் படிவம்வரை தமிழை விருப்பப் பாடமாகப் பயில வாய்ப்பு ஏற்பட்டது. 6ஆம் படிவத்தில் தமிழை ஒரு தேர்வுப் பாடமாக எடுக்கவும் வாய்ப்பு ஏற்பட்டது.[52] அதனொடு தொடர்ந்து ஆங்கில, மலாய்மொழி (தொடக்கநிலை)ப் பள்ளிகளில் பயிலும் தமிழரும் சீனரும் தங்கள்

---

50 விரிவிற்கு 325ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

51 Ponniah, S. M.," The Disinheritance of Tamil Workers' Child," Intisari. Vol.3.No4 p. 62.

52 பள்ளிகளில் கற்பிக்கப்படுவதில்லை. சொந்தமாய்ப் படித்துத் தேர்வெழுதலாம்.

தாய்மொழியை ஒரு பாடமாகத் தேர்ந்தெடுத்துப் பயிலவும் (3ஆம் வகுப்புமுதல்) வாய்ப்பு அமைந்தது; அது நல்வாய்ப்பாகும்; என்றாலும் அதில் குறைந்தது 15 மாணவர்தம் பெற்றோராவது எழுத்துமூலம் விருப்பம் தெரிவித்தால்தான் வகுப்புத் தொடங்கப்படும். இஃது ஒரு பெருந்தடையாகவே நீண்டது; நீள்கிறது. தமிழ்ப் பெற்றோரும் இதிலெல்லாம் கருத்துச் செலுத்துவது இல்லை.

தமிழ்ப் பள்ளியில் பயின்றவர் வேறு திறன்கள் அற்ற தனித்த நிலையினர் என்னும் குறையும், ஆங்கில மலாய்ப் பள்ளிகளில் பயிலும் தமிழர் தாய்மொழி அறியாதவர் என்னும் குறையும் நீங்கும் வண்ணம் 'ரசாக் கல்வித்திட்டம்' அமைந்தது. ஆனால், தேசியப் பள்ளிகளில் தாய்மொழிக் கல்விப் போதனை இன்றளவும் நிறைவு கொள்ளத்தக்க அளவு உறுதியானதாய் அமையவில்லை என்பது வேறு கதை. தமிழ் வகுப்புகள் அமைந்த பள்ளிகளில் மாணவருள் பலர் தமிழ் வகுப்புகளை ஒரு பொருட்டாய் மதிப்பதில்லை. தமிழ்ப்பள்ளிகளிலிருந்து சென்றவர்கூட இடைநிலைப் பள்ளிகளில் நடைபெறும் தமிழ் வகுப்புகளைப் புறக்கணிப்பது கவலைக்குரியது. பெரும்பாலான தலைமை ஆசிரியர்கள் தாய்மொழிக் கல்வியைக் கால அட்டவணையில் சேர்க்காமல் பொருத்தமில்லா நேரத்தில் அதனை நடத்தச் செய்வதே குறைகள் பல நேர்வதற்குரிய காரணமாகும். இந் நிலை மாறுதற்குரிய சூழ்நிலைகள் இப்போது தென்படுகின்றன.

தேசியப் பள்ளிகளில் தாய்மொழிக் கல்வி உயிரோட்டத்தொடு கற்பிக்கப்பட வேண்டுமென்று அரசு இப்போது எண்ணமிடுகிறது. மலாய் மாணவர் தமிழையோ சீனத்தையோ ஒரு பாடமாய் எடுத்துப் பயில அரசு வாய்ப்பளிக்கத் திட்ட மிட்டிருக்கிறது; ஒருவர் பல மொழிகள் கற்க வேண்டுமென்பது அரசின் நோக்கமாகும். கால மாற்றத்திற் கேற்பக் கல்வித் திட்டத்தையும் மாற்ற ஏற்பாடுகள் நடந்து வருகின்றன; இக் குறிக்கோள் செயலுருப்பெற்றால் எதிர்காலத்தில் கல்விநிலை மேலும் சிறப்பாயதாய் மலரலாம்.

இங்கு இன்னொரு சிக்கலையும் குறித்தல் சாலும். ஆறு ஆண்டுத் தமிழ்ப் பள்ளியில் பயின்றபின் இடைநிலைப் பள்ளிக்குச் சென்று முதலாம் படிவத்தில் இணைய வேண்டுமானால் 6 ஆம் ஆண்டு (வகுப்பு) அடைவுநிலைத் தேர்வில் (U.P.S.R.) மிக உயர்ந்த நிலைத் தேர்ச்சியை மாணவர் பெற வேண்டும். அங்ஙனம் பெறாத மாணவர் புகுமுக வகுப்பில் (Remove Class) ஓராண்டினைக் கழித்தாக வேண்டும்.

இது பெரும் இடைவெளியை ஏற்படுத்துகிறது; ஓராண்டினை வீணடிக்கிறது. அதனால், தங்கள் மக்களது விரைவான முன்னேற்றத்தை விரும்பிய பெற்றோர் தம் பிள்ளைகளைத் தேசியப் பள்ளிகளுக்கே அனுப்பினர்.

மேலும், “தமிழர் பொருளாதாரம் முதலாய துறைகளில் பின்னடைவதற்குத் தமிழ்ப் பள்ளிகளே தடைகளாய் உள்ளன” என்று 'அறிஞர்' (Intellectual) சிலர் தொடர்ந்து பரப்புரை செய்து வந்தனர். “மற்ற இனத்தவரொடு தமிழர் முன்னேற வேண்டுமானால் தமிழ்ப்பள்ளிகளை மூடியாகவேண்டும்; தேசியப் பள்ளிகளில் தமிழ் ஒரு கட்டாயப் பாடமாய் இருந்தால் போதும்” என்று குரல் எழுப்பி வந்தனர். இதனை வலியுறுத்த

மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் முன்னாள் தலைவர் முனைவர் இராம. சுப்பையா பொறுப்பாண்மையில் ஒரு மாநாடு கூடிற்று. (1968) பல காரசாரமான கருத்து மோதல்கள் எழுந்தன.

"சிங்கப்பூரில் தமிழ், ஆட்சிமொழிகளில் ஒன்று. அங்குத் தாய்மொழிகள் கட்டாயப் பாடங்களாகும். அதுபோல் இங்குத் தமிழைக் கட்டாயப் பாடங்களில் ஒன்றாக்க முடியுமா?" என்று பலர் அறைகூவல் விடுத்தனர். "மற்றப் பள்ளிகளில் பயிலும் வசதி குறைந்த, கல்விச் சூழலற்ற குடும்பங்களைச் சேர்ந்த மாணவர்நிலை யொன்றும் உயர்ந்துவிடவில்லை. தமிழ்ப்பள்ளிகள் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை அல்ல" என்று சான்றுகளுடன் நடுநிலை ஆய்வாளர் எடுத்துரைத்தனர். தமிழ் உணர்வுமிக்க பேராளர்களின் ஒருமித்த குரலாலும், ஏடுகளின் முழக்கத்தாலும் அம் முயற்சி முறியடிக்கப்பட்டது.

சில ஆண்டுகளுக்குப் பின் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் பி. பி. நாராயணன் பொறுப்பில் ஒரு மாநாடு கூடிற்று[53] (1974). "தமிழ்ப்பள்ளிகளில் மூன்றாம் வகுப்புக்குமேல் தமிழ் ஒரு பாடமாகத் தொடரலா" மென்பதும், "ஆங்கிலம் தவிர்த்த அனைத்துப் பாடங்களும் தேசியமொழியிலேயே (மலாய்) இருக்கலா"மென்பதும் அம் மாநாட்டின் கருப்பொருளாகும். இதற்குத் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமும் (N.U.P.W.), கே.ஆர். இராமசாமி தலைமையேற்றிருந்த மலேசியத் திராவிடர் கழகமும் முழு ஆதரவளித்தன. ஆனால் ஆ. சோதிநாதன் முதலாய கல்வித்துறை அறிஞர்களாலும், தமிழ் இலக்கியக் கழகம் போன்ற வலிமைமிக்க இயக்கங்களாலும் அம் முயற்சி ஒடுக்கப்பட்டது; தமிழ் காப்பாற்றப்பட்டது. இவ் வகையில், அமைப்புகளின் பேராதரவொடு இர. ந. வீரப்பன் பொறுப்பாண்மையில் தமிழ் இலக்கியக் கழகம் நடத்திய கல்விவளர்ச்சி மாநாடுகள் குறிப்பிடத்தக்கன; வரலாற்றுச் சிறப்புமிக்கன.

தமிழ்ப்பள்ளிகளின் தோற்றத்தை முற்றாக மாற்றிக் காலப்போக்கில் இல்லாமலே செய்துவிடும் தன்மை கொண்ட மேற்படி திட்டம் முன்மொழியப்பட்டபோது சில நல்ல பின்விளைவுகளும் ஏற்பட்டன. சமுதாயத்தில் சற்று மங்கிக் கிடந்த தமிழ் உணர்வின் ஊற்றுக்கண் திறந்தது. அப்போது தமிழ்நேசன் ஆசிரியராய் இருந்த முருகு. சுப்பிரமணியன் எழுதிய ஆசிரியர் உரைகள் எழுச்சியைத் தூண்டின. முகமது பாச்சா போன்ற நல்லுள்ளங்களால் 'தமிழ்ப்பள்ளி மாணவர் உதவிநிதி' தொடங்கப்பெற்றது. இது தமிழ்ப்பள்ளி மாணவர்க்கு ஒரு நம்பிக்கையை ஊட்டியது.[54]

---

53 விரிவிற்கு 83, 84, 85, 86ஆம் பாடல்களின் பின்புலம் - குறிப்புரையும், கவிதைக்கொடை - சிறப்பு மலர்கள் பகுதியில் கல்வி வளர்ச்சி மாநாட்டுச் சிறப்பு மலர்கள்பற்றிய குறிப்புகளையும் காண்க.

54 தமிழ்நேசன் நாளிதழ்ப் பொறுப்பிலுள்ள இந் நிதியை, டான் ஸ்ரீ எஸ். ஓ. கே. உபைதுல்லா தலைமையிலுள்ள அறங்காவலர் குழுவினர் நிருவகித்து வருகின்றனர். அவ்வப்போது தமிழ்ப்பள்ளி மாணவர்க்கு இந் நிதியிலிருந்து உதவி வழங்கப்பட்டு வருகிறது.

இங்கு இன்னொன்றைக் குறிப்பிடுவதும் சாலும். தமிழ்ப்பள்ளிகளை இல்லாமலாக்கும் எண்ணத்துடன் மலேசிய அரசு இதுவரை எந்த நடவடிக்கையையும் மேற்கொள்ளவில்லை. ஆட்சித் துறையில் சமுதாயத்தைப் பிரதிநிதித்த-பிரதிநிதிக்கும் தலைவர்களான துன் வீ. தி. சம்பந்தன், டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம், டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு ஆகியோர் அவற்றின் தன்மை மாற இடந்தரவே இல்லை.

மழை விட்டும் தூவானம் விடவில்லை என்பதுபோல் நீண்ட நெடுங்காலமாய் இத்துணைப் பெரும் போராட்டங்கள் நடந்தும், ஊறு விளைவிக்கும் முயற்சிகள் முறியடிக்கப்பட்டும் 'தமிழ்ப்பள்ளிகள் தேவையில்லை'யென்னும் குரல்கள் இன்னும்கூட அடங்கவில்லை. 1990ஆம் ஆண்டிலும் தமிழ்ப்பள்ளிகளை ஒடுக்கும் ஒரு முயற்சி தலைதூக்கியது. உணர்வுமிக்க உள்ளங்கள், ஏடுகள் மிக விரைந்து செயல்பட்டதால் அம் முயற்சி முளைவிடும் முன்பே கிள்ளி எறியப்பட்டது. இவ்வகையில் மயில் வார இதழ் காட்டிய முனைப்புக் குறிப்பிடத்தக்கது.

கடந்த சில மாதங்களுக்கு முன்புகூடத் தமிழ்ப் பள்ளிகளை மூடவேண்டுமென்று ஒரு குரல் எழுந்தது. சமுதாய எழுச்சியால் அஃது அடங்கிற்று. மலேசிய இந்தியர் காங்கிரசு தலைவர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு "இனி இதுபோன்று யாராவது பேசினால் காவல்துறையிடம் புகார் செய்யப்படும்; கடுமையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்" என்று மிகக் கடுமையாக எச்சரித்தார். "ஓர் இனத்தின் உரிமையில் எவரும் தலையிடக் கூடாது; உணர்ச்சியைத் தூண்டும் பிரச்சினைகளைக் கிளப்பக்கூடாது" என்பது இந் நாட்டு அரசியல் சட்டம் வழங்கியிருக்கும் பாதுகாப்பாகும். தமிழ்ப்பள்ளிகளின் வளர்ச்சியில் அரசியல், சமுதாய இயக்கங்களும் கருத்துச் செலுத்தி வருகின்றன; இதழ்களும் எழுச்சி உணர்வுகளை ஏற்படுத்தி வருகின்றன. பெற்றோர்க்கும் கல்வியில் நாட்டம் ஏற்பட்டுவருகிறது. ஆசிரியர்களின் உழைப்பும் மிகுந்துள்ளது. அதனால் தமிழ்ப்பள்ளிகளின் தரம் படிப்படியாய் உயர்ந்து வருகிறது. இது நிலைபெற வேண்டும்; தொடர்ந்து மேம்பாடு காணவேண்டுமென்பது சமுதாய உணர்வுமிக்கார் எண்ணமாகும்.

## புகுமுக வகுப்பு நீக்கம்

தமிழ், சீனப் பள்ளி மாணவர்களுக்குப் பெரும் இடைவெளியை ஏற்படுத்தும் புகுமுக வகுப்புத் தொடர்பாக ஒரு மாறுதலை அரசு செய்துள்ளது (1995). அதனால், ஓரளவு தரமுடைய மாணவர் நேரடியாய் முதலாம் படிவத்தில் சேர வாய்ப்பு மலர்ந்துள்ளது. ஆதலான், இப்போது தமிழ்ப்பள்ளிகளில் சேரும் மாணவர் தொகை கூடியுள்ளதாய்ப் புள்ளிவிவரங்கள் காட்டுகின்றன. இப்போது தமிழ்ப்பள்ளிகளில் பயிலும் மாணவர் எண்ணிக்கை 1,02,532; தேசியத் தொடக்கப் பள்ளிகளில் தமிழ் மாணவர் எண்ணிக்கை 76,019; சீனத் தொடக்கப்பள்ளிகளில் பயில்வோர் 4,677. எதிர்காலத்தில் புகுமுக வகுப்பே இல்லா தொழியலாமெனும் அறிகுறிகளும் தெரிகின்றன.

## தொடக்கப் பள்ளியும் தமிழ்ப் பாடத்திட்டங்களும்

தொடக்கப் பள்ளிக்குரிய தமிழ்ப் பாடத்திட்டம் நெடுங்காலம்வரை நிறைவற்ற ஒன்றாகவே இருந்துவந்தது; 1926, 1928, 1936, 1956ஆம் ஆண்டுகளில் பாடத் திட்டங்கள் வகுக்கப்பட்டன. எனினும், அவை ஒரு மொழிக் கல்விக்குரிய உயிரோட்டமான பாடத்திட்டமாய் அமையவில்லை. 1977ஆம் ஆண்டு கல்வி யமைச்சின் பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகத்தில் தமிழ்மொழிப் பாடத்திட்டப் பிரிவு தொடங்கப்பட்டது. அதன்பின்னரே முறையான பாடத்திட்டம் வகுக்கப்பட்டது. 1982 ஆம் ஆண்டில் சில பள்ளிகளில் ஆய்வுசெய்து 1983ஆம் ஆண்டில் நடைமுறைக்கு வந்த அப் புதிய (K.B.S.R.) தமிழ்ப் பாடத்திட்டமே எல்லா வகையிலும் சிறந்த ஒன்றாய் அமைந்தது.[55] மற்ற நாடுகளின் தமிழ்ப் பாடத்திட்டத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் இது சில சிறப்புக் கூறுகளைக் கொண்டுள்ள ஓர் உயர்ந்த பாடத்திட்டமாகவே விளங்குகிறதென்றால், அது மிகையன்று; தொடக்கப்பள்ளிப் பாடத்திட்டத்தைத் தொடர்ந்து இடைநிலைப்பள்ளிகளுக்கான (5ஆம் படிவம்வரை) ஒருங்கிணைக்கப்பட்ட பாடத்திட்டமாய் (K.B.S.M.) வகுக்கப்பட்டது (1988) பின்னர் அதிலும் மாறுதல்கள் நிகழ்ந்துவருகின்றன.

## ஆசிரியர் தகுதி

தமிழ்ப்பள்ளி ஆசிரியர்களுக்கு இரண்டாம் உலகப்போர் தொடங்குவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்புதான் பயிற்றல் முறை (Normal class) வகுப்புத் தொடங்கப்பெற்றது (1936). 6 ஆண்டுக் கல்வித் தகுதியைக் கொண்டவர் அதில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். (இதனை ஐந்தாம் வகுப்பு என்பர். ஓராண்டு பாலர் (Primary) வகுப்பையும் சேர்த்தால் ஆறாண்டாகிறது) பயிற்சிக் காலம் ஈராண்டாகும். இவ் வகுப்புச் சனிக்கிழமைகளில் நடந்தது.

இரண்டாம் உலகப்போர் தொடங்கியபோது இவ் வகுப்பு நின்றது. சப்பானியர் ஆட்சியின் போது எல்லாம் தலைகீழ் ஆயின; சப்பான் மொழியைப் படிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. மீண்டும் வெள்ளையர் வந்தனர்; சில ஆண்டுகளில் எல்லாம் பழைய நிலைக்குத் திரும்பின; ஆசிரியர் பயிற்சி வகுப்பும் தொடங்கியது. இம்முறை தமிழ் ஏழாம் வகுப்புத் தேர்ச்சிபெற்றவரே பயிற்சியில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். பயிற்சிக் காலமும் மூன்றாண்டாக்கப்பெற்றது. இவ் வகுப்பும் சனிக்கிழமைகளிலேயே நடந்தது. இவ் வாசிரியர் பயிற்சி வகுப்பு 1961 வரையில் தொடர்ந்தது. பின் நாள்பயிற்சிக் கல்லூரியில் (Day Training Centre) தமிழாசிரியர்களுக்குப் பயிற்சியளிக்கப்பெற்றது'[56] (1960 - 68). இதில் சேர்வதற்கான கல்வித்தகுதி 3 ஆம் படிவமான கீழ்நிலைக் கல்விச் சான்றிதழாகும் (L.C.E.). இப்

55 விரிவிற்கு 113ஆம் பாடலின் பின்புலம் - நிறுவனங்கள் பகுதியில் காண்க.

56 Supramaniam.R., *Kenangan-kenangan Maktab / Pusat Latihan Harian, Pendidikan Guru.* (Terbitan Khas), 1982, P.67

பயிற்சிபெற்றவர் தமிழோடு மலாய், ஆங்கில மொழிகளும் கற்பிக்கும் தகுதி பெற்றவராவர். அதனால் தமிழாசிரியர் தகுதி உயரத் தொடங்கியது.

பின்னர் 'S.R.T.'[57] என்னும் விடுமுறைகால ஆசிரியர்பயிற்சி வழங்கும் திட்டத்தைக் கல்வி அமைச்சு வகுத்தது. இத் திட்டத்தில் 1967 முதல் 1981 வரை 10 தொகுதியினர் (Batch) பயிற்சிபெற்றனர். இதில் சேர்வதற்கான தகுதி தொடக்கத்தில் கீழ்நிலைக் கல்விச் சான்றிதழிலிருந்து (L.C.E./S.R.P.- இப்போது P.M.R.) பின்னர் 5 ஆம் படிவமான மலேசியக் கல்விச் சான்றிதழுக்கு (M.C.E./S.P.M.) உயர்ந்தது.

இதன் பின்னர் மீண்டும் ஆசிரியர்களுக்குக் கல்லூரிகளில் பயிற்சியளிக்கும் திட்டம் நடைமுறைக்கு வந்தது. இப்போது ஸ்ரீ கோத்தா (தலைநகர்), இராஜா மெலேவார் (நெகிரி செம்பிலான்), துருந்தோங் (பகாங்), மொகமட் காலிட் (ஜோகூர்), தெமங்கோங் இபுராகிம் (ஜோகூர்), துங்கு பைனூன் (பினாங்கு), சுல்தான் அப்துல் ஹலிம் (கெடா) ஆகிய எட்டுக் கல்லூரிகளில் தமிழ்ப்பள்ளி ஆசிரியர்களுக்குப் பயிற்சி வழங்கப்படுகிறது. இப்போது 6 ஆம் படிவமான மலேசியக் கல்விச் சான்றிதழ் (S.T.P.M.) உடையோரும் இப் பயிற்சி வகுப்பில் சேர்கிறார்கள். இப்போது வழங்கப்படும் ஆசிரியப் பயிற்சி எல்லா மொழிப் பள்ளிகளைச் சேர்ந்த ஆசிரியர்களுக்கும் ஒரே தரமுடைய பயிற்சியாகும். இப் பயிற்சி வகுப்புகளில் தாய்மொழி, இலக்கியம், தாய்மொழி பயிற்றல் முறை தவிர்த்த மற்ற அனைத்துப் பாடங்களும் மலாய் மொழியிலேயே கற்பிக்கப்படுகின்றன.

## பணியிடைப் பயிற்சி

தேவைப்படும் போதெல்லாம் ஆசிரியர்களுக்குப் பணியிடைப் பயிற்சிகளையும் கல்வியமைச்சு வழங்கி வருகிறது; பல்வகைத் திறன்கள்பெற ஊக்கப்படுத்துகிறது.

## தமிழாசிரியர் எண்ணிக்கை

இப்போது தமிழ்ப்பள்ளிகளில் பணியாற்றும் தமிழாசிரியர் எண்ணிக்கை 6049. இவர்களில் பயிற்சி பெற்றோர் 5,257. பயிற்சி பெறாதோர் 792 பேர். பயிற்சி பெறாதோர் எண்ணிக்கையைக் குறைக்கும் நோக்கில் இவ்வாண்டு விடுமுறை கால ஆசிரியர் பயிற்சி வகுப்பு ஒன்றனையும் கல்வி அமைச்சு ஏற்படுத்தியுள்ளது.

## ஆசிரியர் சங்கங்கள்

ஆசிரியர்களின் நலன்களைப் பாதுகாக்கவும், சம்பள உயர்வு, பதவி உயர்வு, பள்ளிக்கூட மேம்பாடு முதலாயவற்றில் எழும் சிக்கல்களுக்குத் தீர்வு காணவும் ஆசிரியப் பணியாளர் தேசிய சங்கம் (N.U.T.P.) உள்ளது. இஃது எல்லாப் பள்ளி ஆசிரியர்க்குமான ஒரு பொதுவான தொழிற்சங்கமாகும். இதில்

57 விரிவிற்கு கவிதைக் கொடை - சிறப்பு மலர்கள் (ஆசிரிய தீபம்) பகுதியில் காண்க.

தமிழாசிரியர்களும் நிரம்ப உறுப்பியம் பெற்றுள்ளனர். இஃது அல்லாமல் மலாயாத் தமிழ்ப்பள்ளி ஆசிரியர் தேசிய சங்கமும் உள்ளது (1964இல் பதிவு).

இவ்விரு சங்கங்களும் இணைந்து இரண்டாம் உலகத் தமிழாசிரியர் மாநாட்டை ஓர் உயர்ந்த தரத்துடன் நடத்தியமை (9 - 12.6.1994) பாராட்டிற்குரியது. கோ. இராதாகிருஷ்ணன் (இப்போது சிலாங்கூர் மாநிலத் தமிழ்ப் பள்ளிகளின் கண்காணிப்பாளர்), பொ. நாகரத்தினம் (தலைமையாசிரியர்) ஆகியோரை இணைத்தலைவர்களாயும், ஏ.சகாதேவனைச் (மலேசியத் தமிழ்ப் பள்ளிகளின் முதுநிலை அமைப்பாளர்) செயலராயும் கொண்ட ஏற்பாட்டுக் குழுவை மதித்து மாநாட்டிற்கு மலேசிய அரசு ஒப்புதல் வழங்கியது என்பதும், பெருந்தொகை நிதிதந்து ஊக்கப்படுத்தியதென்பதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கனவாகும்.

## மாநாடு பற்றி ...

தமிழ்க்கல்வி, கற்றல் கற்பித்தல்பற்றி உலகு தழுவிய அளவில் சிந்திக்க வேண்டுமென்ற எண்ணம் சிங்கைத் தமிழாசிரியர் சங்கத்திற்கு முதன்முதலில் தோன்றியது; அதனைச் செயல்படுத்தவும் முயன்றது. அதற்கு வி. ஆர். பி. மாணிக்கம், சாமி வீராசாமி முதலாயோர் முன்னோடிகளாய் விளங்கினர்; முதலாம் உலகத் தமிழாசிரியர் மாநாட்டைக் கூட்டினர் (15 - 18.6.1992). வீண் ஆரவாரமின்றி, தேவையற்ற சடங்குகளின்றி, மாந்த வழிபாட்டிற்குச் சிறிதும் இடமின்றி நடத்தினர்; மாநாட்டில் எடுக்கப்பட்ட முடிவுகள் செயலாக்கம் காணவும் தொடர்முயற்சிகள் மேற்கொண்டு வழிகாட்டினர். அம் மாநாட்டில் முடிவு செய்தபடி 2ஆம் மாநாடு இங்கு நடந்தது. அடுத்த மாநாட்டை மொரீசியசில் நடத்த அந்நாட்டுக் கல்வியமைச்சைச் சேர்ந்த அருணாசலம் புட்பரதம் முன்வந்தார்.* ஓர் உயர்ந்த குறிக்கோளோடு தொடங்கப்பெற்றது இம் மாநாடு. இது தொடர்ந்து ஈராண்டிற்கொருமுறை அந் நோக்கம் குன்றாமல் நடந்துவரவேண்டும்; தமிழ்க்கல்வி வளர்ச்சிக்கும், கற்றல் கற்பித்தல் மேம்பாட்டிற்கும் ஓர் உந்து சத்தியாய் விளங்க வேண்டுமென்பது நல்லுணர்வுள்ள கல்வியாளர் விழைவாகும்.

## தலைமையாசிரியர் மன்றம்

பள்ளி என்னும் குடும்பத்தின் தலைவர் தலைமையாசிரியரே. பள்ளிகளின் முன்னேற்றத்திற்குத் திட்டம் வகுத்துச் செயல்படவேண்டுமானால் அவர்களின் ஒத்துழைப்பு இன்றியமையாததாகும். அதனால் தலைமையாசிரியர்களைக் கொண்ட ஓரமைப்பு உருவாயிற்று; அஃது எல்லா மொழிப்பள்ளிகளின் தலைமையாசிரியர்களையும் ஒன்றிணைத்தது.

## தமிழ்ப்பள்ளிகளின் தலைமையாசிரியர் மன்றம்

தமிழ்ப்பள்ளிகளின் முன்னேற்றம், மாணவர் கல்விமேம்பாடு, பண்பாட்டு வளர்ச்சி முதலாயவற்றை நோக்கமாய்க்கொண்ட தமிழ்ப்பள்ளிகளின் தலைமையாசிரியர் மன்றம் ஒன்று தனியாக உருவானது (இஃது ஒரு தொழிற் சங்கமன்று); பதிவும் பெற்றது (1985). ஆ.சோதிநாதன் சிலாங்கூர் மாநிலத் தமிழ்ப்பள்ளிகளின் கண்காணிப்பாளராய்ப் பணியாற்றியபோது (1982 - 86) இதனை முன்னின்று உருவாக்கினார்; வலிமை மிக்க ஓர் அமைப்பாகப் பெரும் பங்காற்றினார்.

இம் மன்றம் தலைமை ஆசிரியர்களை ஒன்றுகூட்டித் தமிழ்ப்பள்ளிகளின் முன்னேற்றத்திற்குத் திட்டமிடுகிறது; ஆண்டுதோறும் மாவட்ட, மாநில, தேசிய நிலைகளில் மும்மொழிப் பேச்சுப் போட்டிகள், திருக்குறள் மனனப் போட்டி முதலாயவற்றை நடத்தித் தமிழ்ப்பள்ளி மாணவர்க்கு ஊக்கம் நல்கி வருகிறது.

## பாடநூல்கள்

மலேசியாவில் புதிய பாடத்திட்டம் நடைமுறைக்கு வந்த பின்னரே முறையாய பாடநூல்கள் வெளிவந்தன. அவை பாடத்திட்டத்தை முழுமையாய்த் தழுவி, புதுப்புது உத்திகளுடன் நுட்பமாய் உருவாக்கப்பட்டன. மலேசிய நாட்டு வளத்திற்கேற்ப வண்ண வேலைப்பாடுகளுடன் உயர்ந்த தாளில் அச்சேறின. மற்ற நாட்டுத் தமிழ்ப்பாட நூல்களுடன் ஒப்பிட்டால் அவை தனித்த சில சிறப்புகளுடன் மிளிர்வதைக் காணலாம். தமிழக அறிஞர் சிலரும் அவற்றின் அமைப்புமுறையைப் பாராட்டியுள்ளனர். ஆனால் இச் சிறப்பை ஒருசில பதிப்பகங்களின் பாடநூல்களே பெற்றுள்ளன. பெரும்பாலாயவை பதிப்புச் செப்பமின்றியும், பிழைகள் மலிந்தும் உள்ளன. இங்குப் பதிப்புக்கலை வளராமையே இதற்குக் காரணம். பதிப்புக்கலை மிகவும் நுட்பம் மிகுந்த கலையாகும். பாடநூல் வெளியிடும் ஆர்வமுள்ளோர் அக் கலை நுட்பங்களை உணர்ந்து பிழையற நூல்களைப் பதிப்பித்தால் பயன்மிகும். மாணவர்க்கு வெளியிடப்படும் நூல்களில் கருத்தாக்கம் குறைந்திருந்தாலும் தாழ்வில்லை. ஆனால் பிழை தலைகாட்டவே கூடாது.

இங்குப் பாடநூல்கள் மட்டுமன்றி நூலகங்களுக்கு வெளியிடப்படும் நூல்களின் நிலையும் இதுதான். பதிப்பு நுட்பம் அறிந்த ஓரிரு பதிப்பகங்கள் வெளியிடும் நூல்கள் பாராட்டும் வண்ணம் உள்ளன. மேலும், நூலகத்திற்காக வெளியிடப்படும் நூல்களில் மலேசிய எழுத்தாளர்தம் படைப்புகள் குறைவே. உள் நாட்டுச் சிறுவர் பாடல்கள் ஓரளவு நிறைவுகொள்ளத் தக்க அளவு வெளிவந்துள்ளன. ஆனால், புனைகதைகள் அந்த அளவுகூட இல்லை. பதிப்பகங்கள் எழுத்தாளர்களுக்கு ஊக்கம் தந்தால் இக் குறை நீங்கலாம்.

---

*பின்குறிப்பு: திட்டமிட்டபடி மொரீசியஸ் நாட்டுத் தமிழாசிரியர் கழகம், மகாத்மா காந்தி நிறுவனத்தின் ஒத்துழைப்போடும், கல்வி,அறிவியல்,நுண்கலை அமைச்சின் ஆதரவோடும் மூன்றாம் உலகத் தமிழாசிரியர் மாநாட்டை 13 - 15.12.1996இல் நடத்தியது. நான்காம் மாநாடு தென்னாப்பிரிக்காவில் நடைபெறவுள்ளது.

## இரவல் புத்தகத்திட்டம்

கல்வியமைச்சின் மேற்படி திட்டம் (Buku Bantuan) ஓர் உயரிய திட்டமாகும். வசதி குறைந்த குடும்பத்துப் பிள்ளைகள் கல்வியில் பின்தங்கி விடக்கூடாது என்னும் நல்லெண்ணத்தில் இது அரசு வகுத்திருக்கும் திட்டமாகும். இத் திட்டப்படி குறைந்த வருவாயுடைய குடும்பத்தைச் சேர்ந்த மாணவர்க்கு வேண்டிய அனைத்துப் பாடநூல்களும் இந்த இரவல் புத்தகத் திட்டப்படி வழங்கப்படும். ஆண்டிறுதியில் அப் புத்தகங்கள் திரும்பப் பெறப்பட்டுப் புதிய மாணவர்களுக்கு வழங்கப்படும். இத் திட்டத்திற்கு அரசு கோடிக்கணக்கில் செலவிடுகிறது.

## கல்வியமைச்சின் புதிய திட்டம்

இதுநாள்வரை பள்ளிப் பாடநூல்களைத் தனியார் பதிப்பகங்களே வெளியிட்டன. ஆனால், இனிக் கல்வியமைச்சே பாடநூல்களை வெளியிடுமென்று அறிவித்துள்ளது. நூல்கள் வெளிவந்த பின்னரே அவற்றின் தரத்தை மதிப்பிடமுடியும்.

## பல்கலைக்கழகத்தில் தமிழ்

1948இல் கார் சாண்டர்ஸ் (Corr Sanders) குழு மலாயாப் பல்கலைக்கழகத்தை நிறுவப் பரிந்துரை செய்தது. அதற்கொப்பச் சிங்கப்பூரில் ஏழாம் கிங் எட்வர்ட் (King Edward VII) மருத்துவக் கல்லூரி, ராபில்ஸ் கல்லூரி (Raffle's College) ஆகிய இரண்டனையும் இணைத்து மலாயாப் பல்கலைக்கழகம் உருவாக்கப்பட்டது (1948). அக் காலத்தே மலாயாவில் வாழ்ந்த முக்கிய இனத்தவர் பண்பாடுகளைப்பற்றிய கல்வியையும், பல்கலைக்கழகத்தில் பேணி வளர்க்க வேண்டும் என்று அக் குழு வலியுறுத்தியது. அப்போதுதான் "பல்கலைக்கழகம் பல்லின மக்களுக்குரிய பொதுச் சொத்தாய் அமைய முடியும்; பலர்க்கும் வழிகாட்டிப் பயன் நல்க முடியும்" என்று அக் குழுக் கருதியது. இந் நிலையில் தமிழ்த் துறையை ஏற்படுத்த மலாயா மக்கள் விரும்பினர்; மனமுவந்து பெரும் நன்கொடை வழங்கினர். அரசாங்கமும் ஆதரவளித்தது. தனி நிதிக்கட்டளையொன்று உருவாயிற்று. நூலகத்திற்கு வேண்டிய வாய்ப்பும் வசதிகளும் கிடைத்தன. இதனால், 1956ஆம் ஆண்டில் சிங்கப்பூரில் இருந்த மலாயாப் பல்கலைக்கழகத்தில் இந்திய ஆய்வியல் துறை நிறுவப்பட்டது. 1959ஆம் ஆண்டுமுதல் அது கோலாலம்பூரில் இயங்கி வருகிறது.[58]

---

58 'மலேசியாவில் தமிழ்' என்னும் தலைப்பில் 24.4.1972இல் மலாயாப் பல்கலைக் கழகத்தில் நடந்த கருத்தரங்கில் 'மலேசியத் தமிழ்க் கல்விச் சூழலில் இந்தியத் துறையின் பங்கு' என்னும் தலைப்பில் முனைவர் ச. சிங்காரவேலு வழங்கிய கட்டுரை.

## இந்திய ஆய்வியல் துறை

இத் துறையின் முதல் பேராசிரியராயும் தலைவராயும் பொறுப்பேற்றவர் முனைவர் மு.இராசாக் கண்ணனார். இவர் தமிழகத்திலிருந்து வரவழைக்கப்பெற்றவர். இந்திய ஆய்வியல் துறையில் தமிழை நிலைப்படுத்த அரும்பாடுபட்டு அடிப்படை போட்டவர். வேறு துறைகளின் மாணவர் பலரைத் தமிழுக்கிழுத்த பெருமை இவரைச் சாரும்.

இவரையடுத்து முனைவர் தனிநாயக அடிகள் இத் துறையின் பேராசிரியராயும் தலைவராயும் பொறுப்பேற்றார்.[59] பின்னர் இத் துறைத் தலைமையை ஏற்றவர் முனைவர் இராம. சுப்பையா.[60] அதன்பின் முனைவர் சிங்காரவேலு பொறுப்பேற்றார். இவருக்குப்பின் முனைவர் தேவபூபதி நடராசா பொறுப்புக்கு வந்தார். இப்போது இத் துறையின் தலைவர் முனைவர் க. திலகவதி.

## துறையில் பணியாற்றியோர்

மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையில் தமிழக, இலங்கைக் கல்வியாளர் பலர் பணிபுரிந்து பெருமை சேர்த்துள்ளனர். முனைவர்கள் ப. அருணாசலம், உ. பழநி, ஈ. ச. விசுவநாதன், சா. அமீது, க. பொ. இரத்தினம், அரசரத்தினம், சுரேஸ்பிள்ளை, சோ. ந. கந்தசாமி,[61] இரா. தண்டாயுதம்,[62] சுப. திண்ணப்பன், கோ. சுந்தரமூர்த்தி, கருணாகரன், ந. வீ. செயராமன் முதலாயோர் தமிழ்ப்பணியாற்றினர். சிலர் சமயப் பணிகளிலும் ஈடுபட்டனர்; பல்கலைக்கழகத்திற்கு வெளியே நடந்த விழாக்களிலும் உரை நிகழ்த்திச் சிறப்புச் சேர்த்தனர். முனைவர் இலட்சுமி மீனாட்சிசுந்தரமும் இத் துறையில் சிறிது காலம் பணியாற்றினார்.

இப்போது தமிழில் பெரும்புலமை பெற்ற வெளிநாட்டு வல்லுநர் எவரும் மலாயாப் பல்கலைக்கழகத்தில் பணிபுரியவில்லை. தமிழ்மொழி இலக்கணம், இலக்கியம் முதலாயவற்றில் துறைபோன வெளிநாட்டு வல்லுநர் ஓரிருவர் இந்திய ஆய்வியல் துறையில் இருந்தால் பெரும்பயன் விளையுமென்பது பலர் உள்ளக் கிடக்கையாகும்.

## பல்கலைக்கழகத்தில் பணிபுரிவோர்

இப்போது மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையில் ஜே. ஆர். டேனியல், சூசன் ஊர்ஜிதம், ஆர். இராஜா கிருஷ்ணன், ந. கந்தசாமி, வே. சபாபதி, மு. இராசேந்திரன், ம. கிருஷ்ணன், சு. குமரன் ஆகியோர் இணைப் பேராசிரியர்களாயும் விரிவுரையாளர்களாயும் பணிபுரிகின்றனர். கோ. சிவபாலன், மோகன்தாஸ் ஆகியோர் பயிற்றுநராய்ப் பணியாற்றுகின்றனர்.

---

59 விரிவிற்கு 378ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.
60 விரிவிற்கு 375ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.
61 இக் களஞ்சியத்திற்கு இவர் மதிப்புரை (An Appreciation) வழங்கியுள்ளார்.
62 விரிவிற்கு 377ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

இத் துறை எத்துணையோ இடையூறுகளை எதிர்கொண்டும் இன்றுவரை உறுதியொடு நிலைத்திருக்கிறது. இது மகிழ்தற்குரிய செய்தியாகும். இப்போது நாட்டில் ஏழு பல்கலைக்கழகங்கள் உள. அவற்றுள் மலாயாப் பல்கலைக்கழகத்தில் தான் தமிழ்த்துறை (Pengajian India) உள்ளது. அத் துறையில் தமிழினைச் சிறப்புப் பாடமாய் எடுத்துப் பயின்று பட்டம் பெற்றோர் இன்று தமிழ்த் துறைகளில் மட்டுமன்றிப் பல்வேறு துறைகளிலும் பணிபுரிகின்றனர். இது பெருமைக்குரிய செய்தியாகும்.

மற்றப் பல்கலைக்கழகங்களிலும் தமிழ்த்துறை ஏற்படுத்த வேண்டுமென்றும், தேசியப் பள்ளிகளில் தாய்மொழியைக் (தமிழ், சீனம்) கட்டாயப் பாடமாக்க வேண்டுமென்றும், சமுதாய இயக்கங்கள் வலியுறுத்திவருகின்றன; இதழ்களும் எழுதிவருகின்றன.

## அறக்கட்டளைகள்

பல்கலைக்கழகங்கள் முனைப்புடன் செயல்பட அறக்கட்டளைகள் பெரிதும் உதவுகின்றன. ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நடத்த, நூல்கள், ஆய்விதழ்கள் வெளியிட, கருத்தரங்குகள் கூட்ட, உதவிச்சம்பளங்கள் வழங்க அறக்கட்டளைகள் இன்றியமையாதன.

மலாயாப் பல்கலைக்கழகத்தில் செயல்பட்டுவரும் இரு முகாமையான அறக்கட்டளைகள்பற்றி ஈண்டுக் குறிப்பிடல் வேண்டும். அவற்றுள் ஒன்று 'நாட்டுக்கோட்டைச் செட்டியார் அறக்கட்டளை (Nattukkottai Chettiar Fund); மற்றொன்று 'சிலோன் அறக்கட்டளை' (Ceylon Endowment Fund).

## 1. நாட்டுக்கோட்டைச் செட்டியார் அறக்கட்டளை

இது 1949ஆம் ஆண்டு ஏறக்குறைய மூன்று இலக்கம் வெள்ளி முதலீட்டில் தொடங்கப்பெற்றது. இப்போது இத் தொகை இரட்டிப்பாகியுள்ளது. இவ் வறக்கட்டளை வாரிய நிருவாகக்குழுத் தலைவர் துணைவேந்தர். இந்திய ஆய்வியல் துறைத் தலைவர், நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமுகத்தைச் சேர்ந்த பேராளர் ஒருவர் உறுப்பினராவர்.

### நோக்கங்கள்

இவ் வறக்கட்டளை இரண்டு முதன்மையாய நோக்கங்களைக் கொண்டது.

1. தமிழ் ஆய்வை மேம்படுத்த உதவுதல்; நூல் வெளியிடுதல்.

2. இந்தியர் தொடர்பான ஆய்வை மேற்கொள்ளப் பொருளுதவி வழங்குதல், வெளிநாடு சென்று ஆய்வு நடத்த உதவுதல்.

இந் நோக்கங்களுக்கேற்ப இவ் வறக்கட்டளை செயல்பட்டுவருகிறது. இந்த அறக்கட்டளை வாரியத்தின் உதவியால் முன்பு 'தமிழ் ஒளி' என்ற ஆய்விதழ் வெளியிடப்பெற்றது; இப்போது 'இந்திய ஆய்வியல்' என்னும் பெயரில் ஆண்டு வெளியீடு ஒன்று வந்துகொண்டிருக்கிறது. ஆண்டுதோறும் நடைபெற்றுவரும் பேரவைக் கதைகள் வெளியீட்டிற்கும் வாரியம் உதவிவருகிறது. எத்தனையோ கருத்தரங்குகளை நடத்த இந்த அறக்கட்டளை வாரியம் உதவி நல்கியுள்ளது.

## 2. சிலோன் அறக்கட்டளை

இவ் வறக்கட்டளை 1949 இல் 80 ஆயிரம் வெள்ளி முதலீட்டில் தொடங்கப்பெற்றது. இதன் நோக்கங்களாவன:

1. இலங்கை, இந்தியத் தமிழர்பண்பாடு குறித்து ஆண்டுதோறும் ஓர் அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கு ஏற்பாடு செய்தல்.

2. இலங்கைத் தமிழர்பற்றிய ஆராய்ச்சிக்குப் பொருளுதவி செய்தல்.

இந் நோக்கங்களுக்கேற்ப இந்த அறக்கட்டளை வாரியம் சிறப்பாகச் செயல்பட்டுவருகிறது.

### இருவகை மாணவர்

தமிழ்க் கல்வி தொடர்பாய நிலைமைபற்றியே இதுவரை ஆராயப்பட்டது. தமிழ்ப் பள்ளிகளில் பயிலாத பிற மாணவர் கல்விநிலை குறித்தும் சில சொல்லுதல் கடமையாகும். பத்தாண்டுகளுக்கு முன்புவரை தமிழ்ப் பள்ளிக்குச் செல்லும் மாணவர் 49 விழுக்காட்டினராய் இருந்தனர். தேசியப் பள்ளிகளில் 50 விழுக்காட்டு மாணவரும் சீனப் பள்ளிகளில் ஒரு விழுக்காட்டு இந்திய - தமிழ் மாணவரும் கற்றனர்.

இதழ்களின் இடையறாப் பணிகளாலும் இயக்கங்களின் சோர்வில்லா வேண்டுகோள்களாலும் குறிப்பாக மலேசிய இந்தியர் காங்கிரசின் கடும் முயற்சிகளாலும், அதன் தலைவர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவின் உறுதியாய நடவடிக்கைகளாலும் இன்று 56 விழுக்காட்டினர் தமிழ்ப் பள்ளிக்குச் செல்கின்றனர். இத் தொகை ஆண்டுதோறும் கூடிக்கொண்டே வருகிறது.

இவ் விருதிறத்தினரும் (தமிழ், தேசியப்பள்ளிகளில் பயில்வோர்) இடைநிலைப் பள்ளிகளில் (முதலாம் படிவம்) இணைகின்றனர். வாய்ப்புவசதி படைத்தோர் பல்கலைக்கழகத்திற்குச் செல்கின்றனர். அவர்களுள் தொடக்கத் தமிழ்ப் பள்ளிகளிலிருந்து வந்த மாணவர் எண்ணிக்கை எவ்வகையிலும் குறையவில்லை. அவர்களுள் எத்தனையோ பேர் பல்கலைக்கழகப் பட்டதாரியராவர். அவர்கள் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்குகின்றனர்.

## பல்கலைக்கழகத்தில் இடம்

மலேசிய இந்திய மக்கள்தொகை இன்று எட்டு விழுக்காடாகும். 1966ஆம் ஆண்டிற்குப் பின் இந்திய மாணவர்களுள் பல்கலைக்கழகம் செல்வோர் எண்ணிக்கை மிகவும் சரிந்துவிட்டது. 1959 - 60ஆம் ஆண்டில் 14.5 விழுக்காட்டினர் (மலாயாப்) பல்கலைக்கழகத்திற்குச் சென்றனர். பின்னர் 13%, 12%, 11%, 10%, 9%, 8%, 7% என இறங்குமுகமாயது.[63] இப்போது நாட்டில் ஏழு பல்கலைக்கழகங்கள் உள. ஆண்டுதொறும் 6 விழுக்காட்டிற்கும் குறைவான மாணவரே, பல்கலைக்கழகங்கட்குச் செல்கின்றனர். உயர் கல்வி நிலையங்களில் இந்திய மாணவர் தொகை தொடர்ந்து சரிவுகண்டே வருகிறது ( பட்டியல் எண்கள் 6,7, காண்க). இந் நிலை மாற வேண்டுமென்று சமுதாய இயக்கங்கள் போராடி வருகின்றன; ஏடுகளும் சுட்டிக் காட்டிக்கொண்டே வருகின்றன.

## சமுதாய வறுமை நிலையும் உயர்கல்வியும்

வறுமையின் காரணமாய் உயர்கல்வி பெற முடியவில்லை என்ற நிலையை முழுதாய்த் துடைத்தொழித்துவிட வேண்டுமென்னும் எழுச்சி சமுதாயத்தில் ஏற்பட்டுள்ளது. நல்ல தேர்ச்சி பெற்றுப் பல்கலைக்கழகம் செல்லும் வாய்ப்பினைப் பெற்ற எல்லாருமே தடையின்றிக் கல்வியைத் தொடர வாய்ப்புகள் பெருகி வருகின்றன. இவ் வகையில் ம.இ.கா. தேசியத் தலைவர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு நிறுவிய மாஜு கல்வி மேம்பாட்டுக் கழகம் (M.I.E.D.) அளப்பரிய பணிபுரிந்து வருகிறது. ஆண்டுதோறும் நூற்றுக்கணக்காய மாணவர்க்கு அது கல்விக்கடன் வழங்கி ஊக்குவித்து வருகிறது.

துன் வீ.தி. சம்பந்தன் கல்வி அறக்கட்டளை, டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் கல்வி அறக்கட்டளை, இராம. சுப்பையா கல்வி அறக்கட்டளை முதலாயனவும் குறிப்பிடத்தக்கன. அரசாங்கமும் சில தனியார் நிறுவனங்களும் உதவிச் சம்பளம், கல்விக் கடன் வழங்கி ஊக்குவித்து வருகின்றன. முன்பு மலேசியத் தமிழர்தம் தாய்கோயிலான கோலாலம்பூர் மகா மாரியம்மன் தேவத்தானமும்[64] கல்விக்கடன் வழங்கிவந்தது. கடன் பெற்ற பெரும்பாலோர் திருப்பிச் செலுத்தாத காரணத்தால் அண்மைக்காலமாய் அது நிறுத்தப்பட்டுவிட்டது. காரணம், கல்விக் கடன்பெற்று வாழ்க்கையில் உயர்ந்தோர் செய்நன்றி கொன்றமையால் அவ் வாய்ப்புத் தொடர வழியற்றுப் போயிற்று. மற்ற அறக்கட்டளைகளும் இந் நெருக்கடியை எதிர்நோக்கி வருகின்றன.

இங்குத் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் கல்விப் பணியையும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். அச் சங்கம், தொழிலாளரிடமிருந்து தண்டிய கல்வி நிதியிலிருந்து ஆயிரக்கணக்காய தொடக்கநிலை, இடைநிலை, உயர்நிலைப்பள்ளி மாணவர்க்கு உதவிச் சம்பளம் வழங்கியது; பல்கலைக்கழக

---

63 மலேசிய இந்தியர் காங்கிரசு, 30ஆம் ஆண்டுச் சிறப்பு மலர், ப. 71

64 விரிவிற்கு 36ஆம் பாடலின் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியில் காண்க.

## உயர்கல்விக் கூடங்களில் இனவாரியான எண்ணிக்கை (விழுக்காடு) 1970 - 75

| | 1970 | | | | |
|---|---|---|---|---|---|
| | மலாய்க் காரார் | சீனர் | இந்தியர் | மற்றவர் | மொத்தம் |
| 1.பட்டயம் & சான்றிதழ்க்கல்வி | 82.9 | 15.5 | 1.0 | 0.6 | 100 |
| 2. பட்டக் கல்வி | 39.7 | 49.2 | 7.3 | 3.8 | 100 |
| 3. புகுமுக & பல்கலைக்கழக முன்தேர்வுக் கல்வி | 30.3 | 66.4 | 2.7 | 0.6 | 100 |
| மொத்தம் | 49.7 | 42.7 | 5.1 | 2.5 | 100 |

பட்டியல் - 6 ( முதல் பகுதி)

| | 1975 | | | | |
|---|---|---|---|---|---|
| | மலாய்க் காரார் | சீனர் | இந்தியர் | மற்றவர் | மொத்தம் |
| 1.பட்டயம் & சான்றிதழ்க்கல்வி | 85.4 | 13.4 | 1.0 | 0.2 | 100 |
| 2. பட்டக் கல்வி | 57.2 | 36.6 | 5.2 | 1.0 | 100 |
| 3. புகுமுக & பல்கலைக்கழக முன்தேர்வுக் கல்வி | 21.9 | 73.8 | 4.2 | 0.1 | 100 |
| மொத்தம் | 65.1 | 31.1 | 3.3 | 0.5 | 100 |

சான்று : 3ஆம் மலேசியத் திட்டம் (1976)

பட்டியல் - 6 (இரண்டாம் பகுதி)

## உயர்கல்வி நிலையங்களில் இந்தியர்

(1970 - 88)

| | 1970 | 1980 | 1985 | 1988 |
|---|---|---|---|---|
| உள் நாட்டுக் கல்விக் கூடங்களில் & பட்டக் கல்வி | 7.3 | 5.7 | 6.5 | 6.6 |
| உள் நாட்டுக் கல்விக் கூடங்களில் பட்டக் கல்வி | 1.0 | 0.8 | 0.5 | 0.5 |
| உள் நாட்டு, வெளிநாட்டுக் கல்விக் கூடங்களில் சான்றிதழ் க் கல்வி | | | 5.8<br>11.6 | 4.2<br>9.4 |

சான்று : 7ஆம் மலேசியத் திட்டம் (1995 - 2000)

பட்டியல் - 7

மாணவர்க்கு உதவிச் சம்பளமும் கல்விக் கடனும் வழங்கியது; அதனுடன் தொழிலாளர் பிள்ளைகள் தங்கிப் பயிலப் பி.பி.என். மாணவர் இல்லம் (P.P.N. Hostel) ஒன்றையும் கட்டியது (1964). பலர், அதனில் தங்கிப் படித்துப் பட்டதாரிகள் ஆயினர். ஆனால், அந்த இல்லம், ஒரு மேம்பாட்டு நிறுவனத்திடம் விற்கப்பட்டுவிட்டது (1993).

மேம்பாட்டாளருடன் சங்கம் செய்துகொண்ட ஒப்பந்தப்படி அங்கு எழுப்பப்படும் வீடுகளுள் 40 ஆடம்பர அடுக்குமாடி வீடுகள் சங்கத்திற்குக் கிடைக்குமென்று தெரிகிறது. "அவ் வீடுகள் தொழிலாளர் குழந்தைகளின் கல்விக்கே பயன்படுத்தப்படுமென்றும், அதற்கு ஏதுவாகப் 'பி.பி.என். கல்வி நிதி'என்னும் பெயரில் ஓர் அறக்கட்டளை உருவாக்கப்படு"மென்றும் சங்கம் அறிவித்திருக்கிறது. அத் திட்டம் செயலுருப்பெற வேண்டும்; தொழிலாளர் சமுதாயம் பயனடைய வேண்டும் என்பது நல்லார் விழைவாகும்.

## இன்றைய நிலை

சமுதாயத்தில் இன்று பரவலாய் விழிப்புநிலை ஏற்பட்டு வருதலை உணரமுடிகிறது. எனினும், மற்றச் சமூகங்களின் வேகத்தொடு ஒப்பிடும்போது இது போதாதென்றே சொல்ல வேண்டும். சமுதாயத்தில் இப்போது ஏற்பட்டுள்ள துடிப்பு, ஆர்வம், முயற்சி போன்றன மேலும் பன்மடங்கு பெருக வேண்டும். இந் நிலை மலர ம.இ.கா. பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. "இன்றைய தொழில்நுட்ப உலகில் நிமிர்ந்து நிற்க, கணினி உலகில் உயர்வுகாண,கல்வியே அடிப்படை" என்பதனை அஃது இடைவிடாது வலியுறுத்திவருகிறது. ஒவ்வொரு குடும்பமும் கல்விக் குடும்பமாக[65] வேண்டும் எனும் வேணவாவோடு அது முயன்றுவருகிறது.

தமிழ்ப் பள்ளிகளின்பால் அது கொண்டுள்ள நாட்டம் அளப்பரிது. மாணவர் கல்வி மேம்பாட்டிற்கு அது செலவிட்டுவரும் தொகை மிகுதி. ஒருகாலத்தில் இந் நாட்டில் சற்றேறக்குறைய 900 தமிழ்ப்பள்ளிகள் இருந்தன. இன்று 532 தமிழ்ப்பள்ளிகளே எஞ்சி நிற்கின்றன. அவற்றுள்ளும் அரசின் முழு உதவி பெறும் பள்ளிகள் 159தான். அதனால் மற்ற 373 பள்ளிகள் புறக்கணிப்பு நிலையிலேயே உள்ளன. எல்லாப் பள்ளிகளையும் அரசின் முழு உதவிபெறும் பள்ளிகளாக்க ம.இ.கா. முயன்று வருகிறது. எஞ்சியுள்ள பள்ளிகளின் நிலைப்பாட்டிற்கும், அவற்றிலிருந்து வெளிவரும் மாணவர் எதிர்கால உயர்விற்கும் அது திட்டமிடுகிறது. இந்தியர் கல்விப் பிரச்சினை 20ஆம் நூற்றாண்டிற்குள் தீர வேண்டும் என்று அதன் தலைவர் அறைகூவல் விடுத்து வருகிறார்.

இந் நிலை மலரும்வண்ணம் சமுதாயத்தில் பல்வேறு முயற்சிகள் நடந்துவருகின்றன. டாக்டர் தம்பிராசாவைத் தலைவராய்க்கொண்ட அருள்மிகு (ஸ்ரீ) முருகன் நிலையம் (Sri Murugan Centre) தேர்வெழுதும் மாணவர்க்குப் பல

---

65 'கல்விக் குடும்பம்' ,ம.இ.கா. கல்விக்குழுவின் கருத்துக் கோவை அடங்கிய கையேடு.

ஆண்டுகளாய்த் தனிப்பாட வகுப்புகளைச் சிறப்பாய் நடத்திவருகிறது; பயிலரங்குகளையும் நடத்திவருகிறது. மேலும், நெடுங்காலமாய்க் கட்டணமின்றி வழிகாட்டி வகுப்புகள், பயிலரங்குகள் நடத்திவரும் தொண்டூழிய நிறுவனங்களின் பணிகளும் மதித்துப் போற்றத் தக்கனவாகும்.

### டேப் கல்லூரி

நாடு, புதிய தொழில்நுட்பத்தை நோக்கி விரைந்து முன்னேறிவருகிறது. அதற்கேற்பத் தொழில்நுட்ப வல்லுநர் உருவாக வேண்டியது காலத்தின் கட்டாயமாகும். இவ் வகையில் எதிர்காலத் தலைவர்களாய மாணவர்க்கு உதவும்பொருட்டு டத்தோ ஸ்ரீ டாக்டர் ச. சாமிவேலு சிரம்பான் நகரில் டேப் தொழில்நுட்பக் கல்லூரியை (Tafe College) உருவாக்கியுள்ளார். ஆஸ்திரேலியா முதலாய வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களின் பட்டங்களைப் பெற இக் கல்லூரி வாய்ப்பளிக்கிறது. இக் கல்லூரியின் கிளைகளை வெவ்வேறு மாநிலங்களிலும் நிறுவும் முயற்சிகள் நடந்து வருகின்றன.

### தொழிலாளர் தொழில்நுட்பக் கல்லூரி

போக்குவரத்துத் தொழிலாளர் சங்கத்தின் முன்னாள் பொதுச் செயலாளர் டாக்டர் வி. டேவிட் பெருமுயற்சியால் உருவானது தொழிலாளர் தொழில்நுட்பக் கல்லூரி (W.I.T. - Worker's Institute of Technology). இக் கல்லூரி இந்திய மாணவர்க்கு நிறைவான வாய்ப்பை அளித்துவருகிறது. இவற்றையும் இன்னும் வெவ்வேறு இடங்களில் இயங்கும் கல்லூரிகளையும் பயன்படுத்திக்கொண்டால் எதிர்காலத்தில் இந்திய - தமிழ்ச் சமுதாயம் கல்வியிலும் தொழில்நுட்பத்திலும் தலைநிமிர்ந்து நிற்கும் என்பதில் ஐயமில்லை!

## ச பொருளாதாரம்

அகவாழ்வு (காதல் வாழ்வு), செல்வம் எனும் இரு பொருளினைப் 'பொருள்' எனல் தகும். இன்ப வாழ்வும் அதற்குரிய செல்வமும் தவிர, இவ் வுலக வாழ்வில் வேறு யாதுளது? அதனாலேயே, வள்ளுவர் "பொருள் இலார்க்கு இவ்வுலகம் இல்லை" என இரு பொருள்படக் கூறினார்.

பொருளைப் பெருக்கும் ஆற்றல், தோட்ட முதலாளிகளைச் செல்வச் சீமான் களாக்கும் மனம், நாட்டுச் செல்வத்தைப் பெருக்க வேண்டுமெனும் வேட்கை, அவ் வேட்கையைச் செயற்படுத்தித் தன்னால் ஒரு விரற்கடைகூட உயரமுடியாச் சமுதாயம் ஒன்று உலகில் உண்டென்றால், அது மலேசியத் தமிழ்ச் சமுதாயமே. உலகிற்கு ஒளிதரும் கதிரவனை இருள் சூழாது. ஆனால், மலேசியாவைப் பொறுத்தவரை இந் நாட்டிற்கு ஒளிதந்து கொண்டிருக்கும் தமிழ்ச் சமுதாயக் கதிரவனைத் தொடர்ந்து இருள் சூழ்ந்துகொண்டே இருக்கிறது.

மற்றச் சமுதாயங்கள் உயரும்போது தமிழரால்மட்டும் ஏன் உயர முடியவில்லை? அன்றுமுதல் இன்றுவரை அச் சமுதாய வரலாற்றைச் சிறிது ஆராய்ந்தால் அதற்கான காரணங்கள் நன்கு புரியும்.

## வாழ்க்கைப் பின்னணி

தமிழர் இந் நாட்டில் காலடி எடுத்து வைத்த நாள்முதல் இன்றுவரை அவர்கள் வாழ்க்கையில் எத்தனையோ இடையூறுகள் குறுக்கிட்டுள்ளன. இரண்டாம் உலகப் போருக்கு முன்புவரை தமிழர் கொத்தடிமை நிலையிலேயே கிடந்தனர்; போருக்குப் பின்பும் (1946) சில ஆண்டுகள் அந் நிலை தொடர்ந்தது; விடுதலை பெற்ற பின்னும் அதன் ஒளி, தோட்டப்புறங்களில் வீசவில்லை. அதனால், உடலாலும் உள்ளத்தாலும் தமிழர் தாக்குண்டு கிடந்தனர்.

இன்று நாட்டுச் செல்வவளத்தில் பெரும்பகுதியைத் தம் கையில் வைத்திருக்கும் சீனரும், இங்குப் பிழைக்க வந்தவரே; எனினும் அவர்கள் வாழ்க்கைப் பின்னணியே வேறு; அவர்களது சமூக ஒற்றுமை அதற்கு வலிமை சேர்த்தது; சமூகக் காப்பு அமைப்பும் இருந்தது. மேலும் இயல்பாகவே அவர்கள் தன்னம்பிக்கையினர்; சொந்த முன்னேற்றமே குறியாய்க் கொண்டிருந்தனர்; சேமிக்கும் மனப்பான்மை அவர்களுக்கு மிகுதி; மேலும் அவர்களுக்குத் தமிழரினும் ஊதியம் மிகுதியாய்க் கிடைத்தது.

## தமிழர் ஊதியம்

தமிழர் இங்குக் குடியேறிய காலத்தில் பெற்ற சம்பளத்தொகை அறிய முடியவில்லை; 1924ஆம் ஆண்டுக்குப் பின் கிடைத்த சம்பளமும் மாநிலத்துக்கு மாநிலம் வேறுபட்டிருந்தது; தோட்டங்கள் ஏ, பி பிரிவுகளாய்ப் பிரிக்கப்பட்டிருந்தன. ஏ பிரிவு சிறிது வளமானது; எளிதில் சென்று திரும்பக்கூடிய வசதிகள் நிறைந்தது. பி பிரிவு சிறிது வளங்குன்றியது; எளிதில் சென்று திரும்ப இயலாதது; கொடிய மலேரியா நோய் பரவ வல்லது.

### சம்பளத் திட்டம்

| ஆண்டு | மாநிலம் | ஆண் (காசு) | பெண் (காசு) |
|---|---|---|---|
| 1924 | சிலாங்கூர் (ஏ) | 35 | 27 |
| 1925 | சிலாங்கூர் (ஏ) | 40 | 30 |
| 1926 | வெல்லஸ்லி (ஏ) | 50 | 40 |
| 1927 | பகாங் (பி) | 58 | 46 |
| 1929 | கிளந்தான் (பி) | 58 | 46 |
| 1930 | வெல்லஸ்லி (ஏ) | 40 | 32 |
| 1930 | கிளந்தான் (பி) | 47 | 37 |

இதனை அடுத்து 1933இல் ஆண்களுக்கு 28 காசாயும், பெண்களுக்கு 24 காசாயும் ஊதியம் சரிந்தது; 1936இல் ரப்பர் விலை மிக உயர்ந்தது; அதனால் ஆண்களுக்கு 45 காசாயும், பெண்களுக்கு 36 காசாயும் உயர்ந்தது; 1938 இல் ஆண்களுக்கு 40 காசாயும், பெண்களுக்கு 32 காசாயும் குறைந்தது; 1940இல் 50 காசும், 40 காசும் சம்பளம் தரப்பட்டன.[66] போர்க்காலத்து நிலையைச் சொல்லவே வேண்டுவதில்லை. அக் காலத்தில் பொருளாதாரம் முழுதும் அழிந்தது; பஞ்சமும் பட்டினியும் மக்களை வாட்டின.

இங்ஙனம் ரப்பரைப்போல் இழுத்தால் நீள்வதும், விட்டால் சுருங்குவதுமாய் இருந்துவந்த சம்பளத் திட்டம் தொழிற்சங்கங்கள் அமைந்து (1945ஆம் ஆண்டிற்குப்பின்) வலிமை பெற்ற பின் ஓரளவு மேம்பாடடைந்தது. இருப்பினும் அதனை மேம்பாடு என்று கருத இயலாதெனச் சமூகப் பொருளாதார ஆய்வுப் பிரிவின் (Socio-Economic Unit) அறிக்கை கூறுகிறது.

“ஒரு தோட்டத் தொழிலாளி தனது மொத்த வருமானத்தில் முக்கால் பாகத்தை உணவுக்காகச் செலவிடுகின்றான். உடை, போக்குவரத்து, கல்வி, மருத்துவம் போன்றவற்றிற்கு அவனிடம் எஞ்சி இருப்பது காற்பகுதியே. ஏறத்தாழ 50 விழுக்காட்டினர் கடனில் மூழ்கியுள்ளனர்” என்பதே அவ் வறிக்கை சுட்டிக்காட்டும் புள்ளி விவரமாகும்.[67]

## இரங்கத்தக்க நிலை

இன்றும் இத்துணை நெருக்கடிக்கிடையில் வாழ்ந்துவரும் தமிழர் நடந்து வந்த பாதையில் நேர்ந்த அதிர்வுகள், இடையூறுகள், தடைகள் ஒன்றிரண்டல்ல; கணக்கற்றன. அவை சமூக அமைப்பையும், பொருளாதார நிலைகளையும் பெரிதும் தாக்கின.

## எதிர்கொண்ட இடர்கள்

முதலாம் உலகப்போர்க் காலத்தில் (1914 - 18) நிகழ்ந்த ரப்பர் விலைவீழ்ச்சி, பெரும் பாதிப்பினை ஏற்படுத்திற்று. இரண்டாம் உலகப்போர் (1939 - 45), தோட்டத் தொழில்துறைகளை முழுவதும் முடக்கி வறுமைச் சேற்றில் அழுக்கியது. சயாம் மரண இரயில் பாதை[68] அமைக்கச் சப்பானியர் இழுத்துச் சென்றோரில் 60 ஆயிரத்திற்கு மேற்பட்டோர் மடிந்தமை[69] சமுதாயத்தில் பெரும் பள்ளத்தை உருவாக்கிவிட்டது.

---

66 Federal Malay States, Annual Report of the Labour Department, 1924, p. 9
மேலது - ஆண்டு 1925, ப. 9 ஆண்டு 1930, ப. 10
மேலது - ஆண்டு 1927, ப. 9 ஆண்டு 1932, ப. 14

67 வரதராசு, மு., மலேசியத் தோட்டத் தொழிலாளர்கள் - வரலாறும் பிரச்சினைகளும், ப. 101

68 விரிவிற்கு 132, 135ஆம் பாடல்களின் பின்புலம் - குறிப்புரை காண்க.

69 Gamba, C. The National Union of Plantation Workers, Singapore, 1962, p. 13

விடுதலைக்குப் பின் ஏற்பட்ட தோட்டத் துண்டாடல்[70] அவர்களைப் பெரிதும் உலுக்கியது; நாட்டின் மேம்பாட்டிற்குத் தொழில்துறையை உயர்த்தி அரசே தோட்டங்களை அழிக்கத் தொடங்கியபோதும், ஆயிரக் கணக்கானோர் தத்தம் பணியை இழந்தனர்; வீடு வாசல் இழந்தனர்; வாழ வழியின்றி அல்லலுற்றனர்.

காலப்போக்கில் பெரும்பாலான ரப்பர்த் தோட்டங்கள் செம்பனைத் தோட்டங்களாயின (Palm Oil); ஆட்குறைப்புச் செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது; ரப்பர்த் தொழிலுக்குத் தேவையான மனித ஆற்றலில் பாதியே செம்பனைத் தோட்டங்களுக்குத் தேவைப்பட்டது. அதனாலும் தொழிலாளர் வாழ்வில் அவலநிலை நேர்ந்தது; எண்ணற்றோர் வேலை இழந்தனர்; வாழ்விழந்தனர்.

1969இல் (மே 13) ஏற்பட்ட உள்நாட்டுக் கலகமும் அதன் பின்விளைவாய வேலை இணக்கச் சீட்டு[71] (Work Permit) முறையும் தோட்டப்புறத் தமிழரைத் திக்குமுக்காடச் செய்தன. அதனால் பாதிக்கப்பட்டோரில் 30 ஆயிரத்திற்கு மேற்பட்டோர் வேறு வழியின்றி மூதாதையர் நாட்டுக்கே திரும்ப நேர்ந்தது.

## நாட்டு வளர்ச்சியும் தமிழரும்

வேளாண்மைத் துறையைப் படிப்படியாய்க் குறைத்துத் தொழில்துறையில் நாடு கால் வைத்தபோது, தொழில்நுட்பத் திறன் இன்மையால் நேர்ந்த பின்னடைவு ஏற்படுத்திய துன்பம் அளப்பரிது (1980, 90ஆம் ஆண்டுகள்).

மேற்படி காரணங்களால் தமிழர் பொருளாதாரத் துறையில் காலூன்றவே முடியாமற் போனது. இத்துணைப் பொருளாதாரப் பேரிடர்களைத் தாங்கிக் கொண்டும் இச் சமூகம் உயிர் வாழ்ந்து கொண்டிருப்பது வியப்பிற்குரிய ஒன்றுதான்.

இந்தச் சமுதாயத்தை இந்த அளவாவது காத்தமைக்குத் தொழிற்சங்கங்களின் தொடக்க கால நடவடிக்கைகளும், சமுதாய இயக்கங்களின் இடைவிடாத் தொண்டும், அரசியல் இயக்கமான ம.இ.கா.வின் பணியும், ஏடுகளின் முழக்கங்களுமே காரணங்கள் ஆகும்.

நாட்டில் தோட்டத் துண்டாடல் நிகழ்ந்தபோது (1957-க்குப் பின்) தமிழர் வாழ்வில் ஒரு பேரிடி விழுந்தது. "தோட்டமே எல்லாம்; அஃது என்றென்றும் நிலைத்திருக்கும்" என்ற நம்பிக்கையோடு காலத்தை ஓட்டி வந்தோர், "அது துண்டுபோட்டு விற்கப்பட்டுவிட்டது; மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு வெளியேறுங்கள்" என்ற குரல் கேட்டபோது அதிர்ந்தனர்; துடித்தனர்; கண்ணீர் விட்டனர்; செய்வதறியாது அலைமோதினர்; துண்டாடலைத் தடைசெய்ய வேண்டுமென்று அரசியல் கட்சிகளும்,

70 159ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

71 139, 151ஆம் பாடல்களின் பின்புலம் - குறிப்புரை காண்க.

தொழிற்சங்கங்களும், சமுதாய இயக்கங்களும் எழுப்பிய குரல் உடனடிவெற்றி காணவில்லை.

டாக்டர் வி. டேவிட் முதலாய எதிர்க்கட்சித் தலைவரெல்லாம் தீவிரமான முடிவெடுக்கும்படி அரசினை நெருக்கினர்; தோட்டங்களைத் தேசியமயமாக்க வேண்டுமென்ற குரலும் எழுந்தது. புதிதாக விடுதலை கண்ட இளநாடானதால் மலேசிய அரசு வெள்ளைக்காரர்களுக்குப் பாதகமான முடிவெடுக்கத் தயங்கியது; அப்போது ஆட்சிபுரிந்த கூட்டணிப் பங்காளிக் கட்சிகளுள் ஒன்றான ம.இ.கா. சார்பில் அதன் தலைவர் துன் சம்பந்தனும் டான் ஸ்ரீ மாணிக்கவாசகமும் அமைச்சரவையில் இடம்பெற்றிருந்தனர். அரசினை நெருக்க விரும்பாத துன் சம்பந்தன் புரட்சிகரமானதொரு பொருளாதார நிறுவனத்தை (1960) உருவாக்கினார். 'தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம்'[72] என்பது அதன் பெயர். அதன்படி ஒரு பங்கு நூறு வெள்ளி, மாதம் பத்து வெள்ளி தந்து ஒவ்வொரு தொழிலாளரும் பங்குதாரர் ஆகலாம் என்பதே சங்கத் திட்டம். அப் பெருமகனார் திட்டப்படி நூறாயிரம் பேர் அத் திட்டத்தில் இணைந்து, தொடர்ந்து பத்து வெள்ளி செலுத்தி வந்தால் துண்டுபடும் தோட்டங்களை எல்லாம் வாங்கிவிடலாம் என்பது குறிக்கோளாகும். "நாம் ஏழையர் என்றாலும் கோழையர் அல்லர்; குருவிக்கும் கூடு உண்டு; நமக்கொரு வீடுண்டா? சொந்தக் காலில் நிற்போம்" என்று நாடெங்கும் சென்று பெருமுழக்கமிட்டார்; சமுதாயத்தின் எல்லாத் தரப்பினரையும் அணுகி ஆதரவு திரட்டினார்; தொழிலாளரை எல்லாம் தன் பொறுப்பில், கட்டுப்பாட்டில், பிடியில் வைத்திருந்த தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தையும் அணுகி ஆதரவு வேண்டினார். ஆனால் அது இத் திட்டத்தை ஆதரிக்கவில்லை. தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம் அரசியல் கட்சிச் செல்வாக்கிற்கு உட்பட்டிருக்கும்வரை அதனை ஆதரிக்க இயலாதெனத் தே. தோ. தொ. சங்கம் காரணம் கூறியது. தம்மை ஒரு கடைநிலைத் தொண்டனாய்த் தாழ்த்திக்கொண்டு, துன் சம்பந்தன் தோட்டம் தோட்டமாய் அலைந்து அரும்பாடுபட்டார்.

அவர் திட்டத்திற்குத் தலைமை அமைச்சர் மலேசியத் தந்தை துங்கு அப்துல் ரகுமான் முழு ஆதரவு நல்கினார்; அரசு தகவல் சாதனங்களும் துணைபுரிந்தன. குறுகிய காலத்தில், இப்பொழுது தலைமை இயக்குநராய் விளங்கும் டான் ஸ்ரீ கே.ஆர். சோமசுந்தரம் தூண்டுதலாலும் ஒத்துழைப்பாலும் 2914 ஏக்கர் பரப்பளவுள்ள புக்கிட் சீடிங் ரப்பர்த் தோட்டத்தை விலைக்கு வாங்கினார். இஃது இந் நாட்டு இந்தியர்-தமிழர் தம் பொருளாதார நிலைப்பாட்டிற்கு இட்ட முதல் கால்கோளாகும். தொடர்ந்து அரும்பாடுபட்டு 22 தோட்டங்களை வாங்கினார்.

சமுதாயத்திற்காகப் பரிந்து பாடுபட்டுத் தம் பெரும் செல்வத்தையும் இழந்த தியாகி கூட்டுறவுத் தந்தை துன் சம்பந்தன் திட்டத்தைச் சமுதாயம் பெரு நம்பிக்கையொடு ஏற்று அதற்கு முழு ஆதரவு தந்திருந்தால், அவர் கொண்டுவந்த திட்டப்படி ஓரிலக்கம் பேர் உறுப்பியம் பெற்றுத் தொடர்ந்து மாதம் பத்து வெள்ளி செலுத்தி வந்திருந்தால்

---

72 விரிவிற்கு 423ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

இன்று நூற்றுக் கணக்காய தோட்டங்கள் சமுதாயத்துக்குச் சொந்தமாயிருக்கும். கூட்டுறவு சங்கத் திட்டங்களைச் சமுதாயம் செம்மையாய் உணராமையாலும், உணர்த்த வேண்டியவரும் உரிய வகையில் உணர்த்தாமையாலும், அதன் நோக்கம் முழுமையாய் வெற்றிபெறவில்லை. என்றாலும் இன்று சமுதாயத்தில் பொருளாதாரப் படிக்கட்டு அதுதான் என்ற சிறப்போடு அது தலைநிமிர்ந்து நிற்கிறது.

## துண்டாடல் தடைச்சட்டம்

துண்டாடல் ஒரு பூதமாய் வடிவெடுத்துச் சமுதாயத்தையே விழுங்கி ஏப்பம்விடும் அவலநிலை ஏற்பட்டது. நாட்டுப் பொருளாதாரமும் நலியத் தொடங்கியது. டாக்டர் வி. டேவிட் முதலாய எதிர்க்கட்சித் தலைவர்கள் அதன் தீமைகளை நாடாளுமன்றத்தில் இடையறாது முழங்கினர்.[73] அப்பொழுது அமைச்சர்களாய் இருந்த துன் சம்பந்தனும் டான் ஸ்ரீ மாணிக்கவாசகமும் தொடர்ந்து முயன்று நாடாளுமன்றத்தில் துண்டாடல் தடைச்சட்டத்தை நிறைவேற்றினர் (1972).

துண்டாடல் பூதம் விளைத்த அழிவுகளிலிருந்து சமுதாயம் முழுமையாய் விடுபடுதற்குள் மற்றொரு பூதமாய் உள்நாட்டுக் கலகம் மூண்டது, அதன் விளைவுகள் மற்ற மலேசியர்களைப் போலவே இந்தியர்களையும் பெரிதும் தாக்கிற்று; செயலிழக்கச் செய்தது.

தேர்தல் முடிந்த உடனே நாடாளுமன்றம் கூடுதற்குமுன் கலகம் ஏற்பட்டது; அதனால் நாட்டுத் தந்தை துங்கு அப்துல் ரகுமான், துன் அப்துல் ரசாக் தலைமையில் அமைந்த தேசிய நடவடிக்கை மன்றத்திடம் (National Operation Council) ஆட்சிப் பொறுப்பினை ஒப்படைத்தார். தேசிய நடவடிக்கை மன்றமோ, நாட்டில் குடியுரிமை பெற்றவர் நன்மைக்கே முன்னுரிமை தந்தது; குடியுரிமை பெறாதோர்க்கு வேலை இணக்கச் சீட்டு முறையைக் கொண்டுவந்தது. அதன்படி நாட்டுக் குடியுரிமையுள்ளவர்க்கே வேலை கிடைத்தது. மற்றவர், அரசு துறைகளிலோ தனியார் துறைகளிலோ வேலை பார்க்கவேண்டுமானால் வேலை இணக்கச் சீட்டுப் பெற்றாக வேண்டும்.

மேலும் வேலை இணக்கச் சீட்டும் மூன்றுமாத காலத்திற்குமட்டுமே வழங்கப்பட்டது. அதன்பின் அது புதுப்பிக்கப்படாது என்ற முத்திரையும் அதனில் குத்தப்பட்டது. அதனால், குடியுரிமை பெறாதோர் தம் 'உலகமே இருண்டது; வாழ்வே முடிந்தது' என்று கலங்கினர்; இனி இங்கு வாழவழி இல்லை என்று கருதி மூதாதையர் நாட்டுக்கே திரும்பினர். குடியுரிமை பெற்றிருந்த சிலரும் எதிர்காலம் என்ன ஆகுமோ என்று கருதி அதனைத் திருப்பித் தந்துவிட்டுத் தாயகம் திரும்பினர். அதனால் 30 ஆயிரத்திற்கு மேற்பட்டோரை மலேசியத் தமிழ்ச் சமுதாயம் இழந்தது.

---

73 மலேசியா -- நம் நாடு, நம் மக்கள், நம் உரிமைகள், பக். 14, 171

வாய்ப்பிழந்தவர்களுள் எஞ்சியிருந்த ஒரு சிலர் சிறுசிறு தொழில்களில் ஈடுபட்டனர். எனினும் வாணிகத்தில் உயர்வு காணவில்லை; அதற்கு வாய்ப்பும் அமையவில்லை.

வேலை இணக்கச் சீட்டுமுறை வந்தபின் எஞ்சியிருந்த பொருளாதாரப் புழக்கம் மிகக் கடுமையாய்ச் சரிந்தது. சமுதாயத்தைப் பேரிருள் சூழ்ந்தது.

## வேளாண்மையிலிருந்து தொழில்துறைக்கு மாற்றம்

1980ஆம் ஆண்டுகளில் புதியதொரு பரிணாமத்தை - வளர்ச்சியை நோக்கி நாடு நடைபோடத் தொடங்கிற்று. அஃதாவது வேளாண்மையையே நம்பிக் கொண்டிராமல் படிப்படியாய்த் தொழில்துறைக்கு மாறுவதே அத் திட்டமாகும். அத் திட்டத்திற்கேற்பத் தமிழர், தம்மை மாற்றிக்கொள்ள இயலவில்லை. பிறர் நிலங்களான தோட்டங்களில் வேளாண்மைத் துறையிலேயே இரண்டறக் கலந்துவிட்ட தமிழர் தொழில்துறைக் கேற்ற திறன்களைப் (skills) பெற்றிருக்கவில்லை. அதனால் அவர்கள் வாழ்ந்த தோட்டம் தொழிற்பேட்டையாய் மாறிய போது, அதனில் பணியாற்றும் ஆயிரக்கணக்காயவர் வேலை இழந்தனர். அதனால் பொருளாதாரம் புதையுண்டது.

## பசுமை காணப் பயணம்

கடந்த இருநூறு ஆண்டுகால மலேசியத் தமிழர் வரலாற்றில் எந்தக் கால கட்டத்திலும் அவர்கள் பசுமை கண்டதில்லை என்று நிகழ்வுகள் காட்டுகின்றன. உலகவாழ்வு என்பது வளர்ச்சியை நோக்கிப் போகும் தன்மையது என்பர். புல் பூண்டுமுதல் எல்லாமே வளர்ச்சி நோக்கியே உயர்கின்றன. ஆனால், தமிழர் வாழ்வில் அது தலைகாட்ட முடியாதது வியப்பிற்குரியதாய்த் தோன்றலாம். அவர்கள் வாழ்வின் இருநூற்றாண்டுகளின் நிகழ்வுகளைத் தொகுத்துப் பார்த்தால் அதற்காய காரணங்கள் புரியும்; முன்னேறும் வாய்ப்புகள் அற்றுப்போன அவர்கள்மேல் இரக்கமே ஏற்படும்.

## அழிவு, அழிவு, அழிவே!

- தொடக்க காலத்தில் மிகைநேரம் உழைத்தும் அவர்கள் பெற்ற சம்பளம் அரை வயிற்று உணவுக்கே போதாமலிருந்தது.
- கொத்தடிமைகள்போல் நடத்தப்பட்டதால் உரிமை உணர்வு தலைதூக்க வழியில்லாமற் போனது.
- முதலாம், இரண்டாம் உலகப் போர்கள் அவர்களைப் பெரிதும் தாக்கின.
- மரண ரயில்பாதை அமைக்கும் பணியில் 60 ஆயிரத்திற்கு மேற்பட்டோர் மடிந்தனர்.
- தோட்டத் துண்டாடலால் பல்லாயிரக் கணக்கானோர் வாழ்விழந்து நடுத் தெருவிற்கு வந்தனர்.

- உள்நாட்டுக் கலகத்தின் பின்விளைவாய் ஏற்பட்ட வேலை இணக்கச் சீட்டு முறையால் பாதிக்கப்பட்டு 30 ஆயிரத்திற்கு மேற்பட்டோர் மூதாதையர் நாட்டுக்கே திரும்பினர்.
- நாட்டு மேம்பாட்டிற்காகத் தோட்டங்களை அழித்தபோது பல்லாயிரக் கணக்காயோர் வேலையிழந்தனர்; வீடிழந்தனர்; உணவுக்கும் வழியற்றுப் போயினர்; அடுத்த தலைமுறைக்கு வாழ்வளிக்கும் வகையறியாது அல்லலுற்றனர்.

## செல்வர் வெளியேற்றம்

இவை ஒருபுறமிருக்க இன்றைய பெருஞ்செல்வராய சீனர்க்கும் கடன் கொடுத்த செல்வர் அன்று வாழ்ந்தனர்; தோட்ட முதலாளிகள் வாழ்ந்தனர்; பட்டணங்களில் சொந்தக் கட்டடங்களில் கடைகள் நடத்திய பெரும் வணிகர் வாழ்ந்தனர். சில இடங்களில் குறிப்பாய்ப் பினாங்கில் சீனர் கடைகளைவிடத் தமிழர் கடைகள் மிகுதியாயிருந்ததாகக் குறிப்புகள் காட்டுகின்றன.[74] அவர்களுக்குப் பர்மா,[75] இலங்கை நாடுகளில் நிகழ்ந்த நிகழ்வுகள் அச்சமூட்டின. அதனால் அவர்களெல்லாம் சொத்துகளை விற்றுவிட்டுத் தாயகம் திரும்பினர்; தங்கியவரும் அங்கொரு காலும் இங்கொரு காலும் வைத்திருந்தனர். அதனால் சமுதாயத்தின் பொருளாதாரம் மீளமுடியாப் படுகுழியில் வீழ்ந்தது.

## மக்கள்தொகைச் சரிவு

மக்களாட்சியில் பெரும்பான்மைக்கே உரிமை அதிகம். இந் நாட்டின் பெரும்பான்மையான இனங்களில் ஒன்றாய் இருக்க வேண்டிய இந்திய சமுதாயம் அந்தச் சிறப்பை இழப்பதற்கு எத்தனையோ பேரிடர்கள் காரணமாயின. இந் நாட்டிற்குக் குடிபெயர்ந்து வந்த இந்தியர் எண்ணிக்கை 40 இலக்கம் (1860 - 1957). இங்கேயே பிறந்தவர் 63% (1957வரை). இவர்களில் நாட்டு உருவாக்கத்துக்கு 12 இலக்கம் பேர் இன்னுயிரைத் தந்துள்ளனர். ஒப்பந்தம் முடிந்து 28 இலக்கம் பேர் தாயகம் திரும்பிவிட்டனர்.[76] மரண ரயில்பாதை அமைப்பிற்கு உயிரைவிட்டோர், வேலை இணக்கச் சீட்டு முறையால் பாதிப்புற்றுத் தாயகம் திரும்பியோர் ஓரிலக்கத்தை எட்டுகின்றனர். இங்ஙனம் இந்தியத் தமிழ்ச் சமுதாயம் உடல், பொருள், உயிர் யாவையும் இந் நாட்டிற்காக ஒப்புக்கொடுத்து எண்ணிக்கையில் சரிந்தது; பொருளாதாரத்தில் வீழ்ந்தது; கல்வித் துறையில் கரைந்தது.

---

74 உபைதுல்லா, டான் ஸ்ரீ, எஸ். ஓ. கே., தமிழ்நேசன் 70ஆம் ஆண்டு மலர், ப. 68
75 விரிவிற்கு 150ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.
76 *Sandu, S. K., Indians in Malaya, p.310 - 314*

**சீனர் நிலை**

"இந்தியர் ஒப்பந்தம் முடிந்து தாயகம் திரும்பியதுபோன்று சீனர் திரும்பிச் செல்லவில்லை; முடியவில்லை. ஏனெனில் 1948இல் சீனர் கம்யூனிஸ்டுகளின் ஆட்சிக்குட்பட்டதால் மலேசியச் சீனர் அங்குச் செல்ல வாய்ப்பில்லாமற் போனது. அதனால் சொத்துகளையெல்லாம் இங்கேயே முதலீடு செய்தார்கள். 1930ஆம் ஆண்டுவரையில் இந்திய வணிகம் தலைசிறந்து விளங்கியது; சீனரொடு சமநிலையில் இருந்தது".[77] 1946ஆம் ஆண்டுக்குப் பின் சீனாவின் கதவு அடைபட்டதால் அவர்கள் இங்கேயே நிலைத்தனர். அதன்பின் இந்தியர் அத் துறையில் சரிந்தனர். "சீனர்களுக்குச் சரித்திரம் உதவி புரிந்தது".[78]

சீனர்களுக்கு வரலாறு இன்னொருவகையிலும் துணைபுரிந்தது. 1948இல் பிரிட்டீசு அரசு நெருக்கடி நிலையைப் (Emergency) பிறப்பித்தபோது (சுற்றி வேலியிடப்பட்ட) புதுக் கிராமங்களை உருவாக்கியது. தனித்தனியே பல்வேறு இடங்களில் வாழ்ந்த சீனர்களை அவற்றில் குடியேற்றியது. பொது மக்களொடு 'கம்யூனிஸ்டுகள்' தொடர்பு கொள்ளக்கூடாது என்பதே இதன் நோக்கம்.

தோட்டப்புற மக்களின் வீடுகள் குறிப்பிட்ட ஒரு வட்டத்திற்குள் இருந்தாலும் அது தனியார் நிலப்பகுதியானதால் அங்குப் புதுக்கிராமம் அமைய வாய்ப்பில்லாமல் - தேவையுமில்லாமற் போனது. காட்டுப் பகுதியிலிருந்த தோட்டப்புற வீடுகளைச் சுற்றி வேலிமட்டும் போடப்பட்டன.

காலப்போக்கில் புதுக் கிராமங்களெல்லாம் சீனர் உடைமைகளாயின. வெள்ளைக்காரன் நாட்டைவிட்டுப் போனபோது தோட்டப்புற வீடுகள் தொழிலாளர்க்குச் சொந்தமாகவில்லை. மேலும் தோட்டப்புறங்கள் கிராம அபிவிருத்தித் திட்டத்திலும் சேர்க்கப்படவில்லை; தோட்டப்புற மக்கள் நல்வாழ்வுக்கென்று தனி அமைச்சும் ஏற்படவில்லை. இன்றுவரை தோட்டப்புற மக்கள் கைவிடப்பட்ட ஒரு சமுதாயமாகவே பாதுகாப்பின்றி வாழ்ந்து வருகின்றனர். இந் நிலைக்குத் தோட்டப்புற மக்களின் அறியாமை, அச்சம், எடுப்பார் கைப்பிள்ளைத் தன்மை, தன்னம்பிக்கையின்மை, பிறர் வழிகாட்டி வாழவைப்பர் எனக் குருட்டுத்தனமாய் நம்பும் மாந்த வழிபாட்டுப் போக்கு ஆகியனவும் காரணங்களாகும்.

தோட்டப்புற மக்கள் விடுதலை பெற்ற நாட்டின் வளத்தை நுகர இன்றுவரைகூட வாய்ப்பு அமையவே இல்லை. தோட்டப்புறப் பள்ளிகளுக்கும் இதே நிலைதான். தோட்டங்களுக்கு இடையூறு என்றால், பள்ளிகளும் இல்லாது போகும் நிலை விடாமல் தொடர்கிறது. இதற்கு உடனடியாகத் தீர்வுகாணவில்லை யென்றால் எதிர்காலத்தில்

---

77 உபைதுல்லா, டான்ஸ்ரீ, எஸ். ஓ. கே., தமிழ்நேசன் 70ஆம் ஆண்டு மலர், ப.68
78 மேலது

நாட்டில் தமிழ்ப் பள்ளிகள் எங்குள்ளன என்று தேட வேண்டிய நிலை ஏற்படலாம். ஒரு பள்ளி மூடப்பட்டால் மீண்டும் அது திறக்கப்பட - புதிதாய் ஒன்று உருவாக வாய்ப்பில்லை.

## குடும்பக் கட்டுப்பாடு குலைத்தது

இங்கு இன்னொன்றையும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். மக்கள் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த அரசு முயற்சி மேற்கொண்ட காலை, பல தோட்ட நிருவாகங்கள் கருத்தடையைக் கட்டாயமாக்கின (1960கள்). மீறுவோர் வேலையிழக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். “உயிருடன் இருக்கும் மூன்று பிள்ளைகளுக்குமேல் பேறுகாலப் படிச்செலவுத் தொகை இல்லை” என்னும் விதியை ‘மாபா’ எனப்படும் தோட்ட முதலாளிகள் சங்கமும் தே. தோ. தொ. சங்கமும் ஒப்பந்தத்தில் சேர்த்தன என்பது ஈண்டுக் குறிக்கத் தக்கது. இது மலாய்க்கார, சீன சமூகங்களைப் பாதிக்கவில்லை. 80 விழுக்காட்டினருக்குமேல் தோட்டப்புறத்தில் வாழ்ந்ததால் இந்தியர் - தமிழர் பிறப்பு விகிதம் பேரளவு குறைந்தது. அதனால் இன்றைய இன விகிதாசாரம் 8% விழுக்காடாய் வீழ்ந்தது; மேலும் சரியும் போக்கும் தென்படுகிறது. சில உரிமைகோரல்களுக்கு இதுவும் ஒரு பலவீனமாகும்.

## மக்கள்தொகை பெருக வேண்டிய நேரத்திலும்...

ஒரு காலத்தில் மக்கள்தொகை பெருகிவிடக்கூடாதென்ற அச்சம் நிலவியது. ஆனால், இன்றோ நிலை மாறிவிட்டது. மக்கள்தொகை ஏழு கோடியாக வேண்டுமென்ற நிலை ஏற்பட்டுள்ளது. காரணம் விரைவாக வளர்ந்துவரும் தொழில் பெருக்கத்துக்கு நிறைய மனிதவளம் (Manpower) தேவைப்படுகிறது. ஆகவே பேரளவில் வெளிநாட்டுத் தொழிலாளரை எதிர்பார்க்க வேண்டியுள்ளது. அதனால் நாட்டுச் செல்வம் பெரும் அளவு வெளியேறுகிறது; விரும்பத்தகாத சமூகச் சீர்கேடுகளும் நிகழ்கின்றன. அச் சீர்கேடுகள் தமிழர் சமுதாயத்தைப் பெரிதும் தாக்கி வருகின்றன.

இந் நிலையில்கூடச் சமுதாயத்தில் பெரும்பாலோர் ‘நாமிருவர் நமக்கிருவர்’ எனும் போக்கைக் கடைப்பிடிப்பது தற்கொலைக்குச் சமமாகும். பொருளாதாரத்தில் மேம்பட எண்ணுவதுபோல், கல்வியில் உயர நினைப்பதுபோல் மக்கள் பெருக்கத்திலும் தமிழர் நாட்டம் செலுத்த வேண்டும். இதனை அரசினரும், சமுதாயத் தலைவர்களும் அடிக்கடி நினைவூட்டி வருகின்றனர்.

## சமுதாயத்தை உயர்த்த ஏற்படுத்திய பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்கள்

இங்ஙனம் எண்ணற்ற இடர்கள் மலேசியத் தமிழரை ஒடுக்கின. வளமான ஒரு நாட்டில் இயற்கைக்கு மாறாய்த் தோன்றிய ஒரு பாலைபோல அவர்கள் வாழ்வு ஆனது. அவர்களுக்குப் பொருளாதாரத்தில் வழிகாட்ட எந்த ஓர் அமைப்பும் முன்வரவில்லை. அந் நிலையில் வாழ்விழந்த மக்களுக்கு ஒரு மாற்றுவழியை அமைத்திடத் தீட்டப்பட்ட முதல் பொருளாதாரத் திட்டம், கூட்டுறவுத் தந்தை துன் சம்பந்தன் கண்ட (1960) தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கமே (N.L.F.C.S. Ltd.).

இந் நாட்டுத் தமிழ்த் தொழிலாளருள் 80 விழுக்காட்டினருக்கு மேற்பட்டவர்களைத் தன் கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருந்த தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமும் ஒரு பொருளாதாரத் திட்டத்தை மேற்கொண்டது. தி கிரேட் அலோனியர்னர்ஸ் (The Great Alonearners) எனும் ஒரு வாணிக நிறுவனத்தைப் பதிவு செய்தது (1967). அதன் மூலம் தோட்டங்களை வாங்கித் தொழிலாளர்க்குப் புது வாழ்வினை அது தரும் என்று தோட்டத் தொழிலாளர் பெரிதும் நம்பினர். ஆனால் அது பெரும் ஏமாற்றத்தையே தந்தது. அது வாங்கிய ஒரே தோட்டமும் முன்மாதிரியாய்த் திகழுமாறு நிருவகிக்கப்படவில்லை. அதனால் பேரிழப்பு ஏற்பட்டது. பின்னர் அதுவும் விற்கப்பட்டது.

பின்னாளில் தோட்டத் தொழிலாளர்க்கு மாதச் சம்பளமும் ஓய்வூதியமும் தரவேண்டுமென்று வாதாடி முதலாளியர் சங்கத்தின்மேல் (M.A.P.A.) அது வழக்குத் தொடுத்தது. தன் சொந்தத் தோட்டத் தொழிலாளர்க்கே மாதச் சம்பளம் தாராத தொழிற்சங்கத்தின் வழக்குத் தோற்றது.

இந்தியர் அரசியல் கட்சியான ம.இ.கா. மூலம் மேலும் சில பொருளாதார அமைப்புகள் தோன்றின. 1973இல் ம.இ.கா.வின் தலைமைப் பொறுப்பேற்ற டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் நேசா (NESA) பலநோக்குக் கூட்டுறவு சங்கத்தை அமைத்தார்; சிறுதொழில் முதலீட்டுக் கழகத்தைத் (Unit Trust) தோற்றுவித்தார். இக் காலத்தில் சா.ஆ. அன்பானந்தன் தலைமையில் இயங்கிய தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவை[79] யும் மாஜு ஜெயா கூட்டுறவுக் கழகத்தை அமைத்தது; மேலும் சம்பூர்ணா முதலீட்டுக் கழகம் (Sampoorna Holdings), தொழிலாளர் நாணயக் கூட்டுறவு சங்கம் முதலாய தேசிய, வட்டாரப் பொருளாதார அமைப்புகளும் தோன்றின.

1979இல் ம.இ.கா. தலைவரான டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு முதலில் தொழிலாளர் மேம்பாட்டுக் கூட்டுறவுக் கழகம் (K.P.J.) கண்டார்; (1977) பின்னர் 10 கோடிப் பெருந்திட்டமான மைக்கா முதலீட்டு நிறுவனத்தை அமைத்தார். இது (1983) தோன்றியபோது பெரும் நம்பிக்கை அலைகளைச் சமுதாயத்தில் ஏற்படுத்தியது. இத்துணைப் பெருந்தொகையை முதலீடாய்க் கொண்ட ஒரு நிறுவனம் மலேசிய இந்தியர்க்கு இதற்குமுன் அமைந்ததில்லை.

இத்துணைப் பொருளாதார அமைப்புகள் ஏற்பட்டும் சமுதாயம் பொருளாதாரவளம் பெறும் வாய்ப்புக் கைகூடவில்லை. அமைப்புகளின் குறியிலக்கைச் சமுதாயம் எட்ட இயலவில்லை. மலேசிய இந்தியர் பொருளாதார வளம் ஒரு விழுக்காடு என்ற நிலையேதான் தொடர்ந்தது. அண்மைய புள்ளிவிவரங்கள் அது வளர்ச்சியை நோக்கிச் செல்லத் தொடங்கியுள்ளதைக் காட்டுவது சற்று ஆறுதலைத் தருகிறது.

79 விரிவிற்கு 420ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

## 2020 தொலைநோக்குத் திட்டம்

நாட்டு வளர்ச்சியில் பெருநாட்டமும் தொலைநோக்குச் சிந்தனையும் கொண்ட இப்போதைய தலைமை அமைச்சர் டத்தோ ஸ்ரீ டாக்டர் மகாதீர் முகம்மது[80] கொணர்ந்த தொலைநோக்குத் திட்டம் (1991) நாட்டை மிக விரைவான முன்னேற்றப் பாதையில் கொண்டு செல்கிறது; மிகவும் புரட்சிகரமான அவரது தலைமை, நாட்டின் தோற்றத்தையே புதுப்பித்துப் புதிய வடிவம் தந்துவருகிறது.

அப் பெருமகனார் திட்ட நோக்கம் 2020ஆம் ஆண்டிற்குள் நாடு எல்லா வகையிலும் முழு வளர்ச்சி அடைந்துவிட வேண்டும் என்பதே. அதற்குரிய செயல்கள் ஏவுகணை வேகத்தில் நடந்துவருகின்றன.

இங்குக் கடந்த கால நிலைமைகளோடு இக் காலத்திய நிலைமை, எதிர்கால நிலைமைகளையும் ஆராய்தல் நலம்.

தமிழர்தம் கடந்தகால நிலைமைகளோடு இக்கால நிலைமைகளை ஒப்பிடும்போது சில துறைகளில் சற்று மேம்பட்ட நிலை தென்படுகிறது. இப்போது பத்துமுதல் 20 விழுக்காட்டினருக்குமேல் (தமிழர்) தோட்டங்களிலிருந்து வெளியேறிவிட்டனர். அவருள் பெரும்பாலோர் தொழில், பொருளாதார நிலைகள் இரங்கத்தக்கவையே எனினும், அவருள் ஒரு பகுதியினர் தொழில்துறைகளில் நுழைந்து வருகின்றனர்.

மேலும் இப்போது தொழிலாளர் பிள்ளைகளில் சிலர் மருத்துவராயும், பொறியாளராயும், வழக்குரைஞராயும், கணக்கராயும், கணினித் துறை வல்லுநராயும், ஆசிரியராயும், தொழில்நுட்பராயும் உயர்வு பெற்றுள்ளனர்; சிறு சிறு தொழில்களிலும் நாட்டம் கொண்டவராய் உள்ளனர்; பொருளாதார வளமும் ஓரளவு பெருகத் தொடங்கி இருக்கிறது; சொந்த வீடு உள்ளவர் தொகையும் சன்னஞ் சன்னமாய் உயர்வுகண்டு வருகிறது.

மலேசிய இந்திய - தமிழ்ச் சமுதாயத்தைப் பொறுத்தவரை ஒரு காலத்தில் வசதி படைத்த சிலர் மேட்டுக்குடி என்ற நிலையிலும், மிகப் பெரும்பாலார் பொருளாதாரத்தில் தாழ்ந்த நிலையிலும் இருந்தனர்; இதுகுறித்து மலாயாப் பல்கலைக்கழக விரிவுரையாளர் முனைவர் ரெ. இராசு கூறும்போது "இந்தியரை ஓர் இருதுருவச் சமுதாயத்தினர் எனலாம்; ஒரு துருவத்தில் மேல்மட்ட நிலை; இன்னொரு துருவத்தில் கீழ்மட்ட நிலை. தென்னிந்திய வம்சாவளியினருள் மிகப் பெரும்பாலோர் இவற்றில் இரண்டாம் நிலையைச் சார்ந்தவராவர். உண்மையில் இவர்களிடையே ஓர் இடைநிலை இனத்தவர் உள்ளனரா என்பது கேள்விக்குறியே'[81] என்று கூறியுள்ளார். இப்பொழுது நடுத்தரத்தினர் தொகை சற்று உயர்ந்துவருகிறது.

---

80 விரிவிற்கு 350ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

81 இராசு, ரெ., மலேசியத் தமிழரிடையே அரசியல் எழுச்சியும் சமூகப் பொருளாதார மேம்பாடுகளும் (ஆய்வுக் கட்டுரை), ப. 7

மற்றவரோடு ஒப்பிடும்போது இது மகிழத்தக்க உயர்வாய் இல்லை. மற்ற இனத்தினர் ஓடும் நிலையில் இருந்தபோது தமிழர் நகரும் நிலையில்கூட இல்லை. இப்போது மற்றவர் எதிர்காலத்தை நோக்கிப் பறந்துகொண்டிருக்கும்போது தமிழர் நடக்கத் தொடங்கியுள்ளனர் எனலாம்.

பொருள்வளம் பெருக்கும் திறனில் தமிழர்பங்கு மிகவும் குறைவாய் உள்ளது. ஏழாவது மலேசிய (ஐந்தாண்டு)த் திட்டத்தில் (1995 - 2000) இது நன்கு விளக்கப்பட்டுள்ளது. "பிற இனங்களுடன் ஒப்பிடுகையில் உடல் உழைப்பு, உற்பத்தித் துறைகளில் இந்தியர் எண்ணிக்கை மிகுதியாய் உள்ளது. இக் குறை நீக்கப்படாவிட்டால் எதிர்காலத்தில் இந்தியர் எண்ணிக்கை நிபுணத்துவ தொழில்நுட்பத் துறைகளில் படுவீழ்ச்சி காணும்; உடல் உழைப்பு, உற்பத்தித் துறைகளில் பெருகிக் கொண்டே இருக்கும்.

1990இல் 65 விழுக்காட்டு இந்தியர் குறைந்த வருவாயில் வேளாண்மைத்துறையில் இருந்தனர். இப்போது உற்பத்தித்துறையில் அதே குறைந்த வருவாயில் உள்ளனர். 90களில் 51.1 விழுக்காட்டு இந்திய இளைஞர் உடல் உழைப்பு, உற்பத்தித் துறைகளில் இருந்தனர். இவ் வெண்ணிக்கை 95இல் 60.6 விழுக்காடாய் உயர்ந்தது. நிபுணத்துவத் துறையில் உள்ளோர் 5.6 விழுக்காட்டினரே".

இதுகுறித்து 16.2.1992இல் '2020 தொலைநோக்குத் திட்டமும் இந்திய சமுதாயமும்' என்னும் தலைப்பில் சா ஆலத்தில் (Shah Alam) ம.இ.கா. கூட்டிய கருத்தரங்கில் கொள்கை உரையாற்றிய டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு பின்வருமாறு குறிப்பிட்டார் : "மருத்துவம், சட்டத்தொழில்களைத் தவிர்த்து மற்றத் துறைகளில் மலேசிய இந்தியர் எண்ணிக்கை போதுமானதாய் இல்லை. அதே வேளை மருத்துவ, சட்டத்துறைகளில் நம் எண்ணிக்கையைக் கூடுதலாய் நிலைநாட்டுவதில் நாம் மிகுதியாய்க் கவனம்செலுத்த வேண்டும். நம் பிரதிநிதித்துவம் குறைவாக உள்ள கட்டடக்கலை, கணக்காய்வு, வேளாண்மை, பொறியியல், வாணிக நிருவாகம், விமானமோட்டும் கலை, பெட்ரோல் இரசாயனத் தொழில், தகவல் தொழில்நுட்பம், தரகர்தொழில், இயந்திர மனித ஆற்றல் துறைகளில் (Robotics) எல்லாம் இந்திய மாணவர் பயில்வதற்கு ஊக்கமளிக்கப்படவேண்டும்; திடமான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்."[82] இவ் வுரை சமுதாயத்தின் பொருளாதார நிலையை ஓரளவு விளக்குகிறது. மேலும் மலேசிய இந்தியர் வங்கி, காப்புறுதி, வணிகத் துறைகளில் மிகவும் வாய்ப்பிழந்து இருப்பதனையும்[83] அவர் எடுத்துக் காட்டியுள்ளார்.

82 இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கித் தலைமைத்துவம், ப. 2
83 ம.இ.கா. தேசியத் தலைவர் கொள்கையுரை, பக். 17, 18

இதனை ஏழாவது மலேசியத் திட்ட அறிக்கையும் தெளிவுபடுத்துகிறது. அது காட்டும் புள்ளிவிவரப்படி (பட்டியல் எண்கள் 10,11 காண்க) இப்போதைய இந்தியர்நிலை சரிவையே காட்டுகிறது, சில துறைகளில் மேம்பாடு காணப்பட்டாலும் பிற இனத்தவர் முன்னேற்றத்தோடு ஒப்பிடத்தக்கதாய் இல்லை.

“வாழ்க்கைநிலை ஓரளவு வளம் பெற்றுள்ளது; சுற்றுச் சூழல் ஓரளவு மேம்பட்டிருக்கிறது. எனினும் சமூகநிலை சீன, மலாய்க்காரச் சமூகங்களோடு ஒப்பிடும் போது, கடந்த பத்தாண்டுகளில் பெரிய மேம்பாடடையவில்லை.

பொதுவாக மலாய்க்காரர் நிலை தேசியப் பொருளாதாரக் கொள்கையாலும் சீனர் நிலை வளமான பொருளாதாரத்தாலும் சமூக ஊக்குவிப்பாலும் மேம்பட்டுள்ளன. ஆனால் இந்தியர் நிலை சிறப்பான சலுகை ஏதும் இன்மையாலும், சொந்தக் கருத்தூக்க மின்மையாலும் எதிர்பார்ப்பு மனப்பான்மையினாலும் பின்தங்கியே உள்ளது. நினைவு தெரிந்த காலத்திலிருந்தே இந்தியர் நிலை மிகவும் தாழ்ந்தே இருந்துவந்துள்ளது.

பொதுவாகவே அவர்கள் முன்னோர் தோட்டப்புறத்திலும், ரயில்வேயிலும் பெற்ற குறைந்த வருவாயே இன்றைய ஏழைமை நிலைக்குக் காரணமாகும். ஆங்கிலேயர் தோட்டங்களில் வேலை செய்தோரைப் புறக்கணித்து, கொடுமைக் குள்ளாக்கி, சுரண்டி வந்த காரணங்களால் இந்தியர் பொருளாதாரம் இங்ஙனம் சீர்கெட்டது.”

## இன்றும் தொடரும் இடர்கள்

மலேசியத் தமிழர் உயர்வுகாண முடியாமைக்குக் கடந்துபோன வரலாற்று நிகழ்வுகள் ஏற்படுத்திய தடைகளே பெருங்காரணங்கள் என்பன சொல்லாமலே விளங்கும். இவற்றொடு வேறு சில காரணங்களும் முன்னேற்றத்தைக் தடுத்தன என்பதை மறைக்க இயலாது. சிக்கனத்தைக் கடைப்பிடிக்காமை, சேமிப்பில் கருத்தின்மை, சொத்துடைமை நாடி உழைக்கும் மனமின்மை முதலாயவையும் தடைகளாய்ப் பின்னடைவை ஏற்படுத்தி வந்தன. இந் நிலையிலிருந்து சமுதாயத்தைக் கைதூக்கிவிட ஒரு சமுதாயப் புரட்சித் திட்டம் தேவை; அரசின் உதவியும் அதற்குத் தேவை.

ஒரு தோட்டம் மேம்பாட்டிற்காகக் கைமாறும்போது, குறைந்தது அத் தோட்டத்தில் வாழ்வோர்க்கு அவர்கள் குடியிருக்கும் வீடுகளையாவது சொந்தமாக்க வேண்டும். அல்லது மலிவுவிலை வீடொன்றை வாங்குதற்குரிய தொகையையாவது அவர்தம் மற்றச் சட்டபூர்வ ஈட்டுத் தொகையுடன் சேர்த்து வழங்க வேண்டும். தோட்டத்தில் இயங்கும் பள்ளிக்கூடத்தின் நிலைப்பாட்டிற்கும் உறுதி வழங்க வேண்டும். இப்படிச் செய்வதால் தோட்ட முதலாளிகள் ஒன்றும் ஏழையாகிவிட மாட்டார்கள். முதலாளிகள் பெருஞ்செல்வங் குவிக்கத் தங்களை ஒப்புக்கொடுத்த சமுதாயத்திற்கு வாழ்வளித்த ஒரு நல்ல பெயர் அவர்களைச் சாரும்.

## ரப்பர்த் தோட்டங்களில் 1973 - 1982 இல் கொடுக்கப்பட்ட சம்பளங்கள்

(சராசரி வருமானங்கள்)

| ஆண்டு | கண்காணிகள் (கெபாலா) (ஆண்கள்) | பால் வெட்டு (ஆண், பெண்) | புல் வெட்டு (ஆண், பெண்) | களைகொல்லி தெளிப்பவர் (ஆண், பெண்) | ஆலைத் தொழிலாளர் (ஆண், பெண்) | தொழிலாளர் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|
| 1973 | 165 | 149 | 77 | 411 | 113 | 191760 |
| 1974 | 201 | 145 | 100 | 121 | 136 | 193160 |
| 1975 | 191 | 139 | 92 | 121 | 132 | 187250 |
| 1976 | 230 | 212 | 126 | 160 | 178 | 178930 |
| 1977 | 201 | 197 | 120 | 164 | 161 | 174900 |
| 1978 | 243 | 220 | 127 | 154 | 179 | 177270 |
| 1979 | 261 | 254 | 146 | 145 | 207 | 170670 |
| 1980 | 300 | 259 | 169 | 224 | 225 | 167210 |
| 1981 | 331 | 266 | 171 | 224 | 234 | 164620 |
| 1982 | 340 | 267 | 188 | 253 | 302 | 148294 |

சான்று : மலேசியத் தொழிலாளர் அமைச்சு

பட்டியல் - 8

## 1985இல், மலேசிய இந்தியர்களின் தொழில்துறை அமைப்பு

| வகை | தொழில் | % |
|---|---|---|
| 1. | தொழில்முறையும் நிருவாகமும் | 10 |
| 2. | எழுத்தரும் விற்பனையாளரும் | 15 |
| 3. | தொழில்துறையும் உடலுழைப்பும் | 75 |

சான்று : இன்சானின் (INSAN - Institute for Social Analysis) 'உறிஞ்சப்பட்ட ஆரஞ்சுப் பழங்கள்' (Sucked Oranges) என்னும் வெளியீடு, 1989, ப.4.

பட்டியல் - 9

## பதிவு பெற்ற இந்தியத் தொழில் வல்லுநர்களின் புள்ளி விவரம்

| வகை | தொழில் 1970 | 1988 | 1990 | 1995 | |
|---|---|---|---|---|---|
| | | % | % | % | % |
| 1. | கட்டடக்கலை | 1.4 | 1.5 | 1.2 | 1.5 |
| 2. | கணக்காய்வாளர்கள் | 7.9 | 6.3 | 6.2 | 7.9 |
| 3. | பொறியாளர்கள் | 13.5 | 5.3 | 5.3 | 5.2 |
| 4. | பல் மருத்துவர்கள் | 5.1 | 28.0 | 23.7 | 21.9 |
| 5. | மருத்துவர்கள் | 40.2 | 35.0 | 34.4 | 32.0 |
| 6. | விலங்கு மருத்துவர்கள் | 15.0 | 35.0 | 37.0 | 33.5 |
| 7. | வழக்கறிஞர்கள் | 35.2 | 29.0 | 26.5 | 26.6 |
| 8. | அளவையாளர்கள் | 7.5 | 5.2 | 3.7 | 3.2 |
| | மொத்தம் | 125.8 | 145.3 | 138.0 | 131.8 |

சான்று : 7ஆம் மலேசிய (ஐந்தாண்டு)த் திட்டம் (1995 - 2000)

பட்டியல் - 10

## மனிதவளத்துறையில் இந்தியர்

| | 1985 | % | 1990 | % | 1995 | % | 2000 | % |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. நிபுணத்துவம் & தொழில் நுட்பம் | 36.7 | 7.21% | 44.9 | 7.61% | 59.5 | 8.64% | 79 | 10.31% |
| 2. பதிவு பெற்றவல்லுநர் | 3.9 | 0.77% | 5.363 | 0.91% | 7.542 | 1.10% | | 0.00% |
| 3. ஆசிரியர், தாதியர் | 10.8 | 2.12% | 14.2 | 2.41% | 18.5 | 2.69% | 24.1 | 3.15% |
| 4. நிருவாகம் & மேலாண்மை | 6.6 | 1.30% | 6.5 | 1.10% | 10.9 | 1.58% | 17.1 | 2.23% |
| 5. எழுத்தர் | 41.6 | 8.17% | 56 | 9.49% | 61.6 | 8.95% | 62.6 | 8.17% |
| 6. விற்பனை & தொழிலாளி | 42.7 | 8.38% | 52.6 | 8.91% | 58.1 | 8.44% | 62.5 | 8.16% |
| 7. உடல் உழைப்புத் தொழிலாளர் | 64.6 | 12.88% | 73.4 | 12.44% | 85.4 | 12.40% | 92.4 | 12.06% |
| 8. வேளாண்மைத் தொழிலாளர் | 140.9 | 27.67% | 138.3 | 23.43% | 124.6 | 18.09% | 114.5 | 14.95% |
| 9. உற்பத்தித் தொழிலாளர் | 161.5 | 31.71% | 198.9 | 33.70% | 262.5 | 38.12% | 313.9 | 40.97% |
| 10. மொத்தம் | 509.3 | 100.00% | 590.163 | 100.00% | 688.6 | 100.00% | 766.1 | 100.00% |

சான்று : 7ஆம் மலேசியத் திட்டம்

பட்டியல் - 11

இதனை அறுபதுகளிலேயே வலியுறுத்திப் போராடியிருந்தால், தோட்டப்புறச் சமுதாயம் இந்த அளவு பின்னடைந்திராது. இப்போது இஃது உணரப்படுகிறது. இந்த நேரத்திலாவது தோட்டப்புற மக்களுக்குப் புதுவாழ்வு மலர வழிவகை காணவேண்டும். சமுதாய - பொருளாதார இயக்கங்கள் பழைய போக்கிலேயே இயங்கிக் கொண்டிராமல் புதிய வழிவகைகளை ஆராய்ந்து வழிகாட்ட வேண்டும். தோட்டப்புற மக்களின் எதிர்காலம்பற்றிச் சிந்திக்கவும் உரிமைக்குக் குரல்கொடுக்கவும் தே. தோ. தொ. சங்கத்திற்கு மட்டுமே உரிமையுண்டு என்று பொறுப்பற்று ஒதுங்கும் மனப்போக்கு ஒழிய வேண்டும். நகர்ப்புறத்தில் வளமுடன் வாழும் உடன்பிறப்புகள், தோட்டப்புற மக்களின் எதிர்காலம்பற்றி எண்ணமிட வேண்டும்; ஆக்ககரமான செயற்பாடுகளுக்கு வழிகாண வேண்டும்; சமுதாயத்தின் அடித்தளம் அங்குதான் உள்ளது என்பதை மறந்துவிடக் கூடாது.

## ம.இ.கா. வரைந்திருக்கும் திட்டங்கள்

நெருக்கடிகள் சூழ்ந்த காலங்களில் சமுதாயப் பண்புகள் கரையாமல் காக்கச் சமுதாயத் தலைவர் பலரும், அரசியல் தலைவர் பலரும் திட்டங்கள் பல வகுத்துச் செயல்பட்டிருக்கின்றனர். இப்போதைய தலைவர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவும் திட்டங்கள் பல வகுத்துச் செயல்பட்டு வருகிறார்; கருத்தரங்குகள் பல நடத்தியும், மாநாடுகள் பல கூட்டியும் திட்டங்கள் வகுத்துள்ளார். அவற்றின் சாரம் வருமாறு :

1. மக்கள்தொகை விகிதத்திற்கேற்பத் தேசிய வளத்தின் பங்கினைப் பெறுதல்,
2. கிராம, தோட்டப்புற மலேசிய இந்தியரின் சமூக - பொருளாதார நிலையை உயர்த்தல்,
3. தொழில்திற, தொழில்நுட்பத் துறைகளிலும் அரசின் துறைகளிலும் நியாய முறையான உரிமைகளைப் பெறல்,
4. சாதனைச் சமுதாயம் உருவாவதற்கு உகந்த அமைப்புகளை - வாய்ப்புகளை ஏற்படுத்தல்,
5. ஆன்மிக - கலாசாரப் பண்புகளை மேம்படுத்த ஊக்கமளித்தல்.[84]

இந்த நோக்கங்களை அடைய அவர் கீழ்க்காணும் செயல்திட்டங்களை வகுத்துள்ளார்:

---

84 '2020 தோற்றமும் (தொலைநோக்குத் திட்டமும்) மலேசிய இந்தியர்களும்' என்னும் தலைப்பில் 16.2.1992ஆம் நாள் சா ஆலத்தில் (Shah Alam) நடந்த கருத்தரங்கில் படைக்கப்பட்ட கட்டுரை, பக்,15-20

## வியூகங்கள் : அறைகூவல்களும் தீர்வுகளும்

**கல்வி :** மலேசிய இந்தியர் கல்விநிலை, எல்லாத் துறைகளிலும் துரித மேம்பாடு காண வேண்டும்; இதற்குத் தேவைப்படும் பொருளாதாரத்தைத் தேடி, கல்வி வாய்ப்புகளை ஏற்படுத்தி வெற்றியடைய முனைய வேண்டும். கல்வியில் முதலீடு செய்தால் அறிவாற்றலும், வளர்ச்சியும், வளமான வாழ்வும் நம் வயமாகும். அதனால் கல்வியே முதன்மை என்னும் கொள்கை இந்தியர் எதிர்காலத்துக்கு முக்கியமானது.

மலாய், ஆங்கில மொழிகளின் பொருளாதார, எதிர்கால முக்கியத்தை உணர்ந்து இந்திய மாணவர் இவ் விரு பாடங்களிலும் சிறப்புத் தேர்ச்சி பெறுதற்கு ஏற்பாடுகள் செய்து கூடுதலான பயிற்சி வகுப்புகள் நடத்த வேண்டும்.

மாஜு கல்வி மேம்பாட்டுக் கழகத்தை (M.I.E.D.) வலுப்படுத்த வேண்டும். இதற்கு உதவும் வகையில் ம.இ.கா. அரசியல் அமைப்பு விதியைத் திருத்த வேண்டும். ஒவ்வோர் உறுப்பினரிடமிருந்தும் ஆண்டொன்றுக்கு 5 ரிங்கிட்டும் (மலேசிய வெள்ளி), செயற்குழு உறுப்பினரிடமிருந்து 10 ரிங்கிட்டும் வசூலிக்க வேண்டும். உள்நாட்டு, வெளிநாட்டு உயர்கல்வி நிலையங்களில் பயிலும் மாணவர்க்கு உதவ, இந் நிதியைப் பயன்படுத்த வேண்டும்.

தமிழ்மொழிக் கற்றல், கற்பித்தல் முறைகள், ஏற்புடைய சுற்றுச்சூழல் வசதிகளைத் தொடர்ந்து மேம்படுத்தற்குத் தமிழ்ப்பள்ளி வளர்ச்சி நிதி ஒன்றனை ஏற்படுத்த வேண்டும்; பணிப்படை ஒன்றனை உருவாக்கிச் செயல்பட வேண்டும்.

மலேசிய இந்தியரின் எதிர்காலக் கல்விச் செலவினங்களைக் கருத்திற்கொண்டு கல்விச் சேமிப்பு நிதி ஒன்றனைத் தொடங்கிப் பெற்றோரை மாதத் தவணைமுறையில் சேமிக்க ஊக்குவிக்க வேண்டும்.

**பொருளாதாரம் :** சிறுதொழில் வாணிகத்தில் ஈடுபட்டுள்ள இந்தியரைக் குறிப்பாய்ப் பேரங்காடியில் பங்குகொள்ள ஊக்குவிப்பதொடு அவற்றில் கடைகளையும், விற்பனைப் பகுதிகளையும் விலைக்கு வாங்கி அத் துறைகளில் இந்தியர் மேம்பாடடையத் தூண்ட வேண்டும். சுற்றுப்பயண, உணவு வழங்குந் தொழில்களில் ஈடுபடுதற்கு உதவ மலேசிய இந்தியர் மேம்பாட்டு உதவி நிதி (மிண்டா) ஒன்றனை ஏற்படுத்த வேண்டும்.

மலேசிய இந்தியரின் அரசியல் உரிமை நிலையை வலுப்படுத்த வேண்டும். அரசு மூலம் கிடைக்கும் பயிற்சித் திட்டங்களில் இந்தியரை ஈடுபடுத்த வேண்டும்; பயன்பெறவும் செய்ய வேண்டும்; எதிர்காலத்தை எதிர்நோக்கும் வல்லமையை அவர்களுக்கு ஏற்படுத்த வேண்டும்.

**சமூகம் :** தோட்டங்களில் உதவி மையங்கள் அமைக்கத் தோட்ட நிருவாகத் தினரோடு பேச்சு நடத்த வேண்டும். இம் மையங்கள் வாயிலாய்க் கல்வி-தகவல்,

வழிகாட்டுதல், ஆலோசனை, நூலக வசதி, கைவினைப் பயிற்சி முதலாயவற்றை வழங்க வேண்டும்.

இருபத்தோராம் நூற்றாண்டின் அறைகூவலை எதிர்நோக்க நாடு பிரதமரின் 2020 தொலைநோக்குத் திட்டத்தின்வழித் தன்னைத் தயார்ப்படுத்திக்கொண்டு வருகிறது. இதனால் ஜனநாயகம், பொருளாதாரம், தொழில்துறை வளர்ச்சி, திறனாற்றல் ஆகியவற்றைக் கொண்ட நாடாக நம் நாடு விளங்கும். இந்தத் தொலைநோக்குத் திட்டத்தில் இந்தியர் முக்கிய அங்கமாக இருத்தல் வேண்டும் என்பதே நம் நோக்கம்."[85]

**எதிர்காலம் :** கடந்துபோன காலங்களைவிட எதிர்காலம் மிக மிக அறைகூவல் நிறைந்ததாகும். கடந்த காலங்களைக் கடுங்காற்றும், கடுமழையும் நிறைந்த காலமென்றால், எதிர்காலத்தை நெருப்புமழை பொழியும் காலமெனலாம். அதனைத் தாங்க வலிமைமிக்க தற்காப்பினை உறுதி செய்யாவிட்டால் நிலைமை பேரதிர்ச்சி தருவதாய் அமையும்.

அரசியல் சாசனப்படி அரசு, பூமி புத்திரர் (தாய்மண்ணுக்குரியோர்) என்னும் முறையில் மலாய்க்காரர்க்குத் தனிச்சலுகை தந்து ஊக்குதலால் அவர்கள் பொருளாதாரத்தில் 30 விழுக்காடு உயர்ந்துள்ளனர்; மேலும் முறையான உயர்ந்த திட்டங்களை வகுத்துச் செயல்பட்டு வருகின்றனர். செல்வவளம் மிக்க சீனரோ பொருளாதார வலிமை பெற்றுள்ளனர். யானைகளைப் போன்ற இந்த இருபெரும் சமுகங்களுக்கிடையில் தேங்காய்களாக இந்திய - தமிழர் சமுதாயத்தைத் சிதறவிடக் கூடாது.

பொருளாதாரச் சமநிலையை வலியுறுத்தும் அரசு - விடுதலையின் பயனை எல்லாரும் நுகரவேண்டு மென்னும் விழைவுடைய அரசு - இந்தியர் - தமிழர் இந் நாட்டு வளத்துக்கு வழங்கிய உழைப்பினை நன்குணர்ந்த அரசு, இந்திய சமுதாயத்தினரும் வாழ்வில் வளங்காணத்தக்க திட்டம் ஒன்றனை வகுத்துச் செயல்பட வேண்டும். அது பொதுக்கடமையுமாகும். இதனை நாடாளுமன்றத்தில் மலாய்க்கார (பூமிபுத்திரா) நாடாளுமன்ற உறுப்பினர்களே எடுத்துக் கூறி இருக்கின்றனர்.

முறையாய் அணுகி அரசின் ஆதரவைப் பெற்று இந்தியர் - தமிழர் அரசியல் கட்சியான மலேசிய இந்தியர் காங்கிரசும், தொண்டூழிய நிறுவனங்களும், பொருளாதார அமைப்புகளும் முயன்று கருத்தொடு பாடுபடுமானால், சமுதாயத்தைத் திசைதிருப்பி உயர்வெய்தச் செய்ய முடியும். அப்படிச் செயல்பட்டால் 2020இல் மற்றச் சமுகங்களைப் போலவே இந்திய - தமிழ்ச் சமுதாயமும் தலைநிமிர்ந்து நிற்க வாய்ப்புகள் அமையுமென்பது உறுதி!

---

85 மலேசிய இந்தியர் காங்கிரசு கெந்திங் மலையில் 17.8.1993ஆம் நாள், 'இருபத்தோராம் நூற்றாண்டை நோக்கித் தலைமைத்துவம்' என்னும் கருப்பொருளில் நடந்த கருத்தரங்கில் படைத்த கட்டுரை, பக்.11,12.

# ரு பழக்கவழக்கம், சமயம், பண்பாடு, கலை

பழக்கவழக்கங்கள் சமயம் பண்பாடு கலைகள் நீண்டதொரு தலைமுறையின் நன்கொடைகளாகும். அவை காலந்தொறும் மாறும் தன்மையன எனினும் அவற்றின் அடித்தளம் பெரும்பாலும் மாறுவதில்லை. அவை முன்னோர் விதைத்த விதைகளாகும்; அவற்றாலான ஆணிவேர்களாகும்.

மலேசியத் தமிழர்தம் பழக்கவழக்கம், சமயம், பண்பாடு, கலை முதலாயவற்றை ஆராயத் தொடங்கும்போது அவற்றின் மூலத்தையும் சிறிது ஆராய வேண்டும்.

சுமார் 200 ஆண்டுகளுக்கு முன் தென்னகத்திலிருந்து இங்குக் குடியேறியவர் கடைப்பிடித்த பழக்கவழக்க, பண்பாட்டு முறைகளே அவர்கள் வாழ்க்கையில் தொடர்ந்தன. புலம்பெயர்ந்து வருவோர் தொகை நாளுக்கு நாள் கூடவே, அவர்களெல்லாரும் கூட்டங் கூட்டமாகத் தோட்டப்புறங்களில் வாழலாயினர்; மற்றவரோடு பழகும் - கலக்கும் வழியின்றித் தனித்தே வாழ்ந்தனர்; தாய்நாட்டின் பழக்க வழக்கங்களை - பண்பாட்டு முறைகளைத் தொடர்ந்து பின்பற்றினர்.

உணவு சமைத்தல், உண்ணல், உடுத்தல், மொழி, மத, இன, பழக்கவழக்கம், சாதி, திருமணம், பிறப்பு இறப்புச் சடங்குகள், முடியிறக்குதல், காது குத்துதல் முதலாயவை எல்லாம் அவ்வாறே தொடர்ந்தன. இறப்புச் செய்தி சொல்ல, இழவு சடங்குகள் செய்ய அவற்றிற்குரியோர் இருந்தனர்; முடிதிருத்துநரும் துணி வெளுப்பாரும் இருந்தனர்; பறை அறைவோர் இருந்தனர்; சிலர் செருப்புத் தைத்தனர்; சிலர் மண்பானை வனைந்தனர். சுருங்கக் கூறின் 'தமிழக ஊர் ஒன்றனை உள்ளவாறே பெயர்த்துக் கொண்டுவந்து வைத்தாற் போன்றே அன்றைய தோட்டப்புறங்கள் விளங்கின' எனலாம்.

தொடக்க நாள்களில் சாதிமுறை இயல்பானதாகவே இருந்தது; சாதி சமயப் பூசல்கள் இருந்தனவாய்த் தெரியவில்லை. இங்கு வெள்ளையர், தமிழகக் கிராம அமைப்பினைப் போலவே, சாதிவாரியாய் வீடுகளை ஒதுக்கித் தந்திருந்தனர். பிரித்தாள்வதில் வல்லவரான அவர்கள் சமுதாயத்தின் பலவீனங்களைத் தங்களுக்குச் சாதகமாய்ப் பயன்படுத்திக்கொண்டனர். அதனால் தோட்டப்புறங்களில் வாழ்ந்த தமிழர், அந் நாளில் ஒன்றிணைந்து ஒருமித்த குரல் எழுப்பும் வாய்ப்பின்றி வாழ்ந்தனர்.

## காலம் கண்ட மாறுதல்

'பிறப்பால் எல்லாரும் ஒத்த நிலையினரே' என்றார் திருவள்ளுவர் (குறள், 972); "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்பது புறநானூறு; நீண்ட நெடுங்காலமாய்ச் சான்றோர் இவற்றை வலியுறுத்தி வந்தனர். சமுதாயமோ சிறிதும் காதில் வாங்கிக்கொள்ளவில்லை; தன் போக்கிலேயே போய்க்கொண்டிருக்கிறது. பகுத்தறிவிற்கொவ்வா இழிதகைமைகளைக் களைந்தே ஆக வேண்டுமென்ற தந்தை

பெரியார் ஈ.வே.ரா. முழக்கம் தமிழக மூலை முடுக்கெல்லாம் முழங்கிற்று. அது மலேசியாவிலும் எதிரொலித்தது. பெரியாரும் எதிர்ப்பட்ட பல்வேறு எதிர்ப்புகளை முறியடித்து முதன்முதல் 1929 திசம்பரில் இங்கு வந்தார். அவர் முழக்கம் நகர்ப்புறங்களில் மட்டுமன்றித் தோட்டப்புறங்களிலும் எதிரொலித்தது.

பெரியார் இங்கு வந்தபோது சீர்திருத்தக் கொள்கைகளைக் கொண்ட 'அகில மலாயாத் தமிழர் சங்க'த்தைத் தொடக்கிவைத்தார். தன்மதிப்பியக்கச் சிந்தனைகளைப் பரப்பத் தன்மதிப்பு (சுயமரியாதை) இயக்கம் கால்கொள்ளலாயிற்று. 1946இல் 'அகில மலாயாத் திராவிடர் கழகம்' பதிவாயிற்று. 1954இல் பெரியார் மீண்டும் மலாயா வந்தார். இம் முறையும் பெரியார் வருவதைத் தடுக்கச் சிலர் முயன்றனர். நல்லுணர்வு கொண்டோர் முயற்சியால் தடை அகற்றப்பட்டது. சமுதாயச் சீர்திருத்தத்தில் குறிப்பாகச் சாதி ஒழிப்பில் தீவிரமாய்ப் பணியாற்றிக்கொண்டிருந்த தமிழர்க்குப் பெரியார் வருகை புது வலிமையைச் சேர்த்தது. பெரியாரது சாதி ஒழிப்புப் போராட்டம் தமிழகத்தில் பெறாத வெற்றியை மலேசியாவில் பெற்றது.

"மலேசியாவைப் பொறுத்தவரை இஃது ஒரு கலப்பினச் சமுதாயம். மலாய்க்காரரிடமும் சீனரிடமும் சாதி அமைப்பு இல்லை; சாதிப் பழக்கவழக்கங்கள் இல்லை."[86] இவற்றைக் கண்ணுற்று வந்த தமிழர்-திராவிடரிடையே ஒரு மாறுதல் ஏற்படுதற்குரிய வாய்ப்பு மிகுந்தது.

தொடக்கத்தில் பெரியார் சீர்திருத்தச் சிந்தனைகள் இங்கு வேரூன்றவில்லை எனினும், காலம் கனிந்து வழிவிட்டது. ஆனாலும் சாதி வெறியாலும் சாதியால் பிழைக்க எண்ணுவோராலும் இன்றும்கூட அதற்கு உயிர் கொடுக்கப்பட்டே வருகிறது; பதிவுபெற்ற சாதிச் சங்கங்கள் இங்கு இன்னும் இயங்கிக்கொண்டுதான் இருக்கின்றன. என்றாலும், அவை தமிழகத்தைப்போல் ஊர்வலங்களையோ, ஆர்ப்பாட்டங்களையோ நடத்துவதில்லை; நடத்தவும் இயலாது; அடக்கமாய்க் கூடித் தம் சாதியைக் காத்துவருகின்றன.

மலேசியா பல் இனங்கொண்ட நாடு; அது தொழில்நுட்ப வளர்ச்சியையும், பொருளாதார மேம்பாட்டையும் நோக்கிப் போட்டி போட்டுக்கொண்டு முன்னேறத் துடிக்கிறது. இந் நிலையில் குறைந்த மக்கள்தொகை கொண்ட இந்தியர் - தமிழர் சமுதாயச் சாதிவேற்றுமை வளர்ச்சிக்குத் தடைக்கல்லாய், இழிதகைமையாய் விளங்கும் என்பதில் ஐயமில்லை. இதனைத் தமிழ்ச் சமுதாயம் உணரத் தொடங்கி இருப்பதனால் எதிர்காலத்தில் நல்ல மாறுதல்கள் ஏற்படலாம்; தம் இனத்தில் ஒருவர் முன்னேறுவதைத் தாங்கிக்கொள்ள முடியாத அழுக்காறு முதலாய இழிதகைமைகள் நீங்கலாம்.

மிகக் குறுகிய காலத்தில் உலகில் ஓர் உயர்ந்த பண்பாடுடைய இனமாய், பொருளாதாரப் பின்னணியோடு மலாய்க்காரர் மேம்பட்டு வருகின்றனர்;

---

86 இராசு, ரெ., ஆறாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு மலர், ப. 84

காலத்திற்கேற்பத் தங்களை மாற்றிக்கொள்கின்றனர். சீனரோ நொடிதோறும் வளர்ச்சியை நோக்கிச் சென்றுகொண்டிருக்கின்றனர்.

## எதிர்காலம்

இப்போதைய கல்வி, வேளாண்மையையே நம்பிக்கொண்டிராமல் மேம்பட்டுவரும் தொழில்துறை, கணினி உலகில் ஏற்பட்டுவரும் மிகுவேக மாறுதல் போன்றவற்றையும் மனத்துட் கொள்ளவேண்டும். கடந்த பத்து ஆண்டுகளில் எத்தனையோ மாறுதல்கள் நிகழ்ந்துவிட்டன. வரும் பத்தாண்டுகளில் மேலும் பல புரட்சிகரமான மாறுதல்கள் நிகழும் என்பதில் ஐயமில்லை. எத்துணைப் புறவளர்ச்சி ஏற்பட்டாலும் அவரவர் தத்தம் இனத்திற்கே உரிய அடிப்படைப் பண்பாடுகளைச் சிதைத்துவிடக் கூடாது.

## சமயம்

மலேசிய நாடு இசுலாமிய சமயத்தைத் தேசிய சமயமாய்க் கொண்டிருந்தாலும், பிற சமய நடவடிக்கைகளுக்கும் இடம்தந்து வருகிறது. இங்குள்ள இந்தியருள் இசுலாமியரும் உள்ளனர்; கிறித்தவரும் உள்ளனர்; மிகச் சிறுபான்மையர் பௌத்தம் முதலாய சமயங்களைப் பின்பற்றுகின்றனர். எனினும், மிகப் பெரும்பான்மையோர் பின்பற்றும் சமயம் சைவம், வைணவம் முதலாய பல மதங்களின் கூட்டமைப்பான இந்து சமயமே ஆகும்.

### மலேசியச் சமய மக்கள்

| | | |
|---|---|---|
| இசுலாம் | ... | 56.0% |
| பௌத்தம் | ... | 18.5% |
| கன்பூசியம் | ... | 12.5% |
| இந்து | ... | 7.0% |
| கிறித்தவம் | ... | 3.5% |
| இதர சமயங்கள் | ... | 2.5% |

## வழிபாட்டு முறைகள்

தொடக்க காலத்தில் இங்கு வந்தோருள் மிகப் பெரும்பான்மையர் கல்வியறிவு அற்றவர்; சிலர் மிகவும் குறைந்த அளவு கற்றவர். ஆனால் நகரங்களில் வாழ்ந்தோர் நிலை இதற்கு முற்றிலும் மாறுபட்டதாகும். வணிகர், கல்வியாளர், மருத்துவர், பொறியாளர், வழக்கறிஞர், அலுவலர், சமய அறிஞர் ஆகியோர் இங்கு வாழ்ந்தனர். கற்ற, கல்லாத எனும் இருவேறு மாறுபட்ட சமுதாயம் அன்று இருந்தது. அதற்கேற்ப வழிபாட்டு முறைகளும் அமைந்திருந்தன.

தோட்டப்புறக் கோயில்களிலும் இல்லங்களிலும் சமயத் தெளிவற்ற கிராம தெய்வ வழிபாட்டு முறையே பின்பற்றப்பட்டு வந்தது. கோயில்களில் குருக்கள் என்று பயிற்சி

பெற்றார் யாருமில்லை; ஓரளவு வழிபாட்டுமுறை தெரிந்த பகுதிநேரப் பண்டாரங்களே பணியாற்றினர். பெரும்பாலும் மாரியம்மன் கோயில்களே தோட்டப்புறங்களில் இருந்தன.

ஒரு பிரிவினர் மதுரைவீரன் முதலாய சிறுதெய்வங்களுக்குக் கோயில் எழுப்பி வழிபடுகின்றனர். அதே நேரத்தில் நகர்ப்புறங்களில் ஆகம வழிபாட்டு முறையும் பின்பற்றப்பட்டுவருகிறது.

இதுகுறித்து முனைவர் ரெ. இராசு "மக்கள் வழிபாடு நகர்ப்புற, நடுத்தர வகுப்பாரின் வழிபாட்டு முறைக்கு ஒத்ததாயும், சாதாரண மக்களின் வழிபாடு பெரும்பாலும் கிராமிய வழிபாட்டு முறைக்கு ஒத்ததாயும் அமைந்திருக்கிறது"[87] என்கிறார். அவர் மேலும் "இந்த இரு மரபுகளையும் இருவேறு சமுதாயப் பிரிவுகளோடு இணைத்துக் காட்டும்போது நாம் சிறிது கவனமாக இருத்தல் வேண்டும். ஏனெனில், உண்மையில் இவை இரண்டிற்கும் இடையில் அணுக்கமான தொடர்புகள் இருந்துவந்திருப்பதொடு ஒற்றுமைக் கூறுகளும் உள்ளனவென்பதும் அறியத்தக்கது. ஆதலின் இவற்றை ஒன்றன் இருவடிவங்கள்"[88] எனலாம் என்கிறார்.

மலேசிய இந்து சங்கம், இந்து இளைஞர் இயக்கம், மலேசிய சைவசித்தாந்த மன்றம், வள்ளலார் மன்றம், அருள்நெறித் திருக்கூட்டம், இராமகிருஷ்ண மடம், விவேகானந்தா ஆசிரமம், இந்து தர்ம மாமன்றம் முதலாயன சமய வளர்ச்சியை நோக்கமாய்க் கொண்டனவாகும். இவை தம் நடவடிக்கைகளை நகரங்களிலேயே மேற்கொள்கின்றன. அண்மைக் காலமாய்த் தோட்டப்புறங்களிலும் சமய ஒளி பரவி வருகிறது.

தோட்டப்புறக் கோயில்களில் ஆடு, கோழி போன்றவற்றைப் பலியிடும் வழக்கமும் படிப்படியே மறைந்து வருகிறது; திருமுறை ஓதும் பழக்கம் மேலோங்கி வருகிறது; திருமுறைப் போட்டிகளால் அது வளர்ந்து வருகிறது.

மலேசிய இந்தியர்-தமிழர் தாய்கோயிலாய் விளங்கும் அருள்மிகு (ஸ்ரீ) மகா மாரியம்மன் கோயில் தேவத்தானம், கோர்ட்டுமலைப் பிள்ளையார் கோயில் பத்துமலை முருகன் கோயில்களை நிருவகித்து வருகிறது. பத்துமலைத் தைப்பூசத் திருவிழாவின் போது நூறாயிரக் கணக்கில் இறையன்பர் ஒன்றுகூடுகின்றனர். அத் தேவத்தானத்தில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் வேண்டுகோளுக்கு இணங்கித் தமிழிலும் வழிபாடு நடைபெற்று வருகிறது. மலேசியாவில் சிறிதும் பெரிதுமாய்ப் பதினையாயிரம் இந்துக் கோயில்கள் உள்ளன. கல்விக்கூடங்கள் எழுப்புவதில் காட்டும் நாட்டத்தைவிடக் கோயில்கள் எழுப்புவதில் தமிழர் நாட்டங் கொள்கின்றனர் என்பதற்கு இதுவே சான்றாகும்.

---

87 இராசு, ரெ., ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு மலர், ப. 85

88 மேலது, ப. 85

## சமய விழாக்கள்

மலேசியாவில் சமய விழாக்கள், 'தேசிய விழாக்கள்' எனும் இலச்சினையோடு கொண்டாடப்படுகின்றன. ஒரு சமயத்தினர் கொண்டாடும் விழாவில், பிற சமயத்தினரும் கலந்துகொண்டு மகிழ வேண்டும்; மகிழ்விக்க வேண்டுமென்று அரசு ஒரு நன்னெறி வகுத்துள்ளது. இஃது உலகம் போற்றும் சீரிய நெறியுமாகும். இங்கு இசுலாமியர்க்கு நோன்புப் பெருநாளும், இந்துக்களுக்குத் தீபாவளியும், கிறித்தவர்க்குக் கிறிஸ்துமசும், சீனர்க்குச் சீனப் புத்தாண்டும் (சீனர் பல மதங்களைத் தழுவுபவர் என்றாலும் அவர்கள் அனைவரும் சீனப் புத்தாண்டினைச் சமய வேறுபாடின்றிக் கொண்டாடுகின்றனர்), பௌத்தர்க்கு விசாகத் திருநாளும் தேசிய விழாக்களாய் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன. இந்தியருள் ஏறக்குறைய 85 விழுக்காட்டினருக்கு மேல் தமிழர்; ஆனால் பொங்கல் திருநாளுக்குப் பொது விடுமுறைவிட வேண்டுமென்று தமிழ் அமைப்புகள் குறிப்பாய் மலேசியத் திராவிடர் கழகம் நீண்ட காலம் போராடியும் அக் கோரிக்கை ஏற்கப்படவில்லை. தைப்பூசத் திருநாளுக்குமட்டும் சில மாநிலங்களில் அரசு விடுமுறை விடப்படுகிறது.

## சமய நடவடிக்கைகள்

இங்குள்ள சமய இயக்கங்களும் சிறப்பாய் நகரங்களிலுள்ள கோயில்களும், சமய நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றன; திருமுறை வகுப்புகள் நடத்தல், சமயத் தொடர்பாய போட்டிகள் நடத்தல், நூல், ஒலிநாடாக்கள் வெளியிடல், இதழ் நடத்தல், திருப்பணிகள் செய்தல் முதலாய பணிகளில் ஈடுபட்டு வருகின்றன. தாய்கோயிலான கோலாலம்பூர் அருள்மிகு மகாமாரியம்மன் தேவத்தானம், திருமுறை மாநாடுகளைத் தொடர்ந்து நடத்திவருகின்றது. இரண்டாம் உலகச் சைவ சமய மாநாடும் (1986) இங்கு நடந்தது. இஃது இங்குச் சைவசமயம் அழுத்தமாய் வேரூன்றியுள்ளதற்குச் சான்றாகும்.

## மலேசியாவில் தமிழ்க்கலை

கலை என்பது விழுமிய உணர்ச்சிகளின் வெளிப்பாடாகும். வாழ்க்கைப் பயணத்தில் வறட்சி ஏற்படாமல் பசுமை சுரக்கச் செய்துகொண்டே இருப்பதும் கலை எனலாம். வெளிப்படும் உணர்ச்சிகளின் வடிவத்திற்கேற்ப அதன் வாழ்நாள் அமையும். சில படைப்புகள் சாகா வரம் பெற்றுவிடுவன; சில தோன்றிய வேகத்தொடு அழிந்துவிடுவன.

தமிழர் தொன்றுதொட்டுக் கலைகளில் வல்லவராய் விளங்கிவந்திருக்கின்றனர். கற்ற மேலோர் பல்வேறு நுண்கலைகளை வளர்த்ததொடு கல்லாத பாமரரும் நாட்டுப்புறங்களில் கலைகளை வளர்த்துவந்துள்ளனர்.

கவிதை, இசை, ஓவியம், சிற்பம் என நுண்கலைகள் விரிந்து பெருகும்; மலேசியாவில் தமிழ்க் கலைவளர்ச்சி என்பது தமிழகத்தின் பிரதிபலிப்பாகவே - ஒரு கிளை வளர்ச்சியாகவே தொடங்கித் தொடர்ந்து வளர்ந்துவருகிறது.

இசை, அரங்கேறும் கூத்து, ஆடப்படும் நடனம் முதலாய அனைத்துமே தமிழகச் சாயலிலேயே அமைந்துவருகின்றன; இதனில் சிறிதும் வியப்பில்லை; தமிழகத்திற்கும் மலேசியாவிற்கும் தொடக்க காலமுதலே நிலவிவரும் நட்புறவு, விரைவுப் போக்குவரத்து, தொலைத்தொடர்பு வசதி முதலாயவற்றால் பெரிதும் நெருங்கின; அதனால் வேறுபாடுகள் தோன்ற வழியில்லாமல் போயிற்று; ஈரிடமும் ஒரே கலைமயமாயிற்று.

தொழில் நாடி மலேசியாவில் குடியேறிய காலத்திலேயே தம்முடன் தமிழர் கலைகளையும் கொண்டுவந்தனர்; இங்கு வந்த பின்னர் எத்துணையோ நெருக்கடிகளையும், இழப்புகளையும், சொல்லொணாத் துன்பங்களையும் தமிழர் எதிர் கொண்டனர் என்றாலும், கலை உணர்ச்சிமட்டும் அவர்கள் உள்ளத்தை விட்டு விலகவில்லை; இதுபற்றிப் பழம்பெரும் நாடகக் கலைஞர் ஆர். பி. எஸ். மணியம், “சொல்லொணாத் துன்பங்களில் மூழ்கித் திணறிக்கொண்டிருந்த காலகட்டங்களில் கூடத் தோட்டப் பாட்டாளிகள் தங்கள் கலையான நாடகத்தை விடவில்லை என்றே சொல்ல வேண்டும். நாடகக் கலை அவர்கள் ரத்தத்தொடு ஒன்றிக் கலந்து விட்டதெனலாம். நாடகக் கலையை வளர்க்கும்பொருட்டு அதற்கு அடிப்படையாய்த் தோட்டங்களில் தெருக்கூத்து நாடகங்களையே நடத்திவந்தனர்”[89] என்கிறார்.

நிலவு ஒளியில் கும்மி, கோலாட்டம், சடுகுடு, ஒயிலாட்டம், ஒயில் கும்மி முதலாய நாட்டுப்புறக் கலைகளை வளர்த்து வந்தனர். மாரியம்மன் திருவிழாக்கள் முதலாயன நடக்கும் போதெல்லாம் புலியாட்டம், கரகாட்டம் முதலாயன ஆடிக் களித்தனர்; தெருக்கூத்துகளை அரங்கேற்றி வந்தனர்.

## நாடகத் தோற்றம்

நாடகத் தோற்றம்பற்றி அ. மணிசேகரன் “1870ஆம் ஆண்டுக்குப் பின்னரே தமிழ் நாடகம் இந் நாட்டில் உதயமாயிருக்க வேண்டும்”[90] என்கிறார். மேலும் அவர், “1910ஆம் ஆண்டிற்குப் பின்னரே இந் நாட்டில் நாடகங்கள் நடைபெறத் தொடங்கியதை அதிகார பூர்வமாக அறிய முடிகிறது”[91] என்கிறார்.

“1910இல் இந்தியாவிலிருந்து வந்து இந் நாட்டில் தங்கிவிட்டவரான கலிய பெருமாள் தேவர் வாத்தியார் மலாயாவின் வடபகுதியான சுங்கை ரம்பையில் (புக்கிட் மெர்தாஜாம்) புராண இதிகாச நாடகங்களைப் போட்டுள்ளார்; இதுவே மலேசிய மேடை நாடகத் தொடக்கத்திற்கான மூல ஆதாரமாய் நமக்குக் கிடைத்துள்ளது”[92] என்கிறார்.

---

89 மணியம், ஆர். பி. எஸ்., மலேசியாவில் நாடகக் கலையும் நாமும், ப. 42
90 மணிசேகரன், அ., மலேசியாவில் மேடை நாடகங்கள், ப. 18
91 மேலது, ப. 13
92 மணியம், ஆர். பி. எஸ்., மலேசியாவில் நாடகக் கலையும் நாமும், ப.

தொடக்க முதல் இவ்வாறே தமிழகத்திலிருந்து பல நாடகக் குழுக்கள் இங்கு வந்து நாடகங்கள் நடத்தியுள்ளன. அக் குழுக்களுள் இரு குழுக்கள் மிகவும் குறிப்பிடத்தக்கன.

"புராண இதிகாச நாடகங்களை இங்குக் கொண்டுவந்த குழுக்களுள், அரங்கசாமி நாயுடு கம்பெனி குறிப்பிடத்தக்கது (1928). அக் குழு 25 ஆண்டுகள் இங்கேயே தங்கிச் சிங்கை மலாயாவில் நாடகக் கலையை வளர்த்தது'[93] என்கின்றனர் ஆய்வாளர். அக் குழுவில் இடம்பெற்ற கலைஞர் இங்கு ஆற்றிய கலைப்பணிகள் மலேசியத் தமிழர் வரலாற்றில் குறிப்பிடத்தக்கன.

தி.க.ச. உடன்பிறந்தார் (டி.கே.எஸ். பிரதர்ஸ்) குழு அடுத்துக் குறிப்பிடத்தக்க நாடகக் குழுவாகும் (1957). இது புதுப்புது முறைகளில் சமூக, இலக்கிய, வரலாற்று நாடகங்களை உருவாக்கி நடித்து, நாடக உலகிற்கு வழிகாட்டியது. கலைக் குழுக்களில் இஃது ஒப்பற்றதாகும்.

## நாடகக்கலை வளர்ச்சி

தமிழகத்திலிருந்து வந்த நாடகக் குழுக்கள், பெரும்பாலும் நகர்களிலேயே தம் நாடகங்களை மேடையேற்றின. நீண்ட நெடுங்காலம்வரை அக் கலை தோட்டப் புறங்களுக்கு எட்டவில்லை. என்றாலும், தோட்டப்புற மக்கள் தம் கலை உணர்வினை இழந்துவிடவில்லை. தமிழகத்திலிருந்து வந்த கலைஞர் சிலரும் உள்ளூரில் உருவான கலைஞரும் ஆங்காங்கே தோட்டப்புற மக்களுக்குப் பயிற்றுவித்து நாடகங்களை அரங்கேற்றியுள்ளனர்.

"இங்கு நாடகம் வேரூன்றத் தொடங்கிய காலம் 1930 என்றாலும் இந்த நாட்டு நாடகத் துறையில் பெரும் மாறுதல் ஏற்படுத்திய காலம் 1950ஆம் ஆண்டே" என்று ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர். ஒரு காலத்தில் இங்குச் சங்கரதாச சுவாமிகள், பம்மல் சம்பந்த முதலியார் முதலாயோரும் நாடகங்களை அரங்கேற்றியுள்ளனர். பின்னர்ப் பேரறிஞர் அண்ணா, கலைஞர் மு. கருணாநிதி, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், முனைவர் தமிழ்க்குடிமகன் முதலாயோர் எழுதிய சீர்திருத்த, வரலாற்று நாடகங்கள் மேடையேறின. இதற்குத் திராவிட இயக்கத் தாக்கம் பெரும் காரணமாகும். தமிழகத்தில் எழுதப்பட்ட நாடகங்கள் மட்டுமல்லாது புகழ்பெற்ற திரைப்படங்களும் நாடகமாக மேடையேறியுள்ளன. உள்ளூர் நாடகக்கலை வளர்ச்சிக்கு 1931இல் தோன்றிய 'மலாயன் சுகுண விலாச சமாஜ்' முதல் இன்றுவரை எத்தனையோ நாடகக் குழுக்கள் தோன்றின; பல நாடகங்களை அரங்கேற்றின. எனினும் 1960இல் தோன்றிய 'மலாயாக் கூட்டரசு தமிழர் கலைமன்றம்' (1971இல் மலேசியத் தமிழர் கலைமன்றம் எனப் பெயர் மாற்றம் கண்டது) ஆற்றிய கலைப்பணிகள் மலேசிய நாடக வரலாற்றில் தனி

93 மணியம், ஆர். பி. எஸ்., மலேசியாவில் நாடகக் கலையும் நாமும், ப. 104

94 விரிவிற்கு 375ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

இலச்சினையைப் பதித்தது. அதனால், அதன் தலைவர் ஆழி. அருள்தாசன்[94] நாடகத் தந்தை என்றும், நாடகக் காவலர் என்றும் போற்றப்பட்டார்.

இன்று உயர்நிலையிலுள்ள பலர், அன்று நாடக மேடைகளில் மின்னியவர் ஆவர். பொதுப்பணி அமைச்சரும், மலேசிய இந்தியர் காங்கிரசின் தேசியத் தலைவருமாய டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவும், முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினரும் ஊராட்சி வீடமைப்புத் துறையின் நாடாளுமன்றச் செயலருமாய வ. கோவிந்தராஜுவும் முன்பு மலேசிய நாடக அரங்கினை அணிசெய்த கலைஞராவர்.

**தமிழகத்தில் பெயர் பதித்தோர் :** மலேசியக் கலை உலகம், தமிழகக் கலை உலகிற்குச் சில கொடைகளைத் தந்துளது; திரைப்படப் பின்னணிப் பாடகர் மலேசிய வாசுதேவன் ஒரு முன்னாள் மலேசியக் கலைஞராவார்; 'தேவைகள்' படத்தில் நடித்துத் தமிழக அரசின் பரிசில் பெற்ற காலஞ்சென்ற மனுராமலிங்கம் மலேசிய நாடக உலகின் ஒரு விண்மீனாவார். இன்னும் திரைப்பட நடிகர் ரவிச்சந்திரன், நடனக் கலைஞர் காலஞ்சென்ற மகாலிங்கம் முதலாய மலேசியக் கலைஞர் சிலர் தமிழகக் கலையுலகில் ஒளிவீசியுள்ளனர். அவர்களைப்பற்றி எல்லாம் 'மலேசிய மேடை நாடகங்கள்' எனும் நூலில் அ. மணிசேகரனும், 'மலேசியாவில் நாடகக் கலையும் நாமும்' எனும் நூலில் ஆர். பி.எஸ். மணியமும் விரிவாக எழுதியுள்ளனர்.

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் தொகுத்துவரும் நாடகக் களஞ்சியத்திற்கு அதன் பதிப்பாசிரியர், முனைவர் நயினார் வேண்டுகோளுக்கிணங்க இந் நூலின் தலைமைத் தொகுப்பாசிரியர் மலேசிய நாடகக் கலைஞர் பலர் வாழ்க்கைக் குறிப்புகளைத் தொகுத்தனுப்பியுள்ளார்; அக் களஞ்சியத்தின் முதல் தொகுதி வெளிவந்துவிட்டது.

**கொள்கைபரப்பு நாடகங்கள் :** கொள்கைபரப்பு நாடகங்களைக் கூறுவதாயின் இங்கு அரசின் தகவல்துறை நாடகங்களையும் குறிப்பிட வேண்டும். அவை பட்டிதொட்டி எங்கும் நெடுங்காலம் தம் பணியைச் செய்து வந்தன. நாட்டுப்பற்று, அரசின் கொள்கை விளக்கங்கள், கம்யூனிச எதிர்ப்புப் பேச்சுகள் முதலாய கருப்பொருள்களில் அவை நடத்தப்பட்டன. தகவல் துறை அதிகாரியா யிருந்த ஏ. தருமதுரை தலைமையில் இயங்கிய அக் குழுவில் நாட்டின் முன்னணி நடிகர் சிலரும் பங்குகொண்டனர். நாட்டில் நெருக்கடிநிலை நிலவியபோது (1948 - 60) கொள்கைபரப்பு நாடகங்கள் நடந்தன. பின்னர் அவை நிறுத்தப்பட்டன.

இந்தியத் துணைக் கண்டத்தின் விடுதலையை நோக்கமாய்க்கொண்டு இங்கு அமைக்கப்பட்ட (1942 - 45) இந்திய தேசிய இராணுவத்தினர் (I.N.A.) நடத்திய கொள்கைபரப்பு நாடகங்கள் குறிப்பிடத்தக்கன. அந் நாடகங்கள் விடுதலை வீரர்,

94 விரிவிற்கு 375ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

இந்திய தேசிய இராணுவத்தின் தலைமைத் தளபதி நேதாஜியைக் கவர்ந்தது. அவர் விரும்பிப் பலமுறை அந் நாடகங்களைக் கண்டு களித்தார். அந் நாடகக் கொள்கைகள் போர்ப் படையினரையும் கவர்ந்தன; சப்பானியரையும் கவர்ந்தன. அவர்கள் நாடகக் குழுவினைச் சயாம்வரை அழைத்துச் சென்று நடிக்கச் செய்தனர்.

**வானொலி தொலைக்காட்சி நாடகங்கள் :** மலேசியத் தமிழ்நாடக வரலாற்றில் வானொலி நாடகங்களை மறக்க முடியாது.[95] தொடக்க நாள் முதல் இன்றுவரை இடையறாது தொடர்ந்து நாடகக்கலை உயிரோடு விளங்குதற்கு வானொலித் துறையே காரணம்.

தொலைக்காட்சியைப் பொறுத்தவரை அதில் தமிழ் நாடகங்களுக்கு ஒதுக்கும் நேரம் மிகவும் குறைவே. தொடக்க காலத்தில் அவ்வப்போது சிற்சில உள்ளூர் நாடகங்கள் ஒளிபரப்பாயின. இடையில் அவ் வாய்ப்பும் இல்லாதொழிந்தது. பின்னர் மீண்டும் தமிழ் நாடகங்களுக்கு (வாரத்திற்கு 30 மணித்துளிகள்) தொலைக்காட்சி இடந்தந்தது. ஆனால், அவ் விடத்தை இறக்குமதி நாடகங்கள் பிடித்துக்கொண்டன. சிக்கனம் கருதியே இவ் வேற்பாடு என்று காரணம் கூறப்பட்டது. தமிழகத்திலிருந்து இறக்குமதியான அந் நாடகங்களில் பெரும்பாலாயவை ஒரு சிறு கூட்டத்தினர் கலாசாரத்தை அடிப்படையாய்க் கொண்டிருந்தன. இந் நாட்டுத் தமிழினத்தின் பண்பாட்டை எதிரொலிப்பவையாகவோ, நாட்டுச் சூழலுக்குப் பொருத்தமானவை யாகவோ அவை அமையவில்லை. மேலும், அவற்றின் உரையாடல்கள் இந் நாட்டுத் தமிழ் வளத்துக்கே கேடு செய்வனவாய் இருந்தன.

இப்பொழுது மீண்டும் உள்நாட்டு நாடகங்கள் இடம்பெறத் தொடங்கியுள்ளன. இவ் வாய்ப்புத் தொடருமானால் தொலைக்காட்சியில் தமிழ் நாடகக்கலை வளர்ந்தோங்கும் என்பதிலும், நாட்டின் சூழலுக்கேற்பப் புதியதொரு வடிவத்தைப் பெறும் என்பதிலும் ஐயமில்லை.

**பள்ளி நாடகங்கள் :** இங்கு நாடகக் கலைபற்றி ஆய்வோர் பள்ளி நாடகங்களை முழுதும் மறந்துவிடுகின்றனர். இன்றைய அரும்புதானே நாளைய மலர். சிறாருக்கு அக் கலைப் பாலைப் புகட்டவில்லையானால் அவர்களுக்கு நாடகக் கலையில் ஓர் அடிப்படையே இல்லாமல் போய்விடும்.

மலேசியத் தமிழ்ப் பள்ளிகளில் நெடுங்காலமாய்ப் பெற்றோர்தின விழாக்கள், பரிசளிப்பு விழாக்கள், பிற சிறப்பு நிகழ்ச்சிகள் முதலாயன நிகழும்போது புராண, இதிகாச, சமய, சமுதாய வரலாற்று (ஓரங்க) நாடகங்கள் நடைபெற்று வருகின்றன. வகுப்பறைகளிலும், நன்னெறி, தமிழ்ப்பாட நேரங்களிலும் நாடகங்கள் நடிக்கப்படுவதுண்டு. பாடக் கருப்பொருள்களைக் கொண்ட உடனடி நாடகங்களும் நடத்தப்படுவதுண்டு.

---

95 விரிவிற்குக் கவிதைக் கொடை - அமைப்புகள் பகுதியில் காண்க.

ஆசிரியர் துறையில் 35 ஆண்டுகாலப் பட்டறிவுள்ள இந் நூலின் தலைமைத் தொகுப்பாசிரியர் எத்தனையோ சிறுவர் நாடகங்களை எழுதி, இயக்கி வெற்றி கண்டிருக்கிறார். மேலும், இவர் 1978ஆம் ஆண்டுமுதல் ஆயிரக் கணக்காய மாணவர்களை ஒன்றுகூட்டி நடத்திவரும் மாணவர் பண்பாட்டு விழாக்களிலும் ஆண்டிற்கு ஒரு நாடகம் என்ற முறையில் அரங்கேற்றி வருகிறார். இவர் எழுதிய 18 நாடகங்களை எட்டுத் தொகுதிகளாய்த் தொகுத்து உமா பதிப்பகம் வெளியிட்டுள்ளது (1987). ஆசிரியப் பெருமக்கள் பலர் இத் துறையில் பெருந்தொண்டு புரிந்துள்ளனர்; புரிந்து வருகின்றனர்.

**கல்வி ஒலிபரப்பு :** இந் நாட்டில் 1966இல் தொடங்கிய கல்வி ஒலிபரப்பில், தொடர்ந்து நாடகங்கள் ஒலியேறி வருகின்றன. நாடக ஆய்வு என்று கொள்ளும்போது இவற்றையும் மறவாமல் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

**இன்றைய நிலை :** திரைப்படங்கள் செல்வாக்குப் பெற்றபின் தமிழகத்தைப் போலவே நாடக வளர்ச்சி மலேசியாவிலும் குன்றியது; தோட்டப்புற நாடகங்களும் திரைப்படங்களால் குறைந்தன.

இந் நாட்டு மேடைகளில் நாடகம் பெற்றிருந்த இடத்தைக் கலைநிகழ்ச்சிகள் பிடித்துக்கொண்டன. பாடல்கள், ஆடல்கள், நகைச்சுவை என இரண்டு இரண்டரை மணி நேர நிகழ்ச்சிகள் இடம்பெற்றன; இவற்றைப் படைக்க நீண்டகாலமோ, கடும் உழைப்போ, பெரும் பொருட்செலவோ தேவை இல்லை. அதனால், இந் நிகழ்ச்சி களுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. தொடர்ந்து ஆங்காங்கே கலைநிகழ்ச்சிகள் நடந்துவருகின்றன. இதிலும் பணநோக்கம் தலைதூக்கிவிட்டது. இப்போது மேடை நாடகத்துறை புதுவேகங் காணத் தொடங்கியுள்ளது.

**திரைப்படத்துறையினர் வருகை :** முன்பெல்லாம் தமிழகத்திலிருந்து நாடகக் குழுக்கள் வந்தன. இப்போது திரைப்படத் துறையினர் அவ்வப்போது வருகின்றனர்; அவர்கள் நோக்கம் முழுக்க முழுக்கப் பணமே. இசைநிகழ்ச்சி எனும் பெயரில் பண்பாட்டைப் பாழ்படுத்தும் ஆட்டங்கள், நகைச்சுவை எனும் பெயரில் நையாண்டிகள் எனப் பல்வேறு அலங்கோலங்களே நிகழ்ந்துவருகின்றன. இப்போது நுழைவுச் சீட்டுகள் 100, 200, 300 மலேசிய வெள்ளியாய் உயர்ந்துவிட்டன; கொள்ளை ஆதாயம் தேடும் போக்கே மலிந்துவிட்டது. இதுபோன்ற நிகழ்ச்சிகளைக் காணச் சாதாரணக் குடும்பங்கள் ஆயிரக் கணக்கில் செலவிடும் அவலங்களும் நிலவுகின்றன. தமிழகத்திலிருந்து இங்கு வரும் குழுக்கள் ஆதாயத்தை மூலநோக்கமாய்க் கொள்ளாமல் இந் நாட்டுத் தமிழர் பின்பற்றத்தக்க உயர்தர நிகழ்ச்சிகள் நடத்துதல் நல்லது என ஏடுகள் அவ்வப்போது சுட்டிக்காட்டத் தவறவில்லை.

## இசைத் துறை

இங்குச் செவ்விசை (Classical Music) வளர்ச்சிக்காக 1923ஆம் ஆண்டிலேயே சங்கீத அபிவிருத்தி சபை பதிவு பெற்றது. அஃது இன்றுவரை கருநாடக சங்கீதத்தையே வளர்த்துவருகிறது. முன்னைய தலைமுறையைச் சார்ந்த இசைவாணர் சிலர்,

ஆங்காங்கே புதிய தலைமுறையினர்க்குப் பண்டைய இசைப்பயிற்சியை அளித்துவருகின்றனர். ஆனால், ஒருசிலரைத் தவிரப் பிறர் எல்லாருமே செட்டி நாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார்[96] காட்டிய வழியில் தனித்தமிழில் இசைப் பயிற்சி அளிக்கவில்லை. சிறந்த நாதசுர வித்துவானான அ. பழநிசாமி போன்ற ஒருசிலரே அண்ணாமலை பல்கலைக்கழகப் பாடத்திட்டங்களையொட்டித் தமிழிசையை வளர்த்து வருகின்றனர். எனினும் இன்றைய தலைமுறையினர் மிக விரைந்து மேடையில் பாடிப் புகழ்பெற வேண்டுமென்று துடிக்கின்றனர். முறையாய், ஆழமாய் இசையில் தேர்ச்சிபெற மிகமிகச் சிலரே முன்வருகின்றனர். இங்கு வீணை, வயலின், தண்ணுமைப் (மிருதங்கம்) பயிற்சியளிப்போரும் உளர்.

வட இந்தியர் செவ்விசை, திரைப்பட இசை ஆகிய இரண்டிற்கும் இடைப்பட்ட ‘கஜல்’ எனும் இசைமுறையைக் கொண்டுள்ளனர். இது செவ்விசையை எட்ட இயலாமலும், திரை இசைக்குத் தாழ விரும்பாமலும் உள்ள நடுத்தரத்தார்க்குப் பொருத்தமான இசைமுறையாகும். தமிழகத்திலும் மெல்லிசை (Semi Classical) முறை முன்பு இருந்தது. இப்போது அது வளர்வதாய்த் தெரியவில்லை. மலேசியாவிலும் முன்பு அம் முறையிலாய படைப்புகள் வானொலியில் ஒலியேறின; மேடைகளில் ஒலித்தன. மறைந்த இசைச்செல்வர் எஸ். சுந்தரராஜ், நாகசாமி பாகவதர் போன்றோர் இதற்கு முன்னோடிகள். இப்போது செவ்விசைச் சித்தர் ரெ. சண்முகம், இசைத்தென்றல் ந. மாரியப்பன் முதலாயோர் அவ்வப்போது மெல்லிசைப் பாடல்களை வழங்கி வருகின்றனர்.

**சிறுவர் இசைப் பாடல்கள் :** மலேசியக் கல்வி ஒலிபரப்புத் துறை ஆயிரக்கணக்கான (உள்ளூர்) சிறுவர் இசைப்பாக்களை ஒலியேற்றியுள்ளது. இது தமிழகத்தாரும் மேற்கொள்ளாப் பணியென்று அழ. வள்ளியப்பா, தணிகை உலகநாதன், தமிழண்ணல் முதலாய பெருமக்கள் பாராட்டியுள்ளனர்.

## நடனக்கலை

இங்கு நடனக் கலையில் முன்பு என்றும் இல்லாத நாட்டம் மிகுந்துள்ளது. அதற்குப் பல அமைப்புகள் ஆங்காங்கே உள்ளன; அவ்வப்போது சலங்கைப் பூசை, நடன அரங்கேற்றம் என்று நிகழ்ச்சிகள் பல பரவலாய் நடந்துவருகின்றன.

பொதுவாய்க் கூறுவதாயின் இங்குக் கலைப்பயிர் வளர்க்கப் புதிதாய் விதை தூவ வேண்டுவதில்லை. முளைவிடும் கலைப்பயிர் செழித்தோங்கி நல்ல அறுவடையைத் தர, எருவிட்டு நீர் பாய்ச்சினாலே போதும்.

## தற்காப்புக்கலை

தமிழர் தம் பழம்பெரும் கலையான தற்காப்புக் கலைகளையும் மலேசியத் தமிழர் துறந்துவிடவில்லை. அன்றுதொட்டு இன்றுவரை சிலம்பம் முதலாய தற்காப்புக்கலைகளைக் குன்றாது வளர்த்தே வருகின்றனர்.

---

96 விரிவிற்கு 570ஆம் பாடலின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

கிள்ளான் பகுதியில் பெரியவர் க. கண்ணன் தலைமையில் ஏறக்குறைய 50 ஆண்டுகளுக்குமேல் இயங்கிவரும் 'சிலாங்கூர் (கூட்டரசு வளாக) இந்தியர் உடற்பயிற்சித் தற்காப்பு மன்றம்' (பதிவு 1937) போன்ற பல அமைப்புகள் இந் நாட்டில் உள. வர்மம், ஓகம் போன்ற அருங்கலைகளிலும் வல்லவரான க. கண்ணன்(Toko Guru - நல்லாசிரியர்) போன்று சிலர் தற்காப்புக் கலைகளை வளர்த்து வருகின்றனர். புகழுடம்பெய்திய முதுபெரும் தமிழ்ப் புலவர் சுவாமி இராமதாசருக்கு இதில் நிரம்பப் பங்குண்டு. தற்காப்புக்கலை குறித்த சில நூல்களும், சிறப்பு மலர்களும் இங்கு வெளிப்போந்துள்ளன. தற்காப்புக்கலை வீரர் மா. இராசமாணிக்கம் எழுதிய 'ஆரோக்கிய வாழ்விற்கு அற்புத யோகாசனங்கள்' என்னும் நூல் (1993) தமிழகத்திலும் பலரால் பாராட்டப்பெற்றது.

**சிலம்பக்கழகம் :** இங்குத் தேவராஜ் மாசிலாமணி முதலாயோர் பொறுப்பில் இயங்கும் மலேசியச் சிலம்பக்கழகம், தமிழர் தற்காப்புக்கலைத் திறனை மற்ற இனத்தவரும் அறிந்து போற்றச்செய்து வருகிறது; சிலம்பத்தைத் தேசிய விளையாட்டுகளில் ஒன்றாயிணைக்கும் முயற்சியில் வெற்றிகண்டுவருகிறது. 1998 இல் இங்கு நடைபெறவுள்ள 16 ஆம் காமன்வெல்த்து விளையாட்டுகளுள் காட்சி விளையாட்டாய்ச் சிலம்பம் ஏற்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. மலேசியச் சிலம்பக்கழகத்தை (1974 இல்) முன்னின்று அமைத்தவர் முன்னாள் சிலாங்கூர் மாநிலச் சட்டமன்ற ஆட்சிக்குழு உறுப்பினர் (1974 - 82) டத்தோ வி. எல். காந்தன். இப்போது இவர் அம் மன்றத்தின் புரவலர் ஆவார்.

## விளையாட்டுத்துறையில் மலேசியா

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தின்போதே மலேசியா வெளிநாடுகளில் நடந்த அனைத்துலக நிலையிலான விளையாட்டுப் போட்டிகளில் பங்கேற்றுள்ளது. 1956ஆம் ஆண்டு ஆஸ்திரேலியாவின் மெல்பர்னில் நடைபெற்ற ஒலிம்பிக் போட்டியை ஒரு தொடக்கமாகக் கொள்ளலாம். அப்போது தொடங்கி 1996ஆம் ஆண்டு அட்லாண்டிக் ஒலிம்பிக்வரை பலமுறை மலேசியா பங்கேற்றுள்ளது.

காமன்வெல்த்து, ஆசிய, தென்கிழக்காசியப் போட்டிகளிலெல்லாம் பலமுறை தங்கப் பதக்கங்களை மலேசியா வென்றுள்ளது. 1988ஆம் ஆண்டு சோல் ஒலிம்பிக்கில் மகளிர் தேக்குவாண்டோ கண்காட்சிப் போட்டியில் வாசுகி[97] என்னும் தமிழ்ப்பெண் வெண்கலப் பதக்கம் வென்று மலேசியக் கொடியை முதன்முதலில் பறக்கவிட்ட பெருமையைச்சேர்த்தார்.

1992ஆம் ஆண்டு ஒலிம்பிக் வரலாற்றில் மலேசியாவுக்கு ஒரு திருப்பம் நிகழ்ந்தது. பார்சினோவில் நடைபெற்ற ஒலிம்பிக்கின் பூப்பந்துப் போட்டியில் ஒரு வெண்கலப் பதக்கம் மலேசியாவுக்குக் கிட்டியது. அதனைப் பெற்றுத் தந்தவர் ரசிட் சிடேக்.

---

97 விரிவிற்கு 352ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

1996ஆம் ஆண்டு அட்லாண்டிக் ஒலிம்பிக்கில் ஒரு வெள்ளியும் ஒரு வெண்கலமும் பெற்று மலேசியா ஒருபடி முன்னேறியது.

விளையாட்டுத் துறையில் இந்தியர் - தமிழர் பேரார்வத்துடன் பங்கேற்று நாட்டிற்குப் பெரும்புகழ் சேர்த்துள்ளனர். காற்பந்து, வளைமட்டைப்பந்து (ஹாக்கி) ஓட்டப்பந்தயம், பெருநடை, பூப்பந்து, தேக்குவாண்டோ முதலாய விளையாட்டுகளில் பங்கேற்றுப் புகழ் சேர்த்துள்ளனர்.

### நாட்டிற்குப் புகழ் சேர்த்தோர்

விளையாட்டுத்துறையில் இந்தியர்-தமிழர் மலேசிய நாட்டிற்குத் தென்கிழக்காசியா, ஆசியா, உலக அளவில் புகழ் சேர்த்துள்ளனர். டாக்டர் மணி செகதீசன், ஹென்றி, இராஜாமணி, டத்தோ பஞ். குணாளன் (பூப்பந்து விளையாட்டில் உலகப்புகழ் பெற்ற வீரர்), சுந்திரன், கருத்து, ஜேம்ஸ் செல்வராஜ், சுப்பிரமணியம், கோலி ஆறுமுகம்[98] அங்கம்மாள், ஜி. சாந்தி, வாசுகி, ரபீடா சலாம், குமரேசன் முதலாயவர் குறிப்பிடத்தக்கவராவர். இத் துறையில் நூற்றுக் கணக்காயவர் பெயர் பதித்து நாட்டின் புகழை உயர்த்தியுள்ளனர்.

## சூ இலங்கைத் தமிழர்

மலேசியத் தமிழர் வரலாறு இடம்பெறும் இப் பகுதியில், இங்கு நிலைபெற்று வாழும் ஈழத் தமிழர் - இலங்கைத் தமிழர்பற்றிய குறிப்புகள் சேரவில்லையானால் இது ஒரு முழுமைபெற்ற வரலாறாகாது. ஏனெனில் இனத்தால், மொழியால், கலையால், பண்பாட்டால் சமய நம்பிக்கைகளால் தமிழகத் தமிழரோடு ஈழத்தமிழர் எவ்வகையிலும் வேறுபட்டவர் அல்லர்; வெவ்வேறு நாடுகளிலிருந்து வந்து இங்குக் குடியேறியதால் வெவ்வேறு இனத்தவர் ஆகிவிடார். மேலும், இந் நாட்டின் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் தொடக்க காலத்தில் அவர்கள் ஆற்றிய பங்கு அளப்பரியது. அது தொடர்பாய குறிப்புகள் களஞ்சியத்தின் இலக்கிய வரலாறு, பாடல் பின்புலக் குறிப்புரைகள், கவிஞர் வரலாறு, கவிதைக் கொடை நூல்கள் ஆகிய பகுதிகளில் வந்துள்ளன. ஈண்டு ஈழத் தமிழர்பற்றிய பொதுவான செய்திகள் இடம்பெறுகின்றன.

19ஆம் நூற்றாண்டில் இங்கு வெள்ளையரால் கொண்டுவரப்பட்டவர்களுள் இலங்கைத் தமிழரும் அடங்குவர். அவர்கள் ஈழ, சிலோன், ஸ்ரீலங்கா, ஜாப்னா (யாழ்ப்பாண)த் தமிழர் என்று அழைக்கப்படுகின்றனர்.

---

98 விரிவிற்கு 360ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

ஈழத்தில் வேளாண்மையில் ஈடுபட்டிருந்த இவர்கள், வெள்ளையர் சிலோனில் தங்கள் ஆட்சியை நிறுவியபோது ஆங்கிலக் கல்வியை மிக விரைந்து கற்றுக்கொண்டனர்; அதனால் பல வாய்ப்புகளைப் பெற்றனர்; அவ் வாய்ப்புகளை நன்கு பயன்படுத்திக்கொண்டனர்.[99]

19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்குப் பொருளாதார வளர்ச்சி பெருகியது. நிருவாகம், அளவியல், போக்குவரத்து மேம்பாடு முதலாய துறைகளில் பணியாற்ற ஆங்கில அறிவுடைய ஊழியர் தேவைப்பட்டனர். அக் காலத்தில் மலாய்க்காரர் ஆங்கில அறிவு பெற்றிருக்கவில்லை. அதனால் பிரிட்டீசார் இலங்கைத் தமிழரை அப் பணிகளுக்குக் கொண்டுவந்தனர். ஏற்கெனவே பிரிட்டீசாரிடம் அவர்கள் பணிபுரிந்து அநுபவம் பெற்றிருந்தனர். அதனால் இங்கு நிருவாகத் துறைகள் செம்மையாய் இயங்க அவர்களால் சிறப்பாய்ப் பணிபுரிய முடிந்தது. மேலும், இலங்கையிலிருந்து மலாயாவுக்குப் பணிமாற்றம் செய்யப்பட்ட பிரிட்டீசு அதிகாரிகள் தங்களுடன் பணியாற்றிய ஈழத்தமிழ் ஊழியர்களை உடன் அழைத்துவந்தனர்.

மலேசியாவில் பொருளாதாரம் விரைந்து வளரத் தொடங்கியபோது, நிருவாகத் துறைகளில் பணியாற்ற மிகுதியாய ஈழத்தமிழர் வரவழைக்கப்பட்டனர். இங்கு வந்தவர் தங்கள் உறவினர்களையும் நண்பர்களையும் வரவழைத்தனர். மேலும், அரசுக்கு ஆங்கிலம் தெரிந்த ஊழியர் மிகுதியாய்த் தேவைப்பட்டனர்.அதனால் பணியில் சேர்வதற்காய தகுதியும் குறைக்கப்பட்டது. ஆகவே ஆயிரக்கணக்காய ஈழத்தமிழர் இங்குக் குடியேற வாய்ப்பமைந்தது; அலுவலகங்களில் வேலையும் எளிதாய்க் கிடைத்தது.[100]

மலாயாவுக்கு விடுதலை கிட்டிய காலை, அரசு பணிகளில் இவர்களுக்கு உயர் பதவிகள் வகிக்கும் பேறு வாய்த்தது; அவர்கள் வாழ்க்கைத்தரம் தமிழகத் தமிழர் வாழ்க்கைத் தரத்தைவிடப் பன்மடங்கு உயர்வு கண்டது. விடுதலை மலாயா / மலேசியாவில் அவர்கள் பெற்றிருந்த ஆங்கிலக் கல்வி, பதவி, பட்டண வாழ்க்கை போன்றவை ஈழத்தமிழர் குழந்தைகள் மேற்கல்வியை எளிதில் பெறும் வாய்ப்பை ஏற்படுத்தின. அதனால் அடுத்த தலைமுறையினர் உயர்கல்வி பெற்றனர்; எல்லா வகையிலும் மேம்பாடு கண்டனர்.[101]

---

99 Rajakrishnan, R., "Social Change and Group Identity among the Sri Lankan Tamil" *Indian communities in Southeast Asia*, chapter 22 (pp.541-557) Ed.Sandhu K.S. & Mani.A - Singapore Times Academic Press, p. 541.

100 மேலது, ப. 542

101 மேலது, பக். 543 - 545

102 Census of Malaya 1931, 1947 and 1957; Population and Housing Census, Malaysia, 1970 (Kuala Lumpur : Government Printers)

## எண்ணிக்கை

இரண்டாம் உலகப் போருக்கு முன் மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் இவர்கள் தொகை தனியாய்க் கணக்கிடப்படவில்லை; தமிழ்நாட்டுத் தமிழர்களோடு சேர்த்துக் கணக்கிடப்பட்டனர். அப்போது (1947) இவர்கள் எண்ணிக்கை 15,411. 1957 இல் இவர்கள் எண்ணிக்கை 24,738. 1970 இல் 24,436. ஆனால் இன்று (1991 இன் கணக்குப்படி) சற்றேறக் குறைய 13,000 மட்டுமே.

## அரசு பணிகளில்

1920களில் அரசு பணிகளில் ஈழத் தமிழர் பேரளவு நிரம்பியிருந்தனர். பணிக்கு ஆள் தேவைப்படும் போதெல்லாம் தங்கள் உறவினர்களை மட்டுமே அப் பணியில் சேர்த்தனர். 1929 இல் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியால் பலர் வேலை இழந்தனர்; பலர் தங்கள் தாயகம் திரும்பினர். பொருளாதாரம் சீர் பெறத் தொடங்கிய பின்னரும் வேலை நீக்கம் செய்யப்பட்டோர் மீண்டும் வேலைக்குச் சேர்த்துக்கொள்ளப்படவில்லை.[102]

## மலாய்க்காரர்க்கு முதன்மை

மலாய்க்காரர்க்கு அரசு பணிகளில் முதலிடம் தரப்பட வேண்டுமென்னும் கொள்கை மிகவும் தீவிரமடைந்தது. அதன் விளைவால் அரசில் துறைவாரியாய் ஈழத்தமிழர் விழுக்காடு கடுமையாய் வீழ்ச்சி கண்டது. மலாய்க்காரர் எண்ணிக்கை பன்மடங்கு உயர்ந்தது.[103]

இந் நிலையில்கூட அரசு பணியகங்கள் முதலாய இடங்களில் ஈழத்தமிழர்க் கிருந்த இடம் தொடரவே செய்தது. கூடுமானவரை இவர்கள் தம் இனத்தவரைத் தவிர மற்றவர் வேலைவாய்ப்புப் பெற இடந்தருவதில்லை. இதனால் மற்றவர் - குறிப்பாய்த் தமிழகத் தமிழரின் சினத்திற்கும் வெறுப்பிற்கும் ஆளாயினர். பல நிலைகளில் தமிழ்நாட்டுத் தமிழர்க்குச் சேர வேண்டிய வாய்ப்புகளைப் பறித்து விட்டவர்களாய் ஈழத் தமிழர் கருதப்பட்டனர்.

## இயக்கங்கள்

கல்வி, பொருளாதாரம், சமுதாய நிலைகளில் தமிழகத் தமிழரைவிட உயர்நிலை பெற்றிருந்த ஈழத்தமிழர் தமக்கெனச் சமுதாய, பொருளாதார, சமய, அரசியல் இயக்கங்களை அமைத்துக்கொண்டனர். கோயில்கள் உட்பட அவர்தம் அமைப்புகளில் தமிழகத் தமிழர்க்கு இடந்தரவில்லை.[104]

---

103 Rajakrishnan, R., op - cit. pp. 543 - 545

104 Sheppard, M., Taman Budiman, Kuala Lumpur: Heinemann Educational Books (Asia) Ltd. 1979, pp. 17, 32.

## நியமனப் பதவிகளில் ...

அரசு நியமனப் பதவிகளில் தொடக்கத்தில் இந்தியநாட்டுத் தமிழர்க்கு வாய்ப்பே இல்லாதொழிந்தது. அனைத்து வாய்ப்புகளும் அவர்களுக்கே போய்ச் சேர்ந்தன.

எடுத்துக்காட்டு :

ஜே. ஆர் வேதவனம், சிலாங்கூர் சட்டமன்றம் (1935)
எஸ். சீனிவாசகம், பேராச் சட்டமன்றம் (1935)
இ. இ. சி. துரைசிங்கம், தலைவர், சமுதாய இணைப்புக் குழு (1949)
(Chairman of the Liaison Committee)

## மாநிலச் சட்ட மன்றங்களில்...

1. ஆர்.பி.எஸ் இராஜ சூர்யா, டி. இராஜேந்திரன் - சிலாங்கூர்

2. எஸ். சின்னத்தம்பி, ஆர். நாகரத்னம், எம். நட்சத்திரம் - நெகிரி செம்பிலான்

3. டாக்டர் முத்துத்தம்பி, எஸ். பொன்னம்பலம், என். பாலசிங்கம் - ஜோகூர்

4. எ. மகேந்திரன், டாக்டர் எஸ். பேரம்பலம் - பேரா

5. நிக்கோலாஸ் பொன்னுத்துரை - பினாங்கு

6. வி. இளையதம்பி - பாகாங்[105]

## ம.இ.கா. வில் ...

மலேசிய இந்தியர் அரசியல் கட்சியான ம.இ.கா. வில் இவர்கள் உறுப்பியம் பெற முயன்றனர். ஆனால் அதன் சட்ட திட்டங்கள் அதற்கு இடமளிக்கவில்லை அதனால் ஈழத் தமிழர்கள் ம.இ.கா.வை மலாயா தேசிய இந்தியர் காங்கிரசு (M.N.I.C.) எனப் பெயர் மாற்றம் செய்ய முயன்றனர். ஆனால் இம் முயற்சி வெற்றி காணவில்லை.[106] அதன் விளைவால் 1946 இல் மலாயாச் சிலோனியர் சங்கக் கூட்டமைப்புத் (Ceylon Federation Of Malaya) தோன்றியது.[107]

---

105 Rajakrishnan, R., மேலது. p.p. 546 - 548, 551
106 Indian Daily Mail, 21 June 1949.
107 Malaya Tribune, 25 June 1947.

இக் கட்சி நிறைவான பலனைத் தரவில்லை. ஆகவே 1958 இல் மலாயாச் சிலோனியர் காங்கிரசு (Malayan Ceylonese Congress) என அது மறு உருவெடுத்தது.[108] இதனில் மற்றச் சிலோன்காரரைவிட ஈழத்தமிழரே வலுப்பெற்றிருந்தனர்.

1966இல் அக் கட்சி கூட்டணி அமைக்க முயன்றது. அதுவும் தோல்வியில் முடிந்தது. மிகக் குறைந்த எண்ணிக்கையிலான உறுப்பியத்தையே கொண்டிருந்ததால் அஃது அரசியல் முதன்மைபெற இயலாமற் போனது. ஆனால் இவர்கள் இந் நாட்டு வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகளைப் பாராட்டும் வகையில் நாடாளுமன்ற மேலவையில் ஓரிடம் இவர்களுக்கு வழங்கப்பட்டது.[109]

## சமுதாய அமைப்பு

ஈழத்தமிழர் சமுதாயம் கட்டுப்பாடுகள் நிறைந்தது; பண்பாட்டுப் பிடிப்புகள் கொண்டது; அவை டச்சுக்காரர்களால் 1780 இல் சட்டமுறையாக்கப் பெற்றது. அதனில் திருமணச் சடங்குகள், 'சீதனம்' (Dowry) முதலாய கூறுகளும் அடங்கும். இதனைத் 'தேசவளமை' என்பர்.

விடுதலை பெற்ற மலேசியாவில் ஏற்பட்டுள்ள பல்வேறு சமூக, பொருளாதார, அரசியல் கோட்பாடுகளுக்கிணங்கப் பல மாறுதல்கள் 'தேசவளமை'யிலும் ஏற்பட்டன. ஆயினும் சீதனப்பழக்கம் மட்டும் பெரிதும் மாறுதல் அடையவில்லை. பெண்களில் பலர்க்குச் சீதனம் கொடுக்க முடியாமல் திருமண வாய்ப்பு அமையாமற் போனது. அதனால் முதுகன்னியர் எண்ணிக்கை உயர்ந்தது. இப்படிப்பட்ட முதுகன்னியர் அவர்கள் இனத்தைவிட்டுப் பிற இனத்தவரை மணக்கும் நிலைகூடக் காணப்படுகிறது.[110]

மலேசியப் பல்லின மக்கள் சூழல், பொருளாதார, சமூகச் சூழல் போன்ற பல காரணங்களில் இன்று இலங்கைத் தமிழர் பிற இனத்தவரை மணப்பது இயல்பாகி வருகிறது. இருப்பினும் அவர்கள் சொந்த இனத்தாரையே மணக்க வேண்டும் என்னும் வேட்கை அவரிடையே மிகுதியாய்த் தென்படுகிறது.

இங்ஙனம் வெளித்திருமணம் என்று வரும்போது, ஈழத்தமிழர் முதலில் தமிழகத் தமிழரையே மணக்க ஒப்புக்கொள்கின்றனர். காரணம், இந்த ஈரினத்தவரும் மொழி, பண்பாடு, சமயம், சமூக அமைப்புகளில் மிகப் பல நெருங்கிய ஒற்றுமைகளைக் கொண்டிருப்பதே ஆகும்.

---

108 Malayan Ceylonese Congress Annual, 1967, p. 31.
109 Rajakrishnan, R., மேலது, ப. 552
110 மேலது, பக். 552 - 553

பொதுவாகத் தற்போதைய ஆய்வில் ஈழத்தமிழர் எண்ணிக்கை பெரிதும் வீழ்ச்சி கண்டுள்ளது. இதற்கு முதன்மையாய காரணங்கள் இரண்டு.

1. குறைந்த அளவிலான பிள்ளைகளைப் பெற்றுக்கொள்ளல்.

2. ஆஸ்திரேலியா, அமெரிக்கா, இங்கிலாந்து முதலாய நாடுகளுக்குக் குடிபெயர்தல்.

இவர்கள் எண்ணிக்கை குறைந்து வருகிறது எனினும், நாட்டு வளர்ச்சியில் இவர்தம் பங்கு குறைந்துவிடவில்லை. ஏற்கெனவே பல துறைகளில் இலச்சினை பதித்துள்ளனர். மலேசிய வரலாற்றில் கல்வி ( தமிழ், ஆங்கிலம்), சட்டம், மருத்துவம் முதலாய துறைகளில் இவர்கள் பங்கு அளப்பரிது. இவர்கள் பொதுச் சேவை (Public Service) யிலும் சளைத்தவர் அல்லர். சமயம் (இந்து), ரோட்டரி கிளப் ( Rotary Club), மகளிர் வழிகாட்டிகள் (Girl Guide), வாணிக அமைப்புகள் முதலாயவற்றில் இவர்தம் பணி போற்றத்தக்கது. தற்போது ஈழத்தமிழர் தொழிற்சங்கங்களிலும் முதன்மைப் பங்கேற்றுப் பணியாற்றி வருகின்றனர்.

## விளையாட்டுத்துறை

ஈழத்தமிழர் விளையாட்டுத் துறையிலும் பங்குகொண்டு நாட்டிற்குப் புகழ் சேர்த்துள்ளனர். விளையாட்டுப் போட்டி ஏற்பாட்டாளராயும் பெருந்தொண்டாற்றி[111] யுள்ளனர்.

## தாய்மொழி, கலை, பண்பாடு, சமயம்

எத்தனையோ மாறுதல்களுக்கிடையே இவர்கள் தாய்மொழியான தமிழை இழந்துவிடவில்லை. பள்ளிகளில் தாய்மொழி வகுப்புகள் (Pupils Own Language) மூலமோ தனிப்பாட வகுப்புகள் மூலமோ தமிழைக் கற்றுக்கொள்கின்றனர். ஆனால் வீட்டில் ஆங்கிலமே பேச்சு மொழியாகிவிட்டது. "ஆங்கிலத்தைத் தாய்மொழியாகவே வரித்துக்கொண்டனர்"[112] இளந்தலைமுறையினரிடையே தாய்மொழி அழுத்தமாய்ப் பதிவதாய்த் தெரியவில்லை. ஆனால், இசை, நடனக் கலைகளை ஆர்வத்துடன் கற்றுப் போற்றி வருகின்றனர்; சிலர் நாட்டின் முன்னணிக் கலைஞர்களாயும் திகழ்கின்றனர்.

தமிழிலக்கியப் படைப்புகளில் இவர்கள் கருத்துச் செலுத்துவதில்லை. அழுத்தமான சமயப்பற்றோடு வாழ்ந்து வருகின்றனர். திருமுறைகளைத் தவறாது ஓதிவருகின்றனர். சமயச் சடங்குகளை மறவாமல் போற்றி வருகின்றனர்.

111 மேலது, ப. 556.

112 நேர்காணலில் முனைவர் ரெ. கார்த்திகேசு கூறியது.

## இணக்கப்போக்கு

இங்ஙனம் கலை, பண்பாடு, சமய அடையாளங்கள் (Identity) மாறாமல் வாழ்ந்து வரும் இவர்கள் நாட்டு வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகள் வரலாற்றில் பதியத் தக்கன. ஒரு காலத்தில் தமிழகத் தமிழர்க்கும் இவர்களுக்கும் இணக்கப் போக்கே இல்லாதிருந்தது. வெவ்வேறு இனத்தவர் போலவே இடைவெளி மிகுந்து வாழ்ந்தனர். தற்போது இவர்கள் தமிழகத் தமிழரோடு இணக்கப்போக்கை - உடன்பிறப்புத் தன்மையைப் பல நிலைகளிலும் மேம்படுத்தி ஒற்றுமையுடன் வாழ்வது சிறப்பிற்குரியது.

# மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு

## க. கவிதை

**வா**ழும் மொழி ஒன்றன் இலக்கிய வரலாறு எல்லையின்றித் தொடர்ந்து வளர்ந்து கொண்டே இருக்கும்; அஃது ஒரு தொடர்கதை போன்றது; தமிழ்மொழி இலக்கிய வரலாறோ சற்று மாறுபட்டது; அது மிக நீண்ட பழைமை உடையது; தமிழகத்தையும் கடந்து ஆலமரம் போல, உலகெங்கும் மாபெரும் கிளை பரப்பி விழுதுவிட்டு வேரூன்றி வளர்ந்துவருகிறது; சிறப்பாய், ஈழத்திலும் மலேசியாவிலும், சிங்கப்பூரிலும் ஊன்றியுள்ள விழுதுகள் தமிழ் மாளிகையைத் தாங்கும் பெரும் தூண்களாய்த் திகழ்கின்றன. மொரீசியஸ் முதலாய நாடுகளில், பள்ளிப் பாடநூல்களும் அச்சாகின்றன; நாள் இதழ்கள், பருவ வெளியீடுகள், சிறப்பு மலர்கள் வெளிவருகின்றன; தமிழ், பண்பாடு, சமயம் முதலாயவற்றை முன்வைத்து, மாநாடுகள் நடைபெறுகின்றன. இவை எல்லாவற்றையும் ஒருங்கு திரட்டி ஒப்புநோக்கி எழுதாவிடின், அது முழுமை பெற்றதாகாது. ஈழத் தமிழ் இலக்கியம் ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்க இலக்கியத்திலேயே பதிந்துவிட்டது.[1] ஆனால், மலேசிய, சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம் ஒரு நூற்றாண்டிற்கு முன்புதான் தோன்றி வளர்ந்துவருகிறது.

1965ஆம் ஆண்டிற்கு முற்பட்ட தமிழ் இலக்கியங்களை மலேசிய இலக்கியம், சிங்கப்பூர் இலக்கியம் எனப் பிரித்துப்பார்க்க இயலாது; அக் காலத்திற்கு முன்புவரை இரண்டு நாடுகளும் ஒரே நாடாய் இருந்தன. அதனால், அதுவரை மலர்ந்த இலக்கியத்தை 'மலேசிய இலக்கியம்' என்று குறிப்பிடுதல் சாலப் பொருந்தும். 'சிங்கப்பூர் இலக்கியம்' எனினும் குற்றம் இல்லை. சிங்கப்பூர் தனிக் குடியரசாயபின்

---

1 முதைச்சுவல் கலித்த மூரிச் செந்தினை
ஓங்குவணர்ப் பெருங்குரல் உணீஇய பாங்கர்ப்
பகுவாய்ப் பல்லிப் பாடோர்த்துக் குறுகும்
புருவைப் பன்றி வருதிறம் நோக்கிக்
கடுங்கைக் கானவன் கழுதுமிசைக் கொளீஇய
நெடுஞ்சுடர் விளக்கம் நோக்கி வந்துநம்
நடுங்குதுயர் களைந்த நன்ன ராளன்
சென்றனன் கொல்லோ தானே குன்றத்
திரும்புலி தொலைத்த பெருங்கை யானைக்
கவுள்மலி பிழிதரும் காமர் கடாஅம்
இருஞ்சிறைத் தொழுதி யார்ப்ப யாழ்செத்(து)
இருங்கல் விடரளை அசுணம் ஓர்க்கும்
காம்பமல் இறும்பில் பாம்புபடத் துவன்றிக்
கொடுவிரல் உளியம் கெண்டும்
வடுவாழ் புற்றின வழக்கரு நெறியே.

அகநானூறு, 88 - ஈழத்துப் பூதன்தேவனார்

(1965) அந் நாட்டு இலக்கியப் போக்குகள் மாறின; தனித் தன்மை அடையலாயின. என்றாலும், தொடக்ககால மலேசிய இலக்கியத்துக்கு அடி எடுத்துக் கொடுத்தது சிங்கப்பூரே என்பது குறிப்பிடத்தக்க வரலாற்றுச் சான்றாகும்.

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இங்குள்ள தோட்டங்களில் வேலை செய்ய ஒப்பந்தக்கூலிகளாய்க் கொண்டுவரப்பட்ட தமிழருள் பெரும்பாலார் இங்கேயே நிலைத்துக் கலை, இலக்கியம் முதலாயவற்றை வளர்த்தனர்.

கலை ஒன்று பிறக்க வேண்டுமாயின் அதற்கேற்ற சூழ்நிலை தேவை. கலைஞரை, கலைப் படைப்பினை வரவேற்க, வளர்க்க வளமான சமுதாய அமைப்புத் தேவை; அதனிலும், இலக்கியக் கலை வளர வேண்டுமாயின், நன்கு கற்ற சமுதாயம் வேண்டும். இல்லையேல், குருடன் கைப்பட்ட ஓவியம் போன்றும், செவிடன் செவிப்பட்ட இசை போன்றும் பயனற்றுப் போகும்.

"இலக்கிய வரலாறு என்பது, அதன் சாரமான பகுதியை நினைத்து நோக்கினால், ஒரு நாட்டின் கல்வி வளர்ச்சி வரலாறேயாகும். அஃது ஒரு தேசத்தின் வாழ்க்கை வரலாறு (National Biography)" [2] என அறிஞர் கூறுவதை ஈண்டு நினைவுகூர்தல் சாலும்.

இவ் வரலாற்றின் முற்பகுதிகளில் "மலேசியத் தமிழர் சமுதாய அமைப்பு, அரசியல் நிலை, கல்விச் சூழல், பொருளாதார நிலை, பழக்கவழக்கம், கலை, பண்பாடு முதலாயவை எடுத்துரைக்கப்பட்டன. அச் சூழலில் இலக்கியம் தோன்றியிருக்க வாய்ப்பே இல்லை என்ற முடிவிற்கு வர வாய்ப்புண்டு என்றாலும், அச் சூழலிலும் இலக்கியம் கால்கொள்ளவே செய்தது. இதுகுறித்து முனைவர் இரா. தண்டாயுதம் கூறும்போது, "எழுத்தாளன் சுதந்திரத்திற்கும், இலக்கியப் படைப்புகளுக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்புண்டோ அதே அளவு தொடர்பு ஒரு நாட்டின் சுதந்திரத்திற்கும் அந் நாட்டு இலக்கிய வளர்ச்சிக்கும் உண்டு. அடிமை நாட்டில் என்னதான் வளம் பொங்கிக் கொழித்தாலும், இலக்கியம் என்பது கால்கொள்ளாது. இந் நிலையில் ஓர் அடிமை நாட்டிலிருந்து, மற்றோர் அடிமை நாட்டிற்குக் குடியேறி வாழ்வதற்கே கடுமையாய்ப் போராடிக் கொண்டிருக்கும்போது தமக்கென ஒரு தனி இலக்கியத்தை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்ற ஓர் எழுச்சியை யாரிடமும் எதிர்பார்ப்பது இயற்கைக்கு முரணானது" [3] என்கிறார். எனினும் இத்தகு முரண்பாடாய சூழலில் எத்தனையோ சாகா இலக்கியங்கள் மலர்ந்துள்ளன. மலேசியத் தமிழ் இலக்கியத்தின் தொடக்க கால வரலாறும் இத்தகையதுதான். அதனைக் காலவாரியாய்ப் பிரித்துப் பார்த்தால்தான் அதன் வளர்ச்சிப் படிகளை உள்ளவாறு உணர முடியும்.

இங்கு நிகழ்ந்த அரசியல் மாற்றங்களுக்கேற்ப இலக்கிய வளர்ச்சியைப் பகுத்துப் பார்த்ததால், அஃது அத்துணைச் சரியான பகுப்பாய் அமையாது; சமுதாய

---

2 தமிழண்ணல் - புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு, ப. 9

3 தண்டாயுதம், இரா., தற்காலத் தமிழ் இலக்கியம், பக். 10-11

மாறுதல்களையும் இலக்கியப் போக்குகளையும் கருத்திற்கொண்டு அதனைப் பகுத்தலே பொருத்தமாகும். அப் பகுப்புக் கீழ்க்காணுமாறு அமையலாம்.

1. 1887முதல் 1941வரை - உரிமையுணர்ச்சி இல்லாக் காலம்
2. 1942முதல் 1945வரை - போர்முகில் சூழ்ந்த காலம்
3. 1946முதல் 1949வரை - எழுச்சி பிறந்த காலம்
4. 1950முதல் 1959வரை - ஏற்றமிகு காலம்
5. 1960முதல் 1969வரை - ஏற்றம் தொடர்ந்த காலம்
6. 1970முதல் 1979வரை - சோர்வு காலம்
7. 1980முதல் இன்றுவரை - சோர்வு தொடர்காலம்

1978இல் மா. இராமையா கீழ்க்காணுமாறு காலப்பகுப்புச் செய்துள்ளார்:

1. 1946முதல் 1956வரை
2. 1956முதல் 1966வரை
3. 1967முதல் 1976வரை

ஒவ்வொரு பத்தாண்டுகளையும் அவர் ஒவ்வொரு காலகட்டமாய் வரையறை செய்திருக்கிறார்; 1946ஆம் ஆண்டிற்குமுன் இந் நாட்டில் கவிதை, கதை, கட்டுரைகள் வெளிவந்திருக்குமாயின், அவை தமிழகத்தில் கல்வி கற்றுப் பல காரணங்களால் இங்குக் குடியேறியவர் எழுதிய படைப்புகளாகும்.

"இந் நாட்டு மணம் கமழும் இலக்கியம் 1946-க்குப் பின்னரே உருவாயிற்று. மணத்தையும், வளத்தையும், அழகையும், செழுமையையும் இலக்கியமாய்ப் படைத்தவர் இந் நாட்டிற் பிறந்து இங்கேயே கல்வி கற்ற எழுத்தாளரேயாவர். அவர்களாலேயே மண்ணின் உருவினையும் திருவினையும் இலக்கியமாக்க முடிந்தது; தேசிய இலக்கியம் படைத்த பெருமையும் அவர்களையே சாரும். அதனாலேயே இலக்கியக் காலகட்டம் 1946இல் தொடங்குகிறது"[4] என்று நீண்ட விளக்கம் தருகிறார்.

இவர் கூற்றுப்படி 1946ஆம் ஆண்டிற்கு முன் தோன்றிய அத்துணை இலக்கியங்களையும், 'மலேசிய இலக்கியம் அல்ல' என்று தள்ளிவிட முடியாது. தமிழகத்திலிருந்தும் இலங்கையிலிருந்தும் வந்த புலவர், தம் படையல்களில் அன்றைய உழைப்பாளர் சமுதாயத்தைப் படம்பிடிக்கவில்லை என்றாலும், இந் நாட்டு நிகழ்வுகள்குறித்துப் பாடிய பாடல்களில் நாட்டுச் சூழல் தெரியவே செய்கிறது. நாட்டுப்புறப் பாடல்கள் அனைத்தும் முழுக்க முழுக்கத் தோட்டப்புற மக்கள் வாழ்வினை உள்ளவாறு படம்பிடித்துக் காட்டும் வரலாற்று ஆவணங்களாய் மிளிர்கின்றன. இம் மண்ணில் குடியேறித் தம் குருதியைக் கொட்டி உயிர்விட்டு எருவான தோட்டப்புற மக்கள் நெஞ்சங்களிலிருந்து பீரிட்ட தோட்டப்புறப்

4 மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு, ப. 13

பாடல்கள், மலேசிய இலக்கியம் அல்ல என்று ஒதுக்கிவிட முடியாது; ஒதுக்கவும் கூடாது. தமிழ் நாட்டின் நாகையிலிருந்து வந்த குடும்பத்தைச் சேர்ந்தவரான அறிஞர் முன்ஷி அப்துல்லா படைத்த மலாய்மொழி இலக்கியங்களை மலாய்க்காரர் முதன்மை தந்து போற்றி வருதலை ஈண்டு நினைவுகூர்தல் வேண்டும். சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய வளர்ச்சியைக் காலப்பகுப்புச் செய்த திரு. ந. கோவிந்தசாமி, தொடக்க காலத்தை உள்ளடக்கியே வரையறுத்துள்ளார்.[5] அப் பகுப்பு வருமாறு:

| | |
|---|---|
| தொடக்க காலம் | 1887 - 1990 |
| சீர்திருத்த காலம் | 1930 - 1942 |
| ஜப்பானியர் காலம் | 1942 - 1945 |
| இன எழுச்சிக் காலம் | 1946 - 1960 |
| குழப்ப காலம் | 1961 - 1970 |
| நிலைபெற்ற காலம் | 1971 - 1980 |
| இசைவு கிடைத்த காலம் | 1981 - 1989 |

இந் நாட்டில் தொடக்க கால இலக்கியம் மூன்று முனைகளில் தோன்றின:

1. வாய்மொழியாய்த் தோட்டப்புறங்களில் தோன்றிய தோட்டப்புற (நாட்டுப்புற)ப் பாடல்கள்,
2. கிழமை, மாத, நாள் இதழ்களில் முகிழ்த்தவை,
3. நூல்கள்வழிப் பிறந்தவை.

இந் நாட்டில் தோன்றிய வாய்மொழி இலக்கியம் (தோட்டப்புறப் பாடல்) பிறக்கும் போதே மலேசியக் காற்றைச் சுவாசித்துக்கொண்டும், நீரை அருந்திக் கொண்டும் பிறந்தது; அதுவே தென்னகத்தார் தாயகத்திலிருந்து வந்த நிலையையும், வந்தகாலை அடைந்த ஏமாற்றத்தையும், அதிர்ச்சியையும், அடைந்த கொடுமைகளையும் உள்ளவாறு எடுத்துரைக்கிறது. 1945 வரையிலாய உண்மை நிலைகளை அப் பாடல்களே தெரிவிக்கின்றன. அப் பாடல்கள் குறித்துத் தமிழக ஆய்வாளர் ஒருவர், “மலேசிய நாட்டுப்புறப் பாடல்களே மலேசியத் தமிழ் இலக்கியமாகத் திகழ்கின்றன”[6] எனக் கூறுகிறார்.

“கங்காணின்னா கங்காணி கறுப்புச் சட்டைக் கங்காணி
சஞ்சியிலே கூட்டிவந்து சாகடிக்கும் கங்காணி
சீனிக்குக் காக்காய் ஓட்டிச் சீராக வாழலான்னு
சிரிக்கச் சிரிக்கப் பேசிச் சீரழிக்கும் கங்காணி”[7]

இது முகவர் (agent), கண்காணியர் ஏழை மக்களைத் தென்னகத்திலிருந்து

---

5 சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள், பக். 6-37.

6 மதியழகன், ம., மலேசியத் தமிழ் நாவல்கள் - ஓர் அறிமுகம், ப.24

7 களஞ்சியப் பாடல் எண், 117

ஒப்பந்தம் (Janji) மூலம் ஏமாற்றி அழைத்து வந்த நிலையைக் கூறுகிறது.

“நாவ பட்டணம் வந்தேண்டி
நம்மவரப் பாத்தேண்டி
தெப்போவில் அடைச்சிவெச்சிச்
செரிபாதி பொதச்சாண்டி”[8]

இது தமிழகத்திலிருந்து புறப்பட்டபோது உற்ற துன்பநிலையைக் கூறுகிறது.

“கொசுவால குடிச்சமிச்சம்
கொள்ளையிலும் போனாங்க”[9]

இஃது, இங்கு நேர்ந்த அவலத்தைக் கூறுகிறது.

“அத்தாப்பு வீடுகட்டிக் குட்டித் தங்கம்
அதிலஒரு ஜன்ன(ல்) வச்சிக் குட்டித் தங்கம்
எட்டிஎட்டிப் பார்த்தாலும் குட்டித் தங்கம்”[10]

இஃது இங்கிருந்த குடியிருப்பு நிலைகளைக் கூறுகிறது.

“பாலுமரம் வெட்டலான்னு பழயகப்பல் ஏறிவந்தேன்
நாப்பத்தஞ்சி காசப்போட்டு நட்டெலும்ப முறிக்கிறானே
முப்பத்தஞ்சி காசப்போட்டு மூட்டெலும்ப முறிக்கிறானே”[11]

இது பணிச்சுமையையும், பொருளாதாரச் சீர்கேட்டையும் எடுத்துரைக்கிறது.

“கங்காணி மொதப்பெரட்டில்
கணக்கெடுத்துக் காச வெச்சான்
பென்னிதுரை ஆபீஸ் மேலே
பத்துவிரல் ரேகை வச்சேன்”[12]

இது தொழிலாளர் அப்பாவித் தனத்தையும் கல்லாச் சூழலையும் விளக்குகிறது.

“ஜாதிபத்திப் பீத்துறீங்க - பெரிய
ஜாதகமே பாக்குறீங்க
தீண்டாத ஜாதீன்னு - தெரிஞ்சே
திண்டுமெத்தை கேப்பீங்க”[13]

---

8 களஞ்சியப் பாடல் எண் 128
9 களஞ்சியப் பாடல் எண் 129
10 களஞ்சியப் பாடல் எண் 126
11 களஞ்சியப் பாடல் எண்118
12 களஞ்சியப் பாடல் எண்128
13 களஞ்சியப் பாடல் எண்130

இது, சமுதாயத்தில் அழுத்தமாய்ப் பதிந்திருந்த சாதி வேற்றுமையை உணர்த்துகிறது.

“மலாய்நாடு உட்டுவந்து
மட்டையும் அடிக்காதே
புத்திய வசமாக்கி
பொழைக்கவழி பாருமையா”[14]

இஃது ஒப்பந்தம் முடிந்து நாடு திரும்பிய நிலையை உணர்த்துகிறது.

“வாராண்டி வாராண்டி சப்பாந் தொரை
வரகரிசிக் கூழுக்கும் பரதேசியா மாத்தனாண்டி”[15]

இது மலாயாவின் தொழிலாளர் வாழ்க்கை நிலையைச் சுட்டிக் காட்டுகிறது.

“நொப்பரானே சப்பான்காரன்
ரொம்ப மோசமாம்
அப்புராணி மனுசர்நம்மை
அடிச்சிக் கொல்லுறான்”[16]

இது சயாமில் மரண ரயில்பாதை அமைத்தபோது உற்ற துன்பங்களைச் சுட்டிக்காட்டிக் கண்களில் நீர் கசியச் செய்கிறது. இங்ஙனம் வாய்மொழி இலக்கியமான தோட்டப்புறப் பாடல்கள், தென்னகத்திலிருந்து இங்கு வந்த தொழிலாளர், இங்குற்ற அவலங்களை அப்படியே படம்பிடித்துக் காட்டுகின்றன. இத் தொகுதியில் சில பாடல்களே (115 - 132) இடம்பெற்றுள்ளன.

முனைவர் இரா. தண்டாயுதம் மலாயாப் பல்கலைக்கழகப் பொருளுதவியுடன் திரட்டிய பாடல்களெல்லாம் நூலாக்கம் பெற்றால் எத்தனையோ அரிய வரலாற்றுச் செய்திகளை அறியலாம்.

## ஏடுகள் தொடக்கம்

ஏடுகள்-இதழ்கள் (பத்திரிகை), நூல்கள் சற்றேறக்குறைய ஒரே காலத்தில் இங்குப் பிறப்பெடுத்தன. இந் நாட்டின் முதல் தமிழ் இதழ் ‘சிங்கை வர்த்தமானி’. இது 1875இல் தன் பயணத்தைத் தொடங்கிற்று. இதன் ஆசிரியர் சிகு மகதூம் சாயபு. பெயருக்கு முன் உள்ள ‘சிகு’ (cikgu) என்பது மலாய்மொழியில் ஆசிரியரைக் குறிக்கும் என அ. ம. சாமி குறிப்பிட்டுள்ளார்.[17]

---

14 பாடல் எண் 128
15 பாடல் எண் 131
16 பாடல் எண் 132
17 தமிழ் இதழ்கள்-19ஆம் நூற்றாண்டு, ப.98

அடுத்துத் தங்கை நேசன் (மாதம் இருமுறை): இதன் ஆசிரியர் மு.மு.சையது பின் முகைதீன். இது 1878இல் தன் பயணத்தைத் தொடங்கிப் பினாங்கிலிருந்து வெளிவந்தது; டாக்டர் இரா. தண்டாயுதம் தம் கட்டுரையில் இங்ஙனமே குறித்துள்ளார்.[18] ஆனால், ஆதித்தனார் மாணவர் அ. ம. சாமி இவ் விதழ் சிங்கப்பூரிலிருந்து வந்ததாய்க் குறிப்பிட்டுள்ளார்[19] முனைவர் இராம. சுப்பையா தொகுத்த தமிழ் மலேசியானாவில் (Tamil Malaysiana) இக் குறிப்பில்லை.

தங்கை நேசனைத் தொடர்ந்து சிகு மகதூம் சாயபுவை ஆசிரியராய்க் கொண்டு சிங்கை நேசன் (1887) வெளிவந்தது. இது சிங்கப்பூரிலிருந்து வெளிவந்த இதழ் என்பது இதன் பெயராலேயே விளங்கும். பினாங்கிலிருந்து உலகநேசன் (கிழமை இதழ் 1887), இந்து நேசன் (1888), பினாங்கு விஜயகேதனம் (1888), எஸ். அம்பலவாணப் பிள்ளையை ஆசிரியராய்க் கொண்ட தேஜோபிமானி (1896), பினாங்கு வர்த்தமானி (1897) முதலாய இதழ்கள் கடந்த நூற்றாண்டிலேயே வெளிவந்தன. அவை இலக்கிய முயற்சிகளுக்கு ஊக்கம் தந்தன என்று உணர முடிகிறது. ஆனால், நிலைக்கக் கூடிய இலக்கியப் படைப்புகளை அவை தந்தன என்பதற்குச் சான்றில்லை.

இங்குத் தொடக்க காலத்தில் தோன்றிய இதழ்கள் மிகமிகக் குறைவான படிகளே அச்சிடப்பட்டன; 'தங்கை நேசன்' 150 படிகளே அச்சாயிற்று; அவற்றில் சில ஏடுகள் வெளிநாடுகளுக்கும் சென்றன; அவை அக்கால மக்களிடம் மிகுதியாய்ப் பரவவில்லை; குறிப்பிட்ட ஒரு சிறிய வட்டத்திற்குள் புழங்கின; மேலும், எந்த இதழும் நீண்டு நிலைக்கவில்லை.

இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் (1905) பேரா வர்த்தமானி தோன்றிற்று; தொடர்ந்து 1945வரை எண்பதிற்கு மேற்பட்ட இதழ்கள் தோன்றின. அவற்றுள் 'தமிழ்நேசன்' (1924)[20], தமிழ்முரசு (1935)[21] இரண்டும் தொடக்க காலம் முதல் இன்றுவரை வாழும் வளமான நாளிதழ்களாய்த் திகழ்கின்றன; சமுதாயக் குரலாய் ஒலித்து வருகின்றன. தமிழவேள் கோ. சாரங்கபாணியை ஆசிரியராய்க் கொண்டு வெளிவந்த கிழமை இதழாய 'முன்னேற்றம்' (1931), மாத இதழாய 'சீர்திருத்தம்' (1935) இரண்டும் சீர்திருத்தச் சிந்தனைகளைத் தூவி வந்தன. உ. அரு. அருணாசலம் செட்டியாரை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்த மாத இதழான 'தமிழ்க்கொடி' (1939)[22] நல்ல இலக்கிய வளமுடைய ஏடாய்த் திகழ்ந்தது.

---

18 ஒரு நூற்றாண்டு கால மலேசியத் தமிழ்க் கவிதை, மலேசியத் தமிழ் எழுத்தாளர் இரண்டாவது தேசிய மாநாட்டு மலர், பக்கம் குறிக்கப்பெறவில்லை.

19 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள் (1944), ப. 103

20 விரிவிற்கு 620 ஆம் பாடலின் பின்புலம் - இதழ்கள் பகுதியில் காண்க.

21 விரிவிற்கு 621 ஆம் பாடலின் பின்புலம் - இதழ்கள் பகுதியில் காண்க.

22 விரிவிற்கு 619 ஆம் பாடலின் பின்புலம் - இதழ்கள் பகுதியில் காண்க.

போர்முகில் சூழ்ந்திருந்த சப்பான் ஆட்சிக் காலத்தில் (1941-45) எல்லாம் முடங்கிக் கிடந்தன; சீனமொழி இதழ்கள் எல்லாம் நிறுத்தப்பட்டன. ஒரே ஓர் இதழ்மட்டும் வெளிவர இசைவு கிடைத்தது. ஆனால் தமிழில் 20 இதழ்கள்வரை தோன்றியுள்ளன. அவற்றுள் சி. வீ. குப்புசாமியை ஆசிரியராய்க்கொண்ட 'யுவபாரதம்' (கிழமை இதழ், 1942), 'சந்திரோதயம்' (கிழமை இதழ், 1942), மீராவை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்த 'இடிமுழக்கம்' (மாத இதழ், 1942) முதலாய இதழ்களின் பெயர்களே விடுதலை உணர்வைத் தூண்டுவனவாகும்.

நேதாஜி தலைமையேற்ற விடுதலை இயக்கம் (Indian Indipendent League), இந்திய தேசிய இராணுவம் (Indian National Army) ஆகிய இயக்கங்களுக்கு இவ் வேடுகள் பேருக்கம் தந்தன; இந்திய நாட்டு விடுதலை உணர்வைத் தூண்டின; 1940ஆம் ஆண்டிற்கு முன்னிருந்த அடிமை உணர்வு வீழ்ந்து விடுதலைப் போராட்ட உணர்வு பெருக ஏடுகள் பங்காற்றின. இஃது ஒரு பெரும் மாறுதலாகும். கடந்த நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து நிலவிவந்த தளைகளிலிருந்து மீள, இக் காலகட்டம் அடித்தளமிட்டது; தென்கிழக்காசியப் பகுதிகளுக்கே ஒரு புதிய விழிப்பை - எழுச்சியை ஏற்படுத்தியது. இதனில் நேதாஜிக்கு மிகப் பெரும் பங்குண்டு.

## தமிழர் தொடங்கிய மலாய், சீன இதழ்கள்

தமிழர் தொடக்க காலத்தில், தமிழ் இதழ்களொடு மலாய், சீன இதழ்களையும் வெளியிட்டனர். இது வியப்பினை அளிக்கிறது. முன்ஷி முகம்மது சையது பின் முகைதீன் என்பவர், சிங்கப்பூர் - மலேசியாவில் பிறந்த தமிழ் முசுலிம் எனக் கூறப்படுகிறது. 'ஜாவி - பிராணக்கான்' என்ற மலாய் இதழினைச் சிங்கப்பூரில் 1876இல் தொடங்கி நடத்தினார்.

"மலேசியாவில் சீன இதழ் ஒன்றனை வெளியிடவும் இந்தியர் ஒருவர் முயன்றுள்ளார்" என்று சென் மொங் என்பவர் ஆய்ந்து கூறியுள்ளார் என்று தம் 'இதழியல் வரலாறு' என்னும் நூலில் (ப. 313) மா. சு. சம்பந்தன் குறிப்பிடுகிறார். இதே செய்தியை அ. மா. சாமியும் தம் '19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இதழ்கள்' என்னும் நூலில் குறிப்பிட்டிருப்பதொடு ,"கோலாலம்பூரில் 'நன் யாங் சிங் பாவ்' எனும் சீனமொழி இதழ் வெளிவந்தது. இதனை வெளியிட்டவரும் ஒரு தமிழரே"என்று கூறியுள்ளார் (ப. 98).

## நூல்கள்

நூல்கள் என்னும் போது இங்கு வந்த முதல் நூல் 'ஆறுமுகப் பதிகம்' எனும் கவிதை நூலே என்று முனைவர் ந. வீ. செயராமன் குறிப்பிடுகிறார்.[23] இதுகுறித்து உறுதியான விவரங்கள் கிட்டவில்லை என்றும் எழுதியிருக்கிறார். முனைவர் இராம.

23 மலேசியாவில் மரபு கவிதைகள், மலேசியத் தமிழ்க் கவிதைக் கருத்தரங்க மலர், ப. 31

சுப்பையா தொகுத்த தமிழ் மலேசியானாவிலும் அதுபற்றிய குறிப்பு இல்லை. மலேசியாவில் இயற்றப்பட்ட பழைய பாடல் என்ற வகையில் திகழ்வது சிங்கப்பூரைச் சேர்ந்த நாராயணசாமி நாயகன் என்பவர் எழுதிய இசைப்பாடலே. சென்னையிலிருந்து வெளிவந்த 'தத்துவபோதினி' என்ற மாத இதழில் அப் பாடல் வெளிப்போந்தது (1866). அப் பாடல் இக் களஞ்சியத்தில் 309ஆம் பாடலாய் இடம்பெற்றுள்ளது.

உறுதியாகக் கிடைக்கும் வரலாற்றடிப்படையில் இந் நாட்டில் வெளிவந்த முதல் நூல் கவிதை நூலே. இலங்கையிலிருந்து சிங்கப்பூருக்கு வந்து முறைமன்ற மொழிபெயர்ப்பாளராய்ப் (துவிபாஷி) பணிபுரிந்தவரும், தமிழ்ப் புலவருமான சதாசிவ பண்டிதரே மலேசியத் தமிழ் இலக்கிய நூல் வெளியீட்டிற்குக் கால்கோளிட்டார். அவர் 1887இல் இயற்றிய வண்ணை அந்தாதி, வண்ணைநகர் ஊஞ்சல், சிங்கைநகர் அந்தாதி, சித்திரகவிகள் ஆகிய நான்கு நூல்களும் ஒரே தொகுதியாய் 1887இல் வெளிவந்தன. சிங்கப்பூர்த் தீனோதயவேந்திர சாலையில் அச்சிடப்பட்டது. அச்சக உரிமையாளர் சிகு மகதூம் சாயபு.

இந் நான்கு நூல்களும் பத்திவுணர்வுகொண்ட சிற்றிலக்கியங்களாகும். சிங்கைநகர் அந்தாதி, சித்திரகவிகள் எனும் இரண்டு நூல்களும் சிங்கப்பூரில் கோயில்கொண்ட முருகப் பெருமானின்மீது பாடப்பட்டவை. இக் களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ள 38, 39, 40, 41ஆம் பாடல்கள் இந் நூல்களின் செறிவினை எடுத்துக்காட்ட வல்லன.

சதாசிவ பண்டிதர் நூல்களைத் தொடர்ந்து பதானந்த மாலை (1890), மன்மதன் திவ்விய சரித்திர அதியுல்லாச லாவணி (1893), அதிவிநோதக் குதிரைப்பந்தய லாவணி (1893) முதலிய நூல்கள் வெளிப்போந்தன.

இந்த நூற்றாண்டின் இலக்கிய வரவினை முகம்மது சுல்தான் மரக்காயர், தம் சீறாச் சதகத்தின் வாயிலாய்த் (1900) தொடங்கியுள்ளார். தொடர்ந்து 1940வரை ஏறக்குறைய 20 நூல்கள் வெளிவந்தன.[24]

1940வரை வெளிவந்த கவிதை நூல்களின் பாடுபொருள் பெரிதும் பத்தியையும் அவ்வப்போது நிகழ்ந்த வெள்ளம், கொலை முதலாய நிகழ்வுகளையும் அடிப்படையாய்க் கொண்டுள்ளன. சமூக உணர்வு அவற்றிலில்லை. அதற்குக் காரணம் அன்று நூலியற்றியோரெல்லாரும் பட்டணங்களில் வாழ்ந்தமையேயாகும்; தோட்டப்புறங்களொடு அவர்களுக்கு எவ்வகைத் தொடர்பும் இல்லை; தோட்டப்புற மக்களுக்கும் பட்டணங்களுக்குச் செல்லும் உரிமையோ, தக்க போக்குவரத்து வசதிகளோ அன்றில்லை; அவர்கள் தோட்டமென்னும் சிறைக்கூடத்தில் அடையுண்டு கிடந்தனர்.

---

24 விரிவிற்குக் களஞ்சியத்தில் வந்துள்ள மலேசிய நூல்களின் பட்டியலைக் காண்க.

அக் காலத்துக் கவிதைப் போக்குக் குறித்துத் சி. வீ. குப்புசாமி, "..... அக் காலத்தில் நிலவிய சூழலுக் கேற்றவாறே அவை வெளிவந்தன. ஆலயங்களை மையமாய்க்கொண்டே தமிழர் வாழ்ந்தமையால், முதலில் ஆலயங்கள், தெய்வங்கள், அவற்றின் விழாக்கள் பெயராலேயே சிந்துகளும், கீர்த்தனங்களும், பாடல் திரட்டுகளும் வெளியாயின; தவிர, அவ்வப்போது நிகழ்ச்சிகளைச் சித்திரிக்கும் பாடல்களும், கொலைச்சிந்துகளும், இலாவணிகளும் வெளியாகியுள்ளன"[25] எனக் கூறுகிறார்.

## சமூகச் சிந்தனைகள்

இக் காலகட்டத்தில் தோன்றிய கவிதைகளில் சமுதாயச் சிந்தனைகளும் ஆங்காங்கே பெய்யப்பட்டிருந்தன வென்பதை மறக்க இயலாது. இதுகுறித்து முனைவர் இலட்சுமி மீனாட்சிசுந்தரம்,

"அதிவிநோதக் குதிரைப்பந்தய லாவணி (1893), சிங்கப்பூர்த் தமிழரிடையே சமூக அக்கறை அரும்பத் தொடங்கியதற்குத் தக்க சான்றாகும். அது சிங்கப்பூர்பற்றிய வரலாற்றுச் செய்திகளையும் சமூகவியல் குறிப்புகளையும் தன்னகத்தே கொண்ட ஒரு பயனுடைய நூல். இந் நூலில் மலேசிய-சிங்கப்பூர் மக்கள் பயன்படுத்தும் மலாய்ச் சொற்கள் இடப்பின்னணியைத் தெளிவுபடுத்துவன. சுருங்கக் கூறின், சிங்கப்பூர்ப் பின்னணியில் நூல்கள் படைக்க வேண்டும் என்னும் வேட்கை இக் காலத்தே தோன்றியது."[26] செ. எ. அபாஸ் பாவலர் இயற்றிய வழிநடைச் சிந்துப் (1933) பாடல்களில் மலேசிய நாட்டுப்புறச் சூழலைக் காண முடியும்.

இக் காலகட்டத்தில் தமிழ்க் கவிதைத் துறைக்கும் ஒரு புதிய எழுச்சி ஏற்பட்டது. தமிழ்க் கவிதை எழுதுவார்க்கு வழிகாட்டி ஊக்கப்படுத்தவும், சிறுகதை முதலிய உரைநடை எழுதுவார்க்கு வழிகாட்டவும் பத்து பகாட்டில் கவிதா மண்டலம் (1943) தோன்றியது. மலேசியத் தமிழ் இலக்கியத் துறையை வளர்க்க- வளப்படுத்தத் தோன்றிய முதல் அமைப்பு இது என்பது புலனாகிறது. நாடெங்கணுமிருந்த எழுத்தாளர்களை ஒன்றுகூட்ட இவ் வமைப்பு 1946இல் 'கவிதா மண்டலம்' என்னும் பெயரில் ஒரு மலரை வெளியிட்டது. அஃதில் உறுப்பினர்கள் இயற்றிய நல்ல கவிதைகள் இடம்பெற்றன.

## இருவகை இலக்கியப் போக்குகள்

இந் நாட்டு இலக்கியப் போக்கினை (1945வரை) இருவகையாகப் பிரிக்கலாம்; ஒன்று, புலவர் இதழ்கள், நூல்கள் வழியாய்ப் படைத்த இலக்கியம்; மற்றொன்று தோட்டப்புற மக்கள் படைத்த வாய்மொழி இலக்கியம்

---

25. பொன்னி இலக்கியவட்டம் நடத்திய கவிவாணர் ஐ. உலகநாதன் கருத்தரங்கில் (1970) ஆற்றிய உரை, செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமி கருத்தரங்க மலர் (1972), பக்க எண் குறிப்பிடப்படவில்லை.
26. இலட்சுமி மீனாட்சிசுந்தரம், 8ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர் (1995), ப. 214

(தோட்டபுறப் பாடல்). புலவர் இலக்கியத்தில் தோட்டப் பாட்டாளியர் சிந்தனைகள் தென்படவில்லை; பத்தியே முதன்மை கொண்டன. அவ்வப்போதைய நிகழ்வுகள் முதலிய ஒருசில பாடுபொருளே அவர்கள் பாக்களில் தென்படுகின்றன; மக்கள் வாழ்வுச் சிக்கல்கள் அவ் விலக்கியங்களில் பதியவில்லை. தோட்டப்புற மக்கள் படைத்த வாய்மொழி இலக்கியத்தில் முழுக்க முழுக்க அவர்கள்பற்றிய சிந்தனைகளே நிரம்பியிருக்கின்றன. பணிச்சுமை, நம்பி ஏமாந்தமை, வஞ்சகம், விரக்தி, காதல், பொழுதுபோக்கு, உணர்வு, கேலி, கிண்டல், நையாண்டி முதலாயவை பாடுபொருள்களாய் விளங்குகின்றன.

## மலாய், சீன, இலக்கியப் போக்குகள்

இக் காலகட்டங்களில், மலாய், சீன இலக்கியப் போக்குகள்கூட எழுச்சிமிக்கனவாய் இல்லையென்று, அம் மொழி இலக்கிய அறிஞர் எடுத்துரைக்கின்றனர். சீனமொழி இலக்கிய வளர்ச்சிக்கும் தாளிகைகளே துணைநின்றன என்கிறார் டான் எங் டெய்க்.[27]

அது, "அவர்கள் தொடக்க எழுத்துகளில் சீனநாட்டுத் தாக்கம் மிகுந்திருந்தது என்பதை எடுத்துரைக்கிறது" என்கிறார் டான் எங். அதற்குரிய காரணம் அவற்றைப் படைத்தவர் சீனநாட்டில் கல்வி கற்று இங்கு வந்து எழுதியமை" [28] என்கிறார்.

சப்பானியர் ஆட்சிக் காலத்தில் மலாய்க் கவிஞருள் பலர் வீறுகொண்டு எழுதினர்; ஆங்கிலேயரை அவர்கள் தூற்றினர்; சப்பானியரிடமிருந்து தென்கிழக்காசியாவை மீட்க வேண்டுமென்ற உணர்ச்சியை வெளியிட்டனர். அக் காலத்துப் பிறந்த கவிதைகள் 'Zaman Jepun' எனும் தலைப்பில் ஒரு நூலாய் வெளிவந்துள்ளன. அதனில் அறுபதுக்கும் மேற்பட்ட கவிஞரின், நூற்றுக்கு மேற்பட்ட பாக்கள் இடம்பெற்றுள்ளன.

## சில எடுத்துக்காட்டுகள்

இக் காலகட்டத்தில் சீன இலக்கியங்களின் போக்குக் குறித்துக் கூறும் டான் எங், "சீன-சப்பான் போரின்போது மலாயாவெங்கும் சீனர்களைத் தேசப்பற்றுடன் தட்டிஎழச் செய்வதில் எழுத்தாளர் கவனம் செலுத்தினர். 1942இல் மலாயாவையும் சிங்கப்பூரையும் சப்பான் வலியக் கவர்ந்தபோது ஒரு சீன இதழுக்குமட்டுமே சப்பானியர் இசைவளித்தனர். படைப்பாற்றல் பெற்ற எல்லா எழுத்தாளரும் சப்பானியர் தொல்லைகளிலிருந்து தப்ப எழுதுதலை நிறுத்திக்கொண்டனர்"[29] என்கிறார். ஆகச் சீனர் இலக்கிய நிலை இக் காலத்தில் மிகவும் சோர்வுற்றிருந்தது என்பதனை இதனால் உணரமுடிகிறது.

---

27 மலாய்ப் பல்கலைக்கழகத்தில் முனைவர் த. மாரிமுத்து முயற்சியால் நடந்த கருத்தரங்கில் (1984) படைத்த கட்டுரை, தமிழ் ஓசை (16-12-1984), ஞாயிறு பதிப்பு.

28 மேலது

29 மேலது

# கவிதை வளர்ச்சி (1946 - 56)

மலேசியத் தமிழ் இலக்கியத்தின் அடுத்த (3ஆம்) காலகட்டத்தை 1946 முதல் 1949 வரை ஒரு பிரிவாயும், 1950 முதல் 1956 வரை ஒரு பிரிவாயும் வகுத்தல் பொருத்தமானதாகும்.

1945இல் சப்பானியர் போரில் தோற்ற பின் ஓராண்டுக் காலம் நாட்டைப் பிரிட்டிஷ் படையினர் ஆண்டனர். படிப்படியாய் நாடு பழைய நிலைக்கே திரும்பிற்று. மக்களிடையே புதிய எழுச்சி - விடுதலை உணர்ச்சி பீரிட்டது; தொழிற்சங்கங்கள், அரசியல் இயக்கங்கள், சமுதாய அமைப்புகள் தோன்றின.

இக் காலம் குடியேறிய மக்ளிடையே ஒரு பெரிய மாறுதலை ஏற்படுத்திற்று; தாம் வாழும் நாட்டைத் தாயகமாய்க் கருதி, அதன் நன்மை தீமைகளில் பங்குகொள்ளும் உணர்வினைத் தந்தது.

இலக்கியத்திற்கு - கவிதை வளர்ச்சிக்கு உரிய களம் அமையவில்லை; இந் நாட்டில் பிறந்தோர் எழுத்துத்துறைக்குப் பேரளவில் வாராத காலம் அது; தமிழகத்திற் பிறந்து இங்கு வந்து நிலைத்தவரே முதன்முதலில் எழுதுகோல் ஏந்தியிருந்தனர்.

தமிழ்நேசன், தமிழ்முரசு நாளிதழ்கள் தொடர்ந்து தம் பணிகளை ஆற்றின; மேலும் முன்னணி (1946), நவயுகம் (1946), ஜனநாயகம் (1946), தமிழ்ப் பூஞ்சோலை (1946), முயற்சி (1946), பேனாமுனை (1942), தேசநேசன் (1948), நண்பன் (1948), தமிழ்ச்சுடர் (1948), சேவிகா (1948), கப்பலோட்டி (1949), இனமணி (1949), ஜனோபகாரி (அரசின் தகவல்துறை வெளியீடு ,1948) முதலாய மாத, வார இதழ்கள் வெளிவந்தன.

உ. அரு. அருணாசலம் செட்டியார், கோ. சாரங்கபாணி, தி. சு. சண்முகம், பிச்சைப் பிள்ளை, சி. வீ. குப்புசாமி, ஆதிநாகப்பன் முதலாயோர் இதழ் ஆசிரியர்களாய்த் தொண்டுபுரிந்தனர்.

இக் காலத்தில் பழைய போக்கில் இராக்கப்ப ஆசாரி, ஸ்ரீலஸ்ரீ பொன்னம்பலம் கந்தசாமிபேரில் பாடிய பத்தி ஆனந்தப் பாமாலை (1946), வீ. குப்புசாமி ஐயர் எழுதிய பக்திப் பாமாலை (1949), முகமது யூசுப் பாவலர் எழுதிய இசுலாமிய ஞானச்சுடர் (1947) முதலாய நூல்கள் வெளிப்போந்தன.

இக் காலத்தில் வெளிவந்து மலேசியக் கவிதையுலகில் மறுமலர்ச்சிச் சிந்தனைகளைத் தோற்றுவித்த முதல் நூல், மலேசியக் கவிஞர்களுள் மூத்த முதுபெரும் கவிஞர் ந. பழநிவேலு இயற்றிய 'கவிதை மலர்கள்' (1947) ஆகும். இதனைத் தமிழ்முரசு வெளியிட்டது. இதற்குப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் வாழ்த்துரை வழங்கினார்; இது புதிய கவிதைப் போக்கிற்கு வழிவகுத்தது; பெரியார் சீர்திருத்தச் சிந்தனைகள் பரவ ஊக்கியது; இதனால் பாடுபொருள், பெரு மாற்றங் கண்டது;. இதற்கு அந் நூலில் 'சித்தப்போக்கு' எனும் தலைப்பில் வரும் பாடலே சான்று.

"அயலான் ஒருவன் என்னை
'அடிமை இந்தியனே' என்று அழைக்கும் பொழுதும்
அதே 'அடிமை இந்தியன்' என்னைத்
'தாழ்ந்த குலத்தான்' என்று சாற்றும் பொழுதும்
அடிமையின் பயங்கரத் தளையைக் காணும் பொழுதும்
முதலாளியின் மமதை தோணும் பொழுதும்,
உணர்ச்சி அலையின் தாக்குதலால்
உள்ளுக்குள்ளே குமுறிக் கதறும்
விதவைகளின் கண்ணீரும்,
சிதறுண்ட சமூகமும்,
அதிகார வர்க்கத்தின் அட்டகாசமும்,
அதற்கு அடிபணியும் கோழைத்தனமும்,
கீழான எண்ணமும்,
ஒருதலைத் தீர்ப்பும்,
சிறுதெய்வ பூசையும்,
சின்னப் புத்தியும் ...
இன்ன பிறவும் என் மனக்கண்ணெதிரே
தோன்றும் பொழுது
என் மனம் துடிக்கிறது.!"

இஃது அக் காலக் கவிதைப் போக்கின் மாறுதலை எடுத்துக் காட்டுகிறது; அக் காலப் பாடுபொருளின் பட்டியலாகவே விளங்குகிறது.

அக் காலகட்டத்தின் இரண்டாம் பகுதி 1950இல் தொடங்குகிறது; இது மலேசியத் தமிழ் இலக்கியத்தில் மிகவும் முதன்மை வாய்ந்தது; இம் மண்ணில் பிறந்து வளர்ந்து, இங்கேயே கல்வி கற்றவர், எழுத்துத் துறையில் காலடி எடுத்து வைத்த காலம் இது. மலேசியத் தமிழ் இலக்கிய உலகில், முழுக்க முழுக்க உள்நாட்டினர் கைவண்ணம் பதியத் தொடங்கிய காலமும் இதுவாகும்.

நெடுங்காலமாய் மலேசிய இதழ்த் துறையினர், தமிழக எழுத்தாளர் கைவண்ணங்களையே வெளியிட்டு வந்தனர். தமிழக இதழ்கள் இங்குப் பெருமளவில் பரவிப் படிப்போர் பசிக்கு உணவாயின. இந் நாட்டில் வெளிவந்த இதழ்கள் நிலைக்கமுடியாமைக்குச் சரியான திட்டமின்மை, பொருள்வளமின்மை, வந்து குவிந்த தமிழக இதழ்கள் போன்றன காரணங்களாகும். இந் நாட்டு வாசகரும் தமிழக இதழ்களையே பெரிதும் விரும்பினர்.

1950இல் சில மாறுதல்கள் தோன்றின. இம் மண்ணிற் பிறந்து வளர்ந்து, கல்வி கற்று எழுத்துத்துறைக்கு வந்தவர்களுள் பெரும்பாலோர் தமிழாசிரியர். இம் மாறுதலுக்குச் சில பின்னணிகள் உள்ளன. தமிழ்நேசன் கதைவகுப்பு (1950, 51) புதியராய் வந்தார்க்குப் பேருக்கம் நல்கியது; சுப. நாராயணன் என்னும் கந்தசாமி வாத்தியார் முன்னின்று நடத்திய இவ் வகுப்பின் வெற்றிக்குத் தமிழ்நேசனில்

பணியாற்றிய பைரோஜி நாராயணன் எனும் வானம்பாடியார் பெரும் ஒத்துழைப்பு நல்கி வந்தார்.

'கதைவகுப்பு' என்பது சிறுகதை, நெடுங்கதை எழுதமட்டும் பயிற்சியளிக்க வில்லை; உரையாடல், நாடகம், கட்டுரை எழுதவும், கவிதை எழுதவும் பயிற்சியளித்தது. அதனால், எழுத்துத் துறையின் கூறுகள் எல்லாம் வளர்ந்தன. 1950இல் தொடங்கி 1951வரை நடந்த இவ் வகுப்பில் கலந்துகொண்டோர்க்கு 'மலாய்த் தமிழ் எழுத்தாளர் பரீட்சை' எனும் பெயரில் தேர்வும் நடந்தது (11.3.1951). அதனில் பலர் கலந்துகொண்டனர். அவர்களுள் மேதை எழுத்தாளர்களாய்க் கவிதைத் துறைக்குக் கிருஷ்ணதாசனும், கட்டுரைத் துறைக்கு இராமநாதனும், கதைக்குச் சி. மாரியப்பனும் தேர்வு பெற்றனர். மேலும், சிறந்த எழுத்தாளராய் இருபத்து மூவரும், தேர்ந்த எழுத்தாளராய்ப் பதினெழுவரும், நல்ல எழுத்தாளராய்ப் பதினால்வரும், ஆர்வ எழுத்தாளராய்ப் பதினெண்மரும் தேர்வு பெற்றனர்.[30]

## தமிழ்முரசு இலக்கியப் போட்டிகள்

தமிழ்நேசன் கதை வகுப்பிற்குப்பின் தமிழ்முரசு சிறுகதை, கவிதைப் போட்டிகளை நடத்திற்று (1951). இளம் எழுத்தாளர் பலர் இவற்றால் ஊக்கம் பெற்றனர்.

## தமிழ்முரசு எழுத்தாளர் பேரவை

தொடர்ந்து தமிழ்முரசு நாளிதழ், எழுத்தாளர் பேரவையைத் தொடங்கிற்று (1952); இதுவும் தொடக்கநிலை எழுத்தாளர் ஊக்கம் பெற உதவிற்று; ஆனால் இது நெடுநாள் தொடரவில்லை.

தமிழ்நேசனில் கதைவகுப்பு நடத்திய சுப. நாராயணன் (கந்தசாமி வாத்தியார்) தமிழ்முரசில் இரசனை வகுப்பினைத் தொடங்கினார் (1953). இது திறனாய்வுப் போக்கில் அமைந்தது. அவர் வானொலி நிகழ்ச்சிகளைத் திறனாய்வு செய்ததொடு, படைப்பிலக்கியங்களைத் திறனாய்வு செய்திருக்கலாம். ஆனால், 'அண்ணாதுரை அறிஞரா?' எனும் உணர்ச்சியைத் தூண்டும் வினாவினை எழுப்பி ஆராயப் புகுந்ததால், அவரது இரசனை வகுப்பு நெடிது நடைபோடாமற் போயிற்று.

## தமிழ்ப் பண்ணை

மலாக்கா மாநிலத்தில் 1950இல் தொடங்கி 1956 வரை தமிழ்ப் பணியாற்றிய தமிழ்ப் பண்ணை எனும் அமைப்புக் குறிப்பிடத்தக்க அரியதோர் அமைப்பாகும். உ.

---

30 இராமையா, மா., மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு, பக். 17-22

அரு. அருணாசலம் செட்டியார், எஸ். ஓ. கே. உபைதுல்லா, கா. அண்ணாமலை, பொன்னுதுரை முதலியோர் இதற்கு முன்னோடியாவர். இது மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர் வகுப்பினை இங்கு நடத்தித் தேர்வெழுதச் செய்து, பலரைத் தமிழ்ப் புலமையராய் ஆக்கியது என்று, அதில் பங்கு கொண்டு பயனடைந்த எழுத்தாளர் சி. வடிவேலு குறிப்பிடுகிறார்.[31]

## இலக்கிய வட்டம்

இந் நாட்டு எழுத்துவளம் சிறக்க ஏற்பட்ட அமைப்புகளில் 'இலக்கிய வட்டம்' (1955) ஒன்று. சிறந்த சிறுகதை ஆசிரியரான கு. அழகிரிசாமி தமிழ்நேசன் ஆசிரியரானவுடன் இத்தகையதோர் அமைப்பினை ஏற்படுத்தினார். மாதம் ஒரு முறை கூடும் இது முழுக்க முழுக்கச் சிறுகதைபற்றியதாகவே இருந்தது; நல்ல பலனைத் தந்தது. இதனால் பலர் சிறுகதை எழுத்தாளராயினர். இது 10 மாதங்களே நடந்ததாய் மா. இராமையா தம் இலக்கிய வரலாற்றில் குறிப்பிடுகிறார் (ப. 60).

## தமிழர் திருநாள் தந்த ஊக்கம்

இக் காலப் பகுதியில் மட்டுமன்றி எக்காலத்தும் இல்லாத பேரூக்கத்தை எழுத்துத்துறைக்கும், கலைத்துறைக்கும், சமுதாய எழுச்சிக்கும், தமிழர் திருநாள் (1952) ஏற்படுத்திற்று. தமிழ்முரசு ஆசிரியர் தமிழவேள் கோ. சாரங்கபாணி தொடங்கிய-தமிழர் பிரதிநிதித்துவ சபை தொடர்ந்து நடத்திவந்த தமிழர் திருநாள், சமுதாயத்தில் ஒரு விழிப்பினை ஏற்படுத்தியது; சாதி, சமய வேறுபாடுகளை மறந்து தமிழால் ஒன்றுபட வழிவகுத்தது. இதனால் இலக்கிய வேட்கை ஏற்பட்டது; விழாக்களையொட்டி நாடெங்கும் நடந்த பல்வகைப் போட்டிகள் எழுத்தாளரை ஊக்குவித்தன; கலைஞரை ஆர்வம் கொள்ளச் செய்தன; ஒரு புதிய சமுதாயம் பூத்தது; ஆண்டுதோறும் 'தமிழர் திருநாள்' கூட்டங்களில் இலக்கிய உரையாற்றத் தமிழகத்திலிருந்து வந்த பேரறிஞர் உரைகளால் இலக்கிய வேட்கை மிகுந்தது; எழுத்துத்துறை விறுவிறுப்படைந்தது.

## இதழ்கள்

இக் காலத்தில் சோலை (1951), சங்கமணி (1952), திருமுகம் (1955), மலைமகள் (1956) முதலாய இதழ்களும் இலக்கிய வளர்ச்சி - குறிப்பாய்க் கவிதை வளர்ச்சிக்குப் பேரளவு பங்காற்றின; சங்கமணி தொழிலாளர் குரலாய் ஒலித்தது.

---

31 அரங்கேறிய கவிதைகள், முன்னுரை

## நூலாக்கங்கள்

இக் காலப் பகுதியில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க அளவு நூல்கள் பேரளவில் வெளிவரவில்லை; நினைவின் நிழல் (செ. குணசேகர்-1952), பேசத் தெரியுமா? (சுப. நாராயணன்-1954) முதலாய உரைநடை நூல்களொடு, ஒருசில பிரார்த்தனைப் பாமாலைகளும் வெளிவந்தன.

## கவிஞர் தோற்றம்

கடந்த காலப் பகுதிக் கவிஞர்களாகிய ந. பழநிவேலு, ச. சா. சின்னப்பன், கா. பெருமாள், புலவர் முத்தையன், புலவர் ரெ. இராமசாமி, சா. சி. குறிஞ்சிக்குமரன், சோமசன்மா, கிருஷ்ணதாசன், சி. வேலுசுவாமி, மா. இராமையா முதலாயவருடன் புதிய ஓர் அணியினர், புத்தெழுச்சியொடு இக் காலத்தில் தோன்றினர். ஐ. உலகநாதன், வீ. கே. சுப்பிரமணியம், கரு. திருவரசு, ரெ. சண்முகம், கா. கலியபெருமாள், ரெ. கார்த்திகேசு, சங்கு சண்முகம், கே. முகமது யூசுப், முருகதாசன், பெரி. நீல. பழநிவேலன். அ. பெரியராமு, சீ. மா. இளங்கோ, அசன்கனி, ஏ. டி. சமாதானம் முதலாயோர் இக் காலத்தில் கவிதை உலகிற்கு வந்தனர்.

## கவிதைப் போக்கு

இக் காலத்தில் கவிதைப் போக்குக் கடந்த காலங்களைவிடப் பெரிதும் மாறுபட்டது; சமுதாய உணர்வு, கவிதைகளில் மிகுந்தது; பழம்பெருமைகள் வெளிப்பட்டன; சாதி வேற்றுமைகள் சாடப்பட்டன; உரிமை வேட்கை ஊற்றெடுத்தது; தோட்டத் தொழிலாளர் துயர் வெளிப்பட்டது; குடியால் விளையும் தீமைகள் இடம்பெற்றன.

இது விடுதலைபெறத் துடித்த காலம்; எனினும் இந்தியா முதலாய நாடுகளைப் போல இங்கு விடுதலைப் போராட்டம் கொடுமை மிக்கதாய் இல்லை; தடி எடுக்க வேண்டிய தேவையும் ஏற்படவில்லை; அமைதியான பேச்சினால் அது வாய்த்தது; அதனால், பாரதி வேகமோ, காசி. ஆனந்தனின் உணர்ச்சிப் பெருக்கோ பாடல்களில் காணவில்லை; மாறாய்ச் சமுதாய விடுதலைக்குக் குரலெழுப்பிய புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் தாக்கங்களைக் காண முடிகிறது; தொழிலாளரைப் பல நிலைகளிலிருந்து பாடி, மக்கள் கவிஞராய் விளங்கிய கவிதைவேள் கா. பெருமாள் பாடல் இதற்குச் சான்றாகும்.

"சங்கெடுத்தே ஊதிவிட்டான் சேவல் அண்ணன்
தாமதித்தால் பேர்போச்சு கூலி இல்லை
கங்காணி எனும்பெரிய கால கண்டன்
கடுக்கின்றான் துரைகண்டால் தனக்கா பத்தாம்!

தங்கத்தை, வெள்ளீயம், மரப்பால் சேர்த்துத்
தாரணியை வளமாக்க எண்ணும் நெஞ்சம்
பொங்கியழும் பாட்டாளர் துயரம் தீர்க்கப்
பொதுச்சங்கம் காணாமை கொடுமை யாகும்.[32]

## மலாய், சீன இலக்கியங்களின் போக்கு

இக் காலத்தில் மலாய், சீன இலக்கியங்களின் பாடுபொருளும் போக்கும் மாற்றங் கண்டன; "ஐம்பதுகளில் மலாய் இலககியத்தில் முக்கிய மாந்தர்களாய்த் தோட்டக்காரர், தொழிலாளர், மீனவர், எழுத்தாளர் படைப்புகளில் இடம்பெற்றனர்" என்கிறார் வி. ஹாசிம் அவாங்.[33]

சீன இலக்கியங்களின் அக் காலப் போக்குப்பற்றி டான் எங் டெய்க், "இரண்டாம் உலகப் போருக்குப் பின் சீனத் தாளிகைகள் மீண்டும் வெளிவந்தமையால் சீன இலக்கியம் மறுமலர்ச்சி அடையத் தொடங்கியது. 1949இல் சீனப் பெருநிலத்தைக் கம்யூனிஸ்டுகள் கைப்பற்றியதும் சீனாவிலிருந்து இறக்குமதியான புத்தகங்களை மலாயாவின் பிரிட்டிஷ் அரசு தடை செய்தது. இஃது ஒருவகையில் மலாயாவின் சீன இலக்கிய வளர்ச்சிக்கு 'ஆசீர்வாதமா'யும் அமைந்தது. உள்நாட்டுச் சீன எழுத்தாளர் எழுதிய புத்தகங்களை உள்நாட்டு வெளியீட்டாளர்கள் வெளியிட்டனர். மூன்றாண்டுகளில் 23-க்கும் மேற்பட்ட புத்தகங்கள் வெளிவந்தன. மேலும் பல வெளியீட்டாளர் தோன்றினர். அதனால் அடுத்த இரண்டாண்டுகளில் 62 புத்தகங்கள் வெளிவந்தன"[34] என்கிறார்.

தமிழகத்திலிருந்து இதழ்களும் நூல்களும் இங்கு வருவதற்குத் தடையேதும் இல்லாதிருந்தமையால், மலாய், சீன இலக்கியங்கள் கண்ட வளர்ச்சியைத் தமிழ் இலக்கியங்கள் காணவில்லை. என்றாலும் 'மலேசியக் கவிதை வரலாற்றில் பொற்காலத் தொடக்கம்' என இக் காலத்தைக் கூறலாம்.

# கவிதை வளர்ச்சி (1957 - 66)

இது மலேசிய இலக்கிய உலகின் நான்காம் காலகட்டமாகும்; கடந்த மூன்றாம் காலகட்டத்தைவிட (1946 - 56) மிகவும் முதன்மை வாய்ந்தது. ஏனெனில் இஃது அடிமை இருளில் மூழ்கிக் கிடந்த நாடு, விடுதலை பெற்ற காலம் (31.8.1957);

---

32 களஞ்சியப் பாடல் எண் 197

33 மலாய் இலக்கியத்தின் போக்குப்பற்றி மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடந்த கருத்தரங்கில் படைத்த கட்டுரையின் தமிழாக்கம், தமிழ்ஓசை, (16.12.1984)

34 டான் எங் டெய்க், "மலேசிய - சீன இலக்கியத்தின் போக்கு", மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடந்த கருத்தரங்கம் ஒன்றில் படித்த கட்டுரையின் தமிழாக்கம், தமிழ் ஓசை (16.12.1984), ஞாயிற்றுப் பதிப்பு.

மலா(மலேசி)யாவைத் தாயகமாய்க் கொள்ளும் எண்ணம் 1946இல் தொடங்கி 1950ஆம் ஆண்டிற்குப் பின் உறுதிபெற்றது. எனினும், அஃது அழுத்தம் பெற்றது விடுதலைக்குப் பின்னர்தான். இரண்டு படகுகளில் கால்வைத்துக் கொண்டிருந்த நிலைபோய் இதுவா அதுவா என்ற குழப்பத்திற்கு ஒரு முடிவு பிறந்த காலம் இது.

இக் காலத்தில் தோன்றிய இலக்கியங்களும் குறிப்பாய்க் கவிதைகளும் ஒரு புதிய போக்கினை நோக்கி நடைபோட்டன. முழுக்க முழுக்க மலேசிய உணர்வுகளையே அவை உண்டாக்கி இருந்தன.

"விரிகதிர் எழுந்தான் இம்மலை நாட்டின்
விடிவு பிறந்தது பாரீர்!

உரிமைச் சுதந்திரம் நாமடைந்தோம் இந்த
உலகிடை உயர்ந்தவ ரானோம்" [35]

என்று மலாயாக் கொடி விடுதலை ஒளியொடு கம்பத்தில் ஏறியபோது ஒலித்த இசைப் பாடலொடு விடுதலை இலக்கியங்கள் தோன்றத் தொடங்கின; தமிழர் திருநாள் தந்த ஊக்கமும் எழுச்சியும் தொடர்ந்தன. கவிதைத் துறையின் பொற்காலம் மேலும் பொலிவோடு தொடர்ந்தது. புதிய அணியொன்று கவிதைத்துறையொடு சேர்ந்தது. சா. ஆ. அன்பானந்தன், சங்கு சண்முகம், அமலதாசன், பரணன், க. து. மு. இக்பால், முருகதாசன், கரு. வேலுச்சாமி, முரு. சொ. நாச்சியப்பன், காரைகிழார், முரசு. நெடுமாறன், முல்லைவாணன், ப. மு. அன்வர், வீரமான், சீனி நைனாமுகமது, சீ. மா. இளங்கோ, ஆ. பு. திருமாலன், மெ. இளமாறன், ஐ. இளவழகு, பொன்முடி, பாதாசன், தீ. சி. பொன்னுசாமி, ஞானமணி, மைதீ. சுல்தான், நா. ஆ. செங்குட்டுவன், இரா. பெருமாள், தம்பாய் ஆ. முனியாண்டி, ம. இராமகிருஷ்ணன், ஆறு. நாகப்பன், மு. க. மா. முத்தமிழ்ச்செல்வன் முதலியோர் அதனில் இடம்பெற்றனர். இவர்களைக் கவிதை உலகிற்கு இதழ்களே அறிமுகப்படுத்தி ஊக்கமூட்டின.

## தோன்றிய இதழ்கள்

இக் காலத்தில் 120 இதழ்களுக்குமேல், தோன்றின. ஆனால், பெரும் பாலானவை, தோன்றிய வேகத்திலேயே மறைந்தன; சிலவே இலக்கிய வளர்ச்சிக்கு உதவின.

தமிழரது 'தங்க ஏடு' எனத் திகழ்ந்த தமிழ்முரசு கவிதைக்கு முதன்மை தந்தது; கிழமைதோறும் ஒரு முழுப்பக்கத்தைக் கவிதைக்கு ஒதுக்கியது. தமிழர் திருநாள்

---

35 களஞ்சியப் பாடல் எண் 469

ஊட்டி வந்த ஊக்கத்தொடு பழைய அணியினரும் புதிய அணியினரும் கவிதைகளை எழுதிக் குவித்தனர்; கடந்த காலகட்டத்தில் தொடங்கிய பொற்காலம் இக் காலகட்டத்திலும் தொடர்ந்தது.

மேலும் "மலேசியக் கவிஞர் யாப்பிலக்கணம் அறியாதார்; ஓசையின் துணையாலேயே எழுதுபவர்" என்ற ஒரு தாழ்வான எண்ணம் இருந்துவந்தது; தமிழ்முரசு தொடங்கிய வெண்பாப் போட்டி (1967) அதற்குத் தக்க மறுமொழி தந்தது.

"புலவர்க்கு வெண்பாப் புலி" என்பர். அத்துணை உச்சம், நுட்பம் வாய்ந்த வெண்பாக்களை மலேசியக் கவிஞர் தள்ளதட்டாது பாடிப் பரிசு பெற்றுத் தங்கள் யாப்புத் தகுதியை வெளிப்படுத்தினர். முத்தையன் முதலாய முதிர்ந்த புலவர்கள் இதற்கு முன்னோடிகளாய் விளங்கி வழிகாட்டினர். அவ் வெண்பாக்களுள் சில இக் களஞ்சியத்துள் இடம்பெற்றுள்ளன.[36]

மூத்த ஏடான தமிழ்நேசனும் கவிதை வளர்ச்சிக்கு ஊக்கம் நல்கியது; பெருங்கவிஞர் படையலொடு இளங்கவிஞர் படையல்களையும் அது வெளியிட்டது.

புதிதாய்த் தோன்றிய இதழ்களுள் நாளிதழ்களாய தமிழ்மலர் (சிங்கை - 1963), மலைநாடு (1965) எனும் இதழ்கள் கவிதை வளர்ச்சிக்குத் தம் பங்கை ஆற்றின. தமிழ்மலர் தொடக்கத்திலேயே வெண்பாப் போட்டியை நடத்திற்று;[37] கவிச்சோலைப் பகுதியில் கவிதைகளை வெளியிட்டு வந்தது.

இக் காலத்துத் தோன்றிய தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கக் கிழமை ஏடான சங்கமணியின் பங்கும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும். தோட்டத் தொழிலாளர் குரலாய் அஃது ஒலித்தது; இன்னும் ஒலித்துக்கொண்டிருக்கிறது. கவிதைவேள் கா. பெருமாள், சங்கு சண்முகம் முதலாயோர் அதனில் நிரம்பக் கவிதைகள் எழுதினர். நவரசம் என்னும் ஏடும் சிலகாலம் சிறப்புடன் இலக்கியப்பணி புரிந்தது (1958).

இவற்றொடு கவிவாணர் ஐ. உலகநாதனை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்த மாதவி (1959) எனும் திங்களிதழ் ஆற்றிய பணிகள் மலேசியத் தமிழ்க் கவிதை உலகில் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கனவாகும். எழுதத் துடித்த இளங்கவிஞர்க்கு அது தாய்மடியாய் விளங்கியது. அது நல்ல களம் அமைத்துத் தந்து ஒரு கவிஞர் பட்டாளத்தையே உருவாக்கிற்று. இன்று புகழுடன் விளங்கும் கவிஞருள் பலர் தொடக்கத்தில் அதனில் எழுதியவரே; எத்துணையோ இடையூறுகளைக் களைந்து 1963 வரை அது நடைபோட்டது.

---

36 களஞ்சியப் பாடல் எண்கள் 65, 151 - 58

37 களஞ்சியப் பாடல் எண் 604

ந. தியாகராசனை ஆசிரியராய்க்கொண்டு வெளிப்போந்த பொன்னி (1966) இலக்கியத் திங்களிதழ் ஆற்றிய பணியும் மதித்துப் போற்றுதற்குரியது; கவிதைகளோடு கடுமையான திறனாய்வுகளையும், அது வெளியிட்டுப் பரப்பரப்பை ஏற்படுத்தியது.

## வளரும் இழிக்கியம்

இத் தலைப்பில் கே. எம். (முகமது யூசுப்) எழுதிய ஒரு சர்ச்சைக்குரிய கவிதை பெரும் பரபரப்பினை ஏற்படுத்திற்று. அதனுள் ஒரு பகுதி வருமாறு:

"என்ன இலக்கியம் படிச்சிப்புட்டான் - அட
எத்தனை காப்பியம் வடிச்சிப்புட்டான்
தன்னை எழுத்தாளன் என்றுதானே - வாய்த்
தம்பட்டம் போடுறான் அம்புட்டுத்தான்
முன்னை இலக்கியம் படிச்சதுண்டா - அட
முறையான செந்தமிழ்ப் பயிற்சியுண்டா?
சென்னை இதழ்களில் எடுப்பதன்றி - வேறு
சிந்தனைச் சரக்குகள் ஏதுமுண்டா?"

இங்ஙனம் கடுமையாகவே - மிகையாகவே எழுதியதற்குப் பதிலடிகளும் பலரால் தரப்பட்டன.

"இந்நாட்டில் எழுத்தாளர் இல்லையென்று - சொல்ல
என்னடா உனக்கு நெஞ்சமுத்தம்!
உன்றனின் கண்களில் திரையிருந்தால் - நீக்கி
உற்றுமே பார்த்திடு ஒளிபிறக்கும்."

'உடைவாள்' (முரசு. நெடுமாறன்) எழுதிய மறுப்புப் பாடலின் ஒரு பகுதி இது. இந்தத் தாக்குதலும் பதிலடியும் சில மாதங்கள் நீடித்து ஒரு முடிவிற்கு வந்தன. இங்ஙனம் வாதத்துக்குரிய கருத்துகளை வெளியிடுவதில் பொன்னி முன்நின்றது. ஏறக்குறைய ஐந்தாண்டுகள் அஃது இலக்கியச் செலவினைத் தொடர்ந்தது.

கவிதை வளர்ச்சிக்கு உதவிய இன்னொரு மாத இதழ் 'முத்தமிழ்'. இது கவிஞர் டி. வி. இராகவன் பிள்ளையை ஆசிரியராய்க்கொண்டு 1969இல் வெளிவந்தது; 1974 வரை நடந்தது; இதனில் மலேசியக் கவிஞர் வரலாற்றுத் தொடரைச் சா. ஆ. அன்பானந்தன் எழுதிவந்தார். இது கவிஞர்க்கு நல்ல ஊக்கத்தைத் தந்தது.

## நூல்கள்

இக் காலத்தில் இருபதுக்கு மேற்பட்ட கவிதை நூல்கள் வெளிவந்தன. அவற்றுள் சில குறிப்பிடத்தக்கன. 1960இல் மு. வே. தில்லை, முகம் (சங்கு சண்முகம்)

ஆகிய இருவரும் இணைந்து, சிலர் கவிதைகளைத் தொகுத்துக் 'கவிதைத் திரட்டு' எனும் பெயரில் வெளியிட்டனர். கிடைத்துள்ள தரவுகளை வைத்துப் பார்க்கும்போது, பலர் கவிதைகளை ஏந்திவந்த முதல் தொகுப்புநூல் இஃது என்பது தெரிகிறது; இது முன்னோடியாயும் விளங்குகிறது. இத் தொகுப்பு முயற்சியைத் தொடர்ந்து 1962இல் ஓர் அருமையான தொகுப்பு நூல் வெளிவந்தது. அதன் பெயர் 'மலாயாவில் தமிழ்க் கவிதைகள்' என்பதாகும். இதனைத் தொகுத்தும் பதிப்பித்தும் வெளியிட்டவர் பரிதா மணாளன் என்னும் அப்துல் முத்தலிப் ஆவார். இவர் இதழ்த் துறையில் பணியாற்றியதொடு அச்சுக்கலையையும் அறிந்திருந்ததால், நூலைச் சிறப்பாய் வெளியிட இவரால் முடிந்தது; இதுவரை வெளிவந்த தொகுப்பு நூல்களுள் இது தனிச் சிறப்புடன் விளங்குகிறது.

"மலாயா எழுத்தாளரின் தரமும் திறமும் மேலும் உயர வேண்டும்; இதற்கு மலாயாத் தமிழர் - தமிழார்வம் உள்ளவர் ஆக்கமும் ஊக்கமும் தரவேண்டும்; இங்குள்ள பத்திரிகைகள் இந் நாட்டு எழுத்தாளர்களைக் கவனிக்க வேண்டும்; 'தூரத்துப் பச்சையிலேயே இச்சை' கொள்ளும் எண்ணம் மாற வேண்டும்; நடுநிலையினின்று தரமான படைப்பெனில் வரவேற்றுப் பாராட்டும் மனம் வேண்டும்" என்று தொகுப்பாசிரியர் தம் உரையில் தம் உயர்ந்த நல்ல நோக்கத்தைக் குறிப்பிட்டுள்ளார். இதனில் ஏறக்குறைய நாற்பதின்மர் கவிதைகள் இடம்பெற்றுள்ளன.

இந் நூலுக்கு அணிந்துரை வழங்கிய திருத்தந்தை தனிநாயக அடிகள்[38] "இப்போது வெளிவரும் கவிதைத் தொகை மலைநாட்டிலுள்ள தமிழர்கள் தம் மொழியை எங்ஙனம் போற்றி வருகின்றனர் என்பதனைக் காட்டும். தமிழ்மொழியினை நன்றாகப் பயின்றவர்க்கும், போற்றுபவர்க்குமே கவிதை இயற்றும் ஆற்றல் அமையும்; பேரழகுடனும் பொருளுடனும் இங்குள்ள கவிதை மலர்கள் மலைநாட்டுத் தமிழ் இளைஞர் உள்ளங்களில் மலர்ந்துள்ளன. ஆக்கப் பண்பும், சொற்சுவையும், இயற்கையன்பும், மொழிப்பற்றும், சீர்திருத்த வேட்கையும், தத்துவ ஞானமும் இப் பாடல்களில் அரும்பியும் மலர்ந்தும் தோன்றுகின்றன" எனக் குறிப்பிடுவது மலேசிய நாட்டுத் தமிழ்க் கவிதைத் திறனை விளக்கப் போதுமான சான்றாகும்.

இக் காலத்து வெளிப்போந்த மற்றொரு சிறப்பு நூல் கவிவாணர் ஐ. உலகநாதன் யாத்த 'சந்தனக் கிண்ணம்' (1966) ஆகும். இது தமிழகத்துக் கவிஞரும் மலேசியக் கவிதை உலகினை நிமிர்ந்து பார்க்கத் தூண்டிய நூலாகும். இன்றுவரை தனித்து நின்று ஒரு சிறப்பு மிக்க கவிதைப் பேழையாய் இது மிளிர்கிறது. இந் நூலுக்குப் பேரறிஞர் அண்ணா வழங்கிய அணிந்துரையில்,

"இன்றைய சமுதாயத்தைப் புதுப்பித்து - புதுப்பொலிவு பெறச் செய்திட என்னென்ன கருத்துகள் தேவைப்படுமோ அவைபற்றி இந்த இளைஞர் பன்னெடு

38 விரிவிற்கு 378 ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

நாள்கள் சிந்தித்ததன் விளைவு, கவிதையின் பொருளில் தெரிகிறது. இவருடைய புலமையும் புதுமுறை ஆர்வமும், இவர் அக் கருத்துகளுக்குப் பாங்கான வடிவம் கொடுத்திருப்பதும் கவிதையின் நடையிலேயே மிளிர்கின்றன. கருத்துச் செறிவுடன் கவிதை நயமும் இழைந்திடும்போது கிடைத்திடும் சுவையும் பயனும் தனித் தன்மை வாய்ந்தன. அக் கலையிலே மகிழத்தக்க அளவு வெற்றி பெற்றிருக்கிறார் நண்பர் உலகநாதன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

இவர், வண்ணம் பாடும் திறன்பற்றிப் பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, "நம் இளங்கவிஞர் காவடிச் சிந்துக்கு இல்லாத வண்ணத்தையும், அதற்கு இல்லாத கருத்துக் கொழுந்தையும், அதற்கு அளித்து அதனை மேலை உலகின் சானட் (Sonnet) என்னும் பதினான்கடி வண்ணப் பிரிவுடன் போட்டியிட வைத்துள்ளார். பதினோரடி வண்ணச் சிந்தாக விளங்கும் ஒன்பது சிந்துப் பாடல்கள் அடங்கிய 'கேட்பதும் கிடைப்பதும்' என்னும் பாடல் இதற்குச் சான்று" என்கிறார். பன்மொழிப்புலவர் எடுத்துக் காட்டும் பாடலின் ஒரு பகுதி (கண்ணி) இது,

"வாழ்வில்லை வளமில்லை
வலிவில்லை செழிப்பில்லை
சூழ்தொல்லை சிறிதில்லை
சுகமில்லை நலமில்லை - என்றால்
மரமுண்டு கயிறுண்டு
மரணத்தில் சுகமுண்டு
பிறகென்ன துயருண்டு?
பேசாதே போவென்று சொல்வார் - இவர்
கூசாமல் சாவென்று சொல்வார் - இங்கே
வாழ்வுக்கு வழிகேட்டால்
சாவுக்கு வழிகாட்டிச் செல்வார்!"

மலேசியத் தமிழ்க் கவிதையுலகின் பொற்காலத் தொடர்ச்சியாய இக் காலத்தில் வெளிப்போந்த மற்றோர் அருமையான நூல், சிங்கை முகிலன் இயற்றிய 'இதய ஓசை'யாகும். இதற்கு முன்னுரை வழங்கிய முருகு. சுப்பிரமணியன் (தமிழ்முரசின் அப்போதைய துணையாசிரியர்) "நல்ல சொல்வளம், தெளிந்த நீரோடை, மயக்கம் தாரா நடை, கவிதைக்கு இன்றியமையாத துடிப்பு, ஓட்டம், மென்மை இத்தனையும் முகிலன் கவிதைகளில் பொருந்தி இருக்கின்றன" என்கிறார்.

பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, "குமரித் தமிழகத்தின் பாரதி மரபு, பாரதிதாசன் மரபு, பொன்னி தென்றற் பொதும்பரிடையே தவழ்ந்த புத்திளங் கவிதை மரபுகள் ஆகியவற்றின் இன்னிசையுடன் மன்னிசையுறக் கலக்கும் புத்தினிமையும், புதுமைத் துடிப்புமுடையது சிங்கை முகிலன் செந்தமிழ்க் கவிதை" என்று இந் நூல் மதிப்புரையில் குறிப்பிடுகிறார்.[39]

39 மனிதச் சுவடு (1974), ப. 79

தமிழக ஏடுகள் சிலவும் இந் நூலில் இடம்பெற்ற கவிதைகளைப் பாராட்டி யுள்ளன. இக் காலத்தில் முதுபெரும் புலவர் சுவாமி இராமதாசர், நாச்சிகுளத்தார், வீ. கே. சுப்பிரமணியம், மறைமுடி வல்லத்தரசு முதலாயோர் நூல்களும் மலேசியத் தமிழ்க் கவிதை உலகில் மலர்ந்து மணம் சேர்த்தன. இக் காலத்து நிகழ்ந்த இரு வரலாற்று நிகழ்வுகளும் கவிஞர்க்கு ஒரு முதன்மையாய பாடுபொருளாயின.

மலாயா, சிங்கப்பூர், சரவா, சபா ஆகிய நிலப் பகுதிகள் ஒன்றிணைந்து அகன்ற மலேசியா அமைந்தபொழுது (1963) அதனைக் கடுமையாய் எதிர்த்தார் இந்தோனேசியக் குடியரசு தலைவர் சுகர்ணோ. இரண்டு நாடுகளுக்கு மிடையே, அது கடுமையான விளைவுகளை ஏற்படுத்தியது; அதனைப் போராகவே உருவகப்படுத்தி மலேசியக் கவிஞர் 'போர்ப்பரணி' பாடிக் குவித்தனர். நாட்டு விடுதலைக்குப் போர்க்குரல் எழுப்ப வாய்ப்பில்லாமல் போனதை இந் நேரத்தில் பாவலர் பயன்படுத்திக் கொண்டனர்; இதழ்களில் பாடிக் குவித்தனர். அக் காலப் போர்ப்பரணிப் பாடல்களைக் கொண்ட நூல்கள் சிலவும் வெளிப்போந்தன. அவற்றுள், இரா. பெருமாள் யாத்த 'போர்முழக்கம்' (1965) எனும் நூலும் ஒன்று. மலேசியத் தாயும், மலேசியக் குடிமகனும் உரையாடிக் கொள்வது போன்ற உத்தியில் இந் நூல் அமைந்துள்ளது.

"பொம்மைதான் என்றே எண்ணிப்
புல்லர்கள் நினைக்கின் றார்கள்
அம்மநீ தலையைச் சற்றே
அசைத்திடு அதுவே போதும்"

என்பது அதனில் இடம்பெற்ற ஒரு பாடல்.

## வானொலி தந்த ஊக்கம்

இக் காலத்தில் மலேசிய வானொலி [40] இலக்கிய வளர்ச்சிக்கு - குறிப்பாகக் கவிதை வளர்ச்சிக்கு ஆற்றிய பங்கை மறக்க இயலாது. அப்போதைய வானொலி நிகழ்ச்சிகள் வெறுமனே பொழுதுபோக்கற்கு அமைக்கப்படவில்லை; சமூகத்திற்கும், மொழிக்கும், கலைகளுக்கும் பயன் சேர்க்கும் வகையில் அமைந்தன. வாணிக நோக்கம் இன்மையால் அங்ஙனம் செய்ய முடிந்தது.

செய்தி, நிகழ்ச்சி அறிவிப்பு முதலாயவற்றில் தாய்தமிழகத்திலும் நினைத்துப் பார்க்க முடியாத அளவு தூய மொழிநடை பயின்றது; உயர்தர இலக்கியச் சொற்பொழிவு, இசையரங்கு, இசைத்தேர் ஏறிய உள்ளூர்ப் பாடல்கள் ஒலித்தன; இலக்கிய நாடகங்கள் இடம்பெற்றன.

---

40 மேலும் விரிவிற்குக் கவிதைக் கொடை - நிறுவனங்கள் பகுதியில் காண்க.

சிறு கதைகள் செவிகளுக்கு விருந்தளித்தன; அவ்வப்போது கவிதைகள் அரங்கேறின; வில்லுப் பாட்டுகள் வீறுகொண்டன; கவிதை நாடகங்கள் ஒலியேறின; கா. பெருமாள், ப. மு. அன்வர், ஐ. உலகநாதன், தை.சே பெ. பொன்னம்பலம் போன்றோர் கவிதை நாடகங்களைப் படைத்தனர்; இக் காலப் பகுதியில் (1959) ஒலியேறிய கா. பெருமாள் கவிதை நாடகமான 'கட்டைவிரல்' (ஏகலைவன் கதை) நூலுருப் பெற்றது (1979).

மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம், இக் காலகட்டத்தில் பதிவுபெற்றது (1959); (அது 1965இல் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமானது) இலக்கிய வளர்ச்சிக்கு அது பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டது; கதை, கட்டுரை, கவிதைப்போட்டிகள் நடத்தித் தங்கப் பதக்கங்கள் பரிசளித்தது; கருத்தரங்குகள் கூட்டி எழுத்துத்துறைக்கு ஊக்கமுட்டியது.

## முதலாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு

இக் காலத்தில் தமிழுக்கு உலகளாவிய பெருமை சேர்க்கும் ஓர் அரிய நிகழ்வும் மலேசியாவில் நடந்தது; திருத்தந்தை தனிநாயக அடிகளார் அருமுயற்சியால் கூட்டப்பட்ட முதலாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடே (1966) அந் நிகழ்வாகும். தெய்வத் திருவாளர் (அமரர்) ஆய துன் சம்பந்தனும், டான்ஸ்ரீ வெ. மாணிக்கவாசகமும் முன்னின்று அம் மாநாட்டை மிகச் சிறப்பாய் நடத்தினர்; ஓர் ஆய்வு மாநாட்டிற்குரிய வடிவோடு அம் மாநாடு நடந்தது; மலேசிய இந்தியர் காங்கிரசு தலைவர்கள் தமிழுக்கு இத்துணைப் பெருமை சேர்க்கும் நிகழ்ச்சியை இதற்குமுன் நடத்தியதில்லை.

"யாதும் ஊரே! யாவரும் கேளிர்!" என்று தமிழிலேயே உளமாரத் திருவாய் மலர்ந்து மாநாட்டைத் திறந்து வைத்துத் தமிழுக்கும் தமிழர்க்கும் பெருமை சேர்த்தார் அப்போதைய தலைமை அமைச்சரும் விடுதலைத் தந்தையுமான துங்கு அப்துல் ரகுமான் புத்ரா. அரசு ஒப்புதலுடன் நடந்த இம் மாநாட்டில் தமிழிற்கு அனைத்துலகச் சிறப்புக் கிடைத்தது. மலேசியாவிலும் தமிழுக்கு ஓர் உந்துதல் ஏற்பட்டது. மாநாட்டில் தமிழ்க் கவிதை இலக்கியம்பற்றி ஓர் ஆய்வுரை படைத்தார் முருகு. சுப்பிரமணியன். இது மலேசியக் கவிஞர்களை உலக அரங்கிற்கு கொண்டுவந்த முதல் நிகழ்வாகும். மாநாட்டில் உலகெங்குமிருந்து வந்த தமிழ் அறிஞர், நாடெங்கும் நிகழ்த்திய இலக்கிய உரைகள் தமிழுக்கு ஒரு புத்தெழுச்சியை ஏற்படுத்தின.

இத்துணை அரிய நிகழ்வுகளைத் தன்னகத்தே கொண்ட இக் காலம் மலேசியத் தமிழ்க் கவிதை உலகப் பொற்காலத்தை நிலைப்படுத்திய காலமாகும்.

இக் காலத்தில் சீன இலக்கியப் போக்குப்பற்றி அம் மொழி அறிஞர் கருத்துகள் எண்ணிப் பார்க்கத் தக்கன. "1959இல் நவீன சீன இலக்கியம் தோன்றியது"

என்றும், "இந்த இயக்கம் ஏராளமான சர்ச்சைகளையும் பூசல்களையும், உருவாக்கியது" என்றும், "இதனால் மலேசியச் சீன எழுத்தாளர்கள் விரைவுபட்டனர்" என்றும் ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர். "ஒரு குழுவினர் நவீன எழுத்தாளர் என்று அடையாளம் காட்டிக்கொண்டனர்" என்றும், "மற்றவர் யதார்த்த எழுத்தாளர் என்று கூறிக் கொண்டனர்" என்றும், "எந்தத் தரப்புகளிலும் சேர்ந்துகொள்ளாத எழுத்தாளரும், இருக்கின்றனர்" என்றும் சீன இலக்கிய ஆய்வாளர் குறிப்பிடுகிறார்.[41]

யதார்த்த எழுத்தாளர் எழுத்துகளில், "சீனச் சமுதாயத்தின் அவலநிலை, சமுகநீதி, ஏழைமக்கள் சுரண்டப்படுதல்" ஆகிய கருப்பொருள்கள் இடம்பெற்றன என்பதை அவர்கள் எடுத்துக் காட்டுகின்றனர். "அறுபதுகளில் சீன இடைநிலைப் பள்ளிகள், தேசிய மாதிரிப் பள்ளிகளாக்கப்பட்டு ஆங்கிலம் பயிற்று (போதனை) மொழியாக்கப்பட்டபோது சீன இலக்கிய வளர்ச்சி தேக்க நிலையடைந்தது" என்பதை அவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். "அதனால் உள்நாட்டு வெளியீட்டாளர், சீனமொழி இலக்கிய வெளியீடுகளை ஆர்வமுடன் வெளியிட முடியவில்லை என்றும், ஹாங்காங், தைவான் ஆகிய நாடுகளிலிருந்து ஏராளமான புத்தகங்கள் இறக்குமதியாகிக் கடும் போட்டியை உண்டாக்கின" என்றும் எடுத்துக் காட்டுகின்றனர்.

நிலைமை இங்ஙனமாயினும் செய்தித்தாள்கள்வழிச் சீன இலக்கியம் தொடர்ந்து வளர்ந்து வந்தது. "எழுத்து ஓர் இலாபகரமானது அன்று என்றாலும் தங்கள் இலக்கியப் பணி, பண்பாட்டு வளர்ச்சிக்கு அதிகம் உதவும் என்ற கோட்பாட்டில் சீன எழுத்தாளர், தொடர்ந்து எழுதிவரத் தொடங்கினர்" என்கின்றனர்.

"அறுபதுகளில் தோன்றிய பெரும்பாலான மலேசியச் சீன எழுத்தாளர், மலேசியாவில் பிறந்து படித்த இளைஞரே. அதனால், சீன தேசத்து எழுத்தாளர் செல்வாக்குப் படியவில்லை" என்று கூறுகிறார்.[42]

மலாய்மொழி, நாட்டின் தேசிய மொழியாதலாலும், வலிமைமிக்க தேசிய மொழிவளர்ப்பு நிறுவன (Dewan Bahasa Dan Pustaka) அமைப்பினை அது கொண்டிருப்பதாலும், அதன் வளர்ச்சி அளப்பரிது. எல்லா இலக்கிய வடிவங்களும் அதனில் மிகுவேக வளர்ச்சி கண்டன; கவிதைகள் பல்வேறு தலைப்புகளில் மிகுதியாய் வெளிவந்தன; நூல்களும் பல்கிப் பெருகின.

---

41 டான் எங் டெய்க், மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடந்த கருத்தரங்கில் படித்த கட்டுரை, தமிழ்ஓசை 16.12.1984), ஞாயிற்றுப் பதிப்பு.

42 மேலது

# கவிதை வளர்ச்சி (1967-76)

மலேசியத் தமிழ்க் கவிதையுலகின் இக் காலகட்டத்தில் முதிர்ந்த கவிஞரிடையே, எழுத்தாளரிடையே, ஒரு சோர்வு தட்டியது; நீண்ட காலமாய் எழுதி எழுதி எப்பயனும் காணாப் படைப்பாளர் எழுத்துப் பணியிலிருந்து விலகிவிட எண்ணினர்; தங்கள் படைப்பு வெளிவரும் இதழைக்கூடத் தமக்கு அனுப்பாத தாளிகைமேல் வெறுப்புக்கொண்டனர்.

ஏடுகளோ பழையவர் எழுத்துத் துறையினின்று விலகுவதுபற்றிக் கவலை கொள்ளவில்லை; அவை புதியவர்க்கு - காசின்றி எழுதுகிறவர்க்கு ஊக்கம் தருவதிலேயே கருத்தாய் இருந்தன; 'மலேசிய எழுத்தாளர் என்றும் பதினாறு கொண்டவர்' என்பதனை ஈண்டுக் குறிப்பிடுதல் பொருத்தமாகும். காரணம் எழுதிப் பயின்று முதிர்ச்சி பெற்றதும் ஓய்ந்துவிடுவர்; பின் புதியர் வருவர்; இதுவே தொடர்கதை. இதழ்கள், எழுத்துக்கு அன்பளிப்பு என்ற பெயரிலாவது சிறு தொகையும் தாராததே இதற்குக் காரணம். 'உள்ளூர்ப் படையல்' என்னும் பெயரில் எவற்றையாவது வெளியிட்டால் போதுமென்று அவை எண்ணின; தரம்பற்றிக் கவலை கொள்ளவில்லை.

தொடர்கதைகளைத் தமிழக எழுத்தாளரிடமிருந்தே பணம் கொடுத்துப் பெற்று வெளியிட்டு வந்தன. அயலக ஏடுகளில் இடம்பெறும் படைப்புகளை வெட்டி ஒட்டி வெளியிட்டு வந்தன.

"மலேசிய எழுத்தாளர் படைப்புகளுக்கு ஊதியம் தரவேண்டும்" என்று, அவ்வப்போது குரல் எழுப்பப்பட்டு வந்தது; 1962இல் சிங்கப்பூரில் நடந்த பன்மொழி எழுத்தாளர் மாநாட்டில் இது வலியுறுத்தப்பட்டது; தொடர்ந்து மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க மாநாடுகளிலும் கோரிக்கை விடுக்கப்பட்டது; என்றாலும் இன்றுவரை அக் கோரிக்கை புறக்கணிக்கப்பட்டே வருகிறது.

'படைப்பிற்குப் பணம் தாரா இதழ்களுக்கு எழுதக்கூடாது' எனும் முடிவை எழுத்தாளருள் சிலர் எடுத்தனர்; பலர் அவ்வாறு நடக்கவில்லை; இறுதிவரை மாறாதார் கவிஞர் கா. பெருமாள், புலவர் ப. மு. அன்வர், முனைவர் ரெ. கார்த்திகேசு, மா. இராமையா முதலாய சிலரே ஆவர்.

இங்கு வாழ்வதற்கே உயிர்ப்போராட்டம் நடத்திக்கொண்டிருக்கும் கிழமை, திங்கள் இதழ்கள் படைப்புகளுக்கு உரிமைப்பணம் (Royalty) தர இயலாவிட்டாலும் இதழையாவது படைப்பாளருக்கு அனுப்பலாமல்லவா? அதனைக்கூட இதழ் வெளியிடுவோர் செய்வதில்லை.

இங்கு நாளிதழ்கள் செய்திகளைத் தருவனவே. எனினும், ஞாயிற்றுப் பதிப்புகள் இலக்கிய இதழ்களாகவே மலர்கின்றன; மிகுதியான அளவில் விற்பனையாகின்றன; நிரம்பப் பொருள் வரவையும் தருகின்றன. அதனால், அவை படைப்பாளருக்கு ஊதியம் தர மறுப்பது அறமன்று.

இத்தகைய சூழலிலும் புதிய புதிய கவிஞர் தோன்றிக்கொண்டுதான் இருந்தனர்; புதிய படைப்புகள் தோன்றிக்கொண்டுதான் இருந்தன; ஏடுகளும் புதிது புதிதாய் முளைத்துக்கொண்டுதான் இருந்தன.

## தோன்றிய இதழ்கள்

இக் காலத்தில் பதினைந்திற்கு மேற்பட்ட இதழ்கள் தோன்றின; அவற்றுள் பெரும்பாலாயவை மறைந்தன; வந்தன சிலவே; அவற்றுள் குறிக்கத்தக்கன கூட்டுறவு[43] (1967), முத்தமிழ்[44] (1967), உதயம்[45] (1972), தமிழ்க்குயில்[46] (1967) முதலாயன; இவை கவிதைத் துறை வளர்ச்சிக்கு ஊக்கம் நல்கின. இக் காலத்தில், கலாசாரம் இரா. இராமசாமியை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்த 'கலாசாரம்' (1971) கலை இலக்கிய ஏடாயும், தந்தை பெரியார் சிந்தனைகளைக் கொண்ட சீர்திருத்த ஏடாயும் மிளிர்ந்தது; 1979 வரை தன் பயணத்தைத் தொடர்ந்தது.

## நூல்கள்

இக் காலத்தில் 25 கவிதை நூல்களுக்குமேல் வெளிவந்தன; அவற்றுள் 'கூட்டுறவுக் கவிதைகள்',[47] (1971) 'கவிதைப் பித்தன் கவிதைகள்' (1968), 'கவிமஞ்சரம்'[48] (1976), 'இசைக்கொத்து'[49] (1972), 'மலேசியக் கழகப் பாடல்கள்'[50] (1967), 'அருளொளி முருகன் பாமாலை' (1972), 'விநாயகர் புகழ்ப் பாமாலை'[51] (1976), 'இலக்கிய நாயகி சீதை' (1973), 'அலையோசை' (1975), 'வள்ளல் நாயகம்' (1974) முதலாய நூல்கள் குறிக்கத்தக்கன.

காரைகிழார் இயற்றிய 'அலையோசை' ஒரு குறுங்காவியமாகும். அதனை உமா பதிப்பகம் வெளியிட்டது; கடாரத்திற்கும் சோழப் பேரரசிற்கும் இடையிலிருந்த தொடர்பினைக் குறிப்பது அது. அச்சுக்கலை அறிந்த கவிச்சுடர் காரைகிழார் இதனை அழகிய முறையில் பதிப்பித்திருந்தார். இது வெளியான காலத்திற்குமுன் இங்ஙனம் ஒரு நூல் வெளிவந்ததில்லை.

இக் கால இடைவெளியில் சிங்கப்பூரில் தமிழருவி (1967), திருமுருகன் (1973), ஜமீலாவின் கவிதைகள் (1975), இதய மலர்கள் (1975) முதலாய நூல்கள் வெளி வந்தன.

---

43, 44, 45, 46 - விரிவாய விளக்கங்களுக்குக் கவிதைக்கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

47, 48, 49, 50, 51 - விரிவாய விளக்கங்களுக்குக் கவிதைக்கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

## புதிய வரவினர்

பழையவர் சோர்வுகொள்ளத் தொடங்கிய இக் காலத்தில் அமுத இளம்பரிதி, ஞானசேகரன், மா. அ. சந்திரன், மு. திருவேங்கடம், வெ. தேசகுரு, பொன். சந்திரன் முதலியோர் கவிதைத் துறைக்கு வந்தனர்.

## ஊக்குதல்

எழுத்திற்குக் கிடைக்க வேண்டிய முறையாய உரிமைப் பணம் கிடைக்கா விட்டாலும், நெடுநாள் எழுதுவோரிடையே சோர்வு தட்டிவிட்டாலும், கவிதைத் துறையின் வளர்ச்சி நின்றுவிடாமல் தொடர்ந்தது; அதற்கு இடையிடையே நிகழ்ந்த சில ஊக்குதல்களே காரணமாகும்.

## கூட்டுறவுக் கவியரங்குகள்

கூட்டுறவுத் தந்தை துன் சம்பந்தன் அமைத்த தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்க வளர்ச்சிக்குக் கவிஞர் தொடக்க காலத்திலிருந்தே (1960) சோராமல் குரல் கொடுத்து வந்தனர். அவர் தந்த எழுச்சியுணர்வு கூட்டுறவு சங்க வளர்ச்சிக்குப் பெரிதும் உதவிற்று. அதனை நன்குணர்ந்த துன் சம்பந்தன் கவிஞர்மேல் அன்பும் மதிப்பும் கொண்டிருந்தார்; அவர்களுக்குச் சிறப்புச் செய்ய எண்ணமுங் கொண்டார்.

தம் எண்ணத்தைச் செயல்படுத்தும் வண்ணம் கூட்டுறவு சங்கப் பத்தாம் ஆண்டு விழாவினையொட்டிக் கவிமணி கிருஷ்ணதாசனைக்கொண்டு மாநிலந்தோறும் கவியரங்குகள் நடத்தச் செய்தார். 15.9.1968இல் தொடங்கி ஓராண்டிற்குமேல் நாடெங்கும் கவியரங்குகள் நடந்தன. ஆண்டு விழாவில் தேசிய அளவிலாய கவியரங்கினைக் கூட்டச் செய்தார்; பங்கு பெற்ற கவிஞர்க்கு மதிப்புமிக்க பரிசுகள் தந்து ஊக்கினார். அக் கவியரங்குகளில் இடம்பெற்ற கவிதைகளைத் தொகுத்துக் கூட்டுறவுக் கவிதைகள்[52] (1971) எனும் பெயரில் கூட்டுறவு சங்கமே வெளியிட ஏற்பாடு செய்தார். 190 பக்கங்களில் 40-க்கு மேற்பட்ட அரங்கேறிய பாக்களைக் கொண்ட அந் நூலின் பாடுபொருள் முழுக்க முழுக்கத் தோட்டப்புறச் சமுதாயம்பற்றியதே. அச் சமுதாயத்தை மீட்கத் துன் சம்பந்தன் மேற்கொண்ட முயற்சிகளையும், கவிஞர் மனமாரப் பாராட்டினர்; அந் நூலில் இடம்பெற்ற பாக்களுள் சில இக் களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ளன.

---

52 விரிவிற்கு கவிதைக்கொடை - நூல்கள் பகுதியில் காண்க.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கக் கவியரங்குகள்

இந் நாட்டில் கவியரங்குகள் நடத்தியதில் தனிச் சிறப்புப் பெற்ற அமைப்பு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமாகும். இதனில் முருகு. சுப்பிரமணியன், சி. வீ. குப்புசாமி, சி. வடிவேலு, சி. வேலுசுவாமி, எம். துரைராஜ், கு. ச. பெருமாள், சை. பீர் முகம்மது முதலாயோர் பெரும் பங்கு வகித்தனர். 1964இல் ம.த.எ.ச. நடத்திய ஒன்பான் சுவைக் கவியரங்கம் பெருஞ் சிறப்புக்குரியது; மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் அஃது ஒரு தொலைக்கல் எனத்தக்கது. பின்னர் 1965ஆம் ஆண்டு தொடங்கி, 1967வரை பாரதியின் படைப்புகள் (1968), தங்கத் தலைவர் துங்கு (1968), பழக்கவியரங்கம் 1969), பயணம் (1973), கடல் தரும் செல்வங்கள் (1974), உணர்வுகள் (1976) ஆகிய தலைப்புகளில் நடந்த பாட்டரங்குகள் பேரெழுச்சியை ஏற்படுத்தின; சோர்ந்திருந்த பலருக்குப் புத்தூக்கம் நல்கின; அவ் வரங்குகளில் இடம்பெற்ற பாக்களைத் தொகுத்து அரங்கேறிய கவிதைகள்[53] (1977) எனும் தலைப்பில் சங்கமே ஒரு தொகுப்பு நூலை வெளியிட்டது; கவியரங்கத் தலைப்பையொட்டியே பாடுபொருளும் அமைந்தது; அந் நூலுள் இடம்பெற்ற பாக்களுள் சில இக் களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ளன.

## பவுன் பரிசு திட்டம்

தமிழ்நேசன், கவிஞர்க்கு, எழுத்தாளர்க்குத் தந்த ஊக்கங்களுள் குறிப்பிடத்தக்கது பவுன் பரிசு திட்டமாகும் (1972). ஒரு மாதம் முழுவதும் இடம்பெறும் சிறுகதைகள், கவிதைகளை ஆராய்ந்து ஒரு சிறுகதைக்கும் கவிதைக்கும் தங்கப் பதக்கங்கள் வழங்கப்பட்டன. இஃது எழுத்துத் துறைக்குப் பேருக்கம் நல்கியது; இத் திட்டத்தால் சோர்ந்திருந்த பலர் புத்தூக்கம் பெற்றனர்; அருமையான படையல்கள் பல மலர்ந்தன. ஆனால், இத் திட்டம் ஈராண்டுகளுக்குப் பின் நிறுத்தப்பட்டது.

## பாடுபொருள்

இக் காலப் பாடுபொருள்களில் தலைதூக்கி நின்றது சமுதாயம்; இயற்கையைப் பற்றிய பாடல்களும் பிறந்தன. நாட்டுப்பற்று, பல்லின ஒற்றுமை, சீர்திருத்தம், இறை முதலாய பல பொருள்களிலும் பாக்கள் பதிந்தன.

## மலாய் இலக்கிய வளர்ச்சி

மலாய்மொழியே தேசிய மொழி; அம் மொழியில் எழுதப்படும் இலக்கியமே தேசிய இலக்கியம்; மற்ற மொழிகளில் எத்துணைத் தேசிய உணர்வு மிக்க இலக்கியங்கள் தோன்றினாலும் அவை 'தேசிய இலக்கியம்' என்னும் இலச்சினையைப் பெற இயலா.

---

53 விரிவிற்கு கவிதைக்கொடை - நூல்கள் பகுதியில் காண்க.

அவ் விலக்கியங்கள் தேசிய மொழியில் பெயர்க்கப்பட்டால் தேசியச் சிறப்பைப் பெறும் வாய்ப்புக் கனியலாம். அதனால், அதன் வளர்ச்சி வியக்கத் தக்கதாயிற்று.

மலாய்மொழி இலக்கியம் (கிரந்த) எழுத்து வடிவம் பெறுதற்கு முன்னரே கற்பனையும் பொருளாழமும் நிறைந்த செவிவழி (oral) இலக்கியமாய் அது வளர்ச்சியடைந்தது. "மலாய் இலக்கியம் எழுத்து வடிவம் பெற்ற காலம் ஏறக்குறையக் கி. பி. ஏழாம் எட்டாம் நூற்றாண்டு என ஊகித்து அறிய இயலும். மலாய்மொழியில் கி. பி. பத்தாம், பன்னிரண்டாம் நூற்றாண்டிலேயே 'ஹிக் காயட் ஸ்ரீ ராமா' போன்ற நூல்கள் தோன்றியிருக்கலாம்" என்பது மலாய் இலக்கிய ஆய்வாளர் கருத்தாகும்.[54]

பந்துான் (Pantun) எனப்படும் மலாய்க் கவிதை வடிவம் மிகப் பழங்காலந்தொட்டு மலாய்க்காரரிடையே வழங்கிவந்துள்ளது. பிற்காலத்தில் 'சுலோகம்', 'குரிந்தம்' (கிரந்தம்-Gurundam) போன்ற கவிதை வடிவங்களும் தோன்றலாயின.[55] இப்போது உரைப்பாட்டு (புதுக்கவிதை) மிக வேகமாய்ப் பரவி வருகிறது.

"மலாய்மொழியில் எழுத்து வடிவிலாய மிகப் பழைய இலக்கியங்கள் இல்லை; மரபு கட்டுப்பாடுகளும் இல்லை; அதன் முறையான வளர்ச்சியே 14ஆம் நூற்றாண்டில்தான் தொடங்கியது" என்று ஆய்வாளர் கூறுகின்றனர்; அதனால், அதில் உருவாகும் புதிய இலக்கியங்கள் யாவும், 'அதன் தழுவல்', 'இதன் பகர்ப்பு' என்று சொல்ல முடியா வண்ணம் புத்தம் புதிய இலக்கியங்களாகவே பொலிவும் வலிவும் பெறுகின்றன; மக்களிடையே பெரும் வரவேற்பினையும் பெறுகின்றன.

மலாய்மொழி இலக்கிய வளர்ச்சிக்கு அரசு தரும் ஆதரவு அளப்பரியது; 'கபேனா' என்னும் மலாய் எழுத்தாளர் சங்கம் எழுத்தாளர் வளர்ச்சிக்கு அரிய திட்டங்களை வகுத்துச் செயல்பட்டு வருகிறது.

## சீன இலக்கியத்தின் போக்கு

"எழுபதுகளின் மத்தியில் சீன எழுத்தாளர் படைப்புகளில் சமூகச் சிக்கல்கள் இடம்பெற்றன" என்றும், "கல்வி, பண்பாடு, ஏழ்மை, திறமையற்ற அரசியல் தலைவர் போன்ற பிரச்சினைகளில், சீன சமூகம் எதிர்நோக்கும் சிக்கல்களை அவர்கள் தங்கள் படைப்புகளில் விவாதித்தனர்" என்றும் ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர்.[56]

---

54 தலைமைத் தொகுப்பாசிரியர் வழங்கிய வினா நிரலுக்கு முனைவர் ச. சிங்காரவேலு அளித்த மறுமொழியின் ஒரு பகுதி.

55 மேலது

56 டாங் எங் டெய்க் மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடந்த கருத்தரங்கில் படித்த கட்டுரை, தமிழ் ஓசை (16.2.1984), ஞாயிற்றுப் பதிப்பு.

# கவிதை வளர்ச்சி (1977 - 86)

மலேசியத் தமிழ்க் கவிதை உலகின் சோர்வு இக் காலத்தும் தொடர்ந்தது; எனினும், வளமான இதழ்களும் பயனுடைய நூல்களும் தோன்றின. சில ஊக்குவிப்புகளும் நிகழ்ந்தன. தினமணி[57] (1980), தமிழ் ஓசை[58] (1981) ஆகிய நாளிதழ்களும், வானம்பாடி[59] (1977), மயில்[60] (1986) முதலாய கிழமை இதழ்களும் தோன்றின. திங்கள் இருமுறை இதழாய புதிய சமுதாயம்[61] (1980) வெளிவந்தது; திங்கள் இதழ்களாய தூதன்[62] (1984), நம் குரல்[63] (1980) முதலிய இதழ்கள் வெளிப் போந்தன; கவிதை வளர்ச்சிக்கு உதவின.

நூல் வெளியீட்டுத் துறையில் ஒரு புதிய எழுச்சி இக் காலத்தில் தோன்றிற்று; சற்றேறக்குறைய 60 நூல்கள் இக் காலத்தில் வெளிவந்தன. பலதர நூல்கள் அச்சேறின.

கணைகள் (1977), தீப்பொறி (1978), புயல் (1978), கனல் (1929) முதலாய நூல்கள் சமுதாயக் குறைபாடுகளைக் கடுமையாய்ச் சுட்டிக்காட்டின; இவை புரட்சிக் கவிஞர் தமிழியக்கத் தாக்கத்தை நினைவூட்டின; இவற்றில் இடம் பெற்ற பாக்களுள் சில களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ளன.

தனிப்பாடல் வகையில் வண்ணங்கள் (1977), உணர்வுகள் (1977), மகிழம்பூ (1977), உணர்ச்சிகள் (1977), பாதாசனின் கவிதைகள் (1977), நயனங்கள் (1979), உறவுகள் (1979), வெள்ளி நிலவு (1979), முத்தாரம் (1980), உதிரிப்பூக்கள் (1980), எரிமலை (1982), திருப்புமுனை (1982), இளங்கோ கவிதைகள் (1983), முத்துச் சரம் (1938), வேர்கள் (1983), மணிமுழக்கம் (1983), தோரணங்கள் (1985), கடற்சோழன் கவிதைகள் (1985), குமரன்மலைக் கவிப்பூக்கள் (1987) முதலாயன இடம்பெற்றன. இவற்றுள் பல நூல்களின் விளக்கக் குறிப்புகளைக் கவிதைக் கொடை - நூல்கள் பகுதியிற் காணலாம். நூல்களுள் இடம்பெற்ற கவிதைகள் சில களஞ்சியத்திலும் இடம்பெற்றுள்ளன.

கலாவள்ளி காவியம் (1977), பூங்கொடி (1987), கிணற்றுத் தவளை (1978) முதலாய குறுங் காவியங்களும், மறைமலையடிகள் பிள்ளைத் தமிழ் (1978), இருபா இருபஃது அந்தாதி (1978), நாகூரார் சதகம் (1983) ஆகியனவும் வெளிப்போந்தன. 1959இல் வானொலியில் ஒலியேறிய கா. பெருமாளின் கட்டை விரல் கவிதை நாடகமும், நூலாக்கம் பெற்றது (1979).

---

57, 58, 59, 60, 61, 62, 63 விரிவிற்குக் கவிதைக்கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

இசைப்பாடல் வரிசையில் தமிழியக்கப் பாடல்கள் (1977), அன்பு எனும் தத்துவம் இஸ்லாம் (1978), அன்புக் கனி (1976), முதல் மலர் (1980) முதலாயனவும் பத்திப்பாடல் வரிசையில் திருமுருகன் பாமாலை (1978), மகமாயி மாரியம்மன் (1978), பத்திர காளியம்மன் (1978), புனித அன்னம்மாள் (1981) முதலாயனவும் தனிப்பாடல்கள், குறுங்காவியங்கள், பிள்ளைத்தமிழ், அந்தாதி, சதகம், பிரபந்தம், இசைப்பாடல் முதலாய பல்வேறு இலக்கிய நூல்களும் வெளிவந்தன.

இக் காலப் பகுதியில் சிங்கப்பூரில் நிரம்ப நூல்கள் வெளிப்போந்துள்ளன. சிங்கப்பூர்ப் பாடல்கள் (1979), கவியின் கனவு (1981), பாத்தேறல் (1981), முருகன் காவடிப் பாடல்கள் (1982), கவிக்குலம் போற்றும் தமிழவேள் (1982), எதிரொலி (1982), பொன்வண்டு (1983), முத்திரை (1984), ஆசை (1984), புரட்சிப் பெண் (1984), அணிகலன் (1985), பூச்செண்டு (1985), தென்றல் (1985), செந்தமிழ்க் கவியமுது (1985), தோணி (1986) முதலாய நூல்கள் வெளிவந்தன.

அருண் சோமசன்மா, கோவதன் முதலாயோர் கவிதை உலகில் காலடி வைத்தனர்; கவிதைக் களம், கவிதைப் பண்ணை, பொன் பாவலர் மன்றம், வட மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்க மாதாந்தர நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு பயின்ற பலரும் கவிதை எழுதத் தொடங்கினர்.

எழுத்தாளர், கவிஞர்க்கு ஊக்கம் தரும் பரிசு திட்டம் ஒன்று அறிவிக்கப்பட்டது; அஃது அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலு பொன்விழா இலக்கியப் போட்டியாகும்; கவிதை, உரைப்பா (புதுக் கவிதை), சிறுகதை, கட்டுரைப் போட்டிகளுக்குப் பதினான்காயிரம் (14,000) மலேசிய வெள்ளி ஒதுக்கப்பட்டது. ஒவ்வொரு போட்டிக்கும் முதல் பரிசு 2000 வெள்ளியும், இரண்டாம் பரிசு 1000 வெள்ளியும், மூன்றாம் பரிசு 500 வெள்ளியும் வழங்கப்பட்டன; இதற்குமுன் இத்துணைப் பெரிய தொகை எப் போட்டிக்கும் வழங்கப்படவில்லை.

இக் காலத்தில் மிகுதியாய நூல்கள் வெளிவந்தமைக்கும், பல்வேறு இலக்கிய வகைகள் அச்சேறியமைக்கும் காரணம், நூல் வெளியீட்டு விழாக்கள் தந்த ஊக்கமே! அதனைத் தந்தவர் அமைச்சர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவே ஆவார்.

அவர் ம.இ.கா. தேசியத் தலைவரான பின் (1979) விழாக்களுக்குத் தலைமையேற்று, நூல்களை வெளியிடும்போது ஆயிரக்கணக்கான வெள்ளி கொடுத்து நூல்களை வாங்குவதும், பிறரையும் வாங்கச் செய்வதும் ஒரு பேரெழுச்சியை ஏற்படுத்தின; ஏற்படுத்தி வருகின்றன; 1994 ஜூன் 6இல் நடந்த "ஜீவானந்தன் [64] சிறுகதைகள்" வெளியீட்டில் அந் நூலுக்குப் பத்தாயிரம் வெள்ளி வழங்கினார்; அந் நிகழ்ச்சியில் 58,403 வெள்ளி சேர்ந்தன. [65] அண்மையில்

64 விரிவான விளக்கங்களுக்குத் துணைத் தொகுப்பாசிரியர் குறிப்புரை காண்க.

65 தமிழ்நேசன் ஜூலை 8, 1994

(6.8.1996) இந் நாட்டுக் கலைஞர் எம். எஸ். கோபாலன் [66] எழுதிய மலேசியத் தமிழ்க் கலைஞர் வரலாற்றில் எம். எஸ். வி. சகோதரர்கள் (1996) என்னும் நூல் வெளியீட்டை டத்தோஸ்ரீ ச. சாமிவேலுவே முன்னின்று நடத்தினார். அந் நிகழ்ச்சி மூலம் 100,000 வெள்ளிக்குமேல் திரட்டித்தந்தார். டத்தோஸ்ரீ தலைமையில் நூல் வெளியீடு நடந்தால் பெருந்தொகை சேரும் எனும் நம்பிக்கை பலரையும் நூல் வெளியிடத் தூண்டியது.

தமிழகத்து எழுத்தாளராய மணவை முஸ்தபா, முனைவர் வா. மு. சேதுராமன், மா. செங்குட்டுவன், புலவர் இளஞ்செழியன், மு.மேத்தா, வைரமுத்து, வலம்புரி ஜான் முதலாயவர் நூல்கள் இங்கு வெளியீடு கண்டன; அவற்றுள் சில நூல்களுக்கு மிகப் பெருந்தொகை கிடைத்தது.

## 1986ஆம் ஆண்டிற்குப் பின்...

மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம் 1837முதல் 1987வரை 100 ஆண்டு காலக் கவிதைகளைக் கொண்டது. அதனால், அக் காலப் பகுதிக்குட்பட்ட தரவுகளே திரட்டப்பட்டன; அவற்றின் அடிப்படையிலேயே இவ் வரலாற்று வாயில் எழுதப்பட்டது; அதனை அடுத்த காலத் தரவுகள் முழுமையாய்த் திரட்டப்படவில்லை (இலக்கியப் பகுதி). அதனால் அக் கால இலக்கிய வரலாறு எழுதப்படவில்லை; எனினும், முதன்மை நிகழ்வுகள் சில தரப்படுகின்றன.

## 6ஆம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு

கூட்டுறவுத் தந்தை துன் சம்பந்தன் தலைமையில் நடந்த முதலாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டிற்குப் (1966) பின், 21 ஆண்டுகள் கழித்து மீண்டும் ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு (1987), அரசு ஆதரவொடு டத்தோ ஸ்ரீ. ச. சாமிவேலு தலைமையில் மிகச் சிறப்பாய் நடந்தது; மலேசிய நாட்டின் தலைமை அமைச்சர், டத்தோ ஸ்ரீ டாக்டர் மகாதீர் முகம்மது தொடக்கி வைத்து வாழ்த்தினார்; இந்தியக் குடியரசோ, தமிழக அரசோ மாநாட்டிற்குப் பேராளராய்த் தம் சார்பில் ஒருவரையும் அனுப்பவில்லை; என்றாலும், தமிழினத் தலைவர், டாக்டர், கலைஞர் மு. கருணாநிதி மாநாட்டில் பங்குகொண்டு சிறப்புரை நிகழ்த்தி மாநாட்டிற்குப் பெரும் பொலிவினையும் சிறப்பினையும் சேர்த்தார்.

---

66 இவர் ஒரு சிறந்த கலைக் குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் அண்ணன் எம். எஸ். வேலுசாமி, வேலாயுதம் முதலாயோரும் இந் நாட்டில் கலை வளர்த்த நல்ல இசை, நாடகக் கலைஞராவர். இன்று தமிழகத் திரைவானில் புகழ் பெற்று விளங்கும் கலைஞர் மலேசிய வாசுதேவன் இவர் தம்பியாவார். கலைஞர்பால் பேரன்புடைய அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலு இவரது மருத்துவச் செலவுக்கு உதவும் பொருட்டு இந் நிகழ்ச்சி மூலம் துணை புரிந்தார்.

இம் மாநாடு சோர்வுற்றிருந்த தமிழரது தமிழ் உணர்ச்சியைத் தட்டி எழுப்பிற்று; மாநாட்டையொட்டித் துணையமைச்சர் டத்தோ சி. சுப்பிரமணியம் பொறுப்பில் தேசிய அருங்காட்சியகத்தில் (Museum) பொருட்காட்சி நடந்தது; அது தமிழர் வரலாற்றுக் காட்சியாய் அமைந்தது; மாநாட்டு (மலேசிய) மலரில் மலேசிய இலக்கிய, சமுதாய, வரலாற்று ஆய்வுக் கட்டுரைகளும் கவிதைகளும் இடம்பெற்றன. இம் மாநாட்டையொட்டித் தமிழ்நாட்டிலும் ஒரு சிறப்புமலர் உருவாயிற்று.

## நூல் வெளியீடு

கடந்த காலத் தொடர்ச்சியாய்ப் பல நூல்கள் வெளியீடு கண்டன; கண்டு வருகின்றன. டத்தோஸ்ரீ ச. சாமிவேலு இதற்குத் தொடர்ந்து பேருக்கம் நல்கி வருகிறார். மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவரும், மலேசிய நண்பன் நாளிதழ் ஆசிரியருமான ஆதி. குமணனும் தலைமையேற்று நூல்களை வெளியிட்டு வருகிறார். செல்வர் சிலர் ஆதரவும் இதற்குக் கிட்டிவருகிறது. இங்ஙனம் நூல் வெளியீடுகள் சுறுசுறுப்பாய் ஒருபுறம் நடப்பதொடு, வெவ்வேறு வகை ஊக்கந்தரும் நிகழ்வுகளும் நடந்துவருகின்றன.

## ம.த.எ.ச. வின் தங்கப்பதக்கங்கள்

மலேசியத் தமிழ் இலக்கியப் படைப்பாளர்க்கு ஊக்கம் நல்கிவரும் பரிசு திட்டங்களுள் இச் சங்கத்தின் தங்கப் பதக்கங்கள் வழங்கும் திட்டம் குறிப்பிடத்தக்கது. இந் நாட்டு எழுத்தாளர், கவிஞர், நாடக ஆசிரியருள் பலர் இப் பதக்கங்களைப் பெற்றவராவர். இச் சங்கம் 1982இல் தன் 20ஆம் ஆண்டு நிறைவு விழாவில் 20 எழுத்தாளர்களுக்குப் பொற்கிழி வழங்கிற்று. 1983இல் மூன்று எழுத்தாளர்களுக்குத் தங்கப்பதக்கம் வழங்கிற்று. தொடர்ந்து எழுத்தாளர்களுக்கு ஊக்குவிப்புப் பரிசுகள் வழங்கத் தன் அறக்கட்டளையை வலுப்படுத்தியது. அதற்கு ம.இ.கா., தே.நி.நி.கூ.ச., தே.தோ.தொ.ச. ஆகிய ஒவ்வோரியக்கமும் 10,000 வெள்ளி கொடையளித்தது. அதன்மூலம் கிடைக்கும் வட்டித் தொகையைக் கொண்டு அஃது ஆண்டுதோறும் எழுத்தாளர்களுக்குத் தங்கப்பதக்கங்களை வழங்கிவருகிறது. 1984ஆம் ஆண்டிலிருந்து தமிழவேள் கோ. சாரங்கபாணி, முத்தமிழ் வித்தகர் முருகு. சுப்பிரமணியன், செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமி ஆகியோர் பெயர்களால் மூவர்க்குப் பதக்கங்களை வழங்கி வந்த சங்கம் 1985ஆம் ஆண்டுமுதல் சேவியர் தனிநாயக அடிகளார் பதக்கமும் 1995முதல் சமூகக் கலைமணி சா. ஆ. அன்பானந்தன் பதக்கமும் ஆண்டுதோறும் வழங்கி வருகிறது.

## மாநில எழுத்தாளர் சங்கங்கள்

மூத்த இயக்கமான ம.த.எ.ச.வொடு மாநில அளவில் பல எழுத்தாளர் இயக்கங்கள் தோன்றித் தொண்டாற்றி வருகின்றன. 1960இல் வட மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தோன்றியது. பின்னர் இது பினாங்குத் தமிழ் எழுத்தாளர் சங்கம்

ஆயது (1988). தொடர்ந்து கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கம் (1971), பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1975), சிலாங்கூர், கூட்டரசு வளாகத் தமிழ் எழுத்தாளர் வாசகர் இயக்கம் (1977) (பின்னர் இது 'வாசகர்' நீங்க எழுத்தாளர் இயக்கமானது), நெகிரி செம்பிலான் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1979), ஜோகூர் மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1979), பகாங் மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1985) ஆகியன தோன்றின. இவை அந்தந்த மாநில எழுத்தாளர்களுக்கு ஊக்கம் நல்கிவருகின்றன.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் பேரவை தரும் ஊக்கம்

மேற்படி இயக்கங்கள் இணைந்த பேரவை அமைக்கும் முயற்சி 1981இல் தோன்றியது. 1982இல் பேரா எழுத்தாளர் சங்க ஆதரவுடன் முதல் மாநாட்டைக் கூட்டியது; பேரவை 1984இல் முறையான பதிவைப் பெற்றது. தொடர்ந்து பேரவை ஈராண்டிற்கொருமுறை மாநாடு கூட்டி, எழுத்துத் துறைக்கு ஊக்கம் சேர்த்து வருகிறது; எழுத்தாளர்களுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்புச் செய்தும், பொற்கிழி வழங்கியும் ஊக்க மூட்டியும் வருகிறது.

## வாசகர் வட்டங்கள்

இவையல்லாமல் ஆங்காங்கே வாசகர் வட்டங்கள் அமைந்து எழுத்துத் துறைக்கும், எழுத்தாளர்களுக்கும் ஆர்வமூட்டி வருகின்றன; எழுத்தாளர், கவிஞர்களை அழைத்துப் பரிசளித்துப் பாராட்டி ஆர்வப் புனல் பாய்ச்சி வருகின்றன.

## டான்ஸ்ரீ ஆதிநாகப்பன் இலக்கியப் பரிசு

ஈராண்டிற் கொருமுறை வழங்கப்பெறும் இவ் விலக்கியப் பரிசு திட்டத்திற்கு வித்திட்டவர் முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினரும், நாடாளுமன்றச் செயலருமான வ. கோவிந்தராசு. சிலாங்கூர் மாநில ம.இ.கா. ஏற்பாடு செய்த இப் பரிசு திட்டத்தினை மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஏற்று நடத்திவருகிறது; தொடக்கத்தில் ம.இ.கா. தலைமையகத்தின் சார்பில் டத்தோ ஸ்ரீ. ச. சாமிவேலு நன்கொடை வழங்கினார்; இனித் தொடர்ந்து அப் பரிசு திட்டத்திற்கு, டான்ஸ்ரீ ஆதி நாகப்பன் மகன் ஈஸ்வர் நாகப்பன் நன்கொடை வழங்க உறுதியளித்துள்ளார்; இத் திட்டப்படி ஈராண்டிற்கு ஒருமுறை கவிதை, கட்டுரை, கதை, நாடகம் ஆகிய துறைகளைச் சார்ந்த நால்வருக்குப் பரிசு வழங்கப்படுகிறது.

டான்ஸ்ரீ கே. ஆர். சோமசுந்தரம் தலைமை இயக்குநராய்ப் பொறுப்பேற்று வழிநடத்தும் தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம் அண்மைக் காலமாய்த் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவிவருகிறது; ஆண்டுதோறும் கதை, கட்டுரை, கவிதைப் போட்டிகளை நடத்தி மதிப்புமிக்க பரிசுகளை வழங்கி ஊக்கிவருகிறது.

## மலேசியப் பாரதிதாசன் இயக்கம் நல்கும் பரிசு

1994ஆம் ஆண்டு முதல், டத்தின்ஸ்ரீ இந்திராணி சாமிவேலு தலைமையில் இயங்கும் மலேசியப் பாரதிதாசன் இயக்கம் இலக்கிய முயற்சிகளுக்கு அளித்துவரும் ஊக்கம் குறிப்பிடத்தக்கது; இவ் வாண்டு அது மிகப்பெரும் பொருட்செலவில் நாட்டின் மிக உயர்ந்த கலையரங்கில் கோலாகலமான ஆடல், பாடல் நிகழ்ச்சிகளோடு எழுத்தாளர் தினத்தைக் கொண்டாடிற்று (25.9.1996); கதை, கட்டுரை, கவிதைப் போட்டிகள் நடத்தித் தங்கப் பதக்கங்களை வழங்கியது; விழாக்குழுத் தலைவர் தமிழ்நேசன் நாளிதழ் இயக்குநர் வாரியத் தலைவராதலால் அவ் விதழில் ஓராண்டு காலத்தில் வெளியான மும்மூன்று கதை., கட்டுரை, கவிதைகளைத் தெரிவுசெய்து ஒவ்வொரு படைப்பிற்கும் 1000 வெள்ளி வழங்க ஏற்பாடு செய்தார்; பெரும் பொருட்செலவில் நடந்துவரும் எழுத்தாளர் தினவிழா, படைப்பாளர்களைப் பெரிதும் ஊக்கப்படுத்துகிறது என்பதில் யாருக்கும் கருத்துவேற்றுமை இல்லை. எனினும் "எழுத்தாளர் தினத்தைப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பிறந்த நாளிலோ, இலக்கிய வளர்ச்சிக்குப் பேருக்கம் நல்கிய மலேசியச் சான்றோர் ஒருவர் பிறந்த நாளிலோ நடத்துதல் சிறப்பு" என்ற கருத்துப் பலரிடை உள்ளது.

## கவிதைத் துறை வளர்ச்சிக்கு உதவிய சான்றோர்

மலேசியத் தமிழ்க் கவிதைத் துறை இன்று தமிழகக் கவிதைத் துறைக்கு ஈடு கொடுக்கும் அளவில் உயர்ந்துள்ளது என்பதனைப் பலரும் சுட்டிக் காட்டுகின்றனர். இவ் வேளையில் இத் துறைக்கு உழைத்த சான்றோர் சிலரை நினைவுகூர்தல் நன்றி மிக்க செயலாகும்.

கடந்த நூற்றாண்டில் நாராயணசாமி நாயகன், சதாசிவ பண்டிதர் முதலாயோர் இத் துறைக்கு முன்னோடிகளாய் விளங்கினர்; இந் நூற்றாண்டுத் தொடக்கத்தில் முகம்மது சுல்தான் மரக்காயர், அப்பாஸ் பாவலர், எம். பி. சிவராமதாசர், சுவாமி அருணகிரிநாதர் முதலாயோர் முன்னோடிகளாய் விளங்கினர்.

மறுமலர்ச்சிக்கு வித்திட்ட முதல் பாவலராய் விளங்கி 1947இல் கவிதை மலர்கள் வெளியிட்டவர் கவிஞர் ந. பழநிவேலு. அவருக்குச் சமகாலத்தவராய ச. சா. சின்னப்பன், கவிமணி கிருஷ்ணதாசன், அமீது களஞ்சியம், சிங்கை முகிலன், புலவர் அப்துல் மஜீது முதலாயோர் மறுமலர்ச்சிக் கவிதைகளுக்கு முன்னோடிகளாவர்.

அடுத்த அணியினராய கவிஞர் கா. பெருமாள், குறிஞ்சிக்குமரன், புலவர் அ. முத்தையன் முதலாயோர் குறிப்பிடத்தக்கவர்.

## கவிஞர் உருவாக உழைத்த உயர்ந்தோர்

இந் நாட்டில் கவிஞர் பட்டாளம் பெருக வித்திட்டு உழைத்த பெருமக்கள் இருவரை ஈண்டு நன்றியொடு நினைவுகூர்தல் கடமையாகும். அவர்களுள் மூத்தவர், பினாங்கில் செந்தமிழ்க் கலாநிலையம் கண்டு புலமை மிக்க கவிஞர் பலரைக் கவிதையுல்கில் நடமாடவிட்ட முதுபெரும் தமிழ்ப் புலவர் சுவாமி இராமதாசராவார். அடுத்தவர் சிங்கப்பூரில் மாதவி இதழாலும், மாதவி இலக்கிய மன்றத்தாலும் உணர்ச்சிச் செறிவுமிக்க கவிதை படைக்கும் கவிஞர் பட்டாளத்தை உருவாக்கிய கவிவாணர் ஐ. உலகநாதனாவார். இவ் விருவர் பெயரும் மலேசியக் கவிதையுலகில் என்றென்றும் நிலைத்திருக்கும். இவர்களொடு, கவிஞர்பலர் உருவாக, ஊக்கம் பெறப் புலவர் முத்தையன், கவிமணி கிருஷ்ணதாசன், கா. பெருமாள், குறிஞ்சிக் குமரன் முதலாய பலரும் உழைத்தனர். அச் சான்றோர்க்கும் நன்றி செலுத்தல் கடமையாகும்.

## கவிதைத் துறையை வளர்த்துவரும் அமைப்புகள்

இந் நாட்டில் கவிதைத்துறை வளர்ச்சிக்கு நெடுங்காலமாய்ப் பாடுபட்டுவரும் கவிதைக் களம், கவிதைப் பண்ணை, பொன் பாவலர் மன்றம், வட மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம் முதலாயனவும் நன்றிக்குரியன. மூத்த இயக்கமான மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்கும் இதில் பெரும்பங்குண்டு. வட்டார அளவில் அமைந்துள்ள இயக்கங்கள் சிலவும் தொடர்ந்து தொண்டாற்றி வருகின்றன. பாடல்களின் பின்புலங்கள் ஆங்காங்கே இவற்றைப்பற்றிக் குறிப்பிடுகின்றன.

## திறனாய்வு முயற்சிகள்

படைப்புத்துறை வலிவும் பொலிவும் பெற வழிவகுப்பது திறனாய்வுத் துறையாகும். அத் துறை இங்குப் போதிய அளவு வளரவில்லை. அத் துறை வளர்ச்சிக்கு 20 ஆண்டுகளுக்கு முன்பே இர. ந. வீரப்பன் சில முயற்சிகள் மேற்கொண்டார். வி. ச. காண்டேகர் நாவல்களைப்பற்றியும் தமிழில் உருவகக் கதைகைள்பற்றியும் விரிவான திறனாய்வுக் கட்டுரைகள் எழுதினார். பொன்னி இலக்கிய வட்டம் நடத்திய கவிவாணர் உலகநாதன் கருத்தரங்கம்'(1970), தமிழ் இலக்கியக் கழகம் நடத்திய மலாயாவில் தமிழ்க் கவிதைகள் நூல்பற்றிய கருத்தரங்கு (2.12.1973) முதலாயன குறிப்பிடத்தக்கன.

## ம.தி.க. மறுமலர்ச்சிக் கருத்தரங்கு

மலேசியத் திராவிடர் கழகம் 27.7.1980இல் நடத்திய தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக் கருத்தரங்கம் குறிப்பிடத்தக்கது. கதை, கட்டுரை, கவிதைகளில் மறுமலர்ச்சிச் சிந்தனைகள் எங்ஙனம் பதிந்துள்ளன என்பதனை அக் கருத்தரங்கு ஆராய்ந்தது; கட்டுரைகளைத் தொகுத்து மலர் ஒன்றும் வெளியிடப்பெற்றது.

## மலாயாப் பல்கலைக்கழகக் கவிதைக் கருத்தரங்கு

மலாயாப் பல்கலைக்கழகம், மலேசியத் தமிழ் இலக்கியம்பற்றிப் பல கருத்தரங்குகளை நடத்தியது. அவற்றுள் 1988இல் முழுக்க முழுக்கக் கவிதை பற்றியே நடத்திய கருத்தரங்கு குறிப்பிடத்தக்கது. மலேசியத் தமிழ்க் கவிதை வரலாறு, 'மலேசியாவில் மரபுகவிதைகள், மலேசியாவில் சிறுவர் கவிதை, மலேசியாவில் புதுக் கவிதை எனும் தலைப்புகளில் நடந்த அக் கருத்தரங்கம் கவிதைத் துறையில் மிக விரிவான ஒன்றாகும். கருத்தரங்கில் இடம்பெற்ற கட்டுரைகளைக்கொண்ட ஒரு தொகுப்பு நூலும் வெளியிடப்பெற்றது.

## உ சிறுவர் இலக்கியம்

மலேசியத் தமிழ்க் கவிதைத்துறை வரலாற்றில் குறிப்பிடத்தக்க மற்றொரு கூறு 'சிறுவர் கவிதை' வளர்ச்சியாகும். மழலைப் பாடல், குழந்தைப் பாடல், சிறுவர் பாடல் என்று வகைமை நோக்கி அழைக்கப்படும் "குழந்தைக் கவிதை இலக்கியம் இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு புது வரவு"[67] ஆகும்.

சங்க இலக்கியங்களில் குழந்தையைப்பற்றிய பாக்கள் உள. ஆனால் அவை குழந்தைப் பாக்கள் அல்ல. தொல்காப்பியத்திலோ, பிற யாப்பு நூல்களிலோ சிறுவர் பாட்டுக்குரிய இலக்கணம் வகுக்கப்படவில்லை; இன்றுவரைகூட அத் துறைக்குச் சரியான வழிகாட்டி நூல் இல்லை.

ஔவையார் ஆத்திசூடி, மூதுரை, நல்வழி, கொன்றைவேந்தன் முதலாய நூல்களைப் பாடியருளினார், அதிவீரராம பாண்டியன் நறுந்தொகை இயற்றினார். உலகநாத பண்டிதர் உலக நீதி நல்கினார். இவையெல்லாம் சற்று வளர்ந்த சிறுவர்களுக்கு அறிவுரை சொல்பவையே. அதுவும் ஓர் ஆசிரியர் பதவுரை, கருத்துரை என்று விளக்கினால்தான் புரியும். குழந்தைகள் தாங்களே பொருளுணர்ந்து பாடி ஆடி இன்புறத்தக்க முறையில் அவை அமைந்தவை அல்ல. ஆனால் கல்லாமாந்தர் தம் குழந்தைகளுக்கு வாய்மொழியாய் உரைத்த பாக்கள், குழந்தைகள் தாங்களே பாடி ஆடி மகிழத்தக்க முறையில் அமைந்துள்ளன. ஆகவே, "குழந்தை இலக்கியத்தில் பழைமையானவை நாடோடி இலக்கியமே"[68] ஆகும்.

குழந்தைகள் தாங்களே பாடி ஆடத்தக்க அளவில் பாக்கள் தந்த முதல்வர் கவிமணி தேசிக விநாயகம் (பிள்ளை). 1910இல் அவர் இத் துறையைத்

---

67 செல்லப்பன், சிலம்பொலி, சு., 'சிரிக்கும் பூக்கள்', முன்னுரை
68 பூவண்ணன், குழந்தை இலக்கிய வரலாறு, பக். 4 - 7

தொடக்கி வைத்தார். இத் துறை பாரதியாரால் விளம்பரம் ஆனது. குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பாவால் வளர்ந்து நிலைபேறடைந்தது. இதன் மேம்பாட்டிற்குப் பாக்கொடை நல்கியோர் மயிலை சிவமுத்து. பாரதிதாசன், தணிகை உலகநாதன், பெரியசாமித் தூரன், பு. ஆ. முத்துகிருஷ்ணன், பெருஞ்சித்திரன், ர. அய்யாசாமி (வானொலி அண்ணா), மீனவன், பூவண்ணன், மயிலை முத்தெழிலன், நாரா. நாச்சியப்பன், தமிழ் ஒளி, குழ. கதிரேசன், செல்ல கணபதி, முகம்மது சுல்தான், கா. அப்துல் காதர், ஆலந்தூர் கோ. மோகனரங்கன், செம்பை சேவியர் முதலாய நூற்றுக் கணக்காயோர் ஆவர். ஈழ, மலேசிய, சிங்கப்பூர்க் கவிஞர்க்கும் இதில் நிறைவாய இடம் உண்டு.

## மலேசியாவில்

மலேசியத் தமிழ்ச் சிறுவர் இலக்கியம் குறித்து ஆய்வு செய்த முனைவர் இலட்சுமி மீனாட்சிசுந்தரம், "திரு. கா. இராமநாதனை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்த 'சோலை' இதழே (1951) சிறுவர் இலக்கியத்தைத் தொடக்கி வைத்த முதல் இதழ்"[69] என்கிறார். ஆனால் 'தமிழ்க்கொடி'யிலேயே (1939) அதற்காய அடிப்படை போடப்பட்டுவிட்டது.

"தக்க வழிநடப்போம் - ஒரு
தாயின் பிள்ளைகள்போல்!
ஒக்க உழைத்திடுவோம் - தம்பி
ஓர்குல மாயிருப்போம்!"[70]

கவிஞர் தேவிதாசன் வழங்கிய இச் சிறுவர் பாடலே மலேசியச் சிறுவர் இலக்கியத்தின் முதல் பாடலாய்த் திகழ்கிறது.

இங்ஙனம் சில இதழ்கள் அவ்வப்போது சிறுவர் பாடல்களை வெளியிட்டாலும், அஃது ஒரு துறையாய் வளர அடிப்படை போட்டவர் தமிழவேள் கோ. சாரங்கபாணி ஆவார். அவர் தம் 'தமிழ் முரசு' நாளிதழில் 1953இல் 'மாணவர் மணிமன்ற'த்தைத் தொடங்கினார். இதழில் ஒரு முழுப்பக்கம் அப் பகுதிக்கென ஒதுக்கப்பட்டது. பின் நான்கு பக்கங்கள் கொண்ட தனி (இலவய) இதழாய்த் தமிழ் முரசு நாளிதழுடன் இணைத்து வழங்கப்பட்டது. திங்கட்கிழமைதோறும் 'மாணவர் மணிமன்ற மலர்' மலர்ந்தது; இன்றுவரை மலர்ந்து கொண்டிருக்கிறது.

மாணவர் மன்றத்தில் பள்ளி மாணவர்களும், எழுத வேண்டுமென்று ஆர்வங்கொண்ட இளைஞரும் உறுப்பினராய்ச் சேர்ந்தனர்; நிரம்ப எழுதிக்

69 1987ஆம் ஆண்டு மலேசியாவில் நடந்த 6ஆம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் படித்த ஆய்வுக் கட்டுரை, ப. 3
70 களஞ்சியப் பாடல் எண் 434

குவித்தனர்; மாணவர் மணிமன்ற மலரைக் கனிகுலுங்கும் சோலையாக்கினர். அதன் மூலம் பலர் சிறந்த எழுத்தாளராய் வளர்ந்தனர். இன்று மலேசியாவின் மூத்த எழுத்தாளராய் விளங்குவோருள் பலர், அவ் விதழில் எழுதிப் பழகியோரே.

'தமிழ் முரசு' மாணவர் மணிமன்ற மலர் வெளியிடத் தொடங்கிய பத்தாண்டுகளுக்குப் பின் 'தமிழ்நேசன்' சிறுவர் அரங்கம் (1963) (இப்போது மாணவர் பூங்கா) வெளியிட்டது. பின்னர்த் தமிழ்மலர், மலைநாடு, தினமணி, தமிழ் ஓசை, மலேசிய நண்பன், தினமுரசு ஆகிய எல்லா நாளிதழ்களுமே இலவசமாய்ச் சிறுவர் இதழ் வெளியிட்டு, அத் துறை வளர்ச்சிக்கு உதவின; உதவி வருகின்றன. சில கிழமை, திங்கள் ஏடுகளும் சிறுவர் பகுதியை வெளியிடுகின்றன.

இவ் வேடுகளில் பெரும்பாலும் குழந்தைகள், தங்களுக்காகத் தாங்களே பாடிய கவிதைகள், கதைகள், கட்டுரைகள், நாடகங்களே வெளிவந்தன. பள்ளி ஆசிரியர் இதற்குப் பெருந்துணை புரிந்தனர். இது குழந்தை இலக்கியத்தின் ஒரு கூறு ஆகும். குழந்தைகளை ஊக்கப்படுத்தினால் அவர்களால் எழுத முடியும். தலைமைத் தொகுப்பாசிரியர் இத் துறையில் பல வெற்றிகளைக் கண்டிருக்கிறார்; 12 அகவைக்குட்பட்ட மாணவர்களுக்குப் பயிற்சியளித்துப் பாடவைத்து ஏழெட்டுப் பாட்டரங்குகள் நடத்தியுள்ளார். அப் பாடல்கள் இவ் வேடுகள் சிலவற்றில் வெளிப்போந்தன; கையேடுகளாயும் வெளியிடப்பட்டன.

## சிறுவர் இதழ்கள்

இங்குச் சிறுவர்க்குத் தனி இதழ் வெளியிடும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மு. அப்துல் லத்தீப் 'மாணவர் பூங்கா' (1956), ஏ. ஜான் லாலையா 'சிறுவர் மலர்' (1958), பசீர் (சிங்கப்பூர்) 'மாணவன்' (1961) என்னும் இதழ்களை வெளியிட்டனர். கு. ஏழுமலையை ஆசிரியராய்க்கொண்டு 'அன்னை' (1963) வெளிவந்தது. 'மாணவர் உலகம்' (1965) ஜானகி வெங்கடேசனால் வெளியிடப்பட்டது. எனினும் இவை நீண்டகாலம் நடைபோடவில்லை.

சி. வே. கிருஷ்ணனை ஆசிரியராய்க்கொண்டு 1969இல் தொடங்கிய 'திருமகள்' சிறுவர் இதழ் இன்றளவும் வெளிவந்து கொண்டிருக்கிறது. மலேசியாவில் நீண்ட நெடுங்காலம் நிலைபேற்றுடன் திகழும் சிறுவர் இதழ் இஃது ஒன்றே. அண்மைக் காலமாய் (1992முதல்) கு. செல்வராசை ஆசிரியராய்க் கொண்டு ஜெயபக்தி வெளியீடாய்க் 'குயில்' வந்துகொண்டிருக்கிறது. வண்ண ஏடாய் வரும் இதில் மலாய், ஆங்கிலமொழிப் படைப்புகளும் வெளிவருகின்றன.

## வானொலியின் பங்கு (சிங்கை)

மலேசியச் சிறுவர் இலக்கிய வளர்ச்சிக்குச் சிங்கப்பூர் வானொலி ஆற்றிய பங்கு அளப்பரிது. மலேசியாவில் கல்வி ஒலிபரப்புத் தொடங்குவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே அது சிறுவர்களுக்கான நிகழ்ச்சிகளைத் தொடங்கியது;

அருமையான சிறுவர் பாடல்களுக்கு இசைகூட்டி ஒலிபரப்பியது. அவற்றுள் பெரும்பாலான பாடல்கள் தமிழகக் கவிஞர் பாடல்களாகும். ஆனால் எண்பதுகளில் ‘பாடிப் பழகுவோம்’ என்னும் நிகழ்ச்சியில் ஒலியேறிய பாடல்களெல்லாம் உள்நாட்டுக் கவிஞர்கள் எழுதிய பாடல்களாகும். நாட்டின் முன்னணிக் கவிஞர் பலரும் அந் நிகழ்ச்சிக்குப் பாடல் வழங்கினர்.

## மலேசியக் கல்வி ஒலிபரப்பு

மலேசியக் கல்வி ஒலிபரப்பு 1966இல் தொடங்கியது. அதில் 95 விழுக்காட்டிற்குமேல் உள்நாட்டுப் பாடல்களே (ஆயிரத்திற்குமேல்) ஒலியேறின. நல்ல பின்னணி இசையோடு ஒலியேறிய அப் பாடல்கள் மாணவரைப் பெரிதும் கவர்ந்தன. அழ. வள்ளியப்பா, முனைவர் தமிழண்ணல், புலவர் தணிகை உலகநாதன் முதலாய பெருமக்கள், அப் பாடல்களில் சிலவற்றை (த. தொ. ஆசிரியர் வழங்கிய இசைப் பேழைவழி) கேட்டுப் பெரிதும் வியந்தனர். த. தொ. ஆசிரியர் அப் பாட்டுச் செல்வங்களை நாடாவில் பதிவுசெய்து நெடுங்காலமாய்க் க்ாத்துவருகிறார்; கற்றல் கற்பித்தலுக்குப் பயன்படுத்தி வருகிறார். ஆசிரியர்களுக்குத் தாம் நடத்தும் கவிதைப் பயிலரங்குகளில் அப் பாடல்களைப் பயன்படுத்திவருகிறார். அவற்றில் சில பாடல்களைத் தொகுத்துக் ‘காற்றில் மிதந்த சிறுவர் பாட்டமுதம்’ என்னும் பெயரில் ஓர் இசைப் பேழையும் வெளியிட்டுள்ளார்.[71]

## நூல் வடிவில் சிறுவர் பாடல்கள்

சிறுவர் பாடல் நூல்கள் இங்குப் பேரளவில் வெளிவரவில்லை யென்றாலும் மலேசியச் சிறுவர் பாட்டுலகை அடையாளம் காட்டக்கூடிய நல்ல நூல்கள் சில வெளிவந்துள்ளன.

அறுபதுகளில் முழுநிலா, கத்திக் கப்பல், தேனீயைப் பார், பூஞ்சிட்டு, பாட்டுப் பாடலாம், இளந்தளிர் முதலாய நூல்கள் வெளிவந்தன.

எழுபதுகளில் அழகு பாட்டு, அன்புப் பாட்டு, அறிவுப் பாட்டு, அருள்புரிவாய், பூங்காராயா (செம்பரத்தை மலர்) முதலாய நூல்கள் வெளியீடு கண்டன.

எண்பதுகளில் விடுகதைகள் நூறு, தேன்சிட்டு, தேன்குழல், பாடுபாப்பா, பறவைக்கப்பல், மொழிச்செல்வம், எங்கள் பாட்டு, இன்பப் பாட்டு, நன்னெறிப்பாட்டு, எழுத்துப் பாட்டு 1,2,3 முதலாய நூல்கள் வெளிப்போந்தன.

---

71 சிலாங்கூர் மாநிலத் தமிழ்ப்பள்ளிகளின் தலைமை ஆசிரியர் மன்ற ஆதரவுடன் தாம் பணியாற்றிய மேருசாலைத் தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியர் சு. முனுசாமி முன்னின்று ஏற்பாடு செய்த கவிதைப் பயிலரங்கில் (13.8.1994) வெளியிடப்பெற்றது.

தொண்ணூறுகளில் 'தாய்நாடு, சிந்தனைச் செல்வம், இலட்சியங்கள் முதலாய நூல்கள் மலர்ந்தன.

பரிதி, மதிதாசன், சி. வேலுசுவாமி, மா. இராமகிருட்டினன், முரசு. நெடுமாறன், எல். எம். பகதூர், கா.கலியபெருமாள், பொன்முடி, ஆ. கிருட்டினசாமி, மா. அ. சந்திரன், சுங்கை ஜாவி சுப்பிரமணியம் முதலாயோர் சிறுவர்க்கான கவிதைநூல் இயற்றியவராவர். இவற்றோடு, பள்ளி நூலகங்களுக்கான வெளியீடுகள் என்ற வகையில் முரசு. நெடுமாறன், பொன்முடி, ஆ. தம்பாய் முனியாண்டி முதலாயோர் நிரம்பச் சிறுவர் பாட்டு நூல்கள் யாத்துள்ளனர். தொடக்கப் பள்ளிகளுக்கான இசைப்பாடல் (ஆசிரியர் கையேடு) நூல்களிலும் சிறுவர் பாடல்கள் நிரம்ப வெளிவந்துள்ளன. மலேசியச் சிறுவர் இலக்கியத் துறையில் மூத்தவராய்க் கருதப்படும் கவிஞர் சோமசன்மா சிறுவர்களுக்கு நூலேதும் வெளியிட்டதாய்த் தெரியவில்லை. ஆனால் இதழ்கள்வழி நிரம்பப் பாடியுள்ளார்.

## சிறுவர் கவிதை வெளியீட்டில் சிங்கப்பூர்

சிங்கப்பூரிலும் சில நல்ல சிறுவர் பாட்டுநூல்கள் வெளிவந்துள்ளன. முல்லைவாணன் யாத்த வீணை (1981), கரும்பு (1981), ஊஞ்சல் (1981), பரணன் இயற்றிய மழை (1984), இக்பால் தந்த அன்னை (1984), முத்துமாணிக்கம் வழங்கிய தேன்சிட்டு (1987), மெ. இளமாறன் பாடிய திங்கள் (1988), பனிக்கூழ் (1988), முருகதாசன் வெளியிட்ட தேன்மலர் (1989), மழலைமருந்து (1989), பெரி. நீல. பழநிவேலனின் செவ்வானம் (1990) முதலாயவை குறிப்பிடத்தக்கன. மெ. இளமாறன் 'மழலையர் மற்றும் சிறுவர் பாடல்கள்' என்னும் தலைப்பில் ஓர் இனிய இசைப் பேழையையும் வெளியிட்டுள்ளார் (1995).

## மலேசியத் தமிழ்ச் சிறுவர் இலக்கியத்தின் போக்குகள்

மலேசியத் தமிழ்ச் சிறுவர் பாடல்களில் தமிழகத்தின் கவிமணி, அழ. வள்ளியப்பா, பாரதிதாசன், பெருஞ்சித்திரன் முதலாயோர் சாயலைக் காண முடியும். ஆனால், பாடுபொருளில் பெரும் மாறுதல்கள் தென்படுவதை உணரலாம்.

இயற்கையில் காணப்படும் நாய், கோழி, வாத்து, ஆ(பசு), ஆடு முதலாய வீட்டு விலங்குகள்பற்றிய பாடல்களிலோ யானை, புலி, அரிமா முதலாய காட்டுவிலங்குகள்பற்றிய பாடல்களிலோ ஒரு தனிப் போக்கைக் காண்பதரிது. ஆனால், ரப்பர்மரம், செம்பனைமரம் முதலாய பயிரினம்பற்றிய பாடல்களும் டூரியான் (Durian), முடிப்பழம் (Rambutan), மங்குஸ்தீன் (Mangosteen) முதலாய பழவகைகள்பற்றிய பாடல்களும் புதுமைச் சிறப்புடன் விளங்குகின்றன.

மலாய்க்காரர், சீனர், பிற இனத்தவர் பழக்கவழக்கங்கள், பண்பாடுகள் குறித்த பாடல்களில் புதிய போக்குகளைக் காணலாம். பல்லின ஒற்றுமை, பொதுப் பண்பாடுகள் முதலாயவைபற்றிய பாடல்களும் மற்றவர்க்குப் புது விருந்துகளே.

## உத்திகள்

மலேசியாவில் குழந்தைக் கவிஞர்கள் பயன்படுத்தும் உத்திமுறைகள்பற்றியும் ஈண்டு நினைவுகூர்தல் சாலும். இதுகுறித்து முனைவர் இலட்சுமி மீனாட்சிசுந்தரம், "மலேசியக் குழந்தைப் பாவலர் அனைவரும் ஒலி ஒப்புமையுடைய சொற்களையும், ஒரே சொல்லை மீண்டும் மீண்டும் கையாண்டு ஓசையின்பம் வழங்குகின்றனர். பல்லவி போல மீண்டும் மீண்டும் வரும் சொற்கள் ஓசையை வழங்குவதோடன்றிச் சிறுவர் மனங்களில் எளிமையாகப் பாடலைப் பதிய வைக்கவும் உதவுகின்றன. ஒலிநயத்திற்குப் புலன்களைக் கவர்ந்து உள்முகமாகத் திருப்பும் ஆற்றலுண்டு; வெளியுலகப் பொருள்களில் நம் புலன்கள் ஈடுபடுவதில்லை என்னும் உண்மையை மலேசியக் குழந்தைப் பாவலர்கள் நன்கு உணர்ந்தமையாற்றான் ஓசைநயத்திற்குச் சிறப்பிடம் கொடுத்துப் பாடியுள்ளனர்"[72] என்கிறார். மேலும் வினாவிடை 'பிசி' என்னும் விடுகதைப்போக்கில் ஆனவை, முரண்தொடை, உரையாடல் முறைகள், கதைமூலம் கருத்துக் கூறும் முறை முதலாய உத்திகளில் - அணுகுமுறைகளில் பாடல்கள் அமைந்துள்ளமை காணலாம். மேலும், குழந்தைகளுக்காகப் பாடியதோடு, தாமே குழந்தையாய் மாறிப் பாட்டிசைத்தும் குழந்தை இலக்கியத்தை வளப்படுத்தியுள்ளனர்.

## தமிழகத்தின் ஒப்புதல்

ஓர் இலக்கியம் எங்கு மலர்ந்தது என்பது முதன்மையன்று; எங்ஙனம் மலர்ந்துள்ளது என்பதே அதன் தகுதியை முடிவு செய்யும். உயர்ந்த ஓர் இலக்கியம் எந்த மூலையில் மலர்ந்தாலும் அஃது உலகத்துக்கே சொந்தமாகிவிடும். அங்ஙனம் ஓரிலக்கியத்திற்குத் தான் பிறந்த நிலத்தின் எல்லைக்கப்பாலிருந்து கிடைக்கும் வரவேற்பு, பாராட்டு மதிப்பு மிக்கவையாகும். மலேசிய நாட்டுக் கவிதை வளத்தை, சிறுகதையின் சிறப்பைத் தமிழகம் பாராட்டியுள்ளது; பரிசு வழங்கிச் சிறப்பித்துள்ளது. அதனைப் போலவே குழந்தைக் கவிதை இலக்கியத்தையும் படைப்பாளரையும் பாராட்டியுள்ளது.

முனைவர் பூவண்ணன் தம் 'சிறுவர் இலக்கியச் செல்வர்கள்' என்னும் நூலில் சி. வேலுசுவாமிக்கும் த. தொ. ஆசிரியருக்கும் இடமளித்துச் சிறப்புச் சேர்த்துள்ளார். த. தொ. ஆசிரியர் இயற்றிய 'இளந்தளிர்' என்னும் சிறுவர்

---

72 மலேசியத் தமிழ்க் கவிதைக் கருத்தரங்க மலர், ப. 75

பாட்டுநூல் தமிழகத் தலைநகரில் (மாணவர் மன்றம்) தக்கார் முன்னிலையில் அரங்கேற்றம் கண்டது (1969). "அயலகத் தமிழர் நூலொன்று தமிழகத் தலைநகரில் அரங்கேற்றம் காண்பது இதுவே முதல்முறை" என்று ஏற்பாட்டுக் குழுத் தலைவர் புலவர் தணிகை உலகநாதன் குறிப்பிட்டார். இவர் பாக்கள் தமிழக அரசின் தொடக்கப்பள்ளிப் பாடநூல்களில் இடம்பெற்றமை இந் நாட்டுச் சிறுவர் கவிதைத் துறைக்குக் கிட்டிய ஒப்புதலாகும்.

## எதிர்காலத்தில் குழந்தை இலக்கியம்

மலேசிய, சிங்கப்பூர் நாடுகளில் சிறுவர் இலக்கியத்திற்கு நிரம்பத் தேவை உள்ளது. மலாய், சீன, ஆங்கில மொழிகளிலும் இங்குச் சிறுவர் இலக்கியம் மிகச் சிறப்பாய் வளர்ந்துள்ளது. ஏட்டளவில் நில்லாமல் அவை ஒலி, ஒளிச் செல்வங்களாய் உயர்வுகண்டு வருகின்றன. அவை. மாணவரைப் பெரிதும் ஈர்க்கின்றன. இத் துறையில் தமிழ்க் கல்வியாளர் கருத்துச் செலுத்தாவிடில் மாணவரைக் கவர இயலாது. எதிர்காலத்தில் பள்ளிகளில் ஏட்டுச்செல்வம் குறைந்து, ஒலி, ஒளிச் செல்வம் (C.D.Rom) நூலகங்களை அணிசெய்யலாம். கால மாறுதல்களுக்கேற்ப இலக்கிய வடிவங்களைப் போற்றி வரவேற்று வளப்படுத்திக் கொள்ளாத மொழி பின்தங்கிவிடுமென்பதில் ஐயமில்லை. இப்போது அத்திபூத்தாற்போல் எங்கோ, ஒன்றாக உருவாகும் இசைப் பேழைகள் பேரளவு உருவாக வேண்டும்.

தமிழகத்தில் கலைவளம் கரைபுரண்டோடுவதாய் ஒரு தோற்றத்தைக் காணமுடிகிறது. ஆனால், அங்கு எதிர்காலத் தலைவர்களாய இக் காலக் குழந்தைகளை உயர்வடையச் செய்ய - தமிழ் அமுதத்தைத் தடையின்றி அவர்களைப் பருகச் செய்ய எம் முயற்சியும் மேற்கொள்ளப்படுவதாய்த் தெரியவில்லை. முன்பு மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் வ. சுப. மாணிக்கம், அப் பல்கலைக்கழகத்தின் 'உலகத் தமிழ்ப் பணி'யின் சார்பில் ஒருசில இசைப்பேழைகளை வெளியிட்டார். அம் முயற்சி தொடரவில்லை.

அண்மையில் குழந்தைக் கவிஞர்களாய குழ. கதிரேசன், செல்லகணபதி ஆகியோர் சில இசைப் பேழைகளை வெளியிட்டுள்ளனர்; மேலும் சிலர் வெளியிட்டிருக்கலாம். உலகில் கல்வி கற்றல், கற்பித்தல் முறைகள் நாளுக்கு நாள் மாறுதல் அடைந்துவருகின்றன. 'தமிழினம் ஏழைமை நிறைந்த இனம்' என்று பொதுவாகச் சொல்லப்பட்டாலும் வருங்காலத் தமிழினம் பசுமையற்றுக் காய்ந்து போக இடம்தருதல் கூடாது. இத் துறையில் தாய்தமிழகத்திற்குப் பெரும் பொறுப்புண்டு; அதற்கேற்ற வாய்ப்பும் வசதியும் அதற்குண்டு. ஒலி, ஒளி நாடாக்கள்வழி அஃது உலகத் தமிழ்க் குழந்தைகளுக்கு உயர்ந்த கலை, இலக்கிய, பண்பாட்டுச் செல்வங்களை வழங்கலாம்; வழங்கவேண்டும்.

## ௩2 உரைவீச்சு (புதுக் கவிதை)

களஞ்சியத்தில் உரைவீச்சு (புதுக்கவிதை) இடம்பெறவில்லை யெனினும் இந் நாட்டில் இன்று விரிந்து பரந்துள்ள அதனைப்பற்றியும் ஈண்டுச் சிறிது கூறுதல் கடமையாகும்.

மேலைநாட்டினர் தொடர்பால் தமிழுக்குக் கிடைத்த புது வரவுகளில் ஒன்றான இதற்குப் பாரதி அடியெடுத்துக் கொடுத்தார். பிச்சமூர்த்தி, புதுமைப்பித்தன். கு. பா. இராசகோபாலன், சி. சு. செல்லப்பா, வல்லிக்கண்ணன், கா. ந. சுப்பிரமணியம், இரகுமான்கான், மு. மேத்தா, நா. காமராசன், வைரமுத்து முதலாயோரால் இத் துறை வளர்ந்தது.

உரைநடையும் அல்லாத, கவிதையும் அல்லாத இதனை ‘உரைவீச்சு’ என்றார் முனைவர் சாலை இளந்திரையன். பாரதி தொடங்கிய நிலையிலிருந்து பல்வேறு மாற்றங்களைக் கண்டு இன்று ‘புதுக் கவிதை’ என்று பெரும்பாலோரால் அழைக்கப்படும் நிலையை அஃது எட்டியுள்ளது.

இதுகுறித்து முனைவர் தமிழ்க்குடிமகன், “வசனகவிதையும் யாப்பு, சந்த வேறுபாடு போலப் பல்வேறு வகைப்படுகிறது”[73] என்கிறார்.

### மலேசியாவில் .....

மலேசியாவில் இத் துறையைத் தொடக்கிவைத்த பெருமை சி. கமலநாதனைச் சாரும். அவர் தமிழ்முரசில் கள்ளப்பார்ட்டுகள் (21.5.1964) என்னும் தலைப்பில் எழுதிய படைப்பே முதல் உரைவீச்சு (புதுக்கவிதை) ஆகும். தமிழ்முரசை யடுத்துத் தமிழ்மலர் இத் துறைக்கு இடமளித்தது. எனினும், இதனை ஓர் இயக்கமாகவே நடத்தி இத் துறையை நிலைப்படுத்தியது ‘வானம்பாடி’யே.[74] இவ் வேட்டின் முதல் தலைமையாசிரியராய்ப் பொறுப்பேற்ற ஆதி குமணன், இத் துறைக்குத் தந்த ஊக்கம் அளப்பரிதாகும்; தொடர்ந்து தமிழ் ஓசை[75] வாயிலாயும் இத் துறை வளர்ச்சிக்கு உதவினார்.

இத் துறை வளர்ச்சிக்குப் பைரோஜி நாராயணனும் ஆதரவு வழங்கினார். அரசு மாத இதழான உதயத்தின் மூலம் எம். துரைராஜ் ஆதரவு தந்தார்;

---

73 புதுக்கவிதை, முனைவர் பட்ட ஆய்வேட்டின் முதற்பகுதி, ப.5

74 விரிவாய விளக்கங்களுக்குக் கவிதைக் கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

75 விரிவாய விளக்கங்களுக்குக் கவிதைக் கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

இப்போது தம் 'இதயம்' (மாதம் இருமுறை) மூலம் ஊக்கம் நல்கிவருகிறார். 'சாசனம்'[76] தந்து நிலையாய ஓர் இடத்தைப் பிடித்துக்கொண்ட இராசகுமாரன் இப்போது நயனத்தின் (வார இதழ்) மூலம் உரைவீச்சுக்கு ஊக்கம் சேர்த்து வருகிறார். இப்போது பொதுவாக எல்லா நாள், கிழமை, திங்கள் இதழ்களுமே இத் துறைக்குப் பேராதரவு நல்கி வருகின்றன. முனைவர் இரா. தண்டாயுதம், முனைவர் ரெ. கார்த்திகேசு, எம். ஏ. இளஞ்செல்வன், டாக்டர் மா. சண்முக சிவா, அரு. சு. ஜீவானந்தன், சா. அன்பழகன் முதலாயோர் ஆய்வுரைகள் எழுதி இதன் வளர்ச்சிக்குத் துணைபுரிந்தனர்.

## வரவேற்பும் எதிர்ப்பும்

உரைவீச்சு என்னும் புதுக்கவிதை இங்கு அறிமுகமானபோது, இதற்குக் கடுமையான எதிர்ப்புத் தோன்றியது. மரபுவழி நின்று எழுதிய கவிஞர் மிகக் கடுமையாய்த் தாக்கினர்.

"தாயு மின்றித் தந்தையு மின்றித்
தப்பால் பிறக்கும் ஒருகுழந்தை
தாளமு மின்றிக் கோலமு மின்றித்
தவறால் பிறப்பது புதுக்கவிதை!

சாலை விதியைச் சமிக்ஞை விளக்கைச்
சாரா தோடும் புதுக்கவிதை
நாலும் தெரிந்த நமக்குள் வழக்கை
நாசமாக் கட்டும் புதுக்கழுதை!"

தலைநகரிலிருந்து இங்ஙனம் சீறினார் தீ. சி. பொன்னுசாமி.

"கற்பனைச் செல்வங்கள் காணாமல் வாழ்கின்ற பக்கிரிகள்
அற்பம் எனத்தமிழ் ஆள வருகின்ற போக்கிரிகள்"

என்று சிங்கப்பூரிலிருந்து பரணன் பொங்கினார். இங்ஙனம், இந்தத் தாக்குதலால் புதுக்கவிதையாளர் சோர்ந்து போய்விடவில்லை.

"இலக்கியக் காவலர்களாய்
எக்காள மிடும்

---

76 வானம்பாடி இதழில் 1978ஆம் ஆண்டு தொடங்கித் தொடர்ந்து மூன்றாண்டுகளுக்கு மேல் எழுதப்பட்ட கலை இலக்கியத் திறனாய்வு. இது கவிதையும் உரைநடையும் கலந்த வடிவத்தில் எழுதப்பட்டுப் பெரும் வரவேற்பைப் பெற்ற படைப்பு.

ஓ.......... கிளிப்பிள்ளைகளே!
நீங்கள் -
தாலி கட்டி வேலி போட்டுத்தான்
மஞ்சத்தில் குலவுகிறீர்கள்!
ஆனால்,
உங்கள் உணர்ச்சியற்ற சொல்லடுக்குகளில்
மஞ்சங்கள் பாடைகளாய் மாறுகின்றன.!
நீங்கள்
பிணங்களைப் பெற்றுத் தள்ளுகிறீர்கள்."

இஃது எம். ஏ. இளஞ்செல்வனின் எக்காளம்! இங்ஙனம் ஒரு போராட்டமே இங்கு நிகழ்ந்தது. அதன் கடுமை இப்போது அடங்கிப்போய் விட்டதெனினும் 'புதுக்கவிதை' என்னும் பெயரை இன்னும் மரபுவழி வந்தவருள் பலர் ஏற்கவில்லை. மேலும், கவிதைக்கு 'மரபுகவிதை' எனப் பெயர் சூட்டுவதையும் ஒப்பவில்லை.

"பன்னெடுங்காலம் 'கவிதை' என்னும் பெயராலேயே நிலவிவந்த ஒரு வடிவத்தின்மேல் 'மரபு' என ஓர் அடையை ஏன் வலிந்து திணிக்க வேண்டும்? 'கவிதை' யென்றாலே மரபு சார்ந்ததுதானே?" என்பது அவர்தம் வாதம். "மரபுகவிதையென்றும் புதுக்கவிதையென்றும் நாம் பிரித்துப் பேசுவது நம் ஆய்வு வசதிக்காகத்தானே யன்றி வேறன்று"[77] என்று கூறும் முனைவர் எழில் முதல்வன் கருத்து ஈண்டு உன்னத்தக்கது.

மேலும் புதுக்கவிதை யென்றால் மரபை அடியோடு ஒதுக்கிவிட்டுப் பிறப்பதன்று. அது கவிதையின் புறவடிவமான யாப்பு வரம்பை மீறலாம்; வாழ்வு வரம்பை - மரபை மீறமுடியாது. உலகத்தோடு ஒட்ட வகுத்த வாழ்வுநெறிகளை மீறும் ஓர் இலக்கிய வடிவம் வாழ்வு பெற முடியாது. ஆகவே, 'புதுக் கவிதை'யை மரபு கடந்தது என்று கூறுதல் கூடாது. "மரபு என்பது சிலர் நினைப்பதுபோல் நிகழ்கால வளர்ச்சியைத் தடைப்படுத்தும் நச்சணு அன்று. நிகழ்காலத்தைச் செழுமைப்படுத்துகிற இறந்த காலத்தின் உயிர்ச்சத்து"[78] என்பதனை மறத்தல் கூடாது.

## மரபுகவிதையும் புதுக்கவிதையும்

'புதுக்கவிதை'யை ஓர் இலக்கிய வடிவமாய் ஏற்கலாமே அல்லாது கவிதைக்குரிய இடத்தை அதற்குத் தரக்கூடாது' என்பது ஒருதரப்பினர் வாதம். 'இரண்டுமே கவிதைதான்' என ஏற்பாருமுளர்; கவிதையென்னும் சிறப்பிற்குரியது

77 எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர் (1995), ப. 37
78 மேலது

'புதுக் கவிதை'யே என வலிந்துரைப்போருமுளர். இம் முத்தரப்போருக்கு மிடையில் இங்கு இருவடிவங்களும் வளர்ந்து வருகின்றன. எனினும் இப் புது வடிவத்தில் ஏற்பட்டுவரும் தீங்கையும் எண்ணிப் பாராமல் இருக்க முடியாது.

"இன்று இத் துறையில் எல்லாத் தரப்பினரும் ஈடுபட்டுள்ளனர். வடமொழி, ஆங்கிலமொழிச் சொற்களைத் தாராளமாய்க் கலந்து புதிய மணிப்பிரவாள நடையை உருவாக்குவதற்குப் புதுக்கவிதை பெரும் வாய்ப்பாக உள்ளது. இப் போக்குத் தமிழுக்குப் புதிய தீங்கை விளைவிக்கும் என்பது உறுதி"[79] என்று எச்சரிக்கிறார் முனைவர் தமிழ்க்குடிமகன். மேலும் அவர் அதுகுறித்துக் கூறுகையில், "........ எனினும், தமிழ்க் கவிதையுலகில் ஒரு பரபரப்பையும், மந்தநிலை மாற்றிடும் புதுவேகத்தையும் புதுக் கவிதைகள் உண்டாக்கியுள்ளன. கவிதை இயற்றவும், கவிதையை அனைவரும் விரும்பிப் படிக்கவுமான ஒரு மறுமலர்ச்சியை இவை தோற்றுவித்துள்ளன. இதனை ஓர் அதிர்ச்சி வைத்தியம் என்ற அளவிலேயே தமிழகம் ஏற்றுக்கொண்டுள்ளதாகக் கூறலாம். எனினும் அதன் எதிர்காலம் அதனிடம்தான் உள்ளது"[80] என்கிறார். "பழைய செய்யுள் மரபுகளைவிட்டுச் சீர், தளை, எதுகை போன்றனபற்றிக் கவலையுறாமல் புதிய கற்பனையும், நடையெளிமையும் பொருந்த இயற்றப்பட்ட இவற்றில் பெரும்பாலும் பொருள்தெளிவு கிடைக்கு மெனினும், புரியாமை என்னும் 'இருண்மை'ப் பண்பு காணப்படுவதும் உண்டு"[81] என்பதை மறத்தல் கூடாது.

## ஊக்கம் தந்த நிகழ்வுகள்

மலேசியாவில் புதுக்கவிதைத் துறை வளர்ச்சிக்கு ஏடுகள் இடமளித்ததோடு, வேறு சில நிகழ்வுகளும் ஊக்கமூட்டின. 'நவீன இலக்கியச் சிந்தனை' என்னும் ஓர் அமைப்பைத் தோற்றுவித்த எம். ஏ. இளஞ்செல்வன், சீ. முத்துசாமி, நிலாவண்ணன் முதலாயோர் துணையுடன் கூலிமில் முதலாம் புதுக்கவிதைக் கருத்தரங்கைக் கூட்டினர் (25.8.1979). இஃது இத் துறைக்குப் பேருக்கம் நல்கியது.

அடுத்து, அமைச்சர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு பொன்விழாவின்போது (1986) புதுக்கவிதைப் போட்டியும் நடத்தப்பட்டுப் பெருந்தொகை பரிசளிக்கப்பட்டது.

மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடந்த பண்பாட்டு இலக்கிய வாரத்தில் (1987) புதுக்கவிதை அரங்கொன்று நடத்தப்பட்டது. இஃது இத் துறைக்கு ஓர் உயரிய ஒப்புதலை நல்கிற்று.

---

79 புதுக்கவிதை (முனைவர் பட்ட ஆய்வேட்டின் முதற் பகுதி), ப. 47

80 மேலது

81 சுப்பிரமணியன் ச. வே., திராவிட மொழி இலக்கியங்கள், ப. 281

மற்றொரு நிகழ்வு கூலிமில் நடந்த இரண்டாம் புதுக்கவிதைக் கருத்தரங்கமாகும் (23.12.1988). இதனையும் இளஞ்செல்வனே முன்னின்று கோ. முனியாண்டி, அருள்தாசன், துரை. முனியாண்டி, கோ.புண்ணியவான் முதலியோர் ஒத்துழைப்புடன் நடத்தினார். இது பேருக்கம் நல்கிய நிகழ்வாய் அமைந்தது. அதில் படைக்கப்பட்ட கட்டுரைகளும், வெளியிடப்பட்ட ஏடுகளும் புத்தெழுச்சியைத் தந்தன.

## முன்னோடிகள்

இத் துறையில் இன்று நிறையப் பேர் ஈடுபட்டுள்ளனர்; நிரம்ப எழுதிக் குவிக்கின்றனர். ஆனால் நூல் வடிவம் பெற்றவை சிலவே. இத் துறையில் முதல் நூலைப் படைத்த முன்னோடி எம். ஏ. இளஞ்செல்வனாவார்.

“பொங்கல் வைத்தாயா
என்றேன்
பக்கத்து வீட்டுப் பார்வதியிடம்
அவர் வந்தால்தான்
பொங்கல் என்றாள்!
அவர் வந்தார்!
புஸ்ஸென்ற சத்தத்துடன்
போத்தல்கள் பொங்கின!”

என்பதுபோன்ற சமுதாய அவலங்களை எடுத்துரைக்கும் உரைப்பாக்கள் அடங்கிய ‘நெருப்புப் பூக்கள்’ (1979) இந் நாட்டில் வெளிவந்த முதல் புதுக்கவிதை நூலாகும். அதனைத் தொடர்ந்து பத்துப் பதினைந்து நூல்கள் வெளிவந்தன. மிகுதியாய நூல்களை வெளியிட்டவர் ஏ. எஸ். பிரான்சிஸ்.

இவர்களோடு, சீ. முத்துசாமி, துரை. முனியாண்டி, இளந்தமிழன், அக்கினி, வே. புண்ணியவான், கோ. முனியாண்டி, அப்துல் காதர், வே. இராஜேஸ்வரி, அருள்தாசன், பூபதி, பிரசன்னா, கரு. சொக்கன், கு. வ. முருகன். இந்திரன், கலாராமு, கு. கிருஷ்ணன், ஸ்ரீரஜினி, மலர்ச்செல்வன், கு. கமலா, நாகராஜன், ப. இராமு, கு.கோபாலன், பஹரதன், விஜயநாதன் முதலாயோர் எழுதிவருகின்றனர்; நல்ல சிறுகதை ஆசிரியரான அன்புச்செல்வன், சை. பீர் முகம்மது, மெ. அறிவானந்தன் முதலியோரும் இத் துறையைத் தொட்டுப் பார்த்தவராவர்.

சிங்கப்பூரிலும் இத் துறை வளர்ந்து வருகிறது. இளங்கோவன். இக்பால், லதா, கடையநல்லூர் ஜமீலா, இராஜசேகர், சாகுல் அமீது, அமீருதீன் முதலாயோர் இத் துறையை வளர்த்து வருகின்றனர்.

## பாடுபொருள்

மலேசியாவில் மலர்ந்த உரைப்பாக்கள் பரவலான பாடுபொருளைக் கொண்டுள்ளன. வாழ்வியல் உண்மைகள், விரக்தி, தோட்டப்புற நிலை, வாழ்த்து, இரங்கல், இறப்பு, சாதி முதலாயன பாடு பொருளாய் வந்துள்ளன.

சில எடுத்துக்காட்டுகள் :

"ஈரோட்டுச் சிங்கம்
கோரமாய்க் கத்தியும்
இன்னும் சாகாத
சனியன்"

என்று சாதியைச் சாடுகிறர் துரை. முனியாண்டி

"............
ஏழைகளின் ஜனநாயகம்
விழிபிதுங்கி விட்டது
பணநாயகத்தின் முன்
................."

இப்படிக் கொதிக்கிறார் ஏ. எஸ். பிரான்சிஸ்.

"...............
உன் பேச்சும்
ஆற்று நீரும்
ஒன்றுதான்
என்பதை
நிரூபித்து விட்டாய்..?
மன(த்)தில்
எத்தனை
ஊமைக் காயங்கள்
தெரியுமா?"

மனத்தின் விரக்தியைப் ப. ராமுவின் உரைப்பா இங்ஙனம் வெளிப்படுத்துகிறது. இவற்றொடு நில்லாமல் உலகப் பார்வையும் மலேசிய உரைவீச்சுகளில் படிந்துள்ளன. எனினும், வேகமும் புத்தெழுச்சியும் கொண்ட படைப்புகள் மிக மிக அருகியுள்ளன.

## எது கவிதை?

யாப்புச் சட்டங்களுக்குட்பட்ட வெறும் சொற்கோவையெல்லாம் எப்படிக் கவிதையாக முடியாதோ அதேபோல் யாப்புமரபு கடந்து விடுதலையொடு கிறுக்கித்தள்ளும் சொல்லடுக்குகளும் கவிதையாகா! யாப்புச் சட்டங்கள் விடுதலை உணர்வொடு பாடத் தடைவிதிக்கின்றன என்பதால்தான் 'புதுக்கவிதை' தோற்றம் கண்டதென்பர். ஆனால் கோலம் போட மாவெடுத்துக் கொட்டி வைத்தல்போல் ஆகுமேயானால் அவ் வடிவத்தின் நோக்கம் தோற்றுவிடுகிறது.

இதுகுறித்து இளந்தமிழன் கருத்துரைக்கையில் "1970களில் பிரளயமாய்ப் புறப்பட்ட புதுக்கவிதையின் இன்றைய போக்கும் நோக்கும் என்ன? இன்றைய இதழ்களில் வெளிவரும் பெரும்பாலான கவிதைகளின் பாடுபொருள் என்ன? கடைத்தெருக் காதல், அதில் தோல்வி, அதனால் சோகம் போன்றவைதாம் பெரும்பாலும் பார்க்கிறோம்."[82] என்கிறார்.

கவிதை எப்படி அமைய வேண்டுமென டாக்டர் மா. சண்முகசிவா கருத்துரைக்கையில் "மலேசியப் புதுக்கவிதைகள் கனவுகளில் மூழ்கவைத்துக் கிளுகிளுப்பூட்டாமல், கோஷங்களை எழுப்பியும் தீர்வுகளை முன்வைக்காமல் இந்த வாழ்க்கையை அதன் சோகங்களுடனும், குரூரங்களுடனும் அவ்வப்போதைய சந்தோஷங்களுடனும் கவிதையாக்குகிற திறமை நம் கவிஞர்களுக்கும் வரவேண்டும்"[83] என்கிறார். இந்தக் குறியிலக்கை நோக்கி மலேசிய உரைவீச்சு - புதுக்கவிதைத் துறை உயர்வுகாண வேண்டும்!

## ச துளிப்பா (ஐக்கூ)

சப்பான் நாட்டு இலக்கிய வடிவமான இது தமிழுக்குப் புதுவரவு என்றாலும் சங்ககாலத்திலேயே இது போன்ற வடிவம் பயின்று வந்துள்ளது. ஐங்குறுநூறு பாக்களின் புறவடிவம் இதுபோன்றது. ஆனால் அகவடிவம் - கருத்து வடிவம் மாறுபட்டதாகும். உரைவீச்சுப் போன்ற வரிவடிவமும் தமிழில் இல்லாமலில்லை. எதுகைமோனை முதலாய யாப்புச் சட்டங்களை மீறிக் கருத்து வடிவத்திற்கே முதன்மை தந்து நிற்கிறது சங்க இலக்கியம். சிலப்பதிகாரத்தில் 'உரைப்பாட்டு மடை' என்ற வடிவம் வந்துள்ளமை ஈண்டுச் சுட்டத்தக்கது. இங்ஙனம் எந்தத் தொடையும் இல்லாது பாடப்படுவதனைச் செந்தொடை என்று குறித்தனர் இலக்கண நூலார். ஐங்குறு நூற்றுப் பாடல்கள் சிறுசிறு அடிகளால் குறுகிய வடிவில் அமைந்துள்ளமை ஈண்டு எடுத்துக்காட்டத் தக்கது.

---

82 மலேசியத் தமிழ்ப் புதுக் கவிதைகள் ஓர் ஆய்வு, ப. 28
83 மலேசியத் தமிழ்ப் புதுக் கவிதைகள் ஓர் ஆய்வு, ப. 44

துளிப்பா (ஐக்கூ) வடிவினும் குறுகிய வடிவினதாய் ஓர் வடிவமும் தமிழில் உண்டு. ஔவையார் அறிமுகப் படுத்திய ஆத்திசூடியே அது. இதனைப் போன்ற எத்தனையோ நுட்பங்களை நமக்குள்ளேயே வைத்துப் பூட்டிக் கொண்டிருப்பதால் உலகத்துக்குத் தெரியாமல் அடைபட்டுக் கிடக்கின்றன. உலகப் பார்வை தமிழின்மேல் விழச்செய்யும் முயற்சியில் இறங்கினால் பல புதிய இலக்கிய வடிவங்கள், கோட்பாடுகள் உலகிற்குக் கிட்டும். எடுத்ததற்கெல்லாம் பிறநாட்டு அறிஞர்களை மேற்கோள் காட்டும் தமிழ் ஆய்வாளர் பார்வையும் விரியும்.

தமிழகத்திலும் ஈழத்திலும் சிலர் துளிப்பா எழுதியுள்ளனர். ஓவியக் கவிஞர் அமுதோன் 'ஐக்கூ அந்தாதி'யே எழுதி நூலாக்கி வெளியிட்டுள்ளார். ஆய்வுநூல்களும் சில வெளிவந்துள்ளன. மலேசியக் கவிஞர் சிலரும் இவ் வடிவத்தையும் தொட்டுப் பார்த்துள்ளனர். ஆனால், அது முறையான வளர்ச்சி காணவில்லை. பச்சைபாலன், முனைவர் சபாபதி முதலாயோர் இதுகுறித்துச் சில ஆய்வுக்கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

தமிழிலக்கியத்தில் புதிதாய்த் தோன்றும் எந்த வடிவத்தையும் மலேசியக் கவிஞர் விட்டுவைத்ததில்லை. நல்ல ஊக்கமூட்டுதல் இருந்தால் மரபையொட்டிய கவிதைத் துறையில் தலைநிமிர்ந்து நிற்பதுபோல், மற்ற வடிவங்களைப் படைப்பதிலும் தலைநிமிரலாம்.

## ரு சிறுகதை இலக்கியம்

இக் களஞ்சியம், படைப்பிலக்கியங்களில் முழுக்க முழுக்கக் கவிதையையே தன்னுள் கொண்டுள்ளது. எனினும் இதனில் இடம்பெற்றுள்ள இலக்கிய வரலாற்றில் சிறுகதை, புதினம், கட்டுரை ஆகியனபற்றிக் குறிப்பிடப்படவில்லையெனில், இலக்கிய வரலாறு நிறைவுடையதாகாது. ஆகவே, அத் துறைகள்பற்றியும் மிக மிகச் சுருக்கமாக ஈண்டுக் குறிக்கப்படுகிறது.

ஆங்கிலேயர் தொடர்பால் தமிழுக்குக் கிடைத்த புதிய வரவுகளில் சிறுகதை இலக்கியம் ஒரு சிறந்த கலைவடிவமாகும். கவிதைக்கு அடுத்த சிறப்பை அது பெறுகிறது. இன்று பெரும்பாலோரைக் கவர்ந்து நிற்கும் வடிவமும் அதுவே.

தமிழில் சிறுகதை 1917 இல் தோற்றம் கண்டது என்றும், வ.வே.சு. ஐயர், பாரதியார், மாதவய்யா முதலாயோர் இத் துறைக்கு முன்னோடிகள் என்றும் ஆய்வாளர் குறிப்பிடுகின்றனர்.

மலேசியாவிலும் "நாவல் இலக்கியம் தோன்றிய போதே (1917) தமிழில் சிறுகதையும் தோன்றி வளரத் தொடங்கிவிட்டது"[84] என்கிறார் டாக்டர் இரா. தண்டாயுதம்.

ஆனால், தமிழ்கூறு நல்லுலகிலேயே சிங்கப்பூரில்தான் சிறுகதை இலக்கியம் முதலில் தோன்றியது என்று ந. கோவிந்தசாமி குறிப்பிடுகிறார். 1888 இல் 'சிங்கை நேசன்' ஆசிரியர் சிகு மகதூம் சாயபு தமது கிழமை இதழில் தொடர்ந்து 'விநோத சம்பாஷணை' என்னும் பெயரில் சிறுகதைகள் எழுதிவந்தார். "இச் சிறுகதைகளையே சிங்கப்பூரில், தோன்றிய முதல் முயற்சியாக நாம் கொள்ள வேண்டும்"[85] என்கிறார்.

மலேசியாவைப் பொறுத்தவரை சிறுகதை 1930களில்தான் முறையான வளர்ச்சிபெறத் தொடங்கியது. 1950களில்தான் அது வலிவோடு வேரூன்றியது. அதற்கு முன்பு எழுதியவர்கள் தமிழகத்திலிருந்தும் ஈழத்திலிருந்தும் இங்கு வந்து குடியேறியவர் ஆவர்.

## வளர்ச்சிக்கு அடித்தளம்

இந் நாட்டுத் தாளிகைகள் கவிதை வளர்ச்சிக்குக் களம் அமைத்துத் தந்தது போலவே, சிறுகதை வளர்ச்சிக்கும் அடித்தளமாய் விளங்கின. கவிதை வளர்ச்சிக்கு வித்திட்ட முயற்சிகள், பரிசில் திட்டங்கள் போலவே சிறுகதைக்கும் அமைந்தன.

சுப. நாராயணன் தொடங்கிய கதைவகுப்பு (1950 - 51), ரசனை வகுப்பு (1952), கு. அழகிரிசாமியின் இலக்கிய வட்டம் (1952) முதலாயவை சிறுகதை வளர்ச்சிக்கு அடிப்படை போட்டன. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் நடத்திய சிறுகதைப் போட்டிகள், மாதாந்தரக் சிறுகதைக் கருத்தரங்குகள், தங்கப் பதக்கம் வழங்கி ஊக்கியமை, தமிழ்நேசன் நடத்திய சிறுகதைப் போட்டி, பவுன் பரிசு திட்டம் (1972), தமிழ்முரசு, தமிழ்மலர், மலைநாடு முதலாய நாளிதழ்கள் தந்த ஊக்கம், சங்கமணி முதலாய கிழமை, மாத இதழ்கள் காட்டிய ஆதரவு முதலியவை சிறுகதைத் துறையை வளர்த்தன.

மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை 1985ஆம் ஆண்டுமுதல் தொடர்ந்து இடைவிடாது நடத்திவரும் சிறுகதைப் போட்டி, இவ் வகையில் மிகவும் குறிப்பிடத்தக்கது. அது, பரிசுபெறும் சிறுகதைகளை நூலாக்கி வெளியிடுவது பாராட்டிற்குரியது. அண்மைக் காலமாய் தேசிய நிலநிதிக்

---

84 8, 9.4.1978இல் மலாயாப் பல்கலைக்கழக, இந்திய ஆய்வியல் துறை நடத்திய சிறுகதைக் கருத்தரங்கில் 'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் மலேசியச் சமுதாயம்' என்ற தலைப்பில் படிக்கப்பட்ட கட்டுரை.

85 சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள் - முன்னுரை, ப. 1

கூட்டுறவு சங்கமும் ஆண்டுதோறும் சிறுகதைப் போட்டி நடத்தி மதிப்பு மிக்க பரிசுகளை வழங்கிவருகிறது.

## நூல் வெளியீடு

விடுதலைக்கு முன்பு இங்கு எழுத்தாளர்கள், நூல் வெளியீட்டில் கருத்துச் செலுத்தவில்லை; அதற்கான சூழலும் அமையவில்லை. அக் காலப் பகுதியில் செ. குணசேகரின் 'நினைவின் நிழல்', மா. இராமையா, மா.செ.மாயதேவன் ஆகியோரின் 'இரத்ததானம்' இரண்டுமட்டுமே வெளிவந்தன"[86] எனச் சி. வடிவேலு குறிப்பிடுகிறார்.

விடுதலைக்குப் பின் ஒருவர் கதைகளே அடங்கிய தொகுப்புகளும், பலர் கதைகள் அடங்கிய தொகுப்புகளும் வெளிவந்தன. அண்மைக்காலமாய் நூல் வெளியீட்டுத் துறை சூடு பிடித்துள்ளது.

## சிறுகதைத் துறையை வளர்த்தோர்

சிறுகதைத் துறையை வளர்த்தோரை, விடுதலைக்குமுன் வளர்த்தோர்; விடுதலைக்குப்பின் வளர்த்தோர் என இருபிரிவாய்ப் பிரித்துப் பட்டியல் இடுதல் பொருத்தமாகும்.

## விடுதலைக்கு முந்தியோர்

ந. பழநிவேலு, கரு. பொன்னம்பலம், இராஜப்பா, ஏ. எம். எம். இப்ராகிம், அனுபூதிக்கடியான், அ. இராமநாதன், சி. வடிவேலு, மா. இராமையா, சி. கமலநாதன், பெ. மு. இளம்வழுதி, இராச. இளவழகு, எஸ். பி. குணசேகர், சி.வேலுசுவாமி, நாகுமணாளன், மா.செ. மாயதேவன், அப்துல் லத்தீப் முதலாயோர் விடுதலைக்கு முன்பிருந்தே சிறுகதைத் துறைக்கு ஒளியூட்டியவர் ஆவர்.

## விடுதலைக்குப் பின்

செ. குணசேகர், ஆர். சண்முகம், ந. வரதராசன், பூ. அருணாசலம், மு. அப்துல் லத்தீப், எம். குமாரன், ரெ.கார்த்திகேசு, ந. மகேசுவரி, சாமி மூர்த்தி, சை. பீர்முகமது, பி. கோவிந்தசாமி, அன்புச்செல்வன், அரு.சு.ஜீவானந்தன்,

86 8, 9.4.1978இல் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறை நடத்திய மலேசியத் தமிழ்ச் சிறுகதைக் கருத்தரங்கில் 'மெர்தேக்காவிற்கு முன் மலேசியத் தமிழ்ச் சிறுகதை வளர்ச்சி' என்னும் தலைப்பில் படித்த கட்டுரை, ப. 1

பாவை, திருமதி ஜனகா சுந்தரம், எம். ஏ. இளஞ்செல்வன், டாக்டர் சி. சொக்கலிங்கம், டாக்டர் சண்முக சிவா, சீ. முத்துசாமி, எல். முத்து, பாக்கியம் முத்து, காரைகிழார், மைதீ. சுல்தான், இரா.பெருமாள், வ. முனியன், மு. அன்னமேரி, நிர்மலா பெருமாள், அம்பிகாபதி, பெரு. ஆறுமுகம், பச்சைபாலன் முதலாயோர் விடுதலைக்குப் பின் சிறுகதைத் துறையை மேம்படுத்தியவர் ஆவர்.

## சிறுகதைகளில் சமுதாயம்

மலேசியாவின் தொடக்ககாலக் கவிதைகளிலும் (தோட்டப்புறப் பாடல்கள் தவிர) சரி, சிறுகதைகளிலும் சரி சமுதாயச் சிந்தனைகள் அவ்வளவாய்ப் பதியவில்லை. இந் நிலை 1950-க்குப் பின் மாற்றங் கண்டது. சமுதாயச் சிந்தனைகள், சிக்கல்கள் படைப்புகளில் பதிந்தன.

"மலேசியத் தமிழ்ச் சமுதாயம் அரசியல், கல்வி, பொருளாதாரம், சமயம், குடும்ப அமைப்பு முதலாய பல்வேறு துறைகளில் எதிர்நோக்கிய ஆழமான பிரச்சினைகளே சிறுகதைகளில் கருப்பொருளாக எதிரொலிக்கின்றன. நாட்டுப்பற்று, குடியுரிமை, போதைப்பித்து, குடிப்பழக்கம், ஒற்றுமையின்மை, பெண் உரிமை, விதவையர் திருமணம், தமிழ்ப்பள்ளிகளின் நிலை, தோட்டப்புற மக்கள் நிலை, இளைஞர் மனப்போக்கு, தமிழாசிரியர் மனப்போக்கு, மூவின ஒற்றுமை, வறுமை, மூடநம்பிக்கை, பகுத்தறிவு இயக்கம் முதலியனவும் எழுத்தாளரிடம் ஆழமான செல்வாக்குப் பெற்றிருப்பதை இக் கதைகள் தெளிவாக எடுத்துரைக்கின்றன"[87] என்கிறார் டாக்டர் இரா. தண்டாயுதம். இதற்கான காரணத்தைக் கூறும்போது "படைப்பிலக்கிய உந்துதலால் எழுத்துலகில் வந்தவர்களைவிடச் சமுதாயப் பிரக்ஞையின் தூண்டுதலால் எழுத்துலகிற்கு வந்தவர்களே அதிகம்"[88] என்கிறார்.

இந்த ஆய்வு நடந்த பத்தாண்டிற்குப் பின் நிலை சற்று மாறுபட்டிருக்கிறது. இக் காலப் பகுதியில் "தோட்டப்புற வாழ்க்கையின் இன்பதுன்ப உணர்வுகளைப் பற்றிப் பேசுகின்ற கதைகள் வெகுவாகக் குறைந்துவிட்டன என்பது தெளிவு. இதற்கு ஒரு காரணம் இந் நாட்டுத் தமிழர் சமுதாயத்தின் வாழ்க்கை முறைகள் மாறுபடுவதும், இருப்பிடமாற்றம் (Migration) அதிகரித்து வருவதுமே ஆகும்."[89] இங்கே இருப்பிடமாற்றம் என்பது, தோட்டப்புறத்தைவிட்டு நகரமையங்களில் குடியேறிய நிலையன்று. நகரின் ஒதுக்குப்புறங்களையே இவை குறிக்கின்றன. இடம் மாறியதேயன்றி, வாழ்க்கைநிலை உயரவில்லை என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

---

87 8, 9.4.1978இல் மலாயாப் பல்கலைக் கழக இந்திய ஆய்வியல் துறை நடத்திய மலேசியத் தமிழ்ச் சிறுகதைக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரை, ப. 2

88 மேலது.

## பல்லினச் சமுதாயப் பின்னணி

பல்லினச் சமுதாயப் பின்னணி சீன, மலாய் இலக்கியங்களில் ஓரளவே படிந்துள்ளது என்பதை ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர். தமிழ் இலக்கியங் களிலும் பேரளவு பதியவில்லையெனினும், அந்தப் பின்னணியைக் களமாய்க் கொண்ட இலக்கியங்களைத் தமிழ் எழுத்தாளர் படைக்கத் தவறவில்லை. "மூவின மக்கள் வாழும் மண்ணில் பிற இன மக்களின் வாழ்க்கைப் பின்னணியில் அமைந்த கதைகளும் நிறைய வந்துள்ளன. ஒரு மலாய்க்காரர் குடும்பத்தைப் பற்றிய கதையாகப் 'பறி' அமைந்தது."[90] சீனக் குழந்தையைத் தத்தெடுத்து வளர்க்கும் கருப்பொருளைக் கொண்ட மலபார் குமாரின் 'சீனக்கிழவன்' என்னும் சிறுகதையும் இவ் வகையில் குறிக்கத்தக்கது.

## சூ நெடுங்கதை இலக்கியம்

மலேசிய இலக்கியச் சோலையில் கவிதை நல்ல வளர்ச்சி பெற்றுள்ளது; சிறுகதை சிறந்துள்ளது. ஆனால், புதினத்துறை (நாவல்) இன்னும் முழு வளர்ச்சியை எட்டவில்லை. இதுகுறித்து முனைவர் ரெ. கார்த்திகேசு கருத்துரைக்கும்போது, "மலேசியாவில் தமிழ் நாவல்துறை இன்னமும் வளரவேண்டிய துறையாகத்தான் இருக்கிறது; மலேசியத் தமிழர் வாழ்வின் ஆன்மாவைக் காட்டும் எந்த நாவலும் இன்னும் எழவில்லை. நல்ல இலக்கியச் சிந்தனையும் எழுத்தாற்றலும் நுண்ணறிவும் உள்ள நல்ல எழுத்தாளர்கள்கூட நம் சமுதாயம் இருக்கின்ற உண்மையான நிலையினை இதமான கற்பனைச் செறிவுடன் காட்டுவதற்குப் பதிலாகத் தாங்கள் விரும்பும் ஒரு செயற்கைச் சமுதாயத்தைத்தான் காட்டுகிறார்கள்"[91] என்கிறார்.

கவிதை தோற்றங்கண்ட 30 ஆண்டுகளுக்குப்பின் இந் நாட்டில் புதின இலக்கியம் தளிர்விடத் தொடங்கியது. வேங்கடரத்தினம் எழுதிய கருணாகரன் அல்லது காதலின் மாட்சி' (1917) என்னும் புதினமே மலேசியாவின் முதல் புதினமாகும்.

---

89 கார்த்திகேசு, ரெ., ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு மலர் (1987), ப. 132

90 பூபாலன், வீ. 8, 9.4.1978 இல் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறை நடத்திய "மலேசியத் தமிழ்ச் சிறுகதைக் கருத்தரங்கில் படித்த கட்டுரை, ப. 14

91 மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்க மலர், ப. 118

“மலேசியத் தமிழ்ச் சமூக அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்கள், மலேசியத் தமிழ்ப் பத்திரிகைகளின் இலக்கியப் பணி, தமிழகம் விளைவித்த தாக்கங்கள்”[92] ஆகியவையே இங்குப் புதினங்கள் தோன்றுதற்கான சூழல் மலர்ந்ததற்கான காரணங்கள் என்கிறார் முனைவர் வே. சபாபதி.

## வளர்ச்சிக்கான அடிப்படைகள்

புதினம் என்பது கவிதையைப் போல, சிறுகதையைப் போலக் குறுகிய வடிவம் கொண்டதன்று; அளவில் பெரியது. ஆகவே கவிதை, கட்டுரை, சிறுகதைப் போட்டிகள் நடத்துவதுபோல் அடிக்கடி புதினப் போட்டிகள் நடத்துதல் இயலாது. இதழ்களும் அதற்குப் பெரும் வாய்ப்பைத் தந்துவிட இயலாது. ஒரு புதினம் தொடர்கதையாக வரவேண்டுமானால் ஆண்டுக் கணக்கில் நீளவேண்டியிருக்கும். இக் காரணங்களால்தானோ என்னவோ புதினத்துறை இங்கு இன்னும் முழுவளர்ச்சி பெற்றதாய் இல்லை. இருப்பினும் அத் துறை முடமான ஒரு துறையாய் இல்லை; நாளுக்குநாள் வளர்ந்த வண்ணமே இருக்கிறது.

முன்பு குறிப்பிட்டதுபோல், இங்குக் கவிதை, சிறுகதை வளர்ச்சிக்குத் தூண்டுதலாய் இருந்த சூழல்களே, புதினவளர்ச்சிக்கும் தூண்டுகோலாய் அமைந்தன. இதழ்கள் தந்த ஊக்கம், கதைவகுப்பு (1950), இரசனை வகுப்பு (1952), இலக்கிய வட்டம் (1955), மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் குறுநாவல் போட்டி (1969), ம. த. எ. ச. தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்துடன் இணைந்து நடத்திய நாவல் போட்டி (1973), தமிழ்நேசன் நாளிதழ் நடத்திய நாவல் போட்டி[93] (1979), வானம்பாடி கிழமை இதழின் மாதம் ஒரு குறுநாவல் வெளியிடும் திட்டம்[94] (1980-81), தமிழ்முரசு, சோலை, சங்கமணி, மலைமகள், மாதவி, பொன்னி முதலாய இதழ்கள் தொடர்கதைகள் வெளியிட்டமை முதலாயன இங்குப் புதின வளர்சிக்கு அடித்தளமிட்டன. இங்ஙனம் தோன்றிவளர்ந்த புதின வளர்ச்சியை,

1. விடுதலைக்கு முந்திய புதின வளர்ச்சி
2. விடுதலைக்குப் பிந்திய புதின வளர்ச்சி

என இருகட்டங்களாய்ப் பிரிக்கலாம்.

---

92 மேலது ப. 3

93 தமிழ்நேசன் 1987, 89 ஆம் ஆண்டுகளிலும் குறுநாவல் எழுதும் போட்டிகள் நடத்தியது.

94 இத் திட்டத்தின்கீழ் ஆசிரியர் ஆதிகுமணன் முயற்சியால் 11 குறுநாவல்கள் வெளியிடப்பெற்றன.

## விடுதலைக்கு முந்திய புதின வளர்ச்சி

விடுதலைக்கு முன்புவரை, கருணாகரன் அல்லது காதலின் மாட்சி (1917), பாலசுந்தரம் அல்லது சன்மார்க்க ஜெயம் (1918), அரியமலர் (1923), தோட்டக் கொலைமர்மம் அல்லது பத்துமலைக் கள்வன் (1932), கோரகாந்தன் அல்லது தென்மலாயாகிரியில் வடஇலங்கைத் துப்பாளி (1934), நேசமலர் அல்லது கற்றோரின் கனா (1934) , அழகானந்த புஷ்பம் (1936), நீர்ச்சுழல் (1953), மல்லிகா (1957) முதலாய இருபதுக்கு மேற்பட்ட புதினங்கள் விடுதலைக்கு முன்பு இங்கு வெளிவந்துள்ளன.

விடுதலைக்குமுன் எழுதியவர்களில் க. வெங்கடரத்தினம், புலோலி சுப்பிரமணியம், கோ. .பார்த்தசாரதி, மு. சீ. செல்வத்துரை, புளிசுரம், சிவஞானம், க. டொமினிக், மா. இராமையா, மா. செ. மாயதேவன், மெ. அறிவானந்தன் முதலாயோர் குறிப்பிடத்தக்கவராவர்.

## கருப்பொருள்

மற்ற இலக்கிய வடிவங்களைப் போலவே விடுதலைக்குமுன் - குறிப்பாக இரண்டாம் உலகப் போருக்குமுன் பெரும்பாலான புதினங்கள், தமிழகத்திலிருந்தும் இலங்கையிலிருந்தும் இங்குக் குடியேறிய எழுத்தாளர்களால் எழுதப்பட்டவை. ஆகவே, அவர்தம் மூலநாடுகளின் தாக்கம் அவற்றில் படிந்திருந்ததில் வியப்பில்லை. எனினும், அவை "அக் காலத்து மலேசியத் தமிழர்களின் சமுதாய வரலாற்றை இந் நாவல்கள் மூலம் ஓரளவு அறிந்துகொள்ள முடிகிறது" என்றும், "விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ் நாவல்களை விடுதலைக்குப்பின் வெளியான மலேசியத் தமிழ் நாவல்களோடு ஒப்பிடுகையில் இவை பல சிறந்த கூறுகளைப் பெற்றிருக்கின்றன"[95] என்றும் ஆய்வாளர் எடுத்துரைக்கின்றனர். "சமுதாயச் சிக்கல்களின் பல கோணங்களைத் தங்கள் நாவலுக்குரிய கருப்பொருளாகத் தேர்வு செய்துள்ளனர்"[96] என்றும் அவர்கள் எடுத்துரைக்கின்றனர்.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் நிலை சற்று மாற்றங் கண்டது. படிப்படியாய் உள்நாட்டு எழுத்தாளர் எழுத்துலகில் அடியெடுத்து வைத்தனர். உள்நாட்டு எழுத்தாளர் கைக்கு மலேசிய எழுத்துலகம் வரத்தொடங்கிய நேரத்தில் விடுதலை முழக்கம் கேட்கத் தொடங்கிவிட்டது. ஆகவே, உரிமை உணர்ச்சியுடன் கூடிய படைப்புகள் மலரத் தொடங்கின. பழையவர்கள் எழுத்துலகை விட்டு விலகத்தொடங்கினர்; புதியவர் வரத் தொடங்கினர்.

---

95 சபாபதி, வே., மலேசியத் தமிழ்நாவல் கருத்தரங்க மலர், ப. 47
96 மேலது.

## விடுதலைக்குப் பின்

இக் காலப் பகுதியில், துயரப்பாதை (1958), மூங்கிற்பாலம் (1963), மாலாவின் துறவு (1965), அந்த நதியில் இரண்டு மீன்கள் (1967), செம்மண்ணும் நீலமலர்களும் (1969), இளந்தேவி (1971), இலட்சியப் பயணம் (1973), எதிர்வீடு (1976), அழுதால் உன்னைப் பெறலாமே (1976), மரவள்ளிக் கிழங்கு (1979), வானத்து வேலிகள் (1981), ஆடும் மஞ்சள் ஊஞ்சல் (1985), தீமலர் (1986), பயணங்கள் முடிவதில்லை (1988), மனவீணை (1990), தேடியிருக்கும் தருணங்கள் (1993) முதலாய 67 புதினங்கள் வெளிவந்தன. இதழ்களில் தொடர்கதைகளாய் வந்தவை அனைத்தும் நூலாக்கம் பெறவில்லை.

விடுதலைக்குப்பின் புதினம் படைத்தவர்களில் கா. பெருமாள், எம். குமரன், ப. சந்திரகாந்தம், அ. சந்திரசேகரன், நா. ஆ. செங்குட்டுவன், சா. ஆ. அன்பானந்தன், எம். ஏ. இளஞ்செல்வன், மெ. அறிவானந்தன், ந. மகேசுவரி, ரெ. கார்த்திகேசு, ஐ. இளவழகு, மு. அன்புச்செல்வன், கொம்பன், வீ.கு. சந்திரசேகரன், சி. சொக்கலிங்கம், ஆர். சண்முகம், அ. ரெங்கசாமி முதலாயோர் குறிப்பிடத்தக்கவராவர்.

## கருப்பொருள்

விடுதலைக்குப்பின் மலேசியப் புதினங்களில் தோட்டப்புறச் சமுதாயம் இடம்பெறத் தொடங்கியது."1960முதல் 1979வரை இருபதாண்டுகால இடை வெளியில் எழுத்தாளர்கள் சமுதாயத்தைப்பற்றிக் கொண்டிருந்த எண்ணங்களின் பதிவாகவே இக் காலகட்ட நாவல்கள் திகழ்கின்றன. முற்றிலும் சமுதாயத்தைப் பிரதிபலித்துக் காட்டும் நாவல்கள் சில; சில நாவல்களில் ஊடும் பாவுமாய் இடையிடையே சமுதாயம் காட்டப்படும். மற்றுஞ் சில நாவல்களில் சமுதாயம் மிகச் சிறு கூறாகவே காட்டப்படும். இம் மூவகைச் சமுதாயக் கண்ணோட்டங்களின் அடிப்படையில் மலேசியத் தமிழ் நாவல்கள் அமைகின்றன."[97]

சமுதாயக் கண்ணோட்டமென்பதில் இங்கே கல்வி, தாய்மொழி, பண்பாடு, குடும்பம், காதல், தொழிலாளர் நிலை, வேலையில்லாத் திண்டாட்டம் முதலாய கூறுகள் அடங்குகின்றன. சப்பான் காலத்து அவலங்களும், மறக்கமுடியாப் பழைய வரலாறாய்ப் புதினங்களில் படிந்துள்ளன. துண்டாடல் ஏற்படுத்திய கொடுமைகளையும் படம்பிடித்துக் காட்டுகின்றன. மூடநம்பிக்கை, சாதிக் கொடுமை முதலாயனவும் இடம்பெறுகின்றன.

---

97 இலட்சுமி மீனாட்சிசுந்தரம், மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்க மலர், ப. 56.

## 80 களில்...

"காதல், தனிமனிதப் போராட்டம், குடும்பச் சிக்கல், தோட்டப்புற வாழ்வு, பொருளாதாரம், சட்டவிரோத வாழ்க்கை, விதவைத் திருமணம், அரசியல், துப்பறியும் நவீனம், வரலாற்றுப் புதினம் என்ற நிலையில் மனித வாழ்க்கையின் பல்வேறு பிரச்சினைகளையொட்டியே எண்பதுகளில் வெளிவந்த நாவல்களின் கதைக் கருக்கள் அமைந்துள்ளன"[98] என்று ஆய்வாளர் மதிப்பிடுகின்றனர்.

## 1979 - 89

இக் காலகட்ட நாவல்பற்றி ஆய்வாளர் குறிப்பிடும்போது, "சமுதாயப் பின்னணிகள் நன்றாகக் காட்டப்பட்டுள்ளன. மலேசியாவின் வரலாற்றில், குறிப்பாகத் தமிழர்களின் வாழ்வில் மிகப் பெரிய சூறாவளியாகத் தோட்டத் துண்டாடல் வந்துபோனபோது அதில் முழுக்க முழுக்கத் துடித்துப்போன தமிழினத்தின் வாழ்க்கைப் போராட்டங்களை மிகச் சிலர்தாம் நினைத்து எழுதியுள்ளனர். அவற்றிலும் வெகு சில நாவல்கள்தாம் அந்தத் தாக்கங்களை எழுத்திலே கொண்டுவந்தன. சில நாவல்களில் உள்ளும்புறமுமாக இப்படி இந்தத் தோட்டத் துண்டாடல் முக்கிய இடம்பெறுவது தவிர்க்க முடியாத விஷயமாக இருந்தபோது சிலர் காதல் விவகாரங்களில் சிக்கித் தங்களை மெய்மறந்ததுபோல் இருக்கின்ற நிலையும் காணத்தான் வேண்டியுள்ளது"[99] என்கிறார்.

இக் காலப்பகுதியில் வெளிவந்த புதினங்களில் பொருளாதாரச் சிந்தனை சுடர்விடுகிறது; தன்னம்பிக்கை தூண்டப்படுகிறது; உழைப்புக்கு உயர்வு தரப்படுகிறது; விடாமுயற்சி வலியுறுத்தப்படுகிறது.

## எதிர்காலம்

இப்போது நாட்டில் படிக்கும் பழக்கம் வலியுறுத்தப்பட்டு வருகிறது. பள்ளிகளில் இஃது இயக்கமாகவே நடத்தப்படுகிறது. தொடக்கப் பள்ளியில் முதலாம் வகுப்பிலிருந்தே வலியுறுத்தப்படும் இப் பழக்கம் எதிர்காலத்தில் தரமான 'வாசகர்களை' உருவாக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால், தொடக்க-இடைநிலைப் பள்ளிகளுக்கான தரமான கதை நூல்கள் சந்தையில் இல்லையென்றே சொல்ல வேண்டும். தமிழகத்திலிருந்து இறக்குமதி

---

98 கிருஷ்ணன், எம்., மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்க மலர், ப.89
99 சாமிமூர்த்தி, மலேசிய மணிமகுடம், ப. 110

செய்யப்படும் நூல்கள் ஓரளவு இக் குறையைப் போக்கி வருகின்றன. தொடக்கநிலையிலிருந்தே மலேசிய இலக்கியங்களை மாணவர் படிக்க வாய்ப்பளித்தால் எதிர்காலத்தில் இலக்கிய வளர்ச்சி மேலோங்கும் என்பதில் ஐயமில்லை.

## ஏ கட்டுரைத் துறை

மலேசியாவில் கவிதை, சிறுகதைத் துறைகள் வளர்ந்த அளவு புதினத்துறை வளரவில்லை என்பது முன்னே எடுத்துக் கூறப்பட்டது. புதினத்துறை வளர்ந்த அளவுக்குக்கூடக் கட்டுரைத்துறை வளரவில்லை. இதனைப் பலரும் எடுத்துக் காட்டியுள்ளனர். 'ஒரு நூற்றாண்டுகால மலேசியத் தமிழ் இலக்கியத்தில் தமிழர் வாழ்வு' என்னும் கட்டுரையில், முனைவர் இரா. தண்டாயுதம் கவிதை, சிறுகதை, புதினம்பற்றித் தனித்தனியே விரிவாக எடுத்துரைக்கிறார். ஆனால், "இத் துறைகள்மட்டும் அல்லாமல் நாடகம், சிறுவர் இலக்கியம், கட்டுரை முதலிய பிற இலக்கியத் துறைகளும் இங்குத் தமிழர் வாழ்வின் பல்வேறு நிலைகளை வெளிப்படுத்தும் பாங்கிலேயே அமைந்துள்ளன"[100] என்று பொதுவாகக் குறிப்பிட்டுள்ளாரேயன்றிக் கட்டுரைத்துறை குறித்துச் சிறப்பாகப் ஏதும் குறிப்பிடவில்லை.

இங்கு 1928ஆம் ஆண்டிலேயே கட்டுரைநூல் வெளிவந்ததாய் அறிய முடிகிறது.[101] ஆனால், தரமுடைய நூல்கள் என்று பார்க்கும்போது ஒருசிலவே தேர்கின்றன.

### வளர்ச்சிக்கான வாய்ப்புகள்

கடந்த நூற்றாண்டிலேயே தொடங்கப் பெற்ற இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளின் தரம்பற்றி அறியமுடியவில்லை. தமிழ்நேசன், தமிழ்முரசு ஆகிய ஏடுகளின் தோற்றத்திற்குப் பின்னரே கட்டுரைத் துறை அரும்பத் தொடங்கியிருக்க வேண்டும். கட்டுரை இங்கு ஏடுகளைச் சார்ந்தே வளர்ந்தன. இதழ்களில் வெளியிடாமல் நூலாக்கப் போக்கில் எழுதப்பெற்ற கட்டுரைகள் மிக மிகக் குறைவே. மா. இராமையாவின் தமிழிலக்கிய வரலாறு, அ. மணிசேகரனின் மலேயாவில் மேடைநாடகங்கள், அதிகைமணியின் செந்தமிழ்ச் சிவநெறி, இர. ந. வீரப்பனின் மலேசியத் தமிழர், உலகத்தமிழர், மு. வரதராசுவின் மலேசியத்

---

100 ப. 11

101 அ.பு. திருமாலன், மலேசியத் திராவிடர் கழகத் தமிழ் இலக்கிய மறுமலர்ச்சிக் கருத்தரங்க மலர் (1980)

தோட்டத் தொழிலாளர்கள் வரலாறும் பிரச்சினைகளும், ஆர். பி. எஸ். மணியத்தின் மலேசியாவில் நாடகக் கலையும் நாமும் முதலாய நூல்களை இவ் வகையில் சேர்க்கலாம்.

இவற்றோடு சில ஆய்வரங்கக் கட்டுரைகளைத் தாங்கி வந்த நூல்களும் குறிப்பிடத்தக்கவை. மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் மலேசியத் தமிழ்க் கவிதைக் கருத்தரங்க மலர் (1988), மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்க மலர் (1992), இரண்டாம் உலகத் தமிழாசிரியர் மாநாட்டின்போது வெளியிடப்பட்ட ஆய்வடங்கல் இருதொகுதிகள் (1994) முதலாயவற்றைக் குறிப்பிடலாம். மேலும் தமிழவேள் கோ. சாரங்கபாணி, துன் சம்பந்தன், டான் ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம், டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு, டாக்டர் வி. டேவிட் முதலாயோர் வாழ்க்கை வரலாற்று நூல்கள் சில வெளிவந்துள்ளன. இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளைக்கொண்ட தொகுப்பு நூல்கள் சிலவும் வெளியீடு கண்டுள்ளன. அவற்றுள் பயணநூல்கள் கணிசமாய் உள்ளன.

கட்டுரைகள் அடங்கிய தொகுப்பு நூல்களை முருகு. சுப்பிரமணியன், எஸ்.பி.எஸ். நாதன், வே. விவேகானந்தன். வீ. மீனாட்சிசுந்தரம், அ.இராமநாதன், பூ. அருணாசலம், பெர்னாமா சண்முகம், ஜி. பெருமாள், இர. ந.வீரப்பன், மா. சி. அண்ணாமலை, கு. சா. பெருமாள், வீ. செல்வராஜ், தாப்பா மு. இராமலிங்கம், மு. சி. தங்கக்காளீஸ்வரன், பெரு. அ. தமிழ்மணி, ரெ. சண்முகம், மைதீ. சுல்தான், பாதாசன் முதலாயோர் வெளியிட்டுள்ளனர். சி.வேலுசாமி, ஐ. மாரிமுத்து முதலாயோர் இந்து சமயம் பற்றிய நூல்கள் சில வெளியிட்டுள்ளனர்.

## கட்டுரை பெறும் இடம்

இன்றைய அறிவியல் உலகில் புதுப்புதுக் கருத்துச் செல்வங்களைக் கைக்கொள்வதற்குக் கவிதை, சிறுகதைகள் புதினம், நாடகம் ஆகியவற்றைவிடக் கட்டுரைவடிவமே மிகுபயன் நல்குவதாய் உள்ளது. கலைபயில் தெளிவும் கட்டுரைவன்மையையும் உடையோர் நிரம்பத் தேவைப்படும் காலமிது. ஆனால், அத் துறை இங்கு அழுத்தமாய்க் காலூன்றாமை மகிழ்ச்சியளிக்கவில்லை.

இதுகுறித்து இங்கு இன்னொன்றையும் சொல்வது சாலும். ‘கட்டுரை’ என்பது மிகமிக எளிய வடிவம்; அதற்குப் பயிற்சியோ பெருமுயற்சியோ தேவையில்லை; யார் வேண்டுமானாலும் எவ் வகைக் கட்டுரையையும் எழுதிவிடலாம் என்னும் தப்பான எண்ணம் பெரும்பாலோருக்கு இருப்பதாய்த் தெரிகிறது. அதனால் கவிதை, சிறுகதை, புதினம் எழுதப் பயிற்சிபெற வேண்டுமென்று எண்ணும் அளவு கட்டுரை எழுதப் பயிற்சி பெற வேண்டுமென்று எண்ணுவதில்லை.

## கல்வித்துறையில்

மலேசியக் கல்வித்துறையின் தொடக்க காலங்களில் 'வியாசம்' என்னும் பெயரில் சிறுசிறு கட்டுரைகள் எழுதினால் போதுமென்ற அளவிலேயே பாடத்திட்டம் அமைந்திருந்தது. ஆனால், இப்பொழுது தொடக்கப் பள்ளியிலேயே கட்டுரை எழுத நன்கு பயிற்சி அளிக்கப்படுகிறது. 6ஆம் ஆண்டு அடைவுநிலைத் தேர்வில் (U.P.S.R.) அது கட்டாயம் சிறப்புத் தேர்ச்சி பெற வேண்டிய பாடமாதலால் அதில் மிகுந்த கருத்துச் செலுத்தப்படுகிறது. தொடர்ந்து 3,5,6 ஆம் படிவங்களில் கட்டுரை மிக முக்கியப் பங்கு வகிக்கிறது. ஆனால் பள்ளியைவிட்டு வெளியேறும் எல்லாரும் அத் திறனைத் தொடர்ந்து நிலைப்படுத்திக் கொள்வதில்லை. பெரும்பாலோர் எழுத்துத் துறைக்கு வருவதில்லை. பல்கலைக்கழகம் சென்று பட்டம் பெறுவோரிலும் பலர் வெவ்வேறு துறைகளுக்குச் சென்றுவிடுகின்றனர். அதனால் அத் துறையில் வல்லுநரைக் காண்பது அரிதாகவே உள்ளது.

## வரவேற்பு

இதழ்களும், சிறுகதை, புதினம், கவிதை முதலாய எழுத்து வடிவங்களுக்குத் தரும் முதன்மையைக் கட்டுரைக்குத் தருவதில்லை. பெரும்பாலோர் 'பொழுதுபோக்கு' எண்ணமுடையோரே; தமிழில் ஆழமான அறிவுச் செல்வத்தைப் பெறவேண்டுமென்று எண்ணுவோர் சிலரே. அதனால்தான், ஏடுகளும் பெரும்பான்மையோரை நிறைவு செய்யும் நோக்கிலேயே நடைபோடுகின்றன. ஆகவே, கட்டுரைத்துறை மேலோங்காமைக்கு இவை பெருங் காரணங்களாகின்றன.

## முன்னோடிகள்

இங்குக் கட்டுரைத் துறை இந்த அளவுக்காவது வளர்ந்துள்ளமைக்குக் காரணமான முன்னோரை நன்றியோடு நினைவுகூர்தல் கடமையாகும். இத் துறையில் இங்கு ஒருவரைச் சுட்ட வேண்டுமானால் அவர் தமிழவேள் கோ. சாரங்கபாணியே யாவார். அவர் தமிழ்முரசில் எழுதிய ஆசிரியர் உரைகளும் (Editorial), கட்டுரைகளும் சமுதாயத்தில் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தின.

இவ் வகையில் அவரையடுத்துக் குறிப்பிடத்தக்கவர் முருகு. சுப்பிரமணியன். அவர் தமிழ்முரசு துணையாசிரியராய் இருந்தபோது எழுதிய கட்டுரைகளும், தமிழ்நேசன் ஆசிரியரானபின் எழுதிய ஆசிரியர் உரைகளும், கட்டுரைகளும் குறிப்பிட்டுச் சொல்லத் தக்கனவாகும். இதழ்களில் பணியாற்றிய மெ. சிதம்பரம், கரீம் கனி, வை. திருநாவுக்கரசு, தி. சு. சண்முகம், வீ. மீனாட்சிசுந்தரம், ஆதிநாகப்பன், கே. சி. அருண், ஜே.எம். உசேன், சி. வீ. குப்புசாமி, எம். துரைராஜ் முதலாயோர் கட்டுரைத் துறை வளர்ச்சிக்கு வழிகாட்டியாய்

விளங்கினர். அக் காலத்தில் (விடுதலைக்குமுன்) சுப. நாராயணன் முதலாய சிலர் திறனாய்வுத்துறை வளர்ச்சிக்கு வழிகாட்டியாய் விளங்கினர். வரலாற்றுக் கட்டுரை எழுதுவதில் சி. வீ. குப்புசாமி தலைசிறந்து விளங்கினார். எச். ஜி. வெல்சின் உலக வரலாற்றை மொழிபெயர்த்தவர் இவர் என்பது குறிப்பிடத்தக்கது. அக் கட்டுரைகள் தமிழ்முரசில் தொடர்ச்சியாய் வெளிவந்தன.

அரசியல் கட்டுரைகள் எழுதியவர்களுள் கா. அண்ணாமலை குறிப்பிடத்தக்கவர். கா. குருபாதமும் அரசியல் கட்டுரைகள் நிரம்ப எழுதியுள்ளார். அவர் எழுதிய ம.இ.கா. வரலாறு, ஜான்சி ராணிபடை முதலாய தொடர்கட்டுரைகள் சிறப்பான படைப்புகளாகும். தொழிற்சங்கம், தோட்டத் தொழிலாளர் நிலை குறித்து எழுதியவர்களில் குறிப்பிடத்தக்கவர் எஸ்.பி.எஸ். நாதன். ஒலிவர் குணசேகரும் இவ்வகையில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்கவர்.

இலக்கியக் கட்டுரைகள் எழுதியோரில் அ. இராமநாதன், மா. செ. மாயதேவன், சி. வேலுசுவாமி, சி. வடிவேல், பெ. மு. இளம்வழுதி, கா. கிருஷ்ணசாமி, சா. ஆ. அன்பானந்தன், முரசு. நெடுமாறன் முதலாயோர் குறிப்பிடத்தக்கவராவர். திறனாய்வு என்னும் பெயரில் நிறையக் கட்டுரைகள் வெளிவந்திருந்தாலும் அத் துறை இன்னும் முறையாக வளரத் தொடங்கவில்லை.

இவர்களை அடுத்த தலைமுறையினர் என்று பார்க்கும்போது, இதழ்த் துறையில் சிலர் இலச்சினை பதித்துள்ளனர். வே. விவேகானந்தன், தில்லை, பி. எல். கே. இராஜன், ந. தியாகராசன், சங்கு சண்முகம், மு. அப்துல் லத்தீப், முரு. சொ. நாச்சியப்பன், கு. சா. பெருமாள், ப. சந்திரகாந்தம், சேவியர், ஆதி குமணன், இராசகுமாரன். வில்வமலர் முதலாயோரைக் குறிப்பிடலாம்.

பெ. இராசேந்திரன், பத்மநாபன், மலைச்செல்வன், முத்தமிழ் மன்னன், ஈ. எம். சாமி, மலையாண்டி முதலாயோர் இதழ்த் துறையில் அரசு விருது பெற்றவராவர்.

கல்வித்துறைபற்றிக் கட்டுரை வரைந்தோரில் த. மாரிமுத்து, ஆ. சோதிநாதன், அழ. இராமையா, பி. எஸ். வெங்கடேசன், கோ. கிருஷ்ணபகவான், ஏ. சகாதேவன், தே. கிருஷ்ணன், மு. கணேசன் முதலாயோர் எண்ணத்தக்கவர்.

கா. இராமநாதன், முரு. பழ. இரத்தினம் (செட்டியார்), சுவாமி சத்தியானந்தா, வியோமானந்தா முதலாயோர் சமயத் துறைக்கு முன்னோடிகளாவர். சைவ பூசணம் கந்தையா, டான் ஸ்ரீ சோமசுந்தரம், எஸ். ஆர். எம். பழநியப்பன், கர்னல் சாத்தையா, ஜி. முனுசாமி, அன்னலட்சுமி சுப்பிமணியம், சுசீலா கிருஷ்ணப்பன், முனைவர் எஸ். எம். பொன்னையா, சி. வேலுசுவாமி, சித. இராமசாமி, ஆறு. நாகப்பன், சித. இராமகிருஷ்ணன்,

ஐ. மாரிமுத்து, கா. கலியபெருமாள் முதலாயோர் இந்து சமயத் தொடர்பான கட்டுரைகள் எழுதியவராவர்.

இசுலாம் சமயம் குறித்து எழுதியோரில் டான் ஸ்ரீ எஸ். ஓ. கே. உபைதுல்லா, ப. மு. அன்வர், திரு. கிம், ஆ.இ. முகம்மது இபுராகீம், செ. சீனி நைனா முகம்மது, அப்துல் சமது, நதுவீ. குறடு அப்துல் காதர், ஜே. எம். உசைன், நா. கரீம், மு. அப்துல் மஜீது முதலாயோர் குறிப்பிடத்தக்கவர்.

கிறித்தவ சமயம்பற்றி ஜோசப் செல்வம், லா. மு. அந்தோணிசாமி, ஏ. டி. சமாதானம், வேதியர் செ.சந்தனசாமி, போதகர் தேவராஜ், ஏ. எஸ். பிரான்சிஸ், ஏசையா முதலாயோர் எழுதியுள்ளனர்.

## வழிகாட்டிகள்

எந்த நாட்டிற்கும் கல்வித்துறையின் இதயம் போன்றது பல்கலைக்கழகம். அங்குப் பணிபுரியும் பேராசிரியர் ஆய்வுத் துறைக்கு வழிகாட்டிகளாவர். இங்கு 1956ஆம் ஆண்டில் அமைந்த மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறைக்குத் தமிழகத்திலிருந்தும், இலங்கையிலிருந்தும் பணியாற்ற வந்த பேராசிரியப் பெருமக்கள் இத் துறையில் முன்னோடிகளாய் விளங்கியவர் ஆவர். அவர்களுள் முத்து. இராசாக்கண்ணனார், தனிநாயக அடிகள், க. பொ. இரத்தினம், சா. அமீது, ப. அருணாசலம், கருணாகரன், சோ.ந. கந்தசாமி, இரா. தண்டாயுதம், சுப திண்ணப்பன், ந. வீ. செயராமன், இலட்சுமி மீனாட்சிசுந்தரம் முதலாயோர் எழுதிய கட்டுரைகள், ஆற்றிய உரைகள் உள்ளூர் எழுத்தாளர்க்கு வழிகாட்டியாய் விளங்கின.

உள்ளூர்ப் பேராசிரியர்களுள் ச. சிங்காரவேலு, அழ. இராமையா, த. மாரிமுத்து, வி. எம். பழநியப்பன், க.திலகவதி முதலாயோர் குறிப்பிடத் தக்கவராவர். புதிய தலைமுறையினராய ந. கந்தசாமி, மு. இராசேந்திரன், வே. சபாபதி, நா. பாஸ்கரன், கிருஷ்ணன் முதலாயோர் இதழ்களிலும் ஆய்வரங்கு களிலும் கட்டுரை படைத்து வருகின்றனர்.

## எதிர்காலம்

இப்போது நாள், கிழமை, திங்களிருமுறை, திங்கள் ஏடுகளாய் 30 இதழ்களுக்குமேல் வெளிவந்து கொண்டிருக்கின்றன. புதுப்புது இதழ்கள் அரும்பிய வண்ணம் உள்ளன. பள்ளிகளில் முறையான பாடத்திட்டம் வகுத்துத் தமிழ்க்கல்வி கற்பிக்க அரசு நல்ல அடிப்படையைப் போட்டுள்ளது. கவிதை, சிறுகதை எழுதப் பயிலரங்குகள் நடத்துவதுபோல் கட்டுரை எழுத ஆங்காங்கே பயிலரங்குகள் நடத்தினால், நல்ல பலன் விளையும்.

இந் நாட்டு இலக்கிய வளர்ச்சிக்குத் தொடக்க காலத்திலிருந்தே நாளிதழ்களும் கிழமை திங்கள் இதழ்களும் ஆற்றிவந்துள்ள பணிகள் அளப்பரியன; வரலாற்றில் அழிக்க முடியா இலச்சினையாய் விளங்குவன. இன்றைய கணினி ஊழியில் கட்டுரைத்துறை இன்றியமையாதது. சமுதாய, அரசியல், பொருளியல், அறிவியல் முதலாயன குறித்த கட்டுரைகள் நிரம்ப வரவேண்டுவது முதன்மையாகும். இலக்கியம் வளரவேண்டுமானால் திறனாய்வுத்துறை வளர்ந்தாக வேண்டும். இவற்றுக்கெல்லாம் இதழ்கள்தாம் துணை நிற்க வேண்டும்.

### சிற்றேடுகளின் தேவை

இலக்கியத்துறை வளர்ச்சிக்குச் சிற்றேடுகளும் பேரளவு துணைபுரியமுடியும். அவை பேரளவு விற்பனையாக வேண்டுமென்ற அவாவுடையன அல்ல; கொண்ட குறிக்கோளுக்காகவே நடைபோடுவன - அதனால் தேவையற்ற கவர்ச்சிக்காகக் குறிக்கோளை இழக்கத் தேவையில்லை. இங்கும் சிற்றேடுகள் அவ்வப்போது தலைகாட்டவே செய்கின்றன. அவை வலிமையோடு நிலைத்து நடைபோடத் தலைப்பட்டால் இலக்கியப் பயிர் தழைக்கும்; நல்ல அறுவடையை வழங்கும்.

## அ சிங்கப்பூரில் தமிழும் தமிழரும்

களஞ்சியத்தில் இடம்பெற்றுள்ள மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றொடு, சிங்கப்பூர்த் தமிழ் இலக்கிய வரலாறும் இணைந்தே உள்ளது. என்றாலும், அதற்கென உள்ள சில தனிச் சிறப்புகள்குறித்து ஈண்டுச் சுருக்கமாகவேனும் எடுத்துரைக்க வேண்டுவது முதன்மையாகும்; அதனொடு அந்நாட்டுச் சமுதாய அமைப்பு, கல்வி, பொருளாதார, சமய, கலை, பண்பாட்டுச் சூழல்களைச் சிறிது கண்ணோட்டமிடுவதும் இன்றியமையாமையாகும்.

### குடியரசான பின்

1965 ஆம் ஆண்டில் சிங்கப்பூர் தனிக்குடியரசான பின் அது பெற்ற மாறுதல்கள் மிகுதி. அது முற்றிலும் ஒரு புதிய நாடாய் உலகிற்கு அறிமுகமானது; அங்கு வழக்கிலிருந்த ஆங்கிலம், சீனம், மலாய், தமிழ் ஆகிய நான்கு மொழிகளும் ஆட்சிமொழிகளாயின; எல்லாரும் ஒரே தரமுடைய குடிமக்கள் என்னும் தகுதியைப் பெற்றனர்; எல்லாச் சமயங்களும் சம உரிமைபெற்றன. எல்லா இனப் பண்பாடுகளும் மதிப்பைப் பெற்றன.

நிலப்படத்தில் அத் தீவு ஒருசிறு புள்ளியே எனினும், உலகெல்லாம் உற்று நோக்கும் வண்ணம் அஃது ஒளிபெற்றுயர்ந்துள்ளது.

## பல்லின அமைப்பு

மலேசியாவைப்போலவே அந் நாடும் பல்லினச் சமுதாய அமைப்புக் கொண்ட நாடே. அங்குச் சீனர், மலாய்க்காரர், இந்தியர் (64 விழுக்காட்டினர் தமிழர்), இதரர் எனப் பல்லினத்தவர் வாழ்கின்றனர்.

## மக்கள்தொகை

*1990 ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்குப்படி*

| | |
|---|---|
| *சீனர்* | *21, 02, 800* |
| மலாய்க்காரர் | 3, 82, 700 |
| இந்தியர் | 1, 90, 900 |
| இதரர் | 28, 700 |
| மொத்தம் | 27, 05, 100 |

இவர்களொடு சிங்கப்பூரில் பணிபுரியும் வெளிநாட்டினர் எண்ணிக்கை வருமாறு :

| | |
|---|---|
| *சீனர்* | *1, 49, 900* |
| மலாய்க்காரர் | 25, 300 |
| இந்தியர் | 38, 600 |
| இதரர் | 97, 500 |
| மொத்தம் | 3, 11, 300 |

*சிங்கப்பூரில் நிலையாக வாழும் இந்தியரையும், உரிமை பெற்று வாழும் குடிமக்களையும், பணி நிமித்தம் வந்த இந்தியரையும் சேர்த்தால் மொத்த இந்தியர் தொகை 2,29,500 பேர். (7.1%)*

## வாழ்க்கைச் சூழலும் பொருளாதாரமும்

மலேசியா, சிங்கப்பூர் ஆகிய இருநாடுகளுக்குமிடையிலான வாழ்க்கைச் சூழல் பெரிதும் வேறுபட்டதாகும், மலேசியா, நிலப்பரப்பால் அகன்றது; இயற்கை வளங்கள் நிறைந்தது; மிகுதியான ரப்பர், செம்பனைத் தோட்டங்களைக் கொண்டது; ஈய வயல்கள் சூழ்ந்தது; வேளாண்மைத் தொழில் மிகுந்தது. ஆனால் சிங்கப்பூர் ஒரு சின்னஞ்சிறிய தீவு ( 641.4 சதுர கிலோ மீட்டர்).

அந்நிலம் இயற்கை வளமற்றது; முழுக்க முழுக்கத் துறைமுகத் தொழிலான ஏற்றுமதி, இறக்குமதி, விமானப் போக்குவரத்து, சுற்றுலாத்துறை

முதலாயவற்றையே நம்பியிருப்பது. அதன் முதன்மையான பொருளாதார வாயில்கள் இவையே. எனினும், இன்று ஆசியாவில் சப்பானை அடுத்த 'நவீன நகர்' சிங்கப்பூரே. பொருளாதாரத்திலும் உன்னத நிலை அடைந்திருக்கிறது. சிங்கப்பூர் குடியரசாவதற்கு முன்பு இருந்ததைவிடத் தமிழர் இப்போது பொருளாதாரத் துறையில் வளர்ச்சி கண்டிருக்கின்றனர்.

## கல்வி

சிங்கப்பூர் தமிழ்க்கல்விபற்றிய குறிப்புகள் மலேசியக் கல்வி வரலாற்றிலும் பின்புலக் குறிப்புகளிலும் வருகின்றன. எனினும் இப் பகுதியில் சற்று விரிவாய்த் தரப்படுகின்றன. சிங்கப்பூரில் இப்போது தமிழைப் பயிற்றுமொழியாகக் கொண்ட பள்ளிகள் இல்லை. 1992 ஆம் ஆண்டிற்குப் பின்னர் இரண்டாம் மொழி என்னும் அடிப்படையிலேயே தமிழ் கற்பிக்கப்படுகிறது. ஆங்கிலம் முதல்மொழியாகவும் தாய்மொழி (கட்டாயம்) இரண்டாம் மொழியாகவும் கற்பிக்கப்படுகிறது.134 தொடக்கப்பள்ளிகளிலும், 39 உயர்நிலைப்பள்ளிகளிலும், 8 தொடக்கக் கல்லூரிகளிலும் தமிழ் கற்பிக்கப்படுகிறது. 1991 இல் எடுக்கப்பட்ட கணக்குப்படி, தொடக்கப்பள்ளிகளில் 10,737 மாணவரும், உயர்நிலைப் பள்ளிகளில் 4,550 மாணவரும், புகுமுக வகுப்புகளில் 715 மாணவரும் தமிழ் கற்றனர். தொடக்க, உயர்நிலைப்பள்ளிகள், கல்லூரிகள் ஆகியவற்றில் 450 தமிழாசிரியர்களுக்குமேல் பணியாற்றுகின்றனர். (அட்டவணை காண்க)

## ஆசிரியர் பயிற்சி

சிங்கப்பூரில் தமிழாசிரியர் பயிற்சி 1947 இல் தொடங்கியது என்கிறார் கா. இராமையா. ஆனால் அஃது இடைவிடாது தொடரவில்லை; இடையிடையே நின்றது. "1970 ஆம் ஆண்டின் பிற்பகுதியிலிருந்துதான் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ் வகுப்புத் தொடர்ந்து இயங்கிவருகிறது."[102] 1973 ஆம் ஆண்டிற்குப்பின் "ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிக் கல்விக் கழகம் என்று பெயர் மாற்றங் கண்டு அரசாங்கத்தின் ஆணைபெற்ற நிறுவனமாக இயங்கத் தலைப்பட்டது" என்னும் முனைவர் சுப. திண்ணப்பன், "உண்மையில் கல்விக் கழகம் என்பது ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி, சிங்கப்பூர்க் கல்விப்புலம், கல்வி அமைச்சின் ஆய்வுப்பகுதி ஆகிய மூன்றின் ஒருங்கிணைப்பால் உருவான ஒன்றாகும்"[103] என்று விளக்குகிறார்.

## ஆசிரியர் பயிற்சியில் சேர்வதற்கான தகுதி

1986ஆம் ஆண்டிற்கு முன்புவரை ஆசிரியர் பயிற்சியில் சேர விழைபவர் குறைந்தது உமறு புலவர் உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்வில் தேர்ந்திருக்க

102 சிங்கப்பூரில் தமிழ் மொழி தமிழ் இலக்கிய வளர்ச்சி 1965 - 90, ப.93
103 சிங்கப்பூரில் தமிழ்மொழியும் இலக்கியமும், ப.86

வேண்டும். அல்லது சீனியர் கேம்பிரிட்ஜ் பொதுக் கல்வி சாதாரண நிலைத் தேர்வில் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். இந் நிலை 1987ஆம் ஆண்டு முதல் மாற்றங்கண்டது. அதன்படி சிங்கப்பூர் கேம்பிரிட்ஜ் பொதுக் கல்விச் சான்றிதழ் மேனிலைத் தேர்வில் தமிழைச் சிறப்புப் பாடமாகக் கற்றுத் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். இது மற்ற மொழிப் பிரிவினருக்கு இணையாக உயர்த்தப்பட்டதாகும்.

## பயிற்சித்தரம்

ஆசிரியர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சிபற்றி முனைவர் சுப. திண்ணப்பன் கீழ்க்காணுமாறு விளக்குகிறார். "தமிழாசிரியர்களுக்குத் தேவையான மொழி இயல்பற்றிய அறிவும் மொழி கற்பித்தல்பற்றிய கோட்பாடுகளும் கற்பிக்கப் படுகின்றன. நவீன கற்பித்தல் முறைகளில் பயிற்சிகள் நல்கப்படுகின்றன. கணினியில் தமிழ்ச் சொற்றொகுப்புச் சாதனத்தைப் பயன்படுத்தித் தமிழ் கற்பிக்கப் பயன்படுத்துவதுபற்றியும் கற்பிக்கப்படுகின்றது. தமிழ் இலக்கணம் பயன்பாட்டு நிலையில் கற்பிக்கப்படுகின்றது. மேலும் தமிழ் இலக்கிய வரலாறு, சிங்கப்பூர்த் தமிழிலக்கியம்,இக்கால இலக்கியம் ஆகியனவும் கற்பிக்கப் படுகின்றன. தமிழ் கற்பித்தல் முறைகளில் பாடத்திட்டம்பற்றிய அறிமுகம், நால்வகைத் திறன் கற்பித்தல், மொழிச் சோதனை, பிழை ஆய்வு, குறைகளையக் கற்பித்தல் முதலியன கற்பிக்கப்படுகின்றன. நுண்மைநிலைக் கற்பித்தலும் நடத்தப்படுகின்றது. பள்ளி சென்று 20 வாரம் பாடம் நடத்தும் பயிற்சியும் உண்டு".[104]

## புதுமுறை கற்றல் கற்பித்தல்

இன்று கற்றல், கற்பித்தல் முறைகள் அறிவியல் வளர்ச்சிக்கேற்ப மாறுதல் அடைந்துகொண்டே வருகின்றன. அதற்கேற்பப் பயிற்சி முறைகளும் மாறிவருகின்றன; பாடத் துணைப்பொருள்களும் புதுமையும் பொலிவும் அடைந்து வருகின்றன. இவ்வகையில் தமிழ்கூறு நல்லுலகிற்கே சிங்கப்பூர் ஒரு முன்னோடியாய் விளங்குகிறது என்பதில் மிகையில்லை.

## சிங்கப்பூர்ப் பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகம்

இக் கழகம் பாடத்திட்டங்களை வகுப்பதிலும் பயிற்றுத் துணைப் பொருள்களை உருவாக்குவதிலும் ஈடுபட்டு வருகிறது; புதுமுறைக் கற்பித்தலுக்கேற்ப ஒலி, ஒளிப் பேழைகளையும் உருவாக்கி வருகிறது; பாட நூல்களை எழுதி வெளியிடுகிறது. தமிழைப் பொறுத்தவரை இவற்றை ஆதாய நோக்கில் இயலா தெனினும் மற்ற மொழிகளுக்குரிய வாய்ப்பு எந்த வகையிலும் தமிழ் மொழிக்கு இல்லாமற் போகக்கூடாது என்பதில் அரசு கருத்துச் செலுத்தி

---

104 மேலது, 88

வருகிறது. ஒலி, ஒளி அமைப்புக் கொண்ட "டி.சி" யும் தமிழில் உருவாக்கப் படுகிறது. இவற்றைப் பயன்படுத்திக் கொள்வதில் சமுதாயம் பின்வாங்கக் கூடாது; தாய்மொழியின் இன்றியமையாப் பயனை மறந்துவிடக்கூடாது என்பதே சமுதாய நலன் நாடும் நல்லார் விழைவாகும்.

## சமயம்

சிங்கப்பூரில் வாழ்வோர் பௌத்தம், இசுலாம், இந்து, கிறித்தவம் முதலாய சமயங்களைச் சார்ந்துள்ளனர். எச் சமயத்தையும் சாராதோரும் உளர். இந்தியர்கள் இந்து, இசுலாம், கிறித்தவம் முதலாய சமயங்களைச் சார்ந்துள்ளனர்; இந்து சமயத்தைச் சார்ந்தோர் எண்ணிக்கையே மிகுதி. இந்து சமயத்தைச் சார்ந்தோரில் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டோரே மிகுதி. ஆனால் ஒரு சில கோயில்களில் மட்டுமே தமிழில் வழிபாடு நடைபெறுகிறது. எல்லாக் கோயில்களிலும் இது பரவ வேண்டுமென்பது தமிழ் உணர்வுள்ளார் விழைவாகும்.

குடியரசில் சில கோயில்களில் திருமுறைகள் ஓதப்பட்டு வருகின்றன; வாரவழிபாட்டு வகுப்புகளும் நடந்துவருகின்றன. திருமுறை மாநாடுகளும் நடந்துவருகின்றன. இவை பத்தி உணர்வோடு தமிழ் வளர்ச்சிக்கும் துணை புரிந்து வருகின்றன.

## கலை, பண்பாட்டு வளர்ச்சி

சிங்கப்பூர்க் குடியரசில் வாழும் தமிழர், கலை வளர்ச்சியில் குன்றிவிடவில்லை. இசை, நடன வகுப்புகளில் சேர்ந்து எதிர்காலத் தலைமுறையினர் முறையான பயிற்சி பெற்று வருகின்றனர். நாடகக் கலை வளர்ச்சியும் மகிழத்தக்க அளவு உள்ளது. இவற்றிற்கு வானொலி, தொலைக்காட்சி நிறுவனங்களின் பங்கு அளப்பரியதாகும்.

## பண்பாடு

குடியரசு மக்கள் தத்தம் பண்பாட்டை இழந்துவிடக்கூடாது என்பதில் அரசு கருத்தாக இருந்து வருகிறது. பண்பாட்டின் மூலமுதலான தாய்மொழிக் கல்வியை அரசு கட்டாயப்படுத்துவதன் முதன்மை நோக்கம் பண்பாட்டு வளர்ச்சியில் கொண்ட நாட்டமேயாகும். "கீழ்த்திசை மக்களுக்குரிய பண்பாட்டைச் சிங்கப்பூரர் இழந்துவிடக்கூடாது" என்று சிங்கப்பூர்க் குடியரசின் தந்தை லீ குவான் இயூ அடிக்கடி வலியுறுத்தி வருகிறார் என்பது ஈண்டு

## சிங்கப்பூரில் தமிழ்க்கல்வித் தொடர்பான விவரங்களைக் காட்டும் அட்டவணைகள்

1960 - 1968 வரையிலான தமிழ்த் தொடக்க, உயர்நிலைப் பள்ளிகளில் தமிழ் மாணவர் எண்ணிக்கை

| ஆண்டு | தொடக்கநிலை | உயர்நிலை | மொத்தம் |
|---|---|---|---|
| 1960 | 1310 | 023 | 1333 |
| 1961 | 1243 | 091 | 1334 |
| 1962 | 1395 | 111 | 1506 |
| 1963 | 1526 | 140 | 1666 |
| 1964 | 1591 | 191 | 1782 |
| 1965 | 1580 | 223 | 1703 |
| 1966 | 1524 | 248 | 1772 |
| 1967 | 1539 | 282 | 1821 |
| 1968 | 1490 | 353 | 1843 |

அட்டவணை -1

அரசினர் பள்ளி, அரசு மான்யம் பெற்ற தமிழ்ப் பள்ளிகளும் அவை இயங்கிய காலமும்

| தமிழ்ப் பள்ளியின் பெயர் | காலம் | வகை |
|---|---|---|
| அரவிந்தர் | 1946 - 1973 | அரசினர் |
| செயிண்ட் ஜார்ஜஸ் | 1948 - 1974 | அரசினர் |
| பாரதிதாசன் | 1948 - 1974 | மான்யம் |
| சாங்கி | 1946 - 1974 | மான்யம் |
| கலைமகள் | 1946 - 1975 | மான்யம் |
| மெதடிஸ்ட் | 1948 - 1975 | மான்யம் |
| நாகம்மையார் | 1946 - 1979 | மான்யம் |
| நீலாம்பிகை | 1946 - 1967 | மான்யம் |
| பாசிர் பாஞ்சாங் | 1948 - 1968 | மான்யம் |
| சாரதாதேவி | 1937 - 1980 | மான்யம் |
| செம்பவாங் | 1948 - 1971 | மான்யம் |
| வள்ளுவர் | 1946 - 1973 | மான்யம் |
| வாசுகி | 1947 - 1970 | மான்யம் |
| விவேகாநந்தர் | 1932 - 1973 | மான்யம் |
| உமறு புலவர் (தொடக்க நிலை) | 1946 - 1973 | மான்யம் |
| உமறு புலவர் (உயர்நிலை) | 1960 - 1982 | மான்யம் |

அட்டவணை -2

## ஆங்கிலத் தொடக்கப் பள்ளிகளில் தமிழ்

| ஆண்டு | பள்ளிகளின் எண்ணிக்கை | மாணவர் எண்ணிக்கை | ஆசிரியர்கள் | தமிழ் நிலையங்கள் (சனிக்கிழமை) |
|---|---|---|---|---|
| 1952 | 32 | 1200 | 8 | 3 |
| 1953 | 36 | 1228 | 7 | 4 |
| 1954 | 43 | 1678 | 11 | 7 |
| 1955 | 48 | 2099 | 18 | 14 |
| 1957 | 76 | 4811 | 36 | 25 |
| 1958 | 119 | 5926 | 53 | 26 |

அட்டவணை -3

## தமிழ் கற்பிக்கும் ஆங்கிலப் பள்ளிகளின் எண்ணிக்கை

| படிநிலை | பள்ளிகள் | நிலையங்கள் | தொடக்கக் கல்லூரிகள் | மொத்தம் |
|---|---|---|---|---|
| தொடக்க நிலை | 117 | 1 | ... | 118 |
| உயர்நிலை | 37 | 8 | ... | 45 |
| தொடக்கக்கல்லூரி | ... | 1 | 14 | 15 |
| மொத்தம் | 154 | 10 | 14 | 178 |

அட்டவணை -4

## தமிழை இரண்டாம் மொழியாகப் பயிலும் மாணவர் எண்ணிக்கை

| படிநிலை | பள்ளிகளில் பயில்வோர் | நிலையங்களில் பயில்வோர் | மொத்தம் |
|---|---|---|---|
| தொடக்க நிலை | 9, 925 | 75 | 10, 000 |
| உயர்நிலை | 3, 400 | 1,600 | 5, 000 |
| தொடக்கக் கல்லூரி | 500 | ... | 500 |
| பல்கலைக் கழகத் தமிழ் புகுமுக நிலையம் | ... | 250 | 250 |
| மொத்தம் | 13, 825 | 1, 925 | 15, 750 |

அட்டவணை -5

சான்று : முனைவர் அ. வீரமணி (தொகுப்பு), சிங்கப்பூரில் தமிழ்மொழி தமிழ் இலக்கிய வளர்ச்சி 1965 - 1990, 1994, பக். 79, 81, 83, 86, 87.

நினைவுகூரத்தக்கது. ஆண்டுதோறும் பண்பாட்டு மாதம் நடத்த அரசு ஆதரவு வழங்கி வருவது, அதன் நல்லெண்ணத்தைக் காட்டுகிறது.

பண்பாட்டு நெறிகளை வலியுறுத்த அரசு அறநெறிக் கல்வி, வாழ்க்கை நிலைக் கல்வி முதலாய பாடத்திட்டங்களை வகுத்துள்ளது. இக் கல்வி தாய்மொழிகளில் (தமிழில்) கற்பிக்கப்படுவது பாராட்டிற்குரியது. பல்லினச் சூழலில் சொந்தப் பண்பாட்டு முறை சிற்சில மாறுதல்களைப் பெற்றாலும் அடிப்படை மாறக்கூடாதென்பது சான்றோர் உள்ளக்கிடக்கையாகும்.

## சமுதாய அமைப்புகள்

சமுதாயம் எவ் வகையிலும் பின்தங்கிவிடக் கூடாதென்பது சமுதாய இயக்கங்களின் நோக்கமாகும். மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் தமிழர் சமுதாயம் இந்த அளவு வேரூன்றி இருப்பதற்கு அவை ஆற்றிய தொண்டே காரணமெனில் மிகையன்று. மலாயாப் பல்கலைக்கழகத்தில் தமிழ் இடம்பெற, சிங்கப்பூரில் தமிழ் ஆளும் மொழிகளுள் ஒன்றாய் விளங்கப் பெருந்தொண்டாற்றிய தமிழவேள் கோ.சாரங்கபாணிக்குப் பின்புலமாய் நின்றவை சமுதாய அமைப்புகளே.

சிங்கப்பூரில் இரண்டாம் உலகப் போருக்குப் பின் சில வலிமைமிக்க இயக்கங்கள் அமைந்தன. இடையிடையேயும் புதிது புதிதாய்ப் பல இயக்கங்கள் தோன்றின. தமிழர் சீர்திருத்தச் சங்கம், சிங்கப்பூர்த் தமிழரியக்கம், சிங்கப்பூர்த் தமிழர் சங்கம், இலங்கைத் தமிழர் சங்கம், கடையநல்லூர் முஸ்லீம் லீக் முதலாய பழைய அமைப்புகள் சமுதாய உயர்வுக்குத் தொண்டாற்றிய அமைப்புகளாகும். பல அமைப்புகள் ஒன்றிணைந்த தமிழர் பிரதிநிதித்துவ சபை அறிமுகப்படுத்திய தமிழர் திருநாள் (1952) மலாயாவிலும் சிங்கப்பூரிலும் ஏற்படுத்திய சமுதாய மாறுதல்கள் பல; அவ் வமைப்பு ஆண்டுதோறும் நாடெங்கும் நடத்திய தமிழர் திருநாள் விழாக்கள் ஊட்டிய தமிழ், கலை, பண்பாட்டுணர்வுகள் சமுதாயத்தின் நாடி நரம்புகளில் இன்றுகூட உயிர்த்துடிப்பை ஏற்படுத்தும் மின்னோட்டமாய் ஓடிக்கொண்டிருக்கின்றன. அப்பேற்பட்ட பெருஞ்செயலைச் செய்த தமிழர் பிரதிநிதித்துவ சபை பின்னர் வலிமை குன்றியது; இப்போது அது 'தமிழர் பேரவை' என்னும் பெயரில் இயங்கிவருகிறது. "தமிழர் பேரவையின் இளையர் மன்றம் டாக்டர் அ. வீரமணியின் வழிகாட்டுதலில் தமிழ் இளைஞர்களைச் சமூக சேவையில் ஈடுபடச் செய்து பல அரிய சேவைகளைச் செய்துள்ளது."[105] இம் மன்றம் கல்வித்துறை வளர்ச்சிக்கும், ஆய்வு மேம்பாட்டிற்கும், கலை, பண்பாட்டு நிலைப்பாட்டிற்கும் தொண்டாற்றி வருகிறது. இவ் வகையில் சிங்கப்பூர்த் தேசியப் பல்கலைக்கழக மாணவர் தோற்றுவித்த தமிழ்ப் பேரவையும் குறிப்பிடத்தக்கது.

---

105 சாமி வீராசாமி, 'சமூக அமைப்புகள் வளர்த்த தமிழ்,' சிங்கப்பூரில் தமிழ்மொழி தமிழ் இலக்கிய வளர்ச்சி 1965 - 1990, ப.192

சிங்கப்பூரில் தமிழ்ப் படைப்பிலக்கியம் வளரவும், எழுத்தாளர், கவிஞர் ஊக்கம் பெறவும் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் பணிபுரிந்து வருகிறது. இன்னும் பல அமைப்புகள் சமுதாய, கலை, இலக்கிய, பண்பாட்டு வளர்ச்சிக்கு அரும்பணியாற்றி வருகின்றன.

## சிண்டா

சிங்கப்பூரில் ஒரு தாய் கழகம் போல எல்லாவகையிலும் இந்தியர் நலன் பேணும் ஒரு பேரமைப்பாகச் சிண்டா (Sinda) இயங்கி வருகிறது. பொருள் வளங்கொண்ட அஃது ஆற்றிவரும் பணிகள் அளப்பரியன.

## சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியம்

1965ஆம் ஆண்டில் சிங்கப்பூர்த் தனிக்குடியரசானபின் படிப்படியாய் அதன் இலக்கியப் போக்குகளில் சிற்சில மாறுதல்கள் தோன்றிவருகின்றன. இதற்கு அங்கு அமைந்துள்ள சூழல்கள் காரணமாய் விளங்குகின்றன.

சிங்கப்பூரில் மலாய், சீனம், ஆங்கிலம், தமிழ் ஆகிய நான்கு மொழிகளும் ஆட்சிமொழிகள் ஆகும். அதனால் தமிழில் படைக்கப்படும் இலக்கியமும் தேசிய இலக்கியம் என்னும் தகுதியைப் பெறுகிறது. தமிழர் குடியேறிய வேறெந்த நாட்டிலும் தமிழுக்கு இதுபோன்ற தேசிய அங்கீகாரமில்லை. மேலும், தேசிய அளவிலான இலக்கியப் பரிசுகள் பெறவும் சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர்களுக்கு வாய்ப்பமைந்துள்ளது. அவ் வாய்ப்புகள் வருமாறு :

### 1. தென்கிழக்காசிய இலக்கிய விருது (Southeast Asia Write Award)

இஃது 'ஆசியான் விருது' எனறு மருவி எல்லா இடங்களிலும் வழங்கப்படுகிறது.[106] இவ் விருது தாய்லாந்து மன்னரால் வழங்கப்படுகிறது. சிங்கப்பூரில் நான்கு ஆட்சிமொழிகள் இருப்பதால் நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை இவ் விருது தமிழ் எழுத்தாளர்களுக்கு வழங்கப்படுகிறது. இத் திட்டத்தின்கீழ் விருது பெற்றோர் :

1. சிங்கை மா. இளங்கண்ணன் (1982)
2. பரணன் (1986)
3. இராம. கண்ணபிரான் (1990)
4. நா. கோவிந்தசாமி (1994)

ஆகியோர்.

106 டாக்டர் அ. வீரமணி, கடித வழித் தந்த தகவல். விருது பெற்றோர் பட்டியலும் தந்து உதவினார்.

## 2. தேசியப் புத்தக மேம்பாட்டுக்கழக நூற்பரிசு (National Book Development Council Book Awards)

இப் பரிசு திட்டத்தின்கீழ் பரிசுபெற்றோர் இராம. கண்ணபிரான் (1982), கவிஞர் பரணன் (1986), கவிஞர் க. து. மு. இக்பால் (1990), நா. கோவிந்தசாமி (1992), மா. இளங்கோவன் (1994), பி. கிருஷ்ணன் (1994), ஜே. எம். சாலி ஆகியோர் ஆவர்.

## 3.சிங்கப்பூர்த் தேசியப் பல்கலைக்கழகக் கலைமைய, 'மெம்பிளொங்' (Mont Blanc) பேனா நிறுவன இலக்கிய விருது

இவ் விருது இவ் வாண்டுதான் அறிமுகப்படுத்தப்பட்டது; க. து. மு. இக்பால் இப் பரிசைப் பெற்றார். இவற்றொடு சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகம் வழங்கிவரும் தமிழவேள் விருதும் (தங்கப்பதக்கம்) எழுத்துத்துறைக்குப் பேருக்கம் நல்கி வருகிறது. இவ் விருதைப் பெற்றோர் புலவர் மெ. சிதம்பரம் (1988), கவிஞர் சிங்கை முகிலன் (1989), கவிவாணர் ஐ. உலகநாதன் (1989), அ. நா. மொய்தீன் (1989), செ. வே. சண்முகம் (1996) ஆகியோர் ஆவர்.

சிங்கப்பூர்த் தமிழ் எழுத்துலகம் பெற்றுள்ள மற்றொரு சிறப்பையும் ஈண்டுக் குறிப்பிட வேண்டும். ஆசியான் கலாசாரச் செய்தி பரிமாற்றக் குழுவிற்காக (Asean Committee on Culture and Information) சிங்கப்பூர்ச் சமூக வளர்ச்சி அமைச்சு (Ministry of Social Development Singapore) வெளியிட்ட நூல்களில் தமிழ்ப் படைப்புகளும் இடம்பெற்றன. அவை மூலமொழியுடன் ஆங்கில மொழிபெயர்ப்பும் கொண்டவை. இத் தொடரில் வை. திரு. அரசு தொகுத்த சிங்கப்பூர்க் கவிதைகள் (Poetry of Singapore -1985) நா. கோவிந்தசாமி தொகுத்த சிங்கப்பூர்த் தமிழ்ச் சிறுகதைகள் (Singapore Tamil Short Stories-1990) ஆகிய நூல்கள் வெளிவந்தன. இவை ஆசிய நாடுகளில் சிங்கப்பூர்த் தமிழ் இலக்கியங்கள் அறிமுகமாக உதவின.

மேலும் சிங்கப்பூரில் ஓடும் பெருவிரைவுத் (Mass Rapid Transit) தொடர் வண்டியில் கவிஞர்கள் க. து. மு. இக்பால், அமலதாசன், அமீருத்தீன், லதா ஆகியோர் கவிதைகளும் அவற்றிற்குரிய ஆங்கில மொழிபெயர்ப்பும் இடம்பெற்றுள்ளன.[107] மற்ற இனத்தவர் தமிழ்க் கவிதை மாண்பைப் புரிந்து கொள்ள இவ் வேற்பாடு வழிவகுத்துள்ளது என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்க தாகும்.

## வரலாற்று வாயில்பற்றி . . .

இவ் 'வரலாற்று வாயில்' பகுதியில் தொல்தமிழர் வரலாறும், மலேசியத் தமிழர் வரலாறும், மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறும், சிங்கப்பூர்த் தமிழர்,

107 சான்று : அமலதாசன் தொகுத்தளித்த மூலப் படிகளின் படநகல்கள்.

தமிழிலக்கியம்பற்றிய குறிப்புகளும் திரட்டித் தரப்பட்டுள்ளன. இவற்றொடு பிற்சேர்க்கைப் பகுதியிலும் பல்வேறு பயன்மிகு குறிப்புகள் தரப்பட்டுள்ளன.

வாழ்க்கைக் குறிப்புகளில் இவ் வரும் படையல் உருவாக ஒத்துழைப்பீந்த பெருமக்கள், கவிஞர்கள் ஆகியோர்தம், வாழ்க்கைக் குறிப்புகள் இடம் பெற்றுள்ளன. பாடல்களின் பின்புலத்தில் வரும் குறிப்புரைகளில் வரலாற்று நிகழ்வுகள், அரிய செய்திகள் அடங்கியுள்ளன; பாட்டுடைத் தலைவர் பகுதியில், பல அரிய குறிப்புகள் தொகுக்கப்பட்டுள்ளன; திருத்தலங்கள், நிறுவனங்கள், இயக்கங்கள்பற்றிய குறிப்புகளும் இடம்பெற்றுள்ளன; கவிதைக் கொடைதந்த நூல்கள், இதழ்கள், சிறப்பு மலர்கள், அமைப்புகள்பற்றிய குறிப்புகள் வருகின்றன.

## கதவுகளைத் திறக்க . . .

இத்துணைக் குறிப்புகள் இக் களங்சியத்தில் இடம்பெற்றுள்ளன எனினும், இவை வரலாற்று மாளிகையின் சில சாளரங்களை மட்டுமே திறந்து காட்ட வல்லன. அம் மாளிகையின் எல்லாக் கதவுகளையும் திறந்து பார்க்கத் தூண்டும் ஓர் உந்து சத்தியை இவை வழங்குமானால் அதுவே பெரிய வரவாகும்; வெற்றியுமாகும். 'வரலாறு வாழ்வைப் பெருக்கும்' ஆதலால், இத் தலை முறையினர் மலேசியத் தமிழர் வரலாற்றைத் துல்லியமாய் எழுதி, வருங்காலத் தலைமுறையினருக்கு வழங்க வேண்டும்; அவர்கள் தாங்கள் யாவர் என்பதை உணர வழிகாட்ட வேண்டும்; தடயங்கள் அழிவதற்குள் இப் பணியைச் செய்தாக வேண்டும் என்பதே தொகுப்புக் குழுவினர் வேட்கையாகும்.

## கூ நிறைவுரை

தமிழ்கூறு நல்லுலகம் பரந்தது; விரிந்தது. அவ் வுலகில் ஒரு சிறுபகுதி மலேசியத் திருநாடு. இப் பகுதியில் வாழும் தமிழினத்தின் ஒரு நூற்றாண்டு காலக் கவிதைகள் சிலவும், கவிதை தந்த இனத்தின் சுருக்கமான வரலாறும் கொண்ட களஞ்சியம் இது. மலேசியத் தமிழர் - திராவிடர் வாழ்வை இஃது ஓரளவு படம்பிடித்துக் காட்டுமென்பதில் ஐயமில்லை.

"தமிழர் குடியேறிய ஒரு நாட்டிலிருந்து இங்ஙனம் ஒரு நிறைவான படையல் தமிழ்கூறு நல்லுலகிற்கு இதுநாள்வரை கிட்டியதில்லை"யென்று அறிஞர் பாராட்டும் மொழி செவியில் விழுகிறது. இம் மகிழ்ச்சியான வேளையில் தமிழ்கூறு நல்லுலகிற்குப் பயன்சேர்க்கும் சில கருத்துகள்பற்றிச் சிந்திப்பதும், அயலகத் தமிழர் எண்ண அலைகளை ஈண்டுத் தவழவிடுவதும் பொருத்தமே!

தமிழர் இனத்தால் ஒருவர்; நாடுகளால் வேறுபட்டவர். "இன்று உலகில் நூற்றைம்பதுக்கு மேற்பட்ட நாடுகள் உள. (இப்போது ஒருலக (United Na-

tions) அவையிலேயே 185 நாடுகள் உறுப்பியம் பெற்றுள்ளன) இவற்றில் ஐம்பதுக்கு மேற்பட்ட நாடுகள் தமிழோடும், தமிழரோடும், தமிழ்ப்பண் பாட்டோடும் தொடர்புடையனவாய் விளங்குகின்றன.[108]

இந்தியத் துணைக் கண்டத்தில், தமிழ்நாட்டைத் தவிர்த்துப் பிற மாநிலங்களிலும் தமிழர் பரவி வாழ்கின்றனர். "கேரளம், கருநாடகம், ஆந்திரம் ஆகியவற்றில் வாழும் தமிழர்களுள் பெரும்பாலோர் சென்றேறு குடிகள் அல்லர்; காலங்காலமாய் அவர்கள் அங்கேயே வாழ்ந்து வருகின்றனர்.[109] ஆனால், ஆங்கில ஆட்சியின் பிற்பகுதியிலும் (இந்திய) நாடு விடுதலை பெற்றபின்னரும் இடம்பெயர்ந்தவர்கள்..... மேற்கு வங்காளம், உத்தரப் பிரதேசம், பீகார், மும்பாய் (பம்பாய்), குஜராத், ஒரிசா, பஞ்சாப், அந்தமான் முதலிய மாநிலங்களில் தமிழர்களின் தொகை கணிசமாய் உள்ளது"[110] கல்கத்தா, தில்லிப் பகுதிகளில் தமிழர் எண்ணிக்கை மிகுதி. தில்லியில்மட்டும் மூன்று இலக்கம் தமிழர் வாழ்வதாய்க் குறிப்புகள் காட்டுகின்றன.

இங்ஙனம் இந்தியத் துணைக் கண்டத்தில் தமிழகத்திற்கு வெளியேயும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ரெயூனியன், மொரீசியசு, ஆஸ்திரேலியா முதலாய நாடுகளிலும் ஒரு கோடிக்கு மேற்பட்ட தமிழர் வாழ்கின்றனர். தமிழகத்தையும் சேர்த்தால் உலகத் தமிழர் எண்ணிக்கை 7 கோடியை எட்டுகிறது.

உலகின் பல்வேறு நாடுகளில் இறைந்து கிடக்கும் ஓரினக் கூட்டங்கள் தொடர்ந்து ஒன்றுக்கொன்று தொடர்பின்றி வாழ்ந்து கொண்டிருக்குமானால் ஒரு காலத்தில் அவ்வப் பகுதிகளின் மொழி, கலை, பண்பாட்டுத் தாக்கங்களால் அடையாளமற்றதாகிவிடும். இப்போதே தமிழினம் பல நாடுகளில் தாய்மொழியை இழந்து நிற்கிறது. மேடான் (இந்தோனேசியா) தமிழர் தாய்மொழிச் செல்வத்தைக் கைவிட்டுவிட்டனர் என்றே சொல்ல வேண்டும். ரெயூனியன், மொரீசியசு முதலாய நாடுகளில் இழந்த செல்வத்தை மீண்டும் பெறமுடியாதா என்று துடிக்கின்றனர்.

தமிழ் ஆட்சிமொழிகளில் ஒன்றாய் உள்ள சிங்கப்பூரில்கூடத் தமிழர்க்குத் தங்கள் தாய்மொழியின் மேலுள்ள ஆர்வம் குறைந்துவருகிறது என்பதை ஆய்வுகள் காட்டுகின்றன. மலேசியாவில்கூட அக் காற்று வீசத் தொடங்கியுள்ளதுபோல் தெரிகிறது. தாய்மொழியை இழந்துவிட்ட நாடுகள் மீண்டும் அதனைப் பெறத் துடிக்கையில் பெற்றிருக்கும் நாடுகள் அதனை

---

108 பொன். கோதண்டராமன், 5ஆம் உலகத் தமிழ் மாநாடு - விழா மலர் (1981), ப. 89

109 இளந்திரையன், சாலை., 5ஆம் உலகத் தமிழ் மாநாடு - விழா மலர் (1981), ப. 84

110 மேலது

இழக்கத் துணிவது தாங்கொணாத் துன்பத்தைத் தருகிறது; இந்த இனத் தற்கொலைப் போக்கை எண்ணி மனம் குமைகிறது.

இன்றைய உலகம் மிகமிகச் சுருங்கிவிட்டது. உலக இனங்கள் மொழி, பண்பாட்டடிப்படையில் ஒன்றிணைந்து வருகின்றன. மலேசியாவின் பெரிய இனத்தவராய மலாய்க்காரரும் உலக அளவில் ஒன்றுபட முயற்சி மேற்கொண்டு வருகின்றனர். மூத்த - செம்மை சான்ற ஒரு மொழியைத் தாய்மொழியாய்க் கொண்டிருக்கும் தமிழர், மொழிவழி ஒன்றுபட எத் தடையுமிருப்பதாய்த் தெரியவில்லை.

தமிழர் மொழிவழி ஒன்றுகூடும் ஒரு பாட்டையைத் திறக்க மலேசியா முதன்முதல் உலகத் தமிழாராய்ச்சிக் கருத்தரங்க மாநாட்டைக் கூட்டியது (1966); வீண் ஆர்ப்பாட்டங்கள் இன்றி ஆராய்ச்சி மாநாட்டிற்குரிய வடிவோடு அதனை நடத்திக் காட்டியது. ஆனால், இப்போது அதன் நோக்கம் சிதைந்துவிட்டது; 'ஆராய்ச்சிக் கருத்தரங்கம்' என்னும் தொடரும் பறிபோனது; வெறும் 'உலகத் தமிழ் மாநாடு' ஆனது. வசதிபடைத்தோரும், சுற்றுலாப் பயணிகளும், தமிழராய்ச்சியில் எவ் வகையாய தொடர்பும் இல்லாதோரும் கூடிக் கூத்தடிக்கும் ஒரு கொண்டாட்டமாய் - மாந்த வழிபாட்டுத் திருவிழாவாய் ஆகிவிட்டது. ஆராய்ச்சித் தொடர்பாய் அறிஞர் கூடும் அரங்குகளை அவ் வார்ப்பாட்டங்கள் அடக்கி அமுக்கிவிடுகின்றன.

இன்று உலகளவில் கணக்கற்ற இயக்கங்கள் தமிழின் பெயரால், தமிழர் பெயரால் பெருகிவிட்டன; உலகின் பல பாகங்களில் உலக மாநாடுகள் வெவ்வேறு தலைப்புகளில் கூட்டப்படுகின்றன. ஆனால், நிறைவாய பயன் ஏற்பட்டதாய்த் தெரியவில்லை. பெரும்பாலாயவை வெறுமனே கூடிக் கலைபவையாகவே உள. தொடர்ந்து இதே போக்கில் காலத்தையும் செல்வத்தையும் வீணடித்துக் கொண்டிராமல் காலமாறுதல்களுக்கேற்பப் புதுவழியைக் காணவேண்டும்.

## ஆக்கப் பணிகள்

"தமிழ்மொழிக்கென்று ஒரு தனிநாடு இல்லாததால் தமிழின் வளர்ச்சி குறித்தும், திட்டமிடுதல் குறித்தும் எந்த நாடும் அக்கறை காட்டுவதாய்த் தெரியவில்லை; தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும்வகை செய்ய இதுவரை முன்வந்ததாய்த் தெரியவில்லை. வாய்ப்பேச்சோடும் திட்டங்களோடும் பலர் நிற்கின்றனர்'[111] என்று ஒரு நெஞ்சம் வருந்துகிறது. அவ் வருத்தத்தில் பொருள் இல்லாமலில்லை; எனினும் தமிழ் ஓர் ஏதிலி மொழியன்று என்பதனையும் எண்ணத்தில் கொள்ள வேண்டும். இந்தியத் துணைக்கண்ட மாநிலங்களில் ஒன்றான தமிழ்நாட்டில் அஃது ஆட்சிமொழித் தகுதியைப் பெற்றிருக்கிறது. இலங்கையில் அஃது அரசு ஒப்புக்கொண்ட மொழி. சிங்கப்பூரில் நான்கு ஆட்சிமொழிகளில் அதுவும் ஒன்று. மலேசியாவில் இந்தியர்க்குரிய மொழியாய்

அரசு ஏற்றிருக்கும் மொழி; தொடக்கப்பள்ளிமுதல் பல்கலைக்கழகம்வரை கற்பிக்கப்படும் மொழி. மொரீசியசு நாட்டு அரசு பள்ளிகளில் கற்பிக்கப்படும் மொழி; ரெயூனியன், இங்கிலாந்து, ஆஸ்திரேலியா முதலாய நாட்டுத் தமிழர்களால் கற்கப்படும் மொழி; உலகின் பல பல்கலைக்கழகங்களில் பிறரால் மதித்துப் பயிலப்படும் 'செம்மொழி'; 'கூரியர்' இதழ் வெளிவரும் உலகமொழிகளுள் ஒன்றாயும் விளங்கும் மொழி.

இத்துணைத் தகுதிமிக்க தமிழை நிலைப்படுத்தப் பெரிய போராட்டம் ஏதும் நடத்தத் தேவையில்லை. உணர்வுடன் சற்று முயன்று பற்றுடன் அரவணைத்தால் போதும்.

"நேற்றைய உலகில் இருந்த தமிழ்தான் இன்றைய உலகிலும் தவழ்கிறது; நாளைய உலகிலும் அப்படியே தவழும். அந்தப் பிள்ளைத் தமிழுக்கு வரலாறு இருக்கும். ஆனால், நேற்றைய உலகம் வேறு; அது கடந்துபோன காட்டாறு. அதனைத் திரும்பவும் பெறமுடியாது. ஆனால், இன்றைய உலகின் பணிவேறு. எங்கும் எதிலும் புதுமைகள் பூத்துக் குலுங்குகின்றன. நாம் செய்ய வேண்டிய பணிகளுக்குத் தமிழ் அன்னை ஒரு பேரேடு போட்டுப் பட்டியலிட்டுக் காத்திருக்கிறாள்"[112] என்கிறார் மலேசிய இந்தியர் - தமிழர் தலைவர், அமைச்சர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு.

தமிழன்னை போட்டிருக்கும் பேரேட்டில் வரலாற்று முதன்மை வாய்ந்த பதிவுகள் பதிகின்றனவோ இல்லையோ? உலக அளவில் தமிழ் புழங்க ஒருசில வாயில்கள் திறந்துள்ளன. கணினி உலகையும் கன்னித் தமிழ் வெற்றி கண்டிருப்பதால், அது மின்னஞ்சல் (E-mail) வழியும், இணையத்தின் (Internet) வழியும் உலகெங்குமுள்ள பல்லாயிரக்கணக்காயவரிடையே உறவாடிக் கொண்டிருக்கிறது. அறிவியல் தந்த இந்த அருங்கருவியின்வழி, அன்னைத் தமிழை மிக எளிதாய் மேம்படச் செய்துவிடலாம்; ஒரு மையத்திலிருந்து உலகின் ஒவ்வோர் இல்லத்தின் கதவையும் ஒரே நேரத்தில் தட்டலாம்; தக்கவை தந்தும் பெற்றும் உறவாடலாம்; உயரலாம்; வெற்றி காணலாம். காலம் தமிழுக்கும் கதவைத் திறந்து வைத்திருக்கிறது; அம் மொழிக்குரியோர் வரவை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது. கிடைத்தற்கரிய இவ் வாய்ப்பைத் தமிழினம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். "தமிழின் மேன்மை அதன் தொன்மையில் இல்லை; தொடர்ச்சியில்தான் உள்ளது" என்னும் அறிஞர் ஒருவரின் கருத்தைச் சிந்தித்துச் செயல்பட வேண்டும்.

---

111 இராமையா, கா., பல்கலைக்கழகப் புகுமுக வகுப்புக்கான தமிழ்மொழி இலக்கியக் கருத்தரங்கு (சிங்கை), ப. 37

112 ஆறாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு (மலேசிய) மலர், வாழ்த்துச் செய்தி.

## தமிழகத்தின் பொறுப்பு

உலகெங்குமுள்ள தமிழர், தம் மூலத் தாயகமான தமிழகத்திலிருந்து பரவியவரே. அம் மண்ணின் அரசியல், பொருளாதாரம் முதலாயவற்றில் அயலகத் தமிழர் தலையிடமுடியாது; கூடாது. எனினும் மொழி, கலை, பண்பாட்டுத் துறைகளில் அதனை வழிகாட்டியாய்க் கொள்வதில் தப்பில்லை; அத் துறைகளில் பிற நாட்டுத் தமிழருக்கு வழிகாட்டி உதவும் கடப்பாடும் அதற்குண்டு. இவ் வகையில் தமிழகம்போல வேறு எந்த நாடும் அயலகத் தமிழர்க்கு உதவ நிறைவாய வாய்ப்பில்லை.

### 1. தமிழ்மொழி, கலை, இலக்கியம் கற்க உதவுதல்

குடியேறிய நாடுகள் சிலவற்றுள் தமிழர் தம் தாய்மொழியைக் கற்றுக்கொள்ள வாய்ப்புகள் உண்டெனினும் அது வரையறைக்குட்பட்டதே. விரிவாக மொழி, கலை, இலக்கியம், பண்பாடு, கலை முதலாயவற்றில் நிறைவாய தேர்ச்சிபெறத் தமிழகமே வழிகாட்டி உதவமுடியும். சொந்த முயற்சியால் சிலர் இசை, நடனம் பயில அங்குச் சென்றுகொண்டுதான் இருக்கின்றனர்; தனிப்பட்டவரிடம் பயின்று திரும்புகின்றனர் எனினும், முறையான ஓர் அமைப்பிருத்தல் நலம். மேலும் சொந்த நாட்டில் அடிப்படையைக் கற்றுக்கொண்டவர் மீண்டும் தொடக்கத்திலிருந்து பயிற்சியைத் தொடங்காமல் குறுகியகாலப் பயிற்சிமூலம் தேர்ச்சிபெற வாய்ப்புகள் உருவாக்கப்படவேண்டும்.[113]

### 2. அஞ்சல்வழிக் கல்வி

சென்னை, மதுரைக் காமராசர், திருச்சிராப்பள்ளிப் பாரதிதாசன் ஆகிய பல்கலைக்கழகங்கள் அஞ்சல்வழித் தொடர்கல்வி வகுப்புகளை நடத்திவருகின்றன. ஆனால், அவற்றில் அயலகத் தமிழர் சேர்ந்து பயின்று பட்டம்பெறப் பல தடைகள் உள.[114] அவை களையப்படவேண்டும்.

“ஆதாய நோக்கத்தை முதன்மைப்படுத்தாமல் அயலகத் தமிழர்க்கு உதவத் தமிழகப் பல்கலைக்கழகங்கள் முன்வரவேண்டும்” என முன்னாள் துணைவேந்தர் முனைவர் வா. செ. குழந்தைசாமி வலியுறுத்தியுள்ளார்.[115] “தமிழர்களின் மொத்தத் தொகையில் ஏறத்தாழ 25 விழுக்காட்டினர் பிற நாடுகளில் வாழ்வதால்

---

113 இது குறித்து அண்ணாமலை பல்கலைக்கழக இசைத்துறைத் தலைவராய் இருந்த சீர்காழி கோவிந்தராசனிடம் இக் களஞ்சியத் தலைமைத் தொகுப்பாசிரியர் வேண்டுகோள் விடுத்தார்; எழுத்து வடிவிலும் வழங்கினார். “நல்ல கோரிக்கை இது குறித்துப் பல்கலைக்கழக மேலவையில் பேசுவேன்; முடிவை அறிவிப்பேன்” என்றார். அவப்பேறாய் அந்தத் தனித் தமிழிசை மாமணியைக் காலம் விழுங்கிவிட்டது.

அவர்கள்மீது அன்பும் அக்கறையும் காட்டுவது மிகவும் தேவை. இதற்கு உடனடியாக நாம் சில நடவடிக்கைகளை மேற்கொள்வது நலமாகும்"[116] என ஒரு பட்டமளிப்பு விழா நல்லுரையில் முன்னாள் துணைவேந்தர் முனைவர் வ. ஐ. சுப்பிரமணியம் கூறியிருப்பதும் ஈண்டு நினைவுகூரத்தக்கது.

## 3. பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்ள வாய்ப்பளித்தல்

அயலகத் தமிழர் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளராய்ச் சேரத் தமிழகப் பல்கலைக்கழகங்களின் சட்டதிட்டங்கள் இடமளிக்கவில்லை.[117] காலத்திற்கும் தேவைக்கும் ஏற்பச் சட்டதிட்டங்களைத் திருத்தி அயலகத் தமிழர்க்கு வாய்ப்பளிக்கத் தமிழகப் பல்கலைக்கழகங்கள் முன்வரவேண்டும்.

## 4. பண்பாட்டு வகுப்புகள்

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் அயலகத் தமிழர்க்கு முன்பு தமிழ்ப் பண்பாட்டு வகுப்புகளை நடத்திற்று. இப்போது அத் திட்டம் கைவிடப்பட்டு விட்டது. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தை உலகத் தமிழ்ப் பல்கலைக் கழகமாக மாற்றி இதுபோன்ற பணிகளைத் தொடரலாம். மற்றப் பல்கலைக் கழகங்கள் செய்ய முடியாப் பணிகளை இப் பல்கலைக்கழகம் செய்ய முன்வர வேண்டும்.

1992ஆம் ஆண்டில் சிங்கப்பூரில் முதலாம் உலகத் தமிழாசிரியர் மாநாடு நடந்தது. மாநாட்டுத் தொடர்நிகழ்வாய்ப் புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் இரா. கோதண்டராமன் பொறுப்பில் ஒரு பயிலரங்கு நடந்தது. மலேசியாவிலிருந்தும்

---

114 அஞ்சல்வழிக் கல்வித் தொடர்பாய், இங்கு வந்த தமிழகப் பேராசிரியர் சிலர் அளித்த உறுதிமொழிகள் நீர்மேல் எழுத்தாயின. 1986இல் இங்கு வருகை தந்த மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் (உலக வாழ்வு நீத்த) முனைவர் கிருஷ்ணசாமி மூலம் மலாயாப் பல்கலைக்கழகப் பேராசிரியர் முனைவர் வி. எம். பழநியப்பன் ஒரு முயற்சி மேற்கொண்டார். வெண்டோ கல்லூரியின் (இப்போது TAFE P.J.) அப்போதைய முதல்வர் இராசேந்திரம் அதற்காய பணிகளில் ஈடுபட்டார். அக் கல்லூரியின் சார்பில் இக் களஞ்சியத் தலைமைத் தொகுப்பாசிரியர் பல்கலைக்கழகத்துடன் தொடர்ந்து போராடினார். இப்போதைய தமிழகச் சட்டப் பேரவைத் தலைவர் மாண்புமிகு பி. டி. ஆர். பழநிவேல் இராசன் தீவிரமாக முயன்றார். அப்போதைய துணைவேந்தர் முனைவர் இலட்சுமணனும் ஒத்துழைத்தார். அதனால் அஞ்சல் வழியில் பட்டக் கல்விபெற வாய்ப்பு உருவாகியது. ஆனால், சிலர் இளங்கலைப்பட்டம் பெற்றதோடு (1991இல்) அது நிறுத்தப்பட்டது.

115 மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் தேசிய அளவில் நடந்த கருத்தரங்கில் ஆற்றிய உரை, தினமலர் (தமிழ்நாடு) நாளிதழ், 21.1.1992

116 ஒரு பல்கலைக்கழகப் பட்டமளிப்பு விழாவில் ஆற்றிய உரை. அதனில் இடம், காலம் குறிக்கப்படவில்லை.

சிங்கப்பூரிலிருந்தும் தமிழாசிரியர் பலர் அப் பயிலரங்கில் பங்குபெற்றுப் பயனடைந்தனர். இதுபோன்ற பயிலரங்குகள் தமிழ் கற்றல் கற்பித்தலில் புதிய ஆக்கத்தையும் எழுச்சியையும் ஏற்படுத்தும். உலகத் தமிழாசிரியர்க்குத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகமே கூடப் பயிலரங்குகளை நடத்தலாம்.

## 5. தமிழுக்கோர் உலக மையம்

தமிழ்மொழி, கலை, இலக்கியம், பண்பாடு முதலாயவற்றுக்கு வழிகாட்ட - உலகத் தமிழர்க்கு வழிகாட்ட வலிவும், பொலிவும், தொண்டு மனப்பான்மையிலான செயற்பாடும் மிக்க ஒரு மையம் தேவை. இம் மையம் தமிழகத்தில் அமைவதே பொருத்தமாகும்.

புகழுடம்பெய்திய தவத்திரு குன்றக்குடி அடிகள் கருத்தையேற்று, "தற்கால அறிவியல் வளர்ச்சிக்கேற்பத் தமிழ்மொழியில் புதிய மாற்றங்களை உருவாக்கவும், தமிழ் அறிஞர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து 'தமிழ்மொழி அகாதமி' உருவாக்க வேண்டியது அவசியம்" என்று இப்போதைய தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி, காரைக்குடிக் கம்பன் மணிவிழா மண்டபத்திற்குள் கட்டப்பட்ட தமிழ்த்தாய் கோயிலைத் திறந்து வைத்தபோது கூறினார்.[118] அந்த எண்ணத்தைச் செயல்படுத்தும் அதிகாரத்துடன் இப்போது கலைஞர் இருக்கிறார்.

மேலும், "தமிழ் வளர்ச்சிக்கென்று தனி அமைச்சரே தற்போது உள்ளார். தேசிய மொழியாக மட்டுமன்றித் தமிழைச் செவ்வியல் மொழியாகவும் (Classical Language) அறிவிக்க இந்த அரசு முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. 'எங்கும் தமிழ்; எதிலும் தமிழ்' என்னும் நிலையை அடைய முனைந் திருக்கிறோம்"[119] என்று அவர் உறுதியளித்திருப்பது உலகத் தமிழர்க்கு நம்பிக்கை ஊட்டுகிறது.

## 6. உலகத் தமிழ் நூலகம்

உலகத் தமிழ்நூல் அனைத்தும் கொண்ட நூலகம் ஒன்றை மதுரை மாநகரில் அமைக்கத் தமிழக அரசின் தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத் துறை அமைச்சர் முனைவர் தமிழ்க்குடிமகன் முயற்சி மேற்கொண்டிருப்பது பூரிப்பைத்

---

117 இக் களஞ்சியத்தின் தலைமைத் தொகுப்பாசிரியர் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொள்ள விண்ணப்பித்த காலை, தமிழகப் பல்கலைக்கழகங்கள் சட்டதிட்டங்களைக் காட்டிக் கைவிரித்தன. அவ் வேளையில் புதுவைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர் அ. ஞானம், தடைகளைக் களைந்து பல்கலைக்கழகத்தின் கதவைத் திறந்துவிட்டார் (1993). ஆசிரியர்தம் நெறியாளரும் இந் நாள் தமிழ்த்துறைத் தலைவருமான முனைவர் க.ப. அறவாணனும் முன்னாள் துறைத் தலைவர் முனைவர் அ. பாண்டுரங்கனும் தகுதித்தேர்வு நடத்தி ஆய்வு மேற்கொள்ள இடமளித்தனர் என்பது ஈண்டு நன்றியோடு குறிப்பிடத்தக்கதாகும்.

தருகிறது. நூல்களை மட்டுமன்றி, இதழ்களையும் திரட்டி அங்குத் தொகுத்து வைத்தல் வேண்டும்; அதனை ஓர் ஆராய்ச்சி மையமாய் விரிவுபடுத்தவேண்டும். அயலகத் தமிழரும் அதனைப் பயன்படுத்தத் தக்க உறுதியாய ஏற்பாடுகளைச் செய்தல்வேண்டும்.

## 7. உலகத் தமிழர் வரலாறு

கலைஞர் ஆட்சிக் காலத்தில் தமிழ்நாட்டு வரலாறு எழுதும் பணி தொடங்கியது; தொல்பழங்காலந்தொட்டு சங்ககாலம்வரை மூன்று பகுதிகளாய் வெளியிடப்பட்டது. நீண்ட இடைவெளிக்குப் பின் இப்போது பல்லவர், பாண்டியர் வரலாறு - முதல், இரண்டாம் பகுதிகள் வந்துள்ளன. தமிழக வரலாறு எழுதுவதோடு அக் குழு நிறைவுபெற்று விடக்கூடாது. உலகெங்கும் பரந்து வாழும் ஒவ்வொரு நாட்டுத் தமிழர் வரலாறும் எழுதப்படவேண்டும். அதற்கு அடியெடுத்துக் கொடுக்கும் வண்ணம் இக் களஞ்சியத்தில் மலேசியத் தமிழர் வரலாறு சுருக்கமாய்த் தரப்பட்டுள்ளது.

## 8. தமிழுக்கு உலகளாவிய பரிசில் திட்டம்

உலகெங்கும் வாழும் தமிழ்க் கலைஞர், இலக்கியவாணர், தமிழ்பரப்பும் தொண்டர், புதியது புனையும் வல்லுநர், ஏற்றம் தரும் இதழாளர் முதலாயோர் ஊக்கம் பெறும் வண்ணம் பரிசில்திட்டம் ஒன்று உருவாக்கப்படவேண்டும். உலகளாவிய அப் பரிசில் திட்டம் புதியன பூக்க வழிவகுக்கும். முன்பு கலைஞர் ஆட்சியின்போது தமிழக அரசு வழங்கும் சிறந்த நூல்களுக்கான பரிசில் திட்டத்தில் மலேசிய, சிங்கப்பூர் நூல்களும் சேர்த்துக்கொள்ளப்படுமென்று அறிவித்தார். ஆனால், அத் திட்டம் நடைமுறைக்கு வருவதற்குள் அவர் ஆட்சி கலைக்கப்பட்டுவிட்டது. இப்போது மீண்டும் அரியணை ஏறியுள்ள கலைஞர் மதிப்புமிக்க, உலகத்தரம் வாய்ந்த பரிசில் திட்டம் ஒன்றனை அறிவிப்பாரெனத் தமிழ்கூறு நல்லுலகம் எதிர்பார்க்கிறது.

## 9. தமிழகப் பாடத்திட்டங்களில் அயலகத் தமிழ்

தமிழகப் பாடத்திட்டங்களில் - குறிப்பாக மேல்நிலைப்பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழகப் பாடத்திட்டங்களில் அயலகத் தமிழ் இலக்கியங்களையும் தமிழர் வரலாற்றையும் ஒரு கூறாக - ஒரு தனித் தாளாகச் சேர்க்கவேண்டும். இதன்மூலம் புலம் பெயர்ந்த தமிழர்பற்றித் தாய் தமிழகத்தார் அறிய வாய்ப்புகள் உருவாகும்; உலகத்தமிழர் பண்பாட்டடிப்படையில் ஒருமைப்பாடு காண இஃது அடித்தளமிடும்.

---

118 தமிழ்நேசன் நாளிதழ், 20.4.1993

119 இ. ஜே. சுந்தரின் 'கறுப்புத் தமிழனே கலங்காதே' என்னும் நூலுக்களித்த வாழ்த்துரை, ப. 5

## 10. ஒலி, ஒளிவழி உயர்வான உருவாக்கங்கள்

அயலகத் தமிழர் பயன்பெறும் வண்ணம் கலை, இலக்கியப் பண்பாட்டுச் செல்வங்களை ஒலி, ஒளிப் பேழைகளிலும், கணினியில் பயன்படுத்த ஒலி, ஒளிவட்டுகளிலும் (C.D.Rom) பதிவுசெய்து வழங்கவேண்டும். குறிப்பாக இளைஞர் உள்ளங்களில் அச் செல்வங்கள் பதியும் வண்ணம் படையல்களை உருவாக்க வேண்டும்; தமிழர் அறநூலாம் திருக்குறள்நெறி உலகெங்கும் பரவ வழிவகை காணவேண்டும்.

அயலகத் தமிழர்தம் அன்பு வேண்டுகோளான இப் 'பத்து வேட்கை'களும் செயல்வடிவம் பெறுமானால் உலகெங்கும் வாழும் தமிழருடன் தமிழ் நிலைத்து நிற்கும்! காலத்திற்கேற்பப் புதுமை கொள்ளும்! தமிழினம் எழுச்சி கொள்ளும்! அந் நிலை மலர்வதாக!

**வாழ்க தமிழ்!**
**வளர்க தமிழ்க் கலைகள்!!**
**உய்க தமிழினம்!!!**

முரசு. நெடுமாறன்,
தலைமைத் தொகுப்பாசிரியர்,
மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்.

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"முயங்கிக் கொழுநர் மார்பினில் குலைந்து
மயங்கிக் கிடக்கும் மங்கையர் இயல்பென
மலையுடல் தழுவி மாலையாய்க் கிடக்கும்
இளமுகிற் கூட்டம் இலக்கியங் காட்டும்."

- அதிகைமணி

## க இயற்கை

# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

## 1. கதிரும் கடலும்

வெண்கல வட்டிலை வானத்தில் வீசியே
வேடிக்கை செய்தானாம்! - பகலவன்
வேடிக்கை செய்தானாம்!

கங்குல் அகன்றிட எங்கும் ஒளிபெறும்
காட்சி சமைத்தானாம்! - கதிரவன்
காட்சி சமைத்தானாம்!

ஆழக் கடல்ஆடி ஆசை அலைகூட்டி
ஆர்த்து முழங்கினளாம்! - செந்தமிழ்
சேர்த்து முழங்கினளாம்!

மின்னும் கடலலைப் பெண்ணாளை மோகித்து
வேட்கை உரைத்தானாம்! - வெயிலவன்
வேட்கை உரைத்தானாம்!

ஆழியைச் செங்கதிர் கூடிக் கலந்ததால்
ஆவி உருவடைந்தாள்! - வானம்
மேவிக் கருவடைந்தாள்!

அலையலைக் கூந்தல் அள்ளி முடித்தவள்
அங்கம் கறுத்தனளாம்! - மலையகத்
தெங்கும் நிறைந்தனளாம்!

சில்லென்ற மென்காற்றுப் பட்டதும் மேகப்பெண்
சிந்தை குளிர்ந்தனளாம்!- மாரி
சிந்திப் பொழிந்தனளாம்!

ஜனோபகாரி - கா. பெருமாள்
1959, மே முதல் வாரம்

## 2. கதிராட்சி வாழ்க!

கடலணங்கின் புனல்மடியில் கன்னம் சாய்த்துக்
கண்ணயர்ந்த கதிர்வேந்தன் துயில்க லைந்தான்
உடலணைந்தும் உயிர்கலந்தும் கிடந்த பின்னர்
ஓய்வுகொளும் மன்னன்முகம் பார்த்துப் பார்த்துத்
தடம்நினைந்தும் தடம்விழுந்த இடம்நி னைந்தும்
தனக்குள்ளே சிரித்திருந்த தண்ணம் பெண்ணாள்
சுடரவனைப் பிரிகின்ற காலை நேரம்
தொடங்குதெனும் துயரத்தால் உள்ளம் சோர்ந்தாள்.

காதலுக்கும் கடமைக்கும் காலச் சொத்தைக்
கணக்காகப் பகிர்ந்தளிக்கும் கதிர்ச்செங் கண்ணன்
பேதலிக்கும் காதலியின் பிரிவுத் துன்பம்
பெரிதாகும் முன்பிரியும் எண்ணத் தோடு
கோதிவிட்ட குழலோடி அலைகள் பாயக்
கொடுத்தெழுந்தான் பிரியாமல் பிரியும் முத்தம்;
மாதவத்தார் நெஞ்சத்தின் செம்மை காட்டி
வானகத்துப் பேரவைக்கு வருகை தந்தான்.

காத்திருந்த முகிலமைச்சன் எழுந்து சென்று
"கதிர்வேந்தே வருக!"வென்றான்; ஆவல் தேக்கிப்
பார்த்திருந்த மண்மகளோ புல்லி ழைத்த
பச்சைமணிக் கம்பளத்தை விரித்து வைத்தாள்;
மூத்திருந்த மலைப்பெரியோர் வாழ்த்துச் சொன்னார்;
முறுவலுடன் இளந்தென்றல் நங்கை ஓடிப்
பூத்திருந்த நறுமலர்கள் தளிர்கள் ஏந்திப்
புத்தியற்கைச் சாமரத்தால் வீச லானாள்.

புவனமெலாம் இருளென்னும் சோகம் நீங்கிப்
புரட்சிமணிக் கதிர்வேந்தன் வந்தான்; இன்னே
கவலையெலாம் தீர்ந்ததெனக் களிமி குந்து
"கதிராட்சி வாழ்க"வெனக் கவிதை பாட
அவைநுழைந்த மன்னவனோ அமர வில்லை
ஆங்காங்கே காத்திருக்கும் குடிகள் முன்னம்
அவரவர்தம் குறைகேட்டுக் கடமை யாற்ற
அன்புநகைப் பொன்சிந்தி உலவி வந்தான்.

காய்ந்திருந்த பயிர்களெல்லாம் தங்கள் வாட்டம்
'களைக'வென முறையீடு செய்யும்; முன்னர்ப்
பாய்ந்திருந்த நதியின்று வறண்டு வாடும்
பரிதாப நிலைகூறி மாற்றம் வேண்டும்;
ஓய்ந்திருந்த நெடுமரங்கள் பசிய மேனி
உலர்ந்துவரும் வேதனையை உரைத்து நோகும்;
வாய்ந்ததெலாம் மணல்தானே மேலும் என்னை
வருத்துகின்ற தணல்வரிஏன்? என்னும் பாலை.

அத்தனையும் செவிமடுத்தான் வேந்தன்; மேக
அமைச்சனுடன் கலந்தாய்வு நடத்திப் பின்னர்
முத்தனைய ஒருதிட்டம் கண்டான்; அஃதை
முரசறைந்து செயல்படுத்த ஆணை யிட்டான்;
புத்துணர்வு மின்னலிட இடியோன் தோன்றிப்
புதுத்திட்டம் அறிவித்துச் செயல்தொ டங்கச்
சத்தமிட்டுக் கொட்டியது பெரும ழைதான்;
சகமெங்கும் பொங்கியது மகிழ்ச்சி வெள்ளம்!

மேட்டுவளம் பள்ளத்தைத் தேடிச் சேர
மீன்வளமும் ஏரிகுளம் ஓடிச் சேரக்
காட்டுவளம் ஒருபகுதி பாலை சேரக்
காய்த்திருந்த கழனிவளம் நீரில் ஊற
நாட்டுவளம் புதுமைபெற ஞாயி றென்னும்
நல்லரசன் செய்தபெரும் புரட்சி யாலே
கூட்டுவளம் கொண்டுயர்ந்து குறைகள் தீர்ந்து
குலுங்கிற்றுப் பசுமைஎழில் வைய மெல்லாம்!

தவறாமல் தன்கடமை முடித்த பின்னர்த்
தணலழகு சுடர்வேந்தன் தனிமை நெஞ்சில்
எவர்பாலும் எழுகின்ற காதல் தோன்றி
“இனியென்ன மன்னாநீ வாவா" என்ன,
அவைநீங்கித் தன்காதல் சோலை நோக்கி
அடியெடுத்து வைக்கின்றான் மன்னன் ஆங்கே
சிவந்தோங்கும் தன்கன்னம் காட்டிக் காதல்
செஞ்சுடரை வரவேற்றாள் கடல்ம டந்தை!

- செ. சீனி நைனாமுஹம்மது

த. நேசன்

# 3. காலை

இருளைக் கிழித்தெங்கும் இன்ப ஒளிகொட்டும்
உருளை வடிவத்தேர் ஊர்ந்தேவான் மேட்டினில்
காரிருளை நீக்கிக் கடுவேகத் தோடெழுந்து
பேரலைகள் சூழ்ந்த பெருங்கடலை முன்னோக்கித்
துள்ளி நடந்தள்ளித் தூய்கதிரைத் தூவிடுமால்!
கொள்ளை சுகமென்று கூவியெழும் புள்ளினங்கள்!
வெள்ளை மலர்க்கூட்டம் விளைந்த நறுந்தேனை
அள்ளித் தெளித்துவிட்டு ஆடிக் களித்துநிற்கும்!
பேரிரைச்சல் போட்டுப் பிளிற்றித் திரிந்தகடல்
நீரெழுந்து மேலே நிமிர்ந்து தலைவணங்கும்!
மெல்ல உடல்தழுவி மேனி குளுகுளுக்கச்
சில்லென்று தீண்டிச் சிலிர்க்கவைக்கும் பூங்காற்று!
வண்ண மலர்மீது வட்டமிட்டுப் பாட்டிசைத்துக்
கன்னல்சுவை கொள்ளக் கருவண்டு நோட்டமிடும்!
புல்லில் இரவெல்லாம் பொழிந்து நனைத்திட்ட
தெள்ளிய தேன்பனியும் தென்றலுடன் செல்லஎழும்!
காலை புலர்ந்ததெனக் கண்ணைக் கசக்கிவிட்டு
வேலைக் கெழுந்திடுவான் வீட்டுத் திருத்தலைவன்!
எங்கள் குலப்பெண்கள் இற்கடனைத் தீர்த்தேபின்
பொங்க[1] த் திடையேசெம் பொட்டிட்டுப் பூரிப்பார்!
சின்னஞ் சிறுவர்களும் சிங்கத் தமிழ்கற்க
அன்னை வழியனுப்ப ஆட்டமுடன் ஏகிடுவார்!
காலை மலர்ந்தெதிர் காலத்தைக் காட்டுதற்கே
நாளை விடியுமொரு நாள்!

- இரா. பெருமாள்

ம. த. மா. ம.
1968

# 4. புல்

சுமைகள் எத்தனை ஏறி மிதித்தும்
சுளியா முகத்திற்(கு) எடுத்துக் காட்டு!
குமையும் பூமியின் கொதிப்பை மறைக்கக்
கடவுள் போர்த்திய பச்சைப் புடைவை!

---

*1 பொங்கம் - நெற்றி*

இமயம் தொடங்கி இதயம் வரைக்கும்
இளமைப் பசுமை இனிமை சேர்க்கும்
சமயம் பார்த்துத் தடுக்கி விட்டொரு
சாணக் கியனை உருவாக் கியபுல்!

- மைதீ. சுல்தான்

## 5. காலை இன்பம்

கரிய இருட்குலம் காலை மலர்ந்ததும்
கட்டுக் குலைந்ததடா! - நமை
விட்டுத் தொலைந்ததடா! - எழில்
விரிய வரும்கதிர் வெண்ணிறக் கைகளை
வீசி நடக்குதடா! - சுடர்
பூசிக் கடக்குதடா!

பரிதியின் ஆட்சி விரிவதை நீள்கடல்
பார்த்துச் சிரிக்குதடா! - அலை
ஆர்த்துத் தெளிக்குதடா! - புட்கள்
விரைவொடு கூடுகள் விட்டுக் கிளம்பியே
வெயிலில் குளிக்குதடா! - காலைத்
துயிலைப் பழிக்குதடா!

வண்டுகள் காவிலே சென்றதும் காதலின்
வலையை நீட்டுதடா! - மலர்
தலையை ஆட்டுதடா! - இதைக்
கண்டதும் மெல்லிய தென்றல் கொடிகளைக்
கட்டித் தழுவுதடா! - பின்
எட்டி நழுவுதடா!

தவழும் ஆற்றின் கரைமணல் நொடியில்
தன்னிறம் மாறுதடா; - அதில்
பொன்னிறம் ஏறுதடா! - மலை
கவிழ்க்கும் அருவித் திவலையில் வானவில்
காட்சி தெரியுதடா! - எழில்
மாட்சி விரியுதடா!

இருளறும் காலையைக் கண்டதும் சொல்லொணா
இன்பம் பெருகுதடா! - மனத்
துன்பம் அருகுதடா! - வான்
தெருவினில் உருளும் பந்தினைக் காணஎன்
தேகம் சிலிர்க்குதடா! - புது
வேகம் துளிர்க்குதடா!

- க. து. மு. இக்பால்

த. முரசு
1967.8.28

# 6. பனித்துளி

"காலை யெனுங்குயவன் காற்றினையும் கொண்டலையும்
சாலப் பிசைந்த தருணத்தில் - மேலிருந்து
வெண்துளியாய் வந்து விழுந்தனையோ? உன்மேனி
புண்ணாகிப் போகப் பொறுக்காமல் - மண்வளரும்
புல்லன்பன் தன்மடியில் கொண்டானோ? பூவையர்தம்
விற்புருவம் காட்டுகின்ற வெண்பொட்டே! - சிற்பி
செதுக்காத சித்திரமே! தேடாத முத்தே!
மதிக்காத மாமணியே! வானம் - உதிக்காத
தாரகையே! ஒப்பில்லாத் தண்பளிங்கே! ஓவியமே!
ஆருனக்கே இவ்வழகை அன்பளித்தார்? - கூறடியோ!
பச்சை இலைமேலே பாங்குடனே வீற்றிருக்கும்
கச்சிதத்தை யாரே கழறவல்லார்? - மெச்சினேன்
என்றாலும் உன்வாழ்வை எண்ணும்போ தென்மனமும்
புண்ணாகிக் கண்ணீர் பெருகுதே - மின்னனையாய்!
என்ன இருந்தாலும் இன்னும் சிலநாழி
உன்உயிரும் மெல்லவே ஓடிவிடும் - பொன்கதிரோன்
கீழ்த்திசையில் தோன்றக் கிளம்பிவிடும் உன்ஆவி
பாழ்பட்ட வாழ்க்கை பரிதாபம்! - ஆழ்கடலில்
சிப்பி வயிற்றுக்குள் சென்றிருந்தால் முத்தாவாய்;
அப்பன் முகிலை அணைத்திருந்தால் - இப்புவியில்
மாமழையாய்ப் பெய்து மகிழ்ந்திருப்பாய்! இப்போதோ,
தேமலரில் புல்லில் சிறையானாய்! - ஆமாம்சொல்"
என்றேநான் கேட்டேன் இளித்ததே அத்துளியும்
"நன்றுநன்றே என்கதையை நீகேட்பாய்" - என்றே
விரித்தது சொந்த மொழியில்; அதனைச்
சுருக்கிச் செவிகொளச் செய்வேன் - "பெருத்த

உலகத்தில் வந்துமே உற்பத்தி யாகும்
பலகோடி மக்கள் பயனே - இலையென்றே
சொல்லும் அளவிற்குச் சோற்றுக்குக் கேடாகக்
கல்லைப்போல் இங்கே கிடப்போரை - எள்ளளவும்
எண்ணியே பாரோம்; இருந்தாலும் செத்தாலும்
புண்ணிய முண்டோ? புகலுவாய் - வண்மையில்
அன்பில் அறிவில் துணிவில் அயலவருக்(கு)
என்பையும் ஈத்துவக்கும் ஏற்றத்தில் - தம்மையே
அர்ப்பணிக்கும் மேலோர் அவரே வழிபடுதற்
குற்றவராம் நாமவரைக் கும்பிடுவோம் - எப்பொழுதும்
சிந்திப்போம் அன்னவரின் சீர்த்தியை நம்முடைய
சந்ததிகள் எந்நாளும் சாற்றாரோ? - முந்திநீ
என்னுயிருக் காக இரங்கிய துன்மடமை
என்புகழை வேண்டேன்; இதுதானே - என்கீர்த்தி!
அற்பப் பனிநீரே யானாலும் மற்றவரால்
நற்பெயர் பெற்றிடவே நானுழைப்பேன் - பொற்கதிரும்
வந்தது! போகிறேன் வாழிநீ" என்றது
சிந்திக்க வைத்த துளி!

கவிதை. - ந. பழநிவேலு
1961

## 7. மலர்ந்தது காலை

வாரிப் பொருளை வறியருக் கீந்தும்
பாரிற் றன்பெயர் பரவுதல் விரும்பாச்
சான்றோன் தகைபோற் சார்ந்திரு வெற்பிடைத்
தோன்றா தொளிந்து சுடருரு மறைத்தே
இளங்கதி ரோனொளி இறைத்தனன்! மெலமெல
மலர்ந்தது காலை! கலைந்தது கங்குல்!
நிலையிலா அரசுள நீள்நில மாக
ஒளிமிக இன்றி உறங்கிடும் வானம்!
ஆங்கோர் மலையணி அறிஞ ருளம்போல்
ஓங்கி அடங்கி உயர்ந்து நிற்குமால்!
முயங்கிக் கொழுநர் மார்பினில் குலைந்து
மயங்கிக் கிடக்கும் மங்கையர் இயல்பென
மலையுடல் தழுவி மாலையாய்க் கிடக்கும்
இளமுகிற் கூட்டம் இலக்கியங் காட்டும்!

இலையெலா முறங்கக் கிளையெலா முறங்க
அலையிலாக் கடலாய் ஆழ்ந்திடும் மரங்கள்!
கண்கொளும் புலமெலாங் கவர்செடி கொடிகள்
பண்கொளும் சுவைஞராய்ப் பதுங்கிடும் பனியில்!
மலையணி செடிகொடி மரங்க ளிவற்றிடை
நிலைத்துள நீர்ப்புலம் நெகிழ்வினைக் காட்டும்!
வலிமிக இலாவளி வரவால் அந்நீர்
அலைந்தது கலைந்தது ஆஆ விந்தை!
காதலுக் குரியோன் கைவிரல் நுனிதன்
மீதுசற் றுராய்ந்ததும் மெல்லுடல் சிலிர்த்திடும்
பாவையைக் காட்டும் பாங்கோ! மெல்லெனத்
தூவிடும் இளம்பனித் துளிபடர் தருக்களில்
அமைந்தகூ டுகளில் அணைந்துதம் குஞ்சொடு
இமைவிழி திறவா திருந்திடும் புட்கள்!
கலைந்திடாக் கனவாய்க் கலைந்தெழுந் தலர்ந்த
இளமைக் காலையி லெங்குமோ ரடக்கம்!
அமைதி யாண்டும் யாண்டும் அமைதி!
இமியும் சலனம் இலையப் போதில்
ஆயினும் இனும்பொழு தையலர் விக்கவான்
சேயென எழுவான் செஞ்சுட ருடையோன்!
வளிமிக விரைவாய் வலம்வரும்! மலைமிசை
நிலைத்த விசும்பெலாம் நெளிந்துடன் தவழும்!
மரங்களுஞ் செடிகளும் மட்டில் கொடிகளும்
அரவினை எள்ளி அசையத் தொடங்கும்!
நெளிந்து நெகிழ்ந்த நீர்ப்புலந் தன்னில்
அலைபல புரண்டே ஆடும்! ஆர்க்கும்!
துயின்ற பறவைகள் துயிலினைத் துறக்கும்!
மயல்தரும் இசையொடு வானில் பறக்கும்!
ஆவினம் கன்றுகள் அருகினிற் றொடர
மேவிடும் புல்வெளி விரைந்திடும் ஆடுகள்!
பெடையொடு குஞ்சுகள் பின்வர, தனியொரு
நடையொடு சேவல் நடந்திடும்! இத்தகு
செயலெலாங் காலையின் அமைதியைச் சிதைக்கும்
அயர்வுற ஒலியெழும்! ஆயினும்
உயர்ந்திடும் புவனம்! உயிர்பெறும் புவியே!

- அதிகைமணி

த. நேசன்
1962.4.8

## 8. போர்ட் டிக்சன் கரையினிலே

கடலையும் அணைத்திடும் வானம் - இங்கே
கதிரவன் முகத்தினில் நாணம்!
உடலையும் காட்டிடும் கரையும் - தினம்
உலவலைக் களைப்பினில் நடனம்!

விலையிட முடியா முகிலும் - என்னை
விண்ணிலே விளையாட அழைத்தாள்!
கலைவண்ண அழகெலாம் சொல்ல - அவள்
கண்கவர் காட்சிகள் தந்தாள்!

மின்னிடும் விண்மீனோ என்னை - உளம்
விரும்பியே வெளியினில் வந்தாள்!
தென்றலும் வீசும்தென் பாங்காய் - வந்து
தேடியே முத்தமும் ஈந்தாள்!

த. நேசன்
1986.10.5

- குகிணன்

## 9. மலரே மலர்வாயோ?

புலருங் காலைப் பொழுதில் கனிந்து
புதிய மலரே பூத்தாய் - நீ
இளகும் வானப் பனியில் நனைந்து
இனிய சுவையே சேர்த்தாய்.

தழுவும் தென்றல் மணத்தில் மறைந்து
தனிமைத் துயரை நீத்தாய் - நீ
பழகும் வண்டின் மனத்தில் நிறைந்து
பணிவை உடனே கோத்தாய்.

புனையும் பாவின் பொருளாய் மலியப்
புவியில் உயிராய் உதித்தாய் - நீர்ச்
சுனையிற் காலப் பனியில் உலரும்
துணிவில் இதழாய் மலர்ந்தாய்

கதிரும் மாலைப் பொழுதில் தணியக்
கனவில் நீவரு வாயோ? - நீ
உதிரும் நாளில் உறவில் விலகி
ஒளியில் தினமகிழ் வாயோ?

- க. இளங்கோவன்

த. நேசன்
1979

# 10. குருவிபோல...

சின்னஞ்சிறு இலைகளெல்லாம் காற்றிலாடுது! - அங்குச்
சித்திரப்பூங் கிளைகளோடு சேர்ந்துஆடுது!
என்னவென்று பறந்துவந்த குருவிபார்க்குது! - உடன்
இறக்கைவிரித் தாடியின்பம் குருவிகொள்ளுது!

மற்றுமொரு பெண்குருவி வந்துசேருது! - அதை
மனமுவந்து ஆண்குருவி வருகவென்னுது!
பற்றுக்கொண்டு பெண்குருவி கண்ணசைக்குது! - உடன்
பனிக்குரலில் ஆண்குருவி பண்ணிசைக்குது!

குருவிகளின் களிப்புக்கண்டு பூமகிழுது! - இளங்
கிளைகளோடும் இலைகளோடும் பூமகிழுது!
மருவிவரும் தென்றலங்கு ஆடிவருகுது! - இதய
மகிழ்வினாலே வேகமாகப் பாடிவருகுது!

மறுவிலாத குருவிபோல வாழ்ந்துகாட்டவே - இந்த
மனிதகுலம் நினைப்பொழிந்து தாழ்ந்துபோனதேன்?
குருவிபோலத் துன்பமின்றிப் பாடிவாழவே - இந்தக்
குவலயத்து மனிதராலே முடிவதில்லையே!

1968.10.13

- கு. கிருஷ்ணன்

# 11. பூக்கள்

வான்சுமக்கும் ஒளிப்பூக்கள் வட்டநிலாத் தாரகைகள்!
தேன்சுமக்கும் புவிப்பூக்கள் தேறிடலாம் பலவகைகள்!
கான்சுமக்கும் பூவினந்தான் கண்சிமிட்டும் மேகலைகள்!
மான்விழியார் கூந்தலுக்கு மண்தந்த சீதனங்கள்!

பூமித்தாய் சிரிப்பதுதான் பூவாக மலர்ந்ததுவோ?
நாமின்பம் பெறும்வண்ணம் நறுமணங்கள் தந்தனவோ?
சாமிக்கும் மலர்வைப்போம்; சவத்துக்கும் மலர்வைப்போம்;
ஆம்பாரீர் மலருணர்த்தும் அதுவன்றோ சமஉடைமை!

- பொன். சந்திரன்

# 12. ஈர்ப்பு

கள்ளச் சிரிப்பால் ஒருநாளில்
கரிய திரையில் முகம்காட்டி
வெள்ளைச் சிரிப்பால் பிறிதொருநாள்
வெளியே ஒளியாய் உருக்காட்டிப்
பிள்ளைச் சிரிப்பும் மறந்துவிடப்
பித்தம் புரியும் அந்நிலவு
வெள்ளச் சுழிப்பில் வீழ்துரும்பாய்
விண்ணுக் கென்னை இழுத்திடுதே!

செடியில் முகையாய் இருக்கையிலும்
செவ்விதழ் காட்டிச் சிரிக்கையிலும்
நொடியில் நினைவைக் கவர்ந்துவிடும்
நுண்கலை உறுநல் மலரேபோல்
பிடியில் நளினம் தந்தென்பால்
பித்தம் புரியும் பெண்ணிலவோ
மடுவுள் வாங்கும் பாறையென
மண்ணுக் கென்னை இழுத்திடுதே!

காற்றின் பக்கம் திசைகாட்டிக்
கணமும் திரும்பும் கருவியைப்போல்
ஆற்றில் ஒருகால் மற்றொருகால்
அழுந்தும் சேற்றில் நிலையாகி
ஆற்றா தயரும் என்மனமோ
அதுவா இதுவா எனஒன்றைப்
போற்றித் தொடரத் தெரியாமல்
புலம்பித் தவித்தல் என்னென்பேன்?

த. நேசன்
1967.11.23

- காரைகிழார்

## 13. கவினார் வண்ணக் கிளிகள்

கடலில் அலையெழும் காரணம் அறியக்
கடுகி நடக்கும் நதிகள் - அதனில்
ஒளிரும் மணியை உடலில் முழுக்க
ஒட்டிக் கொண்டன மீன்கள்!

கரையை அடுத்துக் கண்படும் வரைக்கும்
கதிரால் குனிந்த பயிர்கள் - அதனைக்
கனிவாய் அணுகி உறவைப் புதுக்கும்
கவினார் வண்ணக் கிளிகள்!

- ஞானமணி

## 14. இயற்கை

தெங்கின் ஓலையைத் தாலாட்டத் - தண்
தென்றல் வந்து கவிபாட
விண்படர் கார்முகில் விரிந்தோட - மலரும்
வியன்கதிர்ப் பொன்னிற ஒளிகண்டேன்!

மின்னும் தன்நிலை மங்காமல் - உயர்
மலரும் தண்ணொளி சுடரொளிக்க
மங்கா இன்பம் காண்கின்றேன்; - நாளும்
மாந்தி மாந்திக் களிக்கின்றேன்!

வண்டலை தாமரை வீதியுள்ளே - மலர்
வரிசை கெடாமல் ஒளிர்ந்திடுதே!
மலர்ந்த கனியிதழ் முகத்தூடே - தினம்,
மணத்தோடு ஆம்பல் நிகர்த்திடுதே!

கதிரவன் ஒளியைக் கைக்கொண்டு - மலை
கவினார் வளத்தைக் காட்டிடுதே!
கண்படும் புவியோர் விழிகளிலே - நன்கு
கனிந்தேன் என்றே சாற்றிடுதே!

சேர்ந்து நிறைந்த இயற்கையினுள் - ஒரு
சித்திரப் பாவை மீட்டுகிறாள்;
பாடி மகிழ்ந்தே அழைக்கின்றாள்; - என்னைப்
பாடலில் ஒன்றாய்ப் பிணைக்கின்றாள்!

த. முரசு
1968.12.8

- வே. அரிதாசன்

## 15. காற்று

கடல்தொட்டும் கவின்மலரின் மடல்தொட்டும் நம்முடைய
உடல்தொட்டு விளையாடி உடைதொட்டு உறவாடி
இடங்கொள்ளும் இளந்தென்றல் அடலேறாய் மனிதர்களின்
மடங்கண்டு புயலாகத் திடங்கொண்டு சீறிவரும்!

மொட்டவிழும் தாமரையை முத்தமிட்ட போதையுடன்
கட்டவிழும் காரிகையர் கூந்தலிலே மோதுகிற
வெட்கமிலாக் காற்றினது வேட்கை விளையாட்டை
நட்புறவைப் பெட்புறவே நாளும் நினைப்போமே!

த. நேசன்
1974.8.11

- புலவர் மு. சேதுராமன்

# 16. அருவியே வாழ்க!

ஓய்வின்றி நாளும் குன்றின் உச்சியை விட்டுக் கீழே
பாய்கின்ற அருவி என்னும் பச்சிளங் குழந்தாய்! உன்பால்
தோய்கின்ற வேளை நெஞ்சில் தோன்றிடும் மகிழ்ச்சி கூற
வாய்தன்னில் ஏதும் வார்த்தை வரவில்லை வாழ்க நீயே!

கருமலை என்னும் அந்தக் காரிகை மேனி தன்னில்
அருவியே! நீதான் ஆடும் ஆடைபோல் காணு கின்றாய்;
வறியவர், செல்வர் யார்தான் வரினுமே தயக்கம் இன்றித்
தருகிறாய் குளிர்ச்சி! வெள்ளைத் தளிர்க்கையால் தழுவு கின்றாய்!

மெல்லிசை பாடிக் கொண்டு மேனியைத் தழுவி யோடும்
செல்வமே! தலையில் உள்ள சிக்குநாற் றம்பேன் என்னும்
தொல்லைகள் மட்டு மாநீ துடைக்கிறாய்; துளிர்க்கும் நெஞ்சின்
அல்லற்கும் மருந்தாய் அன்றோ ஆகிறாய்! வாழி! வாழி!

- க. து. மு. இக்பால்

த. முரசு
1967.10.1

# 17. முள்நாறிப் பழம்

மூக்கினைத் துளைத்திடும் வாசம்; - அந்த
முள்நாறிப் பழ[2]மதின் சுவைமிகு வேகம்!
நாக்கினில் உமிழ்நீர் வழியும்; - அந்த
நாறும் பழத்தாலே மனமது அழியும்!
பாக்கத்து வீட்டினில் சுவைத்தார்; - அந்தப்
பாவிகள் கொஞ்சமும் தருதற்கு மறுத்தார்.
ஏக்கத்தில் அழுகின்றான் பிள்ளை - இனி
என்றுதான் தீருமோ இவனது தொல்லை?

- கோவி. சிவானந்தர்

த. நேசன்
1977.11.27

---

*2 முள்நாறிப் பழம் - டூரியான் பழம். டூரி (மலாய்மொழிச்சொல்)-முள். இதனைத் தமிழில் முள்ளம்பழம் என்றும் கூறுவர்.*

# 18. மலேசியக் கடல்வளம்

கலையெழில் கொஞ்சக் கடிமணம் வீசுங்
கவினுறும் மலேசிய நாட்டின்
மலைகளும் சோலை வனங்களும் நெஞ்சை
மயக்குறச் செய்துஎந் நாளும்
அலைபுரண் டோடி ஆர்த்திடுங் கடலின்
அழகுறுங் காட்சிகள் நம்மை
மலைத்திடச் செய்தே மனத்தினைக் கவரும்
மாண்புறும் மலையக வளமே!

தாயினும் சாலப் பரிந்(து)இந் நாட்டைத்
தழுவிடும் தண்புன லாறும்
வாயிலாய் நின்று வண்மையோ டென்றும்
வல்லரண் சேர்த்திடும்; வீரக்
கோயிலா யிந்தக் குவலயம் போற்றும்
கோன்முறை வழுவிடா நாட்டை
ஆயிரங் கோடி ஆண்டுக ளாட்சி
ஆள்வது வுங்கடல் வளமே!

மின்னியல் ஆக்க வளர்ச்சியோ டுண்ணும்
மீனின வளங்களும் பல்கித்
தன்னிக ரற்றுத் துலங்கிடும் பரவைத்
துறைகளில் மொய்த்திடுங் கலமும்;
அன்னியர் யாரும் அணுகிடா வண்ணம்
அருந்திறப் படைமற வோரும்
பொன்னிகர் நாட்டைப் புரந்திடும் நீர்மை
பொலிவதும் நங்கடல் வளமே!

சங்குவெண் முத்து, பவளமு மீன்று
சகத்தினர்க் கீந்திடுங் கடலின்
பொங்குதண் ணீரில் பாயென விரித்துப்
படுத்துள எண்ணெயின் வயலும்
கங்குலைக் கீறிக் கவினுறும் முகத்தைக்
காட்டிடும் வெண்மதி போலே
மங்கலப் பதியெம் மலேசிய நாட்டின்
மாட்சியே கடல்வள மாகும்!

த. நேசன்
1985.12.12

- ஞானதாசன்

# 19. வான்மழையே வாழி!

வெயில்பட்டுப் பயிர்உலர்ந்து வேகையிலே வானே!
விளையும்நல் உணவாக நீர்பொழிவாய்; மண்ணின்
உயிரெல்லாம் நீரின்றிச் சாகையிலே வானே!
உயிரூட்டும் அமுதாகப் பொழிகின்றாய்; காயும்
வெயிலாலே நீர்நிலைகள் காய்கையிலே வானே!
உவர்நீரைக் குடிநீராய் நிரப்புகிறாய்; பூமி
துயர்பட்டுத் தாகத்தால் ஏங்குகையில் வானே!
துயர்நீக்கத் தேனாகப் பொழிகின்றாய் வாழி!

சிலசமயம் உன்னாலே படுந்துன்பம் ஐயோ!
செப்பத்தான் சொல்லில்லை; கணக்கற்ற தொல்லை!
விளைபயிரை அழிக்கின்றாய்; மலைநிலத்தைத் தேய்த்து
விளைவற்ற நிலமாக்கி விடுகின்றாய்; ஆறு
குளம்குட்டை கிணறுகடல் நீர்நிலைகள் எல்லாம்
அளவிறந்த நீர்ப்பெருக்காய் ஆக்குகிறாய்; பக்கம்
பழங்குடிசை குடிமனைகள் கால்நடைகள் சாலை
பாலங்கள் இருந்தாலும் அழிக்கின்றாய் நன்றோ?

முதுகொடிய உடல்நோகக் கடும்வெயிலில் நெற்றி
முழுநீரும் முத்தாக நிலந்தன்னில் சிந்தி
விதைவிதைத்துப் பயிர்நட்டு மழையின்றி நாளும்
மனமேங்கி இறைவணங்கி உழவரெலாம் வாட
உதிராமல் ஒருதுளியும் வான்மழையே! நீயும்
உதவாமல் கன்னெஞ்சாய் இருப்பதுவும் ஏனோ?
உதவிசிறி தாயினுமே காலத்தாற் செய்யின்
உளமதிலே வைத்திருப்பர் என்பதைஏன் மறந்தாய்?

மீன்நண்டு பாம்புமுதல் நீந்துவன எல்லாம்
விண்நீரால் நிறைவுற்று நீந்திவிளை யாடும்;
வான்மழைதான் பெய்கின்ற வேளையினைப் பார்த்து
வளர்தவளை மழைக்குருவி அத்தனையும் நல்ல
பண்ணிசைத்துப் பாடிடுமே! மகிழ்ந்திடுமே நாளும்!
கண்ணிலொரு வெண்ணெயொடு சுண்ணாம்பும் கொண்டு
மண்ணில்வாழ் மாந்தரையே வாட்டுவதும் ஏனோ?
எண்ணத்தில் சமநீதி என்றும்நீ பெறுக!

\- எஸ். கண்ணன்

த. நேசன்
1967.7.9

# 20. குழந்தாய்!

ஏஎ குழந்தாய்! ஏஎ குழந்தாய்!
இருளைத் தொலைத்திட வானும் உலகும்
எழுந்த பேரருள் இளநிலா நானும்
எழிலின் தேக்கமே ஏஎ குழந்தாய்!
நல்லருள் மலரே பெற்ற மலர்நீ!
வெள்ளரிப் பழத்தில் விளைந்த உடலம்!
சிட்டின் சிறகு இமை!கண் மரத்தை
விட்ட நாவலின் இன்கனி! கைகள்
வாழைத் தண்டாய் வளர்ந்தன! முத்தப்
பேழைபோல் கிடக்கிறாய்! பேசிச் சிரிக்கிறாய்!
மலரினைத் தொட்டேன்; பனிதனைத் தொட்டேன்;
இலையுன் மென்மை தண்மை யவற் றுக்கேன்?
'சொள்'ளினைத் தோள்மேல் சொட்டும் மழையெனக்
கிள்ளாய் விடுகிறாய்; வீழ்ந்து புரள்கிறாய்!
மணலில் புரட்டிய மணிக்கை விரலால்
உணவைக் கிளறி, ஒருசோ றெடுத்து,
'ஆ'வெனச் சொல்கிறாய், 'ஆ'வாய் பிளந்தால்,
'பூ'வென உன்வாய் போட்டுக் களிக்கிறாய்!
அன்னை கேட்டால் அவள்பிள்ளை யாகிறாய்!
உனைநான் கேட்டால் 'உன்பிள்ளை' என்கிறாய்!
வேட்டெஃகம்[3] நெஞ்சுமுன் நிமிரினும் இமையேன்!
சூட்டெஃகம் எதிரும் மார்பினில் நீயே
உதைக்கிறாய்; வாரிய முடியைக் கலைக்கிறாய்;
புதியதோர் உடையினைப் போட்டும் கசக்கிறாய்;
விளக்கினைப் பிடிக்கிறாய்; வெடுக்கென உனைநான்
விலக்கினால் அழுகை வீரிட நிற்கிறாய்;
மனிதர்க்கு நன்மைகள் தீமைகள் தெரியும்
மனிதரோ நன்மையை விலக்குவார் காண்பாய்!
தேனினும் இனிமையாய், தென்றலின் குளுமையாய்,
ஊனிலும் உணர்விலும் உணர்ச்சியைத் தருகிறாய்!
பால்மணம் மாறாப் பசுங்கொடி நீயே!
நூல்வளங் காட்டும் நுண்பொருள் நீயே!
காலங்கள் மாறினும் கோலங்கள் மாறினும்
ஞாலப் புதுமை நலம்விளைப் பாயே!

- முல்லைவாணன்

த. நேசன்
1967.7.30

---

*3 வேட்டெஃகம் - துப்பாக்கி*

# 21. பிள்ளைச் சிரிப்பு

மல்லிகை இதழில், வான
மதியொளி வனப்பில், வீட்டில்
துல்லிய மாக மின்னுஞ்
சுடர்விளக் கொளியில் இன்பம்
அள்ளியே வழங்குங் காலை
ஆதவன் முகத்தில் எல்லாம்
பிள்ளையின் சிரிப்பு நின்று
பெருங்கவி பாடக் கண்டேன்!

கடலதன் திரைய விழ்ந்து
காட்டுவெண் நுரையில், நின்று
படர்பகை அற்றே இன்பம்
பாயும்நன் மனையில், உற்ற
இடர்களைந் துதவி நாடா
இன்மனத் துயர்வில், தென்றல்
நடக்குமப் புனலிற் பிள்ளை
நற்சிரிப் பொளிரக் கண்டேன்!

உத்தம மனைவி வாயில்,
ஒளிரும்பொன் மணியில், தூய
முத்தென எழிலாய் மண்ணில்
முளைக்கும்நெற் குருத்தில், போற்றும்
சித்தனின் செயலில், நாதம்
தேர்ந்தயாழ் இசையில், மெள்ளத்
தத்தியே நடந்தோ ரின்பம்
தரும்பிள்ளைச் சிரிப்பைக் கண்டேன்!

மாதுளை வெடிப்பில், மின்னும்
மரகத மணியில், ஓங்கு
தீதிலாத் தென்னம் பாளைச்
சிறுவெடிப் பிடையில், வந்து
கோதிலா மனைவி போலக்
கொஞ்சுபைங் கிளியின் வாயில்
பேதிலா அன்பு மிஞ்சும்
பிள்ளையின் சிரிப்பைக் கண்டேன்!

த. நேசன்
1976.5.28

- இரா. பாண்டியன்

# 22. கடலின் காதல்!

நீலவானைக் காதலனாய்ப் பூமிதனிலே - கரை
நீண்டகடல் காதலிக்கப் பார்த்த துண்டுநான்
மேலவானில் தோணுகின்ற மீனினைப்போலத் - திரை
மீதில்எழும் நீர்க்குமிழி மினுமி னுத்ததே
பாலினைப்போல் பொங்கிஎழும் நீர்நுரைகளே - வான்
படர்ந்தவெள்ளை மேகமென்னப் பளப ளக்கவே
ஆலமுடைப் பாம்பினைப்போல் நீண்டுநெளிந்து - கடல்
அலைக்கரத்தை வீசுகின்ற அழகினைக் கொண்டே!

கரைமினுத்த கரியமணல் கூந்தலதிலே - இளம்
காற்றில்வரும் நறுமணம்சேர் வாடைகள்பூசி,
சொரிந்திடுவெண் முத்தொளிசேர் மணிவடம்பூண்டு - பொங்கிச்
சுழித்திடுநல் உந்திவிம்மச் சொல்வ தறியாத்
திரைக்குமிழிக் கண்ணிமைத்து அலைக்கரங்களில் - சங்கு
சேர்த்தொளிசெய் வளைமுழக்கம் 'கலின்கலின்'என
விரிந்தபெரும் உடலசைத்துக் கடலணங்கவள் - தான்
விண்ணவன்மேல் விரகமுற்ற வேளையி லங்கே;

பறவைஇனம் மங்களநல் வாழ்த்துப்பாடவே - மின்னிப்
பம்மிடுமே கங்கள்கூடி முரசொ லிக்கவே
உறவுசெப்ப வானவன்பால் பரிதிசெல்லவே - செக்கர்
உவந்துகட லணங்கைமண அழகு செய்யவே
நறவுமிழும் சோலைகளில் தென்றலோடியே - பல
நறுமலர்கொ ணர்ந்துமண மகட்குத் தூவவே
பிறைவிளக்க மேந்தஅந்தி வான்கடலினை - மனப்
பிரியம்நிறை வேறும்படி மணமு டிக்குதே!

த. முரசு
1955.4.8

- பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது

# 23. கடற்கரையிலே...!

வளைந்த வானின் நீலமதை - மிக
வற்றக் காய்ச்சிய நிறமுடனே
உளைந்து பாடும் கடலைப்பார்! - தினம்
ஊறும் உரிமை எண்ணமதில்
விளைந்த மக்கள் போராட - வலி
வீறுட நெழுங்கால் தடைசெய்யும்
நெளிந்த பண்பினர் போலவேதான் - கரை
நெடுகிலும் நின்று தடுப்பதுகாண்!

முட்டும் பசியைத் தீர்த்திடவே - தம்
மேனியை மூடும் துணியின்றிக்
கட்டு மரத்தில் வலையேற்றி - மின்
கடிதில் செல்லும் வலைஞர்காண்!
'துட்டர் வந்தால் மறைந்துவிடு' - எனச்
சொல்லும் பெரியோர் உரைபேணிக்
கிட்டே அணுகும் மகார்கண்டு - குழி
மறையும் நண்டுக் குஞ்சுகள்காண்!

நேற்று வாங்கிய பட்டுடைபோல் - நம்
நெஞ்சை யள்ளும் நாரியரும்,
காற்று வாங்கும் பாவனையாய் - எழில்
கண்ணைக் கவரும் காளையரும்,
தூற்றும் கவலை யில்லாமல் - திரி
சின்னஞ் சிறுவர் மனத்துயரை
ஆற்றுவா ரில்லா ஏழைகளும் - கரை
அருகில் இருப்பது கண்டிடுவாய்!

முத்து வழங்கும்; பசிபோக்கும் - பெரு
மீனும் வழங்கும்; முதிர்ந்துவிழும்
செத்தை கள்போல் வாழ்கின்ற - தகு
சீலம் நீத்த மாந்தர்க்கும்
புத்தி வழங்கும்; அயராதே - பொதுப்
பணியை விரைந்து செய்!எதுவும்
சித்தந் தனிலே வைத்திடுவாய்! - நெடும்
சீர்த்திக் கடலை வாழ்த்திடுவாய்!

- கவி மதிதாசன்

த. மலர்
1968.6.16

# 24. நடந்தேனே!

காலைக் கதிரவன் வாராத
கருக்கல் வேளை அப்போது
பாலைக் குடித்தும் குடியாமல்
படிக்கும் ஆவல் பொங்கிடவே
நூலைத் திறந்து நானிருந்தும்
நுணுகிப் படிக்க முடியாமல்
சாலை வழியே கண்பார்க்கச்
சாந்தி கொள்ள நடந்தேனே!

குளிரால் தவிக்கும் குழந்தையினைக்
குழைந்து அன்னை அணைக்கையிலே
தளிர்க்கை அழகு குழவிக்குத்
தடித்த போர்வை போலாகும்!
ஒளியில் காலைக் கன்னிக்கும்
உறுதுணை நின்றது பனித்திரையே!
களிப்புடைக் காலைக் காட்சிகண்டு
களித்த வண்ணம் நான்நடந்தேன்!

த. நேசன்
1966.11.23

- கு. கிருஷ்ணன்

# 25. கண் மலர்வீர்!

பின்னிரவும் வைகறையும் கைகலக்கும் நேரம்ஒரு
சின்ன மணிவிளக்குச் சித்திரப்பூப் பூத்ததுபோல்
மின்னும் விடிவெள்ளி விட்டொளிரல் காணீரோ?
சன்னல் திரையில் சலசலக்கும் பூந்தென்றல்
இன்னே எழுப்பும் இயல்பறிய மாட்டீரோ?
கன்னல் கலிமா[4]வின் கற்பூரச் செஞ்சுடரை
மின்னுவிழிப் பாவை விளக்காகக் கொண்டொளிரும்
கன்னியரே காளையரே கண்மலர்வீர்! கண்மலர்வீர்!

---

*4 கலிமா - இசுலாமிய மூலமொழி*

இரவின் இருட்கற்றை மீதெல்லாம் மெல்லப்
பரவிவரும் பாலொளியைப் பார்த்தறிவீர் காக்கை
குருவியெலாம் பாடிச் சிறகடித்துச் செல்லும்
வரிசையிலே வாழ்வின் உயிர்ப்பறிவீர் இன்னும்
அரிமாவின் கண்கள் அலராவோ என்று
வரிவண்டு கூவி மயங்குவதைக் கண்டும்
மருவுதுயில் நீங்கும் மனமிலையோ நாயன்
கருணைசெயும் நேரமிதே கண்மலர்வீர்! கண்மலர்வீர்!

கூடிக் களித்த குலமாதர் கையணைப்பில்
மூடிக் கிடந்த முழுக்கூந்தல் மேல்முடித்து
நாடிக் களித்த நயனங்கள் மின்னலிட
ஆடி வரும்மயில்கள் அன்னங்கள் போலெழுந்து
பாடும் சிலம்புப் பரல்முரல வைகறையின்
ஓடையிலே நீந்தி உளங்குளிரும் நேரமிதே
பாடிவரும் சொர்க்கப் பறவைகளே இப்பொழுதின்
மேடையிலே கூடுதற்குக் கண்மலர்வீர்! கண்மலர்வீர்!

- ப. மு. அன்வர்

நம்குரல்
1985, ஏப்பிரல்

## 26. மார்கழிப் பாவை!

கொடிமின்னல் கோலமிட்ட தொடுவான வாசலிலே
விடிவெள்ளி துயில்நீங்கித் துள்ளியே ஓடிவர,
முடிதுறந்த இருளரசன் ஓடியே ஒளிந்துவிட,
அடிவானக் கீழ்த்திசையில் ஆதவனின் வரவுபோலும்!

உலகென்ற மலர்த்தோட்டம் உவகைகொண்டு காத்திருக்க
உலவிடவா என்னகத்தே எனத்தோழி தானழைக்கக்
குலவியே மகிழ்வளிக்கக் குளிர்பருவ மங்கைவந்தாள்!
சிலகாலம் சேர்ந்திருந்தே சேடியவள் களிக்கவந்தாள்!

கண்மறைக்கும் பனிமகளும் பூஞ்சாரல் தனைச்சொரிய
மண்மகளும் புன்னகைத்து மார்கழியைத் தொட்டணைத்தாள்;
எண்கொள்ளாத் தாவரமும் இளங்காலைப் போதினிலே
பெண்குலத்துப் பொன்விளக்காய்ப் பொலிவுகொண்டு துலங்கிடுதே!

மார்கழியில் குளிர்நடுக்கும் அருவிகொட்டும் தெள்ளியநீர்!
ஊர்உலகம் அடங்கிவிடும் அரவமின்றி உறைவிடத்துள்!
கார்வானும் கானகமும் காட்சிதரும் இளந்தளிரும்
பார்உலகத் தாலாட்டில் கருநிழலும் பசுந்தளிரோ?

கங்கையென வேபொங்கிக் காட்டாறும் பாய்ந்துவர
மங்கைநில மகளுமதில் மங்களமாய் நீராடி
நங்கைமார் கழித்தோழி மென்கரத்தில் சாய்ந்துகொண்டாள்!
தங்கையரோ பூவினங்கள் மொட்டவிழ்ந்து நாணினவே!

ஓலைக் குடிசையிலும் உளம்நிறைந்த பெண்ணரசி
மாலையிட் டவன்தனது கரவளைக்குள் சங்கமமாய்க்
காலைக் கருக்கலிலே கண்திறந்த புதுமலராய்ச்
சோலைநீர் மணிமுத்தம் கொண்டுவந்தாள் மார்கழிப்பெண்!

மல்லிகையும் மாங்கனியும் பூஞ்சிட்டுப் பட்டிறகும்
அல்லியிவள் அள்ளிவரும் வசந்தத்திற் கீடாமோ?
சொல்லினிலே அடங்காத சுகந்தரும் சிறப்புடனே
மெல்லியலாள் நடையளக்கும் காலமாகும் முப்பதுநாள்!

த. நேசன்
1976.6.6

- மு. தங்கசாமி

## 27. உடுக்கள்

வைகறைப் போதில் பாடும் வண்ணஞ்சேர் புட்கள்; கோலத்
தையலர் பின்னே சுற்றும் தறுதலைக் கூட்டம்; முற்றக்
கொய்திட்ட பலாவைச் சுற்றிக் குழுமிடும் ஈக்கள், தாமும்
மொய்த்திடும் வண்ணம் வானில் மொய்த்திடும் உடுக்கள் காணீர்!

விழித்ததில் இருந்து செந்நீர் வியர்வையைச் சிந்தி மண்ணில்
உழைத்திடும் ஏழை மக்கள் உண்ணவும் வழியில் லாமல்
வழித்தெறி கண்ணீர் மீறி வழிந்திடுங் காட்சி கண்டு
சுழித்திடும் உள்ளம் போன்று சுழன்றிடும் உடுக்கள் காணீர்!

ஒட்டிய வயிற்றைக் கொண்ட உயிருள்ள எலும்பைச் சுற்றிக்
கட்டிய கந்தல் தன்னிற் கண்டிடும் பொத்தல் போன்றும்
திட்டுத்திட் டாக வானந் தெறித்ததைப் போன்றும் மீன்கள்
எட்டிடாத் தொலைவில் நின்று சிரித்திடும் காட்சி காணீர்!

மண்ணினைப் பொன்னாய் மாற்றும் மாண்புறும் எண்ணத் தோடு
கண்துயில் கொண்டி டாமல் காசினிக் குழைக்குந் தோழன்
பொன்னிற மேனி தன்னில் பூத்திடும் வியர்வை போல
விண்ணிடைத் தோன்றும் மீன்கள் விளங்கிடும் காட்சி காணீர்!

அம்மியைக் கொத்தி விட்டாற் போலுமே அம்மை பெற்ற
அம்முகம் தனில்வ டுக்கள் அமைந்தன போலும்! கெண்டை
தம்செதிள் தூவி னாற்போல் தாவியே உடுக்கள் கூட்டம்
எம்பியே குதிக்கும் யாரைப் பார்த்திந்தக் கண்சி மிட்டல்!

த. நேசன் - அமலதாசன்
1966.2.6

# 28. நிலா

வெள்ளை மலரோ? பாற்குடமோ?
வெண்ணெய்த் திரளோ? பூசுணையோ?
தெள்ளிப் புடைத்த குறுமணலிற்
சிறுவர் பொங்கிய வெண்சோறோ?
புள்ளி ஒளிமீன் வாழ்கடலில்
போகும் தங்கத் தனிப்படகோ?
வெள்ளி நிலாவே! விண்ணொளியே!
விளங்கும் எழிலுக் குவமையெதோ?

குருதிப் புனலை வியர்வையெனக்
கொட்டி உழைக்கும் தொழிலாளர்
கருதும் இரவில் வருவதனால்
கண்ணீர்ப் பனியைத் தருவதனால்
உருகும் கருணை மனமறிவேன்
உச்சி விளக்கே நீவாழ்க!
பரிதிச் சுடரில் ஒளிவாங்கிப்
பாருக் களிக்கும் கொடைவாழ்க!

மழை - பரணன்
1985

# 29. தென்றல் ஒரு கவிஞன்

வையகத்தின் சுழற்சியிலே பிறப்பெ டுத்து
வழிந்தோடும் அருவியிலே குளிர்மை பெற்றுப்
பொய்கைமலர்க் குவியலிலே மணம்பெற் றோங்கிப்
பொங்கியெழும் கடல்மீது தவழ்ந்து வந்து
தெய்வம்போல் எம்முயிரில் கலந்து பாரில்
திருவொளிரும் புதுவீணை நாதம் மீட்டி
மெய்யுருகப் பாட்டிசைக்கும் தென்றற் காற்றை
மேலான கவிஞனெனச் சாற்று வேனே!

நிலம்பார்ப்பாள் முகம்பார்த்தால்; பார்க்கா விட்டால்
நிலைகுத்திப் பார்த்திடுவாள் காதற் பெண்ணாள்
நலஞ்செய்யும் கொழுநன்தோள் பற்றும் போது
நாணத்தால் விலகிப்போய் ஊடல் கொள்வாள்
புலனைந்தும் இன்புறவே மிதந்து வந்து
பூங்கவிதை பாடுகின்ற தென்றற் காற்றே!
வலம்வந்தே இடைதொட்டு நீய ணைத்தால்
வருந்தாமல் மெல்லியலார் வாழ்த்தல் ஏனோ?

மண்குடிசை வாசலிலே சிந்து பாடும்
மாளிகையில் பழம்புலவன் தொழிலைச் செய்யும்
பண்ணிசைக்கும் குயிலாளின் உடலம் தொட்டுப்
பாப்புனைந்தே அரங்கேற்றி இன்ப மூட்டும்
மண்குளிரப் பொழியும்மழைத் துளியி னோடு
வளையொலிக்கும் மங்கையெனச் சிரிக்கும் தென்றல்
விண்ணகத்து மேகமலைத் திரளை மோதி
வெகுண்டெழுந்து புதுப்பரணி பாடும் ஓர்கால்!

ஆடாத ஆட்டமெலாம் ஆடும் மாந்தர்
அருங்காற்றே நீயகன்றால் ஆவ தென்னே?
ஓடாத கப்பலைப்போல் ஒதுங்கா தாரின்
உடலத்தைச் சடலமென உரைக்க நேரும்!
நாடாளும் மன்னர்க்கும் நீயே சாட்சி!
நமனாடும் கூத்திற்கும் நீயே காட்சி!
ஊடாடும் மென்காற்றே! உன்னைப் போல
உயிர்க்கவிதை படைக்கின்ற கவிஞர் உண்டோ?

த. முரசு
1984.8.26

- அமலதாசன்

# 30. இயற்கையெனும் தெய்வம்

காற்றசைவில் மழைவிசும்பில் கனல்மீதும் புனல்மீதும்
நாற்றிசையும் தோற்றிடுவாள் நல்லியற்கைத் தெய்வமடா!

பொழில்மீதும் பூமீதும் பொங்கிவரும் நிலவினிலும்
எழிலாக நிற்பவளே இயற்கையெனும் தெய்வமடா!

பகலாகி இரவாகிப் பறவைகளின் ஒலியாகிப்
புகலரிய நாடகங்கள் புதுக்குவதே தெய்வமடா!

குழந்தைகளின் மழலையிலே குலமகளிர் கற்பினிலே
அழகொளிரும் தெய்வமது ஆடுவதும் காண்கிலையோ?

பார்க்கின்ற இடத்திலெலாம் படர்ந்திருக்கும் தெய்வநிலை
சேர்க்கின்ற கரங்களிலே சிறைப்படுத்தக் கூடுவதோ?

- ஐ. உலகநாதன்

சந்தனக்.
1966

# 31. காடு

கல்தோன்றி மண்தோன்றிக் கடின மாகிக்
காசினியை உருச்செய்த பின்னர்ப் பச்சைப்
புல்தோன்றிச் செடிதோன்றிக் கொடியும் தோன்றிப்
பூதமென வளர்ச்சியுள மரமும் தோன்றி
எல்லாமொன் றாய்ச்சேர்ந்து வீசுங் காற்று
எரிகதிரோன் குளிர்நிலவாள் நுழையா வண்ணம்
வல்லடர்த்தி இருள்சேர்ந்த தென்பாம் காடே!
மனிதகுல முதல்தலையோர் வாழ்ந்த வீடே!

காட்டிலுள்ள நன்மரங்கள் வீடாய் மாறும்
கனிகளெலாம் நமக்குணவாய்ச் சுவைகொ டுக்கும்!
பாட்டிசைக்க நமக்கெல்லாம் கற்றுத் தந்த
பறவைவருந் தும்தம்மின் கூட்டில் வாழ்ந்து

ஆட்டத்தை மயில்பாம்பு மானின் கூட்டம்
    அவற்றிடம்நாம் கற்றோமே; எண்ணிப் பார்த்தால்
காட்டிலுள்ள ஒவ்வொன்றும் பயனை நல்க
    நாட்டிலுள்ள நாம்யார்க்கும் பயனற் றோமே!

நண்பகலில் காடுபெறும் இருளே இன்று
    நந்தமிழின் இருளாம்;நள் ளிரவுப் போதில்
சொன்னஅந்தக் காட்டினிலே சேரி ருட்டுத்
    துயருறுநம் தமிழ்க்குலத்து வாழ்வி ருட்டே!
நண்பகலில் நள்ளிரவில் அமைதி யின்றி
    நடுக்காட்டில் பலசத்தம் கேட்டல் போல
ஒன்றுபடும் குணமில்லாத் தமிழ மக்கள்
    உறையுமிடத் தில்நாளும் சத்தம் கேட்கும்.

பெண்ணவளின் மேனியிலே சேர்ந்த ஆடை
    பிடிப்பாக உடல்தழுவி இருத்தல் போன்று,
வன்மரத்தோ டிணைந்தபடி கொடிகள் ஏறும்;
    வளர்ந்தபெரு மரங்களின்வேர் நீண்டே பக்கம்
நின்றிருக்கும் மரவேரில் நன்றாய்ப் பின்னும்;
    நினைத்தபடி தரையிற்படர் கொடிக ளுள்ளே
சென்றுவிளை யாடும்சில உயிர்கள்! தாயைச்
    சேர்ந்திருக்கும் பிள்ளைவிளை யாடல் போன்று!

மானமுள்ள வாழ்க்கைக்குக் கவரி மானே
    வாய்த்திடுநல் உவமையென்பார்! அஞ்சா மைக்குக்
கானகத்துப் புலிசிங்க வாழ்வைச் சொல்வார்!
    காதலுக்கும் கற்பிற்கும் அன்றில் பண்பே
வானகத்தார் பண்பினுக்கும் மேலாம் என்பார்;
    மானிடர்க்கு வாழ்வுநெறி கற்றுத் தந்த
கானகமே! என்னகமே! குளிர்ந்த நெஞ்சால்
    கவின்தமிழால் வாழ்த்துகிறேன் வாழ்க! வாழ்க!

- பாதாசன்

பாதாச.
1979

# 32. இயற்பாடம்

தென்பாங்கு இசையெழுப்பிச் சிந்துகவி பாடும்;
தென்றல்மெல்ல வந்துவந்து திரைநுரையில் ஆடும்;
பெண்பாங்கின் நளினமொடு பின்னிஅலை போடும்;
பிழைபொறுக்கா உள்ளமெனக் கரைதழுவி மீளும்!

அணியணியாய்த் தவழ்ந்துவரும் அழகுதனி அழகு!
அரைகுறையென் றுலகார்ப்பை அறிவுறுத்தும் பழகு!
மணிமணியாய்த் தன்னகத்தே மாவளங்கள் பெற்றும்
மாண்புணர்ந்த பேருளம்போல் மறைமொழியிற் சுட்டும்!

பசியஎழில் படர்பொழிலாய்ப் பார்ப்பவர்கண் ஈர்க்கும்!
பனிமலையில் முகில்குழுமிப் பாலமுதம் வார்க்கும்!
ஒசியவரும் பூங்காற்றோ உயிர்அயர்வைப் போக்கும்!
ஒப்புவமை யாதெனவே ஓங்கொலிநீர் கேட்கும்!

இடிஇடிக்கும் மேளமென மின்னல்நடம் புரியும்!
இடைஇடையே கடல்எழுந்தே ஆர்ப்பரிப்பாய் விரியும்!
நெடுமரங்கள் தலையசைத்து நெகிழ்இசையில் இழியும்!
நினைவிழந்த முகில்கிளர்ந்து நிலங்குளிரப் பொழியும்!

இயற்கையன்னை கொஞ்சிமகிழ்ந் திடுமுயிர்ப்புக் கூடம்!
இனிமைநறும் இனிமையென இவனுணர்த்தும் பாடம்!
கயலெழுதி வைத்ததுபோல் கடல்மெழுகி ஆடும்!
கண்டுவந்த உளம்மீண்டும் கண்டுவந்து சூழும்!

- எல்லோன்

முத்தாரம்
1980

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"உள்ள மென்னும் கதவதனை
உறவாய் இன்றே திறவுங்கள்;
சொல்ல முடியாப் பேராளன்
தூயோன் உள்ளே வருகின்றான்!"

- வே. ஏசய்யா




இறை

# 33. அருள்மிகு விநாயகர் தோத்திரம்

சீரிலங்கத் திருவளர்க்கும் மலேசி யத்தின்
சிறப்பெல்லாம் ஒருங்கிணைந்து திரண்டு நிற்கும்
பேரிலங்கப் பீடுறையும் தெய்வக் கீர்த்தி
பிறங்கிவளர் பினாங்குநகர் தனிலோர் பக்கல்
ஏரிலங்க இயலிசைநா டகமும் ஓங்க
இன்னருள்சேர் தஞ்சம்தொக் கோங்[1] என் றோதும்
காரிலங்கு நற்பதியிற் கோயில் கொண்ட
கணபதியே! சத்திவிநா யகனே! போற்றி!

அருள்விளங்குந் தண்ணிமலை[2] ஒருபால் நின்றே
ஆனந்த நறுந்தென்றல் அள்ளி வீசும்!
பொருள்விளங்கும் பெரியதிரைக் கடலோர் பக்கம்
பொங்கிநித மார்ப்பரித்தே இன்பம் நல்கும்;
தெருள்நிறைந்த அறப்பெரியோர் தொண்டர் எல்லாம்
தினம்போற்றிப் பல்பூசை நடத்தி யன்பாய்
இருளகலப் பணிந்திசைக்கக் கோயில் கொண்ட
இனியசத்தி விநாயகவுன் கழலே போற்றி!

சிற்சபையி லாடுசிவன் பெரிய மைந்தா!
சிவசத்தி கருணைத்தாய்க் கினிய செல்வா!
விற்பனர்கள் புகழ்ந்தேத்தும் ஞானக் குன்றே!
விஞ்சைமறை முதல்வ!உனை வேண்டு கின்றோம்;
சற்குணமும் நல்லறிவும் தருமப் பாங்கும்
தாட்டிகமாய்ச் சார்ந்தடியார் சிறந்து வாழப்
பொற்பொருளே! பிரணவத்தின் முதல்வா! நல்ல
பூசனைசெய் தோமருளிக் காப்பாய் நன்றே!

புண்ணியங்கள் பெருகிடவும், வளங்க ளோங்கிப்
பூமியெல்லாம் செழிப்புறவும், அறவோர் போற்றக்
கண்ணியங்கள் சிறந்திடவும், பத்தி மார்க்கம்
கவின்புவியோர் நெஞ்சுறவும், தான தர்மம்
பண்ணிடுவோர் நிறைந்திடவும், பசியும் நோயும்
பறந்தோடிப் போய்விடவும், அமைதி யன்பு
நன்னயத்தோ டொளிர்ந்திடவும், இன்பக் காட்சி
நடைபெறவும் அருள்கவிநா யகனே போற்றி!

- க. முனியாண்டி

விநாயக.
1976

---

1 தஞ்சம் தொக்கோங் - ஓர் ஊர்

2 தண்ணிமலை - பினாங்கு நகரில் முருகன் கோயில் அமைந்துள்ள இடம்

# 34. ஈசனார் வாழுமிடம்

உள்ளம் உருகாமல் ஊனும் கரையாமல்
வெள்ளமெனக் கண்ணீர் விரியாமல் - கள்ளமாய்
உன்அன்பன் நானென் றுலகில் நடிக்கின்றேன்
என்அன்பும் நன்றாவ தென்று?

ஊரார் புகழ்ந்திடவே உன்னடியான் போல்நானும்
நீராடி மேனியெங்கும் நீறாடிச் - சீராடிச்
சன்னிதியில் நின்றுன் தனிப்புகழைச் சாற்றுகிறேன்
என்னிதயம் பொங்குவது என்று?

கோடானு கோடி குறையாக் கவலைகளும்
காடாய் வளர்ந்திருக்கும் கற்பனையும் - ஊடாடி
ஓயா தலைகின்ற உள்ளமது உன்பதத்தில்
தோய வழியொன்று சொல்.

மாயா மலத்தால் வழிதவறி நிற்கின்றேன்;
நாயாய்க்கன் மத்தால் நலிகின்றேன்; - சேயாக்கி
ஆணவத்தைப் போக்கி அகத்தில் குடியேறி
நானுய்யும் நன்னெறியை நல்கு.

உன்னை உணராமல் உற்றவழி பேணாமல்
என்னை அறியாமல் என்றென்றும் - அன்னையெனக்
காலில் விழுந்தேயான் கண்ணீர் பெருக்காமல்
போலியாய் வாழுநிலை போக்கு.

உற்றார் மதிப்புக்கும் ஊரார் புகழுக்கும்
கற்றார் பெருமைக்கும் கையேந்திக் - கற்றவழி
உன்பெருமை கிள்ளையென ஓங்கி உரைப்பதன்றி
உன்னுருவைக் கொண்டிலனே உள்.

நன்றாய்ச் செயல்கள் நடந்தால் உடனேநான்
என்செயல்தான் என்றே இறுமாப்பேன் - அன்றென்றால்
எல்லாம் விதிப்பயன்தான் என்றே நழுவுகிறேன்
வல்லான் அருளை மறந்து.

கள்ளப் புலனாகக் கண்மூடி ஆணவங்கள்
உள்ளங் குடிகொண்ட ஒட்டடைகள் - மெள்ளவே
தூசெல்லாம் போக்கிவிட்ட தூய்மை மனமதுவே
ஈசனார் வாழும் இடம்.

- புலவர் மு. சேதுராமன்

த. நேசன்
1979.8.14

## 35. பள்ளி எழுந்தருளாய்!

ககனிடைக் குருகுகள் கரைந்துனை அழைக்கும்
கருமுகில் நினைந்துனைக் கண்மழை பொழியும்
பகலவன் ஒளியில்இப் பான்முகம் வாடும்
பைந்துகில் முகிலிடைப் பருமுகம் புதைக்கும்
அகநெடும் விசும்பிடை அம்மதி யுடனே
அருஞ்சுடர் உடுக்களும் அருள்பெற ஏங்கும்
புகருடைக் கடலொலி பூவுல குய்யப்
புங்கவ பள்ளி யெழுந்தரு ளாயே!

படைத்துடன் நீக்கியும் பல்லுயிர் புரந்தும்
பார்தனை இயக்கிடும் பரம்பொருள் போற்றி!
இடைத்தொழில் புரிந்தவன் இனியதங் கையை
இன்மணம் கொண்டநல் இறையவா போற்றி!
துடைத்தொழி துயர்களை துறைநகர்ச் சிவனே!
தொடுகடல் உலகினர் தொழுதனர் போற்றிக்
கடைத்தலை நின்றிரு கண்பனித் தோமே!
காத்திட வேபள்ளி யெழுந்தரு ளாயே!

- திருமதி பார்வதி பூபாலன்

## 36. அருள்தருவாய் அம்மா!

மகமாயி எனவேண்டி வந்துற்ற பேர்க்கும்
மனமாகி நினைவாகி வரம்வேண்டு வார்க்கும்
அகமாயி ரங்கோடி இன்பங்கள் சேர்க்கும்;
அளிகூரும் விழிஈரம் அருள்மேவி ஈர்க்கும்;
இகமாயி னும்உம்பர் தமைவர வேற்கும்;
எழிலாக இம்மண்ணில் வளமாக ஆர்க்கும்;
சுகமாயி ரங்காலம் தொடர்ந்தாடப் பார்க்கும்
சுடர்மாரி யம்மாநீ தாயன்றோ யார்க்கும்!

ஒருபாதி நீயாகி ஒளியாகி நின்றாய்!
உருமாறிச் சிவனாண்டி தனையாண்டு வென்றாய்!
இருபாதி நாளாகிச் சுடர்வீசு கின்றாய்!
இயல்பாகி மழையாகி நதியாகிச் சென்றாய்!
செருபாதி சூழ்ஞாலம் நலம்காண வந்தாய்!
சிறுபாதி பிழைகண்டும் மன்னிப்பே தந்தாய்!
வருபாதி துன்பத்தும் துணைசெய்வேன் என்றாய்!
வளர்மாரி யம்மாநீ என்றென்றும் என்தாய்!

தும்பிக்கைப் பிள்ளையே தொழுதேத்தும் அம்மா!
தோகைமயில் வேல்முருகன் பணிந்தேத்தும் அம்மா!
நம்பிக்கை ஏந்துகிறோம் நலம்செய்வாய் அம்மா!
நம்நாடு பொன்னாக வளம்செய்வாய் அம்மா!
அம்பாகி இடர்வெல்லும் ஓங்காரி அம்மா!
அகிலாண்ட மெங்கெங்கு மாங்காளி யம்மா!
கும்பாபி டேகமிது கொள்மாரி யம்மா!
குமுகாயம் எங்குமருள் தருவாய்நீ அம்மா!

\- காரைகிழார்

ம. தே. கு. ம.
1973

## 37. சிவலிங்க விளக்கம்

பவத்திறன் அனைத்தும் படரும் புடவியுள்
சிவத்திறன் பேணிச் செம்மையாய் நின்ற
தவத்திற் பெரிய சால்புமிக் குடையார்
அவத்தை நீங்கிய அருந்தவச் சிறப்பால்
அறத்தின் அருநிலை யாகிய சிவத்தைப்
பரத்தா காயப் பரஞ்சுடர் லிங்கமாய்
மறத்திறன் வாய்ந்த மாபரா சக்தியை
உரத்த உலகமாய் அதுஆ உடையாய்க்
கண்டுமா சோதிக் குண்டலிச் சுடரை
நின்றமா உலகெனும் ஆவுடை அதன்மேல்
என்றும் சுடர்ந்திடும் சிவசக்தி யாக்கி
மண்டிய தத்துவ மறைமுறைப் படியே
தம்முள் தேர்ந்த தவநிலை முடிவை
மெய்ம்மை திகழ வடித்துமுன் நிறுத்திச்
செம்மைச் சிவத்தின் சூட்சும வடிவை
நன்மை ஓங்கிட நலமுடன் போற்றினர்

அதுவே சிவலிங்க உற்பவம் ஆகும்;
அதுவே சுயம்புச் சோதிய தாகும்;
அதுவே அருவமாம்; துரியா தீதமாம்;
அதுவே குமரி இமயத்து இடையுளார்
ஏத்தி மகிழ்வோ(டு) என்றும் பரவிப்
போற்றிப் புகழும் பொற்சிவ லிங்கமாம்!
நாட்டிய வேதச் சுருதிகள் உரைப்படி
போற்றிச் சிவத்தின் பெரும்பே(று) அடைவமே!

ஸ்ரீமுனி.
1974

- சுவாமி இராமதாசர்

# 38. சிங்கைக் கடம்பன்

கரைபொரு வார்கடல் சூழ்தரு வார்சிங்கைக் காவலவ!
வரைபொரு வார்முலை மங்கையர் தம்மை மணந்திடினுந்
திரைபொரு கங்கைச் சிவமறை யாவுந் தெரிந்திடினு
முரைபொரு சண்முக வுன்னடிக் கீழ்வந் துறங்குவனே!

காய்ந்திடு வேலினைக் கைப்பிடித் தாயுன் கதைகளெல்லா
மாய்ந்திடி னீயுனை யாரென் றறிகிலை யன்றியென்னை
வாய்ந்திடக் கண்டிலை மாயோன் மருகவிவ் வாசகத்தை
யேய்ந்திடக் காட்டிவைப் பாய்சிங்கை மேவிய வுத்தமனே!

சிதறிய வாணவ மாதவத் தார்செயுஞ் செய்கையெல்லாம்
பதறிய காற்றை நெருப்பாற் சுடுதற் பகர்ககன
முதறிய மாமழை தன்னாற் கழுவுதற் கொப்பிடலாங்
கதறிய சேவற் கொடிபயில் சிங்கைக் கடம்பவனே!

முறைவளர் தோப்பு முகில்வளர் குன்று முதிருநல்ல
துறைவளர் தெப்பமுந் தூண்வளர் மாடமுந் தூயசதுர்
மறைவளர் வேலன் வளஞ்சிங்கை வாவியின் வாய்க்குமுத
மிறைவளர் வல்லி யிதையான் மலர்த்து மிளமதியே!

மதிக்கின்ற போதக் குரங்கினை விட்டு மறந்திடநீ
விதிக்கின்ற போதவ் விறற்குரங் கேமன மேவிவந்து
குதிக்கின்ற தாவிக் குள்சிங்கை காக்குங் குகமுருகா!
உதிக்கின்ற ஞான வடிவே லெறிந்ததை யோட்டுதியே!

சிங்கை.
1887

-சி. ந. சதாசிவ பண்டிதர்

# 39. ஆறுமுக வேலை யறி

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஆ 1 | று 2 | மு 9 | க 10 | வே 25 | லை 26 | ய 49 | றி 50 |
| று 4 | பெ 3 | தை 8 | த் 12 | று 24 | ச் 27 | கை 48 | ய 51 |
| மு 5 | க 6 | த் 7 | தா 12 | பெ 23 | சி 28 | ள் 47 | லை 52 |
| க 16 | ண் 15 | கா 14 | ன் 13 | று 22 | ங் 29 | கொ 46 | வே 53 |
| வே 17 | ன் 18 | மு 19 | ன் 20 | சே 21 | கை 30 | ல் 45 | க 54 |
| லை 36 | ற 35 | வீ 34 | ல் 33 | னி 32 | த 31 | கொ 44 | மு 55 |
| ய 37 | க் 38 | கூ 39 | று 40 | சூ 41 | ர் 42 | க் 43 | று 56 |
| றி 64 | ய 63 | லை 62 | வே 61 | க 60 | மு 59 | று 58 | ஆ 57 |

**சதுரங்கபந்தம்**

ஆறு பெறுமுகத் தைமுகத்தான் காண்கவேன்முன்
சேறு பெறுவேலைச் சிங்கைதனில் - வீறலையக்
கூறுசூர்க் கொல்கொள் கையறியலை வேகமுறு
ஆறுமுக வேலை யறி.

படிக்கும் முறை : எண்வரிசையைத் தொடர்ந்து செல்க.

சித்திர.
1887

- சி. ந. சதாசிவ பண்டிதர்

# 40. சிங்கார வேலவனூர் தேர்




இரதபந்தம்

கார்வந்தே யீயாரூர்க் காவலவ னூங்கருளாற்
பார்வந்தே சிற்பநூற் பாவலர்ப்பேர்ச் - சீர்பெறவே
சிங்கா புரிவளரச் செய்தார்காண் பேரோங்கு
சிங்கார வேலவனூர் தேர்.

கீழ் இடமிருந்து வலமாகத் தொடர்ந்து மேல்நோக்கிச் சென்று உச்சியிலிருந்து நேர் செங்குத்தாகக் கீழே வரும்படி படிக்க.

சித்திர.
1887

- சி. ந. சதாசிவ பண்டிதர்

# 41. வேத நாயக மாதவா!




வேலாயுதபந்தம்

வேத நாயக மாதவா
வாத தீத போதவா
வாத போத தீதவா
வாத மாகய நாதவே.

1. கீழிருந்து மேல்நோக்கி நடுக்காம்புவரை வாசிக்க முதல் வரியும்,
2. விட்ட இடத்திலிருந்து மீண்டும் தொடங்கி வலமாகச் சென்று இடமாகக் கீழிறங்க இரண்டாம் வரியும்,
3. மீண்டும் விடுபட்ட இடத்திலிருந்து இடமாகச் சென்று வலமாகக் கீழிறங்க மூன்றாம் வரியும்,
4. விட்ட இடத்திலிருந்து மீண்டும் கீழே வருமாறு படிக்க நான்காம் வரியும் அமைதல் காண்க.

இச் சித்திரகவி மாலைமாற்றுமாகும்.
மாலைமாற்று - பாடல் இறுதி தொடங்கிப் படித்தாலும் பாடல் அமைவது.

சித்திர.
1887

- சி. ந. சதாசிவ பண்டிதர்

# 42. ஆறுமுகன் அந்தாதி

உளமேறிப் பண்பாடும் ஓமென்னுங் கந்தா!
குலம்காங்குங் கூர்வேல் குமரா! - கலையாவும்
ஒன்றாகிக் காட்சிதருங் கார்த்திகே யா!என்றன்
பண்ணேறி ஆட்சிசெய்ய வா.

வாக்கில் சுழன்றாடி வண்ணம் உமிழ்கின்ற
காக்குங் கலியுகக் கந்தனே! - பூக்குங்
கவியேறிப் புன்னகை காட்டும் முருகா!
குவிந்த மனத்தில் குலவு.

குலவும் நிலவுமகள் கூட்டும் அழகில்
குழைந்து மகிழ்ந்துவரும் பாட்டாய் - உளமதில்
நின்றுலவும் கந்தனே! நீடுபுகழ் கொண்டபல
பண்ணியற்ற வேண்டுமப் பா.

பாவேறி என்னுள்ளே பாலமுதாய்க் கோலமிட்டு
நாவேறி ஆடிவரும் நாயகனே! - பூவேறி
ஆடிவரும் பொல்லாத வண்டினத்து ரீங்காரப்
பாடலெனப் பாடவேண்டும் பா.

பாங்கான சொல்லாகிப் பண்ணாகி என்நெஞ்சைத்
தூங்காத சிந்தனையில் தோயவிட்டு - நீங்காத
இன்னமுதாய் நீளுகின்ற என்னவனே! கந்தா!என்
பண்ணமுதில் வாழுகின்றாய் பார்!

பார்கமழும் பேரமுதாய்ப் பாங்குரைக்கும் பேரழகே!
நேர்விளங்கும் செம்பொருளே! செவ்வேளே! - ஆழ்ந்த
அறிவிற்(கு) அறிவாகி ஆட்கொள்ளும் உன்றன்
உறவிற்குத் தாவும் உளம்.

த. ஓசை
1987.11.2

- அமுத இளம்பரிதி

# 43. பரந்தாமன் அம்மானை!

மூவடியால் உலகளந்து மூவுலகும் தொழுதேத்த
மாவலியின் கதைமுடித்த மாலவனார் அம்மானை?
மாவலியின் கதைமுடித்த மாலவனே ஆய்பாடிக்
கோவலரின் திருச்செம்மல் கோபாலன் அம்மானை!

கடவரைகள் ஓரெட்டும் கரதலத்தால் பொருதடக்கித்
தடவரையைப் பெயர்த்தவனைத் தாழ்த்தினனார் அம்மானை?
தடவரையைப் பெயர்த்தவனைத் தாழ்த்தினனே ஏறடக்கி
மடவரலைக் கரம்பிடித்த மாயவனே அம்மானை!

காண்டவத்தைத் தீக்களித்துக் ககனமன்னன் மனம்வருத்திப்
பாண்டவர்க்குத் தூதுசென்ற பற்றிலனார் அம்மானை?
பாண்டவர்க்குத் தூதுசென்ற பற்றிலனே போர்க்களத்தில்
ஆண்டவனாய்க் கீதைசொன்ன அரங்கன்றான் அம்மானை!

கராவின்வாய் அகப்பட்டுக் கருணைபுரி எனவழைத்த
கராசலத்தின் உயிர்மீட்ட கருமுகிலார் அம்மானை?
கராசலத்தின் உயிர்மீட்ட கருமுகிலே பாற்கடலில்
அராவணையில் துயில்கொள்ளும் ஆழியனே அம்மானை!

பசுபதியின் வினைதீர்க்கப் பரிவுடனே ஐயமிட்டான்
சிசுபாலன் முடியரிந்த செம்மல்யார் அம்மானை?
சிசுபாலன் முடியரிந்த செம்மல்தான் பார்வணங்கும்
வசுதேவர் திருச்செல்வன் வாசுதேவன் அம்மானை!

அரியுருவில் இரணியனின் ஆவியினைப் பறித்துநின்ற
அரியெனவே பெயர்கொண்ட அரியவனார் அம்மானை?
அரியெனவே பெயர்கொண்ட அரியவனே பண்டொருநாள்
பரியான கேசியுயிர் பறித்தகண்ணன் அம்மானை!

குரைகழற்றாள் ஆயர்தம் கொடுந்துயரைப் போக்கிடவே
வரைபெயர்த்துக் குடைபிடித்த வானவனார் அம்மானை?
வரைபெயர்த்துக் குடைபிடித்த வானவனே உலகுதொழும்
திரையெறியும் கடற்றுயிலும் திருமாலே அம்மானை!

மண்ணையுண்ட திருவாயில் மாநிலங்கள் காட்டிநின்ற
வெண்ணெயுண்டு மகிழ்ந்துநின்ற விதுலன்யார் அம்மானை?
வெண்ணெயுண்டு மகிழ்ந்துநின்ற விதுலன்றான் மண்ணுலகும்
விண்ணுலகும் தொழுதேத்தும் வேங்கடத்தான் அம்மானை!

கூர்த்தவிழித் திருமகளின் கொழுநனாய் மகிழ்ந்துநின்று
பார்த்தனுக்குத் தேருர்ந்த பரம்பொருளார் அம்மானை?
பார்த்தனுக்குத் தேருர்ந்த பரம்பொருளே மனக்கினிய
கார்த்திகேயன் அம்மானாம் கார்வண்ணன் அம்மானை!

த. முரசு - திருமதி பார்வதி பூபாலன்
1975.10.26

# 44. தண்ணீர் மலையான்

எண்ணி லடங்காக் காவடிகள்
எழிலாய் ஆட நான்பார்த்தேன்;
பன்னீர் கொண்டே அபிடேகம்
பாங்காய் நடக்க நான்பார்த்தேன்
பொன்னைப் பூட்டி அலங்காரம்
பொற்பாய்த் தொடங்க நான்பார்த்தேன்;
தண்ணீர் மலையான் தனியழகைத்
தைப்பூ சத்தில் நான்பார்த்தேன்!

- கோவதன்

# 45. படியளக்கும் வேல்முருகா!

பத்துமலை மீதிருந்து படியளக்கும் வேல்முருகா!
எத்திசையும் நீயிருந்து எனைக்காக்கும் வேலவனே!

காவடிகள் பலகோடி காண்பவனே உன்றனுக்குப்
பாவடிகள் சாற்றியுனைப் பரம்பொருளாய் வேண்டுகிறேன்.

நாளெல்லாம் உனைப்போற்றி நான்கவிதை பாடுதற்கு
நாளெல்லாம் வேண்டுகிறேன் நலமருள்வாய் வேல்முருகா!

த. மலர் - மு. க. மா. முத்தமிழ்ச்செல்வன்
1973.1.19

# 46. ஏ!

இருள்பிறங்கும் அடவிநடு வேகிணற்றில் பிறந்துவளர்ந்
திருந்தஒரு சிறிய தவளை
இமிழ்கடலைத் தன்கிணற்றின் இயல்பினதாய் அளவினதாய்
எண்ணியுரை செய்த செயலாய்
மருள்பிறங்கும் புல்லியவோர் மதியீனன் எலாமறிந்த
மாமேதை என்ற நினைவில்
மன்றங்கள் ஏறிநின்று வாய்கொழுத்து நாத்திகமே
மட்டின்றிப் பேசி யலைந்தேன்!
அருள்பிறங்கும் மறையேத்தும் ஆண்டவனை இலையென்றே
ஆர்ப்பரித்த பேதை நானே!
அண்டபகி ரண்டமெலாம் ஆட்டுவிக்கும் கூத்தரசே!
ஆலமர்ந்த பரம சிவனே!

நாள்விளங்க எழுந்துவரும் ஞாயிற்றைப் பார்த்திந்த
நாய்குரைத்த குரைப்பும் குறைவோ?
நலம்விளங்க ஒளிபொழியும் நன்னிலவைப் பார்த்திந்த
நரியிட்ட ஊளை குறைவோ?
கோள்விளங்க ஓங்கிநிற்கும் கொடுமுடியைப் பார்த்திந்தக்
கூகையெள்ளி நகைத்த திலையோ?
கோவிளங்க முகில்வளர்க்கும் குரைகடலைப் பார்த்திந்தக்
கூன்புழுவும் சிரித்த திலையோ?
தோள்விளங்க மார்தட்டித் தொல்சமயம் இறைகொள்கை
'தூ'வென்ற பேதை நானே!
துடிவிளங்க அண்டமெலாம் தொடர்ந்தாட்டும் கூத்தரசே!
துகளறுக்கும் பரம சிவனே!

முற்றாத சிற்றறிவு முகிழ்க்காத பிள்ளைமனம்
முதிராத சிறிய வயதில்,
முற்றாகப் பொய்நூல்கள் முப்போதும் கற்றறிந்து
முழுமுடன் ஆன பொழுதில்,
வற்றாத உளைக்குழியாய் மனம்மாற ஆணவமும்
வந்தேறி நின்ற தருணம்,
வரைவின்றி நாத்தீக வாதங்கள் செய்துநல்லோர்
மனம்கீண்டு மகிழ்ந்த தருணம்,
பற்றாத வழிபற்றிப் பரம்பொருளைச் சிலர்மறக்கப்
பாதைசொல் பேதை நானே!
பந்தாக அண்டமெலாம் பார்த்தாட்டும் கூத்தரசே!
பாடகற்றும் பரம சிவனே!

நனிகற்ற அறிஞர்கள் நயந்துரைக்கும் மொழிகேட்டு
நான்நகைத்த நாள்கள் மிகுதி
நாய்கெட்ட கேட்டிற்கு நற்கவிஞன் எழுத்தாளன்
நாவல்லான் என்ற தகுதி!
நுனிகற்ற சிற்றறிவால் நூலெல்லாம் கற்றதுபோல்
நூறுமுறை வேடம் புனைந்தேன்
நோய்பெற்ற உள்ளத்தால் நுவலரிய சைவத்தை
நோயென்று சொல்லி யலைந்தேன்
இனிதுற்ற தெய்வத்தை இல்லைஇல்லை இல்லையென
இழித்துரைத்த பேதை நானே!
இவ்வுலகம் அவ்வுலகம் எலாம்நடத்தும் கூத்தரசே!
இடர்நீக்கும் பரம சிவனே!

சுடர்
1978

- அதிகைமணி

# 47. பராசத்தி

அனைத்துயிரின் அகக்கமலம் அமர்ந்தி ருப்பாள்;
அத்துவைதத் தத்துவத்தின் நிலையே யாவாள்;
வினைகளுக்கே வித்தாகி விளங்கி நிற்பாள்;
வித்தையாம் வடிவாக மலர்ந்தி ருப்பாள்;
நினைவகலாத் தியானத்தின் மூர்த்தி யாவாள்;
நிலைமூன்று குணங்களின் நேர்பு மாவாள்;
இனையளெனும் பராசத்தி அன்னை தன்னை
இன்பமெலாம் தரவேண்டி இறைஞ்சு வோமே!

- ரெ. இராமசாமி

# 48. துணை

ஏகன் குயவன் எடுத்தார் இடைச்சி எழில்விரும்பிப்
பாகம் கொடுத்தார் பனித்தலை கண்டம் பணியணிவார்
போகம் மகிழ்ந்து புறப்பட்டாள் முந்நீர்ப் புவியரங்கில்
வேகம் கெடுத்தெனை யாண்டாள் அவளென் விழுத்துணையே.

1985

- மறைமுடி வல்லத்தரசு

# 49. ஒரு சிந்தனை

எனக்கென்றே ஓரிதயம் தந்தான்; - ஆனால்
எண்ணங்கள் ஆயிரமாய் வைத்தான்;
கணக்கிற்கு ஓருயிரைத் தந்தான்; - ஆனால்
கணக்கில்லா ஆசைகளை வைத்தான்;
இனத்திற்குப் பலவகைகள் தந்தான்; - அதில்
ஏழைகளைக் கோடியென வைத்தான்;
அனைத்திற்கும் முடிவொன்றைத் தந்தான்; - அந்தப்
பிணத்திற்குப் பேதமேதும் இல்லை!

பதவிக்குப் போராடும் உள்ளம் - உடன்
பாசத்தின் பிடிப்பினிலும் துள்ளும்
எதுவந்து தனைஎதிர்த்த போதும் - நின்று
எதிர்வாதம் செய்ததனை வெல்லும்
சதிசெய்து எதிரிகளை வீழ்த்தும் - அவர்
சஞ்சலத்தை இன்பமென வாழ்த்தும்;
விதிவந்து கதைமுடிக்கும் போது, - கொண்ட
விருந்தென்ன உடன்வந்தா சேரும்?

சிறுதெய்வ பூசையினைச் செய்து, - கையில்
சிலபொருளைக் கொண்டுவந்து காட்டும்
திறமைக்கு அடிவணங்கும் மக்கள் - அன்னார்
செய்கின்ற தந்திரத்தை எண்ணார்;
இறைஎங்கும் ஆளுகின்ற நேர்மை - எண்ணின்
எங்குமவன் உறைவதுவே உண்மை;
நரைதோன்றி முதுமைவரும் சட்டம் - அந்த
நஞ்சர்க்கும் வரும்அதுவும் திட்டம்!

மண்டைக்குள் வளர்ந்துள்ள மூளை - அது
வாழ்வுக்கு வழிவகுத்தல் வேண்டும்
சண்டைக்குப் புதுக்கருவி செய்தால் - இந்தச்
சகத்துக்கு அழிவன்றி என்ன?
உண்பதுவும் உறங்குவதும் எல்லாம் - உள்ள
அமைதிக்குத் தான்என்னும் உண்மை
அன்பர்க்குத் தான்இங்குத் தோன்றும் - அந்த
அன்பென்னும் அறம்நிலைக்க வேண்டும்!

- ரெ. சண்முகம்

த. நேசன்
1976.9.5

# 50. உன்னை அணைப்பாள் உவந்து!

வந்த பிணியும் வரும்பிணிக ளத்தனையும்
வந்த வழியே விரைந்தோட வேண்டுமெனில்
சத்தியைப் போற்றிச் சரணடைக! பேரின்ப
முத்தி பெறலாம் முனை.

விண்ணை யறிந்தாய்! விரிகடலை யாய்ந்தறிந்தாய்
தன்னை யறியத் தவறிவிட்டாய்! பேரிறையாம்
அன்னைபரா சத்தியின்மேல் அன்பு மலர்தூவி
எந்நாளும் போற்ற லினிது!

தூய உளத்துடனே தொல்லுலகில் வாழ்ந்துவந்தால்
தீய பகையெல்லாம் தீர்த்துவைப்பாள் காலமெல்லாம்
கண்ணீ ருகுத்துக் கதறித் தொழுதுவரின்
மன்னுயிராய் நிற்பாள் மகிழ்ந்து!

- குருவானந்தர்

# 51. ஆளும் அருள்

ஆடுகின்ற பூங்கொடியில் ஆங்கெழுந்து நிற்கின்ற
அழகொளிரும் பச்சைநிறமே!
தேடுகின்ற மெய்யறிவும் மெய்யுணர்வும் ஆகியெனைத்
தினமாளு கின்றவருளே!
வாடுகின்ற போதெனது வாட்டமதை நீக்கியருள்
வழங்குகின்ற ஞானஒளியே!

ஓடுகின்ற உள்மனத்தை ஒடுக்கிநிலை நாட்டுகின்ற
ஓங்கார மானவடிவே!
நாடுகின்ற பேருக்கு நல்லருளைத் தந்தாங்கு
நடுவாகி நிற்குமரசே!
பாடுகின்ற பைந்தமிழப் பாவலர்க்குக் கற்பனையும்
பருப்பொருளும் ஆனஇறையே!

- பொன்முடி

# 52. வெற்றிக்கால்

முற்றுமெய் ஞான முருகன் நடமாடும்
வெற்றிக்கா லக்காலே வீரக்கால் - மற்றைக்கால்
வாய்க்கால் மரக்கால் வடிகால் அரையரைக்கால்
ஈக்கால் இடருங்கா லே.

1985 - மறைமுடி வல்லத்தரசு

# 53. இறையுணர்வு

இறையுணர்வு என்னும்ஆழ் பொருளை நன்றாய்
எவருமே அறிந்துகொள்ளாக் கார ணத்தால்
குறைமலிந்த உலகாக இதனைக் கண்டோர்
கொடுமிருட்டில் தடுமாறும் குழந்தை யானார்!

மேடையினில் அவன்பெருமை முழங்கிப் பின்னர்
மேன்மையெலாம் தமக்கென்று வகுத்துக் கொண்டார்;
பாடையினில் போகுமுடல் பார்த்தும் கூடப்
பாருலகச் செல்வமெலாம் வேண்டும் என்றார்!

இறைவனுக்கு வேண்டுதலைச் செய்து விட்டால்
எனக்குமட்டும் கொடுப்பதெல்லாம் கொடுப்பான் என்னும்
கறைபடிந்த கண்மூடிப் பழக்க வாழ்வால்
கரையற்ற களங்கத்தை இறைக்குச் சேர்த்தார்!

இறைவனது படைப்பின்கீழ் உயிர்கள் எல்லாம்
இணைஒன்றே எனும்பொதுமை இறையு ணர்வாம்
மறைவகுத்த வாழ்வேற்று நெறியு ணர்ந்தால்
மாநிலத்து நல்வாழ்வே இறையு ணர்வாம்!

அரங். - ரெ. சண்முகம்
1977

## 54. இறைவணக்கம்

மணியின் ஒளியாய் மாலைத் தென்றலாய்
முதலாய் முடிவாய் முக்கா லமுமாய்க்
கனியின் சுவையாய்க் காதலின் இன்பமாய்க்
கல்லின் தேரைக் கருவிற் குயிராய்த்
தனிமை நினைவில் தாகம் வைத்தே
தக்கோர் நெஞ்சில் தண்மை சேர்ப்பான்,
பணிவும் வணக்கமும் பண்பும் கொண்டோர்
பற்றை அகற்றிய பற்றிலா வல்லோன்!

போற்றும் மனத்தின் புகமு மாகிப்
புல்லாய்ப் பூண்டாய் அனைத்து மாகிக்
காற்றின் அசைவால் இயங்கச் செய்து
காத்தும் அழித்தும் கால மெல்லாம்
தூற்றும் வீணர் துணையும் காண்பர்;
தூய்மைத் திருவாய்த் துலங்கும் வல்லோய்!
கூற்றம் பணியும் இறையே! என்கை
கூப்பி வணக்கம் செய்வேன் ஏற்பாய்!

- சோலை முருகன்

## 55. புத்தனை அறிக!

சத்தியம் நேர்மை சமத்துவம் சகோதரம்
சகலமும் தானெனச் சாற்றிடும் மனிதனே!
புத்தனைப் பார்த்ததன் பின்னுமா இன்னும்நீ
பொய்களை வாயிலே புறப்படச் செய்கிறாய்?

ஒற்றுமை என்பதாய் உலகெலாம் பேசியும்
உதட்டொரு சொல்சொலத் தோன்றிலா மனிதனே!
பற்றவிந் தான்பதம் பார்த்ததன் பின்னுமா
தொற்றுநோய்ச் சாதியைத் தோள்களில் சுமக்கிறாய்?

மாதிலும் சூதிலும் மதுவிலும் பொதுவிலும்
தோதெனக் கண்டுதான் தோய்ந்திடும் மனிதனே!
போதிமா தவனும் புகன்றதன் பின்னுமா
புத்தியை அத்திசை போய்விழச் செய்கிறாய்?

மரணமும் கரணமும் இரணமாம் பிணிகளும்
வருவதில் போவதில் வாழ்கிறாய் மனிதனே!
அறனெனும் புத்தனை அறிந்ததன் பின்னுமா
ஆசையின் ஓசையை அகத்திலே நிறைக்கிறாய்?

இருளெனும் போர்வையில் இருக்குமிவ் வுலகிலே
எத்தனை எத்தனை ஆடுவாய் மனிதனே!
அருளினைக் கௌதமன் அளித்ததன் பின்னுமா
அகல்தரும் சுடரினை அணைத்துநீ ஆடுவாய்?

அணிமணி சேர்ப்பதில் ஆயிரம் கோப்பதில்
கிண்கிணி நாதமாய்க் கிளர்ந்திடும் மனிதனே!
மணிமுடி துறந்தவன் வாய்ச்சொலின் பின்னுமா
வறியவர் வளம்பெற வழங்கிட மறுக்கிறாய்?

வன்புசெய் நெஞ்சினால் வஞ்சமும் பஞ்சமும்
முன்புசெய் திருந்ததை முடித்திலா மனிதனே!
அன்புசெய் என்றவன் ஆணையின் பின்னுமா
அவற்றையும் இவற்றையும் அறுக்கநீ துணிகிறாய்?

பாதியில் படித்ததைப் பாதையில் மறப்பதால்
மீதியில் மாயையில் மூழ்கிடும் மனிதனே!
போதியின் ஜோதியைப் புரிந்ததன் பின்னுமா
போதையின் புகையிலே புழுங்கிநீ அழுகிறாய்?

மண்ணுளே இருப்பதும் விண்ணுளே இருப்பதும்
உன்னுளே இருப்பதை உணர்ந்திலா மனிதனே!
பொன்னிலே உரைபெறும் புத்தனை அறிகநீ
உன்னிலே ஒளிவிடும் உன்னத ஞானமே!

- காரைகிழார்

கூட்டுற.
1979, மே

# 56. தொடற்கரிய தலைவா!

அருணிறைந்த பெரியோனே அஹ்மத[3]ரின் நெஞ்சில்
அறிவறியாப் பெரியமறை சொரியுமிறை யோனே!
பொருணினைந்து புன்னகைக்கும் பொய்யர்களின் நடுவே
பொய்யாமை போற்றுமனம் கையளித்த கனிவே!
மருணிறைந்த நாயேனைக் கடைக்கணித்து மன்றில்
மதியுடையார் நடுவிருத்தி மதிப்பருளும் தலைவா!
இருணெருங்கி மூடாமல் ஈடேற்றச் சுடரின்
இன்னொளியின் முன்னிறுத்திப் பொன்னருளைச் சொரிவாய்!

வாராயென் நெஞ்சினிக்கும் செஞ்சொலமு துடையாய்
வந்தெனது நாட்டமெலாம் கேட்டருளல் வேண்டும்
போராடும் நெஞ்சமுனைப் பொருந்திக்கொளல் வேண்டும்
புதையலென உன்னருளில் பதியமுறல் வேண்டும்
நீரோடை மூச்சினிலுன் பேரோடல் வேண்டும்
நினைவெல்லாம் நீயாகிச் சினைமுதிரல் வேண்டும்
சோராத கைகால்கள் சுடர்நுதலும் உன்னைத்
தொழுதெழுந்து நின்னருளை அழுதுபெறல் வேண்டும்!

பேச்சடங்க மாட்டாத வீச்சுடைய புகழே!
பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீ[4]மே என்னை
ஏச்சுடையார் நாவடியில் வீழாமல் காத்துன்
இயல்பான அருளாளர் அருகிருத்தல் வேண்டும்
காய்ச்சியபால் கற்கண்டும் கலந்ததெனச் சொற்கள்
கவிதையிலும் நாவிலுமெற் கியல்பாதல் வேண்டும்
மூச்சடங்கும் வேளையிலுன் மூப்படையாக் கலிமா
மொழிகின்ற நாவெனக்கு நலியாமல் வேண்டும்!

தூணின்றி வான்முகடு வேய்ந்ததிற லோனே
தூக்கமொடு களைப்பொருகால் தொடற்கரிய தலைவா!
நாணின்றிப் பொய்த்துழலும் நாகரிகம் இல்லார்
நட்பெனவும் சொல்லாத பெட்பருளல் வேண்டும்.
வீணின்றி நாள்களெல்லாம் வியப்படையு மாறு
வினையாற்றும் மெய்வலிமை கைகாலில் வேண்டும்
ஆணென்று பேர்படைத்த ஆற்றலெல்லாம் வானில்
அடர்ந்தேறும் காய்கதிர்போல் சுடர்ந்தொளிரல் வேண்டும்!

1982 - ப. மு. அன்வர்

---

*3 அஹ்மது - நபிகள் நாயகம்*

*4 பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம் - அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்*

# 57. இனிக்கும் புகழ்

உரைக்கின்ற போதெல்லாம் இனிக்கும்; காதில்
ஒலிக்குங்கால் விழியிரண்டும் பனிக்கும்; எங்கும்
சிரிக்கின்ற அழகிலெலாம் சிரிக்கும்; ஆவி
சிலிர்க்கின்ற பேரின்பம் விளைக்கும்; ஈமான்
இருக்கின்ற மூமீனின் நெற்றிக் கோட்டில்
எழில்செய்யும்; எண்ணுகின்ற நெஞ்சில் ஞானம்
சுரக்கும்நூர் முஹம்மதெனும் சுடரின் மீது
சோபனம்செய் ரஹ்மானே! சோப னம்செய்!

அழகென்ற சொல்முதலா? அண்ணல் எங்கள்
ஆருயிரின் பேரழகு முதலா? என்று
பழகாத பார்க்காத பாவி கேட்டால்
பாவமுண்டோ ரஹ்மானே! மறையில் நீதான்
அழகான உவமையெனச் சொன்னாய்! அந்த
அழகுக்கே உவமையெனில் தவறும் உண்டோ?
அழகெல்லாம் ஒன்றாக்கி அருளாய்த் தந்தாய்;
அதைக்காணும் அரும்பேறும் தருவாய் அல்லாஹ்!

ஒட்டகத்தின் மீதிருக்கக் கண்டால் என்றன்
உச்சியிலே கால்வைத்து இறங்கச் சொல்வேன்;
கட்டிவைத்துப் பசிமறைத்த கல்லைக் கண்டால்
கரைத்துண்டு ஸஹர்[5] செய்து நோன்பு நோற்பேன்;
பெட்டகத்துப் பெரும்பொருளும் பகட்டும் அண்ணல்
பெருமானைக் காண்பதற்குத் தடைகள் என்றால்
ஒட்டுடையும் பழங்கூழும் போதும், ஆவி
ஒளிவடிவைக் காணும்வரை இருந்தாற் போதும்!

'ஆயிரம்பல் லாயிரம்வெண் ணிலவொன் றானால்
அதிலும்எம் மான்வதனம் அழகாம்' என்று
வாயினித்து நபித்தோழர் ஒருவர் சொன்ன
வாசகத்தைப் பார்த்தபின்னும் பாவி எங்கே
போயமைதி தேடிடுவேன்? முஹம்ம தென்னும்
புகழ்ஒளியைக் காணாதெவ் விதமி ருப்பேன்?
நேயமிகு நாயகமே! உயிரே! என்றன்
நினைவிழந்து போகுமுன்னே கருணை வேண்டும்!

பேரழகைக். - செ. சீனி நைனாமுஹம்மது
1978.3.12

5 ஸஹர் - நோன்பு தொடங்குவதன் அடையாளமாகப் பின்னிரவின் கடைசி நேரத்தில் உண்ணும் உணவு

## 58. முழக்கிக் காட்டு!

இரவின் கரிய திரைக்கைகள்
எழுந்து மூடிய துயர்நாளில்
பரிவுக் கதிரைக் காணாமல்
பதைத்து நின்ற இயற்கையறம்
எரியும் 'நமுருத்'[6] தீக்குழியில்
எழுந்த புகையின் புழுக்கத்தால்
கரியும் நாளில் ஃபிர்தவ்[7] சின்
கருணை பொழிந்து காத்தவர்யார்?

கழுத்தை முறிக்கும் அபூஜஹ்[8]லின்
கையை முறித்த சத்திஎது?
பழித்த உஸ்ஸா[9] லாத்[10]ஹுப[11]லின்
படையை அழித்த வீரம்எது?

கொழுத்த புரோகிதப் புரட்டுகளைக்
குழிக்குள் போட்டுப் புதைத்தவர்யார்?
தழைத்து நின்ற கொடுமையெல்லாம்
தறிகெட் டோடியது யார்வரவால்?

கதிரும் மதியும் சுழன்றுவரும்
கணக்கைத் தொடங்கிய நாள்முதலாய்ப்
புதிர்கள் மூடிய வாழ்க்கையிலே
பொய்யா விளக்கை ஏற்றியதார்?
மதுவின் சால்கள் உடைகையிலே
வானில் ஒலித்த நாமம்எது?
பொதுமை அறத்தின் பழங்கதவின்
பூட்டைத் திறந்த கைகள்எவை?

---

*6 நமுரூத் - இப்ராஹீம் நபியைத் தீக்குழியில் எறிந்து கொல்ல முயன்ற கொடியவன்*

*7 ஃபிர்தவ்ஸ் - மேலான சொர்க்கம்*

*8 அபூஜஹ்ல் - அறியாமையின் தந்தை என்னும் பெயர் கொண்டவன். நபிகள் நாயகத்தை எதிர்த்தவன்.*

*9 உஸ்ஸா (Uzza)*
*10 லாத் (Lath)*
*11 ஹுபல் (Hubal)*
*— நபிகள் நாயகம் இஸ்லாத்தை நிலைநிறுத்து முன்னே அரபியர் வணங்கிய கடவுளருள் மூவர்*

நன்றி மறவா உலகேஉன்
நாவின் வீணையை மீட்டிடுக!
இன்று காணும் மகிழ்ச்சிகளில்
இழையும் குழலுக் குரியவர்யார்?
அன்றும் இன்றும் உயிர்க்குலத்தின்
ஆன்மச் சிலிர்ப்பில் சிரிப்பவர்யார்?
என்றும் அருஷின்[12] கவிகையிலே
இலங்கும் பெயருக் குரியவர்யார்?

கொழிக்கும் 'ஹம்து'[13]ப் பேரொளியில்
கோல மயிலாய் நின்றிலங்கி
விழிக்குள் சுடரும் செம்மணியாய்
விளங்கும் நூரு முஹம்மது[14] வின்
அழைக்கும் குரலைக் கேட்கின்றேன்;
அதற்குள் உலகே உன்நாவால்
முழக்கிக் காட்டு முஹம்மதுவின்
மூவாப் புகழின் புகழ்ப்பெயரை!

ம. நண்பன்
1986.11.14

- ப. மு. அன்வர்

# 59. ஈகைத் திருநாள் இன்பம்

ஈகைப் பெருநாள் வந்தது - யார்க்கும்
இன்பம் பலவும் தந்தது
சோக இருளை நீக்கியே - பெரும்
சுடராய் வந்தாட் கொண்டது.

முப்பது நோன்பையும் பேணினோம் - அதன்
முழுப்பயன் கண்டோம் பாரிலே;
நற்பயன் அளிக்கும் அற்புதம் - நோன்பு
பொற்புவி தந்தோர் வாழியே!

---

*12 அர்ஷ் - இறைவனின் ஆட்சிப் பீடம்*
*13 ஹம்து - புகழ்*
*14 நூரு முஹம்மது - முஹம்மதின் பேரொளி*

இரவு பகலாய் விழித்தனம் - ஏக
இறைவன் தொழுகையை முடித்தனம்
உறவு முறையெலாம் கூட்டியே - அன்பின்
ஒப்பரும் திருநாள் போற்றுவோம்.

ஐம்பெரும் கடமையைப் போற்றுவோம் - நெஞ்சில்
ஆன்ம நெறிச்சுடர் ஏற்றுவோம்
எம்பெரு மான்பதம் ஏத்துவோம் - என்றும்
ஈந்தெளி யார்தமைத் தேற்றுவோம்.

- எம். அலி அக்பர்

# 60. நபியின் திருப்பெயர்

தென்றல் ஆடும்! குயில்பாடும்!
தெவிட்டா இன்பம் அளித்தேகும்!
வண்டு பாட மலராடும்!
வாய்மை ஒளிர அகங்குளிரும்!
அன்பு மலர அறிவொளிரும்!
அனைத்தும் திகழும் ஒன்றன்முன்
வன்மை யூட்டும் அதுதானே
வாகை மிக்க நபிபெயரே!

மழலை இன்பம் துயர்களையும்;
மாதர் முறுவல் சோர்வகற்றும்;
குழலும் யாழும் இணைகையிலே
குளுமை தோன்றும்; மனமகிழும்;
அழகின் சிரிப்பு உளங்கவரும்;
அனைத்தும் அமையும் ஒன்றன்முன்
அழலும் குளிரும் அதைக்கேட்டே
அருமை நபியின் திருநாமம்!

மலரின் மணத்தில், அலையசைவில்,
மாலைக் காற்றின் பண்ணிசைப்பில்,
குலவும் குயிலின் குரலழகில்,
குன்றா அழகின் குறுநகையில்,
நிலவும் அமைதி அடித்தளத்தில்,
நீங்கா தொளிரும் கருத்தழகில்,
உலகு எங்கணும் ஓங்கிநிற்கும்
உத்தம நபியின் திருப்பெயரே!

- ஜே. எம். ஹுஸைன்

மு. முரசு
1968

# 61. கிறிஸ்து பாலன் சதுரகம்

மனிதப் பிறவிகொண்டு மாநில முதித்துமே
மனிதனாய் வந்த எவனும்
மனமுளே ஈகை குலுங்கிக் கனிந்திடில்
மகிமைசால் பாக்கிய வானாம்;
புனிதனாய்ப் புங்கவன் புகழைப் பெறுதலொடு
புரையற்ற இதசுத் தியாய்ப்
புரவலனைத் தரிசித்தி டும்போக பாக்யவான்;
புந்தியும் மிகுஞ்சி லாக்யவான்
கனிவிலா தென்றன் பொருட்டுனை நிந்தித்துக்
கள்வனெனத் தூற்றி னாலும்,
கடவுளருள் திடமொடுன் இடம்நாடிச் சேர்ந்துனைக்
கட்டிரட் சிக்கு மென்றே
இனிதாகச் சொன்னவன் பெத்லெகேம்[15] மன்னவன்
இடிந்துறு பசுக்கு டிலிலே
இசைபாடப் பவமோட இறைவனார் நிழலாட
(இ)யேசுபக வான்பி றந்தான்!

பிறந்தவன் பாருக்கு ளேசமா தானமும்
பின்னிப்பல பெருமை செய்தான்;
பிறருன்னை நிந்தித்துச் சங்கதஞ் செய்துபல
பிசகான இம்சை செயினும்,
துறந்துநீ யாவையும் சிந்தைகளி கூர்ந்திடில்
துய்யவன் துயர்து டைப்பான்;
துகளற்ற உலகுக்கு உப்புநீ, அதுகெடின்
துச்சமாய் வீசி எறிவாய்!
மறந்துமே மாந்தரிதை உட்கொளார், மனிதனே!
மண்மேல் விளக்கி னொளிநீ!
மலையுச்சி மேலே இருக்கின்ற நகரமது
மனிதர்க்குத் தெரியா திலையே
சிறந்துமே தரிசனம் நியாயப்ர மாணமும்
சிகரமென ஓங்கி வளரச்
சிற்பரன் கிறிஸ்தேசு குமரன் பிறந்தனன்
சிந்தித்துத் துதிசெய் திடுவோம்!

---

*15 பெத்லெகேம் - ஏசுநாதர் பிறந்த இடம்*

தீர்க்கதரி சனமுடன் நியாயப்ர மாணமும்
தீய்த்தொழித் திடவந் தில்லேன்;
தீபமாய் ஒளிவீசி எங்கும்ப்ர காசிக்கத்
தீதிலா தவைபடைத்தேன்;
பார்க்குமுயர் வானமும் பூமியும் ஒழியினும்
பரிசுத்த வழிகள் ஒழியாப்
பகரும்ப்ர மாணமும் தீர்க்கமா தரிசனமும்
பாரில்நிறை வேறு மளவும்
ஆர்க்குமதன் ஓரெழுத் தும்உறுப் புகளும்
ஆவதுமொ ழிந்து போகா;
ஆணித்த ரத்துடன் அந்தரங் கச்சுத்தி
ஆகஇதை அறிவித் துள்ளேன்;
மூர்க்கனிவன் கள்வனிவன் என்றுதன் சோதரனை
மூடத்த னத்தில் மொழியும்
மூத்தவன் பாவியாம், என்றயே சுகிறிஸ்து
மூர்த்தியைத் துதிசெய் குவாம்.

கொலைகளவு செய்யாது பகைவனா யினும்நட்புக்
கொண்டுநே சித்துப் பழகு,
கொள்கையில் பிறழாது சோதனைகள் கூடினும்
கொண்டவற் றைச்ச கித்து,
விலைமாதர் தம்மைநீ விழிகொண்டு நோக்காத
விரதத்தை ஏற்க வேண்டும்;
விழைவொடொரு மாதரை விஷமோடு நோக்கினும்
விபசாரம் செய்த தொக்கும்;
கலையாகு மிந்தநற் கற்பனையி லேசின்னக்
கடுகளவு மீறி னாலும்
கடவுளனு காரென்ன கன்னிமரி குழவியாம்
கர்த்தனருள் யேசு பாலன்
நிலையாக உண்மையை உண்மையெனச் சொல்லுங்கள்
நிர்மலன் காப்பான் என்று
நித்தம் உரைத்தவன் உத்தமன் கிறிஸ்தேசு
நிலையைஅஞ் சலிசெய் குவாம்.

த. நேசன்
1981.12.20

- கவிமணி கிருஷ்ணதாசன்

# 62. வேந்தனை வாழ்த்துவோம்!

யூதர் நிலத்தில் பெத்லெகேம் ஊரில்
ஊரே உறங்குகையில்
மாதம் பத்து நிறைந்த தாலே
மாட்டுத் தொழுவத்தில்
ஆதி முதலாய் அனைத்தும் ஆளும்
ஆண்டவர் தோன்றிடவே
தூதர் மூலம் சேதி யறிந்த
இடையர் வாழ்த்தினரே!

வானவர் தூதர் வாழ்த்துகள் பனியாய்
மண்ணில் உதிர்ந்தாட,
மானிடர் நெஞ்சம் பாமழை பொழிந்து
மங்கல இசைபாட,
ஆனிரை மந்தை ஆடுக ளெல்லாம்
ஆயனைக் கொண்டாட,
வானிடை அரசர் தொழுவம் தன்னில்
வையகம் கண்டாட!

விண்மீன் காட்டிய வீதியில் வந்த
கீழ்த்திசை ஞானியரும்
தண்ணென் மேனித் தனிப்பெருங் குழந்தை
தூங்கும் தொழுவத்தில்
விண்மீன் நிற்கும் வியப்பைக் கண்டு
விழுந்து வணங்கினரே!
பொன்னும் மணியும் தூபமும் போள[16]மும்
தந்து சென்றனரே!
விண்ணிடை இருந்து தாரணி வந்த
வேந்தனை வாழ்த்துவமே!
மண்ணகந் தன்னில் அன்பு தழைக்கும்
மகிழ்ந்து போற்றுவமே!
மண்ணிடை யெல்லாம் இயேசுவின் வார்த்தை
மானிடர் வாழ்க்கையிலே
விண்ணர சமையும் உலகம் முழுதும்
இயேசுவின் பாதையிலே!

- ஜோசப் செல்வம்

த. நேசன்
1983.12.25

16 போளம் - நறுமணப்பொருள்

# 63. ஏசுபிரான் திருநாமம் வாழ்க!

உயிர்ப்பறவைக் கூட்டத்தை உடற்கூட்டில் பூட்டி
உலகமெனப் பெயர்கூறும் ஓரரங்கில் வைத்து
வயிற்றினிலும் மனத்தினிலும் பசித்தீயை மூட்டி
வாழ்வினையே போராட்டக் களமாக்கும் தேவன்!
கயிற்றுக்குள் மாந்தரெனும் பம்பரங்கள் ஆடும்
கழித்ததையே கூட்டியொரு கணக்கினையே போடும்
பயிற்சியிலே புதுக்கணக்கைப் பக்குவமாய்ப் போட்டோர்
பாரினிலே ஓரிருவர் அதிலொருவர் ஏசு!

பாதையறி யாதுநடை போடுகின்ற கால்கள்;
பயணமறி யாமலிசை பாடுகின்ற நெஞ்சம்;
போதையொடு பூதலத்தைக் காணுகின்ற கண்கள்;
பூதவிருள் பாழ்வெளியில் போடுகின்ற கூச்சல்
தீதறுத்து மாந்தரினம் தேசுமிகப் பெற்றுத்
திகழ்வதற்கு நலமுரைத்த செம்மனத்தான் ஏசு!
நாதரருள் அறைந்துவைத்த சிலுவையினை விட்டு
நடந்துவந்து நம்பவைத்த நன்னாளிந் நாளே!

காலவெளி தன்னிலொரு வானிலவைப் போன்றோன்!
கவிந்திருந்த மாந்தரிருட் காடழித்த செம்மல்!
ஞாலமெனும் பயிர்செழிக்க வந்தமழை மேகம்!
நல்லருள்சேர் கருணைவடி வானதெய்வ தூதன்!
பாலஸ்தீ னம்மென்னும் புனிதமண்ணில் தோன்றிப்
பாருலகைப் பாலித்த சீருலவும் ஏசு!
கோலநறுங் கொள்கையினைக் கொண்டொழுகும் மக்கள்
குணமென்னும் கோயிலிலே குடிகொண்டான் வாழ்க!

- ஐ. உலகநாதன்

த. மலர்
1964.3.29

# 64. தோத்திரப் பாட்டு

புவியும் அதனுள் மாந்தர்களும்
புறம்பே இல்லை கர்த்தருக்கு!
கவியும் கடலும் அவர்சொந்தம்
கணக்காய் அதனை நலப்படுத்தி
நதியும் அதனுள் அமைப்பித்தார்
யாவும் கர்த்தர் கைவசமே!
விதியின் படியே நாம்தொழுது
மேன்மை யடைவோம் புவியோரே!

நல்லோன் கர்த்த ராசீர்வாதம்
நலமாய்ப் பெறுவார் அவர்நீதி
பொல்லாப் பின்றி அடைவோரே
புவியிற் கர்த்தர் பெருமைதனைச்
சொல்லாற் சொல்லிக் கைதொழுது
சுகமாய் வாழ்வார் புகழ்பெற்றுப்
பொல்லாச் செயல்கள் செய்யாதோர்
அடைவார் கர்த்தர் ஆசிதனை!

உள்ள மென்னும் கதவதனை
உறவாய் இன்றே திறவுங்கள்;
சொல்ல முடியாப் பேராளன்
தூயோன் உள்ளே வருகின்றான்;
கள்ளத் தனங்கள் காட்டாதீர்;
கர்த்தர் உங்கள் மன்னவராம்;
நல்ல படியே போற்றுங்கள்
நலமாய்க் கர்த்தர் காப்பாரே!

- வே. ஏசய்யா

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"தஞ்சமென் றார்க்கிங்(கு) ஆதர வுண்டு
சத்திரஞ் சாவடி போன்றவை இல்லை
மஞ்சம் நிகர்நெடுஞ் செல்வங் கொழிக்கும்
மாவள நாடு மலாயிநன் னாடே!"

- பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது


நாடு

# 65. எங்கள் மலாயா இது!

தேன்பாயும் ரம்புத்தான் தித்திக்கும் மங்குஸ்தீன்
வான்தோய் டொரியான் வளமரங்கள் - மீன்பாயப்
பொங்கும் அலைகடல்கள் போர்வேழம் போல்மலைகள்
எங்கள் மலாயா இது!

ஒற்றுமையைப் பால்மரமும் உள்ளத்தைப் பால்நிறமும்
தெற்றெனவே காட்டும் திருநாட்டில் - பற்பலரும்
தங்கி மலாயாவே தங்களுடைத் தாயென்னும்
எங்கள் மலாயா இது!

சந்தனக். - ஐ. உலகநாதன்
1966

# 66. மலாயன் இனம் பிறந்தது!

எங்கள் மலாயாத் தங்கிடும் இன்பம்
பொங்கிட வேண்டாவோ?
சங்கடம் யாவும் தீர்ந்திட நாளும்
சலியா துழைத்திடுவோம் - நாமும்
சலியா துழைத்திடுவோம்
நெடிய பொழில்கள் இனிய வயல்கள்
நிறைந்த நன்னாடு
(எங்கள்)

இந்திய சீனம லேசியர் யுரேஷியர்
என்றுமிந் நாட்டினிலே - ஒன்றாய்
நன்றுடன் வாழ்ந்திடுவோம்
யாவரும் ஈண்டும லாயர்கள் என்று
இணையற்ற தோரின மாகவே மாறிச்
சத்தியச் செந்நெறிப் பற்றுதல் கொண்டு
சாந்தியும் பெற்றிடுவோம்!
(எங்கள்)

த. முரசு
1952.9.21

# 67. மாவள நாடு

பையுறு செய்யிற் பயிர்நடு மள்ளப்
பாவையர் கண்ணினைப் பானலென் றெண்ணி
மெய்யுறு வண்டு அலமருங் கானில்
மும்மத மும்பொழி யானை வெகுண்டு
கையிற் பிடித்தே ஒடிக்க ஒழுக்கும்
கன்ன லமுதைக் கவிகளித் துண்டு
வையம் நிரப்பிடு மாண்புறு மாநல்
மாவள நாடு மலாயிநன் னாடே!

வாவி புகுந்தே உழக்கிடு மேதி
வன்பகை கண்டு வெகுண்டிடும் வாளை
தேவ தருவெனத் தீங்கனி சிந்தும்
திண்கிளை தூங்குசெந் தேன்பொதி பெய்ய
மேவியே பாய்ந்து கிழித்து விரைந்து
விண்ணினின் றிழியு மதுத்துளி யோடு
மாவுறு வெளத்தில் வீழ்ந்து குதிகொள்
மாவள நாடு மலாயிநன் னாடே!

கத்து கடற்கரை முத்தினை நாரை
கண்டுளங் கொண்டு கருவெனச் சாடும்
புத்தெரி பாயும் பொகுட்டுகள் தோறும்
புள்ளினம் ஆர்த்தே இனியன பாடும்
குத்தெனப் பாயும் கொடுவரி வேங்கை
குஞ்சரத் தோடு குலவியொன் றாக
மத்த மகன்று மகிழ்ந்தினி வாழும்
மாவள நாடு மலாயிநன் னாடே!

பஞ்சமென் றபெரும் நோயுமிங் கில்லை
பட்டினி என்றா லதெப்படி என்பார்?
நஞ்சக மிலைநய வஞ்சக மில்லை
நன்மை வளர்த்தற நிலையினைக் காப்பார்
தஞ்சமென் றார்க்கிங்(கு) ஆதர வுண்டு;
சத்திரஞ் சாவடி போன்றவை இல்லை;
மஞ்சம் நிகர்நெடுஞ் செல்வம் கொழிக்கும்
மாவள நாடு மலாயிநன் னாடே!

கவிப்பூ.
1975

- பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது

# 68. குறிஞ்சியிலே பெயரெடுத்த கோதை

**குறிஞ்சிக்கோதை**

குறிஞ்சியிலே பெயரெடுத்த கோதையிவள் வாழ்க!
கொழுமைமிகு மூங்கில்வளத் தோளுடையாள் வாழ்க!
உறிஞ்சிமுகில் அருவிமாலை உடலணிவாள் வாழ்க!
உவந்துநாணிப் புணரமெல்ல உளந்திறப்பாள் வாழ்க!

**பாலைப்பாவை**

பாலைதரும் பிரிவறியாப் பாவையிவள் மானே!
பசுமையதே ஆடையாகிப் பயன்கொடுக்கும் தேனே!
வேலிலான விழியசைப்பால் வெற்றியினைச் சொல்வாள்
மேவுநிலை நாட்டரசி மேலுமேலும் வெல்வாள்!

**முல்லைமங்கை**

ஓங்கிவளர் தருநிழலே உவப்பெடுக்கும் உள்ளம்!
உலகமெலாம் சேர்ந்ததென ஒளிகொடுக்கும் இல்லம்!
பாங்குடனே முல்லைவளம் பாடுகின்ற நெஞ்சில்
பயிலுமுயர் மனையறந்தான் பனிமலர்போல் கொஞ்சும்!

**மருதச்செல்வி**

ஆறுபாய மேனியிலே அழகுமணி பொலியும்!
அருள்மருத அமுதளித்தே கைகள்பசி களையும்!
மீறியோடும் காளையினால் விளைந்திடுமே ஊடல்!
மேவுதுன்பம் பெருகுமுன்னே மலர்ந்திடுமே கூடல்!

**நெய்தல்நங்கை**

வானிறத்துக் குழலினிலே வந்துகடல் நெளியும்!
வாய்திறந்தால் நெய்தலீயும் வண்ணமுத்தும் ஒளிரும்!
மீனெனவே துள்ளுவிழி மிகஇரங்கி நோக்கும்!
மீளுகின்ற ஆளன்முக மின்னலிலே பூக்கும்!

- முரசு. நெடுமாறன்

உ. த. மா. ம.
1987

## 69. பண்ணை மலைநாடு

வண்டு மலருத வசந்தம் மருவிவர
வானத்து வட்டநிலா
வளர்ந்து கவின்கூட்ட வைரமணித் தாரகையால்
வார்க்கும் தண்ண்ணொளி
குண்டு மலர்மல்லி மலர்ந்த நறுமணத்தால்
குழைந்தே இதழ்காட்டக்
கொவ்வைக் கனியமுது கோலக் கருமுகிலால்
கூவும் குயிலினத்தைக்
கண்டு விளையாடும் நீலக் கடலொலியில்
காமர் கயலினமும்
கதிர்வீசும் பலநிறக் கதிரவன் கீழ்உதயக்
காட்சி சேர்உவகை
பண்டு சரிதையைப் பரத்தும் பொன்னேடு
பண்பாடும் புலமையிலே
பளிச்சிடும் தங்கவயல் ரப்பர்ப்பால், ஈயப்
பண்ணை மலைநாடு!

மலாயா. - ஏ. ஹாஜாமொய்தீன்
1962

## 70. எம் மலைநாடு

நாடஃ தென்ப நாடா வளத்தன
நாடில நாட வளந்தரு நாடென
நாடிய நுண்பொருள் நவிலுஞ் சான்றோன்
பாடிய பொருண்மை புரிந்தனம்; வையச்
செம்மைச் சான்றோர் செப்பிய மொழியும்
அம்ம! அஃதே ஆம்ஆம்! உண்மை
சூழிய அரணும் சுரும்புணும் சோலை
மேழியர் ஏத்தும் மேகந் தொடுமலை!

மலைமீ துறையும் மாமுகிற் கூட்டம்
கலைமீ துறையும் கலைஎலாங் காட்டும்!
பல்திறப் பெருவளம் புகலும் காலை
நல்திற நொய்வம்[1] கமுகும் தெங்கும்
ஆழும் தங்கமும் அதனொடு ஈயம்
வீழும் தேன்துளி வீதி மருங்கும்
நயமடப் பாவை நளிஇள மேனி
கயல்விழி மற்றுக் காணும் நகையும்
கற்பணி கழறக் காசினி வியப்பப்
பொற்பணி பொலியும் பழமுதிர் சோலை!
மந்தியும் மற்றும் மாந்திப் பழச்சுவை
குந்தியும் களித்தும் குழையும் காடு!
ஓங்குற விண்ணை ஒட்டும் உயர்மரம்!
ஆங்குறு அவைகிளை தாங்குறு கவிகை!
கிளைத்த இளங்கிளை கொடியொடு தழீஇத்
திளைத்த காதற் றிறமஃ தென்னும்
முற்றா முலையள் முதிரா மடமொழி
முற்றாய் வென்ற மணிமொழிக் கிள்ளை!
அரவுக் கூட்டம் அருகிய ஆட்டம்
பறவைக் கூட்டம் பல்கவின் மூட்டம்
சிங்கம் செறுபுலி செந்நாய் வேழம்
தங்கும் செல்வம் தவத்திருச் செல்வம்!
காடரண் கடந்து நாடுறை நெஞ்சம்
காணும் கிள்ளைத் தூயர் ஒன்றே!
ஆளும் அரசோ குடிதழீஇ ஓச்சும்!
அவர்தம் கேண்மை அரிதின் அரிது!
எண்ணிரு திசையின் எத்தே யத்தும்
கண்ணிரு மணியும் காணா நிற்ப
நன்னிரை நிறையும் வீடு
எண்ணிறை ஏத்தும் எம்மலை நாடே!

- ப. மு. அன்வர்

மலைநாடு
1962.8.31

---

*1 நொய்வம் - ரப்பர்*

# 71. சுதந்திரம்

முள்ளைப் பரப்பிஅதில் மூடமெனும் கிட்டிவைத்துத்
தள்ளப் படுவோர்கள் தன்னறிவு பெற்றெழுந்து
தெள்ளத் தெளிந்தோடும் சிற்றோடைப் புல்வெளியில்
கொள்ளையின் பம்காணக் கூடல் சுதந்திரமாம்!

பட்டு அணிமணிக்கும் பகட்டுக்கும் தன்நாட்டை
விட்ட மனத்தை 'வெடுக்'கெனப் பற்றிழுத்துத்
துட்ட அடிமையிருள் துரத்தி ஒளிவீசும்
முட்டேறி நின்றால் முளைக்கும் சுதந்திரமாம்!

காலமெல்லாம் தலைசாயக் கைகட்டி வாய்மூடும்
கோலம் கலைந்து கொழிக்கும் மலைநாட்டுச்
சீலரெல்லாம் ஒன்றாகச் சேர மனந்திறந்தால்
ஞாலம் சிறக்க நல்கும் சுதந்திரமாம்!

பூமி குடைந்து புற்றெடுத்துத் தானியங்கள்
சேமித்து வாழும் சிற்றெறும்பு போல்மாறின்
சோம்பல் அடிமையினைச் சுற்றிப் பிணைத்திருக்கும்
தாம்பு அறுந்துவிழத் தங்கும் சுதந்திரமாம்!

பருவம்
1977, ஆகஸ்டு

- கா. பெருமாள்

# 72. விடுதலைப் பண்ணிசைப்போம்!

பெற்ற சுதந்திரம் பேணிடுவோம்; - பெரும்
பேரும் புகழும் ஈட்டிடுவோம்;
உற்ற துணையாய் விளங்கிடுவோம் - நாளும்
ஊருணி போன்றே செயற்படுவோம்!

நாட்டின் புகழும் ஓங்கிடவே - உயர்
நன்னெறி தழைக்க உழைத்திடுவோம்;
வீட்டிற் பேரொளி பரவிடவே - நாம்
விடுதலைப் பண்ணை இசைத்திடுவோம்!

- கோ. சு. கி. தமிழ்மாறன்

# 73. வாழ்க தாயே!

அடர்நொய்வ இலைகளென்ன குழலோ? சீவி
அலங்கரிக்கப் பட்டதுபோ லாகும்; அந்தப்
படர்தலைமேல் இருகூறாய் ஒளிர்வான் வில்லும்
பக்குவமாய் எடுத்துவிட்ட உச்சிக் கோடோ?
சுடர்காலைக் கதிரேதான் தலைக்குப் பூவோ?
சூழ்கடலின் அலையோசை குரலோ? உன்றன்
உடல்நிலமோ? மலைமுகமோ? மலையத் தாயே
உயிர்பெற்ற சித்திரத்து வடிவம் நீயே!

உறவிற்குச் சான்றாகும் ஒட்டுப் பா[2]லும்
உளத்துக்குச் சான்றீயச் சுரங்கம் போலும்!
வரவிற்குப் பேரேபிரிஞ்[3] சாங்கி ளந்தான்[4]
வற்றாத மூடாநீர்[5] சான்று கோலும்!
பரவெல்லை நின்மக்கள் உயிர்க்குச் சான்று!
பதிச்சான்று வீரத்தை விதைக்கும் ஒன்று
நறவுக்குச் சொல்சான்றாய் மனச்சான் றாளும்
நனிவாய்மைக் குடிபெற்றாய் வாழ்க தாயே!

த. நேசன்
1970.3.17

- கரு. வேலுச்சாமி

# 74. நமது நாடு

இந்தநாடு எங்கள்நாடு இந்தநாட்டு மண்ணிலே
இன்றிருக்கும் உயிர்கள்யாவும் எங்கள்தாயின் பிள்ளையே!
இந்தவானம் எங்கள்வானம், இந்தவானின் மீதிலே
இங்கும்அங்கும் ஓடும்மேகம் எங்கள்தாயின் கூந்தலே!

---

*2 ஒட்டுப் பால் - சீவப்பட்ட ரப்பர் மரத்தில் உறைந்திருக்கும் பால்*

*3 பிரிஞ்சாங் - கேமரன் மலையில் உள்ள ஊர். காய்கறித் தேவையின் பெரும்பகுதியை இங்குள்ள பண்ணைகளே நிறைவுசெய்கின்றன.*

*4. கிளந்தான் - கிழக்குக்கரை மாநிலம். வேளாண்மையால் புகழ்பெற்றது.*

*5 மூடாநீர் - கோலமூடா ஆற்றுநீர்*

பாடுதென்றல் எம்மினத்துப் பண்பெடுத்துப் பாடிட
ஓடுமாறு இங்கிருப்போர் ஒற்றுமையைக் கூறிடக்
காடுமேடு சீர்படுத்திக் காதல்கொண்ட தந்தையர்
நாடுமலை நாடிதென்று நாவினிக்கப் பாடுவோம்!

நான்பிறந்து நான்வளர்ந்து நான்மணந்த நாட்டிலே,
வீண்குழப்பம் இல்லையில்லை வேற்றுமைகள் இல்லையே!
தேன்சுரக்கும் பூவடாநம் தேசமக்கள் நெஞ்சமே!
வீண்பகைக்கு வித்திடோம்வீ ணர்களை விட்டிடோம்!

தென்னைரப்பர் ஈயம்மற்றும் தேனருவி ஆயிரம்
விண்ணைமுட்டும் மாமலைகள் விளங்குமெங்கள் நாட்டுடன்
கண்கவரும் சிங்கையோடு கவின்மிகுந்த போர்னியோ
சின்னதான சரவாவொன்று சேர்ந்தநாளைப் போற்றுவோம்!

வந்துவந்து மக்கள்கூடி வானளாவச் சேரினும்
தந்துதந்து பாலமுதம் தாங்கிவந்த அன்னையைச்
சிந்துபாடிக் கைகள்கூப்பிச் சிரங்கவிழ்த்து வாழ்த்தியே
எந்தநாளும் என்றனாவி உன்றனுக்கே என்றிடு!

ச. மே. ம.
1972

- வே. சங்கு சண்முகம்

# 75. வாழ்வோம் நாமே!

முப்புறமும் கடலலையில் தவழும் நாடு!
முப்படையும் முனைப்புடனே காக்கும் பீடு!
எப்பொழுதும் வான்பொழியும் வளமார் மாட்சி!
எங்கெங்கும் கண்கொள்ளா இயற்கைக் காட்சி!
ஒப்பரிய பொன்னாடாய் மாற்று கின்ற
ஒண்பொருள்கள் யாவும்நிறைந் திலங்கும் பேறு
அப்பழுக்கில் லாமனத்தால் உலக மெல்லாம்
அன்புடனே ஏத்துவணம் வாழ்வோம் நாமே!

பொ. மு. தமிழ்மணி

# 76. நாட்டு வாழ்த்து

கார்கறுத்துக் ககனமழை பொழியும் நேரம்
கானமயில் கனிவுடனே நடன மாடும்
ஏர்பிடித்த உழவர்களும் உழூஉம் நேரம்
இடைசிறுத்த மங்கையர்கள் மகிழ்ந்தி ருப்பர்
வார்ப்புறுநெற் பயிர்செழித்துக் கிளிமூக் கன்ன
வரிசைமணிப் பொற்கதிர்கள் விளையுஞ் செல்வச்
சீர்பெருக்கும் மலேசியநல் லருமை நாடே
சிரந்தாழ்த்தி உன்னடியைப் போற்று கின்றேன்!

பார்க்கின்ற பக்கமெல்லாம் பயிர்செ ழிக்கும்
பசுமைநிறப் பால்மரத்தின் அணிவ குப்புச்
சேர்க்கின்ற இன்பநிலை கோடி கோடி
செய்கின்ற அத்தனையும் இரப்ப ராலே
வார்க்கின்ற ஈயமெல்லாம் கப்ப லேறி
வரும்போது மின்னுகின்ற பொருளாய் மாறி
ஊரெல்லாம் வணிகநிலை பெருக்கும் நாடே
உன்னருளை மிகப்போற்றி வாழ்த்து கின்றேன்!

கலாவள்.
1977

- ஓ. எம். காதிர்சுல்தான்

# 77. தாய்நாடு வாழியவே!

அன்னை மலையகமே! அகிலத்தின் ஓர்துளியே!
ஆழிசூழ் உலகினிலே அழகுமீன் வடிவமொடு
இன்னல் களைந்தே ஈட்டுகின்ற ஆட்சிமுறை
மின்னலின் வேகத்தில் மீட்டுகின்ற முன்னேற்றம்!
இன்பத்தின் எல்லையிலே இனம்பாரா ஒற்றுமையும்
இணைந்திருக்கும் மூவினத்தின் எடுப்பான உழைப்புமுறை
துன்பத்தின் சாயலின்றித் தூய்மையின் வழியினிலே
அன்பான நெறியினிலே ஆற்றுகிறார் தம்பணியை!

எங்கெங்குப் பார்த்தாலும் எழில்ரப்பர் நன்மரங்கள்
எடுத்தினிதாய் விளக்கிடுமே எங்கள் நிலவளத்தை
மங்காம லொளிகூட்டி மாநிலத்தில் முதன்மைபெறும்
மாச்செல்வ மாம்ஈயச் சுரங்கம் சுடர்கொளுத்தும்
தெங்குடனே எண்ணெய்ப்பனை மேலும்அன் னாசிப்பழம்
செந்நெல் கரும்போடு தேடற் கரிதான
பொங்கு வளஞ்செறிந்து பூரிக்கும் எங்களரும்
தங்க மலேசியத் தாய்நாடு வாழியவே!

த. நே. மெ. ம. - எஸ். வீரையா
1967

## 78. தரணியே திரளவேண்டும்!

கொலைவெறி ஓங்க நெஞ்சில் குறுகிய எண்ணங் கொண்டு
மலையென ஓங்கி நிற்கும் மாமலே யாசி யாவைக்
குலைப்பதைக் கொள்கை யாக்கிக் குதிப்பவர் வீழ்ச்சி காண
வளையலைத் தாங்கும் கையும் வாளினை ஏந்த வேண்டும்!

வறுமையைக் களைவ தற்கு வழியறி யாத மூடன்
திருவுளங் கொண்ட நாட்டைத் தீய்த்திட எண்ண லாமோ?
இருப்பவர் இருந்தால் தானே இலாதவர் வாழ்க்கை ஓடும்!
கருப்பொரு ளறியான் வீழக் கன்னியர் திரள வேண்டும்!

'ஓ'வெனக் கதறும் மக்கள் உறுபசி போக்கு தற்குத்
'தா'வெனக் கேட்டி ருந்தால் தந்திட முந்து வோமே!
'தீ'மனம் கொண்ட தாலே தீயெனத் தீயும் அந்தப்
பேயனை மாய்ப்ப தற்குப் பெண்களும் முந்த வேண்டும்!

ஆய்கலை யனைத்திற் கும்நல் லரியணை தந்து வாழ
வாய்ப்பினை நல்கி மக்கள் வாழ்வினில் நாட்டங் கொண்டு
தூய்மனத் தோடே ஆளும் துங்குவின் நாட்டைக் காக்கத்
தாய்குலம் மட்டு மென்ன? தரணியே திரள வேண்டும்!

1965 - அமலதாசன்

# 79. தாயின் மணிக்கொடி காப்போம்!

எங்கள் தவத்திரு நாட்டுக் குயிர்தர
    என்றும் மலைத்தினி அஞ்சிடோம்! - உயர்
அங்கம் சிதையினும் ஆருயிர் போயினும்
    ஆர்வம் குறைந்துமே துஞ்சிடோம்! - பெரும்
மங்களம் பொங்கும் மலேசிய நாட்டினை
    வாட்ட நினைப்போரை வாட்டுவோம் - இஃது
எங்கள் உணர்விலும் எங்கள் உயிரிலும்
    என்றும் விரவி ஒளிருமே!

குண்டு பலப்பல கொண்டெமைத் தாக்கினும்
    குன்றெனும் தோள்தட்டி ஆர்க்குவோம் - பெரும்
அண்ட மதிரப் பறைகள் முழக்கியே
    ஆண்மை யுடன்பகை வீழ்த்துவோம்! - எமை
வென்றி நெருங்கிட நின்றுபோ ராடுவோம்
    வெற்றிப்பண் பாடி மகிழுவோம்! - பகை
கொண்டவர் நன்றுணர்ந் தாலுயிர் வாழ்குவர்
    இன்றெனில் வீழ்குவர் வீழ்வரே!

தாயின் மணிக்கொடி காக்கத் தயங்கிடும்
    தனயனைப் பெற்றிலள் அன்னையே! - உயிர்
மாயினும் தாயின் மணிக்கொடி காத்திடும்
    மக்களைப் பெற்றவள் அன்னையே! - புலை
நாயினுங் கீழவர் எம்முடன் மோதிட
    நாம்பொறுத் திங்கிருப் போமோதான்? - கரி
வாயினிற் பட்ட கரும்பென வீணரை
    வாட்டி ஒறுக்குவோம் இன்றைக்கே!

சண்டை விரும்புதல் எங்கள் குணமில்லை
    வந்திடிற் சண்டையை விட்டிடோம் - பெரும்
அண்டம் முழுவதும் திரண்டுவந் தாலும்யாம்
    அஞ்சிப் பதுங்கியே ஓடிடோம் - எமன்
கொண்டு பெரும்படை கொண்டுவந் தாலுமே
    குன்றமார் தோள்தட்டி ஆர்க்குவோம் - பெரும்
கொண்ட லெனவெழுந் தேபகை யாளரின்
    கொட்டம் அடக்குவோம் முற்றவே!

1965 - வீ. கே. சுப்பிரமணியம்

# 80. தப்படி வைத்தவர் தப்புவதுண்டோ?

வஞ்ச மனத்துடன் வந்து புகுந்தவர்
வாலை யறுத்திட வாராயோ? - வரும்
வெஞ்ச மருக்கிது வேளை பொருட்குவை
மேலும் குவித்துடன் தாராயோ?

சேரு மலேசியச் சீர்மிகு நாட்டினைச்
சேரு மிடர்ப்பகை தீராயோ? - உனை
வாரி யணைத்தவள் வாழ்வு சிறந்திட
வாரி நிதிக்குவை தாராயோ?

ஆறு மலைத்தொடர் அன்பு மனத்தொடர்
ஆர்ந்த கலைத்தொடர் தாய்நிலமே! - உனை
வேறு நிலத்தவர் வெல்ல முனைந்திடின்
வேட்டி லவர்தலை போய்விழுமே!

வீடு விளங்கிடப் பெற்ற குழந்தையை
நாடு விளங்கிடத் தாரீரோ! - அவர்
பீடு விளங்கிடக் கேடு களைந்திடப்
பிள்ளையைப் பெற்றவர் வாரீரோ!

தங்க மெனத்தகும் துங்கு மொழிப்படி
சிங்க மெனப்புகக் கூறீரோ! - நாம்
பொங்கி யெழுந்திடின் புல்ல ரிருப்பது
பூமியி னுள்ளெனக் கூறீரோ!

அப்படி இப்படித் தப்படி வைத்தனர்
எப்படி யும்படி ஏறிடவே - அவர்
ஒப்பிட வீரம் உணர்த்திடு; வைத்திடும்
ஒவ்வொரு காலடி கூறிடவே!

முத்துக். - ஐ. உலகநாதன்
1975

# 81. துடுக்கடங்கும்

பண்பை அழித்தவர்கள் - வென்றிடப்
படைதனைத் திரட்டுகின்றார்
அன்பை மறந்தாரோ? - உயர்ந்த
அறிவை இழந்தாரோ?

செல்வம் கொழித்திடுமே! - மலையகம்
சிறப்பில் உயர்ந்திடுமே!
பல்லார் பகிர்ந்துண்ணப் - பகைவர்
பார்த்துப் பொருமுகின்றார்.

சூழும் பகைப்புலத்தை - எதிர்த்துச்
சுக்கு நூறாக்க
வீழும் பலதலைகள் - நம்மவர்
வீரம் நிலைத்திருக்கும்.

வாழப் பிறந்தவர்கள் - மலேசியர்
வஞ்சினம் அற்றவர்கள்
வீழும் அருவியென - விரைந்து
வீணர் பகையொழிப்பர்.

அள்ளிக் கொடுத்தவர்கள் - ஆர்த்தே
அன்பைச் சொரிந்தவர்கள்
கள்ள மனத்துடனே - அணுகும்
கள்வர் தொடர்பறுப்பர்.

குருதி வெள்ளமதில் - நீந்திக்
குளிக்க நினைக்கின்ற
சுருதி இழந்துவிட்ட - சுகர்ணோ
துடுக்கும் அடங்கிவிடும்.

த. மலர்
1965.3.21

- மா. இராமையா

## 82. இஃது ஆகாதுகாண்!

வாய்பிளந்து வல்லூறு வட்டமிடும் நேரத்தில்
மணிப்புறவுக் கூட்டத்தில் பேதமா?
தாய்நாட்டில் பகைமூட்டம் தலைகாட்டும் சூழ்நிலையில்
சதிராடும் இனவாதம் ஆகுமா?

இருக்கின்ற குறைபாட்டை ஏனென்று கேட்பதற்கு
இந்நேரம் சரியான நேரமா?
வெறுக்கின்ற மனப்போக்கை விதைக்கின்ற இனவாதம்
விளைக்கின்ற போராட்டம் வீரமா?

கண்ணியத்தைக் கடமையினைக் கைகழுவி நமக்குள்ளே
களம்காணல் பகைப்புலத்தை வெல்லவா?
அந்நியரின் வாலறுக்க அன்னைமக்கள் ஒன்றுபட்டே
அமர்க்களத்தில் வெல்லவேண்டும் அல்லவா?

உட்பகைக்குப் பலியாகி ஊர்ப்பகையை மறந்துவிட்டால்
உண்டாகும் விளைவென்ன தெரியுமா?
கட்செவிசேர் தவளையெனக் கனமனத்துப் பகைவாயில்
கணப்பொழுதில் இரையாவோம் புரியுமா?

விருப்பத்தை நிறைவேற்ற வேட்டுமுறை கையாளல்
விளங்காத காட்டுமுறை அல்லவா?
திருப்பங்கள் பலகண்டு தெளிவடைந்த உலகத்தில்
சிறப்பான 'ஓட்டு'முறை இல்லையா?

கோட்டைக்குள் குழப்பமெனில் கோட்டையினைத் தாக்கவரும்
கொள்கையிலார்க் கதுநல்ல வேட்டையாம்
வீட்டிற்கு வீடிங்கு வேற்றுமையில் லாதநிலை
விளங்கலொன்றே மற்றவர்க்குச் சாட்டையாம்!

த. மலர்
1964.7.28

- ஐ. உலகநாதன்

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"உன்னைப் பகைப்போர்முன்
ஓய்ந்துறவோ அம்மானை!
ஊறுனக்கு நேர்ந்தால்
உயிரெமக்கேன்? அம்மானை!"

- கரு. வேலுச்சாமி

தமிழ்

# 83. தமிழுக்கோர் அம்மானை!

முன்னம் பிறந்தமொழி முச்சங்கங் கண்டமொழி
மன்னர் மடிதவழ்ந்து வாழ்ந்தமொழி அம்மானை!
மன்னர் மடிதவழ்ந்து வாழ்ந்தமொழி பாவலர்தம்
கண்ணாய்க் கருத்தாய்க் கனிந்தமொழி அம்மானை!
காலக் கொடுமைதரும் கல்லடியேன் அம்மானை!

பாழும் தமிழ்ச்சாதி பட்டவெல்லாம் போதாவோ?
வாழும் மொழிக்குமின்னல் வந்ததுவோ அம்மானை!
வாழும் மொழிக்குமின்னல் வந்ததுவோ என்றறிந்து
சூழுங் கயமையெலாந் தோற்கடிப்போம் அம்மானை!
சூரருக்குத் தோல்வியில்லை சொல்லிவைப்போம் அம்மானை!

ஒத்தூதும் பீப்பீக்கள் உண்மை தனைமறைக்க
எத்தோதும் கைக்கொள்வார் என்றறிந்தோம் அம்மானை!
எத்தோதும் கைக்கொள்வார் என்றறிந்தும் காலடியில்
நத்திக் கிடப்பதற்கு நாயோநாம் அம்மானை!
நன்றிதனைக் கொன்றால்நாம் என்செய்வோம் அம்மானை!

"கல்விபெற என்னவழி? கற்றோரே சொல்லு"மென்றோம்
கொள்ளிகொண்டு வந்து கொடுக்கின்றார் அம்மானை!
கொள்ளிகொண்டு வந்து கொடுக்கின்ற மேதைகட்குச்
சொல்லிவைப்போம் இச்சூழ்ச்சி செல்லாதென் றம்மானை!
சூதாட்டக் காயோ சுவைத்தமிழும் அம்மானை!

வேரிலே வெந்நீரை விட்டுப் பயிர்வளர்க்கக்
கூறும் மதியென்ன கூர்மதியோ அம்மானை!
கூறும் மதியென்ன கூர்மதியோ என்றாய்ந்தால்
சேரும் பதவிக்காய்ச் செய்கின்றார் அம்மானை!
சே!சே!சே! என்றொதுக்கச் செய்யோமோ அம்மானை!

கூலிக்கு வந்தவரைக் கொஞ்சம் தழைக்கவைக்கும்
வேலிக்கும் வேட்டுவைக்க வேண்டுகிறார் அம்மானை!
வேலிக்கும் வேட்டுவைக்க வேண்டுகின்ற வீணர்களின்
போலி முகத்திரையைப் போக்கோமோ அம்மானை!
பொல்லார்கள் தோற்றோடப் போரிடுவோம் அம்மானை!

- வீரமான்

த. நேசன்
1975.4.6

# 84. தலைமுறைக்கோர் அம்மானை!

மூவேந்தர் கட்டிவைத்த முத்துமணி மண்டபத்தில்
பூவேந்து தேனாய்ப் பொழிந்ததமிழ் அம்மானை!
பூவேந்து தேனாய்ப் பொழிந்ததமிழ் இந்நாளில்
நாவேந்த நம்மோர் நடுங்குவதேன் அம்மானை!
நாளைத் தலைமுறைதான் நாணாதோ அம்மானை!

வித்தின்றி ஞால விரிப்பில் முளைத்தமரம்
முத்தமிழே என்று மகிழ்ந்திருந்தோம் அம்மானை!
முத்தமிழே என்று மகிழ்ந்திருந்தோம் அந்நினைவைக்
கொத்தவந்த கோலம்உன் கட்டளையோ அம்மானை!
கூத்துக் கொருமுடிவு கட்டலையோ அம்மானை!

புத்தியுள்ள பிள்ளையென்று பூமியெல்லாம் பேசியதால்,
கத்தியொன்று தந்தோம் களையெடுக்க அம்மானை!
கத்தியொன்று தந்தோம் களையெடுக்க என்றிருந்தால்,
சுற்றிவந்தே எங்கள் தலையெடுத்தான் அம்மானை!
'சூமந்த்ரம்' போட்டுக் குலையறுத்தான் அம்மானை!

உள்ளதமிழ்க் கல்வி உயர வழிகேட்டால்
உள்ளதையும் போக்க உருவெடுத்தார் அம்மானை!
உள்ளதையும் போக்க உருவெடுத்தார் செய்கையினால்,
வல்ல தலைமுறைதான் வாடாதோ அம்மானை!
வாய்திறந்தால் நாயகர்வாய் மூடாதோ அம்மானை!

வெறுங்கை முழம்போட்டு வேதாந்தம் பாடிவிட்டு
முறுங்கை மரமேறும் வேதாளம் அம்மானை!
முறுங்கை மரமேறும் வேதாளம் போலிங்கே
உறுங்கால் முயலுக்கு மூன்றென்றார் அம்மானை!
உள்ள தொருகால் மறந்தாரோ அம்மானை!

நாளைத் தலைமுறைக்கு நாசமே செய்வதென்று
வேளைஎதிர் பார்த்ததுவோ வேங்கையிது அம்மானை!
வேளைஎதிர் பார்த்ததுவோ வேங்கையெனில் அவ்வேங்கை,
வேலைஎதிர் பார்க்காமல் விட்டதுமேன் அம்மானை!
வெஞ்சினவேல் பாய்ந்தால் உருப்படுமோ அம்மானை!

த. நேசன்
1975.4.6

- காரைகிழார்

# 85. தமிழ்ப்பகைக்கோர் அம்மானை!

தன்னைப் பகைக்கும் தனதுயிரே யானாலும்
அன்னைப் பகையெனினும் ஆடோம்யாம் அம்மானை!
அன்னைப் பகையெனினும் ஆடோம்யாம் ஆனாலும்,
உன்னைப் பகைப்போர்முன் ஓய்ந்துறவோ அம்மானை!
ஊறுனக்கு நேர்ந்தால் உயிரெமக்கேன் அம்மானை!

தாயை மறந்தவர்க்குத் தானேழ் ஐயமெனும்
மாயை விளங்காமல் வாய்திறப்பார் அம்மானை!
மாயை விளங்காமல் வாய்திறக்கும் பேர்வழிகள்
சேயை வழிமாற்றிச் சீர்பெறுவார் அம்மானை!
சீர்என்ற சொல்லுக்கே நேர்பகையோ அம்மானை!

மேடையிலே வாய்கிழிய மெச்சித் தமிழ்மொழியும்
காடை குருவியெல்லாம் கண்ணுறங்கும் அம்மானை!
காடை குருவியெல்லாம் கண்ணுறங்கும் போதிலங்குப்
பேடைக் குருவியொன்று பேச்சுரைக்கும் அம்மானை!
பேடைகளோ தாய்மொழிக்கும் பாடைகட்டும் அம்மானை!

பேய்மார்பில் பால்குடித்துப் பேணி உடல்வளர்ப்பார்
தாய்மார்பில் பால்குடிக்கத் தாகமுறார் அம்மானை!
தாய்மார்பில் பால்குடிக்கத் தாகமுறார் எஞ்ஞான்றும்
தோய்வார் வழிமாறித் தொல்லுலகில் அம்மானை!
சோகமிது சூழ விவேகமென்ன அம்மானை!

ஆறுவதைப் புண்என்பார் அன்னைத் தமிழ்வகுப்பு
ஆறுவரை இல்லையெனில் ஆறாப்புண் அம்மானை!
ஆறு,வரை இல்லையெனில் ஆறே கரைமீறும்
நேருவதைப் பின்பகைவர் நெஞ்சுணரும் அம்மானை!
நீடிக்கும் வாழ்க்கையிலா வேடிக்கை அம்மானை!

மங்கிவரும் மாலை மதிதேயும் காட்சியிலே
இங்கிவர்கள் தமிழை எண்ணுகிறார் அம்மானை!
இங்கிவர்கள் தமிழை எண்ணுகிறார் என்னுமொரு
கங்குலறும் காலம் கனிந்துவரும் அம்மானை!
காலைச் சுடராக்கிக் காட்டுகிறோம் அம்மானை!

த. நேசன் - கரு. வேலுச்சாமி
1975.4.6

# 86. தமிழ்நிதிக்கோர் அம்மானை!

தாய்மொழிக் கல்விக்குத் தாழிட்டால் சீர்மையெனும்
ஆய்மொழி அற்றோர் அறிவற்றோர் அம்மானை!
ஆய்மொழி அற்றோர் அறிவற்றோர் தம்முரையும்
வாய்மையெனப் போற்றி வழங்கொருசார் பம்மானை!
வாழும் தமிழ்வீழ வக்கணையீ தம்மானை!

ஊழி முதற்கொண்டே ஊறுகளி லூர்ந்துவந்து
ஆழிப் புடைப்பினிலும் அஞ்சவில்லை அம்மானை!
ஆழிப் புடைப்பினிலும் அஞ்சாத தேன்தமிழை
நாழிக் கிணறா நனைத்துவிடும் அம்மானை?
நண்டுசென் றேறிக்கரை கண்டகதை அம்மானை!

பெற்றாள் தமிழச்சி; பேணிப்பால் தந்தாள்சீ!
உற்ற பிறப்பதுவும் உண்மையதோ அம்மானை!
உற்ற பிறப்பதுவும் உண்மையெனில் தாய்தமிழை
எற்றும் இவர்பிறப்பு எப்பிறப்போ அம்மானை!
இல்லை! தமிழ்ப்பிறப்பே இல்லையவர் அம்மானை!

அள்ளிக் கொடுக்கஉண்டு ஆயிரம் 'பாச்சாக்கள்'[1]
சொல்லிக் கொடுக்கஉண்டு 'தூய்நேசன்' அம்மானை!
சொல்லிக் கொடுக்கஉயர் தூய்நேசன் ஈங்கிருக்கக்
கல்லும் கனியாகிக் காணாதோ அம்மானை!
கன்னித் தமிழமுதம் பேணாதோ அம்மானை!

உள்ளத் திறனுண்டு உண்மைத் தமிழுண்டு
கள்ளத் தனமெல்லாம் காய்ந்தோடும் அம்மானை!
கள்ளத் தனமெல்லாம் காய்ந்தோடும்; ஊடாடி
மெள்ளத் தமிழினிமேல் மேலோங்கும் அம்மானை!
மேலோங்க ஓங்கநிதி நீளோங்கும் அம்மானை!

---

*1 தமிழ்நேசன் நாளிதழ் தொடங்கிய தமிழ்ப்பள்ளி மாணவர் கல்வி உதவி நிதியைத் தொடக்கி வைத்தவர் பாச்சா.*

தண்டும் 'தமிழ்நிதி' சார்ந்துநிறை கூர்ந்தலர்ந்த
மண்டும் பனிப்பகையை மாய்த்திடுவோம் அம்மானை!
மண்டும் பனிப்பகையை மாய்த்துஒளி கூட்டியிவண்
வென்று வினைமுடிக்க வேண்டுவம்யாம் அம்மானை!
வெல்லத் 'தமிழ்நேசர்' வாழியரோ அம்மானை!

த. நேசன் - எல்லோன்
1975.4.13

# 87. மொழி - இனம் - பண்பாடு

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே தோன்றிக்
காத்தகுடி மூத்தகுடி தமிழர்குடி என்பார்;
கள்குடித்துப் பீர்குடித்துச் சாராயம் குடித்துக்
கனத்தகுடி பெருத்தகுடி காரர்களாய் ஆனோம்;
பல்குடிகள் வாழ்கின்ற மலேசியத்தில் கடைசிப்
படிகளிலே நின்றபடி பார்க்கின்ற குடிநாம்;
வல்குடிகள் வளமான தொல்குடிகள் என்ற
வரலாற்றைப் புதுப்பிக்கப் புறப்படுவோம் வாரீர்!

எங்கெங்கும் என்றென்றும் எப்போதும் பேச்சு!
எவர்கேட்டார்? அவரவரும் யாருக்கோ என்பார்?
சங்கங்கள் தீர்மானம் நடக்கட்டும் ஒருபால்,
தலைவர்கள் நம்மினத்துத் தலைவர்கள் சுடரும்
தங்கங்கள் யாரேனும் முன்வந்தே சாதிச்
சங்கங்கள் வரலாற்றை முடித்துவைக்க வேண்டும்;
சிங்கமெனச் சரித்திரத்தைத் திருப்பியவர் எங்கள்
தலைவரென அவர்தாளில் நம்தலையை வைப்போம்!

ஒன்றுபட ஒன்றுபட்டு வென்றுவிட இங்கே
ஒவ்வொன்றாய்ச் சங்கங்கள் கண்டுவந்தோம் நன்றே!
கொன்றுவரும் நம்மினத்தைக் குலைத்துவரும் சாதிக்
கொடும்பெயரில் நாமிங்கே சங்கங்கள் கண்டோம்;
ஒன்றுபட வேண்டுமெனின் ஒருசாதிக் கொன்றாய்
உருவான சங்கங்கள் ஒழித்திடுவோம் என்றே
நன்றுபல மேடைகளில் நல்தலைவர் பேச
நாமெல்லாம் கைகொட்டி வரவேற்றோம் நன்றே!

சித்தத்தில் ரத்தத்தில் சேர்ந்ததுபண் பாடு;
சிதையாமல் காப்பதற்கு மொழிதான்முதல் தேடு;
ரத்தத்தின் ரத்தமெனும் பேச்சர சியலாம்;
ரத்தத்தின் உணர்வுகளை ஏற்றுமொழி யியலாம்
சித்தத்தில் மொழியுணர்வும் ரத்தத்தில் நமது
தேன்தமிழின் இனவுணர்வும் சேர்த்ததனை வளர்த்து,
மொத்தத்தில் நாம்தமிழர் என்றிங்கே சேர்வோம்!
முன்னேற்றம் முன்னேற்றம் எனும்வழியே செல்வோம்!

த. நேசன் - கரு. திருவரசு

## 88. தமிழ் மணக்க

பெண்கல்வி வேண்டுமென்ற பெரிய உள்ளம்,
பெண்மைக்கே மதிப்பளித்த பெருமை வெள்ளம்,
எண்கல்வி எழுத்தறிவு ஏற்று யர்ந்தும்
இல்வாழ்வே நல்வாழ்வாய் அமைக்க நல்ல
கண்கல்வி வேண்டுமென்றே ஆய்ந்தும் ஆய்ந்தும்
கணக்கில்லாப் புரட்சிசெய்து கனவி லாழ்ந்தும்
பெண்கல்வி பெருகிடவே வழிச மைத்தார்,
பெண்ணெல்லாம் அறிவுணவு பெறவும் செய்தார்!

உணவளித்த உள்ளங்கள் நோக வல்ல
உப்பற்ற குப்பைகளைக் கன்னி கற்றாள்!
கனவளித்த வளவாழ்வு கானல் ஆகக்
கன்னியவள் கற்பனையால் மாசு பெற்றாள்!
நினைவளித்த நெறிபிழையால் நேர்மை யின்றி
நினைப்பின்வழிச் சென்றிடவா கல்வி கற்றாள்?
தனையளித்த தாய்குலத்துத் தன்மை மீறித்
தரமற்றுச் செயல்புரியத் திண்மை யுற்றாள்!

நிலையிழந்த இந்நிலையும் குலைய வேண்டும்!
நேர்மைமிகு அறிவுச்சுடர் எரிய வேண்டும்!
கலையிழந்த கன்னிநிலை மாற வேண்டும்!
கலைக்காகத் தமிழ்உள்ளம் வாழ வேண்டும்!
நிலையிழந்த நெறிகண்டால் உமிழ வேண்டும்!
நேர்மைக்காய் நெஞ்சுயர்த்தி நிமிர வேண்டும்!

சிலைமிழந்த தமிழ்க்கோயில் கோவி லாமோ?
சிறப்பிழந்தால் செம்மைநிறை கன்னி யாமோ?

த. நேசன்
1967.5.28

- திருமதி உஷாநாயர்

## 89. தமிழென்றன் கண்!

பொன்னும் மணியும் புவியாளும் நற்பேறும்
என்னை அணுகிடினும் ஏற்பேனோ? - புன்மனத்தர்
எண்ணி அழிக்கவரின் இன்னுயிரை நான்மதியேன்
கன்னித் தமிழென்றன் கண்!

கவிம.
1976

- மா. இராமையா

## 90. உமறுபுலவர் தமிழ்ப்பள்ளி வாழ்க!

தமிழ்மணக்கச் சிங்கைத் தடநகர்ச்சீர்ப் பள்ளி
உமர்புலவர் தம்பேரால் ஓங்க - அமைத்தார்கள்
மிக்கமகிழ் கொண்டோம் மிகுசீர்க் கடையநல்லூர்
மக்களை வாழ்த்திமகிழ் வோம்.

### வேறு

படமாடும் தெய்வப் பணிக்கோயில் உண்டாமால்
நடமாடும் தெய்வர் நலமேவ அறிவும்
தடமான கலையும் தமிழ்ஓசை முழங்கக்
கடையநல்லூ ரார்செய் கலைக்கோயில் கண்டோம்.

### வேறு

தமிழ்ப்புலவோர் பெருமைகள் தமிழ்மக்கள் மறந்தாலும்
உமர்புலவர் தம்பெருமை உள்ளளவும் நிலைத்திருக்கும்
கமழ்பூவும் மணந்தேங்கும் கடையநல்லூர்ப் பெருமக்கள்
தமிழ்மணக்கத் தமிழர்புகழ் தான்மணக்கச் செய்தார்காண்!

நந்தமிழ்ச் சிறுவர்க்கு நாட்டுமொழி பயிற்றுவிக்கச்
செந்தமிழ்ச்சீர் உமர்புலவர் திருப்பேரால் பள்ளிகண்டார்
பைந்தமிழ்ச்சீர்க் கடையநல்லூர் பாராட்டத் தக்கமக்கள்
எந்தமிழ்க் கன்பரானார் என்றென்றும் வாழியவே!

சிங்கையிலே பள்ளிபல திறந்தவிடம் தெரியாமல்
பங்கமுற மூடிவிட்டார் பழுதாமால் பழிப்பாமால்
மங்களம்சேர் கடையநல்லூர் மறுமலர்ச்சி கொண்டமக்கள்
துங்கத்தமிழ்ப் பாடசாலை தோற்றுவித்தார் வாழ்த்துதுமே!

- ச. சா. சின்னப்பனார்

உ. த. வெ. ம.
1960 (பாடல் பாடப்பெற்ற ஆண்டு 1946)

# 91. செந்தமிழ்க் கோயில் வாழ்க!

உலகினிலே நேயமொடு வாழும் வண்ணம்
ஒப்பிலா மெய்ப்பொருளை யுணரும் வண்ணம்
பலகலைகள் சாத்திரமும் பயிலும் வண்ணம்
பக்திநெறி சன்மார்க்கம் பரவும் வண்ணம்
நலமேவும் நற்பணிகள் புரியும் வண்ணம்
நல்லதொரு சமுதாய மமையும் வண்ணம்
மலைநாட்டின் தமிழர்நிலை யோங்கும் வண்ணம்
வகையமைந்த கலைக்கோயில் வளர்க மாதோ!

### வேறு

செவ்வைநன் னெறியில் மக்கள் சென்றிட வறிவை யூட்டும்
எவ்வகை மொழிக்கும் மூத்த எம்தமிழ் மொழியைக் காக்க
அவ்வவர் தன்மைக் கேற்ப அளித்தநற் பொருளி னாலே
செவ்வையா யமைக்கப் பெற்ற செந்தமிழ்க் கோயில் வாழ்க!

- சி. குமாரசாமி

அ. த. உ. தி. ம.
1958.9.6

## 92. தமிழ் வாழ வழிகாணீர்!

சிங்கையிலோர் தமிழ்ப்பள்ளி சீரழிந்து
கடன்என்னும் பெருநோய்ப் பட்டுப்
பங்கமுற அயலார்கள் பார்த்துநகை
புரிவதைநாம் பார்த்தும் உள்ளம்
பொங்கலையா? தமிழ்த்தாயின் புத்திரர்காள்!
தன்மான உணர்வு பூண்ட
சிங்கங்காள்! எழுந்திருங்கள் செயற்படுங்கள்
செந்தமிழ்த்தாய் செழிப்புற் றோங்க!

உலகமொழி களுக்கெல்லாம் உயர்ந்தமொழி
தமிழென்று உரைத்தீர்! அன்பு
நிலவுதமிழ் மொழிபயிலும் நிலையம்வறு
மைப்பிணியால் நலிந்து வாடப்
புலமைமிக்கீர்! வீண்பெருமை பேசுவதால்
பயனிலைதன் மானம் காத்துக்
கலைவளர்க்கும் தமிழ்ப்பள்ளிக் 'கடனடைத்தல்
கட'னென்றே காசு தாரீர்!

வாணிகத்தால் இந்நாட்டை வளமாக்கும்
தனவணிக வழித்தோன் றல்காள்!
நாணும்நிலை வந்ததுகாண்! நல்லதமிழ்
போய்மறைய நாமெல் லோரும்
ஆண்மையற்ற பேடிகளா? அறிவழிந்த
மடயர்களா? அமுதம் போன்ற
மாண்புறுநம் தமிழ்வாழ வகைகாண
வரிந்துகட்டி வருவீர் இன்றே!

த. முரசு
1953.11.19

- கா. பெருமாள்

## 93. உலகத் தமிழா வருக!

உலகத் தமிழா! உனக்கோர் செய்தி
உன்னையும் என்னையும் படைத்தவள் தமிழ்த்தாய்!
அலைகடல் மலைகள் நிலத்தைப் பிரிக்கலாம்;
அனைத்தும் கடந்தது நம்தமிழ் உணர்வு!

கலையும் கவிதையும் கண்டநம் தமிழில்
கதிரவன் சாடும் அறிவியல் படைப்பாய்
தமிழ்மொழி உயர்ந்தால் தமிழன் உயர்வான்!
தமிழன் உயர்ந்தால் தமிழ்மொழி உயரும்!
அமிழ்தினும் இனியது தமிழ்வள மென்றால்
அகிலமும் அதனை ஏற்றிடச் செய்வோம்!
மலையக மடிசேர் மறத்தமிழ் அறிஞர்
மாநா டுறையும் தேனடை ஈக்கள்
'யாதும் ஊ'ரென ஓதும் தமிழின்
சீரைப் பெருக்கும் சிந்தனை யாளர்
உயிராம் தமிழின் உணர்வை வளர்க்க
உலகத் தமிழ்மா நாட்டை நடத்தும்
தலைவர், தமிழன் தனிநா யகரே!
நுங்கள் வரவுநல் வரவா குகவே!

த. நேசன்
1966, ஏப்பிரல்

- வே. சங்கு சண்முகம்

# 94. அன்னைத் தமிழே அருள்வாய்!

ஆயிரம் பல்லா யிரமாண் டுகளும்
ஆயினு மென்நின் சீரிள மைத்திறம்
மாறு படாதபேர் மாண்பினை வியந்து
பார்முழுது முள்ள பேரறி வாளர்
மலேசிய நாட்டின் தலைநக ரமெனும்
அழகிய கோலா லம்பூர் நகரினில்
பல்லின மக்கள் பயிலும் மலாயாப்
பல்கலைக் கழக வளாகத் துள்ளே
காய்தல் உவத்தல் கடுகள வின்றி,
ஆய்வு செய்யும் அரிய வாய்ப்பு
வந்த தெமக்கு யாம்பெற்ற பேறே!
செந்தமிழ்த் தாயே வாழிய! வாழிய!
வாரா மல்வந் திட்ட மாமணி
ஆறா வதுதமிழ் ஆய்வுமா நாடு
சீரும் சிறப்பும் பெற்றுப்
பாரோர் போற்ற நிறைவுற அருள்கவே!

தினமணி
1988.11.16

- அ. சண்முகம்

## 95. மாநாட்டுச் சிந்தனை

இன்பத் தமிழுக்கு மாநாடு! - அதில்
எழில்சேர் அறிஞராம் பூக்காடு
அன்புப் பணிசெய்வார் எல்லாரும் - தமிழ்
அழகாய்க் கொஞ்சிய தைக்கண்டோம்!
துன்பம் தீர்க்கும்நல் மருந்தேபோல் - நல்ல
தூய நெஞ்சங்கள் இருந்தாலும்
அன்னைத் தமிழ்மொழி நாடாள - இன்னும்
அருமை வழியினைக் காணோமே?

த. ஓசை - எ. அண்ணாமலை
1988.2.7

## 96. காண்போம்!

அன்பினில் இன்பம் காண்போம்;
அறத்தினில் நேர்மை காண்போம்;
துன்புறும் உயிர்கள் கண்டால்
துரிசறு கனிவு காண்போம்;
வன்புகழ் கொடையிற் காண்போம்;
வலிமையைப் போரில் காண்போம்;
தன்பிறப் புரிமை யாகத்
தமிழ்மொழி போற்றக் காண்போம்.

த. மலர் - புலவர் அ. முத்தையனார்
1967.5.14

## 97. தமிழ் போற்றி வாழ்வோம்!

அருளார்தமிழ் போற்றாவொரு புலவன்புவி இல்லை
அன்பார்தமிழ் பயிலாத்தமிழ் மகனாற்பெருந் தொல்லை
பொருளார்வலர் பணியார்வலர் தமிழார்வல ராவீர்
பொன்றாச்சுவை கண்டார்தமிழ்ப் புரிவைப்புரிந் தொளிர்மின்!

வருநாளினில் தமிழ்போற்றியே வளர்க்காவிடிற் சிறுமை
மதியார்தமிழ் மாண்பீர்தமிழ் வளர்ப்பீரது பெருமை
பெருநாழிகைப் பொழுதைத்தமிழ் உயிர்ப்பில்உற வாக்கிப்
பிழைநீங்கியே நனிவாழ்குவம் தமிழ்வாழ்ந்திடும் நலமே!

விழிமின்துயில் களைமின்அருள் புரிமின்தமிழ் பயில்மின்
வினைநீங்கிய மனமாசறு தமிழ்போதனை புரிமின்
அழிவின்விளிம் பதில்நிற்குநம் புகழ்ப்பண்பினை மீட்பீர்
அணையாவிளக் கொளிபார்தமிழ்ச் சுடரேந்திட முனைவீர்
விழிவிற்றுநீர் பழிபற்றிடும் கழிவின்மடம் கடப்பீர்
விஞ்சைத்தமிழ் செஞ்சொன்மறை அஞ்சாதிவண் படைப்பீர்
விழிமின்பல களங்கண்டநம் தமிழ்மாண்பினைக் காப்பீர்
வெல்லுந்தமிழ் வீறுந்தமிழ் மேன்மைநலஞ் சேர்ப்பீர்!

- வீ. கே. சுப்பிரமணியம்

# 98. மரணத்தில் கவிதைபாடு!

மூச்சுவிடும் நேரத்திலும் மூக்கிலே இருந்துகொண்டு
முறுக்கேற்றும் செந்தமிழ்த் தாயே - ஒரு
பேச்சுவிழும் நேரத்திலும் பெருவயிற்றில் வந்தமர்ந்து
பேராற்றல் நீயருள் வாயே!

கலைவண்ண அறமுட்டிக் கவிமன்னர் பலபேரும்
காவியத்தில் உன்னையே வைத்தார் - பின்
அலைதீண்டி, பகைதீண்டி, அனல்தீண்டி உனைப்பார்த்தும்
அவையாவும் வென்றுநீ நின்றாய்!

என்னுயிரே முப்பாலே என்வாழ்வின் கருப்பொருளே
எனக்கிங்குக் காவலினைப் போடு - நான்
மண்ணோடு கலந்தாலும் மணித்தமிழே எனக்காக
மரணத்தில் கவிதைநீ பாடு!

தினமணி
1983.3.6

- திருக்குறள் மணியம்

# 99. மயக்கத்தில் பாடுகிறேன்!

குடித்த மயக்கத்தில் பாடுகிறேன்! - அது
கொடுத்த மயக்கத்தில் ஆடுகிறேன்!
படித்த மயக்கத்தில் எம்புலவர் - உளம்
வடித்த மயக்கும் கவியமுதை... (குடித்த)

தொடுத்த அகம்புறம் திணைசார்ந்து, - எட்டுத்
தொகையொடு பத்தென வகைதேர்ந்து,
படைத்த பதினெண் கீழ்க்கணக்கும் - நெஞ்சம்
பற்றும் காப்பியம், பல்சுவையும்... (குடித்த)

எடுத்த செயலெலாம் அறமாக - அஃது
இணைந்த வரவெல்லாம் பொருளாக
பிடித்த உறவினால் இன்பாக - வீடு
பிணைத்திடும் குறளை அன்பாக... (குடித்த)

முத்தனை மூவரின் தேவாரம்! - மணி
முழங்கு வாசகர் பாவாரம்!
சித்தினில் வல்லார் மந்திரமும் - சுவை
சேர்ந்தொளிர் புராணங் கள்திறமும்... (குடித்த)

கம்பரின் ராம காவியமும் - புகழ்
கலம்பகம், பதிகம், சீவகமும்,
உம்பரின் சீறா, அந்தாதி - பள்ளு
உயர்தமிழ் தேம்பா, ஏலாதி... (குடித்த)

உறவுகள் - ஆதம்குமார்
1979

# 100. மொழிநலம் காப்போம்!

உணவோ உடையோ உறையுளோ மற்றும்
உறவிலும் தூய்மை விழைகின்றோம்!
உணர்வின் ஆக்கப் பிழிவாம் மொழியை
உதறி எங்கோ விரைகின்றோம்?

முனம்நாம் இழந்த இழப்பின் கணக்கை
முழுதும் அளக்க வாய்ப்பேது?
மணக்கும் தூய மொழிநலம் பேணி
வளர்ப்ப தல்லால் காப்பேது?

1984 - எல்லோன்

## 101. அசை

முற்றக் குறில்நெடிலும் மேவுமொலிக் குற்றிரண்டும்
பற்றி இணைந்திடினும் பற்றாமல் - ஒற்றடுத்தும்
ஈற்றில் தனித்தே இருந்திடினும் அத்தனையும்
ஆற்றும் நிரைநேர் அசை!

- இரா. நெ. இசுமாயில்

## 102. மார்க்கமொன்று சொல்லாய்!

'வாழ்கதமிழ்' என்றிந்த வையம்பிளக்க
வாழ்த்தொலிகள் முழங்குகின்றார் மலைநாட்டுத் தமிழர்!
வாழ்கதமிழ் என்பதனால் வாழ்ந்திடுமோ தமிழ்தான்
வகையாற்றும் தமிழ்க்கூட்டம் சோம்பிக்கி டந்தால்!

பால்மரம்[2]த்தைச் சுற்றிவரும் பைந்தமிழ ரறிவைப்
பாழ்க்குகையிற் போட்டடைத்துப் பகுத்தறிவை யோட்டி,
கோலெடுத்துக் கல்விப்பூங் கொடியாளைத் தாக்கிக்
கொல்லும்நிலை யுள்ளமட்டும் குறையொழிந்து போமோ?

தன்மான மில்லாத தறுதலையர் கூட்டம்
தாய்மொழியிற் பேசுதற்கே தயங்குமிந்த நாளில்,
'பொன்மொழியாம் எங்கள்தமிழ்! புகழ்சார்ந்த' தென்று
புலம்புவதால் தமிழ்வளர்ந்து பூத்திடுமோ சொல்லாய்?

---

*2 பால்மரம் - ரப்பர்மரம்*

கோள்முட்டித் தம்மினத்தைக் குட்டையிலே தள்ளும்
குறுமதியர் உன்னிடையே குவிந்திருக்கும் போது
'வாளெடுத்து எம்மொழியின் வன்பகையை மோதி
வதைத்திடுவோ' மென்பதனால் வளர்ந்திடுமோ தமிழ்தான்?

'தாள்வருடி அடிமையெனுஞ் சாக்கடையில் வீழ்ந்து
தவிப்பதையே மோட்ச'மெனும் தன்மான மிழந்தோர்
மீளும்வகை காணாது வெளிப்பகட்டுக் காக
மேன்மைதனைப் பேசுவதால் மீட்சியுண்டோ சொல்லாய்?

விண்ணெறிக்கும் ரவிபோல மையிருட்டைப் போக்கித்
தண்ணென் றொளிவீசும் வெண்ணிலவு போலும்
பண்கூட்டிப் பாவிசைக்கும் பைந்தமிழாம் தாயே!
பண்படைந்தே வாழ்வதற்கு மார்க்கமொன்று சொல்லாய்!

- கா. பெருமாள்

ச. மணி
1954.6.4

## 103. கைகட்டி நில்லோம்!

அறம்பேசும் மறங்கூறும் அறிவுக்கே உரம்சேர்க்கும்
அன்புமொழி தமிழ்கற்கத் தடையா?
குரங்குகளின் கைகளிலா கொடுத்துவைத்தோம் பூமாலை
கும்மாளம் போடுகிறார் ஆங்கே!
தரம்கெட்டோர் திறன்அற்றோர் தமிழர்கள் கதியற்றோர்
தற்குறிகள் என்றுநினைத் தாரோ?
உறங்குகின்ற இனம்தானே உரசித்தான் பார்ப்போமே
உணர்ச்சிதனை என்றுமுனைந் தாரோ?

தங்கநிகர் தமிழிற்குத் தனிப்பிரிவு வேண்டுமென்று
தலைவர்கள் விடுத்தஆணை ஏற்றே
எங்களுயிர் எங்களுயிர் என்றுசொல்லிச் சிறுதுளியாய்
எப்பாடோ பட்டுநிதி சேர்த்தோம்
பொங்கியெழும் உணர்ச்சிக்குப் புதுத்தடையை விதிப்பதற்குப்
புறப்பட்ட தென்னஅறி வீனம்
உங்(கு)அசீஸ்[3] தலைமையிலே உயர்கல்வி கற்றவர்கள்
ஒன்றுகூடிச் செய்வதுவோ ஊனம்?

---

*3 உங்கு அசீஸ் - மலாயாப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர்*

பலகலைகள் பெற்றிடவும் பலமொழிகள் கற்றிடவும்
பாரிலுள்ள மற்றவர்கள் முனையச்
சிலமொழிகள் இருப்பதையும் தேய்த்துவிட முயல்கின்ற
தீவிரமா தேசீயம் இங்கே?
உலகமொழி எல்லாமும் உய்த்தறியும் திட்டத்தில்
உறவுமொழி தமிழிற்கு மட்டும்
விலகியிரு எனும்பேச்சு வேதனையைத் தருமென்று
விளக்குவது வெறித்தனமோ உங்கு?

சட்டத்தைப் பயன்படுத்திச் சமூகத்தின் உயிர்மீது
சகதிகளைப் பூசுவதோ உரிமை?
தட்டியதைக் கேட்டாலோ தனிக்காட்டு ராஜாபோல்
தருகின்றார் விடைஅதுவோ பெருமை?
பட்டுக்கா அலைகின்றோம் பதவிக்கா திரிகின்றோம்
பகட்டுக்கா அழுகின்றோம் நாங்கள்?
கட்டியுள்ள கோவணமும் கழற்றிவிட முடிவெடுத்தால்
கைகட்டி நின்றிடவோ வேண்டும்?

த. ஓசை
1987.7.19

- மைதீ. சுல்தான்

## 104. ஐயா எழுத்தாளரே!

பேனா பிடித்த பெரியஎழுத் தாளர்கட்கு
நான்தான் பிடாரிக்கண்ணு நயமாகச் சொல்லுவன:
ஐயா எழுத்தாளரே, ஆருக்காய் எழுதுகிறீர்?
பொய்யைப் புனைசுருட்டைப் போற்றிப் புகழாமல்
நாட்டு நடப்பறிந்து நாட்டவர்க்காய் எழுதுமய்யா!
காதலியுங் காதலனுங் கட்டையிலே போறதுவும்,
சங்ககா லத்தமிழர் சாதித்த வைகுறித்தும்,
வாகான தமிழ்நாட்டில் வாழ்ந்தகதை பேசுவதும்,
சாகாத 'தமிள்சிரந்த' சழக்கை முழக்குவதும்
ஓயாவா? உங்கள்பேனா ஓடியாவா? உள்ளூரார்
வாழ்ந்த நிலையறிவீர் வாழும் விதமறிவீர்!
தாழ்ந்த சமூகமாய்நாம் சாய்ந்த கதைசொல்வீர்!
'தமிழெங்க ளுயி'ரென்பீர்! தயிரைத் தயிறென்பீர்!
அமிழ்தென்றால் தமிழென்பீர்! அரிச்சுவடி யறியீர்!
குறளெங்கள் மறையென்பீர்! குறைகண்டால் கோபிப்பீர்!

ஒல்காப் புகழ்படைத்த தொல்காப் பியமென்பீர்!
ஒருநாளும் அதைநீர் கண்ணாலே கண்டறியீர்!
கம்பன்புகழ் பேசுவீர்! கவிதைகட்டி[4] விலைகேட்பீர்!
பெண்ணைத் தெய்வமென்பீர்! பெற்றவளை அவளென்பீர்!
அன்னை அவளா? அக்காஅவளா? அப்பொழுது
அண்ணன் அப்பா ஆகியோர்கள் அவன்களா?
கேள்வியொன்றை வாயாற் கேட்டல்சரி யேகாதாற்
கேள்விக்கு வந்த பதிலைக் கேட்டலெங்ஙன்?
ஏழாம் வகுப்புமட்டும் பாலாகி விட்டபின்பு
ஜாலான்[5] ஸ்கோலா[6] ஜாடிடீச்சர் போலேக்கா?[7]
பழையதமிழ் படிக்காமல் புதியபிராக்டிஸ் செய்யாமல்
டீக்காக டீச்சராகி டீச்சிங்என்ன செய்யஏலும்?
பாடப் புத்தகங்கள் பிழைமலிந்து கிடக்கையிலே
படிக்கும் பிள்ளைகட்குத் தமிழறிவு எங்குவரும்?
பத்திரிகைக் காரர்களும் 'பட்டுகொண்டு விட்ட'[8]தமிழ்
பத்திபத்தி யாய்நித்தம் பரப்பி வருகையிலே
ரேடியோக் கலைகாரர் நாடிநரம் பயர்ந்தவராய்
'மாலைமணி ஆரு?'என்றும் 'செய்தி அரிக்கை'யென்றும்
'எளுவத்தி மூணு'என்றும் 'எம்பத்தி ஒண்ணு'என்றும்
பள்ளியொலி பரப்பார் பாடக்கொலை செய்துவரச்
சினிமாப் பிரம்மாக்கள் சிரித்தடிக்குங் கவிதையிலே
இனிநாம் உருப்படாமல் எல்லாமுஞ் செய்துபோட்டார்!
என்னத்தை யாரிடத்தில் எப்படிச் சொல்லியழ?
கைப்புண்ணைப் பார்ப்பதற்குக் கண்ணாடி யாவேண்டும்?

---

*4 கட்டி - எடை, 600 கிராம்*

*5 ஜாலான் - சாலை*

*6 ஸ்கோலா - பள்ளி*

*7 ஜாலான் ஸ்கோலா ஜாடி டீச்சர் போலேகா என்னும் தொடரின் குறிப்புப்பொருள் - "ஏழாம் வகுப்பு மட்டுமே பயின்ற மாணவன் ஆசிரியப் பொறுப்பு ஏற்கலாமா? ஏற்றால் நிலைமை என்னாகும்?" என்பதாம்.*

*8 பட்டு, கொண்டு, விட்ட - முதலிய துணைவினைகளை அவர் கடுமையாக எதிர்த்தார். சான்றாக,*

*அ) பட்டு - சொல்லப்பட்டு, காணப்பட்ட முடிவு, விடப்பட்ட தண்ணீர்;*

*ஆ) கொண்டு - எடுத்துக்கொண்டு ஓடினான், சொல்லிக்கொண்டு வந்தான், கேட்டுக்கொண்டிருந்தான்;*

*இ) விட்ட - போய்விட்டது, விட்டுவிட்டான், பிடித்துவிட்டான் போன்ற வழக்குகளைக் கடுமையாக எதிர்த்தார். இவ் வழக்குகளால் தமிழின் இயற்கை அழகு கெட்டது என்றே வலியுறுத்தினார்.*

*ஆதார நூல் : பேசத் தெரியுமா?*

தமிழிற்கு உற்ற தலைகவிழும் நிலைகண்டு
தமிழியக்கம் நடத்த வழிநடப்பீர் இன்றேநீர்!
பேச எழுத உழைத்துண்ண
வாழ வழிகாண்பீர், வண்ணத் தமிழரே!

ச. மே. ம. - சுப. நாராயணன்
1956.5.1

# 105. மொழியும் இனமும்

கதைகளிலே கவிதையிலே கவின்தமிழின்
தனித்தூய்மை காப்ப தற்கு
விதையிடுவோர் தமிழுக்கு வித்தாவர்
எழுத்தாளர் கவிஞ ரென்பேன்
அதைவிடுத்தே பன்மொழிச்சொற் பயின்றுவரப்
படைப்புகள் உலவு மாயின்
பதைக்குமனம் குடும்பப்பெண் பாதியுடை
யணிந்துஉலா வந்தாற் போலே!

உலகிடையே நாட்டிடையே ஊரிடையே
மக்களுக்குள் பலவா றாக
நிலவுகின்ற இனமொழிகள் நீட்டுகின்ற
கதையெல்லாம் நெஞ்சில் தோன்றும்
அளவிறந்த ஆசையெனும் புதைகுழியில்
புதைத்துவிட்டுப் போதை கொண்டே
உளறுமொழி உண்மையென்றால் ஓரினத்திற்
கடிமைசெயும் உத்தி என்ன?

எழுதுவதும் பேசுவதும் இயக்குவதும்
இயங்குவதும் இனத்தைக் காக்கத்
தொழுவதுவும் துலக்குவதும் தொடர்ந்துவரும்
ஓரினத்தின் செய்கை தன்னை
அழுகிவரும் மெய்மத்தில் அணிந்துவரும்
புழுக்களென நெளிதல் கண்டேன்
பழுதான கருத்துகள் விழுதாகா
ஒருநாளும் இனவாழ் விற்கே!

கனல் - அ. பு. திருமாலன்
1979, மே

## 106. தமிழுறவு

தனிமையிலும் இனிமைதரும் சங்கத்தமிழ்ப் பாட்டு! - என்
தாய்பாடக் கண்மலர்ந்தேன் சந்தநயம் கேட்டு.
கனிவுவரும் களிப்புதரும் கற்கமகிழ் வூட்டும்! - இளங்
கன்னல்நிகர் கன்னித்தமிழ் கவிதைமெரு கூட்டும்.

ஊனுருகி உளமுருகி உள்ளுணர்வைக் கிள்ளும்! - கவிக்
கற்பனையில் என்மனமோ களிப்புடனே துள்ளும்!
நானுருகி இன்பத்தில் நடமாடு கின்றேன் - வரும்
நாளெல்லாம் தமிழோடு உறவாடு கின்றேன்.

இருந்தாலும் இறந்தாலும் உலகம்வெறுத் தாலும் - எனை
உதவாதான் என்றிகழ்ந்தே எட்டிஉதைத் தாலும்
கரும்பான தமிழோடு கவிபாடித் திரிவேன் - இளங்
கதிர்போலே உலகிற்குக் கடமைதனைப் புரிவேன்.

- பொன். நாவலன்

## 107. கடமையாய்க் கருதுவாரோ?

பெருமைக் குகந்தபெரும் புலவர்க்கு நம்மவர்கள்
பெருமையைச் சேர்க்க வேண்டும்;
புகழோ டிருந்துபுகழ் குன்றாதொ ளிர்ந்ததமிழ்ப்
பாணரைப் போற்ற வேண்டும்;
திறமைக்குத் தக்கதொரு பரிசாண்டி லொருதடவை
தருதற்கு முயல வேண்டும்;
தகைமைக்குத் தக்கதொரு விருதூட்டி மண்புகழச்
சீர்தந்து காக்க வேண்டும்;
தரணிக்கு மேன்மைதரு மளவுக்குத் தமிழ்காத்த
சேவகர்க் குதவ வேண்டும்;
தமிழென்று மிப்புவியி லொளிவீசு தற்குத்தமிழ்ச்
சங்கங்கள் தோன்ற வேண்டும்;
கறையற்ற கல்விமுறை கற்பிக்க நல்லதொரு
கல்லூரி கட்ட வேண்டும்;
கனமுள்ள நம்மவர்க ளிவைபோன்ற நற்பணிகள்
கடமையாய்க் கருது வாரோ?

- டி. வி. இராகவன் பிள்ளை

த. நேசன்
1977.8.31

## 108. தமிழின் நிலை!

“கல்வியெனும் செல்வந்தான் வேண்டும்; இங்கே
கனிந்துவரும் தாய்மொழியின் பற்றால் ஆகும்
நல்வினையும் உண்டாமோ?” என்பார்; “வாய்க்கும்
நறுமொழியில் அறிவுபெற்றால் போது” மென்பார்;
"எல்லாமும் இவண்தமிழால் அறிய வாய்ப்பே
இல்லை”யெனச் சிலர்கவல்வார்; சிலரோ நெஞ்சின்
உள்ளுறையும் எண்ணத்தை மூடி வீணே
உதட்டளவில் தாய்மொழியைப் புகழ்ந்து ரைப்பார்!

காலத்தின் வேகத்தை எண்ணி டாமல்
கதைகதையாய்த் திட்டங்கள் முழங்கி வைப்பார்
கூளத்தைப் போல்இங்கே பல்லி டத்திற்
குவித்துவைக்கும் திட்டங்கள் எருவாய்க் கூடக்
காலத்தில் பயன்நல்கா; யாரும் இங்கே
கருத்துகள் திரட்டியுயர் குமுகா யத்தின்
வாழ்வோங்கப் பெருநிலையைச் சமைக்க எண்ணும்
வழிகாணும் நோக்கத்தில் இயங்க வில்லை!

மரத்திற்கு வேரேதான் மூலம்; மேலே
வளர்கின்ற கொடிதழுவி வேரை விட்டால்
மரத்திற்கு வாழ்வுண்டோ? எதையேற் றாலும்
மனம்நல்ல அடிப்படையைக் காக்க வேண்டும்;
உரத்திற்குத் தமிழ்வேண்டும்; நாட்டின் மேன்மை
உயர்தற்குத் தேசியநன் மொழியே வேண்டும்;
திறத்தோடித் தன்மைகளை ஆய்ந்து கண்டே
சிறந்தவழி காணுகென வாழ்த்து கின்றோம்!

மு. த. க. வ. மா. ம. - முரசு. நெடுமாறன்
1975

## 109. முருகனுக்கு அழைப்பு

அருந்தமிழ்த் தெய்வ மென்றே அன்புடன் தமிழர் போற்றும்
திருமுரு காவு னக்குச் சாற்றுவேன் கேட்டுக் கொள்வாய்
விரிகடல் சூழ்வை யத்துள் விழுப்புகழ் பெற்றி யங்கும்
பெருந்தமி ழுனக்கா காதோ? பாவலன் எனக்கு ரைப்பாய்!

வடமொழி தானு னக்கு விருப்பமா? தமிழ ரெல்லாம்
மடமையோர் என்று நீயும் மனத்தினில் நினைக்கின் றாயா?
உடனடி யாயெ னக்கு உரைத்திடு இல்லை யென்றால்
குடிகொளும் இடத்தை விட்டுக் குமரனே வெளியில் வாராய்!

தமிழினம் வணங்கு கின்ற தனிப்பெரும் முருகா! அந்தத்
தமிழனின் தாயா மின்பத் தமிழினைப் புறக்க ணித்துத்
தமிழர்க்குப் புரிந்தி டாத சமக்கிருத மொழியில் வாழ்த்தித்
தமிழரை இழிவா யெண்ணும் சழக்கரைத் திருத்து வாயே!

வழக்கற்ற மொழியா லுன்னை வணங்கிடும் செயல்வி டுத்துப்
பழுதிலாத் தமிழால் போற்றிப் பாடிடச் சொல்க! அன்றேல்
வெளியில்வா; வெளியில் வந்து வியன்றமிழ் மொழியைக் காக்கும்
உளத்தினைக் கோவி லாக உன்னியே அமர்ந்து கொள்க!

த. நேசன் - குருவானந்தர்
1974.1.13

## 110. அறிவியல் தமிழ்

அறிவியலுக் கேற்றபடி தமிழை மாற்றும்
ஆய்வுகளை மேற்கொள்ளல் நலம்ப யக்கும்;
பொறியியலில் பூத்திருக்கும் கதிர்கள் எல்லாம்
புதுமைகளை அறுவடையாய் வழங்கும் போது
பொறியியலை வழங்குகின்ற நூல்க ளின்றேல்
போகின்ற வேகத்தில் பின்னே நிற்போம்;
ஒருமொழியில் உலகத்தின் அனைத்துக் கூறும்
ஒருங்கேநாம் பெறுவதற்குத் தமிழைக் கற்போம்!

உலகத்தில் எண்பதுக்கு மேலும் உள்ள
உயராய்வுக் கூடங்கள் தமிழை வைத்தே
நிலத்தாய்வும் நீருக்கும் அடியி லுள்ள
நகரங்கள் சிற்பங்கள் பொருள்கள் கண்டும்
உலகத்தின் தொல்பொருளைத் தோண்டித் தோண்டி
உணர்த்துவது தமிழ்மொழியின் ஆற்ற லால்தான்;
பலகற்ற பண்டிதர்கள் இதைஉ ணர்ந்து
பதுங்காமல் மொழிச்சிறப்பை உணர்த்த வேண்டும்!

மூத்தமொழி இலக்கணத்தால் முதிர்ந்து நிற்கும்
உலகமொழி தமிழென்று மொழிதல் மட்டும்
மாற்றுவழி யாகாது விஞ்ஞா னத்தின்
விருந்துமொழி மருந்துமொழி தமிழ்தான் என்று
போற்றுவதும் உலகத்தார் நாட்டார் எல்லாம்
புரிந்துகொள வைப்பதுவும் ஆகும்! இந்த
மாற்றத்தை உடனேநாம் மேற்கொண் டால்தான்
மடிநீங்கிக் களிபொங்கித் தமிழ்த்தேர் ஓடும்!

1987 - தீ. சி. பொன்னுசாமி

## 111. இலக்கியம் எங்கே போகிறது?

இலக்குகளைக் காட்டியொரு இயக்கத்தை நடத்துதலே
இலக்கியம் என்று ரைப்போம்
வழக்குகளை விட்டொழிக்கும் வாய்ப்பறையார் புதுமையென்றே
ஒழுக்கங்கள் விட்டொ ழித்தார்
பழக்குலையாம் செந்தமிழ்சேர் பனுவல்களின் உடையவிழ்த்தார்
பண்புடையார் அஞ்சும் வண்ணம்
விலக்கமுடி யாததெல்லாம் விலக்குகிறார் இன்னவரை
விலக்குவதும் எந்த நாளோ?

தெருப்பக்கம் கண்வீசும் சிற்றிடையார் காலிடுக்கில்
தேமலது கண்டு பிடிப்பார்
பருவத்துக் குன்றுகளின் பள்ளத்தாக் கென்றுரைப்பார்
பட்டொளிரும் மச்ச மென்பார்
ஒருபக்கம் நாலுவரி இருசொற்கள் உடைத்தவற்றை
இடமாற்றி அச்சுக் கோப்பார்
உருவான புதுக்கவிதை இதுதானென் றிறுமாப்பார்
உயர்கவிதை வாழ்வ துண்டா?

காரளந்த கூந்தல்மகள் கண்ணகியின் காற்சிலம்பில்
கற்பைவைத்துக் காவியம் செய்தோன்
சேரன்தம்பி இளங்கோவும் செத்திருக்க மாட்டானா
'செக்ஸ்'கவிஞர் கூட்டம் பார்த்தே?
பாரளந்த வள்ளுவனும் பாவாடை அளக்கின்ற
பாவலரைக் கண்டி ருந்தால்
சீரழிந்த தமிழ்நாட்டை, சிறப்பிழந்த பண்பாட்டைத்
தீயாகி எரித்தி ருப்பான்!

பாரதியும் தலைப்பாகை விட்டெறிந்து துகிலுரியும்
பாஞ்சாலி மானம் காப்பான்!
சாரமிகு கவிகனக சுப்புரத் தினமுமே
சஞ்சீவி மலையே றுவ்வான்!
சீரழிந்த படுக்கையறைச் செய்திகளைப் படம்போடும்
செந்தமிழர் நாட்டிற் குள்ளே
மாரடிக்கும் பெண்மையது போரடிக்கும் உண்மையிது
பாழடிக்கும் எதிர்கா லத்தே!

இலக்கியம் - ஐ. உலகநாதன்
1978, திசம்பர்

## 112. பினாங்கிலே தமிழ்!

பொதிகை பிறந்துவந்து மதுரை தவழ்ந்திருந்து
அதிகப் புகழ்தமிழ் குவித்தது - ஒரு
விதிகைப் படவளைந்து, விளையாப்பயி ராய்ச்சிதைந்து
வினையால் பினாங்குவந்து செத்தது!

அன்று இருந்துபல அன்பர் அரவணைத்து
அன்னைத் தமிழ்வளர்த்துப் பாடினார் - அவர்
இன்று வணிகம்என்றும் இன்னும் பணிகளென்றும்
இவளைத் தெருவில்விட்டு ஓடினார்!

மன்றம் எனஅமைத்தார் மனத்தில் தமிழ்நினைந்தார்
மணிகள் பணிகள்பல ஆற்றினார் - இன்று
நன்று விளையாட்(டு) என்றும் பயணமென்றும்
நடந்தேவெவ் வேறுதிசை நோக்கினார்!

நால்வர் எனஇருந்தார் நல்ல கவிபுனைந்தார்
நாளும் தமிழின்புகழ் நாட்டினார் - இவர்
நால்வர் நாலுதிசை நழுவி நடந்தபின்னர்
நலிவைத் தமிழ்க்கழுத்தில் ஏற்றினார்!

தமிழின் துணைவர்என்றும் தகைசால் அறிஞர்என்றும்
தலைவர் பலர்இருந்தார் பினாங்கிலே - இன்று
தனியர் தனியர்எனத் தத்தம் நலம்நினைந்தார்
தமிழைத் தனியிடத்தில் வீசினார்!

கடல்சூழ் கவினமைந்து கவிதைச் சுவைமிகுந்து
கலைசூழ நின்றதமிழ்த் தாயவள் - இவள்
உடல்தூக் கிடவுமின்று உறவோர் இலாதநிலை
உளதாகு மோஇந்தப் பினாங்கிலே?

த. நேசன் - ரெ. கார்த்திகேசு
1982.11.28

# 113. கல்விப்பாதை

ஓங்கல்முகத் திருநாடு, பசுமை யாடை,
ஒய்யாரப் பேராறு, மாலை வண்ணம்
தேங்கிவிழும் நல்லருவிப் புன்சி ரிப்பால்
திருவெல்லாம் உண்டென்றே சொல்லும் அன்னை!
ஈங்கடைந்தோம் இருநூறி யாண்டின் முன்னே
எண்ணியொரு நூறாண்டின் முன்தான் இங்கே
பாங்கொளிரும் தமிழிற்குப் பள்ளி கண்டோம்;
பல்லாண்டாய்ப் படிப்பென்றே எதையோ கற்றோம்!

வரையறுத்த ஒருபாடத் திட்ட மில்லை;
மரத்தடியில் கோவில்களில் பள்ளி யென்றே
அரைகுறையாய்ப் பயிற்சியிலாக் கணக்கா யர்கள்
அவரவரின் எண்ணம்போல் பாடஞ் சொன்னார்;
குறைநீங்கி விடுதலையே வந்த பின்னும்
குறைநீங்க வில்லைதமிழ்க் கல்விக் கிங்கே!
நிறைசேர்க்கப் புதுப்பாடத் திட்ட மென்னும்
நெடுஞ்சாலை அமைந்தபின்தான் நடக்க லானோம்!

தொடக்கநிலைப் பள்ளிகளை மலர வைத்தும்,
சுடர்விளக்காய் நம்செல்வர் ஒளிரும் வண்ணம்
அடுக்கடுக்காய்ப் புத்துலகக் கருவி தந்தும்,
அவைபயிற்றக் கணக்காயர்ச் சுடரச் செய்தும்,
மிடுக்காகப் புதுநூல்கள் பெருகச் செய்தும்,
மேன்மையுற நம்செல்வர் அவற்றை யேந்தி,
மடுத்தின்பம் மாந்திடவே செய்தும் நாட்டில்
மதிப்படையச் செய்கின்ற அரசு வாழ்க!

இடைநிலையில் பயில்கின்ற மாண வர்க்காய்
இன்றமிழின் அமுதூட்ட வகுத்த பாடம்
கடைநிலையில் உள்ளவர்க்கும் வாழ்வு தந்து
கடைத்தேற வழிகாட்டும் திட்ட மாகும்.
கொடையெனவே நமக்கெல்லாம் வழிகள் காட்டிக்
குடிகளையே உருவாக்கும் பணிகள் ஆற்ற
அடிப்படையைப் போடுகின்றார் நன்னெஞ் சத்தார்!
அன்பாலே நாம்நன்றி கூறு வோமே!

பாலையிலே பயிர்வளர்த்தோம் அந்நாள்; இன்றோ
பண்பட்ட வயலினிலே விதைகள் தூவும்
வேலையிலே மெத்தனத்தைக் காட்டி னாலோ
விளைவேது? இவ்வேளை நெஞ்ச கத்தில்
ஆழவேநாம் ஓர்உறுதி ஏற்றுக் கொள்வோம்;
ஆயிரமாய்த் தடைவந்து மறித்த போதும்
வாழவழி காண்கின்ற பணியிற் சோரோம்!
வாழ்விற்கிங் குயிரான தமிழ்காப் போமே!

கற்கவரும் மாணவர்கள் ஓர்பு றத்தே;
கதைகேட்க விழைந்திடுவோர் மற்றோர் பக்கம்;
அற்பமெனத் தமிழ்பழிப்போர் அணியும் உண்டு;
'அ'எழுத்தில் தொடங்கவரும் பிள்ளை யுண்டு;
கற்றலுக்கும் கற்பிக்கும் முறைக ளுக்கும்
கருவியிலாப் பின்னணியும் உண்டே; எல்லாம்
பற்றுறுதி என்கின்ற ஆயு தத்தைப்
பயன்படுத்தி நாம்வெற்றி காண வேண்டும்!

வாய்ப்பில்லை என்றொருநாள் அழுதோம்! இன்றோ
வாய்ப்புண்டே என்றாலும் அதனை ஓடிப்
போய்ப்பற்றும் மனங்கொள்ள வில்லை யானால்
பூக்காட்டில் புதர்மண்டச் செய்தல் போலாம்!
வாய்ப்பந்தல் உயர்த்தாது; நமக்கிந் நாட்டில்
மதிப்புயர்த்தும் அடையாளம் மொழியே யன்றோ?
காய்க்குமர மாய்அருமைச் செல்வர் ஓங்கக்
கனித்தமிழை உணர்வோடு வளர்ப்போம் வாழ்வோம்!

த. நேசன் - முரசு. நெடுமாறன்
1988

# 114. மொழியைக் காப்போம்!

கதைவேண்டும் கவிவேண்டும் என்றா லன்று
கலைபொங்கும் தமிழ்நாட்டை நோக்க லுண்டு!
விதைபோட்டோம் இந்நாட்டில்; விளைச்சல் கூட
வேகமுடன் விளைகிறது; ஆனா லொன்று
பதைப்புடனே நூல்வாங்கித் தமிழைப் பேணும்
பண்புள்ளோர் தொகையிங்குப் பெருகக் காணோம்!
சதைகொண்ட உடலுக்குத் தாய்தான் சொந்தம்;
தமிழ்கொள்ளாத் தமிழனுக்கிங் கெதுதான் சொந்தம்?

சங்கங்கள் கண்டார்கள்! இலக்கி யங்கள்
தாய்போற்றப் படைத்தார்கள்! எழுச்சி கொண்டார்!
சிங்கங்கள் போல்வாழ்ந்தார்! சீர்மை பெற்றார்!
சிறப்பான மொழிவாழ உயிரும் நீத்தார்!
இங்குள்ள எழுத்தாளர் தியாகத் தோடே
எதிர்பார்ப்பு நினைவின்றி எழுது கின்றார்!
தங்கத்தைக் கால்கொண்டு மிதித்தல் போலத்
தமிழ்மீது சிலமக்கள் நடக்கின் றாரே!

மொழிவாழ்ந்தால் வளமாக நாமும் வாழ்வோம்;
முனைப்போடு செயலாற்றத் துணிவும் காண்போம்;
விழிபோனால் சந்ததிக்கு விடிதல் கூட
விளங்காது என்பதனை நினைவிற் கொண்டு
மொழிகாக்க உருவான இயக்கம் என்றால்
முழுமுச்சாய்க் காக்கின்ற தன்மை வேண்டும்;
பழிச்சொற்கள் பின்னாளில் சுமந்தி டாமல்
பார்போற்ற நாம்வாழ மொழியைக் காப்போம்!

ம. த. எ. ச. பே. ம. - சோமசன்மா
1984

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"பாலுமரம் வெட்டலான்னு
பழயகப்பல் ஏறிவந்தேன்
நாப்பத்தஞ்சி காசப்போட்டு
நட்டெலும்ப முறிக்கிறானே
முப்பத்தஞ்சி காசப்போட்டு
மூட்டெலும்ப முறிக்கிறானே"

ரு தோட்டப்புறம்

## 115. சீனிக்குக் காக்காய் ஓட்ட...

"சீனிக்குக் காக்காயோட்டக் - கூட்டிக்கினு வந்த
கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி!
லாலான்[1] முள்ளு டிங்குன்னுதே! - இங்கு
லப்பர்க் கொட்டை[2] டப்புன்னுதே!

ஒருதட்டு அப்பத்துக்கு ஒருதட்டு வெள்ளின்னு சொன்ன
கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி
லாலான் முள்ளு டிங்குன்னுதே! - இங்கு
லப்பர்க் கொட்டை டப்புன்னுதே!

வாழப்பழத்துக்குக் குரங்கோட்டக் கூட்டிக்கினு வந்த
கறுப்புச் சட்டைக் கதிர்வேலு கங்காணி!
லாலான் முள்ளு டிங்குன்னுதே! - இங்கு
லப்பர்க் கொட்டை டப்புன்னுதே"

## 116. கங்காணி

"என்னக் கூட்டிவந்த கங்காணிக்குக் கண்டிராக்டிலே வேலை!
என்னப் பாத்துவந்த கங்காணிக்குப் பழம்வெட்டு வேலை[3]
என்ன இட்டுவந்த கங்காணிக்கு ஸ்டோரிலே வேலை
என்னக் கூட்டிவந்த கங்காணிக்குக் கோலா லம்பூர்லே வேலை!"

## 117. சாகடிக்கும் கங்காணி

"கங்கா ணின்னா கங்காணி கறுப்புச் சட்டைக் கங்காணி
சஞ்சி[4]யிலே கூட்டி வந்து சாக டிக்கும் கங்காணி.

---

*1 லாலான் - ஒருவகைப் புல் (3அடிவரை வளரும்)*

*2 லப்பர்க் கொட்டை - பால்மர வித்து*

*3 பழம் வெட்டும் வேலை = செம்பனைக் குலைகளை வெட்டும் பணி*

*4 சஞ்சி - ஒப்பந்தம். ஒப்பந்தத் தொழிலாளரைக் கொண்டுவர ஆங்கிலேயர் பயன்படுத்திய முறை 'இண்டெஞ்சர் சிஸ்டம்' (Indenture System) எனப்படும். 'இண்டெஞ்சர்' என்னும் சொல்லின் தமிழ் ஒலி வடிவமே 'சஞ்சி' என்னும் கருத்து உள்ளது. ஆனால் ஒப்பந்தம் எனப்பொருள்படும் மலாய்மொழிச் சொல்லான 'ஜஞ்சி' (Janji) என்னும் சொல்லே சஞ்சி எனத் திரிபு பெற்றது என்பதே சரியான கருத்தாய்த் தோன்றுகிறது.*

சீனிக்குக் காக்காய்லோட்டிச் சீராக வாழலான்னு
சிரிக்கச் சிரிக்கப் பேசிச் சீரழிக்கும் கங்காணி!

ஆவடியில் கெடமடக்கி அஞ்சடியில் நிக்கவெச்சி
பென்னாங்கு[5]ச் சீமையிலே பெரட்டுக்களம்[6] போட்டவனாம்!

கருவாட்டைச் சுட்டுக்கினு கஞ்சித்தண்ணி குடிச்சிக்கினு
காசுபணம் சேக்கலான்னு கையடிச்சுக் கூட்டிவந்தான்!"

## 118. மூட்டெலும்ப முறிக்கிறானே!

"பாலுமரம் வெட்டலான்னு, பழயகப்பல் ஏறிவந்தேன்
நாப்பத்தஞ்சி காசப்போட்டு நட்டெலும்ப முறிக்கிறானே!
முப்பத்தஞ்சி காசப்போட்டு மூட்டெலும்ப முறிக்கிறானே!"

## 119. சின்னச் சின்ன பொண்களுக்கு...

"'காயம்'[7] பட்டதுன்னு கூலிக்காச வெட்டுறார்
சின்னச்சின்ன பொண்களுக்கு நல்லநெர[8] காட்டுறார்
என்னப்போல ஆண்களுக்கு ஏதோபாசா[9] காட்டுறார்
பாக்கப் பயமா இருக்குதடி - நமக்கும்
பாலுவெட்டு வேணாமடி - இந்தப்
பாழாப்போன தோட்டத்திலே!"

---

*5 பென்னாங்கு - பினாங்கு*

*6 பெரட்டுக்களம் - காலையில் வேலைக்குச் செல்லுமுன் தொழிலாளர்கள் பெயர் பதிவு செய்துகொள்ளும் இடம். - Parade.*

*7 காயம் - ரப்பர்மரத்தைச் சீவும்போது சற்று அழுத்தமாய்ச் சீவிவிட்டால் அவ்விடம் பழுதுபடும்.*

*8 நெர - நிரை - வரிசை; நூல் பிடித்தாற்போல் வரிசையாய் நடப்பட்டிருக்கும் ரப்பர் மரங்களில் ஒரு நாளைக்கு வெட்டப்படவேண்டிய குறிப்பிட்ட எண்ணிக்கையிலான மரங்களைக் கொண்ட தொகுதி.*

*9 பாசா - பள்ளத்தாக்கு.*

## 120. குப்புறப் படுத்துக்கிச்சே!

“குப்புறப் படுத்துக்கிச்சே ரப்பருப் பாலு - நானும்
கப்பலேறி வந்தேனே கெப்புரு னாலே - ஓ ரப்பருப் பாலே!
தப்பிங்கு[10] கிட்ட நான் அள்ளுறு[11] வெட்ட
என்மாம னாரு கட்ட எங்க மாமியாரு நெட்ட - ஐயா!
எனக்கு வாச்ச பொண்டாட்டிக்குக் காலு ரெண்டும் குட்ட”

## 121. வேறதோட்டம் போறனய்யா!

“வீராயி சீக்கிரம் எழுந்து வாடி - நம்மை
விரட்டுறார் கங்காணிமார் பெரட்டுக்குப் போடி!

ஏத்துளி[12] பட்டச்சாக்கு[13] எங்கடி வச்சே? - நான்
இங்குமங்கும் தேடிப் பாத்தேன் கெடைக்கவே இல்லே!

தொடதொடத்தான் காடி[14] போட்டுத்
தொரயும்[15] வந்திட்டான் - அந்தக்
கிஸ்முஸ்[16] என்றுபேசும் கிராணி[17] வந்திட்டான்!

அஞ்சாம் நம்பர் காட்டுக்குள்ளே
என்ன வெட்டச் சொல்லுறார்
மெத்தப்பய மாகுதய்யா - நானும்
வேறதோட்டம் போறனய்யா!”

---

*10 தப்பிங்கு - தைப்பிங்*
*11 அள்ளுறு - கால்வாய்*
*12 ஏத்துளி - ரப்பர்மரப் பட்டையைச் சீவும் ஒருவகை உளி*
*13 பட்டச்சாக்கு - பட்டைச் சாக்கு - ரப்பர்மரம் சீவுவோர் இடுப்பில் கட்டிக் கொள்ளும் சிறு கோணிப்பை.*
*14 தொடத்தொடத்தான் காடி - மோட்டார் சைக்கிள்*
*15 தொரை - துரை. வெள்ளைக்கார அதிகாரி*
*16 கிஸ்முஸ் - சாதாரண மக்கள் ஆங்கில மொழியை இப்படிக் கூறுவர்.*
*17 கிராணி - கணக்கர், எழுத்தர்*

# 122. கிளேரியா எஸ்டேட்டிலே...

“வீராயி சீக்கிரமா எழுந்துவாடி - ஒன்ன
வெரட்டுறான் கங்காணி பெரட்டுக்குப் போடி

தொடதொடத்தான் காடிபோட்டுத்
தொரயும் வந்துட்டான் - இந்த
எஸ்மூஸ ு கிராணியும் கிட்ட வந்துட்டான்.

கோள்சொல்லிக் கங்காணி - கிட்ட வந்துட்டான்
ஏட்டைப் பொரட்டுறான்
எல்லம்மாவைத் தேடுறான்;

எட்டாம் நம்பர் பாசாவிலே
என்ன வெட்டச் சொல்லுறான்;
பத்தாம் நம்பர் பாசாவிலே
பாலெடுக்கச் சொல்லுறான்;

கையக் கையக் காட்டுறான்;
பத்துவெள்ளி கொடுக்குறான்;
ஆஊ என்னு சொன்னா
அரைப்பேரு[18] என்னுறான்;

பார்த்தா பயமாகுதே - இந்தக்
கிளேரியா எஸ்டேட்டிலே
வீராயி சீக்கிரம் எழுந்துவாடி
அடிச்சி ஓட்டுறான் கங்காணி - பெரட்டுக்குப் போடி!

சங்குச் சத்தம்[19] கேக்குதடி ஜல்தியா வாடி - அந்தச்
சதிகாரக் கங்காணி ஏசுவாண்டி!

குடுகுடுத்தான் வண்டியேறித் தொரயும் வந்திட்டார்!
‘குட்மார்னிங்’ என்னு சொல்லிக் கிராணி வந்திட்டார்!

---

*18 அரைப்பேர் - பாதிச் சம்பளம்*
*19 சங்குச்சத்தம் - கருக்கலில் எழுப்பும் சங்கொலி*

## 123. மூடிவச்சிக் கழுத்தறுத்தான்!

“ருதுவான சேதிகேட்டு மெதுவாகக் கைபுடிச்சி
மூணுமாசம் போனப்புறம் மூடிவச்சிக் கழுத்தறுத்து
மொட்டப் பசங்களுக்கு மூணுமுடி போட்டவனே!

தொட்டுத் தொடுசலுக்குத் தொங்கநெரப் பாப்பாத்தி
கட்டித் தழுவிக்கக் கட்டிலிலே காமாட்சி
கருக்கில் களத்தினிலே காத்தானின் பொண்டாட்டி!
மோகம் தீரலயோ? மூதேவி கங்காணி!

மூணுமுடி போட்டாலும் முழுப்புருஷ(ன்) வந்தாலும்
காட்டுக்கு வந்துவிட்டால் கண்ஜாடை போகலயே!
ஒன்னால கெட்டவநான் ஊரறியச் சொல்லுறனே!”

## 124. ஆத்துல தண்ணி வரும்

“ஆத்துல தண்ணிவரும் என்னப் பெத்த ஐயாவே!
நீபெத்த பொண்ணுக்கு அண்டா சுழண்டு வரும்,
ஆருதோ தண்ணியின்னு நான் அள்ளப் பயப்பட்டேன்,

குளத்தில தண்ணி வரும் என்னப் பெத்த ஐயாவே!,
நீபெத்த பொண்ணுக்கு குண்டா சுழண்டு வரும்,
கோட்டாத் தண்ணி[20]யின்னு நான் குடிக்கத்தான் அஞ்சினனே.”

## 125. பிஞ்சியிலே பளுத்தவ

மஞ்சிக் குப்பம் கூடலூரான்
சஞ்சியிலே கட்டிப் புட்டான்
கஞ்சிக்கும் கந்தைக்கும்
பிஞ்சியிலே பளுத்தவ நான்!

---

*20 கோட்டாத் தண்ணி - பால்கொட்டகையில் ரப்பர்பால் உறையூற்றும் மருந்து நச்சுத் தன்மைகொண்டது. அம் மருந்து கலந்த ரப்பர் சீட்டுகளை அல்சப் பயன்படுத்தும் நீர் 'கொட்டாய்த் தண்ணீ' - கொட்டகைத் தண்ணீர் எனப்படும். அது 'கோட்டாத் தண்ணி' ஆயிருக்கலாம்.*

## 126. அத்தாப்பு வீடு

"அத்தாப்பு வீடு[21]கட்டிக் - குட்டித்தங்கம்
அதுலஒரு சன்ன(ல்) வச்சிக் - குட்டித்தங்கம்
எட்டிஎட்டிப் பாத்தாலும் - குட்டித்தங்கம்
எரவல் புருசன்தாண்டி - குட்டித்தங்கம்"

## 127. பச்சத்தல நோட்டு

பு(து)ச்சேரிக்கும் கச்சேரிக்கும்
முடிச்சவிழ்த்த செங்கேணி
'பச்சத்தல' நோட்டு[22]க்காக
இச்சப்பட்ட 'புட்டாமணி!'

## 128. நம்மவங்க பொழப்பு

அவன்: நல்லதண்ணித் தோட்டத்திலே
செல்லத்தம்பி பொளைக்கப்போனான்,
இஞ்சித்தொர ஆள்கட்டச்[23]
சஞ்சியிலே போனவ(ன்)நான்!

கங்காணி மொதப்பெரட்டில்
கணக்கெடுத்துக் காசவெச்சான்
'பென்னிதொர' ஆபீஸ்மேலே
பத்துவெரல் ரேகைவெச்சேன்!

பவளக்கொடி தெருக்கூத்தில்
பபூன்வேசம் போட்டவண்டி,
பாண்டிச்சேரிக் கப்பலேறிப்
பினாங்குச்சீமை பாத்தவண்டி!

---

*21 அத்தாப்பு வீடு - ஓலையால் அமைந்த கூரையைக் கொண்ட வீடு*

*22 பச்சத்தல நோட்டு - சப்பான் பணநோட்டு*

*23 ஆள் கட்டுதல் - ஒப்பந்த அடிப்படையில் தொழிலாளர்களை அழைத்து வருதல்*

*குறிப்பு : பாடல்களைத் (115 - 126) திரட்டி உதவியவர் இரா. தண்டாயுதம்.*
*சான்று : 5ஆம் உலகத் தமிழ் மாநாட்டுக் கட்டுரை தொகுப்பு -5(1981).*

‘எம்டன்குண்டு’[24] உளுமின்னே
மெட்ராஸ விட்டவண்டி
சோளத்தொட்டிப் பஞ்சத்திலே
சோழபுரம் பூந்தவண்டி!

வாந்திபேதி காஸவந்து
வயிறெரியச் செத்தாண்டி
கப்பமேல கப்பவுட்டுக்
கதறக்கதற ஏத்துனாண்டி!

நாவப்பட்டணம் வந்தேண்டி
நம்மவரப் பாத்தேண்டி
‘தெப்போ’[25]வில் அடச்சிவெச்சிச்
செரிபாதி பொதச்சாண்டி!

பொளப்புஞ் சிரிச்சுதடி
பொல்லாப்பும் நிக்கலடி
ஆண்டவூட்டுக் கூழுக்கு
அஞ்சடிலே நிக்கறேண்டி!

அவள்: தர்மாடர்[26] மச்சானே!
தரித்திரத்துத் தலமவனே,
மாமாவூட்டுப் பொண்ணுக்கு
மஞ்சளுக்கும் விதியில்லே!

மிலாய்நாடு உட்டுவந்து
‘மட்டை’யும் அடிக்காதே!
புத்திய வசமாக்கிப்
பொழைக்கவழி பாருமையா!

மஹாராய ராயஸ்ரீ...இ...
மண்டையில பௌஸ்திரி!
சாமாத்தியம் பண்ணிவந்தா
‘ஜாம்-ஜாம்’ கண்ணாலமாம்!

---

*24 எம்டன்குண்டு - பாடல்களின் பின்புலம் குறிப்புரைகள் பகுதியில் காண்க.*

*25 தெப்போ - Depoh - டெப்போ - கப்பலில் வந்தவர்களைச் சில நாள்கள் தங்கவைக்கும் இடம்.*

*26 தர்மாடர் - தர்ம ஆர்டர் - தாயகம் திரும்பிவிட எண்ணும் தொழிலாளர் களுக்கு வழங்கப்படும் ஒருவழி இலவசப் பயணச் சீட்டு*

# 129. வந்தகத! வாழ்ந்தகத!

வந்தகத வாழ்ந்தகத - நம்ப
வயிறெரிஞ்சி போனகத

சுட்ட கருவாட்ல
கஞ்சியக் குடிச்சிக்கினு
காசுபணம் சேக்கலான்னு
கையடிச்சி கொண்டாந்தாங்க;
கொயினாத்[27] தண்ணிய
குடிக்கவும் வெச்சாங்க. (வந்தகத.....)

சஞ்சிக் கூலிங்களுக்குச்
சொர்க்கம் காட்டத்தான்
பொறமலை[28]யில் தள்ளினாங்க
சொர்க்கமும் காணலீங்க
சொகுசும் காணலீங்க
கொசுவால குடிச்சமிச்சம்
கொள்ளையிலும் போனாங்க (வந்தகத.....)

பகடியான வார்த்தயில
பால்மரத்தில் பணங்காய்க்கும்
ஆவடியில் முந்திக்கிட்டா
அதிஷ்டமும் தானேவரும்
இப்படியும் ஜாலாக்கு
எப்படியும் போட்டாங்க (வந்தகத.....)

பொய்சொல்லிக் கப்பலேத்திப்
பொழப்பெல்லாம் போச்சுதுங்க;
கருங்கடலத் தாண்டிவந்து
கைகட்டி நின்னோமுங்க;
கல்பமும் உண்டுண்ணு
கையேந்தி ஊமயானோம். (வந்தகத.....)

---

*27 கொயினா - மலேரியாக் காய்ச்சலுக்கான மருந்து*

*28 பொறமல - புறமலை - தமிழகத்திலிருந்து வரும் ஒப்பந்தத் தொழிலாளரைத் தங்க வைக்கும் இடம்; இங்கு ஒரு வாரம் தங்கிய பின்னரே நாட்டில் நுழைய முடியும்.*

## 130. வாக்குத் தரவோணும்!

முழுகவந்த மாமா! - என்ன
'முழுகாம' ஆக்கினீங்க!
ஊர்ஒலகம் சிரிக்கும்படி - நீங்க
ஒய்யாரம் பேசுறீங்க!

சாதிபத்திப் பீத்துறீங்க; - பெரிய
'சாதகமே' பாக்குறீங்க;
தீண்டாத சாதீன்னு - தெரிஞ்சே
திண்டுமெத்தை கேட்டீங்க!

காடழிச்சி ஒடிகொளுத்திக்[29]
கால்கடுக்க நிக்கயிலே - நான்
கால்கடுக்க நிக்கயிலே;
ஒண்ணாம் நம்பர் மோட்டுமேலே - கண்ணாளா
ஒம்மேல உசிரவெச்சேன்;
உள்ளத்தையும் பறிகொடுத்தேன்!

பாசாவில் தண்ணிமொள்ளப்
பக்கம்பாத்துத் தடம்போனேன்! - நான்
பக்கம்பாத்துத் தடம்போனேன்!
குளிக்கவந்த மாமா! - என்ன
'குளிக்காம' ஆக்கினீங்க!
குத்துக்கல்லாப் போட்டீங்க!

விக்கிவிக்கி வந்தபோது
வெளயாடப் 'பா'விரிச்சேன்; - மாமா!
வெளயாடப் 'பா'விரிச்சேன்!
ஊருக்குப் போறீகளாம்
ஊத்துக்காடு பொண்ணுங்களாம்
ஒலகறியக் கண்ணாலமாம்!

---

*29 ஒடிகொளுத்துதல் - வெட்டிய மரங்களைக் கொளுத்துதல்*
*குறிப்பு : 1920இல் நல்ல தண்ணீர்த் தோட்டத்தில் நடைபெற்ற தெருக்கூத்தில் ஒரு காட்சி.*

நாயம் பொறக்கோணும் - எனக்கு
நாயம் பொறக்கோணும்
நல்லபடி கேக்கறப்போ - நமக்குள்
நாயம் பொறக்கோணும்!
என்வயித்துப் புள்ளைக்கு - ஊரறிய
வாக்குத் தரவோணும்!

## 131. சொப்பனமும் மாறுச்சடி!

வாராண்டி வாராண்டி
சப்பாந் தொர
வரகரிசிக் கூழுக்கும்
பரதேசியா மாத்தனாண்டி!

போனாண்டி போனாண்டி
பறங்கித் தொர
போகவுட்டுப் பூந்தாண்டி
சப்பாந் தொர!

சீயா[30]முக்கு ஏத்திப்போயி,
சீரழிய வெச்சாண்டி!
வாழத்தாறு நோட்[31]டெல்லாம்
வதவளிய வெச்சாண்டி!

சுண்ணாம்புச் சோத்தப்போட்டுப்
புண்ணாக்கிப் போனாண்டி
மூணேமுக்கால் வருசத்திலே
முக்காடும் போட்டாண்டி!

---

*30 சீயாம் - சீயதேசம் (தாய்லாந்து). அங்குப் புகைவண்டிப் பாதை அமைக்கும் பணியில் மாண்டவர்க்குக் கணக்கில்லை. இதனை மரண இரயில்பாதை என்று குறிப்பிடுவர் வரலாற்றாசிரியர். மேல் விவரங்களுக்குப் பாட்டின் பின்புலம் குறிப்புரைகள் காண்க*

*31 வாழத்தாறு நோட்டு - வாழைத்தாறு நோட்டு - சப்பானியர் பணம்*

வஞ்சனையால் ஆண்டதாலே
பஞ்சகாலம் வந்ததடி!
அமரிக்கன் குண்டாலே
எல்லாமே அழிஞ்சதடி!

பழயதொர ஆனவங்க
பலலெச்சம் சேத்தாண்டி!
சப்பாங்காரன் காலத்தில
சொப்பனமும் மாறுச்சடி!

தலயவெட்டி[32] வெச்சாண்டி!
தறுதலயா ஆடுனாண்டி!
ஏழைங்க வவுறெரிஞ்சா
எவனுமே உருப்படாண்டி!

## 132. உசிர எடுக்குறான்!

இந்தியர்கள் சயாமுக்கு வந்ததுனால
இருண்டகாடும் அழியுதிங்கே நம்மளப்போல!

மூட்டஏத்தும் மொட்டவண்டி
கட்டவண்டியில - நம்மை
மொத்தமாக ஏத்திவந்து
மோசம் பண்ணிப்புட்டான்!

பேயாமழையும் பெருமழையும்
பேஞ்சிருந்தாலும்
ஓயாமல் ஒழைக்கச்சொல்லி
உசிர எடுக்குறான்!

ஜொப்புராணே சப்பாங்காரன்
ரொம்ப மோசமாம்!
அப்புராணி மனுசர்நம்மை
அடிச்சுக் கொல்லுறான்!

---

*32 சப்பானியர் கொடுங்கோலாட்சியில் மக்கள் தலையை வெட்டுவது எளிய நிகழ்ச்சி.*

*குறிப்பு : 127முதல் 131வரை உள்ள பாடல்களைத் திரட்டித் தந்து உதவியவர் சி. கமலநாதன்.*

வெந்தசோறும் வெராமீனும் மொண்டு கொட்டுவாங்க
நொந்துகொஞ்சம் கிண்டிப்பாத்தா புழுவும் ரொம்பங்க!
கண்ணநல்லா மூடிக்கிட்டு அள்ளி அடிப்போங்க
எண்ணிப்பாத்தா தின்னசோறு வெளியே வருதுங்க!

---

*குறிப்பு : எஸ். இராமசாமி (கங்காணி) நினைவிலிருந்து பாடிக்காட்டக் கேட்டு எழுதி அனுப்பி உதவியவர் ஆசிரியர் அ.ரெங்கசாமி.*

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"தோளினைக் கொடுக்கும் வீரத்
தொழிலாளி வியர்வை யன்றோ
ஆழிசூழ் உலகச் செல்வர்
அணிந்திடும் முத்து மாலை!"

- இரா. பாண்டியன்

சூ சமுதாயம்

# 133. தமிழன் இல்லை!

சிறுமலைக் குன்றின் பசுமைப் பாயலிற்
சிந்திப் போமென் றெண்ணிச் சென்றேன்
அழகிய பசும்புல்! அலர்ந்த மலர்கள்!
அந்திச் செக்கரின் பொன்னிறக் கதிர்கள்!
மனிதன் செய்த மலர்ப்புதர்க் கூட்டம்!
மனத்தை அள்ளும் செயற்கை சேரெழில்!
எல்லாம் கண்டும் இயற்கையை நொந்தேன்
ஏனோ செயற்கை இயற்கையின் உடலில்?
குழந்தை ஒருவன் ஓடி யாடினான்;
கூந்த லழகி பூவைப் பறித்தாள்;
நல்லவன் என்பவன் நடந்தே போனான்;
செல்லத் தாத்தா சிரித்து மகிழ்ந்தார்;
மணிமலர் செறிந்த பன்னிறப் பூங்கா!
மணத்தால் ஒன்றி வந்தவர் பல்லோர்!
மலையர், சீனர், மற்றும் பலரே!
தமிழன் மட்டும் ஏன்வர வில்லை?

- மு. மூக்கன்

ச. மணி
1954.9.17

# 134. தமிழர் நிலைமை

நந்தமிழர் மலாயாவில் வந்ததுவும் போதும்
நரம்புடனும் தோலுடனும் வாழ்கின்றார் அடடா!
இந்தவிதம் இங்கிருக்க இதையுணரும் நந்தம்
இனத்தவராம் இயல்புடைய தமிழருமிங் கிலையா?
"வந்தேமா தரம்"சொல்ல இருக்கின்றார் இங்கே
வறுமையதைப் போக்கவகை செய்வார்தா மில்லை!
பைந்தமிழர் நைந்துமிகப் பதைக்கின்றார் அய்யோ!
பணக்காரத் தமிழரிதைப் பாராமை நன்றோ?

- கவிமணி கிருஷ்ணதாசன்

செ. செல்வி
1942

# 135. சப்பானியர் காலத்திலே...

ஒப்பந்தக் கூலிகளாய் உருக்குலைந்த கூடுகளாய்க்
கப்பலேறி உயிர்வாழக் கடல்தாண்டி வந்தவர்கள்
சப்பானி யர்காலச் சண்டையில் தாக்குண்டார்;
எப்போதுங் காணாத இன்னலிலே சிக்குண்டார்
வறக்கோப்பித் தண்ணிக்கும் வதங்கிய கீரைக்கும்
மரவள்ளிக் கிழங்குக்கும் மன்றாடிக் கெஞ்சிட்டார்
கட்டத் துணியின்றிக் கண்கலங்கி நின்றிட்டார்
பட்டாளக் காரனுக்குப் பயந்து நடுங்கிட்டார்
துப்பாக்கிக் குண்டுக்கும் தூக்குக் கயிற்றுக்கும்
சிப்பாய்கள் கொடுமைக்கும் சிக்குண்டு சாகாமல்
தப்பிப் பிழைத்தவர்கள் தாய்லாந்தின் எல்லையிலே
கப்பிச் சாலையிடக் கத்தி முனையினிலே,
ஈவிரக்க மில்லாமல் இழுத்துச்செலப் பட்டார்கள்;
பாவிகளின் கொட்டத்தால் பண்டுலகே ஆடிற்று!
பெற்றோர் உளந்துடிக்கப் பிள்ளைமனம் துவண்டுவிழ
உற்ற மனையாளும் ஒப்பாரி வைத்தழவே
ஆட்டைப்போல் மாட்டைப்போல் அடித்துத் துன்புறுத்திக்
காட்டு விலங்காண்டி கசக்கிப் பிழிந்திட்டான்!
அங்கவர்க் கேற்பட்ட அவலத்தைக் கண்டேதான்
பொங்கி வெடித்தனவாம் பூதலத்தில் எரிமலைகள்!
உப்பற்ற கஞ்சிதான் உணவாக வாய்த்திருக்கும்
தப்புகள் பண்ணிவிட்டால் தலைதப்ப மாட்டாது
தொற்றுநோய் ஏற்பட்டுத் துடிக்கவே நேர்ந்திட்டால்
குற்றுயி ராகவே குழிக்குள்ளே வைப்பார்கள்!
மாறாகப் பேசினால் மண்டை பிளந்துவிடும்!
ஆறாத புண்பட்டால் ஆளையே கொல்வார்கள்!
கட்டையர்[1] ஆட்சியிலே கன்னித் தமிழ்மக்கள்
பட்ட துயர்நினைத்தால் பதைக்கிறது நெஞ்சமின்றும்!

கவிக்குல.
1982

- அமலதாசன்

---

*1 கட்டையர் - சப்பானியர்*

## 136. ரப்பரும் தமிழனும்

எங்கிருந்தோ தமிழனைப்போ லிங்கெழுந்து
நிலம்பார்த்துத் தன்னை ஊன்றித்
தங்கமகன் ஒளியாலும் கங்கையவள்
அருளாலும் செம்மை ஊறி
மங்கலமாய் இலைவிரித்து மலர்ந்தாளாம்
ரப்பர்எனும் மங்கை; பேர்த்துத்
தங்கமுடி மணிவைத்தல் போல்நிரையில்
வைத்திட்டார் செல்வம் பெற்றார்!

சங்குநிறப் பால்பொழியும் தங்கமரச்
செல்வங்கள் சொட்ட ஈந்து
தங்கடமை முடித்துவிட்டுத் தனையழிக்கக்
கொடுத்துவிட்டுச் சாய்தல் போலச்
செங்குருதி நீராக்கிச் செம்புடலை
உரமாக்கிச் சாய்ந்து போக
அங்கிருந்து வந்தானோ? அவனுக்கும்
ரப்பருக்கும் மாற்றம் காணேன்!

- சா. ஆ. அன்பானந்தன்

## 137. ரப்பரோடு ரப்பராய்...

முதலாளி வாழ்வை முதலாக உயர்த்த
முதலாக நின்று முழுமையாய் உழைப்பவன்;

காட்டோடு கழனியும் கருத்தோடு கடமையும்
நாட்டுடன் ஒன்றியும் நலிந்தே உழைப்பவன்;

சிந்தனைப் பயிரைச் சிந்தையின் உயிராய்
வந்தனை செய்தே வருந்தியே உழைப்பவன்;

ரப்பரோடு ரப்பராய் இழுபறியாய் இன்னமும்
கொப்பரை யாய்க்காய்ந்தே குழைவதுதான் நீதியோ?

- கோவி. பெருமாள்

ச. மணி
1983.11.4

# 138. தோட்டப்புறத் தமிழர்

'ஏனிந்தக் கொடுமைமிகு வாழ்வு இங்கே?
எழிலாக வாழ்ந்திடலாம் பாரீர் அங்கே!
சீனிக்குக் காக்காயை ஓட்டும் வேலை
சீக்கிரமாய்ப் பணம்சேரும்; சிறுமை ஓடும்
கோணியிலே பணமள்ளிக் கொண்டு வந்தே
கோபுரத்தில் வாழ்ந்திடலாம் வாரீர்!' என்றே
தேனொழுகக் கங்காணி பேசும் பேச்சில்
தெரியாமல் தமிழரெலாம் மயங்கிப் போனார்!

ஆண்டாண்டு காலமாய் நாட்டை யாண்ட
அருந்தமிழர் கூட்டந்தான் சோற்றுக் கின்றிக்
கூண்டோடு கலமேறி அடிமை யாகிக்
கூலியாகக் கோழையாக வந்த பின்னால்
காண்கின்ற நிலையென்ன? இந்த நாட்டில்
காடழிக்கும் வேலைதான் காத்தி ருக்க
நாண்பாய்ந்த மானானார் தமிழ ரெல்லாம்
நமையோட்டி வந்தவர்தாம் கொழுக்க லானார்!

ஒப்பில்லாப் புகழ்கொண்ட தமிழன் அந்தோ!
உழைப்பதற்கே பிறப்பெடுத்தான்; கடல்க டந்து
ரப்பர்தென்னை செம்பனைத்தோட் டங்கள் தம்மில்
ராப்பகலாய்ப் பாடுபட்டான் உடலந் தேய்ந்து
எப்படியோ கிடந்தகொடுங் காடுங் கூட
எழில்மாட மாளிகையாய் மாற லாச்சு;
ஒப்பில்லாத் தமிழ்மகனின் உடலம் மட்டும்
ஓடாகிக் கூடாகிப் போக லாச்சு!

கொட்டுகின்ற இடிமின்னல் மழையில், தன்னைக்
கொத்துகின்ற நச்சரவம், வனவி லங்கு
கொட்டுகின்ற மடமைத்தேள், அறியா மைப்பேய்
கூடிநின்று கொக்கரிக்க, வெள்ளைக் காக்காக்
கட்டளைக்குத் தாள்பணிந்து கடமை யாற்றக்
கடும்புலியும் பெருமரமும் சிலரைக் கொல்ல
இட்டும்மனம் கலங்காத தமிழர் இங்கே
இன்னுயிரை விட்டவண்ணம் நாட்டைக் கண்டார்!

விடிவெள்ளி தோன்றுமுன்னே பெரட்[2]டில் நின்று
விடிவதற்கு முன்னாலே காடு சென்று,
கடிக்கின்ற அட்டைகட்கும் குருதி தந்து,
கடமைதனைச் செய்தாலும் கால்வ யிற்றுப்
"பிடிசோறும் கிடைக்காது" என்ற போதும்
பேச்சாளத் தமிழரினம் உள்ளொ டுங்கி
.நடமாடும் பிணமாக ஆன தையா!
நாவிருந்தும் ஊமையென நின்ற தையா!

- மதுராந்தகன்

த. நேசன்
1968.4.24

# 139. எந்தமிழர் நிலை

காடுவெட்ட ரோடுவெட்டக் கண்ணீர்விடச் செந்நீர்விட
நாடுவிட்டு நாடுவந்தார் தமிழர்கள் - அவர்
பாடுபட்டுப் பாடுபட்டுப் பத்துநூறாய் வேறுபட்டுப்
போடுகிறார் ஆண்டுக்கொரு கூட்டங்கள்!

கூட்டத்திலே தீர்மானங்கள் போட்டுப்போட்டுப் பெட்டியிலே
பூட்டிவிட்டுப் போய்விடுவார் பாருங்கள் - இதை
ஓரிடத்தில் சொல்லிச்சொல்லி ஓலமிட வேண்டுமென
நானிருந்தேன் வந்ததுநல் நாளுங்க!

பத்துலட்சம் தமிழர்க்குள்ளே பத்துலட்சம் பிரிவினைகள்
பத்தாதெனச் 'சிவப்பு-நீல'[3]க் கார்டுகள் - இந்தத்
தொற்றுநோய்கள் தீர்வதற்கு எத்தனைநாள் ஆகும்எனச்
செந்தமிழர் தலைவர்களே கூறுங்கள்!

எல்லார்க்கும் ஒரேநிறம் எல்லார்க்கும் ஒரேஉருவம்
எல்லார்க்கும் எல்லாம்தந்த ஆண்டவன் - இந்த
நல்லான் தமிழனுக்கு நான்குகுண நிறமமைத்து
நாலுமுலை நிற்கவைத்தான் பாருங்கள்!

- வே. சங்கு சண்முகம்

த. நேசன்

---

*2 பெரட்டு - Parade என்னும் ஆங்கிலச் சொல்லின் தமிழ்த்திரிபு*

*3 சிவப்பு-நீலக் கார்டுகள் - குடியுரிமையுள்ளோர்க்கு நீலநிற அடையாள அட்டை; குடியுரிமை அற்றவர்க்குச் சிவப்புநிற அடையாள அட்டை*

# 140. தமிழர் வாழ்வு

இந்நாட்டில் வாழவந்த தமிழர் அன்றே
இந்நாட்டைச் சீர்திருத்திக் கழனி யாக்கித்
தந்ததனால் அன்னவரின் வாழ்வு இன்று
செந்தமிழின் சீர்வளம்தான் என்று சொல்வேன்
தென்றலிசை பாடுகின்ற குயிலைப் போலத்
திக்கெட்டும் புகழ்மேவ எண்ணங் கொண்டு
வந்தஇடம் தன்னாடு என்று சொல்லி
வளம்பொங்க உரிமைபெற்று வாழு கின்றார்!

'யாதும்நம் ஊ'ரேஎன் றெண்ணி நாளும்
ஏற்றமிகும் வாழ்வுதனை அமைத்துக் கொண்டு
சூதின்றி இந்நாட்டில் உழைப்ப தோடு
செந்தமிழர் தெருவெங்கும் திரண்டு வந்து
சூதுவாது செய்வோரைத் தாம்தி ருத்தித்
தோள்கொடுத்து இவ்வரசை மேன்மை யாக்கி
ஆதரவாய் வாழ்கின்றார்; தமிழர் வாழ்வில்
அன்பிற்குப் பஞ்சமில்லை துன்ப மில்லை!

பிறந்திட்ட நாட்டைவிட்டு வந்தோ ரெல்லாம்
பிறப்புரிமை இந்நாட்டில் தாமெ டுத்தே
உரிமையுடன் வாழ்வதோடு நின்றி டாமல்
உயர்தமிழின் பெருமையெலாம் காக்க எண்ணித்
திருநாளை ஏற்படுத்தி மேடை தோறும்
தமிழ்த்தொண்டு புரிகின்றார்; இல்லந் தோறும்
பெரும்புலவன் வள்ளுவனின் குறளைக் கற்றுப்
பெருமையுடன் வாழ்கின்றார் எல்லாம் பெற்றே!

வாழவந்த தமிழினத்தார் பலபேர் இன்று
வெண்ணிலவின் ஒளிபோலத் தூய்மை கொண்டு
ஆலமர விழுதினைப்போல் காலை யூன்றி
அமைதியுடன் வாழ்கின்றார்; இன்னும் சில்லோர்
சீலமுடன் வாழ்ந்தவரை போது மென்று
தாய்நாட்டை நெஞ்சினிலே நிறுத்தி வைத்து
வாழையடி வாழையாக அந்த நாட்டில்
வாழுதற்கு எண்ணமிட்டு உழைக்கின் றாரே!

த. முரசு
1968.10.6

- ப. நன்முல்லை

## 141. மத்தளக் கதை!

தமிழரின் நெஞ்ச எலும்பால் அமைந்திட்ட
தார்ச்சாலை நீண்டு கிடக்குது பார்!
உமிழவும் நீரின்றி உச்சி வெய்யிலிலே
உருவாக் கியஅவர் சாலையைப் பார்!

போகும் வழிதெரி யாதவர் மற்றவர்
போக வழிகண்ட விந்தையைப் பார்!
நோகும் மனத்தினர் 'கார்'தனில் கொஞ்சமும்
நோகாமல் போய்வரச் செய்ததைப் பார்!

கறுத்திடும் தாரால் அமைத்தது வோ?ஓ
கறுத்தவர் தோலால் சமைத்தது வோ?
சிறுத்திடும் கல்லால் அடுக்கிய தோ?அவர்
சிந்து வியர்வைஉண் டாக்கிய தோ?

ஒருவழிச் சாலையாய் உண்மையில் நாட்டில்
உயிர்வைத் துலவிடும் உத்தமர்கள்
இருவழிச் சாலை மனத்தார் சிலரால்
இடிபடு தல்மத் தளக்கதை தான்!

- பாதாசன்

பாதாச.
1979

## 142. பால் கண்டாய் நாள் கண்டாயா?

கனல்பட்ட முதுகோடு
கைபட்ட வடுவோடு
புனல்பெற்ற விழியோடு
புண்பட்டுப் பண்பட்ட தாலே - ஒரு
கறைபட்ட துகிலாகிச்
சிறைபட்ட குயிலாகித்
திரையிட்ட முகிலாகிச்
சீர்கெட்டுப் பேர்கெட்டான் ஏழை! - இவன்

நீர்விட்டு ஏர்விட்டும் பாலை - ஓர்
அரைவட்டத் துகிலுக்கும்
கதிகெட்டு மதிகெட்டால்
அடிமுட்டாள் இவனேதான் கோழை!

அவன்சொல்லைக் கேட்பானாய்
இவன்சொல்லைக் காப்பானாய்
எவன்முன்னும் ஏவல்போய்
ஏற்பானாய் இருக்கின்ற தாலே - இங்கு
இவன்சொல்லும் சொல்லுக்கும்
இவன்ஏந்தும் வில்லுக்கும்
ஏறிட்ட விழியில்லை
எனக்கெட்டு மெனக்கெட்டான் ஏழை - நிழல்
தனக்கற்றுப் பிறர்க்கெட்டும் சோலை - இவன்
விதைக்கட்டும்! அவையெல்லாம்
விளையட்டும்! குலைவிட்டு
இவனுக்காய் விடியட்டும் காலை!

இதுநல்ல வேளையா?
இன்றில்லை நாளையா?
அதுவல்ல அடுத்தநாள்.....
அடுத்தநாள்... என்றேனும் ஒருநாள் - தைப்
புதுநெல்லைக் குற்றியே
பொங்க நினைப்பவன்
எதுநாளில் அணுகுவான்
கைநெல்லைக் காக்கின்ற திருநாள் - இவன்
கண்ணீரில் நீந்தவோ நெடுநாள்? - பசும்
பால்கண்டு பொங்கிடும்
பொங்கலே! பொங்கலே
நாள்கண்டு பொங்கும்நாள் நன்னாள்!

- கரு. வேலுச்சாமி

த. நேசன்
1983.1.14

## 143. நம் திறம்!

சந்ததி இங்கே ஐந்தடி வாசம்
சரித்திரம் என்னடா சரித்திரம்?
சரித்திரம் பேசியே சாத்திரம் கூறியே
சாதித்த தென்னடா உன்திறம்?
வந்ததி லிருந்து வாழ்ந்தது வரையில்
தரித்திரம் தானடா நிரந்தரம்!
வறுமையைப் போக்க வக்கில்லா நமக்குள்
வீம்புகள் தானடா நம்திறம்!

- எம். கே. ஞானசேகரன்

## 144. உய்வில்லை தமிழா!

'ஏ'யென்று பிறனுந்தான் உனையழைக்கின் றானே
'ஈ'யென்று பல்காட்டி நீசெல்கின் றாயே?
நாய்கூட நாலைந்து குட்டிகளைப் பெற்றே
நடுத்தெருவில் வாழுதடா நற்றமிழா பாராய்!
ஆய்ந்துன்றன் நிலைதன்னை உணராமல் வீணே
அளக்கின்றாய் வீண்கதைகள் பயனுண்டா சொல்வாய்?
வாய்மூடி கைகட்டி வாழும்இனத் தானே
வையமிதில் நீயுயரும் நாளொன்றும் வருமோ?

பிறருயர்வைப் பார்த்துநீ மகிழாத வரையில்,
பிறஇனத்தார் போலுயர எண்ணாத வரையில்,
முறையற்ற வீண்பேச்சை ஒழிக்காத வரையில்,
முத்தமிழை வாழ்விக்க எண்ணாத வரையில்,
திறனென்னும் கலமேற நினைக்காத வரையில்,
திட்டமிட்டு உன்வாழ்வை அமைக்காத வரையில்,
கரைந்திட்ட உன்புகழை மீட்காத வரையில்
காசினியில் உய்வென்ப தில்லையடா தமிழா!

- ம. கு. தமிழ்ப்பித்தன்

பொன்னி
1966.1.1

# 145. அழுகை அம்மானை!

உடையாலும் உளத்தாலும் உயர்வான வெண்ணிறத்தான்,
நடையாலும் மொழியாலும் நங்கையிவள் மனம்அளந்தான்,
அடையாளம் சிவப்பானான்[4] அம்மானை! - இவள்
அழகுவிழி சிவப்பானாள் அம்மானை!

இடையுரிமை கொண்டாட எண்ணியவன் கன்னியிவள்
கடைவிழியில் படைநடத்திக் களம்வென்று கொடிபோட்டான்
குடியுரிமை பெறவில்லை அம்மானை! - இவள்
குரலுக்கோர் உறவில்லை அம்மானை!

கண்ணுரிமை விண்ணீலம் கடலுரிமை தன்னீலம்
மண்ணுரிமை இளநீல மடலுரிமை[5] கொள்ளாமல்
பெண்ணுரிமை பெறவந்தான் அம்மானை! - இவள்
பிடியுரிமை இழந்தாளே அம்மானை!

தனக்கிந்த நாடென்றும் நாட்டுக்குத் தானென்றும்
மணக்கின்ற நோக்கின்றி மலருக்கு மாலையிட்டு
மணப்பதற்கே வந்துவிட்டான் அம்மானை! - இவள்
மனத்திற்கு வேலியிட்டான் அம்மானை!

பேர்கேட்டார் சிரித்துரைத்தான்; பெறும்வருவாய் விரித்துரைத்தான்
சீர்கேட்டார் எடுத்துவைத்தான்; திருமணத்தின் முன்னாலே
ஊர்கேட்டார் 'ஊர்'என்றான் அம்மானை! - இவள்
உளம்நோக வாடவிட்டான் அம்மானை!

அம்மானை நினைந்துருகும் இம்மானைப் பெற்றோர்கள்
தம்மாணைக் கைநீட்டித் தனியாக்கி விட்டார்கள்
பெண்மானைத் தேற்றுவதார் அம்மானை! - அந்தப்
பெருமானைக் கேட்கின்றோம் அம்மானை!

சந்தனக்.
1982

- ஐ. உலகநாதன்

---

*4 அடையாளம் சிவப்பானான் - சிவப்புநிற அடையாள அட்டை (நாட்டுரிமை இன்மை)*

*5 இளநீல மடலுரிமை - நாட்டுக் குடிமக்களுக்குரிய நீலநிற அட்டை 139, 151ஆம் பாடல்களின் குறிப்புரைகள் காண்க.*

## 146. தமிழர் நிலை

தெருவினிலே அலைகின்ற நாய்க்குக் கூடத்
 தெருத்திண்ணை யென்றொன்று சொந்தம் உண்டு;
உருவின்றிப் பரந்துலவும் வளியுங் கூட
 உடலென்ற கூட்டுக்குள் சொந்தம் காணும்;
தருவிட்டுத் தடுமாறும் குருவி கூடத்
 தங்குற்குத் தருவொன்றைத் தனித்தே கொள்ளும்;
பெருமையுறு மனிதரிலும் தமிழ ராகப்
 பிறந்துற்ற நமக்கென்ன சொந்தம் உண்டு?

- இரா. தமிழ்ச்செல்வன்

கூட்டுற.
1971

## 147. சிவப்புக் கார்டு

கல்லும் முள்ளும் குத்திக் குத்திக்
 காலில் வடிந்த ரத்தம்தான்
செல்லும் இடத்தில் செல்லாக் காசு
 சிவப்புக் கார்டாய்ச் சிரிக்கிறது!

இருப்புப் பாதை போடும் சமயம்
 இருமித் துப்பிய ரத்தம்தான்
செருப்பைப் போலத் தேயும் உனக்குச்
 சிவப்புக் கார்டாய்ச் சிரிக்கிறது!

பயங்கர வாதப் போராட் டத்தில்
 பையன் சிந்திய ரத்தம்தான்
தயங்க லின்றி உன்னை ஒதுக்கிச்
 சிவப்புக் கார்டாய்ச் சிரிக்கிறது!

அன்றைக் கிருந்தே உழைத்துத் தேய்ந்த
அருமைத் தமிழா! நீபெற்ற
நன்றிக் கடனை நினைத்துப் பார்த்தால்
நாயும் பேயும் சிரித்திடுமே!

- காரைகிழார்

கணைகள்
1977

## 148. வழி

பாடுபட்டோம் வளஞ்சேர்த்தோம் பால்மரங்கள் வெட்டிப்
பயன்விளைத்தோம் என்பதெலாம் பழங்கதைகள்! இன்று
கேடுகெட்டுக் கிடக்கின்ற கீழினத்தார் உள்ளக்
கிளர்ச்சிகளுக் காட்பட்டு மதிமயங்கித் தேனின்
கூடுகட்ட மறந்தவர்நாம்! குறியற்ற வாழ்வால்
கூனுற்ற முதுகினராய்க் கூம்பியவர்! ஏழ்மைக்
காடுவெட்டத் தவறியதால் படிப்பற்றுப் போனோம்!
காலத்தில் விழித்தெழுவோம் கல்விக்கண் கொள்வோம்!

பிழைப்பதற்காய்க் குறிக்கொண்டு பின்தங்கிப் போனோம்!
பெயரளவில் வாழுகின்றோம் முன்னேற்ற மின்றி
தழைப்பதற்கு வழியிருந்தும் தரிசாகிப் போகும்
தற்குறியாய் வாழுவதும் எத்தனைநாள் இன்னும்?
உழைப்பதற்காய் உள்ளஇனம் இவ்வினந்தான் என்றே
ஒதுக்கிவைத்த நிலைமாற்ற ஒருமுடிவைக் காண்போம்!
கழைக்கூத்து வித்தைகளைக் காட்டாமல் மண்ணில்
காலூன்றும் நிலைகாண்போம்! கல்விக்கண் கொள்வோம்!

எதிர்காலம் புதிர்காலம் ஆகாமல் போக
இதுதருணம்! தவறிவிட்டால் எதுதருணம் ஆகும்?
உதிர்காலம் முடிந்ததனால் இதுவசந்த காலம்!
உறக்கத்தில் ஆழ்ந்திருந்தால் விடிவென்ப தில்லை!
குதிர்போல இனிவாழக் கூடாது நல்ல
கொள்கையுள்ள இனமாக முன்னேற வேண்டும்!
கதிர்போல இருளகற்றிக் காலத்தை வெல்லக்
கல்வியொன்றே தக்கவழி கல்விக்கண் கொள்வோம்!

- வீரமான்

பு. சமுதாயம்
1977.5.25

# 149. ஈனத் தமிழன் இருக்கும் வரையில்...

தமிழன் தோற்றால் தமிழனே சிரிப்பான்!
மற்றவன் தோற்றால் மனமெலாம் பதைப்பான்!
அந்நியன் வெற்றிக்கு ஆலாய்ப் பறப்பான்
தன்னவன் எழுந்தால் தலைமேல் அடிப்பான்!
ஈனத் தமிழன் இருக்கும் வரையில்
மானத் தமிழன் வாழ்வது எங்கே?

அவனவன் இனத்தை அவனவன் தூக்குவான்;
எவனையும் தூக்குவான் இளிச்சவாய்த் தமிழன்!
சொந்த இனத்தைச் சோற்றுக்கு விற்று,
வந்தவர்க் கெல்லாம் வாழ்வினைத் தரவே
எருமைத் தமிழன் இருக்கும் வரையில்
பெருமைத் தமிழன் வாழ்வதும் எங்கே?

- மதுராந்தகன்

த. மலர்
1980.9.14

# 150. பர்மாத் தமிழர் படும்பாடு

கண்ணீரும் செந்நீரும் காணிக்கை யாக்கியவர்
கலைகுலுங்கும் பர்மாவை உலகின்முன் ஊக்கியவர்
என்னானார்? மண்ணானார்! ஏனானார்? ஐயய்யோ!
இளைத்தவர்தாம் என்றெண்ணி வலுத்தவர்கள் அடித்தாரோ?

யாருக்குத் தீங்குசெய்தார் எந்தமிழர் பர்மாவில்?
ஏனவர்கள் இருப்பதற்கும் இடம்மறுத்தார் அரசியலார்?
பாருக்கே பயன்பட்ட பரம்பரையார் இந்நாளில்
பாழ்பட்டுப் போவதுவோ? பார்த்திருக்கக் கூடுவதோ?

கண்ணிரண்டும் காலிரண்டும் கையிரண்டும் கொண்டுசென்றார்
காலவடுப் பெற்றமக்கள் ஒன்றிலொன்றை இழந்துவந்தார்!
எண்ணிரண்டு வயதிளைஞர் இளைத்தலுத்துக் கிழமானார்!
இளங்குருத்து நலங்கருகி இறுதிநிலைச் சருகானார்!

வலிவிழந்தார் பொலிவிழந்தார் வயதிழந்தார் வாழ்விழந்தார்;
வளமனைத்தும் இழந்துமவர் மானம்மட்டும் இழக்கவில்லை!
நலிவடைந்தும் அந்தமானம் நடத்திவரத் தாயகத்தை
நாடியவர் தம்துயரை நவில்வதற்கும் நாவிழந்தார்!

புன்னகையைத் துறந்துவிட்ட பூவையர்கள் மணிக்கழுத்தில்
பொன்னகையும் பறித்துவிட்டார்; பூமேனி வாடவிட்டார்!
புண்ணடைந்த உயிரைமட்டும் போகட்டும் என்றுவிட்டார்
'போகட்டும்' என்பதிலே 'சாகட்டும்' அடக்கம்தான்!

- ஐ. உலகநாதன்

த. மலர்
1964.8.10

## 151. வந்ததையே!

சஞ்சியிலே வந்தவர்க்குச் சம்பாதித் துண்டவர்க்குக்
கஞ்சிக்கும் மிச்சமில்லை; கண்ணீர்க்கும் - பஞ்சமில்லை
வாட்டுமனம் பெர்மிட்[6]டாய் வந்ததையே! போதாதோ
தோட்டத்து மக்கள் துயர்!

- சி. தியாகராாசன்

த. நேசன்
1972.4.6

## 152. தோட்டத்து மக்கள் துயர்

நாதனும் நாரா யணன்தானும் மோதலிலே
பாதித்த தென்னவோ பாமரர்தாம் - சாதனையை
நாட்டியவர் யாரோ நவில்வீரோ? போச்சென்று
தோட்டத்து மக்கள் துயர்!

- ஐ. இலட்சுமி

த. நேசன்
1972.4.6

---

*6 பெர்மிட் - வேலை இணக்கச் சீட்டு - (Work Permit). சஞ்சி - பாடல் 117இன் அடிக்குறிப்புக் காண்க.*

# 153. புத்தி இருந்தால்...

எத்தலைவர் வந்தாலென்? யார்பேசி ஆவதுமென்?
புத்தி இருந்தால் புரிந்துணர்வாய் - நித்தநித்தம்
மூட்டைகட்டும் எண்ணந்தான் மூண்டிருந்தால் மாண்டிடுமோ?
தோட்டத்து மக்கள் துயர்!

- மு. ஆறுமுகம்

த. நேசன்
1972.4.6

# 154. பேச்சால் வருவதென்ன?

பேச்சால் வருவதென்ன பீற்றலுக்கும் தேறாதே
ஆச்சா வெனப்பணிகள் ஆற்றாது - கூச்சலிடும்
கூட்டத்திற் சேராமல் கூடினாற் றான்நீங்கும்
தோட்டத்து மக்கள் துயர்!

- மெ. இளமாறன்

த. நேசன்
1972.4.6

# 155. கூட்டுத் தொழிற்பயிற்சி

கூட்டுத் தொழிற்பயிற்சி கண்டறிந்து அவ்வழியே
ஈட்டும் பொருள்வளத்தால் இன்பமுற - நாட்டமுடன்
தீட்டுமொரு திட்டம் வரும்வரைக்கும் தீராது
தோட்டத்து மக்கள் துயர்!

- மா. தமிழன்பன்

த. நேசன்
1972.4.6

## 156. நாட்டம் செலுத்தாத நாள்வரையில்...

பால்மரத்தில் காய்க்கும் பணமென்று நாம்வந்தோம்;
பால்விலையும் வீழ்ச்சியுறப் பார்க்கின்றோம் - மேல்நிலைக்கு
நாட்டம் செலுத்தாத நாள்வரையில் தீருவதோ
தோட்டத்து மக்கள் துயர்!

- இரா. பெருமாள்

த. நேசன்
1972.4.6

## 157. இல்லுண்டோ?

பல்லுண்டு சொல்லுண்டு பாராட்டி வாயளக்கச்
செல்லுண்டு போனபழஞ் சீருண்டாம் - இல்லுண்டோ?
நாட்டம் அதில்வைத்தால் நாளைக்குத் தீருமே
தோட்டத்து மக்கள் துயர்!

- கோ. தொ. இராவணன்

த. நேசன்
1972.4.6

## 158. தலைவரெலாம் ...

ஏணிப் படியாக ஏற்றுவித்த பாட்டாளி
நாணிக் கிடப்பதனை நானறிந்தேன் - ஏனென்று
கேட்கும் தலைவரெலாம் கூனிக் கிடந்தமையே
தோட்டத்து மக்கள் துயர்!

- மா. தாமோதரன்

த. நேசன்
1972.4.6

## 159. நம்பிய தோட்டம்

வாழும் தோட்டம் சொந்த மென்றே
வாய்ப்பினைத் தேடா திருந்துவிட்டேன்;
சூழும் என்றும் இன்ப மென்றே
சொத்துகள் சேர்க்கத் தவறிவிட்டேன்!

வாளியும் உளியும் போது மென்றே
வாய்பிளந் தேநான் இருந்துவிட்டேன்;
வேலையும் கூலியும் நிலையா மென்றே
வீணே காலம் போக்கிவிட்டேன்!

நாளும் மழையும் பெய்யு மென்றே
நற்குளம் தோண்டா திருந்துவிட்டேன்;
பாலுள கலமே போது மென்றே
பசுவொன்று வாங்கத் தவறிவிட்டேன்!

மயக்கும் கவலையை மாய்க்கு மென்றே
மதுவை நம்பிச் செலவழித்தேன்;
மயக்கம் தெளிந்தபின் என்னு டம்பு
மண்ணாய்ப் போனதை நானுணர்ந்தேன்!

நம்பிய தோட்டம் விரட்டிடு தேநான்
நடுத்தெருப் புழுதி போலானேன்
கும்பிடும் தெய்வமும் எனக்கி ரக்கம்
கொண்டிட விலைநான் பெரும்பாவி!

1969, சனவரி - முரசு. நெடுமாறன்

## 160. பாட்டால் விளைந்த பயன்

வந்தநாள் கொண்டு வளங்கொழிக்கும் நாடாக
இந்தமலை நாட்டை இனிதமைத்த - செந்தமிழா!
பாட்டாளி என்ற பெயர்கொண்டாய்; கொண்டனையோ
பாட்டால் விளைந்த பயன்?

த. முரசு - இரா. நெ. இசுமாயில்
1961.11.12

# 161. ஏ... செலாஞ்சாரே!

மேற்கு மலேசியாவின் தெற்குப் பகுதியில்
மேலான ஜோகூர் பாகாங் எல்லையில்.....
யார்க்கும் தெரியாம அநியாயம் நடந்திருக்கு
அவதிக்கு ஆளான குடும்பங்க பதினைஞ்சு!

சொற்புத்தி சுயபுத்தி எதுவுமே இல்லாம
சொன்னவன் பேச்சுக்கு செவிசாய்ச்சுப் போறாங்க;
அற்புத வரவேற்பும் உபசரிப்பும் வேணாங்க
அன்றாடக் கூலியுமா ஒழுங்காத் தரப்படாது?

மாட்டுத் தொழுவங்களும் பன்றிக் கொட்டடியும்
மனுசனோட வீடுகளா மாறிக் கெடந்ததைத்தான்
நாட்டு விலங்குகளின் ஆட்சியிலே கண்டாங்க;
கலங்கிப்போய்க் கண்ணீர் வடிச்சியே நின்றாங்க!

ஏமாந்து போனோமே என்னடா செய்யுறதுனு
எவ்வளவோ யோசிச்சிப் பாத்தாலும் தப்பிக்க
ஊமைச் சனங்களுக்கு ஒருவழியும் புலப்படாது;
ஊர்காவல் துரைகூட அவனுக்கே கையாளு!

தப்பிச்சு ஓடிவிட எப்போதோ முயன்றாலும்
தப்பாமப் பிடிச்சு ஒப்படைப்பான் போலீசு!
அப்பப்பா! அப்புறம் அவன்பாடு அவ்வளவே
தப்பப்பா உட்டுடுனு அழுதாலும் உடமாட்டான்!

தெரியாம ரெண்டு கத்திரிக்கா எடுத்ததுக்கே
செய்வியாடா இனிமேலே இப்படீனு கேட்டடிச்சுப்
புரியாத ரெண்டு சின்னப் பசங்களையே
புகைபோட்டுத் தலைகீழாத் தொங்க வச்சுட்டான்!

மூர்க்கத் தனமான மிருகச் செயலுக்கு
முட்டாள் தனமாகப் பலியாகிப் போனவங்க;
போர்க்கும் தயங்காத வீரத் தமிழருங்க
புறநானூ றெல்லாமே மறந்து கிடந்தப்போ,

முரட்டுப் புலியையும் முறத்தாலே பயமுறுத்தி
விரட்டி அடிச்ச பரம்பரையில் ஒருபொண்ணு;
வரட்டும் வர்ரதுனு துணிஞ்சு புறப்பட்டு
வெளியே வந்ததனால் குட்டெல்லாம் உடைஞ்சுச்சு!

தரகனா இருந்தே இழுத்துக்கிட்டுப் போனவனும்
தவறாம மேற்பார்வைக் கடமையைச் செஞ்சவனும்
கருகி வதங்கிய சனங்கள் எல்லாரும்
கணக்குப் பாத்தாக்கா நம்ம இனந்தாங்க!

நம்மவரின் ஒற்றுமைக்கும் நாடாளும் அரசுக்கும்
நாட்டின் தொழிற்சங்க வளர்ச்சிக்கும் மலர்ச்சிக்கும்
சும்மாநாம் பேச்சுக்குச் சொல்லப் படாதுங்க!
செலாஞ்சார் சம்பவம் மிகப்பெரிய சவால்தாங்க!

தூதன்
1983, ஆகஸ்டு

- மைதீ. சுல்தான்

## 162. இனவிலங்கு

வனத்தில் வாழும் விலங்கும் கூட
இனத்தில் என்றும் இழிவு செய்யா!
இனத்தான் இனத்தை இழிவு செய்யும்
மனத்தான் வாழ்ந்த மடமை என்னே!
விடுதலை பெற்ற வியனுறு நாட்டில்
கொடுமை நிகழ்ந்த கோலம் என்னே!
அடிமைத் தனத்தை அறுக்கும் போது
மிடிமை வாழ்வை மீளச் செய்தான்
உழைத்த கரங்கள் ஒய்ந்து கிடக்கப்
பிழைகள் செய்தவன் பிழைத்து வாழ்ந்தான்
மனிதனை மனிதன் மிதித்து வாழ
இனிவரும் காலம் ஏற்க வேண்டுமோ?
செலாஞ்சார் அம்பாட் செய்த கோலம்
வளாக மெங்கும் வேதனை யாமே!

த. நேசன்
1983

- தமிழ்ப்பித்தன்

## 163. தொழிலாளர்

மலைச்சாரல் பூம்புனலில், தென்றல் வீசும்
மாஞ்சோலை நிலவொளியில், பெரிய காரில்,
கலைக்கூட அரங்கத்தில் தொழிலா ளர்கள்
கண்ணயர்ந்தார் என்பதற்குக் கதையே இல்லை!
நிலைபெயர்ந்த கட்டடத்தின் இடுக்கில், நீரில்,
நெடுமரத்தின் விழுதடியில், மண்ணின் கீழே
குலைநடுக்கும் தேள்பூரான், பாம்பின் நஞ்சில்
குற்றுயிராய்ச் செத்ததற்கு வரலா றுண்டு!

- தீ. சி. பொன்னுசாமி

த. நேசன்
1981.5.1

## 164. பாடுகின்ற பூபாளம்

வாடுகின்ற கொடுமையெலாம் ஏழை வீட்டில்;
வறுமையுடன் வாழ்கின்ற உதிரிப் பூக்கள்
பாடுகின்ற பூபாளம் எங்கே கேட்கும்?
பரிதவிக்கும் உலைஅரிசி பதத்தை மீறும்!
போடுகின்ற திட்டமென்ன? பெற்ற வர்கள்
புலம்பலினால் ஆவதென்ன? கருக்கள் வேண்டா
நாடுகின்ற உணர்ச்சிகளை அடகு வைப்போம்
நகைபோல அவைமுழுகிப் போனால் என்ன?

- வெ. தேசகுரு

## 165. தொழிலாளி வாழ்க!

நாழியும் ஓய்வில் லாமல் நானில உயர்விற் காக
மேழியும் பிறவு மேந்தி மிகுபல பணிக ளாற்றத்
தோளினைக் கொடுக்கும் வீரத் தொழிலாளர் வியர்வை யன்றோ
ஆழிசூழ் உலகச் செல்வர் அணிந்திடும் முத்து மாலை!

மெத்தனப் போக்கி னாலே விழிகளை மூடிக் கொண்டு
பித்தராய்ப் பிதற்றும் செல்வர் பீடுற உழைப்ப வன்தன்
சித்தத்தைச் செயலில் வைத்துத் தினந்தினம் சிந்து கின்ற
'ரத்தத்தின் ஈரம்' பாரோர் இன்பவாழ் வென்னும் 'ஆரம்!'

உச்சியைப் பிளக்கும் 'உச்சிச் சூரியன்!' அதைம றந்தே
அச்சினி லடித்தாற் போல அழகிய சாலை போடும்
இச்செகச் சிற்பி யாகும் தொழிலாளர்க் கேற்ற மின்றேல்
அச்சிலா தான தேரே அவனியோர் அடையும் சீரே!

அரங்கத்தில் அவனின் ஆற்றல் அழகுற மின்னும்! வாய்த்த
சுரங்கங்கள் அவனா லோங்கிச் சுடர்ந்திடும்! சோர்வில் லாத
வரங்கொண்ட ஞானி போல வாழ்தொழி லாளி வெற்றிக்
கரங்களோ புரியும் சித்து! களிப்புக்கும் அவனே வித்து!

தொழிலாளி என்று வந்த சுடர்மணிக் கற்கள் வாழ்வில்
தொழில்-ஆழி நீந்தி மக்கள் துன்பங்கள் தீர்த்தே இன்பப்
பொழிலாக உலகை மாற்றும் புதுமைக்கு முதல்வன் உண்மைத்
தொழிலாளி வாழ்க! அன்னான் தொண்டுளம் வாழ்க! வாழ்க!

- இரா. பாண்டியன்

ச. வெ. ம.
1987.5.1

## 166. மே நாள்

சத்துள்ள உணவுதனை உண்டோர் வர்க்கம்
சல்லாபம் செய்திடவும், தனது வீட்டில்
பத்தினியாள் பசியாலே உடலம் வற்றப்
பாலில்லா மார்பகத்தைச் சுவைத்த சேயும்
கத்துகின்ற குரல்கேட்டுக் கண்ணீர் விட்டுக்
கணக்கற்ற சிந்தனையில் வெந்து ழன்று
வித்திட்டார் நெஞ்சினிலே அதனால் வெற்றி
விளைத்திட்ட அறுவடையே மேநா ளாகும்!

- இரா. கிருஷ்ணன்

## 167. போதாதோ வீசும் புயல்!

தந்தை குடிவெறியன்! தாயோ பெருந்தீனி!
வந்தெனக்கு வாய்த்தவளோ வன்குரங்கு! - எந்நாளும்
சூதாடி வம்பு தொடருமகன்! என்னில்லில்
போதாதோ வீசும் புயல்!

த. நேசன்
1972.2.20

- ப. நன்முல்லை

## 168. மாந்தனாய் வாழ்ந்தால் போதும்!

வானத்தை வில்லாக வளைக்க வேண்டா
வளமாக வாழ்வதற்கு முயன்றால் போதும்!
தானமென விளம்பரத்தில் போட வேண்டா
தர்மமனம் கொண்டுதவி செய்தால் போதும்!

மணலெடுத்துக் கயிறாகத் திரிக்க வேண்டா
மதிப்புள்ள மாந்தனாய் வாழ்ந்தால் போதும்!
பணமிருந்தால் போதுமென எண்ண வேண்டா
பண்பாடே உயிரென்றால் அதுவே வாழ்வாம்!

இல்லாமை மனத்தெண்ணிக் கலங்க வேண்டா
இருப்பதனைக் கொண்டுயர்வு கண்டால் போதும்!
பொல்லாத வழிப்பொருளை ஈட்ட வேண்டா
புன்மையிலா எளிமைமிகு வாழ்வே போதும்!

தாழ்வகற்றப் புறவழிகள் நாட வேண்டா
தலைநிமிரும் வழிபற்றி உழைத்தால் போதும்!
வீழ்வோமோ எனும்அச்சம் அறவே வேண்டா
வீரத்தை ஆயுதமாய்க் கொண்டே வெல்வாய்!

1987

- அ. மரியசூசை

# 169. கலியனுக்கு அஞ்சலி

பிறந்திட்ட நாள்முதலாய்ப் பீடையாம் சாதியால்
குறைந்தவன் என்ற கொடுமை உனைவருத்த,
வைக்கும் அடியிலெலாம் வாட்டம் தொடர்ந்துவரக்
கைக்கும் மொழிகளுன் காதைத் துளைசெய்யக்
காலங் கழித்தாய்; கடமை மறவாமல்
நாளும் உழைத்தாய்; நன்மகனே! யாரையும்
ஒடுக்கிடும் கால னுனைமட்டும் விடுவானா?
எடுத்தான் உயிரினை ஏழை பிணமானாய்!
உற்றாரும் கூடி உடல்புதைத் தார்மறுநாள்
மற்றொரு செய்திஎம் மண்டை பிளந்ததுவே!
ஆம்!உன் னுடலை அடக்கம்செய் திட்டவந்தப்
பூமிமேல் சாதிப் பிணங்கட் குரியதுவாம்!
ஆதலால் உன்மெய் அடங்கு குழிதோண்டித்
தீதாய்ப் பிறிதிடத்தில் தீமனத் தார்புதைத்தார்!
பிணத்தினைத் தோண்டிய பீழை மனத்தாரின்
குணத்தை விளக்குதல்போல் கொட்டை எழுத்துகளில்
தாளிகை கள்செய்தி தந்தனவே; பல்லினத்தார்
வாழும் திருநாட்டில் வன்னெஞ்சர் செய்கையினால்
மன்பதையின் மானம் மடுவில் இறங்கியதே!
மண்ணுலகி லிதனைப்போல் வன்கொடுமை வேறெங்கும்
நடந்ததே இல்லையாம்! நல்லுயிர் நீங்கியபின்
சடந்தானே என்று சழக்கரிக் கீழ்ச்செயலைக்
கலியனே மன்பதை கைகழுவி விட்டிலதால்!
பலியான உன்மானம் இல்லை இனமானம்!
காத்திட வேண்டுமெனும் கடமை உணர்வாலும்
நாற்ற மனத்தார்செய் நாடகத்தின் கீழ்மையினை
அம்பலத்தில் ஏற்றி, அறிவுறுத்திச் செந்தமிழர்
செம்மை நெறியுணரச் செய்திட வேண்டுமெனும்
நெஞ்சத் துடிப்பால் அறமன்றம் ஏறியதே!
பஞ்சை மனத்தாரின் பக்கத்தும் வழக்குரைஞர்!
கொடுமை யிலுங்கொடுமை! கொள்ளும் மனத்தார்
விடுவாரோ வரவை? அறமன்றம் அறமுரைக்கச்
சாதிவளர்ப் போர்கொள்கை சத்தற்றுப் போனதுவே!
நீதி துலங்க நெடும்பயணம் மேற்கொண்ட
கழக[7]த்தைப் போற்றல் கடனாம் கலிய!
அழத்தோன்றும் இந்த அவலச் செயலாலே

---

7 கழகம் - மலேசியத் திராவிடர் கழகம்

உன்மானம் போனதாய் உள்ளம் வருந்தாதே!
தன்மானம் சில்லோர்க்குத் தரைமட்டம் ஆகியதே!
இடம்பெயரா தங்கே இருந்திருந்தால் உன்னுடலில்
குடங்குடமாய் அள்ளக் குவியுமோ பொன்மணிகள்!
இறந்தபின் எல்லாம் இழிந்த பிணந்தானே?
பிறந்தவன் மேலென்னும் பெயரினைத் தாங்குவதால்
மண்ணப் பிணத்தை வாய்வைத்துக் கவ்வாதோ?
விண்ணளந்த தத்துவங்கள் விளங்கும் தமிழினத்தில்
இடையில் புகுந்த இழிசாதி போயொடுங்கும்
தொடரா தினியுன்றன் துன்ப வரலாறு!
என்றேநாம் ஆறுதலை ஏற்றிடுவோம் நெஞ்சத்தில்;
உன்வழக்கால் மன்பதை உற்ற உணர்வுகளால்
நன்மை பிறக்கட்டும்; நம்மினஞ்சீர் எய்தட்டும்;
உண்மை துலங்கட்டும்; உள்ளம் வெளுக்கட்டும்;
மனந்திறந்து அஞ்சல் மலர்வைத்தேன் தொன்மைமிகு
இனஞ்சிறக்க நாளும் இனிது!

1971 - முரசு. நெடுமாறன்

## 170. ஒன்றில்லை!

உணர்விருக்கும்; சாதியினை ஒழிப்போம் என்னும்
உளமிருக்கும்; உண்மையற்ற கருத்தை மாய்க்கும்
மனமிருக்கும்; சாத்திரத்தை எரிப்போம் என்ற
மதியிருக்கும்; மடமையினைக் கொளுத்தும் நல்ல
குணமிருக்கும்; குவலயத்தின் அமைதி எல்லாம்
குலைப்போரின் கொடுமைகளை வெட்டிச் சாய்க்கும்
சினமிருக்கும்; சிந்தித்துச் செயல்மு டிக்குஞ்
சீரிருக்கும்; என்றாலும், திடந்தான் இல்லை!

கொதிப்பிருக்கும்; கொள்கையற்ற பேரைக் கண்டு
குமைகின்ற மனமிருக்கும்; தீமை நீக்கும்
பதைப்பிருக்கும்; பழந்தமிழ்மேல் என்றும் நல்ல
பற்றிருக்கும்; சமுதாயத் தொண்டர் மீதும்
மதிப்பிருக்கும்; மறுமலர்ச்சி வேண்டும் என்னும்
மங்காத துடிப்பிருக்கும்; பேச்சில் உண்மை
பொதிந்திருக்கும்; ஆனாலும் புவியை வாட்டும்
பொய்மைகளை எதிர்த்துநிற்கும் திடந்தான் இல்லை!

அணி.
1985 - மு. தங்கராசன்

# 171. பேதங்கள்*

அறந்தனைக் காக்கும் நல்ல அன்பரை யறச்சார் பின்றி
மறந்தனை வளர்க்கும் கல்லா மடையர்க ளொன்று கூடிப்
புறந்தனி லிருத்திச் சோறு போட்டிடும் பெரிய பாவம்
வரந்தனைத் தந்த வள்ள றனைக்கோறல் செய்த தொக்கும்.

மாண்புசால் பள்ளர் தம்மை மனத்தினி லிழிவா யெண்ணி
வீம்புகள் பேசு கின்ற வீணர்கா ளாய்ந்து பார்மின்!
மாந்துணர் தூங்கு நல்ல மருதமா நிலத்தி னுள்ளே
வாய்ந்திவ ருழவு செய்த வண்மையால் வாழ்கின் றீரே!

உழவுகொண் டுயிர்பு ரக்கு முழவரை யொழுக்க மின்றி
முழவுகொண் டரற்று மூட முழுமகற் கொன்று சொல்வேன்:
விழவுகொண் டார்ப்ப ரித்து விரிநிலம் யாவுங் காப்போர்
உழவுகொண் மருத வேலி யுத்தமப் பள்ள ரன்றோ?

வஞ்சம்பொய் சூதில் லாமல் மற்றவர் வாழ்க வென்றே
நெஞ்சுரத் தோடு நித்த முழைக்குவே ளாளர் தம்மைக்
கொஞ்சமும் நன்றி யின்றிக் கூறுதல் கொடுமைத் தாகும்!
விஞ்சுத லினியுஞ் செய்தால் வெகுதுய ரடைகு வீரே!

பிறப்புட னிறப்பு வாழ்வு மூன்றினும் பறைதல் செய்வோர்
மறப்பிலா நெஞ்சர் நல்லே ருழவினுக் குதவி செய்வோர்
நிரம்பவே பணிகள் செய்து நீள்புவி யதனைக் காப்போர்
இரப்பவர்க் கீந்து வாழும் பறையரோ தாழ்ந்த மக்கள்?

சக்கிலி யோர்க ளென்று தரமிலா வார்த்தை சொல்லும்
பக்கிரி யனையீர்! நீரோ பாரினிற் பெரிய ராவீர்?
சக்கிலி யவர்க ளல்லர்; சத்திரி யோர்க ளாவார்!
உக்கிரம் நீக்கிப் பார்த்தா லுயர்ந்தவ ரவர்க டாமே!

மன்னராய் வாழ்ந்து வீழ்ந்து வந்துநம் முழவ ரோடு
பின்னரா யுதவி செய்து வாழ்ந்திடும் வஞ்ச மில்லார்;
கன்னடர் தெலுங்க ரெல்லா முயர்ந்தவ ரெனவே சொல்வீர்;
இன்னவர் தாழ்ந்தோ ரென்றிங் கெப்படி யியம்பு வீரே?

---

* பாடல் பிறந்த ஆண்டு 1940

பேதங்கள் சொல்லு கின்ற பித்தரே! மேலும் நீங்கள்
பேதங்கள் சொல்லு வீரேல் பிறமதம் புகுவா ரின்னோர்;
பேதங்க ளாலே நீங்கள் பேய்களா யலைந்து வீணே
பேதங்கள் பட்டு அந்தோ! பெருந்துய ரடைகு வீரே!

- சுவாமி இராமதாசர்

சு. இ. ம. வி. ம.
1977

## 172. ஒருள்ளமே பேருள்ளம்

தொட்டாலும் தீட்டென்று சொன்னார் - அந்தத்
தூய நறுந்தமிழ்த் தோகை மயிலுடல்
பட்டாலும் தீங்கென்று சொன்னார் - இங்குப்
பள்ளுப் பறையென்று பாகு படுத்திக்
கெட்டாலும் மேற்சாதி மேலாம் - என்று
கெட்ட மதிகொண்டு கீழ்மையில் நின்றார்
மொட்டொன்றை முள்ளென்று சொன்னார் - இவர்
மூட மதிகொண்டு வாடப் புரிந்தார்.

ஓடும் குருதியும் வேறா? - சிலர்
உடலத்தி லோடுதல் சாக்கடை நீரா?
வாடும் பிரிவினை ஏனோ? - இங்கு
வாழும் சகோதரர் தாழ்ந்தவர் தாமோ?
நாடும் புதுமைகள் எங்கே? - இந்த
நானிலம் ஒற்றுமை நாடுதல் எங்கே?
பாடும் பறவைகள் பாராய் - அவை
பாடும் ஒற்றுமை படித்திட வாராய்!

கருவினில் வேற்றுமை உண்டோ? - இருக்கும்
கர்ப்பத்தின் காலத்தில் வேற்றுமை உண்டோ?
உருவினில் பேதங்கள் உண்டு - எனில்
உள்ள உணர்ச்சிகள் ஒன்றெனக் கண்டு
திருவுடன் வாழ்வது தேவை - எனில்
சிந்தித்துச் சொற்படி செய்கநற் சேவை
ஒருமையில் வேற்றுமை கொன்று - மண்ணில்
ஒருள்ளங் கொண்டு ஒழுகுதல் நன்று!

- தமிழ்த்தும்பி

த. மலர்
1967.6.18

## 173. ஏனோ?

உழைப்பதன் அருமை கண்டார்க் குலகிலே பெருமை என்றார்
உழைப்பதற் குடலம் ஈயும் உழைப்பவர்க் கெங்கே உய்வு?
களைப்பதே இன்றி நித்தம் கடமையைச் செய்யும் அன்னார்
பிழைத்திடும் வழியே இன்றிப் பெருந்துயர் காணல் ஏனோ?

கழுத்தினைக் கட்டி இல்லக் கிழத்தியாய் ஆன பின்பு
பழுத்தநற் கனிகள் போன்ற பச்சிளம் மக்கள் ஈன்று
வளர்த்திடில் பாரில் தாயின் வாட்டமே ஓடும் என்றார்!
வளர்ந்ததும் மக்கள் தாயை மறந்தெங்கோ மறைதல் ஏனோ?

சிரத்தினைப் போலு மிங்குச் சிறப்பெலாம் சேர்க்கும் நல்ல
அறத்தினைப் போற்று வோர்க்கே அகிலமே பணியும் என்றார்!
திறத்தினால் தீமை செய்வோர் திருவெலாம் பெற்று வாழ
அறத்தினைப் பேணு வாரோ அல்லலிங் கடைவ தேனோ?

இறைவனை வணங்கி வந்தால் இன்னலே அணுகா தென்று
மறையெலாம் கூறிற் றிங்கே மாநிலந் தன்னில் உள்ள
நிறைவுடன் அவனை நித்தம் நினைந்திடும் அடியார் தீராக்
குறைவொடு கும்பி வாடிக் கூக்குரல் இடுதல் ஏனோ?

- மைதீ. அசன்கனி

மலாயா.
1962

## 174. குறை என்று மாறும்?

ஏட்டினிலே சொல்கூட்டி இலக்கியப்பண் மீட்டி
இழைந்தோடும் கற்பனைகள் இயம்புகின்ற நண்பீர்!
பாட்டினிலே பொருள்நீட்டிப் பைந்தமிழ்த்தேன் ஊட்டிப்
பாங்குடனே பாடிவரும் பாவலர்காள்! சொந்த
வீட்டினிலே குறைபோக்கி மெய்யொளிசெய் யாமல்
விரைந்துவந்தே ஊர்திருத்தும் வீரர்காள்! கொள்கைக்
கோட்டையினைக் கட்டித்தினம் குலவுகின்றீர் அந்தக்
கொள்கையினைச் செயல்படுத்தாக் குறையென்று மாறும்?

- அதிரைதாசன்

மலாயா.
1962

# 175. மனிதன் வைத்தான் பேதங்கள்

இந்திய வம்சா வளியினரை
இழிவு படுத்திய நூலதனைச்
சந்தியில் வைத்துக் கொளுத்திடுவோம்;
தன்மா னத்தைக் காத்திடுவோம்
இந்த நிலத்தைப் பொன்னாக்க
இரவும் பகலு முழைத்தோரை
நொந்திட வைத்த கொடும்பாவி
நொடியில் கருகிப் பொடியட்டும்!

திட்டம் போட்டுப் பலமுறைகள்
தீட்டிய கதைகள் பலவற்றில்
மட்டித் தனமாய் இந்தியரை
மடமையி னாலே இழிவாகச்
சுட்டிக் காட்டிய நிலைஇன்று
தொடரச் செய்யா தரசாங்கம்
சட்டம் போட்டுத் தடுத்துவிடின்
சமரச வாழ்வைக் கண்டிடலாம்!

த. நேசன்
1984.11.4

- டி. வி. இராகவன்பிள்ளை

# 176. முயற்சி செய்யாமல் இல்லை

மலிவுவீடு கேட்டுமனுப் போட்டுள்ளான்
மசியுமென்ற முடிவினிலே காத்திருக்கான்!
பல்கலைக் கழகத்தில் இடங்கேட்டுப்
பலநாளாய் அவனுந்தான் காத்திருக்கான்....
முயற்சியினைச் செய்யாமல் இல்லை - வெற்றி
வாய்க்குமென்ற வாய்ப்புதான் இல்லை!

வாடகைக்கார் கேட்டுமனு அனுப்பியுள்ளான்
வங்காளி கம்பத்து முனியப்பன்
கடைவீடு கேட்டுமனு அனுப்பியுள்ளான்
கண்ணாயி ரம்தம்பி கண்ணபிரான்.....
முயற்சியினைச் செய்யாமல் இல்லை - வெற்றி
வாய்க்குமென்ற வாய்ப்புதான் இல்லை!

பட்டணத்தில் புதியபசார் அரசாங்கம்
பாங்குடனே கட்டிரொம்ப நாளாச்சு
நாட்டமுடன் அதிலேமீன் கடைவைக்க
நல்லமுத்து மனுவொன்று அனுப்பியுள்ளான்.....
முயற்சியினைச் செய்யாமல் இல்லை - வெற்றி
வாய்க்குமென்ற வாய்ப்புதான் இல்லை!

காப்புறுதி நிறுவனத்தைத் தொடங்கிடவே
குமுகாய மேமனு அனுப்பிடுச்சு
தப்பேதும் இல்லையிந்த முயற்சியிலே
எப்போதும் கிடைக்காது போலிருக்கு.....
முயற்சியினைச் செய்யாமல் இல்லை - வெற்றி
வாய்க்குமென்ற வாய்ப்புதான் இல்லை!

எண்ணெய்க்கடை கேட்டுமனு அனுப்பியுள்ளான்
இங்கிலாந்தில் படித்துவந்த இளங்குமணன்
இன்னுமதற் குத்தரவு வரவில்லை
என்ன விசயமொன்றும் புரியவில்லை.....
முயற்சியினைச் செய்யாமல் இல்லை - வெற்றி
வாய்க்குமென்ற வாய்ப்புதான் இல்லை!

உழைப்பதற்கு அஞ்சிடாத தமிழினத்தின்
உயர்வுக்கு வாய்ப்புதவி செய்யவில்லை
ஆவலாக எழுகின்ற முயற்சியினை
அநியாய வாய்ப்புகளே தடுத்திடுது....
முயற்சியினைச் செய்யாமல் இல்லை - வெற்றி
வாய்க்குமென்ற வாய்ப்புதான் இல்லை!

- ம. அ. சந்திரன்

# 177. பயனுடைய சொல்லே பகர்

ஏற்றமுடன் வாழ்ந்தவராம் எந்தமிழ ரென்றுபறை
சாற்றித் திரிவதிலே சாரமில்லை - மாற்றார்
வியந்தேத்தும் வண்ணம் வளங்காண என்றும்
பயனுடைய சொல்லே பகர்.

த. நேசன்

- மு. கா. அய்யாதுரை

# 178. மடிதெரியச் சேலைகட்டி...

மடிதெரியச் சேலைகட்டும் வண்டமிழ்ப்பெண் குலமேநும்
வடிவழகைக் காட்டிடஓர் வரம்பிருக்க வேண்டுமம்மா!
கடுகளவும் கூச்சமின்றிக் கனியுடலை வெளிக்காட்டித்
திடமனத்துக் காளையரைத் திண்டாடச் செயலாமோ?

அரைகுறையாய் அந்தரங்க அழகெல்லாம் வெளிக்காட்டும்
மறக்குலத்துப் பெண்மணிகாள்! மாத்தமிழின் கண்மணிகாள்!
மறைத்திருக்க வேண்டுவதை மனமுவந்து காட்டுவதைப்
பிறரெவரும் செய்யாத புதுமையெனக் கருதினீரோ?

காலமெலாம் காத்துவரும் கன்னித்தமிழ்ப் பண்பாட்டைக்
கோலமிகு சேலைகட்டிக் கொடியிடையின் விளிம்பினிலே
ஏலம்விடு கின்றீரே! என்னென்பேன் நும்செயலை
ஞாலமெலாம் நமைக்கண்டு நகையாடச் செயலாமோ?

பெண்ணிற்குப் பெருமைதரும் பெற்றிமிகு நாணத்தை
விண்ணிற்கு அனுப்பிவிட்டு மெல்லியரே காளையர்தம்
கண்ணிற்கு விருந்தளிக்கக் கண்டபடி சேலைகட்டி
மண்ணிற்குள் புதைப்பதென்ன மாத்தமிழர் பண்பாட்டை?

வளர்ச்சியினை எட்டாத வளர்தமிழ்ப்பெண் குலமின்று
கிளர்ச்சியினைத் தூண்டுமொரு கேவலத்தில் வானுயர
வளர்ந்ததென மொழியுமிந்த வையகம்காண்! மேனிஎழில்
விளம்பரங்கள் இனியேனும் வேண்டாவே பெண்குலமே!

எழில்கொடுக்கும் சேலையினை இழித்துரைக்கும் படியுடுத்து
விழிக்கின்ப விருந்தளிக்க விழைகின்ற பெண்குலமே!
வழிகாட்டும் நீங்களுமே வகைதவறிப் போவதனால்
பழிசேரும் அன்றோநம் பண்பாட்டுக்(கு) என்கின்றேன்!

திருவிழாக் காலங்களில் சேலைகளின் கண்காட்சி!
பருவஎழிற் பாவையரின் படுகவர்ச்சி! நிலையிழந்து
தெருவினிலே காளையரின் சீழ்க்கையொலி! இந்நிலையில்
உருப்படுமோ பண்பாடிங்(கு) உயர்தமிழப் பெண்குலமே!

த. ஓசை
1987.8.2

- மு. ஆசைத்தம்பி

## 179. மணமுறிவு

நகத்திருந்து சதைபிரிய நேர்ந்தாலும்
நறியமல ரோடு வாசம்
பகைத்திருந்து பிரிந்தாலும் பசுகன்றைப்
பிரிந்தாலும் பாச மிக்க
அகத்திருந்து காதலெனும் உரமிட்டு
வாழ்க்கையெனும் பயிரை அன்பாய்ச்
செகத்திருந்து வளர்ப்பமென உறுதிகொண்டீர்!
மணமுறிவைச் செய்தல் நன்றோ?

மணவறையில் இனிதிருந்து மாலையிட்டு
மோதிரங்கள் மாற்றிக் கொண்டு
கணமேனும் பிரிந்திரோம் கருத்தொருமை
மிகவளர்த்துக் கனிவி னோடு
தினமிருந்து இல்லறத்திற் றிளைத்திருப்போம்
எனவுரைத்துத் தீய தான
மணமுறிவை இன்றேற்றல் மாண்புடைத்தோ
மடமையினும் மடமை யன்றோ?

- வீ. கே. சுப்பிரமணியம்

## 180. ஜாக்கிரதை!

"தோணுகின்ற கவர்ச்சியெல்லாம் பொம்பளைக்கிட்டே - ஆனா
தோற்றுப்போவா வாதம்செய்தா ஆம்பளைக்கிட்டே"
போனவாரம் வந்திருந்த வரிகளைப்பார்த்தேன் - ஒரு
பொம்பளையா இருப்பதனால் பதில்கவியாத்தேன்!

மானழகை மயிலழகைச் சொல்லிக்காட்டினார் - மக்கள்
மனங்கவர்தல் மீசைஒன்றே என்றுதீட்டினார்
பூனைபுலி எலிகளுக்கும் மீசைஇருக்கும் - இந்தப்
பூவுலகச் சனங்களெல்லாம் அவற்றைவெறுக்கும்!

ஊனக்கண்ணை மறைப்பதற்கு வெள்ளைக்கண்ணாடி - சட்டை
உள்ளிருக்கும் பனியன்நாற்றம் அய்யோஅம்மாடி!
காணும்பெண்கள் மதிக்கஇங்லீஸ் பேப்பர்படிப்பான் - இவன்
காலமெல்லாம் கல்லூரிக்குள் 'கோட்டு'அடிப்பான்!

கால்பிடித்து இறுக்குகின்ற சூட்டுப்போடுறான் - பெண்
கவர்ச்சியாக நடந்துசென்றால் பாட்டுப்பாடுறான்
வேல்பிடித்த போர்மறவன் பேரைச்சொல்லுறான் - பலர்
வெறுக்குமாறு கள்குடித்துப் பிதற்றித்தள்ளுறான்!

மாவும்மையும் பெண்களுக்கு உடைமையேயன்றோ? - ஆண்
மக்களெல்லாம் அதைமறத்தல் கடமையேயன்றோ?
பாவிஇவன் பருவுக்கென்று 'பௌடர்'பூசுறான் - மழை
பட்டுமீசை மைகரைந்தால் உடலம்கூசுறான்.

இருபுறமும் வாரிப்பின்னர் நடுவில்கலைப்பான் - பீட்டில்ஸ்
இப்படித்தான் இருப்பார்என்று தானும்வளர்ப்பான்!
அருவருக்கும் வார்த்தைகளே லட்சியப்பேச்சு - இது
ஆண்களுக்கு அழகாமெனில் நேர்மையேபோச்சு!

துப்புக்கெட்ட ஆண்களுக்கு வெட்கமேஇல்லை - அழகு
தோகையரைப் பழிக்காவிட்டால் தூக்கமேஇல்லை!
எப்பகட்டும் எங்களுக்குத் தேவையேஇல்லை - காலை
எழுந்துஷேவிங் பண்ணாவிட்டால் சகிக்கவேஇல்லை!

துறவியைப்போல் முடிவளர்த்துக் கொண்டுதிரிவதும் - வெள்ளைத்
துரைகளைப்போல் 'சிகரெட்'துண்டை வீசிஎறிவதும்
நிறையழகு என்றுயாரும் சொல்வதேஇல்லை - ஏதும்
நீணிலத்தில் பெண்ணழகை வெல்வதேஇல்லை!

பழையதமிழ் இலக்கியங்கள் படிச்சதும்உண்டா? - அழகு
பாவையரைப் புலவரெல்லாம் பழிச்சதும்உண்டா?
பிழைபொறுக்காக் கண்ணகியின் வாரிசுநாங்கள் - ஆண்
பிள்ளைகளே ஜாக்கிரதை! விலகியேபோங்கள்!

த. முரசு
1968.4.14

- மாலிக்பேகம்

## 181. சீதனம்

ஆணினை விலைக்கு வாங்கும் அரிவையர் உள்ள மட்டும்
நானிலம் உயர்வ தில்லை நலிவுதான் மிச்ச மாகும்;
வீணிலே நூறு பத்தாய் விலையினைப் பேசிப் பேசிக்
காணிகள் வீடு தோட்டம் காளையர்க்(கு) அளித்தல் நன்றோ?

முதுகெலும் பில்லா ஆண்கள் முழுவதும் அறிந்தி ருந்தும்
அதுஇது என்று கேட்டே அரிவையர் தமைம ணக்கும்
புதுவித உலகம் கண்டோம்; புன்மையே அன்றி ஏதும்
இதனிலே சிறப்பும் உண்டோ? இறைவனே இதுயார் கூத்து?

வாட்டம்நன் முகங்கள் காட்ட வஞ்சியர் துயரத் தோடு
வீட்டினில் இருந்து வாடும் விதியினை மாற்று தற்காய்
ஏட்டினில் புரட்சி யென்று எழுதிடும் கவிஞர் கூடக்
கேட்கிறார் சீத னத்தைக் கேவலம்! இதுவோர் வாழ்வா?

- சீ. மோகனேசுவரி

பு. சமுதாயம்
1985, அக்டோபர்

## 182. கைம்பெண்

விளைகின்ற நிலமாக இருக்கின்றாள் வளம்காண
விருப்புள்ள வீர னில்லை! நன்கு
விடிகின்ற பொழுதாக மிளிர்கின்றாள் வெளிச்சத்தை
வீசற்குத் தீர னில்லை! இந்தப்
புளிக்கின்ற வாழ்க்கையை விதவையர் மட்டுமேன்
பூண்டிங்கு வாழ வேண்டும் மீண்டும்?
புவிமீது மறுசென்மம் பெற்றிங்கே நல்வாழ்க்கை
புரிகின்ற மாந்தர் யாரே? வாழ்வில்
களிக்கின்ற மனமேற்றுச் சிரிக்கின்ற முகமாக்கக்
கைமஞ்சள் ஈவா ரில்லை! ஒற்றைக்
கண்ணாலே வலைவீசிப் பொன்மேனி மேய்கின்ற
காளையர்க்கோ பஞ்ச மில்லை! தேனை
அளிக்கின்ற தளிர்மேனி பெற்றுள்ள கனியின்று
அவலமாய்ப் போகும் போது நாளும்
அழுகாத நிலைபேணி ஒருதாலி யவட்கிட்டே
அணைக்கின்ற இளைஞ னில்லை!

- கோ. தொ. இராவணன்

த. நேசன்
1976.10.3

## 183. உணர மறுப்பதேனோ?

திருவிளக் கென்பர் பெண்களைத் - தேவை
தீர்ந்ததும் ஓடுவர் காளையர்!
தெருவிளக் காக்குவர் அவர்களைப் - பின்
திட்டுவர் தம்குறை மறந்துமே!

காவிய நாயகி ஆக்குவர் - தம்
காரியம் முடிந்ததும் ஓடுவர்!
ஓவியப் பாவையென் றோதுவர் - பின்
உலுத்திடச் செய்துமே தூற்றுவர்!

தாய்குலம் என்றுமே ஏத்துவர் - பின்
தறுதலை யாக்கியே ஏகுவர்!
நாய்க்குலம் என்றுபின் ஏசுவர் - மனம்
நடுங்கிடப் பாழ்ங்கிண றாக்குவர்!

ஆருயிர் நீயென அள்ளுவர் - பின்
ஆழ்கடல் நீரினுள் தள்ளுவர்!
சீர்வரி சையென நீட்டுவர் - தரச்
சீரிலை யேல்விரைந் தோட்டுவர்!

அன்பினால் மயங்கியே அணைத்தபின் - ஆணை
அழிப்பவள் பெண்ணென அறைகுவர்!
உண்மையில் எமைஅழித் திடுபவர் - அவரே
உலகிதை உணர்ந்திட மறுப்பதேன்?

1967 - கமலாலட்சுமி

## 184. மகளிர் கும்மி

கும்மியடி பெண்ணே கும்மியடி - அருள்
கொற்றம் விளங்கிடக் கும்மியடி
செம்மை உலகம் மலர்ந்திடவே - இங்குச்
சின்னக்கை யால்அருள் கும்மியடி.

புத்தம் புதிய உலகத்திலே - அருள்
பூத்த மணமலர்த் தோட்டத்திலே
கத்தும் குயில்மொழி கேட்டுவிட்டோம் - என்று
கன்னல் மொழிசொல்லிக் கும்மியடி.

தென்றல் அலைந்து தழுவிவரும் - அதில்
தென்றமிழ்ப் பாடல் இழைந்துவரும்
சென்ற உலகத்துப் பீடையெல்லாம் - அதில்
செத்து விடும்என்று கும்மியடி.

ஊரை அடித்து உலையிலிடும் - வெறி
ஓய்ந்து விடும்என்று கும்மியடி
பாரில் அறப்பயிர் பாத்திகொள்ளும் - என்று
பத்து முறைசொல்லிக் கும்மியடி.

நாடு மொழிஇனச் சாதிகளால் - வரும்
நாடகச் சண்டை ஒழிந்துவிடும்
பாடுபடும் மக்கள் யாவருமே - பொதுப்
பங்காளர் என்றருள் கும்மியடி.

தன்னுடை மையென்று ஓரத்திலே - செல்லும்
தக்கைகள் சாயம் வெளுத்துவிடும்
இன்னுயிர் எல்லாம் களிப்பதுவே - பொது
இன்பம்என் றேசொல்லிக் கும்மியடி.

ஊனும் உடைமைப் பொருள்களெல்லாம் - எந்த
ஊருக்கும் அன்பில் பொருந்திவரும்
நானும் உலகத்து மானிடனே - என்னும்
நாட்டம் வரும்என்று கும்மியடி.

வேலி தடுப்புச் சுவர்களெல்லாம் - இனி
வெட்டி எறியத் துணிவுகொண்டோம்
காலை அழகு கதிரொளியில் - அந்தக்
காட்சிகண் டோம்என்று கும்மியடி.

கொத்தடி மைஎன்ற கூச்சலில்லை - எந்தக்
குள்ள நரிக்கும் தலைமையில்லை
பித்த மனிதப் பிணங்களையே - தடம்
பேர்த்துவிட் டோம்என்று கும்மியடி.

1970

- ப. மு. அன்வர்

# 185. சோற்றுக்கடைச் சோகக் கிளி

சோற்றுக் கடைதிறந்து
சோறுகறி நான்சமைத்தே
ஏற்றம் அடையவெண்ணி - கிளியே
ஏமாற்றம் அடைந்தேனடி!

வட்டிக்குப் பணம்வாங்கி
வகைவகையாய்ப் பொருள்வாங்கி
எட்டுக்குப் பத்தென்று - கிளியே
இலைநிறைய வைத்தேனடி!

சட்டினி கேட்பவர்க்குச்
சாம்பாரை வார்த்திருந்தேன்
இட்டலி கேட்டவர்க்கும் - கிளியே
இறைச்சியாணம் கொடுத்தேனடி!

தோசைக்கு மோர்விழைவார்
சுவையூறு காய்விழைவார்
ஆசைக்குச் சீனியென்பார் - கிளியே
ஆயகறி விழைவாரடி!

காப்பியிலே குளிரிருந்தால்
கடிந்தே குரல்கொடுப்பார்
காப்பி குடித்தவுடன் - கிளியே
கடன்சொல்லிப் போவாரடி!

மாதம் முடியும்மட்டும்
வயிறார உண்டுவிட்டு
மாதம் முடிந்தவுடன் - கிளியே
மாயமாய்ப் போவாரடி!

போட்ட முதலெல்லாம்
போனவழி தெரியவில்லை
கேட்டாலும் கொடுப்பாரில்லை - கிளியே
கேளாய்என் கதையடியோ!

த. நேசன்
1966.8.7

- கா. இராமு

## 186. மலாக்காவில் காதை கூறும் சான்று

வணிகத்தில் வளம்பெருக்கத் தமிழன் காலக்
கணிதத்தில் கருத்தூன்றி மாற்றங் கண்டு
வனப்புமிகு மலையத்தில் வாழ நேர்ந்தும்
இனப்பிரிவில் மாற்றமிலா திருந்து வாழச்
சுணக்கமின்றிச் சுகித்திடவே ஏற்றம் கண்டு
மணம்புரிய மறுக்கவிலை மலையப் பெண்ணை
வளவாழ்வில் கைபிடித்து வாழும் காதை
மலாக்காவி லெல்லீரும் காண லாமே!

கூட்டுற. - க. லோகநாதன்
1971

## 187. பொல்லாத ஆளு எங்க கங்காணி!

காலையிலே காண்டா[8]தூக்கி நடந்தபெண்ணைக் கண்டாரு
காளைவயசு பொடியன்போல நின்னாரு - எங்க கங்காணி
காலு இரண்டும் ஆடுது கையும் தாளம் போடுது
கறுத்தமுடி நரைச்சு நாளும் ஆகுது
கட்டைவண்டி ஓடம்மேலே ஏறுது - அட
கங்காணிக்கு ஆசைமேலே மோதுது - இந்த
வயிற்றெரிச்ச கேக்கும்போது
நெஞ்சுதாளம் போடுது!

பல்லுஎல்லாம் போனபின்னே கள்ளுத்தண்ணி போட்டாரு
மொல்லமொல்ல ஆட்டம்போட்டு வந்தாரு - எங்க கங்காணி
வெள்ளம்மேலே வெள்ளம்வந்து பாயுது - அந்த
வெள்ளையம்மா சேலைஈர மாகுது - எங்க
கொள்ளிக்கண்ணுக் கங்காணிக்கு மெள்ளப்பார்வை சாயுது!
தல்லாலே பாட்டுக்கொஞ்சம் சேருது - அதுக்குத்
தாளம் போடக் காலுஇரண்டும் ஆடுது - கொஞ்சம்
'வேலம்மா'ன்னு வாயிசத்தம் போடுது!

---

*8 காண்டா - பக்கத்திற்கு ஒரு வாளியாக இருவாளிகளை மாட்டித் தூக்கிச் செல்ல உதவும் கருவி (காவுதண்டு).*

"தோட்டமெலாம் எங்கொடிதான் துரையும்சலாம் போடணும்
வாட்டசாட்ட மானமனுசன் நானடி - சும்மா
வச்சாவெடி மூட்டைமுடிச்சக் கட்டணும் - அந்த
வகைதெரிஞ்சு நீயும்கொஞ்சம் நிக்கணும் - நாலு
ஆட்டமாட்டை வெச்சிருக்கேன்
ஆறுநூறு பண்டுப்பணம்...[9]
போட்டுவெச்சுப் போடறேஉன் பேராலே - நீ
பெரியமனசு பண்ணிக்கொஞ்சம் பாருவே!

தோட்டத்துக்கே ராணியாக்கித் தோளுமேலே தாங்குவேன்
தொட்டுக்கிறன் கை"யையின்னு சொல்வாரு - பொண்ணு
தொட்டவுடன் பொதுக்கடின்னு விழுவாரு - கீழே
விழுந்தவுடன் தூக்கம்போட்டு முடிப்பாரு - பொழுது
விடிந்தவுடன் போதைகலைஞ்சு முழிப்பாரு - பின்னே
பெரட்டுக்கலைக்க எந்திரிச்சு நடப்பாரு - சின்னப்
பொண்ணுகளைக் கண்டுவிட்டா நின்னுநின்னு சிரிப்பாரு
பொல்லாத ஆளு எங்க கங்காணி - அவர்
போக்கைஇனி நீயும் கொஞ்சம் கண்காணி!

ச. மே. ம.
1972

- எஸ். கறுப்புசாமி

## 188. ஈழத் தமிழர்க்கு மீட்சி!

இரக்கம்எறி குண்டிற்கே இரையாகிப் போச்சோ?
இதயமெலாம் இருட்டறையில் துயில்கொள்ள ளாச்சோ?
உறக்கம்உல கத்தாரை ஆட்கொள்ள லாச்சோ?
உண்மையினைக் காணாமல் கண்மூடிப் போச்சோ?
இரக்கத்தால் செங்கோலைக் கொடுங்கோலாய் மாற்றும்
உலுத்தர்களின் செயலுக்கே ஒருமுடிவைக் கட்ட
உரமிக்க கரிகாலன் மீண்டும்பிறப் பானோ?
உயர்ஈழத் தமிழர்க்கு மீட்சிதரு வானோ?

- க. அழகுசெல்வன்

---

*9 பண்டுப் பணம் - தொழிலாளர் சேமநிதி (Employees Provident Fund)*

# 189. இடும்பை தவிர்க்கும் குடும்பவிளக்கு

காலை எழுந்திருந்து கைகால் முகங்கழுவி
வேலைக்குச் செல்ல விரைந்து கணவனையும்
நாலைந்து முறைகூவி நாள்காட்டி எழுப்பியபின்
பாலைக் கலக்கிப் பரிந்துமகற்(கு) ஊட்டுகையில்
'காப்பி' எனஅழுவாள் கண்ணான மூத்தமகள்;
காப்பியை ஆற்றிக் கதவோரம் வச்சிருக்கேன்
நீபோய் குடித்திடுவாய் நீதான் சமர்த்துப்பெண்!
கூப்பாடு போடாது குடித்திடுவாய் என்றிடுவாள்
வெள்ளி முளைக்குமுன் விழிமலர்ந்த தோட்டமகள்
வெள்ளை மனத்தழகி வேல்மறவர் குலக்கொழுந்து
மெல்லக் குழந்தைகளை மேற்பார்க்கும் அம்மை[10]யிடம்
துள்ளி எடுத்தேகித் தேர்வுசொல்லி விட்டதற்பின்
வாளி உளி[11]யுடன் வாய்சிவக்கும் வெற்றிலையும்
தோழியர் சூழத் தொழில்செய்யு மிடம்நோக்கிக்
கேலிக் கதைபலவும் கேண்மையுறத் தான்பேசி
வேலைக்குச் செல்லும் வெளிக்காட்டுப்[12] பெண்களுடன்
நாட்டு நிலைபேசி நடப்பவை தாம்பேசிக்
காட்டுக் கதைபலவும் காட்டேறி கள்கதையும்
கேட்டுச் சலிக்காது கெக்கேலி யுஞ்செய்வார்!
பாட்டுகள் கூடப் பாங்காகப் பாடிடுவார்!
கடுகி நடையோட்டிக் கடமைசெய்யு மிடம்வந்தால்
மிடுக்காக வாளிதனை மென்மையுற வைத்துவிட்டுக்
கையில் உளியெடுத்துக் கடுவேக மாய்ஓடி
மெய்யாகச் சீவிடுவாள்[13] மென்மையுறப் பால்மரத்தை
பொங்கிவரும் பாலினுக்குக் கால்வாய்போல் கோடிட்டு
மங்கு[14] துடைத்துவைத்து மரத்தழுக்கு நீக்கிவிட்டுப்
பொங்கிவரு வேர்வைபொற் கையால் வழித்தெறிந்து
சங்குக் கழுத்தழகி சடுதியிலே மரமுடிப்பாள்![15]

---

*10 மேற்பார்க்கும் அம்மை - வேலைக்குச். செல்லும் பெண்களின் குழந்தைகளை வைத்துப் பாதுகாக்கும் இடம் 'ஆயாக் கொட்டகை' எனப்படும். பாதுகாக்கும் பொறுப்பில் உள்ள மூதாட்டி 'ஆயா' எனப்படுவார். இது தோட்ட நிருவாகத்தின் ஏற்பாடு.*

*11 உளி - பால்மரம் சீவும் கருவி*

*12 வெளிக்காட்டு வேலை - Field Work*

*13 சீவுதல் - பால் வடியும்வண்ணம் ரப்பர்மரப் பட்டையை முறையுடன் சீவுதல் - Tapping.*

*14 மங்கு - வடியும் பாலை ஏந்தும் கிண்ணம்*

*15 மரமுடித்தல் - குறிப்பிட்ட எண்ணிக்கையிலான ரப்பர் மரங்களைச் சீவிமுடித்தல்.*

ஐநூறு பால்மரத்தை அழகாகச் சீவிவந்து
மெய்சோரச் சின்னேரம் மேனி அயர்த்திடுவாள்;
கையோடு தான்கொணர்ந்த சிற்றுணவை உண்டிடுவாள்;
பைய நடந்து பால்வடிதல் கண்டிடுவாள்;
சின்னேரம் ஓய்ந்திருந்து செங்கையால் பாலெடுக்க
மின்னல் கொடியிடையை மிடுக்காய் அசைத்தோடிப்
பொன்னாக எண்ணிப் பொறுமையுடன் பாலெடுத்துச்
சின்னேரம் அதனைச் சேர்க்குமிடம் சேர்த்திடுவாள்!
உழைக்குநற் றோழன்மகள் உவப்பாகப் பால்தூக்கித்
தொழிற்சாலை[16] தனைநோக்கித் துள்ளு நடையுடனே
மெள்ளஅவ் விடமடைந்து மேற்பார்க்கும் மக்களிடம்
சொல்லிப் பால்நிறுத்து[17] சொகுசாகக் கையலம்பி,
கொண்டுவந்த வாளிதனைக் கோல்கம்பி[18] யில்மாட்டித்
தென்றல் நடைபயின்று தெம்புடனே வீடடைவாள்!
வீடடைந்து காண்டா[19] வாளிஉளி வைத்துவிட்டு
ஆடும் மனத்தில் அவிழ்ந்துவரும் வேட்கையெலாம்
கூடிக் கிடக்கும் குழந்தையினைப் போய்த்தூக்கி
மோடியாய் ஒன்றிரண்டு முகவுரை களும்பேசி
வேடிக்கை செய்து விளையாட்டாய் ஏசிதினம்
வாடிக்கை யாய்ச்செய்யும் வழக்க மெலாமுடித்துக்
கூடை[20]யைக் கைக்கொண்டு குழவியையுந் தூக்கிவந்து
வீடதனில் விட்டிடுவாள் வேண்டும் பணிமுடிப்பாள்!
வாடும் குழவியர்க்கு வகையாக உணவளிப்பாள்!
வேலைக்குச் சென்ற வேய்த்தோளன் வந்தவுடன்
பாலாய் முகமொளிரப் பண்புள்ள வார்த்தைசொல்லிக்
கிள்ளை மொழிபகர்வாள் கேலிபல பேசுமகள்
சொல்லைச் சுவையோடு சொல்வதுமோர் பேரின்பம்!
சேலார் விழியழகி சின்னேரம் சுழன்றோடி
மாளாப் பெருவேலை மாய்மால மாய்முடிப்பாள்!
'அத்தான்வா ருங்கள் அமுதுண்ண' என்றழைப்பாள்
கொத்தான கோடி குளிர்நிலவு போல்சிரிப்பாள்!

---

*16 தொழிற்சாலை - ரப்பர்ப் பாலைப் பதப்படுத்தும் இடம்*

*17 பால் நிறுத்தல் - தொழிலாளர்கள் திரட்டிக்கொண்டு வந்த பாலை எடை போடுதல்; பாலின் எடையளவு ஊதிய நிருணயத்திற்கு ஓர் அடிப்படை ஆகும்.*

*18, 19 கோல்கம்பி, காண்டா - நீண்ட கோலின் இருமுனைகளிலும் தொங்கும் கம்பிகளில் வாளியைக் கோத்துத் (காவடிபோல்) தூக்கிச் செல்லும் கருவி*

*20 கூடை - குழந்தைக்கான பால், துணி, விளையாட்டுப் பொம்மை முதலியவற்றை வைக்கப் பிரம்பினால் நீள்சதுர வடிவில் பின்னப்பட்ட கூடை. இதை 'வக்குள்' என்பர். இது 'பக்குள்' - Bakul என்னும் மலாய்மொழிச் சொல்லின் தமிழ் வடிவம்.*

கன்றுக் குணவளிக்கும் கரிசனத்தோ டுணவளிக்க,
குன்றா நெடுந்தோளன் கோடிமுறை கண்ணடிப்பான்!
அன்னவன் உணவுண்டு எழுந்தவுட னங்கவளும்
தென்னவர் வழக்கமெனத் தெம்பாக உணவுகொண்டே
அழுக்குக் கலங்களை அலம்பித் துடைத்தெடுத்து
இழுக்கொன் றில்லாமல் இருப்பவற்றைச் சீர்செய்து
துலக்கும் பாத்திரங்கள் தூய்மைசெயும் துணிமணிகள்
இலக்குசெய் தத்தனையும் இலகுவாக முடித்திடுவாள்!
மாலைவரு முன்னரே மறுநா ளுணவுக்கும்[21]
வேலைபல செய்து விரைவாக வேமுடிப்பாள்
மாலை யமர்கையிலே மஞ்சளுடன் நீராடிச்
சேலை தனையுடுத்துச் சேலாய் விழியலர
இறைவன் திருமுன்னர் இன்ப மலர்சூட்டிக்
கரைந்த மனத்துடன் கண்மூடி யேதொழுது
பைய எழுந்திருந்து பாலர்க் குணவளித்துக்
கையமர்த்தி யவருறங்கக் கருத்தாகத் தாலாட்டி
மெய்ந்நூல் தனையெடுத்து மேன்மைத் தமிழ்சுவைத்துத்
தையல் இருந்திடுவாள் தன்னாளன் வரவெண்ணி!
ஆளன் வரவுகண்டே அகமலர்ந் தணங்கவளும்
பாலின் சுவையெனவே பாங்குற மொழிபேசி
வட்டிகையில் உணவெடுத்து வகையாகத் தானளித்(து)
இட்டே உவகையுடன் எதிரிருந்து சேவைசெய்வாள்
செய்யுமிவள் பணிக்குச் செகத்தினில் ஏதுவமை?
பொய்யல்ல இதுபோற் குடும்பம் பலவுண்டு!
மெய்யாகச் சொல்லவெனின் மேதினியில் கண்ணகிகள்
ஐய பலருண்டு! யாரறிந்தார் அவர்பெருமை?
தோட்டப் புறப்பெண்கள் தொழுகைக்கும் ஏற்றவரே!
வீட்டினையே உலகமென வேள்விசெய் கின்றார்கள்!
பாட்டில் அடங்குவதோ பொன்மகளிர் தம்பெருமை?
வீட்டின் சுடர்வாழ்த்து வாம்.

த. மலர்
1967.8.27

- ஏ. நீலகண்டன்

---

21 மறுநாள் உணவு - காலை 5 மணி முதல் பிற்பகல் 2 மணிவரை வேலை செய்யும் தோட்டப்புறக் குடும்பங்களில் பகலில் உணவு சமைக்கும் வழக்க மில்லை. இரவில் உணவு சமைத்து, அதனையே மறுநாள் பகல் உணவாக உட்கொள்வர்.

# 190. தீர்ப்பு

(இஃது ஓரடி மிக்குவந்த எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

கித்தாப்பால்[22] தோட்டத்தில் கந்த னென்ற
கிளிமூக்கன் செய்தகதை சொல்வ தற்கே
அத்தாப்பு[23] வீட்டரசன் 'அறிவா னந்தர்'
அழைக்கின்றார் என்றாலும் ஊர்க்க தைதான்
பத்தோடு பதினொன்றாய்க் கேட்ப தற்குப்
பஞ்சாயக் கூட்டத்தில் கலந்து கொண்டேன்
சத்தமிடும் தலைவரவர் அறிவா நந்தர்
தலைநிமிர்ந்து வீற்றிருந்தார் ஆச னத்தில்
சத்தான சுவைச்செய்தி கேட்ப தற்குத்
தவறாமல் வந்திருந்தார் தோட்ட மக்கள்.

ஊர்மக்கள் விவகாரம் உள்ளம் மட்டும்
உந்துகின்ற காரணத்தை என்ன சொல்வேன்!
பார்வைக்கு வைத்ததுபோல் பஞ்சா யத்தார்
பார்வைக்குள் வீற்றிருந்தான் கந்தன் தானே!
யார்வைத்த பெருநெருப்போ கொழுந்து விட்டு
"யாதுசெய்வேன்?" என்பதுபோல் விழித்த பார்வை
கூர்இட்ட வேலெனவே நாக்கைத் தீட்டிக்
கூனமதிக் குள்ளனவன் எழுந்து நின்று
பேர்பெற்ற வார்த்தைகளைப் பேச லானான்
பிரமாத மாய்ப்பலரும் நகைக்கு மாறே!

சதிவாதம் செய்யவந்த குள்ளன், கண்ணால்
சபிப்பதுபோல் பார்க்கின்றான்; கந்தன் மட்டும்
புதிராக நிற்கின்றான்; வெந்நீர் சிந்திப்
புரியாமல் தவிக்கின்றான்; யாது சொல்ல?
அதிர்கின்ற சொல்லழகர் அறிவா னந்தர்
அமைதியிலாக் கூட்டத்தின் முணுமு ணுப்பை
இதிகாசத் தமிழாலே அடக்கு கின்றார்;
இந்நாட்டில் அவர்பெற்ற சாக சத்தால்
சுதியோடு இசையாக இவருக் கீடாய்த்
தொடர்கின்றான் சுவையோடு சொக்க லிங்கம்.

---

*22 கித்தா - ரப்பர்; கித்தாப்பால் தோட்டம் - ரப்பர்த் தோட்டம்*
*23 அத்தாப்பு - தென்னை ஓலை போன்ற ஓலை, கீற்றுப்போல் பயன்படுவது*

இளம்பெண்ணாம் திருக்குள்ளர் பெற்றெ டுத்த
இளமதியின் பால்மனத்தைக் கெடுத்து விட்டான்!
குலத்தினிலே தாழ்ந்தவனாம் இந்தக் கந்தன்
குறுக்குவழி கையாண்டான் 'காதல்' என்றான்;
விளக்கிடவோ நாக்கூசும்; கந்தன் செய்த
விளையாட்டாம் கித்தாப்பால் தோட்டக் காட்டில்
இளமதியாம் இவர்பெண்ணை இடுகாட் டோரம்
இறுகவணைத் தின்பத்தோ(டு) அமர்ந்தி ருந்தான்;
மலைக்காட்டுக் கங்காணி பார்த்து வந்து
மனசோடு சொன்னகதை அளந்தார் அன்பர்!

சுருட்டைமுடிக் கங்காணி சொக்க லிங்கம்
சொகுசாக அமர்ந்திருந்தார் தூணின் ஓரம்;
விருட்டெனவே இழுக்கின்றார் சுருட்டின் நாற்றம்
விரைந்துவரும் புகைவண்டிப் புகைபோல் நீளும்!
கருக்கலிலே 'பெரட்'டேகும் வேளை இந்தக்
கிளிமூக்கன் கந்தனவன் தொடர்ந்தான் பெண்ணை
அருகினிலே அணுகிவிட்டான் திருப்பம் ஒன்றில்
அடர்ந்தசெடி சலசலக்க மறைந்தான் மாயம்!
சுருக்கமாய்ச் சொல்லிவிட்டார் சொக்க லிங்கம்
சுதிசேர்ந்த பாடலெனக் கதையும் கட்டி!

சாட்சியினர் வாதத்தைத் தொகுத்துக் காட்டிச்
சரமாரி பொழிகின்றார் 'சாட்டு' தன்னை;
ஆட்சியவர் கையிலென்றால் இறைவன் கூட
ஆட்டிடுவான் தலைஆமோ திப்ப தாக
நாட்டிவிட்ட பெருமிதத்தில் அறிவா னந்தர்
“நாமெல்லாம் ஒற்றுமைச்சின் னங்கள்” என்றார்;
பாட்டாளித் தோழர்களே! இதற்கு நீதி
பகர்வதுங்கள் கையிலென்றே சொன்ன தோடு
கூட்டாளி இவனோடு யாரும் சேர்ந்தால்
கூண்டோடு 'நோட்டீசு'[24] கொடுப்போம் என்றார்.

இவனுக்குக் கூட்டாளி என்ற போதில்
என்நெஞ்சம் இயந்திரம்போல் மேலும் கீழும்
அவமானத் தோடியங்கத் தலைகு னிந்தேன்
அவனுக்குத் துணையாக இருந்தோன் நானே!
'எவருமெனக் குத்துணையாய் இல்லை' என்றே
எடுத்தெறிந்தான் கந்தனவன் என்றன் நண்பன்;

---

*24 நோட்டீசு (Notice) - வேலைநீக்க ஆணை*

தவறென்றால் தண்டனையை நானே இங்குத்
தனியாக ஏற்பதற்குச் சித்தம் என்றான்;
எவருக்கும் பணியாத திண்மை நெஞ்சோன்
ஏனடங்கிப் போனானோ யாரே கண்டார்?

"கன்னியரும் காளையரும் கண்ணால் நோக்கிக்
காதலித்து வாழ்வதிலே பாவம் என்ன?
என்றைக்கோ சாதியெனும் இருளை நாங்கள்
இடுகாட்டில் புதைத்துவிட்டோம் ஒளியில் வாழ்வோம்!
என்னையவள் ஏற்றுவிட்டாள்; இனியோர் வாழ்வு
இல்லையில்லை நானின்றேல் வாழ்வே இல்லை;
நன்றிதனைச் சீர்தூக்கித் தீர்ப்புச் சொல்வீர்
நடுவர்களே!" என்றுமட்டும் கூறி நின்றான்.
மன்றமதில் உள்ளவர்கள் என்ன செய்வார்?
மடக்குபவர் தலைவரெனும் அறிவா னந்தர்!

நஞ்சுடைய நெஞ்சத்தார் தீர்ப்பைச் சொன்னார்
பஞ்சையென அவன்ஓட வேண்டும் என்றே;
அஞ்சாத கந்தனவன் பெண்ணின் பாவ
அழலுக்கு அஞ்சிப்பின் கூற லானான்:
"பிஞ்சுமனம் அவளைவிட்டுப் பிரிதல் ஒன்றும்
பெரியதோர் சாதனையும் அல்ல அல்ல!
அஞ்சுகின்றேன் பின்னுமொரு பழியும் நேர்ந்தால்
அஞ்சுகத்தின் உயிருக்கோர் பங்க மென்றால்
கெஞ்சுவதும் என்பழக்க மில்லை; இந்தக்
கெடுமதியார் தமைநீங்கி வாழ்தல் நன்றே!"

த. நேசன்
1978.2.5

- கா. அருண்மொழி

## 191. பலிக்கடா

"பத்தியாய்ப் பாரினில் பலருமே வணங்கிடும்
பத்திர காளியே! பத்தினித் தெய்வமே!
துக்கமாய் யானும்நின் திருவடி போற்றினேன்;
துடித்திடும் என்மகன் நோயினைத் தீர்த்திடாய்!

பத்துக்க டாவொடு சேவலும் பத்தியாய்ப்
பலியிடு வேன்இது சத்தியம் பார்த்திடாய்!
எத்துணைப் பலிகளை மேலும்நீ கேட்பினும்
அத்துணை தருவனென் சிறுவனைக் காத்திடாய்!"

என்றொரு பத்தனும் இறைஞ்சியே அம்மன்முன்
எழில்மிகு கடாவினை எறியவே நிறுத்தினான்;
குன்றுசேர் அருவிபோல் கண்களில் நீர்வரப்
பொன்றுதல் போதினில் பொற்புறும் அக்கடா
"என்னரும் அன்னையே! எழில்மிகு காளியே!
உன்னுடை அருளினால் உலகெலாம் மலர்ந்தன;
அன்புடை உயிரெலாம் உன்னுடை மக்களே
வன்புடன் எங்களைக் கொல்பவர் மக்களோ?

உன்னுடை மக்களுள் யானொரு வன்அன்றோ?
என்றனை என்அண்ணன் கொல்லுத லும்நன்றோ?
அன்பினும் அறத்தினும் அகப்படும் அன்னையே!
என்றன்பால் உன்றனுக் கன்பிலை என்பையோ?
பொன்றும்நாள் வருமுனர்க் கொல்லுதல் நீதியோ?
பொற்புடைத் தெய்வமே! புவியகத் தேவியே!
நன்பெரும் வரங்களை யாவர்க்கும் நல்கும்நீ
என்பெரும் உயிரினைக் காத்திடு" என்றதே!

## வேறு

"என்படைப்பில் உருவான உயிர்கள் யாவும்
என்மக்கள் என்பதனை உணரா மூடா!
என்பெயரால் என்மகனைப் பலியாய் இட்டால்
என்னவரம் கிடைக்குமென எண்ணி னாய்நீ?
கண்ணைவிற்றுக் காவியத்தைப் பெறுவா ருண்டோ?
கருணையற்ற உயிர்க்கொலையால் பயனு முண்டோ?
உன்றன்மகன் உயிர்பெறவே என்றன் பிள்ளை
உயிரிழக்க விரும்பிடுமோ என்றன் உள்ளம்?

## வேறு

"எல்லா உயிரும் நான்பெற்ற மக்கள்
இதனை மனத்தில் கொள்வையடா!
வல்லா னொருவன் வலியி லானை
வதைத்தால் எனக்கவன் பகைவனடா!
நல்லா ரென்பவர் நாளும் உயிரினைக்
கொல்லா மனத்தினர் அறிவையடா!
கொல்லா அறத்தில் நின்றிடு வாய்நீ
குவலயம் போற்ற வாழ்ந்திடு வாய்!

### வேறு

“அன்பும் அருளும் அணியாய்ப் பூண்டும்
ஆன்றோர் சொல்லினை அமுதெனக் கொண்டும்
புன்னெறி யாம்கொலை செய்தலை விடுத்துப்
பொற்புடன் வாய்மை யினைத்தவ றாது
நன்னெறி நடத்தல் நல்லவர்க் கழகாம்
அந்நெறி யேநீ வாழ்வில் கொண்டே
உண்மை வழியில் உயர்வாய்!” என்றே
அன்னையும் மறைந்தாள் அவளருள் என்னே!

- இராவே

## 192. எவனடா யோக்கியன்?

வெத்திலை வாங்கக் கடைக்குப் போனேன்
வெள்ளைச் சாமி விச(ய)த்தைக் கக்கினான்!
'முத்து சாமியும் முருகம் மாவும்
நேத்து ராத்திரி ஓடிப்புட் டாங்களாம்'

அஞ்சடிக் கடையில் ஆரோக்கியம் சொன்னான்:
'ஆறு மாசமாக் காதல் லீலையாம்!
மூணு மாசமா முழுக வில்லையாம்!
மூணு முடிச்சும் போட வில்லையாம்!'

கேசவன் கடையில் தலையை நீட்டினேன்
கிசுகிசு கிசுகிசு கிசுகிசு கிசுகிசு
'கிழவனோ தண்ணியில் வாழ்த்திவிட் டானாம்!'
'கிழவியே அவங்களை அனுப்பிவைச் சாளாம்!'

'மார்க்கெட்' ஓரம் ஒதுங்கிநின் னாங்கன்னு
மலையப் பனுமே, பார்த்ததாச் சொன்னான்!
ஏற்கென வேயே '.....ப்' புட்டாங் கன்னு
ஏழு மலையோ பெருமுச் செறிந்தான்!

காப்பிக் கடையில் காலை வைத்தேன்
காதலர் இருவர் ஓடிய கதையில்
கண்ணும் காதும் வாயும் வைத்துக்
கண்ணுச் சாமியும் கதைத்துக்கொண் டிருந்தான்!

"வீடியோ பாக்கிற சாக்கில தானே
வேகமா வளர்ந்தது காதல்!" என்று
'வீடியோ' வில்சன் விளம்பரம் செய்தான்
விழுந்த வியாபாரம் எழுந்து நடந்தது

“கும்பா பிடேகத்தில் சம்பாசிச் சாங்க"ன்னு
கோயில் குருக்கள் குமைஞ்சுதான் சொன்னார்
'அம்பா ஆணையா அறியே னுங்க
அவங்க ஆடிய மஞ்சள்நீ ராட்டம்'

'பிரட்டு முடிஞ்சதும் இருட்டு மறைவில்
திருட்டுத் தனமா சந்திப் பாங்களாம்!'
உருட்டல் கங்காணி உள்ளங் கலங்கினார்
'மயிலு போச்சேன்னு' மேனி குலுங்கினார்!




வங்குசாக் கடை[25]யில் சீனி வாங்கினேன்
'வாங்கசார்' வாங்க! விசயம் தெரியுமோ?
தங்கமும் பித்தளையும் சரிசம மாகுமோ?
கோப்பியும் தேயும் கலக்க லாகுமோ?

சாதியை விட்டுச் சம்பந்தம் வச்சா....
சாத்திய மாகுமோ வாழ்க்கையில் நிம்மதி?
கடைமுத லாளி மடமையில் உளறினார்
கடையர் பாவம் காடையர் ஆனார்!

முத்து சாமியும் முருகம் மாவும்
காத லிப்பதும் கலந்து வாழ்வதும்
பூத லத்திலே தமிழருக் குத்தான்
பூமி யைவிடப் பெரிய அதிசயம்!

ஆணும் பெண்ணும் கூடுதல் இயற்கை!
அன்பில் கலந்து வாழ்வதும் இயற்கை!
மானிடன் மட்டுமோ? தாவரம் முதலாய்
உயிரினம் அனைத்திலும் உள்ளதோர் உணர்வு!

நாட்டின் போக்கையும் நம்மவர் நிலையையும்
விளக்கிப் பேச விரும்புவ தில்லை
வீட்டுக் கதைகளை வெளியில் பேசுதல்
வீதி வம்பர்க்கு வேலையாய்ப் போச்சு!

---

*25 வங்குசாக் கடை - மளிகைக்கடை*

அவனவன் வேலையை அவனவன் பார்த்தால்
அடிதடி வம்புக்கு ஏதடா வாய்ப்பு?
அவனவன் முதுகில் ஆயிரம் அழுக்கு!
எவனடா யோக்கியன்? இருந்தால் விளக்கு!

- மதுராந்தகன்

# 193. ஆலயமும் சமுதாயமும்

தித்திக்கும் தேவாரத் தேன்கசந்த தென்ன?
திருவாசகத் தெள்ளமுதம் திசைமாறிய தென்ன?
பத்திக்கும் படையலுக்கும் பாசுரங்கள் வண்ணப்
பைந்தமிழில் எத்துணையோ! பஞ்சடைந்த தென்ன?
முத்தமிழில் மந்திரங்கள் முழங்காதே என்று
மொழிந்தவனார்? தடுத்தவனார்? முக்கண்ணன் எனினும்
இத்திசையில் எதிர்வருக! நக்கீரன் இங்கும்
இருக்கின்றான்! வருவானா? அவனென்ன செய்வான்?

தமிழனுக்குத் தனைப்பெற்ற தாய்தெரிய வில்லை!
தன்னோடு பிறந்தவனின் முறைவிளங்க வில்லை!
சமயத்தைப் பிரிந்துமறு சமயத்திற் சேர்ந்து
தம்பிஎன வரும்போது தழுவிக்கொள் கின்றான்!
சமயத்துள் தான்பிறந்த சமயத்துள் நின்று
சந்திக்க வரும்போது சாதிபார்க் கின்றான்!
இமயத்தில் கொடிபொறித்த இனமிவனாம் அந்தோ!
இவனோடு பிறந்திடநான் என்னவினை செய்தேன்?

த. மலர்
1978.7.16

- கரு. திருவரசு

# 194. முதியோர்க்கோர் தாலாட்டு!

பல்முளையாப் பிள்ளைக்குப் பாடுவதே தாலாட்டு!
பல்விழுந்து கூன்விழுந்து பார்க்கும் திறமிழந்து
சொல்விழுந்து போகாத் தொணதொணப்புச் செல்வங்கள்
தொல்கிழங்கள் தூங்குதற்குப் பாடுகின்றேன் தாலாட்டு!
பத்துமணி நேரம் பகலிரவு பாராமல்
நித்திரைபோம் சின்னக் குழந்தைக்குப் பாடுகிறாள்
நாலுமணி நேரம் நடுவில் பலவிழிப்பு
மேலும் சிலமுணங்கல் என்றுகிழம் தூங்கப்
படும்பாடு பார்த்தாலும் பையனுக்கு வாய்த்த
படுபாவிப் பத்தினியால் பாடவில்லை தாலாட்டு!
வாழ்ந்து முடித்தவர்கள் வாழத் துடிப்பவர்க்கு
வாழ்த்துத் தரத்தான் மனமில்லை யென்றாலும்
வைது தொலைக்காமல் வாயொடுக்கக் கூடாதா?
மைதீன் கதைவிரிப்பார்; மாரியப்பன் பாடலினை
ஆகாகா! என்பார்; அடுத்தகணம் பிய்த்தெடுப்பார்!
போகாத தொல்லையெனப் பிள்ளையே சொல்லும்வரை
சாய்ந்தாடும் சிங்கங்காள்! தங்களரும் சாதனைகள்
ஓய்ந்ததுபோல் கொஞ்சம் ஒயிலாகத் தூங்குங்கள்!
மீசை நரைத்தாலும் ஆசை நரைக்காமல்
பேசுகின்ற முன்னாள் இளசுகளே தூங்குங்கள்!
வீட்டுக்கு வீடுள்ள வாசற் படியேறிக்
கூட்டம் நடத்துகின்ற பாட்டிகளே தூங்குங்கள்!
பட்டறிவில் கண்டெடுத்த பாதைகளைச் சொல்லாமல்
விட்டதையே பேசுகின்ற வேலையென்ன தூங்குங்கள்!
காய்ந்துவிட்ட ஓலையினைக் கண்டு குருத்தோலை
சாய்ந்து சிரிக்குதென்ற தொல்கதைக்குத் தாலாட்டு!
நாங்கள் முடிந்துவிட்டோம் நாள்வருமே உங்களுக்கும்
வாங்கள் எனப்பேசும் வக்கணைக்குத் தாலாட்டு!
தூங்கும் சுகக்கலைக்கு வாங்கள் முதியோரே!
தூங்காமற் தூங்கல் சுகம்!

- கரு. திருவரசு

# 195. புதுக்கருத்து வேண்டும்!

எழுதியதோர் படியென்றால் எண்ண மெல்லாம்
ஏழெட்டுப் படிதாண்டி ஏறி நிற்பார்!
பழுதறவே கற்றுணர்ந்த மேதை யென்று
பறைகொட்டிக் கூட்டத்தில் முழக்கம் செய்வார்!
வழுக்கிடும்ஓர் சொல்லென்றே அறியார்; தம்மின்
வாய்ச்சொல்லைக் காவாமல் உளறி வைப்பார்!
வழுக்கைக்குக் குடுமிவைப்பார்! கரணம் போட்டு
வகைவகையாய் வழக்குரைப்பார்! வாழ்த்தும் கேட்பார்!

அடங்காமல் மனமலையும் அலையைப் போல
அதனோடு சேர்ந்தலையும் உடலம்! நல்ல
குடம்பாலில் துளிநஞ்சைக் கலந்தாற் போலும்
'கரு'வமைப்பார்; கதையென்பார்! இதுதான் இன்று
திடமுள்ள கதையென்று கூட்டம் வைத்துத்
திறனாய்வும் செய்திடுவார்! பெண்மை அங்குப்
படமுடியாப் பாடெல்லாம் படுமாம்; ஒட்டிப்
பிறப்பெடுத்த பெண்குலத்தைக் கூறு செய்வார்!

சந்தடியில் ஐந்தடியில் நடப்ப தெல்லாம்
சந்தைக்கு விளம்பரமாய்ச் சொல்லி வைப்பார்!
சந்ததியில் நடந்தவற்றை ஒதுக்கி வைத்துத்
தன்மானம் போகுமென்று ஒதுங்கிக் கொள்வார்!
இந்தவரை நடந்தபின்னும் அடுத்த வீட்டின்
அங்கம்மாள் செய்தவற்றை அளந்து பார்த்துச்
சிந்தையெலாம் நோகுதென்பார்! சமுதா யத்தின்
சீர்கேட்டைப் பாருமென்பார்! பாடம் சொல்வார்!

இந்தவகை இலக்கியந்தான் வேண்டு மென்றே
எழுதுகின்றார் எழுத்தாளர்; ஐயோ பாவம்!
எந்தவகை முன்னேற்றம் காண்பார் சொல்வீர்?
இழிந்தகரு; கற்பிழந்தாள் காமக் கூத்து;
சிந்தனைக்குச் செழிப்பான 'தலைப்பு' மட்டும்
சிறுகதைக்குப் போதுமென்றால் கதைப டிப்பார்
எந்தவொரு நற்பயனும் காணார் என்பேன்!
எழுத்தாளர் புதுக்கருத்தைச் சொல்ல வேண்டும்!

- சி. காவேரிச்செல்வன்

த. நேசன்
1980.6.4

## 196. ஏற்றம்

அன்னை மலேசிய ஆக்கம் உயிர்ப்பென
அல்லும் பகலுமுழைப் பீந்தனர்! - எதும்
பின்னை வருவதை முன்னம் உணர்ந்திலார்
பேணும் மனவிடர் சூழ்ந்தனர்! - ஒரு
தென்னை தரும்பலன் தென்னவர் கண்முனம்
தேயும் வெறும்பொருள் போலுமோ? - இவர்
தன்னை யறிந்துயர் விண்ணென் றுயர்வுறும்
தக்கநன் னாள்வரச் சாலுமோ?

நாடு வளம்பெற நாளும் நினைப்பது
நல்லதோர் கைவினை யாகுந்தான்! - தம்
வீடு நலம்பெற நாளும் உழைப்பது
வெற்றிப் படியிலோர் யாகந்தான்! - பொருள்
தேடு செலவழி சிக்கனம் நம்மவர்
சிந்தனை யால்பெறும் ஞானந்தான்! - உயிர்க்
கூடும் உளவரை கூட்டு முயற்சிநம்
கொள்கைப் பிடிப்பெழும் தாகந்தான்!

காற்றுப் பெருமழை சுட்ட கடுவெயில்
காடு மலைபனி யாவிலும் - நமை
வாட்டும் பசிப்பிணி போக்க உழைத்தும்நம்
வாழ்வு மலர்ந்ததா? இல்லையே! - பொருள்
ஈட்டும் வழிவகை பொய்மை இலாஅறம்
யாவுமே நம்நெறி என்பவால், - துன்[26]
கூட்டும் உறவினும் கூடிப் பயன்பெறக்
கொள்கை முயற்சியும் அற்றமோ!

கூட்டுறவு
1979, ஏப்பிரல்

- கோவி. மணிதாசன்

---

*26 துன் - துன் வீ. தி. சம்பந்தனார்*
*துன் - பேரரசரால் வழங்கப்படும் மிக உயரிய அரசவிருது*

# 197. கொடுமை!

பெண்டாட்டி கறையான்போல் அரிப்பாள், பெற்ற
பிள்ளைகளோ சுள்ளெறும்பாய்க் கடிப்பர்! சோற்றுத்
திண்டாட்டம் ஒருபக்கம் வெறிக்கூத் தாடும்!
தொழிலாளிக் கொருவேலை கிடைக்கா தோடும்
அண்டத்தை ஓர்நொடியில் அழிக்க ஆக்க
அவன்கற்றும் தன்குடும்பம் வறுமைக் காற்றால்
துண்டாடிப் போகாமல் வாழ்ந்து காட்டத்
தொழிலாளி கல்லாமை கொடுமை யாகும்!

சங்கெடுத்து ஊதிவிட்டான் சேவல் அண்ணன்;
தாமதித்தால் பேர்போச்சு, கூலி யில்லை!
கங்காணி எனும்பெரிய கால கண்டன்
கடுக்கின்றான் துரைகண்டால் தனக்கா பத்தாம்!
தங்கத்தை வெள்ளீயம் மரப்பால் சேர்த்துத்
தாரணியை வளமாக்க எண்ணும் நெஞ்சம்
பொங்கியெழும் பாட்டாளர் துயரம் தீர்க்கப்
பொதுச்சங்கம் காணாமை கொடுமை யாகும்!

கோடானு கோடிஉயிர் உன்கை பார்த்தே
குன்றொத்த தோளோனே! ஏங்க, இந்த
நாடாளப் பிறந்தோனே! தொழிலின் வேந்தே!
நலிவுற்றாய் குடியாலே அந்தோ! உன்னைக்
கேடாளப் பார்க்குதடா! கேளாய், உன்றன்
கீழ்மதியைப் போக்கிஉயர் பாதை சேர்க்க
ஓடிவரும் 'தொழிற்சங்கம்' என்ற தாயை
ஒதுக்கிடுதல் கொடுமையிலும் கொடுமை யாகும்!

ச. மணி
1954.10.15

- கா. பெருமாள்

## 198. நேர்புத்தி வாராதோ?

கல்விக்குக் காசென்றால் கண்மூடிக் கொள்வாரே;
கள்ளுக்கும் கூத்துக்கும் களிப்போடு செல்வாரே;
சொல்லுங்கால் ஆமென்பார்; தொலைசென்றால் வழிமாறித்
தொல்லைக்குள் தாம்வீழ்வார் தொலைநோக்கு அறியாரே!
கல்லுக்கும் பயனுண்டு; கள்ளுண்டு நிலைகெட்ட
கல்லாரால் மண்ணுக்குக் கனிகின்ற பயனென்ன?
நெல்லுக்குள் பதரான நிறங்கெட்ட இவருக்கு
நிலமுற்றும் மாய்ந்தாலும் நேர்புத்தி வாராதோ?

த. முரசு
1968.6.29

- ஆறு. நாகப்பன்

## 199. மூக்கனும் அரசாங்கத் திட்டமும்

மூக்கன்: என்னங்க தலைவரே சௌக்கி யம்மா?
எத்தனையோ நாளாக உங்க ளைத்தான்
கண்டுவோர் விசயத்தைக் கேட்ப தற்குக்
கமிட்டிங்க இடத்தெல்லாம் கேட்டுப் புட்டேன்.

தலைவர்: எங்கையா போயிட்டேன் மூக்கா? இந்த
ஊரினிலே தான்இருக்கேன்; நேற்றுக் கூட
உங்கையா அரசாங்க மாடு கேட்டு
ஒருபதிலும் இல்லேன்னு சத்தம் போட்டார்.

மூக்கன்: ஆமாங்க அதுஎன்ன சட்ட மன்ற
ஐயாவும் சடையப்பன் கலியா ணத்தில்
ஏமாந்த சனமாக இருக்க வேண்டா
ஏராளத் திட்டங்கள் இருக்குன் னாரே?

தலைவர்: திட்டங்கள் ஏராளம் உண்டு மூக்கா
திட்டத்தைப் பெறுகின்ற வழியை நம்மின்
வட்டத்தில் இருக்கின்ற தொகுதி மன்ற
வாக்கீல்ரா யாட்[27]டிடம் கலத்தல் வேண்டும்.

---

*27 வாக்கீல் ராயாட் (Wakil Rakyat) - சட்டமன்ற உறுப்பினர்*

மூக்கன்: அதுஎன்ன எளவோங்க நமக்கு யாரும்
ஐயாவை வுட்டாபின் தெரியா துங்க
எதுக்குன்னு தெரியாது எனக்கோர் சூரா[28]
எங்கிருந்தோ வந்திருக்கு இதோபா ருங்க.

தலைவர்: என்னப்பா மூக்காநீ கொஞ்சங் கூட
விவஸ்தையே இல்லாமல் இருக்கின் றாயே
சென்றாண்டு நிலத்திற்கு நீங்க ளெல்லாம்
சேர்ந்தெழுதிப் போட்டிட்ட மனுவை டீ.ஓ.[29]

நன்றாய்ந்து நம்தொகுதிச் சட்ட மன்ற
நாடாளு மன்றங்கத் தினர்க ளோடு
'இண்டர்வியூ'க் காகத்தான் இந்தச் சூரா
இதுமுடிந்து ஒருவாரம் ஆச்சு தப்பா!

மூக்கன்: ................?

தினமணி
1985.1.20

- சீ. மா. இளங்கோ

## 200. தெருக்குண்டர் புராணம்

பகலெல்லாம் உழைத்தபெருங் கூட்ட மெல்லாம்
படுத்துறங்கும் வேளையிலே பவிசைக் காட்டி,
முகப்பூச்சு மினுமினுக்கச் சுற்றி வந்து,
முன்வீச்சுக் கண்ணாலே மயக்கப் பார்க்கும்
நகரத்துப் பேயான பெண்டிர் தம்மை
நாய்கூடச் சீந்தாது; ஆனால் பின்னால்
முகம்தொங்கச் சுற்றுகிற நாய்கள் உண்டு
முகம்பார்க்கச் சகியாது அந்தக் காட்சி!

குடிவிட்டுக் குடிநாடி வந்த செல்வர்
குணம்கெட்டுத் திரிகின்றார் அந்தோ! தீய
நெடிபட்டும் முகம்சுளியா தருந்து கின்றார்
நெஞ்சாரப் பிழையென்று தெரிந்தும் கூடப்

---

*28 சூரா - கடிதம்*
*29 டீ. ஓ.(D.O. - Distric Officer) - மாவட்ட அலுவலர்*

படிதாண்டி நுழைந்தாரே பாரில்[30] நல்ல
பண்பெல்லாம் பறந்தோட விட்டார்; தக்க
நொடிபார்த்துக் குண்டர்களும் செய்வார் வேலை
நூறென்றும் பத்தென்றும் சேர்ப்பார் தாளை!

த. நேசன் - தம்பாய் ஆ. முனியாண்டி
1967.1.1

## 201. பட்டால்தான் புத்திவரும் பாண்டியா!

சாவுவீட்டில் திருமணத்தில்
சந்தைக்கடை ஆலயத்தில்
அரசியலைப் பேசுமடா பாண்டியா! - பழியை
அடுத்தவன்மேல் போடுமடா பாண்டியா! - நேரில்
கண்டுவிட்டால் பேச்சைமாற்றிச்
சென்றவுடன் சேற்றைப்பூசிக்
கூடிக்கூடிச் சிரிக்குமடா பாண்டியா! - இதுக
குள்ளநரிக் கூட்டமடா பாண்டியா!

நரியூரில் பயந்துகிட்டுப்
புலியூரில் குடிஏறும்
புத்திகெட்ட கூட்டமடா பாண்டியா! - பெரும்
புளுகுமூட்டைக் கூட்டமடா பாண்டியா! - இதுக
சதியூரில் திட்டமிட்டுச்
சரிவூரில் கீழேவிழும்
சதிகாரக் கூட்டமடா பாண்டியா! - இதுக
சதிகாரக் கூட்டமடா பாண்டியா!

பதவிக்காகக் கால்பிடித்துப்
பவிசுக்காகப் பல்லிளித்துக்
கிடந்தகாலம் மறந்துட்டாரே பாண்டியா! - பதவி
கிடைத்தவுடன் நடந்துட்டாரே பாண்டியா! - செய்த
நன்மைதனைப் பழித்துரைத்து
நடமாடும் பேய்களுக்கு
நாக்கழுகிப் போய்விடுமே பாண்டியா! - அதுக
நாக்கழுகிப் போய்விடுமே பாண்டியா!

---

30 பார் - Bar - மதுக்கடை

நன்றிகெட்ட நாய்களுக்கு
நாளெல்லாம் பாடுபட்டால்
பன்றியைப்போல் பாயுகிறார் பாண்டியா! - அவன்
நெஞ்சினிலே பாயுகிறார் பாண்டியா! - இங்கே
முன்னாலே சிரிப்பதுவும்
முதுகினிலே குத்துவதும்
பண்பாடாய் ஆகிப்போச்சு பாண்டியா! - சிலர்க்குப்
பண்பாடாய் ஆகிப்போச்சு பாண்டியா!

ஏறும்வரை ஏறிவிட்டு
ஏணியையே உதைக்கின்ற
எத்தர்களின் திருக்கூட்டம் பாண்டியா! - பொறாமைப்
பித்தர்களின் திருக்கூட்டம் பாண்டியா! - தினம்
நல்லவரைப் பழிகூறிச்
சாண்அளவும் உயராத
தில்லுவாரிக் கூட்டமடா பாண்டியா! - இதுக
மொல்லமாறிக் கூட்டமடா பாண்டியா!

த. நேசன் - மதுராந்தகன்
1984.3.14

## 202. குறையவில்லை!

விளையாட்டாய் வீதியோரம் வெறுங்கல்லை நட்டாலும் - அதைப்
பலசக்தி யாக்கியாடும் பாமரர்கள் குறையவில்லை - உனக்கு
விலகாத தோசமுண்டு விரைந்ததனை எடுக்கவேண்டும் - என்று
பலநூறு கேட்பவனைப் பாதுகாப்பார் குறையவில்லை....!

ஆண்டுக்கோர் நூல்வாங்க அஞ்சுகிற ஆளிங்கே - பொய்
வேண்டுதலை நிறைவேற்ற வெள்ளிபல செலவழிப்பார் - ஓர்
ஆண்டவனே உண்டென்றால் அதையேற்க முடியாமல் - பல
ஆண்டவனைச் செய்துபிறர் நகைக்கும்படி ஆடிடுவார்...!

சாமியாடிச் சுயலாபம் தேடுவாரை ஆதரிக்கும் - ஆமாம்
சாமிகளின் தீமைகளும் அணுவளவும் குறையவில்லை - மூடத்
தீமைகளைப் பகுத்தறிவால் தீய்க்கவேண்டும் என்பவர்கள் - மெது
ஆமைகளா னால்மூட ஆரணியம் நமைமூடும்....!

த. நேசன் - ம. அ. சந்திரன்
1987.10.25

## 203. நெஞ்சைப் பிளக்கும் வேதனை

நாட்டுக்கோர் நலமார்ந்த இடமாம், மேலை
நாட்டவரைக் கவர்கின்ற மலையை, இன்னும்
வேட்டுவைத்தே உடைக்கின்றார் வேக மாக
வேண்டுவரை சொல்லிவிட்டார் நம்த லைவர்
கூட்டுமொரு தொகையாகக் குரல்கொ டுத்தால்
குடைவாரோ மலையடியை? அதைவி டுத்து
வேட்டுவைக்க நினைக்கின்றார் தலைவ ருக்கே
வேதனையே என்நெஞ்சைப் பிளக்கு தப்பா!

- காசிதாசன்

த. நேசன்
1980.7.20

## 204. கோடரிக்காம்பு

மரக்கிளையின் கொம்பொன்று கோட ரிக்குள்
வலியவந்து நுழைந்ததனால் மரத்தை வெட்ட
இரக்கமிலாக் கோடரிக்கு வலிவா யிற்று
இனமரம்தான் சாய்ந்தபின்பு கிளைக்கென் னாகும்?
அரக்கமனச் சிறுமதியார் செய்கை யாலே
ஆற்றல்மிகு சமுதாயம் அடையும் வீழ்ச்சி
மறக்கவொணாப் பெருங்கொடுமை! பிளவுண் டாக்கி
வாழ்வழித்தல் மன்னிக்க முடியாக் குற்றம்!

புரிந்துணர்வு மிகவுடைய சமுதா யத்தீர்!
பொழுதோடு இரவுழைத்து மலேசி யத்தைச்
சிறந்தநிலைக் காக்கிவைத்த செழுமை யுள்ளீர்!
சீர்மிகுந்த இந்தியரென் றுயர்ந்த நல்லீர்!
அறந்தவிர்ந்த செய்கைகளைப் புறக்க ணிப்பீர்;
அன்புணர்வால் ஒற்றுமையைப் பெருக்கிக் கொள்வீர்
மறந்துமொரு தீங்கியற்றாச் சமுதா யத்தின்
மாண்புகெடுக் கும்பிளவை மாற்று வீரே!

- வீ. கே. சுப்பிரமணியம்

## 205. மனிதன்!

ஒன்றிட்ட உணர்ச்சியினால் உதித்திட்ட மனிதன்
ஒற்றுமையைப் பேசினனே பேணிடவே இல்லை!
மென்றுமிழும் சக்கையினைப் போன்றதவன் வாழ்க்கை!
மெலிகின்றான் அழுகின்றான் மேதினியில் நாளும்
பண்டிருந்த சிறப்பையெலாம் கிண்டியெடுத் திடுவான்
பயனென்ன? இல்லாரின் பசிதீர்க்க முடியான்!
மன்றிருந்து மதிநுட்ப முரைத்திடுவான் மக்கள்
மனமறிந்தே இனமுயர வாழுவகை செய்யான்!

ஓய்வின்றி ஒழிவின்றிச் சிந்தித்த தாலே
உயர்வான அறிவியலை அவன்கண்டே இந்நாள்
காய்கின்ற நிலவுக்கும் செல்கின்றான்! காற்றைக்
கடக்கின்ற போட்டிக்குப் பாய்கின்றான்! நெஞ்சம்
தோய்கின்ற இடமெல்லாம் போயின்பம் பெற்றுத்
தொல்லைக்கு விடைசொல்லத் துணிந்திட்டான்! எனினும்
ஆய்கின்றான் அமைதிக்கு வழியொன்று தேடி
அரசியலென் றோர்கோட்டை மீதொன்றாய்க் கூடி!

சிற்சிலருக் குரித்தான கலையதனை நன்று
சீராக்கி எல்லார்க்கும் பொதுவாக்கித் தந்தான்!
அற்பமதி கொண்டவர்கள் தந்நாட்டுக் கென்றே
அதைவைத்துக் கொள்கின்றார் ஆர்ப்பரிக்கின் றாரே!
நற்பயனைச் செய்கின்ற அறிவியலின் திறத்தை
நாட்டுக்கென் றரசியலால் நலிக்கின்றான் ஒருவன்
சொற்பயனாற் றொல்லுலகோர் துயர்தீர்க்கக் கூடின்
தூசென்று மதித்தொருவன் மாசுடனே செல்வான்!

அழிவுககு வழிகாட்டும் அணுக்குண்டைச் செய்தான்!
அகிலத்தைக் காக்கின்ற அறங்கண்டால் உய்வான்!
பிழைப்புக்கா யலைவாரைப் பெருக்குவதும் கருவிப்
பெருக்கத்தால் சோம்பலினை வளர்த்திடலும் விட்டே
உழைப்புக்கு மதிப்பீந்தே உறவுமனம் பெற்றே
உயர்கின்ற மனிதன்தான் உண்மையிலே மனிதன்!
தழைத்தற்கே எவ்வுயிரும் பிழைத்தற்கே எண்ணித்
தன்பணியை அன்போடு செய்பவனே மனிதன்!

மலாயா.
1962

- நால்வர்

# 206. எதனால் மனிதன்?

தான்வாழ்ந்த கான்விட்டுத் தனியே வந்தான்;
தரமான இல்லங்கள் அமைத்துக் கொண்டான்;
ஊன்தின்றே வாழும்வகை ஒதுக்கி வைத்தான்;
உழுதுண்டு வாழலெனக் கொள்கை பெற்று,
மேன்மையே தானென்று உலகந் தன்னில்
மேலாகக் குரலெழுப்பிச் சொல்வ தாலோ
தான்மனிதன் என்றாகி விட்டான்? இல்லை
தகுதிதான் மனிதர்க்கு யாதோ சொல்வீர்!

கால்நடந்து களைப்பாகிச் சோர்ந்த போது
கண்டசில விலங்குகளைப் பிடித்த டக்கி
மேலேறி நலம்கண்டு மேலும் எண்ணம்
விஞ்சியதால் ஊர்திகளைச் செய்த தாலோ?
வேலெறிந்து வில்லடித்து வேட்டை யாட
விசையான துப்பாக்கி கண்டு சொந்த
ஆள்தன்னை அழகாகச் சுடுவ தாலோ
ஆறறிவன் ஆய்விட்டான் இவனா மாந்தன்?

'இருக்கின்ற சுகவாழ்வு போதா திங்கே
இருக்கின்ற அத்தனையும் எனக்கே வேண்டும்;
உருப்படியாய் நான்மட்டும் வாழ்ந்தால் போதும்;
ஊர்கெட்டு உலகழிந்து போனால் என்ன?
பெருமையொடு நானிருக்க வேண்டும்' என்னும்
பேராசை உள்ளத்தில் கொள்வ தாலோ?
உருப்பெற்றான் மனிதனென உலகில் இல்லை
உண்மைதான் யாதென்று உரைப்பீர் நன்கே?

'உண்ணும்வழி உறங்கும்வழி ஒன்றே; இங்கே
உடலெடுத்துப் பேசுமுயிர் யாவும் ஒன்றே;
பெண்ணெனவும் ஆணெனவும் பெயரே அல்லால்
பிரிவில்லை வேறுவகை உணர்க' என்றும்
'கண்ணொத்த கல்விதனைக் கற்றோம்' என்றும்
காதடைக்கத் தினம்பேசும் கனத்தி னாலா?
விண்ணளந்த மண்ணளந்த வெற்றி யாலா?
வேறெந்தக் காரணத்தால் மனிதன் ஆனான்?

- சி. காவேரிநாதன்

த. நேசன்
1968.9.15

# 207. நண்பர் எதிரியானார்

ஒருநண்பர் பாவெழுதிக் கொண்டு வந்தே
'உள்ளபடி கருத்துரைக்க வேண்டும்' என்றார்.
விருப்பமுடன் கவிதையினைப் படித்து விட்டு
விமர்சனமும் சிக்கனமாய்ச் சொல்லி வைத்தேன்;
'கருத்தில்லை; எதுகையுடன் மோனை இல்லை;
கவியன்று; வெறும்வசனம்' என்றேன்; நண்பர்
வருத்தமுடன் விருட்டென்று எழுந்து சென்றார்;
வெறுத்தெனையே முதல்எதிரி யானார் அன்றே!

'மறுநண்பர் ஒருகவிதை எழுதி வந்து
மறைக்காமல் கருத்துரைக்க வேண்டும்' என்றார்.
மறுகணமே மண்டையை உடைத்துக் கொண்டேன்;
மறுபகைசம் பாதிக்க விரும்ப வில்லை
'அருமையான பா'வென்றேன், அருமை நண்பர்,
அப்பாட்டை ஓரிதழுக்(கு) அனுப்பி வைத்தார்.
திரும்பியது வந்ததுவே 'குப்பை' என்றே
திட்டாமல் திட்டிவிட்டு எதிரி யானார்!

மற்றொருநாள் ஒருநண்பர் கவிதை தீட்டி
'மனமாரக் கருத்துரைக்க வேண்டும்' என்றார்.
பற்றேதும் இல்லாது நின்றி ருந்தேன்;
பழம்நண்பர் விடாக்கண்ட ராகி நின்றார்
சற்றேதும் தடையின்றிக் கவிதை தன்னைச்
சத்தமுடன் பாடிவிட்டுப் பார்த்தார் என்னைக்
கற்றூணாய் நின்றிருந்தேன் எனக்கு மண்டைக்
கனமதிகம் எனச்சொல்லி எதிரி யானார்!

இனிமேலும் நண்பர்கள் கவிதை யோடு
எனைநாடி வந்தாலும் பார்ப்பேன் இல்லை;
கனிவோடு படித்தாலும் கேட்பேன் இல்லை;
கண்டிப்பாய்க் கருத்துரைக்க மாட்டேன்; உள்ளத்
துணிவோடு கருத்தினையே கூறி விட்டால்
தொடர்கின்ற பகைமைக்கே என்ன செய்வேன்?
தனிமையாய் வாழ்ந்திடவும் மனமும் இல்லை
தலைவிதியை மீறிடவும் கதியும் இல்லை!

- எஸ். கண்ணன்

# 208. ஒழியட்டும் ஆசைகள்

உள்ளத்தில் பிரியாணி ஆசை உந்த
உழைப்பினிலே மூன்றுவெள்ளி மிச்சம் செய்து
இல்லத்தை விட்டுணவு விற்கும் நல்ல
இடமதனை நாடியே பயணம் வைத்து
வெல்லத்தை நெஞ்சமது நிகர்த்து நிற்க
வீதியிலே நடந்திட்டேன், நீரின் வீழ்ச்சி
பள்ளத்தை நோக்கியே ஓடு கின்ற
பான்மைபோல் விரைவாக வழியில் ஆங்கு,

பொற்சிலைபோல் ஒருகுழவி இடுப்பில் ஏந்திப்
பூமிக்கு அணிகலனாய்த் திகழ்ந்து நின்ற
விற்புருவப் பெண்ணொருத்தி என்னை நோக்கி
விளம்பிட்டாள் 'ஐயாவே! தங்க ளுக்கு
நற்பயன்கள் மிகவுண்டு சென்ற நான்கு
நாளாகப் பட்டினியாய் இருக்கின் றோம்யாம்
கற்சிலைபோல் சிலபேர்கள் சென்று விட்டார்
கனிவோடு சிலகாசு கொடுங்கள்' என்றாள்.

பெரியதொரு கடைசெல்லும் பிரியம் விட்டுப்
பிரியாணி ஆசையையும் எறிந்து விட்டுச்
சிறியதொரு கடைசென்று விலைகு றைந்த
சீருணவைக் கொள்வமென மனத்துள் எண்ணி
அரியதொரு கற்புநிலை காத்துப் பிச்சை
யாசிக்கும் அணங்கவள்மேல் இரக்கம் வைத்து
வறியநிலை தனில்சேர்த்த வெள்ளி மூன்றில்
வழங்கிட்டேன் ஒருவெள்ளி; நடந்தேன்; மேலும்,

ஒருகடையில் உட்கார்ந்து உணவு வாங்கி
உண்டுகொண் டிருக்கையிலே ஆங்கே அந்த
அருங்கொடியும் சிறுமலரும் மகிழ்வாய் வந்தே
அவர்கள்தம் பெரும்பசியைப் போக்கக் கண்டேன்;
சிறியதொரு ஆசையைநான் ஒழித்த தாலே
தேனுண்ட வண்டாக இருவர் ஆனார்!
பெரியபல ஆசைகளைப் பலபேர் விட்டால்
பேருலகில் பசியென்னும் நோயும் உண்டோ?

- மீசல் பி. எம். அபூபக்கர்

த. நேசன்
1971.4.21

## 209. அசலும் நகலும்

அசலுக்கும் நகலுக்கும் அடையாளம் தெரியவில்லை!
அசல்போல நகல்வந்தே அதிகாரம் பண்ணுதடி!

சத்தியங்கள் வீடின்றிச் சத்திரத்தில் தூங்குதடி!
வித்தியாச மானதெல்லாம் வெற்றிநடை போடுதடி!

நிறைகுடமோ மறைவிடத்தில் நெஞ்சொடிந்து கிடக்குதடி!
அரைக்குடமோ அவைஏறி ஆரவாரஞ் செய்யுதடி!

பகல்வேட நரிகளுக்குப் பட்டாடை கிட்டுதடி!
பகல்போன்ற நல்லமனம் பழங்கந்தல் கட்டுதடி!

தாரணியில் எல்லாமே தலைகீழாய் நடக்குதடி!
சீர்திருத்தம் சொன்னதெல்லாம் சேற்றினிலே குளிக்குதடி!

எப்படியோ நடக்கட்டும் என்றிருக்க மனமில்லை!
தப்படியைத் திருத்தாமல் தள்ளிவைக்க நேரமில்லை!

- பெ. திருவேங்கடம்

## 210. பொழியாத மேகங்கள்

பொழியாத மேகங்களே! - மண்ணில்
தணியாத தாகங்களே!

மூட்டை சுமந்துழைத்து முதுகெலும்பும் கூனிவிட்ட
பாட்டை நினைந்தலுத்துப் படுத்துவிட்ட பெற்றவரின்
வாட்டத்தில் வாழ்வடைந்த வாரிசுகள்; பெற்றவரை
மாட்டை நடத்துதல்போல் மதிப்பளிக்கும் பிள்ளைஎல்லாம்
பொழியாத மேகங்களே! - மண்ணில்
தணியாத தாகங்களே!

சிக்காக இருக்குதென்று சேலைகளை மறந்துவிட்டு
முக்காலும் தெரியவிட்டு முனிவர்களை மயக்குகின்ற
தக்காளிப் பழங்களைத்தாம் தாரணியில் புதுமையென்பார்
எக்காலும் இவர்க்குமட்டும் இதில்விலக்காம்; இப்புதியார்
    பொழியாத மேகங்களே! - மண்ணில்
    தணியாத தாகங்களே!

உதைக்கின்ற கால்பிடித்து முத்தமிடும் கற்றவர்கள்,
உண்மைகளைப் பேசுதற்கே அஞ்சுகின்ற நல்லவர்கள்,
சிதைக்கின்றார் என்றறிந்தும் சேர்ந்திருந்து சிரிப்பவர்கள்,
சிறுகுறைகள் உடன்பிறந்தார் செய்துவிட்டால் வெறுப்பவர்கள்
    பொழியாத மேகங்களே! - மண்ணில்
    தணியாத தாகங்களே!

கரிக்கோலைக் கையில்வைத்துக் கலைவடிக்கும் வித்தகரை
விரிக்காத புத்தகமாய் விட்டெறியும் வேளையிது!
பறிக்காமல் வாடிவிட்டால் பனிமலரில் குற்றமுண்டோ?
நரிக்காலைச் சுற்றிவரும் நண்டுகளாய் வாழ்பவர்கள்
    பொழியாத மேகங்களே! - மண்ணில்
    தணியாத தாகங்களே!

- முருகதாசன்

## 211. சீர்திருத்தம்

ஊர்திருத்தம் காண வேண்டி உளறிக் கொட்டி யாச்சு!
    உள்ளுணர்வு காலப் போக்கில் உளுத்து வெளுக்க லாச்சு!
தேர்இழுக்க ஊர்தி ரண்டு சேறு பூச லாச்சு!
    சீர்திருத்தம் என்று நாளும் சீரைத் திருத்தி யாச்சு!

கோயிலுக்குப் போற பையன் வழியை மாற்றி யாச்சு!
    கொள்கையென்று உள்ள தையும் கோண லாக்கி யாச்சு!
தாயிருக்கத் தந்தை யில்லாத் தத்து வம்தான் மிச்சம்!
    தலையிலாத முண்ட வாழ்வில் சத்தம் மட்டும் உச்சம்!

- பரணன்

மழை
1985

# 212. போகப் போக...

நேத்திருந்த சாமான்விலை இன்னைக்கு மாறுது! - அது
நெனச்சுநெனச்சு மனசுபோல மேலும் ஏறுது!
ஆத்துக்காரி கடைக்குப் போக அழுது வடிக்கிறா - அந்த
ஆலேங்[31]கடைச் சரக்கெடுக்க என்னை வெரட்டுறா!

அரிசிஇருக்கு விலைஇதுன்னு அரசு சொல்லுது! - அது
அறிவிக்கின்ற விலைக்கு எங்கே அரிசி கிடைக்குது?
அரிசிவேணாம் கோதுமைமா வாங்கிப் போட்டுடு - என்று
அரக்கப்பரக்கப் போறபோது கிடைக்க வில்லையே!

கட்டிக்கொரு பத்துக்காசு மாவு ஏறினா - அது
ரொட்டிக்கொரு பத்துக்காசா மாறி ஏறுது!
தட்டிக்கேட்டா அவனவனும் கதைஅ ளக்கறான்! - நாம்
சரிசரின்னு அழுதுவாங்கிப் பசிஅ டக்குறோம்!

இனம்இனமா நாலுசாமான் ஏறுதும் பாங்க! - கொஞ்சம்
எண்ணிப் பாத்தா எல்லாஞ்சேந்தே ஏறிப்போச்சுங்க!
மனுசனுங்க ஒத்துமைதான் பேச்சி லிருக்குது - இந்த
விலைவாசி ஒத்துமையோ செயலில் நடக்குது!

ஏறும்விலை இறங்கிவர ஏணி சாத்துறோம்! - என்ற
அறிவிப்புகள் மனம்குளிர வருது பாக்குறோம்!
ஏறிவிட்டேன், முடியுமானா இன்னும் ஏறுவேன்! - என்றே
ஏறுதையா இறங்கவில்லை எல்லாம் ஏறுதே!

வாரம்ஒரு சாமான்கடையில் மறைஞ்சி போகுது - அது
வந்தவுடன் வாங்கப்போற மனசு நோகுது!
போறபோக்கு எங்கேநிக்கும் சொல்ல முடியுமா? - இனிப்
போகப்போக ஏழைநாங்க பொழைக்க முடியுமா?

- கரு. திருவரசு

---

*31 ஆ லேங் - சீனரின் பெயர்*

## 213. காலமடி காலம்!

முட்டாளும் மன்றேறி மூச்சடைத்துக் கத்துகின்ற
முன்னேற்ற மான காலம்!
மும்மூன்று சொல்லாக முந்நூறு நாள்சேர்த்து
மொழிகின்ற கவிஞர் காலம்!
பட்டாலும் பொன்னாலும் பழிமுடி நிற்பவர்
பண்பாள ரான காலம்!
பாலோடு நஞ்சூற்றிப் பரிமாற வைக்கின்ற
பஞ்சுள்ள முள்ள காலம்!
சுட்டாலும் இனமென்ற சொரணையே யில்லாத
சூரர்வாழ் கின்ற காலம்!
சோற்றுக்குத் தமிழ்கற்றுச் சொந்தங்கொண் டாடுவார்
சூளுரைக் கின்ற காலம்!
நட்டாரைக் காக்கின்ற நாயகன் மாயவன்
நமனோடு சென்ற காலம்,
நற்காலம்! ஒளிவீசும் பொற்காலம்! கலிகாலம்
நடக்கின்ற கால மிதுவே!

த. முரசு
1975.8.24

- முருகதாசன்

## 214. மண்ணாளப் போகின்றேன்!

வீசுகின்ற தென்றலுக்குக் கைவிலங்கு போட்டு
விரிக்குமண மலர்களுக்குச் சாட்டையடி தந்து
பேசுகின்ற புள்ளினத்தை முட்புதரில் தள்ளிப்
பிறப்பொக்கும் உயிர்களையே பட்டினியால் வாட்டி
ஏசுகின்ற மனக்குரங்கின் கொட்டங்கள் வாழ்த்தி
இயற்கையெனும் அழகுக்குக் கொடுநோயைத் தந்து
மாசற்ற தெய்வத்தின் நல்லருளைத் தீய்த்து
மண்ணாளப் போகின்றேன் புறமுதுகைக் காட்டி!

பேச்சுரிமை நாட்டுகின்ற புரட்டர்களைப் போற்றிப்
பேசும்பொய் எத்தர்களைத் தலைவர்களாய் ஆக்கி
மூச்சுரிமை கொண்டிங்கு வாழ்வோரைத் தாழ்த்தி
மூண்டுவரும் போர்ப்பகையை வரவேற்புச் செய்து
தீச்சுமையை வாழ்கவென வாழ்த்துகளும் பாடித்
தெருவெல்லாம் முரசொலியால் முழக்கமிட்டு நானும்
சீச்சீச்சீ! யெனவாழ்வேன் வரலாற்றில் என்றும்
சுடுகாட்டின் பேயனெனப் பெயர்பெறுவே னெங்கும்!

- ப. நன்முல்லை

த. நேசன்
1976.7.25

## 215. பெரிய்ய... மனிதர்!

பேருக்கு முன்னாலே நல்லதொரு பட்டம் - இவர்
பேசுகின்ற பேச்செல்லாம் லாயர்பூரோ[32] சட்டம்!
சாருக்கு ஊருக்குள் தலைவரெனும் பட்டம் - பொழுது
சாய்கின்ற நேரத்தில் நடத்தைமகா மட்டம்!

வட்டிக்கு விடுவதிலே இவர்மிகவும் கெட்டி - இவர்
வழங்குகின்ற பணத்திற்கோ இரட்டிப்பு வட்டி
குட்டிக்கு மட்டுந்தான் குறைத்திடுவார் வட்டி - அதைக்
கொண்டவளும் கேட்டாலோ உதைத்திடுவார் எட்டி!

தாயில்லாப் பிள்ளைக்கு இவர்நல்ல தந்தை - எனச்
சாற்றிடுவார் சிலபேர்கள் அதுதானே விந்தை!
சேயில்லா நங்கையர்மேல் வைப்பாரே சிந்தை - இவர்
திரிந்துவரும் இடமெல்லாம் வஞ்சியரின் சந்தை!

- பொன். குயிலன்

---

*32 லாயர் பூரோ (Lawyer-buruh) - தமக்கு எல்லாம் தெரியுமென்று வெற்று வீறார்ப்புப் பேசுபவர். மலாய் மரபுதொடர்.*

# 216. பெரிய மனிதர் உரு!

'சிங்கா ரம்'எனும் பெயர்கொண்ட
சின்னப் புத்திக் காரரவர்;
சிங்கா ரமாகப் பேசிடுவார்;
சிரித்துச் சிரித்தே ஏய்த்திடுவார்;
நாணிக் கோணிப் பெண்ணைப்போல்
நாளும் உழைத்தே நடித்திடுவார்;
'ஏனிப் படியோ?' எனக்கேட்டால்
இதுதான் பிழைக்க வழியென்பார்.

பனையைப் போல நீண்டிருப்பார்;
பச்சைச் சிரிப்புச் சிரித்திடுவார்;
சுனையிற் காணும் புல்லைப்போல்
சொட்டைத் தலையில் மயிரிருக்கும்!
'எனையார் வெல்ல முடியு'மென
என்றும் பேசித் திரிந்திடுவார்;
தினையள வேனும் நல்லெண்ணம்
திருவாய் மனத்தில் பெறவில்லை!

தங்கத் தமிழால் பிழைத்திடுவார்;
'தமிழன் அல்லன்' என்றிடுவார்;
அங்கும் இங்கும் பார்த்துவிட்டே
அருகில் யாரும் இலையென்றால்
'துங்கத் தமிழைப் பிழைப்பதற்கே
தொடர்ந்தேன் படிக்க; ஆனாலும்
எங்கள் மொழியே வே'றென்பார்;
'என்னுடை இனமும் வே'றென்பார்.

சிறந்த பதவி தருகின்றோம்;
'சிங்கா ரம்'வா என்றிட்டால்
பறந்தே வந்து சேர்ந்திடுவார்;
'பார்நான் தமிழன்' தானென்பார்;
தரமாய்ப் பதவி இலையென்றால்
தாவி வெளியே ஓடிடுவார்;
குறைகள் தேடி அலைந்திடுவார்;
குழிகள் பறிப்பார் நாளெல்லாம்.

'அறிஞர் கவிஞர் கலைஞரெலாம்
அழகாய் என்றன் சுட்டுவிரல்
உருவில் கூடத் தேறார்கள்
ஒருவன் நானே இவ்வுலகில்
பெரிய மனிதன்' தானென்பார்
பேச்சில் நாளைப் போக்கிடுவார்
பெரியீர்! ஆய்ந்தே! கூறிடுவீர்
'பெரிய மனிதர்' உருவிதுவோ?

த. முரசு
1964.2.12

- வெ. இளங்கோ

## 217. கோணல் ஞானம்

சவுக்குமரக் கிளையினிலே
திராட்சைப்பழம் முளைக்குதென்று
சௌக்கிட்ரோடு[33] சௌக்கத்தலி
சொன்னதிலே நியாயம்உண்டு!
ஞானமுள்ள நம்மவர்கள் நம்புவார்கள்
நம்மவர்கள் நம்புவதில் நியாயமுண்டு!

முட்டைக்கருவைப் பிரித்தெடுத்துப்
பட்டைத்துணியில் சுற்றிவைத்து
நெட்டைச்சேவல் அடைகாத்தால்
சிட்டுக்குருவி பொரிக்குமென்று
சிலிங்கிரோடு[34] சிவஞானம்
சொன்னதிலே நியாயமுண்டு!
ஞானமுள்ள நம்மவர்கள் நம்புவார்கள்
நம்மவர்கள் நம்புவதில் நியாயமுண்டு!

வெறுமணலை வறுத்தெடுத்து
வட்டிலிலே வேகவைத்து
உருளையிலே உருட்டிஎடுத்தே
வடக்கயிறு திரிக்கலாமென்று

---

*33 சௌக்கிட் ரோடு - கோலாலம்பூரில் உள்ள அங்காடி வணிகத்திற்குப் பேர்போன சாலை*

*34 சிலிங்கிரோடு - சிங்கப்பூரில் ஒரு சாலையின் பெயர்*

மொட்டைத்தலை முகம்மதுஇசுமாயில்
சொன்னதிலே நியாயமுண்டு!
ஞானமுள்ள நம்மவர்கள் நம்புவார்கள்
நம்மவர்கள் நம்புவதில் நியாயமுண்டு!

கட்டெறும்புப் புற்றுக்குள்ளே
கவரிமான் முட்டையிட்டுக்
குட்டையானை அடைகாத்தால்
கழுதைக்குட்டி பிறக்குமென்று
கூலிம்ரோடு[35] சொக்கலிங்கம்
சொன்னதிலே நியாயமுண்டு!
ஞானமுள்ள நம்மவர்கள் நம்புவார்கள்
நம்மவர்கள் நம்புவதில் நியாயமுண்டு!

த. மலர்
1980.3.30

- எம். கே. அகமது கபீர்

## 218. திரைப்படம்

கதையினில் தெளிவோ, கருத்துச் செறிவோ,
புதுமையின் சிறப்போ, பொலிவோ இல்லாத்
திரைப்படம் வந்ததே! திரைப்படம் வந்ததே!
மறைப்பினில் நடக்கும் ஒழுக்கக் கேட்டைக்
நிலைபெறச் செய்தே நலிவினைத் தோற்றத்
திரைப்படம் வந்ததே! திரைப்படம் வந்ததே!
கறைபட மாந்தர் காரண மானதே;
ஒலிக்கும் பாடலில் உயர்வொன் றில்லை;
கழித்துப் பார்க்கின் கழிமலக் குப்பை!
கூடல் குலவல் கொண்டஅப் பாக்கள்
'மாடல்' என்றே மயக்குகின் றாரே!
சாய்க்கடை நீரில் சந்த னத்தைப்
போய்க்க ரைத்தே பூரிப் போரே!
பாவலர் நீரோ? பைந்தமி ழிசையின்
காவலர் நீரோ? கலைகளுக் கெல்லாம்

---

*35 கூலிம்ரோடு - ஒரு சாலையின் பெயர்*

நாயகர் நீரோ? நலிவினைப் போக்கும்
தூயவர் நீரோ? தீயுணர் வெழுப்பும்
திரைப்படம் எடுத்தீர் திரைப்படம் எடுத்தீர்
புரைசெய் திங்குப் புன்மை வளர்த்தீர்
இலைமறை காயாய் இருக்கும் காமக்
கழிவை அந்தோ! கலையெனும் பெயரால்
கடைவிரிக் கின்றீர்; கால்மலம் தொட்டதோ(டு)
உடையெலாம் பூசி உவக்கின் றீரே!
இவற்றைக் காணும் இளையோர் நெஞ்சம்
துவண்டு போமோ தூய்மைப் படுமோ?
திரைப்பட நடிக நடிகை யர்தம்
அரைகுறை ஆடை அலங்கோ லங்கள்
உருக்கி உள்ளத் துணர்வை நாளும்
அரித்திடும்; இளைஞர் அவர்மனப் பண்பை
முரித்திடும்; வாழ்க்கை முரிந்திடப் போமே!
கட்டி யணைப்பதும் கிடந்து புரள்வதும்
கொட்ட மடித்துக் குட்டை நீரில்
நீந்திக் களிப்பதும் நிலைகு லைந்தே
சேர்ந்து காணப் படுவதோ காதல்?
ஆடை குலைய ஆடிப் பாடும்
பேடியர் நடிப்பே பெருங்கலை என்னில்
அக்கலை அழிதல் அன்றோ நாட்டு
மக்களுக் கிந்நாள் நன்மை பயக்கும்!
ஒழுக்க வாழ்வின் உயர்வைக் காட்டும்
விழுமிய கருத்தும், வியன்கலைச் சிறப்பும்,
உயர்ந்த நடிப்பும், உலகிய லறிவும்,
இயற்கை உணர்வொடு ஏற்றப் பண்பும்
ஏந்தித் திரைப்படம் வருநாள் என்றோ?
மாந்தர் பண்பு மணம்பெறும் அன்றே!

- பொன்முடி

த. முரசு
1969.6.22

## 219. பொன்னாடையின் புலம்பல்

ஒருசில இங்கே உரைக்கத் துணிந்தேன்:
மறைப்பதே என்றன் மரபு; எனினும்
மறைப்பதை எல்லாம் மற்றவர் காணவும்
இருப்பதை அழகாய் எடுத்துக் காட்டவும்

ஆடையைப் பலரின் றணிவது போல
மூடிக் கிடக்கும் மோச மனைத்தும்
திறந்து கூறத் துணிந்தேன்! அவற்றுள்
குறையும் நிறையும் காணலாம்; எனினும்
நிறைவினை மட்டும் நெஞ்சில் நிறுத்திக்
குறையினை மறந்து கனிவுறல் வேண்டும்;
மானம் காக்கும் மாண்பினை இன்று
நாணம் மிக்க நங்கைய ரன்றி
மற்றவர் எவரும் மதிப்பதே இல்லை!
முற்றும் மறைத்தல் மூடரின் செயலாம்
சற்றே மறைத்தல் சிறப்புச் செயலாம்!
'கற்றோம்' என்பவர் கதைக்கத் துணிந்தபின்
மானம் காக்கும் மாண்பெனக் கேது?
கானம் பாடும் களிப்பெனக் கேது?
கடத்தல் செய்து கள்ளத் தொழில்கள்
நடத்தி நாட்டினை நலிவிற் காக்கும்
கூட்டமும் நல்ல குடும்பப் போர்வையில்
ஆட்டமும் காட்டி ஆண்விருந் தாகிப்
பொருளினை ஈட்டும் பாவையர் கூட்டமும்,
வறுமையர்க் கண்டும் வழங்குநல் லெண்ணம்
சிறிதும் இல்லாச் செல்வச் செருக்கினர்
பெருமைக் காகப் பொதுக்கூட் டத்திற்(கு)
ஏற்பாடு செய்து ஏவலர் மூலம்
"அள்ளி அள்ளி அளிக்கும் திறத்தால்
இல்லார் ஒழித்திடும் ஏந்தலர்" என்றே
ஆர்த்திடச் செய்தும் அவரே வாங்கிய
போர்வையை ஒருவரைப் போர்த்திடச் செய்தும்
பொன்னா டைதனைப் பெற்றிடும் கூட்டமும்
மண்ணில் இன்று மிகுந்துள தாலே
பொன்னா டைக்குப் பெருமைதான் ஏது?
போர்த்துவ தாலும் பெருமைதான் ஏது?
போர்த்துமா டைக்குப் பெருமையுண் டென்றால்
போர்வையைக் களைந்து வாழ்ந்திடல் வேண்டும்!
போர்வையைக் களைந்திட விருப்பிலை என்றால்
போர்த்தும் செயலைப் புதைத்திடல் வேண்டும்!
இதுவே அன்பாய் இவ்வுல கோர்க்குப்
பொதுவாய் விடுக்கும் வேண்டுகோ ளாகும்!
விருப்பு வெறுப்பு விட்டுநன் காய்ந்து
பொறுப்புடன் ஏற்றுப் புகழுடன் வாழ்கவே!

த. நேசன்
1967.4.16

- ஆதம்குமார்

# 220. ஆணவம் மாளவில்லை!

மானமாய் வாழ்வதும் தேவையோ? என்றெண்ணி
மண்ணிற் புதைந்துவிட்டான்! - தன்
மானம் இழந்துவிட்டான்! - இதில்
நாணப் படுவதும் அர்த்தமில் லைஎன்ற
நாட்டம் மிகுந்துவிட்டான்; - நிலை
நாட்டத் துணிந்துவிட்டான்!

அற்றைக் கதைகளைச் செப்பித் திரிவதை
அள்ளிப் புதைக்கவில்லை - தன்
அறிவை வளர்க்கவில்லை - மனம்
இற்றை நிலையினை எண்ணி உயர்ந்திடும்
இச்சை நிறையவில்லை - அதில்
ஈடும் வளரவில்லை!

பக்கமே எங்கொட்டிச் சிந்து கவிபாடிப்
பாதை தடுமாறத் - தமிழ்ப்
பண்பும் மலையேறத் - தன்
கக்கத் திலேஒரு மொந்தை மதுவோடு
காலும் தடுமாறச் - சொந்த
வீடும் இடம்மாற

முச்சங்கம் மூன்றையும் மூடி முடித்தவன்
மூலையில் குந்திவிட்டான் - கட்டுத்
தாளையும் ஏந்திவிட்டான் - மன
இச்சையால் தோற்றிய மன்றங்கள் யாவையும்
இழுத்தவன் பூட்டிவிட்டான் - அதில்
இன்பத்தை நாட்டிவிட்டான்!

சாதிச் சழக்குகள் சரியில்லா எண்ணங்கள்
சாக்காடு செல்லவில்லை - அந்தச்
சங்கமும் செய்யவில்லை - நாளும்
ஆதி வழக்குகள் நாடியே செல்பவர்
ஆத்திரம் தீரவில்லை - அதில்
ஆணவம் மாளவில்லை!

த. மலர்
1979.10.9

- சிங்கை சாந்தி

# 221. ஆண்டுக் கூட்டம்

அன்றைய நாள்கி ளையின் அரசியல் ஆண்டுக் கூட்டம்
என்றுமே இல்லா தன்றே எண்ணிலாத் தொண்டர் எல்லாம்
அன்புடன் பல்லைக் காட்டி அருமையாய் நடந்து கொண்டார்
நன்றுடன் கார்கள் 'பஸ்'கள் நாற்றிசை பறந்த வன்றே!

திருவிழா வைப்போல் எங்கும் திரள்திர ளான கூட்டம்!
ஒருமணி முன்ப தாக உறுப்பினர் சேர்ந்து விட்டார்
அரும்பெரும் தலைவர் எல்லாம் அவையினில் கூடி விட்டார்
இருபெரும் அணியைப் போல இருந்தனர் வெளியே போலீஸ்!

கூட்டமும் தொடங்கும் போதே கூக்குரல் குறுக்கீ டெல்லாம்
நாட்டமாய் இருந்த வர்கள் நயமுடன் காட்டி விட்டார்
ஓட்டமாய் நடத்திச் சென்றார் ஒருபாதி கூட்டந் தன்னை
வாட்டமாய் வந்த தப்பா வம்புகொள் தேர்தல் நேரம்!

அலைபோன்ற பேரி ரைச்சல் அவைதனில் எழுந்த போது
தலைவருக்(கு) இருவர் பேரைத் தலைதெறிக் கச்சொன் னார்கள்
பலகையில் எழுதுங் காலை பலப்பல வாக்கு வாதம்!
நிலைமையைச் சரிப்ப டுத்தி நீட்டினர் வாக்குச் சீட்டை!

ஒழுங்கினைக் கடைப்பி டித்தே உரிமைசால் உறுப்பி னர்கள்
வழுவாமல் சட்டத் தோடு வழங்கினர் தத்தம் வாக்கை!
குழுவினைத் தேர்ந்தெ டுத்துக் கூடியே எண்ண லுற்றார்
பழுதான ஓட்டை எல்லாம் பார்த்தெடுத்(து) ஒதுக்கி விட்டார்.

சுறுசுறுப் பாக எண்ணிச் 'சுப்பையா' வென்றார் என்றார்
கரகோசம் ஒலித்த தப்பா கடலலை இரைச்சல் போன்றே!
பரபரப்(பு) அக்கூட் டத்தில் பலமாக எழுந்த வேளை
கரகர குரலில் யாரோ கதறினான் 'ஐயோ' என்றே!

பிறந்தது சண்டை ஆங்கே பிளந்தன மண்டை நான்கு!
பறந்தன இருக்கை யாவும்! பயந்தனர் பெண்கள் எல்லாம்!
விரைந்தனர் போலீஸ் அங்கே வெடித்தனர் வேட்டுப் பத்து!
மறைந்தனர் திக்கு நான்காய் மக்களும் பீதி யுற்றே!

த. மலர்
1979.7.29

- எஸ். கண்ணன்

# 222. பயனீட்டாளரைக் காப்பீர்!

பயனீட் டாளரைப் பயமு றுத்தும்
பயனே இலாத பொருள்கள் இவற்றின்
தரத்தைப் பிரிக்கத் தடுமாறும் மக்கள்!
நிறத்தால் மயக்கும் நெறியிலாப் பொருள்கள்!
நெத்திலிக் கழுத்தை நெரிக்கும்! ஆனால்
திமிங்கில மீன்கள் திமிறிப் போகும்!
உயர்ந்த இடங்களில் ஊழல்! ஆனால்
அயர்ந்த குடிசையை அதட்டும் சட்டம்!
வான ளாவிய மேம்பாட்டுத் திட்டம்!
மானு லாவிடும் மல்லிகைத் தோட்டம்!
தோர ணக்கொடி தொங்கும் மாளிகை!
ஈரப் பசைகளை ஈர்த்திடும் விடுதி!
தனிமனித மேம்பாடு! தம்மினக் கூப்பாடு!
பிணிகளை மறைத்திடும் பெரும்பெரும் திரைச்சீலை!
கண்ணீரைத் துடைத்திடும் திட்டங்கள் இன்றியே
பன்னீரைக் கொட்டிடும் படைப்புமேம் பாடா?
களைகொல்லி மருந்தும் உயிர்கொல்லி யாகும்!
இலைகிள்ளி யாகித் தலைகிள்ளிப் போடும்!
கண்கள் இழந்தவர், கால்கள் நலிந்தவர்,
பெண்கள் பலருக்குப் பேறுகோ ளாறுகள்,
தோலும் உரிந்தவர், துன்பம் மிகுந்தவர்,
கேள்விக் குறியுடன் கீழே விழுந்தவர்,
தோட்டப் புறங்களில் தொடர்கதை யாகியே
வாட்டும் அழிவுகள்! காய்கறி இலைகளில்
தெளிக்கும் மருந்துகள் தேங்கிடும் நஞ்சுகள்!
டாடா[36] மட்டுமா மனிதக் கொல்லிகள்?
கூடாக் காற்றும் கொடிய நீரும்
கொல்லி தானே! கொலைகள் தானே!
பயனீட் டாளர் பக்குவ மாகப்
பயனையும் மீட்டு உயிரையும் மீட்க
உதவ வாருங்கள்! உண்மைத் தோழர்காள்!

த. நேசன் - தீ. சி. பொன்னுசாமி
1987.8.9

---

*36 டாடா (Dadah - மலாய்ச் சொல்) - போதை மருந்து (Drug)*

# 223. சூழ்நிலைக் கோழை

தரங்கெட்ட கயவருக்கும் வணக்கம் சொன்னேன்;
தமிழறியாக் கசடருக்கும் மாலை போட்டேன்;
மறச்செயல்கள் புரிவோர்க்கும் வாழ்த்துச் சொன்னேன்;
மடமையுடன் நடந்தோர்க்கும் மதிப்புத் தந்தேன்;
அறவழியைத் துறந்தோர்க்கும் அரணாய் நின்றேன்;
அன்பற்ற முரடருக்கும் ஆட்டம் போட்டேன்;
இரக்கமற்ற இச்செயலை ஏன்தான் செய்தேன்?
இருக்கின்ற சூழ்நிலையில் இதனைச் செய்தேன்!

இனஒருமை காப்பதற்கும் எதிர்ப்புத் தந்தேன்;
எவனெவனோ சொன்னதற்கும் தாளம் போட்டேன்;
பணம்படைத்தோர் புகழ்படிக்கப் பாய்ந்து சென்றேன்;
பாமரர்கள் உழைப்பதனைப் பழித்தும் சொன்னேன்;
குணமுடையோர் கொள்கைகளைக் குலைத்தும் வாழ்ந்தேன்;
குறைநிறைந்த புரட்டருடன் கூட்டம் போட்டேன்;
தினம்தினமோர் நாடகத்தில் ஏன்ந டித்தேன்?
திக்கற்ற சூழ்நிலையில் இதனைச் செய்தேன்!

தாய்மொழியைத் தரணியிலே தாழ்த்திச் சொன்னேன்;
தலைசொறிந்து என்வாழ்வைத் தள்ளிக் கொன்றேன்;
பாய்போட்டுப் பாதகர்க்குப் பந்தி வைத்தேன்;
பழங்கால நன்னெறியைப் பழித்தும் சொன்னேன்;
வாய்ப்பந்தல் போடுதற்கு முன்னால் நின்றேன்;
வாழ்வோரைக் கெடுப்பதற்கும் வழிகள் சொன்னேன்;
நாய்போல வால்குழைத்து ஏன்தான் வாழ்ந்தேன்?
நானிருந்த சூழ்நிலையில் இதனைச் செய்தேன்!

த. மலர் - சோமசன்மா
1977.7.27

# 224. எட்டென்றால் இளப்பமா?

ஓரெட்டில் எட்டுவதை விட்டு விட்டே
        ஓயாமல் எட்டுபவர் தமிழர்; பேற்றை
ஈரெட்டில் வைத்தார்கள்; அறியா மையால்
        இனப்பெருக்கில் அக்கணக்கைச் சேர்த்துக் கொண்டார்!
மூவெட்டில் தொடங்கிவரும் வாழ்க்கை முற்றும்
        முன்னேற்றம் எட்டாமற் சோர்வார்; வாயில்
நாலெட்டுப் பற்களையும் தெரியக் காட்டி
        நாளெல்லாம் நடப்பதுதான் இவர்கள் வாழ்க்கை!

ஐயெட்டு நாற்பதுதான் அதிலுங் கூட
        ஐயங்கள் வரலாமா? வருமி வர்க்கே!
ஆறெட்டு என்றாலும் ஒன்ப தென்றே
        அடுத்தெண்ணத் தவறாதார்; தமக்குள் மட்டும்
ஏழெட்டுக் கூறாகக் கிடப்பார்; கேட்டால்
        எண்ணிக்கைக் கடங்காமல் எடுத்து வைப்பார்;
எட்டெட்டு முன்னேற்றங் காணு மட்டும்
        எட்டுவதே இலக்கென்றால் ஒட்ட மாட்டார்.

ஒன்பதுக்குப் பின்வருமா எட்டு? தூய
        உண்மையின் முன்வருமா பொய்மை? கணித
எண்ணுக்குள் சுழிகண்ட தமிழ மாந்தர்
        எட்டோடு சுழிசேர எண்ப தென்றார்
கண்ணுக்குள் உருள்கின்ற விழியைப் போலக்
        கண்டெடுத்த சுழியின்மேல் சுழியும் ஏற
உண்டான ஓரெண்ணே எண்க ளுக்குள்
        உயர்ந்ததெனச் சொல்லாமற் சொல்லத் தானே?

த. நேசன் - கரு. திருவரசு
1984.2.26

## 225. எங்கள் தமிழன்!

எப்படி வாழ்க்கை இருக்கிற தென்றால்
'ஏதோ..... இருக்கிற' தென்பவன் தமிழன்!
எப்படி வேலை இயக்கமும் என்றால்
'என்னத்தெ....' இதனைச் சொல்பவன் தமிழன்!
இப்படி வாழும் வாழ்க்கையும் வாழ்வா?
ஏணிவைத் தேற்றினும் இவர்பெறல் தாழ்வா?
செப்படி வித்தைபோல் திடுக்கென மாற்றம்
சேராவிட் டால்இனம் பெறுதல்ஏ மாற்றமே!

எரிஈட்டி
1979

- முல்லைவாணன்

## 226. மாத்திரை

'மாத்திரை'[37]யைப் போடுகிறார் இளைஞர் கூட்டம்
மயக்கத்தில் ஆடுகிறார் நிலைம றந்து!
'மாத்திரை'யைப் போட்டரசு பிடித்து வைத்து
மயக்கறுத்து மதிப்புயர வாழச் செய்யும்!
மாத்திரைகள் பலவுயிர்கள் வாழ்வ தற்கு
மருந்தாகிப் பயன்நல்கும் மகிழ்வ ளிக்கும்
மாத்திரையைப் பொன்னுக்கும் பாட லுக்கும்
வைத்துத்தான் மதிப்பறிவர் மாறி லத்தார்!

விண்ணுக்கோர் மாத்திரையாம் நிலவு தோன்றின்
வெளிச்சத்தைப் பெறுகின்றோம்! விளக்கிச் சொன்னால்
மண்ணுக்குள் கடலுக்குள் பிறக்கும் முத்தின்
மாத்திரைதான் மதிப்பளிக்கும் விலையு யர்த்தும்;
பெண்ணுக்கும் மாத்திரைகள் நான்கு தேவை;
பிறந்தாரில் பெரியோர்கள் மாத்தி ரைதாம்!
கண்ணுக்குள் ளேயிரண்டு மாத்தி ரையைக்
கருணையொடு படைத்தானே இறைவன் வாழ்க!

- முத்தமிழன்

---

*37 மாத்திரை - போதைப்பொருள்*

## 227. கானலைத் தேடி...

இரவும் பகலும் புரியாமல்
இருளில் உழலும் அந்திகளே
உறவுடன் ஒன்றை உமக்குரைப்பேன்
உம்நிலை என்னிலும் மேலென்பேன்!

கஞ்சா கஞ்சா என்றேதான்
கரிய இருளில் நானலைந்தேன்
மிஞ்சா நிலையில் களவுசெய
மீறித் துணிந்தேன் பிடிபட்டேன்!

வலிவை இழந்தது கண்ணொளிதான்
வயிற்றை மேய்ந்ததோ பெரும்பசிதான்
எலும்புக் கூடாய் ஆகிவிட்டேன்
ஏற்ற தண்டனை அடைந்துவிட்டேன்!

நாட்டைக் காக்கும் தகுதியுடன்
நாளை வருவான் மகனென்று
வீட்டில் ஏங்கிக் காத்திருக்கும்
வீரத் தாயைத் துடிக்கவைத்தேன்!

இளைஞர் உலகிற் கொன்றுரைப்பேன்
இனியும் திரும்பி வரஇயலா(து)
அலைக்கும் கானலை நாடாதீர்!
அறநெறி போற்றி வாழ்ந்திடுவீர்!

- கோ. விமலாதேவி

## 228. நடைப்பிணமானாய்!

மேடைதோறும் வாய்கிழியப் பேசினாய் - உன்
மேன்மையினுக் கென்னநீயும் கண்டனை?
காடுதோறும் கைவலிக்க வெட்டினாய் - உன்
கைப்பு(ண்)ணுக்குக் கட்டினையா மருந்தினை?

நாடுதோறும் கைக்கூலியாய்ச் சென்றனை - ஒரு
நாலுவேலி நிலத்தையேனும் கண்டையா?
பாடுபட்டு உழைத்ததைவீ ணாக்கினாய் - இன்று
பாடுபொரு ளாகநீயும் திரிகிறாய்!

வேறு

உண்மை உழைப்பிற்குப் பலியானாய் - இந்த
ஊரின் பேச்சிற்கே அவலானாய்
அண்ணன் தம்பிக்குப் பகையானாய் - உன்
அன்பிலும் கேள்விக் குறியானாய்
வண்ணத் தமிழிற்குப் பணிசெய்யாய் - தெரு
வாசல் முற்ற மணலானாய்
எண்ணத் தொலையா அவலத்தை - மனத்
தேற்றியே நீநடைப் பிணமானாய்!

- வீ. பூபாலன்

## 229. முடியுமோதான்?

ஒன்றெனச் சொல்லிக் கொண்டே ஒருகோடி பேதம் பேசும்
உலுத்தர்கள் உளுத்தா லன்றி உருப்பட முடியு மோதான்?
கன்றெனக் காட்டிப் பாலைக் கட்டோடு கறந்து விற்கும்
கன்னெஞ்சர் கனிந்தா லன்றிக் கடைத்தேற முடியு மோதான்?
நன்றென நயந்து வந்து நரிநாச வேலை செய்யும்
நயவஞ்சர் நசிந்தா லன்றி நலங்காணல் முடியு மோதான்?
அன்றன்று அரற்றிக் கொண்டு அணிசேர்ப்பி னைப்பி டித்த
அற்பர்கள் அசந்தா லன்றி அணிபெற முடியு மோதான்?

தொண்டெனச் சொல்லிக் கொண்டு சுருட்டியே துய்த்து வாழும்
சூதர்கள் துவண்டா லன்றித் துளிர்த்தெழ முடியு மோதான்?
கண்டொன்று சொல்லிக் கொண்டு கலகங்கள் மூட்டு விக்கும்
கபோதிகள் கவிழ்ந்தா லன்றிக் கடைத்தேற முடியு மோதான்?
கொண்டபின் குலங்கள் பேசிக் குடிகெடுத் தலையு மந்தக்
கொடியவர் நலிந்தா லன்றிக் கொடிநாட்ட முடியு மோதான்?
கிண்டலே பேசிப் பேசிக் கெடுத்திடும் குள்ள நரியாம்
முண்டங்கள் முறிந்தா லன்றி முளைத்தெழ முடியு மோதான்?

எல்லாமே தெரியு மென்றே எக்காளம் போடா நிற்கும்
எத்தர்கள் செத்தா லன்றி ஈடேறல் முடியு மோதான்?
கல்லாமே கதைகள் கட்டிக் கயமையே செய்யா நிற்கும்
கயவர்கள் கழிந்தா லன்றிக் களைகட்ட முடியு மோதான்?
சொல்லாலே கோட்டை கட்டும் திறனுற்ற திருட்டுக் கூட்டம்
எல்லாமே எரிந்தா லன்றி எழிலாதல் முடியு மோதான்?
கொல்லாமல் கொலையே செய்யும் கொடுமனத் தடியர் கூட்டம்
கூண்டோடு அழிந்தா லன்றிக் கோலோச்ச முடியு மாமோ?

- வாசுகிமணாளன்

## 230. வெட்டுச் சீட்டு!

கட்டுச் சீட்டைக் கலைத்துப் போட்டு
வெட்டுச் சீட்டு ஆடினர் - அந்த
வெட்டுச் சீட்டில் துட்டு வைக்க
எட்டுப் பேர்கள் கூடினர்!

கட்டுக் கட்டாய் வெள்ளி நோட்டுக்
கைகள் ஏறி நின்றன - பலர்
எட்டி நின்றே துட்டெ றிந்தும்
ஏதோ பேரம் பேசினர்!

மேலே என்றார் கீழே என்றார்
மேலும் நடுவில் என்றனர் - அந்த
ஆளே ராஜா கேட்டார் என்றும்
அள்ளிக் காசை நீட்டினர்!

பையி லிருந்த பணம்ந கர்ந்து
பாய்ந்து கைகள் மாறின - சிலர்
கையி ருப்பு அதிக மாகிக்
களிப்பு மீறித் துள்ளினர்!

சிரம மின்றிக் காசு சேர்க்கச்
சிறந்த மார்க்கம் என்றுமே - நானும்
பெருமை யாக எண்ணி யருகில்
போய மர்ந்த வேளையில்,

வென்ற வர்க்கும் தோற்ற வர்க்கும்
விளைந்த பேச்சு முற்றியே - பெரும்
சண்டை யாகிக் குத்திக் கொண்டே
சாய்ந்து ருட்டிக் கொண்டனர்!

இரண்டு பேரைச் சமர சத்தில்
இணைக்க வேண்டி நடுவினில் - போய்
இறங்கி நின்ற என்றன் கையை
இழுத்து முறித்துப் போட்டனர்!

வெட்டுச் சீட்டுப் பார்த்த தற்கே
வேண்டு மோஇத் தண்டனை? - நான்
கட்டுப் போட்டு மருந்த கத்தில்
கட்டில் மீது கிடக்கின்றேன்!

த. நேசன் - ஆதம்குமார்
1980.4.6

## 231. தூங்கு!

தூங்கிய கண்கள் தூங்கிய தோள்கள்
தூங்கிடுந் தமிழா தூங்கு - பயன்
ஏங்கிய உள்ளம் ஏங்கிய உணர்வு
ஏங்கிய வாறே தூங்கு!

வாங்கிய கடனை வாசியும் சேர்த்து
வழங்குவ தெந்நாள் கூறு? - நீ
தூங்கிய நாள்முதல் நீங்கிய துயர்வு
தூக்கத் திலேமுன் னேறு!

விழிஎழு எழுவிழி எனும்மொழி மறந்தாய்
விழிதிறந் தேவிழித் தாயா? - வரும்
பழிமலை எனும்உயர் வதுவிழ முனைந்து
பகர்ந்த தெலாம்வெறுங் காயா?

உழைப்பதும் விட்டாய் பிழைப்பதும் கெட்டாய்
உறக்கத் திலேமலை தொட்டாய் - கூவி
அழைப்பதும் உன்செவி ஏறுமோ தமிழா!
அடகுவைத் தறிவு மற்றாய்!

திறமும் களிற்றின் மறமும் விழிப்பும்
சேரத் திகழ்ந்தாய் அன்று! - வீணில்
உரமும் அற்றுக் கரமும் இற்று
உறங்கிக் கிடக்கிறாய் இன்று!

சேற்றினில் விழுந்த கல்லென அழுந்திச்
சிதைந்த உளத்துடன் ஏங்கு! - உன்
பாட்டினில் சிறிதும் பகுத்தறி விலைஇனிப்
படுத்துக் கிடந்தே தூங்கு!

முத்தமிழ் - எல்லோன்
1971, ஜூன்

## 232. தூக்கத்தால் வந்த துயர்

செந்நீரைச் சிந்திச் செழுமலை நாடுதனைப்
பொன்னாடாய் ஆக்கிய பொற்றமிழன் - எண்ணற்ற
ஏக்கத்தால் வாடுகிறான் இன்று, விழிப்பில்லாத்
தூக்கத்தால் வந்த துயர்.

வீரம் இழந்திட்டான்; மேன்மை இழந்திட்டான்
சீரும் இழந்திட்டான்; செந்தமிழன் - பாரினில்
ஆக்கம் அளிக்கும் அருங்கல்வி கொள்ளாத
தூக்கத்தால் வந்த துயர்.

வெளுத்தால் அழுக்குப்போம்; மேன்மையுள மாங்காய்
பழுத்தால் புளிப்புப்போம்; பாவாய்! - விழித்தெழுந்தே
ஆக்கம் புரிந்தால்தான் அற்றுப்போம் நற்றமிழர்
தூக்கத்தால் வந்த துயர்.

தங்க நகையோடு சால்புதரும் வெள்ளியையும்
பொங்குபுகை வண்டியிலே போகுங்கால் - பங்கமுளோர்
ஏக்கத்தால் வாட எடுத்தேகி விட்டார்என்
தூக்கத்தால் வந்த துயர்.

மணிமு. - மீசல் பி. எம். அபூபக்கர்
1984

# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"கால்நோக்கித் தாழும் கடைவிழியை மேலுயர்த்து!
மேல்நோக்கி நின்று விரிவானை உற்றுப்பார்!
யார்க்கும் அடிமைநீ அல்லை! பெருமலையைப்
பேர்க்கும் நெடுந்தோளை மேலுயர்த்து!........"

- ப. மு. அன்வர்

எ எழுச்சி

## 233. புறப்படு இளைஞனே!

விடுபடு கதிரென வில்விடு அம்பென
உடைபடு நீரென ஒளிகொடு வேலென
வடுபெறு மார்பென வன்புலிச் சீறென
கொடுமட மறுத்திடுங் குறளற வாளென
வெடிபடும் எரிமலை அறுபடும் ஏறெனத்
தடிபடும் போதிலும் மிடுக்குடன் நடமிடும்
துடிப்புடை மறமெனத் துயரறு இளைஞனே!
ஒடிபடு எளியவர் உரிமையைக் காத்திட
எடுபிடிக் கயவரின் இடுப்பொடிந் தோடிடக்
கடும்பிடி அற்பரின் கருத்தினை முறித்திட
அடலெனப் புறப்படு அறிவுடை இளைஞனே!
இடைச்சிறு மாதரின் எழில்வலை அறுத்திடு
இடைவரும் மிடிமையை இழிந்திடச் செய்திடு
தடையெது நேரினும் கடமைக ளாற்றிடும்
படையினில் நடையிடப் புறப்படு! புறப்படு!

ஜெ. பேரிகை
1967, சனவரி

- சா. ஆ. அன்பானந்தன்

## 234. சுமையைத் தூக்கி எறி!

எத்தனைநாள் இன்னமும் எத்தனைநாள் இச்சுமையின்
மொத்தப் பளுவால் முகஞ்சிறுத்து வாடுவாய்?
என்றுதான் உள்ளத்(து) இருள்நீங்கி நல்லமைதித்
தென்றலில் ஆடித் திளைத்திடுவாய்? வாழ்க்கையெனும்
தீக்கொழுந்தின் நாவுன்னைத் தீண்டிச் செழும்பொருள்
தேக்கத்தின் ஈரச் செழுமையினைத் தீய்த்ததுவே
வற்றி உலர்ந்த வடிகாலின் மார்பினில்
பற்றி எரியும் பரல்மணலே என்றுதான்
சேம்பின் குழையும் செழித்தடரும் கோரைகளும்
ஆம்பலும் காட்டி அணிநாரைக்(கு) ஊன்தருவாய்
பாதச் சிலம்புப் பரல்முரல வாளையளைந்(து)

ஓதம் எழுப்பி உயிர்த்திடுவாய்! மீன்கொத்தி
அம்பு பறக்கும் அழகிழந்த இவ்வெறுமைச்
செம்புகையின் மூட்டம் சிதறும்நாள் எந்தநாள்?
மண்காண மாட்டா மறைவுலகில் வேர்பிடித்துக்
கண்காணும் கானலிலே கண்விழித்த ஆத்மாவே!
தோட்டம் அழிந்து துளிர்களெல்லாம் காய்ந்தபின்
பாட்டுக் குயிலிருந்து பாடுவதைக் கேட்பவர்யார்?
முத்துக் கருவிழந்த சிப்பியினை மொய்த்தமர்ந்து
கத்துவதால் என்றுமே கைநிறைய மாட்டாது!
ஆதலினால் வெய்துழலும் ஆத்மாவே உன்சுமையை
மோதி உடைத்துவிடு! முள்மரத்தைத் தீயிலிடு!
வேடிக்கை பார்க்கும் வெளியாரின் கூக்குரலை
வேடிக்கை யாயும் விலைவைத்துப் பார்க்காதே!
காலிடறும் சல்லிகளைக் காப்பறையில் சேர்க்காதே!
பாலிருந்த பானையெனும் பாசத்தைக் கொன்றுவிடு!
சொந்தங்கள் வந்து துயர்தீர்க்கும் என்பதெல்லாம்
வெந்தயத்தி னுள்ளே வெயில்தேடும் வேதனைதான்!
கைதட்டும் கூட்டம் கணக்கினில் சேராது!
பைதட்டுப் பாடடைந்தால் பத்துநொடி நில்லாது!
கால்நோக்கித் தாழும் கடைவிழியை மேலுயர்த்து!
மேல்நோக்கி நின்று விரிவானை உற்றுப்பார்!
யார்க்கும் அடிமைநீ அல்லை! பெருமலையைப்
பேர்க்கும் நெடுந்தோளை மேலுயர்த்து! பெய்யென்று
நீசொன்னால் பொய்வானும் பெய்யுமடா! தோல்விகளைத்
தூசென்று தட்டித் துரத்து!

மலே. வானொ. - ப. மு. அன்வர்
1973.4.6

## 235. மானம்

கடலுக்கு அணிதவழும் அலைகள் என்றால்
காற்றுக்கு அணிதண்மை இதமே யாகும்;
மடலுக்கு அணிகமழும் மணமே என்றால்
மறத்திற்கு அணிநேராய் எதிர்வ தாகும்;
சுடருக்கு அணிகூட்டும் வெளிச்சம் என்றால்
சொல்லுக்கு அணிநாட்டும் வாய்மை யாகும்;
உடலுக்கு அணிபோற்றும் தூய்மை என்றால்
உயிருக்கு அணிமான உணர்வே யன்றோ?

பேச்சுக்கு எதிர்ப்பேச்சுப் பேசல் ஒன்றே
பெரிதான தன்மானம் என்று சொல்வார்
பாச்சைக்கும் பல்லிக்கும் விலங்கி னுக்கும்
பகுத்தறிவால் மேம்பட்ட மனித வர்க்கம்
மூச்சுக்கு நிகரான இந்தப் பண்பை
முழுவதுமாய்ப் போற்றுவதும் ஏது? வீண்வாய்
வீச்சொன்றால் தமைவளர்த்து வீரங் கொள்வார்
வேறுபழி எதுவரினும் உதிர்த்தே செல்வார்!

தன்மானம் தனிமானம் இவற்றின் முன்னே
தமிழ்மானம் இனமானம் முதன்மை யாகும்!
பெண்மானம் கற்பென்றால் ஆணின் மானம்
பேசரிய நல்ஒழுக்கச் சிந்தை என்போம்!
பொன்வான மாயிருந்த தமிழர் மானம்
போலியரால் அடைமானம் ஆயிற் றையோ!
மண்மானம் காக்கின்ற மழவ ரைப்போல்
மறவாமல் சற்றேநாம் மானம் காப்போம்!

1987 - எல்லோன்

# 236. குரல்கொடுக்கும் தலைமை வேண்டும்!

ஆண்டாண்டு காலமாய் மேடை யேறி
அயராது கத்தினோம் என்ன லாபம்?
வேண்டாத பெண்டாட்டி கதைதான் இங்கே
வீரமாய்க் குறைசொல்லித் திரிந்தோ மன்றோ?
பூண்டோடு சமுதாயம் அழிந்த போதும்
புரியாமல் அதற்குநாம் துணையே போனோம்!
வேண்டாவே இனியிந்த 'அணிக' ளெல்லாம்
விழிப்புடனே பணிசெய்து உயர்வோம் வாரீர்!

ஏழைகளாய்க் கோழைகளாய் இந்த நாட்டில்
இந்தியர்கள் இருக்கும்நிலை மாற வேண்டும்;
ஏழடுக்கு மாளிகையில் வாழ வேண்டும்;
எண்ணற்ற தொழிற்சாலை யமைக்க வேண்டும்;
வாழையடி வாழையாய் நம்மக் கள்தாம்
வாழ்ந்திருக்கும் தோட்டமதை வாங்க வேண்டும்;
தோழமைதான் என்றாலும் உரிமை கோரித்
தொய்வின்றிக் குரல்கொடுக்கும் தலைமை வேண்டும்!

1971 - மா. இராமகிருட்டினன்

## 237. மாசக்தி!

தீச்சுடர் கக்குமொரு நீலக் கொழுந்திலே
தேன்சிந்து பூக்களை மலரவைப்பேன்!
காய்ச்சுகிற வெண்ணெயில் உருகிவரும் நெய்யினைக்
கனலுக்குள் வைத்துநான் உலரவைப்பேன்!

காலமெனும் ஆழிக்குள் மூழ்குற்ற முன்னோரைக்
கண்ணெதிரில் கொண்டுவந்து பேசவைப்பேன்!
காலனையும் வரவைத்துக் கால்மண்டி யிடவைத்துக்
கவனித்துச் சாமரமும் வீசவைப்பேன்!

எடையற்ற உலகத்தில் எண்ணாயி ரங்கோடி
இருக்கின்ற விந்தையைப் புரியவைப்பேன்!
கடையுற்ற வாழ்க்கையை முடிவுக்குள் வீழாமல்
காலவரை யின்றிநான் விரியவைப்பேன்!

ஆறறிவு தன்னையும் ஆய்ந்துநான் ஏழாவ
தறிவொன்றை மண்ணிலே படைத்துவைப்பேன்!
ஓரிரவு முடிவுக்குள் ஒருகோடிப் பகல்களைநான்
உருவாக்கி உருவாக்கி உடைத்துவைப்பேன்!

இவையாவும் செய்கின்ற ஈடற்ற மாசக்தி
என்பக்கம் உளதென்ப தறிவாயடா!
கவிஎன்னும் அச்சக்தி காலத்தை வெலும்சக்தி
கால்தேடி மலர்கொண்டு சொரிவாயடா!

த. நேசன்
1970.3.9

- காரைகிழார்

## 238. உழைப்புவளம்

உழைப்பு வளத்தை உயிரெனக் கொண்ட
கிழக்கு வானில் கறுப்புக் கதிர்கள்
இந்துப் பெருங்கடல் ஈழக் குயில்கள்
வெந்து கருகியும் வெடியில் அழிந்தும்

வளத்தில் சிறந்தும் வலம்இடம் இன்றி
நிலத்தில் புதைந்தும் நீரில் அமிழ்ந்தும்
மொரிசியஸ் தமிழன் மொழியை மறந்து,
பிரஞ்சில் பேசும் பேதமையும் அருகே
மேடான் தமிழன் மேட்டில் வாழ்ந்தும்
நாடான் தமிழை நாட்டின் வளத்தினை
உழைப்பால் மாற்றிய உருவத் தமிழன்
பிழைப்பால் வாழ்கிறான்! பெயர்களால் வாழ்கிறான்!
உயர்ந்த தமிழை உயர்த்த முடியாமல்
முயன்று முயன்று முன்னேறு கின்றான்!
வளங்கள் பற்பல வாய்த்துத்
தலங்கள் தோறும் தமிழ்நிலம் காண்பனே!

### வேறு

தென்னைக்கும் செம்பனைக்கும் ரப்ப ருக்கும்
தாய்பாலாய் நாமிருந்தோம்! உழைப்பைத் தேக்கித்
தண்ணீரில் மின்சாரம் பெறுவ தைப்போல்
தமிழர்கள் கைகளினால் பொன்னைக் கண்டோம்!
கண்ணீரும் பன்னீராய் மெல்ல மாறும்
காலத்தை எதிர்நோக்கிக் காத்தி ருப்போம்!
வெந்நீரும் ஆறத்தான் செய்யும் தேயும்
விதிரேகை மாறத்தான் செய்யும் ஓர்நாள்!

த. நேசன்
1985.2.15

- தீ. சி. பொன்னுசாமி

## 239. வெற்றி ஈட்டுவாய்!

அன்னை வளர்த்தது ரப்பரை! - எங்கள்
அப்பன் வளர்த்தது கொப்பரை!
அண்ணன் வளர்த்தது செம்பனை! - எங்கள்
ஆயிரம் சோதரி மார்கள் குருதியில்
ஆனது தானடா தேயிலை!

பேரா நதிபாயப் பாருங்கள் - அதில்
போகுந் துரும்பொன்றைக் கேளுங்கள்
நூறா யிரம்முட்டைப் பூச்சிபோல் - எங்கள்
மூதாதை யாயிரம் கூடி மரித்தனர்
மூன்று தலைமுறை யாகவே!

நாங்கள் விதைத்த பலாமரம் - பூத்து
நான்கு திசையிலும் காய்த்தது
ஏங்கியோ தொண்ணாந் திருப்பது - நாங்கள்
ஏதுக்குக் காத்துக் கிடப்ப தின்னமும்
ஏழைகள் என்னுமோர் போர்வையில்!

பட்டு விரித்தநல் மொட்டுகள் - மணி
பாவிய சந்தனக் கட்டில்கள்
கொட்டிக் குவித்திடக் கேட்டோமா? - அள்ளிக்
கோபுரம் போல்மணி மாளிகை இன்றே
கட்டி முடித்திடக் கேட்டோமா?

ஓய்வுறும் போதிலே சோறுதா - பிள்ளை
ஓங்கி உயர்ந்திடக் கல்விதா
நோயுறும் போதிலே போர்த்திடச் - சிறு
நூலுடை தாவென்று கேட்டிடக் கண்டு
பாய்வுறு கின்றது நியாயமோ?

எத்தனை நாள்பண மொந்தைகள் - எதிர்
பார்த்துக் கிடப்பது நண்பனே!
வித்தைகள் கற்றநீ உன்கையை - நம்பு
வீறிட் டெழுந்து தொழிலினைச் செய்தே
வெற்றிமேல் வெற்றியை ஈட்டுவாய்!

ச. மே. ம.
1972

- வே. சங்கு சண்முகம்

## 240. எல்லாத் துறைகளும் எமதே!

எல்லாத் துறைகளும் எமதே; இவற்றை
ஏற்று நடத்திடும் திடம்எங்கள் திடமே!
நல்லார் துணைசேர் இளையர்முன் னேற்றம்
நாடு கண்டதென வேபுகழ் சாற்றும்!

பலதொழில் கலைகள் பயில்வோம் வாரீர்!
பண்பாடு காத்திடும் படைதனில் சேர்வோம்!
உலக இளைஞர்காள் ஒருநிழல் நிற்போம்!
உறுதியும் உண்மையும் நமதெனக் கொள்வோம்!

சோம்பல் எனும்மலை தூள்தூள் தூள்தூள்!
சுறுசுறுப் பாயுதம் நமதிடைக் கூர்வாள்!
'தாம்தூம்' எனக்குதித் தாட்டங்கள் போடோம்
சேவை செய்யவே பிந்திட மாட்டோம்!

ஒழுங்கு தவறா(து) உழைத்தல்முன் னேற்றம்!
ஒருசொல் ஒருவழி காணல்கண் ணோட்டம்!
மழுங்கா அறிவொடு துலங்குநல் நோக்கம்!
வழிதொட நடப்பதே இளைஞர்முன் னேற்றம்!

த. ஒ. - கா. பெருமாள்
1973/74

## 241. செயலாக்கம் காண வாராய்!

மும்மன்னர் கதைபேசி முழங்கு கின்றாய்!
முடிந்துவிட்ட நாடகந்தான் முழுக்குப் போடு!
இம்மண்ணில் நடக்கின்ற நாட கத்தில்
இருக்கின்ற உரிமையென்ன உனக்கு? இன்னும்
'கம்'மென்றே இருந்துவிட்டால் யார்க்கு நட்டம்?
காசுபணம் சேர்த்தவன்யார்? நீயா நானா?
செம்மண்ணில் தண்ணீராய்க் கலந்தி டாமல்
செயலாக்கம் இனியேனும் காண வாராய்!

மயில் - காசிதாசன்
1986.12.12

## 242. அடிவெட்டிச் சாய்ப்போம்!

விடிகின்ற நாளெல்லாம் வீணாகும் போது
விழுகின்ற சமுதாயம் எழுகின்ற தேது?
மடிகின்ற பொழுதெல்லாம் விடையாகு மானால்
மலர்கின்ற புதுவாழ்வின் எடையேறி நிற்கும்!

அடிபட்ட காலங்கள் அடிபட்டுப் போனால்
அடிபட்ட முன்னேற்றம் உடைபட்டு வீறும்!
அடிபட்ட மரமாக வாழ்ந்திட்ட நிலையின்
அடிதொட்டு வணங்காமல் அடிவெட்டிச் சாய்ப்போம்!

கடல்தாண்டிப் பறக்கின்ற எண்ணத்தை மாற்றிக்
கடல்தாண்டிப் புகழ்செல்லும் காலத்தை நாட்டு!
கடன்பட்டு ரூபாவாய் உடன்மாற்றி அனுப்பும்
கடையுற்ற நெஞ்சத்தை இடம்விட்டு மாற்று!
திடம்பெற்ற கொள்கைக்குத் தடங்காட்டிச் செல்லும்
திறம்பெற்ற கூட்டுறவுக் குரமேற்றிக் கொள்ளு!
குடம்பெற்ற விளக்காகக் கிடந்திட்ட நம்மைக்
குன்றின்மேல் ஏற்றவரும் கூட்டுறவைப் போற்று!

கூட்டுற. - இரா. பெருமாள்
1979

## 243. விடுதலை மண்ணில்...!

மனித உருவில் விலங்கின் வெறியர்
வந்தா மண்ணில் பிறந்தார்?
நினைப்பிற் கெட்டாக் கொடுமை செய்து
நெஞ்சி லன்றோ அறைந்தார்!

அடிமைச் சேற்றில் புதையுண் டிருக்கும்
அவன்யார்? அவன்தான் தமிழன்!
மிடிமைத் தனத்தில் கொடிகொண் டோச்சும்
வீணன் இவனும் தமிழன்!

விடுதலை மண்ணில் விடியா இருளுள்
வீழச் செய்தவன் யாரோ?
அடிமைத் தனங்கள் இனியிங் கறவே
அடஓ! எடடா வாளே!

இருண்ட கண்ட விலங்கு வாழ்க்கை
இன்னும் எங்கெங் குளதோ?
மருண்டு மருண்டு சாகும் கீழ்மை
மாற்றல் நம்கடன் அன்றோ!

த. நேசன் - எல்லோன்
1983

# 244. வீதியிலே விழுந்தவனை...

சஞ்சியிலே பாடுபட வந்தகூலிங்க - எங்க
சந்ததிங்க செலாஞ்சாரில் மிச்சமீதிங்க
வஞ்சகமும் சூதுகளும் பெருகிப்போச்சுங்க - நம்ம
வரலாறு இதனாலே குறுகிப்போச்சுங்க!

இனஉணர்வை இந்தியனே அடகுவச்சிட்டான் - சூடு
இருக்கிறதா என்பதற்குத் தேர்வுவச்சிட்டான்
இனத்தானே இனத்தானை ஏப்பம்விட்டுட்டான் - அட
ஏறிவந்த கப்பலையே ஓட்டபோட்டுட்டான்!

விழித்தவனே விழிப்பவனின் கண்ணைப்பிடுங்குறான் - எவன்
வீதியிலே விழுந்தவனை எண்ணத்தொடங்குறான்?
பழித்தவனை இழித்தவனை விட்டுத்தள்ளணும் - இல்லே
பயங்கரமா நிக்கவச்சிச் சுட்டுத்தள்ளணும்!

த. நேசன்
1983

- பொன். சந்திரன்

# 245. தடைசெய்வார் யார்?

நாட்டுக்குச் சுதந்திரத்தைக் கண்ட தோடு
நலமோங்கும் நிலைமக்கள் பெற்றுச் சீர்மை
ஈட்டுக்குச் சுந்தரமாம் வாழ்வ மைக்க
ஏற்பட்ட திட்டமதே பெல்டா[1]த் திட்டம்
காட்டுக்கு நெருப்பூட்டி அழித்து மேட்டைக்
கரைத்துசம பூமியினை ஆக்கி மக்கள்
கூட்டாகக் குத்தகையா ளர்க ளோடு
கூடியிணைந் துழைப்பதுவே பலனைச் சேர்க்கும்!

செலாஞ்சார்அம் பாட்டினிலே அடிமை யாகத்
தமிழர்களைத் தம்மினமே நடத்திச் செல்லும்
குலஞ்சேராக் கொடியவராம் குத்தகைக் காரர்
கொத்தடிமைப் போக்குதனை நிறுத்த வேண்டும்;

---

*1 பெல்டா (FELDA) - Federal Land Development Authority*

விலங்கிற்கும் கேவலமாய் நடத்திச் செல்லும்
மிருகத்தன் மைஇத்தோ டொழிக்க வேண்டும்
நலஞ்சேரும் வழிகளிலே நின்று மக்கள்
நன்மைபெற நற்றுணையாய் நிற்க வேண்டும்!

இத்தனைநாள் அடிமைகளாய் அவதிப் பட்டே
இடிஉதைகள் சித்ரவதை அனைத்தும் தாங்கிக்
கொத்தடிமை வாழ்க்கையினை வாழ்ந்தும் கூடக்
குமுறியெழாத் தொழிற்சங்கம் செய்த தென்ன?
செத்துச்செத்துப் பிழைக்கின்ற நம்மி னத்தோர்
சிந்துகிற கண்ணீரைத் துடைப்ப தற்கு
முத்துமனச் செம்மல்உயர் சாமி வேலு
முயலுவதைத் தடைசெய்ய உரிமை யார்க்கு?

த. நேசன் - டி. வி. இராகவன்பிள்ளை
1983

## 246. சமூகம்

நீயும் நானும் நினைத்தது முடிந்தால்
நிம்மதி துலங்குமண்ணே! - இதில்
தேயும் நிலவாய்ச் சோம்பலில் வாழ்ந்தால்
உள்ளதும் பறக்குமண்ணே! - ஒரு
தாய்க்கும் சேய்க்கும் வேற்றுமை தெரியாத்
தறுதலைச் சமூகமண்ணே! - இதில்
நாய்க்கும் பேய்க்கும் நாம்பயந் திட்டால்
நரிக்கே வேட்டையண்ணே!

புட்டிப் பாலுக்கும் வட்டுத் துணிக்குமாய்
மட்டை யடிக்கையிலே! - மது
புட்டி புட்டியாய் இட்டம் போல்பணம்
சிட்டாய்ப் பறக்குதண்ணே! - நறும்
பட்டுத் தளிருடல் பெண்டி ருடல்படக்
கட்டில் கலங்குதண்ணே! - அதைக்
கட்டுப் படுத்திட அரசியல் இன்னும்
காரணம் தேடுதண்ணே!

வெறும்வாய் மென்றிடு மொருகூட் டம்அதில்
 வெற்றிலை மென்றிடும் மறுகூட்டம் - நமில்
புரியா ராடிடும் வெறியாட்டம் - அதைப்
 புரிந்தே வென்றிடும் சதிக்கூட்டம் - அதில்
குறியா யிருந்துநீ அவராட் டம்பெரும்
 கொடுமை களைந்திடு கதிராட்டம் - உனை
அறிவால் வென்றிடு வாராட் டம்தனை
 அழித்திட முயல்வாய் புயலாட்டம்!

கொ. முரசு
1972, ஆகஸ்டு

- கோ. தொ. இராவணன்

## 247. நோதலின் நீங்க...

முழங்குகடல் வையத்து மூதறி வாளர்
விளங்க வுரைத்த மெய்நெறி பேணாப்
பேதை மாந்தன் பிழைபடப் புரியும்
போதை மயக்கப் புரிவிலாச் செயலால்
மானச் சிறப்பும் மாண்புறு பண்பும்
ஈன விழிவுபட் டிசைநலங் குன்றுமால்!
ஏடா தம்பி! இதுநல மில்லை
வாடா விரைந்து வாட்டம் தவிர்த்திட;
பெற்றோர் நெஞ்சைப் பிளந்து பார்க்கிறாய்;
உற்றார் உறவை உதைத்து வெறுக்கிறாய்;
கற்றார் நெஞ்சைக் கலங்க வைக்கிறாய்;
ஒட்டா வாழ்வை உவப்புடன் நினைக்கிறாய்;
தீதென ஒன்றைத் தெரிந்த பின்னும்
வாதம் புரிவது வழக்கா றில்லை
போதைப் பித்தனாய்ப் புவிகிடந் துழல்வதோ?
தீதைத் தெய்வத் திருவடி என்பதோ?
என்சமு தாயத் திளவலே! நீயும்
பண்புடன் வாழப் பலவழி யுண்டு
சிந்தனை செய்வாய் தீநெறி விடுப்பாய்;
வந்தனை புரிவாய் மனத்திண்மை பெறுவாய்;
முயன்றால் யாவும் வெற்றியில் முடியும்
துயின்றால் உள்ளதும் தோல்வியில் மடியும்
ஆதலின் அறிவாய் ஆண்மைசால் தம்பி!
நோதலின் நீங்கப் போதையை விடுத்தே!

- வீ. கே. சுப்பிரமணியம்

## 248. எழுக!

இதுவே தருணம் இதுவே தருணம்
இதுபோல் இனியும் வாய்க்காது! - நீ
பதுமை எனவே படுத்துக் கிடந்தால்
பயன்ஒரு நாளும் காய்க்காது!

காலம் கனியும் கனியும் என்றே
காத்திருந் தாய்நீ இதுவரையில்! - அந்தக்
காலம் கனிந்தது கண்முன் வந்தது
கைகளில் ஏந்திக் கொள்விரைவில்!

பொருள்நிலை உறுதிப் படஉழைத் திடுவாய்
புதுப்புது நிலைகளை உருவாக்கு! - வறுமை
இருள்நிலை ஒழிந்திட இழிபே தங்களை
எரித்தே உயர்வுக்(கு) எருவாக்கு!

இனநலத் தலைமை இன்று வாய்த்தது;
எழுநட செயல்படு ஒன்றிணைந்து - துயர்
பனியென விலகும் பயன்மிக விளையும்
படையென எழுக இன்றிணைந்து!

த. நேசன்
1984.1.29

## 249. ஒன்றுபட்டு நில்லடா!

ஒன்றுபட்டு நில்லடா! உறுதிசெய்து கொள்ளடா!
என்றும்தொழி லாளவர்க்கம் ஏற்றம்கண்டு வாழ்ந்திட (ஒன்று)

ஓடியோடி வேலைசெய்து உடலிளைத்துப் போனவன்
வாடும்வயிறு நிறையக்கூலி வாங்கவந்த சங்கத்தைக்
கேடுபுத்திக் காரப்புல்லர் கிளர்ச்சிசெய்து வீழ்த்திடப்
போடும்கூச்சல் பொய்த்துவீழப் புத்துணர்ச்சி பெற்றுநீ (ஒன்று)

- பொன்முடி

பாட்டுக்கேற்ற கூலிகேட்கும் பாட்டாளியை மிரட்டியே
வீட்டைவிட்டு வெளியிலேற்றும் வீணன்முத லாளியின்
கோட்டைத்தாண்டி வெள்ளிதோறும் வேலைஓய்வு கொள்ளடா!
பாட்டாளிகள் வெற்றிகாணப் பாதைகண்டு விட்டதால் (ஒன்று)

குட்டுப்பட்டுத் தட்டுக்கெட்டுக் குறுணிரத்தம் சிந்தியே
கட்டுப்பட்டுக் கிடந்தகாலம் கப்பலேறிப் போச்சுடா!
தொட்டுத்தொட்டுப் பார்த்துஎம்மைச் சுரண்டிவந்த பேய்களே!
கொட்டுகின்றோம் உரிமைமுரசு கதிகலங்க ஓடுவீர்! (ஒன்று)

நாட்டுக்கேற்ற நல்லவற்றை நம்மையன்றி யார்செய்தார்?
பாட்டினாலே இந்தநாட்டைப் பண்படுத்தித் தந்ததார்?
காடுசுற்றிப் பாலெடுத்துக்[2] குவித்ததெங்கள் தோள்வலி!
தேட்டைபோடும் கூட்டத்தார்கள் செய்ததென்ன செப்புவீர்? (ஒன்று)

ச. மணி - கா. பெருமாள்
1956.6.1

## 250. புரிந்துகொள்வீர்!

என்தந்தை பேரறிஞர் என்றே கூறி
எக்காளம் இடுவதிலே பெருமை இல்லை!
என்அண்ணன் எழுத்தாளன் என்றே கூறி
இறுமாப்புக் கொள்வதிலே பெருமை இல்லை!
என்தம்பி இளங்கவிஞன் என்றே கூறி
இன்பமுறும் செய்கையிலும் பெருமை இல்லை!
என்தோழன் பெரும்நடிகன் என்றே கூறி
இறும்பூது எய்துவதில் பெருமை இல்லை!

பிறப்பாலும் உறவாலும் வந்தே சேரும்
பெருமையெலாம் பூவாலே நாரும் பெற்ற
சிறப்பில்லாப் பெருமையே! அதனால் நின்னைச்
செகமென்றும் போற்றாது! எனவே தத்தம்

2 பாலெடுத்தல் - பட்டை சீவப்பட்ட மரங்களிலிருந்து கிண்ணத்தில் வடியும் ரப்பர்ப் பாலை வாளியில் திரட்டுதல்

பிறவிப்பே(று) இவ்வுலகில் காண்பான் வேண்டிப்
பொறுப்போடு தான்தானும் முயன்று நல்ல
சிறப்பான குறிநோக்கிச் சென்றா லன்றிச்
சிறப்பில்லை பெருமையிலை புரிந்து கொள்வீர்!

த. முரசு - கனீஸ்மல்ஹர்
1966.11.6

## 251. என்ன செய்தோம்?

கன்றோடு தாய்சேராக் கதையே போலும்
கவியெழுதிப் பொருள்சேரா எழுத்தைப் போலும்
மன்றேறி நாள்தோறும் முழங்கு கின்றோம்;
"மனங்கலந்து வாழ்ந்திடுவோம்" என்ப தெல்லாம்
சென்றோடும் அரங்கோடு செயலில் காணோம்!
சிறுமைகளைக் களைந்தெறியும் மனந்தா னில்லை!
கொன்றொழிக்கும் பசியில்லை என்ப தாலே
கோபுரத்தை எட்டியதாய் எண்ண லாமோ?

பொருள்போட்டுத் தொழில்வளர்க்கும் பணியிற் சீனர்
போயெடுத்தார் முதல்சீட்டு! புகழும் பெற்றார்
உருப்படியாய் வாழ்கின்றார் இந்நாட் டின்கண்
உவமானம் நமக்குவே றென்ன வேண்டும்?
உருப்போட்டு எண்ணிடிலோ தமிழ ரெல்லாம்
ஒன்றேனும் செய்தாரா உரிமைக் கென்று?
பொருளீட்டும் செல்வர்களும் உள்ளார் ஆனால்,
பொருள்வளத்தில் நாமுயரச் செய்த தென்ன?

"சரித்திரத்தில் மூத்தவன்தான் தமிழன்! அன்னான்
சங்கொலித்து வந்தவன்தான்; மலையம் தன்னில்
உரிமையுடன் கொடிகட்டிக் 'கடாரம்' என்றே
உயர்தமிழிற் சொல்லெடுத்து ஆண்ட வன்தான்!
தரித்திரத்தில் மூழ்கிவிட்டான் இன்றே!" என்றால்
தாங்குமன மில்லாமல் தவிக்கின் றேனே!
உரிமைக்குக் கலைக்கழகம் ஆய்வு மையம்
உருவாக்க இதுவரையில் செய்த தென்ன?

- இராச. சண்முகம்

## 252. எதிர்காலம் நமக்கும் உண்டு!

விண்வெளியை அமெரிக்கர் பிடித்தா லென்ன?
வேலையிலார் அதைப்பற்றி நினைத்தா லென்ன?
உண்பதற்கும் உடுப்பதற்கும் வழிதா னில்லை!
உறங்குதற்குப் பாயின்றி இருக்கும் போது
பொன்னகைகள் வேண்டுமென்று கேட்கும் பெண்ணே!
புரியாதா நாமிருக்கும் நிலைமை? மேலும்
பொன்னான காலங்கள் நமக்கிங் குண்டே
புலர்ந்தாலே சிந்திப்போம் நகையைப் பற்றி!

முட்டைக்குள் ஓருலகம் அடங்கி னாலும்
முருங்கைமரம் வளைந்துகொடுத் தாலும் வங்கி
வட்டியின்றிப் பணம்தரினும் வாழும் இந்த
வையமதில் வாடுமேழை துயரம் போமோ?
கிட்டாத பொருட்கெல்லாம் ஆசை வைத்துக்
கொட்டலாமோ கண்ணீரைப் பெண்ணே! நம்மின்
பெட்டிகளில் பணம்புரளும் காலம் தோன்றும்!
பொறுத்திடுவாய் எதிர்காலம் நமக்கும் உண்டே!

த. நேசன்
1988.2.7

- அ. பரிதி

## 253. வாரீர் இன்றே!

பஞ்சமிகு பூமியதாய் இலங்கி வந்த
பார்போற்றும் நாடுதனை விட்டே அன்று
சஞ்சியிலே வந்தீர்கள்! வந்தே இங்குச்
சாதித்த தென்னவெனில் ஒன்றும் இல்லை!
வெஞ்சமரின் கொடுமையிலே செத்தீர்; மேலும்
விரிநாடாய்ப் பெருநாடாய் ஆக்க எண்ணித்
துஞ்சாது நாளெல்லாம் என்பைத் தேய்த்துச்
சொர்க்கநில மாக்கிவிட்டீர்; ஆனால் உங்கள்

எதிர்கால வாழ்வுதனை என்றைக் கேனும்
ஏறெடுத்துப் பார்த்தீரா? இல்லை அய்யோ!
உதிர்கின்ற எண்ணங்கள் கொண்டு இங்கே
உட்கார மனமின்றித் தவிக்கின் றீரே!
அதிர்கின்ற இடியோசை போல மேடை
ஆடிடவே பேசுகின்றீர் போதும்! வானின்
கதிர்போலச் சம்பந்தன் காட்டுந் தூய
கனிவழியைப் பின்பற்ற வாரீர் இன்றே!

த. முரசு
1968.11.17

- வெ. இளங்கோ

## 254. முத்தமிழர்!

தமிழ்பேசின் வெறுப்போடு தலைதூக்கிப் பார்க்கும்
'டமிலறியான்' தனிவகையாய் வாழ்கின்றான்! முன்னாள்
கமழ்பெருமை சொன்னாலும் அவனறிவ தில்லை
காரணமோ தாய்அறியாக் கடையனென வாழ்வான்!
உமியொக்கும் புதுப்பண்பின் காவலன்நான் என்றே
உருக்கெட்டு மதிகெட்டு ஓடுகின்றான் சீச்சீ!
தமிழறியாக் கறுப்புத்தோல் துரையெல்லாம் கீழாய்த்
தன்னினத்தை மிதித்திடவே நலிகின்றான் நாயாய்!

பழம்பெருமை பேசிடுவார் ஒருவகையர்! மிக்க
படித்தவன்ஊர்க் குருவிஎனும் ஒருவகையர்! வாழ
வழிதேடாப் பாட்டாளி ஒருவகையர்! ஆக
வகைமூன்றாய் வாழ்வதனால் 'முத்தமிழர்' ஆனார்!
பழிசேர்க்கும் இவ்வகையை ஒற்றுமையே என்னும்
பாலத்தை உருவாக்கி ஓலத்தைப் போக்கி
நலத்தோடு வளத்தோடு நம்மினமும் வாழ
நல்லுள்ளம் கொண்டாரே! நாடிவினை செய்வீர்!

உ. த. ஆ. மா. ம. - 5
1981

- வீரமான்

# 255. மலைநாட்டில் எழுத்தாளர்!

எழுத்தாளர் கூட்டமொன்று மலைநாட்டில்
எழுந்ததுகா ணென்றே செப்பி
முழுப்பலத்தால் முரசொலித்து நாடெங்கும்
நற்பெருமை முழங்கச் செய்தோம்
வழக்குமனம் படைத்தோரு மிருக்கின்றார்
நம்முன்னே வம்பே பேசி
இழுக்காட்டிற் கழைக்கின்றா ரிலக்கியத்தை
இடர்ப்படுத்த என்னே விந்தை!

கொட்டையெழுத் தினில்பெயர்வந் தால்போதும்
என்றிங்கே குழப்பு வோர்கள்
மட்டியெனுங் குட்டையிலே ஊறிவரும்
மட்டைகளா? அல்ல வென்றால்
அட்டியின்றித் தமிழுக்காய் வறுமையுறும்
பாட்டாளிக் கறிவைச் சேர்க்கும்
பட்டியலைக் காவியமாய்க் கதையாயும்
கட்டுரைத்தும் தகைமை சேர்ப்பீர்!

மூக்கறுந்தான் முன்னவனைக் கண்டதுபோல்
முழக்கமிட அதனை நோக்கி
மூக்கறுத்துக் கொண்டோர்கள் முன்செயல்போல்
எழுத்தாளர் போதல் நன்றோ?
போக்கறியான் திசைமாறிப் போவதுபோல்
நம்முள்ளேன் வாக்கு வாதம்?
ஊக்குவிப்பீர் மனுவாழ்வை; நன்னெறியைப்
பரப்பிடுவீர் உலக முய்யும்!

தமிழேடு மலைநாட்டில் நடத்துகின்ற
தகையோரே! பகைமை தன்னை
இமியேனும் வளரவிடம் ஈயாமல்
எழுதிடுவோர் தீமை போக்கும்
தமிழெழுத்தா லிலக்கியத்தை நிலையாக்கித்
தலைசிறக்கும் வழிவ குத்தே
உமிநிகர்த்தார் செயலொழித்துத் தமிழ்காத்து
உலகநிலை உயரச் செய்வீர்!

நாகரிகம்
1952.8.25

- கா. பெருமாள்

# 256. முஜாஹிதீன்களுக்கு ஒரு சலாம்

மனுக்குலத்தின் வரலாற்றைப் புரட்டிப் பார்த்தால்
மனபலமே நிரந்தரமாய் வென்றி ருக்கும்
அணுக்குண்டும் அறிவியலும் பணமும் யாவும்
ஆர்ப்பரித்து நிற்பதெல்லாம் இடைக்கா லம்தான்
தனதுநிலம் அந்நியரால் கவரப் பட்டால்
தலைநிமிர்ந்து போராடத் துணியும் கூட்டம்
கனவினிலும் துவளாது வென்றே தீரும்
காட்சியையே ஆப்கானிஸ் தானில் கண்டோம்!

வியட்நாமில் அமெரிக்கன் கற்ற பாடம்
விவேகத்தைத் தரவில்லை ரஷ்ய னுக்குத்
துயில்கின்ற சிறுநிலம்தான் என்றே எண்ணித்
துணிந்துபெரும் படைதன்னை அனுப்பி விட்டான்
உயிரான சுதந்திரத்தை மீட்ப தற்கே
உயிர்போனால் போகட்டும் என்று சொல்லிப்
புயலாகப் புறப்பட்ட முஜாஹி தீன்கள்
புதியவர லாறங்கே தீட்டி விட்டார்!

உழைப்பிற்குச் சோம்பிநிற்கும் மக்கள் அல்லர்
உண்டுகொழுத் திருக்கின்ற மாக்கள் அல்லர்
பிழைப்பிற்கும் வழியற்ற ஏழை வர்க்கம்
பொல்லாத வறுமையிலே உழன்ற போதும்
அழைப்பின்றி நுழைந்துவிட்ட கரடிக் கூட்டம்
ஆதிக்கம் செலுத்துவதைக் கண்ட போது
விழிப்புற்றார் விழிபெற்றார் விரட்டி ஆங்கே
வீரத்தின் முத்திரையும் பதித்து விட்டார்!

தடித்தனமே போதும்இவ் வுலகை எல்லாம்
தன்அடியில் விழச்செய்யும் என்ற கர்வம்
நொடிப்பொழுதில் பலநூறு உயிர்கள் தீய்க்கும்
நுணுக்கங்கள் அறிந்துவிட்ட மமதை யோடு
பொடிப்பொடியாய் நொறுக்கிடுவோம் என்று ரைத்துப்
புறப்பட்ட டாங்கிவிமா னங்கள் எல்லாம்
இடுப்பொடிய வந்தவழி திரும்பும் காதை
இயற்றிவிட்டார் ஆப்கானின் ஏழைத் தோழர்!

தாயகத்தின் விடுதலைக்குப் பங்கம் வந்தால்
தியாகங்கள் செய்வதற்குத் துடித்தெ ழுந்தார்;
தூயமனம் கொண்டவராய் ஒன்று பட்டுச்
சூழ்ந்தபகைக் கூட்டத்தைத் தகர்த்தெ றிந்தார்;
தாய்மாரும் சேய்களுக்குப் பாலில் வீரம்
தோய்த்தளித்துக் களம்நோக்கி அனுப்பி வைத்தார்;
பேயாட்டம் போட்டவர்கள் பாய்ம டக்கிப்
பேசாமல் திரும்புகிறார் வீட்டை நோக்கி!

அரபாத்தின் தலைமையிலே பாலஸ் தீனம்
அமைவதற்கு வழிகோலும் அழகு வெற்றி!
பிரபாகர் தலைமையிலே தனித்த ஈழம்
பிறப்பதற்கு ஊக்கம்தரும் பெரிய வெற்றி!
பிறர்மீது ஆதிக்கம் செலுத்த எண்ணும்
பேதையரைப் பீதிகொளச் செய்யும் வெற்றி
உருவாக்கித் தந்தஎழில் முஜாஹி தீன்காள்!
உளமார்ந்த சலாம்உரைத்து வாழ்த்து கின்றோம்!

மைதீகவி. - மைதீ. சுல்தான்
1989

## 257. இனியேனும் வாழப் பார்ப்பீர்!

பொல்லாத காலம்நமைச் சூழ்ந்த நாளில்
போய்மாண்டார் நம்மக்கள் சீய[3]த் தின்கண்
வெள்ளையரின் ஆட்சியிலே வீழ்ந்தோர் எண்ணின்
விவரத்தை நாமறியோம்! வீணர் கூட்டம்
கொள்ளையராய் மாறியபின் கொன்ற மக்கள்
கொஞ்சமல்லர் நெஞ்சமெலாங் குமுறு தம்மா!
எல்லாவற் றிலும்போக எஞ்சி நிற்கும்
என்னன்பீர் இனியேனும் வாழப் பார்ப்பீர்!

த. நேசன் - வாசி. பாண்டியன்
1967

---

*3 சீயம் - சயாம் (தாய்) நாடு.*

# 258. உடலுக்குள் செங்குருதி

உடலுக்குள் செங்குருதி உணர்வூட்ட உள்ளத்தின்
உறக்கத்தைக் கலைத்துவிட்டேன் - மனத்
திடலுக்குள் விளையாடும் தேவையற்ற எண்ணமதைத்
தடம்தெரியா தழித்துவிட்டேன் - ஆசைக்
கடலுக்குள் நீந்திவரும் கற்பனையை ஒதுக்கிவிட்டுக்
கரையேறி வந்துவிட்டேன் - இனிக்
கடமைக்குள் இணையாகிக் கைத்தொழிலைத் துணையாக்கிக்
காலத்தை வெல்வேன்யானே!

ஒற்றுமைக்குக் குரல்கொடுத்தே உறுதியுடன் கைகொடுத்தே
உயரும்வழி தெரிந்துகொண்டேன் - மனம்
வெற்றுப்புன் பகட்டினாலே வேற்றுமைகள் காண்பதனால்
வீழ்ச்சியெனப் புரிந்துகொண்டேன் - தமிழ்
கற்றவரைக் கடமைநெறி காப்பவரைப் பேணுவதில்
களிப்புடனே இணைத்துக்கொண்டேன் - பின்
பற்றியேநான் செல்வதனால் பண்புநெறி காப்பதனால்
பார்புகழ வாழ்வேன்யானே!

பு. சமுதாயம் - பொன். சுமன்
1983, நவம்பர்

# 259. அமைப்புக்குள் வருக!

சங்கங்கள் வைத்திருக்கும் சமுதாயப் பேராளர்
சந்திப்(பு) அரங்கமாகச்
சிங்கங்கள் சிலகூடிச் செய்திருக்கும் ஏற்பாடு
செந்தமிழர் மாநாடாகும்!
இங்குள்ள எங்களிடை இருக்கின்ற பேதங்கள்
இற்றுவிழும் காளான்களே!
பொங்குதமிழ் வாழ்விற்கும் பொறுப்பான பணிக்கென்றும்
புத்துணர்வால் கூடுங்களே!

குறைகூறல் இனிவேண்டா குதர்க்கங்கள் வேண்டாநம்
கொள்கைக்கும் ஆள்கள்வேண்டும்!
நிறைவான பணிசெய்வோன் நெஞ்சுள்ள தமிழன்தான்
நிறம்பார்க்குந் தன்மைவேண்டா!
தரைதட்டிப் போனகலம் தண்ணீர்க்கு வரவேண்டும்
தமிழர்களே கைதாருங்கள்!
அறைகூவல் இதுவொன்றே ஆயிரமாய்ப் பிரிந்தவர்கள்
அமைப்புக்குள் வருகஇன்றே!

ம. த. மா. ம. - ஐ. இளவழகு
1978

## 260. விரைந்தெழுந்தே வாராய்!

அஞ்ஞான ஆழியிலே அமிழ்ந்திருந்தோ ரெல்லாம்
அறிவொளிரும் சாதனையால் அணிபெற்றார்; அன்றே
மெய்ஞ்ஞான நெறிபிறழா மேன்மையுடன் நின்று
விஞ்ஞான வளர்ச்சிக்கு வித்திட்ட நாமோ
எஞ்ஞான்றும் விடிவில்லா இழிவுகளில் மூழ்கி
எதிர்கண்டார் நகைப்பிற்கும் இலக்காகி விட்டோம்;
நெஞ்சாரக் கணமேனும் நினைத்திட்டால் உள்ளம்
நெருப்பாகிக் குமையுதடா நேயமிகு தோழா!

ஆண்டஇனம் என்றுதினம் ஆர்ப்பரித்தால் மட்டும்
ஆகிவாரா தெச்செயலும்? ஆதலினால் தோழா!
ஈண்டுநமைச் சூழ்ந்துறையும் இருளகற்ற ஒன்றாய்
இணைந்திடுவாய் மொழியின்கீழ் இன்றேநம் வாழ்வு
மீண்டுவர எளிதாகும் மேன்மையெல்லாம் கூடும்
வீரமிகு செந்தமிழா வினையாற்ற உன்னை
வேண்டுகிறேன்; குலங்காக்க விரைந்திடுவாய்; கொண்ட
வேதனைகள் போதுமினி விரைந்தெழுந்தே வாராய்!

மலாயா. - எஸ். எம். தீன்
1962

# 261. கொட்டடா தமிழர் முரசு!

கொட்டடா தமிழர் முரசு! கொள்ளடா ஆண்மை வீரம்!
எட்டடா என்போர் தம்மை எற்றடா துள்ளி நீயும்!
வெட்டடா இகழ்ந்தோர் தம்மை வீழ்த்தடா எதிர்ப்பா ரையும்
கட்டடா தமிழ்வ ளர்க்கும் கழகங்கள் வீதி தோறும்!

நில்லடா தமிழன் என்று! நீக்கடா நெஞ்சில் அச்சம்!
தள்ளடா சாதிப் பேயை! தாக்கடா மூடக் கொள்கை!
கொல்லடா நரிகள் தம்மை! குத்தடா சூழ்ச்சி யாவும்!
வெல்லடா பகைவர் தம்மை! விலக்கடா உலுத்தர் செய்கை!

ஓட்டடா சுரண்டு வோரை! ஒழியடா உயர்வு தாழ்வை!
நீட்டடா நெடுங்க ரத்தை! நினையடா சொந்த நாட்டை!
காட்டடா தமிழன் வீரம்! கனலடா என்று கூறி
நாட்டடா தமிழர் ஆட்சி! நானிலம் வியக்கும் வண்ணம்!

ஒடுக்கடா எத்தர் செய்கை! உயர்த்தடா தமிழர் வாழ்வை!
அடக்கடா அடக்கு வோரை! அடியடா நச்சுப் பாம்பை!
மடக்கடா மடமை எண்ணம்! வாழடா தமிழன் என்று!
'கிடக்கடா' என்றி ருந்தால் கீழடா நமது வாழ்வு!

யாரடா தமிழன் என்றும் எவரடா ஆண்டான் என்றும்
பாரடா சரித்தி ரத்தை! படியடா சுவடி யாவும்!
சீறடா படித்த பின்னர்! தீயடா பகைவர் என்று
கூறடா இனத்தி னர்க்கு! குறையடா வெட்டிப் பேச்சை!

“தமிழடா, அதுவே நமது தாயடா“! என்று கூறி
நமையடா காட்டிக் கொடுப்போன் நாயடா எனம தித்தே
உமிழடா அவன்மு கத்தில்! உணர்த்தடா பிறருக் கும்நீ!
நிமிரடா தலையை! நாட்டில் நிறுவடா தமிழர் ஆட்சி!

த. முரசு - சிங்கை முகிலன்
1952.1.7

# 262. விழித்துக்கொள்!

"வளங்குலுங்கும் இந்தமலை நாட்டில் நல்ல
வரவிருந்தும் வகைமறந்து வாழ்வார் உள்ளம்
நலங்குலுங்கும் உறவினுக்கும் நல்வாழ் விற்கும்
நல்வளர்ச்சி தந்துதவும் நலன்கள் தம்மில்
பலங்குலுங்கி வாழ்தமிழா!" என்று சொல்லும்
பழகுதமிழ்ப் பாட்டையிலே பண்பு துள்ளும்!
இளந்தமிழா! உனையருந்தும் நச்சுத் தண்ணீர்
இழப்பினுக்கா அருந்துகிறாய்? இன்பம் உண்டா?

காய்ச்சுகிற இனத்தாரைக் கருத்தில் தேக்கு!
கனிவாழ்வில் அவரிருப்பைக் கண்ணால் நோக்கு!
தூய்த்திலங்கும் அவர்வளர்ச்சிப் பொருளைக் கண்டால்
தூக்கமறும் விழிப்புவரும்; துடிப்பே இல்லார்
வாய்ச்சுவைக்கு மதுவருந்திக் களிப்ப தன்றி
வளர்சுவைக்கும் அதுவருந்திக் கெட்டார்; நம்நல்
தாய்மனத்தில் பெரும்பாரம்! தமிழா கெட்ட
சம்சு[4]க்காய்ப் பலர்சாதல் சரிதா னாமோ?

பொருள்பெருக்கும் எண்ணத்தார் புதுமை சொல்லிப்
பலசெய்வார் அதுநமது உணர்ச்சி தூண்டும்
பொருளழிக்கும்; தமிழாநீ எண்ணிப் பார்ப்பாய்!
புத்துலகில் நீபிறந்தாய்! புழுதி தன்னைப்
பொருளென்றே நீமூட்டை கட்டி வைத்தால்
'பூமியிலே நீயன்றோ பெரிய பித்தன்!
வரும்பொருளைக் காவாத நெஞ்சன்' என்னும்
வழக்கன்றோ உனைவீழ்த்தும் விழித்துக் கொள்வாய்!

த. நேசன் - இராச. சண்முகம்
1968.3.6

---

*4 சம்சு - கள்ளச் சாராயம்*

# 263. கல்வி வேண்டும்

எடுக்கின்ற பேர்க்கெல்லாங் கொடுக்கும்; வெற்றி
இசைக்கின்ற பேர்க்கெல்லாங் கிடைக்கும்; அன்பு
தொடுக்கின்ற பேர்க்கெல்லாஞ் சுரக்கும்; பண்பிற்
றோய்கின்ற பேர்க்கெல்லாம் பெருகும்; இன்பம்
படிக்கின்ற பேர்க்கெல்லாம் பயக்கும்; உள்ளம்
பகைக்கின்ற பேர்களையும் பிணைக்கும்; கல்லில்
வடிக்கின்ற எழுத்தைப்போல் அழியா நின்றே
வையமெலாம் நலம்பயக்குங் கல்வி தானே!

கற்றோரே மேலோர்கள்; மற்றோ ரெல்லாங்
கைகட்டிப் பின்செல்லற் குரிய ராவர்!
பெற்றோரும் பேருவகை கொள்வர் பிள்ளை
பேரறிஞன் எனப்பிறர்வாய் சொல்லக் கேட்டால்;
கொற்றவரு மெதிர்கொண்டே அழைப்பர், கோதை
குளிர்மணத்தை யாவர்க்கும் பரப்பு தல்போல்;
கற்றவரோ பேதமின்றி நாட்டுக் காகக்
கலைவாழ நிலையுயரப் பணிசெய் வாரே!

தாய்தன்னைத் தாயென்ற ழைப்ப தற்குத்
தயங்குகின்ற மனிதர்களு மிருக்கின் றாற்போல்
வாய்விட்டுத் தமிழரிடம் தமிழிற் பேச
மனமில்லாத் தமிழர்களு மிருக்கின் றாரே!
போய்க்கேட்டு நாளேடு இரவல் வாங்கிப்
புதுச்செய்தி படிப்போரு மிருக்கின் றாற்போல்
தாய்மொழியில் நாளேடு இருக்க வேற்றுத்
தனியேடு படிப்போரு மிருக்கின் றாரே!

நிதிவேண்டு மென்கின்றார் நிதியா வேண்டும்?
நிலைவேண்டும் நிலையுயர்த்துங் கல்வி வேண்டும்!
மதம்வேண்டும் என்கின்றார் மதமா வேண்டும்?
மதிவேண்டும் மதிவளர்க்குங் கல்வி வேண்டும்!
கதிவேண்டும் என்கின்றார் கதியா வேண்டும்?
கலைவேண்டும் கலைவளர்க்குங் கல்வி வேண்டும்!
பதராக வாழ்வதிலே பயனொன் றில்லை
பல்கலைசேர் நற்கல்வி பெறுதல் வேண்டும்!

த. நேசன்
1965.11.31

- மு. சேது

# 264. சேரவாரீர்!

'தமிழர்க்கா சீர்திருத்தம் அதற்கா சங்கம்?
சற்றுமிது பொருந்தாது; நாங்கள் எந்த
வகையினிலே தாழ்ந்துள்ளோம்? வையம் போற்றும்
மரபினிலே வந்தவர்தாம் யாங்க' ளென்று
மிகைபடவே தருக்கிடுவோர் சமூக வாழ்வின்
மேலெழுந்த புண்ணினையே மறைப்போ ராவர்
சமமான நற்றகுதி பெறவே வேண்டில்
தயங்காமல் நம்குறையை ஏற்க வேண்டும்.

'குறைபாடு உடையவனே மனிதன்' என்ற
கோட்பாட்டை யாவருமே ஏற்றுக் கொள்வர்;
'வருவீர்கள் அதையொழிப்போம்' என்றால் பொல்லா
வம்பர்களென் றேபலவாய்த் தூற்று வார்கள்;
சரிதானா? தமிழ்பேசும் மக்கட் கெல்லாம்
சீர்திருத்தச் சங்கம்மே பொருத்த மாகும்!
திரள்திரளாய் அதிற்சேர்ந்து நீவிர் ஆற்றும்
சேவையினால் நமதுநிலை உயர்தல் வேண்டும்!

பன்னாட்டு மக்களுமே வாழும் தீவு!
பலமொழியும் பலகலையும் வளரும் தீவு!
எல்லோரும் போற்றுகின்ற சிங்கைத் தீவு!
இதில்வாழும் நாம்மட்டும் இளப்ப மாகச்
செல்லரித்த இனம்போல இருக்க லாமோ?
சிந்திப்பீர்! குறைபோக்க நம்மி னத்தின்,
நல்லவழி காண்பிக்கும் உணர்ச்சி யூட்டும்
நற்றமிழர் சீர்திருத்தச் சங்கந் தானே!

சொந்தமனை யுண்டுஅறங் காவ லுண்டு;
சொக்கவைக்கும் நற்றமிழ்நூல் நிலைய முண்டு;
தந்தைபோல் பராமரிக்கும் பெரியோர் உண்டு;
தலைவர்கோ சாரங்க பாணி உண்டு;
சந்ததமும் அறிவின்வழி நிற்கும் எங்கள்
சங்கத்தின் உறுப்பினரோ பல்லோ ருண்டு
உங்களுடை நலன்களையே குறியாய்க் கொண்ட
ஒப்பற்ற சங்கமிதிற் சேர வாரீர்!

த. முரசு
1956.9.16

- ந. பழநிவேலு

## 265. புறப்படு!

உறக்கம் தெளிய வில்லையா? - இன்னும்
உலகம் புரிய வில்லையா?
பறக்கும் வான்கலம் ஏகுதே! - உலகப்
பயணம் விரைந்து போகுதே!

உளியை வாளியை நம்பினாய்! - உன்
உயிரைத் தானதில் சிந்தினாய்!
செம்பனைக் குலைகளைத் தூக்கினாய்! - பெரும்
செல்வம் இங்கே ஆக்கினாய்!

உனக்கெனக் கண்டதும் என்னவாம்? - அதை
உணரவும் தொடங்கிட வில்லைநீ!
கணினியால் உலகம் மாறுதே! - புதிய
கதைகளை அதுவும் கூறுதே!

இனிப்பழம் போக்குகள் செல்லுமோ? - கடும்
இருட்டிலே பார்வையும் வெல்லுமோ?
புறப்படு! புறப்படு! புறப்படு! - புதுப்
பாதைகள் கண்டிடப் புறப்படு!

மா. ப. வி. ம. - முரசு. நெடுமாறன்
1986

## 266. மக்கள் பாதை மலர்கிறது!

மக்கள் பாதை மலர்கிறது! - தமிழ்
மனத்தின் கதவு திறக்கிறது!
தக்கார் பயணம் புலர்கிறது! - செந்
தமிழீ ழப்படை திரள்கிறது!
எக்கா லத்திலும் அடிபணியோம்! - நாம்
என்றே புலிக்கொடி பறக்கிறது!
பக்கம் எலாம்தமிழ் கமழ்கிறது! - இனப்
பகைவரின் சதியை உமிழ்கிறது!

ம. பாதை (சென்னை) - இர. ந. வீரப்பன்
1983, செப்டம்பர்

## 267. தடைவிதிப்போம் வா!

கணினிசெய்யக் கருத்தரங்கம் நடத்து தல்நன்று - பழங்
கதைகள்பேசிக் களித்திருக்கக் காலம் இதுவன்று!
அணியணியாய் அறிவியல்நூல் மொழிபெ யர்க்கலாம் - ஆக்கும்
அறிவுகொண்டால் தம்பிநீயும் கடைவி ரிக்கலாம்!
விடைகொடுப்போம் வா - தீய
வினைகளுக்கும் சினைகளுக்கும்
தடைவிதிப்போம் வா!

தமிழ்படித்தால் சோறிடுமா? தமிழன் கேட்கிறான்! - பெற்ற
தாய்மொழியை நினைப்பதற்கும் கூலி கேட்கிறான்!
தமிழ்வளர்ச்சி நினைப்பவனோ மூட்டை சுமக்கிறான் - இன்பத்
தமிழைச்சொல்லிப் பிழைப்பவனோ நாட்டைக் கெடுக்கிறான்!
விடைகொடுப்போம் வா - தீய
வினைகளுக்கும் சினைகளுக்கும்
தடைவிதிப்போம் வா!

- முருகதாசன்

## 268. வழிகாண்போம்!

சுதந்திர தேவி! அருந்தவப் பாவாய்!
இதந்தரு நின்னை ஏழையேம் அடைய
அரும்பெரும் முயற்சி செய்தே அயர்ந்தோம்!
ஒருவழி காணோம்! உலகம் போற்றத்
திருவுங் கல்வியும் செழித்த நாட்டை
வறிய தாக்கி வருத்தினர் வெள்ளையர்;
பஞ்சை மக்களைப் படுகொலை செய்தனர்;
எஞ்சி நின்றோர் துஞ்சினர் சிறையில்;
ஆயுத மில்லா அநியா யத்தால்
காயித வாயிலாய்க் கதறினோம் அம்மா!
ஆயினும் இன்று ஆசிய நண்பன்
தாயினும் பரிவுள தயாள நிப்பன்[5]

---

*5 நிப்பன் - ஜப்பான்*

படைவலி யாலே பாரத தேவி
தடையினி ஏது மின்றி
அடைவோம் சுதந்திரம்! அடைவோம் நாமே!

சு. இந்தியா - ந. பழநிவேலு
1942.4.13 (2602.4.13 சப்பானியர் ஆண்டு)

## 269. தகராறு

தகராறு வகையென்ன தொகையென்ன என்று
தனிக்கணக்குத் தொகுத்துவிடத் தாளெடுத்தேன்; சின்னத்
தகராறு முதன்முதலில் சிந்தனையில்! பிறகு
தனித்தனியாய்ப் பிரிப்பதிலே தகராறு! எதிலும்
தகராறே இல்லையெனில் சப்பென்று போகும்
சாப்பாட்டில் உப்புப்போல் சுவைகூட்டக் கொஞ்சம்
தகராறும் வாழ்க்கையிலே அங்கங்கே தேவை!
சரியப்பா எவ்வளவு தகராறு தேவை?

வருகின்ற தகராறு! எப்போதோ நமக்குள்
வந்துவிட்ட தகராறு! அனைத்தையும் தொகுத்துக்
குறைகண்டு களைதற்குக் குழுவொன்று சேர்த்தோம்;
குழுக்கூட்டம் கூடாத குறையால்தக ராறு!
சரியென்றே ஒருநாளில் கூடியது கூட்டம்
தலைவரொரு சிலநிமிடம் தாமதமாய் வந்தார்;
முறையென்றால் எல்லார்க்கும் பொதுதானே, கேள்வி!
மூன்றுமணி முடிந்ததய்யா எதுவும்முடி வில்லை!

சங்கத்தில் மன்றத்தில் இயக்கத்தில் தோன்றும்
தகராறு கிடக்கட்டும் சவாலொன்று வைப்பேன்;
சங்கத்தின் தலைவரோநம் சமூகத்தின் தலைவரோ
சவாலிதனை ஏற்றுவந்து சமாதானம் செய்க!
எங்கள்வீட் டில்தாய்க்கும் மனைவிக்கும் ஏதோ
ஏழாண்டாய்த் தகராறு! எனக்காகக் கொஞ்சம்
உங்கள்வீட் டைப்போல உதவிசெய்க! என்றே
ஒவ்வொருவர் வீடாக அடுத்தடுத்துப் போவோம்!

த. ஓசை - கரு. திருவரசு
1987.4.19

## 270. என்ன வாழ்க்கை!

மானமது போனபின்பு வாழ்வதென்ன வாழ்க்கை!
மண்டியிட்டுக் கால்பிடித்து வாழ்பவனோர் பேதை!
ஊனுயிரைப் பிரிந்தாலும் மானநெறி பிரியேல்
உயிர்த்தமிழுக் கூறுசெய்வார் யாரெனினும் துறவாய்
கானலையும் கொடுவிலங்கு போலஅலை யாதே
கண்ணியனாய்ப் புண்ணியனாய் வாழமற வாதே
பூணுநெறி பொன்னெறியாய்ப் போற்றிசெய்து வாழ்வாய்
பொன்றாது தினமுழைத்துப் பெருமையுற வாழ்வாய்!

- டி. எம். சாகுல் அமீது

## 271. மானம் காக்கும் கூட்டுறவு

குடியிருந்த தோட்டத்திலே குடியுரிமை வழங்கவந்த
குப்பனைநீ விரட்டியதும் ஏனையா? - இன்று
குடிசைக்காக அலைவதுதான் வேலையா?

பஞ்சையான நேரத்திலே பார்த்துவாழ வேண்டுமென்றால்
சஞ்சிக்கதை தேவையில்லை தானய்யா! - நம்
சஞ்சலங்கள் தீரவேண்டும் காணய்யா!

கூட்டுறவுத் தோட்டத்திலே கொள்கையோடு வாழுதற்கு
மாதம்பத்து[6]ச் சேர்த்துநீயும் பாரய்யா! - நம்
“மானம்காக்கும் கூட்டுற”வைப் பேணய்யா!

கூட்டுறவு - மாயவன்
1983. ஜூலை/ஆகஸ்டு

---

*6 மாதம் பத்து - ஒரு பங்கின் விலையான நூறு வெள்ளித் தொகையை மாதத்திற்குப் பத்துவெள்ளி வீதம் செலுத்தும் திட்டம்.*

## 272. உயர்வடைதல் வேண்டும்!

சொந்தமொழி பண்பாடு இவற்றை விற்றுச்
சோற்றுக்குத் தேடுவதே பெரிதென் றெண்ணி
வந்தவர்கள் போனவர்கள் பின்னே சென்று
வாய்பொத்திக் கைகட்டி மானம் விட்டு
வந்தனைகள் பலசெய்து வாழ்த்தும் கூறி
வாழ்கின்றார் தமிழர்பலர்; இனத்தைக் காக்கும்
சிந்தனைகள் ஏதுமின்றித் தாங்கள் வாழச்
சிறப்பான வழிதேடி அலைகின் றாரே!

வேறு

இப்படியே நாள்தோறும் பெருகுகின்ற காட்சி
இல்லாது மறைந்தேக உழைத்திடுதல் வேண்டும்!
எப்படியோ வாழ்ந்தோமென் றில்லாது நாட்டில்
எண்ணிறந்த செயல்முடித்துப் பெருஞ்செல்வம் சேர்த்தே
இப்படித்தான் வாழ்வதென்று மற்றவர்க்குங் காட்டி
இனம்காத்து மொழிகாத்துத் தன்மானம் காத்துச்
செப்படியால் தமிழழிக்க நினைப்போரை வென்று
சீர்பெற்றுத் தமிழரெலாம் உயர்வடைதல் வேண்டும்!

கிள். வெள். - மு. கந்தன்
1977

## 273. கணினியில் தமிழ் வாழ்க!

மணிமொழியாம் செந்தமிழைக் கணினியிலே புகுத்தியதற்(கு)
அணிசேர்த்த தமிழா!நின் பணிதொடர வாழ்த்துகிறோம்!

வானகத்துக் கோள்களையும் மண்ணகத்தின் இயல்களையும்
கானகத்தின் எழில்களையும் கனித்தமிழில் விளக்கிடுக!

தொழில்நுட்ப முறையெல்லாம் சுடர்தமிழில் கற்றறிய
வழிசெய்து சமுதாயம் வளங்காணச் செய்திடுக!

பள்ளியெங்கும் கணினிகளைப் பாவிக்கத் தந்துதமிழ்ப்
பிள்ளைகளின் உயர்விற்குப் பேருதவி செய்திடுக!

செந்தமிழின் உயர்வினையும் சீரினையும் வையமெல்லாம்
வந்தனைகள் செய்திடவே வழிவகைகள் கண்டிடுக!

1987.11.16 - மு. ஆசைத்தம்பி

# 274. திருந்த வேண்டும்

அழுத்தமுடன் எண்ணியதை அப்படியே
கூறுதற்கு அஞ்சு வோரும்
எழுத்துலக மேம்பாட்டை இடித்தெறியப்
புறங்கூறி வாழு வோரும்
உலுத்தநிலை கொண்டோரும் உண்மைக்குத்
திரைபோட்டு மூடு வோரும்
நிலைத்தபுகழ் நீடுலகில் நிச்சயமாய்ப்
பெறமாட்டார் என்ப துண்மை.

ஓடுகின்ற பொழுதெல்லாம் ஒவ்வொன்றை
மனிதனுக்(கு) உணர்த்திக் கொண்டே
ஓடுகின்ற தென்பதனை உய்த்துணர்ந்து
நுண்ணறிவால் தெளியக் கூடும்;
கேடுகெட்ட சமுதாயம் கிழட்டுநடை
போட்டறிவு வாசற் கதவை
மூடிவிட்டுத் தவிக்கின்ற மூளையற்ற
காரணத்திற் கெவரே சாட்சி?

எடுத்துவைக்கும் அடியெல்லாம் எழுச்சிமிக்க
நல்வாழ்வுக் குரமே யாகி
முடித்துவைக்கும் தொண்டெல்லாம் முத்தமிழைப்
போலென்றும் நிறைவு கொண்டால்
அடுத்துநிற்கும் பேரழிவு அக்கணமே
அகன்றுவிடும்; மாயைப் பேயும்
விடுத்துநமை விட்டகன்று விரைந்தேகும்
வியனுலகம் பொன்னாய் மாறும்!

மாயை
1967 - இரா. பெருமாள்

## 275. வெற்றுரை ஒழிய வேண்டும்

வாணிகம் பெருக வேண்டும்; வளர்கலை சிறக்க வேண்டும்;
வீணிலே காலம் போக்கும் வெற்றுரை ஒழிய வேண்டும்;

கல்வியில் என்றும் சிந்தை கனிவொடு பதிய வேண்டும்;
புல்லிய செயல்கள் ஓடப் புதுமைகள் பூக்க வேண்டும்!

பள்ளியில் தமிழக் கல்வி பாங்குடன் தொடர வேண்டும்;
தெள்ளிய மனத்தால் பண்பைத் திறமுடன் காக்க வேண்டும்;

உறுதியும் உழைப்பும் என்றும் உள்ளத்தில் உறைதல் வேண்டும்;
குறையெலாம் நீங்க வெற்றிக் கொடியினை ஏற்ற வேண்டும்!

த. நேசன்
1984.2.12

- ஜி. பி. லாசரஸ்

## 276. வீண்பேச்சு விட்டிடுவீர்!

கதைபேசித் திரிகின்றீர் காலம் நேரம்
கருதாமல் வாழ்நாளைக் கழிக்கின் றீரே!
எதையெதையோ பேசுகின்றீர் எனினும் என்ன?
இருக்கின்ற நிலைமாற்ற நினைத்த துண்டோ?

தெருத்தோறும் தொகைதொகையாய்க் கூடு கின்றீர்
திரைநடிகர் தம்சிறப்பைப் பேசு கின்றீர்
உருப்படியாய் உலகநலம் உயர்வு பற்றி
உளமார எண்ணியதும் உண்டோ சொல்வீர்?

கொலைகொள்ளை பற்றியதே எங்கும் பேச்சு
கொள்கையைப் பற்றியதாய்க் காணேன் அந்தோ!
கலைபற்றிப் பேசுவோரும் காணேன் இந்தக்
கவினுலகம் நிலையற்ற தென்கின் றீரே!

பல்லிவிழும் பலன்பற்றிப் பேசு கின்றீர்;
பதறிப்போய்ப் பஞ்சாங்கம் தேடு கின்றீர்
சொல்லிவைத்தாற் போல்நாளும் கூடு கின்றீர்
சூதாட்டக் களங்காணச் செல்லு கின்றீர்!

வீண்பேச்சு விட்டிங்கு விளைவு பற்றி
விரிவாக நாம்ஆற்ற வேண்டும் தொண்டு;
கூன்பேச்சுக் குடிப்பெருமை தனைக்கெ டுக்கும்
கொடுநஞ்சு என்பேன்நான் குறித்துக் கொள்வீர்!

சமுதாய நிலையெண்ணிப் பாரீர்! நும்மைச்
சாக்காட்டுக் குப்பின்னும் பாரி லுள்ளோர்
அமைவாக நினைத்திடவே வேண்டும் என்னில்
ஆயிரந்தொண் டாற்றிடவும் வேண்டும் நன்றே!

த. முரசு
1969.4.6
- பொன்முடி

# 277. ஜெய் ஹிந்த்!

ஆயிரம் இன்னல் சூழ்ந்திட் டாலும்
அணுக்குண் டென்தலை வீழ்ந்திட் டாலும்
'ஜெய்ஹிந்த் ஜெய்ஹிந்த்' என்றே சொல்வேன்;
செத்து மடியினும் வேறொன்றும் சொல்லேன்! (ஆயிரம்)

புனித மான தேசிய சேவை
புரிந்திட வேநாம் அனைவரும் கூடி
அணிவகுத் தேநல் போர்க்கொடி தாங்கிப்
பணிய வைப்போம் பறங்கியர் ஏங்க! (ஆயிரம்)

எங்கள் நாட்டார்க் கின்னல் செய்வோர்
எந்த நாட்டா ராயினு மென்ன?
பங்கப் பட்டவர் போகும் வரையும்
பாய்ந்தெ திர்த்தே தாக்குவம் வாரீர்! (ஆயிரம்)

1942
- சிங்கை முகிலன்

## 278. முரசு கொட்டடா!

முரசு கொட்டடா! - வெற்றி
முரசு கொட்டடா!

அறமு ரைத்த பாரதத்தின்
அமைதி வாழ்வு குலைக்கவந்த
அரக்கன் வாழ்வு பட்டதென்று (முரசு)

படைப லத்தால் பாரதத்தின்
பண்ப ழிக்கும் திட்டமுற்றும்
பகற்க னவாய் விட்டதென்று (முரசு)

வெற்றி கண்ட பாரதத்தின்
விடுத லைமுன் தீயசக்தி
வெலவெ லத்தே ஓடுதென்று (முரசு)

கத்தி ஏந்தித் தாயகத்தைக்
காக்கும் பணியில் உயிரைநீத்த
காவல் வீரர் வாழ்கவென்று (முரசு)

- கே. கனகசபை

தே. தூதன்
1962.12.30

## 279. ஒன்றித்து உயர்வீர்!

மழைவளம் செறிந்த மலேசிய நாட்டில்
வளமுடன் வாழும் மாண்பினீர் கேண்மின்!
ஒற்றுமை பேணி உயர்வுடன் வாழ்வீர்!
கற்றவர் தம்மைக் கருத்துடன் போற்றி
உற்றவர் சுற்றம் ஊரவர் எவர்க்கும்
பற்றுடன் உதவிடும் பக்குவம் பெறுவீர்!
நாட்டுப் பற்றுடன் தாய்மொழிப் பற்றும்
தேட்டமாய்ப் பேணித் திருவொடு வாழ்வீர்!
ஈதல் அறத்தின் இசைப்பெரும் பாங்கு
காதல் தமிழர் அகத்துறைப் பண்பு

வீரம் நமது பரம்பரை மாண்பு
மேவி மலேசியப் பொதுக்கலை புதுக்கி
நவத்துறை நாளும் தேர்ந்து படைத்து
வாழும் வாழ்விலோர் மகத்துவம் சேர்ப்பீர்!
சூழும் நந்நலச் சுடர்நலம் பரப்பி
இன்புற் றென்றும் இனிதாய் வாழ்வீர்
அன்பிற் சிறந்த அருந்தமிழ் இனத்தீர்!
மொழியும் இனமும் கண்கள் நமக்கு!
விழியும் அதனுயர் பார்வையும் போல
ஒன்றித்து உயர்வீர் உயர்நலம் பெறுவீர்!
வென்றியே சேர்ப்பீர் மேன்மையுண் டாமே!

- கரு. முத்துவேல்

## 280. மாதச் சம்பளம் வேண்டும்

கள்ளக் குடியேற்றக் காரர்வர வாலின்று
உள்ள தொழிலாளர் உரிமை தேய்கிறது!
கொள்ளை லாபத்தைக் கொள்ள முதலாளி
கொள்ளும் தந்திரமே கள்ளக் குடியேற்றம்!
கள்ளக் கதவை மூடுங்கள்! - எமக்கு
நல்ல சம்பளம் தாருங்கள்!

மட்டச் சம்பளத்தில் பிள்ளை களையந்தப்
பட்டப் படிப்புவரை இட்டுச் செல்வதேது?
கட்டுப் படியாகாக் காசில் மாடிவீடு
கட்டி வாழுவது கூடும் காரியமோ?
மாதச் சம்பளம் வேண்டும்! - கள்ளப்
பாதையை அடைக்க வேண்டும்!

தோட்டத் தொழிலாளர் தோட்டம் விட்டுநகர்
காட்டும் அழைப்பிற்கு ஓட்டம் போடுவதோர்
குற்றம் எனச்சொல்லிக் குமுறும் முதலாளி
ஏற்றச் சம்பளத்தை அன்றே கொடுத்திருந்தால்
தோட்டத்தை விட்டுப் போவாரோ? - யாரும்
தோட்டத்தை விட்டுப் போவாரோ?

காலம் மாறியதே! காடும் வீடாகி
நாலா புறத்தும் நல்லழகு காட்டிடுதே!
காலங் காலமாக உளியைப் பிடித்தவர்கள்
வாழ வழிகேட்டால் கோலங் காட்டுவதா?
மாதச் சம்பளம் வேண்டும்! - பொய்மை
வாதங்கள் எமக்கு வேண்டா!

கரத்தில் மண்படாத கூட்டமெலா மின்று
காடிவீடு வாங்கிக் களித்திடுதே! நிலத்தில்
இரத்தம் சிந்தியவர் ஏக்கப் பெருமுச்சோ
என்றும் கடலோசை எனவே நீள்கிறதே!
இதயம் அமைதியுற வேண்டும்! - எமக்கு
மாதச் சம்பளம் வேண்டும்!

த. ஓசை
1985.12.22

- ம. அ. சந்திரன்

## 281. சொல்லாத சொல்ஒன்றைச் சொல்!

சொல்லியதைச் சொல்லியே சோர்வுற்ற தென்னவனின்
செல்ல மகளே! செழுமலரே! - பல்முளைத்து
வெல்லத் தமிழ்பேசும் வேளையிலே நீயேனும்
சொல்லாத சொல்ஒன்றைச் சொல்!

த. மலர்
1967.4.9

- புனிதவதி மாணிக்கம்

## 282. முழங்கு முரசே முழங்கு!

சாதி தொலைந்தால் தமிழர் படுந்தொல்லை
பாதி தொலையும்! பகுத்தறிவால் - ஆதி
பழக்கத்தை ஆராய்ந்து பண்பையே கொள்ள
முழங்கு முரசே முரசு!

த. முரசு
1961.4.12

- இரா. தம்பியையா

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"கோதுபடா மாங்கனியாம்! கொய்துபடாத் தேன்மலர்!
தீதுபடாச் சித்திரமாம்! தெய்வமங்கை போல்வரும்!
மாதுமேனி மீதுலாவி மாண்புகொண்டு மேலெழும்
ஏதுகிலே! ஏதுகிலே! யாதுதவம் செய்தனை?

- காரைகிழார்

அ காதல்

# 283. காதல்

எத்திசையைப் பார்த்தாலும் காதற் காட்சி!
இல்லையெனில் இங்கேது கடவுள் ஆட்சி?
சத்திரத்தில் சாலைகளில் சன்னல் ஓரம்
சந்தடிகள் குறைந்திருக்கும் சோலை யோரம்
நித்தநித்தம் காதலெனும் மலர்கள் பூக்கும்!
நெஞ்சத்தை மன்மதனின் கணைகள் தாக்கும்!
கத்திவிழி பாய்ந்ததனால் வந்த காயம்
காதலிலே எல்லோர்க்கும் விழுப்புண் ஆகும்!

முதற்காதல் என்பதொடு பலரின் வாழ்க்கை
முடிவடைந்து மண்ணுக்குள் புதைந்து போகும்!
முதற்காதல் நினைவுகளில் மூழ்கும் போது
முள்ளொன்று தைப்பதுபோல் உள்ளம் நோகும்!
முதற்காதல் நெஞ்சத்தில் இட்ட பார்வை
முத்திரைகள் நெடுங்காலம் நிலைத்து வாழும்!
முதற்காதல் சிலர்நெஞ்சில் பயத்தி னாலே
முகம்காட்ட முடியாமல் அழிந்து போகும்!

கண்டவுடன் சிலருக்கு வந்த காதல்
காற்றடித்த மேகம்போல் கலைந்து போகும்!
முண்டிவந்த காதலெனும் பெருந்தீ ஆசை
முடிந்தவுடன் சிலர்நெஞ்சில் அணைந்து போகும்!
வண்டைப்போல் வந்தவர்மேல் வைத்த காதல்
வாலிபத்தைப் பாழாக்கி வளர்க்கும் மோதல்!
விண்டுரைக்க முடியாத சோக கீதம்
விம்மல்கள் கண்ணீரே பலர்க்குக் காதல்!

புத்தகத்தில் நாடகத்தில் திரைப்ப டத்தில்
பொய்யாக உலவுகின்ற பாத்தி ரத்தில்
புத்திவைத்துக் காதலென்று புலம்ப லாமோ?
போலிகளை மெய்யென்று நம்ப லாமோ?
கத்தரிக்காய் வியாபாரம் அன்று காதல்
கடைத்தெருவில் மலிவாகக் கிடைப்ப தற்கு!
சத்தியத்தின் சாரமது! சதைப்ப சிக்குச்
சமயத்தில் தேடுகின்ற தீனி யன்று!



- க. து. மு. இக்பால்

# 284. பயிலாத பாடம்!

கண்ணுக்குள் கண்படிய நெஞ்சம் தாவிக்
கையோடு கையிணையப் புலன்கள் ஐந்தும்
பெண்ணுக்கும் ஆணுக்கும் மயங்கி நிற்கப்
பேசாத மொழிபிறக்கும் அதுதான் காதல்!
மண்ணுக்கும் விண்ணுக்கும் காதல் என்பார்!
மழைதானே அதற்குமொரு தூதாம் என்பார்!
பண்ணோடு தாளந்தான் காதல் கொண்டால்
பாங்கான பாட்டொன்று பிறக்கும் என்பார்!

மனநிலத்தில் ஓருருவை விதைத்து விட்டால்
மரமாகிக் கனிவதுதான் வெற்றிக் காதல்!
இனப்பெரியோர் தடுத்தாலும் சாவில் கூட
இணைபிரியோம் என்றிருத்தல் அழியாக் காதல்!
தனிநலத்தால் மேலழகில் நாட்டம் வைத்துத்
தடுமாறல் இக்காலப் பொய்மைக் காதல்!
மணம்எடுத்து மலர்தாவும் வண்டு போன்று
மாறுவதோ காதல்? அன்று, காம வேட்கை!

உயிரினங்கள் ஒவ்வொன்றும் காதல் செய்ய
உருவான மேடையன்றோ இந்த வையம்!
பயிரான ஒவ்வொன்றும் காதல் தந்த
பரிசன்றோ? மறுப்புண்டோ? மற்றென் சொல்ல?
கயிற்றுடனே இணைப்பான கட்டில் போன்று
கலந்துவிடும் 'கட்டில்'தான் உயிர்கள் தோன்றும்!
பயிலாத இப்பாடம் மாந்த ருக்குப்
பகுத்தறிவில் உருவாகும் விலங்குக் கன்று!

இயங்காத மெய்யெழுத்தை இயக்கி வைக்கும்
ஏற்றமுள்ள உயிரெழுத்தாய் ஒருத்தி வந்தால்
முயங்காத ஆடவரும் உண்டோ? ஆங்கே
முகிழ்ப்பதுவே உயிர்மெய்யை மொழியும் காதல்!
மயங்காத நெஞ்சுக்கும் மயக்கம் ஏற்றும்
மதுவாகும் காதல்இதை மறுப்பார் உண்டோ?
தயங்காமல் காதலிப்போம் கடவுள் கூடத்
தடைபோடார் அவரறிவார் காதல் 'சக்தி'!

முத்துக். - ஐ. உலகநாதன்

# 285. தெய்வ ஓவியம்!

சோதிவண்ணக் கண்கள்கொண்ட தோகைவண்ணப் பூமயில்!
சாதிவண்ணப் பூத்தொடுத்த தையல்வண்ணக் கோமளம்!
ஆதியந்த மற்றவந்த அரன்வடித்த பொற்சிலை!
கோதிலாத அன்புவண்ணங் கொண்டுவந்த கோகிலம்!

உலைக்களத்தில் செய்திடாத உண்மையான பொற்குடம்!
இலையிலாத கொடிநிகர்த்த இணையிலாத நுண்ணிடை!
கொலைக்களத்தும் கலங்கிடாத கூர்மைகொண்ட வேல்விழி!
இழைத்தெடுத்த பொற்சிலையே எனப்பிறந்த நாயகி!

பொங்குவண்ணச் செங்கரும்பின் சாறெடுத்தே ஊட்டுவாள்!
அங்கமெங்கும் தங்கம்மின்னும் இன்பவண்ணங் காட்டுவாள்!
மங்குமாலைப் பொழுதிலென்னை மருவுதென்ற லாகுவாள்!
தங்கவண்ணச் சுனையிலாடும் தகைமையான தையலே!

அடியெடுத்து நடக்கும்போதில் அழகுரதம் தோற்றிடும்!
தொடிக்கரங்கள் தொட்டபோதில் தொல்லையெல்லாம் பறந்திடும்!
இடியிலாத வானம்மீதி லெழுந்ததிங்கள் பூமுகம்!
நொடியிலாத சாலையன்ன வகிடெடுத்த வார்ப்படம்!

நாகமென்னும் வண்ணமாடும் மேகவண்ணக் கார்குழல்!
தாகமென்னும் பொழுதிலென்றன் தாகமோட்டும் பூம்பொழில்!
ஏகவண்ண மாகமின்னும் தேசுவண்ணச் சித்திரம்!
மோகவண்ண இசைமுழங்கும் பாவைவண்ண நித்திலம்!

அஞ்சுகத்தின் அலகுபோலு மமுதமூறும் செவ்விதழ்!
அஞ்சியஞ்சிப் பார்க்கும்மானின் அழகுதூங்கும் மெல்லுடல்!
வஞ்சியென்ற போதுமங்கு வஞ்சியாத பொன்மனம்!
கொஞ்சிக்கொஞ்சிப் பேசும்போதில் கொஞ்சுங்கிள்ளை முன்வரும்!

எண்ணியெண்ணிப் பார்க்கும்போதி லிதயமெங்கும் பூமணம்!
என்னிலொன்றி நின்றுவந்த இன்பமங்கை பாமணம்!
கண்ணிலொன்றி நிற்குமன்புக் கலைவளர்த்த காவியம்!
மண்ணில்வந்து மங்கையாக மலர்ந்ததெய்வ ஓவியம்!

த. முரசு
1973.7.29

- இரா. பாண்டியன்

# 286. மலர்மங்கை

தலைவன் : பொய்கைப் புனலாடிப் புண்பட்ட மேனிக்குத்
தொய்யில் எழுதும் சுடர்க்கண் மடநல்லீர்!
பூவில் தேனலைகள் பொங்குமிளஞ் சோலையிலே
சீவிக் குழல்முடித்த செந்தூரச் சிலைகண்டு
கட்டிக் கரும்பழகைக் கால்முளைத்த வெண்ணிலவைத்
தொட்டுத் தழுவியுடற் சுகங்காணும் ஆசையினால்
தோழியினால் ஆகுமெனத் துடியிடையாள் உனைநண்ணி
ஆழியிலே பிறவாத ஆணிமுத்தை யான்கேட்ப
'மேகமது தழுவாத வெள்ளிநிலா இவள்மேனி!
தோகைதனை விரிக்காத சோலைமயில் இவள்நெஞ்சம்!'
என்றெல்லாம் சொல்லியெனை ஏங்கவிட்டுப் பின்னாளில்
வண்டாடுஞ் சோலையிலே மங்கையினைக் கூட்டிவிட
ஆவின் மடிமோதும் ஆசையிளங் கன்றாகக்
கோவை யிதழ்சுட்டுக் கொடியிடையை எனதாக்கிக்
கூந்தலினைக் கோதிக் குளிர்முகத்து நீர்நீவிக்
காந்த விழிக்குளத்தைக் கனியிதழால் நீராட்டித்
துங்கமணிப் பொன்மேனி துலங்குதுகில் தான்நீவ
நங்கையவள் கொங்கையிலே நகக்குறியைக் கண்டேனே!
என்னென்பேன்! என்னென்பேன்! ஏலக் குழல்மாதைக்
கன்னியெனச் சொல்லியெனைக் கண்கலங்க விட்டாயே!
சித்திரப் பூங்கொடியே தேன்சிந்தும் கிளியேநீ!
செத்தாலும் இப்பாவம் தீராதே அறியாயோ?

தோழி : கள்ளவிழாத் தாமரையைக் கரைமாங் கிளையுடைக்கப்
புள்ளினங்கள் வான்நோக்கும் பொய்கை வளநாட!
பொறிவண்டார் முகையன்ன பொங்குமலர்க் கொங்கைநகக்
குறிவந்த காரணத்தைக் கூறுகிறேன் நீகேளாய்!
கன்னல் வனந்தாண்டிக் கடுகிவரும் தும்பிக்குப்
புன்னை அமுதூட்டும் புனஅந்தி மாலையிலே
வாடிச் சுருங்காத மலர்கொய்ய மனமாகிச்
சேடியர்கள் புடைசூழச் சென்றிருந்தாள் ஓர்வனத்தே;
எண்ணார்ந்த பூமரங்கள் இலங்குவனம் உட்சென்றே
அண்ணாந்து பார்த்தாலோ ஆகாயம் தெரியாது!
அவ்வளவில் அடர்ந்தவனம்! அழகுமலர் பூத்தவனம்!

செவ்விளநீர்க் காய்கள்தமைத் தேக்குமரம் தாங்கும்வனம்!
மாதுளமும் சண்பகமும் சந்தனமும் மாமரமும்
மாதவியில் பாதிரியும் மல்லிகையில் முல்லைகளும்
சேர்ந்திருக்கும் இளையவனம்! தேனருந்தும் வண்டுகளோ
ஊர்ந்துவந்த வழியறியா(து) ஊளையிடும் மாயவனம்!
அந்த வனந்தனிலே அன்னநடைப் பாவையர்கள்
கந்த மலர்களெல்லாம் கனிவாய்ப் பறித்தார்கள்
மாதரெலாம் பூவெடுக்க மைபொழியும் வண்ணவிழிக்
கோதையிவள் உன்நினைவால் கொடியோடு கொடியானாள்!
நெட்டகத்தி நுதலாக நெடுங்குமிழும் மூக்காகக்
கட்டவிழ்ந்த கஞ்சமலர் கன்னியிவள் முகமாக
வள்ளை செவியாக மணித்துளசி இமையாக
முள்ளில்லாச் செம்பருத்தி முன்கன்னக் கீற்றாக
அல்லிமலர் வாயாக அந்துவரே இதழாக
முல்லையது பல்லாகி முத்திற்குப் பகையாகக்
கரும்பு தோளாகக் கமுகமது கழுத்தாகக்
குரும்பை காய்த்தெழுந்து கூத்தாடும் தனமாகத்
தேமல் பட்டாகச் செங்காந்தள் விரலாகக்
காமன் கணைதொடுக்கும் கருங்குவளை விழியாக
மாதவி இடையாக மகிழம்பூச் சுழியாக
ஊதா வனிச்சமலர் உள்ளங்கால் வடிவாகச்
சாய்ந்தாடும் பேரழகே தாதுமலர்ச் சரமாகப்
பூஞ்சோலை ஓரத்தே பூத்திருந்தாள்; தனைமறந்தாள்!
உத்தரியம் சரிந்ததையோ உள்ளழகு தெரிந்ததையோ
பித்துமனப் பேதையவள் பெரிதாகக் கொள்ளவில்லை
அப்போது நடந்தகதை அறியாயோ ஆணழக!
செப்புவது கேளாய் சிந்தையது தெளிவாகும்
பூவெடுத்த சேடியரில் பூலோக ரம்பையென்று
மாவடுக்கண் மாதொருத்தி மானிருக்கும் இடம்நண்ணி
மாரவேள் பூங்கணையில் மனமுருகிப் புதரோரம்
பேரழகு கிடக்கின்ற பெருஞ்சேதி அறியாமல்
பூவென்று பூவையிவள் முலைகொய்தா ளா!அதுதான்
கோவல!நீ கண்ட குறி!

த. நேசன்
1982.7.11

- கெஜ. சுப்பிரமணியம்

# 287. மல்லிகை

மணிஐந்(து) ஆறு சென்றேன்; மணங்களும் துள்ளி வந்தே
பிணித்தன கால்வ னப்பும் பக்கலிற் செல்ல ஆங்கே
மணித்திரள் வெள்ளைப் பூக்கள் மல்லிகைத் தோட்டம் அடடா!
நனிமலர் இலைக்கொத் துள்ளே நகைப்பது சக்கைப் போடே!

இருள்திரை விலகிற் றில்லை இருந்திடும் ஒருசின் னப்பூ
“அருள்மனங் கொண்டார் என்னை அணையவே இருப்பார்” என்னச்
சரிசரி! என்றேன்; சுற்றிச் சிரித்தன நூறு! விட்டுப்
பிரியத்தான் இல்லை; ஏனோ? பூக்களின் கண்வீச் சேதான்!

அடுக்கிய வெள்ளி தழ்தான் சின்னவன் அதரம்; வெண்பூத்
துடித்திடும் கண்கள்; அழகு தூங்கிடும் பூக்கள் கொத்தாய்ச்
செடிக்குளே மின்னிச் சின்ன வானினைக் காட்டி நாலும்
படித்திடும் வண்டும் வாசம் பணத்துக்கும் இல்லை மேலே!

சிதறிய வெண்சங் காகும் சமைந்திடா அரும்புக் கூட்டம்!
பதத்தினை முனையிற் பார்க்க வண்டுகள் மொய்த்தல், பழமை
அதத்தினை ஒழித்தோம் என்றே அறைந்திடும் வெற்றிச் சங்காம்!
புதைந்துசீர் மின்னும் தோட்டின் புன்னகை தமிழின் சொத்து!

குடையினைத் தூக்கி வீதிக் கோணலைத் தாண்டி வந்தேன்;
மடைப்புனல் ஓசை காட்டி மல்லிகை விற்றான்; நின்றேன்;
குடலையுட் கிடந்தா யேனும் குலுங்கினை மலர்ச்சி கண்டேன்;
மடமகள் மொய்த்தாள்; நீதான் மொய்குழல்மே வத்து டித்தாய்!

அலைந்துபின் சேர்ந்தேன் வீட்டை அகத்தினள் முல்லை காட்டி
வளையுமுன் நீவ ளைந்தாய் வசியமே! வாழ்க வென்பேன்;
சிலையென அமர்ந்தேன்; தென்றற் குறும்பனைச் சோடி கொண்டு
கலைத்தனை மனைவி தன்னால் கருப்பொருள் உண்மை நீதான்!

மலாயா. - கவிமணி கிருஷ்ணதாசன்
1962

# 288. இதழ்ப் பத்து

முப்பாலின் பால்தோயும் மூன்றாம்பால் அல்லவோ
ஒப்பால் விளங்கும் உதட்டின்பால் - இப்பாலை
ஆலிதழ் மேகலைக்கும் அப்பால் புகழ்வளர்த்துப்
பாலிதழ் என்றார் பலர்.

கனிமூன்றும் சாறாகிக் கன்னலினும் இக்காய்ப்
பனிநீந்தும் அவ்விதழில் பாயும் - முனியும்
தணியா வளர்தாகம் தாங்கா தொழியக்
கனியிதழ் என்றான் கவி.

தென்றலிலே தோய்ந்து சிறுமுல்லை மொட்டலரும்
புன்னகையில் தோய்ந்து புலருமிதழ் - வண்ணம்
புரக்கும் மதுவிருக்கும் பூவதுவாய்த் தானும்
சுரக்குமிதழ் முல்லைச் சுகம்.

செக்கரையும் எள்ளும் சிறந்தசுவைச் செங்கரும்புச்
சர்க்கரையும் சான்றோர் தமிழுரையும் - புட்கரைவில்
கானக் குயிலிசையும் காட்டுமரச் செந்தேனும்
தேனல்ல; பெண்ணிதழ்த் தேன்.

உண்ணுங்கால் போதையை உண்டாக்கும் கள்ளோகள்?
எண்ணுங்கால் போதை இதழ்தருமே - பின்னுங்கால்
அன்னப் பெடைநிகராள், ஆயிழையாள் வாயிதழே
இன்பங்கள் ஊறும் இதழ்.

கார்மேகன் காமுகனோ? கன்னிவயப் பட்டனளோ?
போர்மேற் பசித்தும் பொருதினரோ? - மார்பில்
இறைகொண்டாள் மாதோ இதழ்வடுவைக் கண்டு
பிறையென்றார் தாமோ பிறர்?

நில்லென்று சொல்லாமல் நிற்கும்பெண்; நின்றால்பின்
கொல்லென்று சொல்லாமற் கொல்லும்கண் - உள்ளன்பில்
தொட்டால் விலகித் தொடக்கூறும் வாயிதழ்வாய்
பட்டால் இதழே பனி.

வைகறையை அங்கு வளரும் குளிர்கதிரை
மைகுழலும் மாதின் மலர்முகமும் - மெய்பகர
வாலெயி றூறும் அமுதென்னும் வள்ளுவத்தை
ஆளெயிறு கால்கோள் இதழ்.

வண்ணக் கலவையிலே வார்த்தெடுத்துப் பேரியற்கை
பண்ணும் கலைவடிவம் பார்த்தேன்நான் - விண்ணகத்தே
கொள்ளையெழில் வில்லென்று கூறுகிறார்; உண்மையதில்
இல்லையது பெண்ணின் இதழ்.

மின்னும் மணிபவளம் மேலெனினும் பெண்ணிதழே
எண்ணும் படியான இன்பவளம் - மன்னும்தன்
பொன்னும் மணியும் புலனைந்தும் ஈந்தடைந்தான்
பெண்ணின் பவள இதழ்.

த. நேசன்
1975.10.26

- கரு. வேலுச்சாமி

## 289. இடைப் பத்து

மையிருட்டில் கள்வன்போல் மங்கை குழலிடையோர்
கையிருக்க மற்றுமோர் கையெடுத்து - மெய்யில்
தடவினேன்; தட்டுப் படவில்லை அந்தோ
இடையிலே இல்லா இடை!

கார்முகிலும் தாமரையும் எட்பூவுங் கோவையும்
காரும் கனியிரண்டும் தந்தக்கை - சேர்ந்திரண்டும்
காலிடை தாங்குமோ கட்டறுந்து போகாதோ?
நூலிடை நூலாம் படை!

இல்லாத ஒன்றை இருப்பதுவாய்ச் சொல்லிவைக்கும்
பொல்லாத கற்பனைதான் போதாதோ? - இல்லாத
வானம்போல் மாதரார் வண்ண உடம்பிற்குள்
மோனமாம் என்பேன் இடை!

பூட்டுக்குள் விட்டதொரு சாவிபோல் பெண்நெஞ்சக்
கூட்டுக்குள் பட்டதுமென் ஆவிகாண்! - ஆட்டுக்கல்
ஆடுமாப் போலாவி ஆடி அவளுக்குள்
தேடுமாம் தையல் இடை!

புள்ளிமான் என்றந்தப் பொன்மானைக் கண்மேயத்
துள்ளிமான் போலும் துடிமான்அக் - கள்ளிமான்
வெட்டிச் சுளுக்க விடையாய் இருப்பதுகொல்
பட்டுதிரும் மின்னல் இடை!

ஒன்றே இரண்டாய்ப் பகுக்கப் படுகையிலே
ஒன்றின்கீழ் ரெண்டென்னும் பின்னமிது - நின்ற
நடுக்கோடு தானன்றோ நங்கையரின் மேனி
வடுக்கோடாய் வாய்த்த இடை!

அந்தப் புரத்தின் அறைவாசல் மூடிவைக்கும்
சுந்தர வண்ணத் திரைதாங்கும் - தந்தியைப்போல்
ஆரணங்கு சூடும் அழகு துகில்மேவ
நேருவதாம் தந்தி இடை!

முற்றித் துவண்ட மயக்கத்தில் ஒன்றையொன்று
பற்றிப் படர்வதுபோல் காளையரைச் - சுற்றியதில்
தள்ளாட வைக்கும் தளிர்மேனி மங்கையர்க்கு
முல்லைக் கொடியோ இடை!

ஆட்டுவிப்பான் கையில் அடங்கி அவன்தனையே
ஆட்டுவிக்கும்; ஆடும் உடுக்கையன்றோ? - நாட்டமுடன்
கட்டிப் பிடிக்கையிலே காணும் உடுக்கையின்
நட்ட நடுவாம் இடை!

அளவாய் உருவமைத்தான்! அங்கங்கும் அங்கம்
அளந்து படைத்தான் அழகு! - நலந்தருவோன்
நெஞ்சந்தான் யாதோ? இடைகுறைத்தான்! ஆம்அவன்
கஞ்சத் தனமே இடை!

- காரைகிழார்

த. நேசன்
1975.10.26

## 290. மாமலர்ச் சோலை

மல்லிகைச் சரமொன்று வேண்டும் - அந்த
மாமயில் கூந்தலில் நான்சூட்ட வேண்டும்
கள்ளையும் விஞ்சிய பேச்சு - அவள்
காதல்செய் போதையிற் கலங்குதே மூச்சு!

அஞ்சும் கயல்விழிப் பார்வை - அவள்
அழகுக்கு அழகென உருக்கொண்ட பூவை
தஞ்சம் அடைந்தது உள்ளம் - அந்தத்
தளிர்க்கொடி தந்ததோ இன்பத்தின் வெள்ளம்!

வாடாத மாமலர்ச் சோலை - என்றன்
வாழ்விற் கவளொரு இன்பத்தின் சாலை
கூடாமற் கவலைகள் ஓடும் - அவள்
கொஞ்சலில் இன்பங்கள் மிகவந்து கூடும்!

- மு. முனியாண்டி

## 291. காதலர் வருவர்

புதுமணம் நிறீஇய பொன்மலர் விரியிதழ்
கதுமெனக் குவிந்திவண் கருகிப் போயது
நொதுமல் தவிர்த்திடும் நோக்குடை யாரும்
இதுநல் தருணமென் றெண்ணி வரவிலை
ஒளியுமிழ் வதனம் இருட்பிழம் பாயது
நலிவதால் மேனிநற் கட்டுத் தளர்ந்தது
கொவ்வைச் செவ்விதழ் வெண்ணிறம் பூத்தது
செவ்விய தனத்தாய் பசலையும் படர்ந்தது
அனலிடு மெழுகாய் ஆகிப் புழுவென
மனமது துடித்துநீ வருந்தி நொந்திடப்
பொருள்வயின் பிரிந்து புலம்பிச் சென்றவர்
வரவிலை குறித்த நேரம துயர்ந்தும்

காதல ரவரோ? கற்றவ ரவரோ?
'சாதலை ஏற்குவன் உன்னுற வதனால்'
என்று பலமொழி இனிதுறச் சொற்றவர்
இன்று வரவிலை இனிவர மாட்டார்
அறிகுவை என்ன அறைந்த தோழியே!
பரிவது கொண்டுநீ பகர்ந்த துணர்ந்தனம்
எனினும் யானொன் றீங்குனக் குரைப்பல்
அந்நாள் அவர்தான் என்வயி னென்றுபு
முன்ன ருரைத்த சூள்பல உளவால்
இன்றன் றேனுஞ் சூள்தவ றாராற்
காலங் கதுமெனக் காட்டுபு
ஞாலம் வியக்கத் தேர்மிசை வருவரே!

- வீ. கே. சுப்பிரமணியம்

## 292. தவிக்கிறேன்

கரைதொட்டுத் திரும்புகின்ற அலையைப் போலே
காலபோடும் தாளத்திற் கேற்பத் துள்ளும்
நுரைப்பூவை இடையாகக் கொண்ட பெண்ணே!
நூலறுந்த பட்டம்போல் தவிக்கின் றேன்நான்;
தரைநிலவே! திருமொழியால் பேசு! உன்றன்
தலைவனென எனைக்கூடு! இன்னும் மௌனத்
திரைமறைவு நாடகத்தைத் தொடர்ந்தால் வந்த
திசைமறந்த பறவையெனத் துவண்டு போவேன்!

- காசிதாசன்

## 293. எரிகிறது

காதலெனும் காவியத்தைக்
கண்ணீரே வரைகிறது;
வேதனையின் நெருப்புமட்டும்
விடியவிடிய எரிகிறது!

- பெ. திருவேங்கடம்

# 294. பின்னல்

பூவைக் கொணர்ந்த கையோடு
"பூவை! பூவாய்" என்றேன்யான்;
"பாவைக் கற்ற உம்மொழியில்
பாவை மருண்டேன்" எனஎழுந்தாள்!

"அடிமலர்" என்றேன்; புரியாமல்
"அடியா?" என்றாள் கண்ணடித்து;
"மடிமலர்" என்றேன்; அதற்கவளோ
"மடியும் மலரா நான்?"என்றாள்!

"மடியா மலரே" எனச்சொல்ல
"மடிப்பில் லாஒரு மலரே"தாய்,
"கடியார் தந்தது?" எனத்தொடர்ந்தேன்!
"கடியார் கடித்தது" எனப்படர்ந்தாள்!

"பள்ளிப் படிப்பா? பட்டறிவா?
பாவாய்!" என்றேன்; "பாவாயால்
சொல்லிக் கொடுத்த கதை"என்றாள்;
"தொட்டுத் தொட்டுக் கதை!"என்றேன்!

"உப்"பென் றேன்;உண்ண "உப்"பென்றாள்!
"ஒப்"பென் றாள்!நான் "தப்"பென்றேன்;
"தப்"பென் றேஅடி தப்பியந்தத்
தையல் தைய லாய்த்தைத்தாள்!

"தே"னென் றேன்அவள்; "நா"னென்றாள்
"தெளி"யென் றேன்அவள், "தெளிவில்லா
வா"னென் றாள்நான்; "மா"னென்றேன்
"வா"வென் றேதமிழ்ப் "பா"வென்றேன்!

"இலை"யென் றாள்;"நிலை அலை"யென்றேன்;
"இயல்"என், றேன்,அவள் "முயல்"என்றாள்;
"கலை"என் றாள்;"துணி கலை!"என்றேன்;
கலைந்தாள் கலையொடு கலந்தாளே!

த. நேசன்
1976.4.18

- எல்லோன்

## 295. தாவென்றேன்! தாளமென்றாள்!

பாரென்னை என்றொருத்தி பக்கம் சென்றேன்!
“பார்”என்றால் உலகத்தின் பேரா மென்றாள்!
சேரென்றன் வாழ்வினிலே என்றேன்! அப்பெண்
“சேர்”என்ப தோர்”நிறுத்த லளவை” என்றாள்!

பாடென்றேன் பணிவாக! பொல்லா நங்கை
“பாடு”படும் உழைப்பென்பர் பாரோர் என்றாள்!
ஆடென்றேன்! அவளுடனே நகைப்புச் சிந்தி
“ஆடு”சின்ன வாலுடைய உயிராம் என்றாள்!

பொன்னேஏன் வீண்பேச்சு நமக்குள் என்றேன்!
“பொன்”னொளிரும்! நகையாகும்! பேசா தென்றாள்!
மின்னேஉன் குறும்பெனக்குத் தேனே என்றேன்!
பின்னேஏன்? குறும்பளித்”தேன்!” போமே என்றாள்!

தாஉன்றன் அன்பெனக்கு! போவே னென்றேன்!
“தா“வென்றால் இசைத்தமிழின் தாளம் என்றாள்!
பூவில்லாக் கொண்டையிலிப் பூவை என்றேன்!
“பூ”என்றே எள்ளியவள் போனாள் நின்றேன்!

வண்ண. - கரு. திருவரசு
1977

## 296. நெஞ்சொடு கிளத்தல்

பானாட் கங்குல் படர்தரு காலை
மானோக் கவள்தான் மனமுயிர் பருகும்
தன்மைத் தாயென் தனிமையைச் சிதைத்தே
உன்மத் தன்என ஊரவர் உரைக்கச்
சென்றவள் யாரெனத் தெரிந்திலாய் மனமே!
இன்றென் பாங்கில் இராதே அவள்பின்

நெருநலே சென்றனை நீமீள் குவையோ?
பருதரு இரப்பாப் பாங்கே இருந்து
குறுமகள் வரவினைக் குறித்திருந் தென்செய?
உறுமவள் நெஞ்செனை உவக்குமோ அறியேன்!
வருத்தினை காலே! வாழும்
திருமனை கண்டு மீண்டெனக் குரையே!

1978 - தை. சே. பெ. பொன்னம்பலம்

## 297. பாட்டு வரும் நேரம்

பாட்டுவரும் நேரம் - நீ
பக்கம்வரும் நேரம்!
கோட்டுநகில் விம்ம - இளங்
கொடியிடையும் விம்மக்
கூட்டுமலர்த் தாதே! - நீ
கொஞ்சிவரும் போதே
பாட்டுவரும் நேரம் - தமிழ்ப்
பாட்டுவரும் நேரம்!

வாவிக்கய லிரண்டு - நிலை
மறந்துதரை புரண்டு
பூவிரியுஞ் சோலை - தனிற்
பொருந்திநின்றாற் போல
ஆவிகொளுங் கண்கள் - தமை
அலையவிட்டே தண்கள்
பாவைவந்தாய் ஓரம்! - இது
பாட்டுவரும் நேரம்!

கானமயில் தூவி - மிஞ்சுங்
கார்குழலை நீவிப்
போனதுயில் போக - இப்
போதுமகிழ் வாக
ஆனஅயில் கூட்டி - என்
அருகுவந்தாய் வாட்டி!
பானுமறை நேரம் - இன்பப்
பாட்டுவரும் நேரம்!

தென்றல்வருங் காவில் - மிளிர்
செம்பருத்திப் பூவில்
ஒன்றிடுசெஞ் சாயந் - தனை
உன்னிதழில் தோய
என்றிருவே பூசிச் - சிறப்
பேற்றனையோ கூசி!
நின்றுநின்று வந்தாய்! - என்றும்
நிலவுகவி தந்தாய்!

கஞ்சமடி பாதம் - மிகக்
கன்றவிடல் ஏதம்!
பஞ்சமடி பூக்கள்! - வழி
பரப்பலெங்ஙன்? பாக்கள்
நெஞ்சமடி எனக்கும்! - அதை
நீட்டவரும் உனக்குத்
தஞ்சமடி உள்ளம்! - இனித்
தமிழ்க்கவிதை வெள்ளம்!

மலைநாடு
1964.4.26

- அதிகைமணி

## 298. அடி!

'அடி'யென்ற சொல்தமிழில் அடிப்பாய் என்றும்
அடிப்பாகம் அங்குலம்பன் னிரண்டு என்றும்
படிகின்ற பாதமென்றும் புலவன் பாடும்
பாட்டுச்சீர்த் தொடுப்பென்றும் பலவாய்ச் சொல்ல
முடிகின்ற சுவைச்சொல்லாம்! 'அடியே' என்று
முறையிட்டால் ஏனடிநீ முறைத்துச் சொல்லால்
கடிகின்றாய்; அடிநன்றாய் இல்லை என்றால்
கரும்புக்கும் நுனிநன்றாய் இருக்கப் போமோ?

சீதையடி இட்டவனம் கம்பன் பாட்டில்!
சிலம்படியைப் பயிலவிட்டான் இளங்கோ நாட்டில்!
மேதையடி தொழார்கற்றுப் பயன்என்? என்று
மெய்விளக்கும் ஈரடியை அறிவாய் ஏட்டில்!
காதைஅடிக் கோடெடுத்து விரிந்த கண்கள்
காலையிளங் கதிர்தழுவும் கமலப் பூக்கள்!
போதையடி நின்வாய்ச்சொல்! இதம்கொ டுக்கும்
புன்னைமரத் தடியுனது மடியும் ஆகும்!

மரத்தடியில் நொண்டியடித் தோமே! ஊற்று
மலையடியில் நீச்சலடித் தோமே! என்றன்
கரத்தடியில் உன்முதுகு காய்த்துப் போகக்
கதையடித்து வம்பைவிலை வாங்கி னோமே!
முறத்தடியில் புலிதோற்றுப் போன காதை
முகத்தினிலே எழுதிநிற்கும் உனக்கிப் போதே
சிரத்தடியில் சத்தியமாய் அடியேன் என்பேன்!
சிந்தியடி அடித்தாலும் 'அடியேன்' நானே!

அத்தைக்கும் மாமனுக்கும் அடிவ யிற்றில்
அடிக்கடிநான் நெருப்பள்ளிக் கட்டு கின்றேன்!
நத்தைக்கும் ஓடுண்டே அதுபோல் உன்னை
நகராமல் காக்கின்றார்! காதல் என்ற
முட்டைக்கும்[1] இதயத்தைப் புரிந்து கொள்ள
முடியாதா அவர்களுக்கு? அத்தை மட்டும்
வித்தைக்குப் பெயர்போன கள்ளி! உன்னை
வீட்டுக்குள் அடியென்றே அழைப்பார் போலும்!

சீட்டியடித் தேன்சிரித்தேன் கண்ண டித்தேன்
திருமணத்துப் பத்திரிகை அடித்தால் என்ன?
நீட்டியடித் துப்படுத்துக் கிடந்தே காலம்
நீட்டுகிறார் நம்பெற்றோர்! சிறப்பாய்ச் செய்யப்
போட்டியடிப் படையவர்க்கு! அதுவ ரைக்கும்
பொறுத்திருப்ப தெப்படிநாம்? பத்துப் பேரைக்
கூட்டிஅடி யோஅடியென் றடித்தால் மேளம்!
குடும்பத்தில் 'அடியே'தான் செல்லம்! போடி!

த. நேசன்
1974.8.11

- கரு. வேலுச்சாமி

## 299. எதிரொலி

என்னை அவள்தான் மனிதன் ஆக்கினாள்!
என்னை அவள்தான் கவிஞன் ஆக்கினாள்!
என்னை அவள்தான் அணைத்து மகிழ்ந்தாள்!
என்னை அவள்தான் அழவும் வைத்தாள்!

---

1 முட்டைக்கும் - முள் + தைக்கும்

பார்க்கும் பொருள்கள் பாமல ராகிடப்
பதியம் போட்ட கொடியின் வேரவள்!
வார்க்கும் மழைநீர் வளர்க்கும் பயிரை!
மலரும் பூநகை வாழ்த்தும் உயிரை!

நெஞ்சில் ஆயிரம் நினைவு சுமந்து
நிலையில் உயரிய மலர்போல் கமழ்ந்து
கொஞ்சும் மழலைக் குறள்போல் இனித்தாள்!
கூடும் பொழுதவள் குளிரும் பனித்தாள்!

அவளுடல் என்பது அழகின் மேடை!
அழகின் திரையே அணிமணி ஆடை!
துவளும் சிற்றிடை மின்னொளித் துண்டு!
துகிலில் வாடும் இருமலர்ச் செண்டு!

தோணி
1985

- பரணன்

## 300. யாதுதவம் செய்தனை!

கோதுபடா மாங்கனியாம்! கொய்துபடாத் தேன்மலர்!
தீதுபடாச் சித்திரமாம்! தெய்வமங்கை போல்வரும்
மாதுமேனி மீதுலாவி மாண்புகொண்டு மேலெழும்
ஏதுகிலே! ஏதுகிலே! யாதுதவம் செய்தனை?

பட்டபோழ்தி லிற்றுவீழும் பான்மைகொண்ட மெல்லிடை!
தொட்டபோழ்தி லுள்ளமெங்கும் சூடுகாணும் கைவிரல்!
மட்டிலாத பெண்மைகொஞ்சும் வண்ணமங்கை மேனியை
இட்டுமேவும் தென்றலேநீ யாதுதவம் செய்தனை?

குமைகின்ற புகையனைத்தும் கூடுகின்ற மேகமோ
தமிழணங்கு தார்குழற்குத் தகுமுவமைக் காகுமோ?
திமிருகின்ற கடல்நிறத்துத் திரைவிழுந்த கூந்தலின்
அமருகின்ற மென்மலரே! யாதுதவம் செய்தனை?

அலர்ந்தபூவின் மீதிலேறி ஆடும்வண்டு விழிகளாம்
வளர்ந்துகாணும் மலையினூடு வழியுமருவி யோவெனக்
கிளர்ந்துகாணும் மார்புமீதில் கிடந்துமோதி ஆடியே
அழகுசெய்யும் பொன்னணியே! யாதுதவம் செய்தனை?

பிள்ளைபோலும் கிள்ளைபோலும் பிதற்றுகின்ற வாயிடை
வெள்ளைபோலும் முல்லைபோலும் வீசும்முத்துக் கொருவிலை
இல்லைபோலும்! இல்லைபோலும்! எனப்பிறந்த மங்கையின்
அல்லிவாயில் நிறைதமிழே! யாதுதவம் செய்தனை?

மலாயா. - காரைகிழார்
1962

## 301. தலைவி ஏக்கம்

தோழிநீ தூதுரைப்பாய் - நான்
தேய்நில வாகுமுன் ஓடி அவரிடம்
தோழிநீ தூதுரைப்பாய் - கண்
தூங்குத லின்றிநான் ஏங்கித் தவிப்பதாய்... (தோழி)

அன்பு மிகுந்தஎன் னாசை நினைவடி - என்
ஆசைக் குரியம ணாளன் வரும்படி
என்மன ஆவலை இசைபெறக் கூறியே - நள்
ளிரவெனும் போதிலும் என்மனை நாடியே... (தோழி)

காவலே எனக்கிங் கில்லை யென்றும் - மனங்
கவலுற வாழ்கிறாள் முல்லை யென்றும்
சேவலுங் கூவியே விடியும் முன்னம் - என்
செம்மலைக் கண்டுநான் வரச்சொன்ன தாகவே... (தோழி)

உதிரிப். - பொன். அன்பரசன்
1980

# 302. கனியாத தனியாள்!

வெற்றிலை போட்டேன் சிவக்கவில்லை - எவன்
விழைகுவான் வந்தென் இதழ்பதிக்க?
கட்டிலில் படுத்தேன் உறக்கமில்லை - எவன்
கைகொடுப் பான்நான் சாய்ந்துறங்க?

காற்றிலும் கூந்தல் கலையவில்லை - அதில்
கட்டிய மல்லிகை குலையவில்லை!
கோட்டுறு செந்தேன் அனையசொல்லில் - எவன்
கூட்டுவான் பருவக் கணையைவில்லில்?

மாங்கனிக் கன்னம் வாடுகையில் - இரு
மைவிழி ஒருவனைத் தேடுகையில்
ஏங்குநீ என்றெழில் சாடுதடி! - தோழி
என்கணீர் ஆறாய் ஓடுதடி!

பொழுதொன்றில் மாயும் பூவானேன் - ஏட்டில்
போய்ஒன்றி வாராப் பாவானேன்!
விழுதின்றி வாழும் ஆலானேன்! - பெண்மை
வீணாகத் தானா ஆளானேன்?

பெண்கொள்ளும் ஆண்கள் முன்னாலே - போய்ப்
பேசிய தில்லைஎன் கண்ணாலே
பெண்கூடச் சந்தைப் பொருளென்றால் - இங்குப்
பெண்மைக்கு என்ன பொருள்கண்டார்?

என்சிந்தை எண்ணும் குணவாளன் - ஒருவன்
எவனேனும் அவனென் மணவாளன்
பெண்சந்தை விட்டுத் தனியாவேன் - எனக்காய்ப்
பிறந்தானின் முன்னே கனியாவேன்!

த. நேசன் - சபா இராகி
1967.3.19

# 303. மறந்தா போனீர்?

கங்காணி அழைக்கின்ற குரலைக் கேட்டுக்
காண்டாப்பால் வாளியுடன் 'பிரட்டு'[2]க் கேயான்
கங்குலிடைத் தடுமாறிச் செல்லுங் காலைக்
கட்டியெனைப் பிடித்தீரே! மறந்தா போனீர்?

கட்டியெனைப் பிடித்திடநீர் பயந்து யானும்
கத்திடுங்கால் என்வாயைப் பொத்தி மெல்லப்
பட்டிதழைத் தொட்டீரே, உமது மீசை
படரிதழால் வலியெடுக்க மறந்தா போனீர்?

நன்முத்தந் தந்தஇளம் மயக்கத் தோடு
நான்'பிரட்'டை நெருங்கிட்ட வேளை ஐயா
உன்பெயரை யழைத்திட்ட போழ்து யானும்
உட'னாஜர்'[3] சொன்னேனே! மறந்தா போனீர்?

உனக்காக நான்'ஆஜர்' சொல்லக் கேட்டே
உடனாங்குத் தோழியர்கள் சிரிக்க, ஐயா
"உனக்காக நீயாஜர் சொன்னால் போதும்!
உளறாதே!" என்றாரே! மறந்தா போனீர்?

கங்காணி அன்றொருநாள் மரத்தில் பட்ட
காயத்[4]தைக் காண்பித்தே என்னைத் திட்ட
"ஓங்கையா விடத்தேபோய்ச் சொல்லு! இங்கே
ஒழுங்காய்ப்பேசு என்றீரே"! மறந்தா போனீர்?

பால்நிறுக்கும் கொட்டகை[5]யில் நிறுத்த பாலைப்
படியேறித் தோம்ப[6]திலே ஊற்றும் வேளை
கால்தவறி விழப்பார்த்தேன்; காற்றாய் வந்து
காத்தீரே! கண்ணிமைபோல் மறந்தா போனீர்?

---

*2 பிரட்டுக்களம் - அதிகாலையில் தொழிலாளர் வேலைக்குச் செல்லுமுன் பெயரைப் பதிந்துகொள்ளும் இடம்.*

*3 ஆஜர் - 'உள்ளேன்' என்னும் பொருள் கொண்ட சொல். 'ஹாளிர்' என்னும் அரபுமொழிச் சொல்லின் திரிபு ஹாஜர், ஆஜர்.*

*4 காயம் - மரப்பட்டையைச் சற்றே ஆழமாகச் சீவுவதனால் ஏற்படும் வடு. இது ரப்பர்ப்பால் மரத்தைப் பழுதுபடுத்திவிடும்.*

*5 கொட்டகை - ரப்பர்ப்பாலை எடைபோடும் இடம்.*

*6 தோம்பு - பீப்பாய். தோங்க் (Tong) என்னும் மலாய்மொழிச் சொல்லின் திரிபு.*

'தேன்நிலவு'ப் படம்பார்க்கப் பெற்றோ ரோடு
திடல்நோக்கி நான்சென்ற போழ்து பையன்
"வான்மதியாம் உன்தோழி அழைத்தா" ளென்றே
மாற்றியே சொன்னானே! மறந்தா போனீர்?

பையன்சொல் மெய்யென்றே நம்பி நானும்
பாங்கியிருப் பிடந்தேடிச் சென்றேன்! ஆங்குக்
கையதனில் மலரோடு கொக்குப் போன்று
காத்திருந்தீர் கால்கடுக்க மறந்தா போனீர்?

நின்திருட்டுத் தனங்கண்டு பெண்நான் ஓட
நினைக்கையிலே சேவலைப்போல் பின்தொ டர்ந்து
கண்மூக்கு, கால்கையென் டோர்ந்தி டாது
கடித்தீரே வடுத்தோன்ற மறந்தா போனீர்?

பெற்றோரும் உற்றாரும் முறையாய் வந்து
பெண்கேட்போம் என்றார்த்துச் சொல்லிச் சென்றீர்!
கற்றவரே! நீர்புகன்ற காலம் வீணே
கரைவதனைக் காணீரோ? மறந்தா போனீர்?

இளங்கோ.
1983

- சீ. மா. இளங்கோ

## 304. அண்டை வீட்டில்

அண்டை வீட்டு மீனாதன்
அன்புக் கொழுநன் தோளிணைந்து
ஒண்டுங் கிளியாய்க் கொஞ்சுவதை
ஒளிந்து பார்த்துப் பேதையவள்
விண்டு ரைக்க வியலாத
விரகத் தீயால் வெந்தனளே!
கொண்ட கணவன் பிரிவதனால்
கூண்டுக் கிளியோ அவள்வாழ்வு?

த. நேசன்
1971.1.16

- பொன். குருசாமி

## 305. நீர்மேல் எழுத்துக்கு நேர்

கார்வந்தும் வாராக் கணவனவன் வந்தக்கால்
போர்செய்வேன் என்றுரைத்தாள் பூவையிவள் - போர்வீரன்
ஊர்வந்தான், கூடினாள்; ஒண்டொடியாள் கொண்டசினம்
நீர்மேல் எழுத்துக்கு நேர்.

த. முரசு
1960.1.23

- ஐ. உலகநாதன்

## 306. ஏன் மலர்ந்தாள்?

மூவாறில் ஓராறு குறைந்தி ருந்தாள்;
முற்றாத முள்ளங்கி போலி ருந்தாள்;
மூவாளோ இப்பெண்ணாள்? என்றே எண்ணம்
முதிராத பருவத்தே முகிழ்த்து நின்றேன்;
ஏவாளோ இவள்பார்வை என்றன் மீதில்?
ஏற்பாளோ தன்துணையாய்? என்றே உள்ளம்
பாவாமல் பிறவற்றில் தவித்தி ருந்தேன்;
பருவத்தின் தலைவாயில் அவள டைந்தாள்!

செங்கதிரின் ஒளிவீச்சால் முளரிப் பூக்கள்
செவ்விதழ்கள் விரித்துக்குறு நகையு திர்க்கும்;
திங்களொளி பட்டாலே தூங்கும் அல்லி
சேர்ந்தவிதழ் மலர்த்தித்தன் அழகைக் காட்டும்;
இங்கிவளை யார்தொட்டார்? ஏன்ம லர்ந்தாள்?
ஈதென்ன வினையென்றே எண்ணுங் காலை
"உங்கள்விழிப் பார்வையெனுள் ஊடிச் சென்றே
உணர்வுதனைத் தொட்டதனால் மலர்ந்தே"னென்றாள்!

- காசிதாசன்

## 307. மறைவதேன்?

புத்தம் புதுமலர்கள் - கண்டு
புன்னகை செய்யாவோ?
நித்தம் மலர்வதெலாம் - அவள்
நிறையெழில் காண்பதற்கோ?

பசிய மரங்களெலாம் - அவள்
பச்சிள மைகாக்க
வசிய மருந்தளித்தே - எழில்
வாழ்கெனச் சொல்லினவோ?

புள்ளினச் சிறகெல்லாம் - நெய்து
பூந்துகி லாயினவோ?
வள்ளி யவள்மேனி - வண்ணம்
வாரித் தெளித்ததுவோ?

நன்னிற முத்தெடுத்து - அவள்
நல்லெயி றமைத்திடவே
எண்ணறு நேரத்தினை - இறைவன்
எண்ணிக் கழித்தானோ?

எண்ணரும் இன்கதைகள் - நான்
எண்ணி மகிழ்கையிலே
எண்ணருந் தொலைவினிலே - அவள்
ஏகி மறைவதுமேன்?

த. நேசன்
1968.5.5

- ஏ. நீலகண்டன்

## 308. கன்னியரின் கலக்கம்

வருசம்பல ஆச்சுதடி வயசுக்கு நான்வந்து
பரிசமிட ஆளில்லை பருவப்பெண் எனைப்பார்த்து!
புருசனென மாலையிடப் புடிச்சவரு காணலடி!
தரிசனத்தை நான்தேடித் தவிச்சதெல்லாம் போதுமடி!

மல்லிகை மலர்ந்ததுன்னா மறுநொடியே வண்டுவரும்;
முல்லைப்பூ மொட்டவிழ்ந்தா முதல்நாளே முத்தம்பெறும்;
அல்லிப்பூக் கன்னியர்கள் அவனியிலே பலரிருக்க
வள்ளி மணாளனவன் வரங்கொடுக்கா திருப்பதென்ன?

ஊருக்குள் தினம்நடக்கும் உளமகிழும் திருமணத்தைப்
பேருக்கு வாழ்த்திநாங்கள் பெருமுச்சால் ஏங்குவதை
ஆருக்கும் தெரியாமல் அணங்குபலர் கலங்குவதைப்
பாருக்குள் ஒருபயலும் பார்த்ததாய்த் தெரியவில்லை!

1983.3.4 -அருண் சோமசன்மா

## 309. வரவில்லை ஏனோ?

அவன்: "மல்லிகையின் மென்முறுவல் மலர்முகத்தைக் காட்ட
மாமலர்த்தேன் மொய்த்தவண்டு வெறியுணர்ச்சி ஊட்ட
உல்லரி[7]போல் என்னெஞ்சம் உன்னினைப்பி லாழ
உறவுகொண்ட நெஞ்சினளாய் உன்னினைவாய் இன்று
பள்ளியறைக் கவிபாடும் பாவையரைப் போலப்
பார்த்திருக்க நான்வருவேன் காத்திருங்கள்!" என்றாய்;
தெள்ளுதமிழ் நான்சுவைக்கத் தென்றலொடு வந்தேன்;
தெளிதேனே! நீமட்டும் வரவில்லை ஏனோ?

அவள்: "திரைகடலின் விளிம்பினிலே செங்கதிருஞ் சாயும்
தென்றலென்ற பூமகளே! திருக்காவி னோரம்
மறைவினிலே நின்றிடடி மாங்கனியின் சாற்றை
மன்னவனாய் நான்தருவேன் மாத்தமிழாய்!" என்றீர்.
சிறைக்கூட்டின் தாழ்திறந்து சிறகடித்த புள்ளாய்ச்
செந்தமிழே! காதலெனும் தேரோட்டி வந்தேன்.
மறைகூறும் மாத்தமிழன் மாண்புமிகு காதல்
மன்னவனே! நீர்கற்றும் வரவில்லை ஏனோ?

---

*7 உல்லரி - தளிர்*

அவன்: "முத்தெடுக்கும் தென்பாண்டி மாக்கடலின் மீனாய்
முதியமொழி பாடுகின்ற தமிழணங்கு தேனாய்க்
கொத்துமலர் சூடியங்கே குலமகளாய் நானும்
கொவ்வையிதழ் செந்தூரம் மின்னிடவே வருவேன்!
முத்தமொன்று தந்திடுவீர் முழுமதியும் வெட்கி
முகிலிடையே மறைந்திடவே முத்தமிழே!" என்றாய்.
கத்துகடல் அலையினைப்போல் என்னெஞ்சம் அலையக்
கனியிதழே! நீமட்டும் வரவில்லை ஏனோ?

அவள்: "பூந்தென்றல் மெல்லவந்து பூவுடலைத் தழுவப்
புலன்மாற்றி நானணைத்துக் காதற்கணை தொடுக்க
மாந்தோப்பில் நின்றிடடி மதிவருமுன் ஆங்கே
மறவேந்தாய் நான்வருவேன் அதிவிரைவி" லென்றீர்!
ஏந்தலெனும் முதல்மகனே! ஏற்றிவைத்த காதல்
இறைவனில்லப் படிமத்தில் ஒளிவிளக்குப் போலக்
காந்தையென்ற னுள்ளத்தில் சுடரொளியாய் மிளிரக்
காதலரே! நீர்மட்டும் வரவில்லை ஏனோ?

1965.11.27 - பொன். சுப்பிரமணியம்

## 310. வருவீரோ?

சொப்பனம் ஒன்று கண்டேனே - அதில்
சோகமாய்ப் பலவும் வந்தனவே!
அப்படி எதுவும் நடக்காமல் - நான்
அம்மனைத் தினமும் வேண்டுகிறேன்!

ஒருநாள் மாமா சொன்னதையும் - நான்
ஓரமாய் நின்று கேட்டிருந்தேன்;
திருமணம் நமக்குச் செய்விக்க - அவர்
செவ்வாய் திறந்து சொல்லிவிட்டார்!

பல்லியும் அடித்துக் கிழக்கினிலே - அது
பலித்திடும் என்றே சொன்னதத்தான்!
சொல்லிட முடியா மகிழ்ச்சியத்தான் - அதைச்
சொல்லிட மனசு துடிக்குதத்தான்!

சித்தம் கலங்கிப் போகுமென்றே - என்
சிநேகிதி பொன்னி எச்சரித்தாள்!
வற்றலாய் உடம்பு போனதத்தான் - நீர்
வைத்தியம் பண்ண வருவீரோ?

சிட்டிடம் தூது அனுப்பியுள்ளேன் - அது
சீக்கிரம் வந்து செய்திசொல்லும்!
சிட்டெனப் பறந்து வருவீரோ? - என்
சிந்தையைக் குளிர வைப்பீரோ?

- கிரு. முகிலரசன்

## 311. முதலிரவு

வெண்பட்டுப் பஞ்சணைமேல் மல்லிகைப்பூ
வாசத்தைத் தானள்ளித் தூவியது
கண்கொட்டத் தூங்காமல் காத்திருந்தான்
காரிகையின் வரவையெதிர் பார்த்திருந்தான்

### வேறு

வட்டக் கருவிழி மயங்கக் - கால்
இட்ட தரைமணம் வீச - ஒரு
தட்டில் பழங்களை ஏந்தி - ஒளிர்
வெட்டும் நடையொடு வந்தாள்!

தொட்டுக் குலவிடத் தென்றல் - எழிற்
பட்டுப் புடவையைத் தீண்டி - கலை
சொட்டும் உடலினுள் பாய்ந்து - பின்
கட்டித் தழுவிய தம்மா!

நட்ட நடுநிசிச் சாமம் - பனி
கொட்டிக் குளிர்தரும் நேரம் - மதுக்
கொட்டும் மலரென வந்தே - அவள்
கட்டில் அருகினில் நின்றாள்!

கண்டு நிமிர்ந்துநற் காளை - மது
உண்டு களித்திட எண்ணி - மலர்
வண்டு குலுங்கிடும் செல்வி - விழி
மொண்டு பருகிட லானான்!

சுண்டி இழுத்தது ஆவல் - மனம்
மண்டிக் கிடந்தது ஆசை - எழிற்
கெண்டை புரள்வன போலும் - கண்ணில்
அண்டத் தழகையே கண்டான்!

கொள்ளை நினைவுகள் நெஞ்சில் - மீறித்
துள்ளி எழுந்தன விஞ்சி - நறுங்
கள்ளைப் பருகிட எண்ணி - அவளை
அள்ளி அணைத்திட நேர்ந்தான்!

கன்னி கவர்ச்சியால் மெல்ல - அவன்
கண்ணைப் புதைத்தனள் நோக்கால் - பெரு
விண்ணின் அமுதெனும் போதை - அவன்
கண்கள் கொடுத்திடக் கண்டாள்!

பெண்மை மலர்ந்தது மெல்ல - அவள்
மென்கை அணைப்பினை அள்ள - மயல்
தன்மையில் பெண்மையும் மென்மை - என்ற
உண்மை பலித்தது ஆங்கே!

மாயை
1967

- இரா. பெருமாள்

## 312. மச்சானுக்கு மடல்

பூமலரும் காலைப் பொழுதுவரும் தென்றலெனும்
பாமகளின் பிள்ளை பறந்து திரிந்துவரும்
ஊர்மலரும் உள்ளம் புதுநாளின் ஒண்சுடரை
நேர்மலரக் கண்டு நெகிழ்ந்து குழைந்துவிடும்
காய்கீரை விற்கக் கடியகுரல் கூவுநரும்
பாய்முடையக் கேட்டுப் பறைக்குரலில் கூவுநரும்
அம்மி புதுக்குநரும் ஆட்டுக்கல் விற்குநரும்
பொம்மை கிலுகிலுப்பை பூச்சரங்கள் விற்குநரும்
பித்தளை செம்புஈயம் மாற்றுக்குப் பேரீச்சை
ஒத்தநிறை உண்டென்று உறுமித் திரியுநரும்
பால்மோர் தயிர்விற்கும் பாட்டியரும் ஏற்றக்கால்
சால்தூக்கிச் செல்குநரும் சாயம் புதுக்குநரும்
ஆரவா ரப்பேச்சால் ஆர்ப்பரித்துச் செல்கின்றார்
ஈராயி ரங்கல் இருந்தொலைவிற் சென்றீரே
மச்சான்! இவையெல்லாம் வாடிக்கை காலையிலே!

நொச்சி மரத்தடியில் நோய்எருமை போல்வீட்டின்
முன்னறையில் வீழ்ந்து முடங்கிக் கிடக்கின்றேன்
என்னருகில் மெத்தை தலையணைகள் எல்லாம்
இருந்தபடி யேயிருக்க ஏக்கம் துணையாய்
மருந்தறியா நோயால் மருண்டு கிடக்கின்றேன்
பண்டிருந்த சீர்மை பழங்கிளர்ச்சி எல்லாமும்
நண்டுப்பிடி யால்என்னை நையப் புரிவதனை
எந்தவகை யானுரைக்கக் கூடுமோ? பித்துளத்தின்
நொந்தநிலை யாரே நுவலுவார்? மாமிமுதல்
மற்றவரின் அன்பு மலையளவே ஆமெனினும்
கொற்றவரே உங்கள் குறுநகைப்பிற்(கு) ஈடாமோ?
மின்னுமணி வைரம் மரகதப்பூண் எல்லாம்உம்
சின்னவிரல் தீண்டும் சிலிர்சிலிர்ப்பிற்(கு) ஈடாமோ
பட்டுமுதல் நைலான் பளபளக்கும் ஆடையெலாம்
ஒட்டுறவால் உங்கள் ஒளிமுகத்தை ஒப்பவையோ?
அன்பில் விழிகலக்கும் ஆசைமொழி நெஞ்சளக்கும்
இன்ப இலக்கியமே! என்னுயிரே! மன்னவரே!
வெற்றிலைவாய்க் கூட்டி விளாம்பழத்துச் சொறகலவை
உற்றுவரும் பேரின்ப ஓவியமே! காசுபணம்
தேடிவரச் சென்றீர்; திருவுளத்தின் நாட்டமெலாம்
மாடிமனை சேர்ப்பதிலோ? மாடுகன்று காண்பதிலோ?
காரிகையின் ஆசைக் கனவறிய மாட்டீரோ?
ஈரமழை மேகத்து இயல்பறிய மாட்டீரோ?
கொல்லையிலே முல்லைக் கொடிமுறுவல் கண்டயர்வேன்
மல்லிகையின் மொக்குள் மலர்ச்சியினை யார்பொறுப்பார்?
பீர்க்குப் படலெல்லாம் பூப்படலே; வெற்றிலையின்
வேர்க்கால்போல் உற்று வரும்துன்ப ஓதம்!
பறங்கிப்பூ மார்கழியைப் பார்த்துப்பார்த்(து) உள்ளம்
உறங்கப்போ காது கலங்குவதை உன்னுகிலீர்!
அஞ்சல் விடுப்பீர் அதிலிருக்கும் உண்டியலின்
வஞ்சப் பணம்கைக்கு வந்துவிடும் ஆனாலும்
கண்விரும்பும் மச்சான் கருணைமுகம் எங்கேயோ...?
பெண்விரும்பும் ஆசைப் பனிமுகம் எங்கேயோ...?
எட்டாத் தொலைவில் எங்கேயோ...? எங்கேயோ...?
மட்டுப் படாதபுலம் வானம் கடல்நடுவே
ஐயகோ மச்சான்! அனல்நடுவே கற்பூரத்
தையல் தவிப்பதனைச் சற்றறிய மாட்டீரோ?
தாழ்வாரக் கூரையிலே கூடுகட்டும் சின்னமணிக்
கேழ்வரகு கண்சிட்டுக் கீச்சுக் குரலினிலே
பேசிப் பயிலும் கிளர்ச்சிமொழி ஓசையெலாம்
ஊசிமுனை போலே உறுத்துவதை நீரறியீர்!
கொய்யாக் கிளையில் குலவும் அணில்இரண்டு

நெய்யுருகல் போலே நெகிழ்ந்துருகும் ஏழைமனம்!
பல்லாங் குழியாடும் பாவையரின் கூட்டுறவும்
இல்லாமை நெஞ்சிற்(கு) இதமளிப்ப தில்லை!
உயிர்ப்புதையல் தேடி உருவழியும் உள்ளத்(து)
அயர்வழிக்கும் ஆண்டகையே! போதும் பொருளீட்டல்!
தூங்கா விழியும் துவண்டழியும் பெண்ணுளமும்
ஓங்கனலில் உற்றழியும் முன்னே உயிர்கொண்டு
கண்முன் வருக! கருணைமுகம் காட்டிடுக!
வெண்முல்லை வேரழியு முன்!

மு. முரசு (சென்னை) - ப. மு. அன்வர்
1968

# 313. வரல்வேண்டும் நீயிங்கே!

மாலையிட்டு மணமுடித்து மனங்க வர்ந்த
மன்னவரே! வாழ்வளிக்க வந்த கோவே!
ஓலைவழி வணக்கமொரு கோடி சொல்லி
உளத்துயரை எழுதுகின்றேன்! முன்வி டுத்த
ஓலைகளில் என்நிலையை விரித்தி ருந்தேன்;
ஒன்றுக்கும் பதிலில்லை! தவறென் செய்தேன்?
ஆலைவாய்க் கரும்பாக நைய விட்டீர்!
அயல்நாடு போனவுடன் அன்பை விற்றீர்!

பெண்ணுக்குப் பெருஞ்சொத்துக் கணவன் தானே?
பெருமையெலாம் பேணுபவள் மனைவி தானே?
கண்ணிற்கும் கருத்திற்கும் நானி ருக்கக்
கடைவிரித்த பொய்யுடலை நாட லாமோ?
அண்டிநிற்கும் ஒருநிழலை அற்று விட்டேன்!
ஆண்டவனின் அருளின்னும் வேண்டு கின்றேன்!
பெண்மைநலம் இனிக்காவல் கொள்வ தில்லை!
பேசுவதால் மழைமுகில்கள் பெய்வ தில்லை!

பொறுமைக்கும் எல்லையுண்டு! என்றன் வாழ்வில்
போற்றுமுயர் இன்பத்தைத் துய்த்தே னில்லை;
பருவத்தின் நினைவெல்லாம் பழம்பாய் ஆச்சு!
பனியுடலம் எரிமலையின் நிலையாய்ப் போச்சு!

ஒருநிலையில் எனைவாழ வைத்தாய் இல்லை;
ஒருமுத்தம் தரமழலைச் செல்வம் இல்லை;
பெரும்சுற்றுக் காலமினும் முடிய வில்லை;
பெய்மழையாய் வருவாயேல் மலரும் இன்பம்!

பொருள்வேண்டும்; அதுவாழ்வைக் காத்தல் வேண்டும்!
புகழ்வேண்டும்; அதுஇன்பம் புரத்தல் வேண்டும்!
அருள்வேண்டும்; இத்தனைக்கும் அகத்தில் நல்ல
அறிவாளன் துணைவேண்டும்; வாழ்க்கை முற்றும்
இருள்வேண்டி நிற்பதுதான் வாழ்க்கை யென்றால்
என்கழுத்தில் பொற்றாலி ஏன்தான் வேண்டும்?
வரல்வேண்டும் நீயிங்கே! இல்லை என்றால்
மனம்வெடித்து நான்சாதல் வேண்டும் இன்னே!

த. நேசன்
1973.8.10

- புங்கைப் புகழேந்தி

## 314. இட்டமுத்தம் காயுதையா!

போய்வருவே னென்றுசொல்லிப் போனதிங்கள் போனமச்சான்!
தேய்நிலவாய் நான்உருகித் தினந்தினமும் எலும்பானேன்!

நின்றுநின்று நிலைகுலைந்தேன்! நிம்மதியை நானிழந்தேன்!
அன்றாடம் உம்நினைப்பு அலைக்கழிக்கத் துரும்பானேன்!

நல்லமலர் தொடுத்தேன்நான் நறுமணமும் வீசவில்லை!
உள்ளமதில் உம்மையன்றி ஒருருவம் தெரியவில்லை!

நம்பியிங்(கு) இருக்கின்றேன் நாளுந்தான் செல்கிறது!
தெம்பின்றித் தேம்புகின்றேன் தேற்றுதற்கு யாருமில்லை!

பஞ்சணையும் காத்திருக்கப் பாவையுடல் வாடுதையா!
எஞ்சியநன் னாள்களெல்லாம் ஏக்கத்தால் தேயுதையா!

கன்னத்தில் இட்டமுத்தம் காற்றினிலே காயுதையா!
எண்ணத்தை எழுதிவிட்டேன் எனைத்தேடி வாருமையா!

- அமிர்தம் சோமசன்மா

## 315. உன்அணைப்பில் உயிர்துறப்பேன்!

இட்டமுத்தம் காய்வதற்குள் என்னுயிரே நான்வருவேன்!
பட்டுடலைப் பஞ்சணையாய்ப் பார்ப்பதற்குப் பஞ்சமில்லை!

தேய்நிலவாய் உடல்குலைந்த சேதிதனைத் தாளிகையை
ஆய்கையிலே கண்பதித்தேன் அன்றுமுதல் உறக்கமில்லை!

நல்லமலர் தொடுத்தெடுத்தாய்; நறுமணமும் இல்லையென்றாய்;
உள்ளமலர் இதயமதில் உன்னுருவம் மணக்குதடி!

அன்றாடம் என்நினைப்பு; அதுதானே நம்பிணைப்பு!
உன்பிரிவால் உயிர்பிரியும் உணருகிறேன் துயர்அதிகம்!

பாவையுடல் வாடுதென்று பனிமலரே தேம்புகின்றாய்;
பூவையுடல் புத்தகத்தில் பாவடிக்க நான்வருவேன்!

சிலநாள்கள் பிரிந்துவிட்டேன் சேதிதனை வந்துரைப்பேன்
பலயுகங்கள் உன்அணைப்பில் படுத்திருந்து உயிர்துறப்பேன்!

- சோமசன்மா

## 316. கண்டதுண்டோ?

ஓங்கி வளர்ந்த தென்னைமரம் - அதில்
ஒளிந்து வாழும் சிட்டிரண்டு;
மூங்கில் இலைகள் கொண்டுவந்து - ஒரு
முல்லைப் படுக்கை விரித்தனவாம்!
ஏங்கி யுருகிடும் பெண்ணுடலை - நன்கு
எழிலோ(டு) அணைத்து முத்தமிட்டுப்
பாங்குடன் ஆணும் திளைத்திடுமாம் - அதன்
பான்மை பெண்ணை மயக்கிடுமாம்!

மின்னல் மின்னி வானத்திலே - பெரும்
மழையினைக் கொட்டச் செய்ததுவாம்!
கன்னல் நிகர்த்த மொழியுதிர்த்து - இன்பக்
களிப்பினில் ஒன்றிய காதலர்க்கு

எண்ணம் மழையால் கலைவதுண்டோ? - நல்ல
ஏற்றம் ஒன்றே கண்டனவாம்!
சின்னப் பெண்ணாள் கண்ணசைக்க - உடன்
சின்னப் படுக்கை நாடினவாம்!

மழையின் குளிரும் சிலிர்சிலிர்ப்பும் - அந்த
மஞ்சம் நலம்பெறச் செய்தனவாம்!
தழைக்கும் புதுப்புது உணர்வனைத்தும் - அங்குத்
தணிக்கும் நினைப்புப் பொங்கிடவே
குழைவும் குறுகுறு சீண்டலுமாய் - என்றும்
குறைவிலா இன்பம் ஆயிரமாய்
இழைந்த அத்தனை ஆட்டங்களும் - இந்த
இகத்தினில் மாந்தர் கண்டதுண்டோ?

த. முரசு
1968.7.7

- கு. கிருஷ்ணன்

## 317. பிழையென்ன செய்தேன்?

“உன்னைத்தான் திருமணம்நான் செய்வேன்” என்றே
ஓராயி ரம்முறைகள் சொன்னீர்; அந்தப்
பொன்னொத்த வார்த்தையினை நெஞ்சி லேற்றிப்
பூரிப்பில் நானிருந்தேன்; இன்றோ நீங்கள்
கண்ணைத்தான் இழந்தீரோ அறியேன் வேறோர்
கன்னியினை நாடியதும் என்ன நீதி?
என்னைத்தான் மறந்தீரோ, பிறிதோர் பெண்ணை
ஏற்றிடவும் துணிந்தீரோ, பிழையென் செய்தேன்?

“பலம்கொண்டு தாழ்வுயர்வை உடைப்பேன்” என்று
பாவைமனம் மகிழ்ந்திருக்கச் சொன்னீர்; “அன்பே!
கலங்காதே!” என்றுரைத்தீர்; அவற்றை யெல்லாம்
கருத்துள்ள உண்மையென நெஞ்சில் வைத்தே
நலம்காணும் ஆசையிலே நானி ருந்தேன்!
நங்கையெனை இன்றேனோ தனிமை யாகக்
குலுங்கியழ வைத்தீரே! இதுவா நேர்மை?
குற்றமென்ன யான்செய்தேன்? கூறு வீரே!

சீர்திருத்தக் கொள்கையினை என்னி டத்தில்
சிந்தாமல் செம்மையாய்ப் பேசி யன்றும்
“ஆர்தடுப்பார் நமதன்பை?” என்றே இந்த
அணங்கினையே அணைத்தின்பம் தந்து சொன்னீர்!
“பார்மீதில் நமைப்போன்று வாழ்ந்தோ ரில்லை!
பைங்கொடியே! பனிமலரே!” என்றீர் இன்றோ
கார்சூழ்ந்த குழியினிலே என்னை மட்டும்
கலங்கவிட்டுச் சென்றதுமேன்? பிழையென் செய்தேன்?

காலையிலே எனைக்கண்டு சிரித்துப் பேசிக்
களிப்புடனே கண்சிமிட்டி, “அன்பே இன்று
மாலையிலே உனக்காக மலர்வ னத்தில்
காத்திருப்பேன் வரவேண்டும்,” என்பீர்! நானோ
வேலைகளை விரைவாக முடித்து விட்டு
வேந்தருமைக் காண்பதற்கே விரைவேன்; அந்த
நாளையெலாம் இன்றிங்கே எண்ணி நானும்
நலிகின்றேன்! பிழையென்ன செய்தேன் அத்தான்?

- கடையநல்லூர் ஜமீலா

த. முரசு
1975.8.24

## 318. வாழ்க்கையின் சின்னம்

எண்ணத் தூரிகை வரைந்திடும் கோலம்!
எழிலாய் இணைந்தே எழுப்பிய நாதம்!
கண்ணில் தோன்றிய மின்னலின் கீற்று!
கரும்புத் தேனைக் காட்டிய ஊற்று!

மஞ்சளில் குளித்த மாந்தளிர் அன்னம்!
மங்கிய நிலவில் மைவிழி வண்ணம்
நெஞ்சினிற் புதைந்து நினைவினைக் கொல்லும்!
வஞ்சிதான் என்றன் வாழ்க்கையின் சின்னம்!

- அய். மாரியப்பன்

த. நேசன்
1983.7.17

# 319. கைகாரி அக் காரிகை!

எல்லையிலா இன்பம் எதிர்நோக்கி வந்தாலும்
தொல்லைதரும் வாழ்வைத் தொடமறுத்தேன் - கள்ளியவள்
மையலை ஊட்டியெனை மாற்றிவிட்டாள்; பொல்லாத
கைகாரி யக்காரி கை!

பொன்னும் மணியும் பொருள்சேர் அணிகலனும்
கொண்டுதிகழ் மாப்பிள்ளை கொள்ளென்றார் - ஒண்டொடியாள்
ஐயையோ மாட்டேன் அறிவாளன் வேண்டுமென்றாள்
கைகாரி யக்காரி கை!

வன்துன்பம் வாட்டியதால் வாழ்வை வெறுத்துவிட்டு
மண்ணில் நடைப்பிணமாய் மாறினேன் - இன்முகம்சேர்
மெய்யன்பால் இன்பத்தை மீட்டினாள் சோர்வகற்றும்
கைகாரி யக்காரி கை!

மாதவி
1962, ஏப்பிரல்

- மீசல் பி. எம். அபூபக்கர்

# 320. சொர்க்கப் பேறு!

பனிநிலவின் அமைதியிலே பிள்ளைத் தென்றல்
பழகுமொழி பொழிகின்ற குளிர்மை தோய்ந்து
தனியழகு மலர்கின்ற உயிர்நி லாவே!
தழைத்துவரும் காதலுயிர்க் கலையே! என்றன்
இனியநிலைக்(கு) இருப்பிடமே! அன்பே! உன்றன்
இதயத்தில் அமைதிநிலா நிறைக காதற்
கனிவுநிறைந்(து)! அசையுமொரு கண்வீச் சைத்தா
கடலன்ன படையையும்நான் கலக்கி வெல்வேன்!

அமைதியெனும் ரோஜாவின் நறும ணத்தை
அன்புகுழைத்(து) என்மனத்தில் பொழியும் பேறே!
அமைதியினால் உன்ஆத்மா மலர்ந்தி டட்டும்!
அமைதிக்கும் அப்பாலே அசைதல் இல்லாக்
கமழ்சோலை சொர்க்கமெனும் அந்த வீட்டில்
களிச்சிறகை விரிக்கட்டும் உன்றன் ஆத்மா!
இமைசோர்தல் இல்லாமல் என்றன் அன்பே!
இரவுபகல் நானிருந்து காவல் செய்வேன்!

அச்சமெனும் பிள்ளைமுகில் மூட வொண்ணா
அணிநிலவே! நீஎதற்கு மருள வேண்டும்?
உச்சிமலை அதிர்ந்தாலும் நெஞ்ச வீட்டின்
உள்வைத்துக் காப்பதுதான் என்பே ராண்மை!
துச்சமெனத் தொடர்பகையை நான்மி தித்துத்
தூளாக்கி முடித்திடுவேன்; தாயின் மார்பில்
எச்சில்உமிழ்ந்(து) இனிதுறங்கும் தாலப் பிள்ளை
என்அன்பே நீஎன்றன் ஆத்மா விற்கே!

குயிலிருந்து பாடுமொரு குளிர்கா வுள்ளே
குடிலமைப்பேன்; பஞ்சணையும் பிறவும் சேர்ப்பேன்;
அயலெவரும் வாராத அரண்வ குப்பேன்
ஆருயிரே! உன்மடியில் தலையை வைத்து
மயலேறிப் புயலாகும் வெறிகி ளர்ந்து
வாய்மொழிகள் பொய்யாகும் அந்த நேரம்
இயலாமை கௌவுமடி என்னை! நீயோ
இதழோர ஈரத்தால் எனைந னைப்பாய்!

பனித்துளியின் ஈரத்தால் சிரிக்கும் ரோஜா;
பாவலனின் உணர்ச்சியினால் சிரிக்கும் பாட்டு;
தனித்தனியே ஒளிக்கதிர்பட்(டு) உயிர்சி ரிக்கும்
தழைவானச் செழுமுகிலே! இதழி னோரம்
இனித்தசுவை ஈரத்தால் என்றன் ஆத்மா
இளகிஅதிற் சொக்குமடீ! இமைகள் மூடி
நினைத்தாலும் நீயல்லால் வேறு காணேன்
நிலவுலகில் இதுதான்நான் கண்ட சொர்க்கம்!

1970 - ப. மு. அன்வர்

# 321. சீனக் கிளிகாள்!

சீனக் கிளிகாள்! சிவந்திபோல் மேனியரே!
வானத் துலவுநிலா வாழ்முகத்தீர்! தூய்வெள்ளி
ஏனத் தொடையழகீர்! ஏடலர்பூங் கண்ணழகீர்!
நானத் தொடைமருங்கே நாளெல்லாம் தூங்கேனோ?

பொங்கிவரும் ஆலைப் புகைமுட்ட மைக்குழலீர்!
அங்கியொடும் பாதியுடல் ஆடையொடும் அன்னம்போல்
செங்காலை நீட்டிச் சிறுநடைநீ ரிட்டுவர
நுங்காலைப் பற்றியந்த நூலிடைக்கீழ்ப் பாரேனோ?

வெண்ணுங்கு நேர்முலையீர் வீழ்பழத்தின் செவ்விதழீர்
பண்ணிறைந்த இன்மொழியீர் பட்டுப்போல் மெல்லுடலீர்
தண்ணணைந்த நும்முடலைத் தானணைத்தே மெத்தையிலே
வண்ணஇசைப் பாப்பாடி வாயூறல் பருகேனோ!

- மெ. இளமாறன்

பாத்தேறல்
1981

# 322. அவளைக் கண்டீர்களா?

(தன் அருமைக் காதலியைத் தனிமையாய் விட்டுவிட்டு, தாகத்திற்கு நீர் தேடிச் சென்று, திரும்பி வந்து பார்த்ததும் காணாது கவலையுற்றவராய்
“ஆ! அருமைக் காதலி! எங்குச் சென்றனையோ?
இக் கூட்டத்தில் எங்குச் சென்று தேடுவேன்?”
என வருந்திப் பாடியது.)

(பட்டாபிஷேகம் என்ற மெட்டு)

ஆகா தாகம் தீர வேகமதாய் - ஜலம்
தேடி அதிவிரைவாக வந்தேன் - என்றன்
கண்மணியே காணேன் மனமிக
வெம்பிடவே ஆனேன்,
ஜெகமீதிப் பாவிநானே! இனித்
தேனே யெங்குத் தேடிடுவேன் தானே! (ஆகா)

கட்டிக் கரும்பே கட்டாணி முத்தே - என்றன்
கட்டழகி யேநான் கூட்டிக்கொண்டே - தைப்
பூசம் பார்க்கவே வந்தேன் கதிர்வடி
வேலவனைக் கும்பிட்டேன்;
தேட்டமுடன் வாண வேடிக்கைக்
கூட்டத்திலே விட்டுப் பிரிந்தேனே! (ஆகா)

அங்காடிக் கடைவிற்கும் ஆச்சி[8]களா - தங்கை
அண்ணன் மாரேசிறு தம்பிகளா - ஒரு
மங்கையைப் பார்த்தீர்களா? பார்த்தால்
இப்பாவிக் குரைப்பீர்களே!
அங்கமிக வாடுதய்யோ
எங்குச்சென்று தேடிடுவே னினியே! (ஆகா)

சீன மலாய்க்கார நேயர்களா - பெற்ற
தாய்மக்களா செல்வ ஞோஞா[9]க்களா - மேனி
ரெத்தச் சிவப்புடையாள்; கன்னத்திலோர்
பச்சை மச்ச முடையாள்;
தேனே கண்ணால் காணீர்களா?
கண்டிருந்தால் விண்டிடுவீர் நீங்களே! (ஆகா)

ஆத்து ஓரமீதில் காற்றில் வீற்றிருக்கும்
மித்திர ரேடியர் மிஸ்டர்களா - பத்து
ஆறு வயதுடைய கறுத்த கூந்தலழகுடைய
பத்தினியாள் தனித்துவரப்
பார்த்திருந் தாலிப்பாவிக் குரைத்திடுங்கள் (ஆகா)

- செ. எ. அப்பாஸ் பாவலர்

வழிநடை.
1933

---

*8 ஆச்சி - அம்மையார்*

*9 ஞோஞா - செல்வச் சிறப்புள்ளவள்; சீனமொழிச்சொல். இது மலாக்கா பாபாச் சீனர்களின் சிறப்புச்சொல்.*

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"கீழ்வானச் செங்கதிரால் கிடைக்கின்ற வெளிச்சத்தில்
கிழக்குமட்டும் வெளுப்ப தில்லை"

- கோவி. மணிதாசன்

கூ வாழ்த்து

## 323. மாமன்னர் வாழ்க!

மாமன்னர் வாழ்க! மாமன்னர் வாழ்க!
எங்கள் மலேசியத் தாய்திரு நாட்டின்
மங்காப் புகழ்மிகு மாமன்னர் வாழ்க!
செங்கோல் வளையாது திருநெறி பிழையாது
ஆட்சித் திறத்தின் அடைவது கெழும
மக்கள் நலத்தை உயிரெனக் கருதிப்
பெருந்தொண் டாற்றிப் பேசரும் புகழொடு
திகழும் எங்கோன் வாழிய வாழி!
"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்"கென வாழ்த்திய
சான்றோர் நல்லுரைப் படியெம் நாடு
மிக்க செழிப்பும் மிக்க சிறப்பும்
பெற்றுப் பெருமித முற்றினி தோங்கிட
வாழ்ந்துநல் லாட்சி வளர்க்க வெம்மிறை
வாழ்க! எங்கள் மன்னவர் கொற்றம்
வாழ்க! எங்கள் மாண்புசால் அரசி
வாழ்க! எங்கள் அமைச்சரும் குழுவும்
வாழ்க! எங்கள் மலேசிய நாடு
வாழ்க! என்றும் புகழொடு
சூழ்க. எந்நலம் துகளறப் பயின்றே!

1957 · வீ. கே. சுப்பிரமணியம்

## 324. ஓங்குக துங்குவின் புகழ்!

இகமதில் மலையகம் எமதென எமதென
யாம்ஒரு தினம்வின வினம்
முகமது மலரவும் அகமது குளிரவும்
முகிழ்த்தது சுதந்திர தினம்!
தகநலம் புரிவதும் தகைமையை அறிவதும்
தலைமகன் துங்குவின் குணம்!
பகலவன் எனப்புகை படர்கையைத் துடைத்தொளி
பரப்பிய திங்கவர் மனம்!

ஒருசெயல் தொடுவதும் விடுவதும் மறுசெயல்
உடன்பட முனைவதும் நிலை!
சிறுசெயல் படுவதும் கெடுவதும் சிலர்மன
வினைகளில் இணையறு கலை!
தருசெயக் கனிவளம் பயிர்செய மணிவளம்
தக்கது புலம்பெயும் மழை!
திருசெயப் பெயுமழை அதுமழை உயர்த்திய
தால்இனி யாம்அலை அலை!

## வேறு

தேகத்தை இயக்கிவரும் குருதி யூற்று!
செங்கழனி தங்கிவளர் செந்நெல் நாற்று!
மேகத்தைத் தீண்டிவிடும் தென்றல் காற்று!
மெல்லிசையில் தவழ்ந்துவரும் சந்தப் பாட்டு!
தாகத்தை விடுதலையில் வைத்தார் நேற்று!
தமிழ்சீனம் மலாய்மூன்று மொழிகள் ஏற்றுப்
பாகத்தைப் பிரிக்காமல் அண்ணன் தம்பி
பண்புரைத்த தந்தையிவர் மனமே போற்று!

கால்நடையாய்ச் சிலநேரம் நடந்தும் செல்வார்!
கடைத்தெருவில் மக்களிலே கலந்தும் கொள்வார்!
நாள்நடையைப் போட்டுவந்து மெல்ல மெல்ல
நள்ளிரவைத் தொடுவதுபோல் இவரைத் தொட்டு
நீள்கிறது! முதுமைநாள் அலோர்சு டா[1]ரில்
நிழலாடி நிகழ்கிறது! நிமிர்ந்தே பார்க்கும்
வாள்முனையின் விழிக்கூரோ மழுங்கிற் றில்லை!
வாழ்ந்துதிர்ந்த நாள்களெல்லாம் மணக்கும் முல்லை!

## வேறு

இருளற எமதுவான் இடரற எமதுதாய்
இயங்கிய முதன்முதல் அகல்!
அருள்மிகு சுதந்திரம் அடைந்தனம் துங்குவால்
ஆனது எமக்கொரு பகல்!
வருபகை எதுவெனில் அதுமுதல் எமதவர்
வலிமையின் ஒருமையில் துகள்!
ஒருசுக சரிதையை எழுதுவோம் எழுதுவோம்
ஓங்குக துங்குவின் புகழ்!

த. நேசன் - கரு. வேலுச்சாமி
1983.2.8

1 அலோர்சுடார் - அலோர்ஸ்டார்; கெடா மாநிலத்தின் தலைநகர்; துங்கு பிறந்த ஊர்.

## 325. கல்வித்திட்டம் தந்த ரசாக்!

கலியோட்ட அறிவூட்டும் கவின்மிக்க கல்வி
கதென்று எளிதாக்கும் கலைத்திட்டம்[2] தந்தான்;
பொலிவான தொழிற்சாலை பொருளாக்கம் சேர்க்கப்
புதிதான உடன்பாடு புவியெங்கும் கொண்டான்;
வலிவான நிலத்திட்ட வகைகண்டான்; ஆங்கே
வழுவாத இனம்மூன்றும் வடிவொன்றக் கண்டான்;
நலிவோட்டிப் பொதுநீதி நடக்கின்ற வண்ணம்
நலம்பேணும் அமைச்சுக்கு நடுவானான் வாழ்க!

இயக்கம் - சி. அன்பானந்தம்
1974, மார்ச்சு

## 326. ஆறுமுக நாவலர்

பன்னூலும் தேர்ந்தாய்ந்து பைந்தமிழ்க்குப்
பயன்தூக்கிப் பயிற்று வித்து
நன்னூற்கு உரைகண்டும் நல்விருத்தி
பதிப்பித்தும் நனிசி றக்க
முன்னேற்ற முறைபுகல முற்றுஅரைப்
புள்ளிகளை[3] முதுமொ ழிக்குத்
தன்னாற்றல் கொண்டுயர்த்தித் தமிழ்செழிக்கப்
புதுப்பாதை தந்த செம்மல்!

“நீருக்கும் நுரையுண்டு; நெல்லுக்கும்
உமியுண்டு” என்றெண் ணாமல்
ஊருக்கு அறம்சொன்ன உள்ளொளிரும்
அருட்சோதி வள்ள லார்மேல்
நேருக்கு நேராக நின்றுவழக்
காடியதை நினைத்துப் பார்ப்பின்
பேருக்கு வரலாற்றில் பிழைசிறிதே
என்றெண்ணிப் பீடே காண்போம்!

---

*2 1961ஆம் ஆண்டு ரசாக் கல்வித் திட்டம் உருவானது.*

*3 கால், அரை (, ; : ! ?) முதலாய குறியீடுகளைத் தமிழ்ப் பாடநூலில் புகுத்தியவர்.*

தமிழ்சமயம் இரண்டையுமே தம்விழிகள்
எனப்போற்றி மொழியின் சீர்மை
குமிழாரும் கோட்பாடே குறிக்கோளாய்க்
கொண்டுயிர்த்து, குணத்தின் சால்பு
இமிழ்ஞாலத் தமிழிருப்பில் இருந்தொளிரும்
நிலைபொறித்து, இனிப்பா ரேந்தல்
அமிழ்தாரும் ஆறுமுக நாவலரின்
பெயர்போற்றி அமைவோம் என்றும்!

1987 - சா. சி. குறிஞ்சிக்குமரன்

# 327. செய்யாற்றன் பிறந்தநாள்

தண்ணெடுந் திராவிடத் தனிப்பெருந் தலைவனாம்
வெண்ணெடுந் தாடியன் வேங்கட்ட ராமனின்
எண்ணெடும் எழுபதும் இரண்டாண்டு பாடவே
பண்ணெடுந் தாய்மொழி பழந்தமிழ் போற்றுதும்!

பொன்மலை மீதொளிர் புரட்சிநல் விளக்கினன்;
தன்மதிப் பியக்கியே தமிழரை எழுப்பினன்;
நன்மதிக் கவிஞரை நாடெழப் பெருக்கினன்;
பொன்மொழி பிறந்தநாள் புனிதநாள் வாழ்கவே!

கொட்டினன் முரசொலி கொண்டல்மின் னிடிப்பபோல்!
தட்டியே எழுப்பினன் தமிழரும் விழித்தனர்!
மட்டிலாக் கலைஞரும் மாணவர் குழுமினர்!
வெற்றியோன் பிறந்தநாள் விழாநாள் வாழ்கவே!

ஆண்டுபல் லாயிரம் ஆரியக் கொடுமையின்
தீண்டாமை நோயினால் செத்தவ ராயினோம்;
மீண்டுயிர் அடையவே வேண்டினன் மக்களை
ஈண்டவன் பிறந்தநாள் இனிதுகொண் டாடுவோம்!

ஆரியக் கொடுமையை ஆயிரங் காலமாய்
நேரிலே எதிர்த்துமுன் வெற்றியும் கண்டிலாப்
போரிலே ஒருவனாய்ப் பொருதுமே வென்றவன்!
சீரியன் பிறந்தநாள் சீர்பெற வாழ்கவே!




**இரதபந்தம்**

படிக்கும் முறை :

கீழிருந்து வலமிடம், வலமிடமாகத் தொடர்ந்து மேல்நோக்கிச் சென்று உச்சியிலிருந்து நேர்செங்குத்தாய்க் கீழே வரும்படி படிக்கவும்.

வேட்டுவப் பார்ப்பனர் விளைத்திடும் தீங்கினால்
நாட்டவர் நலிந்தனர் நடைப்பிண மாய்;இனக்
கேட்டதை ஒழிக்கவே கிளர்ந்தெழும் புரட்சியில்
தாட்டிகன் பிறந்தநாள் தமிழர்நாள் வாழ்கவே!

அயோத்தி ராமனின் அவகதை அழிப்பவன்!
பொய்யேற்றும் பார்ப்பனப் புரோகிதம் ஒழிப்பவன்!
மெய்யேற்றும் தமிழவர் மேன்மையை விழைபவன்!
செய்யாற்றன் பிறந்தநாள் திருநாளும் வாழ்கவே!

அன்பர்தம் பணிக்கரும் ஆளாக ஆசையள்;
இன்பரும் தமிழன்பர் ஏற்குநேர் பணிநலாள்;
அன்பினாள் மணியமாள் அறிவியற் காதலின்
பண்பினோன் பிறந்தநாள் பாடரும் பெருநாளே!

கண்மணி போன்'மணி நாட'தைக் காண்பவள்;
பெண்'மணி அம்மளை' பெரும்பொதுப் பணியளை
அண்மையிற் புரட்சியின் அறிவிலே வளர்மணத்
திண்மனோன் பிறந்தநாள் திருநாளும் வாழ்கவே!

பாழும்பொய் மதத்தினால் பாழ்படும் மக்களைச்
சூழுமாக் கேடுகள் துலக்கிய ராமனின்
ஏழுபத் திரண்டொடு இனியபல் ஆண்டுகள்
வாழுக பல்லாண்டு வாழ்த்துமின்! வாழ்த்துமின்!

**வேறு**

*வேதியமா கேடொழிய வேதனையா வாழ்தமிழர் விழுமிதாக
மூதமிழக் குலசான்றோ ராயிரரும் முயன்றும் நொந்துழன்று
ஈதுயரா லேதறியா ஈனரானோர் இழிவேக ஈரோட்டார்
மாதயவா லோயாபணி புரிப்பெரியார் இராமசாமி வாழியவே!

1980, திருவள்ளுவர் ஆண்டு;
1949.10.9

- ச. சா. சின்னப்பனார்

# 328. பல்கலைக்கூடம்

மூதறி வாளர் எங்கள் முத்தமிழ் வல்லார்; ஏதுந்
தீதறி யாத ஞானச் செல்வராம் இராம தாசர்
ஆதவன் போல்இவ் வையம் அணிபெற நிலைக்க வேண்டி
மாதுமை பங்கன் நற்றாள் வழுத்தினன் வாழ்க நன்றே!

* *முன்பக்கத்தில் உள்ள தேர்ச்சித்திரத்தில் இடம்பெற்றுள்ள பாடல் இது.*

பத்தரை மாற்றுப் பொன்னாய்ப் பயன்தந்து வாழும் ஞானச்
சித்தரை, இராம தாசச் செம்மலைப் பெற்ற தாயே!
புத்துரை வழங்கும் மற்றோர் புதல்வரைச் செந்த மிழ்த்தாய்
இத்தரை மீது பெற்றே ஈடிலாப் புகழ்கொண் டாளே!

அன்பொளிர் கின்ற தோற்றம்; அருளொளி பொங்கும் கண்கள்;
பண்பொளிர் கின்ற பேச்சு; பழமுதிர் சோலை போலும்
நண்பொளிர் கின்ற நெஞ்சம்; நடமாடும் கலையின் கூடம்;
இன்பொளிர் இராம தாசர் எந்தைபேர் வாழ்க நன்றே!

மண்ணெனப் பொறுமை காட்டும் மாதவச் சீலர்; சேர்ந்தோர்
பொன்னெனக் கருதத் தக்க புகழினார்; கவிஞர்க் கெல்லாம்
பண்ணெனத் திகழ்வார்; நல்ல பாமுறை தேர்ந்த வள்ளல்;
கண்ணென மாண வர்தம் கருத்தறிந் தொளிசெய் வாரே!

கனிவிலாப் பேரும் அன்னார் கண்ணெதிர் தோன்றுங் காலை
பணியெலாம் மறந்தா ராகும் பாங்கின ராவார்; வெய்ய
பிணியெலாம் தீர்க்கும் ஞானப் பெருவள்ளல் இராம தாசர்
மணிவிழாக் காணச் செய்தோர் மாண்பெயர் வாழ்க நன்றே!

சு. இ. ம. வி. ம. - பொன்முடி
1977

## 329. குடிநலங் காத்து வாழ்க!

தென்கோடி ஜோகூ[4]ரின் திறல்சேர் சுல்தான்[5]
திருவளரும் மலேசியாவின் செழிப்பைக் காக்க
அன்போடு எட்டாம்பே ரரச ராக
அரியணையில் அமர்ந்தின்று பதவி யேற்றார்!
தென்போடு வரவேற்போம்! திலகம் போலத்
திகழ்ந்தவரும் குடிநலத்தைத் திடமாய்க் காத்தே
இன்போடு நெடுங்காலம் இகத்தில் வாழ
இறையருளை எந்நாளும் இறைஞ்சு கின்றோம்!

பு. சமுதாயம் - புலவர் மு. சேதுராமன்
1984, மே

*4 ஜோகூர் - மாநிலம் ஒன்றன் பெயர்*
*5 சுல்தான் - மாநில அரசர் சுல்தான் எனப்படுவார்*

# 330. உயரறிவுச் சான்றோர் வாழ்க!

அருளாளன் அன்புடையோன் அவனி யாளும்
அல்லாஹ்வின் புகழ்பாடித் தொடங்கு கின்றோம்
பொருளாளும் ஃபுருக்கா[6]னைச் சுமந்து வந்து
புகழ்நிறுத்த முஹம்மதுவின் அன்பில் ஊறித்
திரளான வாழ்வுப்பே றனைத்தும் பெற்றுத்
திகழ்கின்ற நல்லவரே! உபைதுல் லாப்போர்க்(கு)
உரியாரே! உளஞ்சிறந்த வாழ்வு பெற்றீர்!
உயரறிவுச் சான்றோரே வாழ்க! வாழ்க!

தொண்டுசெயும் மனப்பண்பால், தொழுகை நோன்பால்,
தொடர்ந்தறிவு தேடுகின்ற பெருவி ருப்பால்,
அண்டிவரு வார்க்குதவும் அரவ ணைப்பால்,
அயராத பேருழைப்பால், உயர்வின் எல்லை
கண்டறிந்து கனிந்திருக்கும் இனிய ரேஉம்
கணக்கறிந்து மாமன்னர் டான்ஸ்ரீ[7] பட்டச்
செண்டளித்துச் சிறப்புமிகச் செய்த தெண்ணிச்
சிந்தைமகிழ்ந் தன்போடு வாழ்த்து கின்றோம்!

சமுதாய முன்னேற்றம் பெரிதென் றெண்ணிச்
சலியாமல் உழைக்கின்ற பெரிய உள்ளம்
அமுதாகப் பெற்றுள்ளீர்; ஆத லாலே
அடுத்தடுத்த படிகடந்து செல்லும் போதே
உமையாளத் தேர்ந்தெடுத்த மக்கள் எல்லாம்
உயர்ந்திருக்கும் படிநீரும் உயந்தி ருக்க
நமையாளும் அல்லாஹ்வை இறைஞ்சு கின்றோம்
நல்லதமிழ் போல்சிறந்து வாழ்க வென்றே!

1973 - ப. மு. அன்வர்

---

*6 ஃபுருக்கான் - திருக்குர்ஆன்*
*7 டான்ஸ்ரீ - TANSRI - பேரரசர் வழங்கும் உயர்தகுதி விருது.*

# 331. ஊ தாண்டு வாழ்க!

தர்மம் தழைக்கச் சமாதானம் மேலோங்கப்
பர்மாமண் உலகுக்குப் பரிந்தளித்த புனிதமகன்!
வானத்துக் கிழக்கில் வருங்கதிர்போல் வந்தபிரான்!
ஞானத்தில் புத்தன் நடந்ததுபோல் நடைபயில்வோன்!
வையகத்தின் தலையெழுத்தை வகுக்கவந்த நெறியாளன்!
கையகத்தின் போர்ப்பேயின் கழுத்தறுக்கும் வாளெடுப்போன்!
இருவேறு துருவத்தை இணைத்துவைக்கும் காந்தக்கல்!
கருக்கிருட்டுப் போர்முகில்கள் கலைக்கவந்த வெண்ணிலவு!
துருக்கிக்கும் கிரீசுக்கும் தோளுக்குத் தோள்தந்து
குருதிக்குக் குருதியெனும் கொள்கைக்கு வேட்டுவைத்து,
காங்கோவில் மூண்ட கனலுக்குப் புனல்வார்த்துப்
பாங்கோடு வெள்ளைக் கொடிபறக்கப் பறந்தபுறா!
இந்துஸ்தான் பாக்கிஸ்தான் எல்லையிலே இந்தியத்தாய்
சிந்திய கண்ணீர்க்குத் திருக்கரத்தால் வரப்பெடுத்தோன்!
மூன்றாம் உலகப்போர் மூளாமல் காத்திருக்கச்
சான்றோன் தனைத்தந்து தடுப்புச் சுவரெடுத்தோன்!
வடக்கிற்கும் தெற்கிற்கும் வழிபார்த்துப் பழிவிரித்து
நடக்கும் வியட்நாமின் நாடித் துடிப்பறிந்து
இரண்டிற்கும் இடையே இதயத்தால் பாலமிட்டு
உருண்ட பிணமலைகள் ஓய்வெடுக்கக் குரலெடுத்தோன்!
வாஷிங்டன் தலைகுனிய, மாஸ்கோ தனதாக,
ஆசியா முழுமைக்கும் அரசாள நினைக்கின்ற
பீக்கிங்கை உள்ளிழுத்துப் பேரவையில் பேசவைத்து
வாக்கால் அறிவுதர வாய்க்காலாய்த் தானெழுந்தோன்!
அணுப்பலமும் பணபலமும் அடைந்திருக்கும் அமெரிக்கா
முனைமுகத்தில் பின்வாங்கி முழுஉலகும் அமைதிபெற
முன்னிற்க வேண்டுமென முன்மொழிந்தோன்; அஃதேபோல்
தன்னிரு கைகொண்டு தழுவினோன் மாஸ்கோவை
அழிவுதரும் அணுக்குண்டின் ஆராய்ச்சி கைகழுவப்
பழியுணர்வு தலைமுழுகப் பாரெல்லாம் முரசறைந்தோன்!
பச்சை விளக்கேற்றி வெள்ளைப் புறாப்போல
மெச்சப் பணிசெய்த விந்தைப் பெருமனிதன்!
ஊதாண்டை நினைக்கின்ற உள்ளமும் தீத்தாண்டும்
பூத்தாண்டும் வண்டுக்கும் புனிதமனம் வந்துவிடும்!
பண்டிதருங் கென்னடியும் பாராட்டிச் சிறப்புரைத்த
பண்டிதர்க்குப் பண்டிதனாம்! பார்போற்றும் கண்ணியனாம்!
சவகரின் பேராலே சமாதானப் பரிசொன்றைக்
கவர்ந்தவனாம்! அமைதிக்குக் காவலனாம்! வீசுகின்ற
வாடையிலும் பண்பாடாம்! தென்றலிலும் பண்பாடாம்!

கோடையிலே குளிராகக் குன்றேறும் பண்பாடாம்!
ஊரெல்லாம் இதயத்தின் உறவென்றால் பகையேது?
பேரே 'பரிசுத்தம்'[8] பிழைவருமோ அவன்செயலில்?
இடியே விழுந்தாலும் இடராத இரும்பிதயம்!
துடிப்போர்க்கு மட்டும் துடிக்கும் கரும்பிதயம்!
பேருந்து விபத்தொன்றில் பிள்ளை உயிர்போக
நேரிட்ட கொடுமைக்கும் நிலைகுலையா மலையுள்ளம்!
இத்தகைய பண்பாட்டின் எண்ணப் பெருவெளியைக்
குத்தகைக்குக் கேட்டால் கொடுப்பாரோ? கொடுக்காத
காரணத்தால் சிற்சிலபேர் காய்ந்தாலும் ஓய்ந்தாரா?
பூரணத்தைக் கண்டெடுக்கப் புறப்பட்டார்; ஆனாலும்,
வெற்றித் திருமங்கை விலகியே சென்றதனால்
நெற்றித் திலகமென நின்றிருந்த ஊதாண்டும்
சற்றே விலகிவிடத் தான்நினைத்தார் என்றாலும்
முற்றும் அறிந்திருந்த முழுவையம் விடவில்லை
"நீர்தான் மிகப்பொருத்தம் நீரின்றேல் வியட்நாமில்
போர்தான் மிகமூளும், புவிமூன்றாம் களம்காணும்
ஆகவே இந்த அகிலத்துப் பேரவையில்
போகவே கூடாத புனிதர்நீர் தேவை"யென்றார்!
நீதித்தாய் விடுத்த நெடுங்குரலில் கட்டுண்டு
மேதினிக்கு வந்தானே மீண்டுமந்த சித்தார்த்தன்!
வளர்ச்சிபெறும் அறிவியலால்; வகையற்ற சித்தாந்தக்
கிளர்ச்சிகளால் பேரேட்டைக் கிழிக்கவரும் காலத்தைக்
கையில் பிடித்துக் காரணங்கள் கேட்டறிந்து
வையத்தைச் சிலகாலம் வாழ்விக்க வந்தவனை,
கதியில்லை என்றேநாம் கதிகலங்க வேறிங்கே
விதியில்லை என்பதனால் மீண்டும் எழுந்தவனை
மனமார வாழ்த்தி வாயாரப் பாராட்டி
வணங்கி வரவேற்போம் நன்கு!

- ஐ. உலகநாதன்

## 332. வாழ்வின் தோழா நீ வாழ்க!

போர்த்தின வெடுத்து மோதும் புயலுக்கும் அலைவீச் சுக்கும்
கார்த்திரள் இடித்து மின்னும் களத்துக்கும் தலைசா யாமல்
ஊர்க்கெலாம் காவல் நானென் றுலாவரும் உறுதி யாளன்
பீர்க்கம்பூ மார்க்க ழிச்சொற் பிள்ளைநீ யாவன் கொல்லோ?

---

*8 ஊ தாண்டு - U Thant என்னும் பர்மியச் சொல்விற்குத் 'தூய்மை' என்பது பொருள்*

குவளையூர் முத்து வேலன் கொதிப்பினில் குதித்துத் தாவிக்
கவலையே றாத நெஞ்சக் காவிரி அஞ்சு கத்தாய்
குவளையிற் குடியி ருந்து கொடியுண வருந்தி ஓர்நாள்
கவலைதோய்ந் திருந்த நாட்டிற் காவலன் நீபி றந்தாய்!

ஈரோட்டுப் பள்ளிக் கூடத் திருந்துநீ கற்ற பாடம்
தேரோட்டும் செஞ்சொல் அண்ணா தெருட்டிய கழகந் தன்னில்
சீராட்டத் துணையா யிற்று; தேர்ந்துநீ கலைஞன் ஆனாய்;
போராட்டம் பலகண் டாங்கே புடம்போட்ட தங்க மானாய்!

தமிழென்றாய்; அமிழ்த மென்றாய்; தலையதற் குரிய தென்றாய்;
தமிழினம் என்றாய்; என்னைத் தந்தேன்அஃ துயர வென்றாய்;
உமியிருந் தால்மு ளைக்கும் செந்நெல்லாய் உணர்ச்சி யுள்ளோர்
சுமையென்னார் நெஞ்ச மெல்லாம் துளிர்த்துநீ வளர்கின் றாயால்!

வெற்றிவேற் சொல்லெ டுத்து நிகழ்த்தும்நின் மேடைப் பேச்சுச்
சுற்றிய பகைக்கூட் டத்தைத் துரத்திடும் கணைகள் என்றால்
முற்றும்நீ உடன்பி றப்புக் கெழுதிடும் முடங்கல் எல்லாம்
கற்றவர்க்(கு) அமிழ்தம் தொண்டர் கூட்டத்தின் கைவா ளாகும்!

புதுப்புது நயங்கள் காட்டும் பூந்தமிழ் செறிந்த நெஞ்சில்
பதைப்புறு தமிழர் வாழ்வின் பாழ்நிலை படம்வி ரித்துக்
கொதிப்புறச் செய்வ தால்தான் கொட்டும்தேள் கூட்டத் துள்ளும்
நதிப்புனல் நடைந டந்து நாளெல்லாம் தேய்கின் றாயால்!

அறுபதைக் கடந்த வாழ்வின் ஆயிரம் அனுப வங்கள்
உறுபகை யொழிக்க வாய்ந்த ஒளிவீசும் படைக்க லன்கள்!
சிறுபகை யல்ல நாட்டின் சிறப்பையே வேர றுக்கும்
எறிபடை அவற்றை யெல்லாம் அழித்தலுன் பொறுப்பே யாகும்!

- ப. மு. அன்வர்

நம்குரல்
1984, ஆகஸ்டு

## 333. கடவுளா காந்தி?

'திருவரைக் கல்'எனும் உயர்நாமக் கல்லில்
இருநான் ககவை துள்ளு கன்றுநான்!
அரிச்சுவடி தொட்டு,தமிழ் அடிச்சுவடு பற்றி
உயிர்மெய் எழுத்தெலாம் ஓதக் கற்ற

படிப்பாளி எனவீதி பார்த்திட்ட பருவம்!
வடிதமிழ் வழங்கும் ஆசான் அழைத்துக்
"காந்தி வருகிறார் காலையில், கடிதே
மாணவ ரனைவரும் வரவேண்டும்" என்றார்!
காணாத காட்சியைக் காணும் அவாவால்
துள்ளாட்டம் போட்டே இல்லம் அடைந்து
அன்னைக்குச் சொன்னேன்; அவர்"குளி" என்றார்!
மிடாத்தண் ணீரை வாரி ஊற்றினேன்!
உண்டபின் அன்னை உட்கார வைத்தே
என்தலை சீவி ஈட்டழகு நோக்கித்
தாழம்பூ இடையிட்டுச் சடைப்பின்ன லமைத்துச்
சீலைக் கரையால் சிறுகுஞ்சம் பொருத்தி,
நீறிட்ட நெற்றியில் நேர்சாந்து வைத்தார்!
"கண்ணேறு படுமேஎன் கண்ணே உனக்கே"
என்றெண்ணி அன்னை எண்ணெய்த்திரி ஏற்றி
என்னை நிறுத்தி எரிசுற்றி எறிந்தார்!
ஒப்பனை முடிந்தது; ஊர்போர்த்த இரவோ
எப்பொழுது போம்என ஏங்கி யிருந்தேன்!
தரையில் படுத்தால் தலைகலைந்து போமெனச்
சுவர்மூலை குந்தித் தூங்காது தூங்கினேன்!
சேவல் சிலிர்த்துக் கூவ லிட்டது!
ஆவல் சிலிர்த்தது! அம்மா! வென்றேன்
"பள்ளிப் பிள்ளைகள் படையொடு போ"வென
அள்ளி நிறுத்தி, அமுதெனக் கூட்டி,
இருமுழத் துண்டு இடுப்பில் கட்டினார்!
கோவணங் கட்டி, குண்டாடித் திரிந்த
சுதந்திரன் எனக்குத் துண்டுவிலங் காயிற்று!
குளக்கரை நெடுகிலும் வரிசை பிடித்தோம்!
தவளைகள் தாரகம் முழக்கின; விடிந்தது!
நாமக்கல் பாறை தலைகளால் நிறைந்தது!
இராட்டைக் கொடிப்படை நல்லணி செய்தோம்!
காந்தியும் சின்னக் காந்தி[9]யும் வந்தனர்!
காங்கிரசு வந்தது "காந்திக்கு ஜே"என!
மகனுக்குக் காவலாய் வந்த என்னன்னை
"கும்பிடு மகனே கும்பிடு" என்றார்!
அடிவயிறு எக்க ஆவேசத் தோடு
"காந்திக்கு ஜே"எனக் கத்தி னேனே!

---

*9 சின்னக் காந்தி - இராஜாஜி*

அப்போழ்து;
இடையேறிய துண்டு 'பட்'டென அவிழ்ந்து
தரையில் வீழ்ந்தது! விடுதலை யடைந்தேன்!
அன்பால் உலகை ஆளும் அண்ணல்என்
கன்னம் தடவினார் அன்னையைப் போன்று!
விலங்கறு படவே நலஞ்சொலுங் காந்தி
பாறை ஏறினார்! கொல்லி மலையின்
கூரை ஏறினான் காலைக் கதிரோன்!
பொன்கதி ரொளிபட மின்னு மேனியன்
நன்மொழி கேட்டு, நாமக்கல் நின்றது!
“அம்மா" என்றேன்; அன்னை”ஏன்” என்றார்!
“காந்தி கடவுளா?" என்றது என்வாய்!
“ஆம்'எனத் தலையை ஆட்டினார் என்தாய்!
அன்றுஅப் பொருளை உணர்ந்தே னில்லை!
இன்றுஅப் பொருள்தான் இதுவெனக் கண்டேன்:
“கருணை யாளனே கடவுள் - காந்தி அவ்வாறே!
அன்பு மிகுந்தவன் கடவுள் - அண்ணல் அவ்வாறே!
துன்பஞ் செய்யான் கடவுள் - தூயன் அவ்வாறே!
உலகப் பொதுவாம் கடவுள் - உத்தமன் அவ்வாறே!
கடவுட் கொள்கை காந்திக்(கு) இருப்பதால்
காந்தியும் கடவுளும் ஒன்றெனக் கொண்டேன்!”*

- கா. பெருமாள்

ம. கா. நா. ம.
1969

## 334. நற்குப்புசாமி

பொற்குப்பை ஏந்து புவிக்களந்த தெற்குப்போய்
நெற்குப்பை ஏந்தி நிலம்பெயர்ந்தும் - கற்கொப்பாய்ச்
சொற்குப்பைக் குள்ளே துயில்வோர் விழிப்பெண்ணும்
நற்குப்பு சாமி இவன்.

- செ. சீனி நைனாமுஹம்மது

சி. வி. கு. ம.
1972

---

* *1972ஆம் ஆண்டு, ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர்த் திங்கள்களில், காந்தியடிகள் தமிழ்நாட்டுச் சுற்றுலா மேற்கொண்ட பாழுது, இந் நிகழ்ச்சி நடந்தது.*

# 335. வாரியார் தொண்டு ஓங்குகவே!

| | |
|---|---|
| பிறைதவழ் மௌலிப் பிரானருட் சத் | தி |
| நிறைதவழ் மதிதொழு நெறிபல வாத்த | ரு |
| முப்பொருள் உண்மை முழுதும் தெரிப்ப | ப் |
| பழமைசேர் காதையும் புதுமைய பொழிப் | பு |
| மொருங்கே செறிந்த உரையாடி உண்ணெ | க |
| நகைச்சுவை இடையிடை நனிமிகத் திக | ழ |
| கேட்போர் சலியாமே இன்சொற்பல கெழு | மி |
| இயலிசை நாடக உறுப்புற வின்தமி | ழ் |
| காவலர் பாவலர் நாவலர் கலந் | த |
| வியனுறு குரவர் பத்தில் பத் | தி |
| மாபெருங் குழுஉ நாள்தொறுஞ் சூழ்த | ரு |
| பேரவை மும்முர சார்த்தே உரு | மு |
| கோடை யிடிப்புரை மேடை அதிர்வ | ரு |
| கஞ்சங் கண்டந் தோல்துளை நரம்பி | க |
| வில்லிசை பாவஞ் சுராஅனு பங் | கி |
| சேணப் பால | ரு |
| மீண்டு மிவ்வியாழ் யாண்டுள தென் | பா |
| ராயுள நேடி மாஅ | ன |
| நிலமிசைத் தோன்றும் பெருமை யுணர்வு | ந் |
| துன்வாய்ச் சாலக முளசொற் பெருக்கி | த |
| முறழிசை ஞானத் திறல்வியந் தலை | வா |
| யேய்ப்பப் பொருள்வி | ரி |
| கலைஞ! புராணிக! குமரற் றொழுகை | யா |
| பண்டித சிகாமணி பாம்பன் சுவாமியா | ர் |
| முண்டகத் தாளிணை விண்டக நினைப் | ப |
| ஆறுமுக னார்பவ நீக்கு மருட்கட | ல் |
| ஆதலின் யாவரும் ஓதுகென் பழுதி | லா |
| அருண கிரிப்புகழ் அமிர்த தாரையு | ண் |
| டிருவினை நேர்மல பாகங் கண் | டு |
| சத்திநி பாதம் பதிமதி தலை | வா |
| பத்தர் பணியிற் பரிவுற | ழ் |
| சுத்தவாழ் வாயுள் தொண்டோங் | குகவே! |

- யாழ். ஏ. ஆறுமுகனார்

## 336. கவிமணி கிருஷ்ணதாசர்

பழங்காலப் புலவர்கள் நிரலில் நிற்பான்!
புதுமைக்கும் இவன்கவிதை பொருந்தும்! வாழ்வில்
கிழங்காண முடியாத அனுப வத்தைக்
காட்சிக்கு வைத்திடுவான்! மக்கள் முன்னர்
முழங்காத உரையில்லை! பண்டிட் ஆறு
முகமென்னும் கவிக்கோமான் எழுத்தால் பேச்சால்
வழங்காத ஒன்றுண்டு என்றும் யாரும்
விளம்பற்கு வியலாமல் எல்லாம் சொன்னான்!

வீரமா முனிவர்க்குத் தமிழ்போ தித்த
விறல்சுப்ர தீபக்கவி ராயர் கொள்ளுப்
பேரனாய்ப் பிறந்தநற் பேற்றி னாலோ
படைப்புகள் அனைத்தினிலும் எதுகை மோனை
சீரார்க்கும்; கருத்துடனே தொடையும் சீரும்
சிறப்பார்க்கும் அணிநின்று; பேச்சுங் கூட
நீரோடும் அருவியெனச் சரள மாக
நயமான கவிதையிலே நவில்வா னய்யா!

பொன்னி
1967, டிசம்பர்

- இரா. நெ. இசுமாயில்

## 337. அத்திப்பூ

தலைமுறையின் சிந்தனையை வாழ்க்கைப் போக்கை,
தனிச்சிறப்பிற் குரியகலைப் பண்பை எல்லாம்
குலையாமல் தொகுத்தளிக்கும் இலக்கி யத்தைக்
கொத்தாகச் சுமந்திருந்த சுவடி ஏட்டை
அலையாடும் பதினெட்டாம் பெருக்கில் போக்கி
அழித்தவர்நாம்! நாம்விட்டு வைத்த வற்றை
இலையுண்ணும் பூச்சிமுதல் கறையான் செந்தீ
இருந்துண்டு தீர்த்தகதை மறந்தா போகும்?

அழிந்தொழியும் சுவடிகளை அச்சி லேற்றும்
அருந்தொழிலைத் தொடங்கியவன் கோவ ளத்தின்
கொழுந்தான ஷெய்கப்துல் காதிர் லெப்பை
கொடிபோட்ட மூன்றுமொழிப் புலவன்! பின்னர்ப்

பொழிந்தமுகில் அன்னமொழிப் புலவன், ஈழப்
புலித்தாமோ தரம்பிள்ளை அதனைச் செய்தான்!
எழுந்தானே காவேரிக் கரைக்கு ழந்தை
எங்கள்தமிழ் உவேசா! அவனுக் குப்பின்

எத்தனையெத் தனைகாதம் பயணம் செய்தான்!
எத்தனையெத் தனைதுன்பம் அனுப வித்தான்!
எத்தனையெத் தனையிரவும் பகலும் போக்கி
எத்தனையெத் தனைசுவடி சேக ரித்தான்!
அத்தனையும் தமிழ்ஐயா! தமிழ்நூல் ஐயா!
அழியாமல் காப்பாற்றி அச்சி லேற்றி
முத்தொளிர வைத்தானே மலைவி ளக்காய்
முப்போதும் அவன்புகழைப் பாட வேண்டும்!

பத்துப்பாட் டெண்தொகையும் இளங்கோ தந்த
பரல்சிலம்பும் மேகலையும் கீழ்க்க ணக்கின்
முத்துப்பாட் டும்பிறவும் கால வெள்ளம்
மொய்த்தெடுத்துப் போகாமல் கரைசேர்த் தானே!
அத்திப்பூ! ஆம்சாமி நாத னேதான்!
அதனால்தான் பெரும்பேரா சிரிய னானான்
தித்திப்புத் தமிழுள்ள கால மெல்லாம்
சிந்தனையில் இருப்பானை வாழ்த்து நெஞ்சே!

1987 - ப. மு. அன்வர்

## 338. சிங்கமே வாழ்க!

உலகமா மனிதர் என்னும் உயரிய விருதைப் பெற்ற
திலகமே! மலேசி யாவின் சிகரமே! உலகப் பார்வை
விலகுமா உம்மை விட்டு! வெண்குளிர் நிலவே! எங்கள்
உலகமே நீதான் என்னும் உண்மையை ஒப்புக் கொண்டோம்!

சாலையைச் சோலை யாக்கச் சந்தனக் கதவை வைத்து
மேலைநாட் டினரை எல்லாம் வியந்திட வைத்தாய்! வண்ணச்
சேலையாம் அலைகள் மின்னும் சிந்தனைப் பினாங்குப் பாலம்
நீளமாம்! வானில் கொஞ்சும் நீலமாய் நிறைந்து நின்றாய்!

பொதுப்பணித் துறைக்கு மேலும் புகழ்மணி சேர்த்த எங்கள்
நதிப்பணி அமைச்சே! நாட்டின் நற்பெயர் உலக ஏட்டின்
பதிப்பிலே மலரச் செய்து பாரெலாம் மணத்தைத் தந்து
புதுப்புது வரலா றெல்லாம் பூத்ததும் உன்னா லன்றோ

திங்களை வானை விட்டுத் திடுமெனப் பெயர்த்தெ டுத்தே
உங்களை அங்கே வைத்தே உலகமே அழகு பார்க்கும்
மங்கலம் என்ன சொல்வேன் வீரமே! தமிழ்த்தாய் பெற்ற
தங்கமே! சாமி வேலு சிங்கமே! வாழ்க! வாழ்க!

த. நேசன் - தீ. சி. பொன்னுசாமி
1987.3.8

# 339. முத்தமிழை அரியணையில் ஏற்றியவர்!

வாழ்விற்கு வழிதேடி வளநாடு வந்தவர்கள்
பாழ்பட்ட கொள்கைகளைப் பாடைகட்டிப் புதைக்காமல்
கையோடு கொண்டுவந்து கண்ணொற்றிக் கொண்டார்கள்
ஐயோ!நம் இனத்தார்கள் அதனாலே கெட்டார்கள்!
“வரலாற்றின் திருப்புமுனை” வாழ்வுக்கு வழிகாட்டி!
உரம்வாய்ந்த செந்தமிழுக் குயிர்தந்த செந்தமிழ்வேள்
மண்மீதில் பெறற்கரிய மாணிக்கம் தனக்குநிகர்
தன்மான உணர்வுள்ள சாரங்க பாணியவர்!
கறைபட்ட வரலாற்றைக் கடுமுழைப்பால் அழித்தெழுத
நிறைவான மனத்தோடு களம்புகுந்த நெறியாளர்!
“அறியாமை அகன்றால்தான் அருந்தமிழர்க் குயா”வென்ற
பெரியாரின் கருத்துகளை எதிரொலித்த பேச்சாளர்!
சீர்திருத்தச் சங்கத்தைச் சிறப்பாக வழிநடத்தி
ஊர்திருத்தம் கண்டுயர உழைத்திட்ட பாட்டாளர்!
பெரும்படியாய் நடந்திட்ட பிற்போக்கு மணநிகழ்வை
உருப்படியாய் நல்லபடி உள்ளபடி மாற்றியவர்!
முரசென்னும் நாளேட்டை முனைப்போடு வெளியிட்டே
அரசாள முத்தமிழை அரியணையில் ஏற்றியவர்!
செய்தொழிலால் ஒருவரது சிறப்புகளைக் கணிக்காமல்
மெய்நடப்பால் கண்டுணர மிகத்தெளிவாய்ச் சொல்லியவர்!
“இக்கரையில் ஒருகாலும் எழில்கடலுக் கப்பாலே
அக்கரையில் ஒன்றுமாய் அலைக்கழிதல் நன்றாமோ?
வௌவால்போல் ஊசலிடும் வாழ்வுமொரு வாழ்வாமோ?

செவ்வாழை போல்சிறக்கச் சிந்திக்க வேண்டாவோ?"
என்று பகலிரவாய் எல்லார்க்கும் எடுத்தோதிக்
குன்றனைய வாழ்வெய்தக் குடியுரிமை பெறச்செய்து,
தலைநிமிர்ந்து வாழ்ந்திடவே தக்கவழி காட்டியவர்!
தொலைநோக்கும் பார்வையினால் சூழ்துன்பம் ஓட்டியவர்!
சங்கங்கள் யாவையும் சமநோக்கால் ஒன்றிணைத்துத்
தங்கநிகர் கொள்கையினால் தமிழர்களை உய்வித்துப்
பொங்கிவரும் பெருமிதத்தால் பூரித்த உளத்தோடு
சிங்கம்போல் வலம்தந்து செயல்முடித்த பெருந்தலைவர்!
பலகலைசேர் கழகத்தில் பைந்தமிழ்க்குத் தடைபோட்டு
நலங்கெட்ட வடமொழியை நிலைநாட்ட முயற்சிசெய்த
நீலகண்ட[10] சாத்திரியின் நேர்வைரி! தமிழ்ப்பகைவன்
ஆலமுண்ட இறையெனினும் ஆர்த்தொலித்த போர்முரசம்!
"மதத்தாலும் குலத்தாலும் மாறுபட்ட கருத்தாலும்
சிதறுண்டு போனதனால் சீரிழந்து பேரிழந்தோம்!
விண்மீன்கள் கூட்டம்போல் வெவ்வேறாய்ப் பிரிந்ததனால்
மண்கவ்வ வீரமெல்லாம் மதிப்பிழந்து தலைகுனிந்தோம்!
திசைகள்போல் ஒருபோதும் சேராத இனமாக
வசைகொண்டு வாழ்ந்ததனால் வலிவிழந்து நலிவடைந்தோம்!
மலாயர்கள் சீனர்கள்போல் மண்ணகத்தில் அச்சமின்றி
உலாவர வேண்டுமெனில் ஒன்றுபட்டால் தான்முடியும்!
ஒருதாயின் மக்கள்நாம் உடன்பாடு காண்பதற்குப்
பெருந்தடைக ளொன்றுமில்லை பேரூக்கம் கொண்டெழுவீர்!
ஏசுமதக் காரர்களும் இசுலாமிய ரானோரும்
மாசில்லாச் சைவர்களும் மணித்தமிழால் பிணைந்திடுவோம்!
வெள்ளம்போல் திரண்டிடுவோம்! வீரத்தில் சிறந்திடுவோம்!
கள்ளத்தை விட்டொழித்துக் கலைமகளைத் தொட்டணைப்போம்!
தைத்திங்கள் முதல்நாளில் தமிழர்திரு நாள்காண்போம்!
நைந்திட்ட வரலாற்றை நலப்படுத்தி நாம்வாழ்வோம்!
நாம்நினைத்தால் விதிபடுக்கும்; நாம்முயன்றால் எதும்நடக்கும்!
ஆம்,அறிவீர்" எனமுழங்கி னார்!

கவிக்குல. - அமலதாசன்
1982

---

*10 மலாயாப் பல்கலைக் கழகத்தில், இந்திய ஆய்வியல்துறை அமைக்கும் முயற்சி நடந்தபோது இந்திய நாட்டின் பேராளராக வந்திருந்த நீலகண்ட சாத்திரியார், தமிழுக்குத் தனித்தன்மை தாராமல் வடமொழிக்கு தருமாறு பரிந்துரைத்தார்.*

# 340. பாரதியைப் போல...

இன்றைய கவிஞ ரெல்லாம் இயற்றிடும் பாட்டைப் போன்றா
அன்றைய கவிஞன் பாட்டும் அமைந்தது? குருதி யெல்லாம்
சென்றுமே கலந்த செஞ்சொற் பாடலால் வீரம் ஊட்டி
நின்றபா ரதியைப் போல நிலத்திலே ஒருவ ருண்டோ?

நெஞ்செலாம் வீரம் பொங்க நினைவெலாம் உறுதி பூண
விஞ்சிடும் ஆர்வத் தாலே மிகவிழை வுடனே நாட்டை
அஞ்சிடா வண்ணம் காக்க அருந்தமிழ் பெருமை சேர்க்கக்
கொஞ்சிடும் பாட்டில் வேகம் கூடவே பாடி வைத்தான்!

கண்ணனின் பாட்டைத் தொட்டால் கனிந்தது தேனா கும்நல்
வண்ணமாம் குயிலின் பாட்டால் வாயெல்லாம் கன்ன லாகும்!
எண்ணமே வீர மாக எழுதிய பாடல் இன்றும்
உண்மையில் நெஞ்சைத் தட்டி உணர்ச்சியில் புடைக்கச் செய்யும்!

உலகெலாம் அவனின் பாட்டு உலவியே வருதல் வேண்டும்!
நிலமெலாம் அடிமை வாழ்வு நீங்கிடச் செய்தல் வேண்டும்!
உளமெலாம் அவன்பா வெல்லாம் ஊறியே பரவ வேண்டும்!
நலமெலாம் செழித்தே மண்ணில் நல்லறம் பெருக வேண்டும்!

- நாமக்கல் இரா. நெடுமாறன்

த. முரசு
1964.4.13

# 341. கல்விக் கனிமரம்

கல்வியெனும் கனிகுலுங்க நடுவூர் நிற்கும்
　　கனிமரமாம்; தாம்பெற்ற செல்வந் தன்னை
அள்ளியள்ளித் தந்ததனால் ஏற்றம் பெற்றோர்
　　அணிகண்டே பூரிக்கும் பரந்த நெஞ்சம்;
வெள்ளைமனப் பிள்ளையெனும் விளைநி லத்தில்
　　வித்தூன்றுங் கலைபயிற்றுந் தொண்டி னாலே
எல்லையிலாப் பெருநிலையைச் சமைத்த கோனாம்
　　என்றென்றும் இவர்பணிகள் நிலைத்து நிற்கும்!

பன்மொழிகள் கற்றறிந்த புலமைச் செல்வம்;
பண்பாட்டு மணம்வீசப் பரவுந் தென்றல்;
நன்னெறிகள் தமைத்தீமை நெருங்கா வண்ணம்
நலியாமல் எரிகின்ற செந்தீ; நல்ல
தன்மைகளால் புகழ்வீசும் ஒளிவி ளக்கு;
சாந்துணையும் கல்வித்தேன் தேருந் தும்பி;
முன்னின்று வழிகாட்டுந் தகைமை யாளர்
முதல்வருயர் சுப்(பி)ரமணியர் வாழ்க மாதோ!

ஆ. தீ. - முரசு. நெடுமாறன்
1985/1986

## 342. மக்கள் தொண்டன் வாழ்க!

வாய்ப்பந்தல் போடாது வாய்புக்குள் மனந்தொட்டு
வாழும்நம் மக்கள் தொண்டன்!
தாய்பாலை மறக்காது தமிழ்ப்பாலை வெறுக்காது
தமிழர்பூங் காவின் அன்பன்!
ஆய்வாற்றல் திறன்பெற்றே அதற்கும்ஓர் அடையாளம்
அரும்புகழாய்ப் பெற்ற தென்னன்!
தூய்மையுடன் வாய்மையினால் தொழிலாளர் உலகத்தில்
தொட்டபணி செய்யும் நண்பன்!

ஏற்றங்கள் மாற்றங்கள் எவ்வளவோ நிகழ்ந்தாலும்
இந்நாட்டில் தமிழர் தம்மின்
நாற்றங்கால் வடிகால்கள் நலமோங்கும் உரிமைக்கே
நற்பணியில் அன்பை நீட்டிப்
போற்றுங்கள்! தமிழ்வாழப் புலருங்கள்! மதியுங்கள்!
பொதுமைமன வேட்கை காட்டி
ஆற்றுங்கள் பணியென்பான்; அதற்குள்ளே தானும்ஓர்
அங்கமெனச் சீராய் நிற்பான்!

கீழ்வானச் செங்கதிரால் கிடைக்கின்ற வெளிச்சத்தில்
கிழக்குமட்டும் வெளுப்ப தில்லை!
மேல்வானும் புவிதானும் தெற்கோடு வடக்குமற்றும்
மேற்கும்தான் வெளுத்துக் காணும்!

தாழ்வான நிலைமாற தமிழ்வாழ உயிர்வாழ,
தன்னாலே ஆன தெல்லாம்
ஏல்வானே வி.டேவிட்! எம்மோடு இந்நாட்டில்
எல்லோரும் சிறக்க நன்றே!

1984.1.1 - கோவி. மணிதாசன்

## 343. தமிழ்க்குடிமகனே வருக!

அறம்பாடும் தென்றமிழின் ஆயகலை தேர்ந்தே
அறிவூற்றாம் குறள்நெறியின் அடிப்படையில் தோய்ந்து
பிறங்கிவரும் மறுமலர்ச்சி துறைதோறும் பூத்துப்
பேராண்மை யுணர்வூட்டிப் பேசுதமி ழார்த்தும்
முறிவூட்டும் பகைப்புலத்தின் முனைப்பதனைத் தூர்த்தும்
முயன்றுழைத்துத் தென்மரபின் முன்மைநிலை சேர்த்தும்
திறலேற்றும் செயலாலும் நெஞ்சாலும் தொண்டு
செய்துவக்கும் பேரார்வத் திறலோயே வருக!

பெருமையுறும் தூய்தமிழின் பெருவடிவத் தூய
பெறற்கரிய பேரறிஞ! மொழித்துறைக்கோர் முதல்வ!
அருமைபெறு பாவாணர் அணியதிலே துன்றும்
ஆய்வாள! அருந்தமிழுக்(கு) ஆக்கமிடும் தூயோய்!
வருங்காலத் தமிழ்க்குலத்தின் வரலாறு சுட்டும்
வனப்பொருளின் தனித்தமிழ்தேர் தென்றலெனப் போற்றித்
திருவாரும் நற்றொண்டால் தமிழ்நெஞ்ச மெல்லாம்
சென்றமரும் செம்மல்தமிழ்க் குடிமகனே வாழ்க!

1977.6.21 - சி. வே. இளங்கதிரவன்

## 344. அன்னை திரேசா வாழ்க!

கொலைக்கள மாக்கி இந்தக் குவலயந் தன்னில் ரத்தக்
குளியல்செய் தின்பங் காணும் கொலைஞருக் கிடையே அன்பு
நிலைபெறத் தொண்டு செய்யும் நெஞ்சினைக் கண்டேன்; பாரில்
மலைவிளக் கெனவே அன்னை மாண்புகழ் வாழ்க! நன்றே!

இனவெறி என்னும் மாயை இருளினைத் தழுவிக் கொண்டு
பணவெறிப் பண்டா ரங்கள் பாருலா வரும்இந் நாளில்
குணநெறி நின்று பண்பின் குன்றேறி ஒளிவி ளக்காய்
மனநெறி வாழ வாழும் மாதன்னை திரேசா வாழ்க!

- பொன்முடி

# 345. சம்பந்தன் அம்மானை

கங்கைநதி தீரத்தில் கண்ணன் பிறந்ததுபோல்
சங்கநதி[11] தீரத்தில் தவழ்ந்துவந்தான் அம்மானை!
சங்கநதி தீரத்தில் தவழ்ந்துவந்த சம்பந்தன்
பொங்கருவி பாயும் பொழிலானான் அம்மானை!
பொலிவற்ற வாழ்விற்குப் பொலிவானான் அம்மானை!

சஞ்சிக் கடிமைகளைத் தஞ்சம் அடைந்தவரை
அஞ்சிக் கிடந்தவரை ஆதரித்தான் அம்மானை!
அஞ்சிக் கிடந்தவரை ஆதரித்த பூமானை
நெஞ்சில் விளக்கேற்றி நாம்தொழுவோம் அம்மானை!
நாளெல்லாம் அன்னானை நினைத்திருப்போம் அம்மானை!

துண்டுவிழும் தோட்டத்தில் துவண்டு கிடந்தவரைக்
கண்டுமனம் வாடிக் கவலையுற்றான் அம்மானை!
கண்டுமனம் வாடிக் கவலையுற்ற சம்பந்தன்
பெண்டுபிள்ளை வாழப் படியமைத்தான் அம்மானை!
படியேறி வந்தார்க்கு மடியானான் அம்மானை!

ஏங்கிக் கிடந்தவரை ஏற்றம் இழந்தவரைத்
தாங்கிப் பிடித்தகரம் தண்ணளியோ அம்மானை!
தாங்கிப் பிடித்தகரம் தண்ணளிதா னென்றுணர்ந்து
தூங்கிக் கிடந்தவர்கள் துயிலெழுந்தார் அம்மானை!
துயிலாத வாழ்வுக்குத் துணையானான் அம்மானை!

குந்தக் குடிசையின்றிக் கூழ்வார்க்கப் பானையின்றிச்
சிந்தை மெலிவுற்றார் செந்தமிழர் அம்மானை!
சிந்தை மெலிவுற்றார் செந்தமிழர் தங்களுக்கோர்
தந்தை எனவாய்த்த தங்கமகன் அம்மானை!
சந்ததியை வாழவைக்க வந்தமகன் அம்மானை!

---

*11 சங்கநதி - சுங்கை சிப்புட்: சம்பந்தனார் பிறந்த ஊர்*

இருளில் சிறைப்பட்ட இதயத்தை வாஞ்சையுடன்
அருளில் நமைத்தோய்த்த அருட்சோதி அம்மானை!
அருளில் நமைத்தோய்த்த அருட்சோதி பிரகாசர்
பொருளில் பொருளாகிப் பொலிந்திட்டான் அம்மானை!
பொருளற்ற வாழ்வுக்குப் பொருளானான் அம்மானை!

முத்தனைய வாழ்வின் முழுமை உணராமல்
பித்தரைப்போல் சுற்றிப் பிதற்றிநின்றார் அம்மானை!
பித்தரைப்போல் சுற்றிப் பிதற்றிநின்ற மக்களுக்குப்
புத்தரைப்போல் வந்தே புரந்துநின்றான் அம்மானை!
புரந்துநின்ற சம்பந்தன் சிறந்துநின்றான் அம்மானை!

தென்றல் தவழ்ந்துவரும் தென்பாங்கு பாடிவரும்
மன்றல் கமழ்ந்துவரும் மாமலையம் அம்மானை!
மன்றல் கமழ்ந்துவரும் மாமலையம் நின்றேறி
அன்றில் பறவையென ஆர்ப்பரித்தான் அம்மானை!
அன்புச் சிறகடித்து அரவணைத்தான் அம்மானை!

கூடு விழுமுன்னே குற்றுயிராய் வாழ்பவர்கள்
வீடு பெறநித்தம் பாடுபட்டான் அம்மானை!
வீடு பெறநித்தம் பாடுபட்ட எம்பெருமான்
காடு மணங்கமழும் கற்பூரம் அம்மானை!
காலமெலாம் நம்வாழ்வின் கலிதீர்த்தான் அம்மானை!

பொங்கும் அருவியெனப் பாயும் பொதிகைவளர்
சங்கத் தமிழ்புரக்கும் சம்பந்தன் அம்மானை!
சங்கத் தமிழ்புரக்கும் சம்பந்தன் கையணைப்பில்
எங்கள் சமுதாயம் ஏற்றமுறும் அம்மானை!
ஏற்றமிலா வாழ்வுக்கு ஏற்றமடி அம்மானை!

ஏழையர்கள் என்றாலும் எந்தமிழர் இப்புவியில்
கோழையர்கள் அல்லரெனக் குரல்கொடுத்தான் அம்மானை!
கோழையர்கள் அல்லரெனக் குரல்கொடுத்த சம்பந்தன்
வாழையடி வாழையென வந்தமகான் அம்மானை!
வாழையென நம்மிடையே வாழும்மகான் அம்மானை!

கூட்டுக் குரல்கொடுத்துக் கூட்டுறவாய் வாழ்பவர்க்கிங்(கு)
ஈட்டும் பொருள்வந்து ஈடேற்றும் அம்மானை!
ஈட்டும் பொருள்வந்து ஈடேற்றி நந்துயரை
ஓட்டும் உடைவாளாய் ஓங்கிநிற்கும் அம்மானை!
ஓங்கித் தமிழ்மாந்தர் உயிர்காக்கும் அம்மானை!

கண்ணை இமைநின்று காப்பதுபோல் தாயாகி
மன்னும் தமிழ்க்குலத்தை வாழவைத்தான் அம்மானை!
மன்னும் தமிழ்க்குலத்தை வாழவைத்த சம்பந்தன்
தன்னைப் புரக்கும்வழி தான்மறந்தான் அம்மானை!
தன்னலமே அற்ற தகவுடையான் அம்மானை!

காட்சிக் கெளியவனாய்க் காட்சி யளித்தரிய
மாட்சி மிகுந்ததமிழ் மன்னவனாம் அம்மானை!
மாட்சி மிகுந்ததமிழ் மன்னவனாய் எம்மனத்தை
ஆட்சி புரியவந்த அண்ணல்காண் அம்மானை!
ஆனந்த வாழ்வுதரும் ஆரமுதம் அம்மானை!

- ஞானதாசன்

# 346. தமிழிற்குப் பாவாணர்

கலப்பற்ற தமிழ்மொழியில் எழுதல், இந்தக்
காலத்துக் கொவ்வாத முயற்சி என்று
பிழைப்பற்ற 'கலப்படத்தார்' அரற்றல் தன்னைப்
பேதைமையை மடமைதனைத் தீர்த்தல் வேண்டி
உழைக்கின்ற தனித்தமிழன் தேவ நேயப்
பாவாணன் ஒருமறவன்! அவனை விட்டால்
மழையற்ற பயிர்போல்தூய் தமிழன் வாழ்வு
வாடிவிடும் வதங்கிவிடும் பட்டுப் போகும்!

கற்புடையாள் எனப்படுவாள் ஒருவ னோடு
கலந்துறைந்து வாழ்பவளாம்! பலரைக் கூட
முற்படுவாள் விலைமகளே அன்றோ? நம்வாய்
மொழிவதெனில் தூய்தமிழை மொழிந்து, அந்தக்
கற்புடையாள் போலிருக்க வேண்டும்! மாறாய்த்
தனித்தமிழில் பிறவற்றைக் கலந்து பேசிக்
கற்பிழந்த வாயாகிப் போன தற்குக்
கண்ணீர்விட் டழும்நம்பா வாணன் நெஞ்சம்!

செந்தமிழை அரித்துவரும் காச நோயாம்
சீர்கெட்ட ஆரியத்தைக் கொன்று போட்டு
நந்தமிழர் பெற்றுவிட்ட குந்த கத்தை
நாள்பார்த்துப் புதைத்துவிட்டுத் தமிழ்வளத்தை

இந்தஉல கம்கண்டு வாய்பி ளந்தே
ஏதும்பே சாதிருக்க உழைக்கும் செம்மல்;
செந்தமிழன் பாவாணன் அவன்தி றத்தால்
சீரழிந்த தனித்தமிழும் சிறப்புற் றோங்கும்!

பாதாச. - பாதாசன்
1979

## 347. நேதாஜி

எதேச்சாதி காரநிப்பன் ராணு வத்தார்
இந்தியரும் எதிரிஎன்றார்; இதனால் நாமும்
அதோகதியை எதிர்நோக்கி அயர்ந்து நின்றோம்
அற்புதங்கள் நிகழ்வதைப்போல் சுபாஷும் வந்தார்
சிதறுண்ட நம்மவரை ஒன்று கூட்டித்
தேசியப் படைஒன்றைத் திரட்டிச் சர்க்கார்
அதேதரு ணத்தினிலே அமைத்துத் தேச
ஆவேச மூட்டிஎமை ஊக்கு வித்தார்!

இந்தியா இந்தியர்க்குச் சொந்தம் என்றும்
இந்தியர்க்குள் பிளவில்லை கட்சி ஒன்றே!
இந்துமுஸ்லிம் என்றபிணக் கிங்கே இல்லை!
யானுயர்ந்தோன் நீதாழ்ந்தோன் என்பா ரில்லை
சந்தைகளைப் போன்றபல சங்க மில்லை
சகலர்க்கும் ஒரேசங்கம் அதுவே சாற்றும்
இந்தியசுதந் திரக்கழகம் இதிலே எல்லா
இந்தியரும் சேர்ந்துழைக்க வேண்டும் என்றார்.

தாய்நாட்டின் விடுதலைக்கு இளைஞ ரெல்லாம்
தயங்காமல் குருதியினைச் சொரிதல் வேண்டும்!
மாய்வதெனில் பாரதத்தின் மண்ணில் மாய்வோம்!
மண்ணும்விண்ணும் எதிர்த்தாலும் பின்னே நோக்கோம்
ஓய்ந்திடோம் தில்லிச்செங் கோட்டை தன்னில்
உயர்த்திடுவோம் மூவண்ணக் கொடியை, நீவிர்
பாய்ந்துசெல்லும் நமதுபடை வீரர்க் கெல்லாம்
பக்கபலம் சேகரித்து உதவும் என்றார்.

சர்வாதி காரநிப்பன் தலைகு னிந்தான்;
சகோதரரே இந்தியர்கள் என்றான்; பின்னர்
ஆர்வமொடு நம்மவர்க்கு நலம்பு ரிந்தான்
அச்சத்தை விட்டொழித்து அமைதி பெற்றோம்!
பார்அதிர 'ஜெய்ஹிந்த்'என் றேமு ழங்கிப்
பாரதத்தின் விடுதலைக்கே உயிர்என் கின்றோம்!
யார்இந்தப் புரட்சிக்குக் கார ணஸ்தர்?
அன்புள்ள நமதுநே தாஜி யன்றோ!

கவிதை.
1947

- ந. பழநிவேலு

## 348. அருட்புரட்சி அண்ணல் வாழ்க!

இறைவற்குத் தமிழ்ஒவ்வா தென்றுரைத்துத் தழிழர்கை
இழைத்துவைத்த இறைகோயில் புகுந்தே வேத
மறையென்று வழக்கிழந்த மொழிவைத்துத் திருமறைகள்
தீயவெனப் புறந்தள்ளிப் புல்லர் செய்த
குறைபோக்கப் போராட்டம் அடிதடிகள் வாய்ப்போர்கள்
குடிகெடுக்கும் பூசல்கள் ஏது மின்றி
நிறைவான தமிழ்மறையால் வழிபாடு செய்தமைதிப்
புரட்சியினால் பெருவெற்றி கண்ட மேலோர்!

திருக்கோயில் என்றவுடன் வழிபாடு தேரோட்டம்
தீமிதித்தல் உடலெங்கும் அலகு குத்தி
வெறுங்கூச்சல் இடலன்றி வேறென்ன நெடுங்காலம்
நம்மினத்தில் நாம்கண்ட நல்ல காட்சி?
பெறுங்கல்விப் பெருங்கூடம் பசியோடு நோய்ஓட்டும்
அறச்சாலை தொழில்நுட்பப் பள்ளி தந்து
மருவத்தூர்ப் புதுவழியை வகுத்தந்த முறையெங்கும்
மேன்மேலும் மறுமலர்ச்சி எய்தச் செய்தார்!

அன்னையெனத் தந்தையென ஆன்றமைந்த ஆசானென
மன்னுபுகழ்ச் சித்தரென ஒளியா மென்ன
நன்மைமொழி நாவலர்கள் நாள்தோறும் பாராட்ட
நடப்பதுவே இறைவழியென் றருள்வாக் கீந்தும்

நின்றந்த வழிநடந்தும் சொல்லாலும் செயலாலும்
ஒன்றாகிச் சுடர்வீசும் பங்கா ரென்னும்
பொன்னொளியைப் போற்றிடுவோம்! உலகத்து மக்களெல்லாம்
ஒன்றென்னும் அடிகள்பதம் வணங்கு வோமே!

1987 - முரசு. நெடுமாறன்

## 349. பாவேந்தன் தமிழ்

அருவியென வீழ்ந்துவரும் நெளிநதியாய் ஓடும்
ஆடியென உருக்காட்டும் குளம்போலத் தோன்றும்
செறிவிலங்கும் பேராழி அலையார்ப்பும் கேட்கும்
தெளிவானாய்த் தான்தோன்றும் இடிஇடித்துக் காட்டும்
பெரும்புயலும் சீறிவரும் பின்னொருகால் மாறிப்
பின்னிஉடல் உளமீர்த்துத் தென்றல்நடை போடும்
விரைமலர்கள் எழக்கமழும் நிறைந்ததமிழ்ச் சோலை
விரிந்தனவே; பாவேந்தன் சொரிந்ததென விந்தை!

விடுதலையின் பெரும்புரட்சி வேட்கைஒலி கேட்கும்!
விறல்மறவன் பகைப்புலத்து வாள்சுழற்சி ஈர்க்கும்!
சுடுவதிலே வேட்டெஃகம்[12] பின்தங்கிப் போகத்
தொலைபறக்கும் ஏவுகணை முன்முங்கிப் பாயும்!
கெடுதலெனும் பிளவுகளும் அடிமைஉணர் வனைத்தும்
கேடாகா திருள்கிழிக்கப் பரிதிஒளி வேயும்!
அடடாவோ! பாவேந்தத் தமிழ்க்களிறு போலும்
அகப்பாட்டும் புறப்பாட்டும் யார்பாடக் கூடும்?

- எல்லோன்

த. நேசன்
1987.4.26

---

*12 வேட்டெஃகம் - துப்பாக்கி*

# 350. பெருமகன் மகாதீர்

முழுமதி பொழிவது முகமதில் பொலிந்திட
முகையவிழ் மலரெழில் முறுவலில் மலர்ந்திடக்
கெழுதகை உணர்வது கண்களில் ஒளிர்ந்திடக்
கனிதரும் காவெனக் குணநலம் கொஞ்சிட
அழுக்கறு அகமதில் அருளொளி சுடரிட
அரவணைத் தாண்டிடும் அறநெறி ஓங்கிட
உழுநிலம் விளைந்திட உரமென அமைந்திட
உலகினில் உதித்தனன் உயர்மகன் மகாதீர்!

பனிபடர் மலையும் பசியறு வயலும்
பொன்விளை நிலமும் பூவிரி காடும்
கனியுறை தோட்டமும், கயல்புரள் நதியும்,
களிப்பாக் குத்தரும் கமுகின் வனப்பும்
இனித்திடும் கரும்பும் இளந்தே யிலையும்
எண்ணெய்ப் பனையும் எழில்பால் மரமும்
நுனிவரை வலுநிறை நெடுமாத் தருவும்
'நிகரெனக் கிலை'யெனும் நிறைபயன் தெங்கும்

இன்னுமே பல்வளம் இருந்தென்? மலிந்தென்?
இளைத்தவ ராக இருப்பதன் குறையென்?
மண்வள மிலையா? மழைபொழி விலையா?
மடித்தனத் தால்வந்த மிடித்தன நிலையா?
கண்திறந் திருந்தும் கடுந்துயில் விளைவா?
கண்விழித் தானொரு கூர்மதி யாளன்!
மண்டிய துயரினி மண்ணடிப் புதைந்திட
மும்மணிக் கருத்[13]தினை முழக்கினன் மகாதீர்!

செங்கதிர் போலெழு சிங்கை அரசும்
சீருடன் வாழும் தாய்லாந் தரசும்
தங்கப் பிறைஇந் தோனே சியாவும்;
'தரமுடன் வளரும் திறமதை அறியும்

---

*13 மும்மணிக்கருத்து - அ. தூய்மை, ஆ. திறமை, இ. நம்பிக்கை.*

பங்'கெனக் குண்டெனும் பிலிப்பைன் அரசும்
பொற்புடை 'ஆசியான்'[14] படையணி வகுத்திடப்
பொங்கிடும் ஆற்றலைப் பொருளுடன் ஆற்றிடும்
பெருமகன் மகாதீர் புகழுடன் வாழ்க!

த. நேசன்
1982.5.16

- நாரண. புதுமைப்பித்தன்

## 351. கட்டடம் கண்ட மாணிக்கவாசகம்

அறிவாளர் போற்றும்ஐந் தாண்டுத்திட் டத்தால்
பொருளியல்முன் னேற்றம் பொலியத் - திறன்மிகுந்த
இந்தியர் இந்நாட்டில் ஏனையோர் போல்வாழச்
சிந்தித்துச் செய்தான் செயல்.

பாட்டாளி மக்களெலாம் பண்புடனே உன்னையின்று
கூட்டாளி என்றார் குணங்கண்டு - நாட்டாண்மைப்
பண்பாளர் சொல்வார் பலகுறைகள்; நீயுன்றன்
பண்பாலே சொல்வாய் பதில்!

தொட்டவினை முற்றும் தொடர்ந்து முடித்திடுவான்
விட்டகுறை யாதொன்றும் விட்டுவையான் - சிட்டெனவே
கட்டி முடித்தான்காண் கண்கவரும் ம.இ.கா.
கட்டடம்இஃ தோரெடுத்துக் காட்டு.

த. நேசன்
1973.7.22

- சீ. மா. இளங்கோ

## 352. ஒலிம்பிக் வீராங்கனை வாழ்க!

ஒருதுணியும் இன்றி ஒலிம்பிக் கிராமத்தில்
வருத்தமுடன் நின்ற கொடிக்கம் பத்திற்குக்

---

*14 ஆசியான் - மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, இந்தோனேசியா, பிலிப்பைன் என்னும் ஐந்து நாடுகள் சார்ந்த ஓர் அமைப்பு.*

கோவணம் தந்துவந்த குலமகளே வாசுகியே
ஆவல்தான் அடுத்துப் 'பார்சிலோனா' நகரில்

பொன்பட் டாடையைநீ உடுத்தத் தந்திடம்மா!
கண்பட் டிருக்கும்இன்று திருஷ்டி கழித்துவிட்டோம்!

த. ஓசை - பாதாசன்

## 353. தமிழ்நெறி காவலர் வாழ்க!

தமிழ்பூத்த நெஞ்சத்தால் அருள்நெறிய திருக்கூட்டம்
தழைத்திடவும் இருமைநலத் தொண்டு பேணிச்
சிமிழ்பூத்த முத்துத்தமிழ் இனமழிக்கும் கேடர்களின்
சிறகொடித்தும் தமிழ்ப்பகையின் கருவ றுத்தும்
குமிழ்பூத்துச் சிதறிப்போம் கொள்கையொடு முரணுற்றுக்
கொஞ்சுதமிழ் இறைவழிபா டாற்றச் செய்தும்
கமழ்பூதேன் ஆம்குன்றக் குடியடிகள் பாராட்டில்
கனியுதமிழ் நெறிகாவ லர்தாம் வாழ்க!

உடல்பொருள்செய் உழைப்பாலும் தொண்டுருவாய் இனவளர்ச்சி
உறுதற்கெங் கெவர்வரினும் உதவி செய்வோன்
கடல்பெரிதாம் மனத்தொண்டன் 'காமராசர் இளையர்மன்ற'க்
கடமைகொண்டு மாணவர்க்காம் பணிகள் தம்மில்
அடல்செறிவாய் நின்றிலங்கி அருந்தமிழ்ப்பல் கலைக்கழகத்(து)
அரிமாவ ணைசேர்த்த தமிழ வேளும்
நடல்செய்த தொண்டனைத்தும் ஊடோடி இருபத்தைந்(து)
ஆண்டைநடத் தும்பெருமைக் குரிய மேலோன்!

யாண்டுசில வானாலும் தொண்டுளத்தால் இளமையுடன்
யாழ்மழலைச் செல்வநலப் பேறு கொண்டோன்!
காண்டகுநல் இலக்கியமாய் அருள்நடப்பில் எளிமையொடு
கைமாறில் லாத்தொண்டில் முந்தி நிற்போன்!
மாண்டபுகழ் நேர்மையொடு வணிகத்துப் பாடாற்றிக்
குமுகாய ஆர்வலராய்ப் பொதுந லத்தை
ஆண்டுவளர் நல்லாற்கு அடிகள்செய்த பாராட்டும்
அணிசிறப்பும் பொருந்தும்தமிழ் ஆர்வ லோர்க்கே!

பெருந்துணையாய் விளங்கிவரும் பெருமாட்டி, தொண்டர்வாழ்
பிறங்கொளிக்கு மரியபிலோ மினாஅம் மையார்
வருந்துணையாய் வந்தும்பல மாதர்பணி பொறுப்பமைந்து
வரலாற்றுள் தம்பெயரைப் பொறித்து நிற்பார்!
அருந்துநல வமுதான மொழிகலைஇ லக்கியங்கள்
அனைத்தும்வளர் தமிழர்சீர் திருத்தச் சங்கம்
பொருந்தியதன் தலைமைநின்று புகழ்த்தொண்டு படைப்பர்மணி
வைரவிழாக் கண்டுவாழ்க இனும்பல் லாண்டே!

1978.3.11 - முல்லைவாணன்

## 354. முத்தமிழ் காவலர் வாழ்க!

கல்லார்க்கும் திருக்குறளின் சிறப்புணர்த்திக் கனிவிக்கும்
கல்வியில் தெளிவான வன் - யாரும்
சொல்லாமல் தனக்குத்தான் குருவாகிப் பயனாகிச்
சொந்தமாய் உருவான வன் - தமிழர்
பல்லோரும் பணிந்தேத்தும் வகையினில் அறம்காட்டும்
பாட்டையில் நடைபோட்ட வன் - ஒரு
வல்லவன் கி.ஆ.பெ. விசுவநா தன்னெனும்
வாகான பெயர்கொண்ட வன்!

மேடைகள் வானொலி முதலாய பலவற்றும்
மெய்த்தமிழ் மொழிகின்ற வன் - தமிழ்க்குக்
கேடெனில் விளைத்தாரை எதிர்த்தங்குச் சமர்புரி
கிழச்சிங்க மெனப்பாய்ந்த வன் - சில
கோடுகள் போட்டுயர் வாழ்வை வகுத்தொரு
கொள்கையில் நிலையான வன் - யாரும்
தேடரிய மருத்துவக் கலையினைப் பிறருக்கும்
தெளிவாகக் கற்பித்த வன்!

புகையிலை வாணிகன் என்றாலும் பிறருக்குப்
பொல்லாங்கு சூழாத வன் - தனக்குப்
பகைவரே இல்லாமல் பாங்குடன் நட்பினைப்
பகிர்ந்தளித் துயர்வான வன் - பெரும்
தகைசார்ந்த வாழ்வினில் முதுமையைக் கண்டவன்
தளராத புலன்பெற்ற வன் - அந்த
நகைமுகச் சான்றானை வாழ்த்துதல் நாம்பெற்ற
நற்பேறு எனவாழ்த்து வோம்!

1987 - ரெ. சண்முகம்

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"கரும்பினைக் கடித்தேன் சாறோ
கண்களில் வழிந்த தம்மா!"

- தீ. சி. பொன்னுசாமி

## ௧௦ இரங்கல்

# 355. எங்கே? எங்கே?

வெற்றிலையும் பாக்கும் விளையாடும் நேரத்தும்
மற்றவரை மகிழ்விக்கும் மனமெங்கே? குணமெங்கே?
காஞ்சிக் கலையெங்கே? கலைவளர்த்த கையெங்கே?
தீஞ்சுவையை அள்ளித் தெளிக்கின்ற திறமெங்கே?
பொடியள்ளிப் போடும் பூவிரலின் துடிப்பெங்கே?
இடிமின்னல் போல இசைக்கின்ற குரலெங்கே?
நடிப்பெங்கே? படிப்பெங்கே? நம்நாடித் துடிப்பெங்கே?
படிப்படியாய் முன்னேற்றம் பலர்காணும் வாய்ப்பெங்கே?
மேடைத் தமிழெங்கே? மென்மலரின் அழகெங்கே?
கோடை இடியெங்கே? கொடைவள்ளல் உடலெங்கே?
பச்சையப்பன் கல்லூரிப் பண்பெங்கே? அன்பெங்கே?
எச்சிறிய உயிருக்கும் இன்னல் விளைக்காது
மெச்சுகிற படிவாழ்ந்த மேதை உயிரெங்கே?
குறளின் பொருளெங்கே? கோமான் உயிரெங்கே?
விரலசைக்கும் நேரத்தில் வெல்லும் உருவெங்கே?
அண்ணா துரையெங்கே? அறிவெங்கே? திறமெங்கே?
மன்னாதி மன்னனவன் மண்டும் புகழெங்கே?
பல்லக்கில் வைத்துப் பதைபதைத்து நின்றோமா?
கொள்ளிவைக்கும் நேரத்தில் குடல்கருகி வெந்தோமா?
சாம்பல் வடிவாக்கச் சண்டாளர் பிறந்தோமா?
தேம்பி அழுகின்றோம் நாம்.

த. நேசன் - கே. முகம்மது யூசுப்
1969.7.6

# 356. என்னுயிர் உன்றனுக்கே!

பொங்கலை வைத்துக் கன்னற் பாகினைச் சுவைக்கும் முன்னே
எங்களைப் பிரிந்தான் நாட்டின் எழுகதிர்ச் சுடரோன் என்றால்,
அங்கமே மண்ணில் நிற்க ஆவியோ அவனைத் தேடப்
பொங்கலோ! பொங்க லென்றேன்; பொங்கினாள் மலையத் தாயே!

கரும்பினைக் கடித்தேன் சாறோ கண்களில் வழிந்த தம்மா!
நறுஞ்சுவைப் பொங்கற் பாலும் நாவினில் கசந்த தம்மா!
இருட்குகை யுள்ளே நின்றே ஏங்கிடும் இதயத் தோனாய்
அருட்கொளும் உள்ளத் தானை அரற்றியே புலம்பி நின்றேன்!

நேர்மையின் உருவ மாகி நீணிலம் தழைக்க வந்தே
ஓர்மையில் சீர்மை கண்ட உத்தமன் ரசாக்கே! உன்றன்
வேர்வையில் பனிமுத் துக்கள் விளைந்தவை கோடி கோடி!
பார்வையில் தந்தை யாகிப் படைப்பதில் தெய்வ மானாய்!

த. நேசன்
1976.1.25

- தீ. சி. பொன்னுசாமி

# 357. எப்போது காணப் போகின்றோம்?

இறைவனடி சேர்ந்துவிட்ட ஆழிஅருள் தாசா!
இன்முகத்தை எப்போது காணப்போ கின்றோம்?
இறையருளால் நாடகத்தில் தமிழுணர்ச்சி ஓங்க
இதிகாசச் செயலெல்லாம் செய்தபுது மையைத்
துறைதோறும் விளங்குகின்ற தூயதமிழ் நெஞ்சம்
மறக்காதே என்றென்றும் நின்புகழைக் கூட்ட;
நிறைகுடமாய் இருந்துவந்த கடாரத்தின் பேரும்
நிலமென்னும் வையகத்தில் நின்பேரைச் சொல்லும்!

ஆடாமல் அசையாமல் சென்றுவிட்டாய் அங்கே!
அமைவதெல்லாம் அவன்செயலில் முடிவதுவும் ஒன்றே!
தேடாமல் நமக்கென்று சேர்த்துவைக்க வொண்ணாச்
சிலைபோலக் கண்மூடிக் கொண்டாயோ தாசா!
ஓடாமல் ஒளிமறைவாய் இல்லாது தொனிக்க
ஒய்யார இடத்திற்கா சென்றனைநீ ஐயோ!
நாடாமல் நாணிப்பின் நாடாது போனால்
நாடெல்லாம் போற்றிஎந் நாளுமிவண் வாழ்வாய்!

த. மலர்
1976.11.21

- இராசகோபாலன்

# 358. கோவலனே நீ எங்கே?

தென்றல் தவழ்ந்துவரத் தேனருவி யோடிவர
மன்றல் கமழ்ந்துவர மாங்குயில் பாடிவர

அள்ளும் பொருள்குழைத்து ஆளுங் கருத்தெடுத்துத்
தெள்ளு தமிழ்மணக்கும் தெம்மாங்குப் பாட்டிசைத்து

அன்னை மலேசியத்தில் ஆற்றல் மிகும்விதத்தில்
கன்னற் றமிழ்வளர்த்த கோவலனே நீஎங்கே?

மன்றச் சிறப்புயர மாநிலம் நன்மைபெற
மண்ணில் புகழ்மிளிர மன்பதை சீர்பெருக

என்றும் விழித்திருந்து இன்னல் பொறுத்திருந்து
தன்னை மறந்திருந்து தன்னலம் விட்டிருந்து

தொண்டுப் பெருமகனாய் தோழமை கொண்டவனே
அன்பிற் கொருமணியாய் ஆனவா நீஎங்கே?

- டி. வி. இராகவன்பிள்ளை

முத்துச்.
1983

# 359. நாடகக் கோவலன்

வாழ்க்கை விளக்கம் தெளிவாய்க் காட்டியும்
வாய்மை நல்லறம் முதலிய கூட்டியும்
மாந்தர் சிலரை ஒருங்கிணைத் தரங்கில்
மாசறு உரையொடு மாணிசை சேர்த்தும்
அறமுறை காவியக் கதைகள் தேர்ந்தும்
அழகுற ஒப்பனை விளங்கச் செய்தும்
நாடகம் எனும்கலை நயமுறச் செய்தார்.
அத்தகு அரங்கில் அழகே யானவன்
அத்தனை உளத்தையும் அடிமை செய்தவன்
அன்றைய நாயகர் தம்மிடைத் தனித்தொரு

வல்லமை காட்டிய நல்லிசைக் கலைஞன்
நடிப்பிற் கிலக்கணம் நட்புக் கணிகலம்
பயில்வோர் தமக்கும் பண்புசேர் ஆசான்
சி. வி. ஆறு முகம்எனக் கூறின்
சிறுவரும் அறிவார்; வைத்திய நாதன்
மிகப்பெரும் கலைஞன்; இருவரும் இணைந்து
இருவகை நடிப்பைத் திறமுட னளிப்பர்.
அர்ச்சுனன் சி. வி. ஆறு முகமெனின்
அழகு கண்ணனாய் வை. நா.[1] ஒளிர்வார்
நாடக முழுதும் கோவல னாக
நற்றிறம் உணர்த்தி ஆறுமுகம் விளங்கினும்
பீடுறப் பாண்டியப் பெரும்பங் கேற்றுத்
தம்புகழ் நாட்டுவார் வைத்திய நாதன்.
இந்நிலை விளங்கிய காலம் கழிய
மெல்ல மெல்லச் சாய்ந்து சரிந்து
நாடகக் கலைக்கோர் நலிவே சூழ
அண்ணன் ஆறுமுகம் கணக்கர் பணிதனை
ஏற்றார்; எனினும் உளமதில் கலையே.
சிந்தை முழுவதும் நல்லிசைத் திறனே.
ஒருநாள் செய்திஎன் உயிரை அசைத்தது
கருவில் திருவுள ஆறுமுகம் நோயால்
வீழ்ந்ததும் கிடந்ததும் மறைந்ததும் இன்றோ
பழைய செய்தியே யாயினும் உளத்தில்
மறைந்த, மறந்த செய்தியே யன்று.
மணிக்குரல் எவரிடம் கேட்கினும் ஆறுமுகம்
தனிக்குரல் என்செவி தனிலொலி செய்யும்;
அகத்தொளிர் பண்பால் முகத்தொளி நிறையும்;
ஆண்டுகள் கழிந்தன அருங்கலை வல்லோன்
ஆண்டஅக் காலமோ அகத்தில் நிலைபெற
அறுமுக அண்ணனை மறந்தே னில்லை
அன்னோன் நெஞ்சில் வாழ்கிறான் நிறைந்தே!

1987 - ரெ. சண்முகம்

---

*1 வை. நா. - வைத்தியநாதன்*

# 360. மலையகம் மறக்காது

காற்பந்து தரத்தாலே உலகரங்கில் நம்நாடு
கொடிகட்டிப் பறந்த போது
காவலனாய்ப் பணியாற்றிக் கவனமுடன் நற்புகழைக்
கரைசேர்த்த 'ஸ்பைடர் மே'[2]னே
காரோட்டும் போதுமட்டும் கவனத்தில் குறைசெய்து
காலனுக்குப் பலியா னாயே! - இனிக்
கோல்காவல் கலைதன்னைக் கற்றுயர்வு கொள்வதற்குக்
கூப்பிடுவ தாரை யிங்கே?

நூற்றுக் கணக்கான காற்பந்து விளையாட்டில்
நாட்டணியைக் காத்த நின்னைப்
போற்றினோம் வென்றவுடன் தூற்றினோம் தோற்றவுடன்
பொறுமையுடன் ஏற்றுக் கொண்டாய்!
மாற்றிடவே இயலாத இறைவிதியை ஏற்றவனாய்
மறைந்தகோல் காவல் மன்னா! - உன்
மதிப்பைஇம் மலையகம் மறக்கவே மறக்காது
மாண்புடன் நெஞ்சில் வாழ்வாய்!

த. நேசன் - மைதீ. சுல்தான்
1988.12.2

# 361. கலைப்பணி என்றும் வாழும்!

பண்பான பரதகலை பயிற்றுவித்தே - அம்மா
பாதியிலே சென்றுவிட்டாய் எம்மைவிட்டே!
இன்பத்தேன் கலைவிருந்தை வழங்கிவந்தாய் - காலன்
ஏன்தட்டிப் பறித்தானோ தெரியவில்லை?

செந்தமிழ்க் கலைவளர்த்த ஆஷாநீ - ஏன்
செந்தீயின் நாவிற்குள் புகுந்துகொண்டாய்?
இந்தவடு என்றென்றும் மாறிடாதே - இனி
யாருமில்லை உறவிங்கே எங்களுக்கு!

---

*2 ஸ்பைடர்மேன் - காற்பந்து வீரர், உலகப் புகழ் வாய்ந்த கோல்கீப்பர் ஆறுமுகத்தின் பட்டப்பெயர்*

பூதவுடல் மறைந்திடலாம் கலைத்தாயே - உன்
புகழுடம்பு என்றென்றும் வாழ்ந்திருக்கும்
பாதமெடுத் தாடியநீ கலைவளர்த்த - நற்
பணியென்றும் புகழோடு நிலைத்திருக்கும்!

தின மணி - தீபா ஆறுமுகம்
1987.11.29

## 362. மாமன்னர் மறைவிற்கு அஞ்சலி

சரிந்ததோ பகலில் வெய்யில்? சாய்ந்ததோ நிழல்வா னத்தில்?
எரிந்ததோ கடலின் மையம்? எழுந்ததோ கூற்றின் ஆக்கம்?
அறுந்ததோ வீணைத் தந்தி? ஐயகோ என்ன வென்போம்!
"மருந்ததோ என்னும் எங்கள் மாமன்னர் மறைந்தார்" என்றார்!

ஒற்றுமைத் தேரில் ஏறி உயர்தனிச் சமுதா யத்தில்
பற்றுவைத் திருந்த தாலே பார்புகழ் ஆட்சி கண்டார்;
முற்றுமிம் மலைய மண்ணின் முனைப்பிலே நிமிர்ந்த மன்னர்
குற்றமில் லாரைக் கூடக் கொள்வனோ வானக் கோமான்?

மாமன்னர் மறைந்தார் என்னும் மாத்துயர் மனத்தை வாட்ட
மாமன்னர் வகுத்த கொள்கை மனத்திலோர் தெம்பை யூட்ட
மாமன்னர் பெருமை இந்த மலையத்தில் நிலைக்கும் வண்ணம்
மாமன்னர் சாந்திக் காக மக்கள்நாம் இறைஞ்சு வோமே!

கூட்டுற. - காரைகிழார்
1979, ஏப்பிரல்

## 363. திராவிடர் தந்தை பெரியார்

அறிவுலகின் இமயமலை! புரட்சித் தென்றல்!
அரியதமிழ்ப் பெருந்தலைவன்! தென்னர் வாழ்வில்
செறிந்துதிகழ் மறுமலர்ச்சித் துறைகள் தோறும்
சிந்தனையால் தெளிவேற்றிச் செப்பஞ் செய்தோன்!

நெறிபிறழாத் திராவிடத்தை நிலைக்கச் செய்தே
நீடுயிர்த்த பேரியக்கம்! புதிய ஊழி!
குறிதவறாக் கொள்கைக்கே உயிர்வி டுத்த
கொஞ்சுதமிழ்க் குலவிளக்கு மறைந்த தம்மா!

1973 - சா. சி. குறிஞ்சிக்குமரன்

## 364. மறைந்த கவியே வா! வா!

கவிதை மன்னா மறைந்தாயே
கண்ண தாசா சென்றதெங்கே?
கவிதை உலகம் கலங்குதையா!
கனலாய் அனலாய்க் கொதிக்குதையா!

நெஞ்சில் எதையும் மறைப்பதில்லை
நினைவில் தோன்றும் கருத்தெல்லாம்
கொஞ்சும் கவிதை வடிவினிலே
கொடுக்கும் உள்ளம் நீயையா!

கலங்கும் கண்கள் குளமாகக்
கண்ணீர் மல்கும் நிலமாகப்
பழகும் பண்பே உனக்காகப்
பதறும் மக்கள் பலரலரோ!

கற்பனைக் கடலில் மிதந்தாய்நீ;
காவிய முத்துகள் எடுத்தாய்நீ;
விற்பனை மிகுந்த இசைத்தட்டாய்
மெல்லிய காற்றில் நடந்தாய்நீ!

ஆற்றுப் பெருக்காய் அழுதாலும்
அன்பு முகத்தைக் காணாமல்
ஊற்றுக் கண்ணீர் வடித்தாலும்
உண்மைக் கவியே வருவாயோ?

வேர்கள் - வெ. தேசகுரு
1983

# 365. திரு. வி. கலியாணசுந்தரனார் பிரிவு

கடல்கொழிக்கும் அலையனைய மொழிகொழிக்கும் மலர்வாயும்
கருணை நின்று
நடம்புரியும் இருவிழியும் நயம்புரியும் திருமுகமும்
நன்மை சான்ற
உடலினையும் இனியாங்கள் கண்டுவகை கொள்வதெப்போ?
உத்த மர்க்கோர்
சுடர்விளக்கே மாய்ந்தனையோ சுந்தரமே! நடுவுடைய
சுருதி யோனே!

இருந்தமிழின் இலக்கியத்திற் கிருப்பிடமாய் இனிமைதரும்
எழுத்தா ளாவுன்
அருந்தமிழின் அமுதுண்டார் அழுகின்றார் நினதமுதம்
அற்ற தென்றே!
பெருந்திறலோய் நாட்டிலுறு பூசலெனும் வகுப்புவெறிப்
பிணிகள் போக்கும்
மருந்தனைய நல்விருந்தே! மறைந்தனையோ சுந்தரமே!
என்று காண்போம்?

விடுதலைப்போர் எரிகிளம்பித் தாயகத்தை அந்நாளில்
வெதுப்புங் காலை
கொடுமுடிபோல் தலைநிவந்து உரிமைதனை நிலைநாட்டக்
குணம்கொண் டோனே!
கெடுதலையொன் றேஎதிரி மற்றவெலாம் அன்பதெனக்
கேண்மை கொண்ட
நடுநிலைமைச் சுந்தரமே! நின்மறைவு தமிழருக்கு
நலிவே யன்றோ?

த. முரசு
1952.9.26

- பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது

# 366. இறைவன் கொய்த இருமலர்கள்

**கன்னல்கவி ந. கரீம்**

வண்ணக்கவிச் சோலையிலே வளர்ந்ததிரு நன்மலராம்
கன்னல்கவி கரீம்என்பார் காலம்வெல்லும் கவிதைகளை
இன்சுவையின் தேன்கலந்து எடுத்துவைத்தார் ஏடுகளில்!
கண்கலங்க நமைவிடுத்துக் கடவுளவன் கொய்துவிட்டான்!

பொங்குமெழிற் கவிக்குலத்தின் புகழ்மகனை இழந்தாலும்
எங்களது இதயமதில் இன்பமுடன் வீற்றிருந்து
சங்கத்தமிழ்க் கவிவடித்துத் தலைநிமிர்ந்து வாழ்வதற்கு
மங்காமல் சுடரெழுப்பி மணிவிளக்காய்த் திகழ்ந்திடுவான்!

**கவிமுரசு இரா. பெருமாள்**

கவிமணக்கும் சோலையிலே கனல்பறக்கக் கவிபுனைந்த
கவிமுரசாம் இரா.பெருமாள் கண்பறிக்கும் கவின்மலரைத்
தவிக்கவிட்டு நம்மையெல்லாம் தனக்குமலர் தேவையென்று
புவியளந்த இறைவனவன் பொன்மலரைக் கொய்துவிட்டான்!

பொன்பொருளை இழந்துவிட்டால் போகட்டும் என்றிருப்போம்;
கண்ணான கவிமலரைக் கைநழுவ விட்டுவிட்டோம்;
இன்கவிஞன் இரா.பெருமாள் இறவாத கவிமுரசன்
கண்முடி உறங்கையிலும் கவிவடிவில் சிரித்திருப்பான்!

**இருமலர்கள்**

இருமலர்கள் நமைவிட்டே இறைவனடி சேர்ந்தாலும்
கருவினிலே திருவமைந்த கவிஞர்களை நினைவிருத்தி
அருங்கவிஞர், எழுத்தாளர், அன்புநிறை வாசகர்காள்!
இருகரங்கள் நாம்கூப்பி இதயத்தால் வணங்கிடுவோம்!

த. நேசன் - சோமசன்மா
1976.5.9

# 367. ஆகட்டும் என்பார்

கருமத்தின் வீர னாகிக் கடமையில் தொண்ட னானாய்!
உருவத்தில் கருமை பெற்றும் உள்ளத்தில் தும்பை ஒத்தாய்!
பருவமே கடந்த பின்னும் பணியிலே இளைஞ னாகிப்
பெருந்தமிழ் நாட்டு மக்கள் பெற்றிக்கோர் விளக்க மானாய்!

எதுபுகழ் சேர்க்கு மென்ற எண்ணமே இல்லாக் காலை
பொதுநல வுணர்வா லுந்திப் புறப்பட்ட பொதுமை நெஞ்சம்!
பொதுநல வாழ்வுக் குற்ற புனிதத்தை நெஞ்சுள் வைத்த
பொதுநலத் தொண்ட னண்ணல் பிறந்தநாள் பிரிந்தான் நம்மை!

குலத்தொழில் பாகு பாட்டின் கொடுமையை எரித்த நெஞ்சம்!
நிலம்பெறும் புகழைத் தாங்கி நெடுந்துயில் கொண்ட தம்மா!
கலங்கரை விளக்கம் சூறைக் காற்றினில் அணைந்த தென்றால்
கலமெந்த விளக்கைக் கண்டு கரைமுகம் வந்து சேரும்?

வேகட்டும் தமிழர் நெஞ்சம்! வெந்துபொடிச் சாம்ப லாகிப்
போகட்டும் என்றா ஐயா புகழ்மலை சென்றாய்? நாடு
'நோகட்டும்' என்று கூட நோயுமைத் தொட்ட தில்லை!
“ஆகட்டும் பார்ப்போம் “ என்றே ஆரினிக் கூறக் கேட்போம்?

உதிரிப்.
1980

\- பொன். அன்பரசன்

# 368. மாத்தமிழ்க் குப்புசாமி

கடலுண்டு கரையில்லை! கவியுண்டு பொருளில்லை!
படகுண்டு துடுப்பில்லை! பயிருண்டு நீரில்லை!
உடலுண்டு உயிரில்லை! உருவுண்டு உணர்வில்லை!
இணைவிழியில் ஒளியில்லை! இருப்பதுவோ கண்ணீர்தான்!
திடமான இதயந்தான் உடைபட்டுப் போனதம்மா!
தெம்பில்லை அழுதற்குத் தென்புலமே சம்மதமா?
அடலேறு போல்தமிழன் அருந்தமிழர் மேன்மைகொள
முடிவுவரை உழைத்திட்ட மன்னுயிரை ஏன்பறித்தாய்?

காசினிக்குச் சுமையாகக் கணக்கற்ற உயிருண்டு;
கடனுக்கே வாழ்கின்ற பிறவிகளும் பலவுண்டு;
மாசினுக்கே உலவுகின்ற மானிடரை விட்டுவிட்டு
மலையகத்தின் திருவிளக்காம் மாத்தமிழர் குப்புசாமி
நேசனையே ஏன்பிரித்தாய்? நெஞ்சமெனும் மாளிகையில்
நீக்கமற நிறைந்தமகன்; நித்திலம்போல் வாழ்ந்தமகன்;
பேச்சினிலே எழுத்தினிலே பொதுப்பணிகள் ஆற்றியவன்;
பேச்சற்று மூச்சற்றுப் பேரமைதி கொண்டமையால்
ஊன்அழவே உளம்அழவே உயிரும் அழுதிடவே
உயர்தமிழும் மலைநாட்டில் உளங்குலுங்கி அழுதிடுதே!

த. முரசு
1973.6.10

- முரு. சொ. நாச்சியப்பன்

# 369. சரித்திரத்தை எழுதிவைத்த திருப்பாதம்

சமுதாயம் வழுத்துகின்ற குருபாதம் - நம்ம
சரித்திரத்தை எழுதிவைத்த திருப்பாதம்!

செந்தூலு செட்டியாரு கோயிலிலே
செந்தமிழ் ம.இ.கா.[3] பிறந்தகதை
செயலெலாம் தொண்டென்றே ஆனகதை
செப்புதற்கு அரியகதை உன்றன்கதை!

நேதாஜி லீக்கினிலே குருபாதம் - எங்கள்
நினைவினிலே நிற்கின்ற திருப்பாதம்!
'சிந்தாபாத்'[4] வாழ்வினுக்கே இந்தியனை - வீரச்
சிந்தனையைப் பாடவைத்த சுப்ரபாதம்!

மாரியம்மன் கோயிலிலே குருபாதம் - எங்கள்
மாண்புமிகு திவி[5]யாரைக் காத்தபாதம்
காலனி ஆட்சியிலும் ம.இ.கா.வைக் - கடமை
வீரனாய்க் காவல்காத்த தூயபாதம்!

---

*3 ம.இ.கா. - மலேசிய இந்தியர் காங்கிரஸ்*

*4 சிந்தாபாத் (Zindabad) - 'வாழ்க' என்னும் பொருள்தரும் உருதுமொழிச் சொல்*

*5 திவி - ஜான் திவி*

சமுதாயம் வழுத்துகின்ற குருபாதம் - நம்ம
சரித்திரத்தைக் கூறிவந்த அரும்பாதம்
குருபாதம் போட்டபாதை நல்லபாதை - இன்று
குறைவின்றி நாம்கடக்கும் புதியபாதை!

அரசியலுக்கு 'அச்சாரம்' தந்தபாதம் - நம்ம
ஆட்சிக்கே 'அச்சாணி' ஈந்தபாதம்!

- சி. கமலநாதன்

# 370. ஓவியர் கிருஷ்ணா

தடாகத்து நீரிலே
தாமரையைப் போன்றவன்
அடாதன செய்யாத மனத்தினன் - இவன்
யாவருக்கும் அன்பான குணத்தினன்!

'கிருஷ்ணா'என் றுரைத்திட்டால்
கேட்டிடுவோம் யாரென்று
அரிதாகும் அவன்பெயரைச் சொல்வது - நாங்கள்
அழைக்கும்பெயர் 'ஓவியரே' என்பது!

ஒருநூறு முறைநாங்கள்
குற்றங்கள் சொன்னாலும்
ஓவியம்போல் புன்முறுவல் செய்பவன் - வண்ணத்
தூரிகையில் எண்ணத்தைப் பெய்பவன்!

த. நேசன்
1985.8.18

- காசிதாசன்

## 371. மீண்டும் பல கென்னடிகள் தோன்றட்டும்

தூயவாழ்க்கை துயரவாழ்க்கை யாவதோ? - இந்தத்
தொல்லைமிக்க உலகில்நாமும் வாழ்வதோ?
ஆயவாழ்வின் உரிமையெல்லாம் மாய்வதோ? - அதை
அகிலத்தோர் மேன்மையென்று கொள்வதோ?
மாயவாழ்க்கை மனிதவாழ்க்கை யாவதோ? - அதை
மண்ணுயிர்கள் நன்மையென்று கொள்வதோ?
தீயர்கையால் கென்னடிகள் சாய்வதோ? - அந்தத்
தீமையினியும் புவியில்நிகழ விடுவதோ?

கென்னடிகள் பிறந்துபிறந்து சாகட்டும் - பின்
கேடுணர்ந்து அகிலத்தோர்கள் மாறட்டும்!
கண்ணிழந்து இருண்டவாழ்வைக் காணட்டும்! - பின்
கருணையற்றோர் நெஞ்சில்நீதி மீளட்டும்!
புண்ணடைந்த வாழ்வையெண்ணி வேகட்டும்! - பின்
புதியவாழ்வைப் புதியவழியைத் தேடட்டும்!
மண்ணடியில் அறப்பயிரை ஊன்றட்டும்! - அதில்
மற்றும்பல கென்னடிகள் தோன்றட்டும்!

1963 - மலர் மாணிக்கம்

## 372. நெஞ்சில் நிறைந்தார்

மலைமுகட்டின் ஒளிவிளக்காய் மாண்புகளின் விளைநிலமாய்
மலையகத்து மக்கள் நெஞ்சில்
நிலைபெற்றார் ஆயிரமாய் நிறைந்திருப்பார் என்றாலும்
நேர்மையாளர் சத்தியா னந்தர்
வழியறியாப் பலசிறுவர் வாழ்வுயரக் கல்விநலம்
வகுத்திட்ட செம்ம லானார்!
நிலவுலகும் சூழ்காற்றும் நீர்நெருப்பும் உள்ளவரை
நெஞ்சத்தில் இடமே பெற்றார்!

தன்குடும்பம் தன்மக்கள் தன்னுயர்வு தானென்னும்
    தாரணியில் ஏழை செல்வர்
துன்பங்கள் துடைப்பதற்குத் தூயபணி ஆற்றிட்ட
    தொண்டுள்ளம் கொண்ட நல்லோய்!
இன்றமிழில் இயற்றிட்ட இன்குறளை மலைமொழி[6]யில்
    எடுத்தோதிப் புகழைப் பெற்றோய்!
கண்பெற்றும் கண்ணற்ற கூற்றுவனுன் இன்னுயிரைக்
    கொண்டானே பாவி யந்தோ!

ஒருகோடி உயிர்கட்கே ஒளிகாட்டும் ஒருயிராய்
    உலகத்தில் உதித்த நல்லோய்!
உருவாகும் பிள்ளைமனம் வழிபடுநற் றெய்வமென
    உலவிட்ட அன்புச் செம்மால்!
'பரிசுத்த சமாஜ'[7]த்தைப் படைத்திட்டோய்! நீசெய்நற்
    பயனதனைக் கையறு நிலையில்
இரங்கற்பாச் சமைத்திடவோ இலக்கானாய் என்செய்வோம்?
    இத்துன்பம் எவ்வா றேற்போம்?

- திரிகூடர்

## 373. தமிழவேள்

இனம்மொழி மேம்பாட் டிற்காய் இடர்பல வேற்றும், காலம்
உணல்துயில் பேணா தோடி உணர்வுகள் வெளிப்ப டுத்திக்
கனல்தெறி பேச்சால் எம்மைக் கவர்ந்தநற் றலைவ! இக்கால்
மணங்கமழ் மாட்சி யாவும் மறந்திடல் ஆமோ ஐயா!

விரிசலே காணும் நம்மின் வினைவலித் தொண்டர் தம்முள்
குரிசிலே ஒற்று மையைக் கொள்கையாய் விதைத்து யிர்த்த
பரிசிலே இன்று காணும் பயனெனல் மிகையோ? தீந்தேன்
முரசிலே முரச றைந்த முனைவநீ! மறைந்தா யோசொல்?

நிலைபடத் தமிழர் வாழ்வில் நெறிபடப் பட்டு ழன்றோன்
அலைபட அலைந்த காதை ஆழியும் படுமோ வென்றே
கலைபடச் சாய்ந்தால் நெஞ்சம் கனல்படும்; யார்பொ றுப்பார்?
தலைபடத் தலைப்பட் டோர்யார்? தமிழ்மலைத் தமிழ வேளே!

---

*6 மலைமொழி - மலேசிய மொழி*

*7 பரிசுத்த சமாஜம் (Pure Life Society) - ஆதரவற்ற குழந்தைகள் பராமரிப்பு நிலையம்*

கூம்பிய விழிகள் சற்றே குளிரொளி வீசா வோ?வாய்ச்
சாம்பிய இதழ்கள் சற்றே தமிழ்முழங் காவோ? இக்கால்
தேம்பிய உள்ளப் புண்ணைத் தீய்த்துமே ஆற்றா தோ?நின்
தீம்பியற் றேனென் பாணி திரும்பிடா தோ,சொல் ஐய!

முத்தாரம் - எல்லோன்
1980

## 374. கலங்கரை விளக்கே!

முருகுவே தமிழின் மூச்சே! முத்தமிழ் வித்தே! நெஞ்சம்
உருகவே தமிழர் வாழ்வின் உயிரெனத் திகழ்ந்த மேலோய்!
தருவென நிழல்கொ டுத்த தண்டமிழ்த் தேரே! கண்ணீர்
பெருகிடக் கவிக்கு லத்தைப் பிரிந்துநீ சென்ற தேனோ?

இலக்கியத் தேனை அள்ளி இனிதுறக் கொடுத்த செம்மால்!
கலங்கிய நீரைப் போலக் களையிழந் திட்ட வாழ்வின்
நலத்தினைப் பேணித் தென்னர் நலிவினைப் போக்கப் பாடும்
கலங்கரை விளக்கே! ஐயா! காலனுக் கிரையா னாயோ?

த. நேசன் - ஞானதாசன்
1982.4.25

## 375. முனைவர் இராம. சுப்பையா

பல்கலைசேர் கழகத்தின் படிக்கட்டில் தமிழ்ஏற்றித்
தொல்கலைச்சீர் சுடர்தந்த தூயவனோ கண்மறைந்தான்?

புதுநோக்கம் இவன்நோக்கம்; பொருள்பொதிந்த கலைநோக்கம்;
பொதுநோக்கம் சாகுமெனில் புகழ்இனிமேல் எதைநோக்கும்?

எழுத்துலக வரலாற்றை ஏட்டுலகில் கொண்டுவந்தான்
முழுஉலகும் தான்துறந்து முடித்தானோ தன்சரிதை?

தமிழ்க்கல்வி பற்றியவன் தனிக்கருத்தைச் சொல்கையிலே
இமயம்போல் எழுந்துநின்ற இயல்பினைநான் அறிந்திருந்தேன்!

அன்றொருநாள் சிங்கையிலே அன்னவனே என்னைவந்து
கண்டதொரு வேளையில்தான் தொண்டனவன் உயர்வறிந்தேன்!

யார்என்றேன் சுப்பையா என்றுரைத்தான் தாழ்மையுடன்
பாரறியத் தமிழ்க்கொடியைப் பறக்கவிட வேண்டுமென்றான்!

இறக்கவிட மாட்டோம்நீர் ஏற்றுமந்தக் கொடியென்றேன்
இறக்கவிட்டோம் அவ்வுயிரை ஏற்றிடுவோம் அவ்வுணர்வை!

- ஐ. உலகநாதன்

## 376. நாணய மிக்க நற்றொண்டன்

நெகிரி[8]யில் பொதுநி கழ்வா? நிச்சயம் ஆமாம் அந்தப்
பகுதியில் பம்ப ரம்போல் பணிகளை ஆற்ற வல்ல
தகுதியைப் பெற்ற ஓர்ஆள் தகைமிகு சேக ரன்தான்!
தகுதியே அவன்தொண் டாலே தகுதியைப் பெற்ற தென்பேன்!

நாநயக் காரன் செய்கை நாமொழி பற்றி நிற்கும்
பாநயக் கார ருக்கும் பயன்செயல் செய்ந ருக்கும்
நாணய மான தொண்டால் நன்மைகள் புரிந்த வள்ளல்!
மோனயம் காண இன்று முந்தியே சென்ற தென்னே?

இறந்தவன் சேகரன் என்றால் ஏற்குமோ நெஞ்சம்! இல்லை
உறைந்தனன் பேச்சில் மூச்சில் உணர்ச்சியில் தமிழர் நெஞ்சில்!
நிறைந்திடு வரலாற் றேட்டில் நிலைபுகழ் கொண்ட தூயன்!
கறைபடா ஆன்மா சாந்தி கண்டிட இறைஞ்சு வோமே!

அறிவொளி
1977

- சீ. மா. இளங்கோ

---

*8 நெகிரி - நெகிரி செம்பிலான், ஒரு மாநிலம்*

# 377. அந்த மனிதன்!

ஒப்பரிய தமிழ்ச்சிறப்பை உயர்கல்விக் கூடத்தில்
உணர்ந்துரைத்த அந்த மனிதன்
உள்ளார்ந்த மெய்யன்பால் ஒருசேர மாணவர்கள்
உளங்கொண்ட அந்த மனிதன்
செப்பரிய இலக்கியங்கள் செழித்தோங்க அரும்பணிகள்
செய்திட்ட அந்த மனிதன்
தேர்வுகளில் மாணவர்கள் தேர்ச்சிபெற ஊர்தோறும்
சென்றுழைத்த அந்த மனிதன்
எப்பெரிய பணியேனும் இந்துமதப் பணியென்றால்
இனிதேற்ற அந்த மனிதன்
ஈடற்ற சமயத்தை எல்லாரும் அறிதற்காய்
எடுத்துரைத்த அந்த மனிதன்
இப்பெரிய பணிவிட்டான் இரா.தண்டா யுதமனிதன்
எலாம்விட்டான்! உன்னை அடைந்தான்!
இணையொருவர் இல்லாத இருஞ்சுடரே! பரம்பொருளே!
எமையாளும் பரம சிவனே!

இன்முகமே தன்முகமாய் இன்சொல்லே தன்சொல்லாய்
இன்செயலே என்றும் செயலாய்
இல்லறத்தை ஓம்பிவந்த இல்லாளைக் கண்ணீராய்
இருந்திடவே செய்து விட்டான்!
பொன்முகமே முகமான பூவழகே அழகான
புத்தறிவே வடிவ மான
பொன்னன்ன புதல்வர்களைப் பூவண்ணச் சிறுமியரைப்
புரண்டழவே செய்து விட்டான்!
தன்முகமே தினம்பார்த்துத் தமிழ்பயின்ற மாணவர்கள்
தலைமோதச் செய்து விட்டான்!
தகையாளன் என்நண்பன் தன்நண்பர் யாவரையும்
தரைபுரளச் செய்து விட்டான்!
உன்முகமே காணுதற்கங் கோடோடி வந்துள்ளான்
ஒருமனிதன்! நிழலே தாராய்!
ஒப்பொருவர் இல்லாத ஒருமணியே! பரம்பொருளே!
உலகியற்றும் பரம சிவனே!

த. ஓசை - அதிகைமணி
1987.6.14

## 378. புகழாஞ்சலி

தனிநாய கம்இன்பத் தமிழொன்று தானென்று
சனநாய கம்சொல்லு மே;
அணிநாய கம்இந்த அகிலத்தில் ஆதிதமிழ்
ஆமென்னும் வாய்வெல்லு மே;
மணிநாய கம்இந்த மலையத்தில் நாம்கண்ட
தனிநாய கம்அல்ல ரோ?
இனிநாய கம்என்ற சொல்லிற்கு வேறொருவர்
இணையென்றால் யாம்கொள்ள வோ?

சோழமா மன்னனும் செயவர்ம வீரனும்
சுவடிட்ட மலையநில மே!
ஆழமாந் தமிழ்க்கடல் ஆய்விற்கு மாநாட்டை
அமைவுறக் கண்டநில மே!
கோலமா நகர்வளர் பல்கலைக் கழகத்திற்
கொஞ்சுதமிழ் கொண்டநில மே!
வேழமாம் தனிநாய கத்தந்தை தமிழ்த்தொண்டு
மேவிவரு கின்றநில மே!

உடல்தீண்டி உறுசுகம் தருகின்ற தென்றலாய்,
உற்றாரின் வாழ்வுவேண்டிக்
கடல்தாண்டி வந்ததனி நாயக அடிகளின்
கைதீண்டி உயரவேண்டி,
மடல்தீண்டி வந்தநறு மணமாகத் தமிழிந்த
மலையத்தில் நிலைக்கவேண்டி,
இடர்தாண்டிப் பணிசெய்த அடிகளின் புகழ்வாழ
இறைஞ்சுவோம் இறையைவேண்டி!

1980.9.15 - காரைகிழார்

## 379. என்றும் வாழ்வார்!

அறம்விரிந்த பெருநெஞ்சம் அமைதிவழிச்
செயலாற்றும் அரிய ஆற்றல்
புறம்திரிந்த எதிர்ப்பனைத்தும் புறங்காட்டி
அமைவான்ற புதுமை ஏற்றித்

திறம்செறிந்த பெருநெறியில் தே.நி.நி.[9]
கூட்டுறவு சங்கம் தோற்றி
மறம்புரிந்த வாழ்க்கையினை வனப்பார்ந்த
நற்றலைவன் மறைந்தா னம்மா!

வாய்ந்தபல நிலைமிகுந்தும் வழுவேற்கா
மனவளத்தால் வாழ்க்கை வாழ்ந்து
ஆய்ந்தபல துறைஇருந்தும் அவற்றிடத்துப்
பொருளீட்ட அறியாச் செம்மல்!
ஓய்ந்தமரும் வேளையிலும் ஓயாது
தொண்டாற்றி உயர்ந்த மேலோன்!
மாய்ந்தாலும் சம்பந்தன் மலைநாட்டுத்
தமிழரிடை என்றும் வாழ்வான்!

- சா. சி. குறிஞ்சிக்குமரன்

# 380. புத்துயிர் ஈந்த திலீபன்

பழம்புற நானூறு படித்துப் படித்துக்
குழம்பிப் போயிருந் தேன்பல காலம்;
அரிதாரப் பூச்சுக்கு அடிமைத் தமிழனைத்
தெருத்தொறும் பார்த்துப் பார்த்துச் சலித்து
நொந்துபோ யிருந்த நாளையில், அந்த
விந்தை நூலில் விளைந்து கிடக்கும்
மானமும் ஈரமும் மறப்புலித் திறனும்
மோனைப் புலவரின் முழுக்கற் பனையென
எண்ணி யிருந்தேன்; அந்த வேளையில்
விண்ணின் றெழுந்த வெடிக்குரல் போலச்
செய்தி வந்தது! செய்தி வந்தது!
தென்னிலங் கையில் கணைக்கால் இரும்பொறைப்
பின்னவன்[10] முளைத்த செய்தி வந்ததே!
வெய்துழல் கின்ற நெஞ்சு விரிந்ததே!
விடுதலை எய்திய நாள்முதல் தமிழரைப்
படுகொலை செய்தே பழகிய சிங்களப்
புலைமை அறுக்கும் புலிப்படை எழுந்ததும்

---

*9 தே. நி. நி. - தேசிய நிலநிதி*
*10 பின்னவன் - தம்பி*

நிலைமை மாறும் நிலவரத் திடையே
சுரைப்பிஞ்சு மூக்குச் செயவர்த்த னேவின்
தரைப்படை பிடித்த தமிழ்ப்படை மறவரில்
ஒருவன்; அன்னவன் உரங்கெடல் இன்றிப்
பெருமையும் மானமும் கருதிய தலைமகன்;
தண்ணீரும் இன்றிப் பன்னிரு நாள்கள்
உண்ணா நோன்பிருந் தான்ஒரு தனியே!
ஈழ விடுதலைக்கு இதுவிலை எனஅவன்
தாழாத் தலையின் தகைமை நிறுவினன்
செத்துப் போன திலீபன்
புத்துயிர் ஈந்தான் பழம்புகழ் நூற்கே!

1987 - ப. மு. அன்வர்

# 381. நீதியின் சட்டத்தை நிமிர்த்தினான்

ஒருநாளில் அவன்படித்த நாளி தழ்தான்
ஒருநாளில் அவனையே படிக்கக் கண்டோம்;
ஒருநாளில் அவன்படித்த சட்டம், பின்னர்
ஒருநாளில் அவனைத்தான் படிக்கக் கண்டோம்;
ஒருநாளில் அவன்கற்ற அரசி யல்தான்
ஒருநாளில் அவனையே கற்கக் கண்டோம்;
ஒருநாளில் அவனறிந்த மரணம் பின்னால்
ஒருநாளில் அவனையே அறியக் கண்டோம்.

## வேறு

நீதியின் சட்டத்தை நிமிர்த்தினான் - அதனால்
நெஞ்சத்தின் கூனல் நிமிர்த்தினான்
ஓதிய சட்டத்தைப் புதுக்கினான் - நாட்டின்
ஒவ்வொரு துறையிலும் புகுத்தினான்;
வேதனை தருவதோர் சம்சுக்கு - இவன்
வேதனை தரச்சட்டம் வடித்தனன்
ஆதிநா கப்பனாம் வல்லவன் - இவன்
அரசிற்குப் புகழ்சேர்த்த நல்லவன்!

1976, மே - பாதாசன்

# 382. எங்கள் நேதாஜி!

எப்போ வருவாரோ எங்கள் நேதாஜி! (எப்போ)

ஒப்பி லாப்புகழ் உன்னத நேதாஜி!
தப்பில் பாரதத் தாய்த்திரு நாட்டிற்கு (எப்போ)

சத்தியம் காத்திடச் சமர்க்களம் கண்டவர்
உத்தம காந்திக்கு உயிர்த்தோழ ரானவர் (எப்போ)

1945 - சிங்கை முகிலன்

# 383. தமிழ்வேறு தாசன்வேறா?

கவிக்குலத்து மன்னவனே! கன்னித்தமிழ் காவலனே!
சுவைசேர் தமிழ்பாடித் தூயதமிழ் காத்தவனே!
பழமை எனும்பெருநோய் பற்றிவிட்ட காரணத்தால்
கிழமை வளர்க்காமல் கீர்த்திபெற எண்ணாமல்
மூடஎண் ணத்தில் முழுகித் தவித்துழன்ற
பீடுடைய நற்றமிழர் பேறுபெற நன்மருந்தைத்
தமிழிற் குழைத்தளித்துத் தகைமையுட னேதந்து
அமுத நிலைக்கே அழைத்துவந்த மேலவனே!
சாதிப்பேய் உன்னைக்கண் டஞ்சிச் சரிந்ததடா!
கோதில் தமிழினிலே கூடிவந்த வேற்றுமொழி
ஓடி ஒளிந்திடவே உண்மைத் தமிழ்செழித்தே
நாடெல்லாம் நல்லினிமை நாட்டிச் சிரிக்குதடா!
பெண்மைக்கு நின்பாப் பெருமையினைத் தந்துபெரும்
புன்மையாம் கைம்மை புதைகுழியிற் போட்டதடா!
ஆணித் தரமாய்நீ ஆக்கிவைத்த பாட்டெல்லாம்
கூனிக் கிடந்தோரைக் குதித்தெழவே செய்ததடா!
"வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும் தோள்க"ளெனச்
சங்கொலித்த பாடல்கள் தமிழிற்குக் கேடயமாம்!
"தமிழுக்கும் அமுதென்று பேர்"சொன்ன உன்பாடல்
தமிழ்நிலத்தில் உள்ளவரை சாகாத நல்வாழ்த்தாம்!

"வெட்கமிலை" என்றே வெறுத்துநீ சொன்னகவி
வெட்கமிலான் மானத்தை வேண்டவைக்கும் சாட்டையடி!
“கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டிவிட்டால்
மண்ணில் குமரர்க்கு மாமலையும் ஓர்கடு"கென்
சாகாத் தமிழ்ப்பாடல் சாகாத காதலினைச்
சாகாத நற்றமிழில் சாற்றிவைத்த ஓவியமாம்!
“காலை யிளம்பரிதி கண்டேன் அவளை"யெனக்
கோல அழகைக் கொடுத்திட்டாய் நற்றமிழில்!
“இருட்டறையில் உள்ளதடா உலகம்" எனும்மொழியோ
குருட்டுத் தன்மையினைக் குத்துகிற வல்லீட்டி!
மதுத்தேக்கி வாழ்வின் வழிகள்பல கண்டறியப்
புதுமைத் தமிழிற்குப் பொற்கிழிபோல் நீதந்த
பாட்டெல்லாம் இந்தநாற் பாரில் நிலைத்திருந்தே
ஏற்றமுடன் வாழும்எழில் மாக்கவிஞன் பாரதிநல்
தாசனே உன்பேர் தமிழிற் கலந்ததடா!
பாசமுடன் நற்றமிழைப் பாட நினைக்கையிலே
மாக்கவிஞன் உன்பேர் மனத்தினிலே தோன்றுமடா!
நோக்கமெலாம் தாய்மொழியின் ஆக்கமென வாழ்ந்ததனால்
தமிழ்வேறு 'தாசன்'வே றென்றுமே யாம்நினையோம்!
தமிழென்னும் போதுன் தனிப்பெயரும் நெஞ்சேறும்
தன்னேரில் லாநின் தமிழ்க்கவிதை பாடுங்கால்!
என்னே புதுமை! இயல்பில்லான் நாவினிலும்
பொன்போலப் பாப்பல பூக்குமடா! நான்விரும்பிப்
பாப்புனையும் ஆற்றலினைப் பெற்றதுன் பாட்டாலே!
நற்றமிழை நான்பாட நாட்டமுற்ற துன்னால்தான்
சோர்ந்திருக்கும் வேளையிலும் தூயவனே நின்பெயரை
ஓர்ந்தால் உணர்ச்சிமிக ஓடிப் பெருகிவரும்!
சோர்வோடிப் பாட்டுச் சுரந்து பெருக்கெடுக்கும்!
யாரிடமும் யான்சென்று யாப்பறிவு பெற்றதில்லை;
நேரியநின் பாவேதான் நெஞ்சிற் குடியேறிக்
கூரிய யாப்புக் கொடுத்திட்ட தென்றிடுவேன்!
ஐய!நின் சாவை அடியேன் அறிந்திடலும்
மெய்யும் நிலைகுலைய நெஞ்சும் துடிதுடித்தே
சின்னேரம் நின்றதுவே சிந்தைமெழு கானதுவே!
கண்ணீர் கசிந்து கனித்தமிழே! நின்னுருவம்
நிலையாய் என்னெஞ்சில் நின்றுவிட்ட தென்நாளும்
கலையாத ஓவியமாய்! பாவேந்தே நின்னுருவம்
நெஞ்சில் நிலைத்ததனால் நின்வழியில் காலூன்றி
அஞ்சாத நெஞ்சால் அகத்தி லெழும்கருத்தை
நெஞ்சுயர்த்திப் பாடிடுவேன்! நேரியனே! நின்பாட்டு

மலைகள் பெயர்ந்தாலும் மாக்கடல் தூர்ந்தாலும்
உலகம் குலைந்தாலும் ஓங்கியே வாழ்ந்திருக்கும்!
சூழ்ந்த துயரைச் சுடரெண்ணி, மனமாறி
வாழ்த்துகிறேன் வாழியவே நீ!

த. முரசு - முரசு. நெடுமாறன்
1965.5.27

## 384. பெருமாள் அண்ணன்

செந்தமிழ் மணக்கும் செவ்வாய்! சீர்கலை போற்றும் வாழ்வு!
நொந்தவர்க் கிரங்கும் கொள்கை! நோய்மனம் இல்லாப் பண்பு!
புந்தியில் கரவே இல்லாப் புகழ்தமிழ்ப் பாவ லன்நீ!
செந்தமிழ்ப் பெருமாள் அண்ணா! சென்றதும் எங்கே? எங்கே?

ஒழுக்கமே உயிராய்க் கொண்டோய்! உளம்நொந்து வந்த வர்கள்
தழைக்கக்கை தூக்கி விட்டுத் தன்னிரு விழிகு ளிர்ந்த
மழைக்கால மேக மே!நீ வாழ்வியல் கதைமு டித்துப்
பழகிய உடன்பி றப்பைப் பிரிந்தாநீ சென்றாய் அண்ணா!

த. மலர் - பெரி. நீல. பழநிவேலன்
1979.8.19

## 385. மறையா மலை

நிறையார்மொழி தனையாள்பவர் நினைவிற்புது விதையாய்
நிறைந்தார்மொழி தனையாய்ந்திவர் நிலையாய்த்தமிழ் மனத்துள்
மறையாப்புகழ் மருவித்தமிழ் மலையாயிவர் வாழ்ந்து
மறைந்தாரெனில் மனத்தாலிவர் மணந்தார்தமிழ் மலராய்!

மலையாவிது மணல்மேடென மனப்பால்சிலர் குடித்துக்
குலையாத்தமிழ் வளத்தால்பொருள் குவித்தார்புரைக் கலையால்
வளையாநெறி மனத்தால்மறை மலையார்தமிழ் நெறியில்
கலைபோகிய கதிராம்செருக் களப்போர்புரி முரசம்!

உதிரிப். - பொன். அன்பரசன்
1980

## 386. மறந்தா போனாய்?

போருக்குச் செல்கின்ற வீர னுக்குப்
போராடும் திறனோடு துணிவும் வேண்டும்;
ஊருக்கு உபதேசம் செய்யும் முன்பே
உபதேசம் தன்னளவிற் பெறுதல் வேண்டும்;
பேருக்கு ம.இ.கா. என்றில் லாமல்
பேராற்றல் கொண்டதோர் இயக்க மாகப்
பாருக்குத் தந்திட்ட பெருமை உண்மைப்
பாட்டாளி மாணிக்கா தனையே சாரும்!

சீரோடும் சிறப்போடும் ம.இ. கா.வில்
செயலோங்கச் செய்திட்ட நின்றன் பாங்கு
நீரோடும் நதிபோல இருந்த நாளில்
நிலைமேவும் மீனாகத் துடிக்க, நாட்டார்
யாரோடும் கூறாமற் போன தென்ன?
யாருன்னை நிந்தித்தார் கோப மென்ன?
காரோடும் வானத்தில் தவழும் எங்கள்
கதிரவனே! நீயெம்மை மறந்தா போனாய்?

வரலாறு சாவினிலே போகு மென்றால்
மாணிக்க வாசகமும் அதுபோ லாகும்;
திறலாறு சாக்கடையில் தேங்கு மென்றால்
திறனாளர் வாசகனார் புகழும் அஃதாம்;
வறலாறு போலன்றி எகிப்தில் நாசர்
வணிகர்க்கு வளஆறு கண்டாற் போல
வரலாற்றுச் சிங்கம்நீ! மக்கள் நெஞ்சின்
மாணிக்கத் தீபம்நீ! மறையாய் என்றும்!

இளங்கோ. - சீ. மா. இளங்கோ
1983

## 387. மாவீரர் மார்ட்டின் லூதர் கிங்

நீக்கிரோவின் மாபெரிய தலைவர், மண்ணில்
நிழல்பெற்றோர் அனைவர்க்கும் நண்பர், அன்பைத்
தேக்கிவந்த பெருந்தொண்டர், மேதை நீதி
தெரிந்துரைக்கும் வல்லவராம் மார்ட்டின் கிங்கோ

போக்கிரியின் துப்பாக்கிக் குண்டைத் தாங்கிப்
போய்விட்டார் சாறோக்கி! அந்தோ! வீரர்
தூக்கிவைத்த நெறியிங்கே 'தூள்தூள்' என்றால்
தொல்லுலகில் அவர்பெற்ற பரிசைப் பாரீர்!

த. முரசு
1973.8.26

- கடையநல்லூர் ஜமீலா

# 388. உரிமை காவலர்

தன்னலத்தில் நாட்டமில்லாத் தகைமை யாளர்;
தளராத உழைப்பினிலே திறமை யாளர்;
தென்னகத்தின் அறிவினுக்கே முதன்மை யாளர்;
தீன்[11]குலத்தின் உயர்வினிலே உறுதி யாளர்;
கண்ணியத்தின் காவலராம் காயிதே மில்லத்
கர்த்தனவன் அழைப்பேற்றே அமர ரானார்;
இன்னாலில் லாஹி[12]..... யவர் இனிய ஆன்மா
இறைதிருவில் சாந்திபெற இறைஞ்சு வோமே!

விழிப்பில்லாச் சமுதாயம் எதுவா னாலும்
வீழ்ச்சியுறல் நிச்சயமாம்; வருங்கா லத்தில்
இழிசொல்லுக் கிலக்காகி உயிர்சு மக்கும்;
எழுச்சியற்ற மக்களெனப் பிறர்சு மத்தும்
பழிப்பிற்கும் இலக்காக நேரு மென்ற
பண்புரைத்து, சமுதாய மக்கள் தம்மை
விழிப்பூட்டி வைத்தந்த மில்லத் சாஹிப்
விழிமூடி வேற்றுலகு புகுந்திட் டாரோ?

சமுதாயம் மேன்மையுற்று உலக ரங்கில்
சரிசமமாய் வாழவென்று சூளு ரைத்தே
இமைவிழியைக் காப்பதுபோல் முஸ்லிம் லீக்கை
இரவுபகல் பாராது கட்டிக் காத்தார் ;

11 தீன் - நெறி. இஸ்லாத்துக்கு ஆகுபெயர்
12 இன்னா லில்லாஹி - 'இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்' என்பதன் சுருக்கம். இழப்புச் செய்திகளைச் செவியுறுங்கால் முஸ்லிம்கள் சொல்லிக்கொள்ளும் தேறுதல்மொழி. இதன் பொருள் : "நிச்சயமாக நாம் இறைவனிடமிருந்தே வந்தோம்; மீண்டும், நிச்சயமாக அவனிடமே திரும்பிச்செல்வோம்!"

தமதுபொருள் உடலுழைப்(பு) அனைத்தை யும்மே
தயங்காது அர்ப்பணித்த தலைவ ரின்று
சுமைகளையே தாங்காது பொறுப்பை நீக்கிச்
சுவனுலகு சென்றாரோ? சோர்வைப் போக்க

அருகினிலே நண்பரெலாம் அமர்ந்தி ருக்க
அன்புள்ள உறவினர்கள் சூழ்ந்தி ருக்கப்
பரிவுள்ள அமைச்சர்குழாம் பார்த்தி ருக்கப்
பாவலரும் நாவலரும் பதறி நிற்கக்
கருகிவிழும் தளிர்போலக் காயிதே மில்லத்
கண்மூடித் துவண்டதனைக் கண்ட போதில்
உரிமைக்கே உழைத்தவரே! என்றெல் லோரும்
ஓடவிட்டார் உதிரத்தைக் கண்ணீ ராக!

மக்களுக்காய் அயராதே உழைத்த செம்மல்
மாபரனின் சந்நிதிக்குச் சென்று விட்டார்;
தக்கதொரு துணையாக நின்ற மில்லத்
தக்கோனின் அழைப்பினையே ஏற்று விட்டார்;
துக்கமெனும் பாலையிலே நமைவி டுத்துத்
தூரத்தே அகன்றிட்டார்; எனினு மன்னார்
ஹக்க[13]னருள் பெற்றென்றும் சுவனில் வாழ
அனைவருமே இறைஞ்சிடுவோம் அருள்அல் லாஹ்வே!

த. முரசு - ந. கரீம்
1973.4.23

## 389. மனங்கவர் சான்றோன்

செந்தமிழ்க்கு ஊறு நேர்ந்தபோ தெல்லாம்
சிங்கந் தனைநிகர் பிடரி சிலிர்த்தும்
அதிரடி கொடுத்தும் எதிரியைத் தகர்த்த
கோ.சா.[14] பட்டறை புடம்போட் டளித்த
தேசு பொலிந்த திருமுகத் தமிழ்மகன்
முருகை யன்என் மனங்கவர் சான்றோன்

---

*13 ஹக்கன் - சத்தியமானவன், இறைவன்*
*14 கோ. சா. - கோ. சாரங்கபாணி*

செய்பணி ஏற்றுச் சிங்கை சென்று
அன்னவன் முன்னிலை நின்ற காலை
சின்னவன் பெரியோன் எனும்தளை யகற்றி
"நல்லதோர் கலைஞ! நினைத்தது செய்க!
இலைஈங் கொருதடை எண்ணுக பெரிதாய்!
தமிழிற் கணிகலம் பூட்டுக! தமிழிசை
உயர்வுக் கெனஓர் மகுடம் சூட்டுக"!
என்றெலாம் உளத்துக்(கு) ஊக்கம் நல்கிய
தென்றல் மனம்கொள் செந்தமிழ்த் திருமகன்;
சிங்கை வானொலிச் சிறப்பினை உயர்த்தச்
செந்தமிழ் நலத்தினைக் கண்போல் காக்க
ஒருசிறு தவறெனின் உடனதைக் களைந்திடச்
சீற்றத் துடனெழு வீரப் பெருமகன்;
தமிழறி யாரும் தாமே கற்றிடத்
தமிழறி புலவரும் மேன்மேல் பெற்றிட
இலக்கியப் பணியினை இனிதே செய்தவன்
பண்டைப் புலவர் பாடிய பாக்களுக்
கெளிய நடையில் விளக்கம் தந்திடத்
தக்க அறிஞரைத் தேர்ந்து கொணர்ந்து
சிக்க லிலாத்தமிழ் சிறக்கச் செய்தவன்;
கடமை தவறினோர் கண்ணியம் இழந்தோர்
மேலோ ராயினும் தயங்கா தொறுத்தவன்;
வடமொழிக் கலப்பை ஆய்ந்தாய்ந் தகற்றித்
திடமுடன் எதிர்ப்பினைத் தாங்கிய உளத்தினன்;
கவிதைகள் வளம்பெறக் கதைகள் நயமுறச்
செவிநுகர் கனிகள் செம்மையாய்த் தந்தவன்;
தன்கீழ்ப் பணிபுரி வோர்க்கோர் இடரெனில்
தானே முன்நின் றுதவிகள் புரிந்தவன்;
பணிகள் முடித்துப் பயனைக் கொடுத்து
இல்லம் திரும்பி இனிதே ஓய்வுறத்
தமிழகம் சென்றவன் சாய்ந்தா னெனுமோர்
கொடிய செய்தி கூர்வே லென்ன
நெஞ்சில் பாய்ந்தது; காலன் எனுமோர்
வஞ்சகன் மகிழ்ந்தான்; நைந்த மனங்களோ
நைந்து நாளெலாம் நலங்கெடு மாறே!
தெளிந்திட இன்னும் எத்தனை காலமோ?

1987 - ரெ. சண்முகம்

## 390. மயங்கி யாம் அழவைத்தாயே!

மறைந்தனன் மலைய கத்தின் மாபெரும் கலைஞன்; செல்வன்
உறைந்தனன் உள்ள மெல்லாம்; உணர்வினி லுறங்கு கின்றான்;
நிறைந்தனன் கலையால், கொஞ்சும் நிலவினில் ஒளிச்சு டர்போல்!
மறைந்தனை மண்ணில் நின்னை மறக்குமோ மலைய ருள்ளம்?

பாடினாய் இன்னி சைத்தேன் பாங்குறு மேடை எங்கும்
ஓடினாய் அலைக டந்தே உயர்திரைப் படமெ டுக்க,
நாடுனைப் போற்றும் வண்ணம் நம்கலா சாரம் தன்னைக்
கூடிய 'கிரிமிஸ்'[15] மூலம் குவலயம் வாழ்த்தத் தந்தாய்!

உன்திறன் பெற்றார் இங்கே யாருளார்? கலைநு ணுக்கப்
பண்திறன், நடிப்பு, சேர்ந்த பாத்திறன், இயக்கும் தன்மை,
வெண்திரை ஆக்கம் கண்டாய்! விரும்புசீர் இசைய மைத்தாய்!
என்திறன் இல்லை, ரம்லி எங்கணும் கலைதான் பெற்றாய்!

ஆசியான் திரைப்ப டத்தின் அண்மைய விழாவிற் கூடப்
பேசினாய்; மலையர் பெற்ற பெருமையைப் பாடல் மூலம்
தேசிய விருதைப் பெற்ற சிங்கமே! மூன்றி னத்து
மாசிலாக் கலைஞ! நாளும் மயங்கியாம் அழவைத் தாயே!

த. மலர் - தீ. சி. பொன்னுசாமி
1973.6.3

## 391. லுமும்பா

குமுறும் எரிமலைபோல் கோடிதுயர் சூழ்ந்தும்
நிமிர்ந்தொளிர நெஞ்சுயர்த்தி நின்ற - லுமும்பா
பிணமானார்! மேலோர் பெயரானார்! போற்றி
வணங்கு தலையே வணங்கு!

த. முரசு - எஸ். எம். தீன்
1961.3.1

---

*15 கிரிமிஸ் - மழைத்துளி. மலாய், இந்தியக் கலாசாரங்களின் ஒருங்கிணைப்பை அடிப்படையாய்க் கொண்டு தயாரிக்கப்பட்ட மலாய்த் திரைப்படம்.*

# 392. ஆழ்கடல்

எண்ணிலா உடுக்களும் எழில்ஒளிர் திங்களும்
மண்டினும் ஞாலத் திருளை அகற்றும்
ஞாயிற் றின்முன் நாணுதல் இயல்பாம்;
ஆயின் இதுவே உருவகம்; மு. வ.
முழுதும் களஞ்சியம்; முற்றிய மலையாம்;
எழுந்தபல் நூல்களும் இதயத் திருளினை
ஓட்டிடும் விளக்கு; தெள்ளிய நடையில்
தீட்டிய கருத்துகள் வாழ்விற் கணிகலன்;
நெடுங்கதை, இலக்கிய விளக்கம், அரசியல்,
சமூகம், நாடு, பயணம், ஆய்வு,
மொழிக்கலை இவைபோல் பல்லாற் றானும்
தழைத்த தண்ணறும் சோலை மலர்கள்;
பாமரர்க் கும்பொருள் பயன்படும் வண்ணம்
திருக்குறள் தெளிவுரை வழங்கிய ஆசான்;
ஆழ்கடல் போன்ற அமைதியும் அதனுள்
அடங்கிய செல்வமும் என்ன வாழ்ந்த
பேரறி வாளன் பெரிதே செய்தவன்;
சொல்லும் செயலும் வேறென் றறியா
நல்லவன்; கண்ணோ டாது நடுநிலை
நின்றவன்; சொன்னவன்; மனம்பொறாப் பகைவர்
பாய்ச்சிய கடுஞ்சொல் பொறுத்தவன்; அதனைத்
தவமெனக் கொண்டவன்; தீங்கிழைக் காதவன்;
அவமே எனினும் அகத்தில் புதைத்தவன்;
மாணவர் பலர்மேற் கல்வி வளம்பெறத்
தானே ஈந்ததைப் பிறர்க்கு மறைத்தவன்;
நூல்களின் வருவா யில்ஒரு பகுதியைப்
பள்ளிகள் நலம்பெற வண்மை புரிந்தவன்;
ஒழுக்கமும் உயிரும் ஒன்றெனத் திண்மையில்
நிலைத்தே நின்று நீள்புகழ் காத்தவன்;
பன்மொழிப் புலவன்; மாணவர் உளநெகிழ்ந்(து)
'அப்பா!' என்றே அழைக்கப் பெற்றவன்;
இப்பார்த் தமிழர்க்கு இலக்கணம் அமைத்தவன்;
அறமே வாழ்வாய்க் கொண்டஅம் மகனை
அணைத்தஅவ் விறப்பை எவ்விதம் ஏற்பேன்?
மலைகளுக் குண்டோ தாழ்வு? கடலின்
அலைகளுக் குண்டோ அழிவு? வீசும்
காற்றுக் குண்டோ கரைவு? எரியும்

தீய்க்கும் உண்டோ தீய்வு? என்றால்
மு. வ. விற்கும் முடிவிலை என்பேன்!
ஞாலம் வாழு மட்டும்
சாலப் பெருமகன் வாழ்வதும் மெய்யே!

1987 ரெ. சண்முகம்

# 393. தெய்வமாயிருப்பான்

பன்னூ றாண்டுகள் பறங்கியர் கையில்
அன்னை இந்தியா அடிமைகொண் டிருந்த
அவல நிலையினை அகற்றிய வீரன்;
அண்ணல் காந்தியின் அரும்பெரும் தோழன்;
அகில மெங்கணும் அமைதி கண்டிட
அயரா துழைத்த அகிம்சையின் காவலன்;
நேர்மையின் சின்னம்; நீதியின் நண்பன்;
அறிவின் சுடரவன்; ஆங்கில மேதை;
அரிசியல் வானில் அழகு வெண்ணிலா;
உலக சரித்திரம் உலகினுக் களித்த
உத்தமன்; ஏழைக் குயர்வு தந்தவன்;
ஒன்னார் தம்மையும் இன்முகம் காட்டி
இனிய சொல்லுடன் ஏற்றுரை யாடிடும்
பெம்மான்; உலகில் பொதுமை மலர்ந்திடப்
பெருவாழ் வதனைப் பொதுவினுக் களித்த
பண்பின் சிகரம்; பாரதம் காத்த
அன்பின் ஊற்று; ஆசிய ஜோதி;
சுதந்திரம் மனிதர் சொத்தெனக் கூறிச்
'சுதந்திரம்' என்னும் சுலோக மொழியினை
அடிமை நாடுகள் அனைத்து மறிந்திட
அழகு பேருரை ஆற்றிய தீரன்;
பண்டிட் ஜவஹரைப் போலார் மனிதர்?
என்றியாம் போற்றி மகிழும் வேளையில்
ஐயகோ இறையே! ஆகுமா இச்செயல்?
அன்னையை இழந்த சின்னஞ் சிறுசுகள்
துடிக்கும் நிலையினில் துடிக்கிறார் மக்கள்!
தூயவ னவனை ஏன்பறித் தாய்நீ?

எழுத்தும் அவனது சேவையும் பண்பும்
என்றும் நிலைக்கும்! இவையே அவனென
இயம்பிட ரோஜா வும்வெண் புறாவும்
இருக்கின் றனவே என்பதை அறிவோம்!
இயற்கை எங்கேனும் இறப்பது முண்டா?
எரிந்தது உடலே! ஏந்தல் அல்லன்!
தெளிநீ ரோடையில் தெரிந்திடும் உருப்போல்
தெளிந்த மனத்தில் தெய்வமாய் இருப்பான்!
வாழிய வாழிய நீடு
வாழிய நேருஎனும் மேருவின் புகழே!

த. முரசு - சி. காவேரிநாதன்
1964.5.31

## 394. கொடுமையிலும் கொடுமையம்மா!

கொடுமையிலும் கொடுமையம்மா! - வாயால்
கூறமுடி யாததம்மா!
அடியோடு மக்கள்தமை
அழித்ததே குனோங்சிராய்! - அது
கொடுமையிலும் கொடுமையம்மா!

ஆண்டுப் பெருநாளை ஆசையுடன் கொண்டாட
வேண்டிப் பலகாரம் விதவிதமாய்ச் செய்தவரைக்
கூண்டோ டழித்த கொடுமைதனை யார்பொறுப்பார்?
இன்னும் சிலநாளே இருக்கும்தீ பாவளிக்குப்
பொன்னும் மணியும் புதுத்துணி யும்வாங்கி
வைத்திருந்த ஆசையெங்கே? வாழ்ந்திருந்த மக்களெங்கே?
மண்ணுக்குள் மடிய மலைசரிந்து வீழ்ந்ததம்மா!
விருந்தாளி யாய்வந்தார், வேலையாய் வந்தவர்கள்,
விருந்தானார்! குன்றின் விபத்துக்கே ஆளானார்!
தவழும் குழந்தைகளும் தள்ளாடும் மூத்தோரும்
கலியாண வாசலிலே காத்திருந்த கன்னியரும்
காளையரும் தாய்மாரும் காக்கவல்ல தந்தையரும்
எண்ணில் எழுபதுபேர் எல்லாரும் ஓர்நொடியில்
மண்ணில் புதைந்திட்டார்! மக்கள் அழுதிட்டார்!

கல்லுமலை என்றாலே கந்தா உனைநினைப்போம்!
எல்லாரும் உன்நினைவில் இன்பந்தான் கண்டிடுவோம்;
இன்றன்று நேற்றன்று எத்தனையோ ஆண்டுகளாய்க்
கல்லுமலை என்றால் கருணைமலை என்றிருந்தோம்;
நல்ல மலையென்று நம்பிவந்த அந்தமலை
கொல்லுமலை ஆனதென்ன? கொடுமை விளைந்ததென்ன?
சொல்லாய் குமரா! துயர்நீக்க மாட்டாயோ?
வற்றாத உன்கருணை வற்றியே போனதுவோ?
கொட்டித்தான் கொண்டாயோ குமரா! வயிற்றெரிச்சல்!
குன்றம் சரிந்ததெனும் செய்தி யினைக்கேட்டுக்
கன்மனமும் பாகாய்க் கசிந்துருகி ஓடுதம்மா!
நாடெங்கும் செய்தி நடுக்கத்தைத் தந்ததம்மா!
உறவு பிரிந்ததுபோல் ஊர்திரண்டு வந்ததம்மா!
பாடாற்றும் தொண்டர் படைதிரண்டு வந்ததம்மா!
இரவு பகலாய் எடுத்தபணி தோற்றதம்மா!
எதுவும் பயனில்லை! இனிமீட்புப் பயனில்லை!
பொதுவாக எல்லார்க்கும் புனிதச் சமாதிவைத்து
அஞ்சலிநாம் செய்வோம் அமர்ந்து!

த. நேசன்
1974.1.13

- வே. மகேந்திரன்

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"சொல்ல நினைப்பவை ஆயிர முண்டு!
சொல்ல முடிய வில்லை! - என்
உள்ளம் நினைப்பது கோடிக ளுண்டு!
உரைக்கத் தெரிய வில்லை!"

- ரெ. சண்முகம்

கக இசை

## 395. உன்னைப்போல் கலைஞனுண்டோ?

உன்னைப்போல் கலைஞனுண்டோ? - இறைவா!
உன்னைப்போல் கலைஞனுண்டோ?

புன்னகை ஓவியம் தீட்டுகிறாய்; - ஒளிப்
புள்ளிகள் ஆயிரம் கூட்டுகிறாய்;
சின்னநி லாச்சிரிப்பைக் காட்டுகிறாய் - கடல்
சிப்பியி லேமுத்தைப் பூட்டுகிறாய்!

காலையிற் கவிதை பேசுகிறாய்; - பெண்கள்
கற்பினில் அழகைப் பூசுகிறாய்!
நாலு திசையிலும் இசைவளர்த்தாய்; - பிள்ளை
நடையினி லேகலைக் கடைவிரித்தாய்!

எண்ணமென் றோர்மலர்ப் பொழில்வளர்த்தாய்; - அதில்
எத்தனை எத்தனை தொழில்வளர்த்தாய்?
விண்ணிலும் மண்ணிலும் உள்ளவெலாம் - சிறு
விளக்குகள் போலதில் துலக்குகிறாய்!

மலே. வானொ.
1970

- ப. மு. அன்வர்

## 396. அணைகையில் வளரும் கதைகோடி!

கண்ணீர்க் கதையின் உருவகமோ - நான்
காலையில் உதிரும் சிறுமலரோ?

வைகறைப் பனியில் குழலிசைத்தான்; - என்னை
வாவென்று விழியால் அரவணைத்தான்;
கைகளில் அணைப்பான் எனமகிழ்ந்தேன் - என்ன
காரண மோஅவன் வழிநடந்தான்!

ஊமையின் கனவோ உயிர்நினைவோ? - குழல்
ஓசையின் பொருளும் புரியவில்லை!
பூமலை இளமை பயன்தருமோ? - தெருப்
புழுதியில் படுமோ தெரியவில்லை!

ஊர்சொல்லும் கதைகள் ஒருகோடி! என்றால்
உள்ளத்தின் கதைகள் மறுகோடி - அவன்
பேர்சொல்லும் பொழுதில் பேதையென் நினைவில்
பிறந்திடும் கதைகள் பலகோடி!

மாலையில் நிலவில் மயங்கிய நிலையில்
மனம்சொலும் கதைகள் இருகோடி! - மலர்ச்
சோலையின் மடியில் மன்னவன் பிடியில்
மலர்ந்திடும் கதைகள் அறுகோடி!

இடையினில் ஒருகை இறுகையில் இதழில்
இழைகையில் மலரும் கதைகோடி - இருள்
அடைகையில் அவன்கை அருள்கையில் பருவம்
அணைகையில் வளரும் கதைகோடி!

பருவம் - ப. மு. அன்வர்
1976, செப்டம்பர்

## 397. நம்பி வந்தேன்

இராகம் : தோடி
தாளம் : ஆதி

**எடுப்பு**

தேவாதி தேவ உன் திருவடிதனையே - நான் நம்பிவந்தேன் (தேவாதி)

**தொடுப்பு**

மூவா முதலே பர - மோனவடிவே யன்ப ரின்ப (தேவாதி)

**முடிப்பு**

சோமாகாத் யாயனி காமாசுரர் போற்றும் பூமா
வாமா சுந்தர நாமா சீமா மாதவர் நேமா (தேவாதி)

த. கொடி - பண்டித ம. இராமலிங்கம்
1941

---

*குறிப்பு : தெலுங்கில் உள்ள தியாகராசர் கீர்த்தனங்களைப்போல் தமிழ் மொழியில் இசைப்பாடல்கள் வேண்டும் என அன்றைய தமிழர்கள் வேண்டியபோது தமிழிலும் இசையிலும் அருந்திறன் பெற்ற பண்டித ம. இராமலிங்கம், தியாகராசர் கீர்த்தனை மெட்டுகளில் பல தமிழ்க் கீர்த்தனைகள் பாடி உதவினார். அவற்றுள் ஒன்று இது. "சேசினதெல்ல" என்னும் தியாகராசர் கீர்த்தனை மெட்டு.*

# 398. தமிழர்கள் வருக!

**எடுப்பு**

தமிழர்கள் முன்வருக - நம்
தாய்மொழி வளர்த்திடவே மனம்மகிழ்ந்து
(தமிழர்கள்)

**தொடுப்பு**

அமிழ்தினும் இனியநம் அருமைத் தமிழ்மொழியை
அனைவரும் கூடியே தினம்தினம் வளர்த்திட (தமிழர்கள்)

**முடிப்பு**

பொருப்பில் பிறந்ததமிழ் புகழொடு தவழ்ந்ததாம்;
போற்றும் தமிழ்மன்னர் புரந்திட வளர்ந்ததாம்;
விருப்புடன் புலவரின் கவிமலர் புனைந்ததாம்;
வேங்கடம் வரைதனி யாட்சியே புரிந்ததாம் (தமிழர்கள்)

த. நேசன் - கு. அழகிரிசாமி

# 399. இருந்தும் பயனென்ன?

இராகம் : ஆனந்தபைரவி
தாளம் : ஆதி

**எடுப்பு**

இருந்தும்பல னென்ன? ஐயையோ!
இறந்தும்பல னென்ன?

**தொடுப்பு**

இருந்தும்பல னென்ன? இறந்தும்பல னென்ன?
பரந்திரு வடிதன்னைச் சிரமொத்துப் பணியாமல் (இருந்தும்)

**முடிப்பு**

பாதக மைந்தும் புரிந்து - பொல்லாப்
படுகுழிக் காளாய்ச் சிறந்து,
ஓது கலையுண்மை கடந்து - ஐயையோ!
ஓரறிவு போலே கிடந்து,
தீதுறுங் கல்லுங்கட் டையால், செய்தபல சொரூபங்களைக்
காதலாய்ப் பணிந்தெழுவர், கர்த்தன் கழலைமறந்தே (இருந்தும்)

சதிகள் மிகவும் செய்தே - அரிய
தாசர்போற் றன்னைப்பா வித்துக்,
கதிகூறு வோரைப் பகைத்து - ஐயையோ!
கால னுக்குயிர் வளர்த்து
மதிகெட்டு மண்விண் தன்னில், மேன்மை யொன்றில்லா
அதிவல்ல நாயன்கழல் அகத்தில் பணியாதென்றும் (இருந்தும்)

மாதைக் கோவிலாட்டி வைத்து - அவளின்
மதுர மொழியையா சித்து,
காதையஞ் ஞானம் படித்தே - அதனில்
கண்டதை மெய்யென் றபித்து,
பேதையுற்ற மாந்தர்களைப் பின்னும்ப வத்திலாட்டிக்
கோதையுற்ற பரமனைக் கும்பிடாமல் செல்வமுடன் (இருந்தும்)

த. போதினி - வே. நாராயணசாமி நாயகன்
1866.5.28

## 400. ராஜாங்க மன்னிப்பு!

ராஜாங்க மன்னிப்பு - ஐயா
ராஜாங்க மன்னிப்பு

பாமர மக்களைக் கொலைபுரிந்தாய் - பொல்லாப்
பயங்கர வாதியாய் மாறிநின்றாய்
தேமதுர மலாய்நாட்டு வளத்தையே
தீக்கிரை யாக்கினாய் என்றாலும் (ராஜாங்க)

நாட்டு நலத்திற்குப் பாடுபடாமல்
    கேடு புரிவதில் நாட்டம் கொண்டாய் - விரைந்
தோடும் ரயில்களைக் கவிழ்த்துவிட்ட உனக்கு
    நாடு மன்னிப்புத் தந்திடுச்சி - இப்போ (ராஜாங்க)

காட்டில் சிரமங்கள் பட்டது போதும்
    கண்ணிய மாய்வாழ வாவாவா!
நாட்டில் பிரஜையாய் நல்லவ னாகிட
    நல்ல சமயமிது வாவாவா!

பெற்ற தந்தைபோல் பிரியங் காட்டிடும்
    நற்குண மந்திரியும் தயவால்
குற்றவாளி உனக்குற்ற சமயத்தில்
    கொடுத்தார் மன்னிப்பு வாவாவா!

(ராஜாங்க)

ஜனோபகாரி
1955, நவம்பர்

- கா. பெருமாள்

# 401. யாருக்கு ஓட்டு?

ஆண் : யாருக்குப் போடட்டும் பெண்ணே? - ஓட்டு
    யாருக்குப் போடட்டும் கண்ணே?
    தேர்தலில் நின்று ஊராளப் போகின்ற
    தியாகிகள் யாரென்று பார்க்கணும்; - நம்ம
    ஊரு செழிக்க உழைத்திடப் போகின்ற
    உத்தமர் யாரென்று கேட்கணும் (யாருக்கு)

பெண் : தேங்காய்க்கு மூன்று கண்ணுண்டு - நம்ம
    சிவனாருக்கும் மூன்று கண்ணுண்டாம் - ரொம்பப்
    பாங்காக மக்களின் பண்பறி முக்கூட்டுப்
    பலமுள்ள கட்சிக்குப் போடுங்க!

ஆண் : இந்தா சுதந்திரம் என்கையில் பாரென்று
    இடியோசை எழுப்பும் நாகரா[1]வின் - மிகு
    செந்தேன் குழைத்திட்ட பேச்சு மினுக்குது
    செய்வதென்ன வொண்ணும் புரியலே? (யாருக்கு)

---

*1 நாகரா - Party Nagara - நெகாரா கட்சி*

பெண் : ஆடம்ப ரம்பண்ணி ஆர்ப்பாட்டம் செய்கின்ற
ஆளுகளோ வெறும் ஓட்டை! - மீண்டும்
தேடரும் நாட்டுச் சுதந்திரம் வாங்கிடும்
தீரருக்கே ஓட்டுப் போடுங்க!

ஆண் : தன்னிச்சை யாய்நின்று தியாகங்கள் செய்வதாய்ச்
சாற்றிடு வோருக்குப் போடட்டுமா? - இல்லை,
மின்னொளி இஸ்லாமிக் கட்சி[2]க்கா? பெரும்
நன்மை செய்யும்தொழிற் கட்சிக்கா? (யாருக்கு)

பெண் : தலையில்லே, காலில்லே, கையில்லே, ஆனாலும்
தலைகாலு தெரியாமல் குதிக்கின்ற - ஓட்டு
விலைபேசும் பேரை ஒதுக்கியே, ஏழைகள்
வாக்கை மதிப்போர்க்குப் போடுங்க!

ஜனோபகாரி - கா. பெருமாள்
1955

## 402. காற்றோடு மறையாத வாழ்வு

காற்றோடு மறையாத வாழ்வு வேண்டும்!
கலையோடும் நிறைவோடும் வாழ வேண்டும்!
பாட்டாகக் கவியாக மாறவேண்டும் - அந்தப்
பயனாலே மனிதகுலம் மகிழ வேண்டும்! (காற்றோடு)

தேடாமல் அவன்தந்த கலையல்லவா? - இந்தத்
திருச்செல்வம் எல்லார்க்கும் அமுதல்லவா?
சுதிதாளம் சேர்ந்ததொரு அழகல்லவா - இசைச்
சுரஞானம் கிடைக்காத பேறல்லவா? (காற்றோடு)

நிலையற்ற வாழ்வினில் நிலையான செல்வம்
கலையென்று நாமென்ன அறியாததா? அந்தக்
கலைகொண்ட வாழ்வை நிலையாகத் தந்து
எனையாள வேண்டும்நீ இறையல்லவா? (காற்றோடு)

மலே. வானொ. - ரெ. சண்முகம்
1972

2 இஸ்லாமிக் கட்சி - *Party Islam* - இஸ்லாமியக் கட்சி

## 403. நினைவும் செயலும்

தெய்வத்தை நாடி அலைகின்றான்; - பல
திசையிலும் தேடித் திரிகின்றான்
பொய்யினில் மூழ்கிப் புரட்டினில் தோய்ந்து,
புனிதத்தைத் தேட முயல்கின்றான்!
நெஞ்சத்தைத் தந்த ஆண்டவனோ - அதில்
நேர்மையைக் கொடுக்க மறந்துவிட்டான்!

அன்னையைக் காலால் உதைத்துவிட்டு - அவள்
அன்பினை யேஎதிர் பார்க்கின்றான்!
கண்களைப் பிடுங்கி எறிந்துவிட்டு - உயர்
காப்பியம் படித்திட முயல்கின்றான்!
நெஞ்சத்தைத் தந்த ஆண்டவனோ - அதில்
நேர்மையைக் கொடுக்க மறந்துவிட்டான்!

கைகளைக் கயமையில் தோயவிட்டுப் - பின்
கடவுளைக் கும்பிட நினைக்கின்றான்!
செவிகளைத் தீமையில் பழகவிட்டுத் - தமிழ்த்
தேனிசை கேட்கத் துடிக்கின்றான்.
நெஞ்சத்தைத் தந்த ஆண்டவனோ - அதில்
நேர்மையைக் கொடுக்க மறந்துவிட்டான்!

இசைக். - ரெ. சண்முகம்
1972

## 404. ஒருநாள் வரும்

ஒருநாள் வரும் - இந்த
உலகம் என்னைப் புரிந்துகொள்ளும்!
மறுநாள் வரும் - என்
மனமும் வாழ்வும் அமைதிபெறும்!

புயல்வீ சுகின்ற போது - வீண்
புழுதி யெல்லாம் பறக்கும்!
தென்றல் வீசும் நேரம் - இளம்
பறவை யெல்லாம் பறக்கும்!

உள்ளம் நொந்தால் என்ன? - அதில்
உடனே மகிழ்ச்சி மலராதா?
உலகம் என்னை வெறுத்தாலும் - அந்த
ஒருவன் கரமே அணைக்காதா?
இன்பம் என்பது இறைவன்! - கொடும்
துன்பம் என்பது உலகம்!

விதைப்பதை உடனே அறுப்பதற்கு - நான்
விரும்பிவிட் டாலது கிடைத்திடுமா?
காத்திருக் கும்வரை காத்திருப்பேன்; - என்
காலமும் மலரும் பார்த்திருப்பேன்;
நேற்று என்பது இரவு; - வரும்
நாளை என்பது நிலவு!

இசைக். - ரெ. சண்முகம்
1972

## 405. சொல்ல நினைப்பது

சொல்ல நினைப்பவை ஆயிர முண்டு!
சொல்ல முடிய வில்லை! - என்
உள்ளம் நினைப்பது கோடிக ளுண்டு!
உரைக்கத் தெரிய வில்லை!
உண்மையைச் சொன்னால் கோபம் வரும்; - மனம்
உணர்வதைச் சொன்னால் பாவம் வரும்! (சொல்ல)

காசு பணத்தைச் சேர்க்கத் தெரிந்தால்
கண்ட வனெல்லாம் சொந்தமடா!
கைகளைப் பிடித்த மனைவியும் கூடக்
கணவனுக் கடங்கும் விந்தையடா!
ஒன்றுக்கும் உதவாக் கலைஞன் என்றால் - அவன்
ஓடும் நாய்க்கும் மட்டமடா!
நண்பனும் பகையாய் மாறி நடக்கும்
நாடகம் தான்இந்த வாழ்க்கையடா! (சொல்ல)

பெட்டியி லிருக்கும் பணத்தின் முன்னே
பாசமும் அன்பும் பெருகுமடா!
கட்டை விரலால் ரேகைவைத் தாலும்
கல்வியிற் சிறந்த அறிஞனடா!

அவனுக் கிருக்கும் வாழ்வைப் பார்த்து
ஆண்டவ னும்இங்கு வருவானடா!
இதுதான் உலகம் என்பதை அறிந்தால்
கலக்கம் அனைத்தும் தீருமடா! (சொல்ல)

இசைக். - ரெ. சண்முகம்
1972

## 406. நாடிவிட்டால் நடந்திடுமா?

நாடிவிட்டால் எதுவும் நடந்திடுமா? - முருகா
பாடிவிட்டால் உன்னைப் புரிந்திடுமா? (நாடி)

தேடிவிட்டுச் சிலபேர் சாடிவிட்டார்!
தெரிந்தவர் போல்பலர் பாடிவிட்டார்!
(நாடி)

இசைதெரிந் தால்உன்னைப் பாடிடலாம்!
எங்கெங்கோ அலைந்து தேடிடலாம்!
இசையறிவோ முயன்று தேடுவதோ?
எதுவுமின்றி உன்னை நாடிடலாம்! (நாடி)

அன்பினிலே தோன்றல் அருளாகும்
அருளினால் விளைவது அழகாகும்!
என்புடலம் இயக்கும் உயிர்போலே
இலங்கும் முதற்பொருள் மனம்போலே! (நாடி)

முதல். - கரு. திருவரசு
1981

## 407. வாத்துநடையை மாத்து

ஆண் : சீனன் வீட்டு வாத்து! - பாத்தாச்
சிரிக்கும் நடையை மாத்து! - பெண்ணே! (சீனன்)

பெண் : வாத்து நடைக்குத் தானா? - நீயும்
காத்துக் கிடந்தே வீணா! - மச்சான்! (வாத்து)

ஆண் : காத்துக் கிடந்த காலம்! - இப்போ
கடந்து போச்சே நாளும்! - பெண்ணே! (சீனன்)

பெண் : காலம் வந்து போகும்! - நேசம்
கடந்து நின்று வாழும்! - மச்சான்! (வாத்து)

ஆண் : நேசம் பாசம் எல்லாம் - எங்கே
நெலச்சு நிக்குது சொல்லு!
ஆசை அழிஞ்சு போனா - எல்லாம்
அவிஞ்சு போகும் தானா! (சீனன்)

முதல்.
1981

- கரு. திருவரசு

# 408. பாலும் பானையும்

பெண் : பாலு நிறத்திலே மனசவச்சான்! - பழம்
பானை நிறத்திலே உடம்பை வச்சான்! - ரப்பர்

ஆண் : நாலு அழகையும் சேர்த்தே வச்சான்! - அந்த
நடையை அவன்கொஞ்சம் கோண வச்சான்!

பெண் : நொண்டி இவனைத்தான் தேடி மச்சான் - தினம்
நூறு தரம்போல நடக்க வச்சான்!

ஆண் : பானை நிறத்து மனுச னைத்தான் - இவ
பாத்து மயங்கித் திரிய வச்சான்!

பெண் : கறுத்த உடம்பு மினுமி னுப்பில் - எந்தக்
கன்னி மனசும் கிறுகி றுக்கும்!

ஆண் : சாஞ்சு நடக்கும் நடையழகு! - நெஞ்சைத்
தாக்கி இழுக்கும் சதிரழகு!

பெண் : நிறத்தைக் கூட ஒதுக்கி வச்சு - உங்க
குணத்தை அடஞ்சாப் போதும் மச்சான்!

ஆண் : அழகு உன்னை விலகி நின்னா - நம்ம
அன்பு என்றும் வளரும் பெண்ணே!

பெண் : அழகு கண்ணைக் கவரும் மச்சான்! - நம்ம
அன்பில் உறவு வளரும் மச்சான்!

ஆண் : உறவை உலகில் ஆக்கி வச்சான்! - அவன்
உன்னை எனக்கின்னு பாத்து வச்சான்!

இருவ : நல்ல மனசை வாழ வைப்பான்! - அவன்
நம்ம உறவை நீள வைப்பான்!
வெல்லத் துள்ளே இனிச்சி ருப்பான்! - நம்ம
வேண்டுத லுக்குச் சிரிச்சி ருப்பான்!

முதல்.
1981

- கரு. திருவரசு

# 409. விளையாடும் நிலவு

விண்மேடை மீது விளையாடும் நிலவே!
மண்வாழும் மலரோடு உனக்கென்ன உறவோ? (விண்மேடை)

விளையாட்டுக் காதல் வினையாகிப் போச்சே!
வீணாகப் பூப்பெண் முகம்வாட லாச்சே!
முகில்மஞ்ச மீது துயில்கின்ற செருக்கோ?
முகையான போதே மனம்வென்று கெடுத்தாய்! (விண்மேடை)

உனக்கென்(று) அரும்பி உனக்கென்று மலர்ந்து
உனக்காக வாழும் உயிரன்றோ நிலவே!
எனக்கென்ன என்று நீசென்றால் இங்கே
எழிற்பூவின் இதழ்கள் உதிர்கின்ற தன்றோ! (விண்மேடை)

முதல்.
1981

- கரு. திருவரசு

## 410. பாடுபடும் பாட்டாளி

வலிமைக்கு விஞ்சிய உழைப்படா - மக்கள்
வயிற்றுக்குப் போதாத உணவடா!
எளியோர்க்கு நல்வாழ்வு ஏதடா? - அவர்
இருக்கும் நிலைதன்னைப் பாரடா! (வலிமைக்கு)

பாடுபட் டோய்ந்தவன் கதறுவான் - அவன்
பயனி லுயர்ந்தவன் சீறுவான்!
மாடுபோ லுழைப்பவன் மாளுவான் - இந்த
மண்ணை வளைத்தவ னாளுவான்! (வலிமைக்கு)

பஞ்சப்பேய் ஏழையைத் தின்றிடும் - அதைப்
பார்க்கும் பணப்பேய் சிரித்திடும்!
நஞ்சொத்த நெஞ்செங்கும் சுற்றிடும் - பிறர்
நன்மைக் கிடர்செய்து வாழ்ந்திடும்! (வலிமைக்கு)

உண்மையை ஓருள்ளம் தேடிடும் - அந்த
உண்மையை ஓருள்ளம் கொன்றிடும்!
மண்மீது வஞ்சகம் விஞ்சிடும் - அதன்
மடியிலே கொடுமைகள் துஞ்சிடும்! (வலிமைக்கு)

இதய ஓசை - சிங்கை முகிலன்
1960

## 411. கலைஅமுதம்

**எடுப்பு**

அழகென்னும் தேரேறி வந்தாய் - கலை
அமுதமே எனைநீயும் வென்றாய்! (அழகென்னும்)

**தொடுப்பு**

உலகினில் ஒளியேற்றும் தாயே! - நல்ல
உணர்வென்னும் வடிவானாய் நீயே! (அழகென்னும்)

முடிப்பு

குழல்மேவும் ஒலியாகி வந்தாய்! - யாழின்
குரலேறிக் குளிர்பார்வை தந்தாய்!
விழியோடும் நடமாக நின்றாய்! - எழில்
விரல்தாவிப் பொருளாகி வென்றாய்! (அழகென்னும்)

கருங்கல்லும் கவிபாட வைத்தாய்! - நல்ல
கதைபேசும் கைவண்ணம் சமைத்தாய்!
சுரந்தென்றன் மனமாளும் தேனே! - உன்
துணையோடு வளர்வேனே நானே! (அழகென்னும்)

- முரசு. நெடுமாறன்

மா. ப. வி. ம.
1985

# 412. காலத்தை வெல்வேன்!

எடுப்பு

விண்ணொளி இருந்தென்ன? - நல்ல
விளக்கொளி இருந்தென்ன? (விண்ணொளி)

தொடுப்பு

கண்ணொளி இருந்தென்ன? - இறைவா!
கருத்தொளி இல்லையெனில்! (விண்ணொளி)

முடிப்பு

ஊனக் கண்கொடுத்தாய்! - இறைவா
உள்ளம் வருந்தவிலை!
ஞான ஒளிதருக! - என்றே
நயந்துன்னை வேண்டுகிறேன்! (விண்ணொளி)

ஒலியின் துணையுடனே - இந்த
உலகை நானறிவேன்!
கலையின் அரவணைப்பில் - இறைவா!
காலத்தை வென்றுயர்வேன்! (விண்ணொளி)

- முரசு. நெடுமாறன்

மா. ப. வி. ம.
1985

# 413. கண்ணீரே சொல்லு கதை!

கண்ணீரே சொல்லு கதை!
கல்லும் கரைந்தழவே!
கண்ணீரே சொல்லு கதை! (கண்ணீரே)

மண்ணிலே நீவிழுந்தால் - அம்
மண்ணிலும் தீப்பரவும்
விண்ணிலே மாமழையும்
வெட்கியே தலைகுனியும்! (கண்ணீரே)

ஓங்கியே வளர்ந்தமலை
உச்சியில் பால்எடுக்கச்
செல்கையில் இடிவிழுந்தே
சிற்றுயிர் பட்டதுயர்! (கண்ணீரே)

காற்றினால் முறிந்தகிளை
கையினை ஒடித்ததெல்லாம்
ஏட்டிலே எழுதவில்லை - இதை
என்மனம் மறக்கவில்லை (கண்ணீரே)

மலே. இந். காங். சிலா. கலா. விழா - முரசு. நெடுமாறன்
1976

# 414. சங்கம் வாழ்க!

**எடுப்பு**

அகில மலாயாத் தமிழர் சங்கம்
அறவழி நின்றுதொண் டாற்றிடும் என்றும் (அகில)

**தொடுப்பு**

இலகிடும் தமிழேநம் உயிரெனச் சொல்லும்
இனத்தின் உரிமைநலம் காப்பதில் வெல்லும் (அகில)

முடிப்பு

தாயக மாம்மலையம் தழைக்கப் பணிசெய்யும்;
சாதி சமயச்சண்டை தலையெடுத் தால்கொய்யும்;
நேயமுடன் ஒற்றுமை நிலைத்திட உழைக்கும்
நெறியுடன் வாழ்ந்துய்ய ஒருவழி சமைக்கும் (அகில)

- முரசு. நெடுமாறன்

அ. ம. த. சி. ம.
1962

## 415. பால்வெட்டும் பாவை

பால்வெட்டும் பாவைக்குக் கோபம் என்னவோ?
பார்வையி லேஇந்த வேகம் என்னவோ? (பால்வெட்டும்)

காத்திருந் தேஅலுத்த ஏமாற்றமோ? - என்னைக்
கண்டத னால்வந்த மனமாற்றமோ? (பால்வெட்டும்)

பெரட்டுக் களத்தில்வந்த கங்காணி - என்னைத்
துரத்தி விட்டார் வேறுதிசை நோக்கி!
முரட்டுமரம் அடர்ந்தபெருங் காடு! - அதில்
முடித்து வந்தேன் வேலைமுணு நாளு! (பால்வெட்டும்)

கண்களினால் பார்த்துநீ சிரிக்கிறாய்! - அந்தக்
காட்சியில் கங்காணிதான் முறைக்கிறார்!
காயம்படாமல் நம்ம கைபேசணும் - மரத்தில்
காயம்படாமல் நம்ம கைபேசணும் - அந்த
மாயத்தினால் மற்றவர் வாய்முடணும்! (பால்வெட்டும்)

- காரைகிழார்

த. நேசன்
1969.10.5

# 416. இந்த நாடகம்!

இந்த நாடகம்! மனிதன் சொந்த நாடகம்!
இன்ப நாடகம்! பாதித் துன்ப நாடகம்! (இந்த)

அந்த நாள்முதல் உலக வாழ்வு மேடையில்
ஆசை கூடவே பலரும் ஆடும் நாடகம்! (இந்த)

வந்த நாளிலே காணும் ரசிக னாயினான்!
வளர்ந்த நாளிலே மேடைக் கலைஞ னாயினான்!
இந்த நாளிலே யாவும் எல்லை யாக்கினான்! - இனி
எந்த நாளுமே முடிவும் இல்லை யாக்கினான்! (இந்த)

நேற்று என்பதோர் திரையை அகற்றி வைக்கிறான்!
இன்று என்பதோர் கதையை இயற்றி வைக்கிறான்! - இங்கே
நாளை என்பதோர் நிலையில் நாட்டம் வைக்கிறான்! - இங்கே
நாளை நாளையாய் எவனோ நீட்டி வைக்கிறான்! - ஆடும் (இந்த)

தொடங்கி வைத்தவன் எவனோ தெரிய வில்லையே?
தொடர்ந்து நின்றவன் பெயரும் நிலைக்க வில்லையே?
தொட்டுச் செல்வதே இறைவன் புனித நீதியோ? - அதனில்
துணிந்து போவதே வாழும் மனித ஜாதியோ? - காணும் (இந்த)

த. நேசன் - காரைகிழார்
1969.6.1

# 417. நினைவாஞ்சலி!

மாளிகையும் கோபுரமும் வானுயர்ந்து நின்றாலும்
மண்ணுக்குள் அடித்தளந்தான் கண்ணுக்குத் தெரியாது;
நாளெல்லாம் பாடுபட்ட மேதைகளை மதித்தாலே
மானிடரின் வாழ்வினிலே புகழ்இமயம் சரியாது!

அரசியல் பாதை - இது
அரசியல் பாதை
ஆன்றோரும் சான்றோரும்
கடந்து சென்ற பெரும்பாதை! (அரசியல்)

உலகிற் பலபாதை உயர்வதற்குப் போட்டதுண்டு
சிலருக்குச் சிலபாதை திசைமாறிப் போனதுண்டு. (அரசியல்)

பாதையே தெரியாமல் பலதிசையில் போனோரை
மேதை ஜான்திவியும் மேல்திசையில் உயர்த்திவைத்தார் (அரசியல்)

ம.இ.கா எனும்விதைதான் மரமாகி வளர்வதற்குப்
பூத்சிங் எனும்பெரியார் தொண்டுசெய்து சிறந்தாரே! (அரசியல்)

தேவாசர் தொடர்ந்துவந்தார்; சேவையினால் சிறப்படைந்தார்;
மூவாத தமிழ்போலே வரலாற்றில் புகழடைந்தார்! (அரசியல்)

கூடுகட்டிக் காவல்காத்துத் தேன்திரட்டும் தேனீப்போலப்
பாடுபட்டு இராமநாதன் ம.இ.கா. வைவளர்த்தார்! (அரசியல்)

கூட்டுறவுச் சிந்தனையை வீட்டுறவாய் நினைக்கவைத்து
நாட்டுறவில் நம்உறவை நிலைக்கவைத்தார் சம்பந்தன் (அரசியல்)

தூங்கிக் கிடந்தவரை நேசமுடன் எழுப்பிவிட்டுப்
பொருளியல் காணவைத்தே புகழடைந்தார் மாணிக்கா! (அரசியல்)

- காரைகிழார்

இசைமூ.
1987

# 418. சாதனைத் தலைவர்!

சரித்திரம் படைத்த சாதனைத் தலைவர்
சங்கிலி முத்துவின் சத்திய மைந்தர்
அஞ்சா நெஞ்சர் அருந்தமிழ்க் கலைஞர்
சாமி வேலர் வாழிய நீடு! (சரித்திரம்)

வெண்டோ[3] நிதிக்கென வேர்வையைச் சிந்திக்
கண்டார் வெற்றியை ம.இ.கா.வில்,
நல்ல மனங்களின் ஆதர வோடும்
நம்குலம் தழைக்கும் நன்மைகள் பெருக்கும்! (சரித்திரம்)

வாசம் மிகுந்த வாய்மையின் நெஞ்சர்
நேசம் மிகுந்த அரசியல் அறிஞர்
பாசம் என்னும் மாணிக்கத் தலைவர்
பண்பின் சுடரே வாழிய நீடு! (சரித்திரம்)

இசைமு. - மதுராந்தகன்
1987

# 419. மலேசியர்

தேசிய முன்னணிச் சுடரொளி வீசும்
ஆசிய ஜோதி மலேசிய நாட்டில்
மாசிலா அம்னோ ம.சீ. ச.வுடன்
ம. இ. கா.வும் கூட்டணி யாலே (தேசிய முன்னணி)

வளமான வாழ்வு! முறையான பாதை!
வாழ்கின்ற எங்கள் தலையான கொள்கை!
மனிதாபி மானம்! பிறைகாணும் வானம்!
மலேசியர் என்ற ஒற்றுமை வேணும்! (தேசிய முன்னணி)

நிலம்பெறும் ஈயம் செம்பனை நொய்வம்[4]
நீடிக்க மேலும் வளம்பல செய்வோம்!
களம்புக நேர்ந்தால் உயிரையும் தருவோம்!
நலமிகு நாடிது நமக்குயர் தெய்வம்! (தேசிய முன்னணி)

இசைமு. - கரு. வேலுச்சாமி
1987

---

*3 வெண்டோ - வெண்டோ கல்விக்கூடம் (Vanto Academic)*
*4 நொய்வம் - ரப்பர்*

# 420. மணிமன்ற எழுச்சிப் பண்

உரைப்பாட்டு

வில்விட்ட கணையாக வெற்றிக்கு வித்திடுவோம்;
வீறுகொண்ட காளையராய் ஏறுநடை போடுவோம்;
வீறுகொண்ட காளையராய் ஏறுநடை போடுவோம்!

பாட்டு

மன்றம்! மணிமன்றம்! - ஒரு
மாபெரும் அணிபெறக் கண்டோம்; - ஒரு
மாபெரும் அணிபெறக் கண்டோம். (மன்றம்)

மார்க்கம் நமதுநோக்கம்! - என
வாழ்விற்கு அடிப்படை கொண்டோம்;
ஒன்றிஇ ருக்கவும் உயர்வழி காணவும்
ஒருவழி நமக்கிந்த மன்றம் - நெஞ்சில்
நன்றிஇ ருப்பதால் நாமும் நினைப்பதால்
நாட்டுக்குச் செயல்படும் மன்றம் - இந்த
நாட்டுக்குச் செயல்படும் மன்றம் (மன்றம்)

இளைஞரின் இயக்கம்! எழுச்சியின் இயக்கம்!
இன்பம் தரும்செய லாக்கம்! - ஒரு
தலைமுறை அமைத்தோம் சமுதாயம் சிறக்கத்
தக்கது செய்வதே நம் நோக்கம்!
தக்கது செய்வதே நம் நோக்கம்! (மன்றம்)

- கரு. வேலுச்சாமி

# 421. வந்தாள்

எடுப்பு

தமிழாலே இசைபாடி வந்தாள்! - செந்
தளிர்மேனிச் சிலையாள்என் செவிக்கின்பம் தந்தாள்! (தமிழாலே)

**தொடுப்பு**

இமைநீக்கித் தரைநோக்கும் நடையாள்! - இரு
சுமைதூக்க முடியாமல் ஒடிகின்ற இடையாள்! (தமிழாலே)

**முடிப்பு**

அமையாத அழகெல்லாம் வென்றாள்! - கலை
அழியாத நிலைவாழ உயிராகி நின்றாள்!
உமையாளின் திருநாவில் மலர்ந்தாள்! - தமிழ்
உணர்வோடும் மறைகூறும் நெறியோடும் வளர்ந்தாள்! (தமிழாலே)

விழியாலே கதையாவும் சொன்னாள்! - கை
விரல்பேசும் யாழ்போலும் குரல்பேசும் பெண்ணாள்!
நெளிவாலே கொடிபோல ஆனாள் - ஒரு
நிகராலே மானத்தில் உயர்வான மானாள்! (தமிழாலே)

முன்னோடி வந்தென்னை மறைத்தாள்! - ஒரு
முத்தம்தா என்றேன்நான் வெட்கத்தால் குனிந்தாள்
பண்பாடிக் கைவண்ணம் நெரித்தாள் - அந்தப்
பாட்டாலே ஆயிரம் பொருள்அன்னம் பிரித்தாள்! (தமிழாலே)

த. நேசன்
1968.1.28

- கரு. வேலுச்சாமி

# 422. மலேசியத் திராவிடர் கழகம்

எழில்மய மான மலைநாட்டில் - நம்
இயக்கம் இயங்கிடுது; - அது
வளமார் திராவிடர் வாழும் வாழ்க்கையின்
வழிவகை இயம்பிடுது. (எழில்)

நால்வகை வருணம் நாற்பது சாதிகள்
நீதியின் படைப்புகளாம்; - தினம்
வேள்விகள் செய்தும் வேதியம் வளர
வாழ்த்தியும் பாடுகின்றார் - இந்த
மடமைகள் அழியத் திராவிடர் திருந்த
விழையும் கழகமடா!
கடமை கண்ணியம் கட்டுப்பாடெனும்
கொள்கையின் கோட்டையடா! (எழில்)

பாழும் பழமை இருளினைக் கிழித்தே
பகலவன் எழுந்துவிட்டான்; - புதுப்
பாதையைக் காட்டும் பகுத்தறி வென்னும்
பாசறை வளர்த்துவிட்டான்
நாளும் உலகில் நம்மினம் வாழ
நல்லன செய்கின்றான்,
சூழும் துன்பம் தூள்தூ ளெனவே
சுடரொளி வீசுகிறான். (எழில்)

மலேசியா. - இரா. மணிமாறன்
1967

# 423. உதயசூரியன்

காடுவெட்டிக் கழனிதிருத்தும் கறுப்பண்ணே! - நமக்குக்
கஞ்சித்தண்ணிக்கு வழியிருக்கு நம்பண்ணே!
ஆளுக்கொரு பத்துவெள்ளி கொடுங்கண்ணே! - அதில்
அடங்கியிருக்குது 'நம்மவாழ்வு' நம்பண்ணே! (காடு)

கூட்டுறவு சங்கத்திலேநீ சேரண்ணே! - நம்ம
குடும்பநிலையும் உயரவழி பாரண்ணே!
தோட்டப்புறத் தமிழன்சொத்தாம் சம்பந்தர் - அவர்
சொற்களெல்லாம் தேனின்சொட்டாம் சுவையண்ணே! (காடு)

தோட்டப்புறத் தமிழரெல்லாம், கறுப்பண்ணே! - அவரைத்
தொழுதுநாளும் கும்பிடணும் நிசமண்ணே!
இருளகற்று முதயசூரியன் அவரண்ணே! - அவர்
இறையருளால் நெடுநாள்வாழ நினையண்ணே! (காடு)

நகர்ப்புறத்துத் தமிழரெல்லாம் நமக்கண்ணே! - மிக
நல்லாதரவும் தந்திடுவாங்க பாரண்ணே!
பொன்னுவிளையும் நமதுநாட்டுப் புகழண்ணே! - இதனைப்
போற்றிநாமும் வாழ்ந்திருக்கப் பாரண்ணே! (காடு)

த. நேசன் - வளவன்வயல் எம். முத்து
1968.3.31

## 424. நிதமும் வாழ்த்திடுவாய்!

இளைய தென்றலே! இளைய தென்றலே!
இதமாய் வீசிடுவாய்! - முருகனை
நிதமும் வாழ்த்திடுவாய்! (இளைய)

ஆடும் அலைகளே! ஆடும் அலைகளே!
அழகாய் ஆடுங்கள்! - எழில்
அழகனைத் தேடுங்கள்! (இளைய)

பாடும் குயில்களே! பாடும் குயில்களே!
பண்ணொடு பாடுங்கள்! - பால்மனப்
பாலனைப் பாடுங்கள்! (இளைய)

மலரும் மலர்களே! மலரும் மலர்களே!
மணமாய் மலருங்கள்! - முருகனை
மணத்தால் மயக்குங்கள்! (இளைய)

1982 - பெ. திருவேங்கடம்

## 425. பணத்தால் முடியாது

பதவிக்கு ஆசைப்பட்டுப்
பணத்தையெலாம் செலவழித்து
ஓட்டாண்டி ஆனேன்நான் தம்பி! - இப்போ
ஒருபயலும் மதிப்பதில்லை தம்பி!

தலைவனாக ஆவல்கொண்டு
தடபுடலாய்ப் பணத்தைவிட்டேன்;
இலைஉதிர்ந்த மரமானேன் தம்பி! - இப்போ
இருக்க இடம் இல்லையடா தம்பி!

பெரும்புகழைப் பெற்றிடவே
பெரும்பணத்தை விரயமாக்கிச்
சிறுமையினைத் தேடிக்கொண்டேன் தம்பி! - இப்போ
சிரிப்பாகிப் போனதடா தம்பி!

பிறர்மதித்து எனைவணங்கப்
பேராசை கொண்டதனால்
சிறகொடிந்து வீழ்ந்தேனே தம்பி! - இப்போ
சீந்துவார்கள் இல்லையடா தம்பி!

மீசைவைக்க வயதுவேண்டும்;
மேன்மைசொல்ல அறிவுவேண்டும்;
காசையள்ளி வீசுவதால் தம்பி! - பதவி
கைப்பிடிக்குள் வருவதில்லை தம்பி!

த. நேசன் - இளவேந்தன்
1986.11.16

## 426. விரும்பாத வேடம்

வேடங்கள் போட்டிட வேண்டா - வெளி
வேடங்கள் போட்டிட வேண்டா (வேடங்கள்)

ஆடிஅங்கும் இங்குமாய் அலைந்து முடிவினில்
இக்கரைக் கக்கரை பச்சையே என்பதாய் (வேடங்கள்)

கூடங்கள் கூட்டிக் கொலுவமைத்து - அங்குக்
கூட ஒருசிறு தோழனுடன் - வரும்
நாடக மேடை ராசனையே - ஒரு
நாட்டுக் கரசனாய் ஏற்பதுண்டோ? (வேடங்கள்)

அஞ்சு வயது குழந்தைகள் செய்திடும்
அம்மா அப்பா விளையாட்டாய் - மிகக்
கொஞ்சம் தெரிந்ததை வைத்துக்கொண்டு - குறை
கூறுவ தேனோ வெளிப்பகட்டாய்? (வேடங்கள்)

ஆழம் மிகுந்த நதிகளெல்லாம் - மிக
அமைதி யுடன்தான் ஓடிவரும் - அதன்
ஆழம் அறியாமல் உள்ளே இறங்கினால்
ஆபத்து உடனே வந்துசேரும் (வேடங்கள்)

ஏழைய ரென்பதால் கற்றவரைப் பழித்து
ஏசு தையா வெளிவேடம் - அதன்
கோழை முகத்திரை யைக்கிழித்தே - காலம்
கூறிடுமே நல்ல பாடம்!
(வேடங்கள்)

த. மலர் - இரா. பாண்டியன்
1967.5.3

# 427. வளங்கொழிக்கும் நாடு

பண் : கல்யாணி
தாளம் : ஆதி

**எடுப்பு**

இயற்கை வளம்கொழிக்கும் எம்நாடு
இன்ப மலேசியா எனும்பெயரோடு (இயற்கை)

**தொடுப்பு**

செயல்முறை யால்வெற்றி கண்டநன்னாடு
செறிந்த மலைவெளி கானம் உடைநாடு (இயற்கை)

**முடிப்பு**

பல்லின மாந்தர் பண்பால் ஒன்றுசேர்ந்து
பாங்குடன் தொழில்தனைப் படைக்கும் திருநாடு
கல்விப் பெருக்கால் கலைக்கோயில்கள் மலிந்து
கண்டவர் வியப்புற விளங்கும் பொன்னாடு (இயற்கை)

முப்புறமும் கடல்சூழ்ந்தே அலைமோதும்
ஒப்புமை ஏதும் இல்லா எழில்நாடு
நட்புற வுபல நாட்டிடை வைத்து
நன்மை பெருக்கி உயர்ந்த நன்னாடு (இயற்கை)

1964 - ப. க. குஞ்சுபாகவதர்

# 428. வாழ்க்கை

கவலை மறந்து காற்றில் மிதந்து
கானம் பாடும் தேனீ! - நான்
கனவு சுமந்து கண்ணீர் மறந்து
கடலில் மிதக்கும் தோணி! - வாழ்வுக்
கடலில் மிதக்கும் தோணி!

இரவோ பகலோ இடியோ மழையோ
எல்லாம் ஒன்றே எனக்கு! - அது
இறைவன் விதித்த கணக்கு! - நான்
எண்ணெயும் இல்லாமல் திரியும் இல்லாமல்
என்றும் எரியும் விளக்கு! - வானில்
என்றும் எரியும் விளக்கு!

வானகம் கூரை! வையகம் வீடு!
வரவும் செலவுமே வாழ்வு! - நாம்
வஞ்சகம் இன்றி வாழ்ந்திடும் போது
வருமோ என்றும் தாழ்வு?

சிங். வானொ. - க. து. மு. இக்பால்
1982

# 429. காற்று

காற்றே! இளங்காற்றே! - நான்
காணும் இடமெல்லாம் உன்விளை யாட்டே! (காற்றே)

அலைகளைத் தாலாட்டும் அன்னையும் ஆவாய்!
அருவிப் பட்டாடை அணிந்துமே பார்ப்பாய்!
ஆகாய மேகத்தில் அன்பேநீ மிதப்பாய்!
அனுமதி இல்லாமல் யாரையும் அணைப்பாய்! (காற்றே)

எண்ணெயும் திரியும் இருந்தென்ன லாபம்?
எரியாதே நீயின்றி இருளோட்டும் தீபம்! (காற்றே)

நிழல்தரும் சோலையும் நெருப்பாகச் சுடுமே!
நீயில்லை யானால் நிம்மதி கெடுமே!
உருவம் இல்லாமல் உதவும் தாயே!
உனக்கிணை இந்த உலகத்தில் நீயே! (காற்றே)

சிங். வானொ. - க. து. மு. இக்பால்
1983

## 430. போர்த்துவோம் பொன்னாடை!

**எடுப்பு**

போர்த்த வேண்டும் பொன்னாடை! - கழுத்துக்குப்
போட வேண்டும் பூமாலை! (போர்த்த)

**தொடுப்பு**

ஊர்க்கென வாழ்ந்து ஓய்ந்தவர்க்கு - நல்ல
உள்ளமும் அன்பும் வாய்ந்தவர்க்கு... (போர்த்த)

**முடிப்பு**

சீர்மிகுந் தமிழிலே சிந்துகள் பாடித் - தொண்டு
செய்திடும் தோழர்கள் சிறப்புடன் கூடிப்
பேர்மிகும் உத்தமப் பெரியார் மகிழ்ந்திடக் - காலம்
பிந்தாம லேஒன்றும் பிசகாம லேநன்று (போர்த்த)

த. முரசு - க. து. மு. இக்பால்
1976.5.9

## 431. காடு கரம்பையென...

காடு கரம்பையெனக் கிடந்ததொரு மேடு!
காட்சி தருகுதுபார் எழில்மனைக ளோடு! (காடு)

ஆடும் மயிலடிமுட் புதரினில் வாட
அடிக்கும் புலிகரடி சிங்கமோடு மோத (காடு)

பாலொளி தூவிடும் மின்விளக்கு!
பகலாய் இரவும் படும்விழிக்கு!
ஆலைகள் ஒருபுறம் பொருள்குவிக்கும்!
அழகிய சோலையில் மலர்சிரிக்கும்! (காடு)

நாலினக் கவிதை மொழியோடு
நானிலம் போற்றும் ஒளிநாடு!
மேலினம் போற்றும் அருளோடு
விளங்கும் சிங்கைத் திருநாடு! (காடு)

சிங். வானொ. - பரணன்
1981

## 432. பணியாதே!

பணியாதே - தலை
பணியாதே! (பணியாதே)

கற்றோர்க்கும் அருங்கல்வி கற்பித்த கணக்காயர்
பெற்றோர்க்கும் தூய்நெறியைப்
பேணுவோர்க்கும் அல்லாது - மற்றோர்க்குப் (பணியாதே)

ஒழுக்கத்தைக் காப்போர்க்கும் ஒருநெறியில் நிற்போர்க்கும்
அழுக்கில்லா நெஞ்சர்க்கும்
ஆன்றோர்க்கும் அல்லாது - மற்றோர்க்குப் (பணியாதே)

தமிழுக்கும் என்றென்றும் சாகாத நேர்மைக்கும்
கவிஞர்க்கும் உண்மைக்கும்
கடமைக்கும் அல்லாது - மற்றோர்க்குப் (பணியாதே)

த. நேசன் - பரணன்
1967.10.1

# 433. சிட்டுக்குருவி

**எடுப்பு**

சிட்டுக் குருவியின் அழகினைப் பாரு! - அதன்
சிறகினில் சீனத்துப் பட்டினைப் பாரு! (சிட்டுக்)

**தொடுப்பு**

கொட்டைப் பாக்கை உருவினில் காட்டும்! - பெரும்
கோட்டைமே லிருந்தேதலை யாட்டும்! (சிட்டுக்)

**முடிப்பு**

கீச்செனக் குரலெழுப்பி ஓடும்! - தென்னங்
கீற்றினில் இருந்தூஞ்ச லாடும்!
பாய்ச்சலில் ஒளிவேகம் காட்டும்! - சேரும்
பழக்கத்தால் ஒருமையை நாட்டும்! (சிட்டுக்)

மிளகைப் போலிருக்கும் கண்கள்! - நுனி
விழுதைப் போல்சிறிய கால்கள்!
வெளியெல் லாம்புரியும் ஆட்சி! - சோம்பல்
விலகக் களிப்பததன் மாட்சி! (சிட்டுக்)

வளரும் மனிதர்தம் வாழ்வைக் - கண்டு
வாழ்ந்தா லேதுபிற தாழ்வு?
நிலையில் மனிதரெனச் சொல்வோம்! - சிட்டின்
நிலையை மனவெளியில் கொள்வோம்! (சிட்டுக்)

த. முரசு - பரணன்
1968.3.17

# 434. முருகா உன் குரல்கேட்டோம்!

**எடுப்பு**

உன்குரல் கேட்டெழுந்து வந்தோம்! - முருகா!
உன்னருள் மழையில் நனைந்தோம்! (உன்)

**முடிப்பு**

ஒளியே ஒளியின் சுடரே உன்றன்
அளியைக் கண்டே அன்பொடு நின்றோம்;
பழியெலாம் நீங்கிப் பாருயிர் வாழ
வழியினை அருளாய் வாழ்த்துவம் நின்னை! (உன்)

இதய வானில் நீயெழுந் தருளி
இன்ப வாழ்வினை எமக்கெலாம் வழங்கி
அன்பாய் எம்மை அரவணைத் தருள்வாய்
அருள்பே ரொளியே ஆனந்த வாழ்வே! (உன்)

திரையொளி - வீ. கோவிமணாளன்
1984

# 435. உனையன்றித் துணையுண்டோ?

உனையன்றித் துணையுண்டோ முருகா! - அருள்
ஒளியாக உலகெங்கும் நிறைந்துள்ள இறைவா! (உனையன்றி)

வினைதீர்க்கும் வேல்கொண்டு வருவாய்! - தலை
விதிதன்னைத் திசைமாற்றும் மதிதந்து அருள்வாய்! (உனையன்றி)

யார்யாரோ கதியென்று நினைந்தேனே உலகில்,
இறைவாஉன் பெருமைகள் அறியாத நிலையில்!
ஊராரும் உற்றாரும் வருவாரோ முடிவில்,
உனைப்போலப் பேரின்பம் தருகின்ற முறையில்! (உனையன்றி)

புலமைக்கும் திறமைக்கும் புகழில்லாக் காலம்!
பொறுமைக்கும் பணிவிற்கும் பொருந்தாத ஞாலம்!
நிலத்திற்கும் நிலவுக்கும் இடைப்பட்ட எல்லை,
நினைவுக்கும் செயலுக்கும் இருக்கின்ற தொல்லை! (உனையன்றி)

1982 - அமலதாசன்

# 436. மலையகமே!

கடலலைகள் முப்புறமும் பரதநடம் புரியும்!
கார்தழுவும் பசுமலைகள் புனல்சுரந்து சொரியும்!
மடல்பரப்பும் சுகந்தமணம் நிலம்முழுதும் கமழும்!
மண்ணகத்தில் நலம்விளைக்கும் மலையகத்தில் பொழுதும்! (கடலலைகள்)

நெய்யொழுகும் கொப்பரைகள் எப்பொழுதும் காய்க்கும்!
நெகிழ்ந்துருகும் ஈயவளம் செப்பமுடன் வாய்க்கும்!
நொய்வமெனும் பால்மரங்கள் செல்வநலம் ஆக்கும்!
நிதிகுவிக்கும் செம்பனைகள் புன்முறுவல் பூக்கும்! (கடலலைகள்)

வானமழை மாதமெல்லாம் வந்தமுதம் சிந்தும்!
வயல்வெளியில் பயிரினங்கள் கொடைவழங்க முந்தும்!
சீனமகள் கழுத்தினிலும் மங்கலநாண் தொங்கும்!
செந்தமிழர் செவ்விதழில் சீர்மலாயும் கொஞ்சும்! (கடலலைகள்)

1983 - அமலதாசன்

# 437. இயற்கை இன்பம்!

நீலம் பூசிய திரைக்குள் ளிருந்து
நெடுவான் அழகைப் பொழிகிறது!
கோலம் காட்டும் மரகத உடையில்
குணம்சேர் நிலப்பெண் கொழிக்கின்றாள்! (நீலம்)

வானில் ஊர்ந்திடும் முகில்போய் நிலவை
வாகுடன் அள்ளி அணைக்கிறது!
தேனில் ஊறிடும் மலரில் திளைக்கத்
தென்றலும் வண்டாய் அலைகிறது! (நீலம்)

ஓடும் பூம்புனல் நிலத்தில் உழுதே
உவப்புடன் கடலில் கலக்கிறது!
காடும் ஓங்கிய மரங்கள் தாங்கிக்
களித்திட நிழலை அளிக்கிறது! (நீலம்)

சிங். வானொ. - அமலதாசன்
1982

# 438. நறுந்தமிழ்

**எடுப்பு**

குயிலுக்கும் கவர்கின்ற குரல்வளம் தந்தது - எம்
குருதியில் கமழ்கின்ற நறுந்தமிழ் என்பது! (குயிலுக்கும்)

**தொடுப்பு**

பயில்தொறும் பயன்நல்கும் பெருநிலை கொண்டது - செம்
பரிதிபோல் வழிகாட்டத் திருநிலம் வந்தது! (குயிலுக்கும்)

**முடிப்பு**

குழலுக்குள் யாழுக்குள் உலவிடும் சிந்தது! - திருக்
குறளென்னும் செல்வத்தால் உலகத்தில் சிறந்தது!
நிழலுக்கும் நிழல்செய்யும் நேயத்தில் நிமிர்ந்தது! - கடல்
நீரோடும் நெருப்போடும் போராடி நிலைத்தது! (குயிலுக்கும்)

அமிழ்தையும் வெல்கின்ற அரும்பொருள் அல்லவோ? - அதன்
அருமையைச் சிறுபோதில் எளிதிலே சொல்லவோ?
தமிழர்க்குத் தமிழன்றி விடிவுகள் உள்ளதோ? - நிலைத்
தன்மையில் அதையொன்று மிஞ்சவும் வல்லதோ? (குயிலுக்கும்)

சிங். வானொ.
1984

- அமலதாசன்

# 439. பத்துமலை முருகன் புகழ்

அன்னைபர சக்தியவ ளின்னமுத முண்டுவளர்
மின்னுவடி வேல்முருகைப் பணிவார்க்(கு)
இன்னலெதும் வந்தணையா தின்னருளைப் பெற்றிடுவர்
வன்னமயி லோன்தமைய னருள்வானே!

குன்றுதொறு நின்றுலவும் செய்யனவன் பத்துமலைக்
குன்றுளுளன் சென்றடையின் வினைதீரும்!
இன்றெமது சென்மவினை இல்லையெனச் செய்திடுவன்
இல்லைபிற விக்கடலும் இரிந்தோடும்!

அஞ்சலெனத் தஞ்சமென வந்தவர ணைத்தருளும்
மஞ்சுபொதி பத்துமலை முருகோனே!
எஞ்சலிலா உன்கருணை எப்பொழுதும் எம்மிடமே
தந்துதவ வேண்டுகிறோம் நினதாளே!

1983 - தை. சே. பெ. பொன்னம்பலம்

# 440. இறைவன்

**எடுப்பு**

இறைவனைக் காணுகின்றேன்! - எங்கும்
இறைவனைக் காணுகின்றேன்!

**தொடுப்பு**

அன்பாம் உளத்தில் இன்பம் பொங்க
அருளும் ஒளியாய்க் குழந்தை வடிவில் (இறைவனை)

**முடிப்பு**

மாசறு முகமாய் மண்ணில் தவழும்
மாதவ னவனே மறுப்பா ரில்லை;
பாசம் அணைத்தே பண்புடன் வாழப்
பாத்திர மாகும் பச்சிளங் குழந்தையில் (இறைவனை)

கருவிழி தன்னில் காணும் பார்வை
கருணை பொழியும் கனிசேர் மகிமை
மருளு முலகில் மயக்கந் தீர்க்க
மணிபோ லுதித்த மழலை வடிவில் (இறைவனை)

- பெ. மு. இளம்வழுதி

# 441. ஓம்! ஓம்சக்தி!

ஓம்! ஓம்சக்தி! என்றுசொன்னால்
உள்ளத்தே ஆனந்தம் பொங்குதம்மா ஓம்! ஓம்சக்தி!

ஈரேழு உலகமும் காப்பவளாம்! - அந்த
ஈசனைத் தன்னுள்ளே கொண்டவளாம்!
நீராக நெருப்பாக நிற்பவளாம் - தன்னை
நெஞ்சாரத் துதிப்போர்க்குத் துணையவளாம்!

ஆயிரம் சக்தியாய் உருவெடுப்பாள் - அந்த
அற்புத நாயகியைத் துதித்திடுவோம்!
பாயிரம் பாடியே களித்திடுவோம் - இந்தப்
பாரினை அவளருளால் வென்றிடுவோம்!

- சோலை முருகன்

# 442. அருள்மிகு மரத்தாண்டவர்

மரத்தில் குடிகொண்டாய் மாமணியே!
மரத்தாண்ட வத்தெய்வத் திருமணியே! (மரத்தில்)

சிரத்தால்நான் வணங்குகிறேன் குருமணியே!
செல்வமெல்லாம் நீதருவாய் அருள்மணியே! (மரத்தில்)

சித்தங் களித்திடப் பத்திபெருகிடச்
சேயேன் எனக்குவரம் தந்திடுவீர்!
உத்தம னாகவே நித்தம்நான் வாழ்ந்திட
உள்ளக் கனிவோடு வாழ்த்திடுவீர்? (மரத்தில்)

திருவிழாக் கோலங்காணத் தேடியே வந்தேன்;
திருஉலா வந்தபோது மகிழ்ச்சியே கொண்டேன்,
சாலைஓரச் சந்நிதியில் சரண மடைந்தேன்;
சத்திவேலன் திருஅழகில் மயங்கியே நின்றேன்! (மரத்தில்)

- சி. மு. கறுப்பையா

## 443. பொங்கலைப் போற்றுவோம்!

பொங்கி வளங்கொழிக்கப் பூமியெங்கும் சீர்செழிக்கத்
தங்க மலேசியத்துத்
தமிழர் பொங்கும் பொங்கலிது பாரீர்! - பொங்கல்
தழைத்திடவே உங்களன்பைத் தாரீர்!

செங்கரும்பின் சாறெடுத்துத் தேன்தமிழின் சுவையெடுத்து
மங்களங்கள் பாடிநல்ல
வாழ்த்துச் சொல்லிப் பொங்கலுண்ண வாரீர்! - அன்பு
வளரநட்பை மலேசியத்தார் தேரீர்!

வாழ்வுயர்த்தும் பொங்கல்விழா மண்ணகத்தோர் போற்றும்விழா
சூழ்கநலம் எங்குமென்றும்
சொல்லிடுவோம் பொங்கல்விழா வாழ்க! - தையில்
தோன்றும்விழா பொங்கல்விழா வாழ்க!

- க. முனியாண்டி

## 444. சாதிக்கொடுமை!

சாதி இன்னும் இருக்குது! சமயம் பார்த்து விழிக்குது!
மோதல் வந்தா தேர்தலிலே மூர்க்க மாகத் தாக்குது! (சாதி)

பொண்ணுக்கு ஆணைப் புடிச்சிருக்கும்!
பொதுவா எல்லாம் முடிஞ்சிருக்கும்!
தாலி கட்டும் நேரத்திலே
தகரா றில்போய் முடிந்துவிடும்! (சாதி)

திருமண அழைப்புத் தேடிவரும் - அதில்
சாதியும் சேர்ந்து கூடவரும்!
விளம்பரப் படுத்துறார் பலபேரு! - அதன
வேண்டான்னு சொல்றது அடயாரு! (சாதி)

குடிச்சவன் கூட உளறுகிறான்; - சில
படிச்சவன் கூடக் கிளறுகிறான்;
நடிக்கிற வரைக்கும் போகாது - இது
நாலுங் கெட்ட சமுதாயம்! (சாதி)

தீப்பொ. - தீ. சி. பொன்னுசாமி
1988

## 445. பாடும் குயிலோசை

பாடும் குயிலோசை கேட்குதம்மா!
கடலோ அலையோ கதிரோ சுடரோ
இசைமழை வான்மீதே தூவுதம்மா!
சுரங்களில் பூந்தேனே ஊறுதம்மா!
அழியாக் கலைமனச் சோலையிலே! (பாடும்)

காலை உதயத்திலே கண்கள் மடியாகும்
கைவிரல் பாவத்தில் மின்னலாடும்!
தாள பாவங்கள் ஜீவ ராகங்கள்
சலங்கைத் திருப்பாதம் உலகை விலைபேசும்! (பாடும்)

வண்ண மயிலேறிச் செல்லும் அழகேநீ
வீணையின் இசைநாளும் கலைவானில்
அன்பு மனமெல்லாம் இன்பப் பயிராகும்
அன்னை திருக்கோவில் வாழும் உயிராகும் (பாடும்)

தீப்பொ. - தீ. சி. பொன்னுசாமி
1988

## 446. உன்னை நம்பி

நல்லதம்பி உன்னைநம்பி நாடிருக்குது! - நம்ம
நாட்டைநம்பி ஏழைமக்கள் வீடிருக்குது!
மண்ணைநம்பிப் பாடுபட்டு முன்னேறுவோம்; - புது
மாற்றங்களைக் காணநாமும் ஒண்ணுசேருவோம். (நல்ல)

உள்ளம்பல இருந்தாலும் நோக்கம்ஒண்ணுதான்! - பல
வண்ணங்களைக் காட்டினாலும் ஆக்கம்ஒண்ணுதான்!
ஆத்துவெள்ளம் நாத்துப்பக்கம் கொஞ்சம்போகணும்;
அந்தநேரம் தென்றல்காத்து வந்துபோகணும். (நல்ல)

அக்கம்பக்கம் சண்டைசாடி கூடாதுங்க; - நம்
அண்ணன்தம்பி வாக்குவாதம் ஆகாதுங்க;
சிந்தனைக்கும் செயலினுக்கும் பாலம்போடணும்;
சொந்தக்காலில் நிற்கநாமும் கற்றுக்கொள்ளணும். (நல்ல)

தீப்பொ. - தீ. சி. பொன்னுசாமி
1988

## 447. கன்னிப்பூவின் கலக்கம்

தரையிலே ஆடுதடி கத்தரிப் பிஞ்சு!
தண்ணியிலே ஓடுதடி நெத்திலிக் குஞ்சு!
பலவித ராகங்கள் விதவிதத் தாளங்கள்
பாடுதடி நாள்முழுதும் கல்யாணம் செஞ்சி (தரையிலே)

கல்யாணப் பருவம்வந்தும் அவரைக்கொரு கொம்பில்லே!
காதலிக்க ஆசைவந்தும் தக்காளிக்கு இடம்இல்லே! (தரையிலே)

பஞ்சாங்கத்தில் ராசிபாத்துப் பாழும்மனசு ஏங்குது!
பரிசம்போடும் நாளைப்பாத்துப் பட்டுப்புடவை சிரிக்குது! (தரையிலே)

காட்டுமரம் எல்லாமே காலத்தோடு காய்க்குது;
கன்னிப்பூவு வீட்டுக்குள்ளே கண்கலங்கி வெம்புது! (தரையிலே)

தீப்பொ. - தீ. சி. பொன்னுசாமி
1988

## 448. மணிமேடை

தேன்ஏந்தும் ஒருமணி மேடை!
தென்றல்தரும் நறுமலர் வாடை!
நான்நீந்தும் இளம்குளிர் ஓடை! - அந்த
நடக்கும் தேருக்கு நானன்றோ ஆடை! (தேன்)

பனிமலர் பரப்பிய மஞ்சம்! - அதில்
தனிமலர் ஒன்றும் தஞ்சம்!
வண்டொன்றை எதிர்பார்க்கும் நெஞ்சம்! - அங்கு
வாலிபம் மயங்கிடும் கொஞ்சம். (தேன்)

இரவுக்குள் இரவாகி உறவாகினோம்;
இருவர்க்குள் ஒருவராய் இடம்மாறினோம்
பருவமெ னும்தேனைப் பசியாறினோம் - அதைப்
பரிவாக இதழாலே பரிமாறினோம். (தேன்)

சந்தனக்.
1966

- ஐ. உலகநாதன்

## 449. கோடிநலம் பெருகும்

இராகம் : கல்யாணி
தாளம் : ஆதி

**எடுப்பு**

தேவாதி தேவனை தில்லையம் பலத்தானை
தேடித் தினம்பணியக் கோடி நலம்பெருகும் (தேவாதி)

**தொடுப்பு**

மூவா துலக மயமாகிய சோதியனை
மூல முதற்பொருளை ஞாலப் புகழ்வெளியை (தேவாதி)

முடிப்பு

ஆழி உலகனைத்தும் அருட்கொடை யானவனை
ஆருயிர் யாவினிலும் அமர்ந்து சுழல்பவனை
வாழி நலம்பெருக வந்த மகாசிவனை
வாழ்த்தி வணங்கிநிதம் போற்றிப் புகழ்பவனை (தேவாதி)

தெய்வ. - முத்துமாணிக்கம்
1987

## 450. எட்டடியும் பத்தடியும்...

வெட்டவெளிப் பொட்டலிலே வெண்ணிலவு ஓடுதடி!
வெண்ணிலவைச் சுற்றிப்பல வெள்ளிமணி ஆடுதடி!
ஆட்டுவித்த வெள்ளிமணி யார்வடித்த சாதனையோ?
அந்தரத்தின் மத்தியிலே ஆலவட்டம் போடுதடி. (வெட்ட)

கட்டிவைத்த வீட்டுக்குள்ளே கதவுவைக்க மறந்துவிட்டான்;
காலமெல்லாம் எவனெவனோ காத்திருந்து பார்த்துவிட்டான்;
தொட்டஇடம் தெரியவில்லை! சொந்தம்எதோ புரியவில்லை!
எட்டடியும் பத்தடியும் எங்கிருந்து வந்ததடி? (வெட்ட)

தட்டுமுட்டுப் பாத்திரத்தைச் சந்தையிலே கொண்டுவந்து
தரகரிடம் ஒப்படைத்தே தலைமறைவாய்ச் சென்றுவிட்டான்;
எட்டிஎட்டிக் கண்ணாலே இவ்விடத்தை நோக்குகிறான்;
ஏமாந்த நேரத்திலே எடுத்துக்கொண்டு சென்றிடுவான் (வெட்ட)

சிங். வானொ. - முத்துமாணிக்கம்
1983

## 451. திருக்குறட் பா

பா!பா! பாஇது பழந்தமிழ்ப் பா!
பண்புடன் நடக்கச் சொல்லும் திருக்குறட் பா!
பாடிடத் திருவள்ளுவன் செய்துவைத்த பா!
பாமணங் கமழப்புவி பாடுவதப் பா! (பா!பா!)

ஆணும் பெண்ணுங் கூடி அன்பில் உறவாடி,
ஆயிரங்கா லப்பயிராய் வாழும்வகை தேடி,
ஆக்கமுடன் செய்துவைத்த அன்புத் தமிழ்ப் பா!
அறம்பொருள் இன்பமெனும் அருங்குறட் பா! (பா!பா!)

நாகரிக மோகம் நடந்துவரும் வேகம்!
நம்பிக்கெட்ட வர்திருந்தும் நல்லதொரு பாகம்!
சொல்லடக்கப் பெருமையைக் கொண்டதமிழ்ப் பா!
சூதுவாதை வேரறுக்கச் செய்தகுறட் பா! (பா!பா!)

நல்லுலக நீதி நம்பியதை ஓதி
நாளும்நடக் கின்றவர்கள் வானுலகச் சாதி
என்றுமொழி பகர்கின்ற இந்தக்குறட் பா!
எவ்வுலக மக்களுக்கும் ஏற்றதமிழ்ப் பா! (பா!பா!)

1964 - முத்துமாணிக்கம்

## 452. மாங்குயிலே! நீ கூவு!

மாங்குயி லேநீ கூவிடுவாய் - இன்ப
மலேசிய நாட்டை மகிழ்வோடு வாவென்று (மாங்)

பாங்குடனே என்றும் பார்புகழச் சேர்ந்து
பண்புடனே வாழப் பரிவோடு உளமென்றே (மாங்)

தீங்கு புரிந்தார்க்கும் திருந்த அருள்புரிந்து
தாங்கும் இறையருளால் தக்க பலம்பெறவே
ஓங்கு புகழ்நாடு ஓரைந்தும் ஒன்றாகி
ஈங்கே இணைவதிலே என்றென்றும் இன்பமென்று (மாங்)

மாமலைத் திருநாடும் மனங்கவர் சரவாவும்
சூழலை கடல்சிங்கை சுகவட போர்னியோவும்
ஆளுகை ஒன்றுள்ளே அமைந்திடப் புருணையும்
மாளிகை போலமைக்கும் மாண்பினைப் போற்றி (மாங்)

மலைநாடு - சி. அன்பானந்தம்
1963.6.21

## 453. நினைத்தால் நடக்கும்

நினைத்தால் நல்லன நிச்சயம் நடக்கும்
நினைத்துப் பார் மனமே! - துணிந்து
நிகழ்த்திப் பார் தினமே.

முனைப்பாய் முயன்று முடித்திடக் கருதில்,
முழுதும் வெற்றி முகிழ்த்திடல் உறுதி;
நினைத்தே சுமக்கும் நகைக்குணம் வேண்டா
நல்லதை உடனேசெய் மனமே.

அணைத்தே மறைக்கும் அப்பெரும் காற்றே
அணைந்தால் நெருப்பும் அதிகமா மன்றோ?
உனைத்தான் மறைக்கும் சோம்பலை விடுத்தால்
உயர்வில் நீயோர் இமயமு மன்றோ?

இறைவன் துணையும் இருந்திடு மானால்
எளிதில் எல்லாம் இனிதுற நிகழும்
முறையாய் அவனை முழுவதும் நம்பி
முயன்றே செய்வாய் முடிவுகள் நன்றே.

- சி. அன்பானந்தம்

## 454. நஞ்சினுங் கொடிது மது

குடிக்கவே மாட்டேன் - அம்மா
குடிக்கவே மாட்டேன் - கொல்லும்
நஞ்சினும் கொடிய மதுவைச் - சொல்ல
அஞ்சிடும் நாவும் - அதனை (குடிக்கவே)

வடிவினைக் குலைக்கும் - பெரும்
வறுமையை விளைக்கும்.
மடமையில் வீழ்த்தி - நம்
மானத்தை வாங்கும் - கொல்லும்
நஞ்சினும் கொடிய மதுவைச் - சொல்ல
அஞ்சிடும் நாவும் - அதனை (குடிக்கவே)

அறிவும் உணர்வும் மயங்கும்; - மனம்
அறியாமல் தீமைகள் புரியும்;
குறையும் குற்றமும் பெருகும்; - நல்ல
கொள்கையும் அதனால் பறக்கும் - அதனால் (குடிக்கவே)

அடிமை யாய்நமை ஆக்கும்; - நல்ல
அன்போடு நேயத்தைத் தேய்க்கும்;
கொடிய நோய்களில் தள்ளும் - தற்
கொலைக்கும் வழிவகை பண்ணும் - அதனால் (குடிக்கவே)

புகழைக் கெடுக்கும் மறதியும் - குடிப்
பழியினைக் கொடுக்கும் மடிமையும்
இகழ்ச்சியே மதுவிற் குறவாகும் - அதைக்
குடித்தல் எப்படி முறையாகும்? - அதனால் (குடிக்கவே)

தமிழியக். - கனிமொழி
1977

## 455. பகுத்தறிவின் பயன்

**எடுப்பு**

அறிவைப் போற்றி வளர்த்திடுவாய் - பகுத்
தறிவைப் போற்றி வளர்த்திடுவாய்! (அறிவை)

**தொடுப்பு**

தெரிந்து எதையும் செய்வதற்கும் - உயர்
சிந்தனை வளர்ந்து தீமைகள் அழிவதற்கும் (அறிவை)

**முடிப்பு**

உலகினை உற்று நோக்குதற்கும் - அதில்
உண்மையைக் கண்டு போற்றுதற்கும்
வளமுடன் வாழ்வை அமைப்பதற்கும் - தன்
மானத்தோ டுலகில் சிறப்பதற்கும் (அறிவை)

ஆய்ந்த கல்வியால் அறிவு வளர்ந்திடும்; - நல்(ல)
ஆக்கந்தருஞ் செயற்கு அதுதுணை புரிந்திடும்;
பாய்ந்திடும் பகையைப் பதைத்திடச் செய்திடும் - உயர்
பண்பினை வளர்த்திடப் பகர்துணை நின்றிடும் (அறிவை)

மாந்தர்க்குச் சிறப்பைத் தருவது மனமாகும் - அம்
மனத்தினை ஒருவழிப் படுத்துதல் அறிவாகும்
ஆய்ந்திடில் அறமும் அறிவின் மயமாகும் - நல்
அன்பும் அறிவாலே வளர்ந்திடுந் தருவாகும். (அறிவை)

- கனிமொழி

உதயம்
1973

# 456. கையளவு நெஞ்சம்

கையளவு நெஞ்சம் வைத்தான்; - அதில்
கடலளவு ஆசை வைத்தான்;
மெய்யுடனே பொய்கலந்து
மேதினியில் ஏன்படைத்தான்? (கையளவு)

இரவென்றும் பகலென்றும்
இருகூறாய்ப் பகுத்துவைத்தான்
இன்பமென்றும் துன்பமென்றும்
வாழ்க்கையில் இணைத்துவைத்தான்! (கையளவு)

சுகம்தேடி அலைகின்ற
சூக்குமத்தை வைத்ததிலே
சுகம்முற்றும் காட்டாமல்
சூழ்ச்சியினால் மறைத்துவைத்தான்! (கையளவு)

விண்வெளியை ஆராயும்
விஞ்ஞான அறிவுவைத்தான்!
விஞ்ஞான அறிவிருந்தும்
மெய்ஞ்ஞானம் மறைத்துவைத்தான்! (கையளவு)

மெய்யென்று எண்ணியதைப்
பொய்யாகப் போகவைத்தான்!
பொய்யென்று தள்ளியதை
மெய்யாக்கிக் காட்டுகின்றான்! (கையளவு)

மெய்யாகிப் பொய்யாகி
மேதினியை உருட்டுகின்றான்!
செய்யாத வினையெல்லாம்
செய்தெம்மை யாட்டுகின்றான்! (கையளவு)

1978 - அ. பு. திருமாலன்

## 457. தமிழ்வேங்கை

பாயுதடா தமிழ் வேங்கை
பலகாலம் ஓய்ந்த பின்னே! (பாயுதடா)

மின்னலெனக் கண்ணொளிர, மறமிடியாய்த் தெறிதெறிக்க,
முன்னிவரும் பகையவரோ மண்டியிட்டே நடுநடுங்க (பாயுதடா)

ஏமாந்தோர் எனநினைத்து எக்காளம் இட்டோர்முன்
ஏமாந்தீர் எனவுரைத்தே இடைவாளைப் பிடித்தோங்கி (பாயுதடா)

யார்முன்னே வந்தாலும் எவர்தடுத்து நின்றாலும்
கூர்வேலைக் குருதியிலே குளிப்பாட்டிக் களித்திடவே (பாயுதடா)

- சோலை முனியன்

கடற்சோ.
1986

## 458. கவிபாடுவேன்!

கவி பாடுவேன்! - தமிழ்க்
கவி பாடுவேன்! (கவி)

புவியினை விட்டுயிர் போகின்ற நாள்வரை
அழியாது என்புகழ் அவனியில் ஓங்கவே (கவி)

உள்ளத்தைத் திறந்தென்றும் உறவினை வளர்ப்போர்க்கு
நல்லதே செய்தவர் நட்பினை நாடியே (கவி)

துன்பத்தில் நாள்தோறும் துயருறும் ஏழைகள்
அன்போடும் பண்போடும் இன்புற் றிருந்திடக் (கவி)

வெல்லும் செயல்களில் வேத நெறியினில்
உள்ளம் பதித்துயர் உண்மை கனிந்திடக் (கவி)

- ஒப்பிலான் இளம்பரிதி

# 459. இளம்பரிதி

**எடுப்பு**

தினந்தோறும் காலையில் வருவான் - இருள்
திரைநீக்கி நல்லொளி தருவான்!

**தொடுப்பு**

திரையெழும் அலைகடற் கப்பால்
தெரியுமோர் பேரெழிற் கோட்டில் (தினந்)

**முடிப்பு**

பனிமுத்து மின்னிடும் புற்களில்! - ஒளி
பட்டுத் தெறித்திடும் கற்களில்!
கனிக்கொத்தை நாடிடும் புள்ளினம் - கதிர்
காட்சி தருவதால் இவ்வெழில்! (தினந்)

துயர்வந்து சேர்வதை மாற்றிடும்! - உயர்
தூய்மையை நெஞ்சினில் ஏற்றிடும்!
பயிரெல்லாம் தம்தலை யாட்டிடும் - உழவர்
பார்வையில் தெம்பினை ஊட்டிடும்! (தினந்)

த. மலர்
1968.6.16

- ஒப்பிலான் இளம்பரிதி

# 460. தமிழ் பேசுங்க!

வீட்டினிலும் தமிழைப் பேசுங்க! - என்றும்
வெளியினிலும் தமிழைப் பேசுங்க!
ஏற்றத்தாழ்வு ஒன்றும் இல்லீங்க - நீங்க
எப்போதும் தமிழைப் பேசுங்க! (வீட்டினிலும்)

பட்டம்பெற்றீர் பெருமை தானுங்க! - தமிழ்ப்
பண்பை விட்டால்என்ன ஆகுங்க?
சட்டமெல்லாம் தமிழில் உண்டுங்க! - அதனால்
தாய்தமிழை மறந்திடா திங்க! (வீட்டினிலும்)

மேல்நாட்டுப் படிப்பும் வேணுங்க! - ஆனால்
கீழ்நாட்டின் ஒழுக்கம் பேணுங்க!
பாழ்படுத்தும் பழக்கம் வீணுங்க! - அதனால்
பண்புகெடும் வாழ்க்கை வீணுங்க! (வீட்டினிலும்)

தமிழனாகப் பிறந்தோம் பாருங்க - அன்னைத்
தமிழைப் போற்றிவாழப் பாருங்க!
அமுதுபோ லத்தமி ழிருக்குங்க - இன்றே
அருந்தமி ழைச்சுவைத்துப் பாருங்க! (வீட்டினிலும்)

தாயைப்போற் றும்பிள்ளை வேணுங்க! - தாய்
தமிழைப்போற் றத்தமிழன் வேணுங்க!
காயைத்தின்று கசத்தல் வீணுங்க! - உணர்ந்து
கனித்தமிழை நன்றே பேணுங்க! (வீட்டினிலும்)

- எஸ். கே. வடிவேலு

# 461. அலங்காரமா?

அலங்காரமா? இல்லை அலங்கோலமா?
இளங்கன்னியே! நின்று பதில்சொல்லம்மா!

அலைபோன்ற கருங்கூந்தல் சிவப்பானதும் - எண்ணெய்
அறியாது நார்போல விறைப்பானதும்
மலைபோன்று உயர்ந்தோங்கிக் கூடானதும் - பேன்
மகிழ்வோடு வாழ்கின்ற வீடானதும் (அலங்காரமா?)

புழங்காத கிணறேஉன் கண்ணானதும் - காவல்
புரிகின்ற சுவரேபு ருவமானதும்
பழங்கூரை ஈர்க்கேஉன் இமையானதும் - நிலாப்
பார்க்காத இரவேஉன் விழியானதும் (அலங்காரமா?)

பெண்கோவில் சுவரேஉன் முகமானதும் - அதில்
வரைந்தசெங் கோடேகன் னமானதும்
தந்திர நரிவாயே இதழானதும் - சுமை
தாங்கிடும் கல்லேஉன் கழுத்தானதும் (அலங்காரமா?)

கண்ணாடிச் சருகேஉன் உடையானதும் - தொடை
காண்கின்ற நிலையாக மேல்போனதும்
முன்னாடி திறப்பேஉன் எழிலானதும் - வயிறு
மூடாது கீழ்நோக்கி அணியானதும் (அலங்காரமா?)

கண்டோர்கள் நகைக்கின்ற உருவானதும் - வளர்
கயமைக்கே உரமூட்டும் பொருளானதும்
தண்டமிழ் நெஞ்சுக்கே தணலானதும் - அது
தருகின்ற வசைப்பாட்டின் கருவானதும் (அலங்காரமா?)

த. முரசு - ஆதம்குமார்
1967.10.29

## 462. ஆமா! அட ஆமா!

ஆமா! அட ஆமா! ஆமா! அட ஆமா!
ஆமா ஆமா ஆமா!... ஆமா ஆமா ஆமா!... அய் (ஆமா)

ஆமா ஆமா என்று சொல்லி
ஆமாஞ்சாமி போட்டுக் கொண்டு
அடுத்துக் கெடுப்பார்கள் ஆமா! - அட
ஊரையே ஏய்த்துக் கொண்டு
உல்லாச வாழ்வு வாழும்
உத்தமரும் இருப்பார்கள் ஆமா! (ஆமா)

காலநேரம் பார்த்துச் சிலர்
கனிவாகப் பேசிக் கொண்டு
காக்கா பிடிப்பார்கள் ஆமா! - அட
ஏழை எளியவரை ஏமாளி யாக்கிவிட்டு
ஏற்றமுடன் வாழ்வார்கள் ஆமா! (ஆமா)

சமயம்போலப் பேசிச்சிலர்
தன்னை உயர்த்திக் கொண்டு
சமநீதி பேசுவார்கள் ஆமா! - அட
பெருமையாய்த் தேடிச் சென்று
வறுமையை எடுத்துச் சொன்னால்
வந்தவழி செல்லச்சொல்வார் ஆமா! (ஆமா)

1982 - பொன். துரைசாமி

# 463. இன்பத்தின் எல்லை

**எடுப்பு**

கனிமேடை கால்பார்த் தசைந்தது மெல்ல - வரும்
காதலின்பம் இன்னதென் றிசைந்தது சொல்ல! (கனிமேடை)

**தொடுப்பு**

மணமேடை மீதமர்ந்த பனிமேடை தன்னை
மனமேடை கொண்டான்முன் கனிவோடே மென்மைக் (கனிமேடை)

**முடிப்பு**

அணிமேடை அசைந்தசைந்து பசித்தமகன் பக்கம்
அழகுருவம் நடனமிட மிகுந்துவந்த வெட்கம்
தனிமேடை அமைத்ததிலே தள்ளாட வைக்கத்
தளிருடலைத் தாங்குமகன் விழிவண்டு மொய்க்க (கனிமேடை)

துணிவாடா உளத்தோடே துவண்டாடும் பேதை
துவளலிலே தொடர்ந்துவரும் காதலெனும் போதை!
இனிவாடை தருந்தொல்லை எள்ளளவும் இல்லை!
இதமோடு உறவாடும் இன்பத்தின் எல்லை! (கனிமேடை)

த. முரசு - வீரமான்
1968.3.17

## 464. வாள்முனையில் பால்முகம்!

பால்மரம் சீவும் வாள்முனை ஒளியில்
வேல்முகம் தோன்றுதடி - கந்தன்
பால்முகம் தோன்றுதடி!

செம்பனைச் சோலையில் செங்கரம் பிடித்தான்
சேர்த்தெனை அணைத்தானடி - முகம்
சிவந்திடச் செய்தானடி!

ஆயிரந் தெங்குகள் நாளொன் றுரிப்பேன்
அதிலிது இரண்டென்றான் - எனை
அம்பிகை எனப்பணிந்தான்! - அவன்

சீறும் பாம்பைப் புலியைக் களிற்றைச்
சிதைத்திட வாளெடுத்தோன் - இங்குக்
காயும் வெயிலை ஓயாக் குளிரைத்
கடந்துநற் பாலெடுத்தோன் - பல
நோயும் நொடியும் சாடிய போதும்
நிமிர்ந்துநன் நாடமைத்தோன்! - குறி
பாயும் வில்லெனத் தன்னுடல் வளைத்துப்
பால்கொண் டுயிர்காத்தோன்!

ச. மே. ம. - வே. சங்கு சண்முகம்
1972

## 465. பத்துமலை முருகனுக்கு வேல்வேல்!

ஆடுமலை பத்துமலை வேல்வேல்! - எங்கள்
ஆறுமுகன் தங்கரதம் நாடுமலை வேல்வேல்!

காடுமலை மேடுகடல் அதிர - நின்று
கானமயில் ஆடமழை போலிறகு சிதற,

நீடுமலை கோடிசனங் கூடி - பக்தி
பாடுமலை பார்வதியின் சின்னமகன் தேடி,

சூடுமலர் சோரமணி குலுங்கக் - கோடிச்
சேயிழையர் காவடிகள் ஆடவினை ஒடுங்கப்

பாடுகின்றோர் பாடல்வானை இடிக்கும்; - எங்கள்
பத்துமலை என்றதுமே பக்தர்மனம் துடிக்கும்.

தேடுகின்றோர் தேடிவரும் வாசல்! - எட்டுத்
திக்கிருந்தும் பக்தர்வந்து கூடுகின்ற வாசல்!

ஆடுகின்றோர் ஆடிவரும் வாசல்! - ஆசை
அத்தனையும் வென்றமகன் பற்றறுக்கும் வாசல்!

ஓடுகின்றோர் ஓடிவரும் வாசல்! - ஓம்ஓம்
ஓங்கார ஓசையிலே ஒன்றிவிடும் வாசல்!

கூடுகின்றோர் கூடிவரும் வாசல்! - நெஞ்சில்
கூட்டலையுங் கழித்தலையும் கூட்டுகின்ற வாசல்!

வாடுகின்றோர் வாடிவரும் வாசல்! - இங்கு
வந்தவுடன் கந்தனருள் முந்திநிற்கும் வாசல்!

கோவணந் தரித்தகந்த வேளே - எங்கள்
கூக்குரலும் தீக்கனலும் உனைநாடும் கேளே!

நொடிக்குநூறு மைல்பாயும் மயிலே! - இன்று
வெடிப்புடனே வாராததேன் கூறிவிடு ஒயிலே!

நொடிக்குக்கோடி அடிபாயும் அரவே - நீபோய்
துடிப்புடனே தூதுசென்று சொல்லிவிடு மறவேல்!

ஆண்டிமகன் ஆண்டியவன் ஆண்டி! - பெரும்
ஆறுமலை சோலைமலை பாலைகளைத் தாண்டி,

வேண்டிவந்தேன் ஆண்டிமகன் ஆண்டி! - நெஞ்சம்
வேல்தலைபோல் நின்றுருகி உன்னருளைத் தூண்டி!

ஆண்டிஆண்டி ஆண்டிஎன்று ஆட - நெஞ்சம்
ஆவேச மாகஉடல் அக்கினியும் கூட

ஆண்டிமகன் ஆண்டியிவன் ஆண்டி - அந்தப்
பாண்டிமலை ஆண்டிதண்ணிப் பத்துமலை ஆண்டி!

தண்டபாணி கோயிலுறை கொண்ட - ஜோகூர்ச்
சைவமணி மங்கையம்மை தந்தகனி உண்ட

தண்டைமணி கொஞ்சவரும் பாலா! - செந்தூல்[5]
தனிலிருந்து பக்தர்களைக் காத்துவரும் வேலா!

செங்கலசக் கொங்கைமட வள்ளி - தங்கத்
தெய்வயானை கண்ணிரண்டும் பூத்திருக்கும் அல்லி!

திங்களொரு நாள்மலரும் நிலவு - மங்கை
தெய்வயானை கண்ணிருந்து நீசிறிது விலகு!

எங்களிரு தோள்களின்மேல் ஏறு - துன்பம்
எண்ணூறு கூறாக்கித் தீக்குழியிற் சேரு!

ச. மே. ம.
1972

- வே. சங்கு சண்முகம்

## 466. காவடிச் சிந்து

வெற்றிவேல் வீரவேல் விளைகின்ற பாவத்தின்
வேறுத்துக் காக்கும்கூர்வேல்! - வேல்வேல்

நெற்றிமே லிட்டவேல் நெஞ்சுறுதி தந்தவேல்
நிழல்போலும் துணைநிற்கும்வேல்! - வேல்வேல்

நீலமயி லும்வள்ளிக் கோலமயிலுங் கொண்டு
நீளுலகை யாளவரும்வேல்! - வேல்வேல்

சுற்றிவேற் படைவாழச் சூழ்பகைவ ரடிவீழச்
சுடர்தாங்கும் சத்திவேல்வேல்! - வேல்வேல்

சூழாழிச் சிங்கையம் மாவாழ வாழநீ
சொந்தமே கந்தவேளே! - வேல்வேல்

கார்கொண்ட கூந்தலாள் வள்ளியைக் கைக்கொண்டு
காதலற மீன்றவடிவேல்! - வேல்வேல்

5 செந்தூல் - கோலாலம்பூரில் முருகன் கோயில் அமைந்துள்ள பகுதி

கனிதந்த தந்தையின் மனமென்ன மனமென்று
கடுங்கோப முற்றவடிவேல்! - வேல்வேல்

சீர்கொண்ட செந்தமிழின் சக்தியை நக்கீரர்
சிந்தைக்குத் தந்தவடிவேல்! - வேல்வேல்

செம்மாந்த சூரனின் செருக்கறுத் திருகூறு
செய்தமா சத்திவடிவேல்! - வேல்வேல்

கூர்கொண்ட வீரவேல் குடிகொண்ட படியெலாம்
குறைநீக்கி வைத்தவடிவேல்! - வேல்வேல்

குன்றேறி நின்றவேல் மன்றேறி வென்றவேல்
என்றென்றும் காக்கும்வடிவேல்! - வேல்வேல்

பன்னூறு காவடிகள் உன்வீடு வருகின்ற
பயணத்தைப் பார்க்கவாவா! - வேல்வேல்

பழிநூறு வந்தாலும் விழியாறு ஈராலே
பனிபோல நீக்கவாவா! - வேல்வேல்

வெண்ணீற்று நெற்றியும் வேல்கொண்ட மேனியும்
வேலவா காணவாவா! - வேல்வேல்

விளையாடும் மயிலோடும் வளையாடுந் துணையோடும்
வேடிக்கை பார்க்கவாவா! - வேல்வேல்

முப்புர மெரித்தசடை யப்பன்வினை தப்பெனவே
முன்கோபங் கொண்டமுருகா! - வேல்வேல்

முன்னைவினை தன்னையொரு கண்ணசைவில் மண்ணிலிடும்
மூலனார் பிள்ளைமுருகா! - வேல்வேல்

எப்புற மிருந்தாலும் எச்செயல் புரிந்தாலும்
இப்பொழுதில் வருகமுருகா! - வேல்வேல்

ஏடாயிரங் கையிற் சூடவா வும்மெய்யில்
ஏற்கவா வேற்கை முருகா! - வேல்வேல்

திருமுருக. - முருகதாசன்
1975

# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"கொத்தடிமை யுற்றுக் குற்றுயி ராய்வீழ்ந்து
சித்தமெல் லாம்பிற தேயத்தின் கீழ்ப்பட்டு
நத்திப் பிழைப்பேனோ நாயினும் கேடாக"

- கா. பெருமாள்

கஉ நாடகம்

## 467. காலம் பதில் சொல்லும்!

**எடுப்பு**

காலங்களே எனக்குப் பதில்சொல்லும் - என்
கனவுகள் எல்லாம் நனவாகும். (காலங்)

**தொடுப்பு**

ஜாலம் செய்யும் இயற்கை விளையாடச்
சங்கீத நவரசம் எங்கும் இழைந்தோட (காலங்)

**முடிப்பு**

ஏழு சுரங்களினுள் நான்தவழ்ந் தாட
இறைவனின் திருவுள்ளங் கனிந்தே மகிழ்ந்தாட
எல்லையில் லாமகிழ்ச்சி என்னுள் இழைந்தோட
எல்லாம் அவன்செயலே என்றேநான் பாட (காலங்)

நா-ம் - ரெ. சண்முகம்
1987

## 468. உலகுக்குப் போராட்டம்

அழகான மலர்படைத்தாய் - அதை
ஆலயம் செல்லுமுன் ஏன்பறித்தாய்?
அதற்கென மணம்கொடுத்தாய் - அதை
அனல்சூழும் தீயாற்றில் ஏன்விடுத்தாய்? (அழகான)

புதையல் கிடைக்குமுன்னே புயற்காற்றில் சிக்கினால்
போகும் இடமேது புகல்வாய் இறைவா?
வள்ளலின் கைகளுக்கு விலங்கே பூட்டினால்
வாழ்விற்குப் பொருள்என்னவோ? (அழகான)

பெற்றெடுத்த அன்னை பித்தாகிக் கலங்குகிறாள்
தந்தையோ தமைமறந்து தாமாய்ப் புலம்புகிறார்
சுற்றமும் சூழலும் துயரத்தின் எல்லையம்மா!
இதற்கொரு முடிவென்னவோ? (அழகான)

ஆசைகள் அத்தனையும் அலையும் போதினிலே
அமைதி தேவையென்று நினைத்தாயோ?
நெடுநாள் வாழஎண்ணும் நல்ல மனங்களுக்கு
நீஇட்ட ஆணையிது என்பாயோ?
இதுஉன் சோதனை! எங்களுக்கு வேதனை!
உனக்கிது அரங்கேற்றம்! உலகுக்குப் போராட்டம்! (அழகான)

நா-ம் - ரெ. சண்முகம்
1987

## 469. விரிகதிர் எழுந்தான்!

**எடுப்பு**

விரிகதிர் எழுந்தான் இம்மலை நாட்டின்
விடிவு பிறந்தது பாரீர்! (விரிகதிர்)

**தொடுப்பு**

உரிமைச் சுதந்திரம் நாமடைந்தோம் இந்த
உலகிடை உயர்ந்தவ ரானோம் (விரிகதிர்)

**முடிப்பு**

அரிவை சுதந்திர தேவி யளித்தநல்
அணியெனப் பறந்திடும் கொடியே!
சிரவணக் கம்செய்தோம் எங்கள் மலைநாட்டின்
சீர்த்தியைப் பாடுவோம் வாரீர்! (விரிகதிர்)

சு-ம் - கா. பெருமாள்
1957

# 470. சுதந்திரச் சுடரொளி!

**எடுப்பு**

இருளைக் கிழித்தெழுந்தான் - சுதந்திரம்
என்னும் சுடரொளி யோன் (இருளை)

**தொடுப்பு**

திரள்திர ளாகமலை மேரு போலெழும்
தீய அடிமை நெஞ்சம் சுக்குநூ றாகிட (இருளை)

**முடிப்பு**

எத்திசை செல்லினும் எங்கள் மலையத்தின்
வித்தைக ளோங்கிட மெத்தமோ கங்கொண்டு
பித்தேறும் போதைக்குப் பெற்றபொன் னாட்டினை
விற்போம் விற்போமென வீர முரசறைந்து (இருளை)

கொத்தடிமை யுற்றுக் குற்றுயி ராய்வீழ்ந்து
சித்தமெல் லாம்பிற தேயத்தின் கீழ்ப்பட்டு
நத்திப் பிழைப்பேனோ நாயினுங் கேடாக
வித்தகி யேஎனை மீட்டிட வாவென்று (இருளை)

எண்திசை ஆழிசூழ் ஏற்ற மிகுந்தவள்!
மண்ணெல்லாம் பொன்னாக மாற்றும் திறன்மிக்காள்!
கண்கள் திரைபட்டுக் கலங்க விடேனென்று
புன்மை அடிமைஎனும் பூட்டை உடைத்தெறிந்து (இருளை)

சு-ம் - கா. பெருமாள்
1957

# 471. எழுந்து வா!

**எடுப்பு**

எழுந்துவா மகனே எழுந்துவா! - அடல்
ஏறாக நெஞ்சுயர்த்தி எழுந்துவா! (எழுந்து)

**தொடுப்பு**

விழுந்தவன் நீஎன்ற எண்ணம் ஓடவே; - நல்ல
விளைவெல்லாம் உன்னில் வந்து கூடவே! (எழுந்து)

**முடிப்பு**

அடியெடுத்து வைக்க இன்னும் தயக்கமா? - விட்டு
அகலாத பழமையிலே மயக்கமா?
வடிவெடுக்க நல்வாழ்வு காணுவோம் - நம்
மனம்மலரப் பண்புநலம் பேணுவோம்! (எழுந்து)

தலைநிமிரும் கலைக்கோயில் பாராய்! - கல்வி
தரமுயரும் நிலைகாண வாராய்!
வளர்ந்துவரும் தொழில்நுட்பக் கூடமே! - அதன்
மலர்ச்சியிலே குறையெல்லாம் ஓடுமே! (எழுந்து)

முதலீட்டுப் பங்குநாளும் பெருகுதே! - எண்ணும்
முத்தான பெருவாழ்வு கனியுதே!
புதுவேகம் இன்னும்தோன்ற வில்லையா? - காலம்
புரியவைத்த பாடம்நினைவில் இல்லையா? (எழுந்து)

வேற்றுமை யெல்லாம் வீழ்ந்திடநீயும் எழுந்துவா!
வெற்றிகள் உன்னைச் சூழ்ந்திடஉடனே எழுந்துவா!
கூற்றென மருட்டும் அச்சம்ஓட எழுந்துவா!
குன்றென வலிமை கொண்டேநீயும் எழுந்துவா!
எழுந்துவா! எழுந்துவா! எழுந்துவா!

எ-கி
1983

- முரசு. நெடுமாறன்

# 472. ஒன்றுகூடுவோம்!

ஒன்று கூடுவோம்! - நாம்
ஒன்று கூடுவோம்!
என்றும் நெஞ்சில் உண்மை ஓங்க
ஒன்று கூடுவோம்!

அன்பினில் இணைந்தே அறவழி தொடர்ந்தே
பண்பினில் கனிந்தே பாரினில் உயர்ந்தே (ஒன்று)

தாயகம் ஓங்கச் சேவைகள் புரிவோம்!
தாய்மொழி நெஞ்சில் தழைத்திட நிறைவோம்!
தலைவர்கள் சொல்லும் வழியினில் செல்வோம்!
தலைமுறை ஓங்கத் துணிவுடன் வெல்வோம்! (ஒன்று)

இன்றைய அரும்பே நாளைய மலராம்!
நன்றிதை உணர்வோம் நறுமணம் பெறுவோம்
நாளைய உலகை நலமுடன் ஆளும்
வல்லமை பெறுவோம் வாழ்வினில் உயர்வோம். (ஒன்று)

ஒ-ள் - முரசு. நெடுமாறன்
1988

# 473. இயல்பிதுதானோ?

**எடுப்பு**

இல்லறம் ஏற்றார் இயல்பிதுதானோ?
இன்பம் நாடி எவளுடன்கூடி - இருக்கின்றாரோ? (இல்லறம்)

**தொடுப்பு**

தாவிடை என்றார்; தந்தேன் சென்றார்;
தம்மை நினைந்தார்; என்னை மறந்தார். (இல்லறம்)

**முடிப்பு**

வாழ்வென்னும் சித்திரத்தை வைத்துயர்த்திப் பார்க்கையிலே
தாழ்வென்னும் தூசிவந்து தலைமறைத்து விட்டதுவே! (இல்லறம்)

வாங்கிநா ளாகவில்லை! வைத்திருந்தும் பார்க்கவில்லை!
தாங்கிப் பிடித்தகையும் தரம்குறைந்து போகவில்லை! (இல்லறம்)

சித்திரத்தின் பெருமை தெரியாமல் வாங்கியதோ?
சிந்திக்கும் முன்னே செயலும் தொடங்கியதோ? (இல்லறம்)

1962 - ஏ. பி. சண்முகம்

## 474. தீண்டத் தகாதவரோ?

(தாழ்த்தப்பட்ட தமிழ்நாட்டுச் சேரிமக்கள் துயரம்)

**எடுப்பு**

தீண்டத் தகாதவரோ? நாங்க ளிந்தியரன்றோ?
செப்பிடுவீரே எங்கள் ஐயா! (தீண்ட)

**தொடுப்பு**

ஆண்டவன் படைப்பிலும் ஐயோ கொடுமை உண்டோ?
அநியாயம் செய்தல் வேண்டா ஆதரிப்பீ ரெங்களை (தீண்ட)

**முடிப்பு**

(எங்கள்) பெண்டு பிள்ளைக ளெல்லாம்
தொண்டை வறளத் தண்ணீர்
மொண்டு குடிக்கக் கிணற்
றண்டை வருகும் போது

“சண்டாளா!” சீ! சீ!! போ! போ!!
என்று வெருட்டு முங்கள்
சாதிக் கருவமிது நீதியாகுமோ ஐயா! (தீண்ட)

அல்லும் பகலுமுங்கள் அடிச்சுவட் டினைப்பற்றி
ஆடுமா டுகள்போலே வாழுகின்றோமே ஐயா!
நல்ல வத்திரங்களை நாங்கள் உடுக்கொணாதோ?
நம்பிரான் கோயில்சென்று நாளும் தொழவொணாதோ? (தீண்ட)

சாதிக் கருவங் கொண்ட சண்டாளரே! உங்களால்
சந்த தம்நசுக் குண்ணலானோம் நடைப்பிணமாய்
ஓதும் பழநிவேலின் கீதவாயி லாகவே
உண்மை எடுத்துரைத்தோம் நன்மை புரிவீரய்யா! (தீண்ட)

சு-மை - ந. பழநிவேலு
1936.4.12

# 475. என்னை ஆளுவாய்!

(நாடக மேடையில் வெளிவரும் சமயம் பாடும் பாடல்)

**எடுப்பு**

தினகரனே என்னை ஆளுவாய் - என்றும்
திருவருளே தந்தே தாங்குவாய் (தினகரனே)

**தொடுப்பு**

சோமனே தூயவா! சோதியே மன்னவா!
மாதவா! சம்புவின் மாதராள் விழியே! வா (தினகரனே)

**முடிப்பு**

மங்களக் குகனே! மணமிகு சிரேஷ்டனே!
பொங்கிடும் நல்லருள் பொழிந்திடு பிரகஸ்பதே!
எங்களின் வெள்ளியே! எழுந்தருள் மைந்தனே!
பொங்கர விருவரே! பொருள்தரு நவநிதே! (தினகரனே)

ந-லை - பி. கே. கறுப்பையா
1937

# 476. நல்லவராய் நடிக்கும் எத்தர்

**எடுப்பு**

நன்றியுள்ள மிருகம் உண்டுங்க!
அது நம்மைக் கண்டால்
நாணிக் கோணி வாலை ஆட்டுங்க! (நன்றி)

**முடிப்பு**

பதுங்கியே தாக்கும்சில மிருகமும் உண்டுதாங்க
பதுங்கிப் பதுங்கிநின்று பாய்ந்துவந்து தாக்குமுங்க! (நன்றி)

பொல்லாத பாம்புகளும் புற்றினிலே இருக்குமுங்க
நல்லபாம்பு என்றுவிட்டால் நம்மையே கொல்லுமுங்க! (நன்றி)

செந்தேளும் கருந்தேளும் சினமுள்ள தேளுதாங்க
தெரியாமல் அருகிற்சென்றால் கொடுக்காலே கொட்டுமுங்க! (நன்றி)

நல்லவ ராய்நடிக்கும் சிலஎத்தர்களும் இருப்பாங்க
நாவிலே விடத்தைவைத்து நல்லவராய்ப் பேசுவாங்க! (நன்றி)

ப-ன் - பொன். துரைசாமி
1957

# 477. கொத்தான குடும்பம்

**உரைப்பாட்டு**

சீறிவரும் புயல் போலவே! துயர்
மீறிவரும் நிலை ஆனதே!

**பாட்டு**

கொத்தான குடும்பம் குலையவோ?
கொம்புகள் எல்லாம் முறியவோ?
கொடியொன்று ஆடுவதோ? - இறைவா!
கொடுமையில் வாடுவதோ?

நித்தமும் பெண்மை நொந்திடவோ?
நீள்விழி கண்ணீர் சிந்திடவோ?
நெஞ்சில் சஞ்சலம் மிஞ்சிடவோ? - இறைவா!
நற்பசும் பாலில் நஞ்சிடலாமோ?

கட்டிய மலரும் கொட்டுவதோ?
ஒட்டிய உறவை வெட்டுவதோ?
காலத்தை வென்றவன் கருணையிதோ? - இந்தக்
கோலத்தை மாற்றும் தருணமெதோ?

1941 (நாடகத்தின் பெயர்) - நா. ஆ. செங்குட்டுவன்
1965

## 478. மத்தவங்க பொண்ணுமேலே...

பெண் : மத்தவங்க பொண்ணுமேலே
வைக்கலாமோ கண்ணு? - என்
அத்தான் கிட்டே சொன்னா உன்னை
மொத்திடுவான் எண்ணு (மத்தவங்க)

ஆண் : புத்தியாகப் பொண்ணுநீயும்
பொளைக்கவேணும் கண்ணு - எனச்
சத்திமுன்னே நின்னுசவால்
விட்டிடுவான் எண்ணு

பெண் : எத்தாகப் பேசாதே எகத்தாளம் போடாதே
சித்துளி யாலேமலை பொடியாகும் மறக்காதே

ஆண் : ஆணுக்குப் பலதாரம் பொண்ணுக்கு ஒருதாரமாம்
வீணுக்குப் பேசாமல்! வீட்டுநெறி நின்றிடுவோம்!

பெண் : பாத்திரம் அறிந்துபிச்சை எடுத்திட வேணும்
சாத்திரம் சொன்னபடியே நடந்திட வேணும்
ஆத்திரம் கொண்டநீயும் அமைதிகாண வேணும்
நேத்திரம் கெட்டுநீயும் அழியா திருக்கணும்

ஆண் : வாழ்த்தறியா வசைபாடறியா?
கற்பினில் கண்ணகியா கைவிட்டுநீ போயிட்டியா?

வா-ர் - ஆழி. அருள்தாசன்
10.10.1964

# 479. காணவேண்டும் சமரசம்

அப்பளம்: ஆசைக் கண்ணே அதிரசமே
அருந்த இனிக்கும் கனிரசமே
காதல் கொண்டேன் உன்வசமே - நாம்
காண வேண்டும் சமரசமே!

அதிரசம்: கழுகு பார்வை உடையவரே
கருத்தைக் கவர்ந்த மன்னவரே
கறுத்த மேனி உடையவரே! - என்றன்
கவலை போக்க வந்தவரே!

அப்பளம்: ஆசை பொங்குது நெஞ்சினிலே;
அன்பு மலருது உறவினிலே;
கண்கள் நான்கும் கலந்ததடி
காதல் போதை ஊட்டுதடி!

அதிரசம்: வளைந்து கொடுக்கும் உடலமைப்பு
மனத்தில் ஏனோ சலசலப்பு
உண்மையைச் சொன்னால் கடுகடுப்பு
உனக்கும் எனக்கும் உறவிருக்கு!

அப்பளம்: கேலி யாகச் சிரிக்காதே
ஜாலி யாக வாழ்ந்திடலாம்
போலி யாக எண்ணாதே
பிரிந்தும் விலகிச் செல்லாதே.

இருவர் : வானும் நிலவும் போலானோம்;
கண்ணும் இமையும் நாமானோம்;
அதிரசம் அப்பளம் ஒன்றானோம் - இனி
இதனிலும் இன்பம் வேறுண்டோ?

அ-ல் - சக்கரவர்த்தி சோமசன்மா
1962.10.14

# 480. அழகுமயில்

அவன் : அழகுமயில் தோகைவிரித்(து) ஆடுது - அதன்
அழகைக் கண்டு மாங்குயில்பண் பாடுது

அவள் : பேசாத யாழும் இங்கே பேசுது - என்றும்
வீசாத தென்றல் வந்தே வீசுது

அவன் : எழுதாத ஓவியமே இன்பந்தரும் காவியமே
இனிநாமே புவிமீது இருவிழிகள் போலானோம்

அவள் : இழிகுலப்பெண் உங்கள் வாழ்வில்
இன்பம் காண முடியுமா?

அவன் : இழிவு என்ற சொல்லுக்கென்ன
பொருள் உனக்குத் தெரியுமா?
இட்டவர்கள் பெரியோர்கள்
இடாதவர் இழிகுலத்தோர் என்று சொன்ன
ஔவை மொழி தெரியுமா?

அவள் : ஏட்டிலே எழுதியதைப் பாட்டினாலே பாடிவிட்டார்
ஏற்குமோஇவ் வுலகமிதைத் தெரியுமா?

அவன் : ஏட்டிலே எழுதியதைப் பாட்டினாலே பாடிக்காட்டி
இனிய பொருளை யெடுத்துரைப்போம் போதுமா?

இருவ.: தமிழும்சுவையும் போலஉலகில் வாழுவோம் - எந்தத்
தவறும்வாழ்வில் நேர்ந்திடாமல் தகைமையோடு கூடியே

நே-ம்
1957

- ப. க. குஞ்சுபாகவதர்

# 481. காதல் நெஞ்சம்

ஆண் : கணையென்ற விழியால் கதைசொன்ன மானே!
தணியாத இன்பத்தின் பொருளேநீ வாராய்!

பெண் : புகழ்மாலை சூடும் பொருள்சேர்ந்த மொழியால்
அகமோடு உறவாடும் அன்பேநீ வாராய்!

ஆண் : பனிதூங்கும் மலரே! பண்பென்னும் பயிரே!
இனிக்கின்ற தேனே! இனியென்ன வேண்டும்?

பெண் : பண்ணோடு நாதம் இழைகின்ற தைப்போல்
உன்னோடு நானும் இணையவே வேண்டும்!

ஆண் : சுளைபோன்ற இதழும் துடிக்கின்ற இமையும்
சிலையான உடலும் சிந்தாத மொழியும்
அணையென்று சொல்லி அழைக்கின்ற தென்னை
அமுதான சுவையே அருகேநீ வாராய்!

பெண் : கண்ணென்ற வழியேஎன் நெஞ்சிற் புகுந்தே
என்னென்ன கோலம் செய்கின்றீர் அத்தான்!
பொன்னான மேனி பூவான உள்ளம்
தன்னாலே ஏங்கித் தளர்கின்ற தத்தான்!

இருவ.: இணைகின்ற விழியால் இசைபாடு வோமே
தணியாத இன்பத்தை நாம்காணு வோமே!

கண்மணி - இரா. பெருமாள்

# 482. வாழ்த்திடும் மணியோசை

அருளெலாம் நாட்டில் வைத்தே அளவிலா உழைப்பைத் தந்தும்
பொருளெலாம் அற்றே நாளும் புழுங்கியே வாழும் மக்கள்
திருவெலாம் பெற்றே நாளும் சிறந்துமே வாழ்வில் ஓங்க
இருளெலாம் அகன்ற தென்றே எழுப்பிடும் மணியின் ஓசை!

நாளெலாம் பாடு பட்டும் நலிந்திடும் ஏழை மக்கள்
வாழ்வெலாம் இருளே சூழ வருந்திடும் நிலையைப் போக்கித்
தாழ்வெலாம் அழித்தொ ழித்துத் தழைத்துமே சிறப்பாய் ஓங்க
வாழ்வுதான் விடிந்த தென்றே வாழ்த்திடும் மணியின் ஓசை!

- அ. ரெங்கசாமி

வ-டி
1967, பிப்பிரவரி 9, 10

# மலேசியத்
# தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"புத்தி மிகுந்தவர் தம்காது
ஒட்டுக் கேட்பதை விரும்பாது!"

- க. து. மு. இக்பால்

காசு சிறுவர்

# 483. தேசியக் கோட்பாடு

ஒன்றே இறைவன் நம்புவோம்;
உள்ளம் உருக வணங்குவோம்!

நாட்டை ஆளும் மன்னரை
நாளும் மதித்துப் போற்றுவோம்!

அரசியல் சட்ட நெறிகளை
அகத்தில் பதித்துக் கொள்ளுவோம்!

சட்ட முறைப்படி ஆளுவோம்;
தாயகம் காத்து வெல்லுவோம்!

ஒழுக்கம் உயர்வைத் தந்திடும்;
உயிராய் அதனைப் பேணுவோம்!

உலகில் நல்ல குடிகளாய்
உண்மை போற்றி வாழுவோம்!

நன்னெறி.
1987

- முரசு. நெடுமாறன்

# 484. திருவிழா

எங்கள் வீட்டில் திருவிழா!
இன்பம் சேர்க்கும் பெருவிழா!

ஆவ லோடு அனைவரும்
அன்பாய்க் கூடும் நல்விழா!

ஆலிங்[1] மரியம் செல்வியும்
அகம தோடு தோழரும்

இன்று இங்கு வருவரே!
இனிது கூடி மகிழுவோம்.

மலே. கல்.
1969

- முரசு. நெடுமாறன்

## 485. வெற்றியின் இரகசியம்

அழுது கொண்டே இருப்பவர்
அடைவ தில்லை இன்பமே!

அஞ்சி அஞ்சிப் பதுங்குவோர்
அடைவ தில்லை வெற்றியே!

தூங்கித் தூங்கி வழிபவர்
சுடர்வ தில்லை என்றுமே!

சிரித்து நெஞ்சில் துணிவுடன்
செயல்கள் நாளும் புரிகுவோர்

வெற்றி பெற்றுச் சிறப்புடன்
விளங்கி வாழ்வார் உறுதியே!

இளந்.
1969

- முரசு. நெடுமாறன்

## 486. விஞ்ஞானி ஆவேன்

புதுமைகளைக் கண்டறியும்
விஞ்ஞானி யாவேன் - இப்
பூவுலகை உயர்த்துகின்ற
விஞ்ஞானி யாவேன்!

பரவெளியின் விந்தையறியும்
விஞ்ஞானி யாவேன் - இப்
பாரில்மக்கள் வாழ்வுயர்த்தும்
விஞ்ஞானி யாவேன்!

ஆழ்கடலில் மூழ்கிப்பார்க்கும்
விஞ்ஞானி யாவேன் - மக்கள்
வாழ்வில்இன்பம் ஏற்றுகின்ற
விஞ்ஞானி யாவேன்!

வானமெல்லாம் அளந்துபார்க்கும்
விஞ்ஞானி யாவேன் - வாழ்வில்
காணும்குறை யாவும்போக்கும்
விஞ்ஞானி யாவேன்!

வறுமைபோக்கும் வழிகள்காணும்
விஞ்ஞானி யாவேன் - இந்த
வையகத்தை வளரச்செய்யும்
விஞ்ஞானி யாவேன்!

அறிவு. - முரசு. நெடுமாறன்
1976

## 487. சித்திரம்

நல்ல வண்ணம் கூட்டியே
நான்வ ரைந்த சித்திரம்!
உள்ளம் கவரும் விதத்திலே
உருவம் பெற்ற சித்திரம்!

புத்த பிராஅன் அழகுடன்
போதி சேர்நல் சித்திரம்!
உத்த மர்கள் வாழ்க்கையை
உணர்த்து கின்ற சித்திரம்!

காந்தி மகான் பொக்கைவாய்
காட்டும் சிரிப்புச் சித்திரம்!
சாந்தி தவழ இயேசுவும்
தாங்கும் சிலுவைச் சித்திரம்!

சோலை மலர்கள் விரிந்துமே
துயரம் போக்கும் சித்திரம்!
காலை வானில் கதிரவன்
காட்சி குலுங்கும் சித்திரம்!

திருமகள் - சோமசன்மா
1971

## 488. எதிர்ச்சொல்

அன்புடனே வாழ்வதுதான் விருப்பு! - வீணே
ஆரவாரம் செய்வதுதான் வெறுப்பு!
புண்படவே பேசுவது கசப்பு! - உலகில்
புகழ்படைத்த மக்கள்வாழ்வு இனிப்பு!

நற்செயல்கள் புரிவதுதான் நன்மை! - நாட்டில்
நாசவேலை செய்வதுதான் தீமை!
சிற்சிலரின் வாயில்வரும் உண்மை! - என்றும்
தீயவர்கள் நாவுமிழும் பொய்மை!

படிப்புத்தரும் வாழ்க்கையிலே உயர்வு! - சில
பண்புகெட்டோர் செய்கைதரும் தாழ்வு!
குடிப்பழக்கம் இறப்புவரை துன்பம்! - நல்ல
கொள்கையுடன் வாழ்வதுதான் இன்பம்!

நன்மகவு ஈட்டுவதோ புகழ்ச்சி! - தீய
நடத்தையினால் கூடுவதோ இகழ்ச்சி!
இன்செயல்கள் வாழ்வைநலம் ஆக்கும்! - நடப்பு
ஏறுமாறாய் இருந்துவிட்டால் அழிக்கும்!

ஆண்டவனைக் கண்டதில்லை அருவம்! - அவன்
அளித்தபொருள் கொண்டிருக்கும் உருவம்!
தேன்தமிழுக் கென்றுமில்லை இறப்பு! - காலம்
தெரியவில்லை நம்தமிழின் பிறப்பு!

- சோமசன்மா

திருமகள்
1979, ஜூலை

## 489. சிரிக்கும் அழகு

வண்ண மலரின் அழகு! - தூய
வான வில்லின் அழகு!
சின்ன மழலை அழகு! - நீயும்
தினமும் பார்த்துப் பழகு!

பாயும் நதியின் அழகு! - நிறைந்த
பச்சைப் புல்லின் அழகு!
சாயும் கதிரின் அழகு! - நீயும்
தனியே பார்த்துப் பழகு!

உயர்ந்த மலையின் அழகு! - எங்கும்
உலவும் தென்றல் அழகு!
அயர்ந்த மானின் அழகு! - நீயும்
அன்பாய்ப் பார்த்துப் பழகு!

அலைகள் ஆடும் அழகு! - சிறிய
அணில்கள் ஓடும் அழகு!
கலைகள் காட்டும் அழகு! - நீயும்
கனிவாய்ப் பார்த்துப் பழகு!

இன்பம் பயக்கும் அழகு! - இந்த
இயற்கை சிந்தும் அழகு!
என்றும் சிரிக்கும் அழகு! - நமது
இறைவன் படைத்த உலகு!

திருமகள் - சோமசன்மா
1976

## 490. ஒன்றே கடவுள்

உலகுக் கெல்லாம் ஓர்இறைவன்
உண்டே அவர்க்குப் பலபெயர்கள்
அலகில் கருணைப் பரம்பொருளை
யாவரும் போற்றி வணங்கிடுவோம்!

சூரிய சந்திரர் அவராலே
சூழ்கடல் மலையும் அவராலே
நேரினில் காணும் இவையுணர்ந்து
நினைவோம் கடவுள் உண்டென்று!

புத்தர் ஏசு முகம்மதுவும்
புனிதர் காந்தி மகாத்மாவும்
இத்தரை மீது இறுதிவரை
நித்தம் பணிந்தது அவரையன்றோ!

எங்கெங் கென்ன செய்தாலும்
அங்கங் கெல்லாம் நிழல்போலத்
தங்கி நம்மைப் பின்தொடர்வார்
இங்கிது இறைவன் செய்தொழிலே!

நன்றே செய்து வாழ்ந்திடவே
நம்மைப் படைத்தார் புவிமீதே
ஒன்றே கடவுள் என்றெண்ணி
ஒருகுல மாகவே வாழ்ந்திடுவோம்!

தேனீ
1964

– சி. வேலுசுவாமி

## 491. இன்ப மலேசியா

இன்ப மலேசியா நம்நாடு!
இதற்கிணை இலையென நீபாடு!
துன்பம் தொலைந்தது எனஆடு!
துயர்களை வோமெனத் துணிவோடு!

மேற்கிலும் கிழக்கிலும் கடலாகும்;
மேலை நாடுகளும் புகழ்பாடும்!
நாற்றிசை யிலும்நம் உறவாடும்;
நாகரி கம்இங்கு நடமாடும்!

ரப்பரும் ஈயமும் விளைத்திடுவோம்!
நாட்டுக்கு உண்மையா யுழைத்திடுவோம்!
எப்புவி யோரையும் அழைத்திடுவோம்!
ஏற்றமாய் வாழ்வினில் திளைத்திடுவோம்!

கூட்டர சாட்சியைப் போற்றிடுவோம்!
குறைகளை வீரெனச் சாற்றிடுவோம்!
நாட்டினில் தீமையை மாற்றிடுவோம்!
நாம்மலே சியர்இதை ஏற்றிடுவோம்!

தேசிய மொழியினைக் கற்றிடுவோம்!
திருந்திய வாழ்வினைப் பெற்றிடுவோம்!
நேசமாய் இணைந்துகை தட்டிடுவோம்!
நிலமதிர் முரசமும் கொட்டிடுவோம்!

பாட்டுப். - சி. வேலுசுவாமி
1967

## 492. சூரியனே!

சூரியனே சூரியனே!
சுடர்மிகுந்த சூரியனே!
பாரில்உள்ள உயிர்வாழப்
பவனிவரும் சூரியனே!

வெயில்மழையும் உன்னாலே
வீசுபனி உன்னாலே
வயல்வளமும் உன்னாலே
வந்திடுவாய் சூரியனே!

திசையறிய நீயாவாய்
சீர்பெறவும் நீயாவாய்
இசைபெறவே நீவருவாய்
என்றென்றும் சூரியனே!

திங்களுக்கும் ஒளிதந்து
திகழவைக்கும் சூரியனே!
தங்கும்உல குயிர்களுக்குத்
தந்தையும்நீ சூரியனே!

தாமரையுன் வரவாலே
தளிர்முகத்தைக் காட்டிடுவாள்
தேசுறவே நாங்களெலாம்
தினமும்வரும் சூரியனே!

பாட்டுப். - சி. வேலுசுவாமி
1967

## 493. செந்தமிழ்ச்செல்வம்!

பொன்னைச் செல்வம் என்பார்கள்;
பொருளைச் செல்வம் என்பார்கள்;
உன்னைக் கூட உன்பெற்றோர்
உயர்ந்த செல்வம் என்பார்கள்!

செல்லத் தக்க பொருளெல்லாம்
'செல்வம்' என்னும் பெயராலே
வெல்லத் தமிழில் அந்நாளில்
மேலோர் அழைத்து வந்தார்கள்!

மதிக்கத் தக்க பொருளெல்லாம்
மண்ணில் செல்வம் ஆகும்நாம்
துதிக்கத் தக்க பொருளுண்டே
தூய தமிழ்தான் அதன்பெயரே!

கமழும் இன்பத் தமிழின்றேல்
கருதும் வாழ்வு நமக்கில்லை;
தமிழர் என்னும் பெயரில்லை;
தலைமை யான சிறப்பில்லை!

அருமைச் செல்வம் தமிழ்ச்செல்வம்!
அறிவாய் தம்பி அதுநமக்குப்
பெருமை நல்கும்; புவியில்நம்
உரிமைப் பயிர்க்கு நீராகும்!

திருமகள் - பொன்முடி
1982

## 494. தென்னம்பிள்ளை

நானும் பிள்ளை நீயும் பிள்ளை
தென்னம் பிள்ளையே! - எனக்கு
வான ளாவ வளரும் உன்போல்
வளர்ச்சி இல்லையே!

வேரில் நீரை வாங்கித் தலையில்
மேலே தருகிறாய்! - இந்தப்
பாரில் பயனே கருதி டாமல்
உதவி வருகிறாய்!

இருந்தால் உன்னைப் போல நானும்
இருக்க நினைக்கிறேன்! - இந்தப்
பரந்த உலகில் பயனுள் ளவனாய்
வாழ நினைக்கிறேன்!

- பொன்முடி

## 495. முடியாது!

காலில் தைத்த முள்ளதனைக்
கண்ணாற் கண்டு சொல்லும்நாம்
பாலில் வெண்ணெய் இருப்பதனைப்
பார்த்துச் சொல்ல முடியாது!

தேரில் எழுந்து நிற்கின்ற
சிலையைக் கண்டு களிப்பதுபோல்
நீரில் கலந்த உப்பதனை
நேரில் காண முடியாது!

திங்கள் வானில் தெரிவதுபோல்
தினம்நாம் அதனைப் பார்ப்பதுபோல்
எங்கும் நிறைந்த பரம்பொருளை
இங்குக் காட்ட முடியாது!

காற்று தன்னைப் பாரென்று
காட்ட முடியா ததுபோலத்
தோற்றம் இல்லாப் பரம்பொருளைச்
சுட்டிக் காட்ட முடியாது!

திருமகள் - பொன்முடி

## 496. நிலவு

அலையும் மேகத் திட்டில்
அசைந்து செல்லும் ஓடம்!
அசைந்து செல்லும் ஓடம்! - வெள்ளி
அழகில் புனைந்த கோலம்!

உலவும் காற்று முகிலை
ஊதி ஊதித் தள்ளும்
ஊதி ஊதித் தள்ளும் - நிலவு
ஒளிந்து ஒளிந்து பார்க்கும்!

ஊஞ்சல்
1983

- முல்லைவாணன்

## 497. யானை

உலக்கை போலக் கையிருக்கும்
யானை யாரே! - நீர்
உலவிவரும் அழகு என்னே
யானை யாரே!

தூணைப் போலக் காலிருக்கும்
யானை யாரே! - அதைத்
தூக்கி வைத்து நடைபயிலும்
யானை யாரே!

முறத்தைப் போலக் காதிருக்கும்
யானை யாரே! - அதை
முன்னும் பின்னும் ஆட்டுவதேன்?
யானை யாரே!

துடைப்பம் போல வாலிருக்கும்
யானை யாரே! - உம்
தேவைக் கதுவும் உதவிடுமோ?
யானை யாரே!

பாடு.
1983

- கா. கவியபெருமாள்

## 498. வாழையும் தென்னையும்

ஓங்கி உயர்ந்தது தென்னைமரம்! - அங்கே
ஒதுங்கியே நின்றது வாழைமரம்!

காயென்று தந்தது தென்னைமரம்! - நல்ல
கனியென்று தந்தது வாழைமரம்!

ஈர்க்கென்று தந்தது தென்னைமரம்! - உண்ண
இலையென்று தந்தது வாழைமரம்!

மட்டையைத் தந்தது தென்னைமரம்! - நல்ல
பட்டையைத் தந்தது வாழைமரம்!

வாழையும் தென்னையும் போலுலகில் - நாம்
வாழ்ந்திட வேண்டியே பந்தலிலே

வாழையும் தென்னையும் கட்டுகிறார்; - நாம்
வாழ்ந்துமே காட்டிட வேண்டுமடா!

பாடு.
1983

- கா. கலியபெருமாள்

## 499. தேசிய நினைவுச் சின்னம்

நாடு வாழ உயிர்கொடுத்த
நல்லார் நினைவுச் சின்னம்!
தேடும் பெருமை யாவும்கொண்ட
தேச நினைவுச் சின்னம்!

அழகு சூழும் பூமலையில்
அகழி சூழ்ந்த சின்னம்!
உலகு புகழும் வனப்புடைய
உருவங் கொண்ட சின்னம்!

வீரங் காட்டும் மறவர்திறனை
 விளக்கிக் காட்டும் சின்னம்!
வேட்டை யாடிப் பகையழித்த
 வீரர் நினைவுச் சின்னம்!

எங்கள் நாட்டை நாங்கள்காக்க
 எண்ண மூட்டும் சின்னம்!
தங்கமான நமது நாட்டின்
 தலையை நிமிர்த்தும் சின்னம்!

பாடு. - கா. கலியபெருமாள்
1983

## 500. இன்றே கற்பாய்!

கற்றவர் வாழ்வில் சிறந்திடுவார்!
கல்லார் நாளும் இடர்ப்படுவார்!

அழியும் அறிவாய் பொருட்செல்வம்!
அழியா தென்றும் கலைச்செல்வம்!

இளமையிற் கற்றால் பதிந்திடுமே!
என்றும் மனத்தில் நிலைத்திடுமே!

பின்னர் வருந்திப் பயனில்லை!
இன்றே கற்பாய் உயர்வாயே!

த. நேசன் - தமிழ்ப்பாணன்
1987.2.16

# 501. தருவேன்

அ எடுத்தே அன்பைத் தருவேன்
க எடுத்துக் கண்ணொளி தருவேன்
ங எடுத்துத் தங்கம் தருவேன்
ச எடுத்துச் சக்கரம் தருவேன்
ஞ எடுத்து மஞ்சள் தருவேன்
ட எடுத்துப் பாடல் தருவேன்
ண எடுத்து மணக்கத் தருவேன்
த எடுத்துத் தண்ணீர் தருவேன்
ந எடுத்து நன்மை தருவேன்
ப எடுத்துப் பழக்குலை தருவேன்
ம எடுத்து மல்லிகை தருவேன்
ய எடுத்து முயலைத் தருவேன்
ர எடுத்து அரத்தைத் தருவேன்
ல எடுத்துப் பலகை தருவேன்
வ எடுத்து வடைகள் தருவேன்
ழ எடுத்துப் பழமே தருவேன்
ள எடுத்து அளந்து தருவேன்
ற எடுத்து முறத்தைத் தருவேன்
ன எடுத்து மனத்தைத் தருவேன்.

- பூ. முனியாண்டி

பூக்கள்
1976

# 502. வீறுகொண்டே எழுவோம்!

வீறுகொண் டேயெழுவோம் - ஆண்மை
விளங்க நெஞ்சினிலே!
பேறுகள் பெற்றிடுவோம் - தம்பி
பெற்றோர் மனங்குளிர!

இயற்கையி லேமயங்கித் - தம்பி!
இயற்றினர் அற்புதங்கள்!
முயல முயலத்தான் - வெற்றி
முன்வந்து நிற்குமடா!

எறும்பைப் போலுழைப்போம்; - பயன்கள்
எய்தித் திறம்பெறுவோம்;
கரும்புள் ளினைப்போலத் - தம்பி
கலந்தே வாழ்ந்திடுவோம்!

தக்க வழிநடப்போம்; - ஒரு
தாயின் பிள்ளைகள்போல்!
ஒக்க உழைத்திடுவோம்; - தம்பி
ஓர்குல மாயிருப்போம்!

த. கொடி
1941

- தேவிதாசன்

## 503. காது

இறைவன் வழங்கிய இருகாது
இரவும் பகலும் மூடாது!

இசையும் வசையும் பெறும்காது!
இதற்கே உலகில் இணையேது!

புத்தி மிகுந்தவர் தம்காது,
ஒட்டுக் கேட்பதை விரும்பாது!

அன்னையின் அறிவுரை கேளாது
அலட்சியம் செய்யும் வீண்காது!

உயர்ந்தவர் சொல்வதைத் தப்பாது
உற்றுக் கேட்கணும் உன்காது!

- க. து. மு. இக்பால்

## 504. கடற்கரை

ஆடை விரித்ததுபோல் - கடல்
அலையை விரித்தது; - மணல்
மேடை குளிர்ந்ததுபோல் - என்
மேனி குளிர்ந்தது!

பூக்கள் மிதப்பதுபோல் - நுரை
பொங்கிப் பரந்தது; - பகை
தாக்க வருவதுபோல் - அலை
தாவி எழுந்தது!

கட்டி யணைப்பதுபோல் - இளங்
காற்று வந்தது; - கை
கொட்டி நகைப்பதுபோல் - கடல்
குறும்பு செய்தது!

கரையைக் கடப்பதற்கே - கடல்
கருதி வந்ததோ? - கைத்
திரையை விரித்தபடி - எதனைத்
தேடிச் சென்றதோ?

- க. து. மு. இக்பால்

## 505. மருத்துவர்

பாட்டி தலைவலி என்றாளே!
பாயில் விழுந்து படுத்தாளே!
அவசர மாக மருத்துவரை
அப்பா அழைத்து வந்தாரே!

மருத்துவர் எங்கள் பாட்டிக்கு
மாத்திரை யொன்று கொடுத்தாரே!
உண்டதும் பாட்டியின் தலைவலியும்
ஓடிப் போனதே சிறுபொழுதில்!

வீட்டில் உள்ளோர் மருத்துவரை
வியந்து மிகவும் போற்றினரே!
நானும் மருத்துவர் ஆவதற்கே
நாட்டம் மிகவும் கொண்டேனே!

- க. து. மு. இக்பால்

## 506. படி

கற்றவர் சொல்லி வைத்தபடி - நீ
கடமையை ஒழுங்காய்ச் செய்துமுடி!

அன்னையும் தந்தையும் சொன்னபடி - நீ
அன்புடன் வாழ்வாய் சிறந்தபடி!

எப்படி எதனால் என்றபடி - நீ
எதையும் செய்வாய் தெளிந்தபடி!

துன்பம் விளைந்தால் நகைத்தபடி - நீ
தொடர்ந்தே செய்வாய் துணிந்தபடி!

உண்மையும் உறுதியும் கொண்டபடி - நீ
உயர்ந்திட வேண்டும் நல்லபடி!

- க. து. மு. இக்பால்

## 507. சிட்டு

சின்னஞ் சிறிய சிட்டு!
சிறகு சீனப் பட்டு!

கொத்தும் அலகு மூக்கு
கொண்ட தலைதான் பாக்கு!

பவள வண்ணக் கால்கள்!
பாதி மல்லிக் கண்கள்!

சின்னஞ் சிறிய சிட்டு!
சிறகு சீனப் பட்டு!

மழை
1984

- பரணன்

## 508. கடல்

நீலக் கடலே! நீலக் கடலே!
நீஏன் இரைகின்றாய்?

நித்திரை என்பது சிறிதும் இலையோ
அதுஏன் உரைநன்றாய்?

காலைக் கதிரின் ஒளியில் அலைகள்
தங்கப் பாளங்கள்!

கவரும் முத்துக் கடல்நீ இயற்கைக்
கவிதைக் கோலங்கள்!

மழை
1984

- பரணன்

## 509. நாள்காட்டி

எந்த நாளில் நான்பிறந்தேன்?
எந்த நாளில் நீபிறந்தாய்?
அந்த நாளை நன்குகாட்டும்
அருமை யான நாள்காட்டி![2]

---

*2 நாள்காட்டி - காலண்டர்*

எந்த நாளில் பள்ளிசென்றேன்?
எந்த நாளில் பாடம்கற்றேன்?
அந்த நாளை இனிதுகாட்டும்
அருமை யான நாள்காட்டி!

எந்த நாளில் நாம்இசைத்தோம்
இனிய தான விடுதலைப்பண்?
அந்த நாளை என்றும்காட்டும்
அருமை யான நாள்காட்டி!

மழை
1984

- பரணன்

## 510. ஆசிரியர்

பாடம் கற்றுத் தருவார்
படங்கள் வரையச் செய்வார்

பாட்டும் கதையும் சொல்வார்
பண்பை நெஞ்சில் பெய்வார்

பாண்டி நீசொல் யாரவர்?
பாரதி நீசொல் எவரவர்?

மழை
1984

- பரணன்

## 511. சேவலே!

சேவலே நல்ல சேவலே!
செக்கச் சிவந்த சேவலே!
கூவித் தினமும் காலையில்
கொண்ட தூக்கம் நீக்குவாய்!

கூரை மேலே ஏறியே
கொக்க ரித்து நீதினம்
யாரைக் கூவி அழைக்கிறாய்?
எனக்குத் தெரியச் சொல்லுவாய்!

பூங்கா.
1977

- எல். எம். பகதூர்

## 512. பூரான்

பூரான் சாதியே வா!வா!வா!
பொழுது வந்தது வா!வா!வா!
சுருண்டே நீயும் படுக்காதே
துளியும் பயமே கொள்ளாதே

ஆயிரம் ஆயிரம் சிறுகால்கள்
ஆரே உனக்குத் தந்தவர்கள்?
ஆயிரம் காலில் முள்தைத்தால்
ஐயோ எத்தனை நோவாகும்?

உருக்குச் சக்கர ரயிலைப்போல்
ஒழுங்காய்த் தரைமேல் செல்கின்றாய்
செருப்புச் சோடுகள் வேண்டாவோ?
சின்னக் கால்கள் வலியாவோ?

த. முரசு
1970.3.9

- எல். எம். பகதூர்

## 513. மேகமே!

ஓடி மறையும் மேகமே!
உன்றன் நீரைத் தந்திடு;
வாடிச் சோர்ந்த பயிரெலாம்
வளர்ந்து செழிக்கச் செய்திடு!

ஊரி லுள்ள நாங்களும்
உண்டு வாழ வேண்டுமே!
ஏரி குளங்கள் யாவையும்
இறங்கி வந்து நிரப்புவாய்!

பூங்கா. - எல். எம். பகதூர்
1977

## 514. வான்மழையே வா!

காடு மரங்கள் செழித்திடவும்
கழனி யாவும் நிறைந்திடவும்
வாடும் பயிர்கள் தழைத்திடவும்
வாராய் வான மாமழையே !

ஏரி குளங்கள் நிரம்பிடவும்
எங்கும் பசுமை தோன்றிடவும்
மாரி என்னும் பெயர்கொண்ட
மழையே நீயும் பெய்திடவா !

நீயில் லாத ஊர்மக்கள்
நிலையில் லாது போய்விடுவர்
தாயில் லாத சேயுண்டோ?
தண்ணீ ரில்லா வாழ்வுண்டோ?

தேன். - முத்துமாணிக்கம்
1987

## 515. விண்மீன்

சின்னச் சின்ன விளக்கு!
சிந்தை யள்ளும் விளக்கு!
பொன்னின் மணிகள் போலப்
பொலியும் வண்ண விளக்கு!

கண்கள் சிமிட்டும் விளக்கு!
கணக்கி லடங்கா விளக்கு!
எண்ணெய் இன்றி எரியும்
இறைவன் வீட்டு விளக்கு!

1985.5.27

- அமலதாசன்

## 516. கல்

மண்ணைச் சுட்டால் சிவப்புக்கல்;
மலையில் கிடைக்கும் கறுப்புக்கல்;
கண்ணைப் பறிக்கும் வைரக்கல்;
கடலும் கொடுக்கும் உப்புக்கல்!

பெருக்கல் எதிலும் நலம்பாப்பா;
பிணங்கல் சுணங்கல் குறைபாப்பா;
கருக்கலில் விழிப்பாய் உலகத்திலே
கல்கல் இளமைக் காலத்திலே!

- முருகதாசன்

## 517. எதுகைப் பாடல்

உழைப்பில் கிடைப்பது பணம்!
உறவினை வளர்ப்பது குணம்!
அழிவினை அளிப்பது சினம்!
அன்றாடம் என்பது தினம்!

உள்ளத்தில் பிறப்பது ஊக்கம்!
ஊக்கம் தளர்ந்தால் தேக்கம்!
மனத்தில் எழுவது ஏக்கம்!
மாண்புடன் செய்திடில் ஆக்கம்!

- சுப. கணேசன்

## 518. முழுநிலா

வட்டத் தட்டுப் போலே வானில்
வந்து தித்த நிலவைப்பார்!
பொட்டுப் பொட்டாய் அதனைச் சுற்றிப்
புன்னகை புரியும் மீன்கள்பார்!

கன்னங் கரிய இருள கற்றிக்
கவலை ஓட்ட வந்தநிலா!
சின்னக் குழந்தை சிரித்து மகிழச்
சிந்தும் குளுமை ஒளியைப்பார்!

நீலக் கடலில் ஊர்ந்து செல்லும்
ஜாலம் மிக்க ஓடம்போல்
ஞாலம் வியக்க ஊர்ந்து செல்லும்
கோலம் இங்கே வந்துபார்!

கறுப்பு வெள்ளை மேகம் யாவும்
காணக் கிடக்குது மேலேபார்!
கவலை ஏதும் இல்லா தவற்றைக்
கடந்து செல்லும் தீரம்பார்!

முழுநிலா
1960

- மு. கந்தன்

## 519. தமிழ்

சீனி நெய்பால் கோதுமை
சேர்த்துச் செய்யும் அல்வாபோல்
ஆன மட்டும் நம்தமிழை
அள்ளி அள்ளி உண்டிடலாம்!

தமிழைப் போல இங்கிதமும்
தெளிவும் பெற்றது வேறில்லை;
குமுறும் கடலைத் தாண்டியுமே
கோட்டை கட்டிய மொழிதமிழே!

வையம் போற்றும் பலநூல்கள்
வழங்கிய மொழியும் தமிழாகும்;
கையைப் போல உனக்குதவும்
கவனம் கொண்டு படிதம்பி!

கத்திக்.
1961

- கவி மதிதாசன்

## 520. பெருமையோடு வாழ்ந்திடுவோம்!

ஆய கலைகள் அறிந்திடுவோம்!
அறிவு நூல்கள் பயின்றிடுவோம்!
தூய எண்ணம் கொண்டிடுவோம்!
துடிப்பாய்ப் பணிகள் ஆற்றிடுவோம்!

கற்றவை நினைவில் பதித்திடுவோம்!
கல்லார் நட்பை ஒதுக்கிடுவோம்!
பெற்றோர் மகிழ உயர்ந்திடுவோம்!
பெருமை யோடு வாழ்ந்திடுவோம்!

- எஸ். எஸ். மணிமாறன்

## 521. எறும்பும் பையனும்

சிறுவன் : சுறுசு றுப்பாய் எங்குமீநீ
சுற்றுவ தேனோ எறும்பேசொல்?

எறும்பு : கரும்பும் சீனியும் கற்கண்டும்
விரும்பித் தேடிப் போகின்றேன்.

சிறுவன் : இரவும் பகலும் பாராமல்
இத்தனை வேகம் ஏனோசொல்?

எறும்பு : பரவும் பண்டம் அத்தனையும்
பத்திர மாகச் சேர்த்திடவே!

சிறுவன் : மண்ணில் வாழும் எறும்பேநீ
மனிதனுக் கென்ன கூறுகிறாய்?

எறும்பு : என்னைப் போல மனிதாநீ
என்றும் நன்றாய் உழைத்திடுவாய்!

மலே. கல்.
1974.2.7

- க. லோகநாதன்

## 522. கலைமகளே!

வெண்தா மரையில் இருப்பவளே!
வீணை கையிற் பிடிப்பவளே!

நல்லவர் உளத்தில் திகழ்பவளே!
ஞானச் சுடரொளி தருபவளே!

இசையின் பொருளாய் ஒளிர்பவளே!
எம்மை ஆளும் கலைமகளே!

- த. தையல்நாயகி

## 523. பள்ளி வாழ்க்கை

போனால் வருமோ பள்ளி வாழ்க்கை
புரிந்து கொள்வாய் தம்பி!
தேனாய் இனிக்கும் கல்விச் செல்வம்
தேடிக் கொள்வாய் தம்பி!

வீணாய்க் காலம் ஓடிட நீயும்
வெம்பி விடாதே தம்பி!
மானாய்த் துள்ளி வாழ்வில் உயர
வழிகள் அறிவாய் தம்பி!

1980

- பெ. மு. இளம்வழுதி

## 524. காலம் நின்றிடுமோ?

காலம் என்ன நின்றிடுமோ?
காத்தி ருந்து சென்றிடுமோ? (காலம்)

ஆளும் அரசன் ஆனாலும்,
ஆட்சி சட்டம் போட்டாலும்,
வேலை நிறையக் கிடந்தாலும்,
வேண்டி வேண்டி நின்றாலும் (காலம்)

கூலி கொடுப்பேன் என்றாலும்,
கூவிக் கூவி அழுதாலும்,
நாளும் பூசை செய்தாலும்,
நன்மை பலவும் புரிந்தாலும் (காலம்)

அள்ளி யள்ளித் தந்தாலும்,
அச்சம் ஊட்டித் தடுத்தாலும்,
செல்ல மாகச் சொன்னாலும்,
சிரித்தே அணைக்க முயன்றாலும் (காலம்)

இருக்கும் நாளோ சிலநாளாம்
இதனை எண்ணி வாழ்வினிலே
விரைவாய்ப் பணிகள் ஆற்றிடுவாய்!
வெற்றி பெற்றே சிறந்திடுவாய்!

த. நேசன் - ஜோசப் செல்வம்
1971.1.4

## 525. வாழ்ந்துகாட்டு தம்பி!

படிப்பு வேண்டும் பண்பு வேண்டும்
பக்தி வேண்டும் தம்பி!
துடிப்பு வேண்டும் தூய்மை வேண்டும்
துணிவு வேண்டும் தம்பி!

அக்கறை யோடு பயின்றால் நாளும்
அறிவு கூடும் தம்பி!
அக்கரை போற்ற வாழ நீயும்
ஆர்வம் காட்டு தம்பி!

அன்னை தந்தை உற்றார் நண்பர்
அன்பு வேண்டும் தம்பி!
உன்னை அவர்கள் வாழ்த்த வாழ்வில்
உயர்வாய் நீயும் தம்பி!

இறைவன் ஒருவன் என்றே நெஞ்சில்
எண்ணி நடப்பாய் தம்பி!
மறைகள் கூறும் நெறியைப் பற்றி
வாழ்ந்து காட்டு தம்பி!

- நாணல்

## 526. தீராத் துன்பம்

சீழ்க்கை அடித்தே அழைப்பதுவும்,
சிடுசிடு வென்றே பேசுவதும்,
கீழ்மைச் சூது விரும்புவதும்
கெடுக்கும் உன்னை அறிந்திடுநீ!

சண்டை வீணில் போடுவதும்,
கிண்டல் கேலி பேசுவதும்,
உண்ட வீட்டில் திருடுவதும்
உன்னை அழிக்கும் அறிந்திடுநீ!

புறமே கூறித் திரிவதுவும்,
பொறாமை மனத்தில் கொள்வதுவும்,
சிறுமை சேர்க்கும் வாழ்வினிலே
தீராத் துன்பம் தந்திடுமே!

த. நேசன்

- இரா. இராகவன்

## 527. கேளீர்! பாரீர்!

அரிமா முழங்குதல் கேளீர்! - அதன்
ஆண்மை நடையினைப் பாரீர் !
நரிமா ஊளையைக் கேளீர்! - அதன்
நயவஞ் சகச்செயல் பாரீர்!

ஆனை பிளிறுதல் கேளீர்! - அதன்
அறிவும் ஆற்றலும் பாரீர்!
பூனை சீறுதல் கேளீர்! - அது
புரிந்திடும் குறும்பினைப் பாரீர்!

மயிலின் அகவுதல் கேளீர்! - அதன்
வண்ண மேனியைப் பாரீர்!
குயிலின் கூவுதல் கேளீர்! - அதன்
கொஞ்சும் அன்பினைப் பாரீர்!

கிளியின் கீச்சொலி கேளீர்! - அதன்
கிளர்ந்தெழும் அழகினைப் பாரீர்!
புலியின் உறுமலைக் கேளீர்! - அதன்
பொல்லாச் செயல்களைப் பாரீர்!

த. நேசன்

- மு. திருவேங்கடம்

## 528. தூய்மை சேர்ப்பேன்!

ஊருக்கு நன்மை செய்வேன் - என்
உழைப்பினை அறியார் யாரே?
யாருக்கும் பெருமை சேர்க்கும் - என்
பணியினைப் போற்றார் எவரே?

நாள்தொறும் நாற்றம் சுமப்பேன் - வீட்டில்
நறுமணம் கமழ்வதும் என்னால்;
தாழ்வென எண்ண வேண்டா - அறிவீர்
சாக்கடை என்றன் பெயரே!

எச்சிலை அழுக்கு நீரைத் - துண்டு
எலும்புடன் கழிவினை எல்லாம்
உச்சியில் சுமந்தே செல்வேன் - இவ்
வுலகினில் தூய்மை சேர்ப்பேன்!

- ஆ. கிருஷ்ணசாமி

## 529. பொம்மை

சின்னச் சின்ன பொம்மை!
சிரிக்கும் ஊமைப் பொம்மை!
வண்ண வண்ணப் பொம்மை!
வாங்கி வந்த பொம்மை!

கையும் காலும் ஆட்டும்!
கடைக்குச் செல்லாப் பொம்மை!
பையைத் தூக்கி நிற்கும்!
பள்ளி செல்லாப் பொம்மை!

கண்ணைக் கண்ணைச் சிமிட்டும்!
காட்சி காணாப் பொம்மை!
உன்னை என்னைப் பார்க்கும்!
உயிரே இல்லாப் பொம்மை!

தம்பி தங்கை கையில்
தாளம் போடும் பொம்மை!
சும்மா இருந்து விட்டால்
சோம்பிக் கிடக்கும் பொம்மை!

- தமிழ்ப்பித்தன்

த. நேசன்
1974.6.6

## 530. பறவைகள் போல...

சேவல் போலக் காலையில்
சீக்கிர மாக எழுந்திடு!

சிட்டுப் போலச் செயல்களைச்
சுறுசு றுப்பாய் ஆற்றிடு!

குயிலைப் போல இனிமையாய்க்
கீதம் பாடிக் களித்திடு!

கிளியைப் போலக் கனிவுடன்
கொஞ்சிப் பேசி மகிழ்ந்திடு!

திருமகள் - ந. மகேசுவரி

## 531. சிட்டுக்குருவி பறந்துவா!

சிட்டுக் குருவி பறந்துவா!
பட்டுச் சிறகை விரித்துவா!
பொட்டுக் கடலை இறைக்கிறேன்;
கொத்தித் தின்னப் பறந்துவா!

எங்கள் வீட்டுக் கோழிக்குப்
பறக்கச் சொல்லித் தரவேண்டும்;
இங்கே கொஞ்சம் பறந்துவா!
இறக்கை விரித்துப் பறந்துவா!

தொடக்க. (முதலாம் ஆண்டு) - காரைகிழார்
1982

## 532. தகுதியை வளர்த்துக்கொள்

காலைக் கதிரவன் எழுமுன்னே - நீ
கண்விழித் திடுவாய் என்தம்பி!
காலைக் கடன்கள் முடித்துடனே - உன்
கடமைகள் தொடர்வாய் என்தம்பி!

ஓய்வை வீணாய்க் கழிக்காமல் - நீ
ஒவ்வொரு நொடியையும் பயன்படுத்து!
தாயும் தந்தையும் பெருமையுற - உன்
தகுதியை வளர்த்துக் கொள்தம்பி!

- ச. வீ. கலைச்செல்வன்

## 533. விமானம்

வானில் பறந்து செல்லும்
வண்ணப் பறவை போலே
நானும் பறந்து செல்வேன்
நான்கு திசையும் வெல்வேன்!

காடும் மலையும் தாண்டிக்
கடலின் மேலே பறப்பேன்;
நாடும் நகரும் தாண்டி
நளின மாகப் பறப்பேன்!

தொடக்க. (மூன்றாம் ஆண்டு)
1983

- தம்பாய் ஆ. முனியாண்டி

## 534. பேரரசர் வாழ்க!

ஆற்றல் நிறைந்த பேரரசர்!
அவரே நாட்டின் பெருந்தலைவர்!
போற்றிட ஆட்சி புரிகின்றார்;
புகழுடன் அவரும் விளங்குகிறார்!

எல்லார் நெஞ்சிலும் நிறைந்துள்ளார்;
இடர்களைப் போக்க முயல்கின்றார்!
நல்லவ ரென்றே உலகோரும்
நாளும் போற்ற ஆளுகின்றார்!

கண்ணிய முள்ள பேரரசர்
கருணை யுள்ளங் கொண்டவராம்;
பண்புடன் நாளும் போற்றிடுவோம்
பல்லாண் டவரும் வாழியவே !

- ஏ. டி. சமாதானம்

த. நேசன்
1983

## 535. நாய்க்குட்டி

பாலைக் குடிக்கும் நாய்க்குட்டி!
பழகும் அன்பு நாய்க்குட்டி!
வாலை ஆட்டும் மகிழ்வாலே!
வாசல் காக்கும் திறமோடே!

அன்பை என்றும் மறவாதே!
அல்லல் வரினும் அஞ்சாதே!
நன்றி போற்றும் உயிரதுவாம்!
நமது வீட்டின் காவலனாம்!

- ஏ. டி. சமாதானம்

சிறுவர்.
1983

## 536. சிரித்துப் பள்ளி சென்றிடு!

சிட்டுக் குருவி பறக்குதே;
சிறகை அடித்துப் பறக்குதே;
பட்டுப் போன்ற அதனுடல்
பார்க்க இன்பம் பெருகுதே!

தத்தித் தத்தி ஓடுதே;
தாவித் தாவிக் குதிக்குதே;
கொத்திக் கொத்தி நெல்லினைக்
குனிந்து குனிந்து தின்னுதே!

சிட்டுப் போலப் பறந்துநீ
சிரித்துப் பள்ளி சென்றிடு!
கெட்டித் தனமாய்ப் படித்துநீ
கேட்போர் வியக்க உயர்ந்திடு!

- சி. முனியாண்டி

ஆ. தீ.
1975/1976

## 537. அன்னாசி

முரட்டுத் தோலைக் கொண்டது!
முழுதும் செதில்கள் நிறைந்தது!
திருடும் அணில்கள் கூடவே
தின்னத் தயங்கும் பழமது!

பழத்தின் உச்சி தன்னிலே
பசிய இலைகள் இருந்திடும்!
பழுத்த உடனே பொன்னிற
வண்ணம் தோலில் படர்ந்திடும்!

கத்தி எடுத்தே தோலினைக்
கழித்தெ றிந்தால் மிகமிகத்
தித்திப் பான பழச்சதை
திரண்டி ருக்கும் மஞ்சளாய்!

வாயில் வைத்துக் கடித்திடின்
வடியும் இனிப்பு நீர்மிக!
ஓயும் வரைக்கும் உண்ணலாம்!
உரைப்பேன் அதுதான் அன்னாசி!

- அதிகைமணி

## 538. திருட்டு முருகன்

முருகன் என்பான் ஒருநாள் இரவில்
டுரியான்[3] பழங்கள் திருடப் போனான்!

மரத்தின் அடியில் இருகால் எதிலோ
விருட்டென் றேறச் சுருக்கென் றதுவே!

இருட்டு நேரம்! திருட்டு முருகன்
புரட்டு விழிகள் உருட்டிப் பார்த்தான்!

வருடிப் பார்த்தான்; உருண்டை உருவம்
திரண்ட முட்கள் டுரியான் பழமோ.....?

விடுத்தான் கவலை! எடுத்தான் அதனை!
அடைத்தான் பையில்! நடந்தான் விரைவாய்!

வீடு வந்து விளக்கைப் போட்டு
வெளிச்சந் தன்னில் விரித்தான் பையை!

மெள்ளப் பையின் உள்ளே இருந்து
துள்ளி வந்ததே முள்ளம் பன்றி!

த. நேசன்
1964.8.17

- அதிகைமணி

---

*3 டுரியான் - முரட்டு முள்நிறைந்த தோட்டுடன் கூடிய சிறிய பலாப்பழ வடிவிலான பழம்.*

# 539. கவலை ஏனோ தவளையாரே?

சிறுவன் : தவளையாரே! தவளையாரே!
சற்று நில்லுமே! - மிகக்
கவலையோடு செல்வதெங்கே?
கனிவாய்ச் சொல்லுமே!

தவளை : படமெடுத்தே ஆடும்நல்ல
பாம்பு தன்னொடு - போர்
இடுவதற்கே செல்லுகின்றேன்!
வருவாய் என்னொடு!

சிறுவன் : நல்லபாம்பு தன்னுடன்போர்
நடத்தச் செல்வதேன்? - அதற்கு
விள்ளுவீரே காரணத்தை
விரைவு கொள்வதேன்?

தவளை : பிழையொன்றும் செய்திடாத
என்றன் பிள்ளையை - அது
விழுங்கிவிட்டுச் சென்றதனால்
விளைந்த துன்பமே!

சிறுவன் : பாம்பைக்கண்ட உமதுபிள்ளை
பதுங்கி இருக்குமேல் - அதை
வீம்புடனே பாம்புநன்றாய்
விழுங்கி இருக்குமோ?

கெட்டவர்கள் வழியைவிட்டே
எட்டி இருப்போமேல் - துன்பம்
எட்டியெட்டி ஓடிவிடும்!
இதனை அறிவீரே!

திமிறிப்போனால் உமையும்பாம்பு
தீர்த்துக் கட்டுமே - அந்த
நமனைவிட்டே வீட்டைநோக்கி
நடையைக் கட்டுமே!

த. நேசன்
1964.4.8

- அதிகைமணி

## 540. தாய்கோழியின் கதை

நான்வ ளர்த்த பெட்டைக் கோழி
நான்கு முட்டை இட்டது;

இட்ட நான்கு முட்டை மேலே
இனிதே அவயம்[4] காத்தது;

அவயம் காத்து மூன்று குஞ்சு
அழகு கொஞ்சப் பொரித்தது;

பொரித்த மூன்று கோழிக் குஞ்சில்
பூனை ஒன்றைத் தின்றது;

ஒன்றை இழந்த பின்னே இரண்டை
உறுதி யோடு காத்தது;

காத்து வந்த இரண்டில் ஒன்றைக்
காக்கை தூக்கிச் சென்றது;

தூக்கிச் சென்ற குஞ்சை எண்ணித்
துன்பம் மிகவும் கொண்டது;

கொண்ட துன்பம் மெல்ல மறந்து
குஞ்சு ஒன்றை வளர்த்தது;

வளர்த்து வந்த அந்தக் குஞ்சை
வழியில் நாயும் பார்த்தது;

பார்த்த நாயும் கணத்தில் கவ்வப்
பார்த்துக் கோழி அழுதது!

அழுது கொண்டே எங்கள் வீட்டை
அடைந்து தரையில் படுத்தது;

படுத்து விட்ட அதனைப் பார்க்கப்
பாவ மாக இருந்ததே !

1983

- முரசு. நெடுமாறன்

*4 அவயம் காத்தல் - அடைகாத்தல்*

## 541. புத்தியுள்ள சின்னப் பையன்

சின்னப் பையன் கடைக்குப்போய்ச்
சீனி வேண்டும் ஒருகட்டி[5]
என்று கேட்டான், கடைக்காரன்
எடையைக் குறைத்துத் தந்தானாம்

“கனந்தான் குறைவாய் இருக்கிறதே
காரணம் என்ன?” என்றிடவே
பணப்பே ராசை கொண்டவனும்
பாரமா யிருக்கா தென்றானாம்

பாதிக் காசைப் பையனவன்
பளிச்சென் றெடுத்துத் தந்திடவே
“ஏதடா தம்பி குறைகிறதே
இன்னும் பணம்தா“ என்றானாம்

“குறைந்தால் எண்ணச் சுலபந்தான்
குட்பை” என்றே நடந்தானாம்
முறைத்துப் பார்த்த கடைக்காரன்
மூக்கில் விரலை வைத்தானாம்!

- சி. வேலுசுவாமி

அருள்.
1977

## 542. கயவர் நெஞ்சில் பரிவு ஏது?

இரவு முழுதும் பேய்மழை
இரக்க மின்றிப் பெய்யவே
குரங்கு ஒன்று குளிரினால்
கூனிக் குறுகி நின்றதே!

குளிரைப் போக்கும் நோக்குடன்
குரங்கின் எண்ணம் செல்கையில்
வெளிச்சம் காட்டி மின்மினி
மேலும் கீழும் பறந்ததே!

---

*5 கட்டி - 600 கிராம் எடை அளவு*

ஒளியைச் சிந்தும் பூச்சியின்
ஓரம் சென்ற வானரம்
குளிரை ஓட்ட எண்ணியே
குதித்துத் தாவிப் பிடித்ததே!

மின்மினி தன்னைப் பிடித்ததும்
விறகி னடியில் வைத்ததே
பன்முறை ஊதி ஊதியே
பற்ற வைக்க முனைந்ததே!

குரங்கு செய்த செய்கையைக்
கூர்ந்து பார்த்த காகமும்
'பறக்கும் பூச்சி மின்மினி!'
பாவம் அதனை வதைப்பதேன்?

நெருப்பு மங்கே கிடைக்குமோ?
நெடிய குளிரும் தீருமோ?
இருப்பி டத்தை விட்டுநீ
எதற்குக் குளிரில் அலைகிறாய்?"

என்று காகம் அறிவுரை
இணக்க மாகக் கூறவே
சென்ற பாதை தவறெனச்
சிறிதும் எண்ணா வானரம்

அறிவு சொன்ன பறவையின்
அழகு காலைப் பற்றியே
பெரிய பாறைக் கல்லிலே
பிடித்து அடித்துக் கொன்றதே!

கயவர் நெஞ்சில் அறிவுரை
காலம் முழுதும் ஊட்டினும்
வயலில் வளரும் விழலுக்கு
வார்த்த நீர்போ லாகுமே!

பரிவே இல்லார் கயவராம்;
பட்டால் தானே உணருவார்!
அறிவை விரும்பும் மக்களை
அணைத்து நாளும் திருத்துவீர்!

- சோமசன்மா

# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்

"குளிப்பவர்கள், ஆங்கே குமரியர்கள் கோலம்
அளிப்பதனைக் கண்டே அகத்தில் · களிப்பவர்கள்
நண்ணும்போர்ட் டிக்சன் நகரழகைக் காண்பதற்குக்
கண்ணிரண்டும் போதாவே காண்!"

- சீ. மா. இளங்கோ




பல்சுவை

# 543. தட்டச்சுப்பொறி பட்ட கதை

தட்டாக நெஞ்சையும் தமிழாக எழுத்தையும்
வெட்டிஎன் உடலமைத் திட்டார் - சொல்
தட்டாத தமிழிலே தட்டச்சுப் பொறி[1]யென
இட்டமாய்ப் பெயரெனக் கிட்டார்.

எட்டோடும் ஒன்பதாய் எனைப்பணி மனையிலே
இட்டவர் யாரையோ சுட்ட - ஒரு
கட்டான ஆண்மகன் கரத்திலே காகிதக்
கட்டோடு வந்தான்என் கிட்ட.

கட்டுக்குள் இருந்தவோர் காகிதத் தையவன்
நட்டான்என் உருளைமேல் சுற்றத் - தன்
கெட்டித்த விரல்களால் 'பட்டுப்பட் பட்'எனத்
தட்டினான் என்மூச்சு முட்ட.

தட்டினான் நாளெலாம் தட்டினான் தொடர்ந்தவன்
தட்டாத நாள்மழை கொட்டும்! - தினம்
தட்டினான் தட்டினான் தட்டிய தட்டில்என்
தட்டே அதிர்ந்திடும் மட்டும்.

பட்டாலும் பட்டேன்இப் படுபாவி கைகளில்
பட்டதைப் போலெங்குப் பட்டேன்? - உடல்
கெட்டாலும் கெட்டேன் கிலிதரும் அவன்விரல்
பட்டநாள் முதல்எழில் கெட்டேன்.

பட்டாலும் புண்செயும் பாறைபோல் கையனைக்
கட்டோடு தொலைத்துநாள் எட்டு - விரல்
தொட்டாலும் பண்செயும் தொடியுடன் வந்தெனைத்
தொட்டனள் ஓரிளஞ் சிட்டு!

பொட்டோடும் மின்னகை வெட்டோடும் கலைஎழில்
சொட்டிடும் அவளுடல் பட்டு! - குழல்
கட்டாட முகத்திலே கனிவாட எனைமெலத்
தட்டிடும் அவள்விரல் மொட்டு!

---

*1 தட்டச்சுப்பொறி - டைப்ரைட்டர்*

தட்டுக்குத் தட்டவள் தரும்சுகம் அம்மம்ம!
திட்டமாய் உயிருள்ள மட்டும் - நான்
கெட்டாலும் வாழ்ந்தாலும் கிறுக்காகிப் போனாலும்
எட்டாதே என்நெஞ்சை விட்டு.

கட்டுடல் மங்கையின் கைவிரல் உறவிலே
கிட்டாத சுகமெலாம் கிட்ட - அந்த
மட்டிலா இன்பிலே மதிஇழந் தென்மனம்
கட்டாத கோட்டைகள் கட்ட

எட்டாத என்நிலை எண்ணியே ஏனைய
தட்டச்சுப் பொறிகளின் கெட்ட - மனம்
கொட்டாத சினத்துடன் குமைந்திடத் தினம்தினம்
'கெட்டொழி' என்றெனைத் திட்ட

பட்டாளத் தடியனாய்ப் பக்கத்தில் வந்தவோர்
துட்டனின் உடலெனை முட்ட - நான்
தட்டாடித் தடுமாறித் தரையிலே விழுந்தேனென்
தட்டுள்ள எழுத்தெலாம் கொட்ட.

கட்டோடு வாழ்ந்தவர் 'கட்டை'யில் போவதைக்
கெட்டவன் கண்டுகை தட்டும் - அந்தக்
கட்டத்தில் இரும்படி கடையிலே எனைவிலைக்
கிட்டனர் யாதுசெய் யட்டும்?

த. நேசன் - செ. சீனி நைனாமுஹம்மது

## 544. மெய்மை வாழ்வு

புத்தம் புதிய உலக மொன்றைப் பார்க்கப் புறப்பட்டேன்;
புடவி யெங்கும் தேடிக் கோடி ஆண்டு அலைந்திட்டேன்;
வட்ட மிட்டு வட்ட மிட்டு வாடி இளைத்திட்டேன்;
திட்ட மிட்டு அண்டம் எங்கும் விளங்கத் துடித்திட்டேன்!

பண்டு இந்த அண்ட வெளியில் பரிதி மண்டலம்
விண்டு ரைத்தோர் ஒப்புக் காட்ட ஒண்ணுமோ? சிறிய
துண்டு ஒன்று டைந்து கோடித் துகள்க ளானதைக்
கண்ட துண்டோ? துகளி லணுவைக் காணும் உலகினில்!

வந்து மெல்லக் குழவி யாக நொந்து பிறந்திட்டேன்;
தந்தை என்று தாயு ணர்த்தச் சொந்தம் கொண்டிட்டேன்;
விந்தை இந்த உலகில் தங்கிச் செல்லும் காலமே
என்றன் உறவு! என்றன் செல்வம்! என்றன் வாழ்வென்பேன்!

- அ. பு. திருமாலன்

## 545. இன்பமேது?

தோட்டத்தில் ஓரிரண்டும் துணிகள் நெய்யும்
தொழிற்சாலை களிலைந்தும் பெற்று மக்கட்
கூட்டத்திற் சிறப்போடு வாழ்ந்தான்; பின்பு
கூடாத வம்பினொடு வழக்கி லேயும்
தேட்டத்திற் பெரும்பகுதி போச்சே என்று
திடமிழந்தான் ஏழடுக்கு வீடே மிச்சம்
வாட்டத்தைப் போக்கவிது போது மென்ற
மதியின்றித் தற்கொலையால் மாண்டே விட்டான்.

இன்னொருவன் ஆயிரந்தான் சம்ப ளம்பெற்
றிருந்தாலும் குடித்தனத்தை நடத்த லின்றிப்
பின்னொருநாள் தந்திடுவேன் என்று சொல்லிப்
பிறரிடத்திற் கடன்வாங்கிச் செலவ ழித்தான்;
சொன்னபடி அக்கடன்தீர்க் காத தாலே
சொல்லிழுக்கும் தொல்லைகளும் மிகவே யாகித்
தன்னருமை மனைவியொடு மக்கள் விட்டுச்
சாகாமல் செத்தெங்கோ ஓடிப் போனான்.

இத்தகைய செய்திகள்நா ளிதழ்கள் தம்மில்
எத்தனையோ தடவைகளில் வந்த துண்டு;
சத்தான வள்ளுவமும் இவர்க ளைத்தான்
சரியான பதர்களென இடித்துக் காட்டும்.
எத்துணையும் துன்பமதைப் பொறுக்கொ ணாத
இத்தகைய கோழைகளும் இருக்கும் போது
சித்தமெலாம் இரும்பாகிச் செயல்கள் செய்யும்
சிறுகுடும்பத் தலைவனுடை வீரங் கேட்பீர்!

குன்றொழித்து வழியமைக்கும் வேலை தன்னைக்
குத்தகையா யெடுத்திருந்தார் பூதன் என்பார்;
நன்றொழிக்கும் வறுமையிலே வாடும் வேலன்
நாளெல்லாம் அவரிடத்தில் உழைத்து வந்தான்;

கொன்றொழிக்க வருபடைகள் ஈட்டி வில்வாள்
குண்டுகளால் தாக்கிடினும் அவற்றை யெல்லாம்
வென்றொழிக்கும் நம்நாட்டு வீரர் போல
வேலைசெயும் கூலியையன் றன்றே பெற்று,

தன்றாயைத் தந்தையினை மனைவி யோடு
தன்மக்கள் தமையெல்லாம் காத்து வந்தான்;
ஒன்றேனும் விற்பதற்குப் பொருளே யில்லான்;
உடலொன்றே உடைமையெனக் கொண்டோன்; ஓர்நாள்
நன்றாகத் தூங்கவிலை நடுச்சா மத்தில்
நடுக்குகின்ற குளிர்காய்ச்சல் வந்த தாலே;
அன்றேனும் ஓய்வுறலாம் என்றால் சற்றும்
அவன்குடும்ப நிலையதனுக் கிசைய வில்லை.

அதனாலே விடிந்ததும்வே லைக்குச் சென்றான்;
அங்கிருந்த மண்வெட்டி தனையெ டுத்தான்;
"உதவாத காய்ச்சலேநான் உனக்கென் செய்வேன்?
உனக்கான மருந்துண்டா என்னி டத்தில்?
இதமான போர்வையுண்டா? கட்டி லுண்டா?
இரண்டுநாள் ஓய்வுகொள வழிதா னுண்டா?
எதனாலும் நலமடையாய்; ஆகை யாலே
இன்றேநீ ஓடிப்போ! ஓடா விட்டால்,

மண்ணைத்தான் வெட்டிடுவேன்" என்று சொல்லி
மலைக்காமல் வெட்டுகிறான்; வெட்டிக் கொண்டே
'கண்ணொத்த குடும்பத்தைக் காக்கின் றோம்யாம்'
என்றவனும் கருதுகிறான்; அந்த நேரம்
எண்ணத்தில் இன்பங்கள் ஊற்றெ டுக்க
இருந்துவந்த குளிர்காய்ச்சல் ஓடக் கண்டான்!
விண்ணொத்த பொருள்தேடிக் குவித்தா லும்இவ்
வேலனுடைத் திடமிலையேல் இன்ப மேது?

- அ. பெரியராமு

# 546. சென்றவிட மெல்லாம் சிறப்பு

நாடு செழித்தோங்கி நல்லரசு மேலோங்கப்
பாடுபடு மக்கள் பலனடைய - ஓடோடி
நன்கு செயல்புரியும் நற்றலைவன் துங்குக்குச்
சென்றவிட மெல்லாம் சிறப்பு.

த. முரசு
1961.1.8

- சே. சு. முருகேசு

# 547. முகங்கள்

சோதனையின் மத்தியிலும் உறுதி காட்டும்
சோராத மாந்தர்க்குச் சுடர்மு கங்கள்!
வேதனையின் இடையினிலும் புன்ன கைக்கும்
வீரர்க்கு மங்காத ஒளிமு கங்கள்!
சாதனைகள் பலபுரிந்தும் அடக்கம் பேணும்
சான்றோர்க்கு வற்றாத அருள்மு கங்கள்!
போதனைகள் பலநல்கும் பூமி மீது
பொறுமையினால் பெருமைபெறும் புகழ்மு கங்கள்!

குழந்தைகள் உலகிற்குப் புதுமு கங்கள்
குடும்பங்கள் செய்துவைக்கும் அறிமு கங்கள்!
பழகவரும் நம்மோடு பலமு கங்கள்
பார்த்தவுடன் புரிவதில்லை நரிமு கங்கள்!
ஒழுக்கமுள்ள பெரியவர்க்கு மதிமு கங்கள்
உதவிசெய்யும் நல்லவர்க்கு மலர்மு கங்கள்!
விழிப்பாகச் செயல்புரியும் சிலமு கங்கள்
வெற்றிபெறும் சிந்தனையின் அடையா ளங்கள்!

முகவரியை மறப்பதற்கு மருந்து தேடி
முதுமையிலே திண்டாடும் சிலமு கங்கள்!
முகவரிகள் இல்லாத கடிதங் கள்போல்
மூலையிலே முடங்கிவிடும் பலமு கங்கள்!
முகவரிகள் விழும்முன்னால் மரணத் தாலே
முகவரியை இழந்துவிடும் சிலமு கங்கள்!
முகவரிகள் மரணத்தை நினைவு றுத்த
முதுமைத்தாய் வரைகின்ற முன்னு ரைகள்!

- க. து. மு. இக்பால்

## 548. இயம்புதற்கே ஏலாதே!

கீழ்வானில் கதிரொன்றைக் கிளப்பிவிட்ட வெற்றியைப்போல்
காழ்காழென் றேகத்தும் 'கடுதாசி' தின்னிகளே!
கூழ்உண்டு முன்புலவர் கூறியபொன் னுரையைநீர்
ஏழேழ் பிறப்பெடுத்தும் இயம்புதற்கே ஏலாதே!

- மெ. இளமாறன்

## 549. உன்கால் எது?

ஆங்கொருகால் ஈங்கொருகால் ஆடும் அகலக்கால்
தேங்குங்கால் ஓரிடத்தில் சோர்ந்திருந்து - வீங்குங்கால்
தூங்காமல் சுற்றும் துடிமிகுந்த ஓர்இணைக்கால்
ஏங்காணும் உன்கால் எது?

த. ஓசை
1986.3.30

- கரு. திருவரசு

## 550. நாகாக்க!

ப ழி யு லா வு நா ஏ வி யே பா த க பா வ மெ லா மு மே மே வு த லா கு மோ

ப ழி யெ லா மு நா மே வி யே பா த க பா வ மு லா வு மே கா வு ற லா கு மோ

### கோமுத்திரிபந்தம்

பழியு லாவுநா ஏவியே பாதக
பாவமெ லாமுமே மேவுத லாகுமோ?
பழியெ லாமுநா மேவியே பாதக
பாவமு லாவுமே காவுற லாகுமோ?

*பொருள் :* பழியுலவும் நாவினால் ஏவி, அதனுள் பாதகம் பாவங்கள் அனைத்தையும் ஒருவர் செய்துவருதல் செய்யத் தகும் செயலோ? அத்தகையாரின் நாவில் அனைத்தும் குடிகொண்டு, தீமைகளைத் தரும் பாவங்கள்தாம் அவரை அழிக்க உதவுமே யன்றி அவரால் காக்கப்படுதல் இயலாத ஒன்றாகும் என்பது தெளிவு. இதன்கண் "யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு" என்னும் வள்ளுவர் வாய்மொழியைக் காணலாம்.

## 551. மனக்குரங்கைக் கட்டுவீர்!

மாடமா ளிகைபெற்று வாழ்ந்து மென்ன?
வைரநகை முத்துநகை பூண்டு மென்ன?
தேடரிய செல்வமெலாம் திரட்டி யென்ன?
செகமெச்ச நிலபுலன்கள் சேர்த்து மென்ன?
ஆடரங்கு சென்றுகளித் தாடி யென்ன?
அரிவையர்தோள் தினந்தழுவிக் கிடந்து மென்ன?
பீடுடைய நல்லமனம் இல்லா மாந்தர்
பெற்றபெருஞ் செல்வமெலாம் பயனின் றாமே!

வரிவேங்கைப் புலியினையும் எதிர்த்தல் போல
மனமாயை தனையெதிர்க்கும் துணிவு பெற்றால்
அறிவுள்ள மாந்தரெலாம் நல்லோ ராக
அவனியினில் புகழ்பெற்று வாழல் கூடும்;
கரியினையும் அடக்குமுயர் திறத்தை மாந்தர்
கணக்கறிந்து கற்றதனைக் கருத்திற் கொண்டால்
விரிகடலும் சிறிதாகும் மாந்தர் முன்னே
விருப்புடனே மனக்குரங்கைக் கட்டு வீரே!

- பெ. க. நாராயணன்

## 552. கொட்டத்தை அடக்குவேன்!

விந்தைசேர் மனமே! நீஎன் விலக்கொணா மனைவி யானாய்;
வந்தநாள் முதலாய் உன்னால் வதைபடும் கணவன் ஆனேன்;
பந்தடிக் கின்றாய் என்னை; படும்பாடு தாள வில்லை;
எந்தநா ளென்சொ லேற்பாய்? என்னதான் விலையாய்க் கேட்பாய்?

மணவிலக் குரிமை மட்டும் மனமே!என் வசமி ருந்தால்
கணமும்உன் னோடு காலம் கழித்திடேன் ஆனால் அய்யோ!
அணுவையும் பிளக்கும் அந்த அறிவியல் கற்றேன்; உன்றன்
பிணையறுத் தொழிக்கும் ஆற்றல் பெற்றிலேன் என்ன செய்வேன்?

உறுதியாம் ஒளிவை ரத்தை உயிர்போலக் காக்கச் சொன்னேன்;
மறதியாம் சேற்றில் ஆடி மறுநாளே தொலைத்து விட்டாய்;
பொறுமையாம் கருவூ லத்தைப் போட்டியில் வைத்த ழித்தாய்
வறுமையைக் காட்டி என்றன் வாயையும் மூடி வைத்தாய்!

ஓராசை வேண்டும்; அந்த ஒருவனின் அன்பைத் தேடும்
நேராசை; அதுதான் என்றும் நிலைபெறும் என்றேன் நீயோ
பேராசைப் போதை ஏறிப் பெருமையும் பொருளும் பெண்ணும்
சேராசை பெரிதாய்க் கொண்டு செத்ததைத் தின்னு கின்றாய்!

ஆடு!நீ ஆடும் ஆட்டம் அடுக்காமல் உன்னை என்றன்
கூடவைத் தனுப்பி னானே கொற்றவன், அவனே ஓர்நாள்
நாடுவான் உனைஒ டுக்க நல்லருள் எனக்கும் செய்வான்;
கூடும்பார் விரைவில் அந்நாள் கொட்டத்தை அடக்கு வேன்பார்!

த. நேசன் - செ. சீனி நைனாமுஹம்மது
1974.5.5

## 553. பினாங்கின் பெருமை

("திருவுற்றிலகு கங்கை" என்னும் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்து இசை)

பொழிலில் முழக்கும்வண்டு
எழிலின் இசையைக்கண்டு
பொருந்த மயிலினங்கள் ஆடுமே - அன்னம்
திருந்தப் பெடையுடனே கூடுமே - உம்பர்
பொன்ன கர்விடுத் திந்த கர்மிக
நன்ன கரெனத் துன்னி மேவியே
புகழும் பினாங்குநல் வாசமே - உளம்
நெகிழ நமர்க்குதவு நேசமே.

இழுமென் நருவிபொங்கிச்
செழுமைக் கழனிதங்கி
இழிந்து கரைபுரளும் வெள்ளமே - துகள்
அழிந்து படச்செய்நம துள்ளமே - வானில்
எட்டி முட்டிடும் கட்ட டச்சுவர்
தட்டிச் செங்கதிர் மட்டி டாமலே
இடறிச் செருகிவிண்ணில் நண்ணுமே - வெண்
சுடரும் கடக்கவழி பண்ணுமே.

அலகில் புவனம்தங்கும்
நிலைகொள் கலைகள்எங்கும்
அறியப் பணித்திருக்கும் அங்கங்கள் - தோறும்
நறியப் பொழியும்பிர சங்கங்கள் - தன்னை
ஆய்ந்த றிவுடை யார்வி ருந்தென
வாய்ந்து கேட்டும கிழ்ந்தி டத்தகும்
அரிய தமிழிசைகள் பாடுவர் - அதைத்
தெரிய உம்பரும்வந்து கூடுவர்.

பலரும் விழையும்பண்டம்
அலைகொள் கடலைமண்டும்
பலகொள் தெருக்கடையின் வீதியில் - தொங்கிக்
குலவும் தரளமணிச் சோதியில் - இந்தப்
பாரின் மீதினில் தேர லர்களை
மூரி மேவியே கோறல் செய்துயிர்
பருகி மகிழுமத களிறுமே - செல்ல
உருவ முழுதும்நிறம் வெளிறுமே.

கருங்கண் நறவுகுழல்
மருங்கில் அணங்கினர்கள்
கனகப் புரிசைமணி மேடையில் - பலர்
இணங்கி மகிழ்ந்துவிளை யாடையில் - வேனில்
கானப் போதினை யீன மின்றியே
மானி லெய்திடும் ஞான மீதெனக்
கரும்புவில் லேந்தி[2]க்கும் காட்டுவார் - கிள்ளை
அருந்த அமுதுகரத் தூட்டுவார்.

நெருங்குங் கலங்கரையின்
ஒருங்கே கலங்கள்பலவும்
நீள்தொ லைதேயச் சரக்குகள் - தம்மை
நாள்தோ றும்வந்தே இறக்குதல் - கண்டு
நீணி லத்துறு வாணி பர்குழு
பேணி வர்த்தகம் தான்பு ரிந்திடும்
நேர்மை பிறந்திட்ட தொன்னகர் - பொருள்
ஆர்வம் சிறந்திட்ட நன்னகர்.

- பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது

த. முரசு
1952.6.8

2 கரும்பு வில்லேந்தி - மன்மதன்

# 554. மலாயா

தங்க மயமாய்ப் பூமியெலாம்
சாலத் திகழும் தன்மையினால்
பொங்கும் புதுநெல் பொற்கதிர்கள்
புலங்கள் தோறும் தழைத்தோங்கிக்
கங்குல் படர வரும்அந்திக்
காலக் கதிரைக் கண்டுருகும்
மங்கை செந்தா மரைக்கிழத்தி
வாழும் பொழில்சூழ் மலாயாவே!

பனிநீர் பொழியும் அருவியினிற்
பருக வோடி வருங்கலைமான்
குனிந்தே அந்நீர்க் குளிர்கண்டு
குடியா தலைந்தே உயர்குன்றில்
இனிய போகந் துய்க்கவொரு
இமையோர் நாடிங் குளதெனச்சீர்
நனிவ எரும்நல் பொன்னாடும்
நாண வளரும் மலாயாவே!

வானா டளிக்கும் கற்பகக்கா
வரையா தளிக்கும் வள்ளலைப்போல்
தானா டியவெல் லாப்பொருளும்
தருமென் றுரைப்பார் சான்றில்லை;
தேனார் பொழில்சூழ் மலாயாவில்
திருவை வளர்க்கும் ரப்பர்மரப்
பானா டோறும் தருநிதியம்
பல்கி இம்மைப் பயன்நல்கும்!

வானம் வழங்கும் மழைநீரை;
வயல்கள் வழங்கும் வளங்களெலாம்;
கானம் வழங்கும் கனியிதழார்
காதல் வழங்கும் கழியின்பம்;
தானம் வழங்கும் கைகளெலாம்;
தண்மை வழங்கும் தடங்களெலாம்;
மானம் வழங்கும் உயிர்களெலாம்
மலைகள் சூழும் மலாயாவே!

இரவி வானில் ஒளிர்வதுபோல்
என்றும் அறிவுச் சுடர்கொளுத்திப்
பரவும் கலைகள் பலவோங்கிப்
பகைசேர் மாய இருள்அகற்ற
விரவும் ஞான விளக்கென்னும்
வேத நூல்கள் பலபடைத்துப்
பரவை எனச்சீர் பரவிநிற்கும்
பழுதில் பரத மக்களுளர்!

மன்னும் பலபேர் அறஞ்செய்து,
மானம் வழுவா நெறிநின்று,
முன்னம் வாழ்ந்த முறைபிறழார்;
முடிசேர் மன்ன ரெனப்பொலிவார்;
சொன்னம் பயிலும் கையுடையார்;
தூய்மை பயிலும் மனமுடையார்;
செந்நெல் விளையும் செய்களுளார்;
திருவும் விழையும் ரப்பருளார்;

பொதிய மலையிற் பிறந்தமிழ்து
பொழியும் மொழியைப் போற்றாமல்
புதிய மொழிகள் பலபோற்றும்
புலனில் தமிழர் போலாது
வதியு மிடங்கள் தோறுமதை
வாக்கில் செய்கை யினில்நன்கு
பதிய வைத்துச் சைவமுயர்
பண்பார் இலங்கை மக்களுளர்!

ஆக்கங் காட்டி அசைவின்றி
அரிய முயற்சி யில்மிக்க
ஊங்கங் காட்டுஞ் சீனருளர்!
உயர்வு காட்டி யொன்னலரை
வீக்கும் சீக்கர் உளர்அரசு
செலுத்தும் வெள்ளை மனிதருளர்!
தூக்கம் நீக்கிக் குடிகொள்ளும்
தொகைசேர் மலாயத் தோருமுளர்!

இன்னும் பலநாட் டோருமொரு
இன்பத் தாயின் புதல்வரென
உன்னும் படியிங் குடனுறைவார்;
ஒதுக்கம் நீக்கம் என்றவற்றின்
சின்னம் பிடியார் மனம்ஒன்றிச்
சேர்ந்து வாழ்வார் திறம்பொருந்தச்
சொன்ன பலநற் றொழிலியற்றித்
துய்ப்பார் இன்ப வகைகளெலாம்!

த. கொடி
1940, மார்ச்சு

- வேரா

## 555. சுதந்திரம் வேண்டும்!

சுதந்திரம் வேண்டும் சுதந்திரம் வேண்டும்!
சுகந்தரு இன்பச் சுதந்திரம் வேண்டும்!
சுதந்திரம் என்பது சொந்த உணர்வோடு
சுகதுக் கங்களைச் சுமத்தல் என்பதாம்!
சுதந்திர வாழ்க்கை பரந்த வெளியிலே
சுற்றிப் புள்ளினம் பறத்தல் போன்றதாம்!
சுதந்திரம் அடிமை விலங்கை அறுத்ததால்
தொல்லுல கோர்க்கிது சுவனத் தின்பமே!

சுதந்திரம் தருநலம் மாந்தர்கள் யாவரும்
சுகமுடன் நீளவே துய்த்திட வேண்டும்!
சுதந்திரம் ஒவ்வொரு மாந்தனின் உணர்விலும்
சொல்லிலும் செயலிலும் சுடர்ந்திட வேண்டும்!
சுதந்திரம் உரிமையைச் சுரண்ட விடுவது
தொழும்பர்கள் செய்கையால் தொல்லுல கோரெலாம்
சுதந்திரம் பேணுவோம்! உரிமையை நாட்டுவோம்!
சோதர ராயொன்று கூடிநாம் வாழ்வமே!

- வே. ஏசய்யா

# 556. சுதந்திர நாள்

ஆண்டுதோறும் மலரும்இன்பச் சுதந்திரநாளே! - உன்
அன்புவரவில் மகிழுகின்றோம் ஆனந்தத்தோடு!
மீண்டும்மீண்டும் நாங்கள்உன்னை மனத்திற்கொண்டிட - நல்ல
வளத்தைத்தந்தே இனிமைசேர்ப்பாய் சுதந்திரநாளே!

காட்டில்வைத்த கனிமரங்கள் காய்ப்பைத்தந்தன - அந்தக்
காட்டில்உழைத்த கரங்கள்இன்று ஏட்டில்நிறைந்தன
நாட்டின்நன்மை காக்கும்நல்ல பயனைத்தந்திடு - அதன்
நாட்டம்தன்னில் நான்வளர ஊக்கம்தந்திடு!

குழந்தைஉள்ளம் போலமக்கள் குணத்தைமாற்றிடு! - அவர்கள்
குதூகலத்தோ டுயரநல்ல வழியைக் காட்டிடு
குழந்தையாக அடைந்தவுன்னைக் குமரனாக்கிட - உயிர்
கொடுத்தவீரர் தம்மையென்றும் மனத்தில்நிறுத்திடு!

- செ. சந்தனசாமி

# 557. வரலாற்றுத் திருப்பம்

'சுதந்திரம்' என்பதில் முதலெழுத் தெங்கோ
தொலைந்து போனது 'தந்திரம்' பிழைத்தது;
இதந்தரும் என்றே ஏற்றசு தந்திரம்
எப்படி எங்களை விட்டுப் பிரிந்தது?
பதந்தரும் சொற்களைப் பதங்கள் என்றார்
பந்தா டப்படு மினம்பதங் கண்டதா?
அதந்தரும் அந்நியர் அதிர்ந்திடப் பெற்ற
அரிய சுதந்திரம் அனைவரும் பெறுவோம்!

தூதன்
1985, ஆகஸ்டு

- ஐ. இளவழகு

## 558. எச்சரிக்கை!

வருகுது தேர்தல் என்ற வதந்தியால் சிலபே ருக்குப்
பெருகுது கண்ணீர் ஏழை பெருந்துயர் கண்டே! பாகாய்
உருகுது நெஞ்சம் மாடாய் உழைத்திடும் பான்மை கண்டே!
பெருகுது பாசம் 'ஓட்டு'ப் பிரிந்துபோய் விடுமோ என்றே!

அரசியல் வாதிக் கெல்லாம் ஐந்தாண்டுக் கோர்மு றைக்கு
வருகிற நோயே இந்த வானவில் போன்ற பாசம்!
கறப்பது பசுதான்! காளை கறப்பது இவர்செய் ஜாலம்!
உரைப்பது கோடி! ஆக்கம் உருப்படி பெண்ணின் தாடி!

நாலாண்டுத் தூக்கம்! சற்று நடப்பாண்டில் அறிக்கை வேட்டை!
நூலாண்ட அறிஞ ரையும் நொடிக்கொரு மேடை தோறும்
பாழாண்ட சொல்லால் நெஞ்சம் பதைக்காமல் திட்டு கின்ற
சீராண்ட தொண்டன்! பொய்யில் சிரசாண்ட தேர்தல் காக்கை!

ஏமாளி உள்ள மட்டும் ஏய்ப்பவன் வாழ்ந்தே தீர்வான்;
தாமாக இயன்ற வற்றைத் தன்நம்பிக் கையி னோடு
நாமாகச் செய்தால் நம்மை நமன்கூட ஏய்க்க மாட்டான்;
நாமாறிக் கூட்டத் தாரை நம்பாதே எச்ச ரிக்கை!

வானம்பாடி - சீ. மா. இளங்கோ

## 559. ஒன்றே மலேசியா ஒன்றே ம.இ.கா.

இருக்கின்ற சிறுபான்மை இந்தி யர்க்குள்
இரண்டென்றும் மூன்றென்றும் பிளவு செய்தால்,
இருக்கின்ற உரிமையையும் இழந்து, கையை
ஏந்துகின்ற நிலைநாளை எய்தி டாதோ?
உருக்கொண்டின்(று) இந்தியர்தம் உரிமைக் காக
உரத்தகுரல் எழுப்புகையில் கறையான் எண்ணம்
கருக்கொண்ட(து) ஏன்சிலர்க்(கு) இந்தி யர்கள்
கடைத்தேறக் கூடாத சாபக் கேடா?

ஊர்இரண்டு படுமாயின் தொக்கு யார்க்கு?
உழக்குக்குள் என்னய்யா கிழக்கு மேற்கு?
பேர்இரண்டாய்ப் பிளவெதற்கு இந்தி யர்க்குள்
பிறவினத்தார் நமைப்பார்த்து நகைப்ப தற்கா?
சீர்திரண்டு வருங்காலை அழிவைத் தேடும்
சிந்தனையும் வரலாமோ பொறுப்புள் ளோர்க்கு?
பார்திரண்டிங் கெதிர்த்தாலும் இந்தி யர்தம்
பாசறைஒன் றேஅதுதான் ம.இ. கா.வே!

1985 - வே. மகேந்திரன்

# 560. விடை காண்போமே!

தூண்டிற் புழுப்போல் துடித்தே நின்ற
துண்டாடல் தோட்டத் துயருறு மாந்தர்க்குக்
கொண்டாட்ட மாகும் கூட்டுற வெனுஞ்சொல்!
நாட்டில் வாழும் நல்லார் போற்ற
எங்கும் வாழும் எத்திறந் தாரும்
துங்கும்[3] தூய துன்டான் சியூசி[4]னும்
பொங்கியே புகழெனும் மாலை சூட்டினர்;
மலாயர் மூவருள் மூன்றில் நின்றும்
முன்னால் வந்தோம் கூட்டுற வாலே!
திறல்மிகு சீனர் சங்கமும் கூடச்
சிறப்பினை உணர்ந்தே தீவிர மாகப்
பல்வகை நோக்குக் கூட்டுறவுச் சங்கம்
பாங்குடன் தொடங்க வழியமைத் திட்டோம்!
குருவிக்குக் கூண்டு குறுகிய கூடு
மருவி வாழும் தமிழர்க் கிங்கே
உரிமையாய் வாழ வீடுகள் உளவோ?
எனும்வினா விற்கு விடைகாண் போமே!

கூட்டுற. - சி. வடிவேல்
1971

---

3 துங்கு - நாட்டின் முதல் தலைமை அமைச்சர்; துங்கன் என்னும் தமிழ்ச் சொல்லின் மலாய்மொழி வடிவம். துங்கன் - மேன்மையுடையோன் - *மதுரைத்தமிழ்ப் பேரகராதி*

4 *துன் டான்சியூசின் - சீனர் தலைவர், மலேசிய நிதியமைச்சராய் இருந்தவர்.*

# 561. கிழக்கைப் பார்க்கின்றோம்!

புன்னகை எனுந்திருப் பொன்னகை ஏந்திப்
புதுமலர் சிரிக்குதம்மா!
என்னகைம் மாறென என்மனத் துடிப்பும்
ஏங்கித் தவிக்குதம்மா!
விண்ணெழும் முழக்கம் விடுதலைப் பண்போல்
வெகுவாய் ஒலிக்குதம்மா!
எண்ணரும் சிறப்பில் என்னரும் தாய்மண்
எழிலாய்க் குலுங்குதம்மா!

துங்கெனும் பெம்மான் தோற்றிய சுவட்டைத்
தொடர்ந்தே நடக்கின்றோம்!
தங்கமும் ஈயமும் தரும்உயர் நாட்டின்
தாய்மையை மதிக்கின்றோம்!
பொங்கும்நல் லுணர்வைப் புரிந்துணர் வாக்கிப்
புகழிடம் பெறுகின்றோம்!
எங்களின் எண்ண இயல்தரும் மொழிக்கும்
ஏற்றம் விழைகின்றோம்!

அரசியல் உலகை ஆளுங்கை நோக்கி
அன்பைச் சொரிகின்றோம்!
குறைமனத் தால்சிலர் கொடிக்கால் நடுவதைக்
கூட்டி எரிக்கின்றோம்!
மறவியல் காட்டும் மகாதீர் அமைச்சை
வணங்கி எழுகின்றோம்!
புறவியல் நோக்கம் புதிது புதிதாய்ப்
பூக்க உயர்கின்றோம்!

எழும்சுடர் வானை இனிமையாய் நோக்க
எண்ணம் விரிக்கின்றோம்!
தொழும்இறை போற்றித் துணிவே துணையாய்த்
தொடர்பை வரிக்கின்றோம்!
செழும்பிறைக் கொடியில் சேர்ந்துள நிறம்போல்
சீர்மை விளைக்கின்றோம்!
கெழுதகை மகாதீர் கேள்விக்குப் பதிலாய்க்
கிழக்கைப் பார்க்கின்றோம்!

த. நேசன்
1983.2.13

- கோவி. மணிதாசன்

## 562. ஒருசூடு

கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்த ஒன்று
கண்டவர்கள் நெஞ்சுருகச் செய்த தன்று;
வெண்ணிலவைச் சென்றடையும் ஊர்தி யொன்று
வெடித்ததடா நடுவானில் எழுவ ரோடு;
பண்ணிசைத்து வழியனுப்பி வைத்தா ரெல்லாம்
பாடைக்குச் சிதைதேடி அலைவ தென்ன?
ஒன்றுரைப்பேன் விஞ்ஞான உலகிற் கிங்கே
ஒருசூடு, புதுக்கோடாய்ப் பதிந்த தின்றே!

த. நேசன்
1986.2.23

## 563. யாகம் ஒன்று தொடங்குவீர்!

பொதுப்பே ரவ்வைதான் புயலென வந்தது;
பழையவர் பலரையும் புதியவர் சிலரையும்
பொறுப்புந் திறமையும் பொதுப்பணி விருப்பும்
பெற்றவர் கற்றவர் எனப்பெரி துவந்து
பொதுஜனம் தேர்ந்து பொறுப்பில் வைத்தனர்;
பெறற்குரி யனவே பெற்றுநீர் வாழ்வீர்!
இனிச்சில நாள்களில் இவையெலாம் ஓயும்
இருந்தே உதவியோர் எண்ணம் மாறுவர்
இனிஎனக் கிதிலே என்னென்ன லாபம்?
என்ற கணக்குகள் விரல்விரித் தெண்ணுவர்!
தலைவர் என்பார் தம்பரி வாரத்துத்
தளைகளுள் சிக்கித் தம்மைமறப் பாரோ?
சிலையெனத் தலைவரைத் தாபிதம் பண்ணிச்
சில்லறைத் துதிகள் சொல்பவர் மட்டும்
தலைவர் பரிவும் பாசமும் பரிசும்
தனியாய்ப் பெற்றுத் தனிச்சிறப் புறுவரோ?
இந்தக் குறைக்கே இடம்வைக்க வேண்டா!
சொந்த நலன்களைச் சூதறு வழியில்
சிந்திப் பவர்தம் சித்தம் தெரிந்து
இந்தியச் சமுக இதயம் தேடிச்

சிந்தும் வியர்வை தங்கும் இடமெலாம்
வந்துறு வீரே வழிவழி ஓடி!
இந்த நாட்டில் இந்தியர் வாழ்வு
இனிதே நடத்தல் உண்மை; மற்றும்
எந்த நாட்டிலும் இலையெனும் சிறப்பை
இங்குநாம் பெற்றதும் உண்மை யாமே!
'சொந்தம்' என்றே ஆன பின்னரும்
'சுற்றம்' அன்றெனச் சொல்பவ ரிருந்தால்
“வந்தேன் கேட்க" என்ற முழக்குடன்
வரவேண் டாவோ நந்தமிழ்த் தலைவர்?
இந்த நாட்டில் எல்லா ருக்கும்
இணையென நம்மையும் இருத்தவேண் டாவோ?
கல்வித் துறையில் பயனுறு கலைகளைக்
கற்கவும் நமக்குத் தடைகள் உண்டு;
கற்றபின் நல்ல வேலைகள் பெறவும்
கடுந்தடை கள்பல நெடுகவும் உண்டு;
கலைவி ளைக்கவும் மொழிவ ளர்க்கவும்
சமயம் பேணவும் ஊறுகள் உண்டு;
வான்மழை பொய்யா வளமிகு நாட்டிலும்
வறுமைத் துயரிலும் வயிற்றுப் பசியிலும்
ஏன்பல இந்தியர் உழலுதல் வேண்டும்?
ஏன்இவர் பிள்ளைகள் கல்வியில் தோற்றே
எச்சில் துடைக்கவும் எடுபிடி வேலைக்கும்
என்றும் அலைந்து திரிதல் வேண்டும்?
நம்நா டென்னில் அதன்தலை விதியில்
நமக்கும் உண்டு பங்குகள்; ஆகவே
இம்மலைத் தாயவள் துயருறுங் காலை
நம்துயர் எனநாம் துடிக்கும் வேளையில்
இவ்வரும் நாட்டில் பொருளியல் கொழித்தால்
இதிலும் நமக்குப் பங்குவேண் டாவா?
ஆகவே தலைவர் நம்நிலை உயர
வேகம் வேண்டும்; விவேகமும் வேண்டும்;
தாகம் கொண்டீர் தலைமை ஏற்க!
தகுதிகள் கொண்டவர் வெகுமதி பெற்றீர்!
ஓயா யாகம் ஒன்று தொடங்குவீர்
ஒவ்வொரு தமிழனும் உயர்நிலை பெறவே!

- மின்னல் புலவர்

த. நேசன்
1987.10.18

# 564. உதயசூரியக் கொடி

உதயசூ ரியக்கொடி[5]
ஓங்கிப் பறப்பதைப்பார்!
அதர்மஞ்செய் வெள்ளையரை - கிளியே!
அழித்த கொடியிதடீ! (உதய)

வெள்ளைய ராங்கொடியர்
வெந்து தளர்ந்தநம்மைக்
கொள்ளை யடித்தஅன்று - கிளியே!
கூட்டோடு மடித்ததடீ! (உதய)

உள்ளத்தில் உண்மைகொண்டு
ஊக்க முடன்முன்வந்த
வல்லமை நிப்பானியர் - கிளியே!
வாழ்த்தும் நற்கொடியடீ! (உதய)

சிங்கப்பூர்க் கோட்டைஎல்லாம்
சிதற வடித்துவந்தே
மங்காத சியோனவந்தே[6]வென்றே - கிளியே
மகிதலம் அறியச் செய்தாரடீ! (உதய)

இதந்தரும் சுதந்திரம்
இல்லாத இந்தியர்க்குச்
'சுதந்திர இந்தியா'வைக் - கிளியே
தோற்றவே செய்தாரடீ! (உதய)

சு. இந்தியா - கதி
1942 கி. பி. (2602.5.14 - சப்பானியர் ஆண்டு)

---

*5 உதயசூரியக் கொடி - சப்பானியர் கொடி*

*6 சியோனவந்த் - ஜப்பானியத் தற்கொலைப்படை வீரரின் பெயர். வெடி மருந்துகளோடு 'குயின் எலிஸபெத்' போர்க் கப்பலின் புகைக்கூண்டுக்குள் குதித்தவர்.*

# 565. கரும்பு தந்த சங்கம்

இரும்பு நிகர்த்தஉடல் எலும்பு துருத்தத்தினம்
இளைக்க இளைக்க உழைத்தோம்!
எறும்பு நிகர்த்தசுறு சுறுப்பில் வடித்தரத்தம்
எடுத்து எடுத்துக் கொடுத்தோம்!
அரும்பு நிகர்த்தமனம் வெதும்பும் வரைக்குந்துயர்
அடுத்து அடுத்துத் தொடுத்தார் - அதைக்
கரும்பு நிகர்த்தசங்கம் விரும்பிக் கொடுத்தகுடை
கையில் பிடித்துத் தடுத்தோம்!

கணுக்கள் பலகூடிக் கரும்பும் உயர்வாகிக்
கிளைகள் எனும்தோகை விரிக்கும்!
கைகள் பலகூடி இயக்கம் உருவாகிக்
காலம் முழுதும்துணை இருக்கும்!
ஒடுக்கல் அடக்கல்நமை நசுக்கல் நெருக்கலெனும்
நான்கு வகைப்பூதம் அடக்கும் - சங்கம்
எடுக்கும் பெருந்திட்டம் முடிக்க முடிக்கஉளம்
இதயம் கரும்பாக இனிக்கும்!

நீரு நெருப்புப்பானை அடுப்புத் துடுப்புமின்றி
நினைக்க முடியாது பொங்கல்!
ஊரும் ஒன்றுபட்ட உழைப்புத் துடிப்புமின்றி
உயர முடியாது சங்கம்!
சேரும் சமுதாய வாழ்வு வளம்கூடச்
சேர்ந்து கைகோத்து நின்று - சுவை
கூடும் கரும்பான சங்கம் வலுவாகக்
கொள்கை முரசறைவாய் இன்று!

ச. மணி

- வே. சங்கு சண்முகம்

# 566. கலைஞர் மாநாடு வெல்க!

விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையே நின்று
விளையாடும் தத்துவமாய், வீணை காட்டும்
பண்ணுக்கும் பொருளுக்கும் உறவைக் கூட்டும்
தண்ணிசையின் ஆற்றலதாய் உலகை ஆளும்!

பெண்ணுக்கும் ஆணுக்கும் உறவாய் நின்று
பிறப்பிக்கும் புத்துயிராய் ஒளியைக் காட்டும்!
கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாய் நின்று
கருமங்கள் செய்விக்கும் கலையே வாழ்க!

காற்றாடி போலாடும் உலக வாழ்வைக்
கலையாக்கும் வித்தகனே கலைஞ னாவான்;
கூற்றாகி யேவரும்நல் கூத்தன் தேவக்
கூறுகளெல் லாம்கலையின் தோற்றம் அன்றோ?
நாற்றுக்கு நீரின்றேல் உண்டோ மூச்சு?
நானிலத்திற் கலையின்றிப் பெறுமோ வீச்சு?
ஆற்றுக்குக் கரைபோலச் செம்மை எல்லாம்
ஆருயிராம் கலைஞர்களுக் கமையின் நன்மை!

கலையில்லா முகத்தினிலே களையும் நில்லா;
கவினில்லா உலகினிலும் கலையும் நில்லா;
அலையில்லா நீர்நிலைக்குப் பொருளும் வேறே
அறமில்லாக் கலைஞர்க்கோ அனைத்தும் வேறே!
நிலையான வாழ்வில்லாக் கலைஞர்க் கெல்லாம்
நிலையான புகழ்நாட்ட விழைந்து காணும்
கலைஞர்மா நாடின்று வெல்க! வெல்க!
கலைக்கோயில் திருக்குறள்நன் மன்றம் வாழ்க!

மு. ம. த. க. மா. ம. 1976 - சா. ஆ. அன்பானந்தன்

## 567. திருக்குறள் மன்றம் வாழ்க!

வாழ்விற்கு வழிசொல்லும் வளமான நூல்கள்
வையத்தில் பலவுண்டே! என்றாலும், அந்த
நூலிற்குள் ஒருவட்டச் சுவர்சூழத் தோன்றும்;
நுவல்சாரம் சிலருக்கே ஏற்புடைய தாகும்!
தாழ்விற்குப் பாதைசொலத் தயங்காத உலகில்
தடம்புரளும் மனப்போக்கால் தவிக்கின்ற நெஞ்சர்
மேலோங்கப் பொதுவான ஒருநெறியைக் கூறி
மேன்மைபெற வழிகாட்டும் நூல்குறளே யாகும்!

பல்லூழி கடந்தாலும் பதம்மாறா அமுதம்;
பண்புடைய வாழ்விற்கு வகுத்தஅறச் சட்டம்;
நல்லூழால் உலகடைந்த நற்பேறும் அதுவே
நானிலத்தின் ஒருமைக்கு வழிகாட்டும் சுடராம்!
உள்ளூறும் நல்லுணர்வால் வள்ளுவத்தைப் பரப்ப
ஒருகோயில் இவணமைத்தார் குறள்மன்றத் தோழர்!
நல்லாறு கண்டவரை நாமணக்கப் போற்றி
நற்றமிழால் வாழ்த்துகிறோம் நலம்பெற்றே வாழ்க!

குறள்பரப்ப ஓரரங்கம் கட்டிவைத்தார் அதுதான்
குறைநீக்கி வாழ்விற்கே உயிருட்டி நல்ல
அருள்பரப்பும் அறச்சாலை யாகவும்அ மைந்தே
அரும்நூல்க ளாம்அமுதை அளிக்கிறது நன்றாய்!
மருள்மறைய மனவளத்தால் வாழ்விலொளி ஏற
மாந்தர்க்கு நூலன்றோ மாண்புடைய தோழன்!
பொருள்தரும்நல் நூல்கற்றால் பொறற்புவளர்ந் தோங்கும்
பொன்னுலகாம் மண்ணுலகும் புகமுதலும் எளிதோ?

பல்லாண்டாய்ப் பம்பரமாய்ச் சுழன்றுபணி யாற்றிப்
பயன்சேர்க்கும் நூல்நிலையம் படைத்திட்ட தோழர்!
கல்லாரும் கற்றாரும் கருத்துவளம் பெறவே
கவின்மிக்க தமிழ்நூல்கள் தகவுடனே சேர்த்தே
இல்லாத நூலில்லை இங்கென்று புகல
இயன்றவெலாம் செயவேண்டும் எனவேண்டு கின்றோம்!
சொல்லாமற் செயலாற்றத் தோழர்களை முடுக்கத்
தூய்முத்துச் சுடருண்டு தூயதமிழ் வாழ்க!

தி. ம. நூ. ம. - முரசு. நெடுமாறன்
1976.5.2

## 568. காதல் திருமணம்

கண்கலந்து மெய்கலந்து உயிர்க லந்த
காதலியை மணமுடித்துக் கொண்டு வாழ்வில்
ஒன்றிணைந்து காதலினைப் போற்றும் ஆண்கள்
உலகத்தில் இல்லாமற் போக வில்லை;

என்றாலும் திருமணத்தை நடத்து முன்பே
இன்மொழியால் மென்மதியைக் கெடுத்துத் தங்கள்
எண்ணம்போல் ஆட்டிவைக்கும் ஆணி னத்தால்
ஏமாந்த பெண்களுக்கும் எல்லை உண்டோ?

த. முரசு - ஆர். ஆர். சந்திரன்

# 569. இசை

யாழெடுத்து இசைபயின்ற மரபே! உன்னை
யார்யாரோ தாமெடுத்துக் கொஞ்சி நின்று
பாழெடுத்த பிள்ளையென வளர்த்து விட்டார்;
பல்போட்டுச் சொல்லுதற்கும் தமிழே இன்றிக்
'காழ்காழ்'என் றேபிறர்தம் காட்டுக் கூச்சல்
காட்டுகின்றார்! பொருள்விளங்காப் புல்லர் கூட்டம்;
'வாழ்வாழ்'என் றேகையைத் தட்டு கின்றார்
வாழ்கிறதா? தமிழ்இசையில் எண்ணிப் பார்ப்பீர்!

திரைப்படத்தை நகைச்சுவையை நாட கத்தைத்
தெரியாமல் திருடிஅரங் கேற்றம் செய்ய
ஒருபாட்டை அதன்இசையைத் தனக்கே என்னும்
உரிமையிலார் வண்ணத்தில் முழக்கு கின்றார்;
அரைப்பட்டுப் பூண்டிருந்தார் இன்றோர் கையின்
அகலத்துள் உடல்மறைத்துப் பாடி நின்றால்,
நுரைகொட்டும் கடல்பொங்கி எழுந்தி டாதோ?
நுண்கலையைக் கெடுப்பாரை அழித்தி டாதோ?

- முல்லைவாணன்

# 570. தமிழிசை இயக்கம் வாழ்க!

எரிந்ததடா தமிழ்த்தாயின் வயிறு, வந்தோன்
எவனெவனோ நாட்டாண்மை செய்த போது
கரிந்திட்ட மனத்தார்கள் ஒன்றாய்ச் சேர்ந்து
கனித்தமிழில் இசைபாட மறுத்து, யார்க்கும்

புரியாத பிறமொழியில் பிதற்றிப் பாடிப்
பொன்னென்றார்; ஈதொன்றே இறைவ னுக்குச்
சரியான மொழியென்றார்; தமிழைத் தாழ்த்திச்
சதுரரங்கில் பண்களைச்சில் லறையே என்றார்!

தென்னாட்டின் சீர்மொழியாம் தமிழின் பாக்கள்
தெய்வத்தைக் காட்டியுளந் தெளியச் செய்யும்
பண்பாட்டுக் கருவூலம் ஆகும்; அந்தப்
பாட்டெல்லாம் 'துக்கடா'என் றாயிற் றந்தோ!
என்னென்று கேட்பதற்கும் யாரு மற்ற
இழிநிலையில் எந்தமிழர் இருந்த அந்நாள்
அண்ணாம லையென்றே எழுந்த கோமான்
அரசனென முன்னின்றான் இழிவைக் கொய்தான்!

தலைவனென எழுந்தேஓர் அவையைக் கூட்டித்
தன்மையுள்ளோர் பண்டுசெய்த பணியைப் போல
இலைஇனிமேல் தமிழிசைக்குத் தாழ்வே என்று
இனியதமிழ் இசையியக்கம் கண்டான் அம்மா!
கலைமகளின் கைவீணைக் குரலாய் வாழ்ந்த
கலைதியாக ராசபா கவத ரோடும்
அலையலையாய்த் திருமுறைகள் அரங்கி சைத்த
அரசர்இசைத் தண்டபாணி தேசிகர் மற்றும்

தமிழ்நாட்டுக் காந்தியெனும் இராசா சீயும்
சரித்திரக்க தைத்தலைவன் கல்கி தானும்
அமிழ்தான தமிழ்காக்க ஒருங்கி ணைந்தார்
அரியமகன் அண்ணாம லைப டையில்
இமையாத விழிகளென வாழ்ந்த பின்னும்
எழுமனத்துச் சான்றோரும் ஒன்றி ணைந்தார்
அமைவாக வர்ணங்கள் கீர்த்த னங்கள்
அழகழகாய்ப் படைத்ததெலாம் வரலா றாகும்!

அண்ணாம லைத்தலைவன் ஆணை ஏற்றே
அரங்கினிலே தமிழுக்குத் தொண்டு செய்தோர்
எண்ணில்லா இசையறிஞர்; மதுரைச் சோமு
இடிக்குரலோன் சிதம்பரத்துச் செயரா மன்பொன்
வண்ணமணிக் குரலாலே இழைத்தி ழைத்து
வார்த்தைகளைக் கற்கண்டாய்க் கொடுக்கும் தேன்சேர்
பண்ணிற்குத் தலைவன்சீர் காழி என்னும்
பாகுமனக் கோவிந்த ராசன் தானும்

தமிழுக்கு நேர்ந்ததோர் இழிவு தன்னைத்
தகர்த்தங்கு மகுடத்தைச் சூட்டி னார்கள்;
அமையாதென் றுரைத்திட்ட அசட ரெல்லாம்
ஆகாகா! எனவியந்தார் அயர்ந்தார் கேட்டார்!
நமையிங்கே இவ்வாறு நிமிர்ந்து நிற்க
நலம்செய்த தமிழ்த்தலைவன் பணிக ளெல்லாம்
உமியான நிலையைஇன் றுற்று நோக்கின்
உளம்வேகும் உயிர்நோகும் தலையும் தாழும்!

முடத்தெங்கா நம்வீட்டுப் பாட கர்கள்?
முகச்சுழிப்பா தாய்தமிழிற் பாடு தற்கு?
படந்தூக்கி ஆடுகின்ற பாம்பும், இந்தப்
பரத்தைமைக் காட்படுதல் இல்லை என்றால்
மடந்தூக்கி ஆடுகின்ற தமிழனுக்கு
மருந்தளவு சொரணையுமா இல்லை? எங்கே
கிடந்தாலும் தமிழ்பாடும் உணர்ச்சி வேகம்
கிளர்ந்தெழுதல் வேண்டாவா? எண்ணில் பாரீர்!

இனியேனும் இசையரங்கில் தமிழ்வ ளர்ப்போம்!
இனும்புதிதாய் இசைப்பாக்கள் தோன்றச் செய்வோம்!
புனிதமுறு தமிழ்மொழிக்குப் புகழைச் சேர்ப்போம்!
புதுமைமிகு பண்ணமைத்துப் பெருகச் செய்வோம்!
தனித்தமிழன் அண்ணாமலை தொடக்கி வைத்த
தன்மானம் நிலைப்படுத்தும் செயலைக் காப்போம்!
கனித்தமிழ்ச்சீர் மன்றத்தில் ஒன்றாய்ச் சேர்வோம்!
காசினியில் தமிழிசையை வாழ வைப்போம்!

1987 - ரெ. சண்முகம்

# 571. புலரும் பொங்கல்

தைத்திங்கள் முதல்நாளே தமிழ ராண்டின்
தலைநாளாய்க் கொண்டந்தத் தலைநா ளில்நாம்
தைத்திருநாள் கொண்டாடி மகிழ்வோம் வாரீர்!
தைபிறந்தால் வழிபிறக்கும் வாழ்வும் ஓங்கும்!
மெய்த்திருநாள் தமிழருக்கு இதுவே யாகும்!
மிகுத்துவரும் பண்பாடும் நிலைப்பா டாகும்!
பொய்த்திருநாள் பலபெருக்கிப் பசப்பு வாரின்
பொய்யுரையைப் புறம்தள்ளிப் பொங்கல் காண்போம்!

வழிபிறக்கும் தைபிறந்தால் என்றே முன்னோர்
வகைப்படுத்தித் தமிழர்நெறி நன்றே சொன்னார்!
கழிந்ததுகாண் மார்கழியும், களித்தே நெஞ்சம்
கவின்மகளாம் தைமகளை அணைத்தே கொஞ்சும்!
விழிகளிலே ஒளிவெள்ளம் விரைந்தே ஓடும்!
உழவருளம் களிப்பினிலே திளைத்தே ஆடும்!
செழித்தோங்கும் செந்தமிழர் இல்லம் யாவும்
செல்வமகள் தையணங்கு வருகை யாலே!

உழைப்பொன்றே உயர்வுக்கு வித்தாய் நிற்கும்
உழைப்போர்க்கே வருங்காலம் பொன்னாய் மாறும்
பிழைப்பிற்கு வழியில்லை என்றே நாளும்
பயனின்றிப் படுத்துறங்கும் சோம்பற் கூட்டம்
மலைத்திடவே உழைப்பாளர் வெற்றிச் சேதி
மாண்புடனே நினைவூட்டும் பொங்கல் நாளே!
இலையினியே உழைப்போர்க்கு நலிவாம் என்றே
எடுத்தியம்ப வரும்நாளாம் பொங்கல் வாழ்க!

த. நேசன் - க. பெருமாள்

## 572. பொங்கல் பொங்கட்டும்!

அன்பும் அறிவும் இணைந்து பொங்கட்டும்!
அழகும் அடக்கமும் அளைந்து பொங்கட்டும்!
பண்பும் பாசமும் கனிந்து பொங்கட்டும்!
பாலும் பழமும் கலந்து பொங்கட்டும்!

கடமை கண்ணியம் சேர்ந்து பொங்கட்டும்!
கொடையும் கொள்கையும் குலவிப் பொங்கட்டும்!
உடலும் உள்ளமும் உவந்து பொங்கட்டும்!
உரிமையும் உழைப்பும் உயர்ந்து பொங்கட்டும்!

நாடும் மக்களும் நலம்பெறப் பொங்கட்டும்!
நல்லார் வல்லார் வளம்பெறப் பொங்கட்டும்!
வீடும் வாழ்வும் விழிப்புறப் பொங்கட்டும்!
வீரம் விவேகம் செழிப்புறப் பொங்கட்டும்!

- சி. மு. மணியரசன்

## 573. தமிழர் திருநாள்

அறிவூட்டும் தமிழ்பேசும் அனைவர்க்கும் நல்ல
அழகான வாழ்விற்கு அறச்செய்தி கூற
நெறிகாட்டும் இறைமார்க்கத் திருநாட்டில் தோன்றி
நெஞ்சத்தின் இருள்போக்கும் திருநாளாம் இந்நாள்!

நற்றமிழாம் நம்மொழியின் சிறப்புகளை எல்லாம்
நாடறியப் பறைசாற்றும் விழாக்கோல மெங்கும்
பற்றுணர்வைத் தமிழ்நெஞ்சில் பதிக்கின்ற மார்க்கம்
பரிணமித்த தேன்மணக்கும் திருநாளாம் இந்நாள்!

ஒற்றுமையால் தமிழினத்தின் உயிர்நீடு வாழ
உயர்வழியை வகுக்கின்ற ஒப்பற்ற பொன்னாள்!
கற்றவரும் மற்றவரும் ஒன்றாகக் கூடிக்
கலையார்வம் பெறுகின்ற திருநாளாம் இந்நாள்!

தேசியத்தின் ஒற்றுமைக்கு வழியொன்று காட்டத்
தென்னகத்து மொழிபேசும் மக்களெல்லாம் கண்ட
மாசில்லா மங்கலநாள்; மயக்கறுத்தே உள்ளம்
மலர்வதற்குக் கதிர்போன்ற மங்கலநாள் இந்நாள்!

த. முரசு
1967.8.6

- பட்டர்வொர்த் எஸ். எம். ஜைனுத்தீன்

## 574. பொங்கலும் தமிழர் திருநாளும்

ஓ!என் மக்களே ஓ!என் மக்களே!
உலகம் புகழ வாழ்ந்தஎன் மக்களே!
ஒருகொடி யின்கீழ் ஒருகுடி யாக
ஓங்கி நின்ற உயர்வுடை யோரே!
நாடெலாம் வாழ நாமும் வாழக்
கேடெலாம் களைந்து கேண்மை படைத்தீர்!
இன்றோ தாழ்ந்து தலையின் மயிராய்
உதிர்ந்தீர்! சிறப்பெலாம் உதிர்த்தீர்; வேற்றுமை
மதத்தால் பூசல்கள் மலிந்தன! ஆயிரம்
கடவுள்கள் தோன்றினர்; கதவுகள் அடைத்தனர்;
குறுக்குச் சுவர்கள் கோடி எழுந்தன!

ஒருமை வளர்க்கும் உணர்வுகள் விழுந்தன;
எனவே கடவுள் சாதி மதமெலாம்
தமிழன் நிலையைக் கூறுகூ றாக்கிப்
பிரிப்ப தென்றால் அவைநமக் கெதற்கு?
என்றே கேள்விகள் எழுப்பினர் பெரியோர்;
முழுமையாய்க் கெட்டீர்; தொடர்ந்து முனைந்தே
உம்மைத் திருத்திட ஒவ்வொரு நாட்டிலும்
செம்மைச் செயல்கள் செழித்தன; எனினும்
சிந்திக் காத காரணத் தாலே
சிறப்புக் கெல்லாம் குறுக்கே நின்றீர்!
அரசியல் குழப்பம் சாதிச் சழக்கு
சிறுகுழுச் சிந்தனை சேர்த்தே கப்பலில்
சரக்கொடு சரக்காய் ஏற்றி இங்கும்
இறக்கினீர்; வாழ்வில் இறங்கினீர்; ஆமாம்!
வேற்றுமைத் தொழுநோய் விலகினால் மட்டுமே
ஒற்றுமை உடம்பும் ஒளிதரும் என்றும்
மொழிதான் அதற்கோர் அடிப்படை என்றும்
விழிபோல் காக்கும் மொழியின் பெயரால்
கண்டதோர் திருநாள் தமிழர் திருநாள்!
பொங்கல் என்பது எங்கும் உள்ளது!
பொங்கச் செய்தவன் பொங்கச் செய்வது!
பார்முனை யெல்லாம் பாராட் டுரைக்கும்
ஏர்முனைத் திருவிழா என்றா லொக்கும்;
அந்தத் திருநாள் சிறக்க, செழிக்க
எந்தத் தமிழனும் குறுக்கே நில்லான்!
ஆனாலப் பொங்கல் தமிழர்க் கெல்லாம்
பொதுநாள் என்பதில் பொருத்த முண்டோ?
அப்துல் லாவும் ஆறு முகமும்
அருமை நாதனும் ஒப்புக் கொள்ளும்
தாய்மொழி மீது சத்தியம் செய்து
சாற்றுவீர்! பொங்கல் பொதுநாள் ஆமோ?
சங்கத் தமிழர் சார்ந்தநற் பொங்கல்
இங்கும் வரட்டும்! எங்கும் வரட்டும்!
அட்டி யில்லை; ஆனால் ஒன்று
ஒன்றுக் கொன்று பகையாய் மட்டும்
இருக்க வேண்டா; இருந்தால் அதனைத்
திருநாள் என்போன் திருந்தாச் சிறுவன்!
பழமை எண்ணம் பரப்புக பொங்கல்!
புதுமை எழுச்சியைப் புதுக்குதிரு நாளே!

- ஐ. உலகநாதன்

த. குயில்
1967, மார்ச்சு

# 575. விளக்குதியோ தைப்பாவாய்!

சாதிக்கும் நல்வினையைத் தண்டமிழ ரெலாங்கற்றே
வேத முழக்கங்கள் விளத்தமிலாப் பொய்யுரைகள்
சாதிச் சழக்குகளும் சாத்திரக் குப்பைகளும்
நீதியினைக் கொன்று நெடுவாழ்வைப் பாழ்படுத்திப்
பாதிக்கச் செய்யும் பயனில் மனுமுறையை
நீதித் தமிழினத்தார் நீணிலத்தில் ஏற்காது
ஓது குறள்நெறியாம் ஒண்டமிழ நன்னெறிக்கண்
மேதினியில் வாழ விளக்குதியோ தைப்பாவாய்!

பா. குரல் - பெ. கோ. மலையரசன்
1972

# 576. உறுதிகொள்வோம்!

துன்பமெனும் இருளினையே போக்கிப் பொங்கித்
துள்ளுமின்ப ஒளியினையே ஆக்கி எங்கும்
மன்பதையர் கொண்டாடும் தீப நாளில்
மலையகத்து மக்கள்நாம் உறுதி கொள்வோம்!
பன்மையுள இனத்தாரோ டிங்கு நன்கு
பாசமுடன் ஒற்றுமையாய் வாழ்வ தற்கே
என்னென்ன வழிவகைகள் உளவா னாலும்
ஏற்றமுடன் செயலாற்றி வாழ்வோம் நன்றே!

எம்மதத்தார் எவ்வினத்தார் இருப்ப ரேனும்
இணையில்லா அன்பாலே இணைந்து வாழச்
சம்மதமாம் சமதர்மப் போக்கைக் கொண்டால்
சாராது பகையிருளும் சாலும் ஓர்மை;
நம்மனையில் அவர்களைஇத் திருநாள் அன்று
நல்வருகை தரச்செய்து விருந்தும் செய்து
நம்மினத்தார் உயர்வுதனை நாட்டி னாலே
நம்பெருமை மலைநாட்டில் நயக்கும் நன்றே!

1978 - ரெ. இராமசாமி

## 577. ஒற்றுமைத் தீபாவளி

முத்தையா வீட்டினிலே தீபாவளி!
முகமதுவும் ஆச்சோங்[7]கும் விருந்தாளியாம்;
மத்தாப்பே எங்கெங்கும் தீபஒளி
மக்களுடை மனங்களிலே மகிழ்ச்சியொளி!

பாத்திமா புருசன்நல் பாயித்தா[8]மும்
பூன்பூன்கி[9] பெண்டாட்டி பூங்பூங்[10]கும்
முத்தம்மா வீட்டினிலே விருந்தாளியாம்
முகிபா[11]வி னைக்காட்டும் தீபாவளி!

நாட்டினிலே எங்கெங்கும் தீபாவளி!
நம்மனத்தி லேஎன்றும் இன்பவொளி!
வீட்டினிலே பன்மதத்தர் விருந்தாளியாம்
வரவேற்போம் நாமிந்தத் தீபாவளி!

- தமிழரசன்

## 578. 'விரோதி' ஆண்டினிலே...

பண்டிதரின் கண்மூடிக் கென்னடியை மண்மூடிச்
சென்றடைந்த ஓராண்டே செத்தாய்நீ செத்தாயே!

இரும்புத் திரைகிழித்து வரும்புதுமை வரவேற்ற
குருசேவைப் பறக்கடித்தாய் கொள்கையொன்றை மறக்கடித்தாய்!

கறுப்புமக்கள் விலங்கொடித்தாய்; காங்கோவைக் கலங்கடித்தாய்;
துருப்புகளைப் பெருக்கிவிட்டாய்; தூயருக்கும் துயர்தந்தாய்!

ஜாக்கர்த்தா மண்டையிலே ஜலதோஷம் ஏற்றிவிட்டாய்;
ஜோக்கரான சுகர்ணோ சூதுக்கும் குரல்கொடுத்தாய்!

---

*7, 9, 10 இவை சீனர் பெயர்கள்*

*8 பாயித்தாம் - மலாய்க்காரர் பெயர்*

*11 முகிபா - நல்லெண்ணம் என்னும் பொருள் கொண்ட மலாய்ச்சொல்*

தமிழினத்தைப் பொறுத்தவரை தாங்கவொணாத் துயரளித்தாய்;
அமிழ்தனைய மொழியழிக்கும் அயலிந்தி நுழையவைத்தாய்!

பருமாவில் வாழ்ந்தவரைப் பரிதவிக்க விட்டுவிட்டாய்;
தருமமிலா இலங்கையிலே தலைவிதியை மாற்றிவிட்டாய்!

அழிவெல்லாம் முடிந்தபின்னர் அடுத்தெதற்கு மிச்சமென்றே
எழிலான தனுஷ்கோடி இல்லாம லாக்கிவிட்டாய்!

விரோதியெனும் பேரோடு விடிந்துவந்த ஆண்டேஉன்
விரோதமெலாம் முடித்துவிட்டு விடைபெற்றாய் விடிந்ததுபோ!

த. மலர்
1965

- ஐ. உலகநாதன்

## 579. சித்திரைத் திருநாள்

பட்ட மரம்போன்று பார்வைக்குத் தோற்றுகிற
மொட்டைக் கிளைதோறும் முளைக்கும் புதுத்தளிர்கள்!
பட்டை வரிக்குயில்கள் பண்ணிசைக்கும்; தேன்கனிகள்
கட்டித் திரண்டுள்ள அமுதமெனக் காட்சிதரும்!

இயற்கை எழில்தழையும்; எங்கும் மணத்தோடு
பயனாய் உலாவிவரும் பூந்தென்றல்; மாந்தரெலாம்
புயநோவப் பயிர்செய்த சோர்வைப் பறக்கடித்து
மயலூட்டும் இசைகூத்தில் மங்கலமாய் ஆடிடுவர்!

பனிமாய்ந்த சித்திரையைப் பாங்குமிகும் வசந்தத்தை
இனிமைத் தமிழ்நாட்டார் இவ்வாறு போற்றிடுவர்!
முனைநீங்கா ஆர்வமொடும் முனைப்போடும் மலாய்நாட்டில்
கனிவோடு சித்திரையைக் கொண்டாடி மகிழ்வுறுவோம்!

சி. இ. ச. த. பு. ம.
1957

- கவி மதிதாசன்

# 580. உயர்ந்தார் மாட்டே உலகு

உலகம் போல உருண்டையாம் - அஃது
உலகோர் மனத்தைக் கவருமாம்!
வலியர் உதையை வாங்குமாம் - உடன்
வானை நோக்கிக் கிளம்புமாம்!

இலட்சம் பேரை ஈர்க்குமாம் - உயர்
இலட்சியம் வளர ஊக்குமாம்!
அலட்சிய மாக நின்றிடில் - உடன்
அடுத்தவர் கைக்கு மாறுமாம்!

உயர்வலி உடையார் பக்கமே - அஃது
உதைகளைத் தாங்கி ஓடுமாம்!
உயர்ந்தார் மாட்டே உலகெனும் - உரை
உயர்பந் திற்கும் ஒக்குமோ?

- கல்யாணிவேலு

# 581. உலகம் தந்த பரிசு!

தள்ளாடிக் கோலூன்றி நடந்து வந்த
தாளாத கிழவரைநான் உற்று நோக்கிப்
பிள்ளைபோல் பரிகாசம் பேசி 'ஐயா
பெரியவரே சுகந்தானா?' என்றேன்; பின்பு
பல்காட்டிச் சொல்லாடி 'என்ன விந்தை!
படுமோசம் உன்முதுகு கோணல்' என்றேன்;
'இல்லையப்பா சுகத்துக்குப் பஞ்சம்! ஏதோ
இருக்கின்றேன்!' என்றவரும் பேச லூற்றார்:

"வெந்தமனப் புண்ணில்போய் வேலைப் பாய்ச்சும்
வேலையற்ற வீணர்கள் உன்னைப் போலச்
சிந்திக்கத் திறனற்றோர் இருக்கும் மண்ணில்
சுகத்திற்குப் பஞ்சமென்ன? என்னைப் போலப்
பந்தயத்தில் ஓடோடிப் பாடு பட்டுப்
பருக்கைக்கு வக்கற்ற கூனன் இங்கே
சொந்தமெனப் பதுக்கியதோ ஒன்று மில்லை;
செழிப்பான நாடாக்கித் தேய்ந்தோம் வாழ்வில்!

காடென்ன மேடென்ன என்னைப் போன்றோர்
காட்டுமரத் தோப்பாகக் காட்சி தந்த
நாடெல்லாம் சோலையாய் மாற்ற, மண்ணில்
நாடோறும் சிந்தியது வியர்வை யன்று
ஏடெல்லாம் புகழ்பாடும் உழைப்பே! நாளும்
எருவாகக் கொட்டியதும் செந்நீர், தம்பி!
ஓடொக்கும் என்னுடலும் எலும்புக் கூடாய்
உருவாக இவ்வுலகைச் செழிக்க வைத்தோம்!

கருங்கோப்பி[12] அரைக்குவளை எங்கள் தீனி!
கடுகளவும் உழைப்பற்றோன் விழுங்கும் பாணி
சிறப்பாக நாளைக்கு மூன்று வேளை!
சிந்தியதே எங்களுக்குக் கஞ்சித் தண்ணீர்!
குறைவற்ற செல்வத்தைக் குவித்தோம்! இன்பம்
குறைவின்றிக் கண்டவர்கள் நாங்க ளல்லர்!
பெருமைமிகும் இவ்வுலகைச் சுவர்க்க மாக்கிப்
படைத்தோன்யார்? எனையொத்த உழைப்போன் தானே?

நறுமணத்துச் சோலையாக இன்று காணும்
நாடெங்கள் கையுழைப்பால் சோலை யாச்சு!
எருவாக எனையொத்த தோழ ரெல்லாம்
இருக்கின்றார் மண்ணுக்குள்! கடமை ஒன்றே
குறியாக நினைத்தவர்கள் நாங்கள்! நெஞ்சில்
களவில்லை எள்ளளவும்; ஏழை யாகிப்
புரிந்துள்ள சேவைக்கு நாடு தந்த
பெரும்பரிசைத் தலைமீது சுமந்த தாலே,

எளவெடுத்த முதுகெனக்குக் கோண லாச்சு!
ஏறான வீறுநடை தளர்ந்து போச்சு!
மலையெடுத்த தோளிளைத்து வற்ற லாச்சு!.....
வரலாறு பழசப்பா!" என்றார்; கேட்டு
நிலைமறந்து அப்பெரியார் காலில் வீழ்ந்தேன்!
நெடுமரமோ நீ,உலகே! உழைக்கும் தோழர்
நலியாமல் காக்கவொரு வழிகா ணாமல்
நடிக்கின்றாய்! உன்நீதி நன்று நன்று!

- அன்புடையான்

த. நேசன்
1974.4.28

---

*12 கருங்கோப்பி - பால்கலவாத காப்பி*

## 582. பசிக்குத் திறப்புவிழா!

மந்தநிலை, தொழில்முடக்கம், மாற்றமுடன் தேக்கமுற்று
இந்தநிலை தொடருவதால், எங்கெங்கும் இடறுவதால்,
அந்தநிலை தடுமாற்றம்! அவதியுடன் ஏமாற்றம்!
வந்தநிலை மாறிடுமோ? வறுமைக்கோடு மறைந்திடுமோ?

மூலப்பொருள் வீழ்ச்சியுற்று, முற்றுமிங்கே தாழ்ச்சியுற்று,
நாளைவரும் நட்டமெல்லாம்; நமக்கெல்லாம் பணவீக்கம்!
வேலையில்லாத் திண்டாட்டம்! வேதனையோ குடிகொண்டு
ஆலைகளில் மூடுவிழா! அதில்பசிக்குத் திறப்புவிழா!

சிரமத்தில் அடிபட்டுத் தனியொருவன் வாழ்க்கைநிலை
உறக்கமின்றிக் கவலையுறும் உதவாத மாற்றுவழி
கரம்நீட்டி உதவிடவும் கைகொடுத்துத் தூக்கிடவும்
வருவார்யார்? சுமைதாங்க! வையகத்தில் இதைத்தாங்க!

- வெ. தேசகுரு

## 583. கணக்கு

என்ன கணக்கில் எட்டு அடித்தது - மணி
என்ன கணக்கில் எட்டு அடித்தது?
பன்னி ரண்டுக்கும் மூன்றுக்கும் இடைநேரம்
பழுதாய்ப் போன பழைய கடிகாரம் (என்ன)

முன்னம் இருந்த தமிழர் பெருமைகள்
முழுதும் தொலைத்தே வாழும் எருமைகள்
பண்ணும் கணக்கெலாம் தோற்றுப் போனதை
எண்ணும் விதமாய் இதுவும் ஆனதோ? (என்ன)

மாலை வேளையோர் கோழி கூவினால்
மாறி வெய்யவன் மேற்கில் தோன்றுமா?
பாலை மண்ணிலே நெல்லைத் தூவினால்
பசுமை எங்ஙனம் பிறக்கும் ஆண்டவா? (என்ன)

த. நேசன்
1981.5.15

- கரு. வேலுச்சாமி

## 584. பதின்மூன்று

எட்டு மடிக்கும்! பத்து மடிக்கும்
ஏமாந்தி ருந்தால்பதின் மூன்று மடிக்கும்!

பட்டப் பகலில்! - மணி
பன்னி ரண்டிற்கும் மூன்றிற்கு மிடைநேரம்
கெட்டுப் போன பழைய கடிகாரம்
'கிணிகிணி, கிணிகிணி, கிணிகிணி' யென்று!

குப்பையில் தூக்கி எறிய வேண்டியதைக்
கோபுர உச்சியில் ஏற்றி வைத்தால்
எப்படி ஒழுங்காய்ச் செயல்கள் நடக்கும்?
ஏனிது பலர்க்கும் புரிய வில்லை?

த. நேசன்
1981

- அமலதாசன்

## 585. புரிந்துகொண்டால்...

மூலமென விளங்குகின்ற இறைவ னைப்போல்
முதலுமின்றி முடிவுமின்றி விளங்கும் அன்பே!
காலமெனும் பெருமகளே! என்னை உன்றன்
கடுஞ்சிறைக்குள் வாழ்வெல்லாம் வைத்தாய் நீயே
ஓலமிடும் உயிர்ப்பறவை போன பின்னால்
உன்பெயரை நான்எடுப்பேன்! 'காலம்' ஆவேன்
தூலவுடல் சாய்ந்தாலும் அழியா வாழ்வைத்
தொல்லுலகில் பெற்றின்பம் துய்ப்பேன் நானே!

குளிர்செய்யும் பனியாகி நடுங்க வைப்பாய்;
கோடையெனும் தீமூட்டி எரிய வைப்பாய்;
இளவேனில் ஆடைகட்டிப் புன்ன கைப்பாய்;
இலையுதிருங் காலமெனக் கண்ண சைப்பாய்;
வளமூட்டும் மழைவீசி வாழ வைப்பாய்;
வறட்சியினால் உயிர்க்குலத்தை வாட வைப்பாய்;
ஒளியாகி இருளாகி உலகப் பந்தை
உருட்டுகின்றாய்! புத்துணர்ச்சி ஊட்டு கின்றாய்!

எழுச்சிதரும் கவிதையென உன்னைச் சொன்னால்
இரவுபகல் இரண்டும்நின் எதுகை மோனை!
பழுதின்றி உனையெழுதி எமக்குக் காட்டும்
பாவலனின் திருப்பெயரோ இறைவன் ஆகும்!
முழுதுமுன்னைப் புரிந்துகொண்டு சுவைக்க மண்ணில்
முடிந்தவர்க்கு வாழ்வெல்லாம் இன்பத் தேனே!
விழிமயங்கிப் புரியாமல் குற்றம் சொல்லி
வெறுப்பவர்க்கு மருந்துண்டோ? சொல்வாய் மானே!

அழுதழுது துன்பத்தில் துடிக்குங் காலம்;
ஆசைகளைச் சிறகாக்கிப் பறக்குங் காலம்;
வழிதவறிப் பள்ளத்தில் வீழுங் காலம்;
வாய்ப்புகளை நழுவவிட்டு வாடுங் காலம்;
கழிந்துவிட்ட இளமைக்குக் கலங்கும் காலம்;
காதலென்றும் கவிதையென்றும் மயங்கும் காலம்;
எழுதியிங்கு முடிவுறாத காலம் உன்னை
இதுவரையில் புகழ்ந்ததெல்லாம் இறந்த காலம்!

- க. து. மு. இக்பால்

## 586. ஏக்கம்

**பூவின் ஏக்கம்!**
இலையாய்ப் பிறந்திருந்தால் இன்பம் மிகுந்திருக்கும்;
கண்ணுக்கு விருந்தளிக்கக் கவின்மிகு பசுமையினைக்
குறைவின்றி வழங்கிமேலும் மக்கள் நலம்பெறவே
காற்றும் தந்திருப்பேன்! பூவாய்ப் பிறந்ததனால்
மொட்டு இதழ்விரித்து மோகனங் காட்டுகையில்
வண்டினத் தொல்லைகளால் வருந்திக் கிடக்கையிலே
மாந்தரும் பறித்திட்டார் மண்ணில் எறிந்திட்டார்!

**இலையின் ஏக்கம்!**
பூவாய்ப் பிறந்திருந்தால் புனிதங் கொள்ளும்வகை
இறைவ னடிகளிலே இணைந்தே வாழ்ந்திருப்பேன்;
ஞாலம் பொலிவுறவே நறுமணம் தந்திருப்பேன்;
இலையாய்ப் பிறந்ததனால் இழிந்த நிலையெய்திப்

பசுமை நிறம்அழிந்தே பரிதவித் திருக்கையிலே
சருகாய்ச் சிதறிஇழி சென்மம் எடுத்துவிட்டேன்!
அக்கணமே,
மரமும் முறுவலித்து வேரைப் பார்த்ததுவே!

த. மலர் - கு. கிருஷ்ணன்
1977.7.10

# 587. வீரம்

பத்துப்பேர் ஒன்றாகப் பதுங்கி நின்று
பாதையிலே வருவோனைத் தாக்கி விட்டால்
பத்துப்பேர் அறியப்பெரும் புகழ்ச்சி யாகப்
பறையடிக்கும் செயலன்று வீரம்; "இங்கே
பத்துப்பேர் நாமுள்ளோம், மலேசி யாவில்
பத்துப்பேர்க் கொருவர்தாம் உள்ளா" ரென்று
கத்துகிறார் சுகர்ணோ அதுவா வீரம்?
காகிதப்பூ வீரமதில் மணமே இல்லை!

அணுக்குண்டு மின்கண்டு அவனி முற்றும்
அழிக்கின்ற கருவிகளை ஆக்கி வைத்துப்
பிணக்குவியல் ஏற்படுத்தி வீரம் பேசும்
பெரும்பேச்சில் வீரமிலை சாரம் இல்லை!
துணிவெல்லாம் விஞ்ஞானத் துணிவே யன்றித்
தோள்பலமோ ஆள்பலமோ துளியும் இல்லை!
'நிணந்தின்னும் கழுகன்று மனிதன்' என்னும்
நினைப்பிருந்தால் அணுப்போரே இல்லை! இல்லை!

ஆள்பலத்தைக் காட்டுகிற ஜாகர்த் தாவும்
அணுப்பலத்தைக் காட்டுகிற செஞ்சீ னாவும்
தோள்தட்டி ஆர்ப்பரித்தே உலகை யெல்லாம்
சுடுகாடாய் மாற்றிவிடத் துணியும் போக்கில்
கால்பகுதி மறப்பண்பும் இல்லை; சான்றோர்
கணிக்கின்ற அறப்பண்பும் அறவே இல்லை!
சூளுரைத்துக் குடியரசு பண்பு காக்கும்
தூயமன பலமொன்றே வீரம் ஆகும்!

படைபலத்தைக் கூட்டுவதும், அடிமை யென்று
பகைமனத்தைக் காட்டுவதும் வீரம் அன்று!
உடல்பலத்தை நாட்டுவதும், கருவி கொண்டே
உயிர்வதைகள் புரிவதுவும் வீரம் அன்று!
நடுநிலையில் சூழ்நிலையை நன்கு ணர்ந்து
நடுங்கவரும் பகைப்புலத்தின் நெஞ்சில் நீதிச்
சுடர்பரப்பி நட்புணர்வுப் பயிர்வ ளர்த்துப்
தோள்கொடுக்கும் மனபலமே வீரம் ஆகும்!

த. நேசன்
1964.6.21

- ஐ. உலகநாதன்

## 588. கிளி

பச்சை நிறக்கிளியே - பறந்தென்றன்
பக்கம்வா பைங்கிளியே!
இச்சை யெலாமுரைப்பேன்! - கிளியேஉன்
இனிய மனத்துடனே!
அச்சம்நீ கொள்ளாதே - உனக்கோர்
அல்லலும் செய்யமாட்டேன்
பச்சை மொழிபகர்வேன் - தின்பதற்குப்
பழங்க ளெலாம்தருவேன்!

தேவி திருக்கரத்தில் - விளங்குமென்
தீந்தமிழ்ப் பைங்கிளியே!
ஆவி துடிக்குதம்மா! - என்னண்டை
அண்டிநீ வாகிளியே!
மாவின் பழச்சாற்றில் - மதுரவிளாங்
கனியைப் பிசைந்ததிலே
பூவின்நற் றேன்பொழிந்து - நானுனக்குப்
புகட்டுவன் வாகிளியே!

இயற்கை இன்பமுது - புசித்தானந்த
எல்லையில் லாக்கடலில்
அயர்ச்சியற் றாடிடும்நீ - என்மொழியில்
ஆசையுங் கொள்ளுவையோ?

செயற்கை வளங்களம்மா! - மாந்தரிங்கே
செய்குவர் பைங்கிளியே!
பயக்குமோ அவையியற்கை - இன்பம்வந்து
பார்த்துநீ சொல்கிளியே!

வானக் கடலினிலே - தவழுமெழில்
வட்ட மதிப்படகில்
நானும் நீயுமாக - அமர்ந்ததை
நடத்தி விண்ணகத்தில்
மோனத் துலவிடுவோம் - அங்குநம்மின்
முத்தமிழ்ச் சீர்பரப்பி
ஞானச் சுடர்ரதத்தில் - ஏறியிந்த
ஞாலத்தை வந்தடைவோம்!

உலகைப் புதுக்கிடுவோம்! - யாருமொரு
குலமெனச் செய்திடுவோம்!
கலகம் அழித்திடுவோம்! - எங்குமின்பக்
காட்சிக ளாக்கிடுவோம்!
இலங்கிடச் செய்திடுவோம் - தொழில்மிக
எங்கெங்கு மேகிளியே!
பலன்கள் பகிர்ந்திடுவோம்! - ஒரேமனப்
பான்மை வளர்த்திடுவோம்!

த. கொடி - தேவிதாசன்
1941

## 589. பாரியின் பேதைமை!

மன்னன் பாரிக்கு வல்லமை யுண்டே!
பொன்பொருள் உண்டே! பொதுவில் அவன்பால்,
ஏவலர் காவலர் இருந்தும் ஏனோ
தாவரம் அந்த முல்லைக் கொடிக்குப்
பெருங்கால் நான்கில் சிறுகை பின்னித்
தருங்கால் பந்தல் தகுமென எண்ணான்!
வருங்கால் தேரை வழியே விடுத்து
வெறுங்கால் வருந்த மேவினன் இல்லம்!
'மன்னன் எவ்வழி மக்கள் அவ்வழி!'
இன்னமும் நாங்கள் இருப்பதைக் கொடுப்பவர்
வெறுங்கால் நடையும் வெள்ளை மனமும்
தருங்கதி யாவும் தாங்கிப் பழகினோம்!

பாரியின் அந்தப் பேதைமை
மீறியும் வாழ வெட்கினோம் தேரே!

- கரு. வேலுச்சாமி

த. நேசன்
1987.8.23

## 590. தாய்குலம் வாழ்க!

கருப்பைக்குள் உயிர்வளரக் கனிவுடனே குருதிதந்து
பெருமையுடன் தன்மகவு பேர்பெறவே தான்உழைத்தே
அரும்சுகத்தை நல்வாழ்வை அக்குழவிக் கர்ப்பணித்துத்
திருவுடலைத் தேய்த்தழிக்கும் தியாகவுருத் தாய்வாழ்க!

மணக்கோலம் முடிந்தமங்கை மணிவயிற்றில் சூல்முதிரத்
தினந்தினமும் தாய்மனத்தில் சேய்வளர்ச்சி நிழலாடக்
கனகமணித் தொட்டிலுடன் கைக்குழவிக் காடையணி
தினம்நினைப்பாள் சித்திரச்சேய் சிந்தனையில் முகிழ்த்திருப்பாள்.

தன்மழலைத் தளிர்மொழியைத் தாய்திருத்திச் சீர்படுத்திக்
கண்திறக்கும் பள்ளியிலே காய்அறிவைக் கனியாக்கித்
தன்கணவன் சாயல்பிள்ளை தாங்கிவரும் போதினிலே
பெண்மைநிறை அன்னைமனப் பெருமைக்கிந்த வையம்ஈடோ?

வளர்த்தெடுத்த தன்குழந்தை வாய்த்தமண வயதுவரக்
குலம்தழைக்கக் குலக்கொடிக்குக் கொம்பொன்று கிட்டுகையில்
வளர்த்தசுமை சுமந்தசுமை வாழ்நாளில் பட்டசுமை
தளர்ந்தநிலை தாய்பெறுவாள் தன்நிறைவால் மெய்சிலிர்ப்பாள்.

பெற்றெடுத்த தன்மகற்கோ பிறக்குமொரு குழந்தையென்றால்
நற்பாலும் மலைத்தேனும் நாச்சுவைக்கக் கிடைத்தனபோல்
உற்றதொரு தன்பெயரன் உருவமதும் பாட்டனெனப்
பற்பலவும் வாய்பிதற்றப் 'பாட்டி'நான் எனக்குதிப்பாள்.

பெண்ணாய்ப் பிறப்பெடுத்தேன் பிள்ளைபல ஈன்றெடுத்தேன்
கண்ணான பேரமக்கள் கைநிறைய அரவணைத்தேன்
என்நலத்தில் கவலையில்லை இறைவாவென் மக்களுக்கே
உன்கருணை எனஉருகும் உயர்தெய்வம் தாய்குலமே!

- சோமசன்மா

த. நேசன்
1974

## 591. என் அன்னை மடியினிலே!

குங்குமத்து மேனியிலே குளிர்புனலால் நீராட்டிக்
குலமகனே வாழியெனத் தாயவளும் சீராட்டி
அங்கமது நோகாமல் தங்கமணி நகைபூட்டி
அரைக்காசு பொட்டிட்டு அலங்கார மைதீட்டித்
தங்கநிறத் தட்டினிலே தயிருடனே சோறூட்டித்
தாய்மனமும் தாலாட்டி, தமிழாலே பாகூட்டிச்
சிங்கமென வாழ்கவெனச் சேயெனையே வாழ்த்தியதைச்
சிந்தையிலே நினைவூட்டிச் சிந்துகிறேன் கவிகூட்டி!

- அருண் சோமசன்மா

## 592. சுழன்றுவரும் துன்பம்

சிற்றுதரம் சுமந்திருந்த செல்வம் தன்னைச்
சீராட்டும் நாள்வந்து தாயை வாட்டப்
பெற்றெடுப்பாள் பெண்மகவை; துன்பம் அன்றே
பெற்றவளைப் பிடித்தாட்டக் கால மோடும்;
பொற்பாதம் தானெடுத்து நடக்கும் நாளில்
பொற்சிலையாய் அவளாகும் நாளை யெண்ணிப்
பெற்றவளும் பெருங்கவலை கொண்டு நாளைப்
பிசகாமல் எண்ணியவா றிருப்பாள் ஆங்கே.

குருத்தோலை நிறமொத்த சின்னக் கன்னி
குதித்தோடி வந்திடுவாள் நாணம் ஏது?
பொறுப்பாளோ பெற்றவளும் 'ஏண்டி யின்னும்
பொறுப்பிலையோ? வயதாக விலையோ?' என்பாள்
குறுகுறுக்கும் கடையிதழில் குறும்பு காட்டிக்
குதித்தோடும் இளங்கன்றாய் மறைவாள் ஓடிப்
பொறுப்புள்ள தாயுள்ளம் சிறுமி தன்னைப்
புதுமணப்பெண் கோலத்தில் எண்ணிப் பார்க்கும்.

மலர்ந்திட்ட மலருக்கு உவமை யாக
மாந்தளிராம் செல்வியவள் மங்கை யாவாள்;
புலர்கின்ற பொழுதெல்லாம் பெற்றாள் தன்னைப்
புதுத்துன்பம் பலசேர்ந்து கொல்லும்; வாச

மலரினைத்தான் வண்டுகளும் மொய்க்கா வண்ணம்
மறைத்திடுதல் ஆம்செயலா? வேலி யில்லா
மலரொத்த மகளுக்குத் துணையைத் தேடி
மணமுடிக்கும் வரையன்னை கண்ணு றங்காள்.

'விரலுக்குத் தகுந்தாற்போல் வீக்கம்' என்று
வேற்றூரில் மாப்பிள்ளை பார்த்து வைத்தே
உறவோர்க்கும் ஊரார்க்கும் சேதி சொல்லி
உற்றதொரு நாளினிலே மணமும் செய்வாள்;
கரவற்ற இளங்கன்னி கணவ னோடு
கருத்தொன்றி இல்லறத்தை நடத்த வேண்டி
நரைகொண்ட தாயவளும் புத்தி சொல்லி
நல்லாசி பலகூறி அனுப்பி வைப்பாள்.

துள்ளுகின்ற மான்குட்டி தோற்கும் வண்ணம்
துன்பத்தை அறியாது வாழ்ந்த பெண்ணாள்
உள்ளத்தில் திருமணத்தால் விளைந்த மாற்றம்
ஒன்றிரண்டா சொல்வதற்குப் பொறுப்பை ஏற்றுப்
பள்ளத்து மழைநீராய்ப் பணிவைக் கொண்டு,
பாங்குடனே கணவனொடு சுற்றம் பேணி,
இல்லறத்தில் இன்பத்தைத் தேக்கி வைக்கும்
இன்முகத்தாள் வயிற்றினுள்ளே சுமப்பாள் செல்வம்.

உருவாகி வருகையிலே 'ஆணா? பெண்ணா?
அதனைத்தான் எவ்வாறு வளர்ப்ப' தென்று
கருவளரும் நாள்முதலே கவலை கொள்ளும்
கன்னியுள்ளம் கற்பனையில் சிறக டிக்கும்
கருவுற்றுத் தாய்மையினை ஏற்கும் பெண்மை,
கருப்பையிலே உயிர்த்திருக்கும் செல்வம் தன்னின்
வருங்கால வாழ்வெண்ணிக் கொள்ளும் துன்பம்
வாடிக்கைத் துன்பமிது; வாழ்க தாய்மை!

த. நேசன்
1968.1.14

- மு. வீ. சுமதி

## 593. சவத்தின் சவத்தோற்றம்

பிரசவத்தைப் பிரசவித்தாள் ஒருசவம் - அதனைப்
பிரசவிக்கப் பலகாலம் அவளிருந்தாள் பெருந்தவம்
ஒருசவமாய் உயிரைவிடப் போகிறாள் - அந்த
உயிரைவிட உடலைவிடப் பெரியதென அரியதென (பிர)

பார்ப்பதற்கே அவளிருப்பாள் பாவமாய் - வயிறு
பருத்திருக்கும் மலையபூமி வரைபடத்தின் பாவமாய்
சேர்ப்பதென்ன பிள்ளையென்னும் செல்வமா? - பிள்ளைச்
செல்வமென்ன செல்வத்தையும் சேர்த்துக்கொண்டு செல்வமா? (பிர)

பெண்பெருமை வற்றாத ஆறுபோல் - இந்தப்
பேருலகில் இல்லையவள் பெற்றெடுத்த பேறுபோல்
தன்பெருமை தந்தவளும் பின்சவம் - அந்தத்
தாய்கொடுக்கும் இம்மகவும் பின்னுக்குப் பின்சவம்! (பிர)

த. நேசன் - பொ. மு. தமிழ்மணி

## 594. பிறந்த நாள்

அந்த நிலவிலே இந்த மனிதனின்
ஆட்சி வந்தநாள் நீ பிறந்தநாள்! (அந்த)

மந்திரத்தோ டிணைந்துவிட்ட மாயமும் இல்லை;
மனிதனையே நோக்கிநிலா வந்ததும் இல்லை;
தந்திரமோ துளியுமிதில் சேரவே இல்லை;
தண்மதியே, கண்மணியே! கேளடி இன்னும்! (அந்த)

தேனினிக்கும் செய்திகோடி நாளை கேட்கலாம்!
தேர்ந்தபல மேதையந்த நிலவில் வாழலாம்!
வானுயர்ந்த மாடிவீடு பலவும் காணலாம்!
வாழநீயும் அந்தநிலவில் வீடும் வாங்கலாம்! (அந்த)

ஜமீலா. - கடையநல்லூர் ஜமீலா
1975

## 595. பைந்தமிழே கண்வளராய்!

ஆராரோ ஆரரிரோ ஆரரிரோ ஆராரோ!

அம்மா வெளியில்சென்று அரைநொடியில் வந்திடுவார்;
சும்மா அழுவாமல் சுந்தரனே கண்வளராய்!

மங்குஸ்தீன்[13] பழமுடைத்து மாணிக்கச் சுளைஎடுத்துத்
தங்கத்தில் குழைத்தெடுத்துத் தம்பிக்கு நான்தருவேன்!

லக்கான்[14] பழத்துடனே லங்சாட்[15] பழச்சுவையும்
அக்காள் உனக்களிப்பாள் அன்பேநீ கண்வளராய்!

டூரி[16]முள்ளுக் குத்தாமல் டூரியான் பழமுடைத்து
வாரி வழங்கிடுவேன் மகிழ்வேநீ கண்வளராய்!

- கா. கலியபெருமாள்

## 596. தாலாட்டு

ஆராரோ ஆரிரரோ ஆரிரரோ ஆராரோ!
ஆரிரரோ ஆராரோ ஆராரோ ஆரிரரோ!

கத்தும்நல் கடலருகே கண்திறந்தாய் கண்ணுறங்கு;
சொத்தாக வந்துதித்த சொல்திறத்தாய்! கண்ணுறங்கு;

அடுக்குமாடி வீட்டினிலே அமைதியாய்க் கண்ணுறங்கு;
தடுக்கி விழுந்திடாமல் தவப்புதல்வா! கண்ணுறங்கு;

உரியபள்ளி உனக்குமுண்டே உத்தமனே! கண்ணுறங்கு;
அரியநல்ல கணினியையும் ஆய்ந்திடலாம் கண்ணுறங்கு;

வானவூர்தி பார்த்திடலாம் வனப்பேநீ கண்ணுறங்கு;
வானவியல் கற்றிடலாம் வடிவேநீ கண்ணுறங்கு;

நற்றமிழை நீபடிப்பாய் நலமடைவாய் கண்ணுறங்கு;
நற்குணத்தை நீபெறுவாய் நாயகனே! கண்ணுறங்கு!

- உ. துரைசாமி

13, 14, 15, - மலேசியப் பழவகைகள்
*16 டூரி - முள்; டூரியான் - முள்தோடு உடைய பழம்*

## 597. பாவந் தீரச் சிரிப்பானா?

அன்னை மடியில் தவழ்ந்தே மழலை
அமுதச் சிரிப்பைப் பொழிகின்றான்;
என்னே மகிழ்ச்சி இயற்கை அமைப்பில்!
இறைவன் படைத்த அழகென்னே!

எத்தனை மாளிகை இத்தரை மீதினில்
எனினும் இங்கே பஞ்சந்தான்
பத்தரை மாற்றுப் பாலகன் வறுமைப்
பிணியும் தீர்ந்தே சிரிப்பானா?

காலங் காட்டும் வாழ்க்கைப் பாதை
கரடு முரடாய் இருப்பதனால்
ஞாலந் தன்னில் விடிவினைக் காட்டும்
நாளை நாளும் நினைக்கின்றான்!

ஆயிரம் ஆயிரம் தாரகை ஒளியுள்
அழகு வெண்மதி தவழ்வதுபோல்
ஆயிரம் தொல்லைகள் சூழ்ந்தஇவ் வுலகில்
அன்புச் செல்வன் சிரிக்கின்றான்!

- மலைமதி சந்திரசேகரன்

தூதன்
1978.11.19

## 598. கண்டார் வியக்கும் கலை

அழுகைப்பண் பாடும் அவிநயங்கள் காட்டும்
ஒழுகும்வாய் பூச்சிரிப்பை ஊட்டும் - நழுவிவிழும்
கொண்டாருக் கின்பங்கள் கூட்டும் குழந்தையே
கண்டார் வியக்கும் கலை!

பிள்ளை உடன்தூங்கப் பெற்றாள் அணைத்தபடி
மெல்லத் துயில்வதைப்பார் மென்மையுடன் - பிள்ளைக்கோர்
திண்டாய் உறங்குகின்ற தெய்வப் பணிகூடக்
கண்டார் வியக்கும் கலை!

சிற்றுளியோர் வெற்றிரும்பே சித்திரக் கோல்வெறுங்கோல்
பற்றிடுவார் பற்றிப் பயன்படுத்தின் - பெற்றிபெறும்
அண்டப் பொருள்கள் அனைத்துள்ளும் உண்டாமே
கண்டார் வியக்கும் கலை!

- கரு. திருவரசு

த. நேசன்
1976.7.4

## 599. அவரே வெல்வார்!

எண்ணத்தை எல்லாம்ஓர் நிலைப்ப டுத்தி
இசைப்பயிற்சி தனில்ஈடு பட்டி ருப்பேன்;
பண்ணொத்து நான்பாட முயலும் போது
பறந்துவரும் குயில்களாய் வந்தென் செல்வர்
முன்'ஒத்து'க் காரர்போல் அமரு வாரே
முணுமுணுப்பும் இசையோடு சேர்ந்தொ லிக்கும்
பண்கூட்டும் சுருதிகளில் கையை வைப்பார்
பாழாகும் இசைமுயற்சி பறக்கும் பண்ணே!

'கருவியினை நான்மீட்ட வேண்டு' மென்றன்
கைநிறுத்தித் தன்கையால் கருவி யாளச்
சிறுபையன் முன்வருவான்; மூத்த பெண்ணும்
சிணுங்கிடுவாள் தான்மீட்ட வேண்டு மென்று;
பெரியவனும் அவண்வருவான் விரல்கள் தொட்டுப்
பேழையினை இசைத்திடவே வேண்டு மென்பான்;
வரும்அங்கே சிறுபோரும் அவரே வெல்வார்
வாய்மூடி நானிருப்பேன் அவர்பாட் டிற்கே!

- முரசு. நெடுமாறன்

த. முரசு
1977.4.11

## 600. எச்சில் உமிழும் எழில்!

ஏழை செல்வர் இல்லிற் ஏக்கம் தன்னைப் போக்கும்;
வாழைக் குருத்துப் போன்று வளரும் உடம்பு தோன்றும்

செக்கர் வானம் போலச் சிவந்த மேனி மின்னும்;
எச்சில் தன்னைத் துப்பி எழிலாய் சிரிக்கும் என்றும்!

த. நேசன்
1984.11.4

- ஆ. சின்னத்தம்பி

## 601. காவியமும் ஓவியமும்

எழுத வேண்டுமென் றுணர்வு தூண்டப்
படிப்பறை சென்று பற்றினேன் தூவல்;
பழந்தாள் பொறுக்கிப் படியச் செய்தே
உணர்வுக் கலவையை ஓட விட்டேன்;
என்னை மறந்தே எழுதும் வேளையில்
ஏதோ ஒன்றென் உடலில் உரசும்
உணர்வு தோன்றினும் உளந்திருப் பாமல்
பாட்டாய்க் கனிந்து படைத்த வேளையில்
பாட்டுத் தேனைப் பாய்ச்சிய தூவல்
பறிபோ யிற்றுப் பதறி எழுந்தேன்!
புத்தம் புதிய புத்தகத் தினிலே
என்னிடம் பறித்த எழுது கோலால்
என்மகன் ஏதோ எழுத லுற்றான்!
காற்றொடு காற்றாய்க் கடலொடு கடலாய்ப்
பூவொடு பூவாய்ப் புனலொடு புனலாய்
ஒன்றிப் பாட்டாய் உணர்வின் எல்லையில்
நின்றிவ் வுலகை மறந்த வேளையில்
பிள்ளைப் பாசமா பிறக்கும்? உடனே
விரைந்து நூலை வெடுக்கெனப் பிடுங்கினேன்;
தூவலைப் பற்றித் தொடர்ந்தேன் பணியை.
வெம்பிய மகன்குரல் விழுந்தது செவியில்
மனமோ படைப்பின் வழியில் நடந்ததால்
மகனின் குரலோ மங்கித் தேய்ந்தது.
உணர்வு முற்றும் உருவங் கொண்டதும்
உற்ற பெருமிதம் உரைத்தல் கூடுமோ?
உலகெலாம் கையில் ஒடுங்கிய மகிழ்வில்
படைத்தஎன் பாட்டைப் படிக்கத் தொடங்கினேன்.
'அத்தான்!' என்றொரு குரல்செவி மேவத்
திரும்பிப் பார்த்தேன்; மனையாள் ஆங்கே,
"உங்கள் திருமகன் உயர்கை வண்ணம்
பாரும்!" என்று பல்லெலாம் தெரியச்
சிரித்து நின்றாள்; திரும்பினேன்! அடடா!

எந்தக் கலைஞனும் எழுதிட முடியா
ஓவியக் காட்சிகள் ஒளிர்ந்தன சுவரில்!
அடுப்புக் கரியுடன் அருமை மகன்தான்
ஆங்கே அருங்கலை மணிபோல்
தேங்கும் மகிழ்ச்சி சிறக்கநின் றனனே!

- முரசு. நெடுமாறன்

த. நேசன்
1966.11.23

## 602. வருமோ நெஞ்சே?

மணல்வீடு கட்டித் தென்றல் மணக்கின்ற காடு சுற்றித்
தணலென எறிக்கும் கோடை தனில்மேனி தன்னைக் காட்டிக்
கனிகாய்கள் திருடி யுண்டு கணமேனும் சோரா மல்ஓர்
அணிலென அங்கு மிங்கும் அலைந்தநாள் வருமோ நெஞ்சே?

பள்ளிக்குப் போக்குக் காட்டிப் பையினைச் சாலை யோரம்
கல்லினுக் கடியில் பாது காப்பாக மறைத்து வைத்து
வெள்ளிமீன் கூட்டத் தைப்போல் விரைந்தோடிக் காடு மேடு
துள்ளியே திரிந்த அந்நாள் தொடர்ந்திங்கு வருமோ நெஞ்சே?

ஆறுகள் குளங்கள் யாண்டும் அணைகட்டி ஆடிப் பாடி
ஊறுநன் னீரைத் தேக்கி உவப்புறக் குடித்து மீண்டு
சேறுகொள் நீரைச் சேந்தி ஒருவர்மீ தொருவர் வீசி
வீறுறத் திகழ்ந்த அந்நாள் மீளவும் வருமோ நெஞ்சே?

- பொன்முடி

த. முரசு
1973.7.29

## 603. குழந்தை குலவும் குடில்!

பட்டு மலர்பறித்துப் பனிநீரில் தோய்த்தெடுத்துச்
கட்டிவைத்த புத்துருவே! சுழன்றுவரும் மின்மினியே!
தந்தத்தில் கடைந்தெடுத்துத் தவழ்ந்துவரும் தேன்பாகே!
செந்தூரச் சிலையே! திரண்டுவரும் பால்நுரையே!
ஆசைக் கடலின் அடிமடியில் உருவாகிப்
பேசும் நிலவாய்ப் பிறந்துவந்த கற்பனையே!
எதிர்காலம் என்னும் இருட்கடலிற் போவதற்குக்
கதிர்வீசி வந்த அதிசயமே! கொடிக்கலமே!

புயலடித்த வாழ்வின் புழுதியிலே வாடுகையில்
மயலெடுத்து வந்த மருக்கொழுந்தே! காய்ந்துலர்ந்த
பூமி செழிக்கப் பொழிந்துவந்த பொன்மழையே!
பாமுளைத்த சங்கத்தில் பயின்றுவந்த மெய்ம்மொழியே!
புதுப்பல் தெரியப் புலர்ந்துவரும் புன்னகையில்
சொதப்பியசொல் தேனமுதம்! மனவீட்டின் சுடர்விளக்கு!
பெற்றவர் வாழ்வின் பெருமிதமே! மற்றவர்க்குக்
கற்று முடியாத கவிதையே! கைக்கொண்டு
மணல்வீடு கட்டி விளையாடும் காலத்தே
பணமென்றும் இனமென்றும் பிரிவினைகள் பார்த்தறியாய்;
சாதிகுலம் பார்த்துத் தடுமாறும் மக்களுக்கு
நீதியிது தானென்று நிகழ்த்துகிறாய்; பாதியிலே
மேய்ச்சல் நிலம்தேடி மந்தையொடு வந்தவரின்
பூச்சாண்டி அன்றோஇப் புதியவகைப் பிரிவினைகள்!
அறிவை விலைபோக்கி அடுத்தவரின் தடித்தனத்தை
அரியதெனக் கொண்டாடும் கரியமனம் நீயறியாய்!
தன்னை உவப்பாரைத் தானுவந்து தாவிவரும்
மின்னலே! பூங்காற்றில் மிதந்துவரும் தென்பாங்கே!
கன்னி யொருத்தி கடைத்தெருவிற் போகுங்கால்
சின்னவிழி பாய்ச்சும் சிறியகுணம் நீயறியாய்!
ஆள்பார்த்துப் பேசி அவர்காலை இடறிவிட
நாள்பார்த்துக் கொண்டிருக்கும் நாகரிகம் கற்றறியாய்!
கூடிப் பழகுவதில் குறைசெய்த பெரியவர்கள்
நாடி நரம்பெல்லாம் நஞ்சான காரணத்தால்
ஐயமுற்ற பார்வைகளால் அவரவரும் வேகின்றார்;
வையமுற்ற துன்பத்தின் வேரிதுதான்! ஆனால்நீ
ஒத்த வயதினரோ டோடிவிளை யாடுகையில்
சத்தியத்தின் தீக்கொழுந்தாய்ச் சரம்பிடித்து நிற்கின்றாய்!
களித்தாடு கின்றாய்ஓர் கரவறியாய்; தூண்மறைவில்
ஒளித்தாடு கின்றாய்நீ உள்ளம் ஒளித்தறியாய்!
ஊரெல்லாம் உன்னுறவு; உலகமெலாம் உன்னுரிமை;
சீரெல்லாம் திரண்டிருக்கும் செந்தமிழே உன்னுவமை!
அன்பறியும் குழந்தாய்!உன் அருமை பெருமைகளை
முன்பறிந்து வள்ளுவனார் மொழிந்த மொழிப்படியே
"மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவி"க்குண்மை! மானிடரின்
இழந்தபழம் பண்பெல்லாம் கொழுந்துவிடும் பண்ணையே
குழந்தை குலவும் குடில்!

ம. நாடு
1963.4.19

- ப. மு. அன்வர்

## 604. சொல்லாத சொல் என்ன சொல்?

அக்கச்சி அம்மாட்டே ஆக்கூடி என்னுஞ்சொல்
மக்கட்குத் தேனார் மழலையடி - தக்கபடி
கல்லாத போழ்துங் கனிவாயால் அம்மழலை
சொல்லாத சொல்என்ன சொல்?

த. மலர்
1964.4.8

- சி. அன்பானந்தம்

## 605. பொய்யூரும் மெய்யூரும்

பொய்யூரை நம்பிப் புனிதமறும் மானிடர்காள்!
மெய்யூரை நம்பி விரைந்திடுவீர் - பொய்யூரில்
பொல்லாங்குந் தீதும் புரையும் மலிந்திருக்கும்
இல்லையே மெய்யூரி லஃது.

மக்களுடன் சேர்ந்து மனமொன்றி வாழ்ந்துவந்தால்
முக்காலும் நன்மை முடுகிவரும் - தக்கதின்றி
வாழ்ந்தால் வளமற்று வன்செயலுக் காளாகித்
தாழ்ந்தொழிவர் தக்க தறி.

குடியுங் குடித்தனமும் கொள்கையும் மாண்பும்
படிதல் மனத்தின்கண் பண்பாம் - இடியெனவே
தொல்லையுந் துன்புந் தொடரும் நெறியற்ற
புல்லமனத் தார்க்குப் புகல்.

செமுஞ்.
1969

- நாச்சிகுளத்தார்

# 606. வாழ்வின் கதை

கிள்ளை மொழியுடைய பிள்ளைக ளாயிங்கு
வந்து பிறப்பதுவும் - வளர்
முல்லை மலரெனும் வாயிதழ்ப் புன்னகை
முத்தம் உதிர்வதுவும் - இன்பம்
கொள்ளை கொள்ளையெனப் பெற்றோரும் சுற்றோரும்
கூடி மகிழ்வதுவும் - தூய
வெள்ளை மனமிசைப் பிள்ளைகளே இங்கு
வாழ்வின் தொடக்கமடா!

வட்டி லிலேசோறு வைத்து மழலையின்
வாய்க்குள் உணவூட்டி - இசைக்
கட்டி லறைகண்ட மட்டில்லா இன்பத்தின்
காதல் கனியமுதை - மலர்த்
தொட்டில் கிடத்தியே துயிலுறச் செய்துமே
தொண்டு புரியு'மன்னை' - கன்றை
முட்டும் பசுவினைப் போலவே பிள்ளைக்கு
முத்த மழைபொழிவாள்!

பள்ளி யறைகண்ட பாச மழலைக்குப்
பட்டு உடுத்துவதும் - கற்கப்
பள்ளிக்குச் சென்றிடும் பாலன் அழகினைப்
பார்த்து மயங்குவதும் - பின்பு
துள்ளும் இளமகன் வாழ்வினி லேயொரு
தோகையைச் சேர்ப்பதுவும் - அவர்
கொள்ளும் மகிழ்வினைக் காண்கையில் பெற்றோர்
கும்மாளம் போடுகிறார்!

அன்புத் திருமக்கள் வாழ்க்கைச் செடியினில்
அரும்பை வேண்டுவதும் - பெரும்
இன்ப மொடுபேரன் பெயர்த்தியைத் தூக்கியே
இதயங் குளிர்வதுவும் - மனம்
அன்றை நினைவுப் பொய்கையில் மூழ்கியே
ஆனந்தங் கொள்கையிலே - வரும்
இன்றை முதுமையோ நெஞ்சைப் பிழிந்திட
எண்ணங் கலங்குகிறார்!

பள்ளிக்குச் சென்றுமே பாடங்கள் கற்றநல்
பிள்ளைப் பருவத்தையும் - இரு
உள்ளங் கலந்திட 'உத்தமி'யாள் வந்து
ஊடல் புரிந்ததையும் - பின்
செல்ல மழலையில் செஞ்சொல் மொழிகேட்டுச்
சிரித்து மகிழ்ந்ததையும் - தன்
பிள்ளைக் கொருபிள்ளை பிறந்த போழ்தினில்
பெருங்களிப் புற்றதையும்,

நித்தம் நித்தமிந்த நினைவுக ளெழுந்து
நெஞ்சினைக் கொத்துவதும் - அந்தப்
பித்த மயக்கத்தில் முன்னைப் பழங்கதை
பேசிப் பிதற்றுவதும் - இவண்
எத்துணைச் செல்வங் களோடுநாம் வாழ்ந்திட்டோம்
என்று புலம்புகையில் - சாவு
கொத்த மடிந்திட்ட மானிட னோடிவை
கூட வருவதுண்டோ?

பந்தமும் சொந்தமும் பல்கிய இன்பமும்
பாடையில் ஏறவில்லை! - உடல்
வெந்திடும் போழ்தினும் வீழ்ந்து புலம்பிடும்
வேடிக்கை மாறவில்லை! - பெரும்
விந்தைய டாஇந்த மானிடக் கூட்டத்தின்
வேதனை நாடகத்தில் - ஆட
வந்தவ ரெல்லாரும் போயிடு வாரொரு
வாழ்வுக் கதையிதடா!

த. முரசு
1966.5.22

- மதுராந்தகன்

## 607. ஆரழைக்க நீ பறந்தாய்?

பால்குழைத்தே உணவாக்கிப் பாய்விரித்தே அமுதூட்டக்
கால்மடக்கி முன்னமர்ந்த கண்மணியே நன்மணியே - உன்றன்
கால்முதலாய் மேனியெலாம் கண்ணீரால் நீராட்டிப்
பாழ்குழியில் வைப்பதற்கோ பாவிநான் தவம்புரிந்தேன்?

த. நேசன்
1979

- ஆறு. நாகப்பன்

# 608. என்செய்வேன்?

வடித்தெடுத்த கவிதைக்கோர் வடிவம்காண நினைத்திருந்தேன்
மடிகொண்ட பிள்ளைக்கு மண்காணப் பிடிக்கலையோ?

பத்துமாதம் நிறைவெய்தப் பரவசமாய்க் காத்திருந்தேன்
பாதியிலே போனதற்குப் பாவிநான் என்செய்வேன்?

பால்பொங்கு மேனிக்குப் பதிலென்ன ஐயோ!இவ்
வேல்கொண்டு பாய்ச்சியஓர் வேதனைக்கு மருந்துண்டோ?

'வளைகாப்பு'க் கவிதையிலே வரவேற்கக் காத்திருந்தேன்
இறுமாப்புக் கொண்டதனால் இருட்டறைக்குச் சென்றனையோ?

த. நேசன் - 'பாரதிநேசன்
1984.1.29

# 609. இறுதிப் பயணம்

ஊரிருக்கும் உறவிருக்கும் ஒற்றுமையாய்ச் சேர்ந்திருக்கும்;
நார்தொடுத்த மலர்களெல்லாம் நறுமணத்தை இறைத்திருக்கும்;
சேர்ந்திருக்கும் மக்கள்கண்ணில் திரள்மணிபோல் நீர்இருக்கும்;
யார்இருந்தும் என்னபயன்? என்பயணம் இறுதிஎன்பேன்!

நல்லதிரு விளக்கிருக்கும்; நாற்புறமும் ஒளியிறைக்கும்;
உள்ளமெலாம் தூய்மைபெற ஊதுவத்தி மணமிருக்கும்;
எல்லையிலா வேதனையில் இதயம்பல துடித்திருக்கும்;
நில்லென்றால் என்பயணம் நிற்பதில்லை, இறுதிஎன்பேன்!

அலங்காரத் தேரிருக்கும்; அதைத்தூக்க ஆளிருக்கும்;
துலங்குமணிப் பெட்டியிலே துயரறியா உடலிருக்கும்;
கலங்காத இதயமெல்லாம் கண்ணீரால் நனைந்திருக்கும்;
பலரிருந்தும் என்னபயன்? பயணமிது இறுதிஎன்பேன்!

வாழ்ந்தகதை தெரிந்திருக்கும்; வாய்கள்சில அதையளக்கும்;
சூழ்ந்தசில உறவுவழி தொகைக்கணக்கில் மிதந்திருக்கும்;
வீழ்ந்தழுது மனைவிமக்கள் வீதிவரை கலங்கிநிற்பர்;
ஆழ்ந்ததுயில் அணைத்துடலம் அமைதியுடன் பயணம்செய்யும்!

- சோமசன்மா

த. நேசன்
1976.3.17

# 610. பிணம் பேசினால்...

கணக்கும் முடிந்தது! கடைவழி திறந்தது!
காலனும் அழைத்தான் என்னை!
பிணக்கும் தீர்ந்தது! குழப்பமும் அகன்றது!
பிரித்தனர் மண்ணினின் றென்னை!

ஊடலில் கூடலில் உள்ளம் மகிழ்ந்திட
உலகெலாம் அலைந்தேன் அன்று!
ஆடலும் நின்றது! வாழ்வும் முடிந்தது!
அமைதியாய்த் துயில்கின்றேன் இன்று!

கால்களும் ஓய்ந்தன! கைகளும் சாய்ந்தன!
கல்போல் கிடக்கிறேன் நானே!
தோலும் மரத்தது தேகமும் கனத்தது
சுமையாய் ஆனேன் இன்று!

நாடு மதித்தது! வீடும் துதித்தது!
நற்புகழ் சூழ்ந்ததே அன்று!
வீடு விடுத்தது! காடும் அழைத்தது!
விரைகிறேன் பிணமாய் இன்று!

- க. சுகுமாரன்

# 611. காலன் அதிர்ச்சி!

எமனொருநாள் இறைவனிடம் ஓடோடி வந்தான்;
எல்லாமும் பறிகொடுத்தாற் போலத்தலை குனிந்தான்;
'உமக்கென்ன ஆன'தென்றே எம்பெருமான் கேட்டார்;
'உலகத்தில் அவமானம் அடைந்துவிட்டேன்' என்றான்.
'எமக்கென்று பணிபுரியும் உமக்கொன்று வந்தால்
எமக்குமது வந்ததுதான் என்னசொல்வாய்?' என்றார்;
தமக்கென்றே அளித்திருக்கும் உயிர்பறிக்கும் தொழிலில்
தாம்சிலரைப் பறிக்கவிய லாநிலையைச் சொன்னான்.

சேவகனின் புதுவிழிப்பைப் புரிந்துகொண்ட தேவன்
செயலினிலே குறைநிகழ்ந்த தெதனாலே என்றான்?
'பாவத்தைப் பொடியாக்கும் என்னிதயக் கோனே!
பார்த்துவந்தேன் இதுநெடுநாள் இருந்துள்ள' தென்றான்
ஆவலதி கரித்திடவே விழியுருட்டி ஈசன்
'அப்படியா? மரணத்திற் பிழையென்ன?' என்றார்.
தாவிவலை வீசிவரும் சாவோலைத் தலைவன்
தட்டுண்டு தடுமாறி விவரிக்க லானான்.

"எவ்வூரில் எவ்விடத்தில் என்னென்ன விதையை
இடுவதெனக் குறிபார்த்து நடக்குஞ்செய லொன்று;
அவ்விதையை நாள்பார்த்துக் கோள்பார்த்தே ஓர்நாள்
அடியோடு பிடுங்கிவரல் என்தொழிலாம் மண்ணில்
எவ்வுயிரும் எவ்வுடலும் எங்கிருந்த தேனும்
எமகாலம் வந்துவிட்டால் என்னடிமை தானே!
இவ்வளவு திறனிருந்தும் எந்தைபெரு மானே!
இற்றைநாள் வரையில்நான் குருடாயிருந் தேனே!

வள்ளுவனென் றொருமேதை வாழ்ந்தாரே முன்பு
வான்புகழும் பழம்பெருமை தமிழகத்தில்; மக்கள்
உள்ளத்தைக் கவர்ந்திமுத்தே உடல்தளர்ந்த போதும்
உரமழியா முதலமைச்சர் 'எம்.ஜி.ஆ'ரை இங்கே
அள்ளிவர அந்நிலத்தில் அடியெடுத்து வைத்தேன்;
ஆண்டவரே அங்கேதான் ஆச்சரியம் கண்டேன்!
வள்ளுவரை வாரிவிட்டோம் என்றெண்ணி இருந்தோம்
வாழுகிறார் அப்பெரியார் இன்றைக்கும் ஆங்கே!

ஆசிரியப் பெருமக்கள் கூறுகின்றார் நாளும்
'அறமுரைத்த வள்ளுவனார் சொல்லுகிறார்' என்றே;
பேசுதற்கு மேடையிலே ஏறுகின்ற காலை
பேச்சிலெல்லாம் விளம்புகிறார் 'வள்ளுவனார்' என்றே;
மாசில்லா மாந்தரெல்லாம் மதிநுட்பத் தோடு
மாத்திரைக்குக் கோடிமுறை செப்புகிறார் அவர்பேர்;
காசில்லா ஏழைகளும் காவலராம் வேந்தும்
காலமெல்லாம் வள்ளுவத்தைக் கடைப்பிடிக்கின் றாரே!

அதுமட்டு மல்லாது பக்கமெலாம் பார்த்தேன்;
அங்கேயும் ஈழத்தும் வள்ளுவரைப் புகழ்ந்தார்;
இதுதானா இன்னுமந்த மலேசியத்திற் பார்த்தேன்;
'இதுதாம்பா வள்ளுவனார் கோட்ட'மெனப் புகன்றார்;
'எதுவாக இருந்தாலும் வள்ளுவம்போல் ஆமோ?'
எனக்கூறும் ஒருகூட்டம் சிங்கையிலும் கண்டேன்
பொதுவாகச் சீர்தூக்கிச் சிந்திப்போ மானால்
புகழ்பெற்ற புலவரெலாம் சாகவில்லை எங்கும்!

'கண்ணாரக் காணவில்லை அவரைஅவன் எனினும்
காதாரக் கேட்டுவந்தேன் அவரிறக்க வில்லை;
கண்ணுக்குத் தோன்றவில்லை என்பதனால் அவரின்
கதைமுடிந்த தென்றுரைக்க ஒண்ணாதே தேவா!"
பண்ணாகப் பாடிநின்றான் எமதருமன்; ஈசன்
புன்முறுவல் ஒன்றுதிர்த்துப் பூத்தமுகத் தோடு
நன்று"துறந் தார்பெருமை துணைக்கூறின் வையத்(து)
இறந்தாரை எண்ணிக்கொண் டற்"றென்றே சிரித்தான்!

- இளந்தமிழன்

# 612. செயலினை மறப்பதுண்டோ?

இந்தியப் பெரியார் காந்தி, இத்தரை புகழும் புத்தர்,
சந்ததிக் குயர்வே தந்த சரித்திரக் குறளார் இன்னார்
எந்தையர் சிறப்பை மண்ணில் எங்கணும் நிலைக்கச் செய்தார்!
சிந்தனைக் குரிய அந்தச் செயலினை மறப்ப துண்டோ?

ம. மகள்
1961

- அதிரைதாசன்

# 613. மஞ்சப் போர்!

'நீயெனக்குப் போர்வையாம்; நானுனக்கும் அப்படியே!
பாயெடுத்துப் போ'டென்றேன்; பாவையவள் 'தூயவரே!
இல்லை குளிரெனக்கு வீணாக ஏன்போர்வை?
தள்ளியே வைப்பீர் தலை'யென்றாள்; 'கள்ளியே!
பொங்கிவரும் ஆவலினைப் போட்டுடைக்க எண்ணுவதோ?
இங்கு வருவாய் இசைந்'தென்றேன்; 'செங்கதிரே!
ஆவலொரு பக்கத்தே ஆர்ப்பரித்தால் என்னபயன்?
சேவல் விரட்டிடினும் சேர்ந்திடுமோ? ஆவல்தான்
மீறாத பேடை! விடைதருவீர்' என்றாளே!
'ஓராறு திங்கள் உயிராம்நீ கூறாத
சொல்லெல்லாம் இன்று தொடுப்பதுமேன்? உன்நெஞ்சம்
கல்லாகிப் போனதேன்? கற்கண்டே! சொல்'லென்றேன்;
'அன்றாடம் காதல் அரவணைப்பா? இன்றொருநாள்
ஒன்றாயில் லாமல் ஒதுங்கினா லென்?'என்றாள்
'என்னேடி சொன்னாய் இளங்கிளியே! இன்றுனது
கண்மூடிப் போனதோ? காரிழந்த மண்ணாக
உன்நெஞ்சம் ஆனதோ? ஊற்றாய்ப் பெருகிவரும்
அன்பும் வறண்டதோ? ஆரணங்கே! என்மேலே
கொண்டிருந்த நேயம் குலைந்ததோ? நான்வாடல்
கண்டு களிக்கக் கனிமொழியே! எண்ணினையோ?
பூப்போன்ற நெஞ்சமாம் பூவையருக் கென்பார்கள்!
ஆப்பெடுத் தெம்மில் அறைந்துவிட்டே தீப்போலச்
சுட்டெரிக்கும் வல்லமையும் பெற்றவர்கள் பெண்களெனச்
சுட்டிவிட்டாய்' என்றேன்; சுடர்விழியாள், 'கொட்டுவதேன்
வீணான சொற்கள்? விவரம் அறியாமல்
தேனான காதல் சுவையதுதான் ஆண்பெண்ணின்
கூட்டு மனத்தின் குவையன்றோ? ஓர்புறத்தே
வாட்டும்தீ மற்றதோ வாவிநீர் கூட்டாகச்
சேர்ந்திடுதல் எங்ஙனம் செப்பிடுவீர்? கூடலெனில்
ஓர்மனத்தால் ஒருடலாய் ஒன்றாதல் தோர்ந்திடுவீர்!'
பாவையுரை போக்கினாள்; பள்ளம்பாய் நீரானேன்;
'நாவை யடக்கிடுவாய்; நானுன்னை மேவுமுயிர்
மேலாக எண்ணினேன்; வேறுபட்டாய்; இவ்வளவு
கீழாவாய் என்றுநான் எண்ணவில்லை; தேளாகிக்

கொட்டினாய் என்றாலும் கொள்ளேனே துன்பம்!நீ
எட்டியே நும்செல்வாய்' என்றேனே! மொட்டவிழ்ந்த
பூப்போன்ற கண்களால் புத்தொளியைப் பாய்ச்சியே
'நாப்பழக்கம் நீங்கள் நவின்றமொழி; காப்பதுபோல்
பெண்ணுரிமை பேசுவீர்; மண்ணில் சமவுரிமை
நின்று நிலைக்க நெடுங்குரலும் தந்திடுவீர்;
மஞ்சத்தில் உங்கள் மனம்விரும்பும் போதெல்லாம்
கொஞ்சிட முன்வருவீர்; கோதைமனம் சஞ்சலத்தில்
ஆழ்ந்திருக்கும் போதும் 'அது'வேண்டும் உங்களுக்கு!
வீழ்ந்த உரிமை விளக்கெரிந்தால் காழ்ப்பினால்
பாய்ந்துவரும் வாய்ச்சொல்; பழமை மறந்துவிடும்!
ஆய்வுரைகள் எல்லாம் அழகுதான்! தாய்மனத்தின்
வெம்மை தணிக்க விதியில்லை' என்றவளும்
'உம்'மென்றே வேறுபக்கம் ஓட்டினாள் தன்பார்வை!
'என்னேடி இஃதெல்லாம்? இன்றுனக்கு வந்ததென்ன?
மண்ணுலகப் பெண்குலத்தை ஒன்றாக்கி முன்னின்று
போராடத் திட்டந்தான் போட்டனையோ கூறடியே!'
ஓரடிபின் வாங்கி ஒடுங்கினேன்; சீறடியாள்
வாளோச்சி வென்ற மறவனைப்போல் முன்வந்து,
வேலெடுத்த விழியால் விடைசொன்னாள்: 'ஆளரே!
கொண்டாள் நிலையைக் குறிப்பால் உணராமல்
அண்டையில் வந்தே அதிகாரம் பண்ணுவதே
ஆண்களின் வேலையாம்! அன்புடையாள் அந்நேரம்
தேனாய் உரைக்கும் திருமொழியும் வீணாகும்!
கண்ணோட்டம் இல்லார் கதையை வள்ளுவனார்
பண்ணேற்றிப் பாடிப் பயனென்ன?' என்றவளும்
சொல்லிப் புறம்திரும்பிச் சுட்டெரிக்க ஏளனத்தைக்
கொல்விழியில் ஏற்றிக் குறும்பாக, முல்லை
அலரச் சுவர்பார்த்தாள்; ஆயிரமாய்ச் சாட்டை
விழவே தலைதாழ வெட்கி அழுவதுபோல்
'ஆரமுதே! என்றன் அறிவு தெளிந்ததடி!
மீறும் உணர்ச்சி விலகியதே வேறறவே
உள்ள நிலையுணர்ந்தேன்! ஒண்டொடியே! சொன்னபடி
தள்ளியே வைப்பேன் தலை.'

த. முரசு
1973.10.14

- முரசு. நெடுமாறன்

# 614. முல்லைச் சிரிப்பு

உண்மையைப் பொய்யைப் பாடி, உலகத்து அழகைப் பாடி,
கன்னியர் எழிலைப் பாடி, காதலர் சுகத்தைப் பாடி,
தண்ணிய மலராம் முல்லைத் தளிர்நகை பாடா விட்டால்
என்னநான் கவிஞன் என்றே இன்றெனை உலகம் கேட்கும்!

உடுக்கவோ கந்தை யின்றி உண்ணவோ கூழு மின்றிப்
படுக்கவோ குடிசை யின்றிப் பக்கத்தில் உறவு மின்றிப்
வடுப்பட்ட உளத்தோ டேங்கி வாழ்ந்திடும் ஏழை மக்கள்
அடுப்பிலே உலையைக் கண்டால் அவருளம் சிரிக்கும் முல்லை!

வட்டிக்குக் கடனை வாங்கி வறுமைக்கு முக்கா டிட்டு
மட்டிலா ஆசை யோடு மகன்தனைப் பயில வைத்துப்
பட்டியில் வாழும் தந்தை பையனின் வெற்றி கேட்டுக்
கொட்டுவ தெல்லாம் முல்லைக் குளிர்மலர் சிரிப்புத் தானே!

- வளவை வேலன்

த. நேசன்
1983.1.2

# 615. மெய்மையே நிலைபெறும்!

இறைவ னருட்செல்வ மெய்தியவ ரென்றும்
குறைபொருட் செல்வங்கொள் வாரோ? - நறைகமழும்
கற்பகக்கா நீழலின்பங் கண்டுவந்தார் வேறுலகில்
அற்பவின்பம் வேண்டுவரோ ஆங்கு.

ஆசையினை மேற்கொண் டறத்தை அகலவிடல்
நேசருக்காய் ஆன்ற நெறிதவறல் - கூசாது
பொய்கூறி நிற்றல் பொருந்துவரோ பூதலத்தில்
மெய்கூறி வாழ்வோர் விழைந்து?

பொருளுடைய ரேனும் புகழுடைய ரேனும்
அருளுடையோர் முன்னர் அடுத்தால் - தெருளுடைய
நல்லார் குழுவில் நனிசேர்வர் நல்லுணர்வில்
பொல்லாச்சொல் நில்லாது போம்.

பொய்மை நிலைபெறினும் பொன்றும் நொடிப்பொழுதில்
மெய்மை மறைந்திடினு மேவிளங்கும் - கைமா[17]முன்
பன்றி எதிர்த்திடா, பாரில் பெரியோர்சொல்
என்றும் விளைக்கும் இதம்.

செல்வம் வளம்பெறுமேல் தெய்வத்தை முன்மறப்பார்
நல்லவையை எள்ளி நகைத்திடுவார் - நல்லார்சொல்
எண்ணிமேற் கொள்ளா ரிடர்செய்தே இன்புறுவார்
மண்ணின்மேல் வாழுமட வார்.

நாயக. - பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது
1968

# 616. மலைநாடு பெற்ற மகன்

சீனர் மலாயரொடு சேர்ந்துறைவான் நாடோறும்
ஊனும் உருக உடலுழைப்பான் - வானத்
தலையளிபோல் தண்ணளியான் தானயலென் றெண்ணான்
மலைநாடு பெற்ற மகன்.

த. முரசு - புலவர் அ. முத்தையனார்
1960.4.25

# 617. ஆசியான் மாநாடு

மலைநாட்டின் வரலாற்றிற் புகழைச் சேர்க்கும்
மதிப்புடைய நிகழ்ச்சியென உலகம் போற்றப்
பலநாட்டின் பிரதமர்கள் ஒன்றி ணைந்த
பெருமைமிகு மாநாடே இம்மா நாடு!
நிலைகெட்ட தீயவர்கள் நாட்டுக் குள்ளே
நடமாடித் தீமைகளைச் செய்யா வண்ணம்
பலபட்ட சத்தியினைத் திரட்டு தற்குப்
புலப்பட்ட மாநாடே இம்மா நாடு!

ஆசியானின் ஐக்கியத்தை எடுத்துக் காட்டும்
அரியதொரு கூட்டுறவுச் சந்தை இந்தக்
காசினியில் அமைதற்கு வழியாய் நிற்கும்
கருத்துடைய மாநாடே இம்மா நாடு!

---

*17 கைமா - யானை*

தேசத்திற் றொழிற்பஞ்சம் தீர்ப்ப தற்கும்
தொழிற்சாலை கட்டிவளம் பெறுவ தற்கும்
நேசத்தால் உயிரீந்த துன்ர சாக்கின்
நேர்மைக்குச் சீர்மைதரும் இம்மா நாடு!

பொருளியலும் தொழிலியலும் பெருக்கி நாட்டைப்
புனிதமுடன் தற்காத்துச் செழுமை காணப்
பெருமளவிற் றுணைநின்றே உதவி செய்த
பெருமைமிகு உசைன்ஓன்[18] இந்த மண்ணில்
அருமையிலும் பெருமையிலும் தகைமை சான்ற
ஆட்சியினில் மாட்சியினைப் பெற்று நாளும்
பெருமையொடு பல்லாண்டு மகிழ்ந்து மக்கள்
பொலிவுடனே வாழவழி செய்க நன்றே!

முத்துச். - டி. வி. இராகவன்பிள்ளை
1983

## 618. மீட்குமோ?

காலத்தால் வாழ்ந்து கெட்டுக் கண்ணீரில் மூழ்கி நிற்கும்
ஈழத்தைப் பார்க்கும் போழ்தில் ஈனமாய்ச் சாகத் தானோ?
ஞாலத்தில் தமிழர் என்றே நல்லினம் வந்த தையோ!
சோழத்தின் கொடிப றந்த செயலென்ன பொய்யோ கூறாய்!

ஆண்டிட்ட இனத்தின் குரலை அடக்குமோ வேட்டுச் சத்தம்!
கூண்டுக்குள் புயலை யடக்கக் கூடுமோ? என்ன திட்டம்!
நீண்டிட்ட உரிமைப் போரில் நிற்குமோ புலிகள் கூட்டம்!
மீண்டுமோர் தனிய ரசினை ஆக்குமோ அழிந்தே போமோ?

காலமே சொல்லப் போமோ? கடுந்துயர் பட்டு நாளும்
வீழுமென் அன்புத் தமிழர் வீழ்ச்சியைத் தடுக்கப் போமோ?
வேழமும் பரியும் கொண்டு வீழ்த்திய சரித மெல்லாம்
கோலமாய்க் கலையும் போது குலம்மட்டும் வாழ்தல் உண்டோ?

சமநீதி - நா. இராசமோகன்
1986

---

*18 உசைன்ஓன் - துன் ஹுசைன்ஓன்; மலேசியாவின் மூன்றாவது தலைமை அமைச்சர்*

## 619. தமிழ்க்கொடி வாழ்க!

சொல்லெலாம் இனிமை பொருளெலாம் இனிமை
துறையெலாம் இனிமைசொல் லமரில்
மல்லெலாம் புரியும் நாவெலாம் இனிமை
மனமெலாம் உணர்வெலாம் இனிமை
கல்லெலாம் கனியும் பாவெலாம் இனிமை
கருத்தெலாம் இனிமையே கமழும்
நல்லபைந் தமிழ்ப்பூஞ் சோலையில் நட்ட
நலந்தரு தமிழ்க்கொடி வாழ்க!

மதுரமார் கனிகள் பழுத்தயல் நின்ற
மரத்தின்மேற் றாவிய மந்தி
புதுமணங் கொண்டாண் டிருந்தபுள் பெடையைப்
புல்லுறற் கண்டுதற் பிரிந்த
வதுவையிற் கலந்த மணாளனை யுன்னி
வருந்தியின் கனியுண மறுக்கும்
கதியுறு காதல் வளர்மலா யாவிற்
கலைவளர் தமிழ்க்கொடி வாழ்க!

நீண்டநா ளாகத் தமிழ்மொழி வளர்க்க
நேரிய மாதசஞ் சிகையொன்(று)
ஈண்டிலா திருந்த நிலைமையை யுன்னிக்
கவலுறும் போழ்தெமை யெல்லாம்
பூண்டபே ரணிகள் கலைகளாய்ப் பொலிய
நாமகள் பிறந்தன ளெனவிவ்
ஆண்டுநீ தோன்றிக் களிப்புறச் செய்தாய்
அருங்கலைத் தமிழ்க்கொடி யணங்கே!

கலைப்பசிக் கமுதாய்த் தோன்றிய காம
தேனுவே கவினுறப் பொலிந்து
நிலப்பசி கொண்ட நீணில மன்னர்
நெஞ்சுறு மாசையின் விரிந்து
உலப்பிலா வூக்க நடையிடை வாக்கு
நயம்பொருட் செறிவெலா முணர்த்தி
அலைப்பிலாச் சீர்த்தி பரவிட ஆக்கம்
அடைந்துநீ டூழிநீ வாழி!

த. கொடி
1941

- வெ. இராமசாமி

# 620. வாழி தமிழ்நேசன்!

கீழைத் திசையெழுந்து சீறிவிழும் மின்னாற்றல்
போலும் இவண்எழுந்து பொன்னொளிர்ந்தாய் அம்மானை!
போலும் இவண்எழுந்து பொன்னொளிர்ந்த நின்நடையில்
சாலத் தமிழ்புதுக்கிச் சார்ந்துநின்றாய் அம்மானை!
சாரும் துறையெல்லாம் நீயானாய் அம்மானை!

எண்ணற் கரியசெயல் ஏற்றே இனத்திடையே
மின்னல் தெறிப்பெனும்நல் வித்தானாய் அம்மானை!
மின்னல் தெறிப்பெனும்நல் வித்தாய் விளைந்ததுவால்
கன்னல் இனிப்பினையாம் காணுகிறோம் அம்மானை!
காண உளம்மகிழ்ச்சி பூணுகிறோம் அம்மானை!

துய்ய பணித்தொடர்கள் தோற்றத்தின் ஆக்கம்நீ
உய்யும் இனநலத்தை ஓம்புவைநீ அம்மானை!
உய்யும் இனநலத்தை ஓம்பும் தனித்தன்மை
ஐய! எவர்க்கிங்கே ஆனதுகாண் அம்மானை!
ஆன செயல்யாவும் பூனைமதில் அம்மானை!

ஐம்பத்தோ டொன்ப தகவை நடைபயின்றாய்!
செம்பொன் மணிபோலும் சீர்பெறுக அம்மானை!
செம்பொன் மணிபோலும் சீர்பெற் றிலங்கிநின்று
அம்பொன் தமிழ்பேணி ஆற்றுகநீ அம்மானை!
ஆற்ற இனமொருங்கே போற்றிவரும் அம்மானை!

வாழி தமிழ்நேசன்! வாழி! எனும்வாழ்த்து
நாழி தொறும்மிகுந்து நாட்டிவரும் அம்மானை!
நாழி தொறும்மிகுந்து நாட்டிவரும் வாழ்த்துரைகள்
ஆழி அலைபோலும் ஆர்த்துவரும் அம்மானை!
ஆர்ப்போ சிலர்க்கிங்கே வேர்த்துவரும் அம்மானை!

பேராண்டு நல்ல புகழாண்டு வையத்தில்
நூறாண்டு வாழ்கவென வாழ்த்துகிறோம் அம்மானை!
நூறாண்டு வாழ்கவென வாழ்த்துவதைப் போல்கோடி
நூறாண்டு வாழ்க தமிழ்நேசன் அம்மானை!
நோக்கத்தால் வெல்க தமிழ்நேசன் அம்மானை!

த. நேசன் - எல்லோன்
1982.9.10

# 621. முரசின் முழக்கம்

சாரங்க பாணித் தமிழவேள் எனும்பெரிய
வீரன் வினையாளன் விண்ணின்று - கார்கள்
அமுதம் பொழிவதுபோல் ஆற்றுமவன் வண்மைத்
தமிழ்முரசு என்றதினத் தாள்.

நல்ல இலக்கியங்கள் நாவலர்க்கு நல்விருந்தாய்ச்
சொல்லும் பொருட்சுவையும் துன்னியதாய் - எல்லையில்
புத்தம் புதிய பொதுவர்த்த மானமெல்லாம்
நித்தம் முரசுதரும் நேர்.

மலாயத் தமிழருக்குள் மாற்றம் ஒழித்தே
அலைபோல் சிறுவரறி வாய - நிலைநேர்
மணிமன்றம் கண்டநல் மாண்பாம் முரசே
அணிமன்றம் ஆய்ந்தோர் அகம்.

மொழியால் தமிழர்கள் முன்னேற நல்ல
வழிகள் வகுத்துமே வாகாய் - ஒழுகும்
சமயம்வே றாயினும் தாய்நாடு ஒன்றென்
றமையு மெனமுரசு ஆர்த்து.

மலையாத் தமிழர் வருடங்கள் தோறும்
குலையா தொருமித்துக் கூடி - நிலையாய்த்
தமிழரினம் ஒன்றா மெனமுரச றையும்
தமிழர் திருநாளே தான்.

சிங்கைக் கலைக்கழகம் செந்தமிழை ஏற்பதற்(கு)
எங்கு முழங்கி இனியதமிழ் - எங்கள்
உயிரென் றேயுரைத்து உயர்வெற்றி கண்ட
முயற்சித் திருவாம் முரசு.

த. முரசு
1956.10.7

- பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது

# 622. கவிதைச் செல்வி

தேமாங்காய் புளிமாங்காய் கூவி எங்காய்
தெரிந்துகொண்டு தளைஅசைசீர் எண்ணிக் கொண்டு
தாமாகச் சொற்களினைப் பொறுக்கிப் போட்டுத்
தயங்கிவரும் எதுகையொடு மோனை சேர்த்துப்
பூமீது கவிதையெனப் புலம்பி நின்றால்,
புலவரெனத் தம்பட்டம் அடித்துக் கொண்டால்,
ஏமாளி இவரைப்போல் யாரே உள்ளார்?
இவருக்கும் கவிதைக்கும் தொடர்பே யில்லை!

உள்ளத்தின் உணர்ச்சியெலாம் சொற்க ளாகி,
ஒழுங்காகத் தடையின்றிப் பாய வேண்டும்!
வெள்ளம்போல் கேட்போரை அணைக்க வேண்டும்!
வேறுலகம் புத்துலகம் காட்ட வேண்டும்!
நள்ளிரவில் மனைபுகுந்த திருடன் போன்று
நடைபயின்று மெதுவாகத் தயங்கி வந்தால்,
எள்ளளவும் அதிற்கவிதை இனிமை காண
எப்படித்தான் முயன்றாலும் இயலா தப்பா!

திகழ்மொக்கை மலர்கவென மொழிவார் யாரோ?
தென்றலினை வீசென்று சொல்வார் யாரோ?
அகம்பூக்கும் கவிதைமலர் தானாய் அன்றி
அலராதே ஒருபோதும் அடுத்தோ ராலே!
பகலென்றும் இரவென்றும் காலம் நேரம்
பார்த்தபடி வரமாட்டாள் கவிதைத் தேவி!
சுகம்நல்கும் துயிலினிலும் எழுப்பிப் பாடம்
சொல்லிடுவாள்! பாயுமடா கவிதை வெள்ளம்!

பாட்டரசி கண்பார்வை படுவ தற்குப்
பத்தரெனப் பாவலர்கள் காத்தி ருப்பார்!
கேட்டவுடன் வரம்நல்க மாட்டாள்! அன்பாய்க்
கெஞ்சிடினும் தொழுதாலும் இரக்கம் காட்டாள்!
தேட்டமுடன் இருப்போரைத் தவிக்க விட்டுத்
தேடாத வேளையிலே தானாய் வந்து,
காட்டுவளே எழில்முகத்தைக் காள மேகம்
கற்பனைபோல் கவிபாடிக் களிக்க லாமே!

- க. து. மு. இக்பால்

த. முரசு
1968.8.4

# 623. தேயிலை பறிக்கும் அழகு

பச்சைப் பசுந்திரை மலைமேலே
பனிப்படல மெங்குஞ் சூழ்ந்திருக்கக்
கச்சை இடையினில் கட்டிநல்ல
கனமில்லாக் கோணியைப் பின்மாட்டி
இச்சை முகம்மலர்ந் திடக்கூந்தல்
இறுக்கிச் சுழற்றிச் செருகும்பெண்டிர்
உச்சிக் கொழுந்தாம் தேயிலையை
உயர்த்தி யெடுத்திடச் சென்றிடுவார்!

செங்கதிர் கொண்ட சூரியனும்
சோர்வினைத் தந்திடும் முன்பாக
மங்கையர் செங்கையால் கொய்தெடுக்க
முனைந்திடு வார்பசுங் காட்டுக்குள்ளே
தங்கையர் சூழப் பனித்துளிகள்
தாவியே பாய்ந்திடும் புல்தரையில்
அங்கும் இங்குமாய் இலைபறித்தே
அன்புடன் பேசி மகிழ்ந்திடுவார்!

- க. இராமசாமி

குமர.
1987

# 624. விடுகதை வெண்பா

மூன்றெழுத்துச் சொல்லின் முடிவெழுத் தோர்திங்கள்
தோன்றும் முதலிரண்டும் தொல்குரங்காம் - ஆன்ற
கடையிரண்டும் வித்தாகும் காணுநடு நீக்கி
விடையென்ன சொல்க விரைந்து.

கவிதை

ஊர்ப்பெயரோ மூன்றெழுத்து ஒன்றிரண்டும் தேனாகும்
சீர்நேர் நடுவெழுத்தைச் சேதித்தால் - பார்போற்றும்
மானாம் முதலெழுத்தை மட்டும் எடுத்திட்டால்
தீனமிலாச் சீமானாம் தேர்.

மதுரை

தோன்றும் முதலெழுத்துச் சோலையெனில் ஈற்றெழுத்தைத்
தோன்றா தொழித்துவிடில் சொல்சிவப்பாம் - மூன்றெழுத்தில்
மையத்தை வெட்டிவிடின் வையத்தின் ஓர்வள்ளல்
பையநீ சொல்க பதில்.

காவிரி

- வி. இக்குவனம்

## 625. பழங்குடி மக்கள்

சொக்குப் பச்சையாம் தூரக் கிழக்கில்
கொக்கின் நிறமொத்த குளிர்பனிப் போர்வை
பக்கப் பார்வையிற் படுபள்ளம் மேடாய்,
மக்கள் பலவித மென்பது போல்படர்
காம ரான்மலைக்[19] காடு சிரிக்க,
ரோமஞ் சிலிர்த்த நொண்டி யொருவன்
ஊமத் தையிலைச் சுருட்டைப் புகைக்கச்
சாமத்தி லேயொரு சேவல் கூவிற்று;
மேட்டு மலையிடை மரத்தி னுச்சியிற்
காட்டுப் பனையின் ஓலையால் வேய்ந்த
குடிசையில் எரிந்த சுடுதணல் சுற்றிக்
கூட்டமாய்த் தூங்கினர் பழங்குடி மக்கள்;
மாங்கொட்டை யொன்றை வாயி லடக்கியே
தூங்கா திருந்தவோர் தொண்டு கிழவி,
ஆங்கே தூங்கிய அவள்செழுங் கிளைகளை
"வேங்கைப் புலிகளே! எழும்!எழும்!!" என்றாள்;
"என்ன! என்ன!! எங்க ளன்னையே!
தண்ணீர் வேண்டுமா? தாக மெடுக்குதா?
வண்ணக் குலத்து மாதவத் தாயே!
என்ன வேண்டி எழுப்பினாய்?" என்றனர்.
"ஆதி குலத்தின் அழியா மக்களே!
சாதிக் கலப்பில்லாச் சக்காய்[20] மறவரே!
சேதி யொன்று சொல்ல விழைந்துமக்
கோதுவேன் கேளுங்கள்: 'உங்கள் மாமன்னர்
நாளை வருகிறார் நம்நலம் பேண;

---

*19 காமரான் மலை (Cameron Highland) - ஓர் இடப்பெயர்*
*20 சக்காய் - பழங்குடி மக்கள்*

காளை யொருவ னந்தியிற் சொன்னான்;
மூளை குழம்பிய முதுகிழம் நானதைச்
சொல்ல மறந்தேன்; துரிதம்" என்றாள்;
வீறுகொண் டெழுந்த வேங்கைக் கூட்டம்,
ஊறு சுனையில் நறும்புன லாடி,
நாறும் மலர்களைச் சிகையிற் சூடிச்
சாறு பிழிந்து கன்னத் திழுக்கியே
பழங்குடி மக்கள் படையொன்று திரளக்
கிழக்கு மலையின் உச்சியை யெட்டிப்
பழுத்த பழம்போற் கதிரவ னங்கே
கழுத்தை நீட்டிக் கண்டான் படையை!
வந்த ஞாயிற்றை வணங்கிப் படைகள்,
"எழிலோய்! எங்களின் இயற்கைத் தலைவா!
வந்தாய்! இன்னொரு மகிழ்திரு நாளே!
'மன்னர் வந்துளார் போவோம் வா!'"எனக்
கட்டுத் தளராக் காளை கன்னியர்
பட்டுப்போல் மினுக்கும் பசுந்தழை யணிந்து
கூட்டம் நடந்தது கொடிமலை தாண்டிக்
கூட நடந்தான் ரவியும் மகிழ்ந்தே!

## வேறு

மங்கா வளங்கொண்ட மலாய நாட்டின்
மாமன்னர் குலம்வந்த பாகாங் சுல்தான்
பொங்கி யுளமகிழக் காமரான் கோட்டத்
தின்னதிபர் சீட்டொன்றை நீட்டிச் சொன்னார்:
“தங்கநிகர் பண்பினரே! எங்கள் வேந்தே!
பழங்குடிகள் கூட்டமொன்று களத்திற் கூடித்
தங்கியுள்ளார்; சமூகத்தின் வரவை நோக்கி!”
எனச்சாற்றத் தார்வேந்த ருளம கிழ்ந்து,

"தடையென்ன? புறப்படுங்கள் களத்திற் கென்னத்
தகையோனாம்! நற்பண்பன்! நிறைகு டத்தான்!
புடைசூழப் போய்ச்சேர்ந்தான்; பெருங்க டல்போற்
குடிபடைகள் வாழ்த்தொலித்து வணக்கஞ் செய்ய
உடையின்றிக் குளிர்மோதக் கோவண மொன்றே
உடுத்துள்ள மக்களிடம் "நலமா" வென்று
கொடைவள்ளல் மாமன்னன் கேட்ட போதே
குடிமக்கள் உளங்குளிர்ந்தார்; உவகை பூத்தார்!

முன்னேற்றம்
1956, ஜனவரி

- கா. பெருமாள்

# 626. நாலு நம்பர்!

"குதிரை ஓடக் கனவிற் கண்டால்
கூடி வரும்எண் பதினெட்டு!
புதிரை அறிந்தே எழுதி விட்டால்
பெருகி வந்திடும் பணநோட்டு!"
அதிர முழக்கி 'டத்தோ சாமி'[21]
ஆடி உரைத்த மொழிகேட்டு
எதிரே வந்த 'எக்கோர்'[22] முத்து
எனக்குச் சொன்னான்; அதுகேட்டு,

"கடைசிக் குழந்தை பசியால் அழுவது
கடைக்குப் போயி ஒருடின்னு
இடைச்சி பாலு வாங்கி வாங்க"
என்றாள்; நானும் சரியின்னு,
முடிச்சை அவிழ்த்தே மனைவி கொடுத்த
முழுஒரு வெள்ளி இருக்குன்னு
கிடைச்சா பெரிசா பாலு வாங்கிடும்
கருத்தில் வாங்கினேன் 'பிக்'[23]குன்னு!

மறுநாள், "நம்பர் ஏறிய தாவென
முத்துவைக் கேட்டேன்". குதிரைக்கும்
ஒருவால், தலையில் கண்கள் இரண்டே
ஓடும் கால்கள் ஒருநான்கு!
வரும்ஆள், கைகால், தலைகண், மூக்கை
வரிசைப் படுத்திக் கூட்டுகையில்
ஒருவால் தலையில் மாறிப் போனதால்
ஒருஎண் 'மிஸ்[24]ஸாய்ப் போச்சு'ன்னான்!

"பிள்ளை அழுவது பாலு வாங்கப்
போன்னு சொன்னா எரிதண்ணி,[25]
கள்ளைத் தினமும் குடிச்சு ஆடற
காலிக சொல்லை நம்பிக்கினு

---

21 டத்தோ சாமி - குறிசொல்வோர்
22 எக்கோர் - எண். இது நான்கு இலக்க எண் லாட்டரியின் குறியீட்டுச்சொல்.
23 பிக் (Big) - பெரியது - நான்கு இலக்க லாட்டரி வகையில் ஒன்று.
24 மிஸ் - தவறியது, இஃது ஆங்கிலச்சொல்.
25 எரிதண்ணி - எரிசாராயம்

உள்ள காசையும் உட்டுட்டு வந்தா
உருப்படு மா?"எனத் திட்டுகிறாள்!
நல்லா மறுமுறை நம்பரு எழுதி
நிச்சயம் பணத்தை வாங்கிடுவேன்!

உறவுகள் - ஆதம்குமார்
1979

## 627. ஏய்ப்பு!

நாலுநம்பர் தருவதாக நாளிதழில் வெளிச்சம்போட்டு
நம்மையெல்லாம் ஏய்க்கிறானடா! - சோதிடன்
நன்றாகக் கறக்கிறானடா! - பையில்
காசையெண்ணிப் போடுறானடா!

நாலுநம்பர் தெரிஞ்சிருந்தால் நாலுகோடி வச்சி
நம்மகாசு தேவையாதம்பி! - நீயும்
நல்லாத்தேடிப் பாருடாதம்பி! - நாளும்
நல்வழியைத் தேடிவாழ்தம்பி!

படித்தவனும் நம்புகிறான்; பாமரனும் மயங்குகிறான்;
பகுத்தறிவு என்னவாச்சுடா - தம்பி
பக்குவமாய்ச் சொல்லிக் காட்டடா - அதைப்
பண்புடனே எடுத்துக்கூறடா!

தின மணி - நல்ல. செங்கோட்டையா
1987.8.2

## 628. உறவுகள்

பயணத்தின் நோக்கம் தொலைவு! - அந்தப்
பாதையில் ஆயிரம் வளைவு!
பயணிகள் இடையினில் பிரிவு! - நன்கு
பார்!எது நிரந்தர உறவு?

முந்திக் கருவறை வந்ததில் சேருமுன்
தந்தை யுடனே உறவு! - உயிர்
தந்த உதிரத் தொடர்பினால் ஐயிரு
திங்கள் தாயுடன் உறவு!

அன்னை வயிற்றில் இருக்கும் வரையிலே
அந்தர இருட்டுடன் உறவு! - ஞால
மண்ணில் பிறந்திவண் கண்ணை விழித்ததும்
வந்தது ஒளியுடன் உறவு!

உடலெனும் இயந்திரம் ஓடிடும் வரையில்
ஒழுங்காய்க் காற்றுடன் உறவு! - அது
திடமாய்ச் செயற்பட உணவுடன் மிகவாய்த்
தேவையாம் நீருடன் உறவு!

சின்னப் பிள்ளையாய்ச் சிரித்திடும் போதுனைச்
சேர்த்தணை தோளெலாம் உறவு! - பயில
அன்ன நடையுடன் செல்கையில் பள்ளியில்
அமர்ந்துள தோழர்கள் உறவு!

தேமாஞ் சுவையாய்க் கற்றிடும் போதறத்
தெளிவருள் நூலுடன் உறவு! - இளமை
காமக் களிப்பினில் கற்பனைச் சுவனக்
காட்டிளம் பெண்ணுடன் உறவு!

விளைப்பின் அறுவடை விசையுணர் வாக்கமாய்
விளங்கிடு மகவுடன் உறவு! - அந்தத்
திளைப்பின் நிரந்தரத் தேக்கமாய்ப் பொருளினைத்
தேடிடத் தொழிலுடன் உறவு!

ஆட்டமும் ஈட்டமும் அடங்கிட வந்துடல்
அணைத்திடும் நோயுடன் உறவு! - நெஞ்ச
நாட்டமும் ஓட்டமும் நிழலுரு வாய்த்தினம்
நிகழ்த்திடும் பாயுடன் உறவு!

தண்மை களைந்துடல் தரிபட முறையாய்த்
தகிக்கும் நெருப்புடன் உறவு! - எனினும்
உண்மையில் இறப்புனை ஒன்றிடும் போதுடல்
உதித்த மண்ணுக்கே உறவு!

உறவுகள்
1979

- ஆதம்குமார்

## 629. கண்ணிரண்டும் போதாவே!

குளிப்பவர்கள்; ஆங்கே குமரியர்கள் கோலம்
அளிப்பதனைக் கண்டே அகத்தில் - களிப்பவர்கள்
நண்ணும்போர்ட் டிக்சன் நகரழகைக் காண்பதற்குக்
கண்ணிரண்டும் போதாவே காண்!

- சீ. மா. இளங்கோ

த. நேசன்
1972.1.23

## 630. மண்சட்டி!

செம்மண் கறைதீட்டிச் சித்திரித்துக் கோலமிட்டுச்
சும்மாடு கூட்டித் தூக்கியெனைக் குந்தவைத்துப்
பொட்டிட்டு என்கழுத்தில் பொன்னரளிப் பூச்சூடி
மொட்டு விரித்து முனைமுறியாப் பச்சரிசி
வட்டுக் கருப்பட்டியும் வாசமுள்ள 'ஆ'ப்பாலும்
இட்டு வணங்கி, இம்மண்ணார் வாழ்வோங்கிப்
பொங்கிப் பெருகப் பொங்கலிட்டுக் கன்னியர்கள்
மங்களம் பாட, மதிப்பேறி நானிருக்க,
அகப்பை அடிக்காம்பு ஆழப் பதிந்ததனால்
மிகச்சிறிய பொத்தலொன்று மேனியிலே உண்டாக,
'சில்லுவிட்டுப் போனதெல்லாம் சேவைக் குதவாது
தள்ளுவிட்டுக் குப்பையிலே! தரம்பார்க்க நேரமில்லை!'
என்றே எனைஒதுக்க என்னநான் செய்துவிட்டேன்?
கொன்று புதைத்தல் கொடுமை கொடுமையன்றோ?
'மண்ணால் உருவாகி, மங்களமாய் வீடேறி
உண்ணச் சமைக்க உதவிநின்ற மண்ணேகேள்!
கட்டுத் தளர்ந்துவிட்டால், காசும் குறைந்துவிட்டால்
விட்டுப் பிரிந்து வெகுதூரம் சென்றுவிடும்
மானிடனை நம்பி மண்ணேநீ மண்ணானாய்!'
போனதண்ணே நம்வாழ்வு! புதுப்பிக்க யாருமில்லை!

- கா. பெருமாள்

ச. மணி
1956.8.17

# 631. சும்மா!

வாய்கொடுத்தால் நிறுத்தாது சும்மா பேசும்
வளவாயர் பலபேரும் உண்டு; சோம்பி
நாய்வாலைப் போல்வளைந்து சும்மா தூங்கும்
நலக்கொள்கை காப்பாளர் உண்டு; சொல்லைக்
காயாக்கிப் புளிஉரைகள் சும்மா வீசும்
கண்ணியத்தைக் கொண்டவரும் உண்டு; பெற்ற
தாய்மொழியின் கல்வியினைச் சும்மா வென்றே
தடம்புரள விட்டவரும் உண்டு தானே?

காரியத்தோ டலைபவனும் சும்மா வென்பான்;
கையாலா காதவனும் அதையே சொல்வான்;
நேரத்தை நெஞ்சுக்குள் புதைத்து வைத்தால்
நிமிடங்கள் சும்மாவா செல்வ தாகும்?
தூரத்தே தெரிகின்ற வானம் கூடச்
சும்மாதான் அருகேபோல் தோன்றக் கூடும்;
மாறிவரும் காலத்தை உணரா தோரின்
மனக்கணக்கும் சும்மாவாய்ப் பிசகிப் போகும்!

காரிகையர் கண்ணுக்குள் புனலை வைத்த
காரணத்தைச் சும்மாவா சொல்ல ஏலும்?
ஏறுக்கு மாறாக இல்லாள் வந்தால்
எல்லாமும் அதில்அடங்கிச் சும்மா சாகும்!
பேருக்குத் தான்குடும்பம், நரகம் மேலாய்ப்
பேச்சின்றிக் காலத்தைச் சும்மா கவ்வும்!
ஊருக்கும் உறவுக்கும் பயந்தோர் மட்டும்
உள்மனத்துக் குள்சும்மா வாழ்ந்து போவார்!

நலமென்றும் எளிதென்றும் சோம்ப லென்றும்
நடை,இயக்கம் சராசரியாம் ஒழுக்க மென்றும்
பலமென்றும் செயலென்றும் அமைதி என்றும்
பணிவென்றும் ஒன்றுமில்லை என்று மிந்தப்
புலத்தமிழின் பலபொருளைச் சும்மா தாங்கும்!
பொருள்சொல்ல வியலாவா றின்னும் தூங்கும்!
புலமைக்கு விருந்தொன்றைப் படைத்தேன்; சும்மா,
போகட்டும்! எனஒதுக்கிப் புறம்வை யாதீர்!

1986 - எல்லோன்

# 632. பால்

நெல்லுக்கும் உமியுண்டு அதற்கும்ஓர்
கவிகேட்டீர், நினைக்கும் போதே
சொல்லுக்குள் அடங்காமல் இனிக்கின்ற
கரும்புக்கும் சக்கை யுண்டே,
பல்லுக்கும் ஒட்டாத பழத்திற்கும்
தோலுண்டே, பல்லு யிர்க்கும்
எல்லாமும் தருகின்ற பாலுக்கும்
ஓர்குறையே எவர்தான் சொல்வார்?

இமயத்துக் கிப்பாலும் எழுகடலுக்
கப்பாலும் எவ்வி டத்தும்
சமயத்தின் பண்பாலும் சமுதாயத்
தொடர்பாலும் தழுவும் வாழ்க்கை
அமைப்பாலும் வேறுபட்டு உணவாலும்
மாறுபட்டோர் அனைவர் பாலும்
இமைதூரம் விலகாத பாலுக்கும்
இணையாக எதுதான் உண்டு?

தயிருக்கும் மோருக்கும் வெண்ணெய்க்கும்
நறுநெய்க்கும் தாயாய்த் தோன்றி
உயிருக்கும் உடலுக்கும் உணர்வுக்கும்
உணவாகும் உணர்வைப் பெற்றுப்
பயிருக்கு மழைபோல வளர்கின்ற
குழந்தைக்குப் பவுட ராயும்
அயர்வுக்கு மருந்தாயும் துணைநிற்கும்
பாலைத்தான் அமுதம் என்போம்!

தூய்மைக்கு ஒருவமை சொல்கவெனில்
பாலைத்தான் சொல்லக் கூடும்;
வாய்மைக்கு வாக்குறுதி வாங்குதற்கும்
பாலில்தான் வாங்கக் காண்போம்;
தாய்மைக்குப் பெருமைதரும் தனிப்பொருளே
பாலென்றால் தவறே இல்லை;
தாய்தமிழின் சுவையெண்ணி அமுதென்போம்
பாற்சுவையின் தரத்தா லன்றோ!

த. முரசு
1968.3.17

- சாரணபாஸ்கரன்

# 633. கல்

புல்லென்றால் கால்நடைக்குத் தீனி யாகும்;
பூவென்றால் வாசனையைத் தருவ தாகும்;
நெல்லென்றால் உலையேறும் அரிசி யாகும்;
நிழல்என்றால் கோடையிலே இதமே யாகும்;
வில்லென்றால் வேடருக்குக் கருவி யாகும்;
விறகென்றால் அடுப்பெரியும் பொருளே ஆகும்;
கல்லென்றால் என்னாகும்? என்று கேட்டால்
கடல்கொண்ட வையம்ஓர் கல்லே யன்றோ?

பல்லருமை பாட்டிக்கு விளங்கக் கூடும்!
பண்ணருமை பாகவதர் அறியக் கூடும்!
சொல்லருமை கற்றவர்க்குத் தெரியக் கூடும்!
சுடர்அருமை இருளினிலே புரியக் கூடும்!
இல்லருமை துறந்தவர்கள் உணரக் கூடும்!
ஏர்அருமை உழவர்கள் மொழியக் கூடும்!
கல்லருமை காசினியில் பெரும்பா லோர்க்குக்
கடிநாயைக் கண்டால்தான் விளங்கும் போலும்!

பல்லவர்கள் கலையுணர்வை இன்றும் நம்முன்
படம்பிடித்துக் காட்டுபவை கற்கள் அன்றோ?
வல்லவர்கள் பலருடைய வடிவம் ஆகி
வாழ்சிலைகள் பெரும்பாலும் கற்கள் தாமே!
நல்லவர்கள் திருவுருவை நம்முன் னோர்கள்
நலியாத கற்களில்ஏன் செதுக்கிச் சென்றார்?
'கல்அவர்கள் வாழ்க்கையினை'என்று சொல்லக்
கருதியதால் அவ்விதமாய்ச் செய்தார் போலும்!

தனக்காக அனைத்தையுமே ஒதுக்கல்; ஊரைத்
தரித்திரத்தில் மாட்டிவிடும் பதுக்கல்; சொந்த
இனத்தானின் உயர்ச்சிகண்டு புழுங்கல்; நல்லோர்
என்றைக்கும் தள்ளிவைக்கும் வழுக்கல் ஆகும்!
மனக்கூட்டை அழகுசெய்யும் மரக தக்கல்
மற்றவரின் நலம்நாடி நாம்இ ரங்கல்!
கனக்காத இக்கல்லைச் சுமக்கக் கல்நீ
கற்றுவிட்டால் விலைமிகுந்த வைரக் கல்நீ!

- க. து. மு. இக்பால்

த. நேசன்
1982.5.23

# 634. முதுகு

எதுகற்றும் பயனற்றுப் பேசும் நாக்கும்
எந்நோக்கும் தன்னோக்காய் நோக்கும் கண்ணும்
அதுகேட்கும் இதுகேளா தென்னும் காதும்
அன்றாடம் சளிவாசம் செய்யும் மூக்கும்
இதனுக்கும் மேலாகக் கையும் காலும்
ஏற்றாராம் மனிதரிவர்! இவரின் பின்னே
முதுகுற்றேன் மறந்தாரே என்னை! என்ன
முறைகெட்ட தனமான மனிதன் போக்கு!

முகம்கொண்ட வாய்பேசும் தவறு கண்டு
முதுகென்னைப் பதம்பார்க்க வருகின் றார்கள்;
நகம்கொண்ட அழுக்கைத்தான் துடைப்பா ரின்னார்
நன்றாக மனஅழுக்கைத் தொலைக்க எண்ணார்;
பகல்கொண்ட இராப்போல அறிவு கொண்டும்
படுமுட்டாள் தனமாக வாழும் மாந்தர்
புகழ்கொண்டு நிலைத்தாராம்! கிழித்தா ரென்பேன்!
பொறுமைக்கு நான்என்று எல்லை காண்பேன்?

போகட்டும் இவர்முதுகாய் அமைந்தோம் என்று
போர்க்களத்தில் வேல்தாங்கி ரத்தம் சிந்தி
நோகட்டும் நான்!ஒருசொல் ஆறு தல்சொல்
நுழையாதே எவர்வாயும்! வெந்த புண்ணே
வேகட்டும் என்றெவரும் கோழை என்று
விரைவாகச் சொல்லிவிடு கின்றார், என்ன
நாகற்ற நன்றியடா! உலகத் தார்க்கு
நான்பட்ட பாடென்ன முதுகாய் நின்று!

திருட்டுறவை ஏற்படுத்தி மாற்றான் இல்லம்
செல்லுகையில் முகம்மறையும்! நானே நிற்பேன்!
பொருட்குடைமை யானவன்தான் விரட்டி வந்து
பொல்லாத கல்லெறியும் போதும் ஏற்பேன்!
இருட்டிலொரு கடன்கொடுத்தான் எதிர்ப்பட்டாலும்
இடையிலொரு வழிதிரும்ப என்னைப் பார்ப்பான்!
விருப்பமுடன் நான்மனிதன் இயல்பைக் காத்தும்
வெற்றிவரும் போதிலெவன் திரும்பிப் பார்த்தான்?

மண்டையிலே பேனிருக்கும் ஈரி ருக்கும்
மைதடவி அதைச்சீவிக் கவனிக் கின்றார்!
தண்டையிலே மணிகோத்துக் கணவன் மார்கள்
தையலர்தம் கால்களிலும் அலங்க ரிப்பார்!
அண்டையிலே பின்னிருக்கும் என்னைப் பாரார்!
அவயவங்கள் அத்தனைக்கும் அழகு சேர்ப்பார்!
தொண்டையிலே சோறுவிக்கிக் கொண்டால், ஆகா!
தொட்டென்னை வருடுகிறார் உயிரா லேசா?

ஆசையுடன் காதலியை அணையும் போதில்
அவளோடு அவனையும்நான் தாங்க வேண்டும்!
ஓசையுடன் உள்மூச்சு இரையும் நேரம்
உடனிருந்து பார்த்தேநான் ஏங்க வேண்டும்!
பூசையிடக் கூடாத பூவென் றாலும்
பொதுவாகக் கிள்ளியதை ரசிப்பார் உண்டே!
மாசையுடை யவன்நானோ? என்னை அந்த
மயக்கத்தில் சிறுநினைவும் கொள்ளார் ஏனோ?

பிறக்கையிலும் பூமிதனில் முதுகை வைத்துப்
பெரும்புவியைத் தொட்டபுகழ் பெற்றேன்! அன்னை
புறக்கையிலும் பூப்போல என்னை ஏந்திப்
பொழுதெல்லாம் மகிழ்ந்திருந்த புகழைப் பெற்றேன்!
இறக்கையிலும் பாடையினில் குழியின் கீழே
இறக்கையிலும் மண்மடியில் எனக்கே பேறு!
உரக்கஇதை உலகுக்குக் கூறிக் கொள்வேன்!
உடன்பிறந்த அங்கங்காள் பொறுப்பீர்! நன்றி!

த. நேசன்
1982.4.25

- கரு. வேலுச்சாமி

## 635. செப்பிடவே தோன்றும் சுகம்!

ஓங்கத் திருவரசு ஓச்சியகோன்; ஒன்றுமில்லார்
வாங்கத் தினம்தந்த வள்ளற்கோன்; - தீங்குடைய
தப்பிற்குத் தன்மகனைத் தேரடியில் தள்ளியகோன்
செப்பிடவே தோன்றும் சுகம்.

ஆற்றோரம் வாழை! அதனருகே மான்குட்டி!
காற்றாடிப் புள்ளிமான் காதலொலி! - காற்றாடி
வெப்பம் தணிந்திருந்த வேளையினை என்தோழி
செப்பிடவே தோன்றும் சுகம்.

வண்டுறிஞ்சும் தேனமுதை; வாயுறிஞ்சும் மென்சுவையைக்
கண்டெழுதும் நானிங்கே காத்திருக்கக் - கண்டேநீ
செப்பாமல் சென்றிட்ட தேன்மொழியே! உன்னையிங்குச்
செப்பிடவே தோன்றும் சுகம்.

கவிதைத். - இரட்டையர்
1960

## 636. உயிர்ச்சிற்பம்

ஞாலம் வியத்தகு நயமிகு படைப்பினில்
நானொரு கலைஞனைக் கண்டேன்! - அவன்
காலத் திரட்சியின் கவின்மிகு வண்ணமே
கோலம் வரைந்திடக் கண்டேன்! - ஓ!
சூழும் இயற்கையின் செழிப்பினி லேஅச்
சிறப்புடைக் கலையினில் வாழ்ந்தேன்! - எனை
ஆளப் பிறந்தது ஆடை யுடுத்தியே
அருகில் நடமிடக் கண்டேன்!

விண்ணி லிருந்திரு வண்ண மீன்களைக்
கொண்டவன் விழிகள் படைத்தான்! - நறுந்
தென்ற லிடைப்பிறந்(து) ஆடி அலைந்திடும்
தேனலை யில்குழல் படைத்தான்! - இனும்
எண்ண வியந்திடும் வண்ணக் குழைவினில்
எழுந்தது வோஉயிர்ச் சிற்பம்! - நான்
என்ன கவிதையில் எழுதி வைப்பினும்
யாவையு மேமிகச் சொற்பம்!

த. நேசன் - எம். கே. ஞானசேகரன்
1979.12.30

## 637. 'எயிட்ஸ்' வாழ்க!

மரபிழந்த கவிதைகளில் மதிப்பிழந்த உவமையென
நரம்பறுந்த வீணைகளில் நசையிழந்த ஓசையென
வரம்பிழந்த பாலுறவால் வளமிழந்த மக்கள்தமைக்
கரம்பிடித்துக் காக்கவந்த கற்பரசி 'எயிட்ஸ்'வாழ்க!

கற்பிழந்த மலர்களிலே கருத்திழந்த வண்டெனவே
பொற்பிழந்த இரவுகளில் பொறுப்பிழந்த ஆண்குலத்தைக்
கர்த்தபத்தின் கழிவுகளில் கலைவடித்த பெண்குலத்தை
நற்றவத்தால் காக்கவந்த நல்லரசி 'எயிட்ஸ்'வாழ்க!

முன்துறந்த ஞானியரும் மூச்சடக்கும் யோகியரும்
பெண்திறத்தால் வீழ்ந்திடுவர்! பிறகெழுந்து புலம்பிடுவர்!
மண்பிறந்த மாந்தர்களை மங்கைசுக வேந்தர்களைக்
கண்திறக்கச் செய்துவிட்ட கற்புமகள் 'எயிட்ஸ்'வாழ்க!

- கா. கலியபெருமாள்

## 638. காலணியின் கண்ணீர்!

நானுமோர் நல்ல நண்பன்! நலிவிலும் உழைக்கும் தொண்டன்!
வேனலோ, நிழலோ எல்லா வேளையும் துணைவ னாவேன்!
கூனுள மதியார் போலக் குத்திடும் கற்கள் மேலும்
ஆனதோர் உதவி செய்வேன்! அன்பொடும் காத்து நிற்பேன்!

சாக்கடை நீரென் றாலும் சளைத்திடேன்! அஞ்ச மாட்டேன்!
தாக்கிடும் முட்கள் இன்னல் தவிர்த்திடும் கேட யம்நான்!
யாக்கையைச் சுமக்கும் என்னை எத்தனை பேர்நி னைப்பார்?
மாக்குண மனிதன் என்பான் மறப்பது பண்ப தாமோ?

புவியுள பொருளில் நன்கு போற்றுதற் குரியோன் யானே!
எவருமென் துணையி லாமல் ஏகிடார் அறிவா ரன்றோ?
தவறியே செல்வா ராயின் தவிப்பதும் உறுதி யன்றோ?
உவப்பொடு 'நன்றி' என்றே உரைத்தாரைக் காண்கி லேனே!

யாரார்க்கோ நன்றி சொல்வார்! ஏதேதோ விரித்து ரைப்பார்!
சீரோடு செம்மை காண்பார் செருப்பெனைத் துளியு மெண்ணார்!
ஊர்மெச்ச எனைய ணிந்தார், உடல்நைந்தே இளைத்து விட்டால்
பாராமல் தூக்கி வீசிப் பண்பினைக் கொல்லு வாரே!

த. முரசு
1976.5.9

- இளம்பரிதி

# 639. செருப்பு

தோல்சீவ மனமிரங்கித் தோதாக
நொய்வமரம் சுரந்த ளிக்கும்
பாலில்நான் பிறப்பெடுத்தேன் பயனெண்ணில்
பாராமல் பணிசெய் கின்றேன்!
காலிலெனை அணிவதனால் காலணியென்
றும்என்னைக் கழறு வார்கள்!
ஞாலமிசை என்போன்றோர் நலங்கொள்ளார்
நல்லமனம் கொண்ட தாலே!

கற்களொடு முட்களெலாம் காட்சிதரும்
கொடும்வழிகள் கடந்து செல்ல
உற்றதொரு துணையாகி உயிர்காக்கும்
தோழன்நான், உண்மை சொல்லின்
மற்றெதுவும் ஈங்கென்றன் மாட்சிக்கு
நிகரில்லை மனத்தில் கொள்வீர்!
பெற்றமனத் துறவெல்லாம் பிழையறியா
நான்செய்யப் பெறுவீர் நீங்கள்!

பண்பறியாக் குடிப்பிறந்தார் பான்மைபெற
எனையெடுத்துப் பாடம் சொல்வீர்;
என்பெடுத்து நாய்க்கெறிந்தால் இன்புறுமென்
றறியாமல் இருப்ப தாலே!
இன்றெடுத்த பிறவியெலாம் என்செய்தார்
நாட்டுக்கே என்னைப் போல?
நன்றெடுத்த சிற்றுருவால் நான்செய்யும்
வினையெல்லாம் நயந்தே கொள்வீர்!

த. நேசன்
1969.6.8

- பரணன்

## 640. கலைக்கோயில்!

கண்ணைக் கவரும் கற்சிலையும்
கருத்தை ஈர்க்கும் கைவனப்பும்
எண்ணில் அடங்காக் கற்பனையும்
எதிலும் நிறைந்த இறையுருவும்
பெண்ணில் துலங்கும் கற்பியலும்
பொங்கி வழியும் உணர்வலையும்
வண்ணங் காட்டும் வெண்ணிலவும்
வாரி இறைக்கும் கலைக்கோயில்!

வண்டில் பிறக்கும் இசைமழையும்
வளமை கூட்டும் மழைநீரும்
தின்னத் தெவிட்டாக் கனிச்சாறும்
தீந்தமி ழின்நன் மலர்மணமும்
பண்பில் உணரும் உயர்நிலையும்
பருவம் சொல்லும் பாடங்களும்
மண்ணில் அமைந்த மாடங்களும்
மகிழ்ச்சி நல்கும் கலைக்கோயில்

எழுத்தும் பொருளும் இலக்கணமும்
இசைந்த பாவின் சொல்லழகும்
பழுத்த புலமைக் கருத்துணர்வும்
பகுத்துக் கூறும் வாழ்வியலும்
செழுமை கூட்டும் பொழிலிடமும்
தென்றல் காற்றின் தண்மையிலும்
எழிலில் பூக்கும் நிம்மதியும்
ஏந்தி நிற்கும் கலைக்கோயில்!

த. மலர். - புலவர் முருகையன்
1974.7.21

## 641. பிணைந்து வாழ...

சீராரும் செயல்திறமை செறிந்த ஒன்று
சிறப்பான அழகுகளைச் சேர்க்கும் ஒன்று
ஏராரும் சுவையெல்லாம் ஈயும் ஒன்று
இனியநற் பயன்களையே இயற்றும் ஒன்று

கூராரும் நாகரிகம் கூட்டும் ஒன்று
கோப்பான பண்பாடு கொள்ளும் ஒன்று
பேரார்ந்த இத்தனையும் பிணைந்த ஒன்று
பெட்பான கலையென்று பேசு வாரே!

இந்தியர்தம் இறைநெறிகள் ஓவி யங்கள்
இசைசிற்ப நாட்டியங்கள் இன்னுங் கல்வி
விந்தையுறும் கைத்தொழில்கள் கட்ட டங்கள்
விதவிதமாய்க் கலைகளென விளம்பு வார்கள்
சுந்தரமாம் இக்கலைகள் தொடர்ந்தே என்றும்
சுடராக ஒழுகியதோ டன்றி மற்றும்
இந்தியர்கள் வாழும்பல் நாட்டில் எல்லாம்
இலங்கிடுமிக் கலாசாரம் ஏற்றம் பெற்றே!

அருங்கலைகள் அறுபத்து நான்கே என்று
அமைத்தார்கள் இந்தியர்கள் அழகாய் அன்று
பெருங்கலைகள் பலவற்றுள் முதன்மை யான
பெருமானார் அம்பலத்தான் ஆடுங் கூத்து
ஒருங்காகக் கைவழியே நயனம் செல்ல
ஒத்திஇரு கண்வழியே மனமும் செல்ல
உறுங்கானத் துடனாடுங் கலையை என்றும்
உயர்வாகப் போற்றிடுவோம் உவந்து நன்றே!

- ரெ. இராமசாமி

## 642. திறமைக்குப் புகழ்

முத்தைத்தரு சிப்பிக் கிணையன
மக்கட்புக ழுக்குத் தகுதியைத்
தக்கத்தொடு பெற்றுப் பெருமித மடைவோனை

மக்கட்கக மொப்பித் தினசரி
துக்கப்படு மக்கட் குதவிடு
மெத்தப்புகழ் மிக்க கனிவுறு
வெற்றிக்கொரு கொற்றக் குடையன மெழிலோனை

கற்றுத்திற முற்றுப் பொலிவொடு
நற்றுப்பவ பெற்றுத் திகழ்வுறு
வெற்றிக்கொரு கொற்றக் குடையன மிளிர்வோனை

இட்டத்தொடு கட்டித் தழுவிய
முச்சத்தினில் வைத்துத் தகுதியை
மெச்சித்திற மைக்குப் புகழ்தரு முதியோரே!

த. நேசன் - டி. வி. இராகவன்பிள்ளை
1978.12.10

## 643. கவிஞன்

குடியோம்பும் நல்லரசன் செங்கோல் போன்றும்
குழந்தைக்குத் தாயணைப்புக் குளிர்மை போன்றும்
செடிவளர வேண்டும்நல் உரத்தைப் போன்றும்
சேயிழைக்குத் தன்னாளன் துணையைப் போன்றும்
கொடியோங்க உதவும்நல் மரத்தைப் போன்றும்
குவலயத்தில் கிழவர்க்குக் கோலைப் போன்றும்
இடர்சூழ்ந்த இவ்வுலக மாந்த ருக்கே
இலக்கியத்தைத் தருந்தொண்டன் கவிஞன் என்பான்!

மலாயா. - கல்லூர் மணியம்
1962

## 644. ஞாலத்தின் வைகறை!

ஒருகாலம் பொற்காலம் எங்கள் வாழ்வில்
ஒவ்வொன்றும் முத்துகளாய்ச் சிரித்த காலம்!
வரிவாழைத் தோப்புகளில் குரங்குக் கூட்டம்
விளையாட வருமுன்னர் இருந்த காலம்
கருவான இலட்சியத்தின் நெருப்பை ஏந்திக்
கடல்கடந்தும் எல்லைகளை விரித்த காலம்!
அரிதான கலிமாவின் உயிரோட் டத்தை
அப்படியே வாழ்வாகக் கண்ட காலம்!

புதுமைகளை ஊன்றுவதும் புரட்சித் தூதைப்
புவிமுழுதும் பரப்புவதும் கொள்கை யாக
எதுவரையில் கால்நடக்கச் சக்தி யுண்டோ?
எதுவரையில் நாவசையும் வலிமை யுண்டோ?

அதுவரையில் சலிப்பின்றிக் கடமை யாற்றும்
ஆண்மைஎம் உடைமையெனத் திகழ்ந்த காலம்!
முதுமையிலும் தள்ளாடி நடந்து வந்து
முனைமுகத்தில் சமர்புரிதல் எங்கள் வாழ்க்கை!

ஓய்வின்றி உழைப்பவனின் புழுதி கூட
ஒளிவீசும் வைரமெனச் சுடரும் என்ற
வாய்மையினை வரையறுத்த(து) எங்கள் வாழ்க்கை
வானத்து மீன்கூட்டம் எங்கள் பாதத்
தூய்மையினை முத்தமிட்ட தாலே அன்றோ
சுடர்பெற்று விணேணேறி ஒளிர்ந்த(து) அன்று!
தாய்மைஅருட் கைகளினால் நலிந்தோர் தம்மைத்
தழுவியதும் எங்கள்குல மரபே அன்றோ?

பகலெல்லாம் பாடுபடும் எங்கள் தோழர்
பனியிரவில் படைத்தவனைத் தொழுவ தாலே
முகம்நெற்றி மீதிலெலாம் அருள்க னிந்து
மும்மடங்கு பொலிந்ததெனச் சொல்வார் யாரும்
புகல்என்று கலைகளெலாம் எங்கள் வீட்டுப்
புறக்கடையைச் சுற்றியதும் வரலா றாகும்
வகைவகையாய் அறிவியலின் துறைகள் யாவும்
வளங்காணச் செய்ததெவர்? நாங்க ளன்றோ?

எல்லைகளைத் தகர்த்தெறிந்து மனிதர் யாரும்
இறையொருமைப் பெருவெளியில் கூடு தற்குத்
தொல்லைகளைச் சுமந்ததெலாம் எங்கள் தோள்கள்
தொழவாரீர் எனஅழைக்கும் பாங்கின் ஓசை
இல்லாத நேரம்எது நிலம்தான் ஏது?
இப்புவியின் மக்களெலாம் ஒன்றே என்னும்
நல்லமொழி மெய்யான தெங்க ளால்தான்
ஞாலத்தின் வைகறையே நாங்க ளாவோம்!

நாங்கள்அன்று நிருமித்த வாழ்க்கைப் பூங்கா
ஞாலத்தை ஈர்த்து;அதைத் தேடி வந்து,
தீங்கவிதைப் பறவையெலாம் கூடு கட்டிச்
சிரித்தபடி சிலிர்த்தபடி ஊஞ்சல் ஆடி,
பூங்காற்றின் போதையிலே வெறிகி ளர்ந்து
பொய்யுலகைப் பொன்னுலகாய் மாற்றும் ஞானத்
தீங்கனியின் சுளையருந்த வாரீர் என்று
திசைதோறும் இசைபாடிக் கூவிற் றன்றே?

கடல்தேடி ஓடிவரும் நதிகள் போலும்
காதலன்பால் ஓடிவரும் லைலா போலும்
உடல்நோவும் பாராமல் மனிதர் கூட்டம்
ஓடோடி வந்ததுஅருள் பூங்கா வுக்கே!
இடர்சூழ்ந்த ஆத்மாக்கள் இறைமைப் பேற்றின்
இனிமையெலாம் நுகர்ந்ததனால், தமைம றந்து
படல்போலக் கழன்றுவிழும் துயர மெல்லாம்
பார்த்தறிய வாரீர்என்(று) அழைத்த துண்டு!

நினைத்தாலே நெஞ்சினிக்கும் அந்தக் காலம்!
நிலவிற்கும் கவிதைக்கும் உறவுக் காலம்!
பனித்துளியில் ஓவியப்பூ மலர்ந்த காலம்!
பண்பாட்டுக் களஞ்சியங்கள் நிறைந்த காலம்!
தனித்தொருவன் வாழாத கூட்டுக் காலம்!
சமுதாயத் தழுவலிலே செறிந்த காலம்!
கனைத்தோடும் குதிரைகளின் சத்தி போலக்
காதலறம் உயிர்தழுவி நின்ற காலம்!

நம்குரல்
1984, நவம்பர்

- ப. மு. அன்வர்

## 645. பூவையும் போர்வையும்

இழுத்துடல் போர்த்த இதம்தங்கும்; சற்றே
வெளுக்கப் படிந்துவரும்; வேண்டா - அழுக்கொழியும்
தேவைக் கறிவுறுத்தத் தேர்ந்து துயில்வதுவால்
பூவைக்கும் போர்வைக்கும் போர்.

த. நேசன்
1976.1.18

- எல்லோன்

## 646. கவிதையும் பொன்னகையும்

அளவுமுறை வேண்டும்; அரும்திறனும் வேண்டும்;
சிலதவ(று) ஏற்படினும் சீர்தான் - குலைந்துவிடும்;
மெச்சுபுகழ் மாதரார் மேனிதவழ் பொன்னகை
அச்சேறும் பாவென் றறி.

மணிமு. - மீசல் பி. எம். அபூபக்கர்
1984

## 647. சங்கும் சாம்பிராணியும்

ஊதப் பயன்கிட்டும் உள்ளுணர்வு மேலோங்கும்
ஓதும் அடியாரை ஊக்குவிக்கும் - பேதமின்றி
மங்கள மங்கலத்தில் மாண்பொடு பங்கேற்கும்
சங்குசாம்பி ராணித் தரம்.

மாணிக்க. - பழ. மனோகரன்
1981

## 648. மலையும் கடலும்

பார்க்க மலைப்பளிக்கும் பாரில் அளப்பரி(து)
ஈர்க்கும் பசுமை எழில்கொஞ்சும் - ஆக்கமுடன்
பொங்கும் வணிகப் பொதிசுமக்கும் என்பதனால்
தங்கும் கடல்மலையே தான்.

த. நேசன் - உ. கா. அப்துர் ரஹ்மான்
1968.2.26

## 649. பாகிஸ்தான் அதிபருக்கு விண்ணப்பம்

யாஅல்லாஹ் என்றே இறைவன் திருவணங்கி
ஜியாவுல்ஹக் பெருந்தகையே உம்மைஇது வேண்டுகிறேன்;
தூக்குக் கயிற்றுக்கு மேலான சக்திஉங்கள்
நாக்குக்(கு) இருப்பதனை நம்பிஇதைச் சொல்கிறேன்;
சுல்பிகார் அலிபுட்டோ என்னும் தலைவனுக்கு
நல்லதொரு மன்னிப்பை நாடும் உலகத்தின்
பெருங்குரலைக் கொஞ்சம் பொறுமையுடன் கேளுங்கள்;
ஒருகாலம் அவன்புரிந்த உழைப்பை நினையுங்கள்;
சகோதரத்வம் சமாதானம் சாத்விகம் என்னும்
மகாஉண்மை பொருந்தியநம் மாநபியின் வழிநின்று
புட்டோவை மன்னித்தால் புகழ்உங்கள் பேருக்கே
புட்டோவை மன்னித்தால் புகழ்உங்கள் நாட்டுக்கே
மேற்கும் கிழக்கும் மிகவியந்து பார்த்திருக்கத்
தூக்குக் கயிற்றில் தொடர்ந்தூசல் ஆடுவது
புட்டோவின் உயிரன்று; பாகிஸ்தான் நிலைஐயா!
புட்டோவை மன்னிப்பீர்! புவிவாழும் நாள்மட்டும்
மங்காத புகழுக்கு மனக்கதவைத் திறந்திடுக!
தங்கட்டும் இன்பம் தழைத்து.

த. நேசன் - காரைகிழார்
1979.2.18

## 650. இலக்கியங்கள்

உள்ளத்தை உயர்த்துகின்ற படிகள்; வாழ்க்கை
உணர்வுகளை நெறிப்படுத்தும் படைகள்; கால
வெள்ளத்தை வென்றுநிற்கும் கலங்கள்; கல்வி
வித்தைகளை வெளிப்படுத்தும் களங்கள்; மாற்றார்
கள்ளத்தைக் காரிருளை வெளிச்ச வீச்சால்
கலைத்துவரும் ஒளிவாரம்! உணர்வுத் தோப்பு!
சொல்லத்தேன் ஊறிவரும் இலக்கி யத்துச்
சொர்க்கத்தைச் சொல்கின்றேன்; இன்னும் சொல்வேன்;

இலக்கியங்கள் மிகச்சரியாய் எழுந்து நின்றால்,
எதிர்நிற்கும் படைக்கருவி எதுவும் இல்லை;
இலக்கியங்கள் இல்லையெனும் நிலைமை வந்தால்,
எண்ணங்கள் தெளிவுபெற வழிகள் இல்லை;
இலக்கியங்கள் உலகத்தை வழிந டத்தும்;
இதயத்தைப் பண்புகளால் கனிய வைக்கும்;
இலக்கியங்கள் விழிகட்கு வெளிச்ச மாகும்;
எழுதும்கோல் அதனாலே தெய்வ மாகும்!

- பரணன்



# மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்



## பிற்சேர்க்கை

# 1. வாழ்க்கைக் குறிப்புகள்

## அ. பதிப்புக் குழுவினர்

### 1. தமிழவேள், பேராசிரியர் இராம. சுப்பிரமணியன், தலைமைப் பதிப்பாசிரியர்

இப் பெருமகனார் தமிழ்நாட்டு வடார்க்காடு மாவட்டக் கோவிலூரில் 28.9.1926இல் பிறந்தார். எளிய குடும்பத்தில் பிறந்த இவர், எட்டாம் வகுப்பிற்குமேல் படிக்க இயலாமல் தையல் தொழிலில் ஈடுபட்டார்; பின்னர் 1947முதல் 1949வரை தொடக்கநிலை ஆசிரியப் பயிற்சி பெற்று, 1949முதல் 1954வரை 'இருங்கல்' தொடக்கப்பள்ளி ஆசிரியராய்ப் பணியாற்றினார்; தொடர்ந்து முயன்று 1953இல் புலவர் முதனிலைத் தேர்விலும், 1954இல் இறுதிநிலைத் தேர்விலும், 1956இல் பள்ளி இறுதித் தேர்விலும், 1957இல் இண்டர்மீடியட் 'டி' பிரிவுத் தேர்விலும், 1958இல் இடைநிலை ஆசிரியப் பயிற்சித் தேர்விலும், 1979இல் பி.லிட். தேர்விலும் வெற்றிவாகை சூடினார்; கல்லூரிப் பேராசிரியராய் இருந்தபோது 1981இல் முதுகலைத் (M.A.) தேர்வில் வெற்றி பெற்றார்; 1956இல் அறிஞர் பலர் ஒத்துழைப்பொடு சென்னையில் 'தமிழ் வளர்ச்சி மன்றம்' என்னும் அமைப்பினைத் தோற்றுவித்தார்; அமைப்புச் செயலாளராய் அமர்ந்து, 1965இல் 'மணலி தமிழ்க் கல்லூரி'யினைத் தோற்றுவித்து, அதன் முதல்வராய் (1965-67) ஐவர் பணியாற்ற வேண்டிய இடத்தில் தாம் ஒருவர்மட்டுமே பணியாற்றித் தமிழக வரலாறு இன்றுவரை காணாத் தேர்ச்சி முடிவினைக் கொணர்ந்தார்; 1971முதல் 31.5.1985இல் பணிஓய்வு பெறும்வரை சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றினார். புலவர், இளங்கலை (B.A.), முதுகலை (M.A.) மாணவர்க்கு இலவச வகுப்புகளை நடத்தி வழிகாட்டும் நோக்கில் இவர் தமிழ் வளர்ச்சி மன்றப் பொறுப்பில் ஏற்படுத்திய மருத்துவ மாமணி இரத்தினவேல் சுப்பிரமணியன் செந்தமிழ்க் கல்லூரி, கடந்த 30 ஆண்டுகளுக்கு மேலாய் இயங்கிவருகிறது. தம்மொடு தகுதி வாய்ந்த தமிழ் அறிஞர்களையும் இணைத்துக்கொண்டு இவர் ஆற்றும் கைம்மாறு கருதாத் தமிழ்த் தொண்டால் பயன்பெற்றோர் மிகப் பலர்.

தமிழ் வளர்ச்சி மன்றத் தலைவர் மருத்துவ மாமணி, பேராசிரியர், டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியம் அவர்களுடன் இணைந்து இவர் மேற்கொண்ட பெருமுயற்சியால் தனிப்பட்டவர் இளங்கலை இலக்கியத் (B.Litt.) தேர்வெழுதும் வாய்ப்பு ஏற்பட்டது. தமிழ் இலக்கணத்தில் இவர்க்குள்ள இணையற்ற புலமையை அறிந்து சென்னைப் புலவர் மன்றம் 'இலக்கணச் செம்மல்' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்தது. அமெரிக்கத் தூதுவர் டாக்டர் ஃபிராங்கிலின், ஜார்ஜ் ஹார்ட் III, நெல்சன், ஜப்பான் தோக்கியோப் பல்கலைக்கழக வரலாற்றுப் பேராசிரியர் காரஷீமா, சென்னை உருசியத் தூதுவரகச் செயலர் முதலாயவர்க்கும் தென்னாப்பிரிக்க வீட்டுவசதி வாரிய முன்னாள் அமைச்சர் மாண்புமிகு பி. ஐ. தேவன், இலங்கையர் சிலர்க்கும் சங்க இலக்கியம் முதலாய நூல்களை இவர் கற்பித்தார்.

தொல்காப்பிய ஆராய்ச்சியிலும், திருக்குறள் ஆராய்ச்சியிலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர், தொல்காப்பியத்தை நுட்பமாய் ஆராய்ந்து அரிய கருத்துகள் பலவற்றை வெளியிட்டார். 1987ஆம் ஆண்டில் மலேசியாவில் நடந்த ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் பங்குகொண்டு இவர் படைத்த ஆய்வுக்கட்டுரை, அறிஞர் பலரின் பாராட்டுதல்களைப் பெற்றது. தொல்காப்பியத்திற்குப் பேருரை எழுதும் முயற்சியில் ஈடுபட்டுள்ள இவர், அதன் எழுத்துப்படலத்திற்கு உரை எழுதித் தொழிலதிபர் பெ. மருதைப் பிள்ளை பொருட்கொடையால் மாண்புமிகு தமிழக முதல்வர், டாக்டர், கலைஞர் மு. கருணாநிதி தலைமையில் வெளியிட்டார். மாண்புமிகு கல்வியமைச்சர், பேராசிரியர், டாக்டர் க. அன்பழகன் முதலாய அறிஞர் பலரின் பாராட்டைப் பெற்ற எழுத்துப்படலப் பேருரையைத் தொடர்ந்து, சொற்படலப் பேருரையும் பொருட்படலப் பேருரையும் வெளிவரவுள்ளன.

தமிழகத் தலைநகரில், பெருமகனார் திவான் பகதூர் டி. எம். பவாநந்தர் உருவாக்கி இயங்கிவரும் 'பவாநந்தர் கழக'த்தை அரும்பாடுபட்டுக் காப்பாற்றி அப் பெரும் சொத்தைப் புறவழியில் அடைய முனைந்தோரை உயரற மன்றம்வரை சென்று வெற்றிகண்டு அதனைப் பொதுவுடைமை ஆக்கிய பெருமை இவரைச் சாரும். விரைவில் அதனை விரிவுபடுத்தும் பணிகள் நடைபெறுகின்றன. நூலகக் கட்டடம், சொற்பொழிவரங்குகளைக் கட்ட 15,00,000 உருபாத் திரண்டுள்ளன. கலையியில் தெளிவும், கட்டுரை வன்மையும், நுண்மாண் நுழைபுலமும், நடுவுநிலைமை பிறழா அறமனமும், தூய தொண்டே வாழ்வின் குறிக்கோளாய்க் கொண்ட சான்றாண்மையும் கொண்ட தமிழ் அரிமாவாய இப் பெருமகனாருக்கு 19.7.1987இல் மணிவிழா எடுக்கப்பட்டு இவர்தம் தொண்டுகளை விரித்துரைக்கும் சிறப்பு மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது. தமிழ்கூறு நல்லுலகில் என்றென்றும் நிலைத்திருக்கும் வண்ணம் இவர் அரும்பாடுபட்டுச் சீரிய முறையில் பதிப்பித்த இக் களஞ்சியத்தின் தலைமைத் தொகுப்பாசிரியர் முரசு. நெடுமாறன், இவர் மாணவர் என்பது சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கது.

**2. புலவர் தவத்திரு நக்கீர அடிகள்,
துணைப் பதிப்பாசிரியர்**

இவர் தமிழக மண்ணில் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த உறந்தைராயன்குடிக்காடு என்னும் சிற்றூரில் அப்பாவு பாப்பம்மாள் வாழ்விணையருக்கு 22.7.1927இல் மூத்த மகனாய்ப் பிறந்தார்; மூன்றாண்டுவரை மூங்கையாய்த் திகழ்ந்து, முருகன் அருளால் பேசும் வாய்ப்புப் பெற்றார்; இயற்பெயர் பெத்தபெருமாள்; தமிழார்வத்தினால் 1952இல் நக்கீரன் என மாற்றி அரசிதழில் பதிவு செய்துகொண்டார். புனைபெயர்கள் உறந்தைக் கலைக்கீரன், மலரன், பாமன்.

1946இல் பள்ளி இறுதிவகுப்பும், 1947இல் இடைநிலை ஆசிரியப் பயிற்சியும், 1953இல் புலவர் முதனிலையும், 1954இல் இறுதிநிலையும், 1968இல் இந்தி விசாரத்தும், 1979இல் கலைமுதுவரும் (எம்.ஏ.) முடித்தார்.

1947-63 ஆசிரியராயும், 1970-86 தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனப் பணியாளராயும் பணிபுரிந்தார். பதிப்பாசிரியராய்ப் பணிபுரிந்த இவர் பொறுப்பில்

பாவாணர் படைப்பான ‘செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி’யின் முதன் மடலம், தமிழ்-தமிழ் அகரமுதலி, தமிழ்ச் சுருக்கெழுத்துக் கையகராதி, தமிழ்நாட்டு வரலாறு - சங்ககாலம், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர் *(1981)*, எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்கள் *(1995)*, ஓலைச்சுவடிகள், மொழிபெயர்ப்பு நூல்கள் முதலாயன செவ்வையாய் வெளிவந்தன.

இவர் சிறைக்கோட்டத்தில் *(1963-68)* வாழ்ந்தகாலை புலவர் பலரை உருவாக்கினார். சிறை மாணவர்களால் உருவாக்கப்பட்ட ‘சிறைதரும் தேன்கவிதை’ என்னும் நூல் இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின்போது (1968) வெளியிடப்பட்டது. இவர் எழுதிய ‘அண்ணா அறுபது’ என்னும் நூல் 1969இல் பெரியாரால் வெளியிடப்பட்டது. நக்கீரன் பாடல்கள், கண் ஈந்த காரிகை என்பன பிற நூல்கள். மருத்துவமாமணி இரத்தினவேல் சுப்பிரமணியன் செந்தமிழ்க் கல்லூரியில் பல்லாண்டுகள் மதிப்புறு தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றி வருகிறார். தம் 61ஆம் ஆண்டுப் பிறந்தநாளன்று (22.7.1987) துறவு பூண்டு ‘காட்டூர் அடிகள் கல்வி அறக்கட்டளை’ நிறுவிச் சமுதாயத் தொண்டு புரிந்து வருகிறார். 'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தின் பதிப்புப் பணித் தொடர்பாய் மலேசியா வந்த (சூன், 1996) இவரை ' ம.உ.த.ஆ.நிறுவனம்' இலக்கண வகுப்பு நடத்துமாறு வேண்டிக்கொண்டது. அந் நிறுவனத்தின் வேண்டுகோளை ஏற்றுக் குடிநுழைவுத்துறையும் 'வருகைப் பேராசிரியர் ' என்னும் முறையில் இசைவு வழங்கிற்று. அதற்கிணங்க 27 இலக்கண வகுப்புகளை நடத்தினார். இவ் வகுப்புகள் மலேசியத் தமிழரிடையே தமிழார்வத்தை மிகுதிப்படுத்தியுள்ளன. பேராசிரியர் முனைவர் சி. இலக்குவனார், தமிழவேள் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன்பால் கற்ற மாணவர் என்பதில் பெருமை கொள்ளும் இவருக்குப் பெண்மகள் ஒருத்தியும் ஆண்மக்கள் ஐவரும் உள்ளனர்.

3. செந்தமிழ்ப் பாவலர் புலவர் தணிகை உலகநாதன்,
துணைப் பதிப்பாசிரியர்

பகைவர்க்கும் அருளும் பண்புகொண்ட இவர், தமிழக வடார்க்காடு மாவட்டத் திருவத்திபுரத்தில் *1.10.1921*இல் பிறந்தார்; சென்னை மாணவர் மன்றத் தலைவராயும், சென்னை வானொலிச் சிறுவர் சங்கப் பேரவைத் தலைவராயும், குழந்தை எழுத்தாளர் சங்கத் தகவுரைஞராயும் (Adviser) திகழ்ந்தார்; ‘பதிற்றுப்பத்து’ப் போன்ற பல இலக்கிய மாநாடுகளில் கலந்துகொண்டு ஆராய்ச்சிக் கட்டுரைகளை வழங்கினார்; வானொலி - தொலைக்காட்சிக் கவியரங்குகளிலும் கல்வித்துறையிலும் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு உழைத்துவந்தார்; தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவன நூலாசிரியராயும் வல்லுநராயும் மேலாய்வாளராயும் பணியாற்றினார்; தமிழ்நாடு, புதுச்சேரி, காரைக்கால் ஆகிய இடங்களில் ஆசிரியர் பணியிடைப் பயிற்சியில் கருத்தாளராய்ப் (Resource Person) பணியாற்றினார்; குழந்தைகளுக்காக நூற்றுக்கு மேற்பட்ட நாடகங்களும் கவிதைகளும் எழுதியுள்ளார். மாணவர்களைக்கொண்டு நாடகங்கள் நடத்தி, அறப்பணிகளுக்குப் பொருள்திரட்டித் தந்துள்ளார்; மலேசிய நூல்களுக்குச் சென்னையில் வெளியீட்டு விழா, அறிமுக விழா, கருத்தரங்கு நடத்த முன்னின்று உழைத்தார்; மாணவர் மன்றவழி மலேசியத் தமிழ்ப் பள்ளி ஆசிரியர் தேசிய சங்கத்துடன் இணைந்து,

'தமிழ்மணி'ப் பட்டத் தேர்வுகளை நடத்த உழைத்த பெருமக்களுள் இவர் குறிப்பிடத்தக்கவர்; இருபதிற்கும் மேற்பட்ட குழந்தை இலக்கிய நூல்கள் எழுதியுள்ளார்; 'நல்ல கதைகள்' என்னும் இவருடைய நூல் கல்வித்துறையின் முதற்பரிசு பெற்றது. நூற்பதிப்புக் கலையில் வல்லவராய இவர், பல எழுத்தாளர்களின் நூல்களுக்குப் பதிப்பாசிரியராய்த் திகழ்ந்தார்; 'குருவிக் குடிலார், அன்புக் கடலார்' எனப் பாவேந்தரால் பாராட்டப் பெற்றார்.

சென்னைத் தமிழ் வளர்ச்சி மன்றத்தினரால் 'செந்தமிழ்ப் பாவலர்' என்றும், புன்னகைப் பட்டிமன்றப் பாசறையினரால் 'தண்டமிழ்ச் சுடர்' என்றும் பட்டங்கள் அளித்துப் பாராட்டப்பெற்றார்; கல்வித் துறையின் 'நல்லாசிரியர்' விருதினைப் பெற்றார். வி. ஜி. பி. சந்தனம்மாள் அறக்கட்டளை இவருடைய சிறந்த கவிதைப் பணியைப் பாராட்டி, உருபா *1001* பரிசும் கேடயமும் இவருக்கு வழங்கிச் சிறப்புச் செய்தது. 'நித்திலக் குவியல்' என்னும் இலக்கியத் திங்களிதழின் ஆசிரியராய இவர் பாடல்கள் மலேசிய, மொரீசியசு போன்ற அயல்நாடுகளின் பாடநூல்களிலும் இடம்பெற்றுள்ளன. இவர் இந் நூலின் தலைமைத் தொகுப்பாசிரியர் முரசு. நெடுமாறனுக்குக் குழந்தை இலக்கியத் துறையில் *1968*ஆம் ஆண்டுதொட்டு ஒரு நல்ல வழிகாட்டியாய் விளங்கி வந்தார். இவருக்கு மனைவியும் கல்விகேள்விகளில் சிறந்த இரு ஆண்மக்களும் இருபெண்மக்களும் உள்ளனர். இப் பெருமகனார் *19.1.1993*ஆம் நாள் புகழுடம்பெய்தினார். இவர் மறைவு பதிப்புத்துறைக்கும் குழந்தை இலக்கிய உலகிற்கும் ஈடு செய்ய முடியாப் பேரிழப்பாகும்.

## ஆ. தொகுப்புக் குழுவினர்

**1.** பாப்பாவின் பாவலர் முரசு. நெடுமாறன்,
தலைமைத் தொகுப்பாசிரியர்

சிலாங்கூர் மாநிலக் கேரி தீவில் இராசகிள்ளி சுப்புராயன் முனியம்மை வாழ்விணையருக்கு *14.1.1937*இல் பிறந்தார். இவர் இயற்பெயர் கனேசன். தமிழார்வத்தினால் நெடுமாறன் என மாற்றிக்கொண்டார்; ஆவணங்களிலும் பதிவு செய்துகொண்டார். 'முரசு' பெற்றோர் பெயரைக் குறிப்பது; 'தமிழ் முரசு' ஏட்டின் மேல்கொண்ட பற்றும் ஒரு காரணம். அதியமான், வெள்ளையன் முதலாயவை புனைபெயர்கள். 'முரசு' எனச் செல்லமாய் அழைக்கப்படும் இவர் ஒரு தமிழாசிரியர். இலக்கண இலக்கியங்களில் ஆர்வமுடையராய்ச் சென்னை மாணவர் மன்றத் 'தமிழ்மணி'ப் பட்டத் தேர்வில் (*1970*) வென்றார்; விடாமுயற்சியுடன் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக அஞ்சலவழிக் கல்வித்துறையிற் சேர்ந்தார் (*1988*); நேரடியாக அங்கேயே சென்று, தேர்வுகள் எழுதி இலக்கிய இளையர் (B.Litt.), முதுகலைப் (M.A.) பட்டங்கள் பெற்றுப் பல்கலைக்கழகப் பட்டதாரியானார்.

*1958*இல் எழுத்துலகில் அடியெடுத்து வைத்தார்; குழந்தை இலக்கியத்தில் பேரார்வம் கொண்டார்; *1969*இல் 'இளந்தளிர்' என்னும் தலைப்பில் ஒரு சிறுவர் பாட்டுநூலைப் பொன்னி பதிப்பகவழி வெளியிட்டார்; அந் நூலிற்குப் புலவர் தணிகை உலகநாதன் தலைமையில் இயங்கிய சென்னை வானொலிச் சிறுவர் சங்கப்

பேரவை, சென்னை மாணவர் மன்றத்தின் முன்னாள் சட்டப் பேரவைத் தலைவர் புலவர் க. கோவிந்தனைத் தலைமையேற்கச் செய்து குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா, வானொலி அண்ணா ரா. ஐயாசாமி, புலவர் கோ. வில்வபதி முதலாய தக்கார் முன்னிலையில் அதற்கு வெளியீட்டுவிழா நடத்தியது.

இவர் தொடர்ந்து அழகு பாட்டு, அன்புப் பாட்டு, அறிவுப் பாட்டு (1969), நன்னெறிப் பாட்டு (1987) முதலாய பத்திற்கு மேற்பட்ட பாட்டு நூல்களையும், எது வீரம்?, உயிரா மானமா?, சோளக் கொல்லைப் பொம்மை (1988) முதலாய எட்டுச் சிறுவர் நாடகத் தொகுதிகளையும், 'பாட்டுப் பிறந்த கதை' (1991) முதலாய சில கதை, கட்டுரை நூல்களையும் எழுதி, உமா பதிப்பகவழி வெளியிட்டார்; நான்குமுறை மலேசிய அடிப்படையிலான கவிதைப் போட்டிகளில் தங்கப் பதக்கங்களை வென்றார். 1986ஆம் ஆண்டில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், இவருடைய கவிதைத் தொண்டினைப் பாராட்டித் தங்கப் பதக்கம் வழங்கிச் சிறப்புச் செய்தது. சொந்த முயற்சியால் வளர்ந்த இவருக்குக் குழந்தை இலக்கியத் துறையில் முறையாய் வழிகாட்டியவர் செந்தமிழ்ப் பாவலர் புலவர் தணிகை உலகநாதன் ஆவார். தமிழ் இலக்கண இலக்கியங்களிலும் சைவ சித்தாந்தத்திலும் பெரும்புலமை கொண்ட புலவர் யாழ். ஏ. ஆறுமுகனாரிடம் இவர் ஈராண்டுகள் பெரியபுராணப் பாடம் கேட்டதொடு பேராசிரியர் முனைவர் ச. சாம்பசிவனார், புலவர் மா. அ. சண்முகநாதன், அருட்கவி அரங்க. சீனிவாசன் ஆகியோரிடம் இலக்கியமும், முனைவர் ஆனந்தராசனிடம் சித்தாந்தப் பாடமும் கேட்டுள்ளார்; இவற்றுடன் தமிழவேள் பேராசிரியர் இராம. சுப்பிரமணியனிடம் கேட்ட தொல்காப்பியப் பாடம் இவருக்கு ஒரு புதிய வலிமையையும் தெளிவையும் ஏற்படுத்தியது எனலாம். நன்றி உணர்ச்சி உள்ளவராய இவர், தம் வளர்ச்சிக்கு உதவிய அனைவரையும் மறவாமல் போற்றி வருகிறார். குறிப்பாக நூல் வெளியீட்டுத்துறையில் ஊக்க மூட்டிய ஆ. சோதிநாதன், பட்டக்கல்வி பெறும் முயற்சிக்கு ஊக்கமும் ஒத்துழைப்பும் நல்கிய நண்பர்களாய முனைவர் ந. மாரியப்பன், முனைவர் சோமசுந்தரம் முதலாயோரையும் மறவாமல் நினைவில் கொண்டுள்ளார்.

'தமிழ்நெறி மன்ற' நிறுவனத் தலைவராய இவர், மாணவர் வளர்ச்சியில் பெருநாட்டம் கொண்டவர். 1978முதல் தேர்வெழுதும் மாணவர்க்குக் கட்டணமின்றித் தக்கார் துணையுடன் வழிகாட்டி வகுப்புகளை முன்னின்று நடத்திவருவதொடு ஆண்டுதோறும் பல்வேறு பள்ளிகளைச் சேர்ந்த ஆயிரக் கணக்காய மாணவர்களை ஒருங்கிணைத்துக் கட்டொழுங்கு முறை சிதறாமல் மாணவர் பண்பாட்டு விழாக்களையும் (1978முதல்) நடத்திவருவது ஒரு சாதனையாகும். கல்வி, கலை, இலக்கியம் முதலாய துறைகளில் முயன்று உழைத்துவரும் இவர், மலேசியக் கல்வி ஒலிபரப்புத் தொடங்கிய நாளிலிருந்து (1966) இன்றுவரை அதன்வழிக் கதை, பாடல், நாடகம், மொழிப்பாடங்களைப் படைத்துவருகிறார்; தேசிய மொழிப் பாடல்களைத் தமிழில் மொழிபெயர்ப்பும் செய்துள்ளார்; கல்வி அமைச்சின் பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகப் பணிகளிலும் பங்குகொண்டு உழைத்துள்ளார். இவர் அடிநாள்தொட்டே அரிதின் முயன்று திரட்டிப் பாதுகாத்து வரும் எண்ணற்ற கவிதை நறுக்குகளைக் கொண்ட கோப்புகளே இக் கவிதைக் களஞ்சியத்திற்கு அடிப்படையாகும். மலேசியத் தமிழ்க் கவிதைத்துறைபற்றி முதன்முதலில் ஆய்வுக் கட்டுரைகள் எழுதினார்.

இவருக்குப் பொதுவாழ்வில் பேருக்கம் நல்கும் நல்ல மனைவி அமைந்தார் (14.7.1996இல் மறைவு). இரண்டு ஆண்மக்களும் இரண்டு பெண்மக்களும் உள்ளனர். பொறியாளராய இவர் மூத்த மகன் மு. நெ. முத்தெழிலன் கண்டுபிடித்த 'முரசு தமிழ்க்கணினி' முறையில்தான் இம் மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம் அச்சிடு கண்டது. இவர் இப்பொழுது புதுவைப் பல்கலைக்கழகத்தில் முனைவர் (Ph.D.) பட்ட (பகுதிநேர) ஆய்வாளராய்ச் சேர்ந்துள்ளார்; முனைவர் க. ப. அறவாணன் வழிகாட்டலில் மலேசியத் தமிழ்க் கவிதை இலக்கியத்தை ஆய்வு செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

**2. புலவர் ப. மு. அன்வர்,**
**துணைத் தொகுப்பாசிரியர்**

தமிழகத் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த திருப்பனந்தாளில் 15.6.1942ஆம் ஆண்டில் இவர் பிறந்தார்; திருப்பனந்தாள் தவத்திரு குமரகுருபரர் உயர்தொடக்கப் பள்ளியில் ஏழாம் வகுப்புவரை படித்தார்; 1956ஆம் ஆண்டில் மலாயாவிற்கு வந்து மலாக்கா நகரில் 3ஆம் படிவம் (L.C.E.)வரை படித்தார்; பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களால் ஈர்க்கப்பட்டதால் கவிதை ஆர்வத்தை வளர்த்துக்கொண்டார்; இளமைமுதலே ஏற்றப் பாட்டு, நடவுப்பாட்டு, வண்டிக்காரர் பாடும் தென்பாங்குப் பாட்டு, நாட்டுப்புறக் கலைகளாய வில்லுப்பாட்டு, கரகாட்டப் பாட்டு, காவடிப் பாட்டு, தாலாட்டுப் பாட்டு, மழைப் பாட்டு, இலாவணிப் பாட்டு முதலாய எளிய பாட்டு வடிவங்களைக் கேட்டுக் கேட்டு மனப்பாடம் செய்து கொண்டார்; கலைச்செறிவு மிக்க காவிரிப் படப்பையின் (டெல்டா) பாட்டு வடிவங்களில் மூழ்கித் திளைத்துக் கற்பனை ஆற்றலைப் பெருக்கிக்கொண்டார்; தொல்காப்பியம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், கலிங்கத்துப்பரணி முதலாய நூல்களைத் தக்காரிடம் பாடங்கேட்டார்; நிறைந்த நூலறிவுடையவர்; ஆயிரக்கணக்காய கவிதைகள் பாடியுள்ளார். இவர் ஏடுகளுக்கு வழங்கிய படைப்புகளைவிட மலேசிய வானொலிக்கு வழங்கிய படையல்களே மிகுதி எனலாம். பழந்தமிழ் இலக்கியங்களையும் சித்தர் பாடல்களையும் ஆழ்ந்து படித்தறிந்த புலவராய இவர், சித்தாந்தத்தையும், திருமுறைகளையும், அருட்பாவையும் கற்றறிந்தார்; 1957இல் தமிழ்முரசு மாணவர் மணிமன்ற உறுப்பினராகி எழுதத் தொடங்கினார்; 1960முதல் கவிதை பாடத்தொடங்கி எண்ணற்ற பாடல்களைப் பாடினார்; ஐந்து கவிதை நாடகங்களும் ஒரு குறுங்காவியமும் ஒரு காப்பியமும் பாடினார். ஏறத்தாழ முப்பது ஆண்டுகளாய் மலேசிய வானொலியில் தொடர்ந்து எழுதிக் கொண்டிருக்கிறார். கவிஞர் கா. பெருமாள் தொடர்பால் கவிதை இலக்கை நெறிப்படுத்திக் கொண்டார். கவிதைக் கலையின் நுட்பங்களை உணர்ந்த நுண்மையராய இவர், நல்ல கவிதைகளை அடையாளம் காண்பதிலும், திறனாய்ந்து உரைப்பதிலும் வல்லவர். நெகிழ்ச்சிக்கு இடந்தாராத கொள்கைப் பிடிப்புடைய இவர் படைப்புகள், இன்னும் நூல்வடிவம் பெறவில்லை. இவருக்கு மனைவியும் இரு பெண்மக்களும் உள்ளனர்.

**3.** தமிழ்மணி அரு. சு. ஜீவானந்தன்,
துணைத் தொகுப்பாசிரியர்

கோலசிலாங்கூர் வட்ட மன்மவுத் தோட்டத்தில் 9.8.1948இல் பிறந்த இவர், தோட்டத் தமிழ்ப்பள்ளியில் தொடக்கக் கல்வி கற்றார்; கம்போங் குவாந்தான் பள்ளியிலும் கோலசிலாங்கூர்ச் சுல்தான் அப்துல் அஸீஸ் பள்ளியிலும் இடைநிலைக் கல்வி கற்றார்; பத்தாங் பெர்சுந்தைத் தமிழ் இளைஞர் மணிமன்றத்திலும் பின்னர்த் தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவையிலும் பொறுப்புகள் ஏற்றுச் சமுதாயத் தொண்டு புரிந்தார். 1970ஆம் ஆண்டில் சென்னை மாணவர் மன்றம், தமிழ்ப்பள்ளித் தேசிய ஆசிரியர் சங்கமூலம் நடத்திய 'தமிழ்மணி'த் தேர்வில் வென்று 'தமிழ்மணி' ஆனார். 1976இல் கணிப்பொறிப் பயிற்சிக்கு இலண்டன் சென்ற இவர், பயிற்சியில் தேர்வுபெற்று, 1977இல் திரும்பி, மலேசியக் கூட்டுறவுக் காப்புறுதிக் கழகத்தில் கணிப்பொறிப் பிரிவு மேலாளராய்ப் பணிபுரிந்தார்; இப்போது 'மைக்கா ரப்பர் ஹோல்டிங்ஸ் நிறுவன'த்தில் பணிபுரிகிறார். சிறுகதை எழுத்தாளராய் இலக்கியப் பணியைத் தொடங்கி, அத் துறையில் இருமுறை பவுன் பரிசும், பிற பரிசுகளும் பெற்றார்; 6.7.1994இல் தம்முடைய 15 சிறுகதைகளைத் தொகுத்து 'ஜீவானந்தன் கதைகள்' என்னும் பெயரில் நூலாக வெளியிட்டார். நூல் விற்பனைமூலம் கிடைத்த வெள்ளி 58 ஆயிரத்தில், 28 ஆயிரத்தை டத்தோஸ்ரீ ச. சாமிவேலுவும் டான்ஸ்ரீ உபைதுல்லாவும் அமைக்கவிருக்கும் 'எழுத்தாளர் அறக்கட்டளை'க்கு நன்கொடையாக வழங்கினார். ஆழமான இலக்கிய உணர்வுகொண்ட இவர், உலக இலக்கியங்களையும் தமிழ் இலக்கியங்களையும் நுட்பமாய்க் கற்றுத் தேர்ந்தார்; சிறுகதை, கவிதை, புனைகதைகளைத் திறனாய்வு செய்வதில் இவருக்குப் பேரார்வம் உண்டு. இவருக்கு மனைவியும் இரு பெண்மக்களும் ஓர் ஆண்மகவும் உள்ளனர்.

**4.** செவ்விசைச் சித்தர் ரெ. சண்முகம்,
துணைத் தொகுப்பாசிரியர்

கெடா மாநிலக் கூலிம் நகரில் 14.12.1934இல் பிறந்த இவர் புனைபெயர்கள் மெய்யடியான், பில்கணன் முதலாயனவாகும். ஆசிரியர் திரு. மு. காசிம் என்பாரிடம் இவர் தமிழ் பயின்றார்; கவிஞர் கே. எம். கறுப்பையா தூண்டுதலால் கவிதை பாடவந்தார்; பீடோங் புலவர் அ. முத்தையனுடனும் கவிஞர் கா. பெருமாளுடனும் நெருங்கிப் பழகித் தமிழறிவை வளர்த்துக்கொண்டார்; இளமைக் காலம் தொட்டே மேடை நாடகங்களில் நடிக்கத் தொடங்கி, நடிப்பிலும் வாய்ப்பாட்டிலும் தேர்ந்தார்; இளம் அகவையில் நாதசுர வித்துவான் திரு. சுப்பிரமணியம் என்பாரால் இசைப்பால் ஊட்டப்பெற்றுப் பின்னர்த் தமிழகம் சென்று, சில காலம் தங்கி, இன்று இசைக் கடலாய்த் திகழும் பாலமுரளி கிருஷ்ணாவிடமும் சிங்கராஜர் என்னும் வயலின் கலைஞரிடமும் கருநாடக இசை பயின்று தேர்ந்தார்; பண்டைய இசைமரபு அறிந்து பாடும் இவர், மெல்லிசைத் துறையிலும் வல்லவராய்த் திகழ்கிறார். மலேசிய வானொலியிலும் சிங்கப்பூர் ஒலிபரப்புக் கழகத்திலும் பணியாற்றிய காலை, கணக்கற்ற பாடல்கள் எழுதியும் அவற்றுக்கு இசையமைத்துப் பாடியும் மற்றவர்களைப் பாடவைத்தும் இவர் இசைக்கலைக்கு ஆற்றிய தொண்டு, இவருக்கு 'மெல்லிசை மன்னர்', 'இசைமணி' முதலாய விருதுகளைப் பெற்றுத் தந்தது. இவர்

பாடல்கள் இசைத்தட்டுகளிலும் ஒலிநாடாக்களிலும் பதிவாகியுள்ளன. முழுக்கத் தாமே இசையமைத்து உருவாக்கிய தனி இசைநாடாக்களும் வெளிவந்துள்ளன. அரசர் சர் அண்ணாமலைச் செட்டியார் கண்ட தமிழிசை இயக்கப் பணிகளில் பெருமதிப்புக் கொண்டவராய இவர், தம் இசையரங்குகளில் தமிழ்ப் பாடல்களுக்கே முன்னுரிமை வழங்கிவருகிறார்; முத்தமிழிலும் வல்லவராய இவர், பல மேடை நாடகங்களை எழுதி, இயக்கி, அரங்கேற்றி வெற்றி கண்டுள்ளார்; 'நீயா நானா?' என்னும் நாடகத்தைக் குறைந்த பொருட்செலவில் உருவாக்கி, சில காலம் நாடெங்கும் நடத்தினார். சிறுகதை, கட்டுரை, கவிதைகள் எழுதியுள்ள இவர், தம்முடைய கட்டுரைகள் சிலவற்றைத் தொகுத்து, 'நல்லதே செய்வோம்' என்னும் பெயரிலும் இசைப்பாடல்கள் சிலவற்றைத் தொகுத்து, 'இசைக்கொத்து' என்னும் பெயரிலும், கவிதைகள் சிலவற்றைத் தொகுத்துப் 'பிரார்த்தனை' என்னும் பெயரிலும் வெளியிட்டுள்ளார். இப்படி இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழுக்கும் தொண்டாற்றுவதே தம் முழுநேரக் கடமையாய்க் கொண்டுள்ள இவரது இசைத் தொண்டினைப் பாராட்டித் தலைநகர்ச் சங்கீதாலயம் இவருக்குச் 'செவ்விசைச் சித்தர்' என்னும் விருது வழங்கிச் சிறப்புச் செய்தது (6.1.1991). இவருக்கு மனைவியும் ஓர் ஆண்மகனும், இரு பெண்மக்களும் உள்ளனர்.

**5. கவிஞரேறு அமலதாசன்,**
**உதவியாளர்**

இவர் சிலாங்கூர் மாநிலக் கோலகுபு பாருவில் 1.9.1939இல் பிறந்தார்; உலு கலிடோனியன் தோட்டப் பள்ளியில் தொடக்கக் கல்வி பயின்று, பின்னர் ரவாங் கிளைவ் இன்ஸ்டிடியூசன் பள்ளியிலும், நெகிரி செம்பிலான் டீச்சர்ஸ் யூனியன் பள்ளியிலும் பயின்று 3ஆம் படிவம் (L.C.E.) தேறினார். தமிழவேள் கோ. சாரங்கபாணி தொடக்கி நடத்திய தமிழர் திருநாளால் ஈர்க்கப்பட்டு 1958இல் தமிழ்முரசு மாணவர் மணிமன்ற இதழ்வழி எழுத்துப் பணியைத் தொடங்கினார்; பின்னர்ச் சிங்கை சென்று கவிவாணர் ஐ. உலகநாதன் தொடர்பால் சிங்கப்பூர் மாதவி இலக்கிய மன்றத் துணைத் தலைவராகிக் கவிதை உலகில் அழுத்தமாய்க் காலூன்றினார்; பல்வேறு இலக்கியப் போட்டிகளில் வென்று பரிசு பெற்றார். தமிழகக் கவிஞர் பொன்னடியான் வெளியிடும் முல்லைச்சரம் ஏடு 1989ஆம் ஆண்டில் இவருக்குக் 'கவிஞரேறு' என்னும் பட்டம் வழங்கிச் சிறப்புச் செய்தது. சிங்கப்பூர்த் தமிழ் எழுத்தாளர் கழகத் தலைவராய்ப் பொறுப்பேற்று நீண்டகாலமாய்த் தொண்டாற்றி வருகிறார்; சமுதாய, இலக்கியப் பணிகளில் எழுத்தாளர் கழகத்தை ஈடுபடுத்தி வருகிறார். பாரதிதாசன் இயக்கம் (மலேசியா), 1995 இல் நடத்திய 'எழுத்தாளர் தின' விழாவில் இவர் கவிதைப் பணியைப் பாராட்டிப் பொன்னாடை போர்த்தி ஆயிரம் வெள்ளி பொற்கிழி வழங்கிற்று. இவருக்கு மனைவியும் ஒரு மகளும் இரண்டு ஆண்மக்களும் உள்ளனர்.

**6. சதாசிவம் வீரையா,**
**உதவியாளர்**

மலேசியப் போர்ட் டிக்சன் நகரில் 21.8.1952இல் பிறந்த இவர், அம்பாங் தமிழ்ப்பள்ளியில் தொடக்கக் கல்வி பயின்றார். தொடர்ந்து சிங்கப்பூர் உமறுபுலவர்

தமிழ் உயர்நிலைப் பள்ளியில் இடைநிலைக் கல்வியை முடித்தார்; பின்னர் முதியோர் வகுப்பில் (பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பு) ஈராண்டுகள் கற்று, உயர்நிலைக் கல்விச் சான்றிதழ் (H.S.C.) பெற்றார்; 1970-72ஆம் ஆண்டுகளில் சிங்கப்பூர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பயின்று ஆசிரியப் பயிற்சியை முடித்தார்; சிங்கப்பூர் இடைநிலைப் பள்ளி ஒன்றில் தமிழாசிரியராய்ப் பணிபுரிந்த இவர் சிங்கப்பூர்த் தமிழாசிரியர் சங்கத்தில் 1982முதல் 1988வரை பொதுச் செயலாளராயும், 1988-90ஆம் ஆண்டுகளில் தேசியத் தலைவராயும் பொறுப்பு வகித்தார்; இவர் பொறுப்பிலிருந்த காலத்தில் அச் சங்கத்திற்கு மண்டபத்துடன் கூடிய சொந்த அலுவலகம் ஒன்றனை விலைக்கு வாங்கினார்; சிங்கப்பூர்த் தமிழாசிரியர் இளங்கலை முதலாய பட்டக் கல்விபெற வெண்டோ கல்லூரிமூலம் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக அஞ்சல்வழிக் கல்வித்துறைத் தேர்வுகளைச் சிங்கப்பூரில் நடத்த ஏற்பாடு செய்தார்; பல்கலைக்கழகக் கருத்தரங்கக் கண்காட்சிக்கு அரிதின் முயன்று பல அரிய தமிழ் நூல்களைத் திரட்டித் தந்தார். 1974-76ஆம் ஆண்டுகளில் போர்ப்படைப் பயிற்சி பெற்ற இவர், பகுதிநேரப் படைவீரராயும் ஒரு படைப்பிரிவிற்கு அதிகாரி (Staff Sargeant) யாயும் பணியாற்றியுள்ளார். இவருக்கு மனைவியும் இரு ஆண்மக்களும் உள்ளனர்.

**7. சை. பீர் முகம்மது,**
**உதவியாளர்**

மலேசியத் தலைநகராய கோலாலம்பூரில் 11.1.1942இல் பிறந்த இவர், 1958ஆம் ஆண்டில் இலக்கியத் துறையில் நுழைந்தார்; 'ஞானாசிரியன்' என்னும் புனைபெயரிலும் எழுதினார்; சிறுகதை, கட்டுரை, நாடகம் முதலாய துறைகளில் ஈடுபட்டு உழைத்துவரும் இவர், மலேசியச் சிறுகதை எழுத்தாளர்களில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க சிலருள் ஒருவர். தம்முடைய சிறுகதைகளுள் சிலவற்றைத் தொகுத்து, 'வெண்மணல்' என்னும் நூலாய் வெளியிட்டுள்ளார். இந் நூல் ஆஸ்திரேலியாவில், மாத்தளை சோமுவின் ஏற்பாட்டால் (1996) வெளியிடப்பட்டது. தமிழக ஏடுகளில் இவருடைய கதைகள் வெளிவந்துள்ளன. தமிழகத்தில் வெளிவந்த 'அக்கரை இலக்கியம்' என்னும் நூலில் இவருடைய சிறுகதையும் இடம்பெற்றுள்ளது. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தொடக்க கால உறுப்பினராய இவர் அதன் செயலாளராயும் செயற்குழு உறுப்பினராயும் அமர்ந்து பணிசெய்துள்ளார்; கவிதைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டு சில கவிதைகளும் புனைந்துள்ளார். தமிழ் இளைஞர் மணிமன்றத்தில் சேர்ந்து தொண்டாற்றியுள்ள இவர், தேசிய நிலையிலாய தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவையிலும் இணைந்து தொண்டாற்றினார். அதன் முதல் தேசியத் தலைவர் சா. ஆ. அன்பானந்தனுடன் சேர்ந்து நாடகங்களில் நடித்துள்ளார். 1985இல் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், இவர்க்குத் 'தமிழவேள் கோ. சாரங்கபாணி நினைவுப் பதக்கம்' வழங்கி இவருடைய இலக்கியத் தொண்டைப் பாராட்டி மகிழ்ந்தது. குத்தகைத்தொழில் செய்துவரும் இவருக்கு மனைவியும் நான்கு மக்களும் உள்ளனர்.

**8. பி. கோவிந்தசாமி,**
**உதவியாளர்**

சிலாங்கூர் மாநிலப் பத்தாங் பெர்சுந்தையில் 28.11.1938இல் பிறந்தவராய இவர் ஒரு தமிழாசிரியர். நல்ல சிறுகதை எழுத்தாளருமாவார். 'சிலாங்கூர்க் கூட்டரசு வளாகத் தமிழ் எழுத்தாளர் (வாசகர்) இயக்க'த் துணைத் தலைவராயும் பணியாற்றினார்; தமிழ் எழுத்தாளர் சங்கத் தேசியப் பேரவையில் பொறுப்பான பதவியில் அமர்ந்து தொண்டாற்றினார். இவர் எழுதிய 'உடல்மட்டும் நனைகிறது' என்னும் சிறுகதை, சிங்கப்பூர் இலக்கியக் களத்திலும் மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்திலும் 'உலகத்தரம் வாய்ந்த சிறுகதை' எனப் பாராட்டப்பெற்றது. நெடுங்காலமாய்ப் பொதுப்பணியில் ஈடுபட்டு உழைத்துவரும் இவர், 1960ஆம் ஆண்டுமுதல் தொடர்ந்து பத்தாண்டுகளுக்குமேல் டிங்கில் அம்பர்த்தினாங் தோட்டத் தமிழர் திருநாள் விழாக் குழுத் தலைவராய் விளங்கித் தமிழர் திருநாள் விழாவினை எழுச்சியொடு கொண்டாடினார். தமிழ்நெறி மன்றத் தலைவர் முரசு. நெடுமாறனுடன் இணைந்து 1978ஆம் ஆண்டுமுதல் ஆயிரக் கணக்காய மாணவர்களை ஒருங்கிணைத்து, மாணவர் பண்பாட்டு விழாவினை ஆண்டுதோறும் கொண்டாட அருந்தொண்டாற்றினார்; மன்றம் நடத்தும் 3-5ஆம் படிவ மாணவர்க்காய இலவச வழிகாட்டி வகுப்புகளில் பல ஆண்டுகள் கற்பித்து மாணவர் பலர், நல்ல தேர்ச்சிபெற உழைத்தார்; மன்றத் துணைத் தலைவராயும், நீண்டகாலம் பணியாற்றினார். மனங்கள் (1980), உடல்மட்டும் நனைகிறது (1985) ஆகிய சிறுகதைத் தொகுப்புகளை வெளியிட்டார். இவருக்கு மனைவியும் ஒருமகனும் உள்ளனர்.

**9. மணிக்கவிஞர் பாதாசன்,**
**உதவியாளர்**

சிலாங்கூர் மாநிலக் காஜாங் நகரில் 29.4.1943இல் பிறந்த இவர் இயற்பெயர் ஆறுமுகம். மூன்றாம் படிவம் (L.C.E.)வரை படித்துள்ள இவர், 1962ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; சங்கு சண்முகமும் முருகு. சுப்பிரமணியனும் இவருக்குக் கவிதைத்துறையிலும் தாளிகைத் துறையிலும் வழிகாட்டினர்; தமிழ்நேசன், புதிய சமுதாயம், தமிழ் ஓசை முதலாய ஏடுகளில் துணையாசிரியராய்ப் பணியாற்றிய இவர், இப்போது மலேசிய நண்பனில் பணிபுரிகிறார்; 'மணிக்கவிஞர்' விருதும் இலக்கியப் போட்டிகளில் பல்வேறு பரிசுகளும் பெற்றுள்ள இவர், தம் கவிதைகளுள் சிலவற்றைத் தொகுத்துப் 'பாதாசனின் கவிதைகள்' என்னும் நூலையும் (1979), 'ஞாயிறுகளம்' என்னும் கட்டுரைத் தொகுப்பு நூலையும் (1996) வெளியிட்டுள்ளார்; கோலாலம்பூரில் இயங்கிவரும் 'கவிதைக்களம்' அமைப்பாளருள் இவரும் ஒருவர். இவருக்கு மனைவியும், இரண்டு ஆண்மக்களும், இரண்டு பெண்மக்களும் உள்ளனர்.

**10. கவிஞர் மைதீ. சுல்தான்,**
**உதவியாளர்**

'தென்கிழக்கின் முத்து' எனச் சிறப்பிக்கப்படும் பினாங்குத் தீவில் 12.1.1941இல்

பிறந்த இவர் இயற்பெயர் முஹம்மது சுல்தான். தமிழ், ஆங்கிலம், மலாய் ஆகிய மூன்று மொழிகளிலும் தேர்ச்சிபெற்றுள்ள இவர், ஆறாம் படிவம்வரை (*H.S.C.*) படித்துத் தேறினார். இவர் அண்ணன் மைதீ. அசன்கனியின் வழிகாட்டுதலால் *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; புதுப்புதுப் பொருள்களைத் தேடி நறுக்குத் தெறித்தாற்போல் பாடுவார்; புகழ்பெற்ற பினாங்குத் 'திரிகூட'ரில் இவர் ஒருவர்; (காரைகிழாரும் வீரமானும் மற்றைய இருவர்.) மலேசிய வானொலியில் பணிபுரிந்த இவர் *1996*இல் ஓய்வு பெற்றார். கதை, கட்டுரை, நாடகம் முதலாய இலக்கியத் துறைகளிலும் ஈடுபட்டு உழைத்துவரும் இவர், தம் பாடல்களுள் சிலவற்றைத் தொகுத்து 'மைதீ. சுல்தான் கவிதைகள்' என்னும் பெயரால் நூலாக்கி வெளியிட்டுள்ளார்; கோலாலம்பூரில் இயங்கிவரும் 'கவிதைக் களம்' என்னும் அமைப்பின் நிறுவனர்களுள் இவரும் ஒருவர். விளையாட்டுத்துறை மேம்பாட்டுக்கு இவர் ஆற்றிவரும் தொண்டிற்காக அண்மையில் பகாங் மாநிலச் சுல்தானால் '*P.J.K.*' (பற்றுறுதிமிக்க தொண்டர்) விருது வழங்கிச் சிறப்பிக்கப்பெற்றார்; இவருக்கு மனைவியும் இரு பெண்மக்களும், இரு ஆண்மக்களும் உள்ளனர்.

**11.** கவிச்சுடர் காரைகிழார்,
உதவியாளர்

பினாங்குத் தீவில் *13.10.1941*இல் பிறந்த இவரது இயற்பெயர் கறுப்பையா. கே. பிச்சைமாணிக்கம் ஊக்குவிப்பால் உருவாய இவர், பினாங்குத் தமிழ் இளைஞர் மணிமன்றம் வழங்கிய கவிஞர்களுள் ஒருவராவார்; *1958*ஆம் ஆண்டில் கவிதை பாடத் தொடங்கிய இவர் கவிதை, காவியம், குறுங்காவியம், வில்லுப்பாட்டு, இசைப் பாடல் முதலியன பாடியுள்ளார். அலையோசை (காவியம்), பூச்சரம் (கவிதைத் தொகுப்பு), கணைகள் (உணர்ச்சிப் பாட்டுகள்) ஆகிய கவிதை நூல்களையும், நறுமலர்கள் (சிறுகதைத் தொகுப்பு), வண்ணத்துப் பூச்சி (புனைகதை), பயணம் (நெடுங்கதை) முதலாய உரைநடை நூல்களையும் வெளியிட்டுள்ளார். 'கவிச்சுடர்'ப் பட்டம் வழங்கிச் சிறப்பிக்கப்பெற்ற இவர் அச்சகத் தொழிலில் ஈடுபட்டுள்ளார். இவர் பாடல்களில் சில ஐந்தாம் படிவ (*S.P.M.*) இலக்கியப் பாடத்திட்டத்தில் (*1985-90*ஆம் ஆண்டுகளில்) சேர்க்கப்பட்டிருந்தன. இவருக்கு மனைவியும் ஓர் ஆண்மகனும் இரு பெண்மக்களும் உள்ளனர்.

## இ. நெறிப்படுத்துநர்

**1.** முனைவர் க.ப. அறவாணன்

தமிழகத் தஞ்சை மாவட்டத்தில் *9.8.1941* இல் பிறந்தவரான இவர் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் பயின்றார். நன்னூல் உரைகளை ஆராய்ந்து எம்.லிட். பட்டமும், தொல்காப்பியப் பொருளதிகாரத்தை ஆராய்ந்து முனைவர் (*Ph.D.*) பட்டமும் பெற்றார். ஆங்கிலம், பிரெஞ்சு முதலாய மொழிகளும் கற்ற

பன்மொழிப் புலவர்; இலயோலா தன்னாட்சிக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராய்ப் பணியாற்றினார்.

1977முதல் 1982வரை மேற்காப்பிரிக்கா செனகாலிலுள்ள தக்கார் பல்கலைக்கழக 'ஆப்பிரிக்க அடிப்படை ஆய்வக'த்தில் திராவிட ஆப்பிரிக்கத் தொடர்புகள்பற்றி ஐந்தாண்டுகள் ஆய்வு நிகழ்த்தியவர்; மேற்கு, கிழக்கு ஐரோப்பிய நாடுகள், மலேசியா, சிங்கப்பூர் உள்ளிட்ட தென்கிழக்காசிய நாடுகள், சப்பான், அமெரிக்க ஒன்றிய நாடுகள் ஆகிய நாடுகளுக்குச் சென்று வந்தவர். இவர் ஆற்றிய கல்விப் பணியைப் பாராட்டி இலயோலா கல்லூரி இவருக்குச் 'சிறந்த பேராசிரியர்' விருது வழங்கிச் சிறப்பித்தது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் 'கபிலர்' விருது வழங்கிப் பெருமைப்படுத்தினார்.

இவர் ஐந்து ஆங்கில நூல்களும், நாற்பதுக்கு மேற்பட்ட தமிழ் நூல்களும் எழுதியுள்ளார். அவற்றுள் தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழர்தம் மறுபக்கம், தமிழ்ச் சமுதாய நோயும் மருந்தும், தமிழர் தடங்கல், தமிழா! தலைமை தாங்க வா! முதலாய இன எழுச்சி நூல்கள் ஒரு புதிய எழுச்சியைத் தூண்டி மறுமலர்ச்சிக்கு வித்திடும் நூல்களாகும்.

இவர் எழுதிய வரலாற்று ஆய்வு நூலான தமிழர் தாயகம், இன எழுச்சி நூலான 'தமிழர்தம் மறுபக்கம்', இலக்கண வரலாற்று ஆய்வு நூலான 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை', வரலாற்றில் நடந்த இடர்களை எடுத்துரைக்கும் நூலான 'தமிழர்மேல் நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள்' ஆகிய நூல்களுக்குத் தமிழக அரசு முதற்பரிசு தந்து பாராட்டியது. தமிழர், தலைமை வழிபாட்டுத் தளையிலிருந்து மீள வேண்டுமென்பதும், தாய்மொழிப்பற்றும் இனமான உணர்வும் பெற்று உலகிடைத் தலைநிமிர வேண்டுமென்பதும் இவர்தம் உள்ளக்கிடக்கையாகும்.

சிறந்த நிருவாகியான இவர் பல மாநாடுகளைப் பொறுப்பேற்று வெற்றியோடு நடத்தியுள்ளார். உலகின் பல நாடுகளுக்குச் சென்று ஆய்வுரைகள் நிகழ்த்தியுள்ளார். இப்போது புதுவைப் பல்கலைக்கழகப் பேராசிரியராயும் தமிழ்த்துறைத் தலைவராயும் பணியாற்றி வருகிறார்; இன எழுச்சி நூல்கள் படைப்பதில் முதன்மை பெற்று விளங்குகிறார்.

**2. முனைவர் ச. சிங்காரவேலு**

22.12.1936ஆம் நாள் தமிழகத்தில் பிறந்த இவர், மலாயாப் பல்கலைக்கழகத்தில் 1960ஆம் ஆண்டு இளங்கலைப் பட்டமும் (B.A.Hons), 1965ஆம் ஆண்டு முதுகலைப் பட்டமும் (M.A.) பெற்றார். 'தென்கிழக்காசிய இராமாயணப் பாரம்பரியம்' என்னும் தலைப்பில் ஆராய்ச்சி செய்து முனைவர் (Ph.D.) பட்டமும் பெற்றார் (1981).

தொடக்கத்தில் இவர் பண்பாட்டுத்துறை அமைச்சின் (சிங்கப்பூர்) பதிப்பாசிரியராய்ச் சேர்ந்தார் (1960 - 62). 1963இல் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையில் துணை விரிவுரையாளராய்ச் சேர்ந்தார். படிப்படியாய்

முன்னேறிப் பேராசிரியராயும் (1980 - 94) துறைத் தலைவராயும் (1969 - 84), ஆனார். 1994இல் பணி ஓய்வு பெற்றார்.

கடும் உழைப்பும், நிருவாகத்திறனும், கடமை உணர்வும், நேர்மைப் பண்பும், உதவும் மனப்பான்மையும் கொண்ட இவர், இந்திய ஆய்வியல் துறையின் தலைவராய் இருந்த காலம் ஒரு பொற்காலம் எனலாம். இவர் தமிழ், ஆங்கிலம், மலாய் ஆகிய மூன்று மொழிகளிலும் சிறந்த புலமை கொண்டவர். சங்க இலக்கியம் முதல் தற்கால இலக்கியம்வரை ஆழ்ந்து கற்றவர். இராமாயணத்தில் ஆராய்ச்சி வல்லுநர்; இச் சிறப்புகளால் தகுதிவாய்ந்த மாணவர் பலர் உருவாக வழிகாட்டினார். முதலாம், ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடுகளின் வெற்றிக்கு அளப்பரிய பணிகள் புரிந்தார்; உலக அரங்குகளில் தரமிக்க பல ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படைத்தார்; தென்னகத்திற்கும் தென்கிழக்காசியாவுக்கும் இடையில் நிலவிவந்த நாகரிகம், பண்பாட்டு, அரசியல், வாணிக, சமய, கலை, இலக்கியத் தொடர்புகளைத் தமிழரல்லாத மாணவரும் உணரும் வண்ணம் துல்லியமாய் எடுத்துரைக்கும் பேராசிரியராய் ஒளிர்ந்தார். இவர் இத் துறையில் ஓர் உரிமைச் சான்றாளரானார் (Authority)

இப் பெருமகனார் சமயத்துறையிலும் மேம்பட்ட அறிஞராய் விளங்குபவர்; சைவ சித்தாந்தத்தொடு வேதாந்தத்திலும் புலமையுடையவர்; மேலும் பௌத்த, சைன மதக் கோட்பாடுகளையும் நன்கு உணர்ந்தவர்.

பல்கலைக்கழகத்தில் பணியாற்றியபோதே பகுதி நேரமாய்ச் சட்டம் பயின்று தேர்ந்தார் (LLB. Hons; C.L.P.). வழக்கறிஞராய்ப் பணியாற்றினார். இப்போது சட்ட விரிவுரையாளராய்ப் பணிபுரிந்து வருகிறார். மீண்டும் வழக்கறிஞராய்ப் பணியாற்ற விழைகிறார். கலை, பண்பாட்டு, சுற்றுலாத் துறை அமைச்சின் தகவுரைஞர் குழுவில், ஓர் உறுப்பினராய்ப் பொறுப்பு வகிக்கிறார். இவர் சீரிய பணியைப் பாராட்டிப் பேரரசர் இவருக்கு 'நாட்டுப்பற்று மிக்க பெருந்தகை (J.S.M.) என்னும் விருது வழங்கிச் சிறப்பித்துள்ளார். வரலாற்று வறுமைகொண்ட மன்பதைக்கு இவரால் பல பயனுடைய வரவுகளைத் தரமுடியும். இவரையும், இவரைப் போன்ற அறிஞர் பெருமக்களையும் சமுதாயம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

## ஈ. தகவுரைஞர் குழுவினர்

### 1. ஆ. சோதிநாதன்

23.1.1936இல் கோலாலம்பூரில் பிறந்த இவர், மலேசியத் தமிழ்க் கல்வி உலகிற்கு அரும்பணியாற்றிய அறிஞர்களுள் ஒருவர். தமிழ்ப்பள்ளி ஆசிரியராய் இவர் வாழ்க்கையைத் தொடங்கினார். பின்னர் மலேசியாவின் மிகப் பெரிய தமிழ்ப்பள்ளியாகிய பெட்டாலிங் ஜெயா விவேகானந்தா தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியராய் அமர்ந்து, பத்தாண்டுகள் பணிபுரிந்தார்; அக் காலத்தில்

அதனை நாட்டின் தலைசிறந்த தமிழ்ப்பள்ளியாய் மேம்படுத்தினார். தேசிய ஆசிரியர் பணியாளர் சங்கத் தமிழாசிரியர்களின் தொழில் வளர்ச்சிக்கு உழைத்த இவர், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பகுதிநேர விரிவுரையாளராய்ப் பணியாற்றிப் பல நூறு ஆசிரியர்களை உருவாக்கினார். தமிழ்க் கல்வித்துறையில் இவர் காட்டிய ஆர்வமும் கடின உழைப்பும் இவரைச் சிலாங்கூர் மாநிலத் தமிழ்ப் பள்ளிகள் அமைப்பாளர் பதவியில் அமர்த்தின. தம் பதவிக் காலத்தில் 'தலைமையாசிரியர் மன்றம்' என்னும் அமைப்பினை நிறுவி, அதன் வாயிலாய்த் தமிழ் மாணவர் கல்வி வளர்ச்சிக்காய பல்வேறு மேம்பாட்டு நடவடிக்கைகளை மேற்கொண்டார்; பணியிலிருந்து விருப்போய்வு பெற்ற பின்னர்ச் சிறந்த பதிப்பாளராயும் நூலாசிரியராயும் விளங்கிவருகிறார். பாடநூல் துறையில் நம்பிக்கை யூட்டும் ஒளிச்சுடராய் விளங்கிவரும் இவர் பதிப்பித்த தொடக்க நிலை இடைநிலைப் பள்ளிகளுக்காய பாடநூல்கள் தமிழக அறிஞரும் போற்றும் வண்ணம் கலை நுட்பங்களுடன் விளங்குகின்றன. தாளிகை (பத்திரிகை)த் துறையிலும் ஈடுபட்டு 'மயில்' கிழமை ஏட்டின்வழி நடுநிலையொடு தொண்டாற்றித் தரமான ஒரு குடும்ப ஏடாயும் தொடக்க, இடை, உயர்நிலைப்பள்ளி மாணவர்க்கு வழிகாட்டி உதவும் ஒரு கல்வி ஏடாயும் அதனை உலாவரச் செய்தார். தற்பெருமை பாராட்டிக்கொள்ளாத அடக்கமான தமிழ்த்தொண்டராய இவர்க்கு மனைவியும் மூன்று மக்களும் உள்ளனர்.

**2. டாக்டர் சி. கந்தையா**
*(Dr. Sivanantha Raja Kandiah, AM., M.B., F.R.C.S.*
*Diplomate American Board Of Plastic Surgery)*

பேரா மாநிலம் தெலுக் இந்தானில் 7.3.1934இல் டாக்டர் சிவானந்தராஜா கந்தையா பிறந்தார்; தம் கல்வியைத் தைப்பிங் தமிழ்ப்பள்ளியில் தொடங்கினார்; உயர்நிலைக் கல்வியை யாழ்ப்பாணத்திலும் கண்டியிலும் மருத்துவக் கல்வியைக் கொழும்பிலும் பயின்று, 1960இல் எம்.பி.,பி.எஸ். பட்டம் பெற்றார்; ஜோகூர் பாரு மருத்துவமனையில் பயிற்சி மருத்துவராய்ச் (Housemanship) சேர்ந்தார்; அடுத்துப் பகாங் மாநிலம், கோலலிப்பிஸ் மருத்துவமனையிலும் கோலாலம்பூர்ப் பொது மருத்துவமனையிலும் மருத்துவ அலுவலராய்ப் பணியாற்றினார்.

1965இல் எடின்பரோ அரசு கல்லூரியிலும், 1966இல் இலண்டன் அரசு கல்லூரியிலும் எஃப்.ஆர்.சி.எஸ்.. (F.R.C.S.) பட்டங்களைப் பெற்றார்; கோலாலம்பூர்ப் பொது மருத்துவமனையில் மீண்டும் அறுவை மருத்துவ வல்லுநராய்ப் பணியைத் தொடர்ந்தார்; 1968ஆம் ஆண்டில் டாக்டர் சரோஜினி தேவியை (மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில்) மணம் புரிந்துகொண்டார். அடுத்த மாதமே அமெரிக்கா சென்று ஜாக்ஸன்வில் புளோரிடாவில் ஈராண்டுகள் பயின்று, 'அழகுகலை' (Plastic Surgery) அறுவை மருத்துவத்தில் மிக உயரிய பட்டம் பெற்றார்.

1970இல் மீண்டும் பொது மருத்துவமனையில் அழகுகலை அறுவைச் சிகிச்சை மருத்துவராய்ச் சேர்ந்தார்; நாட்டின் தலைமை மருத்துவமனையில் அழகுகலை

அறுவைச் சிகிச்சைக்கெனத் தனித்துறை ஒன்றை ஏற்படுத்த விழைந்தார். இவர் விருப்பத்தை அறிந்த முன்னாள் தலைமையமைச்சர் துன் அப்துல் ரசாக் பெருமகிழ்வுற்று, இவரைப் பாராட்டி, அத் துறையை நிறுவ வாய்ப்பளித்தார்; வரம்பற்ற நிதியினையும் ஒதுக்கினார்.

தாம் உருவாக்கிய அத் துறையின் வாயிலாய் டாக்டர் கந்தையா, ஊனமுற்ற குழந்தைகளுக்கும், புற்றுநோயாலும் தீக்காயங்களாலும் ஊனமுற்றவர்க்கும், தொழு நோயால் முடமானவர்க்கும் புதுவாழ்வளித்தார்; துறைத்தலைமை மருத்துவராய்ப் பணியாற்றியகாலை நாட்டின் பல பாகங்களுக்கும் சென்று, இம் மருத்துவப் பணிகளை ஆற்றினார்; தம் துறையில் பலருக்குப் பயிற்சியும் அளித்தார்.

*1979*ஆம் ஆண்டு கோலாலம்பூர் ஈப்போச் சாலையில் 'கந்தையா அழகு கலை' என்னும் பெயரில் சொந்த மருத்துவ இல்லம் ஒன்றனை உருவாக்கினார். மிகப் பெரிய நிலையினருக்குப் பெரும்செலவில் மருத்துவம் செய்த இம் மனை, வசதியற்றோர்க்கும் குறைந்த கட்டணத்தில், ஏன் கட்டணமின்றியும் தொண்டாற்றியுள்ளது.

தமிழக மேல்மருவத்தூர் அருள்மிகு ஆதிபராசத்தி அறநிலைப் பணிகளால் இவர் பெரிதும் கவரப்பட்டார்; சித்தர் பீட நாயகர் அருள்திரு பங்காரு அடிகளாரைத் தம் குருவாக ஏற்றுக்கொண்டார்; செவ்வாடைத் தொண்டர்களுள் இவரும் ஒருவரானார்; அருள்மிகு ஆதிபராசத்தி இயக்கத்தைத் தக்கார் துணையுடன் மலேசியாவிலும் அமைத்து 'மலேசிய ஆதிபராசத்தி ஆன்மிக அறப்பணி இயக்கம்' என்னும் பெயரில் அதனை ஒரு தேசிய அமைப்பாகவும் பதிவுபெறச் செய்து வழிநடத்தி வருகிறார்.

தம் வருவாயில் ஒரு பகுதியை ஒதுக்கி, அடக்கத்தோடு அறப்பணி புரிந்து வருகிறார். இவருக்கு ஒரு மகளும் (டாக்டர்) ஒரு மகனும் உள்ளனர். இவர் அழகுகலை அறுவை மருத்துவ உலகின் புகழ்பெற்ற வல்லுநர்களுள் ஒருவர். இவர் மருத்துவத் தொண்டைப் பாராட்டுமுகத்தான் பேரரசர் நாட்டுப்பற்று மிக்க பெருந்தகை (*J.S.M.*) என்னும் விருது (*1996*) வழங்கிச் சிறப்பித்துள்ளார்.

**3. மருத்துவ மாணிக்கம் டாக்டர் சி. சொக்கலிங்கம்**
*(Dr. S. Sockalingam, M.B.,B.S. (Madras), M.C.G.P. (Mal)).*

சிலாங்கூர் மாவட்டத்தில் *4.1.1939*இல் பிறந்த இவர், தமிழகம் சென்னைப் பல்கலைக்கழகத்தில் *1967*இல் எம்.பி.பி.எஸ்., பட்டம் பெற்றார். பின்னர் மலாயாப் பல்கலைக்கழகத்தில் குழந்தை மருத்துவ நிபுணத்துவப் பட்டம் (எம்.சி.ஜி.பி) பெற்றார்; அரசு மருத்துவ மனையில் ஆறாண்டுகளும் மலேசிய இராணுவத்தில் 'கேப்டன்' தகுதியில் ஈராண்டுகளும் பணியாற்றினார்; *1975*முதல் சொந்த மருத்துவமனை ஒன்றனை நிறுவி நடத்திவருகிறார்; சமுதாய, கலை, இலக்கியத் துறைகளிலும் பேரீடுபாடுகொண்டு தொண்டாற்றிவருகின்றார்; துணை, இந்தப் பயணம் தொடரும், கோவில் முழுதும் கண்டேன், குழலி, மனத்துக்கினிய சைவ சமயம், ஆறுநாட்டு வேளாளர் வரலாறு, மனவீணை முதலாய இவருடைய

நூல்களும், நாளேடுகளிலும் கிழமை ஏடுகளிலும் இவர் தொடர்ந்து எழுதிவரும் சிறுகதைகளும், நெடுங்கதைகளும் இவருடைய இலக்கியத்துறை ஈடுபாட்டுக்கும் ஆர்வத்திற்கும் சான்றுகளாகும். பல அறக்கட்டளைகளை நிறுவிப் பொறியியல், மருத்துவம், கணினி முதலாய துறைகளில் பயிலும் மாணவர்க்கு உதவிவருகிறார். "தொல்காப்பியத்திற்குச் செம்மையான உரை ஒன்று வெளிவரல் வேண்டும்" என்னும் அவாவில் அதனை வெளியிட முன்வந்திருக்கும் சென்னைத் தமிழ்வளர்ச்சி மன்றத்திற்குப் பொருட்கொடை நல்கிவருகிறார்; பல்வேறு தொண்டூழிய நிறுவனங்களில் பொறுப்பான பதவிகளில் அமர்ந்து பணிபுரிகிறார்; இந்த மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தை வெளியிடும் 'தமிழ்நெறி மன்ற'த்தில் தொடக்க நாள் முதலே ஈடுபாடு கொண்டு அதன் காப்பாளராயும் விளங்கிவருகிறார்; இவருடைய மருத்துவப் புலமையினையும் தொண்டினையும் பாராட்டிச் சென்னையில் இயங்கி வரும் 'தமிழ் வளர்ச்சி மன்றம்' தன் முப்பத்து மூன்றாம் ஆண்டு விழாவில் (18.2.1989), சென்னை உயரறமன்ற மாநடுவர் மாண்புமிகு கே. எஸ். பக்தவச்சலம் வாயிலாய் இவர்க்கு 'மருத்துவ மாணிக்கம்' என்னும் பட்டத்தினையும் அதற்குரிய பதக்கத்தினையும் வழங்கிச் சிறப்புச் செய்தது. இவருக்கு மனைவியும் மூன்று ஆண்மக்களும் உள்ளனர்.

**4. முனைவர் தமிழண்ணல்**

12.8.1928 இல் தமிழகத்தில் பிறந்தவரான இவர் இயற்பெயர் இராம. பெரியகருப்பன். இவர் முதுகலைப் (M.A.) பட்டமும், "Tradition and Talent in Cankam Literature" என்னும் தலைப்பில் ஆய்வேடு எழுதி முனைவர் (Ph.D.) பட்டமும் பெற்றவர்.

மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் அஞ்சல்வழிக் கல்வித்துறையில் பேராசிரியராயும் துறைத் தலைவராயும் பணிபுரிந்தார்; பின்னர்த் தமிழ்த்துறைத் தலைவரானார்; ஓய்வு பெற்ற பின்னரும் ஆராய்ச்சிப் பேராசிரியராய்ச் சில காலம் தொண்டுபுரிந்தார்.

நல்ல கவிஞருமான இவர் படைப்பிலக்கியங்களோடு சிறந்த ஆராய்ச்சி நூல்களும் நிறைய எழுதியுள்ளார். 'சங்க இலக்கிய மரபு', 'சங்க இலக்கிய ஒப்பீடு', 'குறிஞ்சிப்பாட்டுத் திறன்', 'ஜெயகாந்தனின் முன்னுரை இலக்கியம்' முதலாயன இவர்தம் ஆராய்ச்சி நூல்களாகும். இவர் எழுதிய 'ஆய்வியல் அறிமுகம்', 'ஒப்பிலக்கிய அறிமுகம்' ஆகியன ஆராய்ச்சி மாணவர்க்கு அரிய வழிகாட்டி நூல்களாகும். 'புதிய நோக்கில் தமிழிலக்கிய வரலாறு' என்னும் நூல் வரலாற்றுத் துறையில் ஒரு புதிய அணுகுமுறையாகும்.

இவர், காலத்திற்கேற்பப் புதிய இலக்கணநூல் சமைக்க வேண்டுமென்பதில் பேரார்வம் உடையவர்; உலகெங்கும் வாழும் தமிழர்க்குக் கல்வி, கலை, இலக்கியம் முதலாய துறைகளில் தமிழகம் வழிகாட்ட வேண்டுமென்னும் வேணவா உடையவர்.

'தமிழ் மாருதம்' இலக்கியத் திங்களிதழ் ஆசிரியர் முனைவர் ச. சாம்பசிவனாருடன் இணைந்து அதற்காய சில முயற்சிகளில் இறங்கியுள்ளார்.

இவர் நூலுக்குத் தமிழக அரசு விருது தந்து பாராட்டியுள்ள தென்பதும், இந்தியத் துணைக் கண்டத்தின் உயரிய பரிசளிப்பு நிறுவனமான 'சாகித்திய அகாதெமி'யில் இவர் ஓர் உறுப்பினராய்த் தொண்டாற்றியுள்ளாரென்பதும் குறிப்பிடத்தக்கன. தமிழ்ப் பணியை மேற்கொண்டு இவர் பல நாடுகளுக்குச் சென்று வந்தவர்; உலக மாநாடுகளில் ஆய்வுக் கட்டுரை படைத்தவர். தரமான முதுகலை, இளம் முனைவர், முனைவர் பட்டதாரிகளை உருவாக்கியவர். இன்றைய தமிழ்கூறு நல்லுலகில் குறிப்பிடத்தக்க பேரறிஞர்களுள் ஒருவர்.

**5. முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்**

சொல்லின் செல்வர் பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளையால் 'சிலம்பொலி' என வியந்து பாராட்டப்பட்ட முனைவர் சு. செல்லப்பன், சேலம் மாவட்டம் சிவியாம்பாளையத்தில் *22.12.1929*இல் பிறந்தார்; கல்வித்துறையில் எம்.ஏ. (தமிழ்), பி.டி., பி.எல். பட்டங்கள் பெற்றார்; 'இக்காலக் கவிதை உத்திகள்' என்னும் தலைப்பில் ஆய்வேடு எழுதி முனைவர் (பிஎச்.டி.) பட்டம் பெற்றார்.

பள்ளித் தலைமையாசிரியர், மாவட்டக் கழகக் கல்வி அலுவலர், தமிழ்வளர்ச்சி இயக்குநர் முதலாய பல்வேறு மதிப்புமிக்க பதவிகளில் சிறப்பாகப் பணியாற்றினார்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராய் அமர்ந்து *1991*இல் பதவி ஓய்வுபெற்றார். சிறந்த தமிழறிஞரும் மேடைநாடகப் பட்டறிவு மிக்கவருமாய இவர், 'சிலம்பொலி' என்னும் பெயரில் வெளியிட்ட ஆய்வுநூல், அறிஞர் பலரின் கருத்தை ஈர்த்தது; சிலப்பதிகாரம்பற்றிய புதிய சிந்தனைகளை மலரச் செய்தது; இவருக்குத் தமிழ்கூறு நல்லுலகில் ஒரு நிலையான இடத்தை ஏற்படுத்தியது. சிலப்பதிகாரத்தின் முதல் எழுத்துமுதல் கடைசி எழுத்துவரை தம் மனத்தில் பதியச் செய்திருப்பதொடு தமிழ் இலக்கிய நூல்கள் பலவற்றையும் தம் நினைவிலேற்றி நடமாடும் தமிழ் இலக்கியப் பேழையாய்த் திகழ்கிறார் சிலம்பொலி செல்லப்பன்.

இவர் பெற்றுள்ள மற்றொரு சிறப்பையும் ஈண்டு நினைவுகூரல் சாலும். சிறந்த இசுலாமியத் தமிழ்க் காப்பியமாய சீறாப்புராணத்தை நுணுகி ஆராய்ந்து இவர் ஆற்றிய தொடர்சொற்பொழிவுகள் இசுலாமிய உலகில் பெரும் வியப்பையும் பரபரப்பையும் ஏற்படுத்தின; பசுமையான படையலாய்ப் பதிந்தன; இதற்கு முன் யாரும் நிகழ்த்தியிராத சாதனையாயும் அமைந்தன. இசுலாமியப் பண்பாட்டினையெல்லாம் அரிதின் முயன்று கற்று, அக் காப்பியத்திற்கு ஓர் உரிமைச் சான்று (Authority) எனத்தக்க அளவு உயர்வுபெற்றார். ஒலிவடிவிலிருந்து வரிவடிவமும் பெற்றுள்ள அவ் வுரைத்தொடரைப் (சிந்தையள்ளும் சீறா) பாராட்டி 'மீரா பவுண்டேசன்' இவருக்குச் 'சீறாச்செல்வர்' என்னும் விருது வழங்கியது. 'சீதக்காதி அறக்கட்டளை' பத்தாயிரம் உருவாப் பரிசளித்துச் சிறப்புச் செய்தது. மேலும் தமிழ் இலக்கிய நூல் அனைத்தைப்பற்றியும் வானொலி, தொலைக்காட்சி நிலையங்கள். பல்கலைக்கழகங்கள், கல்லூரிகள், மேடைகள், ஆய்வரங்குகள் முதலாயவற்றில் தொடர் ஆய்வுரைகள் நிகழ்த்தியுள்ள ஒரே தமிழறிஞர் இவர். உரை

நிகழ்த்துவதில் தனி இலச்சினை பெற்றுள்ளதொடு, இலக்கியச் சிந்தனைகள், பாவேந்தர் ஓர் உலகக் கவிஞர், வளரும் தமிழ், காப்பியக் கம்பரும் புரட்சிக் கவிஞரும் முதலாய ஆராய்ச்சி நூல்களும், நான் ஒரு தும்பி, மலர்நீட்டம் முதலாய திறனாய்வு நூல்களும், நாலடியார் நல்லுரை, மூன்றும் நான்கும் முதலாய உரைநூல்களும் எழுதியுள்ளார்; இருநூற்றுக்கு மேற்பட்ட நூல்களுக்கு ஆராய்ச்சி முன்னுரைகளும் எழுதியுள்ளார்.

இவர் பல்வேறு வல்லுநர் குழுக்களில் உறுப்பினர், செயலர், தலைவர் முதலாய பொறுப்புகள் வகித்துள்ளார்; தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநராயும் பதிவாளராயும் பணிபுரிந்துள்ளார்; அப் பல்கலைக்கழகத் தமிழ், ஆங்கில இதழ் ஆசிரியராயும் பொறுப்பு வகித்துள்ளார். இன்றுவரை அப் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினராயும். பேரவைச் செம்மலாயும் பதவி வகித்துவருகிறார்; தஞ்சைச் சரசுவதி மகால் நூலகப் பதிப்புக் குழுவிலும் உறுப்பினராய்ப் பொறுப்பு வகித்துவருகிறார். பதிப்புத்துறையில் இவர் ஏற்படுத்தியுள்ள இலச்சினைகளுக்கு இரண்டாம் (1968), ஐந்தாம் (1981) உலகத்தமிழ்க் கருத்தரங்க மாநாட்டு மலர்களே சான்று. உண்மையுடனும், நேர்மையுடனும், கடமை உணர்வுடனும் உழைக்கும் மனப்பான்மை கொண்ட உயர்ந்த பண்பாளராய இவர், தமிழ்கூறு நல்லுலகிற்குக் கிடைத்த ஓர் அரிய செல்வம் என்றால் மிகையாகாது. தமிழவேள் பேராசிரியர் இராம. சுப்பிரமணியன் பொறுப்பேற்று நடத்திவரும் மருத்துவமாமணி டாக்டர் இரத்தினவேல் சுப்பிரமணியன் மாலைநேரத் தமிழ்க் கல்லூரியில் ஏழு ஆண்டுகள் மதிப்புறு தமிழ்ப் பேராசிரியராய் அமர்ந்து ஊதியம் பெறாமல் பணிபுரிந்து நூற்றுக்கணக்கானோர் பட்டதாரிகளாக மனமுவந்து பாடுபட்டுள்ளார்.

### 6. முனைவர் ச. சாம்பசிவன்

தமிழகத்தில் வள்ளல்நதி என்னும் கண்டமநாயக்கனூரில் 29.9.1929 ஆம் நாள் இவர் பிறந்தார். பெற்றோர் சங்கரலிங்கம் - மீனாட்சி. 1950 இல் முத்தமிழ் காவலர் கி.ஆ.பெ. விசுவநாதம் தலைமையில் மனோன்மணி அம்மையாரைத் தமிழ்த் திருமணம் புரிந்துகொண்ட இவருக்கு ஆடவர் நால்வரும், மகளிர் நால்வரும் மக்களாய் வாய்த்தனர்.

வித்துவான், பண்டிதர், முதுகலைப் பட்டங்களைப் பெற்றவரான இவர், 'நாவலர் பாரதியார் தமிழிலக்கியப் பணி' என்னும் தலைப்பில் ஆய்வுசெய்து முனைவர் (Ph.D.) பட்டமும் பெற்றார். இவர் பணி கூட்டுறவுத் துறையில் தொடங்கியது. ஐந்து ஆண்டுகளுக்குப்பின் நூலகத்துறைக்கு மாறினார். உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியப் பணியை யேற்றுக் கல்லூரி விரிவுரையாளராகி மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் இணைப் பேராசிரியராய் உயர்ந்தார். 31 ஆண்டுகள் கல்விப்பணியாற்றி ஓய்வு பெற்றபின் அதே பல்கலைக்கழகத்தில் சைவ சித்தாந்தத் துறையின் ஆராய்ச்சிப் பேராசிரியராய்ப் பணிபுரிந்து வருகிறார். கல்வி, இலக்கியத் தொண்டுகளுக்காக 'நல்லாசிரியர்', 'தமிழாகரர்', 'அருந்தமிழ் மாமணி' முதலாய விருதுகள் பெற்றுள்ளார்.

பயன்மிக்க ஐம்பதுக்கு மேற்பட்ட நூல்கள் எழுதியுள்ளார்; பதினைந்துக்கு மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்துள்ளார்; இருபதுக்கு மேற்பட்ட நூல்கள் அச்சேறவிருக்கின்றன. மதுரைக் காமராசர் பல்கலைக்கழக அஞ்சல்வழித் தொடர்கல்வித் துறைக்காகத் தொல்காப்பியம் முழுமைக்கும் (ஏறத்தாழ 1500 பக்கங்கள்) இவர் எழுதிய விளக்கவுரை பலராலும் பாராட்டப் பெறுவதாகும். இவர் தேர்வெழுதும் மாணவர்க்குப் பயிலரங்குகள் நடத்துவதில் தனிச் சிறப்புப் பெற்றவர். கடுமையான இலக்கண இலக்கியப் பாடங்களை நகைச்சுவையுடன் நடத்துவதில் வல்லவர். தமிழகத்தில் மட்டுமன்றி ம.கா.ப. கழகத்தில் பயின்ற மலேசிய, சிங்கப்பூர் மாணவர்க்கும் சிறப்புடன் பயிலரங்குகள் நடத்தியுள்ளார்.

இவர் கல்வி, இலக்கியப் பணிகளோடு நின்றுவிடாமல் பொதுப் பணிகளிலும் ஈடுபட்டு ஆர்வத்தோடு உழைத்துள்ளார். மதுரைத் திருவள்ளுவர் கழகம், மதுரைத் தமிழ்ச்சங்கம் முதலாய அமைப்புகளில் இணைந்து அருந்தொண்டு புரிந்துள்ளார். தமிழகத் தமிழ்க் கல்லூரி ஆசிரியர் மன்றம், நாவலர் சோமசுந்தர பாரதியார் கல்வி அறப்பணிக் குழு, ம.கா.ப. ஆசிரியர் மன்றம், தமிழாசிரியர் மன்றம் (மதுரை) முதலாய அமைப்புகளைத் தோற்றுவித்து அரிய தொண்டு ஆற்றியுள்ளார்.

இதழ்த்துறையில் பட்டறிவுமிக்க இவர், கடந்த ஆறாண்டுகளாய்த் தரம் மிக்க 'தமிழ் மாருதம்' என்னும் இலக்கியத் திங்கள் இதழை வெற்றிகரமாய் நடத்திவருகிறார். இவ் விதழ் உலகின் பல பாகங்களுக்கும் செல்கிறது.

"தமிழ்க் கல்வியே நமது மூச்சு!
அஃதின்றேல் வேறென்ன பேச்சு?"

என்பது இவர்தம் அழுத்தமான குறிக்கோள். 'தொல்காப்பியர் உலகத் தமிழ்க் கல்வி மையம்' என்னும் ஓர் அமைப்பை நிறுவி உலகெங்கும் தமிழ் பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ளார் இவர்.

**7. சொற்கொண்டல் மீ. முருகு. சீனிவாசன்**

தமிழகத்தில் 22.1.1927இல் பிறந்த இவர், 1953ஆம் ஆண்டில் சிங்கப்பூருக்கு வந்தார்; 1955ஆம் ஆண்டுமுதல் தமிழவேள் கோ. சாரங்கபாணியுடன் அணுக்கமான தொடர்புகொண்டிருந்தார்; இளமைமுதலே தமிழ் ஆர்வமும் சீர்திருத்த வேட்கையும் கொண்டிருந்த இவர், தந்தை பெரியாரின் தன்மான (சுயமரியாதை) இயக்கத்தில் ஈடுபாடுகொண்டு உழைத்தார்; தமிழர் சீர்திருத்த சங்கத்தில் சேர்ந்து, கடுமையாய் உழைத்துத் துணைத் தலைவரானார். 'தமிழர் பிரதிநிதித்துவ சபை'யின் பேராளராயும் திராவிடர் கழகத்தின் செயலவை உறுப்பினராயும் அமர்ந்து அரும்பணியாற்றினார்; நெடுங்காலமாய்த் தந்தை பெரியார் விழாவினைப் பெருமிதத்தொடு கொண்டாடி வருகிறார். 'தமிழ்முரசு' நாளேட்டின் கணக்கராயும், 16.4.1962ஆம் ஆண்டுமுதல் 1963ஆம் ஆண்டுவரை பெட்டாலிங் ஜெயாவிலிருந்து வெளிவந்த தேசதூதன் நாளேட்டின் நிருவாகியாயும்

பணியாற்றினார். 1960ஆம் ஆண்டில் ஐ. உலகநாதனின் 'மாதவி' இதழ் இவருக்குச் 'சொற்கொண்டல்' என்னும் விருதளித்துப் பாராட்டியது. பழஞ்சுவடிக் காப்பகங்களுக்கு நிகராய் நாள் - வார - மாத இதழ்கள், நூல்கள், மலர்கள், சிறப்பு வெளியீடுகள் முதலாயவற்றை அரிதின் முயன்று திரட்டிவைத்துள்ள இவரின் இல்லம், 'பழஞ்சுவடிக் களஞ்சியம்' எனல் தகும். சிங்கப்பூர் 25ஆம் 'விடுதலை நாள்' (வெள்ளி) விழாவில் சிங்கப்பூர் மரபுடைமைச் சங்கம், 'தமிழ் வரிவடிவ ஆராய்ச்சி நூல்'களைக் காத்து வைத்திருந்தமைக்காக முதற்பரிசும், 'முன்னேற்றம்' என்னும் தமிழ் வார இதழ்களைப் பாதுகாத்தமைக்காக இரண்டாம் பரிசும், பல்துறைச் சுவடிகளையும் இதழ்களையும் பாதுகாத்தமைக்காக ஆறுதல் பரிசும் நல்கிச் சிறப்புச் செய்தது. இவர் பாவேந்தர் பாரதிதாசன் பாடல்களில் தோய்ந்து தெளிந்த ஒரு சிறந்த பேச்சாளருமாவார்.

## உ. கவிஞர்

**1.** அகமது கபீர், எம். கே.

எழுபதுகளில் அறிமுகமான இவர், மக்கள் அறியாமை குறித்து இரக்கமுற்றுப் பல கவிதைகள் பாடியிருக்கிறார். *(217)*

**2.** அசன்கனி, மைதீ.

*15.3.1938*இல் பினாங்கில் பிறந்த இவர் புனைபெயர் கவின்செல்வன். மலேசிய வானொலியில் பணியாற்றி ஓய்வு பெற்றவர்; தொலைக்காட்சியில் தமிழ்ச் செய்தி வாசிப்பாளரில் தனிச் சிறப்புப் பெற்றவர். இவர் குரல் இன்னும் அத் துறையில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. *1956*முதல் கவிதை எழுதிவருகிறார். *(173)*

**3.** அண்ணாமலை, ஏ.

*5.5.1952*ஆம் ஆண்டில் கோலகங்சாரில் பிறந்த இவர், *1986*முதல் கவிதை எழுதிவருகிறார். *(95)*

**4.** அதிகைமணி

*11.4.1944*ஆம் ஆண்டில் மலாக்காவில் பிறந்த இவர் இயற்பெயர் ஆறுமுகம். ஆசிரியர் பயிற்சிக்கல்லூரி ஒன்றில் தமிழ் விரிவுரையாளராய்ப் பணியாற்றிய இவர், *1994*இல் விருப்போய்வு பெற்றார்; *1958*முதல் கவிதை பாடிவருகின்றார். தொடக்கத்தில் 'நகைச்சுவைப் பித்தன்' என்னும் பெயரால் பாடினார்; 'சுவை' எனும் மாத இதழையும் நடத்தியுள்ளார். சமயத்துறையில் பேரார்வம் கொண்டு தொண்டாற்றி வருவதொடு செந்தமிழ்ச் சிவநெறி, திருவெம்பாவை, திருப்பள்ளி எழுச்சி (விளக்கவுரை) முதலாய நூல்களையும் வெளியிட்டுள்ளார். இவர் ஓர் இளங்கலைப் *(B.A. (Hons))* பட்டதாரியாவார்; தேசிய மொழியிலிருந்து பல படைப்புகளை மொழியாக்கம் செய்துள்ளார். *(7, 46, 297, 377, 537, 538, 539)*

**5.** அதிரைதாசன்

*1940*இல் (தமிழகம்) அதிராம்பட்டினத்தில் பிறந்த இவர், *1959*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடி வருகிறார். (174, 612)

**6.** அபூபக்கர், மீசல் பி. எம்.

தமிழ்நாட்டில் உள்ள மீசலில் *1935*ஆம் ஆண்டில் பிறந்த இவர், சுவாமி இராமதாசர் மாணவர்; *1962*முதல் கவிதை எழுதிவருகிறார். 'மணிமுழக்கம்' என்பது இவர் வெளியிட்டுள்ள நூலின் பெயர் *(1984)*. *(208, 232, 319, 646)*

**7.** அப்துர் ரஹ்மான், உ. கா.

தமிழகத்தில் உள்ள அலிலெப்பை வலசையில் *22.4.1935*இல் பிறந்த இவர், *1953*இல் தொடங்கிக் கணக்கற்ற பாடல்களைப் பாடிவருகிறார். *(648)*

**8.** அப்துல் மஜீது, புலவர், பனைக்குளம். மு.

தமிழகத்தில் உள்ள பனைக்குளம் என்னும் ஊரில் *1897*இல் பிறந்த இவர், மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் புலவர் (பண்டிட்) பட்டம் பெற்றார்; மலேசியத் தமிழ்க் கவிதை உலகின் முன்னோடிகளுள் ஒருவர்; இன்று புகழ்பெற்று விளங்கும் கவிஞர் சிலர், அன்னார் வழிகாட்டுதலால் வளர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. "பனுவல் முறைதேர் பண்டிதன் அப்துல் மஜீது" என்று முதுபெரும் தமிழ்ப் புலவர் சுவாமி இராமதாசரால் பாராட்டப்பெற்றார்; *1957*இல் கவிதைப் பூஞ்சோலை என்னும் கவிதைத் தொகுப்பு நூலையும், *1968*ஆம் ஆண்டில் நாயக வெண்பா என்னும் வெண்பாக் காவியத்தையும் வெளியிட்டுள்ளார். இவர் *21.04.1986*இல் தமிழகத்தில் காலமானார். *(22, 67, 365, 553, 615, 621)*

**9.** அப்பாஸ் பாவலர், செ. எ.

தமிழ்நாட்டுக் கீழத் தஞ்சையில் உள்ள நாகப்பட்டினத்தில் பிறந்தவராய இவர், முப்பதுகளில் *(1930)* சிங்கையில் வாழ்ந்தார் என்று தெரிகின்றது. இவர் பாடியுள்ள வழிநடைச் சிந்து நூலிலிருந்து வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(322)*

**10.** அமலதாசன்

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(27, 29, 78, 135, 339, 435, 436, 437, 438, 515, 584)*

**11.** அமிர்தம் சோமசன்மா

*21.11.1934*இல் சிங்கையில் பிறந்த இவர் இயற்பெயர் அமிர்தவள்ளி; கவியரசு சோமசன்மா துணைவியார்; *1961*முதல் கவிதை எழுதிவருகிறார். *(314)*

**12.** அமுத இளம்பரிதி

*2.3.1944*இல் பகாவ் நகரில் பிறந்த இவர் தம்பின் நகரில் வாழ்ந்துவருகிறார். இருபதாண்டுகளுக்கும் மேலாய்க் கவிதை பாடிவருகிறார். *(42)*

**13.** அய்யாதுரை, மு. கா.

மிகச் சில கவிதைகளே பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரம் கிட்டவில்லை. *(177)*

**14.** அரிதாசன், வே.

*18.4.1949*ஆம் ஆண்டு தமிழகத்தில் பிறந்த இவர், *1965*முதல் கவிதை

எழுதிவருகின்றார். தமிழ்நேசன் பவுன் பரிசு பெற்றவர்; எழுத்தாளர் சங்கப் பணமுடிப்பும் பெற்றுள்ளார். *(14)*

**15.** அருண் சோமசன்மா

மறைந்த கவியரசு சோமசன்மா மைந்தராய இவர், *6.12.1957*இல் பிறந்தார்; *1980*முதல் கவிதை எழுதிவருகிறார். *(308, 591)*

**16.** அருண்மொழி, கா.

எழுபதுகளில் அறிமுகமாகிய இவரைப்பற்றி மேல்விவரங்கள் கிடைக்கவில்லை. *(190)*

**17.** அருள்தாசன், ஆழி.

இவரைப்பற்றிய குறிப்புப் பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. *(478)*

**18.** அலி அக்பர், எம்.

*1.1.1940*இல் பினாங்கில் பிறந்த இவர் புனைபெயர் இல்லான். *1955*முதல் கவிதை எழுதிவருகிறார். *(59)*

**19.** அழகிரிசாமி, கு.

சிறந்த சிறுகதை எழுத்தாளராய இவர், தமிழ்நேசன் நாளிதழில் ஆசிரியராயும் ஞாயிறு பதிப்புப் பொறுப்பாசிரியராயும் பணியாற்றியபோது இங்குள்ள எழுத்தாளர்களுக்கு வழிகாட்டியாய்த் திகழ்ந்தார். ஒவ்வொரு மாதமும் கடைசிச் சனிக்கிழமைகளில் *(1956)* எழுதத் துடிக்கும் ஆர்வலர்களைக் கூட்டி, இவர் அளித்த பயிற்சி, பல தரமான எழுத்தாளர்களை உருவாக்கியது. இன்று புகழ்பெற்று விளங்கும் பழம்பெரும் எழுத்தாளர்களுள் பலர் இவரால் உருவானவர். இசைப் பாடல்களொடு இவர் இலக்கிய நாடகங்களும் எழுதியுள்ளார்; வானொலிக்கும் பல படையல்களைத் தந்துள்ளார். *(398)*

**20.** அழகுசெல்வன், க.

தமிழ்நாட்டில் *1940*ஆம் ஆண்டில் பிறந்த இவர் இயற்பெயர் செல்லையா; *1960*முதல் கவிதை எழுதிவருகிறார். *(188)*

**21.** அன்பரசன், பொன்.

தமிழகத்தில் பிறந்த இவர், நிறையப் பாடல்கள் புனைந்துள்ளார்; 'உதிரிப் பூக்கள்' என்பது *1980*இல் இவர் வெளியிட்ட கவிதை நூலின் பெயர். *1986*இல் சாலை இடரொன்றில் காலமானார். *(301, 367, 385)*

**22.** அன்பானந்தம், சி.

தமிழகச் சிங்கம்புணரியில் *28.3.1932*இல் பிறந்த இவர், *1950*முதல் கவிதை பாடிவருகிறார். வில்லுப்பாட்டும் இயற்றியிருக்கிறார்; மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ், கிணற்றுத் தவளை, கண்ணதாசன் காவியக் கனிகள், திருமுருகன் பெயர்ப் பாமாலை, ஆனைமுகன் அந்தாதி, ஆறுமுகன் அந்தாதி, கணேசர் பாமாலை, மகா மாரியம்மன் அபிஷேகப் பாமாலை ஆகியவை இவர் வெளியிட்டிருக்கும்

நூல்கள்; தமிழகத்தில் நடந்த 'மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ்' இயற்றும் போட்டியில் முதற்பரிசு பெற்றவர். *(325, 452, 453, 604)*

**23.** அன்பானந்தன், சா. ஆ.

*358* ஆம் பாடல் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. *(136, 233, 566)*

**24.** அன்புடையான்

எழுபதுகளில் அறிமுகமான இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(581)*

**25.** அன்வர், ப. மு.

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(25, 56, 58, 70, 184, 234, 312, 320, 330, 332, 337, 380, 395, 396, 603, 644)*

**26.** ஆசைத்தம்பி, மு.

*6.10.1958*இல் ஈப்போவில் பிறந்த இவர் புனைபெயர் புதுவண்ணன்; *1985*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(178, 273)*

**27.** ஆதம்குமார்

தமிழ்நாட்டில் பிறந்தவராய இவர் இயற்பெயர் அப்துல் ஹாதி; *1953*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; *1979*ஆம் ஆண்டில் 'உறவுகள்' என்னும் பெயரில் தம்முடைய கவிதைகள் சிலவற்றைத் தொகுத்து நூலாய் வெளியிட்டுள்ளார். மதிமோகன், மஹதி முதலியவை இவருடைய புனைபெயர்கள். *(99, 219, 230, 461, 626, 628)*

**28.** ஆறுமுகம், மு.

எழுபதுகளில் பினாங்கில் வாழ்ந்த இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(153)*

**29.** ஆறுமுகனார், புலவர், யாழ். ஏ.

யாழ்ப்பாணத்தில் பிறந்த பெரும்புலவராய இவர், இலக்கண இலக்கியங்களிலும் சைவ சித்தாந்தத்திலும் ஆழ்ந்த பயிற்சியுடையவர்; சித்திரகவிகள் பாடுவதில் வல்லவர்; தேவாரத் திரட்டு, சிவஞான போதம் (மாணவர் பதிப்பு) முதலாய நூல்களை வெளியிட்டுள்ளார்; *94* ஆண்டுகள் உடல்நலத்துடன் வாழ்ந்த இவர், *31.12.1987*இல் மறைவெய்தினார். *(335)*

**30.** இக்குவனம், வி.

முன்னர்ப் பெட்டாலிங் ஜெயாவில் வாழ்ந்தவரும் இப்போது சிங்கப்பூரில் வாழ்பவருமாய இவர், வெண்பா யாப்பில் நிறையக் கவிதைகள் எழுதியிருக்கிறார்; பல நூல்களும் வெளியிட்டுள்ளார்; தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம் தேசிய அளவில் நடத்திய கவியரங்கப் போட்டியில் *(1970)* இவர் முதற்பரிசு பெற்றார். *(624)*

**31. இக்பால், க. து. மு.**

ஆரவாரமின்றி அரிய கவிதைகள் பாடிவரும் நல்ல கவிஞராய இவர், சிங்கப்பூரர்; 'கடையநல்லூரான்' என்பது இவருடைய புனைபெயர்; அறுபதுகளில் தொடங்கிக் கவிதை பாடிவருகிறார்; இசைப்பாடல்கள் எழுதுவதொடு சிறுவர் பாடல்கள் எழுதுவதிலும் இவர் வல்லவர். உரைவீச்சும் எழுதிவருகிறார். சிங்கப்பூர்த் தேசியப் பல்கலைக்கழகத்தின் கலை மையமும் (Centre for the Arts), ஒரு தூவல் (Pen) தயாரிப்பு நிறுவனமும் (Mont Blanic) இணைந்து வழங்கிய இலக்கிய விருது இவருக்குக் கிடைத்தது. இஃது 1996இல் அறிமுகப்படுத்தப்பட்டது. இவ் விருது சிறந்த இலக்கியப் பணிக்காக வழங்கப்படுகிறது. *(5, 16, 283, 428, 429, 430, 503, 504, 505, 506, 547, 585, 622, 633)*

**32. இசுமாயில், இரா. நெ.**

தமிழகத்தில் உள்ள கருங்குழிக்காடு என்னும் ஊரில் 1930ஆம் ஆண்டு பிறந்தார். 1957முதல் கவிதை எழுதி வந்த இவர் கதை, உரையாடல், பாடல் எழுதிச் சில நாடகங்களையும் அரங்கேற்றினார்; இசைப்பாடல்களும் எழுதினார். *(101, 160, 336)*

**33. இரட்டையர்**

கவிஞர் வே. சங்கு சண்முகமும் கவிஞர் தில்லைதாசன் என்னும் புனைபெயர் கொண்ட வீரபத்திரனும் இணைந்து 'இரட்டையர்' என்னும் பெயரில் கவிதை பாடினர்; இவர்கள் 1960ஆம் ஆண்டில் 'கவிதைத் திரட்டு' என்னும் கவிதைத் தொகுப்பு நூல் ஒன்றனை வெளியிட்டுள்ளனர்; இதுவே இந் நாட்டில் பலர் படைப்புகளைத் தொகுத்து வெளியிடப்பெற்ற முதல் கவிதைத் தொகுப்பு நூலாகும். *(635)*

**34. இராகவன், இரா.**

குழந்தைப் பாடல்கள் எழுதிப் புகழ்பெற்ற இவரைப்பற்றி மேல்விவரங்கள் கிடைக்கவில்லை. *(526)*

**35. இராகவன் பிள்ளை, டி. வி.**

இந்தியாவிலுள்ள கேரள மாநிலத்தில் 1.4.1925இல் பிறந்த இவர், 1960முதல் கவிதை எழுதிவருகிறார்; 'முத்தமிழ்' (1969-74) என்னும் திங்கள் ஏட்டையும் நடத்தியுள்ளார்; 'இரதபந்தம்' போன்ற சித்திரகவிகள் எழுதியிருக்கிறார்; மலேசியத் தமிழ்ப் பாவலர் மன்ற நிறுவனத் தலைவராய இவர், 'கவிதைப் பண்ணை' நிறுவி, பத்தாண்டுகளுக்குமேல் கவிதைத் துறைக்கு ஊக்கமூட்டிவருகிறார்; உணர்வுகள், முத்துச்சரம், சரவணன் புகழ்மாலை, பத்துமலைத் திருமுருகன் திருவந்தாதி, பாவியம் பத்து, மலேசியத் தமிழ்க்கவிதை நூல்களில் யாப்பமைதி ஒரு கண்ணோட்டம், பத்துமலை அருள்மிகு சுப்பிரமணிய சுவாமிகள் பிள்ளைத்தமிழ் முதலாயவை இவர் வெளியிட்டுள்ள நூல்கள். 1987இல் இவர் மதிப்புறு முனைவர் (D.Litt) பட்டம் பெற்றார். *(107, 175, 245, 358, 617, 642)*

**36. இராசகோபாலன்**

தமிழக முகவை மாவட்டப் பஞ்சனூர்க் கிராமத்தில் பிறந்தவராய இவர், 14ஆம்

அகவையில் மலேசியாவிற்கு வந்தார். இவர் மிகுதியாய கவிதைகள் பாடியுள்ளார்; 'உணர்ச்சிகள்' என்னும் கவிதை நூலை *1977*இல் வெளியிட்டுள்ளார். *(357)*

**37.** இராசமோகன், நா.

*8.1.1961*இல் கோலாலம்பூரில் பிறந்த இவர் இயற்பெயர் சோமநாதன்; *1979*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். *(618)*

**38.** இராமகிருட்டினன், மா.

*23.7.1941*இல் சிலிம் ரிவரில் பிறந்த இவர் புனைபெயர் கவிக்கூத்தன்; *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; 'பூஞ்சிட்டு' முதலாய பல நூல்களை வெளியிட்டுள்ளார். *(236)*

**39.** இராமசாமி, க.

தமிழக நாமக்கல்லில் *29.9.1928*இல் பிறந்த இவரின் புனைபெயர் இரசனைப் பித்தன்; *1952*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவரும் இவர், வெளியிட்டிருக்கும் நூலின் பெயர் 'குமரன்மலைக் கவிப்பூக்கள்'. *(623)*

**40.** இராமசாமி, புலவர். ரெ.

தமிழகக் கானாடுகாத்தானில் *10.8.1920*இல் பிறந்த இவர் புனைபெயர்கள் நாகு, தாசரதி, அரங்கச் செல்வன். *1938* முதல் இவர் கவிதை பாடிவருகிறார்; இலக்கியத் துறையில் பல்வேறு பரிசுகள் பெற்றிருப்பதொடு வி.ஜி.பி. சந்தனம்மாள் அறக்கட்டளை வழங்கிய பணமுடிப்பும் பெற்றுள்ளார்; நல்ல புலவராய இவர், சுவாமி சிவானந்தர் மலர் வழிபாடு, இலக்கிய நாயகி சீதை, அலோஸ்டார் அருள்மிகு தண்டபாணி இருபா இருபஃது அந்தாதி, பதினாறுபேறும் பாலிப்பாய், திருவிளக்கு வழிபாடு ஆகிய நூல்களை வெளியிட்டிருக்கிறார். *(47, 576, 641)*

**41.** இராமசாமி, வெ.

*1939*இல் வெளிவந்த 'தமிழ்க்கொடி' இதழில் கவிதைகள் பாடியுள்ள இவர் ஓர் இளங்கலைப் (B.A.) பட்டதாரி என்றும், ஐக்கிய மலாயா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வர்த்தக சங்கச் செயலாளராய் இருந்தவர் என்றும் 'தமிழ்க்கொடி' வெளியிட்டுள்ள குறிப்பில் இருந்து தெரிகிறது. வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(619)*

**42.** இராமதாசர், முதுபெரும் தமிழ்ப் புலவர், சுவாமி

இவரைப்பற்றிய குறிப்பைப் பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. *(37,171)*

**43.** இராமலிங்கம், பண்டித. ம.

சிங்கை வானொலியில் இசை மேற்பார்வையாளராய்ப் பணியாற்றிய இவர், தமிழ் இலக்கண இலக்கியங்களில் முற்றிய புலமை பெற்றவர்; இரண்டாம் உலகப் போருக்கு முன்னர் வெளிவந்த 'தமிழ்க்கொடி' இதழில் மிகுதியாய் இசைப்பாக்கள் பாடியிருக்கிறார். *(397)*

**44.** இராமு, கா.

அறுபதுகளில் கவிதை பாடிய இவரைப் பின்னர்க் காணமுடியவில்லை;

இவரைப்பற்றிய விவரங்களும் கிடைக்கவில்லை. (185)

**45.** இராமையா, மா.

15.5.1933இல் பிறந்த இவர் புனைபெயர் தமிழ்ச்செல்வன்; நல்ல சிறுகதைகளை 1946முதல் எழுதிவருகிறார். இரத்ததானம், பரிவும் பாசமும், மூங்கிற்பாலம், மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு முதலாய உரைநடை நூல்கள் எழுதியுள்ள இவர், 'கவிமஞ்சரம்' என்னும் கவிதை நூலையும் வெளியிட்டுள்ளார். இவருடைய 'எதிர்வீடு' எனும் நூலைத் தமிழக ராணிமுத்து நிறுவனம் மலிவுப் பதிப்பாக வெளியிட்டுள்ளது. (81, 89)

**46.** இராவணன், கோ. தொ.

தமிழகக் கூறைநாட்டில் பிறந்த இவர், எழுபதுகளில் தொடங்கிக் கவிதை எழுதிவருகிறார். 'இடியோசை' என்பது இவருடைய புனைபெயர். (157, 182, 246)

**47.** இராவே

1926ஆம் ஆண்டில் தமிழ்நாட்டில் பிறந்தவராய இவர் புனைபெயர் உதயன். சுவாமி இராமதாசர் மாணவராய இவர், 1960ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். (191)

**48.** இலட்சுமி, ஐ.

1972இல் சிலிம் ரிவரில் இருந்து வெண்பாக்கள் பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. (152)

**49.** இளங்கதிரவன், சி. வே.

17.11.1932இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் வேலு; 1972ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். (343)

**50.** இளங்கோ, சீ. மா.

23.9.1943இல் பிறந்த இவர் போர்ட் டிக்சனைச் சேர்ந்தவர்; பல்வேறு துறைகள் குறித்த கவிதைகளைப் பாடியிருக்கிறார்; 'இளங்கோ கவிதைகள்' என்பது இவர் வெளியிட்டுள்ள கவிதை நூலின் பெயர். (199, 303, 351, 376, 386, 558, 629)

**51.** இளங்கோ, வெ.

1.6.1941இல் மலாக்காவில் பிறந்தவராய இவர் இயற்பெயர் கிருட்டினன்; அறுபதுகளில் நிறையப் பாடினார்; 1968இல் தமிழகம் சென்று அங்கேயே நிலையாய்த் தங்கிவிட்டார். (216, 253)

**52.** இளங்கோவன், க.

பல்வேறு துறைகள் குறித்து ஆர்வத்தொடு கவிதை பாடிவரும் இவரைப்பற்றிய விவரங்களை அறியமுடியவில்லை. (9)

**53.** இளந்தமிழன்

14.5.1968இல் கிள்ளானில் பிறந்த இவர் இயற்பெயர் ஆறுமுகம்; எண்பதுகளில்

கவிதை எழுதத் தொடங்கினார்; சிறிது காலம் சக்தி மாத இதழ்த் துணையாசிரியராய் இருந்தார்; பின்னர் ஸ்ரீ வித்தியா பதிப்பகத்தின் பதிப்பாசிரியராய்ப் பணியாற்றினார்; இப்பொழுது சேக்கிழார் பதிப்பகம் தொடங்கிச் சொந்தமாய் நடத்திவருகிறார். *(611)*

**54.** இளமாறன், மெ.

*2.1.1945*இல் தமிழ்நாட்டில் பிறந்த இவர் இயற்பெயர் ஆண்டியப்பன்; *1964*முதல் கவிதை எழுதிவருகிறார்; பாத்தேறல், பனிக்கூழ், திங்கள் ஆகியவை இவர் வெளியிட்டிருக்கும் நூல்கள். பனிக்கூழ் (சிறுவர் பாடல்கள்), முருகன் காவடிப் பாடல்கள், பட்டுக்கோட்டைப் பாடல்கள் ஆகிய ஒலிப்பேழைகள் வெளியிட்டுள்ளார். இவருக்குப் பொன் பாவலர் மன்றம் "பாத்தேறல்" விருதளித்துச் *(1989)* சிறப்புச் செய்தது. *(154, 321, 548)*

**55.** இளம்பரிதி

புதுப்புது பொருள்களைத் தேடிக் கவிதை பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(638)*

**56.** இளம்வழுதி, பெ. மு.

*1.9.1932*இல் சிலாங்கூரில் பிறந்த இவர் புனைபெயர் மணிவண்ணன்; தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியராய்ப் பணியாற்றி ஓய்வு பெற்றார். *1948*ஆம் ஆண்டுமுதல் எழுதி வருகிறார்; தமிழ் இலக்கியக் கழகம், உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம், தமிழ்ப்பள்ளி ஆசிரியர் தேசிய சங்கம் முதலாய இயக்கங்களில் பொறுப்பேற்று உழைத்தார்; பல நாடுகளுக்குச் சுற்றுலா மேற்கொண்டார்; 'அடிவானம்' என்னும் சிறுகதைத் தொகுப்புநூலை *1971*இல் வெளியிட்டுள்ள இவர், இப்போது கவிதை நூல்களை வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார். *(440, 523)*

**57.** இளவழகு, ஐ.

*20.11.1941*இல் பாரிட்டில் பிறந்த இவர் இயற்பெயர் ஆறுமுகம்; *1959*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; 'வேலவன் வெண்பா நூறு' என்னும் நூலையும் 'இலட்சியப் பயணம்' என்னும் புதினத்தையும் வெளியிட்டுள்ளார்; நெகிரி எழுத்தாளர் சங்கத் தலைவராயிருந்த இவர், *1989*ஆம் ஆண்டுமுதல் *1991*ஆம் ஆண்டுவரை மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் தேசியப் பேரவைத் தலைவராய் இருந்தார். *(259, 557)*

**58.** இளவேந்தன்

*1936*ஆம் ஆண்டில் மூவாரில் பிறந்த இவர் இயற்பெயர் சின்னையா; *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(425)*

**59.** உலகநாதன், ஐ.

*3.9.1937*இல் ஈப்போவில் பிறந்து வளர்ந்து சிங்கப்பூரில் பணிமேற்கொண்ட இவர், *1954*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடி வருகிறார்; மலேசியத் தமிழ்க் கவிதைத்துறை வளர்ச்சிக்கு இவர் ஆற்றியுள்ள தொண்டு என்றென்றும் மதித்துப்

போற்றத்தக்கதாகும்; 'மாதவி' திங்கள் இதழ்மூலம் கவிஞர் பலரை உருவாக்கிய பெருமைக்குரியவர்; 'சந்தனக் கிண்ண'த்தின் மூலம் தமிழகத்தாரை மலேசியக் கவிதையுலகை நிமிர்ந்து நோக்கச் செய்தவர். மேலும் மகரயாழ், தமயந்தி, திருப்புமுனைகள், கண்ணம்மா முதலிய கவிதை நூல்களையும் வெளியிட்டுள்ளார்; தற்போது இந்தியாவில் (தமிழ்நாடு) குடியேறி வாழ்ந்துவரும் இவர், 1985இல் தமிழக அரசின் பாவேந்தர் பாரதிதாசன் விருதினைப் பெற்ற சிறப்பிற்குரியவர். (*30, 63, 65, 80, 82, 111, 145, 150, 284, 305, 331, 375, 448, 574, 578, 587*)

**60.** உஷாநாயர், தமிழ்மணி

போர்ட் டிக்சனில் *26.7.1932*இல் பிறந்த இவர் புனைபெயர் தமிழ்ச்செல்வி. இவர் தமிழ் ஆசிரியையாய்ப் பணியாற்றினார்; விரல்விட்டு எண்ணத்தக்க பெண்பாற் கவிஞர்களுள் ஒருவராய இவர், சென்னை மாணவர் மன்றத்தில் 'தமிழ்மணி'ப் பட்டம் (1970) பெற்றார்; 1947இல் இருந்து கவிதை எழுதினார்; 24.1.1982இல் காலமானார். (88)

**61.** எல்லோன், தமிழ்மணி

*1.10.1946*இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் கதிரேசன்; தனித்தமிழ் ஆர்வலராய இவர், சென்னை மாணவர் மன்றம் நடத்திய தமிழ்த் தேர்வுகளில் வென்று 'தமிழ்மணி'ப் பட்டம் (*1970*) பெற்றார்; *1964*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; 'முத்தாரம்' என்பது இவர் வெளியிட்டுள்ள நூலின் பெயர். இவர் கவிதைகளுள் சில ஐந்தாம் படிவத் (S.P.M.) தமிழ் இலக்கியப் பாடத்திட்டத்தில் இடம்பெற்றன (*1980-90*). (*32, 86, 100, 231, 235, 243, 294, 349, 373, 620, 631, 645*)

**62.** ஏசய்யா, வே.

தமிழகத்தில் *15.10.1941*இல் பிறந்த இவர், *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். சுவாமி இராமதாசர் மாணவராய இவர், 'அன்னை வேளாங்கண்ணி' என்னும் கவிதை நூலை வெளியிட்டுள்ளார். (*64, 555*)

**63.** ஒப்பிலான் இளம்பரிதி

*8.10.1942*ஆம் ஆண்டில் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் ரஹிமான்; *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். (*458, 459*)

**64.** கடையநல்லூர் ஜமீலா

*1940*ஆம் ஆண்டில் தமிழ்நாட்டின் கடையநல்லூரிற் பிறந்தவராய இவர் இயற்பெயர் என். எம். ஷம்சுத்தீன்; *1953*ஆம் ஆண்டிலிருந்து கவிதை எழுதுகிறார்; உரைவீச்சும் எழுதிவருகிறார். *1963*ஆம் ஆண்டில் 'மல்லிகை' என்னும் சிறுவர்க்குரிய கவிதை நூல் ஒன்றையும், *1984*ஆம் ஆண்டில் அல்ஜீரியாவின் விடுதலைப் புரட்சிக்காரி ஜமீலாவின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட 'புரட்சிப்பெண் ஜமீலா' என்னும் நூலையும், 'ஜமீலாவின் கவிதைகள்' (*1975*), 'ஆசை' (*1985*) ஆகிய கவிதைத் தொகுப்பு நூல்களையும் வெளியிட்டுள்ளார். (*317, 387, 594*)

**65.** கணேசன், சுப.

*1942*ஆம் ஆண்டில் நிபோங் திபாலில் பிறந்த இவர், *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(517)*

**66.** கண்ணன், எஸ்.

சமுதாயத்திலும் பொதுவாழ்விலும் காணப்படும் ஒழுங்கீனங்களை நுட்பமாய் அறிந்து பாடியுள்ள இவர், *25.6.1941*இல் கெடா மாநிலத்தில் உள்ள பீடோங்கில் பிறந்தார். இவர் சமய, சமுதாய, அரசியல் துறைகளில் ஈடுபட்டு உழைத்தார். தமிழ்ப்பள்ளி ஆசிரியராய் பணியைத் தொடங்கிப் படிப்படியே மலேசியக் கல்வித்துறையின் கெடா மாநில அலுவலராய்ப் பணிபுரிந்த இவர், *11.12.1991*இல் காலமானார். *(19, 207, 221)*

**67.** கதி

இரண்டாம் உலகப்போருக்கு முன்பிருந்து வெளிவந்த 'தமிழ்க்கொடி'யில் இவருடைய கவிதைகள் வெளிவந்துள்ளன. இவரைப்பற்றிய பிற விவரங்கள் கிடைக்க வில்லை. *(564)*

**68.** கந்தன், மு.

*18.6.1932*இல் இராசமூசாத் தோட்டத்தில் பிறந்த இவர் முழுப்பெயர் முனியாண்டிக் கந்தன்; *1950*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவந்த இவர், 'பாரிதி' என்னும் புனைபெயரிலேயே நிரம்ப எழுதினார்; 'முழுநிலா' (சிறுவர் பாடல்கள்) என்பது இவர் வெளியிட்டிருக்கும் நூலின் பெயர்; இவர் *26.10.1978*இல் மறைவெய்தினார். *(272, 518)*

**69.** கமலநாதன், சி.

*2.10.1930*இல் பூச்சோங்கில் பிறந்த இவர் இயற்பெயர் சின்னத்தம்பி குப்புசாமி; *1950*ஆம் ஆண்டுமுதல் சிறுகதை, கட்டுரை எழுதினார்; *1963*இல் இருந்து கவிதை எழுதினார். மலேசிய உரைவீச்சுத் (புதுக்கவிதை) துறையின் முன்னோடியாய இவர், மலேசிய நாட்டுப்புறப் பாடல்களை நிரம்பத் தொகுத்தளித்தவர் என்ற சிறப்பிற்குரியவர். இவர் எழுத்துத் தொண்டைப் பாராட்டுமுகமாகச் சிலாங்கூர்க் கூட்டரசு வளாகத் தமிழ் எழுத்தாளர் இயக்கம் பணமுடிப்பு வழங்கவும், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தங்கப் பதக்கம் வழங்கவும் முடிவுசெய்து அறிவித்திருந்த நேரத்தில் *18.4.1992*இல் காலமானார். *(369)*

**70.** கமலாலட்சுமி

சுங்கைப் பட்டாணியில் *1.4.1968*இல் பிறந்த இவர், *1984*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(183)*

**71.** கரீம், நா., கன்னல்கவி

இவரைப்பற்றிய குறிப்பைப் பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. *(388)*

**72.** கலியபெருமாள், தமிழ்க் குயில், கா.

*19.8.1937*இல் கம்பாரில் பிறந்த இவர், *1953*ஆம் ஆண்டுமுதல் கவிதை

எழுதிவருகிறார்; பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் அமைத்தவராய இவர், எழுத்தாளர் சங்கங்களின் பேரவையைத் தோற்றுவித்தவர் என்னும் சிறப்பிற்குரியவர்; பாடு பாப்பா, கலியபெருமாள் கவிதைகள், தேன்சிட்டு, தேன்குழல் ஆகிய கவிதை நூல்களை வெளியிட்டுள்ளார்; அடிப்படைத் தமிழ், தமிழர் திருமண முறைகள், தமிழ் அர்ச்சனை, தமிழிசை மாண்பு, கவிதை இன்பம், நீத்தார் கடன் நெறிமுறைகள் முதலிய 20 நூல்களும், 35 தமிழ்ப் பாடநூல்களும், 10 பள்ளி நூலக நூல்களும் எழுதியுள்ளார்; திருக்குறள் நெறிபரப்பும் தொண்டில் நெடுங்காலமாய்த் தம்மை ஈடுபடுத்தி வருகிறார்; பள்ளி மாணவர்களுக்கென்று இவர் எழுதிய பாடல்கள் சிலவற்றைத் தேசிய மொழிவளர்ப்பு நிறுவனம் (Dewan Bahasa dan Pustaka) மலாய்மொழியில் பெயர்த்து வெளியிட்டுள்ளது; நல்லாசிரியர் விருதும் பெற்றுள்ளார்; *1990*ஆம் ஆண்டில் ஐந்து நூல்களை ஒருசேர வெளியிட்டார். இவர் மதிப்புறு முனைவர் (D.Litt.) பட்டம் பெற்றவர். *(497, 498, 499, 595, 637)*

**73.** கலைச்செல்வன், ச. வீ.

*21.4.1941*இல் தைப்பிங்கில் பிறந்த இவர் இயற்பெயர் செல்லப்பன்; *1962*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(532)*

**74.** கல்யாணிவேலு, திருமதி

*1.12.1950* ஆம் நாள் பினாங்கில் பிறந்தவராய இவர் மிகக் குறைவாகவே பாடியுள்ளார் என்றாலும் கவிதைத்துறையில் நிரம்ப ஆர்வம் உள்ளவர். சிறுகதை, கட்டுரைப் போட்டிகளில் பல பரிசுகள் பெற்றுள்ளார். மலேசிய, சிங்கை வானொலிக்குப் பல படைப்புகளைத் தந்துள்ளார். தம்மை எழுதத் தூண்டி ஊக்கமூட்டியவர் திரு. எஸ். எஸ். சர்மா என்று நன்றியுணர்வுடன் குறிப்பிடும் இவர், சில காலம் முதுபெரும் தமிழ்ப் புலவர் சுவாமி இராமதாசரிடம் பாடம் கேட்டுள்ளார். *(580)*

**75.** கல்லூர் மணியம்

*1940*இல் தமிழகத்தைச் சேர்ந்த கல்லூரிற் பிறந்த இவர், *1959*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(643)*

**76.** கறுப்புசாமி, எஸ்.

தோட்டப்புற மக்கள் அவலங்களை உணர்ந்து பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(187)*

**77.** கறுப்பையா, சி. மு.

*15.1.1918*இல் கோல்கொண்டாவில் (காப்பார்) பிறந்த இவர், *1940*ஆம் ஆண்டுமுதல் கவிதை, இசைப்பாடல் எழுதிவருகிறார். *(442)*

**78.** கறுப்பையா, பி. கே.

தமிழகச் சுந்தரசோழபுரத்தில் *27.9.1921*இல் பிறந்த இவர், நல்ல இசைக் கலைஞர்; பல மேடை நாடகங்களை எழுதி இயக்கி அரங்கேற்றினார்; தொழிற்சங்கவாதியாய இவர், *1950*இல் அப்போதைய ஆங்கில அரசால்

சிறையிடப்பட்டு இரண்டரை ஆண்டுகள் சிறையில் இருந்தார்; நிறைய நாடகப் பாடல்கள் இயற்றியுள்ளார். இவர் மதிப்புறு முனைவர் (D.Litt.) பட்டம் பெற்றவர். *(475)*

**79.** கனகசபை, கே.

*1962*ஆம் ஆண்டில் எழுச்சிப் பாடல்கள் பலவற்றைப் பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(278)*

**80.** கனிமொழி

*23.3.1943*இல் பிறந்த இவர் இயற்பெயர் வீ. குப்புசாமி; *1965*ஆம் ஆண்டுமுதல் எழுதிவருகிறார்; சீர்திருத்தப் பாடல்கள் பல இயற்றியுள்ளார்; அவற்றைத் தொகுத்துத் 'தமிழியக்கப் பாடல்கள்' என்னும் தலைப்பில் ஒருநூலும் வெளியிட்டுள்ளார். *(454, 455)*

**81.** கனீஸ்மல்ஹர்

தமிழ்நாட்டில் உள்ள சித்தார்கோட்டையில் பிறந்த இவர் இயற்பெயர் 'மலுஹருல் ஹக்'; *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(250)*

**82.** காசிதாசன்

*30.9.1956*இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் மாரிமுத்து; கவிதை எழுதத் தொடங்கிய ஆண்டு 1972; இசைப்பாக்களொடு நாட்டிய நாடகமும் எழுதியுள்ள இவர், 'சாமிவேலர் புகழ்மாலை' என்னும் கவிதை நூலையும் எழுதி வெளியிட்டுள்ளார். *(203, 241, 292, 306, 370)*

**83.** காதிர் சுல்தான், ஓ. எம்.

தமிழ்நாட்டில் உள்ள ஆனந்தூரில் பிறந்த இவர், சுவாமி இராமதாசர் அணுக்க மாணவர்களுள் ஒருவர்; *1960*இல் கவிதை எழுதத் தொடங்கினார்; இவர் யாத்து *1977*இல் வெளியிட்ட நூலின் பெயர் 'கலாவள்ளி காவியம்'; பிற்காலத்தில் 'காசு' என்னும் புனைபெயரில் எழுதினார். *(76)*

**84.** காரைகிழார்

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(12, 36, 55, 84, 147, 237, 289, 300, 362, 378, 415, 416, 417, 531, 649)*

**85.** கார்த்திகேசு, டாக்டர், ரெ.

*24.8.1940*இல் பீடோங்கில் பிறந்த இவர் புனைபெயர்கள் ஒப்பாரிப் புலவர், வானம்; இதழியல் துறையில் பட்டம் பெற்றுள்ள இவர், ஒலிபரப்புத் (Broadcasting) துறையில் முனைவர் (*Ph.D.*) பட்டம் பெற்றார்; *1952*ஆம் ஆண்டுமுதல் எழுதிவருகிறார்; சிறுகதை, புதினங்களொடு இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளும், அவ்வப்போது கவிதைகளும் படைத்து வருகிறார்; தம்முடைய சிறுகதைகளில் சிலவற்றைத் தொகுத்துப் 'புதிய தொடக்கங்கள், மனசுக்குள்' *(1996)* என்னும் நூல்களாய் வெளியிட்டுள்ளார்; வானத்து வேலிகள், தேடி இருக்கும் தருணங்கள் ஆகிய நாவல்களையும் வெளியிட்டுள்ள இவர், மலாய்மொழியில் *6* சிறுவர்

நூல்களும் எழுதியுள்ளார்; முன்னர் மலேசிய வானொலியில் பணியாற்றிய காலத்தில் பல நல்ல நாடகங்களை எழுதினார்; நல்ல ஒலிபரப்பாளர் என்னும் பாராட்டைப் பெற்றார்; பினாங்கு அறிவியல் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராய்ப் பணியாற்றிய இவர் 1.8.1996முதல் பேராசிரியராய்ப் பணிபுரிகிறார். இதே திங்களில் இவரது கல்விப் பணியைப் பாராட்டும் வண்ணம் மேன்மை தங்கிய மாமன்னர் கே.எம்.என். (KMN) விருது வழங்கிச் சிறப்பித்தார். *(112)*

**86.** காவேரிச்செல்வன், சி.

புதுமை வேட்கைகொண்டு பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(195)*

**87.** காவேரிநாதன், சி.

*28.3.1932*ஆம் ஆண்டு தமிழகத்தில் பிறந்த இவர், *1952*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; சமுதாய, அரசியல் துறைகளில் ஈடுபாடு கொண்டிருந்தார்; இப்போது சமயத்துறையில் மிகுந்த நாட்டம் கொண்டுள்ளார்; நாடகத்துறையிலும் இவருக்குப் பட்டறிவு உண்டு; மாணவர்களுக்காய பாடல்கள் நிறைய எழுதியுள்ளார்; போற்றி *108* முதலாய நூல்கள் சிலவும் வெளியிட்டுள்ளார். அண்மைக்காலமாய் வள்ளலார் நெறியில் பேரளவு நாட்டம்கொண்டு அதனைப் பரப்பும் முயற்சிகளில் ஈடுபட்டுள்ளார். *(206, 393)*

**88.** கிருஷ்ணசாமி, ஆ.

*28.4.1943*ஆம் ஆண்டில் சிலாங்கூரில் பிறந்த இவர், *1959*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; தாய்நாடு *(1990)*, ஒருகவிதை உங்களுக்குச் சொந்தம் *(1991)* ஆகிய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார்; காப்பார் மெத்தடிஸ்டு தொடக்கத் தமிழ்ப் பள்ளியின் தலைமையாசிரியராய இவர், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகமும் வெண்டோ கல்லூரியும் இணைந்து நடத்திய அஞ்சல்வழித் தொடர்கல்வித்துறையில் சேர்ந்து கற்று இளங்கலைப் (B.A) பட்டம் பெற்றவர். *(528)*

**89.** கிருஷ்ணதாசன், கவிமணி

*336* ஆம் பாடல் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. *(61, 134, 287)*

**90.** கிருஷ்ணன், இரா.

தொழிற்சங்க உணர்வுகொண்டு தொழிலாளர் உயரவேண்டும் என ஏங்கிப் பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(166)*

**91.** கிருஷ்ணன், கு.

*11.6.1945*இல் பிறந்த இவர் புனைபெயர் கூத்தரசன்; *1962*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(10, 24, 316, 586)*

**92.** குகிணன்

*19.3.1934*இல் கோலக்கிள்ளானில் பிறந்த இவர் இயற்பெயர் கிருஷ்ணசாமி;

ஆரவாரமின்றி அமைதியாய்க் கவிதை எழுதிவருகிறார்; *1990*இல் இவர் வெளியிட்ட நூலின் பெயர் 'பூஞ்சிட்டுகள்'. *(8)*

**93.** குஞ்சுபாகவதர், ப. க.

நீண்ட காலமாய் நாடகத் துறையிலும் இசைத்துறையிலும் ஈடுபட்டு உழைத்த இவர், *1929*ஆம் ஆண்டு தெலுக் பங்ளிமாக் காராங்கில் (கோலாலங்காட்) பிறந்தவர்; மலேசியத் தமிழ் நாடகக் கலை முன்னோடிகளுள் ஒருவர்; இசையையே தொழிலாய்க் கொண்டவர்; ஆர்மோனியம், புல்லாங்குழல், கிளாரினெட், புல்புல் தாரா முதலாய இசைக் கருவிகளை இசைப்பதில் தேர்ந்தவர்; இசைப்பாடல் நிறையப் பாடியுள்ளார்; அவற்றிற்குத் தாமே இசையமைப்பும் செய்துள்ளார்; பரந்த நூலறிவுடைய இவர் பண்முறையொடு திருமுறைகளைப் பாடுவதில் வல்லவர்; கருநாடக இசை, திருமுறை வகுப்புகளை நடத்திவந்தார்; இவர் சங்க இலக்கியம், பத்தி இலக்கியம், இடைக்கால இலக்கியம், இசைக்கலைச் சுவடிகள் முதலாய பலதுறைகளைச் சேர்ந்த ஆயிரக்கணக்காய நூல்களை விலைகொடுத்து வாங்கிப் படித்துப் பாதுகாத்து வந்தார். *15.5.1993*இல் இவர் புகழுடம்பெய்தினார். தம் மறைவிற்குப்பின் தாம் அரிதின் முயன்று ஆயிரக்கணக்கில் திரட்டி வைத்திருக்கும் நூல்களைக்கொண்டு பொது நூல்நிலையம் அமைக்குமாறு தம் குடும்பத்திற்குப் பணித்திருக்கிறார். *(427, 480)*

**94.** குமாரசாமி, சி.

அப்பர் தமிழ்ப்பள்ளியின் முன்னாள் தலைமையாசிரியராய இவர், சில கவிதைகளும் எழுதியுள்ளார்; *1972*ஆம் ஆண்டு ஏப்பிரல் திங்களில் பணியிலிருந்த போதே காலமானார். *(91)*

**95.** குயிலன், பொன்.

சீர்திருத்த உணர்வுகொண்டு பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(215)*

**96.** குருசாமி, பொன்.

மனித உணர்வுகளை நுட்பமாய் உணர்ந்து பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(304)*

**97.** குருவானந்தர்

இவருடைய இயற்பெயர் இராமச்சந்திரன்; மாரிமணாளன் என்னும் புனைபெயரும் பூண்டு பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(50, 109)*

**98.** குறிஞ்சிக்குமரன், சா. சி.

*25.5.1923*இல் தமிழக இரணசிங்கபுரத்தில் பிறந்த இவர் இயற்பெயர் சா. சி. சுப்பையா; *1955*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; சிறந்த புலவர்; சித்த மருத்துவர்; நெடுங்காலம் இலக்கிய வகுப்புகள் நடத்திப் பலர் புலமைபெற, கவிஞராக வழிகாட்டினார்; வழிகாட்டிவருகிறார்; 'நிலைபெற்ற தலைவன்' என்பது இவர் வெளியிட்டிருக்கும் நூலின் பெயர்; மொழியியலறிஞர் ஞா. தேவநேயப்

பாவாணர்பால் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர்; அவர் பெயரால், ஈப்போ நகரில் பாவாணர் மன்றம் நிறுவித் தமிழ்த்தொண்டு புரிந்துவருகிறார். 13.9.1992இல் இவருடைய தமிழருவி நூல் வெளியிடப் பெற்றது. (326, 363, 379)

**99.** கோவதன்

21.6.1958இல் தமிழகப் பரமக்குடியில் பிறந்த இவர் இயற்பெயர் தனசேகரன்; இவர் 1978ஆம் ஆண்டுமுதல் ஆர்வம் குன்றாமல் கவிதை எழுதிவருகிறார். (44)

**100.** கோவிமணாளன், வீ.

கிள்ளானில் 24.4.1940இல் பிறந்த இவர் இயற்பெயர் சாமிக்கண்ணு; 1969ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். (434)

**101.** சக்கரவர்த்தி சோமசன்மா

ஜோகூர் மாநிலத்தில் பிறந்த இவர் இயற்பெயர் சண்முகம்; கவிஞர் சோமசன்மா மனைவியார் அமிர்தம் சோமசன்மா தம்பியாகிய இவர், 1954ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். (479)

**102.** சங்கு சண்முகம், வே.

15.1.1941இல் பிறந்த இவர், சந்தப் பாடல்கள் பாடுவதில் வல்லவர். 1956ஆம் ஆண்டுமுதல் ஆர்வத்தொடு பாடிவருகிறார்; புகழ்பெற்ற இரட்டையருள் ஒருவர்; மற்றொருவர் தில்லைதாசன்; 1960இல் 'கவிதைத் திரட்டு' என்னும் நூலை இவர்கள் வெளியிட்டனர்; வாரம் இருமுறை ஏடான (இப்போது ஒருமுறை) சங்கமணியில் இணை ஆசிரியராய்ப் பணிபுரிந்தார். இக் காலத்தில் இவர் எழுதிய (சொந்தப் பெயரில் அன்று) கட்டுரைகள் எண்ணற்றவை; மொழிபெயர்ப்புக் கட்டுரைகளுக்கும் கணக்கில. தோட்டத் தொழிலாளர் மனங்களில் இவர் தூவிய எழுச்சி விதைகள் விளைத்த பயன் மிகுதி. 1995இல் பணி ஓய்வு பெற்றார். (74, 93, 139, 239, 464, 465, 565)

**103.** சண்முகம், தமிழ்மணி, அ.

சிலாங்கூர் மாநிலத்தின் ஜுக்ராவில் 15.8.1930இல் பிறந்த இவர், 1963ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; சென்னை மாணவர் மன்றம் நடத்திய தேர்வுகளில் வென்று 'தமிழ்மணி'ப் பட்டம் பெற்றுள்ளார்; தமிழகத்தில் வி.ஜி.பி. இலக்கியப் பரிசும் பெற்றார். (94)

**104.** சண்முகம், இராச.

1935ஆம் ஆண்டு பிறந்த இவர், அறுபதுகளில் கவிதை பாடத்தொடங்கி நிறையப் பாடியிருக்கிறார். (251, 262)

**105.** சண்முகம், ஏ. பி.

தமிழ்நாட்டு ஆத்திக்குளத்தில் 7.11.1929இல் பிறந்த இவர், சிங்கப்பூரில் வாழ்ந்துவருகிறார். 1948ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; இசைப்பாடல்களும், நாடகப் பாடல்களும் எழுதியுள்ளார். தம் கவிதைகளை, 'கவிதைப் பாதை' (1993) என்னும் தலைப்பில் தொகுத்து வெளியிட்டுள்ளார். (473)

**106.** சண்முகம், ரெ.

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(49, 53, 354, 359, 389, 392, 402, 403, 404, 405, 467, 468, 570)*

**107.** சதாசிவ பண்டிதர், சி. ந.

யாழ்ப்பாணத்தில் பிறந்த இவர், சிங்கை போந்து முறைமன்ற மொழிபெயர்ப்பாளராய்ப் பணிபுரிந்தார். 1887இல் வண்ணை அந்தாதி, வண்ணைநகர் ஊஞ்சல், சிங்கைநகர் அந்தாதி, சித்திரகவிகள் முதலாயவை அடங்கிய நூலை வெளியிட்டார்; தேர்ந்த பெரும்புலவராய இவரைப்பற்றிய முழுமையான வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கவில்லை. *(38, 39, 40, 41)*

**108.** சந்தனசாமி, சே.

*16.4.1927*இல் தமிழ்நாட்டில் உள்ள வடகரையில் பிறந்த இவர், *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; அன்புக்கனி *(1978)*, மாணிக்கத் தொட்டில் *(1990)*, உலகைத் தேடும் இறைவன் *(1991)*, உறவு மலர்ந்தது *(1993)*, கவிதைக்கனிகள் *(1994)* முதலாய நூல்களை வெளியிட்டுள்ளார். *(556)*

**109.** சந்திரன், ஆர். ஆர்.

'சமுதாயத்தில் நேர்மையும் சமநீதியும் நிலவ வேண்டும்' என்னும் வேட்கைகொண்டு பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(568)*

**110.** சந்திரன், பொன்.

*6.2.1954*இல் பத்தாங் பெர்சுந்தையில் பிறந்த இவர் புனைபெயர் பொன். நிலவன்; கவிஞர் தீ.சி. பொன்னுசாமி மாணவராய இவர், *1972*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(11, 244)*

**111.** சந்திரன், ம. அ.

*28.9.1951*இல் காஜாங் நகரில் பிறந்த இவர் இயற்பெயர் சுப்பையா; *1974*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். 'சிந்தனைச் செல்வம்' *(1993)* என்னும் சிறுவர் பாடல் நூல் வெளியிட்டுள்ளார். *(176, 202, 280)*

**112.** சந்திரன், மு.

"மனிதன் தன் ஆற்றலில் அளவுகடந்த நம்பிக்கைகொண்டு செய்யப்படும் செயல்கள் இறைசத்தியால் முறியடிக்கப்படுகின்றன" என்னும் கருத்தை வலியுறுத்தி, வாயேஜர் 13 வான்கலம்பற்றிப் பாடியுள்ள இவர் *19.11.1950*இல் கோலாலம்பூரில் பிறந்தவர். *1976*முதல் கவிதை பாடிவருகிறார். *(562)*

**113.** சபா இராகி

*10.3.1945*இல் பிறந்த இவர் இயற்பெயர் சபா. இராமகிருஷ்ணன்; நல்ல சிறுகதை ஆசிரியர்; *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதைகளும் எழுதிவருகிறார். *(302)*

**114.** சமாதானம், ஏ. டி.

*20.10.1923*இல் மலாக்காவில் பிறந்த இவர் இயற்பெயர் ஆபிரகாம் தேவ சமாதானம்; *1952*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; சிறுவர் இன்பம்,

பூச்சரம், மலர்க்கூடை ஆகியவை இவர் வெளியிட்டுள்ள நூல்கள்; பணியிலிருந்து ஓய்வு பெற்றுவிட்ட இவர், இப்போது அமெரிக்காவில் பட்ட மேற்படிப்புப் படித்து வருகிறார். Poems of the Soul, The Great Wisdom of Poems ஆகிய ஆங்கிலக் கவிதை நூல்களையும் வெளியிட்டுள்ளார். *(534, 535)*

**115.** சாகுல் அமீது, டி. எம்.

*21.9.1945*இல் பினாங்கில் பிறந்த இவர், சுவாமி இராமதாசர் மாணவர்; *1970*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். *(270)*

**116.** சாரண பாஸ்கரன்

தமிழகம் கூத்தாநல்லூரில் பிறந்த இவர் இயற்பெயர் அஹமது; இவர் பினாங்கிலிருந்து வெளிவந்த தேசநேசன் நாளேட்டிலும் களஞ்சியம் இதழிலும் ஆசிரியராய்ப் பணியாற்றினார்; மணிச்சரம், சாபம், யூசுப் சுலைகா முதலாய பல நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். *(632)*

**117.** சிங்கை சாந்தி

'சமுதாயத்தில் மண்டிக் கிடக்கும் மடமைகள் அகலவேண்டும்' எனக் கவிதை பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(220)*

**118.** சிங்கை முகிலன்

*1921*ஆம் ஆண்டு தமிழகச் சோழபுரத்தில் பிறந்த இவர் இயற்பெயர் ரஹ்மான்; *1938*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிய கவிஞர்; நேதாஜியின் இந்திய தேசிய இராணுவவீரராய் விளங்கினார்; அதுகுறித்துப் படைநடைப் பாடல்கள் பாடினார்; தமிழ்ஒலிக் கீதம், திராவிடமணிக் கீதம், இந்திய தேசிய இராணுவ நினைவுக்கீதம், இதயமலர், துடிக்கும் உள்ளம், இதய ஓசை, மனிதச் சுவடு ஆகியவை இவர் வெளியிட்டுள்ள கவிதை நூல்கள். இப் பெருமகனார் *8.12.1992*இல் புகழுடம் பெய்தினார். *(261, 277, 382, 410)*

**119.** சிவானந்தர், கோவி.

மிகக் குறைவாகவே கவிதை பாடியுள்ள இவரைப்பற்றிய குறிப்புகள் கிடைக்க வில்லை. *(17)*

**120.** சின்னத்தம்பி, ஆ.

குழந்தைப் பாடல்கள் எழுதிய இவரைப்பற்றிய குறிப்புகள் கிடைக்கவில்லை. *(600)*

**121.** சின்னப்பனார், ச. சா.

சிங்கையில் வாழ்ந்து மறைந்த தமிழ்ப் பெரும்புலவர். தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள் பலவற்றை மனப்பாடம் செய்து, தம் கூரிய மூளையில் பதியவைத்திருந்த அறிஞர்; திராவிட இயக்கத்தோடு நெருங்கிய தொடர்பும் அதன் பணிகளில் ஈடுபாடும் கொண்டிருந்தார்; தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்களிடம் பெருமதிப்பு வைத்து, அவர்தம் பணிகளுக்குப் பேராதரவு நல்கி வந்தார்; நல்ல பேச்சாளர்; சிங்கைத் தமிழ்ப் பெரியார் எனப் போற்றப்பட்டார்; தனிப்பாடல்களும், சில பிரபந்தங்களும் பாடியிருப்பதொடு சித்திரகவிகளும் தீட்டியுள்ளார். *(90, 327)*

**122.** சீனி நைனாமுஹம்மது, செ.

தமிழகத்தில் உள்ள கீழாயூரில் *11.9.1947*இல் பிறந்த இவர், *1966*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; நிறைய இசைப்பாடல்களும் பாடியிருக்கிறார்; இவர் பாடிய 'வள்ளல் நாயகம்' என்னும் நெடும்பாட்டு 1974இல் சிறு நூலாய் வெளிவந்துள்ளது; 'நம் குரல்' மாத இதழின் ஆசிரியராய் ஏழு ஆண்டுகள் பணிபுரிந்தார்; தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமையுடைய இவர், பயனாய்வு (Feasibility Study), உரிமைகோரல் (Demand), ஒழுங்காண்மை (Organization) முதலாய கலைச்சொற்களை உருவாக்கியவர். *(2, 57, 334, 543, 552)*

**123.** சுகுமாரன், க.

கெடா மாநிலத்தில் உள்ள சுங்கைப்பட்டாணியில் 27.3.1959இல் பிறந்த இவர், *1978*ஆம் ஆண்டுமுதல் ஆர்வத்தொடு கவிதை பாடிவருகிறார். *(610)*

**124.** சுப்பிரமணியம், கெஜ.

பழந்தமிழ் இலக்கியப் பயிற்சியும் கற்பனை வளமும் கொண்டு கவிதை பாடிய இவரைப்பற்றி வேறு தகவல்கள் கிடைக்கவில்லை. *(286)*

**125.** சுப்பிரமணியம், பொன்.

*1939*ஆம் ஆண்டு சிலாங்கூர் மாநிலத்தில் உள்ள ஜெரத்தில் பிறந்த இவர் புனைபெயர் தமிழ்க்கூத்தன்; தமிழாசிரியராய்ப் பணியாற்றி வருகிறார். *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; தமிழ்நெறி மன்றம் 1980முதல் நடத்திவரும் இடைநிலைப்பள்ளி மாணவர்க்குரிய இலவய வழிகாட்டி வகுப்புகளில் தொடர்ந்து பல ஆண்டுகளாய்க் கற்பித்த ஆசிரியர்களுள் ஒருவராவார். *(309)*

**126.** சுப்பிரமணியம், வீ. கே.

*14.11.1936*ஆம் ஆண்டு, தமிழகத்தில் பிறந்த இவர், *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகின்றார்; சுவாமி இராமதாசர் தலைமாணாக்கர்; மங்கள மலேசியா, திருவள்ளுவர் மாட்சி, தண்டாயுதபாணி சதகம் முதலாய இருபது கவிதை நூல்கள் வெளியிட்டுள்ளார்; நெடுங்காலமாய்ச் செந்தமிழ்க் கலாநிலையச் செயலாளராய்த் தொண்டாற்றிவருகிறார்; இவர் மதிப்புறு முனைவர் *(D.Litt.)* பட்டம் பெற்றுள்ளார். *(79, 97, 179, 204, 247, 291, 323)*

**127.** சுமதி, மு. வீ.

*13.4.1944*இல் முத்துசாமி வீரம்மாள் இணையர்க்கு மூன்றாம் மகவாய்ப் பிறந்த இவர் இயற்பெயர் முத்தாளு. *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை, கதை, கட்டுரை, வானொலி நாடகம் எழுதி வருகிறார். *1994*ஆம் ஆண்டில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தங்கப் பதக்கம் வழங்கி இவர் தொண்டைப் பாராட்டியது. *(592)*

**128.** சுமன், பொன்.

ஆர்வமிக்க இளைஞராய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(258)*

**129.** சுல்தான், மைதீ.

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(4, 103, 161, 256, 360)*

**130.** செங்குட்டுவன், நா. ஆ.

சிலாங்கூர் மாநிலத்தின் காஜாங்கில் *5.7.1943*இல் பிறந்த இவர், *1958*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; மலேசிய வரலாறுபற்றிய வில்லுப்பாட்டு ஒன்றும் எழுதியுள்ளார்; பல மேடைநாடகங்களும் எழுதியுள்ளார்; தாமரைப்பூந் தேனீ, மீளாப் பயணம் ஆகியவை இவர் வெளியிட்டிருக்கும் நூல்கள்; 'முல்லை' என்னும் திங்கள் ஏடொன்றும் நடத்தியிருக் கிறார்; மலேசியத் தமிழ்ப் படைப்பாளர் இயக்கம் அமைத்து எழுத்துத்துறைக்கு ஊக்கம் நல்கி வருகிறார். *(477)*

**131.** சேது, மு.

பினாங்கில் புகழ்பெற்று விளங்கிய 'நால்வருள்' ஒருவர். நிரம்பக் கவிதை பாடியிருக்கிறார். பினாங்குத் தமிழ் இளைஞர் மணிமன்ற நிறுவன உறுப்பினர்களுள் இவரும் ஒருவர். நீண்ட காலமாய்க் கவிதைத் துறையினின்று ஒதுங்கியிருக்கிறார். *(263)*

**132.** சேதுராமன், புலவர், மு.

*20.10.1927*இல் தமிழகத்தில் பிறந்த இவர், தமிழ்நேசன் நாளிதழில் நிருவாகியாய்ப் பணியாற்றினார்; கவியரங்கம் பலவற்றைத் தலைமையேற்று நடத்தினார்; மலாயாப் பல்கலைக்கழகத்தில் பகுதிநேர விரிவுரையாளராயும் பணிபுரிந்துள்ளார்; சமய அறிவு மிக்கவர். *(15, 34, 329)*

**133.** சோமசன்மா

இவர் இயற்பெயர் ம. சு. அண்ணாமலை; *25.12.1925*இல் சிலாங்கூரில் பிறந்தார்; தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியராய்ப் பணியாற்றினார்; *1950*இல் கவிதை உலகில் புகுந்தார்; ஜோகூர் எழுத்தாளர் சங்கத்தைத் தலைமையேற்று நடத்திக் கவிஞர் பலர் உருவாக ஊக்கமூட்டி வழிகாட்டினார்; வி.ஜி.பி. சகோதரர் இலக்கியப் பரிசு *(1984)* பெற்றுள்ளார்; *1971*இல் கவிஞர் கண்ணதாசன் 'மலேசியக் கவியரசு' விருது வழங்கினார்; சிறுவர் இலக்கிய வளர்ச்சிக்குக் குறிப்பிடத்தக்க தொண்டாற்றினார்; *1977*ஆம் ஆண்டு 'மகிழம்பூ' என்னும் கவிதை நூலை வெளியிட்டார்; *24.6.1988*இல் காலமானார். *(114, 223, 315, 366, 487, 488, 489, 542, 590, 609)*

**134.** சோலை முருகன்

*22.3.1943*இல் தமிழகத்தில் பிறந்த இவர், சுவாமி இராமதாசர் மாணவர்; *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். *(54, 441)*

**135.** சோலை முனியன்

அரச மலேசியக் கடற்படையில் பணியாற்றிய இவர், கவிதையும் எழுதினார்; தம் கவிதைகளைத் தொகுத்துக் 'கடற்சோழன் கவிதைகள்' என்னும் நூலாய் *(1986)* வெளியிட்டார்; *10.1.1994*இல் மாரடைப்பால் காலமானார். *(457)*

**136.** ஞானசேகரன், எம். கே.

*9.6.1955*ஆம் ஆண்டு கூலிமில் பிறந்த இவர், *1969*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், இவர் எழுத்துத்தொண்டை மதித்துச் சான்றிதழும் பணமுடிப்பும் வழங்கியுள்ளது. *(143, 636)*

**137.** ஞானதாசன்

*1936*இல் சிரம்பானில் பிறந்த இவர் இயற்பெயர் பரமேஸ்வரன்; *1958*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; பாவேந்தரும் தமிழவேள் கோ. சாரங்கபாணியும் தமக்கு வழிகாட்டிகள் என நன்றியுடன் குறிப்பிடுகிறார். *(18, 345, 374)*

**138.** ஞானமணி

*13.2.1941*இல் துரோங்கில் பிறந்த இவர் இயற்பெயர் நாராயணசாமி; *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; இசைப்பாடல்களுடன் மேடைநாடகங்களும் எழுதியுள்ளார்; 'முதல் ஓசை' *(1991)* இவர் வெளியிட்ட கவிதை நூலின் பெயர். *(13)*

**139.** தங்கசாமி, மு.

இயற்கைப் புனைவுகளில் ஈடுபாடுகொண்டு பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(26)*

**140.** தங்கராசன், மு.

*22.5.1935*இல் தமிழகத்தில் பிறந்த இவர் சமுதாயச் சீர்திருத்த உணர்வுகொண்டு பாடிவருகிறார்; பல மேடைநாடகங்களை எழுதி இயக்கி அரங்கேற்றியுள்ளார்; இவர் வெளியிட்ட கவிதை நூலின் பெயர் 'அணிகலன்' *(1985)*. *(170)*

**141.** தமிழரசன்

ஒருமைப்பாட்டுக் குரல் எழுப்பும் இவருடைய வாழ்க்கைக் குறிப்புக் கிடைக்க வில்லை. *(577)*

**142.** தமிழன்பன், மா.

சில வெண்பாக்கள் பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(155)*

**143.** தமிழ்ச்செல்வன், இரா.

*17.10.1942*இல் பிறந்த இவர் இயற்பெயர் இராமசாமி. *1958*ஆம் ஆண்டு தம் கவிதைப் பணியைத் தொடங்கிய இவர், தமிழ்மலரில் துணையாசிரியராய்ப் பணியாற்றினார். *(146)*

**144.** தமிழ்த்தும்பி

"சமுதாய ஏற்றத்தாழ்வை அகற்றவேண்டும்" என்னும் உணர்வுகொண்டு பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(172)*

**145.** தமிழ்ப்பாணன்

அடைக்கலம் என்னும் இயற்பெயர் கொண்ட இவர், *11.10.1943*இல் ஜோகூர் மாநிலத்திலுள்ள தங்காவில் பிறந்தார்; *1957*ஆம் ஆண்டில் எழுத்துலகில் புகுந்தார்; நிரம்பக் குழந்தைப் பாக்கள் பாடினார்; தொடர்ந்து பாடிவருகிறார். *(500)*

**146.** தமிழ்ப்பித்தன்

*13.1.1941*இல் பிறையில் பிறந்த இவர் இயற்பெயர் முருகையா; *1957*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(162, 529)*

**147.** தமிழ்ப்பித்தன், ம. கு.

சமுதாயத்தின் பலவீனங்களை உணர்ந்து பாடிய இவர் பாடல்கள் அறுபதுகளில் பரவலாய் ஏடுகளில் இடம்பெற்றன; இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(144)*

**148.** தமிழ்மணி, பொ. மு.

*1943*ஆம் ஆண்டில் தெலுக் இந்தானில் பிறந்த இவர் இயற்பெயர் சுப்பிரமணியன்; கவிஞர் தீ. சி. பொன்னுசாமி மாணவர்; *1970*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; இரண்டு சிறுகதைத் தொகுப்புகளும் வெளியிட்டுள்ளார். *(75, 593)*

**149.** தமிழ்மாறன், கோ. சு. கி.

*7.7.1942*இல் மலாக்காவில் பிறந்த இவர் இயற்பெயர் கிருஷ்ணன்; *1957*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(72)*

**150.** தம்பாய் முனியாண்டி, ஆ.

*10.3.1942*இல் மலாக்காவில் பிறந்த இவர், *1958*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; மாலவன், கல்பனா ஆகியவை இவர் புனைபெயர்கள். 'சிறுவர் இலக்கியம்' என்னும் பெயரில் *10* கவிதைத் தொகுதிகளை ஜெயபக்திப் பதிப்பகத்தின்வழி வெளியிட்டுள்ளார்; தொடக்க, இடைநிலைப் பள்ளிகளுக்குரிய பாடநூல்களும் எழுதியுள்ளார். தம் பாடல்கள் சிலவற்றைத் தொகுத்துத் 'தேன்துளி' என்னும் பெயரில் நூலாக வெளியிட்டுள்ளார். *(200, 533)*

**151.** தம்பியையா, இரா.

அறுபதுகளில் வெண்பாக்கள் பாடிய இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(282)*

**152.** தாமோதரன், மா.

இவர் பெயரால் ஓரிரு வெண்பாக்கள் கிடைக்கின்றன; வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(158)*

**153.** தியாகராாசன். சி.

நேசன் நடத்திய வெண்பாப் போட்டியில் *(1972)* கலந்துகொண்டு பாடிய இவரைப்பற்றி வேறு குறிப்புகள் கிடைக்கவில்லை. *(151)*

**154.** திரிகூடர்

பினாங்கிலிருந்து இப் பெயரில் இணைந்து பாடிய கவிஞர் காரைகிழார், வீரமான், மைதீ. சுல்தான் ஆவர். (372)

**155.** திருக்குறள் மணியம்

*15.6.1941*இல் பிறந்த இவர் இயற்பெயர் சுப்பிரமணியன்; *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; தெலுக் இந்தான் திருக்குறள் மன்றம், இலக்கியக் களம் ஆகிய அமைப்புகளின் தலைவராய்ப் பொறுப்பு வகித்துப் பொதுப்பணிகளிலும் ஈடுபட்டுவருகிறார். (98)

**156.** திருமாலன், அ. பு.

*8.6.1931*இல் பேரா மாநிலச் செலாமா 'ஒலிரூட்' தோட்டத்தில் பிறந்த இவர் இயற்பெயர் நாராயணசாமி; தனித்தமிழ் ஆர்வலராய இவர், வண்ணப் பாடல்களும் இசைப்பாடல்களும் எழுதியுள்ளார்; இசை, நாடகக் கலைஞருமாய இவர் தமிழ்நெறிக் கழகம் (1983) நிறுவி மொழி, சமய, குமுகாய முன்னேற்றத்திற்குத் தொண்டாற்றிவந்தார்; 'கனல்' என்பது இவர் வெளியிட்ட பாட்டு நூலின் பெயர்; தமிழ்நெறி விளக்கம், இனப்பற்று, தேவையற்றது எழுத்துச் சீர்திருத்தம், தமிழர் வாழ்வறத்தில் தாலி முதலாய நூல்களும் வெளியிட்டுள்ளார். இவருக்கு இரு ஆண்மக்களும் இரு பெண்மக்களும் உள்ளனர். இவர் *29.4.1995*இல் புகழுடம்பெய்தினார். (105, 456, 544)

**157.** திருவரசு, கரு.

தமிழ்நாட்டுப் போகலூரில் 2.10.1936இல் பிறந்த இவர் இயற்பெயர் சுந்தரராசு; *1954*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவைத் தோற்றத்திற்கு அடிப்படையிட்டவர்களுள் ஒருவராய இவர், இப்போது பினாங்குத் தமிழ் எழுத்தாளர் சங்கச் செயலாளராய் இருந்து இலக்கிய வளர்ச்சிக்கு அரும்பணியாற்றி வருகிறார்; வண்ணங்கள், முதல்மலர் ஆகியவை இவர் வெளியிட்டிருக்கும் நூல்கள்; இவர் பாடல்களில் சில ஒலிப்பேழைகளில் பதிவாகி வெளிவந்துள்ளன; பல்வேறு மாநாட்டுப் பாவரங்கங்களில் தலைமை தாங்கிச் சிறப்பித்துள்ளார். (87, 193, 194, 212, 224, 269, 295, 406, 407, 408, 409, 549, 598)

**158.** திருவேங்கடம், பெ.

*28.9.1949*இல் தமிழகத்தில் பிறந்த இவர் *1962*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். கவிவாணர் ஐ. உலகநாதனைத் தம்முடைய கவிதை வழிகாட்டி என நன்றியொடு கூறுகிறார். (209, 293, 424)

**159.** திருவேங்கடம், மு.

*17.10.1956*இல் மூவாரில் பிறந்த இவர் *1974*முதல் கவிதை பாடிவருகிறார். தமிழவேள் கோ. சா., தனித்தமிழ் பேணுமின் ஆகிய உரைநடை நூல்களை வெளியிட்டுள்ளார். (527)

**160.** **தீபா ஆறுமுகம்**

நடனமணி ஆஷா தியாகராசன் மறைவு குறித்து இரங்கற்பாப் பாடியுள்ள இவரைப்பற்றி வேறு குறிப்புகள் கிடைக்கவில்லை. *(361)*

**161.** **தீன், எஸ். எம்.**

பினாங்கில் வாழும் இவர், *1937*இல் கடையநல்லூரில் பிறந்தார்; *1958*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(260, 391)*

**162.** **துரைசாமி, உ.**

*13.4.1932*இல் தமிழ்நாட்டில் பிறந்த இவர், *1958*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(596)*

**163.** **துரைசாமி, பொன்.**

*7.10.1927*இல் தமிழகத்தில் பிறந்த இவர், *1950*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; இசைப்பாடல்களும், வில்லுப்பாட்டுகளும், கவிதை நாடகங்களும் இயற்றியிருக்கிறார்; இசைத்திறனும், நாடகமேடை அனுபவங்களும் நிறைந்தவர். இவர் *15.10.1994*இல் புகழுடம்பெய்தினார்.*(462, 476)*

**164.** **தேசகுரு, வெ.**

*14.6.1938*இல் கோலாலம்பூரில் பிறந்த இவர், *1976*இல் கவிதை எழுதத் தொடங்கினார்; பல கவியரங்குகளில் பங்கேற்றுள்ளார்; வேர்கள், பாவேந்தர் பாரதிதாசன் களஞ்சியம் ஆகிய கவிதை நூல்கள் வெளியிட்டுள்ளார். *1.7.1995*இல் உலகவாழ்வு நீத்தார். இவர் உருவாக்கிய இசைப்பேழை இவர் மறைவுக்குப்பின் வெளியிடப்பட்டது. *(164, 364, 582)*

**165.** **தேவிதாசன்**

இரண்டாம் உலகப் போருக்குமுன் வெளிவந்த 'தமிழ்க்கொடி' *(1941)* இதழில் கவிதை பாடியுள்ளார்; சிறுவர் கவிதைகளும் இயற்றியுள்ளார். இவரை மலேசியாவில் முதல் குழந்தைக் கவிஞர் எனலாம். இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(502, 588)*

**166.** **தையல்நாயகி, த.**

*19.7.1921*இல் தெலுக் இந்தானில் பிறந்த இவர், *1952*ஆம் ஆண்டு முதல் கவிதை எழுதிவருகிறார். *(522)*

**167.** **நல்ல செங்கோட்டையா**

வெற்றிபெறக் கூடிய லாட்டரி எண்களைக் கணித்துக் கொடுப்பதாய் விளம்பரம் செய்து, காசு பறிக்கும் புதுவகை மோசடிச் சோதிடம்பற்றிப் பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(627)*

**168.** **நன்முல்லை, ப.**

*24.1.1941*இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் இலக்குமணன்; கவிஞர் முல்லைவாணனை வழிகாட்டியாய்க் கொண்டவர். *1966*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(140, 167, 214)*

**169.** நாகப்பன், ஆறு.

*30.3.1944*இல் சிரம்பானில் பிறந்த இவர், ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி விரிவுரையாளராய்க் கல்விப்பணியாற்றியபின் உயர்நிலைப்பள்ளியொன்றில் ஆசிரியராய்ப் பணியேற்றார்; *1994*ஆம் ஆண்டில் விருப்போய்வு பெற்றார்; *1960*ஆம் ஆண்டுமுதல் எழுதிவருகிறார்; கவிதைகளொடு சிறுகதைகளும் கட்டுரைகளும் படைத்து வருகிறார்; சமய ஈடுபாடு மிக்கவர்; மலேசிய இந்து சங்கத்தின் தேசியத் தலைவராய்த் *(1989-91)* தொண்டாற்றினார்; 'கோணல் ஆறு' என்னும் சிறுகதைத் தொகுப்பு நூல் வெளியிட்டுள்ளார். 'சக்தி' மாத இதழைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் நடத்தி வருகிறார். சிலகாலம் 'சாந்தி' என்ற இதழையும் நடத்தினார். 'கபேனா' என்னும் தேசிய எழுத்தாளர் சங்கத்தொடு தொடர்புடையவர்; தேசிய மொழியிலும் கவிதை, கட்டுரை படைக்கும் ஆற்றல் உடையவர். மலாயாப் பல்கலைக்கழகத்தில் இளங்கலைப் (B.A.) பட்டம் பெற்றவராய இவர், வெண்டோ கல்லூரி (இப்பொழுது TAFE, P.J.) வாயிலாய் மதுரைக் காமராசர் பல்கலைக்கழக அஞ்சல்வழிக் கல்வித்துறையில் சேர்ந்து முதுகலையில் (M.A.) தேர்ச்சி பெற்றார் *(1991)*. *(198, 607)*

**170.** நாச்சிகுளத்தார்

*1934*ஆம் ஆண்டு தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் யூசுப் ராவுத்தர்; சுவாமி இராமதாசர் மாணவர்; *1963*ஆம் ஆண்டில் கவிதை எழுதத் தொடங்கி இதுவரை முப்பத்தைந்து கவிதை நூல்களை வெளியிட்டிருக்கிறார்; சீறாப் புராணம், இராஜநாயகம் முதலாய பல இலக்கிய நூல்களை மறுபதிப்பாய் வெளியிட்டிருக்கிறார். *(605)*

**171.** நாச்சியப்பன், முரு. சொ.

தமிழகத்தில் கல்லல் என்னும் ஊரில் *3.10.1940*இல் பிறந்த இவர் புனைபெயர்கள் கல்லல் கவி, தமிழ்வண்ணன் என்பன; தாளிகைத் துறையில் நிறைந்த பட்டறிவு மிக்கவர்; 'இலட்சியம்' என்ற ஏட்டையும் நடத்தியுள்ளார்; தினமணியின் தலைமை ஆசிரியராயும் தமிழ்நேசனில் துணையாசிரியராயும் பணியாற்றினார்; 'தினமுரசு' நாளிதழைச் சிலகாலம் நடத்தினார். *(368)*

**172.** நாணல்

கோத்தாபாருவில் *6.3.1947*இல் பிறந்த இவர் இயற்பெயர் கிருஷ்ணன்; *1974*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(525)*

**173.** நாராயணசாமி நாயகன், வெ.

*1866*ஆம் ஆண்டில் சிங்கப்பூரில் வாழ்ந்த இவர், அப்போது வ. இராசகோபாலை ஆசிரியராய்க்கொண்டு சென்னையிலிருந்து வெளிவந்த 'தத்துவபோதினி' என்னும் மாத இதழில் இசைப்பாடல்களும் கவிதைகளும் நிறைய எழுதியுள்ளார்; இவர் பெயருக்கு முன்னால் 'சிங்கப்பூர்ச் சித்திரகவிவல்ல' என்னும் அடைமொழி சேர்க்கப்பட்டுள்ளது; இவர் மொழித்திறனொடு நிறைவான இசைப்புலமையும் பெற்றவராய் இருக்கலா மென்பதை இவர் பாடல் மெய்ப்பிக்கிறது; இந் நூலில் இடம்பெற்றுள்ள பாக்களில் இவர் பாடலே காலத்தால் முந்தியதாகும். *(399)*

**174.** நாராயணன், சுப.

*11.11.1913*இல் தமிழகத்தில் பிறந்த இவர், கதை வகுப்பும் இரசனை வகுப்பும் நடத்தி இந் நாட்டுத் தமிழிலக்கியம் நெறியொடு வளர உழைத்தார்; கந்தசாமி வாத்தியார் என்னும் புகழ்பெற்ற புனைபெயரைக் கொண்டு, இலக்கிய விமர்சனம் செய்து பரபரப்பு ஏற்படுத்தினார்; பின்னர் 'அறியாப் பிள்ளை' என்னும் பெயரில் பொருள்பொதிந்த இலக்கணச் சர்ச்சைகள் செய்தார்; தி.ஜ.ர.வின் மாணவர்; தமிழ்நாட்டின் அன்றைய 'சக்தி' மாத இதழின் துணையாசிரியராய்ப் பணியாற்றினார்; திறமையானவர்களை அடையாளம் கண்டு ஊக்கப்படுத்தும் இயல்பினர்; ஆங்கிலப் புலமையும் மிக்கவர்; ஆங்கில நாவல் எழுதும் போட்டியில் ஆறுதல் பரிசு பெற்றார்; தமிழ் எழுத்து வடிவ அமைப்பு மாற வேண்டுமென்று நெடுங்காலமாய்க் குரல் எழுப்பிவந்தார்; அது தொடர்பாகப் பேசத் தெரியுமா? நூலை வெளியிட்டுள்ளார். ஆரியப் புல்லுருவி என்னும் பெயரிலும் ஒருநூல் வெளியிட்டுள்ளார். *17.5.1983*இல் இயற்கையெய்தினார். *(104)*

**175.** நாராயணன், பெ. க.

சுங்கைப்பட்டாணிப் பகுதியிலிருந்து கவிதை எழுதிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(551)*

**176.** நால்வர்

அறுபதுகளில் புகழ்பெற்று விளங்கிய இப் பெயரில் இணைந்து கவிதை பாடியோர் கவிஞர் கரு. திருவரசு, மைதீ. அசன்கனி, மு. சேது, கே. முகம்மது யூசுப் ஆவர். *(205)*

**177.** நாவலன், பொன்.

கவிஞர் தீ. சி. பொன்னுசாமி மாணவர்களுள் ஒருவராய இவர், 'கவிஞர் சுரதா வாசகர் வட்டம்' என்னும் அமைப்பையும் நடத்திவருகிறார். *(106)*

**178.** நீலகண்டன், ஏ.

தோட்டப்புற மக்கள் உணர்வுகளை நுட்பமாய்ப் பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(189, 307)*

**179.** நெடுமாறன், நாமக்கல், இரா.

கவிவாணர் ஐ. உலகநாதன் ஊக்குதலில் வளர்ந்த கவிஞர்களுள் இவரும் ஒருவர்; இவர் பெயரால் கிடைத்த ஒரு கவிதையன்றிப் பிற விவரங்கள் கிடைக்கவில்லை; இவர் நீண்ட காலமாய் எழுதுவதில்லை. *(340)*

**180.** நெடுமாறன், முரசு.

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(68, 108, 113, 159, 169, 265, 341, 348, 383, 411, 412, 413, 414, 471, 472, 483, 484, 485, 486, 540, 567, 599, 601, 613)*

**181.** பகதூர், எல். எம்.

பிறப்பால் நேப்பாளியரான இவர், தமிழ்ப்பள்ளியில் கல்வி கற்றுத்

தமிழரைப்போல் பேசவும் படிக்கவும் எழுதவும் வல்லவரானார்; தமிழ்முரசு மாணவர் மணிமன்ற மலரில் குழந்தைப் பாடல்கள் எழுதினார்; *1.3.1971*இல் தமிழ்முரசு இவரை நேர்கண்டு 'மலேசிய நாட்டுக் குழந்தைக் கவிஞர்' என்னும் அடைமொழியொடு வெளியிட்டது. இவர் *1977*ஆம் ஆண்டில் தம் கவிதைகளைத் தொகுத்துப் 'பூங்காராயா' (செம்பரத்தை மலர்) என்னும் பெயரில் நூலாக்கி வெளியிட்டுள்ளார். *(511, 512, 513)*

**182.** பரணன்

*9.4.1941*இல் பொந்தியானில் (மலேசியா) பிறந்தவர்; இவர் இயற்பெயர் சி. வேலு; அறுபதுகளில் தொடங்கிக் கவிதை பாடிக்கொண்டிருக்கிறார்; தென்கிழக்காசிய (ஆசியான்) இலக்கிய விருதுபெற்ற தமிழ்க் கவிஞர்; நல்ல குழந்தைக் கவிஞர்; தோணி, தென்றல், மழை, எதிரொலி, அரங்கேறிய கவிதைகள் முதலாய கவிதை நூல்களை வெளியிட்டுள்ளார். *(28, 211, 299, 431, 432, 433, 507, 508, 509, 510, 639, 650)*

**183.** பரிதி, அ.

எதிர்காலம்பற்றி நம்பிக்கையொடு பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(252)*

**184.** பழநிவேலன், பெரி. நீல.

*24.4.1939*இல் சிலாங்கூரிற் பிறந்த இவர் புனைபெயர் பசுங்குடையார்; *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; சிறுகதைகளும், புதினங்களும் எழுதியிருக்கிறார்; மின்னற்கீற்று *(1978)*, அந்தரத்தில் தொங்கும் உறவு *(1987)*, செம்பருத்தி *(1989)*, செவ்வானம் *(1990)*, நெருங்கினால் சுடும் நெருப்பு *(1995)*, தமிழ் நிலவு *(1996)* முதலாய நூல்களும் வெளியிட்டுள்ளார். *(384)*

**185.** பழநிவேலு, ந.

*20.6.1908*இல் தமிழ்நாட்டில் உள்ள சிக்கலில் பிறந்த இவர் புனைபெயர் நபர்; *1932*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; சிங்கப்பூர் வானொலியில் நீண்ட காலம் பணியாற்றி ஓய்வுபெற்றவர்; மேடை நாடகங்களும் எழுதியுள்ளார்; சிங்கப்பூர் அரசு இவருக்குப் 'பண்பாட்டுத்துறை விருது' வழங்கிச் சிறப்பித்துள்ளது; முதுபெருங்கவிஞர்; மலேசிய இலக்கிய முன்னோடிகளுள் ஒருவர்; மறுமலர்ச்சிக் கவிதைத்துறையைத் தொடங்கி வைத்த முதல்வர்; கவிதை மலர்கள், கலியின் நலிவு ஆகியவை இவர் வெளியிட்டுள்ள கவிதை நூல்கள். *(6, 66, 264, 268, 347, 474)*

**186.** பாண்டியன், இரா.

*10.11.1940*இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் பாண்டித்து; வள்ளி மணாளன் என்னும் பெயரிலும் எழுதியுள்ளார்; *1959*ஆம் ஆண்டுமுதல் பாடிவரும் இவர், சுவாமி இராமதாசர் மாணவர்; தண்ணீர்மலைஅப்பன் திருப்புகழ்ச்சி மாலை, பூங்கொடி (காவியம்), அத்திப்பூ, கறுப்பையன் புகழ்மாலை, தோரணங்கள், வரத விநாயகர் பிள்ளைத்தமிழ் ஆகியவை இவர் வெளியிட்டுள்ள நூல்கள். *(21, 165, 285, 426)*

**187.** பாதாசன்

இவரைப்பற்றிய குறிப்பைத் தொகுப்புக் குழுவினர் பகுதியில் காண்க. *(31, 141, 346, 352, 381)*

**188.** பாரதிநேசன்

குழந்தையை இழந்த தாயின் உணர்ச்சியை உணர்ந்து பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(608)*

**189.** பார்வதி பூபாலன், தமிழ்மணி

சிங்கப்பூரில் வாழும் பெண்பாற் கவிஞரான இவர், *4.2.1944*இல் பிறந்தவர்; சென்னை மாணவர் மன்றத் 'தமிழ்மணி'ப் பட்டம் பெற்றவர்; தமிழாசிரியையாய்ப் பணிபுரிகிறார். *(35, 43)*

**190.** புங்கைப் புகழேந்தி

பொருள்வயின் பிரிந்த கணவனுக்குப் பிரிவுத்துயர் ஆற்றாத மனைவி எழுதி விடுத்த மடலை அழகுறப் பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(313)*

**191.** புதுமைப்பித்தன், நாரண.

*29.11.1939*இல் ஜோகூரில் பிறந்த இவர் இயற்பெயர் நாராயணன்; *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(350)*

**192.** புனிதவதி மாணிக்கம்

அறுபதுகளில் புதிய சிந்தனை ஊக்கத்தொடு பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(281)*

**193.** பூபாலன், வீ.

கோலாலம்பூரில் *16.3.1946*இல் பிறந்த இவர், ஓர் இளங்கலைப் (B.A. (Hons)) பட்டதாரியாவார்; *1962*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; நிறைய இசைப்பாடல்களும் எழுதியுள்ளார்; தொலைக்காட்சி நாடகங்களுக்கும் பாடல்கள் எழுதியுள்ளார்; மலேசிய வானொலியில் பணிபுரிகிறார்; *1981*இல் மதிப்புறு முனைவர் *(D.Litt.)* பட்டம் பெற்றார். *1994*இல் மலேசிய வானொலி ஒலியலை ஆறன் (தமிழ்ப்பகுதி) தலைவராய்ப் பதவி உயர்வு பெற்றார். *(228)*

**194.** பெரியராமு, அ.

தமிழகத்தில் உள்ள கோவிலாங்குளத்தில் *1925*இல் பிறந்தார்; *1955*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். *(545)*

**195.** பெருமாள், இரா.

சேலத்துக் கவிராயர் என்னும் பெயரிலும் எழுதிய இவரைப்பற்றிய குறிப்பை 366ஆம் பாடல் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. (3, 156, 242, 274, 311, 481)

**196.** பெருமாள், க.

*30.9.1939*இல் கோலக்குரோவில் பிறந்த இவர், *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(571)*

**197.** பெருமாள், கா.

இவரைப்பற்றிய குறிப்பை 384ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க. *(1, 71, 92, 102, 197, 240, 249, 255, 333, 400, 401, 469, 470, 625, 630)*

**198.** பெருமாள், கோவி.

சிலாங்கூர் மாநிலச் செரண்டாவில் *25.12.1941*இல் பிறந்த இவர், *1959*ஆம் ஆ்ண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; ஓவியர்; நாடக ஆசிரியர்; தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் கிழமை ஏடாய சங்கமணியில் பணிபுரிந்துவருகிறார். *(137)*

**199.** பொன்முடி

*27.11.1939*இல் தஞ்சோங் மாலிமில் பிறந்த இவர் இயற்பெயர் சுப்பிரமணியம்; *1966*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியராய்ப் பணியாற்றி *1994*இல் ஓய்வு பெற்றார். சிறுவர்களுக்கு நிறைய எழுதியுள்ளார்; 'பறவைக் கப்பல்' என்பது *1980*இல் இவர் வெளியிட்ட சிறுவர் பாடல்நூல். மேலும் இவர் ஜெயபக்திப் பதிப்பகத்தின்வழி *10* சிறுவர் கவிதை நூல்களை வெளியிட்டுள்ளார். *1994*இல் 'பொன்முடி கவிதைகள்' என்னும் நூலை வெளியிட்டுள்ளார். *(51, 218, 248, 276, 328, 344, 493, 494, 495, 602)*

**200.** பொன்னம்பலம், தை. சே. பெ.

பேரா மாநிலத்தின் நியூகொலம்பியாத் தோட்டத்தில் *21.3.1929*இல் பிறந்த இவர், நாற்பதாண்டுகளுக்கு மேலாய்க் கவிதை பாடிவருகிறார்; வானொலியில் பதின்மூன்று கவிதை நாடகங்கள் படைத்தார்; மலையகக் காவியம் பாடிக்கொண்டிருக்கிறார்; பத்துமலை முருகன், திருப்புகழ்த் திருமந்திரம் ஆகியவை இவர் வெளியிட்டுள்ள கவிதை நூல்கள். *(296, 439)*

**201.** பொன்னுசாமி, தீ. சி.

*22.12.1946*இல் புக்கிட் ரோத்தானில் பிறந்த இவர், *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; இசைப்பாடல்கள் நிறைய எழுதியுள்ளார்; பொன்பாவலர் மன்றத்தின் வாயிலாய்ப் பாவலர் பலரை உருவாக்கினார்; *1978*இல் தீப்பொறி என்னும் தலைப்பில் கவிதை நூல் ஒன்றை வெளியிட்டார். அதன் மூலம் தீப்பொறி என்னும் அடைமொழி பெற்றார். தீப்பொறியின் உள்ளூர்ப் பாடல்கள் *(1988)* இந்திய ரயில் பயணங்கள், கோம்பாக் ஆறு ஆகிய நூல்கள் வெளியிட்டுள்ளார். *(110, 163, 222, 238, 338, 356, 390, 444, 445, 446, 447)*

**202.** மகேசுவரி, ந.

*15.1.1938*இல் பிறந்தவராய இவர் புனைபெயர் மோகினி; தமிழ்ப்பள்ளி ஆசிரியையாய்ப் பணியாற்றி ஓய்வு பெற்றார்; நல்ல சிறுகதை எழுத்தாளர்;

சிறுவர்களுக்காய நெடுங்கதையும் எழுதியுள்ளார்; அவ்வப்போது கவிதைகளும் புனைந்துள்ளார்; 'தாய்மைக்கோர் தவம்' என்னும் சிறுகதைத் தொகுப்பு நூலையும் வெளியிட்டுள்ளார். *(530)*

**203.** மகேந்திரன், வே.
*1937*இல் ஈப்போவில் பிறந்த இவர், *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார். *(394, 559)*

**204.** மணிதாசன், கோவி.
எழுபதுகளில் பரவலாய் எழுதிய இவர், தொடர்ந்து அவ்வப்போது எழுதிவருகிறார்; கவியரங்குகளிலும் கலந்து பாடிவருகிறார். *(196, 342, 561)*

**205.** மணிமாறன், இரா.
*1937*இல் பிறந்த இவர், மலேசியத் திராவிடர் கழகத் தலைவர்களுள் ஒருவராய் விளங்கினார்; கொள்கைவிளக்கப் பாக்கள் நிறைய எழுதியுள்ளார்; 'மலேசியாக் கழகப் பாடல்கள்' *(1967)* என்னும் நூலையும் வெளியிட்டுள்ளார். *7.4.1979*இல் இயற்கை எய்தினார். *(422)*

**206.** மணிமாறன், எஸ். எஸ்.
கோலசிலாங்கூரில் *20.10.1949*இல் பிறந்த இவர், *1962*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(520)*

**207.** மணியரசன், சி. மு.
கெடா மாநிலத்தில் உள்ள பீடோங்கில் பிறந்த இவர் இயற்பெயர் சுப்பிரமணியம்; *1967*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். *(572)*

**208.** மதிதாசன், கவி.
தமிழ்நாட்டில் உள்ள சிக்கலில் (நாகை காயிதே மில்லத் மாவட்டம்) பிறந்த இவர் இயற்பெயர் அப்துர் ரஹீம்; *1950*இல் தொடங்கி நிறையக் கவிதைகளையும் இசைப்பாடல்களையும் பாடியுள்ளார்; கத்திக்கப்பல், (சிறுவர் பாடல்கள்), வீழ்ந்த வெள்ளிகள், சுவனத்தின் அமுதம், இனிக்கும் இசைகள், எண்ணக் குவியல் முதலாய கவிதை நூல்கள் வெளியிட்டுள்ளார். *(23, 519, 579)*

**209.** மதுராந்தகன்
*11.3.1943*இல் தெலுக் இந்தானில் பிறந்த இவர் இயற்பெயர் சந்திரன்; 'சனனி காந்த்' என்னும் புனைபெயரிலும் எழுதியுள்ளார்; *1964*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; தனிப்பாடல்களோடு குறுங்காவியங்களும் பாடியுள்ளார்; இசைப்பாடல்களும் இயற்றியுள்ளார்; கவியரங்குகளிலும் பங்குபற்றியுள்ளார். *(138, 149, 192, 201, 418, 606)*

**210.** மரியசூசை, அ.
*2.9.1934*இல் புக்கிட் கிரியோங் தோட்டத்தில் பிறந்த இவர் புனைபெயர் தமிழ்மித்திரன்; *1955*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; இசைப் பாடல்களும் எழுதியுள்ளார். *(168)*

**211.** மலர் மாணிக்கம்

*9.1.1938*இல் பிறந்த இவர், கவிவாணர் ஐ. உலகநாதன் ஊக்குவிப்பால் வளர்ந்தவர்களுள் ஒருவர்; நல்ல பேச்சாளர், எழுச்சி மிக்க பொதுத்தொண்டர், இலக்கியத் துறையில் பேரார்வம் கொண்டவர். *1956*ஆம் ஆண்டுமுதல் எழுதிவருகிறார்; மாதவி இலக்கிய மன்றத்தை நடத்தி வருபவர்களுள் தலையாயவர். *(371)*

**212.** மலைமதி சந்திரசேகரன்

இவர் பெயரால் ஒரேயொரு கவிதைமட்டுமே கிடைத்துள்ளது; இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(597)*

**213.** மலையரசன், பெ. கோ.

*3.5.1940*இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் கோவிந்தன்; பாவலர் குறிஞ்சிக் குமரன், ஆ. இராமநாதன் ஆகியோரை வழிகாட்டிகள் எனப் போற்றுபவர்; *1956*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; நிகரற்ற தலைவன், பாவாணர் பிள்ளைத்தமிழ் ஆகியவை இவர் எழுதி வெளியிட்டுள்ள நூல்கள். *(575)*

**214.** மறைமுடி வல்லத்தரசு

தமிழகத்தில் *1937*ஆம் ஆண்டு பிறந்த இவர் இயற்பெயர் செல்லையா; சுவாமி இராமதாசரிடம் முறையாய்த் தமிழ் கற்றவர்; பினாங்குச் சட்டப் பேரவை உறுப்பினராயும் ஆட்சிக்குழு உறுப்பினராயும் பணிபுரிந்தார்; சமாதான நீதிபதியாயும் (J.P.) நியமனம் பெற்றார்; *1987*ஆம் ஆண்டு காலமானார். *(48, 52)*

**215.** மனோகரன், பழ.

'மாணிக்கக் கற்கள்' என்னும் கவிதை நூலை *(1981)* வெளியிட்டுள்ள இவர், தம் இறுதிக் காலத்தில் கிள்ளானில் வாழ்ந்து, சில ஆண்டுகளுக்குமுன் இயற்கையெய்தினார். *(647)*

**216.** மாயவன்

லாபிஸ் பகுதியிலிருந்து நீண்ட காலமாய்க் கவிதை எழுதிக்கொண்டிருக்கும் இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(271)*

**217.** மாரியப்பன், ஐ.

மிகக் குறைந்த எண்ணிக்கையிலாய கவிதைகளே கிடைக்கும் இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(318)*

**218.** மாலிக் பேகம்

இந்தப் பெண்பாற் கவிஞர் பெயரால் வேறு கவிதைகள் கிட்டவில்லை; இவரைப் பற்றிய விவரங்களும் கிடைக்கவில்லை. *(180)*

**219.** மின்னல் புலவர்

சமுதாய நிலையை உணர்ந்து பாடியுள்ள இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(563)*

**220.** முகம்மது யூசுப், கே.

தமிழ்நாட்டில் உள்ள ஏம்பலில் 2.9.1940இல் பிறந்தவராய இவர், 'கேயெம்' என அறியப்பட்டவர்; பினாங்கு நால்வருள் ஒருவர்; 1954ஆம் ஆண்டில் தொடங்கி, நிறைய எழுதியவர்; பொன்னி இதழிற் பாடிய 'வளரும் இழிக்கியம்' என்னும் நையாண்டிக் கவிதை கடுமையான விமரிசனத்திற்கு உள்ளாயிற்று; நகைச்சுவை உணர்வுமிக்க கவிதைகள் எழுதுவதில் வல்லவர். (355)

**221.** முகிலரசன், கிரு.

எளிமையாயும் புதுமையாயும் கவிதை பாடும் இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. (310)

**222.** முத்தமிழன்

25.2.1941இல் தமிழகத்தில் பிறந்த இவர் இயற்பெயர் காளிமுத்து; 1958ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடியவர். தற்போது தமிழ்நாட்டில் குடியேறி வாழ்கிறார். (226)

**223.** முத்தமிழ்ச்செல்வன், மு. க. மா.

4.8.1942இல் சித்தியவானில் பிறந்த இவர் இயற்பெயர் மாணிக்கம்; 1957ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் பேரவைச் செயலாளராய்த் தொண்டாற்றியவர். (45)

**224.** முத்துமாணிக்கம்

19.9.1928இல் தமிழகத்தில் பிறந்த இவர், 1960ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; பொன்வண்டு, தேன்சிட்டு, சிங்கப்பூர்த் தெய்வங்களின் பக்திப் பாடல்கள், தெய்வத் தமிழ் இசைவிருந்து ஆகியவை இவர் வெளியிட்டுள்ள நூல்கள். (449, 450, 451, 514)

**225.** முத்துவேல், கரு.

30.4.1932இல் தமிழகத்திற் பிறந்த இவர், புலவர் அ. முத்தையனாரிடமும் சுவாமி இராமதாசரிடமும் தமிழ் பயின்றார்; 1960ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். (279)

**226.** முத்தையனார், புலவர், அ.

தமிழ்நாட்டிற் பிறந்து அங்கேயே கல்வி கற்றுப் புலவர் பட்டம் பெற்ற இவர், பீடோங்கில் வாழ்ந்து பலருக்குத் தமிழ் பயிற்றினார்; இவர் மாணவர் சிலர் இன்று நல்ல கவிஞராய் விளங்குகின்றனர்; சிறந்த இலக்கியப் பேச்சாளருமாய இவர், இந்திய தேசிய இராணுவக் கொள்கை விளக்கப் பேச்சாளராயும் விளங்கினார்; செறிவான கவிதைகள் இயற்றிய இவர் 1980இல் இயற்கை எய்தினார். (96, 616)

**227.** முருகதாசன்

15.7.1944இல் தமிழ்நாட்டில் பிறந்த இவர் இயற்பெயர் பழநி; கவிஞர் மீனவன், கவிவாணர் ஐ. உலகநாதன் ஆகியோர், தம்மை ஊக்குவித்தவர்கள் என்று நன்றியுடன் குறிப்பிடுகிறார்; 1956ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்;

'திருமுருகன் காவடிச் சிந்து' என்னும் நூலை வெளியிட்டுள்ளார்; அஃது ஒலிப்பேழையிலும் பதிவாகியுள்ளது. சிறுவர் பாடல் நூல்களும் வெளியிட்டுள்ளார். *(210, 213, 267, 466, 516)*

**228.** முருகேசு, சே. சு.

அறுபதுகளில் ஆர்வத்தொடு வெண்பாப் பாடிய இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(546)*

**229.** முருகையன், புலவர், மு.

மலேசியாவிற் பிறந்த இவர், தமிழ்நாட்டின் அண்ணாமலை பல்கலைக்கழகத்திற் புலவர் பட்டம் பெற்றார்; கவிதைகளும் சில ஆய்வுக் கட்டுரைகளும் எழுதியுள்ளார்; ஒலி நாடாவும் வெளியிட்டுள்ளார். *(640)*

**230.** முல்லைவாணன்

தமிழகத்தில் உள்ள கீழைக்கரையில் *30.7.1942*இல் பிறந்த இவர் இயற்பெயர் கலியபெருமாள்; *1961*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; தனித்தமிழ் ஆர்வலர்; தமிழருவி *(1971)*, கரும்பு, வீணை, ஊஞ்சல் *(1981)* சிறுவர் பாடநூல்கள் வெளியிட்டுள்ளார்; 'அறிவு' என்னும் தனித்தமிழ்த் திங்களிதழினை *1979*ஆம் ஆண்டுமுதல் மூன்றாண்டுகள் நடத்தியுள்ளார்; இப்போது தமிழகத்தில் குடியேறி வாழ்ந்துவரும் இவர் அச்சகம் நடத்திவருகிறார். *(20, 225, 353, 496, 569)*

**231.** முனியாண்டி, க.

*9.10.1941*இல் பாரிட்புந்தாரில் பிறந்த இவர், *1966*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; இவர் வெளியிட்டுள்ள நூலின் பெயர் 'விநாயகர் புகழ்மாலை'. *(33, 443)*

**232.** முனியாண்டி, சி.

*18.5.1947*இல் பிறந்த இவர் புனைபெயர் பெரி. சித. அரசு; தமிழ்நெறி மன்றத்துடன் நெருங்கிய தொடர்புகொண்டிருந்த நல்லாசிரியரான இவர், மாணவர்களுக்கு வழிகாட்டி வகுப்புகள் நடத்திவந்தார்; சமயத் தொண்டிலும் ஈடுபட்டிருந்தார்; முரசு. நெடுமாறனை வழிகாட்டியாய்க்கொண்டு *1972*ஆம் ஆண்டுமுதல் ஆர்வத்தொடு கவிதை எழுதிவந்தார்; *12.10.1989*இல் மாரடைப்பால் காலமானார். *(536)*

**233.** முனியாண்டி, பூ.

அவ்வப்போது கவிதைகள் எழுதிவரும் இவர், *2.6.1940*இல் பிறந்தார்; *1960*ஆம் ஆண்டுமுதல் எழுதிவருகிறார்; *1976*ஆம் ஆண்டில் 'பூக்கள்' என்னும் தலைப்பில் தம் கவிதைகளை நூலாய் வெளியிட்டுள்ளார். *(501)*

**234.** முனியாண்டி, மு.

*1938*ஆம் ஆண்டு தமிழகத்தில் பிறந்த இவர், *1954*ஆம் ஆண்டுமுதல் பாடிவருகிறார். சுவாமி இராமதாசர் மாணவர்; 'சைவமணி' என்று எல்லாராலும் அன்புடன் அழைக்கப்படும் இவரின் சைவ சமய ஈடுபாட்டை மதித்துத் தவத்திரு

குன்றக்குடி அடிகளார், 'சிவனடிச் செல்வர்' என்னும் விருது வழங்கிச் சிறப்புச்செய்தார். *(290)*

**235.** மூக்கன், மு.

ஆழ்ந்த துன்ப உணர்வை நுட்பமாய்ப் புலப்படுத்தியுள்ள இவரைப்பற்றிப் பிற விவரங்கள் கிடைக்கவில்லை. *(133)*

**236.** மோகனேசுவரி. சீ.

மலேசிய இந்தியருள் ஒருசாராரிடம் காணப்படும் சீதனக் கொடுமைபற்றி வேதனையொடு பாடியுள்ள இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(181)*

**237.** ரெங்கசாமி, அ.

*27.9.1930*இல் கோலலங்காட்டில் பிறந்த இவர், தலைமையாசிரியராய்ப் பணியாற்றி ஓய்வு பெற்றார்; *1950*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; ஆறு வில்லுப்பாட்டுகள் பாடியிருக்கிறார்; சிறுகதைகளும் நெடுங்கதைகளும் எழுதியுள்ளார்; பல நாடகங்களை அரங்கேற்றியுள்ளார்; தம் சிறுகதைகளைத் தொகுத்துக் 'காமாட்சி விளக்கு' என்னும் தலைப்பில் நூலாய் வெளியிட்டுள்ளார்; 'மயில்' கிழமை இதழில் இவர் தொடர்ச்சியாய் எழுதிய 'புதியதோர் உலகம்' சப்பானியர் கொடுங்கோலாட்சியின் அவலத்தைப் படம் பிடித்துக் காட்டும் அரியதொரு நெடுங்கதையாகும்; *1993*இல் இது நூல்வடிவம் பெற்றது. அடுத்து அக் கொடுமைக்கெல்லாம் கொடுமுடி போன்றதும் இலட்சக்கணக்கான தமிழர்களின் உயிர்குடித்ததுமான 'மரண ரயில் பாதை'யைக் (Dead Railway) களமாய்க் கொண்ட மற்றொரு புதினத்தையும் எழுதியுள்ளார்; இது, பல ஆண்டுகள் அரிதின் முயன்று நேர்காணல் மூலமாகவும் ஆங்கில, தமிழ் நூல்களிலிருந்தும் திரட்டிய வரலாற்றுக் குறிப்புகளின் அடிப்படையில் எழுதிய வரலாறு தழுவிய கற்பனைக் கதையாகும்; அப் புதினத்தையும் மயிலே தொடர்கதையாக வெளியிட்டது; மேலும் இவர், அதே கால கட்டத்தைச் சேர்ந்த இந்திய தேசிய ராணுவம் (Indian National Army) பற்றி ஆய்வு செய்து ஒரு புதினம் எழுதும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார். *(482)*

**238.** லாசரஸ், ஜி. பி.

*5.5.1935*இல் தைப்பிங்கில் பிறந்தவராய இவர், *1957*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; பள்ளிப் பாடநூல்களும் எழுதியுள்ள இவர் ஆங்கில, மலாய்மொழிப் படைப்புகளைத் தமிழாக்கம் செய்துள்ளார். *(275)*

**239.** லோகநாதன், தமிழ்மணி, க.

*8.2.1934*இல் தமிழகக் காஞ்சிபுரத்தில் பிறந்த இவர் புனைபெயர் அறிவழகன்; *1952*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியராய்ப் பணியாற்றி ஓய்வுபெற்ற இவர்; இலக்கியத்துறையில் 'தமிழ்மணி'ப் பட்டம் பெற்றுள்ளார். *(186, 521)*

**240.** வடிவேலு, எஸ். கே.

*1947*ஆம் ஆண்டு கலிடோனி தோட்டத்தில் பிறந்த இவர் புனைபெயர் மன்மதன்; சுவாமி இராமதாசர் மாணவர்; *1967*ஆம் ஆண்டுமுதல் கவிதை

எழுதிவருகிறார்; திருமுருகன் இசைமாலை, அருளொளி முருகன் பாமாலை, ஸ்ரீ மதுரைவீரன் அலங்காரப் பாமாலை ஆகியவை இவர் வெளியிட்டிருக்கும் நூல்கள். *(460)*

**241.** வடிவேலு, சி.

*23.3.1930*இல் கெடாவில் பிறந்த இவர், தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியராய்ப் பணியாற்றி ஓய்வுபெற்றவர்; மலாயாத் தமிழ்ப் பண்ணையில் மூன்றாண்டு காலம் தமிழ்ப்பண்டித வகுப்பிற் கற்றதொடு திரு. போ. பெரியசாமியிடம் ஈராண்டுகள் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கற்றுத் தம் தகுதியை உயர்த்திக்கொண்டார்; *1949*ஆம் ஆண்டில் எழுதத்தொடங்கினார்; தமிழ்நேசன் கதைவகுப்பால் *(1950)* உயர்வடைந்தார்; சிறுகதைச் சிற்பியாய இவர், கவிதைகளும் கட்டுரைகளும் நிறைய எழுதியுள்ளார்; *1974* முதல் *1980* வரை மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராய் விளங்கிப் பெருந்தொண்டாற்றினார்; சங்கச் சார்பில் அரங்கேறிய கவிதைகள் என்னும் நூலை வெளிக்கொணரப் பெரிதும் பாடுபட்டார்; தம் சொந்தப் படைப்புகளாய வள்ளுவரின் காதலி *(1965)*, இருண்ட உலகம் *(1970)*, புதிய பாதை *(1981)* ஆகிய சிறுகதைத் தொகுப்புகளை வெளியிட்டுள்ளார்; சிலகாலம் பக்கவாத நோயினால் துன்புற்றார்; *6.4.1992*இல் காலமானார். இவர் பணியை நினைவுகூர்ந்து இவர் குடும்பத்தினர் *1993*இல் ஒரு நினைவு மலரை வெளியிட்டுள்ளனர். *(560)*

**242.** வளவன்வயல் முத்து

*28.3.1932*இல் தமிழக வளவன்வயலில் பிறந்த இவர் இயற்பெயர் முத்துவயிரவன்; *1974*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; சிறுகதை, நாடகம் எழுதுவதிலும் ஆர்வம்கொண்டவர். *(423)*

**243.** வளவை வேலவன்

இயற்கையை வாழ்க்கையொடு இணைத்துப் பாடும் இவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை. *(614)*

**244.** வாசி பாண்டியன்

*31.8.1933*இல் காப்பாரில் பிறந்த இவர் இயற்பெயர் முனியாண்டி; *1951*ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார்; உரிமைப்போர், கண்ணீர்த் துளிகள் முதலாய நாடகநூல்களையும் வெளியிட்டுள்ளார். *(257)*

**245.** வாசுகி மணாளன்

கயவர்களைக் கனன்று பாடும் இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(229)*

**246.** விமலாதேவி, கோ.

போதைப் பித்தர் நிலையைப் படம்பிடித்துக் காட்டியுள்ள இவரைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை. *(227)*

**247.** வீரப்பன், இர. ந.

8.6.1930இல் ஈழத்தில் உள்ள கண்டியில் பிறந்த இவர், 1967ஆம் ஆண்டுமுதல் கதை, கட்டுரை, உருவகக் கதை எழுதிவருகிறார்; அவ்வப்போது கவிதைகளும் எழுதியுள்ளார்; தமிழ் இலக்கியக் கழகத்தின் (1970) நிறுவனர்களுள் ஒருவர்; தமிழ்ப்பள்ளிகளின் வளர்ச்சியை நோக்கமாய்க் கொண்டு நான்கு தமிழ்க்கல்வி வளர்ச்சி மாநாடுகளை அதன் சார்பில் நடத்தியுள்ளார்; உலகத் தமிழ்ப்பண்பாட்டு இயக்கத் தலைவராய் 1977முதல் விளங்குகிறார்; சில உலக மாநாடுகளையும் அதன் தொடர்பாய் நடத்தியுள்ளார்; திறனாய்வுக் கருத்தரங்குகளும் நடத்தியுள்ளார்; மலாய்-தமிழ்-ஆங்கில அகராதி, உருவகக் கதைகள், கானல்வரி, இலக்கிய இதயம், உலகத் தமிழர், மலேசியத் தமிழர், மலாய்மொழியில் தமிழ் மரபுகள் முதலாய பல நூல்கள் வெளியிட்டுள்ளார்; தம் 'உலகத் தமிழர்' நூலுக்குத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகப் பரிசையும் (1986), அன்பானந்தன் இலக்கியப் பரிசையும் பெற்றுள்ளார்; உலகநாடுகள் பலவற்றுக்குச் சுற்றுலாச் சென்றுவந்துள்ளார். 1996இல் மதிப்புறு முனைவர் (D.Litt) பட்டம் பெற்றார். (266)

**248.** வீரமான்

வீ. மாரியப்பன் என்னும் இயற்பெயருடைய இவர், கோடியக்கரையில் (தமிழகம்) 2.7.1942இல் பிறந்தார்; 1960ஆம் ஆண்டுமுதல் பாடிவருகிறார்; பல கவியரங்குகளில் பங்கேற்றுள்ளார். மலேசிய, சிங்கை ஏடுகள் பலவற்றிலும் எழுதியுள்ளார். வெள்ளிநிலவு (1979), வீரமான் கவிதைகள் (1994) ஆகிய நூல்கள் வெளியிட்டுள்ளார். (83, 148, 254, 463)

**249.** வீரையா, எஸ்.

14.1.1945இல் காப்பாரில் பிறந்த இவர் புனைபெயர் கவிதைப் பித்தன். 1967ஆம் ஆண்டுமுதல் கவிதை எழுதிவருகிறார். சி. வேலுசுவாமி இப்பெயரில் நிறைய எழுதியுள்ளார். (77)

**250.** வேரா

இரண்டாம் உலகப்போருக்குமுன் தோன்றிய 'தமிழ்க்கொடி' மாத இதழில் இவர் நிறையப் பாடியுள்ளார்; இவரைப்பற்றி வேறு செய்திகள் கிடைக்கவில்லை; இவருடைய இயற்பெயரும் தெரியவில்லை; அதே இதழில் பாடியுள்ள கவிஞர் வே. இராமசாமியும் இவரும் ஒருவராய் இருத்தல் கூடுமோ என எண்ணத் தோன்றுகின்றது. (554)

**251.** வேலுசுவாமி, சி.

2.4.1927இல் ரந்தாவ் என்னும் சிற்றூரில் பிறந்த இவர், தமிழ்த் தொடக்கப்பள்ளித் தலைமையாசிரியராய்ப் பணியாற்றி ஓய்வுபெற்றார்; 1948ஆம் ஆண்டுமுதல் எழுதிவரும் இவருடைய புனைபெயர்கள் சந்திரன், குமரன், கவிதைப்பித்தன் என்பன. மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தொடக்க காலத்திலேயே (1958) செயலாளராய்ப் பொறுப்பேற்றார்; இடையில் (மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்) 1974முதல் 1980வரை அப் பொறுப்பை மீண்டும் வகித்தார். அக் காலகட்டத்தில் 'மலேசியாவில் தமிழ் எழுத்தாளர்கள்' என்னும் நூலைத் தொகுத்தளித்தார் (1967). 'அரங்கேறிய கவிதைகள்' நூலை வடிவேலுவுடன்

இணைந்து தொகுத்தளித்தார் (1977); தொடக்க, இடைநிலைப் பள்ளிகளுக்காய பல பாடநூல் வரிசைகள் எழுதியுள்ளார்; கவிதைப்பித்தன் கவிதைகள், பாட்டுப் பாடலாம், அருள்புரிவாய் முதலாய கவிதை நூல்களொடு, உரைநடை நூல்களும் வெளியிட்டுள்ளார்; இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாய் மாணவர்க்கான 'திருமகள்' மாத இதழையும் பத்தாண்டுகளுக்கு மேலாய்ப் 'பக்தி' இதழையும் நடத்திவருகிறார். *(490, 491, 492, 541)*

**252.** வேலுச்சாமி, கரு.

வளையனேந்தல் (தமிழகம்) என்னும் ஊரில் *1943*இல் பிறந்த இவர், *1960*ஆம் ஆண்டுமுதல் கவிதை பாடிவருகிறார்; 'புயல்' *(1978)* இவர் வெளியிட்ட கவிதை நூலின் பெயர். அந் நூல் இவருக்குக் 'கவிப்புயல்' என்னும் சிறப்பைச் சேர்த்தது. 'அஸ்மி கந்தசாமி' என்பாரைப் பாட்டுடைத் தலைவராய்க்கொண்டு பிள்ளைத்தமிழ் நூல் பாடியுள்ளார்; டத்தோ ஸ்ரீ டாக்டர் ச. சாமிவேலுவைப் பாட்டுடைத் தலைவராய்க் கொண்டு 'டத்தோ ஸ்ரீ டாக்டர் ச. சாமிவேலு அலங்காரப் பஞ்சகமும் பிள்ளைத் தமிழும்" என்னும் நூல் வெளியிட்டுள்ளார் *(1996)*. மலேசியாவில் உருவான 'நான் ஒரு மலேசியன்' என்னும் திரைப்படத்திற்கு நான்கு பாடல்கள் எழுதியுள்ளார். *(73, 85, 142, 288, 298, 324, 419, 420, 421, 550, 583, 589, 634)*

**253.** ஜைனுத்தீன், பட்டர்வொர்த், எஸ். எம்.

*10.12.1941*இல் பிறையில் பிறந்த இவர், பி.எஸ்சி; பி.எட். பட்டங்கள் பெற்றவர், *1950*ஆம் ஆண்டுமுதல் தமிழ்முரசு மாணவர் மணிமன்ற மலரில் எழுதத் தொடங்கி இன்றுவரை சோர்வில்லாமல் கவிதை எழுதிவருகிறார்; 'இதயத் தாமரை' என்னும் கவிதை நூலொடு உரைநடை நூல்கள் சிலவும் எழுதியுள்ளார்; இவர் மதிப்புறு முனைவர் *(D.Litt.)* பட்டம் பெற்றுள்ளார். *(573)*

**254.** ஜோசப் செல்வம்

மலாக்கா மாநிலத்தில் உள்ள மெர்லிமோவில் *6.12.1940*இல் பிறந்த இவர், தமிழ்ப்பள்ளித் தலைமையாசிரியர்; மலாய்மொழியில் புலமை பெற்றவர்; தமிழ்க் கவிதைகளையும் தமிழ்க் கவிஞர்களையும்பற்றி மலாய்மொழியில் அறிமுகம் செய்தார்; தமிழ்க் கவிதைகளொடு, மலாய்மொழியிலும் கவிதைபாடும் திறனுடையவர்; சொந்தப் படையல்களாய்க் கவிதை, உரைநடை நூல்களொடு மொழிபெயர்ப்பு நூல்களையும் வெளியிட்டுள்ளார். *(62, 524)*

**255.** ஹாஜாமொய்தீன், ஏ.

செல்வன் கலைராஜா என்பது இவர் புனைபெயர்; *1947*இல் பிறந்தார்; *1960*ஆம் ஆண்டில் கவிதை பாடத்தொடங்கினார். *(69)*

**256.** ஹுசைன், ஜே. எம்.

தமிழ்நாட்டிலுள்ள இரவாஞ்சேரியில் பிறந்தவராய இவர், ஜேயெம், ஜே. எம். ஹுசைன் ஆகிய பெயர்களில் கதைகள், கட்டுரைகள் எழுதினார்; வடமலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்க நிறுவனர்களுள் ஒருவர்; 'இக்பால் யார்?' என்னும் தலைப்பில் இவர் எழுதிய நூல், புகழ்பெற்றது; சில கவிதைகளும் எழுதியுள்ளார். *(60)*

# 2. பாடல்களின் பின்புலம்

## அ. குறிப்புரைகள்

(எண் பாடல் எண்)

**1.** இது மலேசிய உயர்கல்விச் சான்றிதழ்த் (S.T.P.M.) தமிழ் இலக்கியப் பாடநூலின் செய்யுட்டொகுதியில் இடம்பெற்ற பாடலாகும்.

**3.** தெலுக் இந்தானில் (தெலுக் ஆன்சன்) 19, 20, 21.4.1968இல் நடந்த தமிழர் மாநாட்டுக் கவிதைப் போட்டியில் முதற்பரிசு பெற்றது.

**8.** மலேசியாவின் அழகு வாய்ந்த கடற்கரைகளில் ஒன்று போர்ட் டிக்சன். அதனைப்பற்றிய பாடல் இது.

**17.** சிறிய பலாப்பழத்தைப் போன்ற அமைப்பில் உள்ள இதன் ஓட்டின்மேல் மிகக் கூரிய வலிய முள் நிறைந்திருக்கும்; வேறு எப்பழத்தொடும் ஒப்பிட முடியாத சுவையும் மணமும் கொண்ட இதன் சுளைகள், வெண்ணெய் திரண்டது போன்ற முட்டை வடிவிலானவை. டூரி - முள். டுரியான் - டொரியான் - முள்ளம்பழம். மலாய்மொழிச் சொல்.

**33.** பாடல்களின் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியில் காண்க.

**36.** 10.9.1973இல் நடந்த கோலாலம்பூர் அருள்மிகு மகாமாரியம்மன் கோயில் குடமுழுக்கு விழா, அரச கோபுரக் கவிதைப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்றது. விரிவைப் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியில் காண்க.

**44,45.** பாடல்களின் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியில் காண்க.

**65.** பால்மரங்கள் வரிசை வரிசையாய் நடப்படும்; எக்கோணத்திலிருந்து நோக்கினும் நேர் வரிசையாய்த் தோன்றும்; மரப்பட்டையைச் சீவினால் வெண்ணிறப் பால் வடியும். ரம்புத்தான் : தோல் நீக்காத கொட்டைப்பாக்கு அளவிலான பழம். கொத்துக் கொத்தாய்க் காய்க்கும். இப் பழத்தோலில் 3 செ.மீ. அளவில் மயிர்போல் அடர்ந்திருக்கும். நிறம் சிவப்பு. ரம்புத்(ட்) - மயிர், முடி. மலாய்மொழிச்சொல். ரம்புத்தான் - முடியம்பழம். பரவலாய் இதனை மயிராம் பழம் என்பர். 'மங்குஸ்தீன்' : நாரத்தம்பழ அளவில் கத்தரிப்பூ நிறத்தில் ஓடுடைய ஒரு பழம். உள்ளே சுளைகள் வெண்மையாய் இருக்கும்.

**66.** பல்லினங்கள் வாழும் மலாயா நாடு, (அப்போதைய சிங்கப்பூர் உட்பட) விடுதலை பெறுதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே, வேற்றுமையில் ஒற்றுமை காணும் வண்ணம் அனைவரும் ஓரினமாய் ஒன்றுபடவேண்டுமென்ற உணர்வொடு பாடியது. இப் பாடல் சிங்கை வானொலியில் ஒலியேறியது (21.9.1952)

**68.** மலேசியாவைப் பெண்ணாக உருவகப்படுத்தி ஐந்திணை நெறிகளை உட்புகுத்திப் பாடப்பட்ட பாடல்.

**70.** 'மலைநாடு' வார இதழ் மெர்டேக்கா (விடுதலைநாள்) எழுத்துப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்ற கவிதை.

**73.** ஒட்டுப்பால் : சீவப்பட்ட மரத்திலிருந்து கசிந்து வடியும் பால் மங்கில் திரளும். அது சேகரித்துத் திரட்டப்படும். அதுவே ரப்பர்ப்பால். திரட்டப்பட்ட பின்னரும் சீவப்பட்ட இடத்திலிருந்து பால் கசியும். அது மங்கிலும் வெட்டுக்கோட்டிலும் தரையிலும் உறைந் திருக்கும். அஃது இடம் நோக்கி ஒட்டுப்பால், மங்குப் பால், மண்பால் எனப்படும்.

**74.** 16.8.1963இல் மலாயா, சிங்கப்பூர், வடபோர்னியோ (இப்போது சபா), சரவா ஆகிய நாடுகள் ஒன்றிணைந்து மலேசியா உருவானபோது பாடியது.

**79, 80, 81.** மலாயா, சிங்கப்பூர், போர்னியோ (இப்போது சபா), சரவா ஆகிய நாடுகள் ஒன்றிணைந்த 'மலேசியா' உருவாக்கத்தை (1963) இந்தோனேசிய அதிபராயிருந்த சுகர்ணோ கடுமையாக எதிர்த்தார். அந்த எதிர்ப்பை முறியடிக்கத் தமிழ்க் கவிஞர்கள் நிறையப் போர்ப்பரணி பாடினர். அப் பாடல்களுள் சில இவை.

**82.** இந்தோனேசிய நாட்டின் எதிர்ப்பைச் சமாளித்து மலாயா, சிங்கப்பூர், வடபோர்னியோ (இப்போது சபா), சரவா ஆகிய நாடுகள் இணைந்து மலேசியாவை உருவாக்கிய காலை, சிங்கையில் ஏற்பட்ட இனக்கலவரம் குறித்து வருந்தியும், நிலைமை சீரடைய விழைந்தும் கவிஞர் பலர் பாடினர். அப் பாடல்களுள் ஒன்று இது.

**83, 84, 85.** "மலேசியாவில், தமிழ்ப்பள்ளிகள் தேவையில்லை; தேசியமொழிப் பள்ளிகளில் கட்டாயப் பாடமாய்த் தமிழ் ஒரு பாடமாகமட்டும் இருந்தால் போதும்" என்று சிலர் கருத்துரைத்தனர்; மாநாடு கூட்டி முடிவெடுத்தனர் (1968). பின்னர்ச் சிறிது காலம் கழித்து ஒரு தரப்பினர் '3ஆம் வகுப்புவரை தமிழ் போதும் பின்னர் அஃது ஒரு பாடம் என்னும் அளவில் தொடரலாம்' என்றனர்; மாநாடு கூட்டினர். 1974 அதனை மறுத்து இயற்றப்பட்ட கவிதைகள் இவை. மேல் விவரங்களைக் கவிதைக் கொடை - சிறப்பு மலர்கள் பகுதியில் காண்க.

**86.** தமிழ்ப்பள்ளிகளில் பயிலும் மாணவர்க்குப் பல்வேறு வழிகளில் உதவும் நோக்கில் 'தமிழ்ப்பள்ளி மாணவர் உதவிநிதி' தொடங்கப்படவேண்டுமென்று கருத்துரைத்துத் தம் முதல் கொடையாக (501.00) ஐநூற்றொரு வெள்ளி தந்து அதனைத் தொடக்கியும் வைத்தவர் பாச்சா. இவர் முழுப்பெயர் முகம்மது பாச்சா. 1937ஆம் ஆண்டு தமிழகத்தில் பிறந்தவராய இவர், 1952இல் மலாயாவிற்கு வந்தார். 1974முதல் 1985வரை தமிழ்ப்பள்ளிகளில் பெற்றோர் - ஆசிரியர் சங்கத் தலைவராய்த் தொண்டாற்றினார். தமிழ்ப்பள்ளிகளில், மூன்றாம் வகுப்பிற்குமேல் தமிழ்மொழிப் பாடத்தைத் தவிர மற்ற எல்லாப் பாடங்களும் தேசிய மொழியிலேயே இருக்கலாம் என்று சிலர் கொண்டுவந்த திட்டத்தால் தமிழ்ப்பள்ளிகளின் தோற்றமே மாற்றங்கண்டுவிடுமோ என்று சமுதாயம்

கலங்கிய நேரத்தில், தமிழ்ப்பள்ளிகளுக்கு ஊக்கம் நல்க இப்படியோர் அறக் கட்டளையைத் தொடங்கி நம்பிக்கை ஊட்டிய இவர் கொடைமனத்தையும், தமிழ் உணர்வையும் போற்றும் வண்ணம் இவருக்குத் 'தமிழ்க் காவலர்' என்னும் விருது வழங்கப்பட்டது.

**90,91.** பாடல்களின் பின்புலம் - நிறுவனங்கள் பகுதியில் காண்க.

**93.** 1966இல் உலகில் முதன்முதலாக, உலகத் தமிழாராய்ச்சி மாநாடு கோலாலம்பூரில் நடைபெற்றது. அதனை வாழ்த்திப் பாடிய பாடல்.

**94, 95.** அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலு தலைமையில் 1987இல் மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நடந்தேறிய 6ஆம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டை வாழ்த்திப் பாடிய பாடல்கள்.

**103.** மலாயாப் பல்கலைக்கழகத்திற் பிறதுறை மாணவர்கள் தமிழையும் (தமிழ்மொழி வாயிலாகவே) ஒரு பாடமாக எடுக்கப் பல்கலைக்கழகம் தடைவிதித்தபோது பாடப்பட்ட கவிதை.

**104.** எழுத்திலும் பேச்சிலும் பிழையற்ற தமிழ் கற்கவும் கற்பிக்கப்படவும் வேண்டுமென வாழ்நாள் முழுதும் போராடிய இவர், விடுதலைக்கு முந்திய தமிழ் எழுத்தாளர் நிலைகுறித்தும் தமிழாசிரியர் தரம்குறித்தும் தமிழ்க் கல்வியின் நிலைகுறித்தும் வருந்திப் பாடியது. 'பட்டு, கொண்டு, விட்ட' முதலாய பின்னொட்டை இவர் கடுமையாக எதிர்த்தார். 'இந்தச் சொற்களால் தமிழ்மொழியின் இயற்கை அழகு குன்றிவிட்டது' என்றே கருதினார். இதுகுறித்து இவர் எழுதி வெளியிட்ட பேசத் தெரியுமா? ஆரியப் புல்லுருவி ஆகிய நூல்கள் மிக்க புகழ் பெற்றவை.

**108.** கவிதைக் கொடை - சிறப்பு மலர்கள் பகுதியில் காண்க.

**110.** 1987ஆம் ஆண்டில் கோலாலம்பூரில் உள்ள 'ஹாலிடே இன்' (Holiday Inn) விடுதி மாநாட்டு மண்டபத்தில், இர. ந. வீரப்பன் தலைமையில் இயங்கும் உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம் நடத்திய 4ஆம் உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாட்டில், புலவர் ப. மு. அன்வர் தலைமையில் நடந்த கவியரங்கில் பாடப்பெற்ற கவிதையின் ஒரு பகுதி.

**113.** பாடல்களின் பின்புலம் - நிறுவனங்கள் பகுதியிற் காண்க.

**115,132.** 1870களில் தென்னாட்டிலிருந்து - குறிப்பாய்த் தமிழ்நாட்டிலிருந்து தமிழர், பேரளவு மலாயா நாட்டுக்கு ஒப்பந்தக் கூலிகளாய் அழைத்துவரப்பட்டனர்; ஒப்பந்தம் செய்தவர்கள் பல பொய்களைக் கூறி ஏமாற்றி அழைத்துவந்தனர். இங்கு வந்த பின்னரே மக்கள் இதனை அறியத் தொடங்கினர். கண்காணிகளின் துரோகங்களும் கணக்கர் - எழுத்தர்களின் (கிராணி) களியாட்டங்களும் மக்களைப் பெரும் துன்பத்திலாழ்த்தின. வீட்டுவசதியின்மை, போதிய பாதுகாப்பின்மை, விலங்குகளின் இடையூறு, சுகாதாரக் கேடு முதலாயன தொழிலாளர்களை வாட்டிவதைத்தன. பின்னர் ஜப்பானியர் ஆட்சியிலும்

தொழிலாளர் எண்ணற்ற தொல்லைகளையே அனுபவித்தனர். அக் காலத்து அவலங்களைத் தோட்டப்புறப் பாடல்களாக அவ்வப்போது பாடியுள்ளனர். அவற்றுள் பல காணாதொழிந்தன. கைக்குக் கிடைத்த சில பாடல்களே இங்குத் தரப்பட்டுள்ளன.

**128.** எம்டன் குண்டு : 128ஆம் பாடலின் நான்காம் கண்ணியில் இடம்பெற்றுள்ள 'எம்டன்' குண்டுபற்றிய செய்தியை நோக்க இப் பாடல் முதலாம் உலகப்போர்க் காலத்தைச் (1914) சேர்ந்தது எனக் கருதத் தோன்றுகின்றது. 1914ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 22ஆம் நாள் சென்னைச் செயின் ஜார்ஜ் கோட்டையைத் தாக்கிய ஜெர்மானிய நீர்மூழ்கிக் கப்பலின் பெயர் 'எம்டன்'. எம்டன் நீர்மூழ்கிக் கப்பலின் தலைமை ஆணையர் (Commander) வான் முல்லர்; அதன் தலைமைப் பொறியாளரும் இரண்டாம் ஆணையரும் டாக்டர் செண்பகராமன்.

ஆங்கில அரசை அதிரச் செய்த ஆற்றல்மிக்க எம்டன் நீர்மூழ்கிக் கப்பலும் அது வீசிய குண்டும் தமிழ்நாட்டு மக்களை வியப்பில் ஆழ்த்தின. ஆதலின் அசகாய சூரன், கெட்டிக்காரன், தந்திரசாமர்த்தியன் முதலாயோரைக் குறிக்க 'எம்டன்' என்னும் சொல்லை இன்றளவும் சிற்றூர்ப்புற மக்கள் பயன்படுத்துகின்றனர். 'வட்டார வழக்குச் சொல் அகராதி' தொகுத்த கி. ராஜநாராயணன் இச் சொல்லுக்கான விளக்கத்தையும் (ப. 47) சேர்த்துள்ளார்.

குறிப்பு : டக்டர் செண்பகராமன் தொடர்பாய மேல்விவரங்களுக்கு 277ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**132.** சயாமியக் காட்டில் சப்பானியர் கெடுபிடியில் சிக்குண்டு தவித்த யாரோ ஒரு பாட்டாளிமகன் வடித்த கண்ணீர்ப் பாடல் இது. குவாங் தோட்டத்திலிருந்து மரண ரயில் பாதை போடச் சென்று எப்படியோ உயிர்பிழைத்துத் திரும்பிய பெரியவர் எஸ். இராமசாமிக் கங்காணி நினைவிலிருந்து வெளிப்பட்ட பாடல் இது. 'மரண ரயில்' பாதை தொடர்பாய மேல்விவரங்களுக்கு 135ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**135.** இரண்டாம் உலகப்போரின்போது மலாயாவிலிருந்து பல்லாயிரக்கணக்கில் தமிழர் சயாமுக்கு இருப்புப்பாதை அமைக்கக் கட்டாயமாக இழுத்துச் செல்லப்பட்டனர். அப் பணியில் ஈடுபட்டபோது ஓய்வு ஒழிவற்ற கடும் உழைப்பாலும் நோயாலும் நச்சுத் தண்ணீராலும் சப்பானியரின் விலங்கினும் கொடிய கெடுபிடியாலும் மிகப் பெரும் பான்மையினர் உயிரிழந்தனர். ஜப்பானியர் ஆட்சி முடிவுற்றபின் 60 ஆயிரம் தமிழர் கதி என்னவாயிற்று என்றே தெரியவில்லை என்று டாக்டர் கர்னியால் சிங் சாந்து குறிப்பிடுகிறார். அளந்துரைக்க இயலாத உயிரிழப்பு, கற்பனை செய்துபார்க்க இயலாக் கொடுமைகளுக்கெல்லாம் காரணமாய் இருந்த அந்த இருப்புப் பாதையை 'டெத் ரயில்வே' (Death Railway - மரண ரயில்வே) என்று வரலாறு வருணிக்கிறது. இந்தக் கொடிய வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு, தஞ்சோங் மாலிம் சிறுகதைச் செல்வர் ஆர். சண்முகம் 'சயாம் மரண ரயில்' என்னும் நெடுங்கதை (Novel) எழுதியுள்ளார். அதனை உமா பதிப்பகம் வெளியிட்டுள்ளது (1992). இதே கருப்பொருளில் அ. ரெங்கசாமி எழுதிய 'நினைவுச் சின்னம்' என்னும் நெடுங்கதையை 'மயில்' தொடர்கதையாக வெளியிட்டது.

**139, 151.** குடியுரிமை பெறாத மக்களுக்கு அரசாங்கம் சிவப்புநிற அடையாள அட்டையை வழங்கியது. அதனைப் பெற்றவர்கள் உரிமையிழந்தவர் ஆவர்; அரசு துறைகளிலோ தனியார் துறைகளிலோ வேலை செய்ய இயலாது. அவர்கள் வேலை இணக்கச் சீட்டுப் (Work Per-

mit) பெறுவதிலும் தொடக்கத்தில் பெரும் நெருக்கடி இருந்தது. வழங்கப்பெற்ற இணக்கச் சீட்டும் மூன்று மாதத்திற்கே; பின்னர்ப் புதுப்பிக்க இயலாது என்ற குறிப்பும் அதில் இருந்தது. இனி வேலை கிட்டாது என்னும் அச்சத்தால் பல்லாயிரக்கணக்கான தொழிலாளர் கண்ணீர் கம்பலையுடன் தமிழகம் திரும்பினர். அக் கொடுமைகளை யெல்லாம் கண்டு மனம் நொந்து பாடிய பாடல் இது. (1992ஆம் ஆண்டில் செய்யப்பட்ட சட்டத் திருத்தத்தின்படி, சிவப்பு அடையாள அட்டை வைத்திருப்போர் தனியார் துறையில் வேலை செய்யலாம்; வேலை இணக்கச் சீட்டுப் பெறத் தேவையில்லை).

**141.** மலேசியாவில் நெடுஞ்சாலை அமைப்புப் பணிகளில் தங்கள் கண்ணீரையும் செந்நீரையும் சிந்தி உழைத்து நாட்டை மேம்படுத்திய தமிழர்களுள் பலர் உரிய காலத்தில் குடியுரிமை பெறாததால் உரிமை இழந்தவர்களாய்க் கையற்றுக் கலங்கிய போது நொந்து பாடிய பாடல்.

**145.** பாடல் 139 ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**147.** மலாயாவில் 1948ஆம் ஆண்டில் மக்களுக்கு அடையாள அட்டை (Identity Card) வழங்குமுறை நடப்புக்கு வந்தது. விடுதலை பெற்ற மலாயாவில் 1959ஆம் ஆண்டில் பிளாஸ்டிக் அட்டைக்கு மாற்றப்பட்ட போது, குடியுரிமை பெற்ற மக்களுக்கு நீல அட்டையென்றும், குடியுரிமை பெறாத ஆனால் நிலையான வாழுரிமை பெற்றோர்க்குச் சிவப்பு அட்டையென்றும் வேறுபடுத்தப்பட்டது. (1992இல் சிவப்பு, நீலநிற அடையாள அட்டைகளுக்கு மாற்றாகப் புதிய அடையாள அட்டை அறிமுகப்படுத்தப்பட்டது.) 1970ஆம் ஆண்டு சிவப்பு அட்டை வைத்திருந்தோர் (நிலைத்து வாழும் உரிமை பெற்றவர்) வேலை இணக்கச் சீட்டுப் பெறவேண்டும் என்னும் சட்டம் நடப்புக்கு வந்தபோது, இலட்சக் கணக்கான தமிழர் வேலையிழந்து அவதியுற்றனர்; 30 ஆயிரத்திற்கு மேற்பட்டோர் தங்கள் மூதாதையர் நாட்டுக்கே திரும்பிச் சென்றனர் என்று வரலாற்றாசிரியர் குறிக்கின்றனர். அந்த அவலம் குறித்த பாடல் இது.

**152.** தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத் தேசியத் தலைவர் எஸ். பி. எஸ். நாதனுக்கும் தேசியப் பொதுச் செயலாளர் டாக்டர் பி. பி. நாராயணனுக்கும் இடையில் பதவிச்சண்டை மூண்டபோது மனம் வருந்திப் பாடியது.

**159.** விடுதலைபெற்ற நாட்டிலிருந்து படிப்படியாய் வெளியேறிய வெள்ளைக்கார முதலாளிகள் விற்றுவிட்டுச் சென்ற பெரிய தோட்டங்களை (1958) வாங்கித் துண்டுபோட்டு விற்றுப் பணம் சேர்த்தனர் பணவெறிபிடித்த முதலாளிகள் சிலர். இதனால் தோட்டத்தையே நம்பியிருந்த ஆயிரக்கணக்கான உழைப்பாளர் வேலையிழந்து நடுத்தெருவிற்கு வந்தனர்; பலர் பிச்சை எடுக்கும் நிலைக்கு ஆளாயினர். அந்த அவல உணர்வை இப் பாடல் வெளிப்படுத்துகிறது. சமுதாயத்தை உருக்குலைத்த அந்தத் தோட்டத் துண்டாடலின் கொடுமையைத் தடுத்து நிறுத்தும்படி சமுதாய இயக்கங்கள் குரல் எழுப்பின; எதிர்க்கட்சிகள் நாடாளுமன்றத்தில் முழங்கின. அமைச்சரவையிலிருந்த அமைச்சர்கள் துன் சம்பந்தன், டான்ஸ்ரீ மாணிக்கவாசகம் இருவரும் பெருமுயற்சி மேற்கொண்டனர். உண்மை நிலையை உணர்ந்த அரசு தோட்டத் துண்டாடல் தடைச் சட்டத்தை நிறைவேற்றியது (1972).

**161,162.** ஜோகூர்-பகாங் எல்லையில் உள்ள பெல்டா நிலத் தோட்டங்களில் ஒன்று செலாஞ்சார் அம்பாட். அங்குக் குத்தகைத் தொழிலாளர்களாய் வேலைக்குச் சென்றவர்கள் பெரும்பாலும் தமிழரே. சிறுபான்மை சீன மலாய் இனத்தவரும் அடங்குவர். குத்தகைத் தொழிலாளர்களை அழைத்துச் சென்ற குத்தகையாளராகிய கிருஷ்ணன் என்பவர் அந்தத் தொழிலாளர்களை அடிமைகளாக, மிகவும் கேவலமான முறையில் நடத்தினார்; குண்டர்களின் துணையொடு வெளியுலகத் தொடர்பு ஏற்படாதவாறு பார்த்துக்கொண்டார்; தொழிலாளர் நலச் சட்டப்படியான எத்தகைய வசதியும் செய்து தாராமல் குடிசைகளிலும் விலங்குகளுக்கிடையிலும் அவர்களைக் குடியமர்த்தியிருந்தார். அவர்கள் செய்த சிறுசிறு தவறுகளுக்கெல்லாம் நாகரிகச் சமுதாயம் வெட்கித் தலைகுனியத்தக்க தண்டனைகளை வழங்கி, பழைய ஜப்பானிய ஆட்சிக்காலக் கொடுமைகளை நிலைநாட்டிக்கொண்டிருந்தார். இந் நிலையில் அங்கிருந்து தப்பிக்க முயன்ற தொழிலாளர்கள் குண்டர்களால் கண்டுபிடிக்கப்பட்டுக் கொடூரமாய்த் தாக்கப்பட்டனர். எப்படியோ அங்கிருந்து தப்பி வந்த லட்சுமி என்னும் பெண் தந்த செய்தியின் அடிப்படையில் அரசாங்கக் காவல்துறையும் மலேசிய இந்தியர் காங்கிரஸ் தலைவர் அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலுவும், துணைத்தலைவர் துணையமைச்சர் டத்தோ சி. சுப்பிரமணியமும் தலையிட்டுத் தொழிலாளர்களுக்கு விடுதலை பெற்றுத்தந்து, அவர்களை வேறு பாதுகாப்பான இடத்தில் மறுகுடியேற்றம் செய்தனர். மானஉணர்வு மிக்க டத்தோஸ்ரீ ச. சாமிவேலு முயற்சிக்கு அரசாங்கம் முழுமையான ஒத்துழைப்புத் தந்தது. குற்றம் சாட்டப்பட்ட கிருஷ்ணனை விசாரித்த நீதிமன்றம் தண்டித்தது.

பெல்டா நிலத்திட்டம் (Federal Land Development Authority - FELDA): இஃது அரசாங்க நில மேம்பாட்டுத் திட்டம். தரிசு நிலங்களை மக்களுக்களித்து அதனை அவர்களாகவே பண்படுத்தி வேளாண்மையை மேம்படுத்தப் பண உதவியும் செய்தது அரசு. குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னர் அந் நிலமும் வீடும் மக்களுக்கே சொந்தமாகும். மிகப் பலர் இத் திட்டத்தின்வழிப் பயன்பெற்று வாழ்கின்றனர். இந்தப் பெல்டா நிலத் திட்டத்திற்காக மலேசிய அரசு யுனெஸ்கோவிடமிருந்து பரிசும் பெற்றிருக்கிறது.

**175.** மலேசிய உயர்கல்விச் சான்றிதழ்ப் பாடநூலில் இந்தியர் பிறப்புப்பற்றி மிகத் தாழ்வாகக் குறிக்கப்பட்டிருந்ததைக் கண்டித்து இந்தியரிடையே கிளர்ச்சி தலைதூக்கியபோது பாடப்பெற்ற பாடல் இது. கல்வி அமைச்சுத் தலையிட்டு அப் பகுதியை நூலிலிருந்து நீக்க ஆணை பிறப்பித்தது.

**189.** இப் பாடல், ஒரு தோட்டப்புறப் பெண்ணின் ஒருநாள் வாழ்க்கை நிகழ்ச்சிகளை நிரல்படத் தொகுத்துக் காட்டுகிறது.

“மெல்லக் குழந்தைகளை மேற்பார்க்கும் அம்மையிடம்
துள்ளி எடுத்தேகித் தேர்வுசொல்லி விட்டதற்பின்”

தோட்டப்புறங்களில் வேலைசெய்யும் தாய்மார்களின் குழந்தைகளை, வேலைநேரம் முடியும்வரையில் பாதுகாக்கவும் பராமரிக்கவும் 'ஆயாகொட்டகை'களை ஏற்படுத்தி யிருந்தது பழைய தோட்ட நிருவாகம். தொழிலாளர் வீடுகளுக்கு அருகில் மாட்டுப்பட்டி (தொழுவம்) போன்ற கொட்டகைகள் அமைத்து, வயதுமுதிர்ந்த பெண்டிரைப் பொறுப்பாளராய் ஏற்படுத்தியிருந்தது. அம் மூதாட்டி 'ஆயா' என அழைக்கப்படுவாள். அந்த

இடம் ஆயா கொட்டகை எனப்படும். அதனை மேற்கண்ட வரிகள் சுட்டிக்காட்டுகின்றன. இப்போது இந்த 'ஆயா கொட்டகைகள்' ஓரளவு சீரமைப்புச் செய்யப்பட்டுள்ளன.

**169.** 1971இல் காலமான தாழ்ந்த வகுப்பினன் என ஒதுக்கப்பட்டிருந்த கலியனின் பிணத்தை, உயர்சாதிக்காரர்க்குரிய இடுகாட்டில் புதைத்துவிட்டனர். அதனைக் கண்டு வெகுண்டெழுந்த உயர்சாதிக்காரர் அப் பிணத்தைத் தோண்டி எடுத்து வேறு இடத்தில் புதைத்தனர். அவ் விழிசெயலை எதிர்த்து மலேசியத் திராவிடர் கழகம் வழக்குத் தொடுத்து வென்றது. அதுகுறித்து எழுந்த பாடல் இது. மேலும் விவரம் அறியப் பாடல் எண் 422இன் குறிப்புரை காண்க.

**171.** 1940ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்கள் 6ஆம் நாள் பினாங்கு உணவகம் ஒன்றில் நடந்த நிகழ்ச்சியினை அடிப்படையாய்க்கொண்டு பாடப்பட்ட பாடல் இது. பினாங்கு சைனாத் தெருவில் இருந்த உணவகம் ஒன்றிற்கு முதுபெரும் தமிழ்ப் புலவர் சென்றபோது அங்கே சிலர் ஐந்தடியில் இலைபோட்டுச் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அந் நேரம் சீனர், மலாய்க்காரர் சிலர் அவ் வழியில் நடந்துகொண்டிருந்தனர். ஆள்கள் நடக்கும்போது சாப்பிடுவோர் இலைகளை மடக்கிக்கொண்டும் பின் விரித்துக்கொண்டும் சாப்பிட்டனர். ஒருசிலர்மட்டும் கடையினுள் நாகரிகமாக உணவு உண்டுகொண்டிருந்தனர். இந்தக் காட்சியைக் கண்ட புலவருக்கு உள்ளம் கொதித்தது. உடனே கடைகாரரைக் கூப்பிட்டு, "உங்கள் கடையில் இடம் போதவில்லையா? இவர்கள் ஏன் அஞ்சடியில் சாப்பிடுகிறார்கள்? நடப்பவர் கால் தூசுகளெல்லாம் உணவில் படிகின்றனவே இப்படிச் செய்யலாமா?" என்று கேட்டார். அதற்குக் கடைகாரர், "இடம் இல்லாமல் இல்லை, இவர்கள் தாழ்ந்த இனத்தவர்கள்" என்றார். "அப்படியானால் இவர்கள் கொடுக்கும் காசு செல்லாதோ?" என்றார். "செல்லும்; ஆனால் மற்றவர் இவர்களை வேற்றுமையாய் நினைக்கிறார்கள்" என்றார். கடைகாரரும் புலவரும் கடுமையாக வாதிடவே அடிதடியில் போய் முடியும் அளவு நிலைமை முற்றியது. அந் நிகழ்வால் சொல்லொணா மனத்துன்பமுற்ற புலவர் வீடு திரும்பி இப் பாடலைப் பாடி, மறுநாளே தமிழ்நேசனுக்கு அனுப்பினார். ஆனால், நேசன் பாடலை வெளியிடவில்லை. சான்று : முதுதமிழ்ப் பெரும்புலவர் சுவாமி இராமதாசர் மணிவிழா மலர், 1997.

**186.** மலாக்காச் செட்டிகள்: பல நூற்றாண்டுகளுக்கு முன்பே தென் இந்தியப் பகுதியிலிருந்து வாணிகத்துறையில் ஈடுபட்டிருந்த பலர் மலாயா, சுமத்திரா, சாவகம் ஆகிய பகுதிகளுக்கு அடிக்கடி வந்து சென்றனர். மலாக்கா அரசு நிறுவப்பட்டு அது தலைமைத் தளமானபின் தமிழ்நாட்டிலிருந்து வணிகர் பலர் வரத்தொடங்கினர்; இங்குத் தங்கி வாணிகம் செய்த சிலர் உள்ளூர்ப் பெண்களை மணந்துகொண்டனர். மலாக்கா அரசை நிறுவிய பரமேஸ்வரன் தொடக்கத்தில் இந்துசமயத்தைச் சேர்ந்தவன்; பின்னர் இஸ்லாத்தைத் தழுவினான். தொடர்ந்து இஸ்லாம் சமயத்தைச் சேர்ந்த சுல்தான்கள் ஆண்டபோதிலும் பல சமயத்தவரும் கலப்புமணம் புரிந்துகொள்ளத் தடையேதுமில்லை. இந்து சமயத்தைச் சேர்ந்த வணிகர்கள் கலப்புமணம் புரிந்துகொண்டாலும் தங்கள் சமயத்தில் பிடிப்பாய் இருந்து தங்கள் மனைவியர் பெயரையும் இந்துப் பெயர்களாக மாற்றினர்; இந்துசமய முறைகளைப் பின்பற்றச் செய்தனர். இருப்பினும் அவர்கள் தங்கள் தாய்மொழியான மலாய்மொழியில் பேசியதை மாற்ற இயலவில்லை. ஆகவே குடும்ப மொழியும் மலாய்மொழியாகவே தொடர்ந்தது.

1781இல் பொய்யாத விநாயக மூர்த்தி ஆலயம் எழுப்ப டச்சுக்காரர் இச் சமூகத்திற்குக் கம்போங் கிளிங் அருகில் உள்ள கோல்டு ஸ்மித் (Gold Smith) தெருவில் ஒரு நிலத்தைக் கொடுத்தனர். அப்போது தேவநாயகம் செட்டியார் என்பவர் கோயில் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பெற்று அவர் பெயராலேயே நில உரிமையும் பட்டா செய்யப்பெற்றது. இச் சமூகத்தின் நலன் கருதிப் பொய்யாத விநாயகர் கோயிலின் பெயரால் பெரியவர்கள் தங்கள் நிலங்களை எழுதிவைத்த காரணத்தால் இச் சமூகத்தினர் வாழ்வதற்கு நிலம் இருந்தது.

தொடக்கத்தில் செட்டிமார்வழி வந்தவர்களே தலைவர்களாயும், பொருளாதாரத் துறையில் பலம் பொருந்தியவர்களாயும் விளங்கினர். மற்றவர் இவர்கள்கீழ் வேலை செய்தவர்களாய் இருந்தனர். அனைவரும் செட்டிமார்களின் ஆள்களாகக் கருதப்பட்டு 'மலாக்காச் செட்டிகள்' என்றே அழைக்கப்பட்டனர். கோயில் நிலம் தேவநாயகம் செட்டியார் பெயரில் இருந்ததால் அந்தப் பகுதியில் குடியேறிய இந்தச் சமூகத்தினர் செட்டியார் என்று அடையாளம் கொண்டிருக்கலாம். இச் சமூகத்தினருள் இப்போது செட்டி, பிள்ளை, கவுண்டர், கோனார், கள்ளர், ரெட்டி முதலாய குலத்தினரும் உள்ளனர்.

**188.** 380ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**197.** விடுதலைக்கு முந்திய மலாயாவில் தோட்ட உரிமையாளர்களாய் இருந்த ஆங்கிலேயர்கள், தோட்டத் தொழிலாளர்கள் நலனுக்குப் பாடுபட உருவாய தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தில் சேரக்கூடாதெனத் தொழிலாளர்களைத் தடுத்தனர். துரைமார்களுக்கு (வெள்ளைக்கார அதிகாரி) அஞ்சிய அன்றைய தோட்டத் தொழிலாளர்கள் (பெரும்பாலும் தமிழர்கள்) சங்கத்தில் சேராது புறக்கணித்தபோது பாடியது.

**203.** கோலாலம்பூரிலிருந்து 10 கிலோமீட்டர் தொலைவில் அமைந்திருக்கும் 'பத்துமலை' எனும் தலம் முருகன் கோயில்கொண்டுள்ள புனிதத்தலமாகும். சாலையில் போடும் சல்லிக்கல் எடுப்பதற்காக, அதன் அருகிலேயே வெடிகுண்டு வைத்துத் தகர்த்து மலையைப் பெயர்ப்பதால், தலத்துக்குத் தீங்கு நேரும் என்று பலரும் எதிர்ப்புக் குரல் எழுப்பினர். அதனைக் கேளாமல் வெடிவைக்கும் வேலை தொடர்ந்ததால் எழுந்த பாட்டு இது. நெடும் போராட்டத்திற்குப் பின் அரசு கல்லுடைக்கும் நிறுவனத்திற்கு மாற்று இடம் வழங்கித் தலத்தைக் காத்தது. மேல் விவரங்களைத் திருத்தலங்கள் பகுதியில் காண்க.

**221.** அரசியல் கட்சிக் கூட்டங்களில் எப்போதாவது நடைபெறும் அலங்கோலத்தைக் கவிதை விளக்குகிறது.

**222.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

**226.** மாத்திரைக்குப் பலபொருள் இருந்தாலும் மாத்திரை உருவில் ஆக்கப்பெற்ற போதைப் பொருளும் (Drug) உண்டு. அதனை உண்டு இளைஞர் கெடுவதைக் கவிஞர் குறிப்பிடுகிறார்.

**236.** மலேசிய இந்தியர் காங்கிரசின் தேசியத் தலைவர் தேர்தலில் (1971) அதன் தலைவர் துன் வீ. தி. சம்பந்தன் அணி, துணைத் தலைவர் டான்ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் அணி என்ற அணிப் பிரிவுகள் ஏற்பட்டபோது வருந்திப் பாடியது.

**243, 244, 245** - 161ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**249.** தோட்டத் தொழிலாளர்களுக்கு வார விடுமுறை கேட்டுப் போராடியது தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம். விடுமுறை தரமறுத்த தோட்ட முதலாளிகள் தொழிலாளர்களை மருட்டினர். மருட்டலுக்கு அஞ்ச வேண்டாவென்றும் வாரந்தோறும் கட்டாய விடுமுறை கொள்ளுமாறும் தொழிலாளர்களுக்கு ஊக்கமூட்டிப் பாடியது.

**251.** ஒருலக அவையின் (ஐ.நா.) தலைவியாய் விளங்கிய (1953-54) திருமதி விஜயலட்சுமி பண்டிட்டால் (நேருவின் தங்கை) 14.5.1954இல் திறந்து வைக்கப்பெற்ற பெருமைக்குரிய சுங்கை சிப்புட் காந்தி கலாசாலையை விரிவுபடுத்தியபோது பொருட்கொடை வேண்டிப் பாடப்பெற்ற பாட்டு.

**256.** முஜாஹிதீன்கள் : முஜாஹிதீன் என்பதற்குப் புனிதப் போர்வீரர்கள் என்பது பொருள். ஆப்கானிஸ்தானில் நுழைந்த ரஷ்யப் பெரும்படையை எதிர்த்துப் புனிதப் போர் புரிந்து வெற்றிகண்ட முஜாஹிதீன் படையினரின் வெற்றியை வாழ்த்தியும் வியட்நாம், பாலஸ்தீனம், தமிழீழம் முதலாய நிலப்பகுதிகளில் உரிமைப்போர் நடத்தும் வீரர்களுக்கு ஊக்கமூட்டியும் பாடப்பெற்ற பாடல்.

**257.** சப்பானியர் ஆட்சியில் மலாயாத் தமிழர்களில் ஆயிரக் கணக்கானோர் சயாம் சென்று அழிந்தனர்; பின்னர் அவசரகாலத்தின் (எமர்ஜென்சி) போது பயங்கரவாதிகளால் பலர் அழிந்தனர்; பலர் பயங்கரவாதிகளாயும் மாற்றப்பட்டனர். அந்த நினைவுகளில் எழுந்த பாடல். மேல்விவரங்களுக்கு பாடல் எண் 135இன் குறிப்புரை காண்க.

**264.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

**265.** 1986ஆம் ஆண்டு கிள்ளானில் தமிழ்நெறி மன்றம் நடத்திய மாணவர் பண்பாட்டு விழாவில், காட்சி அமைப்பொடு அரங்கேறிய பாடல். பாடலும், பின்னணி இசையும், காட்சி அமைப்பும், மாணவரின் உணர்ச்சி மிக்க நடிப்பும் அரங்கில் கூடியிருந்த ஆயிரக்கணக்காய மாணவரையும் பிரமுகர்களையும் கவர்ந்தன. பாடலுக்குச் சாமிக்கண்ணன் இசைகூட்டினார்.

மேற்படி விழா நடப்பதாய்க் கேள்விப்பட்டு அதனைக் காண விழைந்து வந்த துணையமைச்சர் மாண்புமிகு டத்தோ சி. சுப்பிரமணியத்துக்காகப் பாடல் மீண்டும் ஒலித்தது. பாடல் ஏற்படுத்திய உணர்ச்சியைப் போற்றியும் மாணவரிடையே காணப்பட்ட கட்டுக்கோப்பை, ஒழுங்கைப் பாராட்டியும் புகழ்ந்துரைத்த துணையமைச்சர், தமிழ்நெறி மன்றத்தின் உயர்ந்த குறிக்கோளையும் செயல்திறனையும் பாராட்டினார்.

**266.** 380ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**271.** 560ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**272.** கிள்ளான் வெள்ளிவிழாத் தமிழர் திருநாள் விழாவில் (12.3.1977) நடந்த கவியரங்கில் பாடப்பெற்ற பாடலின் ஒரு பகுதி.

கிள்ளான் தமிழர் திருநாள்: சமுதாயத்தின் எழுச்சியைக் கருத்திற்கொண்டு தமிழவேள் கோ. சாரங்கபாணி 1952இல் தமிழர் திருநாளைத் தொடங்கினார். மறு ஆண்டே கிள்ளானில் அவ் விழா வலிமை வாய்ந்த குழுவினரால் நடத்தப்பட்டு 25 ஆண்டுகள் (ஒருசில ஆண்டுகளைத் தவிர) தொடர்ந்து பல்வேறு அமைப்புகளைச் சார்ந்தோரின் நல்ல ஆதரவுடன் சீரோடும் சிறப்பொடும் நடந்தது. 18.7.57இல் கிள்ளானில் அகில மலாயாத் தமிழர் சங்கக் கிளை அமைந்தபின் அதன் வாயிலாகவே தமிழர் திருநாள் (1958 முதல்) நடந்தது. 1963இல் அ.ம.த.ச. பதிவு ரத்தானபின் மீண்டும் பல்வேறு அமைப்புகளைச் சேர்ந்த பேராளர்கள் இணைந்த ஒரு குழுவால் 1977வரை விழாப் பல்லாற்றானும் சிறப்பாக நடத்தப்பெற்றது. கிள்ளான் நகரவளர்ச்சிக்குப் பெரும் கொடை ஈந்தவரும், கிள்ளான் சிம்பாங் லீமா தமிழ்ப் பள்ளி, இலட்சுமணன் மண்டபம் ஆகியவை அமைக்க நிலம் வழங்கியவரும் பெரும் வள்ளலும் சமாதான நீதிபதியுமாய (J.P.) இலட்சுமணன் செட்டியார், மலேசிய இந்தியர் காங்கிரசின் தேசியத் தலைவராயும் அமைச்சராயும் விளங்கிய டான்ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம், அமைச்சரின் அரசியல் செயலாளராய் நெடுங்காலம் பணியாற்றிய க. பொன்னம்பலம், மு. உ. மு. காசிம், வணிகப் பிரமுகர் அரு. வைத்தியலிங்கம் பிள்ளை, கோ. இராமநாதன், அ. சு. அசோகன், மு. சண்முகம், இரா. கோவிந்தசாமி, மா. இளங்கோவன், த. பரமகுரு, வி. எம். கந்தசாமி முதலாய பெருமக்களொடு கிள்ளான் தமிழர் திருநாளைப் பல ஆண்டுகள் தலைவராயும் செயலாளராயும் பொறுப்பேற்று நடத்திய நா. பெரி. பெரியகருப்பன், க. இரா. இளஞ்செழியன் ஆகியோரும் குறிப்பிடத்தக்கவர் ஆவர்.

**273.** முரசு. நெ. முத்தெழிலன், ரவி, அங்கையன் ஆகியோரின் 'தமிழ்க் கணினி'க் கண்டுபிடிப்பை வாழ்த்திப் பாடிய பாடல். “மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்” என்னும் இந்த நூல் பொறியாளர் முரசு. நெ. முத்தெழிலன் உருவாக்கிய 'முரசு' தமிழ்க் கணினி முறையில் அச்சேறியது. மலேசியா, சிங்கப்பூர் ஏடுகளில் பல இக் கணினி முறையிலேயே அச்சிடப்பெறுகின்றன; அச்சகங்களும் விரைந்து இக் கணினி முறைக்கு மாறிவருகின்றன.

1987ஆம் ஆண்டு மலேசியாவில் நடந்த ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் 'முரசு தமிழ்க் கணினிமுறை' அறிமுகம் ஆகி உலக அறிஞர் பலரின் பாராட்டைப் பெற்றது. பல்வேறு மாறுதல்கள் பெற்றுக் 'கேஷ் எண்டர்பிரைஸ்' நிறுவனத்தின் மூலம் 1993இல் மலேசியத் தலைநகரில் வெளியீடு கண்ட முரசு தமிழ்க்கணினியின் சாளர (விண்டோஸ்) முறை, அச்சுத் தொடர்புடைய அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது; தமிழிற்கு இது புதிய வரவு என்னும் பாராட்டையும் பெற்றது. பின்னர் 1995இல் முத்தெழிலன் மின்னஞ்சல் முறையை உருவாக்கித் தமிழ்கூறு நல்லுலகிற்கு வழங்கினார். தொடர்ந்து 1996இல் 'இணைய' (Internet)த்தில் தமிழைப் புகுத்தியதன் மூலம் தமிழ்வழி உலகளாவிய தொடர்பு முறையை அறிமுகம் செய்தார்.

**277.** இந்திய தேசிய இராணுவத்திற்கு இளைஞர்களைத் திரட்டியபோது அவர்களை ஊக்கமூட்ட எழுந்த பாடல். “பாடலின் ஒருசில அடிகளைத் தவிர மற்ற அடிகள் மறந்துபோய்விட்டன” என்று கவிஞர் கூறிவிட்ட நிலையில், பலமுறை அவரைச் சந்தித்துப்

பழைய நினைவுகளில் ஆழ்த்தி, அவர் வாய்மொழியாய்க் கூறக் கேட்டு எழுதப்பெற்றது.

'ஜெய்ஹிந்த்' - இந்தியா வெல்க! அல்லது இந்தியாவின் வெற்றி என்னும் பொருள் கொண்ட இம் முழக்கத்தை உருவாக்கித் தந்தவர் டாக்டர் செண்பகராமன். 'ஜெய்ஹிந்த்' செண்பகராமன் என அறியப்பட்ட இப் புரட்சி வீரர், திருவனந்தபுரத்தில் பிறந்த தமிழர்; மாணவப்பருவத்திலேயே தம் தோழர்களைத் திரட்டி இந்திய விடுதலைக்காகப் போராடினார். அக் காலத்தில் இவர் உருவாக்கியதே 'ஜெய்ஹிந்த்' முழக்கம். இதனால் அன்றைய ஆங்கிலேய அரசு இவரைக் கூர்ந்து கண்காணித்தது. இவர் 22.9.1908இல் ஜெர்மன் உளவாளியாகிய சர் வால்டர் வில்லியம் ஸ்டிக்லேண்ட் (Sir Walt William Sdikland) உடன் சேர்ந்து என். ஜி. எல். யார்க் என்னும் கப்பலில் ஏறி இந்தியாவைவிட்டு வெளியேறினார்.

ஐரோப்பாவில் இத்தாலி, சுவிட்ஜர்லாந்து, ஜெர்மனி முதலாய நாடுகளில் கல்வி கற்று அரசியல், பொருளாதாரம், பொறியியல் ஆகிய துறைகளில் முனைவர் (Ph.D.) பட்டம் பெற்றார்; பன்னிரண்டு மொழிகளில் பேசவும் எழுதவும் தேர்ச்சி பெற்றார். உலகின் பல பகுதிகளுக்கும் சென்று இந்திய விடுதலைக்கு ஆதரவு திரட்டினார். ஜெர்மனியில் இந்திய தேசியத் தொண்டர் படை அமைத்து ஜெர்மானியப் பேரரசர் கெய்சருடன் நட்புறவு ஒப்பந்தம் செய்துகொண்டார். 1915இல் காபூலில் அமைத்த இந்தியாவின் விடுதலை அரசில் (வீரர் செண்பகராமன் என்னும் நூலில் விவரம் உள்ளது) வெளிநாட்டு அமைச்சராய் விளங்கினார்.

முதல் உலகப் போரில் (1914-18) ஜெர்மனியுடன் சேர்ந்து ஆங்கிலேய அரசுக் கெதிராகப் போராடினார்; சூயஸ் கால்வாயை முற்றுகையிட்டு ஆங்கிலேயர் கடற்படை வலிமையின் முதுகெலும்பை முறிக்கத் திட்டமிட்டார். ஆனால், அது கைகூடவில்லை. 1933இல் வியன்னாவில் நடந்த ஒரு மாநாட்டிற்குச் சென்றிருந்த இவர், இந்தியாவிலிருந்து மாநாட்டிற்கு வந்திருந்த நேதாஜி சுபாஷ் சந்திரபோசைச் சந்தித்தார். அப்போது "இந்தியாவிற்கு வெளியே ஒரு படைப்பிரிவமைத்து ஆங்கிலேயருக்கு எதிராய்ப் போராடவேண்டும்; ஒரு தற்காலிக விடுதலை அரசையும் நிறுவவேண்டும்" என்னும் திட்டத்தை நேதாஜிடம் எடுத்துரைத்தார். அதன் விளைவாகவே 'ஆஜாத் ஹிந்த்' (Azad Hind) அரசை அமைத்தார் நேதாஜி; 'ஜெய்ஹிந்த்' முழக்கத்தையும் 'ஆஜாத் ஹிந்த்' அரசின் அதிகாரபூர்வ முழக்கமாக அறிவித்தார்.

**278.** சீனா அறத்திற்குப் புறம்பாய்ச் சீன இந்திய எல்லையை (இமயமலைப் பகுதி) ஆக்கிர மித்த போது (1962) எழுதப்பெற்றது. அப்போதைய மலேசியத் தலைமை யமைச்சராய் இருந்த மலேசியத் தந்தை துங்கு அப்துல் ரஹ்மான் புத்ரா அல்ஹாஜ் இங்கு இந்தியப் பாதுகாப்பு நிதியைத் தொடக்கிவைத்தார்.

**280.** வெளிநாடுகளிலிருந்து - குறிப்பாய் இந்தோனேசியாவிலிருந்து வரும் கள்ளக் குடியேற்றக்காரரைத் தோட்ட முதலாளிகள் ஒப்பந்த முறையில் வேலைக்கமர்த்தி, காலங்காலமாய்த் தோட்டத்தையே நம்பி வாழ்ந்துவரும் உரிமையுள்ள தொழிலாளர் களுக்கு நெருக்கடியை உண்டுபண்ணும் கொடுமையைச் சாடுகிறார். தோட்டத் தொழிலாளர்களுக்கு அரணாகத் திகழும் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம், தொழிலாளர்களுக்கு மாதச் சம்பளம் வேண்டுமென்று நீண்டகாலமாய்ப் போராடி வருகிறது. அதற்கு ஊக்கமூட்டிய பாடல்.

**281.** 'தமிழ்மலர்' (சிங்கை) நாளிதழ் நடத்திய வெண்பாப் போட்டியில் இடம்பெற்ற பாடல்.

**282..** 'தமிழ்முரசு' நாளிதழ் நடத்திய வெண்பாப் போட்டியில் இடம்பெற்ற பாடல்.

**298.** தமிழ்நேசன் பவுன் பரிசு திட்டத்தில் பரிசும் பாராட்டும் பெற்ற பாடல்.

**314, 315.** இப் பாடல் வெளிவந்ததும் அதற்கு விடையாக அடுத்த பாடல் பாடப்பெற்றது. பாடிய கவிஞர் இருவரும் கணவன் மனைவியர் என்பது குறிப்பிடத்தக்கது.

**323-393** பாடல்களின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர்கள் பகுதியில் காண்க.

**394.** கல்லுமலைப் பேரிடர் : ஈப்போ 'கல்லுமலை'ச் சாரலில் குடியிருப்புகள் அமைத்துப் பல்லின மக்களும் வாழ்ந்தனர். தீபாவளிக்கு ஒரு வாரத்திற்கு முன் (18.10.1973) மலையின் ஒருபகுதி அப்படியே பெயர்ந்து மண்ணில் புதைந்தது. பத்துமுதல் பதினைந்து குடும்பங்களைச் சேர்ந்த அறுபதிற்கு மேற்பட்டோர் புதையுண்டனர். அரசாங்கம் எவ்வளவோ முயன்றும் புதையுண்டவர்களை மீட்கமுடியவில்லை. அதனால் பலசமயத் தலைவர்களின் உடன்பாட்டொடு அதனை அப்படியே கல்லறையாக்கிவிடுவதென அரசு முடிவெடுத்தது. மாண்டவர்களின் ஆன்மா அமைதிபெறப் பல்சமய வழிபாடுகள் நடத்தப்பெற்றன.

**395.** மெல்லிசை மன்னர் ரெ. சண்முகம் அவர்களின் இசையமைப்பில் பி. சுப்பையா பாடிய பாடல்; 1970களில் மலேசிய வானொலியில் ஒலிபரப்பாயது.

**399.** பொருளாழமும், இலக்கண அமைதியும், ஒரே பரம்பொருளை வணங்கச் செய்யும் உறுதியும் அமையப்பெற்றுள்ள இப் பாடலே இந் நூலில் இடம்பெற்றுள்ள பாடல்களுள் மிகப் பழைமையானது.

**400.** மலேசிய மக்களைப் பல்லாண்டுகளாக அலைக்கழித்த 'கம்யூனிஸ்ட்' பயங்கரவாதி களுக்கு 1955ஆம் ஆண்டு பிரிட்டிஷ் அரசாங்கம் மன்னிப்பளித்தது. அதனையொட்டி இயற்றப்பெற்ற பாடல்.

**401.** விடுதலை பெறுவதற்கு ஈராண்டுகளுக்குமுன் (1955) நடந்த நாட்டின் முதலாம் பொதுத்தேர்தலின்போது எழுதப்பெற்ற பாடல்.

**402, 403, 404, 405.** இவை 1970களில் மலேசிய வானொலியில் ஒலிபரப்பான பாடல்களில் சில. பாடல்களுக்கு ஆசிரியரே இசை அமைத்து முதல் மூன்று பாடல்களையும் பாடியிருந்தார். 4ஆம் பாடலை நகைச்சுவைக் கலைஞர் செந்திலாதிபன் பாடினார். 'ஒருநாள் வரும்' என்னும் பாடல் இசைத்தட்டிலும் வெளிவந்துள்ளது.

**406, 407, 408, 409.** இவற்றுள் சில வானொலியில் ஒலியேறின. 'பாலு நிறத்தினிலே' பாடலுக்கு ரெ. சண்முகம் இசையமைத்து, நளினி வேணுகோபாலொடு பாடினார்.

'விண்மேடை மீது' ந. மாரியப்பன் இசை அமைத்துத் தாமே பாடினார். மிகுந்த இசைச் செறிவமைந்த பாடல் இது; பல்லாயிரம் ரசிகர்களால் போற்றப்பட்டது.

**411.** தமிழ்நெறி மன்றம் கிள்ளான், (தேவான்) அம்சா மண்டபத்தில் 1985இல் நடத்திய 7ஆம் மாணவர் பண்பாட்டு விழாவில் இடம்பெற்ற நடனப் பாடல். பாடலுக்கு இசையமைத்தவர் இசைக்கலைஞர் குலசீல நாதன் (அண்ணாமலை பல்கலைக்கழக இசைத்துறைப் பட்டம் பெற்றவர்). பாடியோர் செல்வியர் மு. நெ. அல்லிமலர், ப. சித்திரைமலர் ஆகியோர். நடனம் ஆடிய மாணவி வீனஸ் கலைமன்றத்தைச் சேர்ந்த செல்வி சாந்தி.

**412.** மலேசியக் கல்வி ஒலிபரப்பில் கவிஞர் எழுதிய பாடல்களைத் தொடர்ந்து கேட்டு, அவரை நேரில் காண விழைந்த பிறவிக் குருடராய இசைக் கலைஞர் இராமன் தம் ஆசிரியராய பி. ரிச்சர்ட்சாமி மூலம் கவிஞருடன் தொலைபேசிவழித் தொடர்பு கொண்டார். ஏற்கெனவே அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்த கவிஞர், அவர் அன்புள்ளத்தைக் குரல்வழி உணர்ந்து உருகி உடனே இப் பாடலை எழுதினார். தொலைபேசி வழியாகவே அதனைக் கேட்டு, 'பிரெயிலி' எழுத்தில் வடித்துக்கொண்ட இராமன் உடனே அதற்குத் தாமே இசையமைத்து அன்று மாலையே நேரில் வந்து பாடிக் காட்டினார். பாடலைக் கேட்டுத் தாம் முன்னின்று நடத்திய மாணவர் பண்பாட்டு விழாவில் பாடச்செய்தார். ஆயிரக் கணக்கானோர் பாடலைக் கேட்டு உருகினர்.

**413.** முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் வி. கோவிந்தராஜ் முன்னின்று நடத்திய ம.இ.கா. கலாசார விழாவில் (1976) இடம்பெற்ற பாடல். இசையமைத்தவர் இசைச் செல்வர் எஸ். சுந்தராஜ். பாடியவர் திருமதி வேலாம்பாள் முருகையா. கோவிந்தராஜ் கருத்திற்கேற்ப இசையமைப்பாளர் இசையமைக்க, பாடுவோரும் பின்னணிக் கலைஞர்களும் சூழ்ந்திருக்க, கவிஞர் பாடலை எழுதத் தொடங்கியபோது 'பாடலைக் கேட்டதும் கண்ணீர் வரவேண்டும்' என்று கோவிந்தராஜ் சொல்ல, அதனையே முதலடியாய் வைத்துச் சில மணித்துளிகளில் எழுதிய பாடல்.

**414.** சங்க நிகழ்ச்சிகளில் பாடுதற்கேற்ற பாடல் எழுதும் போட்டியை, அகில மலாயாத் தமிழர் சங்கக் கிள்ளான் கிளை நடத்தியது. அதில் முதற்பரிசு பெற்ற பாடல். விழாவைப் பொறுப்பேற்று நடத்தியவர் க. இரா. இளஞ்செழியன். விரிவை இயக்கங்கள் பகுதியில் காண்க.

**416.** கண்டசாலா ராமையா எனும் சிறந்த இசைக்கலைஞரால் இசையமைக்கப் பெற்று, அவரே பாடி இசைத்தட்டில் (1970) வெளிவந்து புகழ்பெற்ற பாடல்.

**417.** புகழுடம்பெய்திய மலேசிய இந்தியர் காங்கிரஸின் தேசியத் தலைவர்களாய் விளங்கிய பெருமக்களைக் குறிக்கும் பாடல் இது.

**1.** ஜான் திவி நேதாஜி சுபாஷ் சந்திரபோசுடன் இணைந்து இந்திய தேசிய இராணுவத்தில் சிறப்பான பணியாற்றினார்; நேதாஜிக்குப் பின் அந்த இயக்கத்திற்குத் தலைமையேற்றார்; 1946இல் ம.இ.கா.வைத் தோற்றுவித்து வெள்ளையர் ஆட்சியில்

அடிமைப்பட்டிருந்த மக்களுக்கு விடுதலை வேண்டும் என்று முழங்கினார்; 1947வரை அதன் தேசியத் தலைவராய்ப் பணியாற்றினார்.

**2.** சர்தார் பூத்சிங் - இவர் 1947முதல் 1950வரை ம.இ.கா. வின் தலைவராய் விளங்கினார்.

**3.** கா. இராமநாதன் - சமயத் தொண்டில் சிறந்து விளங்கிய இவர், 1950முதல் 1951வரை ம.இ.கா.வின் தேசியத் தலைவராய்ப் பொறுப்புவகித்தார்.

**4.** குண்டன்லால் தேவாசர் - 1951முதல் 1955வரை ம.இ.கா.வின் தலைமையை ஏற்றார். ம.இ.கா.வைத் துங்குவின் தலைமையில் அமைந்த 'கூட்டணி'யில் இணைத்தார்.

**5.** துன் வீ. தி. சம்பந்தன் - 1955முதல் 1973வரை ம.இ.கா. வின் தேசியத் தலைவராய் விளங்கிய இவரைப்பற்றிய குறிப்புகளைப் பாட்டுடைத் தலைவர்கள் பகுதியிற் காண்க.

**6.** டான்ஸ்ரீ டத்தோ வெ. மாணிக்கவாசகம் - 1973முதல் 1979வரை ம.இ.கா. வின் தேசியத் தலைவராய் விளங்கிய இவரைப் பற்றிய குறிப்புகளைப் பாடல்களின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர்கள் பகுதியிற் காண்க.

**418.** டத்தோஸ்ரீ டாக்டர் ச. சாமிவேலு - 1979முதல் ம.இ.கா. வின் தேசியத் தலைவராய் விளங்கிவரும் இவரைப்பற்றிய குறிப்புகளைப் பாட்டுடைத் தலைவர்கள் பகுதியிற் காண்க.

**419, 420, 422.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியிற் காண்க.

**423.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியிற் காண்க.

**429.** சிங்கை வானொலியில் (1985) ஒலிபரப்பான இப் பாடலை இசையமைத்துப் பாடியவர் ரெ. சண்முகம்.

**431.** சிங்கப்பூர் வானொலிக்காக எழுதப்பெற்ற இப் பாடலுக்கு ரெ. சண்முகம். இசையமைக்க வி. இராமச்சந்திரன் பாடினார். 1982இல் ஒலியேறியது.

**437.** சிங்கை வானொலியில் (1985) ஒலிபரப்பான இப் பாடலுக்கு இசையமைத்தவர் ரெ. சண்முகம்; பாடியவர் ஜெயபாலன்.

**438.** சிங்கை வானொலியில் ஒலியேறிய இப் பாடலுக்கு (1986) இசையமைத்தவர் கலைஞர் ரெ. சண்முகம்.

**439.** பாடல்களின் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியிற் காண்க.

**442.** பாடல்களின் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியிற் காண்க.

**445.** 1988இல் ஒலிப்பேழையில் பதிவு செய்வதற்காக வி. நீலமேகம் இசையமைத்த இப் பாடலை ரெ. சண்முகம் பாடியுள்ளார். 'கலாட்டாக் காதல்' எனும் தொலைக்காட்சிப் படத்திலும் இப் பாடல் இடம்பெற்றது.

**446.** இப் பாடலுக்கு இசையமைத்தவர் குழல் பேரம்பலம்; பாடியவர் ஏ. இராமச்சந்திரன்.

**450.** 1985களில் சிங்கை வானொலியில் ஒலிபரப்பான இப் பாடலை இசையமைத்துப் பாடினார் ரெ. சண்முகம்.

**452.** மலாயா, சிங்கப்பூர், வடபோர்னியோ (இப்போது சபா), சரவா, புருணை ஆகிய நாடுகள் ஒன்றிணைந்து 'மலேசியா' என ஒரே நாடாக அமைப்பதற்குக் கொள்கையளவில் இணக்கம் காணப்பட்டது. 1963 செப்டம்பரில் மலேசியா அமைந்தபோது புருணை விலகிக்கொண்டது. ஆகவே, புருணை நீங்கலாக நான்கு நாடுகள்மட்டும் இணைந்து மலேசியா அமைந்தது. பின்னர் 1965இல் மலேசியாவிலிருந்து சிங்கப்பூரும் பிரிந்து தனிநாடு ஆயிற்று.

**463.** சிங்கை வானொலியில் (1985) ஒலியேறிய இப் பாடலுக்கு இசையமைத்தவர் ரெ. சண்முகம்; பாடியவர் திருமதி சௌந்தரவல்லி.

**464.** தோட்டப்புறப் பின்னணியில் இயற்றப்பட்ட நாட்டியப் பாடல். சங்கமணி மேதின மலரில் (1972) இடம்பெற்றது. அகத்துறை சார்ந்த இப் பாடல், செல்வியர் சந்திரிகா இராமநாதன், இராஜேஸ்வரி இராமநாதன் ஆகியோரின் அபிநய முத்திரைப் படங்களுடன் வெளியிடப்பட்டிருந்தது.

**465.** பாடல்களின் பின்புலம் - திருத்தலங்கள் பகுதியிற் காண்க.

**467.** சொ. ப. சோதிராசன் எழுதி, சோ. பரஞ்சோதி இயக்கிய 'நாளை, நாளை வரும்' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல்கள். சு. ராம்குமார், ரெ. சண்முகம் ஆகியோர் பாடிய இப் பாடல்களுக்கு இசையமைத்தவர் ரெ. சண்முகம். இந் நாடகம் 1987இல் சிங்கப்பூர்த் தொலைக்காட்சியில் தொடராய் ஒளிபரப்பப்பட்டது.

**469, 470.** 31.8.1957இல் நாடு விடுதலை பெற்றகாலை மலேசிய வானொலியில் ஒலியேறிய 'விடுதலை முழக்கம்' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல்கள். நாடு விடுதலைபெற்ற அன்று, தமிழில் முதன்முதலாய் ஒலியேறியவை.

**471.** தமிழ்நெறி மன்றம் 8.6.1984இல் கிள்ளானில் நடத்திய 6ஆம் மாணவர் பண்பாட்டு விழாவில் அரங்கேறிய 'எழுச்சியை நோக்கி' என்னும் வரலாற்று நாடகத்தை எழுதி இயக்கியவர் முரசு. நெடுமாறன்; இசையமைத்துப் பாடியவர் எம். எஸ். கோபாலன்; பின்னணி இசை வழங்கியோர் உதய சூரியன் இசைக்குழுவினர்; அருமையான

வருணனைகளால் நாடகத்திற்கு உயிர் சேர்த்தோர் பி. கே. சாமி, மனு இராமலிங்கம் ஆவர். ஆயிரக்கணக்காய மாணவரை வாலாற்று நிகழ்வுகளில் கலக்கச் செய்து ஒரு புத்தெழுச்சியை ஊட்டிய நாடகத்தின் உச்சியாய் இப் பாடல் மிளிர்ந்தது. இந் நாடகம் 24,25.11.1984இல் கோலாலம்பூரில் நடந்த மலேசியத் தமிழ் எழுத்தாளர் 2ஆம் தேசிய மாநாட்டிலும் நடத்தப்பெற்றுப் பலரின் பாராட்டுதல்களைப் பெற்றது.

**472.** 1988இல் வீனஸ் கலைமன்றத் தலைவராய் விளங்கிய ஜெயபாலன் தலைமையேற்று நடத்திய நாடக விழாவில் (9,10.4.1988) அரங்கேறிய 'காட்டிலே சில பூச்சிகள்' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல். செக்கோஸ்லோவாக்கியாவின் கேப்பெக் (Capak) சகோதரர்களின் 'The Insect Play' என்னும் நாடகத்தைத் தழுவி, மு. மணிவாசன் கதை, உரையாடல் எழுதி இயக்கினார்; பாடலுக்கு இசையமைத்தார் ந. மாரியப்பன்; பின்னணி இசை மு. நெ. இளவரசு குழுவினர். பாடியோர் திருமதி அமுதா சுப்பிரமணியம், செல்வியர் மலர்விழி, ப. சித்திரைமலர், மு. நெ. அல்லிமலர் ஆகியோர். முதல் நாள் நாடகத்திற்குத் துணையமைச்சரும் வீனஸ் கலைமன்றத்தின் காப்பாளருமாய டத்தோ சி. சுப்பிரமணியமும், இரண்டாம் நாள் நாடகத்திற்கு அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலுவும் தலைமையேற்று நாடகத்தைப் பெரிதும் புகழ்ந்தனர். இரண்டாம் நாள் நிகழ்வின்போது அமைச்சர் மு. மணிவாசனுக்கு 'நாடக வேந்தர்' என்னும் விருதை வழங்கிப் பாராட்டினார்.

**473.** 1962இல் சிங்கப்பூரில் அரங்கேறிய நாடகத்தில் இடம்பெற்ற பாடல்.

**474.** 12.4.1936ஆம் ஆண்டு சிங்கப்பூரில் அரங்கேறிய 'சுகுணசுந்தரி' அல்லது 'சாதிக் கொடுமை' என்னும் சீர்திருத்த நாடகத்தில் இடம்பெற்ற பாடல்.

**475.** 1937இல் நடந்த 'நவக்கிரக மாலை' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல்.

**476.** 1957இல் அரங்கேறிய 'பழிகாரன்' நாடகத்தில் இடம்பெற்ற பாடல்.

**477.** 1965ஆம் ஆண்டு கோலாலம்பூர் வளரும் கலைஞர்களால் அரங்கேற்றப்பட்ட '1941' என்னும் பெயர்கொண்ட வரலாற்று நாடகத்தை இயக்கியவர் பிரேம் கமால்; நாடக உரையாடல்களையும் பாடல்களையும் எழுதியவர் நா. ஆ. செங்குட்டுவன்; வி. கோவிந்தராஜுடன் எம். எஸ். மணியம், திருமதி வெள்ளையம்மாள் முக்கியப் பாத்திரங்கள் ஏற்று நடித்தனர். இந் நாடகத்தைப் முன்னாள் வளரும் கலைஞர்கள் தலைவரும் தற்போதைய பொதுப்பணி அமைச்சரும் ம.இ.கா. தேசியத் தலைவருமாய டத்தோஸ்ரீ ச. சாமிவேலு உருவாக்கிப் படைத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

**478.** 9, 10.10.1964இல் கோலாலம்பூரில் அரங்கேறிய 'வாடா மலர்' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல். நாடகக் கதை, உரையாடல், பாடல்கள் எழுதி இசையமைத்ததொடு இயக்கியும் வெற்றிகண்டார், மலாயாக் கூட்டரசு கலைமன்றத் தலைவர் ஆழி. அருள்தாசன்.

**479.** 14.10.62இல் சிங்கப்பூரில் அரங்கேறிய 'அப்பளத்தின் காதல்' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல்.

**480.** 1957ஆம் ஆண்டு கேரி தீவில் அரங்கேறிய இந் நாடகத்தை எழுதி இயக்கி உருவாக்கியதொடு கதைத் தலைவனாயும் நடித்தார் மு. அ. அய்யாதுரை; நாடகத்தின் மற்றொரு முக்கிய உறுப்பாய கவிஞன் பாகத்தை அணிசெய்தார் முரசு. நெடுமாறன்; பாடல்கள் எழுதி இசையமைத்துப் பாடினார் ப. க. குஞ்சு பாகவதர். வை. செல்லப்பா, கே. டி. தருமலிங்கம் ஆகியோர் பொறுப்பில் இயங்கும் வளரும் நாடகக் கலைப் பண்ணை சில மாறுதல்களுடன் புதியவர்களைக் கொண்டு 1981, 1982, 1983ஆம் ஆண்டுகளில் பலமுறை இந் நாடகத்தைப் பல ஊர்களிலும் மேடையேற்றியது.

**481.** கோலாலம்பூரில் அரங்கேறிய 'கண்மணி' என்னும் நாடகத்தில் இடம்பெற்ற பாடல். 'மலையகக் கலைமன்றம்' தயாரித்த இந் நாடகம் 1964இல் கோலாலம்பூர் நகர மண்டபத்தில் அரங்கேறியது. கதை, உரையாடல் எழுதி இயக்கியவர் மன்றத் தலைவர் மு. சுப. முத்தையா.

**482.** கோலக்கிள்ளான் திருக்குறள் மன்றத்தாரால் உருவாக்கப்பெற்ற 'வழிகாட்டி' நாடகம் 9,10.2.1967இல் (கோலக்கிள்ளானில்) அரங்கேற்றப்பட்டது. கிருஷ்ணன் கதைத் தலைவராய் நடித்த இந் நாடகத்திற்குக் கதை, உரையாடல், பாடல்கள் எழுதி இயக்கினார் அ. ரெங்கசாமி. பாடல்களுக்கு இசையமைத்தவர் ப. க. குஞ்சுபாகவதர். மேற்படி பாடலைப் ப. க. குஞ்சுபாகவதர், இராமசாமி, செல்வி கமலா பாடினர்.

**483.** 1984இல் ஆயிரக்கணக்காய சிறுவர் பங்கேற்ற தமிழ்நேசன் சிறுவர் இலக்கிய விழாவிற் கான தொடக்கப் பாடலாய் அமைந்த இதற்கு, இசை அமைத்தார் தமிழ்நெறி மன்றத்தின் இசையாசிரியர் பழநிசாமி. பாடலாசிரியரே தம் பள்ளி மாணவர்களைப் பயிற்றுவித்து அரங்கேற்றினார். விழாவை முன்னின்று நடத்தியவர் மா. இராசமாணிக்கம்.

*பாடல்பொருள் தொடர்பாய விளக்கம் :* 1969ஆம் ஆண்டு மேத் திங்கள் 13ஆம் நாள், மலேசிய வரலாற்று ஏட்டின் ஒரு கறைபடிந்த நாளாகும். நாட்டின் பொதுத்தேர்தல் முடிவுகளால் ஏற்பட்ட இனக்கலவரத்தில் பலர் பலியாயினர். முதலாம் தலைமை அமைச்சராய நாட்டுத் தந்தை துங்கு அப்துல் ரஹ்மான் பதவி விலகவும் இது காரணமாயிற்று. தேர்தல் முடிந்து அமைச்சரவை அமையாத நிலையில் தேசிய நடவடிக்கை மன்றம் (National Operation Council) நாட்டை ஆண்டது. அதன் தலைவராய்த் துன் அப்துல் ரசாக் விளங்கினார். நாட்டில் மீண்டும் அமைதி ஏற்படவும், பல்லினங்களுக்கிடையே ஒருமைப்பாடு மலரவும் ஐந்து நெறிகள் வகுக்கப்பெற்றன:

1. இறைவன்மீது நம்பிக்கை வைத்தல்
   (Kepercayaan Kepada Tuhan - Belief in God)

2. பேரரசருக்கும் நாட்டிற்கும் விசுவாசம் (பற்றுறுதி) செலுத்துதல்
   (Kesetiaan Kepada Raja dan Negara - Loyalty to King and Country)

3. அரசியல் அமைப்புச் சட்டத்தை உறுதியாய்க் கடைப்பிடித்தல்
   (Keluhuran Perlembangaan - Upholding the Constitution)

4. சட்டமுறைப்படி ஆட்சி நடத்துதல்
(Kedaulatan Undang-Undang - Rule of Law)

5. ஒழுக்கத்தையும் நன்னடத்தையையும் பேணுதல்
(Kesopanan dan Kesusilaan - Good Behaviour and Morality)

இவை 'ருக்குன் நெகாரா' (Rukun Negara) தேசியக் கோட்பாடு எனப்படும். இந் நெறிகளை நாடு இன்றும் உயிராய்ப் போற்றிவருகிறது. பள்ளிகளில் மாணவர் இவற்றை உணர்ந்து அன்றாட வாழ்வில் கடைப்பிடிக்க வலியுறுத்தப்பட்டு வருகின்றனர்.

**484.** மலேசியக் கல்வி ஒலிபரப்பில் ஒலியேறிய இப் பாடல் பல்லின ஒற்றுமையை விளக்குகிறது. பாடல் எண்கள் 576, 577இன் குறிப்புரை காண்க.

**499.** காட்டில் வாழ்ந்து நாட்டுமக்களுக்குத் தொல்லை கொடுத்த கம்யூனிஸ்டு பயங்கர வாதிகளைத் துடைத்தொழிக்கும் போரில் உயிர்நீத்த மறவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் பொருட்டுத் தலைநகரில் தேசிய நினைவுச்சின்னம் அமைக்கப்பட்டுள்ளது.

**534.** 329ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**546.** தமிழ்முரசு நாளிதழ் (சிங்கை) நடத்திய வெண்பாப் போட்டியில் இடம்பெற்ற பாடல்.

**554.** இரண்டாம் உலகப்போர் மூளுவதற்கு முன்பே நாட்டின் வளத்தைப் பாடியதொடு, பல்லினங்களுக்கிடையே அன்று நிலவிய ஒருமைப்பாட்டுணர்வைப் பாவலர் சித்திரிக்கிறார்.

**557.** 1957இல் நாடு விடுதலைபெற்றும் அவ் வொளி சரிவரப் பரவாத் தோட்டப்புற மக்களின் தவிப்பைப் பாடல் வெளிப்படுத்துகிறது.

**559, 560.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

**561.** எல்லா வகையிலும் மேலைநாடுகளையே பின்பற்றுவதால் பண்பாடு முதலாய துறை களில் விரும்பத்தகாத விளைவுகள் ஏற்படுவதை உணர்ந்த தலைமை அமைச்சர் டத்தோஸ்ரீ டாக்டர் மஹாதீர் முகமது, 'கிழக்கை நோக்கும் கொள்கை'யை 2.8.1982இல் அறிவித்தார்.

தொழில்துறையில் வளர்ந்த கீழைநாடுகளாய ஜப்பான், கொரியா ஆகியவற்றின் தொழில்நுட்பங்களைக் கற்று அவர்களைப்போல் உழைத்து நாட்டைத் தொழில்துறையில் மேம்பாடடையச் செய்வதே இதன் முதன்மையான நோக்கமாகும்.

**562.** 1986இல் அமெரிக்கா விண்ணில் பாய்ச்சிய 'வாயேஜர்' 13 (Voyager 13) என்னும் வான்கலம் புறப்பட்ட சில மணித்துளிகளில் வெடித்துச் சிதறியதைக் குறித்துப் பாடிய பாடல்.

**563.** மலேசியாவை ஆளும் கட்சிகளுள் ஒன்றாய மலேசிய இந்தியர் காங்கிரசின் ஆண்டுப் பொதுப் பேரவை 1987இல் கூடியது. கட்சித்தேர்தல் ஆண்டாதலால் இயக்கத்தை வழிநடத்தும் தலைமைப் பொறுப்பாளர் தேர்தலும் நடந்தது. தேர்ந்தெடுக்கப்பெற்ற தலைவர்கள் சமுதாய மேம்பாட்டிற்கு என்னென்ன செய்ய வேண்டுமென்பதைப் பாடல் நினைவூட்டுகிறது.

**564.** இரண்டாம் உலகப்போரின் தொடக்கத்தில் வெற்றிகண்ட சப்பானியரை வாழ்த்தியும் தோற்றோடிய வெள்ளையரைத் தூற்றியும் எழுந்த பாடல். சப்பானியர் வெற்றி இந்திய விடுதலைக்கு வழிவகுக்குமென்ற நம்பிக்கை உணர்வைப் பாடல் வெளிப் படுத்துகிறது.

**565.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

**566.** சு. வை. லிங்கம் முன்னின்று நடத்திய முதலாம் தமிழ்க் கலைஞர் தேசிய மாநாடு (1976) வெற்றிகாண விழைந்து பாடியது.

**567, 570, 573, 574.** பாடல்களின் பின்புலம் - இயக்கங்கள் பகுதியில் காண்க.

**576, 577.** மலேசியாப் பல்லினங்களைக் கொண்ட நாடு. மக்கள் பின்பற்றும் சமயங்களும் பல. ஒவ்வோர் இனமும் தனித்து வாழ்வது ஒருமைப்பாட்டிற்கு வலிமை சேர்க்காது என்பதால் அரசு எல்லாச் சமயத் திருநாள்களுக்கும் (தீபாவளி, நோன்புப்பெருநாள், கிறிஸ்துமஸ், சீனப் புத்தாண்டு, விசாக நாள்) 'தேசிய விழா' என்னும் தகுதியை வழங்கியுள்ளது. ஒரு சமயத்தவர் கொண்டாடும் திருவிழாவில் மற்றச் சமயத்தவரும் பங்கேற்றுச் சிறப்புச் செய்வது மலேசிய நாட்டின் தனிப்பெரும் பண்பாடாகும்.

**578.** 1964ஆம் ஆண்டின் துன்ப நிகழ்ச்சிகளைப் பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது.

**581.** கதிரவன் எழுமுன் எழுந்து, கதிர் படும்வரையில் கள்ளங்கடமில்லாமல் உழைத்தும் கால்வயிற்றுக் கஞ்சிக்கும் வழியற்ற நிலையிலும் தொழில் நேர்மை தவறாது காடழித்து நாடுசமைத்த தமிழினம், வளர்ச்சிப் படிகளில் கால்வைக்க முடியாமல் தடுமாறும் நிலையை உணர்த்தும் பாடல்.

**582.** உலகப் பொருளாதார மந்தநிலையையும், அதனால் நாட்டில் ஏற்பட்ட முடக்கங் களையும் பாடல் எடுத்துரைக்கிறது.

**587.** மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் முதன்முதலில் பெரிய அளவில் கோலாலம்பூர் நகர மண்டபத்தில் நடத்திய ஒன்பான்சுவைக் கவியரங்கில் புலவர் மு. சேதுராமன் தலைமையில் பாடிய பாடலின் சில பகுதிகள்.

**604.** தமிழ்மலர் நாளிதழ் நடத்திய (சிங்கப்பூர்) வெண்பாப் போட்டியில் தேர்வுபெற்ற பாடல்.

**607.** பள்ளிக்குச் சென்று திரும்பிய மகனைப் பிற்பகலில் இசை வகுப்பிற்கு அனுப்பி வைத்தார் தந்தை. வகுப்பு முடிந்து திரும்பி வந்தபோது மகன் சாலை இடரில் காலமானான் என்ற செய்தி வந்தது. அத் தீச் செய்தியைத் தாங்க இயலாத தந்தை (கவிஞர்) வடித்த செந்நீரே இப் பாடல்.

**612.** மலைமகள் திங்களேட்டில் பரிசுபெற்ற பாடல்.

**617.** மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, இந்தோனேசியா, பிலிப்பைன்ஸ், புருணை ஆகிய நாடுகளின் கூட்டமைப்பாகும் 'ஆசியான்'. தென்கிழக்காசிய நாடுகளின் ஒற்றுமை, புரிந்துணர்வு, பொருளாதாரம், படைபலம் முதலியவற்றில் ஒன்றுக்கொன்று உதவிக்கொள்வதே இதன் தலையாய நோக்கமாகும். இவ் வமைப்பு 1967ஆம் ஆண்டில் உருவானது. புருணை 1984இல் இணைந்தது.

**619, 620, 621.** கவிதைக் கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

**623.** கடல்மட்டத்திலிருந்து 1524 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளன கேமரன்மலைத் தேயிலைத் தோட்டங்கள் இயற்கையழகு வாய்ந்த பகுதி; குளிர்மையும் செழுமையும் இப் பகுதியின் சிறப்புகளாகும். வண்ணமலர்களுக்குப் பெயர்போன இவ்விடம் தரமிக்க தேயிலை உற்பத்தியிலும் முன்னிலை வகிக்கிறது. இங்குப் பெண்கள் தேயிலைக் கொழுந்துகளைப் பறிக்கும் காட்சி மனத்தைக் கவரும் தன்மையது.

**625.** மலாயாவில் இன்னும் நாகரிக வாழ்வுமுறைக்குத் திரும்பாத பழங்குடியினரும் வாழ்கின்றனர். அவர்களுள் பல பிரிவுகள் உண்டு. அவர்களின் மேம்பாட்டிற்கு அரசு பேரளவு உதவிவருகிறது. பழங்குடி மக்கள் மனம் மகிழ அவர்கள் வாழ்விடத்திற்கு மன்னர் வருகை புரிந்ததைப் பாடல் சொல்கிறது.

**626, 627.** உரிமம் (Licence) பெற்ற சூதான நான்கு எண் பரிசு சீட்டு (லாட்டரி) பற்றிய பாடல் இது. விரும்பும் நான்கு எண்களை (Four Digit) உரிமம் பெற்ற கடைகளில் வாங்கும் 'பைத்தியங்கள்' வெற்றிகிட்டும் எண்களைத் தேடக் கையாளும் வழிமுறைகள் கொலையில்கூட முடிவதுண்டு. 'போலிச் சாமியார்கள்' தரும் எண்களை நம்பி ஏமாறுவோர் ஏராளம். "வெற்றி எண் குறித்துத் தரப்படும்" என்று தாளிகைகளில் விளம்பரம் செய்து அதனை நம்பும் பலவீனர்களால் பணக்காரர் ஆவோரும் உளர். அவ் வவலங்களை விளக்குகிறது பாடல்.

**628.** தமிழ்நேசன் பவுன் பரிசு திட்டத்தில் (ஒவ்வொரு மாதமும் ஒரு சிறந்த கவிதைக்குத் தங்கப் பதக்கம் வழங்கும் திட்டம்) 1974 ஜூலை மாதப் பரிசைப் பெற்ற கவிதை.

**629.** பாடல் 8இன் பின்புலம் - குறிப்புரை காண்க.

**649.** முன்னாள் பாகிஸ்தான் பிரதமர் ஸுல்ஃபிகார் அலி புட்டோவுக்கு, இராணுவப் புரட்சி

மூலம் ஆட்சியைக் கைப்பற்றிய அதிபர் ஜியாவுல் ஹக் தூக்குத்தண்டனை விதித்தபோது, புட்டோவுக்குக் கருணை காட்டுமாறு உலகமே விண்ணப்பம் செய்தது. மலேசியக் கவிஞரும் தம் விண்ணப்பத்தைப் பாமூலம் விடுத்தார். இறுக்கிய கயிற்றைத் தளர்த்த எவற்றாலும் முடியாமற் போய்விட்டது.

## ஆ. பாட்டுடைத் தலைவர்கள்

### வாழ்த்து

*1. துவாங்கு அப்துல் ரஹ்மான் இப்னி அல் மர்ஹூம் துவாங்கு முகம்மது* *323*

(Tuanku Abdul Rahman Ibni Al-Marhum Tuanku Muhammad, DDN, SMN, The Yang Di-Pertuan Besar of Negeri Sembilan)

*பிறப்பு : 1895* *மறைவு : 1.4.1960*

விடுதலை பெற்ற மலேசியாவின் முதல் பேரரசராய்த் தேர்ந்தெடுக்கப்பெற்ற சிறப்புக்குரிய இவர், 3.8.1957இல் அரியணையேறினார். மூன்றாண்டுகள் ஆட்சிபுரிந்து, பதவியில் இருந்தபோதே காலமானார். மலேசிய நாணயத் தாள்களில் இடம்பெற்றிருப்பது இவருடைய உருவமே.

பேரரசர்முறை தோன்றிய வரலாறு

மலேசிய நாட்டு விடுதலைத் தந்தையான துங்கு அப்துல் ரஹ்மான், நாட்டுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பை அரசியல் கட்சிகளுக்குத் தந்தால், அது பதவிப் போராட்டங்களுக்கு வழிவகுத்துக் குழப்பங்கள் ஏற்படுத்தும் எனக் கருதி இம் முறையைத் தோற்றுவித்தார். அஃதாவது மலேசியாவின் 9 மாநிலங்களில் ஆட்சிபுரியும் சுல்தான்களுள் (Sultan) ஒருவர் சுற்றுமுறையில் ஐந்து ஆண்டுகளுக்கு ஒருவரைப் பேரரசராய்த் தேர்ந்தெடுப்ப தென்பதே அம் முறையாகும். கூட்டரசு வளாகத்தைத் (தலைநகர்) தவிர மற்ற 4 மாநிலங்களின் ஆட்சித் தலைவர்கள் ஆளுநர் (Governor) ஆவர். மாநிலங்களில் சுல்தான்கள் தலைமை யேற்க, நாட்டுக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற பேரரசர் தலைமையேற்கும் இம் முறை மலேசியாவில் மட்டுமே உண்டு.

*2. துங்கு அப்துல் ரஹ்மான் புத்ரா, அல்ஹாஜ், மலேசியத் தந்தை* *324*

(Tunku Abdul Rahman Putra Al-Haj. - Bapa Malaysia)

*பிறப்பு : 8.2.1903* *மறைவு : 6.12.1990*

கெடா மாநில அரசமரபில் (சுல்தான்) தோன்றிய இளவரசராய இவர், மேல்நாடு சென்று சட்டம் பயின்றவர்; பிரிட்டிசாரின் ஆட்சியில் அடிமைப்பட்டுக் கிடந்த மலாயா நாட்டை விடுவிக்க வேண்டுமெனும் விடுதலைவேட்கை கொண்டு, அமைதி வழியில் போராட்டத்தைத் தொடங்கினார். பிரித்தாளும் தந்திரத்தில் வல்லவராய வெள்ளையர், நாட்டின் முக்கிய இனங்களாய மூன்று இனத்தவரும் ஒன்றிணைந்து கோரிக்கை விடுத்தால்தான் இது பரிசீலிக்கப்படுமென்று கூறினர். மாந்தநேய மிக்க நெஞ்சினராய துங்கு, "ஐக்கிய மலாய் தேசிய இயக்கம்" (UMNO), "மலாயாச் சீனர்ச் சங்கம் " (MCA),

“மலாயா இந்தியர் காங்கிரசு” (MIC) ஆகிய மூவின அரசியல் இயக்கங்களை ஒன்றிணைத்துக் கூட்டணி அமைத்தார். 1955இல் நடந்த பொதுத்தேர்தலில் போட்டியிட்டு வென்று முதலமைச்சரானார். மற்ற இனத்தவர்க்கும் தம் அமைச்சரவையில் இடம்தந்தார். அவர் தலைமையில் கூட்டணி தொடர்ந்து நடத்திய போராட்டத்தில் மூவினமும் சமத்துவமாக வாழத் தயாராகிவிட்டதை அறிந்த பிரிட்டிசார் 31.8.1957இல் நாட்டிற்கு விடுதலை வழங்கினர். விடுதலைத் தந்தையான துங்கு நாட்டின் முதல் தலைமை அமைச்சரானார். 1963இல் சிங்கப்பூர், பிரிட்டிஷ் போர்னியோ (இப்போதைய சபா), சரவா ஆகிய நாடுகளையும் மலாயாவொடு இணைத்து மலேசியாவை உருவாக்கினார்; தொடர்ந்து நாட்டைப் பலவிதத்தில் முன்னேற்றி உலகின் பாராட்டுதலைப் பெற்ற துங்கு 1969இல் பதவி ஓய்வுபெற்றார். 6.12.1990இல் புகழுடம்பெய்தினார்.

*3. அப்துல் ரசாக், மேம்பாட்டுத் தந்தை, துன்* ***325***

(Tun Abdul Razak, - Bapa Pembangunan Negara)

*பிறப்பு : 11.3.1922* *மறைவு : ஜனவரி 1976*

நாட்டுத் தந்தையான துங்குவுடன் சேர்ந்து விடுதலைக்குப் பாடுபட்ட வீரர்களுள் முதன்மையானவர். அர்ப்பணிப்பு உணர்வும், அஞ்சாநெஞ்சமும், நிருவாகத் திறனும் ஒருங்கே அமையப்பெற்ற இவர் தலைமையில் உருவான 'ரசாக் கல்வித்திட்டம்' (1956) விடுதலை பெற்ற நாட்டின் தேசிய மொழியை முதன்மையாகக் கொண்டு தாயக உணர்வுமிக்க சிறந்த குடிமக்களை உருவாக்க வகுக்கப்பட்ட முதலாவது கல்வித் திட்டமாகும். கிராமப்புற மேம்பாட்டில் பேரார்வம் கொண்டிருந்த இவரால் உருவாக்கப்பட்டதே 'பச்சைப் புத்தகத் திட்டம்'. இத் திட்டத்தின் நோக்கம் தங்களுக்குத் தேவைப்படும் காய்கனிகளை, பயன்படுத்தாமல் கிடக்கும் நிலங்களில் தாமே பயிர்செய்து கொள்வதாகும். துங்குவின் அமைச்சரவையில் துணைப் பிரதமராயிருந்த இவர் 1969இல் நாட்டின் இரண்டாம் பிரதமரானார்; நாட்டைப் பல்லாற்றானும் மேம்படுத்தி மேம்பாட்டுத் தந்தை என்னும் சிறப்பினைப் பெற்றுத் தம் பதவிக் காலத்திலேயே புகழுடம்பு எய்தினார்.

*4. ஆறுமுக நாவலர்* ***326***

*பிறப்பு : 18-12-1822* *மறைவு : 5-11-1879*

யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த நல்லூரில் பிறந்த இவர் தந்தையார் பெயர் கந்தப்பிள்ளை, தாயார் சிவகாமி அம்மையார். இளமையிலேயே தமிழ் இலக்கண இலக்கியங்களையும், சைவ சித்தாந்த வேதாந்தங்களையும் பழுதறக் கற்றார். இவர், பன்னிரண்டாம் அகவையில் ஆங்கிலக் கல்லூரியில் (யாழ்ப்பாணம் சென்ட்ரல் கல்லூரி) ஏழு ஆண்டுகள் பயின்று சிறப்புத் தேர்ச்சிபெற்று அதே கல்லூரியில் தமிழும் ஆங்கிலமும் கற்பிக்கும் ஆசிரியராய்ப் பதினான்கு ஆண்டு காலம் பணிபுரிந்தார்; இக் காலத்தில் கல்லூரி முதல்வர் மறைத்திரு பெர்சீவல் வேண்டுகோளின்படி கிறித்தவ மறையாகிய பைபிளைத் தமிழில் மொழி பெயர்த்தார்; 1842ஆம் ஆண்டு ஆகஸ்டில் வண்ணார்பண்ணையில் 'செந்தமிழ்க் கழகம்' என்னும் பெயரில் தமிழும் சைவமும் கற்பிக்கும் பள்ளியை நிறுவினார். தமிழ்ப்பள்ளிப் பாடநூல்களை ஒழுங்கு செய்ததில் இவர் தொண்டு குறிப்பிடத்தக்கதாகும். இவர் வெளியிட்ட நன்னூல் காண்டிகையுரை, திருமுருகாற்றுப்படை உரை, சைவ வினா விடைகள் முதலாய நூல்கள் இவருடைய தமிழ்த் தொண்டிற்குக் கட்டியங் கூறுவனவாகும். வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகளார் வெளியிட்ட 'திருவருட்பா'வை மறுத்து அதனை 'மருட்பா' என வழக்காடிய தரப்பில் முதன்மையானவர்களுள் ஒருவராய் இருந்தார் என்பது,

இவருடைய தமிழ்த் தொண்டின் பெருமையைக் குறைத்து மதிப்பிடுவதற்குக் காரணமாக மாட்டாது. 1847இல் யாழ்ப்பாணம் சிவன்கோயிலில் தம்முடைய இனிய சொற்பொழிவினைத் தொடங்கிய இவர், வெள்ளிக்கிழமைதோறும் எங்கிருந்தாலும் தவறாது சொற்பொழிவாற்றி வரலானார். இவருடைய சொற்பொழிவின் வன்மையை உணர்ந்து திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த அம்பலவாண தேசிகரும் சுப்பிரமணிய தேசிகரும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையும் கூடி இவருக்கு 'நாவலர்' பட்டம் அளித்துச் சிறப்புச் செய்தனர்.

## *5. இராமசாமி, திராவிடர் தந்தை, பெரியார், ஈ. வே.* *327*

*பிறப்பு : 17.9.1879* *மறைவு : 24.12.1973*

இருண்டு கிடந்த தமிழகத்தில் அறிவு விளக்கேற்றிய தந்தை பெரியார் ஐதிகத்தில் மூழ்கிய ஈரோட்டு வேங்கடசாமி நாயக்கரின் மைந்தர். இளமை முதலே ஏற்றத்தாழ்வுகளையும் மூடநம்பிக்கைகளையும் எதிர்க்கும் குறும்புக்காரராய் வளர்ந்த இவர், பின்னாளில் சாதிப் பெரும்பிணக்கை அழிக்கும் போராட்டத் தளபதியாக மாறினார். தொடக்கத்தில் காங்கிரசு பேரியக்கத்தில் இணைந்திருந்தார் (1920); அதனில் நிலவிய சாதி வேறுபாடுகளைக் கண்டு வெறுத்து வெளியேறிச் சுயமரியாதை இயக்கம் கண்டார் (1925); காங்கிரசில் இருந்த காலத்திலேயே வைக்கம் போராட்ட வீரராய்ப் புகழ்பெற்ற இவர் சுயமரியாதை இயக்கத்தைச் சாதி எதிர்ப்பு இயக்கமாயும் மூடநம்பிக்கையை ஒழிக்கும் அமைப்பாயும் உருவாக்கினார்; பிராமணர்அல்லாதார் நல உரிமைச் சங்கமாய்த் தொடங்கிப் பின்னர் நீதிக் (Justice) கட்சியாய் மறுமலர்ச்சி கண்ட இயக்கத்தில் இணைந்து பிராமணர் அல்லாதாரின் பிரதிநிதித்துவ உரிமைகளுக்காகப் போராடினார்; பின்னர் அவ் வியக்கமே திராவிடர் கழகமாய்ப் பெயர்மாற்றம் பெற்றது. காலமெல்லாம் 'சனாதன' எதிர்ப்பிலும் மூடநம்பிக்கை ஒழிப்பிலும் தமிழர்மீது சுமத்தப்பட்ட பிறப்பு இழிவை ஒழிக்கும் மானப் போராட்டத்திலும் கழித்தார்.

தளர்ந்த நிலையிலும் ஓய்வின்றி உழைத்த தந்தை பெரியார் தமிழ்மக்களிடையே சிந்தனைப் புரட்சியை ஏற்படுத்தினார்; தமிழ்த் தலைவர் பலரை உருவாக்கினார். அவர்களுள் பேரறிஞர் அண்ணா, கலைஞர் மு. கருணாநிதி, பேராசிரியர் க. அன்பழகன், நாவலர் இரா. நெடுஞ்செழியன், சொல்லின் செல்வர் ஈ. வே. கி. சம்பத்து, அரங்கசாமி, பட்டுக்கோட்டை அழகிரிசாமி, விடுதலை ஆசிரியர் கி. வீரமணி முதலாயோர் குறிப்பிடத் தக்கவர். அன்றைய முதலமைச்சர் மூதறிஞர் இராசாசி கொண்டுவந்த குலதர்மக் கல்வித் திட்டத்தை எதிர்த்து இவர் நடத்திய போராட்டம், பெருந்தலைவர் காமராசரை முதல்வராக்கியது. 1938இல் இவர் நடத்திய இந்தி எதிர்ப்புப் போராட்டம் தமிழ்மொழியின் வாழ்வை உறுதிசெய்தது. சமுதாயத்திற்கு உழைப்பதையே நோக்கமாய்க்கொண்டு காலமெல்லாம் போராடிய இவர், தம்மை வலிய நாடிவந்த பதவிகளையும் பட்டங்களையும் முற்றிலுமாய்ப் புறக்கணித்தார். இந்தத் தமிழ்ச் சமுதாயம் பகுத்தறிவொடும் மானத்தொடும் வாழ்வதற்கான வழிகளில் போராடுவதைத் தவிரத் தமக்கு வேறு எந்த நோக்கமும் இல்லை எனத் திட்டவட்டமாய் அறிவித்தார்; பதவிச் சுகங்களை நாடிப் பொதுவாழ்வில் ஈடுபடுபவர்களைக் கடுமையாய்க் கண்டித்தார்.

மிகப் பெரிய சிக்கனக்காரராய இவர் மக்கள் தமக்கு வழங்கிய அன்பளிப்புகளையும் பிற பரிசில்களையும் தம் சொத்துகளையும் சேர்த்துவைத்து மிகப்பெரும் சொத்தாக மக்களுக்கு விட்டுச்சென்றார். உலகச் சிந்தனையாளர்களாய சாக்ரட்டீஸ், கன்பூசியஸ், சொராஸ்டிரார்,

ரூசோ, வால்டேர் போன்றவர்களின் வரிசையில் வைத்து எண்ணத்தக்க பெருஞ்சான்றோராய தந்தை பெரியாரின் அருமையை உணர்ந்த ஐ.நா.வின் யுனெஸ்கோ நிறுவனம் இவர் ஆற்றிய தொண்டுகளைப் பாராட்டிச் சிறப்புச் செய்தது.

*6. இராமதாசர், முதுபெரும் தமிழ்ப் புலவர், சுவாமி* *328*

*பிறப்பு : 7.9.1916* *மறைவு : 28.4.1991*

தமிழகத்தில் கொழுந்துறையில் பிறந்த இவர், 1937ஆம் ஆண்டு மலேசியாவுக்கு வந்தார். இவர் ஒரு பல்கலை வல்லுநர்; பன்மொழி அறிஞர்-குறிப்பாய்த் தமிழில் பெரும்புலமை பெற்ற பேரறிஞர். இவர் பினாங்கில் செந்தமிழ்ப் பாடசாலையை உருவாக்கியதொடு (1939), செந்தமிழ்க் கலாநிலையத்தையும் (1945) அமைத்தார். அவற்றின் வாயிலாய் இளைஞர் பலரைத் திறன்மிக்க புலவர்களாய் விளங்கச் செய்தார். சித்தமருத்துவம், சிலம்பம், சோதிடம் (கணியம்) முதலாய பல துறைகளிலும் இவர் பணி மேம்பட்டு நின்றது. இவர் மதிப்புறு முனைவர் (D.Litt.) பட்டம் பெற்றவர். இப் பெருமகனார் தமிழகம் பரமக்குடியிலுள்ள கொழுந்துறையில் தம் 77ஆம் அகவையில் புகழுடம்பெய்தினார். பன்னூல் ஆசிரியருமாய இவர் பணிகள் மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் என்றென்றும் நிலைத்துநிற்கும் பெற்றியனவாகும்.

*7. சுல்தான் முகமட் இஸ்கந்தர் அல்ஹாஜ் இப்னி அல் மார்ஹூம் சுல்தான் இஸ்மாயில்* *329*

(Yang Di-Pertuan Agong Al-Mutawakkil Al Allah Sultan Mohammood Iskandar Al Haj Ibni Al-Marhum Sultan Ismail, DK, SPMJ (Brunei) SSIJ, PIS, BSI Sultan Of Johor.)

*பிறப்பு : 8.4.1932*

மலேசியாவின் 8ஆம் பேரரசராய்த் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர், 21.9.1984இல் அரியணை ஏறினார். இவரது முடிசூட்டு விழா 15.11.1984இல் நடந்தது; ஐந்து ஆண்டுகள் (20.9.88வரை) ஆட்சியிலிருந்தார்.

*8. உபைதுல்லா, டான்ஸ்ரீ, ஹாஜி, எஸ்.ஓ.கே.* *330*

*பிறப்பு : 18.6.1918*

தமிழ்நாட்டுத் தஞ்சை மாவட்டத்திலுள்ள ராஜகிரியில் பிறந்த இவர், அங்கேயே தொடக்கக் கல்வியையும், பாபநாசத்தில் உயர்கல்வியையும், அரசாங்கக் கலைக் கல்லூரியில் பட்டப் படிப்பையும் பெற்றதொடு ஜமாலியா அரபிக் கல்லூரியில் சேர்ந்து, இஸ்லாமியச் சமயக் கல்வியையும் கற்றார். 1931ஆம் ஆண்டு மலாயாவுக்கு வந்தார்; 1940களில் இந்திய தேசிய இராணுவத்தில் இணைந்தார், மலாயா விடுதலைக்குப் பெரும் பணியாற்றினார்; மலாயாவின் மூத்த அரசியல் தலைவர்களோடெல்லாம் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தார். 1948முதல் 1959வரை கூட்டரசு சட்டமன்ற உறுப்பினராயும், 1950 முதல் 1980வரை மேலவை (செனட்) உறுப்பினராயும், 1971முதல் 1980வரை மேலவைத் துணைத் தலைவராயும், 1971ஆம் ஆண்டு தேசிய ஒருமைப்பாட்டு மன்ற உறுப்பினராயும் அரசு உயர்பதவிகளில் அமர்ந்து நாட்டிற்கு நற்பணியாற்றினார். மலேசிய இந்தியரின் அரசியல் கட்சியான ம.இ.கா.வின் நிறுவனர்களில் ஒருவராய இவர், அதன் தேசிய உதவித் தலைவராய்ப் பொறுப்பேற்றிருந்ததொடு, இன்றுவரை அதன் அவைத்

தலைவராயும் விளங்கிவருகிறார். தமிழ்மொழி, இலக்கிய வளர்ச்சி, சமுதாய முன்னேற்றம் முதலாயவற்றிற்கு அரும்பணியாற்றியுள்ளார். 1990ஆம் ஆண்டில், பதினைந்திலக்க வெள்ளியை முதலீடாக வைத்து இவர் நிறுவிய 'உபைதி அறக்கட்டளை' (Ubaidi Trust) இவரது உயர்ந்த கொடை நெஞ்சிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். பல்வேறு இஸ்லாமிய அமைப்புகளின் நிறுவனராயும் தலைவராயும் தகவுரைஞராயும் விளங்கி அளப்பரிய பணிகள் ஆற்றியுள்ளார். இவரது சமயப் பணிக்கென மலேசிய அரசு 1989இல் மிக உயரிய 'மாஅல் ஹிஜ்ரா' விருதை வழங்கிச் சிறப்பித்தது. இவர் தமக்களிக்கப்பெற்ற மேற்படி விருதுக்கான முப்பதாயிரம் வெள்ளியை மலேசியாவில் உள்ள பல இஸ்லாமியப் பிரசார இயக்கங்களுக்கும் உயர்கல்வி நிறுவனங்கள் உள்ளிட்ட 115 இஸ்லாமிய அமைப்புகளுக்கும் நன்கொடையாய்ப் பகிர்ந்தளித்தார்.

### *9. ஊ தாண்டு (U Thant)* *331*

*பிறப்பு : 22.1.1909* *மறைவு : 1974*

பாந்தானாவில் (மியான்மார்-பர்மா) பிறந்த இவர், சிறந்த கல்வியாளர்; பள்ளித் தலைமை ஆசிரியராயும் பணியாற்றி உள்ளார். இரண்டாம் உலகப் போருக்குப்பின் அரசு ஊழியராய் - வானொலி இயக்குநராய் (1948) - தகவல் அமைச்சின் செயலாளராய் (1949) - ஒருலக (ஐக்கிய நாடுகள்) அவையில் பர்மாவின் பேராளராய்ப் (1952-53) பதவிவகித்தார். பின்னர் 30.11.1962முதல் 1972வரை ஒருலக அவையின் நிரந்தரச் செயலாளராய்ப் பொறுப்பில் இருந்தார். அர்ப்பணிப்பு மனமுடைய பௌத்தராய இவர், ஒருமித்த கோட்பாட்டை உலகப் பிரச்சினைகளைத் தீர்க்கப் பயன்படுத்தினார். இவர் எழுதிய நூல்களில் மிகப் புகழ்பெற்ற நூல் 'உலக அமைதியை நோக்கி' (Towards World Peace) என்பதாகும்.

### *10. கருணாநிதி, டாக்டர், கலைஞர், மு.* *331*

*பிறப்பு : 3-6-1924*

தமிழ்நாட்டின் தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த திருக்குவளையில் பிறந்த இவர் உள்ளூரில் தொடக்கக் கல்வியும் திருவாரூரில் உயர்நிலைக் கல்வியும் கற்றார். பள்ளி நாள்களிலேயே சமுதாயச் சீர்திருத்தத்தில் ஈடுபாடு கொண்டதால் தந்தை பெரியாரின் திராவிடர் கழகத்தில் சேர்ந்தார்; 1938இல் நடந்த இந்தி எதிர்ப்புப் போரில் கலந்துகொண்டார்; 1949இல் தந்தை பெரியாரிடம் இருந்து கருத்து வேறுபாடு காரணமாகப் பிரிந்து திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றுவித்த அறிஞர் அண்ணாவுடன் சேர்ந்தார்; 1957இல் தேர்தலில் வென்று தமிழ்நாடு சட்டமன்ற உறுப்பினரானார்; 1967இல் அறிஞர் அண்ணா தலைமையில் தி.மு.க. ஆட்சி அமைந்தபோது இவர் பொதுப்பணித்துறை அமைச்சரானார்; அறிஞர் அண்ணா மறைவிற்குப் பின் தமிழக முதல்வரானார்; 1975இல் நெருக்கடிநிலை விதிக்கப்பட்டதை எதிர்த்தார். அதனால் 1976இல் இவர் தலைமையிலாய தி.மு.க ஆட்சி கலைக்கப்பட்டது. அதன்பின் மிகக் கொடிய இருண்ட காலம் இவரைச் சூழ்ந்தது. தீக்கொழுந்து போன்ற போராட்ட இயல்புகொண்ட இவர் கடுமையாய்ப் போராடி 1989இல் மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றினார். 1991ஆம் ஆண்டு ஜனவரி 30ஆம் நாள் ஒரு சிறுபான்மை நடுவணரசால் வலுவான பெரும்பான்மை கொண்ட இவருடைய ஆட்சி கலைக்கப்பட்டது. 1996இல் நடந்த பொதுத்தேர்தலில் வியக்கவைக்கும் பெரும்பான்மையில் வெற்றிபெற்று நான்காம் முறையாக முதலமைச்சராகி வரலாறு படைத்தார். இவர்தம் ஆட்சிக் காலத்தில் சென்னையில் திருவள்ளுவருக்கு அழகிய வள்ளுவர் கோட்டமும் பூம்புகாரில்

சிலப்பதிகாரக் கலைக்கூடமும் எழுப்பினார். தாழ்த்தப்பட்டவர்களும் கோவில் அருச்சகராக உரிமை நல்கும் சட்டம் இயற்றினார் (இச் சட்டம் உச்ச நீதிமன்றத்தால் விலக்கப்பட்டது).

பெண்களுக்குச் சொத்துரிமை நல்கும் சட்டத்தை இயற்றினார். பள்ளிநாள்களிலேயே கையெழுத்துச் சுவடியாக 'முரசொலி' இதழைத் தொடங்கினார். பின்னர் அதனையே கிழமை ஏடாகவும் அப்பால் நாளேடாகவும் அச்சேற்றினார். வியக்கத்தக்க தமிழாற்றல் உடைய இவர் பராசக்தி, மனோகரா, மலைக்கள்ளன், பூம்புகார் முதலாய ஏராளமான திரைப்படங்களுக்கு உரையாடல் எழுதியுள்ளார். இத் துறையில் இன்றளவும் இவரே தனிச் சிறப்புடையவர் எனப் போற்றப்படுகிறார். இவர், தமிழ்த் திரைப்பட உலகில் நுழைந்த 50ஆம் ஆண்டைக் குறிக்கும் வகையில் இவருக்குப் பொன்விழா எடுத்துச் சிறப்புச் செய்தது தமிழ்த்திரைப்பட உலகம் (1996). அவ் விழாவை ஒட்டிச் சிறப்புமலர் ஒன்று வெளியிடப்பட்டது. தங்கத்தாலும் வெள்ளியாலும் செய்யப்பட்ட ஆறடித் தூவல் (பேனா) நினைவுப் பரிசாக வழங்கப்பட்டது. நிறைய நூல்களை எழுதியுள்ள இவர் புதுமுறை விளக்கவுரையாகத் திருக்குறளுக்குத் தீட்டியுள்ள குறளோவியம், சங்கத் தமிழ், தன்வரலாறு - நெஞ்சுக்கு நீதி (இரண்டு தொகுதிகள்), ரோமாபுரிப் பாண்டியன், திருக்குறள் கலைஞருரை முதலாயவை தமிழுக்குக் கிடைத்த அரிய செல்வங்களாகும். 'ரோமாபுரிப் பாண்டியன்' என்னும் வரலாற்றுப் புதினம் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் இராசராசன் பரிசினைப் பெற்றுள்ளது. புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசனிடம் ஆழ்ந்த ஈடுபாடுகொண்ட இவர் அவருடைய பாடல்களை நாட்டுடைமை ஆக்கினார்.

எளிய குடும்பத்தில் பிறந்து கடுமையான உழைப்பாலும் விடாமுயற்சியாலும் உயர்ந்த இவர் ஒரு தேசிய வீரர் (National Hero) ஆவார். இவருடைய வாழ்வும் வரலாறும் வளரும் தலைமுறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம். இவருடைய பல்துறை அறிவும் பேச்சாற்றலும் வியப்புக்குரியன. தமிழ், தமிழர் நலனுக்காக இவர் மேற்கொண்டிருக்கும் அறப்போராட்டம் உலகத் தமிழர்களால் மதித்துப் போற்றப்படுகின்றது; 'தமிழினத் தலைவர்' என மதிக்கச் செய்கிறது. இவர் ஆட்சித்திறனை இவருடைய அரசியல் எதிரிகளும் பாராட்டுகின்றனர்.

## *11. காந்தியடிகள் (Mahatma Gandhi)* *333*

*பிறப்பு : 2.10.1869* *மறைவு : 30.1.1948*

இந்திய நாட்டின் விடுதலைத் தந்தையான இவர் பத்திநெறி தழைத்த குடும்பத்தில் பிறந்தார்; மேலைநாட்டில் வழக்கறிஞர் பட்டம் பெற்றார்; வணிகத் தொடர்பான ஒரு வழக்கைத் தீர்ப்பதற்காகத் தென்னாப்பிரிக்கா சென்று, அங்கேயே தமது பொதுப்பணியைத் தொடங்கினார்; இளமைமுதல் அறநெறியில் தீராத பற்றுக்கொண்டிருந்தார்; யாருக்கும் எவ்வகையிலும் இன்னா செய்யக்கூடாது என்னும் கொள்கையில் நிலைத்து நின்றார்! "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை அற்றே தவத்திற் குரு" என்னும் திருக்குறளுக்கு உண்மையான இலக்கியம் இவரே. இந்திய சுதந்திரத்திற்காக அறவழியிலேயே நின்று அயராமல் பாடுபட்டார்; இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டார்; தம் காலத்திலேயே நாட்டு விடுதலையைப் பெற்றுத்தந்தார்; ஜவகர்லால் நேரு, வல்லபாய் பட்டேல் போன்ற தேசியத் தலைவர்களை உருவாக்கினார்; இறுதியில் நாதுராம் கோட்சே என்ற கொடியவனால் சுட்டுக் கொல்லப்பட்டார்.

திருக்குறளுக்கு உண்மையான இலக்கியம் இவரே. இந்திய சுதந்திரத்திற்காக அறவழியிலேயே நின்று அயராமல் பாடுபட்டார்; இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டார்; தம் காலத்திலேயே நாட்டு விடுதலையைப் பெற்றுத்தந்தார்; ஜவகர்லால் நேரு, வல்லபாய் பட்டேல் போன்ற தேசியத் தலைவர்களை உருவாக்கினார்; இறுதியில் நாதுராம் கோட்சே என்ற கொடியவனால் சுட்டுக் கொல்லப்பட்டார்.

*12. கிருபானந்தவாரியார் சுவாமிகள், திருமுருக* *334*

*பிறப்பு : 5.8.1906* *மறைவு : 7.11.1993*

தமிழகச் சான்றோராய இவர் இளமையிலேயே தமிழறிஞராய்ச் சிறப்புப் பெற்றார். சிறுவயது முதலே இசைச்சொற்பொழிவுத் திறன் கைவரப்பெற்று மறையும்வரை பல்லாயிரக் கணக்காய பொழிவுகள் நிகழ்த்தினார். அனுபவக் கல்வி வழியாகவே இவர் திறன் அனைத்தையும் பெற்றவர் என்று மற்றச் சான்றோர் கூறுவர். இராமாயணம், மகாபாரதம், பெரியபுராணம், கந்தபுராணம் முதலாய எல்லா நூல்களிலும் மிகச்சிறந்த புலமை பெற்றவர். திருப்புகழ் பாடுவதிலும் திருமுறை விளக்கங்களிலும் இவரே தலைசிறந்தவராவார். தமிழகத்தில் இவர் சொற்பொழிவாற்றும்காலை திரைப்படக் கதை ஆசிரியர்களும் நாடக ஆசிரியர்களும் பேராசிரியர்களும் எதிரில் அமர்ந்து குறிப்பெடுத்துக் கொள்வது வழக்கம். இவர் சொற்பொழிவுகளைக் கேட்டுத் திருந்திய குடும்பங்கள் பல. அயராமல் இசைச் சொற்பொழிவு ஆற்றிவந்த இவர் தம் 87ஆம் அகவையில் 7.11.1993 அன்று வானூர்தியில் வருங்கால் புகழுடம்பெய்தினார்.

*13. குப்புசாமி, செந்தமிழ்ச்செல்வர், சி. வீ.* *334*

*பிறப்பு : 10.4.1915* *மறைவு : 1973*

எழுத்தாளர் பலருக்கு வழிகாட்டியாய்த் திகழ்ந்த இவர் தமிழ், இந்தி, ஆங்கிலம், ஜப்பான் ஆகிய மொழிகளையும் அறிந்தவர்; தமிழிலும் ஆங்கிலத்திலும் சிறப்புத் தேர்ச்சி பெற்றார்; ஆங்கிலத்தில் எழுதவும் பேசவும் நல்ல திறன் பெற்றார். சிறந்த எழுத்தாளரும் பேச்சாளருமாய இவர், ஒரு நல்ல நாடக நடிகருமாவார். இந்திய சுதந்திரக் கழகத்தில் பணியாற்றியதொடு, 'சுதந்தர இந்தியா' (1942) என்னும் நாளிதழையும் சுதந்தரோதயம் (1942), நவயுகம் (1946) முதலாய ஏடுகளையும் நடத்தினார். இவரை, ஜப்பானிய விரோதி என்று குற்றம் சாற்றி அன்றைய ஜப்பானிய ஆட்சி ஒருவாரம் சிறையில் வைத்தது. ஜப்பானியரின் லாக்கப்பில் ஏழு தினங்கள் (1942), வருங்கால நவயுகம் (1937), பெரியார் ஈ. வே. இராமசாமி (1939) முதலாய நூல்களை எழுதி வெளியிட்டுள்ளார். ஹெச். ஜி. வெல்ஸ் ஆங்கிலத்தில் எழுதிய 'உலக வரலாறு' என்னும் நூலைத் தமிழில் மொழிபெயர்த்துத் தமிழ்முரசு ஞாயிறு பதிப்பில் தொடராக வெளியிட்டார். தமிழ்முரசு நாளிதழில் துணையாசிரியராயும், அரசாங்க வெளியீடான ஜனோபகாரி, வெற்றி ஆகிய வார இதழ்களுக்கு ஆசிரியராயும் பணியாற்றினார். குறிப்பாக மலேசியாவில் தோன்றிய பல இயக்கங்களுக்குச் சட்டதிட்டங்கள் இயற்றிக் கொடுத்த வல்லுநரும் ஆவார்.

*14. கிருஷ்ணதாசன், கவிமணி* *336*

*பிறப்பு : 25.12.1918* *மறைவு: 28.8.1983*

மலாயாவில் பிறந்த இவர், கவிஞர்கள் பலரை உருவாக்கினார். குறிப்பாகக் கவிஞர் கா.

## 15. சாமிநாதையர், பெரும்பேராசிரியர், உ. வே. 337

பிறப்பு : 1855 மறைவு : 1942

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை மாணவராய இவர் கும்பகோணம் அரசினர் கல்லூரியிலும் பின்னர்ச் சென்னை அரசினர் கலைக்கல்லூரியிலும் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றிப் பல நல்ல தமிழறிஞர்களை உருவாக்கினார்; மகாமகோபாத்தியாய (பெரும்பேராசிரியர்), டாக்டர் முதலாய பட்டங்களைப் பெற்று உயர்ந்தார். குழந்தைகள் இவரைத் 'தமிழ்த் தாத்தா' என அழைத்து மகிழ்வர். சிதலுக்கும், நீருக்கும், நெருப்பிற்கும் இரையாகி அழிந்துகொண்டிருந்த பழந்தமிழ் இலக்கியச் சுவடிகளைக் காப்பாற்றி அச்சேற்றிய சான்றோர்.

அ. சுவடிதேடிச் சீறாப் புராணத்தை அச்சிட்டதன்வழிச் சுவடி தேடி அச்சிடும் கலையைத்தொடக்கிவைத்தவர் (கி.பி. 1842) புலவர் நாயகம் ஷேக் அப்துல் காதிர் நைனார் லெப்பை ஆலிம்.

ஆ. தொல்காப்பியம் எழுத்ததிகாரத்தை அச்சிட்டதன்வழி (1847) சுவடிதேடி அச்சிடும் கலையை ஒருபடி உயர்த்தியவர் மழவை மகாலிங்கையர்.

இ. தொல்காப்பியம் சொல்லதிகாரத்தைப் பதிப்பித்ததன்வழி (கி.பி. 1868) சுவடிதேடி அச்சிடும் கலையை நிலைப்படுத்தியவர் யாழ்ப்பாணம் சி. வை. தாமோதரம் பிள்ளை.

இக் குறிப்பு ஐந்தாம் உலக இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மாநாட்டு மலரில் (ப. 54) இடம் பெற்றுள்ளது.

இச் சான்றோர்களின் தமிழ்ப்பாதுகாப்புப் பணியை மிகச் செம்மையாய் நிறைவேற்றிய பெருமைக்குரியவர் உ.வே.சா. எட்டுத்தொகை நூல்களில் ஐந்து நூல்களையும், பத்துப்பாட்டையும், சிந்தாமணி முதலாய காப்பிய நூல்களையும் மற்றும் பல்வேறு இலக்கிய நூல்களையும் செம்மையாய்ப் பதிப்பித்து வெளியிட்டார். இவர் பதிப்பித்த நூல்களுள் இவர் வரைந்திருக்கும் ஆராய்ச்சி உரைகள் நூலின் செம்பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணர்த்திக்காட்டும் நீர்மையன. இவர் தம்முடைய வரலாற்று நூலையும், சுவடி தேடுகையில் தமக்கு நேர்ந்த அனுபவங்களைச் சுவையாகக் கூறும் நூல்களையும் எழுதி வெளியிட்டுள்ளார்.

தமிழ் அச்சுக்கலைபற்றிய குறிப்புகள் : தமிழகம் தரங்கம்பாடியில் 1712இல் தமிழ்நூல்கள் அச்சேறின என்று மது. ச. விமலானந்தம் தம் தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியத்தில் (ப. 466) குறிப்பிட்டுள்ளார். இந்திய மக்கள் அச்சகம் அமைக்கப் பிரிட்டிசார் 3.8.1835இல்தான் இசைவு வழங்கினர் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இந்தியாவில் முதன்முதலில் அச்சான புத்தகம் தமிழ்ப்புத்தகம்தான் என்றும், அது 1578இல் அச்சேறியதென்றும், 'Doctrina Christam' என்னும் நூலின் தமிழாக்கம் என்றும், அது ஹென்றி குவிஸ் என்ற பாதிரியார் தமிழில் மொழிபெயர்த்த கிறிஸ்தவப் புத்தகம் என்றும் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா தினமணிச்சுடரில் எழுதியதை மா. சு. சம்பந்தன் தம் 'அச்சுக்கலை' என்னும் நூலில் (ப. 144) எடுத்துக் காட்டியுள்ளார்.

## 16. சாமிவேலு, டத்தோ ஸ்ரீ, டாக்டர், ச. 338

*பிறப்பு : 8.3.1936*

தோட்டப் பாட்டாளி மகனாய்ப் பிறந்த இவர், தமிழ்ப்பள்ளியில் தம் கல்வியைத் தொடங்கிச் சொந்த முயற்சியில் ஆங்கிலம் கற்று, படிப்படியாய் உயர்ந்து, பிரிட்டனில் கட்டடக் கலைஞராய்ப் (R.I.B.A.) பட்டம் பெற்றார் (1970-71). கலைத்துறையில் நடிகராய், பாடகராய், தயாரிப்பாளராய், இயக்குநராய் விளங்கிய இவர் 1965இல் வளரும் கலைஞர் கலைக் குழுவின் தலைவராகி '1941' என்னும் வரலாற்றுச் சிறப்புமிக்க நாடகத்தை அரங்கேற்றினார்; அரசியலில் முழு ஈடுபாடு காட்டத் தொடங்கி, பல இடையூறுகளைக் கடந்து 1979இல் ம.இ.கா.வின் தேசியத் தலைவரானார். 1974இல் நாடாளுமன்ற உறுப்பினரான இவர் 1978இல் துணை அமைச்சராகி, 1979இல் பொதுப்பணித்துறை அமைச்சரானார்; 1989முதல் 1995வரை எரிசக்தி, தொலைத்தொடர்பு, அஞ்சல் துறைகளின் அமைச்சரானார்; 1995இல் மீண்டும் பொதுப்பணி அமைச்சரானார். சாலைகள், சாலைப் போக்குவரத்து மேம்பாட்டுக்கு ஆற்றிய அரும்பணிகளுக்காக அமெரிக்காவின் ஐ. ஆர். எப். (I.R.F.) நிறுவனம் இவருக்கு 'ஆண்டின் சிறந்த மனிதர்' (Man of The Year) என்னும் விருது வழங்கிச் சிறப்பித்தது. இவ் விருதைப் பெற்ற முதல் ஆசியர் இவர் என்பது குறிப்பிடத்தக்கது. ஆசியாவின் மிக நீண்டதும், உலகின் மூன்றாவது நீளப் பாலமுமாய பினாங்குப் பாலம் (13.5 கி.மீ.), இவர் பொதுப்பணி அமைச்சராய் இருந்த காலத்தில் இவருடைய நேரடிக் கண்காணிப்பின்கீழ்க் கட்டப்பெற்றது என்ற வரலாற்றுச் சிறப்பிற்கு உரியது. சமுதாயத்தின் கல்வி வளர்ச்சியில் மிகுந்த நாட்டம்கொண்ட இவர், 1983இல் வெண்டோ (Vanto) (இப்போது இதன் பெயர் TAFE, P.J.) உயர்கல்விக் கூடத்தைச் சமுதாயத்திற்குச் சொந்தமாக்கினார். நவீன வசதிகொண்ட டேப் (TAFE) தொழில்நுட்பக் கல்லூரியை உருவாக்கியது இவரது குறிப்பிடத்தக்க சாதனைகளில் ஒன்று. தமிழ் எழுத்தாளர்களுக்கும் கலைஞர்களுக்கும் பேரளவில் ஊக்கமும் உதவியும் வழங்கி யுள்ள இவர் கலை - இலக்கியத்துறைகளுக்கு நிறையக் கொடைவழங்கிய வள்ளலுமாவார்.

1987இல் 6ஆம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டைத் தலைமையேற்று நடத்திய இவருக்கு அண்ணாமலை பல்கலைக்கழகம் மதிப்புறு முனைவர் (D.Litt.) பட்டம் (1989) வழங்கிச் சிறப்பித்தது.

## 17. சாரங்கபாணி, தமிழவேள், கோ. 339

*பிறப்பு : 20.4.1903* *மறைவு : 16.3.1974*

தமிழகத்தில் பிறந்த இவர் தமது 21ஆம் அகவையில் சிங்கை வந்தார்; பொதுப்பணி ஆர்வம்கொண்டார்; தமிழர் சீர்திருத்தச் சங்கத்தின்வழித் தமிழ்ச் சமுதாயத்தைத் தட்டி எழுப்பினார். இவர் நடத்திய தமிழ்முரசு (1935) தமிழினத்தின் எழுச்சிக்கு வித்திட்டது. தமது எழுத்தின் மூலமும் பேச்சின் மூலமும் தமிழ்மக்களின் தமிழார்வத்தைத் தழைக்கச் செய்த இவர் தோற்றுவித்த தமிழர் திருநாள் (1952) எண்ணற்ற எழுத்தாளர்களையும் கவிஞர்களையும் கலைஞர்களையும் பேச்சாளர்களையும் உருவாக்கிற்று. மலாயாப் பல்கலைக்கழகத்தில் தமிழ் ஆய்வியல் துறையை உருவாக்கத் திட்டமிட்டபோது அது தொடர்பாய்த் தகவுரை நல்க இந்தியாவிலிருந்து வரவழைக்கப்பட்ட கே. ஏ. நீலகண்ட சாத்திரி, தமிழுக்கு முதன்மை தாராமல் வடமொழிக்குச் சிறப்புத் தரும் வண்ணம் பரிந்துரைத்தார். அதனை முறியடித்துப் பல்கலைக்கழகத்தில் தமிழை முதன்மைப் படுத்தியதில் தமிழவேள் கோ. சா.வுக்குத் தலையாய இடம் உண்டு. அங்குத் தமிழ் நூலகம் அமைக்க வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்ட போது அதனை அமைக்க

உறுதிகொண்டார்; தம் தமிழ்முரசு மூலம் 'தமிழ் எங்கள் உயிர் நிதி'யைத் தோற்றுவித்தார் (1957); முன்னாள் தமிழக முதல்வர் கு. காமராசர் உதவியையும் பெற்றார்; நூலகம் அமைப்பதில் வெற்றிகண்டார். தமிழ்மொழி, சமுதாயச் சீர்திருத்தம், ஒற்றுமை, இலக்கிய மேம்பாடு, கலைவளர்ச்சி முதலாய அனைத்துத் துறைகளிலும் தமிழினம் உயர்வு காண, இறுதி மூச்சுவரை அயராது உழைத்த, ஒப்பாரும் மிக்காரும் இல்லாத தலைவராய் விளங்கிய தமிழவேள் தமிழ்மக்களின் நெஞ்சில் என்றும் நிலைத்துநிற்பார். விரிவிற்குத் தமிழ்முரசு நாளிதழ் பின்புலம், கவிதைக்கொடை - இதழ்கள் பகுதியில் காண்க.

*18. சுப்பிரமணிய பாரதியார், கவியரசர், சி.* *340*

*பிறப்பு : 11.12.1882* *மறைவு : 11.9.1921*

புதுமைக் கவிதையின் தந்தையாயும், பண்டிதர்க்கு மட்டுமே உரிமையுடைதாய்க் கருதப்பட்ட தமிழ்க் கவிதையைப் பாமரனுக்கும் உரிமையுடையதாய் ஆக்கிய பெருமைக்கு உரியவராயும், சமுதாய அரசியல் உணர்வுகளை வீறுகொண்டு பாடிய முதற்கவிஞராயும் திகழும் பாரதியார் தமிழால் தகுதி பெற்றார். தமிழ் இவரால் தகுதிபெற்றது. "நமக்குத் தொழில் கவிதை" என்று மார்தட்டிப் பாடிய இவர், தந்தை பெரியாருக்கு முன்னரே சாதி ஒழிப்பை வலியுறுத்தினார். உலகமெலாம் தமிழ் பரவ வேண்டுமென்று அவாவிக் கிடந்த இவர் பாடிய கண்ணன் பாட்டும், பாஞ்சாலி சபதமும், குயில் பாட்டும் உலக இலக்கியத் தரம் வாய்ந்தவை. இவருடைய தேசியப் பாடல்கள் அடிமைப்பட்டுக் கிடந்த நாட்டுமக்களை வீறுகொண்டெழுந்து விடுதலைப் போராட்டத்தில் குதிக்கச் செய்தன. இவருடைய பாடலின் தாக்கத்தால் 'பாரதி கவிதா மண்டலப் பரம்பரை' என்றொரு கவிஞர் பரம்பரையே உருவாயிற்று. அவர்களுள் தலைமையாயவர் பாவேந்தர் பாரதிதாசன்.

*19. சுப்பிரமணியம், இரா.* *341*

*பிறப்பு : 30.9.1923*

மலேசியக் கல்வி உலகின் முழுமதி போன்றவராய இவர், 30.9.1923இல், சிரம்பான் நகரில் பிறந்தார். அங்கேயே தொடக்க, இடைநிலைக் கல்வியை முடித்த பின், மூன்றாண்டுகள் ஆங்கில ஆசிரியப் பயிற்சி பெற்றார் (1949). பின்னர்ப் பிரிட்டனிலுள்ள பிரிஸ் போர்ட் கல்லூரியில் ஆசிரியரைப் பயிற்றுவிக்கும் பயிற்சியை முடித்தார் (1956-57). 1949 முதல் 1957 வரை ஆசிரியராய்ப் பணியாற்றினார், 1958முதல் 1978வரை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி விரிவுரையாளராயும் முதுநிலை விரிவுரையாளராயும் பணி புரிந்த காலத்தில், ஆயிரக்கணக்காய ஆசிரியர்களை உருவாக்கினார். தமிழ்ப் பள்ளிகளில் பணி புரிந்த தற்காலிகத் தமிழ் ஆசிரியர்களுக்காக ஏற்படுத்தப்பட்ட விடுமுறைகாலத் தமிழாசிரியர் பயிற்சி வகுப்பில் 1967 முதல் 1978 வரை முதல்வராய்ச் சீரிய பணியாற்றியுள்ள இவர், அமைப்பாளராயிருந்து ஆசிரியர், தலைமை ஆசிரியருக்காய பல்வேறு பணியிடைப் பயிற்சிகளை நடத்தியுள்ளார். 1978இல், ஓய்வுபெற்ற பின்னர் 1988 வரை மாரா தொழில்நுட்பக் கல்லூரியில் பகுதிநேர விரிவுரையாளராயும் பணிபுரிந்துள்ளார். நேர்மை, கட்டொழுங்கு, கடமையுணர்ச்சி, உழைப்புத்திறன் மிக்க சமுதாயத்தை உருவாக்குபவர்களாக ஆசிரியர்கள் விளங்க வேண்டுமென்று சொல்லாலும் செயலாலும் உணர்த்திய சான்றோர். இவர் தமிழ், மலாய், ஆங்கிலம், ஜப்பான் முதலாய மொழிகளில் தேர்ச்சிபெற்ற பன்மொழிப் புலவரும் ஆவார்.

## 20. டேவிட், டாக்டர், வி. 342

*பிறப்பு : 26.8.1932*

'மக்கள் தொண்டர்' என்று எல்லாராலும் அழைக்கப்படும் டாக்டர் வி. டேவிட் ஒரு தலைசிறந்த தொழிற்சங்கவாதி. 1952இல் தம் பள்ளி இறுதித்தேர்வை முடித்த இவர், உதவிச் சம்பளம் பெற்று 1954இல் அமெரிக்காவிலுள்ள லூயிஸ்வெல்லே பல்கலைக்கழகத்தில் (University of Louisville, Kentycky, USA) அரசியல் விஞ்ஞானம், தொழில் உறவு முதலாய பாடங்களை எடுத்துப் படித்தார். தொடர்ந்து பல்வேறு பயிற்சிகளைப் பெற்று 1980இல் தில்லிப் பல்கலைக்கழகத்தில் முதுகலைப்பட்டம் (M.A.) பெற்றார்; பின்னர் 1982இல் அமெரிக்கப் பல்கலைக்கழகமொன்றில் (Pacific Western University, USA) முனைவர் (Ph.D.) பட்டம் பெற்றார்.

பல்வேறு தொழிற்சங்கங்களில் பொறுப்பு வகித்து உலகளாவிய செல்வாக்குப் பெற்ற இவர், 1959முதல் தொடர்ந்து போக்குவரத்துத் தொழிலாளர் சங்கத்தின் பொதுச் செயலாளராய் விளங்கினார். அரசியல் ஈடுபாடும் கொண்ட இவர், 1959 முதல், தொடர்ந்து மூன்றுமுறை சட்டமன்ற உறுப்பினராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்; ஐந்து முறை நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார்; உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின்கீழ்ப் பலமுறை சிறைசென்றுள்ளார்; சமுதாயப் பணிகளிலும் நாட்டம் கொண்டவர்; கிள்ளான் துறைமுகப் பகுதியைச் சேர்ந்த கம்போங் இடாமானில் தொழிலாளர் தொழில்நுட்பக் கல்லூரியை உருவாக்கி, அதன் நிருவாகத் தலைவராயும் விளங்கி வருகிறார். ஆசியாவிலேயே ஒரு தொழிற்சங்கத்தால் உருவாக்கப்பட்ட கல்லூரி இஃது என்பது குறிப்பிடத்தக்கது. இவர் இப்போது அரசியல் முதலாய பொறுப்புகளிலிருந்து ஓய்வுபெற்று விட்டார் எனினும், தொழிலாளர் தொழில்நுட்பக் கல்லூரி நிருவாக அவைத்தலைவராய் (Chairman) விளங்கித் தொண்டாற்றி வருகிறார்.

## 21. தமிழ்க்குடிமகன், முனைவர் 343

*பிறப்பு : 15.9.1938*

மதுரை யாதவர் கல்லூரி முதல்வராய் விளங்கிய இவர் ஒரு தனித்தமிழ்ப் பற்றாளர். மலேசியாவுக்குப் பலமுறை வந்து இலக்கியச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார், கவிதைக்கனிகள், கண்ணீர், மனமாற்றம், பாவாணரும் தனித்தமிழும், அந்தமானைப் பாருங்கள், செந்நீர்க் கடலில் ஈழத்தமிழன் முதலாய பல நூல்களை எழுதியுள்ளார். இவர் தமிழகத்தின் பத்தாண்டு காலத் தமிழ்க் கவிதைகளை ஆராய்ந்து முனைவர் பட்டம் (Ph.D.) பெற்றுள்ளார்.

1989இல் தமிழகச் சட்டமன்றத் தேர்தலில் வெற்றிபெற்றுச் சட்டப் பேரவைத் தலைவர் ஆனார். அக் காலை, பெயர்ப் பலகைகளில் தமிழ் தலைமையிடம் பெறவேண்டுமென்னும் ஆர்வத்துடன் பணியாற்றினார். அப்போது நடுவணரசு கலைஞர் மு. கருணாநிதி தலைமையிலியங்கிய அரசைக் கலைத்ததால் பதவி இழந்தார். 1996இல் நடந்த பொதுத்தேர்தலில் வெற்றிபெற்றுத் தமிழ் ஆட்சிமொழி - பண்பாட்டுத்துறை அமைச்சரானார். தமிழ்ப் பள்ளிகளில் தமிழைக் கட்டாயப் பாடமாக்குதல், உலகத்தமிழ் நூலகம் அமைத்தல், கணினித் துறை வாயிலாய்த் தமிழ் வளர்ச்சிக்கு வழிவகை காணுதல் முதலாய பெரும்பணிகளில் ஈடுபட்டு உழைத்து வருகிறார்.

*22. திரேசா, அன்னை (Agnes Gonxha Bojaxhiu)* *344*

*பிறப்பு : 27.8.1910*

யூகோஸ்லாவியாவில் பிறந்த இவர், கல்கத்தாவிலுள்ள செயின்ட் மேரி உயர்நிலைப் பள்ளியில் முதல்வராய்ப் பணிபுரிந்தார். 1950இல் தொண்டூழிய நிறுவனம் (Missionaries of Charity) தொடங்கினார்; அதன் மூலம் இந்தியாவிலும் பிற நாடுகளிலும் 50 பள்ளிகளும் அநாதை இல்லங்களும் அமைத்தார்; 1952இல், சாகும் தறுவாயில் உள்ளவர்களுக்கு உதவும் அநாதை இல்லமொன்றை அமைத்தார்; தொழுநோயாளிகளுக்கு மேற்கு வங்காளத்தில் (1964) ஒரு குடியிருப்பு அமைத்தார்; 1971இல் போப் ஜான் சமாதானப் பரிசு (Pope John XXIII Peace Prize) பெற்றார். 1973இல் டெம்பல்டன் நிறுவனப் பரிசும் (Templeton Foundation Prize), கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் கௌரவ டாக்டர் பட்டமும், 1979இல் நோபல் பரிசும் பெற்றார்.

*23. திருஞானசம்பந்தன், கூட்டுறவுத் தந்தை, துன், வீ.* *345*

*பிறப்பு : 16.6.1919* *மறைவு : 18.5.1979*

பேரா மாநிலத்தின் சுங்கைசிப்புட் என்னும் ஊரில் பிறந்த இவர், காந்தியக் கொள்கையில் பிடிப்புள்ளவர். இளமையிலேயே பொதுப்பணி ஆர்வம் மிக்க இவர் அரசியல் தொடர்புகொண்டு 1955இல், மலாயா இந்தியர் காங்கிரசின் தேசியத் தலைவரானார். நாட்டு விடுதலையை நோக்கமாய்க் கொண்டு துங்குவின் தலைமையில் அமைந்த கூட்டணியில் இணைந்திருந்த மலாயா இந்தியர் காங்கிரஸ் தலைவர் என்ற முறையில் விடுதலை சாசனத்தில் இந்தியர் சார்பில் கையொப்பமிட்ட வரலாற்றுச் சிறப்பைப் பெற்றார்; 1955இல் நடந்த பொதுத் தேர்தலில் வென்று முதலாவது தொழிலாளர் அமைச்சரானார்; 1974வரை பல்வேறு துறைகளில் அமைச்சராய் விளங்கி நாட்டு முன்னேற்றத்திற்குப் பெரும் பங்கு ஆற்றினார்; இறுதிக் காலம்வரை ஒற்றுமை வாரியத் தலைவராய் விளங்கினார். இவர் ஆற்றிய தொண்டுகளிலெல்லாம் தலையாயது, தோட்டப்புற மக்களுக்குத் தோட்டத் துண்டாடலால் ஊறு விளைந்த வேளையில் அவர்களை ஒற்றுமையுடையவர்களாய் ஆக்கி, மாதம் 10 வெள்ளிப் பங்கு என்ற முறையில் தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தைத் தோற்றுவித்துக் கோடிக் கணக்காய சொத்து மதிப்புள்ள பல தோட்டங்களை வாங்கி, தொழிலாளர்களைக் காப்பாற்றியதாகும். இதன்வழிக் 'கூட்டுறவுத் தந்தை' என்னும் பெருமையைப் பெற்றார். முதல் உலகத் தமிழராய்ச்சிக் கருத்தரங்க மாநாட்டை (1966) மலேசியாவில் தலைமையேற்று நடத்திய சிறப்பிற் குரியவர். இவருடைய நினைவைப் போற்றும்வண்ணம், இவரால் தோற்றுவிக்கப்பட்ட தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தின் தலைமையகக் கட்டடத்திற்கு (28 மாடி) 'துன் சம்பந்தன் மாளிகை' (Wisma Tun Sambanthan) எனப் பெயர்சூட்டப்பட்டுள்ளது. முன்னர் 'ஜாலான் பிரிக்பீல்ட்ஸ்' என வழங்கிய சாலைக்கு இவர் பெயரால் 'ஜாலான் துன் சம்பந்தன்' (துன் சம்பந்தன் சாலை) எனப் பெயரிடப்பட்டுள்ளது.

*24. தேவநேயன், பாவாணர், ஞா.* *346*

*பிறப்பு : 7.2.1902* *மறைவு : 16.1.1981*

தலைசிறந்த மொழியியலறிஞராய இவர் தம் வாழ்நாள் முழுவதையும் தமிழுக்கே ஒப்படைத்தார்; மறைமலையடிகளார் தோற்றுவித்த தனித்தமிழ் இயக்கத்திற்கு வலிவும்

பொலிவும் ஊட்டி, நூற்றுக்கணக்காய இளைஞர்களை அத் துறைக்கு ஈர்த்தார். உலக மொழிக்கெல்லாம் தமிழே தாய் என்பதனை ஆங்கில, தமிழ்நூல்கள்வழி உறுதிப்படுத்திய இவர், பன்மொழி அறிஞரும் ஆவார்; சொற்களின் வழியாகவே தமிழர் நாகரிகம், பண்பாடு, கலை, இலக்கியச் சிறப்புகளையும் வரலாற்றையும் ஆராய முற்பட்ட முதல் பேரறிஞர். முதற் றாய்மொழி, ஒப்பியன் மொழிநூல், தமிழிலக்கிய வரலாறு, வடமொழி வரலாறு, திருக்குறள் மரபுரை, தமிழர் மதம், The Primary Classical Language of The World முதலாய பல அரிய ஆராய்ச்சி நூல்களை வரைந்துள்ளார். இவரது 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேகரமுதலி' என்னும் நூல் தமிழுக்குக் கிடைத்த புதிய வரவாகும். இவர் பெயரால் 'பாவாணர் தமிழ் மன்றம்' என்னும் ஓர் இயக்கம் மலேசியாவின் ஈப்போ நகரில் செயல்பட்டு வருகிறது.

## *25. சுபாஷ் சந்திரபோஸ், நேதாஜி* *347*

பிறப்பு : 23.1.1897 மறைவு : 18.8.1945

வீரப்போர் மூலம் பிரிட்டிசாரை விரட்டி இந்தியாவை விடுவிக்க வேண்டுமென்னும் வேட்கைகொண்ட மாபெரும் வீரராய இவர், அதற்கான களத்தை இந்தியாவிற்கு வெளியே அமைக்க முடிவுசெய்தார். ஜெர்மனிக்கும் ஜப்பானுக்கும் சென்று, அதற்கான திட்டங்களை ஆராய்ந்து, சிங்கப்பூரில் உறுதியான நடவடிக்கைகளை மேற்கொண்டார். 1941இல் மலாயாவைக் கைப்பற்றிய ஜப்பானிய அரசு இவரின் முயற்சிகளுக்குப் பக்கபலமாய் நின்றது. இந்திய சுதந்திரக் கழகம் (Indian Independence Leaque), இந்திய தேசிய இராணுவம் (Indian National Army) ஆகியவற்றின் தலைமைப் பொறுப்பை ஏற்றார்; 21.10.1943இல் தற்காலிக விடுதலை இந்திய அரசு (Provisional Government of Free India) அமைத்து, அதனை உலகிற்கு அறிவித்தார். அச்சு நாடுகளும் அதன் ஆதரவு நாடுகளுமாக 9 நாடுகள் அதனை ஒப்புக்கொண்டன. இவர் தலைமையில் இயங்கிய இந்திய தேசிய இராணுவத்தில் மலாயா இந்திய இளைஞர்களும் இளம்பெண்களும் ஆயிரக்கணக்கில் சேர்ந்து, இம்பால் போர்முனைவரை அணிவகுத்துச் சென்றனர்; கல்கத்தா வழியாய் நுழைந்து இந்தியாவில் விடுதலைப்போர் நடத்தத் திட்டமிட்டிருந்தனர். 6,9.8.1945ஆம் நாள்களில், அமெரிக்கா, ஜப்பானின் ஹிரோஷிமா நாகசாகி நகரங்கள்மீது அணுக்குண்டு வீசியதால் ஜப்பானியர் தோல்வியடையவே இவரது முயற்சி சிதறுண்டது. எனவே, நேதாஜி சிங்கப்பூரிலிருந்து வெளியேறினார். 17.8.1945இல் தைப்பே விமான நிலையத்தில் இவர் ஏறியிருந்த விமானம் இடருக்குள்ளானது. கடுமையான தீப்புண் காயங்களுடன் நான்முன் (தைப்பே) மருத்துவ மனையில் சேர்க்கப்பட்ட இவர் அங்குக் காலமானார் (18.8.1945). இவருடன் பயணம் செய்த கர்னல் ஹபீபுர் ரஹ்மான் மூலம் இவர் விடுத்த கடைசிச் செய்தி இது: "கடைசி மூச்சுவரை என் தாய்நாட்டு விடுதலைக்குப் போராடினேன்; இந்தியா விரைவில் விடுதலை பெறும் என்பதை என்னுடைய மக்களுக்குச் சொல்லிவிடுங்கள். வாழ்க விடுதலை இந்தியா!"

## *26. பங்காரு அடிகள், ஆன்மிக குரு, அருள்திரு* *348*

**3.3.1941**

பெரியவர் து. கோபால் நாயக்கர் தலைமகனாரான அடிகள், தொடக்கத்தில் ஒரு பள்ளி ஆசிரியராய்ப் பணியைத் தொடங்கினார். பள்ளியும், வீடும், நிலமும் தேசிய நெடுஞ்சாலையை யொட்டியே அமைந்தன. நிலத்தில் ஓர் அரிய வேப்பமரம்

வளர்ந்திருந்தது. அது தான் வடித்த பாலால் பல நோய்களைத் தீர்த்து வந்தது. ஒருநாள் வீசிய புயலால் அம் மரம் வேரோடு சாய்ந்தது (1966); அடியிலிருந்த பாம்புப் புற்றுக் கலைந்தது; அவ் விடத்திலிருந்து சுயம்பு (தான்தோன்றி) வெளிப்பட்டது. அப்போது அங்கே அடிகள் எழுப்பிய சிறு கோயிலே இன்று மேல்மருவத்தூரில் அருள்மிகு ஆதிபராசத்தி சித்தர் பீடமாய், கல்வி, மருத்துவ, பண்பாட்டு அறநிலையாய் வியக்கத் தக்க வளர்ச்சி கண்டு உலகளாவிய சிறப்புப் பெற்ற திருத்தலமாய்த் திகழ்கிறது.

இது 21 சித்தர்கள் சீவ சமாதி அடைந்த இடமென்றும், 2000 ஆண்டு காலப் பழைமை வாய்ந்ததென்றும் 'மச்ச புராணம்' என்னும் பழஞ்சுவடியொன்றைச் சான்று காட்டிச் சித்தர்பீட வரலாற்றுக் குறிப்புகள் தெரிவிக்கின்றன.

"ஆகம ரீதியில் அமையப்பெற்ற விதிமுறைகள் ஏதும் இங்கே இல்லை. அதனால் மேல்மருவத்தூர் அன்னையின் ஆலயத்தைக் கோயில் என்று சொல்வதைவிடச் சித்தர் பீடம் என்பதே சரியானது. அங்கே திரளாக மக்கள் கூடுகிறார்கள்; வழிபட்டுச் செல்கிறார்கள்; ஒரு புதுயுகமே அங்குத் திரண்டுகொண்டிருக்கிறது" இது முனைவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் உரைத்த கருத்தாகும்.

இங்குச் செவ்வாய், வெள்ளி, ஞாயிறு, காருவா (அமாவாசை), வெள்ளுவா (பூர்ணிமை) நாள்களில் மெய்யன்பர்களால் 'அன்னை' என அன்பொழுக அழைக்கப்பெறும் அருள்திரு அடிகளார் வழங்கும் அருள்வாக்குத் தனிமாந்தர் சிக்கல் தீர்க்கும் மருந்தாகிறது; இயக்கச் செயல்முறைகளுக்காக அறநிலை அன்பர்க்கு வழங்கும் அருள்வாக்கு வரையறுத்த நிருவாகத்திற்கு வழிகாட்டுகிறது; மாந்த இன மேம்பாட்டிற்கும் அதனில் கருத்துகள் ஒளிர்கின்றன.

"ஆகம விதிகள் என்பதெல்லாம் புறத்தோற்றங் கொண்டவை. அகத்தில் கட்டுப்பாடு இருக்க வேண்டும்;" "ஆத்திகம் பேசிக்கொண்டு சுயநலம், பேர், புகழ் இவற்றுக்காக அலைபவனைவிடப் பொதுநலங் கருதி அடக்கமாய்த் தொண்டு செய்கிற நாத்திகன் மேலானவன்" என்பன போன்ற சமுதாயச் சிந்தனைகளைத் தூண்டும் பொன்மொழிகளும் அருள்வாக்கில் வெளிப்படுகின்றன. அகத் தூய்மையை வலியுறுத்தி, ஒழுக்கத்தையும் கட்டுப்பாட்டையும் கடைப்பிடித்துயர வழிகாட்டித் தொண்டே இறைபணிக்கு, பத்திக்கு அடிப்படை என்று வலியுறுத்துகிறார், இல்லற ஞானி என்று போற்றப்படும் அடிகள்.

சித்தர் பீட வளாகத்தைச் சுற்றிக் குழந்தைப் பள்ளி, தொடக்க, மேல்நிலைப் பள்ளிகள், தொழில்நுட்ப, பொறியியல் கல்லூரிகள் அமைத்துள்ளதும், எதிர்காலத்தில் ஒரு பல்கலைக்கழகம் அமைப்பதற்கான ஏற்பாடுகள் செய்து வருவதும், தமிழ் வழிபாட்டு முறையை நடைமுறைப்படுத்தியிருப்பதும், ஆண் பெண், சாதி சமய வேறுபாடுகளின்றிக் கருவறை சென்று வழிபடவும், அந்தந்தச் சமயத்தால் தங்கள் சமய முறைப்படி வழிபாடு செய்துகொள்ளவும் வாய்ப்பு நல்கியுள்ளமையும் ஒரு மாபெரும் புரட்சியாகும்.

அங்கு உணவுக்கொடை (அன்னதானம்) வழங்கும் அறச்சாலையுண்டு; நோய் நீக்கும் மருத்துவமனை உண்டு; ஞாயிறுதோறும் மருத்துவ வல்லுநர்களை வரவழைத்து ஏழை எளியவர்களுக்கு மருத்துவம் பார்க்கும் ஏற்பாடு உண்டு; நலிந்தோர், ஊனமுற்றோர், கைம்பெண்டிர் மறுவாழ்வு பெறத் திட்டமுண்டு; மாணவரைக் கல்வித்துறையில் ஊக்கப்படுத்தப் பரிசு திட்டமுண்டு. இவை போன்ற பணிகள் சித்தர்பீட வளாகத்துடன் நின்றுவிடுவதில்லை. நாடெங்கும், கடல்கடந்தும் அமைந்துள்ள ஈராயிரத்துக்கு மேற்பட்ட வார வழிபாட்டு மன்றங்களும் அறப்பணிகளில் ஈடுபட வேண்டுமென்பது அடிகள் உள்ளக்கிடக்கையாகும்.

மகளிர்க்கு முதன்மை வழங்கி அவர்களை ஆன்மிகத் தொண்டில் ஈடுபடுத்தும் அறநிலை, அவ்வப்போது ஆன்மிக மாநாடுகளையும் நடத்தியிருக்கிறது. மகளிர்க்காகவே தனி மாநாடுகளும் நடந்துள்ளன. அடிகளின் இவ் வரும்பெரும் பணிகளுக்குத் துணைபுரிய ஆயிரக் கணக்காய மெய்யன்பர்கள் இருந்தாலும், சித்தர்பீட நிகழ்வுகள் சிறக்கப் பேருதவி புரிந்து நிருவாகச் சக்கரத்தை இயக்கி வருபவர் அடிகள் துணைவியார் திருமதி இலக்குமி பங்காரு அடிகள். அடிகளுக்கு இரு ஆண்மக்களும் இரு பெண்மக்களும் உள்ளனர்.

## 27. பாரதிதாசன், புரட்சிக்கவிஞர், பாவேந்தர் 349

*பிறப்பு : 29.4.1891* *மறைவு : 21.4.1964*

தமக்கு முன்னும் பின்னும் தம்மை நிகர்த்த தமிழ்க் கவிஞர் எவரையும் பெற்றிராத புரட்சிக் கவிஞர் பாவேந்தர் பாரதிதாசன், தென்னகத்தின் புதுவை மாநிலத்தில் பிறந்தார். கனகசுப்புரத்தினம் என்னும் இயற்பெயர் கொண்ட இவர், தேசியக் கவிஞர் பாரதியாரிடம் கொண்ட ஆழ்ந்த ஈடுபாட்டின் காரணமாய்த் தம்மைப் 'பாரதிதாசன்' என அழைத்துக் கொண்டார். இளமையிலிருந்தே தமிழ் ஆர்வமும் தமிழர் மேம்பாட்டில் பெருவிருப்பமும் கொண்ட இவர், தமிழையும் தமிழரையுமே கருப்பொருளாய்க் கொண்டு தீக்கக்கும் பாடல்களைக் கொட்டிக் குவித்தார். இவர் பாடிய 'புரட்சிக்கவி' என்னும் குறுங்காவியம் அழியாப் புகழை ஈட்டித் தந்ததொடு 'புரட்சிக் கவிஞர்' பட்டத்தையும் இவர்க்குச் சூட்டியது. இவர் பாடிய குடும்ப விளக்கு - குறிப்பாய் அதன் ஐந்தாம் பகுதியாய முதியோர் காதல் இவரை உலகப் பெருங்கவிஞர் வரிசைக்கு இட்டுச்சென்றது. இயற்கையை விதந்து இவர் பாடிய 'அழகின் சிரிப்பு'த் தமிழுக்குக் கிடைத்த புதிய இலக்கிய வடிவமாகும். இவர் பாடிய 'தமிழியக்கம்' இவருடைய உள்ளத்தின் தமிழ், தமிழ் இன உணர்ச்சிக்கனலை உலகம் முழுவதும் பரப்பியது. இவருடைய பாடல்கள் தமிழ்க் கவிதையுலகில் ஒரு புதிய ஊழியைத் தோற்றுவித்தன. அதன் பயனாய்ப் 'பாவேந்தர் பாரதிதாசன் பரம்பரை' என்றொரு கவிஞர் தலைமுறையே உருவாயிற்று. அவர்களுள் கவிஞர்கள் முடியரசன், வாணிதாசன், கண்ணதாசன், கம்பதாசன், பட்டுக்கோட்டைக் கலியாணசுந்தரம், சுரதா, பொன்னடியான் முதலாயோர் குறிப்பிடத்தக்கவர். சிறந்த நாடகப் புலவருமாய இவர் வளையாபதி காவியக் கதையை நாடகமாய் இயற்றினார்; பின்னர் அது திரைப்படமாயும் வந்தது. இவருடைய 'எதிர்பாராத முத்தம்', 'பொன்முடி' என்னும் பெயரில் திரைப்படமாய்த் தயாரிக்கப்பட்டபோது இவரே திரைக்கதை, உரையாடல் எழுதினார். இப் படம் பெரிய வெற்றிப் படமாய் அமைந்தது. சில திரைப்படங்களுக்கு உரையாடல், பாடல்கள் எழுதியுள்ளார்; நிரம்ப இசைப்பாடல்களும் எழுதியுள்ளார். பாரதியாரிடம் இவருக்கு இருந்த ஈடுபாட்டைப் போலவே தந்தை பெரியாரிடமும் அவரது சுயமரியாதை இயக்கத்திடமும் (திராவிடர் கழகம்) ஆழ்ந்த ஈடுபாடு இருந்தது. ஐம்பதாண்டுத் தமிழர் வரலாற்றை இவர் பாடல்களைக்கொண்டு அறிந்துகொள்ள முடியும். தமிழையே நினைத்து, தமிழையே பாடி, தமிழுக்காகவே வாழ்ந்த பாவேந்தர், "இன்பத்தமி ழெங்கள் உயிருக்கு நேர்" எனப் பாடிய தம் பாடல் வரிகளுக்கொப்பத் தமிழாய் மாறித் தமிழர் உள்ளமெல்லாம் நிறைந்தார். ஒரு நூற்றாண்டு கால வரலாற்றை வெளிச்சமாக்கிக் கொண்டிருக்கும் இவருக்குக் கொண்டாடப்பட்ட நூற்றாண்டு விழாக்கள் (1991) இவரின் உண்மையான தோற்றத்தையும் தமிழ் நெஞ்சங்களில் இவர்க்கிருக்கும் இணையற்ற செல்வாக்கையும் புலப்படுத்தின. இவர் நூல்கள் அரசுடைமையாக்கப்பட்டன.

*28. மகாதீர் முகமது, டத்தோ ஸ்ரீ, டாக்டர்* *350*

*பிறப்பு : 20.12.1925*

மலேசியாவின் நான்காம் தலைமை அமைச்சராய இவர் 1981இல் பதவியேற்றார். சிறந்த மருத்துவரான இவர் தலைசிறந்த எழுத்தாளருமாவார். இவர் எழுதிய 'மலாய் டெலிமா' (Malay Dilemma) என்னும் நூல் பெரும் புரட்சியைத் தோற்றுவித்தது. அம்னோவில் (UMNO - மலாய்க்காரர்களின் அரசியல் கட்சி) சேர்ந்து தீவிர அரசியல்வாதியாய் விளங்கிய இவரை நாட்டுத் தந்தை துங்கு, கட்சியிலிருந்து விலக்கிவைத்தார் (1969). பின்னர்ப் பல்வேறு தடைகளைக் கடந்து கல்வி அமைச்சராகி, துணைத் தலைமை அமைச்சராய் உயர்வு பெற்று, துன் உசேன் ஒன் பதவியிலிருந்து விலகியபின் தலைமை அமைச்சரானார். கிழக்கை நோக்கும் கொள்கையைக் கொண்டுவந்த இவர், கீழைநாட்டுக் கலாசார மேம்பாட்டை வலியுறுத்தி ஊக்கமூட்டினார். தூய்மை, திறமை, நம்பிக்கை உடையவர்களாய் ஆட்சியாளரும் அரசு ஊழியரும் விளங்க வேண்டும் என அறைகூவல் விடுத்து ஒவ்வொருவரும் முன்மாதிரித் தலைவர்களாய் விளங்க வேண்டுமென வலியுறுத்தினார். 'மலேசியா'வால் முடியும்! என உறுதி பூண்டு நாட்டைத் தொழிற்றுறையில் உயர்த்த அரும்பாடுபட்டு வரும் இவர், மலேசிய நாட்டுச் சொந்தத் தயாரிப்பான புரோட்டோன் சாகா இயங்கியை (Proton Saga Car) உலகம் புகழும் வண்ணம் தோற்றுவித்துக் காட்டினார். உலகிலேயே நீளமான பாலங்களில் ஒன்றாய பினாங்குப் பாலம், கொம்தார் கட்டடம், தலைநகரில் அமைந்துள்ள பேரழகு வாய்ந்த தயாபூமிக் கட்டடம் (Daya Bumi), கோலாலம்பூர்க் கோபுரம் (K.L. Tower) முதலாயவை இவர் சாதனைகளின் சின்னங்களாய் விளங்குகின்றன. கி.பி. 2020ஆம் ஆண்டிற்குள் மலேசியாவைத் தொழில்வளம் பெற்ற நாடாக மேம்படுத்தும் குறிக்கோளுடன் 'வாவாசான் 2020' என்னும் தொலைநோக்குத் திட்டத்தை வகுத்து நடைமுறைப்படுத்தி வருகிறார். ஆசியாவில் வலிமைமிக்க 4ஆம் தலைவர் என 'ஆசியா வீக்' (Asia Week) ஏடு இவரைத் தெரிந்தெடுத்தது குறிப்பிடத்தக்கதாகும்.

*29. மாணிக்கவாசகம், டான்ஸ்ரீ, வெ.* *351*

*பிறப்பு : 4.10.1926* *மறைவு : 12.10.1979*

தோட்டப்புறத்தில் (ராஜகிரித் தோட்டம்) ஒரு கணக்குப்பிள்ளையின் மகனாய்ப் பிறந்த இவர், அங்கேயே தமது தொடக்கக் கல்வியைக் கற்றார்; உயர்கல்வியைக் கிள்ளானில் முடித்தார்; ஒரு வணிகராய் வாழ்க்கையைத் தொடங்கி, நேதாஜி சுபாஷ் சந்திரபோசின் வீரமுழக்கத்தால் கவரப்பட்டு இந்திய தேசிய இராணுவத்தில் (1941) இணைந்தார். தொடக்க முதலே அரசியலில் ஈடுபாடு கொண்டிருந்த இவர் ம.இ.கா.வின் நிறுவன உறுப்பினர்களுள் ஒருவராவார். 1955இல் சிலாங்கூர் மாநிலச் சட்டமன்ற உறுப்பினராகி ஆட்சிமன்ற உறுப்பினராயும் நியமனம் பெற்றார். 1959இல் நாடாளுமன்ற உறுப்பினராகித் தொழிலாளர் துணையமைச்சராயும் 1964இல் தொழிலாளர் அமைச்சராயும் ஆனார். நீண்டகாலம் ம.இ.கா.வின் துணைத்தலைவராய் இருந்துவந்த இவர், 1973இல் தேசியத் தலைவரானார்; ம.இ.கா.வின் தலைமையகக் கட்டடத்தை முன்னின்று எழுப்பினார் (1973); கட்சிக்கு நிறுவன அமைப்பை ஏற்படுத்தினார்; ஆங்காங்கே பல கட்டடங்கள் எழச்செய்தார்; நேசா பலநோக்குக் கூட்டுறவு சங்கம், சிறுதொழில் முதலீட்டுக் கழகம் ஆகிய பொருளாதார அமைப்புகளை ஏற்படுத்தினார். 1970இல் அனைத்துலகத் தொழிலாளர் நிறுவனத் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பெற்ற முதல் மலேசியர் என்னும் சிறப்பிற்குரிய இவர், பதவிக் காலத்திலேயே மறைவெய்தினார். மறைந்த தலைவருக்குச் சிறப்புச் செய்யும் வண்ணம்

இவர் மறைவிற்குப்பின், இவர் முன்னின்று எழுப்பிய ம.இ.கா. தலைமையகக் கட்டடத்திற்கு இவர் பெயரால் 'மாணிக்கவாசகம் மாளிகை' (Menara Manickavasagam) எனப் பெயர் சூட்டப்பட்டுள்ளது.

இவர் ஆற்றிய பணிகளுள் சிறப்பாய்க் குறிக்கத்தக்க மற்றொன்று இந்திய-தமிழர் சமுதாயத்தின் உண்மை நிலைகளைத் துல்லியமாய் ஆராய்ந்தறியவும், மேம்படுத்தவும் பொருளாதார வல்லுநரான டத்தோ கு. பத்மநாபனைக் கொண்டு நீலப்புத்தகம் (Blue Print) தயாரித்ததாகும். சமுதாய உயர்விற்கு அஃது இன்னும்கூட வழிகாட்ட வல்லதென ஆய்வாளர் கூறுகின்றனர்.

## 30. வாசுகி, செல்வி 352

சிறந்த தேக் வான் தோ (தற்காப்புக்கலை) வீராங்கனையாய இவர், 1988ஆம் ஆண்டு சியோலில் நடந்த 24ஆம் ஒலிம்பிக் பந்தயத்தில் (காட்சி விளையாட்டுப் போட்டி) மலேசியாவுக்கு வெள்ளிப் பதக்கம் பெற்றுத்தந்தார். ஒலிம்பிக் சிற்றூரில் மலேசியக் கொடியை முதன்முதல் பறக்கவிட்டு நாட்டின் புகழை உலக அரங்கில் உயர்த்திய பெருமைக்குரிய வீராங்கனை இவர்.

## 31. விக்டர், தமிழ்நெறி காவலர், அ. 353

*பிறப்பு : 17.5.1927* *மறைவு : 8.4.1992*

நாடறிந்த சமுதாயச் சேவையாளராய அ. விக்டர், தமிழவேள் கோ. சாரங்கபாணிக்குப் பின் அவர்தம் அடிச்சுவட்டில் தக்க பணிகளை இந்தச் சமுதாயத்திற்குச் செய்தவர். இனம், மொழி, சமய வேறுபாடுகள் கருதாமல் கவியரங்கு முதல் கண்காட்சிவரை அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து ஆதரவு வழங்கியவர். தமிழர் சீர்திருத்தச் சங்கத்தில் பல்வேறு பொறுப்புகள் வகித்த இவர், 1976ஆம் ஆண்டிலிருந்து மறையும்வரை அதன் தலைவராய் விளங்கினார்; தமிழர் பேரவையிலும் துணைத்தலைவராய்த் தொண்டாற்றினார். உமறுபுலவர் தமிழ்மொழி நிலையத் தகவுரைஞர் குழுவின் தலைவராய் 1986ஆம் ஆண்டிலிருந்து பணிபுரிந்த இவர், சிங்கப்பூர் இந்திய நுண்கலைக் கழகம், இராமகிருஷ்ண சங்கீத சபா, தமிழ்மொழிப் பண்பாட்டுக் கழகம் போன்ற நிறுவனங்களில் வாழ்நாள் உறுப்பினராயும் பல இயக்கங்களின் புரவலராயும் தொண்டாற்றினார். 'சமுதாய ஆர்வலர்', 'தமிழ்நெறி காவலர்', 'சேவைச் செம்மல்' முதலாய விருதுகளைப் பெற்றிருந்த இவர், 1982இல் தம் பிறந்தநாளான மே 17ஆம் நாள் தம்மையும் தம் துணைவியாரையும் அழைத்துப் போப்பாண்டவர் இரண்டாம் ஜான் பாலும் அன்னை திரேசாவும் ஆசீர்வதித்து வாழ்த்தியதைப் பெரும்பேறாகக் கருதினார். தம் கடமைகளை அடக்கமாகவும் பொறுப்பாகவும் வெற்றியுடனும் நடத்திய இப் பெருமகனார் 8.4.1992இல் உலக வாழ்வு நீத்தார்.

## 32. விசுவநாதம், முத்தமிழ் காவலர், கி. ஆ. பெ. 354

*பிறப்பு : 10-11-1899* *மறைவு : 19.12.1994*

'முத்தமிழ் காவலர்' என்னும் விருதினைக் கொண்ட தமிழ் அறிஞர் கி. ஆ. பெ. விசுவநாதம், அவ் விருதிற்குப் பெருமை சேர்க்கும் வண்ணம் இறுதிவரை தமிழுக்கு ஓர் அரணாக

விளங்கினார். ஐந்தாம் அகவையில் திண்ணைப் பள்ளியில் தம் கல்வியைத் தொடங்கிய இவர், நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டாரிடம் இலக்கிய அறிவினையும், சையது உசேன் சாயபுவிடம் உடற்பயிற்சி முறையினையும், டாக்டர் மே. மாசிலாமணி முதலியாரிடம் மருத்துவத்தையும் கற்றறிந்தார்; கட்டுரை வரைய ஆரணிக் குப்புசாமி முதலியாரையும், கவிதை புனைய வித்துவான் அமிர்தம் சுந்தரம் பிள்ளையையும் முன்மாதிரியாய்க் கொண்டார்; இதழ் நடத்துதற்குத் திரு. ஜே. எஸ். கண்ணப்பர் வழிகாட்டினார்; டாக்டர் சி. நடேச முதலியார் அரசியலுக்கு வழிகாட்டினார். தனித்தமிழ்ப் பற்றிற்குத் தவத்திரு மறைமலையடிகளும், தொண்டிற்குத் தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தரரும், சமூகச் சீர்திருத்தத்திற்குப் பெரியார் ஈ. வே. ரா.வும், மேடைப் பேச்சிற்குத் திரு. உ. க. பஞ்சரத்தினம் பிள்ளையும் வழிகாட்டினர்; சைவ சித்தாந்தத்திற்குக் கொரடாச்சேரி வாலையானந்த சுவாமிகளைத் தம் குருவாய் ஏற்றுக்கொண்டார். இயற்கையிலேயே செல்வக்குடியில் பிறந்த திரு. கி. ஆ. பெ. வி. தம் புகையிலை வாணிகத்தில் பேரும் புகழும் பெற்றார்; பெரும் செல்வமும் ஈட்டினார். வாணிக மேன்மையைப் பலரும் அறியச்செய்தார். தொழிற்சங்கத் தலைவராயும் விளங்கிய இவர், நீதிக்கட்சி, ஜஸ்டிஸ் இளைஞர் சங்கம் முதலாய அமைப்புகளில் சேர்ந்து சிறந்தவகையில் பணியாற்றினார். தலைசிறந்த பேச்சாளராய இவர், எந்தப் பொருள்பற்றிப் பேசுவதாயினும் அப் பொருள்பற்றி நன்கு சிந்தித்துக் குறிப்பெடுத்துக் கொள்வார். பேசவேண்டிய கருத்துகளை வரையறுத்துக் "கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய், கேளாரும் வேட்ப" உரை நிகழ்த்துவார். திருக்குறளுக்குப் பழைய உரையாசிரியர்களும் காணாத நுட்பமான பொருள்கண்டு விளக்குவதில் தன்னிகரற்றவர். மலாயா, சிங்கப்பூர் நாடுகளில் முன்பு பெருஞ்சிறப்பொடு நடந்துவந்த தமிழர் திருநாள் கூட்டங்களில் உரைநிகழ்த்தத் தமிழவேள் கோ. சாரங்கபாணி இப் பெருமகனை வரவைத்தார்.

'சாதிமுறை அமைப்பு, சமுதாயத்தைச் செல்லாய் அரித்து வருகிறது' என்பதை உணர்ந்த இவர் தீண்டாமை ஒழியப் பாடுபட்டார். இந்தி தமிழகத்தில் நுழைக்கப்பட்ட போதெல்லாம் அதனை எதிர்த்துப் போராடித் தாய்தமிழ் நலிவின்றி வளரப் பாடுபட்டார். இவர் ஆற்றிய பணிகளிலெல்லாம் தலையாய பணி 'தமிழகப் புலவர் குழு' ஒன்றனை அமைத்ததாகும். அதன் எண்ணிக்கையை நாற்பத்தொன்பதாய் வரையறுத்து, ஆண்டிற்கு இருமுறை அதனைக் கூட்டித் தமிழ்மொழியின் செம்மையையும், இனிமையையும், தொன்மையையும் புரந்துவந்த இவர் எளிமையும், இனிமையும், சுவையும் நிரம்பிவழியும் நூல்கள் இயற்றிய ஒரு சிறந்த நூலாசிரியருமாவார். தொண்ணூற்றைந்து ஆண்டுகள் வாழ்ந்த முத்தமிழ் காவலர் வாழ்வு ஒரு நல்வாழ்வு! பலருக்கும் எடுத்துக்காட்டான வாழ்வு! தமிழுக்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் ஆக்கந்தரும் வாழ்வு! உலகமெலாம் ஏத்திப் போற்றிக் கொள்ளும் வாழ்வு! அவர் தம் தாயகத் தமிழரைப் பார்த்துக் கேட்கும் கேள்விகள் சில உள; அவை: "ஏ தமிழா! உனக்கென்று ஒரு சொந்த நாடு உளதா? உன் தமிழ்நாடு சிறக்க நீ என்ன செய்கிறாய்? உனக்கென்று ஒருமொழி உள்ளதா? இருக்குமாயின் அதன் வளத்திற்கு நீ என்ன செய்கிறாய்? உனக்கென்று தலைவன் உளனா? அவன் கூறுவனவற்றை எல்லாம் நீ தட்டாமல் செய்கிறாயா? உனக்கென்று ஒரு தெய்வத்தை வரையறுத்துக் கொண்டாயா? அதனை முறையாய் வழிபடுகிறாயா?" என்பவையாகும். இவற்றுக்கெல்லாம் தமிழர் தக்க விடைகண்டு அவற்றின்படி ஒழுகிவந்தால் தமிழினம் இழந்த சிறப்புகளை மீண்டும் பெற்றுயரும் என்பது உறுதி. இப் பெருமகன் 19.12.1994இல் காலமானது தமிழர்க்குப் பேரிழப்பாகும்.

# இரங்கல்

1. அண்ணாதுரை, பேரறிஞர், சி. என். 355

பிறப்பு : 15.9.1919 மறைவு : 3.2.1969

பச்சையப்பன் கல்லூரியில் முதுகலைப் பட்டம் (M.A.) பெற்ற பேரறிஞர் அண்ணா, பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் சேர்ந்து தம் ஆற்றல் மிக்க எழுத்தாலும் பேச்சாலும் ஆயிரக்கணக்காய இளைஞர்களை அவ் வியக்கத்திற்கு ஈர்த்தார்; 'திராவிடர் கழகம்' என்றும் அதன் பெயரை மாற்றினார்; பின் பெரியாரோடு கருத்துவேறுபாடு ஏற்பட்டதால் 1949இல் திராவிட முன்னேற்றக் கழகத்தை அமைத்தார்; தலைவரில்லாத அவ் வியக்கத்தின் முதல் பொதுச் செயலாளராய் ஆனார். மாஜிக் கடவுள்கள், ரோமாபுரி ராணிகள், கம்பரசம் முதலாய இவர் நூல்கள் பரபரப்பாய் விற்பனை ஆயின. தமிழ்ப் பேச்சுநடையிலும் எழுத்துநடையிலும் ஒரு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தவராய இவர் எழுதிய 'தம்பிக்குக் கடிதங்கள்' பல்லாயிர இளைஞர்களை ஈர்த்து அவருக்குத் தம்பியாக்கின. கலைஞர் மு.கருணாநிதி, கல்வி அமைச்சர் பேராசிரியர் க. அன்பழகன், 'பாரத ரத்னா' ம. கோ. இராமச்சந்திரன் (MGR), நாவலர் இரா. நெடுஞ்செழியன் முதலாய தலைவர் பலரையும் எண்ணற்ற எழுத்தாளர் பேச்சாளர் கவிஞர்களையும் உருவாக்கினார். காதல் ஜோதி, கபோதிபுரக் காதல், ரங்கூன் ராதா முதலாய இவர் நூல்கள் புதுமைப் படைப்புகளாய்க் கருதப்படுகின்றன. வேலைக்காரி, ஓர் இரவு, நல்லதம்பி, சந்திரோதயம், சொர்க்கவாசல் முதலாய படைப்புகள் நாடக, திரைப்பட உலகில் திருப்புமுனைகளாக அமைந்தன. தமிழிசை இயக்கத்திலும் ஈடுபாடுகொண்டு அதனை வளர்ப்பதில் பெரும் பங்காற்றியுள்ள அண்ணா, ஓவியத்துறையிலும் அதிக நாட்டமுடையவராவார். புரட்சிக்கவிஞர் பாரதிதாசன் கவிதைகளில் தோய்ந்துபோன இவர், அக் காலத்தில் பாவேந்தருக்குப் பொன்னாடை போர்த்தி 25 ஆயிரம் உருபாப் பொற்கிழியும் அளித்துச் சிறப்புச் செய்தார்; திராவிட நாடு, காஞ்சி ஆகிய தமிழேடுகளையும், 'ஹோம் லேண்டு' (Home Land) என்ற ஆங்கில ஏட்டையும் நடத்தி ஏராளமான சிறுகதைகளையும், கட்டுரைகளையும் தமிழ்கூறு நல்லுலகிற்கு வழங்கினார். 1965இல் மலேசியாவிற்கு வந்த அண்ணா, 1967இல் தமிழக முதல்வரானார்; 1968இல் இரண்டாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டைச் சென்னையில் திறம்பட நடத்தித் தமிழின் பெருமையை உலகிற்கு உணர்த்தினார். அதே ஆண்டில் அமெரிக்க யேல் பல்கலைக்கழகம் இவருடைய இலக்கிய - சமூக சேவைகளைப் பாராட்டி டாக்டர் பட்டம் வழங்கியது. 1969இல் சென்னை இராசதானியைத் 'தமிழ்நாடு' எனப் பெயர்மாற்றம் செய்து தமிழக வரலாற்றில் ஓர் இலச்சினையைப் பதித்தார். உலகத் தமிழர் நெஞ்சமெல்லாம் நிறைந்திருந்த அண்ணா 1969இல் புகழுடம்பெய்தினார். கின்னஸ் உலக சாதனை ஏட்டில் இடம்பெறும் அளவு இப் பெருமகனார் மறைவிற்கு அஞ்சலி செலுத்த மக்கள் கூட்டம் கூடியது என்பது குறிப்பிடத்தக்கது.

2. அப்துல் ரசாக், துன் 356

325ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

3. அருள்தாசன், ஆழி. 357

பிறப்பு : 15.7.1932 மறைவு : 8.11.1976

தமிழ்நாட்டின் ஆழியூரில் பிறந்த இவர் 1950இல் மலையகம் வந்தார். தொடக்கத்தில்

ஆங்கிலப் பள்ளி ஆசிரியராயும், பின்னர்ப் போக்குவரத்துத்துறை சுங்கத்துறைகளின் அதிகாரியாயும் பணிபுரிந்தார். நல்ல மேடைப் பேச்சாளராய இவர், சிறந்த நாடகக் கலைஞருமாவார். பதினைந்து நாடகங்களுக்குமேல் அரங்கேற்றியுள்ள இவருக்கு நாடகவேள், நாடகத் தந்தை முதலாய சிறப்பு விருதுகளைச் சமுதாயம் வழங்கியது. மேடைநாடகங்களை எழுதியதொடு பாடல், உரையாடல் எழுதி இசையமைத்து, இயக்கியவராய இவர், மலேசியக் கூட்டரசு கலைமன்றம் என்ற அமைப்பின் தலைவராய் விளங்கினார். மலேசிய நாடகக் குழுவினரைத் தமிழகத்திற்குக் கொண்டுசென்று அங்கும் நாடகங்கள் நடத்திய பெருமைக்கும் உரியவர் இவர்.

### *4. அன்பானந்தன், சமூகக் கலைமணி, சா. ஆ.*

*358*

*பிறப்பு : 5.2.1939* *மறைவு : 26.5.1980*

சிலாங்கூர் மாநிலம் உலுசிலாங்கூர் மாவட்டத்தில் உள்ள கோலகுபு பாருவில் பிறந்த இவர் இயற்பெயர் சுப்பிரமணியம். 1958இல் எழுத்துலகில் நுழைந்து சிறுகதை, கட்டுரை, கவிதை, நாடகம், புதினம் ஆகிய எல்லாத் துறைகளிலும் புகழ்பெற்று விளங்கினார். இவர் வெளியிட்டுள்ள நயனங்கள் (கவிதை), காலத்தின் விளக்கு (சிறுகதை), மரவள்ளிக் கிழங்கு (புதினம்), திருப்பம் (நாடகம்) ஆகிய நூல்களே இதற்குச் சான்று. சீர்திருத்த உணர்வு மிக்கவராய இவர், தொடக்கத்தில் செந்தூல் வாலிபர் சங்கத்தில் உறுப்பினரானார். பின்னர்த் தமிழ் இளைஞர் மணிமன்றம், அகில மலாயாத் தமிழர் சங்கம், மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மலேசியக் கலைஞர் இயக்கம் போன்றவற்றில் பல முதன்மைப் பொறுப்புகள் வகித்தவர் என்றாலும் தமிழ் இளைஞர் மணிமன்றத்தில்தான் இவரது தொண்டு மேலோங்கி நின்றது. 1964இல் உருவான தமிழ் இளைஞர் மணிமன்றங்களின் தேசியப் பேரவைக்கு முதல் தேசியத் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்; அருந்தொண்டாற்றி இளைஞர் மனங்களில் நிலையாய இடங்கொண்டார். தலைமைப் பொறுப்பிலிருந்து விலகிய பின்னரும் இறுதிக் காலம்வரை சிறப்புத் தலைவராய் விளங்கினார். மேலும், கடுமையான உழைப்பாளியானஇவர் சமூகச் சீர்திருத்தத்தில் காட்டிய ஆர்வம் அளவிடற்கரியது. இவர் தலைசிறந்த மேடைப் பேச்சாளர்களுள் ஒருவராயும், மேடை, வானொலி, தொலைக்காட்சித் துறைகளில் சிறந்த நடிகராயும் விளங்கினார். அன்பு, அடக்கம், ஒழுக்கம், ஒப்புரவு முதலாய பண்புநலன்களைக் கொண்டு இளைஞர் பலருக்கு வழிகாட்டியாய் விளங்கிய இவருக்கு மாமன்னர் 'பி.பி.என்., ஏ.எம்.என்.' விருதுகளை வழங்கிச் சிறப்பித்தார். சமுதாயம் 'சமூகக் கலைமணி' என்னும் விருதை வழங்கிப் பெருமைப்படுத்தியது.

### *5. ஆறுமுகம், சி.வி.*

*359*

1930களுக்கு முன்பே தமிழகத்திலிருந்து எப்.ஜி. நடேசன் ஐயர் குழு, வி. ஏ. செல்லப்பா குழு, மெட்ராஸ் சுகுண விலாச சபா, கணேசானந்த டிரமட்டிக் குழு, ரெங்கநாயகி நாடகக்குழு, கோவிந்தசாமி வாத்தியார் அரங்கசாமி நாடகக்குழு முதலாய நாடகக் குழுக்கள் இங்கு வந்து (தொழில்முறை) புராண இதிகாச நாடகங்கள் நடத்தியுள்ளன. அப்படி வந்த அரங்கசாமி நாயுடு நாடகக் குழுவில் சேர்ந்து வந்த இளைஞர்தாம் சி வி. ஆறுமுகம். இங்கேயே தங்கிவிட்ட அரங்கசாமி நாயுடு நாடகக் குழுவில் தொடர்ந்து இவர் நடித்து வந்தார்; பின்னர்ப் புக்கிட் மெட்ராஜம் சுப்பிரமணியத் தேவர் நாடகக் குழுவில் சேர்ந்து நடித்துவந்தார். சிறந்த நாடகக் கலைஞராய வைத்தியநாதன் முதலாயவரோடு நாடகக் கலையையே தொழிலாய்க் கொண்டு நடித்துவந்த சி. வி. ஆறுமுகம் 1960களில்

நாடகக்கலை நலிவுற்றவுடன் மனம் நொந்து நாடகக் குழுவிலிருந்து நீங்கி ஒரு கோயில் கணக்கராய்ப் பணியேற்றார். சிறிது காலம் நோயுற்றிருந்த இவர் காலமானார்.

### 6. ஆறுமுகம், ரெ. 360

*பிறப்பு : 31.1.1963* *மறைவு : 18.12.1988*

மலேசியாவின் தலைசிறந்த காற்பந்து நட்சத்திரமாய்த் திகழ்ந்த இவர், அனைத்துலகும் போற்றும் 'கோல்கீப்ப'ராக விளங்கினார். காற்பந்து ரசிகர்களால் 'ஸ்பைடர் மேன்' (Spider Man) என்று அழைக்கப்பட்ட இவர், காற்பந்து விளையாட்டுத்துறையில் 1970முதல் 1988வரை சிலாங்கூர் மாநிலத்தையும் நாட்டையும் பிரதிநிதித்து விளையாடி வெற்றிகளைக் குவித்துள்ளார்; மலேசியத் தேசியக் காற்பந்துக் குழுவிற்குப் பல முறை தலைமையேற்று, அனைத்துலக அரங்குகளில் வழிநடத்தினார்; நாட்டைப் பிரதிநிதித்து 194 முறை உலக அரங்கில் விளையாடினார். இவருக்கு மாட்சிமை தங்கிய மாமன்னர் 'ஏ.எம்.என்.' விருது வழங்கிச் சிறப்பித்துள்ளார். 1988இல் கார்விபத்தில் காலமான இவருக்கு நாடு செலுத்திய அஞ்சலி மறக்கவியலாத வரலாற்று நிகழ்ச்சியாகும்.

### 7. ஆஷா தியாகராாசன் 361

*பிறப்பு : 1.4.1958* *மறைவு : 1987*

இந்தியாவில் பிறந்த இவர், மலேசிய நடனக்கலைஞர் தியாகராசனை மணந்து இந் நாட்டில் குடியேறினார். பரதம், குச்சுப்புடி, மணிப்புரி, கிராமியம் முதலாய நாட்டிய வகைகளில் வல்லவர்; தம் கணவரொடு இணைந்து நடனப்பள்ளி அமைத்து நூறு மாணவர்களுக்குமேல் பயிற்சியளித்தார். ஆறாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டின்போது நிகழ்ந்த சிலப்பதிகார நாட்டிய நாடகத்தில் கண்ணகியாய்ப் பங்குபெறவிருந்த இவர், தீவிபத்தில் மறைய நேர்ந்தது வருத்தத்திற்குரியது.

### 8. துவாங்கு யஹ்யா புத்ரா இப்னி அல்மர்ஹூம் இப்ராஹிம், சுல்தான் 362

(Tuanku Yahaya Putra Ibni Al-Marhum Sultan Ibrahim, DKM, SMN, PKC (Pahang), DK (Perlis), DK (Sarawak), DK, DMN, SPMK, SJMK, DK (Trengganu), DK (Selangor), DK (Kedah), DK (Brunai), DKM, SMN, DK (Pahang), Sultan of Kelantan

*பிறப்பு : 10.12.1917* *மறைவு : 29.3.1979*

கிளந்தான் சுல்தானாய இவர் மலேசியாவின் மாமன்னராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டு 12.9.1975இல் ஆறாம் பேரரசராய்ப் பதவியேற்றார். திறம்பட ஆட்சிபுரிந்த இவர், தம் பதவிக் காலத்திலேயே காலமானார்.

### 9. இராமசாமி, பெரியார், ஈ. வே. 363

327ஆம் பாடலின் பின்புலம் - குறிப்புரை காண்க.

**10. கண்ணதாசன், கவிஞர் 364**

பிறப்பு : 24.6.1927 மறைவு : 17.10.1981

தமிழகத்துச் சிறந்த கவிஞர்களுள் ஒருவராய இவர் முதலில் திராவிட இயக்கத்தைச் சார்ந்து, தம் கொள்கைகளைக் கவிதைகள்மூலம் பரப்பினார்; அக்காலத்தில் இவர் பாடிய மாங்கனி, கல்லக்குடிக் காவியம் முதலாய காவியங்கள் கற்பனைவளம் மிக்கவை. உணர்ச்சிப் பிழம்பான இவருடைய கவிதைகள் தென்றலும் புயலும் கலந்த கலவை போன்றவை. பிற்காலத்தில் இவர் பாடிய 'இயேசு காவியம்' குறிப்பிடத்தக்க நூலாகும். இவருடைய கவிதைகள் ஆறு தொகுதிகளாய் வெளிவந்துள்ளன. பின்னர் இந்துமதப் பற்றாளராகிக் கவிதை, கட்டுரைவழி இறைபற்றைப் பரப்பினார். திரைப்படப் பாடல்களை இவர் எழுதிய அளவுக்கு வேறு யாரும் எழுதவில்லை. இவர் இயற்றிய திரைப்படப் பாடல்கள் இரண்டு பெரும் தொகுதிகளாய் வெளிவந்துள்ளன. பழைய இலக்கியக் கருத்துகளையும் எளிமையாய்ப் பாடல்வழிச் சொன்னார்; நிறைய நூல்களை இயற்றினார்; இல்லற ஜோதி, மாலையிட்ட மங்கை, சிவகங்கைச் சீமை போன்ற திரைப்படங்களின் கதை உரையாடல் ஆசிரியரும் இவரே. அர்த்தமுள்ள இந்துமதம் எனும் தலைப்பில் இவர் எழுதிய நூல்கள் மிகப் புகழ்பெற்றவை.

**11. கலியாணசுந்தரனார், தமிழ்த் தென்றல், திரு. வி. 365**

பிறப்பு : 26.8.1883 மறைவு : 1953

திரு. வி. க. எனத் தமிழ்கூறு நல்லுலகம் அன்பொடு அழைக்கும் தமிழ்ப் பெரியாராய இவர், பெரும்புலவர் கதிரைவேற் பிள்ளையின் மாணவர். இந்திய விடுதலைப் போராட்ட வீரராய இவர் தொழிற்சங்க முன்னோடிகளுள் ஒருவர்; 'நவசக்தி' இதழின் ஆசிரியராய் இருந்தார்; புதிய தமிழ் உரைநடையின் தந்தை; சிறந்த மேடைப் பேச்சாளர். ஆன்மநேய ஒருமைப்பாடு காணவேண்டி உருகிப் பாடிய பாவலர்; கார்ல் மார்க்சின் (Karl Marx) பொருள்முதல் வாதமும் காந்தியடிகளின் அகிம்சை (இன்னாசெய்யாமை) வாதமும் அடிப்படையில் ஒன்றே எனும் கருத்துடையவர்; இதனை விளக்கி 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்' என்னும் நூலை எழுதினார். பெண்களின் முன்னேற்றத்தில் பேரார்வம் கொண்டவராய இவர் 'பெண்ணின் பெருமை' நூலை எழுதினார்; தமிழ்த்தென்றல், உள்ளொளி, முருகன் அல்லது அழகு முதலாய நூல்களின் ஆசிரியர். இவர் மாணவர்களுள் டாக்டர் மு. வரதராசனும் ஒருவர்.

**12. கரீம், கன்னல்கவி, ந. (முற்பகுதி) 366**

பிறப்பு : 1914 மறைவு : 1976

தமிழ்நாட்டில் உள்ள நக்கம்பாடியில் பிறந்தவராய இவர், 1937இல் சுவாமி இராமதாசர் மாணவரானார்; இலக்கண இலக்கியங்களில் ஆழ்ந்த புலமை பெற்றவர்; நாட்டுப்புறப் பாடல் மெட்டுகளில் நிறையப் பாடல்களை இயற்றினார்; மலேசிய வானொலியில் இடம்பெறும் உள்ளூர்ப் பாடல் நிகழ்ச்சிக்கு இவரே முன்னோடி. 'ஒளி பிறந்தது' என்னும் கவிதை நாடகநூலை வெளியிட்டுள்ளார். பல்லாண்டுகளாய் மலேசிய வானொலியில் (பினாங்கு) இஸ்லாமியச் சிறப்பு இசை உரைநிகழ்ச்சிகளை எழுதிவந்தார். 1960இல் கே.கே.டி. இபுராஹீமுடன் சேர்ந்து வடமலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தை அமைத்தார். இவருக்கு 1961இல் திருவாசகமணி பாலசுப்பிரமணியம் 'கன்னல் கவி'

என்னும் பட்டம் வழங்கினார்; 1973இல் கவிஞர் கண்ணதாசன் பொன்னாடை போர்த்து, 'கவிதாமணி' என்னும் பட்டமும் வழங்கினார்.

### 13. பெருமாள், இரா. (பிற்பகுதி) 366

கவிஞர் கண்ணதாசன் இறைவனுக்கு விடுத்த வினாவிற்கு, இறைவனே மறுமொழி கூறுவதுபோல் 'மாயை' எனும் தலைப்பிலாய கவிதையைப் படைத்ததன் மூலம், கவிதை உலகில் ஓர் இடத்தைப் பிடித்துக்கொண்டவர்; 1960களில் பரபரப்பாக நிரம்பக் கவிதைகளை எழுதிக் குவித்தார். இவர், மலேசியப் பேரொலி (1964), போர் முழக்கம் (1965), இன்ப மலேசியா (1966), மாயை (1967) முதலாய கவிதை நூல்களை வெளியிட்டுள்ளார். இசைப்பாடல்களும் நாடகப்பாடல்களும் எழுதியுள்ள இளைஞராய இவர் சாலை இடறொன்றில் காலமானார்.

### 14. காமராசர், கரும வீரர், கு. 367

*பிறப்பு : 15.7.1903* *மறைவு : 2.10.1975*

1954இல் தமிழ்நாட்டு முதலமைச்சராய ஒரு பழுத்த அரசியல்வாதி. பட்டக்கல்வியும், தெளிவான ஆங்கிலப் புலமையும் பெற்றிருந்த அரசியல்வாதிகளின் நடுவில் அனுபவக் கல்வியை மட்டுமே முதலாய் வைத்து, சிறந்த அரசதந்திரிகளை உருவாக்கிய ஓர் அரசதந்திரி; பேராயக் (காங்கிரஸ்) கட்சியின் தேசியத் தலைவராகி இந்திய நாட்டை வழிநடத்திய பெருமகன்; ஊர்தோறும் பள்ளிகளை அமைத்துப் பரந்த அளவில் கல்வியை வளர்த்தவர்; திராவிட இயக்கம் கொண்டுவந்த பல சிந்தனைகளைச் செயற்படுத்திப் 'பச்சைத்தமிழர்' என்னும் சிறப்பினைப் பெற்றவர். எதற்கும் சளைக்காத பெரும் துணிவு இவர் தனிச் சிறப்பாகும்.

### 15. குப்புசாமி, செந்தமிழ்ச் செல்வர், சி. வீ. 368

334ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

### 16. குருபாதம், க. 369

*பிறப்பு : 31.7.1916* *மறைவு : 2.3.1984*

பாகான் டத்தோவில் பிறந்த இவர் கோலாலம்பூர் விக்டோரியா பள்ளியில் உயர்கல்வி கற்றார்; நீதிமன்றத்தில் மொழிபெயர்ப்பாளராய்ப் பணியாற்றினார்; முனிசிபல் கமிஷனராய் இருந்தார்; சிலாங்கூர் மாநில ஆட்சிக் குழு உறுப்பினரானார்; இந்திய தேசிய இராணுவத்தில் பொறுப்பு வகித்தார்; 1977இல் நேதாஜி ஆராய்ச்சி மையம் அமைத்து, அதன் தலைவரானார்; ம.இ.கா.வில் தொடக்க காலத்திலிருந்து ஜான் திவியோடு தொடர்புடையவர். கல்கத்தாவிலுள்ள நேதாஜி ஆய்வு நிறுவனம் 1985இல் தான் நடத்திய ஐந்தாம் உலக நேதாஜி கருத்தரங்கத்தின் ஓர் அமர்வைக் 'குருபாதம் அமர்வு' எனப் பெயரிட்டு நடத்தியது குறிப்பிடத்தக்கதாகும். ஜான்சி ராணி படைபற்றிய வரலாற்றை 'ஜான்சி ராணி கி படை' எனும் பெயரில் விரிவான நூலாக்கியுள்ளார்.

17. கிருட்டினன், ஓவியர் 370

'தமிழ்நேசன்' நாளிதழில் ஓவியராய்ப் பணியாற்றிய இவர், மலேசியாவில் வெளிவந்த நூல்கள் பலவற்றிற்கு அட்டைப்படம் வரைந்தளித்துள்ளார். இவர் மறைவு குறித்துக் கவிஞர் பலர் இரங்கற் பாக்கள் பாடியுள்ளனர். அப் பாக்களில் ஒன்று இது.

18. கென்னடி, ஜான் எப். (John Fitzgerald Kennedy) 371

பிறப்பு : 1917 மறைவு : 1963

இரண்டாம் உலகப் போரின்போது (1943), கடற்படையில் பணியாற்றிய இவர், பெரும் சாதனை புரிந்தார்; இரண்டாம் உலகப் போருக்குப் பின் அரசியலில் ஈடுபட்டார். இளமையிலேயே அமெரிக்காவின் குடியரசு தலைவராய இவர், (1960-63) முதல் ரோமன் கத்தோலிக்கக் குடியரசு தலைவர் என்பது குறிப்பிடத்தக்கது.

19. சத்தியானந்தர், சுவாமி 372

பிறப்பு : 1909 மறைவு : 1961

'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் அப்பர் திருமொழிக்கிணங்கவும், 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்னும் திருமூலர் கொள்கைக்கு ஏற்பவும் வாழ்நாளின் இறுதிவரை உழைத்தவர். இவர் இயற்பெயர் கைலாசம். 22ஆம் அகவையிலேயே இல்லத்திலிருந்து வெளியேறி ஆன்மிகத் துறையை இறுகப்பற்றிய இவர், 'பிரமச்சாரி கைலாசம்' என்றே அழைக்கப்பட்டார்.

உயர்நிலைக் கல்வியை (சீனியர் கேம்பிரிட்ஜ்) முடித்து அஞ்சல் துறையில் பணியேற்ற இவர், (நேர்காணலின்போது அன்னை மங்களம் கூறியது) அஞ்சலகத் தலைமைப் பொறுப்புக்கு உயர்ந்தார். ஆனால் இவர் ஆன்மிகச் சிந்தனைகளும், தொண்டு மனமும் அப் பணியை உதறச் செய்தன. இவர் இராமகிருஷ்ண பரமஹம்சர் மாணவருள் ஒருவராய விஞ்ஞானந்தரிடம் சமய நூற்பயிற்சி பெற்றார். ஆன்மிக, சமய மெய்யறிஞர்களை நேரில் கண்டு அளவளாவும் பக்குவம் பெற்றார் என்றாலும், இவர் மனம் மக்கள் தொண்டிலேயே பதிந்திருந்தது. சப்பானியர் ஆட்சிக் காலத்தின்போது, மாவீரர் நேதாஜி தலைமையில் இயங்கிய இந்திய தேசிய ராணுவம், இந்திய விடுதலைக் கழகம் ஆகியவற்றில் பெரும் பொறுப்பு வகித்தார்.

சப்பானியர் தோல்விக்குப்பின் ஆங்கிலேயர் மீண்டும் நாட்டைக் கைப்பற்றியபோது விடுதலை இயக்கத்திலிருந்தவரைச் சிறையில் தள்ளி வழக்குத் தொடர்ந்தனர், அவர்களை விடுவிக்கும் பொருட்டு அமைந்த இந்தியர் மறுவாழ்வுக் குழுவில் (1945) நேருவின் தகவுரைக்கு இசைந்து செயலாளர் பொறுப்பை ஏற்றார்; ம.இ.கா. உருவாக்கத்திற்கும் பாடுபட்டார். 1947இல் சயாமிலும் சப்பானிலும் நடந்த புத்த சமய மாநாடுகளில் கலந்து சமய மெய்மைகளை விளக்கிய இவருக்கு முனைவர் (Ph.D.) பட்டம் கிடைத்தது. சமாதான நீதிபதி (J.P.) விருதும் இவருக்கு வழங்கப்பட்டது. 1949இல் இந்தியாவில் நடைபெற்ற உலக சமாதான மாநாட்டிற்குச் சென்ற இவருக்குத் தவயோகி சுத்தானந்த பாரதியார் 'சத்தியானந்தர்' என்னும் திருப்பெயரைச் சூட்டினார்.

இவர் 1949ஆம் ஆண்டு பூச்சோங் சாலையில் 'சுத்த சமாஜம்' (Pure Life Society) என்னும் அமைப்பைத் தோற்றுவித்து, வாழ்நாள் முழுதும் அதன் தலைவராயிருந்து அரிய பல தொண்டுகளாற்றினார். இனம், சமயம், மொழி முதலாய வேறுபாடுகளைக் கருதாமல் மாந்தநேய அடிப்படையிலேயே இவ் வியக்கத்தில் ஆதரவற்ற சிறார் நாட்டுக்கு ஏற்ற நற்குடி மக்களாய் உருவாக்கப்பட்டு வருகின்றனர். (இன்றும் அதே கொள்கையொடு அப் பேரியக்கத்தை, இவரிடம் அடிநாளிலிருந்து பயிற்சி பெற்ற அன்னை மங்களம் திறம்பட நடத்திவருகிறார்). சுவாமி சத்தியானந்தர் எழுதிய 'மலாயா சரித்திரம்' என்னும் நூல் பெரும் புகழ்பெற்றது. அதனைத் தமிழ்ப்பள்ளிகளில் வரலாற்றுப் பாடநூலாகக் கல்வி அமைச்சு நீண்ட காலம் பயன்படுத்தி வந்தது.

### *20. சாரங்கபாணி, தமிழவேள், கோ.* *373*

339ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

### *21. சுப்பிரமணியன், முருகு.* *374*

*பிறப்பு : 5.10.1924* *மறைவு : 10.4.1982*

தமிழகத்தில் பிறந்த இவர் இளமையிலேயே எழுத்தார்வம் கொண்டிருந்தார்; 1940களில் 'இளந்தமிழன்' என்னும் கையெழுத்து ஏடாகிய திங்கள் ஏட்டினைத் தொடங்கினார்; பின்னர் 1944இல் 'குமரன்' வார ஏட்டின் துணை ஆசிரியரானார். 1947இல் 'பொன்னி' இதழ் மாதம் ஒரு முறையாயும், பின்னர் மாதம் இருமுறையாயும் வெளிவந்தது. 'பாரதிதாசன் பரம்பரை'யை உருவாக்கிய பெருமை பொன்னிக்குரியது. 1953இல் மலாயா வந்தார். முதலில் சிங்கைத் 'தமிழ்முரசு' நாளிதழில் துணையாசிரியராயும், பின்னர்க் கோலாலம்பூர்த் 'தமிழ்நேசன்' நாளிதழில் ஆசிரியராயும் பணிபுரிந்தார்; முரசில் வெண்பாப் போட்டியைத் தொடக்கிக் கவிஞர் பலரை ஊக்குவித்தார்; மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்குச் சுமார் 10 ஆண்டுகள் தலைவராய் இருந்தார்; இருபதுக்கும் மேற்பட்ட நூல்களை எழுதியுள்ளார். மலேசியாவில் தமிழவேள் கோ. சாரங்கபாணியை அடுத்துத் தமிழ் எழுத்தாளர்களை ஊக்குவித்த பெருமை இவரைச் சாரும். தம் இறுதிக் காலத்திலும் 'புதிய சமுதாயம்' என்னும் திங்களிதழை நடத்திய இவர் தமிழ்ப்பணி, காலத்தால் நிலைக்கக் கூடியதாகும்.

### *22. சுப்பையா, முனைவர், இராம.* *375*

*பிறப்பு : 2.1.1933* *மறைவு : 25.11.1967*

மலாயாவில் பி.ஏ.ஆனர்சு பட்டம் பெற்ற இவர், இலண்டனில் முனைவர் (Ph.D.) பட்டம் பெற்றார். மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையில் பணியாற்றிய இவர், தமிழ்க் கல்வி வளர்ச்சியில் தீவிரப் பங்குகொண்டு தமிழ்ப் பள்ளிக்கூட முன்னேற்றத்தில் பேரார்வம் காட்டினார். நம் இனத்தின் கல்வி வளர்ச்சிக்குத் தமிழ்ப்பள்ளிகளில், தமிழ் ஒரு கட்டாயப் பாடமாகமட்டும் இருந்தால் போதும் என்றும், மற்ற அனைத்துப் பாடங்களும் தேசிய மொழியிலேயே இருத்தல் வேண்டுமென்றும் இவர் கொண்டுவந்த திட்டத்தைச் சமுதாயம் ஏற்கவில்லை. தமிழ்ப் பள்ளிகளின் தோற்றத்தையே மாற்றும் வண்ணம் அமைந்திருந்ததால் அத் திட்டம் பெருந்தோல்வி கண்டது. தமிழ் மலேசியானா (Tamil Malaysiana - மலேசியத்

தமிழ் இதழ்கள், நூல்களைப்பற்றிய விவரங்கள்), மலாக்கா மன்னர்கள் வரலாறு முதலாய பல பயனுடைய நூல்கள் எழுதியுள்ள இவர், கார் விபத்தொன்றில் காலமானார். இவர் நினைவைப் போற்றும் வண்ணம் மலேசிய வானொலி தமிழ்ப்பகுதியின் முன்னாள் தலைவரும் ஆசிய ஒலிபரப்புக் கழகத் தலைவருமாய இரா. பாலகிருஷ்ணன் முயற்சியில் தொடங்கப்பெற்ற 'இராம சுப்பையா கல்வி அறக்கட்டளை' இன்றளவும் வசதியற்ற பட்டக்கல்வி மாணவர்களுக்கு உதவிவருகிறது.

## 23. சேகரன், நா. இரா. 376

*பிறப்பு : 24.6.1939* *மறைவு : 12.12.1977*

பேச்சைக் குறைத்துச் செயலையே நாட்டமாய்க் கொண்டிருந்த இவர், 'செயல் திலகம்' என்று போற்றப்பட்டார். பல்வேறு அமைப்புகளில் பொறுப்பு வகித்து, வரையறுத்த செயல்களால் தொண்டுக்கு முன்மாதிரியாய்த் திகழ்ந்தார், 1975இல் வீனஸ் கலைமன்றத்தின் தகவுரைஞரானார். இவருடைய கருத்துகளை மதித்துச் செயல்படத் தொடங்கிய 'வீனஸ் கலைமன்றம்' கலைத்துறையில் பல்வேறு சாதனைகளைப் புரிந்துள்ளது.

1. எச் செயலையும் திட்டமிட்டுப் பொதுநல நோக்கொடு செவ்வனே செய்ய வேண்டும்;
2. தாய்மொழியையும் பண்பாட்டையும் பேணவேண்டும்; அவற்றை மக்களுக்குப் பயனளிக்கக்கூடிய வலிமை கொண்டதாய் மேம்படுத்த வேண்டும்;
3. எடுக்கும் செயலை எத்துணை எதிர்ப்புகள் வந்தாலும் தடைகள் ஏற்பட்டாலும் இறுதிவரை உறுதியுடன் நின்று அதில் வெற்றிகாண வேண்டும்

என்பன போன்ற அரிய குணங்களைக் கொண்ட இவர் முப்பத்தெட்டாம் அகவையிலேயே ஒரு விபத்தில் காலமானார்.

## 24. தண்டாயுதம், முனைவர், இரா. 377

பிறப்பு : 1.8.1939 மறைவு : 5.6.1987

சென்னைப் பல்கலைக்கழகத்தில் படித்துப் பட்டம்பெற்ற இவர் பேரறிஞர் மு.வ. மாணவராவார். படைப்புத் திறனும் ஆராய்ச்சித் திறமையும் வாய்க்கப் பெற்றவராய இவர், மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையில் விரிவுரையாளராய்ச் சேர்ந்து 17 ஆண்டுகளுக்குமேல் தொடர்ந்து பணியாற்றினார். இங்குப் பணியாற்றிய காலத்தில் ஐந்தாம் ஆறாம் படிவ மாணவர்களுக்கு இலக்கிய வழிகாட்டி வகுப்புகளைப் பல ஊர்களில் நடத்தினார்; நாடெங்கும் நடந்த இலக்கிய - சமய நிகழ்வுகளில் மிகுதியாகப் பங்கேற்றார். மலேசியத் தோட்டப்புறப் பாடல்களைத் தொகுப்பதில் மும்முரமாக ஈடுபட்டார் (அப் பாடல்களை நூலாக்கும் முயற்சி இப்போது நடந்து வருகிறது) பல்வேறு ஆராய்சி நூல்களை எழுதியுள்ள இவர்தம் 'தற்காலத் தமிழ் இலக்கியம்' என்னும் நூல் இந்தியாவின் உயர்தரப் பரிசான சாகித்திய அகாதமி பரிசு பெற்றது. இவர் நினைவைப் போற்றும் வண்ணம் வீ. செல்வராஜ் முயற்சியால் 'இரா. தண்டாயுதம் நினைவிலக்கியப்

பேரவை' (1989) இவண் அமைந்துள்ளது. ஆண்டுதோறும் வெளிவரும் அனைத்துப் படைப்புகளையும் ஆராய்ந்து சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து நூலாக்குவது அதன் நோக்கமாகும்.

## 25. தனிநாயக அடிகளார், முனைவர், வண. 378

*பிறப்பு : 2.8.1913* *மறைவு : 1980*

தமிழக அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் முதுகலைப் (M.Litt. - 1949) பட்டம் பெற்ற இவர் இலண்டன் பல்கலைக்கழகத்தில் 1957இல் முனைவர் (Ph.D.) பட்டம் பெற்றார். முத்து. இராசாக்கண்ணனாருக்குப் பின் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் தலைவரான இவர் தமிழ்ப் பகுதி சீர்மையும் செம்மையும் பெறப் பாடுபட்டார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் துணைச் செயலாளராய்ப் பொறுப்பு வகித்த இவர், முதலாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு (1966) மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நடைபெற அச்சாணியாய் இருந்து பணியாற்றினார். மலாயாப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய காலத்தில் புதின ஆசிரியர் கல்கியின் படைப்புகளை ஆய்வு செய்யும் 'கல்கி கருத்தரங்கம்' ஒன்றனை நடத்தினார்; தமிழர் திருநாள் முதலாய பல பொது நிகழ்ச்சிகளிலும் பங்கேற்றுச் சிறப்புச் செய்துள்ளார். பன்மொழிப் புலவராய இவர் ஆங்கிலத்திலும் தமிழிலும் நிறைய நூல்கள் எழுதியுள்ளார்.

## 26. திருஞானசம்பந்தன், துன், வீ. 379

345ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் - காண்க.

## 27. திலீபன், வீரன் 380

*பிறப்பு : 1963* *மறைவு : 27.9.1987*

1833வரை இலங்கையில் தனி இனமாய் விளங்கித் தனி அரசும் ஓச்சி வந்த தமிழினத்தின் மண் பலவந்தமாய்ச் சிங்கள நிலப்பகுதியுடன் இணைக்கப்பட்டது. 2.4.1948இல் இலங்கை விடுதலை பெறும்வரை அக் கொடுமை நீடித்தது; விடுதலை அளித்த ஆங்கிலேயர் சிங்களவர்க்கும் தமிழர்க்கும் சேர்த்தே அளித்துச் சென்றனர். என்றாலும் 25.3 விழுக்காடே மக்கள்தொகை கொண்ட தமிழர் உரிமைகள் பறிக்கப்பட்டன; படிப்படியாய்த் தமிழினத்தையே ஒழித்துக் கட்டும் அளவு சிங்களவர் வெறியர்களாயினர். இலங்கையில் நான்காம் உலகத் தமிழாராய்ச்சி மாநாடு நிறைவெய்தி (3.1.1974 - 9.1.1974) 50,000 பேர் கலந்து கொண்ட பரிசளிப்பு (வெற்றிபெற்ற கலைஞர்க்கு) விழாவில், சிங்கள வெறியர் நடத்திய வன்முறை ஆர்ப்பாட்டங்களும் படுகொலைகளும், எழுத்தில் வடிக்கமுடியாத கொடுமைகளும் தனி ஈழம் பெற்றாலன்றித் தமிழினத்திற்கு வாழ்வில்லை என்னும் நிலையை உருவாக்கின. 1948 முதல் அமைதிவழியில் போராடிவந்த தந்தை செல்வாவே, 14.5.1976இல் மேற்படி தீர்மானத்திற்கு வந்தார். தலைமுறை தலைமுறையாய் இலங்கையை ஆண்டுவந்த தமிழரை, இடையில் புகுந்த சிங்களவர் துடைத்தொழிக்கும் நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருவதைத் தவிர்க்கவும், ஆளும் உரிமை பெறவும் ஆயுதம் தாங்கிப் போராடினாலன்றி விடிவில்லை என உணர்ந்த இளைஞர்கள் பல குழுக்களாய்ப் பிரிந்து தமிழ்ஈழ விடுதலைப் போர் நடத்தத் தலைப்பட்டனர். அக் குழுக்களில் வலிமைமிக்க ஒன்று 1976இல் தளபதி வேலுப்பிள்ளை பிரபாகரன் தலைமையில் அமைந்த தமிழ்ஈழ விடுதலைப்

புலிகள் அமைப்பாகும் (Liberation Tiger Of Tamil Eelam - LTTE). உலகம் வியக்கும் வண்ணம் வீர சாகசங்களைப் புரிந்துள்ள அவ் வியக்கத்தைச் சார்ந்த மறவர்களுள் ஒருவன்தான் வீரன் திலீபன். தமிழ்ஈழ விடுதலைக்கு உயிர்கொடுத்த அம் மறவனுக்கு இப் பாடல் அஞ்சலி செலுத்துகிறது.

*28. நாகப்பன், டான்ஸ்ரீ, ஆதி.* **381**

*பிறப்பு : 3.2.1925* *மறைவு : 9.5.1976*

இரண்டாம் உலகப் போரின்போது உருவாய இந்திய தேசிய இராணுவத்தில் பங்குகொண்டிருந்த இவர், அவ் வியக்கத்தின் பெண்கள் பகுதியான ஜான்சி ராணி பிரிவில் பெரும் பொறுப்பு வகித்த புவான்ஸ்ரீ ஜானகி அம்மையாரைத் துணிச்சலொடு கலப்புத் திருமணம் செய்துகொண்டார். பின்னர்ச் சட்டக்கல்வி கற்று அத் துறையில் ஒரு வல்லுநராய்த் திகழ்ந்தார்; மலேசிய அரசாங்கத்தின் சட்டத்துறையில் இவர் கணிசமான பங்காற்றியுள்ளார். ராயல் கமிஷன் முதலாய பல கமிஷன்களுக்கு இவரே தலைவராயிருந்துள்ளார். இந்துத் திருமண மணவிலக்குச் சட்டத்தை வரைந்துகொடுத்துள்ள இவர் சீர்திருத்தத் திருமணங்களும் செல்லத்தக்கதாய் வழிசெய்தார். தமிழ்நேசன் ஆசிரியராயும் பணியாற்றியுள்ள இவர் ஒரு விடுதலைப் போராட்ட வீரராவார். ஜான் திவியொடு அத் துறையில் பணியாற்றிய இவர், மலேசிய இந்தியர் காங்கிரசில் அடிநாள்தொட்டே பணியாற்றி வந்தார், அதில் பல பொறுப்புகள் வகித்து, தேசியத் துணைத் தலைவராயும் மேலவை உறுப்பினராயும், அமைச்சராயும் (1974-76) பதவி வகித்துள்ளார். அமைச்சராய்ப் பதவியேற்ற குறுகிய காலத்திலேயே இவர் இயற்கை எய்தியது சமுதாயத்திற்குப் பேரிழப்பாகும்.

*29. சுபாஷ் சந்திரபோஸ், நேதாஜி* **382**

347ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

*30. பாரதிதாசன்* **383**

349ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

*31. பெருமாள், கவிஞர், கா.* **384**

*பிறப்பு : 1929* *மறைவு : 1979*

தமிழ்நாட்டு நாமக்கல்லில் பிறந்த இவர், 1938இல் மலேசியாவிற்கு வந்து கேமரன் மலையிலிருந்து கவிதைப் பணியைத் தொடங்கினார். மேடைநாடகம், கிராமியக் கலைகளாய தெருக்கூத்து, வில்லுப்பாட்டு முதலாய கலைகளில் தேர்ந்த இவர் ஓவியக் கலையிலும் சிலம்பக் கலையிலும் தச்சுக்கலையிலும் வல்லவர். இந்திய தேசிய இராணுவத்தில் (I.N.A.) 'நாயக்' என்னும் பகுதித் தலைமையை ஏற்றிருந்தார். மலேசிய - சிங்கப்பூர் வானொலி நிலையங்களில் சிறந்த தயாரிப்பாளர் என்ற முத்திரையையும் பெற்றார். மலேசியாவின் 40 ஆண்டுகால வரலாற்றின் எல்லா நிலைகளையும் பாடியுள்ள இவர், பலருக்கு ஊக்கமூட்டி வளர்த்தவரும் ஆவார். இவருடைய கவிதை நாடகமாகிய 'கட்டைவிரல்', 'தேசத் தந்தை துங்கு' வில்லுப்பாட்டுப் புகழ்பெற்றவை. 'கட்டைவிரல், அன்பு

என்னும் தத்துவம் இஸ்லாம்' ஆகிய கவிதை நூல்களொடு, 'துயரப் பாதை' என்னும் புதினத்தையும் வெளியிட்டுள்ளார்.

### *32.* *மறைமலையடிகள், தனித் தமிழ்த் தந்தை* *385*

*பிறப்பு : 18.7.1876* *மறைவு : 15.9.1950*

தமிழ் தனித்தியங்க வல்லது என்பதனை மெய்ப்பித்த இவர், சுவாமி வேதாசலம் என்னும் தம் பெயரை மறைமலை அடிகள் என்று மாற்றிக்கொண்டார். இறுதி மூச்சுவரை தனித்தமிழிலேயே எழுதியும் பேசியும் மன்பதைக்கு வழிகாட்டியாய் இருந்த இவர், சைவ சித்தாந்தத்திலும் ஆழ்ந்த புலமையுடையவர். 25 ஆண்டுகாலம் ஆராய்ச்சி செய்து இவர் எழுதிய 'தொலைவிலுணர்தல்' என்னும் நூலும், மனிதவசியம் அல்லது மனக்கவர்ச்சி, நூறாண்டு மக்கள் வாழ்க்கை முதலாய நூல்களும் பெரும் புகழ்பெற்றவை. தமிழுக்கும் சைவத்திற்கும் உரிமைச் சான்றாளராய் (Authority) விளங்கிய இவர் தொண்டுகள், தமிழ் உள்ளளவும் நிலைத்துநிற்கும் தன்மையன.

### *33.* *மாணிக்கவாசகம், டான்ஸ்ரீ, வெ.* *386*

351ஆம் பாடலின் பின்புலம் - பாட்டுடைத் தலைவர் பகுதியில் காண்க.

### *34.* *மாட்டின் லூதர் கிங் (Martin Luther King)* *387*

*பிறப்பு : 1929* *மறைவு : 1968*

அமெரிக்கக் கறுப்பர்களின் உரிமைக்காகப் போராடிய இவர் ஓர் அறப்போர் வீரராவார்; தென்அமெரிக்காவிலிருந்த இனப்பிரிவினை வாதத்தை எதிர்த்தார்; அதற்காகப் பேருந்துப் போராட்டம் (யாரும் ஏறக்கூடாது) நடத்தினார்; தம் கொள்கையை நிலைநாட்ட வாஷிங்டனுக்குக் கால்நடைப் பயணம் மேற்கொண்டார்; 1964இல் சமாதானத்திற்காக நோபல் பரிசு பெற்ற இவர் கொடியவர்களால் சுட்டுக்கொல்லப்பட்டார்.

### *35.* *முகமது இஸ்மாயில், காயிதே மில்லத், மு.* *388*

பிறப்பு : 1893 மறைவு : 5.4.1972

'கண்ணியத்திற் குரியவர்' எனத் தம்முடைய அரசியல் எதிரிகளாலும் மதிக்கப்பெற்ற இவர், தமிழ்நாட்டின் நெல்லை மாவட்டத்தில் செல்வாக்கும் செல்வச் செழிப்பும் மிக்க குடும்பத்தில் பிறந்தார்; சுதந்திரப் போராட்ட வேட்கையினால் சட்டக் கல்லூரிப் படிப்பைத் துறந்தார்; சுதந்திரத்திற்குப் பிந்திய இந்தியாவில் 'இந்திய யூனியன் முஸ்லிம் லீக்'கின் அனைத்திந்தியத் தலைவராய் அமர்ந்து அரசியல் தொண்டு புரிந்தார். அரசியல் நிருணய சபையின் உறுப்பினராய் இருந்த இவர், "இந்தியாவின் தேசிய மொழியாய் இருப்பதற்கு உரிய எல்லா வகையான தகுதிகளும் கொண்ட ஒரே மொழி தமிழ்மொழிதான்" என்று போராடினார். அரசியலில் ஓர் 'ஆத்மஞானி' எனத் திகழ்ந்த இவர், பற்றற்ற இல்லறத் துறவியாய் வாழ்ந்தார்; 1965இல் அறிஞர் அண்ணா அமைத்த அரசியல் கூட்டணியின் முதுகெலும்பாய் அமைந்தார்; 'புதுக்கல்லூரி' போன்ற பல கல்வி நிறுவனங்கள் உருவாக உழைத்தார். அரசியல் செல்வாக்கால் ஆதாயம் பெற விரும்பாத இவர், ஏழையாய் வாழ்ந்து 1972ஆம் ஆண்டில் காலமானார். இவர் 1966ஆம் ஆண்டு

மலேசியச் சுற்றுலாவை மேற்கொண்டார்; அப்போது வரவேற்றுப் பாடப்பெற்ற பாடல் இது.

### 36. முருகையன், அ. 389

1950களில் தமிழவேள் கோ. சாரங்கபாணி தம் தமிழ்முரசு நாளிதழை மேம்படுத்தத் தமிழகத்திலிருந்து வரவழைத்த ஒருவர்தாம் திரு. அ. முருகையன். இளங்கலை (பி. ஏ.) பட்டதாரியான இவர், சிலகாலம் தமிழ்முரசில் பணிபுரிந்து பின்னர்ச் சிங்கை வானொலியின் செய்தி அதிகாரியாய்ப் பொறுப்பேற்றார். இவர் தகுதியறிந்த சிங்கை ஒலிபரப்புத்துறையினர், தமிழ்ப் பகுதிக்குத் தலைவராக்கினர்; தம் பதவிக்காலம் முடிந்து (1983) தமிழகம் சென்ற இவர், அங்கேயே மாரடைப்பால் காலமானார்.

### 37. ரம்லி, பி. (Ramli, P.) 390

*பிறப்பு : 21.3.1928* *மறைவு : 29.5.1973*

சாதாரணத் தொழிலாளியாய் வாழ்வைத் தொடங்கிய இவர், இளமையிலேயே கலைகளில் மிகுந்த ஆர்வமும் ஈடுபாடும் கொண்டிருந்தார். அந்தக் குறிக்கோள் அவரை முழுநேரக் கலைஞனாக்கியது. வயலின், கித்தார், சாக்ஸபோன், பியானோ, டிரம் முதலாய கருவிகளை இசைக்கும் திறன்கொண்டிருந்த இவரைத் திரைப்படத்துறை ஈர்த்துக்கொண்டது. அத் துறையில் இவரை ஊக்கப்படுத்தி வளர்த்த பெருமை, அந்நாளைய மலாய்த் திரைப்படத்துறையின் சிறந்த இயக்குநராய் விளங்கிய டத்தோ எல். கிருஷ்ணனைச் சாரும். திரைப்படத்துறையின் அனைத்துத் துறைகளிலும் பேராற்றல் கொண்டு விளங்கிய பல்கலைச் செல்வராய இவர், மாரடைப்பால் காலமானார். அரசு இவர் நினைவைப் போற்றும் வண்ணம் இவர் பெயரைப் பல இடங்களுக்குச் சூட்டியுள்ளது; இவர் வாழ்ந்த இல்லத்தை வாங்கி அருங்காட்சியகமாய் ஆக்கியுள்ளது.

### 38. லுமும்பா (Patricia Lumumba) 391

*பிறப்பு : 2.7.1925* *மறைவு : 1961*

தேசிய வீரராய இவர் ஸயரின் (காங்கோ) முதல் பிரதமராவார்; 1955இல் ஓரியண்டேலே (Orientale) மாநிலத்தின் தொழிற்சங்கத் தலைவராய் ஆய பின்னர், பெல்ஜியம் லிபரல் கட்சியில் ஈடுபாடுகொண்டார். 1958இல் தேசியக் காங்கிரசு இயக்கத்தைத் (விடுதலைப் போராட்டத்திற்காகத் தோற்றுவிக்கப்பட்டது) தோற்றுவித்தார். 1959இல் இனவாதத்தைத் தூண்டிவிட்டாரெனக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் வைக்கப்பட்டார். விடுதலைக்குப் பின், (1960) தேர்தலில் வெல்லவே, முன்னணி தேசிய அரசியல்வாதியாய் அரசாங்கம் அமைக்கக் கேட்டுக்கொள்ளப்பட்டார்; பிரதமரான அதே ஆண்டில் நீக்கப்பட்டார்; பல மாதங்களுக்குப்பின் கொடியவர்களால் கொலைசெய்யப்பட்டார்.

### 39. வரதராசனார், முனைவர், மு. 392

*பிறப்பு : 25.4.1912* *மறைவு : 10.10.1974*

புதுவகை இலக்கிய வடிவங்களாகிய சிறுகதை, புதினம் எழுதிப் புலவர் உலகையும் தமிழ்

எழுத்தாளர் உலகையும் ஒருங்கே வியப்பில் ஆழ்த்திய தமிழ்ப் புலவராகிய முனைவர் மு. வரதராசனார் தமிழகத்திலுள்ள திருப்பத்தூரில் பிறந்தார். எழுத்தராய் வாழ்க்கையைத் தொடங்கிப் பின்னர்த் தமிழாசிரியராய் - விரிவுரையாளராய் - பேராசிரியராய் - தமிழ்த்துறைத் தலைவராய் - பல்கலைக்கழகத் துணைவேந்தராய் உயர்ந்தார். இவர் வாழ்ந்த 62 ஆண்டுகளில் 75 நூல்கள் எழுதி இணையிலாப் புகழ்பெற்றார். டாக்டர் பட்டத்திற்காக இவர் ஆங்கிலத்தில் எழுதிய 'சங்க இலக்கியத்தில் இயற்கை' (The Treatment of Nature in Sangam Literature) என்னும் நூலும் ஓவச் செய்தி, கொங்குதேர் வாழ்க்கை முதலாய ஆராய்ச்சி நூல்களும் இவருடைய ஆழ்ந்த இலக்கிய ஆராய்ச்சிப் புலமைக்கு எடுத்துக் காட்டுகளாகும். இலக்கிய ஆராய்ச்சி, இலக்கியத் திறன், இலக்கிய மரபு முதலாய நூல்கள் பழந்தமிழ் இலக்கியச் செல்வங்களையும் புதுவகை இலக்கிய வடிவங்களையும் அறிந்து கற்க உதவும் அரிய நூல்களாகும். இவர் எழுதிய பதின்மூன்று புதினங்களில் 'அகல்விளக்கு' இந்தியக் குடியரசு தலைவரின் தலைமையில் இயங்கும் 'சாகித்திய அகாதமி'யின் பரிசு பெற்றது. இவர் நூல்களில் பல (ஏறத்தாழ 12) ஆங்கில, ரஷ்ய, சிங்களம் முதலாய உலக மொழிகளிலும் இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடப்பட்டுள்ளன. தமிழ்முனிவர் திரு. வி. க.வின் மாணவராய இவர் எளிமையைப் பெரிதும் விரும்பினார். காந்தியடிகள், தாயுமானவர், இராமலிங்க வள்ளலார், விவேகானந்தர், தாகூர், பெர்னார்ட் ஷா முதலாய பெருமக்களை விரும்பிப் போற்றியதொடு அவர்களைப் போலவே எளிய வாழ்க்கை வாழ்வதில் இன்பங் கண்டார். தமிழ்மக்கள் எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்க வேண்டும்; தமிழ்நாட்டின் எல்லாச் செயற்பாடுகளும் தமிழிலேயே நடத்தல் வேண்டும் என்னும் வேட்கைகொண்ட இவர் 'பாரீஸ் கார்னர்' என்பதைப் 'பாரிமுனை' என எழுதி நிலைப்படுத்திய நன்றிக்குரியவராவார். இந்தியாவின் சாகித்திய அகாதமி நிறுவனத்திற்காக இவர் எழுதித்தந்த 'தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் நூல் தமிழ் இலக்கியத்தின் பரப்பையும் பெருமையையும் தமிழர் அல்லாத பிறரும் அறிந்துகொள்ள உதவுகிறது.

### *40. ஜவகர்லால் நேரு (Jawaharlal Nehru)* *393*

*பிறப்பு : 14.11.1889* *மறைவு : 27.5.1964*

செல்வக் குடியில் பிறந்த இவர், இந்திய நாட்டின் விடுதலையில் வேட்கை கொண்டு பல போராட்டங்களில் ஈடுபட்டுச் சிறைசென்றார். 1918இல் அகில இந்தியக் காங்கிரசின் உறுப்பினராய இவர், 1920இல் காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் ஈடுபட்டார்; 1929இல் காங்கிரசின் தேசியத் தலைவர் ஆனார்; 1946இல் இடைக்கால அரசாங்கத்தின் துணைத் தலைவராயும் காமன்வெல்து விவகார அமைச்சராயும் பொறுப்பேற்றார்; இந்திய விடுதலைக்குப் பின் 1947முதல் இறுதிக் காலம்வரை இந்தியாவின் தலைமை அமைச்சராயும், வெளியுறவு அமைச்சராயும் அமர்ந்து அரும்பணியாற்றினார்; இந்தியாவைத் தலைசிறந்த தொழில்துறை நாடாக உருவாக்கத் திட்டமிட்டு உழைத்தார். புகழ்பெற்ற பாண்டுங் மாநாட்டுச் சிற்பிகளில் ஒருவராய இவர் அந்த மாநாட்டின் விளைவான தொகுதிசேரா நாடுகள் இயக்கம் (Non-Alliance Movement - NAM) உருவாக இந்தோனேசிய அதிபர் அப்துல் கரீம் சுகர்ணோ, எகிப்திய அதிபர் கமால் அப்துல் நாசர், யூகோஸ்லாவியாவின் அதிபர் மார்ஷல் டிட்டோ முதலாயோருடன் இணைந்து பணியாற்றினார். இந்தியாவும் உலகமும், இந்திய ஒற்றுமை, சோவியத் ரஷ்யா, இந்தியாவில் பதினெட்டு மாதங்கள் முதலாயவற்றொடு தம்முடைய வாழ்க்கை வரலாற்று நூலையும் வெளியிட்டுள்ளார். 'ஆசிய ஜோதி' என்று உலகத் தலைவர்களால் புகழப்பெற்ற சிறந்த அரசதந்திரியான இவரது 'உலக சரித்திரம்' என்னும் நூலைத் தலைசிறந்த வரலாற்று நூலாக உலகம் மதிக்கிறது.

## இ. திருத்தலங்கள்

### *1. அருள்மிகு மகாமாரியம்மன் கோயில் தேவஸ்தானம்* *36*

மலேசிய இந்துக்களின் தாய்கோயில் என்னும் பெருமை பெற்றுள்ள தலைநகர் அருள்மிகு மகாமாரியம்மன் கோயில், அந் நாளில் தென்னிந்தியத் தொழிலாளர் தலைவராய்ப் பெருஞ் செல்வாக்குடன் விளங்கிய காயாரோகணம் பிள்ளையின் பேராதரவில் 1873இல் உருவானது. பல்வேறு மாறுதல்களுக்குப்பின் 1887இல் திருக்கோயிலுக்குப் புதிய கற்கட்டடம் அமைக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. 1886இல் காயாரோகணம் பிள்ளை காலமாகிவிடவே, அவர் மகன் தம்புசாமிப் பிள்ளை அப் பணிக்குத் தலைமையேற்றார். அவருடன் கே. துரைசாமிப் பிள்ளை, ஆர். வி. சுப்பையா பிள்ளை முதலாயோரும் கோயில் திருப்பணியில் முன்னின்று தொண்டு புரிந்தனர். கோலாலம்பூரை உருவாக்கிய யாப் ஆ லோயுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தவரும், கோலாலம்பூர் நகர வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்களுள் ஒருவரும், பெருஞ் செல்வாக்குப் பெற்றவருமாய தம்புசாமி மறைவிற்குப்பின் ஆர். துரைசாமிப் பிள்ளை, வைத்திலிங்கத் தேவர் முதலாயோர் கோயில் நிருவாகப்பொறுப்பை ஏற்றனர். தொடர்ந்து பலர் தக்காராகப் (ஸ்தானிகர்) பொறுப்பேற்றுத் தக்கமுறையில் நிருவகித்து வந்தனர். பத்துமலை முருகன் கோயிலும் கோர்ட்டுமலை கணேசர் கோயிலும் மாரியம்மன் கோயிலுடன் இணைந்திருந்தன.

சப்பானியர் ஆட்சியின்போது (1942) இத் திருக்கோயில் இந்திய சுதந்திர சங்கக் கிளையின் பணிமனையாயும், இந்திய தேசிய இராணுவத்திற்கு உதவிய நிலையமாயும் செயற்பட்டது. இன்று நாட்டை ஆளும் கட்சிகளில் ஒன்றாய் விளங்கும் மலேசிய இந்தியரின் அரசியல் கட்சியான மலேசிய இந்தியர் காங்கிரஸ் (அன்று மலாயா இந்தியர் காங்கிரஸ்) 1946இல் இத் திருக்கோயிலில் அமைக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இக் கோயிலுக்கு 1889, 1954, 1973, 1985ஆம் ஆண்டுகளில் குடமுழுக்குகள் நடந்தேறியுள்ளன. மலேசிய இந்துக்களின் வாழ்வொடு நெருங்கிய தொடர்புடைய இக் கோயில் வளர்ச்சிக்கு மலேசிய அரசு அவ்வப்போது நல்கை (மானியம்) அளித்து உதவிவந்துள்ளது. மகாமாரியம்மன் கோயில் தேவஸ்தானம் மேலே குறிப்பிட்ட இரண்டு கோயில்களையும் நிருவகித்து வருவதொடு அரசு ஆதரவொடு பத்துமலைத் தொடக்கத் தமிழ்ப்பள்ளி, அப்பர் தமிழ்த் தொடக்கப்பள்ளி ஆகிய இரு கலைக்கோயில்களையும் நடத்திவருகிறது என்பது பெருமைக்குரிய செயல்களாகும். அவ்வப்போது கோயில் மண்டபத்தில் ஆன்மிகச் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்யும் தேவஸ்தானம், திருமுறை மாநாடுகளையும் தொடர்ந்து நடத்திவருகிறது. இத் திருக்கோயிலிலும் இதன் மேற்பார்வையிலுள்ள மற்ற இரு கோயில்களிலும் தமிழிலும் வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### *2. பத்துமலை முருகன் கோயில்* *45, 439, 465*

மலேசிய நாட்டின் தலைநகராய கோலாலம்பூரில் 1873இல் அருள்மிகு மகாமாரியம்மன் திருக்கோயிலை உருவாக்கிய அப்போதைய தென்னிந்தியத் தொழிலாளர் தலைவராய் விளங்கியவரான காயாரோகணம் பிள்ளையே பத்துமலை முருகன் கோயிலுக்கும் அடிந்தளம் போட்டார். தலைநகரிலிருந்து ஏறக்குறைய 12 கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பத்துமலையில் அமைந்துள்ள இக் குகையில் 1891இல் காயாரோகணம் பிள்ளை மகன் தம்புசாமிப்பிள்ளை தம் நண்பர்களான கந்தப்பத் தேவர், திருவேங்கடம் பிள்ளை ஆகியோருடன் சென்று முதன்முதல் வேல் நட்டு வணங்கினர். அந்த ஆண்டு முதலே இத் திருத்தலத்தில் தைப்பூசத் திருநாளைக் கொண்டாடவும் முடிவெடுத்தனர்.

பத்துமலையில் இந்துக்கள் கோயில் எடுத்த செய்தியறிந்த கோலாலம்பூர் மாவட்ட ஆட்சியாளர் ஜோஸ் சினங்கொண்டு அங்கு நட்ட வேலைப் பிடுங்கி எறியக் கட்டளையிட்டார். மக்கள் வெகுண்டெழுந்து எதிர்ப்புக் குரல் எழுப்பியும் முறைமன்றத்தில் வழக்குத்தொடுத்தும் வென்றனர். திட்டமிட்டபடி 1891இல் தொடங்கிய தைப்பூசத் திருவிழா இன்றளவும் மிகச் சிறப்பாய்க் கொண்டாடப்பட்டு வருகிறது. இஃது ஏழு இலக்கம் மக்களுக்குமேல் கூடும் ஒரு பெரிய திருவிழா. பிறநாட்டவரும் இவ் விழாவில் பங்கு கொள்கின்றனர். இத் திருத்தலத்தைத் தலைநகர் அருள்மிகு மகாமாரியம்மன் தேவஸ்தானமே நிருவகித்து வருகிறது.

1920இல் பத்துமலைக் குகைக்கோயிலுக்குச் செல்ல நிருவாகம் 272 படிகளை அமைத்தது. 1939இல் இருவழிச் சிமெண்டுப் படிகளாக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு 1940இல் வெற்றியுடன் முடிந்தது. அப் பெரும்பணி நடந்த காலத்தில் கோயில் தலைவராய் விளங்கியவர் இராமச்சந்திர நாயடு. ஆண்டுதோறும் பக்தர் கூட்டம் பெருகிவந்த காரணத்தால் 1975இல் மூன்றாவது படிக்கட்டு அமைந்தது. அப் பணியைத் தொடக்கிவைத்துச் சிலாங்கூர் மாநில அரசு சார்பில் 40 ஆயிரம் வெள்ளியை நல்கையாக வழங்கினார் அப்போதைய மந்திரி புசாராய் (முதலமைச்சர்) விளங்கிய டத்தோ ஹாஜி ஹாரூன் இத்ரீஸ்.

மலேசியாவில் சுற்றுப் பயணிகளைக் கவரும் மையங்களில் ஒன்றாய்த் திகழும் பத்துமலை முருகன் கோயில் அடிவாரத்தில் உள்ள குகையொன்றில் 1971இல் கலைக்கூடம் ஒன்று அமைக்கப்பட்டது. அதற்கு முன்னோடியாய் இருந்து செயல்பட்டவர் ந. வீரையா. 1980இல் மலேசியத் தமிழர் மட்டுமன்றி உலகத் தமிழரே பெருமைகொள்ளும் வண்ணம் மலையடிவாரத்தில் உள்ள மற்றொரு குகையில் வள்ளுவர் கோட்டம் அமைக்கப்பெற்றது. அதனை அப்போதைய மந்திரி புசார் (முதலமைச்சர்) டத்தோ ஹோர்மத் ரஃபீ திறந்துவைத்தார். இக் கோட்டத்தில் 1330 குறட்பாக்களும் 133 பளிங்குக் கற்களில் வடிக்கப்பட்டு ஒவ்வோர் அதிகாரத்தையும் விளக்கும் சிற்பக் காட்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. ஐந்தடி உயரத் திருவள்ளுவர் சிலையும் கருங்கல்லில் வடிக்கப்பட்டுள்ளது. குமரன், சு. பஞ்சாட்சரம் ஆகியோர் முன்னோடிகளாய் இருந்து இவ் வரும்பணியைத் தமிழகச் சிற்பிகளைக்கொண்டு செய்துமுடித்துத் தமிழுக்கும் தமிழர் பண்பாட்டிற்கும் பெருமை சேர்த்துள்ளனர். இங்குள்ள மற்றொரு குகை கலையழகு மிக்க இராமாயணக் குகையாக மாற்றப் பெற்றுள்ளது. இதனை முன்னின்று அமைத்தவர் தேவஸ்தானத்தின் இப்போதைய தலைவர் ரெ. நடராஜா. தமிழ்மணம் கமழும் இத் திருத்தலத்தின் வளாகத்தில் மேற்கண்ட சிறப்புகளொடு சமய மண்டபம், மௌனசாமி மண்டபம், தகவல் மண்டபம், சுவாமி மண்டபம், கடைகள் முதலாயவை அமைந்துள்ளன. அரசு உதவியுடன் குகைக்கோயிலில் அறுபடைவீடு அமைக்கப்பட்டுள்ளது (1991). இதனை அமைத்தவர் அப்போதைய தலைவர் சமயக்காவலர் செ. சொக்கலிங்கம்.

இங்கு அமைந்துள்ள தமிழ்த் தொடக்கப்பள்ளி நாட்டின் பெரிய தமிழ்ப்பள்ளிகளில் ஒன்றாகும். 1900 மாணவர்களுக்குமேல் இங்குப் பயில்கின்றனர். (மிகப் பெரிய தமிழ்ப்பள்ளி பெட்டாலிங் ஜெயா விவேகானந்தா தமிழ்ப்பள்ளி. இங்கு 2200 மாணவர்க்குமேல் பயில்கின்றனர்). டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு முயற்சியால் அப் பள்ளிக்குப் புதிய மூன்று மாடிக் கட்டடம் எழுப்பப்பட்டு வருகிறது. கட்டடப் பணி நிறைவெய்தும்காலை நாட்டின் நவீன வசதிகள் கொண்ட மாபெரும் தமிழ்க் கலைக்கோயிலாய் அது விளங்கும்.

*3. பினாங்குத் தண்ணீர்மலை* *33*

இது வழக்கில் தண்ணிமலை என்று அழைக்கப்படுகிறது. அருவியும் இயற்கைக் குளமும் சுற்றிலும் சூழ்ந்த தென்னை வளமும் எப்பொழுதுமே குளிர்மை நிறைந்த சூழலும் இதன் சிறப்புகளாகும். மலேசியாவின் சிறந்த வழிபாட்டுத் தலங்களில் ஒன்றான அருள்மிகு தண்டபாணி ஆலயம் இங்கு அமைந்துள்ளது.

*4. மரத்தாண்டவர் கோயில்* *442*

மலேசியாவின் புகழ்பெற்ற வழிபாட்டுத் தலங்களுள் குறிப்பிடத்தக்க ஒன்று. இம் முருகன் கோயில், பகாங் மாநிலத்தில் குவந்தானுக்குச் செல்லும் வழியில் மாரான் என்னும் இடத்தில் அமைந்துள்ளது.

## ஈ. நிறுவனங்கள்

*1. அப்பர் தமிழ் உயர்நிலைப் பள்ளி* *91*

1936மே 22இல் 22 மாணவரைக்கொண்டு அன்றைய பத்துரோட்டின் ஒரு கிளைச் சாலையாகிய ஜாலான் செமராங் அருகில் தொழிலாளர் குடியிருப்புகளுக்கிடையே முனியாண்டி கோயில் அமைந்திருந்த சிறுகுடிலில் (அத்தாப்புக் குடிசை) சுவாமி ஆத்மராமால் தோற்றுவிக்கப்பெற்றது. 1946இல் அருள்மிகு மகாமாரியம்மன் கோயில் தேவஸ்தானம் பள்ளியின் நிருவாகப் பொறுப்பை ஏற்று நடத்தியது; அப்போது பள்ளிக்கூடத்திற்கென்று ஒரு நிலத்தை அரசாங்கத்திடமிருந்து வாங்கியது. பொதுமக்களிடம் நிதி திரட்டி 1957ஆம் ஆண்டில் புதிய அப்பர் தமிழ் உயர்நிலைப் பள்ளிக்கு அடிக்கல் நாட்டப்பெற்றது. அடிக்கல் நாட்டியவர் அன்றைய தொழிலாளர் அமைச்சர் துன் வீ. தி. சம்பந்தன். 6.8.1958இல் பள்ளியின் புதிய கட்டடத்தை மேன்மை தங்கிய சிலாங்கூர் சுல்தான் திறந்துவைத்தார். அப்போதைய தலைமையாசிரியர் கே. வி. சுப்பையா. புதிய கட்டடத்தில் உயர்நிலைப் பள்ளியாய் மலர்ந்த இது, பின்னர் அத் தகுதியை இழந்து தொடக்கப் பள்ளியாய் இன்றுவரை இயங்கிவருகிறது.

*2. உமறுபுலவர் தமிழ் உயர்நிலைப் பள்ளி* *90*

சிங்கப்பூர் 'உமறுபுலவர் தமிழ் உயர்நிலைப்பள்ளி', அ. நா. மைதீன் (17.6.1913இல் கடையநல்லூரில் பிறந்தவர்) சீரிய தலைமையில் நன்னெஞ்சர் சிலரின் முயற்சியால் 'சிறுவர் பாடசாலை' என்னும் பெயரில் 1946இல் சிறிய அளவில் தொடங்கப்பெற்றது. இது, சில மாதங்களுக்குப்பின் உமறுபுலவர் தொடக்கத் தமிழ்ப்பள்ளி என்னும் பெயரைப் பெற்றது. இப் பெயரைச் சூட்டப் பரிந்துரைத்தவர் சிங்கப்பூர்த் 'தமிழ்ப் பெரியார்' என்னும் பெருமையொடு விளங்கிய முதுபெரும்புலவர் ச. சா. சின்னப்பன் ஆவார். சிறிய அளவினதாய் இருந்த இப் பள்ளி அ. ந. மைதீன் பேருழைப்பாலும் நல்லுணர்வு கொண்ட கொடையாளர் வழங்கிய நன்கொடைகளாலும் பெரிய பள்ளியாக உருவெடுத்தது; 2.3.1960இல் உயர்நிலைப்பள்ளியாய் மலர்ச்சி கண்டது. அப்போதைய சிங்கப்பூரில் இதுவே

தமிழ் வளர்த்த பெரிய நிறுவனமாய் விளங்கியது. தமிழில் சிறப்புத் தேர்ச்சிபெற விழைவோர் இப் பள்ளியையே நாடிவந்தனர். தமிழ்மட்டும் கற்று உயர்பணிகளைத் தேடமுடியாது என்ற சூழ்நிலையில் இப் பள்ளியில் தமிழ் கற்றோர் எண்ணிக்கை குறைந்துகொண்டே வந்தது. அதனால் தன் சிறப்பைப் படிப்படியாய் இழந்தது. மேலும் சிங்கப்பூர் அரசு இருமொழிக் கொள்கையை நடைமுறைப்படுத்தியது (1959இல்). அதனால் பிறமொழிப் பள்ளிகளிலும் தாய்மொழி கற்கும் வாய்ப்புப் பரவலானது. படிப்படியாய்த் தேய்ந்து வந்த உமறுபுலவர் தமிழ் உயர்நிலைப்பள்ளி 1982இல் மூடுவிழாக் கண்டது. பள்ளியை மூடிய அரசு அதற்குக் கணிசமான இழப்பீடு வழங்கியது. அதனுடன் பள்ளி நிருவாகம் வைத்திருந்த தொகையையும் சேர்த்து அதன் பெயரால் ஓர் உதவிச் சம்பள அறக்கட்டளை தொடங்கப் பெற்றது. மேலும், அப் பெயரை நிலைப்படுத்த வேண்டுமென்ற நோக்கில் 'செயின்ட் ஜோர்ஜஸ் தமிழ் மைய'த்திற்கு 'உமறுபுலவர் தமிழ் மையம்' என்னும் பெயர் சூட்டப்பெற்றது. இப்போது சிங்கப்பூரிலேயே பெரிய தமிழ் மையமாய் விளங்குவது இதுதான். இங்குத் தமிழைச் சிறப்புப் பாடமாக எடுத்துக் கற்போர், எண்ணிக்கைக் குறைவு காரணமாய்ப் பிறமொழிப் பள்ளிகளில் தமிழ்வகுப்பு ஏற்படுத்த முடியாததால் இங்குத் தமிழ் கற்க வருவோர், பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பில் சேர்ந்து பயில்வோர் ஆக 800 பேர் தமிழ் கற்றுவருகின்றனர்.

### 3. மலேசியக் கல்வியமைச்சின் பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகம் 113

மலேசியக் கல்வியமைச்சினால் 1975ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகத் தமிழ்ப்பகுதி 1977ஆம் ஆண்டில் இயங்கத் தொடங்கியது. கோ. கிருஷ்ணபகவான் (தலைவர்), எ. சகாதேவன், கோ. பா. குமாரசாமி ஆகிய மூன்று அதிகாரிகளுடன் (பின்னர் துரை. இராமசாமி இணைந்தார்) தொடங்கிய இப் பகுதி கடுமையாய் உழைத்துப் புதிய தமிழ்ப் பாடத்திட்டத்தை (K.B.S.R.) உருவாக்கி அதனைச் சீரிய முறையில் செயற்படுத்தப் பயிற்சியளித்தல், கற்றல் கற்பித்தல் தொடர்பான துணைப் பொருள்களைத் தயாரித்தல் போன்ற பணிகளையும் மேற்கொண்டது. 1982ஆம் ஆண்டு அறிமுகப்படுத்தப்பட்ட தொடக்கப் பள்ளிகளுக்குரிய புதிய பாடத்திட்டம், மொழித்திறன்களாய கேட்டல், பேசுதல், படித்தல், எழுதுதல் ஆகியவற்றுக்கு முதன்மை தந்ததொடு இலக்கியங்களைச் சுவைத்து உணரவும் வாய்ப்பு நல்கிற்று. புதிய பாடத்திட்டம் தொடர்பாய்ப் பணியிடைப் பயிற்சிகள், பயிற்சிப் பட்டறைகள், கருத்தரங்குகள் நிரம்ப நடத்தப்பெற்றன. இதன் தொடர்ச்சியாய் இடைநிலைப் பள்ளிகளுக்காய (K.B.S.M.) தமிழ்மொழிப் பாடத்திட்டம் உருவாக்கப்பட்டு 1988ஆம் ஆண்டில் நடைமுறைப்படுத்தப்பட்டது. தமிழ்க்கல்விக்கென்று வரலாற்றில் முதன் முறையாய் அறிமுகப்படுத்தப்பட்ட இப் பாடத்திட்டங்கள் தமிழ்க் கல்வியின் தரத்தை மேம்படுத்துவதில் பெரிதும் உதவிவருகின்றன. மேலும் 'K.B.S.M.' எனப்படும் ஒருங்கிணைக்கப்பெற்ற இடைநிலைப் பள்ளிகளுக்கான பாடத்திட்டக் கூறுகளை ஆசிரியர்கள் எளிதில் புரிந்துகொள்ளத்தக்க முறையில் வீடியோ ஒளிப்பேழைகளை உருவாக்கும் பணியில் இப் பாடத்திட்ட மேம்பாட்டுக் கழகம் முனைந்து ஈடுபட்டுள்ளது. இப்போது ஒவ்வொரு மாணவரும் பல மொழிகளைக் கற்கும் வாய்ப்புகளைக் கல்வியமைச்சு நடைமுறைப்படுத்திவருகிறது. மலாய், சீன மாணவர் தமிழ் கற்பதற்கேற்பப் பாடத்திட்டம் உருவாக்கும் பணியில் இக் கழகம் முனைந்துள்ளது. இதன் இப்போதைய தமிழ்ப்பகுதித் தலைவர் ம. கோவிந்தன் (1.2.1995முதல்). இவரொடு மு. நெடுஞ்செழியன் (15.2.1995முதல்), திருமதி மல்லிகா செல்லத்துரை (1.5.1994முதல்), ப. ஆவுடையார் (1.4.1996முதல்) ஆகியோர் பணிபுரிகின்றனர். தமிழ்ப் பாடத்திட்ட உருவாக்கத்தில்

பணிபுரிந்த முனைவர் பெ.பழனியப்பன், இலெ.சதாசிவம், முனைவர் வே.சபாபதி ஆகியோரும் நினைவுகூரத்தக்கவர்.

## உ. இயக்கங்கள்

### 1. பினாங்குப் பயனீட்டாளர் சங்கம் 222

பினாங்கில், ஹாஜி எஸ். எம். இத்ரீஸ் தலைமையில் இயங்கும் பினாங்குப் பயனீட்டாளர் சங்கம் மக்கள் நல ஆர்வத்தொடும் முனைப்பொடும் செயல்பட்டுவரும் உயிர்த்துடிப்புள்ள ஓர் அமைப்பாகும். இது மக்களின் அன்றாடப் பயனீட்டுப் பொருள்களின் தரத்தை ஆய்வுசெய்து மக்களுக்கு விழிப்பூட்டிக் கொண்டிருக்கிறது. அதே வேளையில் பாதிக்கப்பட்டவர்களுக்காகப் பரிந்து வழக்காடுவது முதல், நாடகம், திரைப்படம், பாடல்கள் முதலாயவற்றில் காணப்படும் ஒழுக்கக் கேடுகள் குறித்தும் அவ்வப்போது கண்டித்து (கண்டனம் செய்து) வருகிறது. இது 'பயனீட்டாளர் குரல்' என்னும் மாத இதழைத் தமிழ், ஆங்கிலம், மலாய், சீனம் ஆகிய மொழிகளில் நடத்திவருகிறது. உண்பொருள்களின் தயாரிப்புத் தரம்பற்றியும் ஆரோக்கியத் தன்மைபற்றியும் நிறைய நூல்களைப் பல மொழிகளிலும் வெளியிட்டு அரிய தொண்டு செய்துகொண்டிருக்கிறது; மாணவர், தொடக்கத்திலிருந்தே விழிப்புணர்ச்சி பெறப் பள்ளிகளில் 'மாணவர் பயனீட்டாளர் கழகம்,' அமைக்க முயன்று வருகிறது. இவ் வியக்கம் 1987இல் தமிழ் எழுத்தாளர்களுக்காக நடத்திய நான்கு நாள் கருத்தரங்க நிறைவின்போது பாடப்பெற்ற பாடல்களுள் ஒன்று இது.

### 2. அகில மலாயாத் தமிழர் சங்கம் 414

தந்தை பெரியார் 1929இல் மலாயாவிற்கு வருகைதந்த போது ஈப்போ கொனாலி சாலையிலுள்ள இலங்கையர் சங்கத்தில் அகில மலாயாத் தமிழர் சங்கத்தைத் (1) தொடக்கிவைத்தார். இந்த முதலாம் அ.ம.த.ச. அமைய முன்னின்று ஆவன செய்தது பேரா இந்து மகாஜனசங்கம். (இது 1926இல் உருவானது). சில ஆண்டுகளுக்குப் பின் இது செயலிழந்து போயிற்று. 1941இல் தமிழவேள் கோ. சாரங்கபாணி அரிய முயற்சியால் அகில மலாயாத் தமிழர் சங்கம் (2) சிங்கப்பூரில் தோற்றுவிக்கப்பட்டது. அப்போது அமெரிக்கா செல்லும் வழியில் சிங்கப்பூர் வந்திருந்த சர் ரா. க. (R.K.) சண்முகம் செட்டியாரால் பேட்ரிக் சாலையில் இருந்த உ. இராமசாமி நாடார், ஜே. பி. வளமனையில் (பங்களாவில்) இரண்டாவது அ.ம.த.ச. உருவானது. இரண்டாம் உலகப் போரொடு அதுவும் மறைந்தது.

1954இல் பெருந்தகை சி. சுப்பையா அரிய முயற்சியால் அ.ம.த.ச. (3) ஈப்போவில் அமைந்தது. 1956இல் மலாயாத் தமிழர் மாநாடு ஒன்று அ.ம.த.ச.வின் முயற்சியால் கூட்டப்பெற்றது. இதன் பயனாய் நாடு முழுவதும் அ.ம.த.ச. வுக்கு 74 கிளைகள் அமைந்தன. தமிழரிடையே பேரெழுச்சியைத் தூண்டிச் சாதி சமய வேற்றுமைகளைக் கடந்து ஒன்றுபட வழிவகுத்த தமிழர் திருநாளை நாடெங்கும் கொண்டாடுவதிலும் தமிழர் திருமணங்களை நடத்துவதிலும் பயனுடைய சமுதாயப் பணிகளை ஆற்றுவதிலும் இந்த அ.ம.த.ச. முன்னின்று உழைத்தது. இயக்கத்தை வழிநடத்தும் கடமையைக் கொண்டிருந்த தலைமையகப் பொறுப்பாளர்களின் கவனிப்பின்மையினால் 1963இல் முந்தைய இரண்டு அ.ம.த.ச.களுக்கும் ஏற்பட்ட நிலையே இதற்கும் ஏற்பட்டது.

### 3. மலேசிய இந்தியர் காங்கிரஸ் 417, 559

இரண்டாம் உலகப் போருக்குப் பின்பு மக்களிடையே ஏற்பட்ட தேசிய உணர்வு, நாட்டு விடுதலைபற்றிய சிந்தனைகளை எழுப்பியது. அதன் பயனாய்ப் பல்வேறு அரசியல் இயக்கங்கள் உருப்பெற்றன. அம் முன்னோடி இயக்கங்களுள் ஒன்று ம.இ.கா. எனப்படும் மலேசிய இந்தியர் காங்கிரஸ் (Malaysian Indian Congress) ஆகும். 1946ஆம் ஆண்டில் ஜான் எ. திவியைத் (1946-47) தலைவராய்க் கொண்டு தொடங்கப்பெற்ற இந்த இயக்கம் திரு. சர்தார் பூத்சிங் (1947-50), கா. இராமநாதன் செட்டியார் (1950-51), குண்டன்லால் தேவாசர் (1951-55), துன் வீ. தி. சம்பந்தன் (1955-79), டான்ஸ்ரீ வெ. மாணிக்கவாசகம் (1973-79) ஆகிய தலைவர்களின் வழிகாட்டுதலில் சிறப்புமிக்க வரலாற்றுச் சாதனைகள் பலவற்றைப் படைத்த பேரியக்கமாகும். மலேசிய இந்தியரின் அரசியல், சமுதாயப் பண்பாட்டு, கலை, இலக்கியத் துறைகளின் அதிகாரபூர்வமான நிறுவனமாய் இயங்கிக்கொண்டிருக்கும் ம.இ.கா. வின் இன்றைய தலைவர் டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலு ஆவார் (1979முதல்).

தேசியத் தலைவர்கள்தம் வாழ்க்கைக் குறிப்புகளிலும், பாடல்களின் பின்புலம் - குறிப்புரைகளிலும், வரலாற்று வாயிலிலும் இவ் வியக்கம்பற்றி விரிவாய்ச் சொல்லப்பட்டுள்ளது.

### 4. தேசிய முன்னணி 419

'கூட்டணி' (Alliance) என்பது அரசியல் கட்சிகள் தேர்தலில் போட்டியிட்டு ஆட்சியமைக்க ஒன்றிணைந்த ஓர் அமைப்பாகும். 1955இல், நாட்டின் முதலாம் பொதுத் தேர்தல் நடந்தபோது அம்னோ (United Malays National Organisation), மலேசியச் சீனர் சங்கம் (Malaysian Chinese Association) ஆகிய அரசியல் கட்சிகள் ஒன்றிணைந்து 1953இல் கூட்டணி அமைத்தன; 1955 சனவரியில் ம.இ.கா. வும் (Malaysian Indian Congress) அதில் இணைந்தது. கூட்டணி தேர்தலில் போட்டியிட்டு வென்றது. 70களில் விரிவாக்கப்பெற்று தேசிய முன்னணி (National Front) என்னும் அமைப்பின்கீழ் சபா ஐக்கிய தேசியக் கட்சி (U.S.N.O.) மக்கள் முற்போக்குக் கட்சி (P.P.P.) ஆகியவற்றையும் இணைத்துப் பழைய கூட்டணியைப் பரந்த அடிப்படையிலான தேசிய முன்னணியாக மாற்றியமைத்தவர் நாட்டின் இரண்டாம் பிரதமரான மேம்பாட்டுத் தந்தை துன் அப்துல் ரசாக் ஆவார்.

### 5. தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவை 420

தமிழவேள் கோ. சாரங்கபாணி அமைத்த மாணவர் மணிமன்றத்தில் (1953) உறுப்பினராயிருந்தவர்கள் வளர்ந்து இளைஞரான போது 'தமிழ் இளைஞர் மணிமன்றம்' என்னும் அமைப்பினைத் தமிழவேளின் வழிகாட்டுதல்படி உருவாக்கிக் கொண்டனர் (1956). பினாங்கில் அமைந்த இந்த முதல் அமைப்பு, நாடு முழுவதும் தமிழ் இளைஞர் மணி மன்றங்கள் அமைவதற்குத் தோற்றுவாயாய் அமைந்தது. பின்னர் மணிமன்றம் நிறைவேற்றிய தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்டு 1964ஆம் ஆண்டில் அம் மன்றம் கூட்டிய மாநாட்டில் நாடு முழுதும் தனித் தனியே இயங்கிக்கொண்டிருந்த தமிழ் இளைஞர் மணிமன்றங்கள் கலந்துகொண்டன. அம் மாநாட்டில் உருவானதுதான் 'தமிழ் இளைஞர் மணிமன்றங்களின் பேரவை'. அதன் முதல் தலைவராய்ச் சா. ஆ. அன்பானந்தனும் பொதுச்

செயலராய்க் க. கிருஷ்ணசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இப்போதைய தலைவர் கிருஷ்ணன்.

### 6. மலேசியத் திராவிடர் கழகம் 422

மலேசிய அரசு சங்கங்களின் பதிவுச் சட்டத்தின்கீழ், அதிகாரபூர்வமாய்ப் பதிவுபெற்ற சமுதாயச் சீர்திருத்த இயக்கமாய இது 1946ஆம் ஆண்டில், ஈப்போ நகரில் அமைக்கப்பட்டது. நூற்றுக்கும் அதிகமான கிளைகளையும், ஏறத்தாழ ஓரிலக்கம் உறுப்பினர்களையும் கொண்டுள்ள இந்த இயக்கம் தந்தை பெரியார் சிந்தனைகளை நிலைப்படுத்தப் பாடுபட்டுக் கொண்டிருக்கிறது. தந்தை பெரியார் முதன்முறையாக மலாயாவிற்கு (1929) வருகைபுரிந்த பின்னர், அன்றைய சமுதாயச் சிந்தனையாளர்களிடையே சுயமரியாதை இயக்கம் என உருவெடுத்துப் பின்னர் அகில மலாயாத் திராவிடர் கழகம் எனப் பதிவுபெற்றது. பின்னர் மலாயா, மலேசியா ஆனபோது மலேசியத் திராவிடர் கழகம் எனப் பெயர்மாற்றம் செய்யப்பெற்றது. இதற்குச் சட்ட அமைப்பு விதிகளை வரைந்து உதவியவர் பெரியவர் ரெ. ரா. அய்யாறு. இதன் முதல் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பெற்றவர் நா. பள்ளிகொண்டான். சாதி ஒழிப்பில் முன்னின்று உழைத்த இவ் வியக்கம், தாழ்த்தப்பட்டோர் பிரிவைச் சேர்ந்த தோழர் கலியன் இறந்தபோது அப் பிணத்தை மேல்சாதிக்காரர்க்குரிய இடுகாட்டில் புதைத்துவிட்டார்கள் என்ற காரணத்தைக் காட்டிப் பிணத்தைத் தோண்டி வேறு இடத்தில் புதைத்தபோது அதனை எதிர்த்து வழக்காடி வெற்றிபெற்றது. வழக்கை நடத்திய நடுவர், இழிசெயல் புரிந்தாரை மன்னிப்புக் கோரச்செய்து 3000 வெள்ளி இழப்பீடு வழங்கத் தீர்ப்பளித்தார். இதன் தேசியத் தலைவராய் ஏறத்தாழ 25 ஆண்டுகள் (10.1.1965முதல் 22.7.1989வரை) பொறுப்பேற்றிருந்த (திருச்சுடர்) கே. ஆர். இராமசாமி காலத்தில் அவர் பெருமுயற்சியால் தொடரப்பட்ட வழக்கு இஃது என்பது குறிப்பிடத்தக்கது. கழகம் 1978இல் சொந்தமாய் ஒரு கட்டடத்தை வாங்கியது. கட்டடக் குழுத் தலைவராய் இருந்த பெருமகனார் காலஞ்சென்ற அ. மருதமுத்து இதற்குப் பெரிதும் உழைத்தார். 1984இல் அக் கட்டடத்தை விற்ற கழகம், பின்னர் 1985இல் தலைநகரில் உள்ள மலாயன் மேன்சனில் ஓர் அலுவலகத்தையும் தாமான் செமிலினில் நான்மாடிக் கட்டடம் ஒன்றையும் சொந்தமாய்ப் பெற்றுள்ளது. இதன் இப்போதைய தலைவர் ரெ. சு. முத்தையா.

### 7. தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம் 423

நாடு விடுதலைபெற்ற பின்னர், இந்த நாட்டுத் தோட்டத் தொழிலாளர் வாழ்க்கையில் மிகப் பெரும் அவலமொன்று நிகழ்ந்தது. பெரிய பெரிய தோட்டங்களின் உரிமையாளர்களா யிருந்த ஆங்கிலேயர், தங்களுக்குச் சொந்தமான தோட்டங்களை உள்நாட்டுக்காரரிடம் விற்கத் தொடங்கினர். அந்தத் தோட்டங்களை வாங்கிய உள்நாட்டு முதலாளிகள், பெரிய தோட்டங்களைச் சிறுசிறு தோட்டங்களாகக் கூறுபோட்டு விற்கத் தொடங்கினர். இதனால் காலம் காலமாய் வாழ்ந்த தோட்டங்களைவிட்டு வெளியேற வேண்டிய அவலநிலை தொழிலாளருக்கு ஏற்பட்டது. இவ்வாறு வேலை இழந்து வெளியேறிய பல்லாயிரக் கணக்காய தொழிலாளர் குடும்பங்கள் இருக்க இடமின்றி அலைக்கழிக்கப்பட்டன; பல்லாயிரம் குடும்பங்கள் நாட்டைவிட்டு வெளியேறின. இந்த நிலையைக் கண்டு வெதும்பிய அன்றைய ம.இ.கா. தேசியத் தலைவரும், பொதுப்பணித் துறை அமைச்சருமாயுமிருந்த துன் வீ. தி. சம்பந்தன் கூட்டுறவு முறையில் பணம் திரட்டி

விலைபோகும் தோட்டங்களை வாங்கும் ஒரு நிறுவனமாக தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தை 1960ஆம் ஆண்டில் அமைத்தார். தோட்டத் தொழிலாளரைப் பங்குதாரராக்கி மாதம் 10 வெள்ளி என்ற அடிப்படையில் திட்டம் வகுத்து, அதனைச் செயற்படுத்தினார். ஏறத்தாழ 22 தோட்டங்கள் இந்த நிறுவனத்தால் வாங்கப்பட்டிருக்கின்றன. 1961ஆம் ஆண்டில் இச் சங்கம் வாங்கிய ரிஞ்சிங் தோட்டத்தை அன்றைய பிரதமரும், விடுதலைத் தந்தையுமாகிய துங்கு அப்துல் ரகுமான் புத்ரா அல்ஹஜ் திறந்துவைத்துப் பாராட்டினார்.

22 தோட்டங்களையும், தலைநகரில் அவர் பெயரில் அமைந்த 'துன் சம்பந்தன் மாளிகை'யையும் (Wisma Tun Sambanthan) பெற்றுப் பெரும் வலிமையோடும் உலகப்புகழோடும் விளங்கும் இந் நிறுவனத்தின் இன்றைய அவைத்தலைவர் (Chairman) கூட்டுறவுத் தந்தை துன் சம்பந்தனார் துணைவியார் தோபுவான் உமாசுந்தரி சம்பந்தன்; தலைமை இயக்குநர் டான்ஸ்ரீ, டத்தோ கே. ஆர். சோமசுந்தரம். முன்பு சிறிய கட்டடமாக இருந்த துன் சம்பந்தன் மாளிகை இடிக்கப்பட்டு, இப்போது 28 மாடிகளைக் கொண்ட வானளாவிய கட்டடமாக எழுப்பப்பட்டுள்ளது. அம் மாளிகையின் கீழ்த்தளத்தில் நவீன வசதிகளுடன் அமைந்துள்ள 'டத்தோ சோமா அரங்கம்' பல்வேறு நிகழ்ச்சிகள் நடத்த ஒரு சிறந்த கலை அரங்கமாகத் திகழ்கிறது.

## *8. தமிழர் சீர்திருத்த சங்கம் (சிங்கப்பூர்) 264*

சிங்கப்பூர்த் தமிழர்களுக்குச் சமுதாயச் சீர்திருத்த நோக்கங்களை முதன்மையாய்க் கொண்ட ஓர் அமைப்புத் தேவை என்னும் நோக்கில் 21.4.1930இல் தமிழ்மக்கள் கூடினர். அமைப்பிற்குப் பெயர்த் தேர்வு நடந்தபோது இரு பெயர்கள் பரிந்துரைக்கப்பட்டன. அவை 'தமிழர் சீர்திருத்த சங்கம்' என்னும் பெயரும் 'சுயமரியாதை இயக்கம்' என்னும் பெயருமாகும். வாக்கெடுப்பு நடந்தபோது நாலைந்து பேர்களைத் தவிர மற்றவரெல்லாரும் 'தமிழர் சீர்திருத்த சங்கம்' என்னும் பெயருக்கே வாக்களித்தனர்.

பின்னர் 13.7.1930இல் நடந்த முறையான அமைப்புக் குழுவிற்குப் பெருவணிகராய உ. இராமசாமி (நாடார்) தலைவராயும், து. த. பா. கோவிந்தசாமி (செட்டியார்) துணைத்தலைவராயும், கோ. சாரங்கபாணி பொதுச் செயலாளராயும் தெரிவுசெய்யப் பெற்றனர். சங்கத்திற்குச் சட்டதிட்டங்கள் வகுக்கும் குழு 27.7.1930இல் அமைந்தது. அ. அதிரசம், ச. கோபால், ர. து. கோவிந்தசாமி, ஆ. சி. சுப்பையா, கோ. சாரங்கபாணி (தமிழவேள்) ஆகியோர் அக் குழுவில் இடம்பெற்றனர். சட்டதிட்டம் அமைந்து சங்கப் பதிவிற்கான முயற்சிகள் தொடர்ந்தன. 1932இல் சங்கம் தன் பணிகளைத் தொடரப் பதிவதிகாரியின் இசைவைப் பெற்றதென்றாலும் 1948இல்தான் சங்கம் முறையான பதிவைப் பெற்றது.

சங்கத்தலைவர் உ. இராமசாமி (நாடார்) சங்கத்திற்கு இலவயமாய் வழங்கிய கட்டடத்தில் சிறப்பாய் இயங்கிவந்த தமிழர் சீர்திருத்த சங்கம், சிங்கப்பூர்த் தமிழர் இன, மொழி, கலை, பண்பாட்டு உணர்வுகளுக்கு ஊக்கம் நல்கிப் பேரெழுச்சியை ஏற்படுத்தியது; சீர்திருத்தத் திருமணங்களையும் நடத்திவந்தது. உ. இராமசாமிக்குப் பின் பலர் தலைமைப் பொறுப்பை ஏற்றனர். என்றாலும் (தமிழவேள்) கோ. சாரங்கபாணி தலைவராய காலத்தில்தான் சங்கத்திற்குப் பெரும் வலிமை சேர்ந்தது.

1951இல் பல்வேறு சங்கங்களைச் சேர்ந்தவர் ஒன்றிணைந்த தமிழர் பிரதிநிதித்துவ சபை அமையத் தமிழர் சீர்திருத்த சங்கம் வழிகோலியது. அப்படி அமைந்த தமிழர் பிரதிநிதித்துவ சபையே 1952 முதல் தமிழர் எழுச்சி விழாவாம் தமிழர் திருநாளைக் கொண்டாடத்

தொடங்கியது. த. சீ. சங்கம் இன்றளவும் உயிர்ப்போடு செயல்பட்டுவருகிறது. சங்கத்தின் நிறுவனத் தலைவர் உ. இராமசாமி (நாடார்), தமிழகத்தில் தாளிகைத்துறையில் பெரும் சாதனை புரிந்த சி. பா. ஆதித்தனாரின் மாமனார் என்பதும் ஆதித்தனார் தொடக்கத்தில் த. சீ. சங்கச் செயலவையில் இடம்பெற்றுத் தொண்டு புரிந்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கவையாகும்.

## 9. தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கம் 565

1940ஆம் ஆண்டுக்கு முன்னே பல்வேறு தொழிற்சங்கங்கள் தோன்றி இந் நாட்டுத் தோட்டத் தொழிலாளர்களின் நலன்களுக்காகப் போராடியிருக்கின்றன. 1946ஆம் ஆண்டு சிரம்பானில் இந்தியத் தொழிலாளர் சங்கம் என்னும் ஓர் அமைப்பு உருவாயிற்று. அப்பால் 1954ஆம் ஆண்டில் தோட்டத்தொழிலில் ஈடுபட்டிருந்த பல்வேறு தொழில்வகைத் தொழிலாளர்களும் ஒருங்கிணைந்த தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமாய் இது மலர்ந்தது. இடைக்காலத் தலைவராய் வேணுகோபாலும், பொதுச் செயலாளராய் பி. பி. நாராயணனும் அமர்ந்து சங்கத்தை வழிநடத்தினர். பின்னர் எஸ். பி. எஸ். நாதன் இதன் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார். 'சங்கமணி' என்னும் கிழமை இருமுறை ஏட்டையும் வெளியிட்டு வரும் இந்த இயக்கம், தோட்டத் தொழிலாளர்களின் நலனை முன்வைத்துப் பல்வேறு போராட்டங்களை நடத்தி வெற்றிபெற்றிருக்கிறது. சொந்தக் கட்டடத்தையும், சொந்த அச்சகத்தையும் பெற்றிருக்கும் இந்தத் தே. தோ. தொ. ச. மலேசியத் தோட்டத் தொழிலாளர்களின் அதிகாரபூர்வமான ஒரே பிரதிநிதித்துவ சங்கமாகும். அரசு ஊழியர்களுக்குத் தரப்படுதல் போலத் 'தோட்டத் தொழிலாளர்களுக்கும் மாதச் சம்பளம் வேண்டும்; ஓய்வூதியம் தரப்படல் வேண்டும்' என்னும் நீண்ட நாளைய கோரிக்கைகளை வலியுறுத்திப் போராடியது; ஆனால் வெற்றியை ஈட்டவில்லை.

உலகிலேயே மிகுதியான மாதக் கட்டணம் (சந்தா) வாங்கும் ஒரு தொழிற்சங்கம் என்று சொல்லும்படியாக இஃது இருக்கிறது; சொந்தக் கட்டடம் முதலாய பெரும் சொத்துடைமைகளைப் பெற்றிருந்தது. எனினும் வரன்முறையற்ற செலவினங்களாலும் நிருவாகச் சீர்கேடுகளாலும் இது கடுமையான பொருளாதாரச் சிக்கல்களுக்குள்ளானது. அதனைச் சரிக்கட்டத் தலைநகரில் பல்கலைக்கழக மாணவர் தங்கிப் பயிலத் தாய்வீடுபோல் விளங்கிவந்த பி.பி.என். மாணவர் விடுதி போன்ற விலைமதிப்பற்ற சொத்துகளை விற்க நேர்ந்தது. அதனால் இது பெரும் எதிர்ப்புகளை எதிர்கொள்ள வேண்டியதாயிற்று. கிழமை இருமுறை ஒலித்துவந்த தொழிலாளர் உரிமை ஏடான சங்கமணி இதழும் தன் வலிமையை இழந்தது. இப்போது அது கிழமை ஒருமுறை என்ற முறையில் வந்துகொண்டிருக்கிறது.

## 10. திருக்குறள் மன்றம் 567

சாதிசமய வேற்றுமைகளை மறந்து தமிழர் ஒன்றுபட்டு ஒருமைப்பாடு காணவும், தமிழ்மொழியின் சிறப்பையும் திருக்குறளின் பெருமையையும் நம்மவர் அறியச் செய்யவும், ஓர் இயக்கத்தை உருவாக்க வேண்டுமென்று 11.4.1960இல் பதினைந்து இளைஞர் ஒன்றுகூடி எண்ணமிட்டனர்; 'திருக்குறள் மன்றம்' என்னும் ஓர் அமைப்பை உருவாக்க உறுதிகொண்டனர். நல்லொழுக்கமும் கண்டிப்பும் செயல்திறனும் கொண்ட இளைஞராய் இருந்த ந. முத்துக்கிருஷ்ணனைத் தலைவராய்த் தேர்ந்தெடுத்தனர். உடனே மன்றம்

பதிவிற்குச் சென்றது. மன்ற நல்லுரையாளராய் இருந்த ஆ. சுப்பையா முயற்சியால் மன்றம் 17.10.1960இல் பதிவுபெற்றது. நல்ல தலைமைத்துவம் அமைந்ததால் மன்றத்தில் நிறைய உறுப்பினர் சேர்ந்தனர். திருவள்ளுவர் மண்டபம் அமைக்கும் திட்டம் உருவானது. இடைவிடா முயற்சியாலும் குன்றாத ஆர்வத்தாலும் 14 ஆண்டுகளில் அழகிய மண்டபம் (1974) எழுந்தது. இதற்குக் காலஞ்சென்ற அமைச்சர் டான்ஸ்ரீ மாணிக்கவாசகம் அரசாங்கத்திடமிருந்து 40 ஆயிரம் வெள்ளி பெற்றுத்தந்தார். மேலும் முயற்சிகள் தொடர்ந்தன. 1976இல் அழகிய நூலகம் உருவானது. 1980இல் மண்டபத்தின் நுழைவுவாயிலில் திருவள்ளுவர் சிலை அமைந்தது.

மன்றம் வாரந்தோறும் தமிழ், திருக்குறள் வகுப்புகளை நடத்திவந்தது. மன்றத் தகவுரைஞராயிருந்த சு. சின்னத்தம்பி திருக்குறள் வகுப்பை நடத்திவந்தார். யாருடைய உரையையும் ஏற்காமல் மரபுவழி நின்று பொருள் காணும் முறையைப் போற்றாமல் குறட்பாக்களுக்குத் தாம் கண்ட உரைகளையே சொல்லிவந்தார். பின்னர் அவர் சொல்லிவந்த உரைகளைத் தொகுத்து 'மலைநாடு கண்ட திருக்குறள்' (எளிய உரை) என்னும் பெயரில் இம் மன்றம் தன் வெள்ளிவிழாவின்போது (1985) வெளியிட்டது. அப்போதைய தலைவராய் இருந்த மு. கண்ணகிபாலன் நூலை உருவாக்கி வெளியிடப் பெரிதும் உழைத்தார். இம் மன்ற வளர்ச்சிக்குப் பலர் தொண்டு உணர்வொடு பாடுபட்டிருக்கின்றனர். மேற்கண்டவர்களொடு துரைபாலன், கனகசபை ஆகியோர் தலைவர்களாயும் சி. சுப்பையா, பொ. இராமன், காலஞ்சென்ற பழநிசாமி, இராஜன், இராஜாராம் முதலியோர் செயலாளர்களாயும் சிறப்பாகத் தொண்டாற்றினர். ஆசிரிய மாமணி சி. நடேசன் (முன்னாள் தலைமையாசிரியர்), து. இராமமூர்த்தி, மு. பழநியப்பன், ஆகியோர் மறையும்வரை அறங்காவலராய் விளங்கினர். இதன் இப்போதைய தலைவர் இராம. அங்கப்பன், செயலர் அ.சிதம்பரநாதன். பழையவர்களில் இப்போது அப் பொறுப்பிலிருப்பவர் மா.சற்குணம் மட்டுமே. இம் மன்றத்தினர் ஆண்டுதோறும் பல்வேறு வகையான போட்டி நிகழ்ச்சிகளுடன் திருவள்ளுவர் விழா நடத்திவருகின்றனர்.

## *11. தமிழிசை இயக்கம் - சங்கம்* *570*

இயல், இசை, நாடகம் என முத்தமிழாய் முகிழ்த்த தமிழில் இசையுண்டா? இசைக்குத் தமிழ் ஒத்துவருமா? தமிழில் இசை பாடலாமா? எனக் கேட்கப்பட்ட காலம் ஒன்றிருந்தது. தமிழில் பாடுவது தீட்டு எனக் கருதப்பட்ட காலமும் இருந்தது. இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் நடந்த ஒரு நிகழ்ச்சி இதற்குத் தக்க எடுத்துக்காட்டு ஆகும். தமிழகத்தின் திருவையாறு நகரில் ஆண்டுதோறும் நடைபெறும் தியாகையர் நினைவு இசைவிழாவில் தெலுங்குக் கீர்த்தனைகளே பாடப்படுவது வழக்கம். அந்த ஆண்டில் விழாவில் கலந்து கொண்ட இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர் தமிழ்ப் பாடலைப் பாடினார். இதனைப் பொறாத மற்றைய பாடகர்கள், “விழாமேடை தீட்டாகிவிட்டது” என்றும், “இது பெரிய அபச்சாரம்” என்றும், “இனி அந்த மேடையில் அமர்ந்து பாடமுடியாது” என்றும் கொதித்துக் கூச்சலிட்டனர். கடைசியில் மேடையைக் கழுவிப் 'புனித'ப்படுத்திக்கொண்ட பின்னரே அமர்ந்து பாடினர். இது நடந்தது தமிழரின் தாயகமாம் தமிழ்நாட்டில் என்பது தலைகுனிவொடு குறிப்பிடப்படவேண்டிய இழிசெய்தியாகும்.

இவ்வாறு தமிழிசைக்குத் தமிழ்நாட்டிலேயே அவமான விலங்கு பூட்டப்பட்டிருந்த கொடுமையைப் பொறாது கொதித்தெழுந்தனர் சான்றோர் பலர். அவர்களுள் தலையாயவர் செட்டிநாட்டு அரசர் சர் அண்ணாமலைச் செட்டியார் (சிதம்பரம்) ஆவார். தில்லையில் அண்ணாமலை பல்கலைக்கழகம் நிறுவிய செட்டிநாட்டு அரசர் சென்னையில் அண்ணாமலை மன்றம் நிறுவி, தமிழிசை மறுமலர்ச்சிக்கு வித்திட்டார். 1941ஆம் ஆண்டுமுதல் தமிழிசை இயக்கம் தொடங்கி நாடுமுழுதும் தமிழிசை இயக்க மாநாடுகளையும் இசை நிகழ்ச்சிகளையும் நடத்தினார். தந்தை பெரியாரின் திராவிடர் கழகம் இந்த இயக்கத்திற்கு முழு ஒத்துழைப்பு நல்கிற்று. மறைமலை அடிகள், நாவலர் சோமசுந்தர பாரதியார், இராஜாஜி, கல்கி போன்ற அறிஞர் பெருமக்கள் எல்லாரும் இதனை ஆதரித்தனர். ஏழிசை மன்னர் எம். கே. தியாகராச பாகவதர், இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகர், இசைச் சித்தர் சி. எஸ். ஜெயராமன், இசைமணி சீர்காழி கோவிந்தராசன், இசைக்குயில் எம். எல். வசந்தகுமாரி, ஏழிசை வல்லவி கே. பி. சுந்தராம்பாள், குடந்தை சுல்தான் முதலாய பாட்டுக் குரல்வளம் நிறைந்த பாடகர்கள் எல்லாரும் தமிழிசை இயக்கத்தை ஆதரித்துத் தமிழிற் பாடுவதே தங்கள் கொள்கை எனச் செயற்படுத்திக் காட்டினர்.

'தேனோடும் தமிழ்மாநாடு' என்னும் இயக்கத் தலைமைப் பாடலை அவர்கள் பாடக் கேட்ட தமிழ்மக்கள் தமிழிசை இயக்கத்திற்குப் பேராதரவு நல்கினர். இயக்கத்தைப் பழித்தும் படம்போட்டுக் காட்டியும் தங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிய தமிழ்ப்பகைவர்கள் வேறு வழியின்றி வாயடங்கினர்.

தமிழிசை இயக்கம் நடத்தியதொடு, தக்காரைக்கொண்டு தமிழிசை நூல்கள் வெளியிட்டும் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி முதலாய பழந்தமிழ்ப் பத்திப் பாடல்களுக்குப் பண்ணமைக்கச் செய்து பயிற்றுவித்தும் அவற்றை அலகமைவுடன் (சுரம்) நூலாக அச்சிட்டு வெளியிட்டும் அருந்தொண்டாற்றினார் செட்டிநாட்டு அரசர்.

இத் தமிழிசை இயக்கத்தின் வெற்றிக்குப் பின்னர்த் தமிழிலேயே பாடும் முழு இசை நிகழ்ச்சிகள் நடைபெறலாயின; இன்றளவும் நடைபெற்று வருகின்றன. அண்ணாமலை பல்கலைக்கழகத்திலும் அரசு இசைக் கல்லூரிகளிலும் தமிழ்மூலமே இசை கற்பிக்கப்பட்டு வருகிறது. சென்னை அண்ணாமலை மன்றத்தில் ஆண்டுதோறும் நடைபெறும் இசைவிழாவில் இசைத்தமிழ் கோலோச்சுகிறது. எனினும் தமிழ் வளர்ச்சியில் நாட்டமில்லா ஒரு கூட்டத்தினர் இன்னும் இசைத்துறையில் தமிழைத் 'துக்கடா' நிலையிலே வைத்துள்ளனர். நடன அரங்குகளிலும் பிறமொழிப் 'பதங்களே' தலைமையிடங் கொள்கின்ற இழிநிலையும் தொடரவே செய்கின்றது என்பது வருத்தத்திற்குரியதாகும். அனைத்துத் துறைகளிலும் தமிழுக்கு முதன்மைஏற்படுத்த இப்போதைய கலைஞர் ஆட்சி மேற்கொண்டுவரும் உறுதியாய நடவடிக்கைகள், எதிர்காலத்தில் இந் நிலையை மாற்றுமென்னும் நம்பிக்கைச் சுடரை ஏற்றுகின்றன.

# கவிதைக் கொடை

## அ. நூல்கள்

**1. அணிகலன்**

மு. தங்கராசன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1985ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: தை நூலகம், நாச்சியார்கோவில் - 612 602, தமிழ்நாடு.

**2. அரங்கேறிய கவிதைகள்**

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் அவ்வப்போது நடத்திய கவியரங்கங்களில் பாடப்பெற்ற கவிதைகளின் தொகுப்பு நூலான இதனை, 1977ஆம் ஆண்டில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் வெளியிட்டது.

**3. அருள்புரிவாய்**

கவிஞர் சி. வேலுசுவாமி எழுதிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1977ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு : திருமகள் வெளியீடு, எண் 21, ஜாலான் 8/20 பெட்டாலிங் ஜெயா, சிலாங்கூர்.

**4. அறிவுப் பாட்டு**

பாப்பாவின் பாவலர் முரசு. நெடுமாறன் பாடிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1976ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியிட்டோர்: மலேசியப் புத்தகாலயம், 85, ஜாலான் பெர்கெந்தியான், செந்தூல், 51100 கோலாலம்பூர்.

**5. இசைக்கொத்து**

ரெ. சண்முகம் இயற்றி இசையமைத்த மெல்லிசைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1972ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு : திருமகள் வெளியீடு, எண் 21, ஜாலான் 8/20, பெட்டாலிங் ஜெயா, சிலாங்கூர் டாருல் ஏசான்.

**6. இசைமூலம் இன்ப ம. இ. கா.**

மலேசிய இந்தியர் காங்கிரசுபற்றியும் அதன் பல்வேறு போராட்டங்கள்பற்றியும் கவிஞர்கள் காரைகிழார், மதுராந்தகன், கரு. வேலுச்சாமி, தீ. சி. பொன்னுசாமி ஆகியோர் இயற்றிய பத்து இசைப்பாடல்கள் ஒலிப்பேழையாய் வெளியீடு கண்டன. இசைப்பேழையை உருவாக்கியவர் எம். எஸ். கோபாலன். ம. இ. கா.வின் 40ஆம் ஆண்டுப் பேராளர் மாநாட்டில் வெளியிடப்பெற்ற அந்தப் பாடல்களின் நூலாக்கமே இது. வெளிவந்த ஆண்டு: 1987; வெளியீடு : ம. இ. கா.வின் 40ஆம் ஆண்டுப் பேராளர் மாநாடு.

**7. இதய ஓசை**

கவிஞர் சிங்கை முகிலன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1960ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு: கவிதைப் பண்ணை, 845, பாசிர் பாஞ்சாங் ரோடு, சிங்கப்பூர்

**8. இளங்கோ கவிதைகள்**

கவிஞர் சீ. மா. இளங்கோவின் பாடல் தொகுதியாய இந் நூல், 1983ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: சரிகாட் இளவேணி, 1545 ஜாலன் கம்போங் ஜாவா, புக்கிட் பிலாண்டோக், சிரம்பான்.

**9. இளந்தளிர்**

பாப்பாவின் பாவலர் முரசு. நெடுமாறன் இயற்றிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1969ஆம் ஆண்டில் வெளிவந்தது; நல்ல வரவேற்பைப் பெற்றது. தமிழகத் தலைநகரில் தக்கார் முன்னிலையில் அரங்கேறிய முதல் அயலகத் தமிழ்நூல் இஃது என்பது குறிப்பிடத்தக்கது. இதனைப் பதிப்பித்தவர் புலவர் தணிகை உலகநாதன். விழா எடுத்த இயக்கம் சென்னை வானொலிச் சிறுவர் சங்கப் பேரவை. வெளியீடு: பொன்னி பதிப்பகம், கோலாலம்பூர்.

**10. உதிரிப் பூக்கள்**

கவிஞர் பொன். அன்பரசன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1980ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு : பாவை பதிப்பகம், நாமக்கல், சேலம், தமிழ்நாடு.

**11. உறவுகள்**

கவிஞர் ஆதம்குமார் பாடல் தொகுப்பாய இந் நூல், 1979ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றது. வெளியீடு : ஷாயிர் பதிப்பகம், மஸ்ஜித் தெரு, சிக்கல், தஞ்சை மாவட்டம், தமிழ்நாடு.

**12. ஊஞ்சல்**

பாவலர் முல்லைவாணன் இயற்றிய இளையர் பாடல் தொகுப்பாய இந் நூல், 1981ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: மறைமலை பதிப்பகம், சிங்கப்பூர்-9108.

**13. எரியீட்டி**

கவிஞர் முல்லைவாணன் இயற்றிய பாடல் தொகுப்பாய இந் நூல், 1979ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: மறைமலை பதிப்பகம், சிங்கப்பூர்-9108.

**14. கடற்சோழன் கவிதைகள்**

மலேசிய இராணுவத்தில் பணிபுரிந்த சோலை முனியன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1980ஆம் ஆண்டில் வெளிவந்தது.

**15. கணைகள்**

கவிஞர் காரைகிழார் பாடல் தொகுதியாய இந் நூல், 1977ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. இந் நூல் பரபரப்பாய் மூன்று பதிப்புகள் வெளிவந்தது. வெளியீடு : மலேசியத் தமிழ்ப் புத்தகாலயம், 235, பத்துவியூ கார்டன், பத்துகேவ்ஸ், கோலாலம்பூர்.

**16. கத்திக்கப்பல்**

கவி. மதிதாசன் இயற்றிய சிறுவர் பாடல்தொகுப்பாய இந் நூல் 1960ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது.

**17. கலாவள்ளி காவியம்**

இந்தப் பாட்டுடைச் செய்யுளைப் பாடியவர் கவிஞர் ஓ. எம். காதிர் சுல்தான். 1977ஆம் ஆண்டில் இது வெளிவந்தது. வெளியீடு: செந்தமிழ்க் கலாமன்றம், பினாங்கு.

**18. கவிக்குலம் போற்றும் தமிழவேள்**

தமிழவேள் கோ. சாரங்கபாணிபற்றி முப்பத்து மூன்று கவிஞர் பாடிய புகழ்ப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1982ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. தொகுப்பாசிரியர் மு. தங்கராசன். வெளியீடு: தமிழவேள் நாடக மன்றம், சிங்கப்பூர் -2775.

**19. கவிதைத் திரட்டு**

கவிஞர் சங்கு சண்முகமும் கவிஞர் மு. தில்லைநாதனும் சேர்ந்து தொகுத்த இந் நூலில் பல்வேறு கவிஞர்கள் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. மலாயாவில் தமிழ்க் கவிதைகள் (1962, திரு. பரிதாமணாளன்) நூலுக்கு முன்னோடித் தொகுப்பு நூல் இது. இந் நூல் வெளிவந்த ஆண்டு 1960.

**20. கவிதைமலர்கள்**

தமிழ்முரசு வெளியீடாய் 1947ஆம் ஆண்டு மேத் திங்களில் வெளியிடப்பெற்ற இந் நூல்தான் சிங்கை மலேசியாவில் வெளியிடப்பெற்ற முதல் 'மறுமலர்ச்சிக் கவிதை' நூல் ஆகும். புரட்சிப் பாவேந்தர் பாரதிதாசன் வாழ்த்துப் பாவுடன் வெளியிடப்பெற்ற இத் தொகுப்பு நூலின் ஆசிரியர் 'பாரதிதாசன் கவிதா மண்டல'க் கவிஞர் ந. பழநிவேல் ஆவார்.

**21. கவிப்பூஞ்சோலை**

பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது பாடல்தொகுப்பாய இந் நூல், 1957இல் வெளியிடப்பெற்றது. வெளியீடு : பனைக்குளம் வ. அ. மு. அஹ்மது ஜலாலுத்தீன், பினாங்கு.

**22. கவிமஞ்சரம்**

தமிழ்ச்செல்வன் (மா. இராமையா) இயற்றிய கவிதைகளின் தொகுப்பாய இந் நூல், 1976ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: புரட்சிப் பண்ணை, சேலம் - 636 007, தமிழ்நாடு.

**23. கனல்**

பாவலர் அ. பு. திருமாலன் பாட்டுத்தொகுப்பாய இந் நூல், 1979ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. வெளியீடு: மலேசியத் திராவிடர் கழகம், சிலாமாக் கிளை.

**24. குமரன்மலைக் கவிப்பூக்கள்**

கேமரன்மலைக் கவிஞர் க. இராமசாமி இயற்றிய பாடல்களின் தொகுப்பு இந் நூல். வெளியிட்ட ஆண்டு 1987. வெளியீடு: ஸ்டார் அச்சகம், 75, ஜாலான் சுல்தான் யூசப், 30000 ஈப்போ.

**25. கூட்டுறவுக் கவிதைகள்**

கூட்டுறவுத் தந்தை துன் வீ. தி. சம்பந்தன் தோற்றுவித்த தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தின் ஆதரவில் நாடுமுழுதும் நடத்தப்பெற்ற கூட்டுறவுக் கவியரங்குகளில் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1971ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. தொகுப்பாசிரியர் : கவிமணி கிருஷ்ணதாசன். வெளியீடு: தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம், கோலாலம்பூர்.

**26. சந்தனக் கிண்ணம்**

கவிவாணர் ஐ. உலகநாதன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1966ஆம் ஆண்டில் பேரறிஞர் அண்ணா அணிந்துரையுடன் வெளியிடப்பெற்றது. மலேசியத் தமிழ்க் கவிதைகளைத் தமிழகம் நிமிர்ந்து பார்க்கச்செய்த ஓர் அருமையான நூல். இது தமிழக, மலேசிய, சிங்கப்பூர் ஏடுகளின் ஒருமித்த பாராட்டைப் பெற்றது. வெளியீடு: தாமரைப் பதிப்பகம், 51, 14ஆம் குறுக்குத்தெரு, 3ஆம் நெடுஞ்சாலை, பிரகாஷ் நகர், பெங்களூர்-560 021

**27.** செழுஞ்சுவைப் பாவாயிரம்

நாச்சிகுளத்தார் பாடிய பல்வேறு கருப்பொருளைக் கொண்ட 1000 வெண்பாக்களின் தொகுப்பாய இந் நூல், 1969இல் வெளியிடப்பெற்றது. வெளியீடு: நாச்சிகுளத்தார் பதிப்பகம், உதயமார்த்தாண்டபுரம், தஞ்சை மாவட்டம், தமிழ்நாடு.

**28.** தமிழியக்கப் பாடல்கள்

கவிஞர் கனிமொழி இயற்றிய இசைப்பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1977ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: மலேசியத் திராவிடர் கழகம்.

**29.** திருப்புமுனைகள்

கவிவாணர் ஐ. உலகநாதன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1982இல் வெளிவந்தது. வெளியீடு: தாமரைப் பதிப்பகம், 51, 14ஆம் குறுக்குத்தெரு, 3ஆம் நெடுஞ்சாலை, பிரகாஷ் நகர், பெங்களூர்-560 021

**30.** திருமுருகன் காவடிச் சிந்து

கவிஞர் முருகதாசன் பாடிய இந் நூல், 1975ஆம் ஆண்டு வெளிவந்தது. வெளியிட்ட ஆண்டு 1975. வெளியீடு: சி. ஐ. ஏ. வெளியீட்டகம், 96-B, மார்க்கெட் தெரு, அறை-7, சிங்கப்பூர்-1

**31.** தீப்பொறியின் உள்ளூர்ப் பாடல்கள்

கவிஞர் தீ. சி. பொன்னுசாமி இயற்றிய இசைப்பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1988ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு : பொன் பாவலர் மன்றம், கோலாலம்பூர்.

**32.** தெய்வத்தமிழ் இசைவிருந்து

கவிஞர் முத்துமாணிக்கம் இயற்றிய இசைப்பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1987ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: புளோக் 143, பொத்தோங் பாசிர் அவென்யூ 2 # 10-14, சிங்கப்பூர்-1335

**33.** தேனீயைப் பார்

கவிஞர் சி. வேலுசுவாமி இயற்றிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1964ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: தமிழ்க்கலைப் பதிப்பகம், எண் 2, மெயின் ரோடு, சிலியாவ்.

**34.** தேன்சிட்டு

கவிஞர் முத்துமாணிக்கம் இயற்றிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1987ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: புளோக் 143, பொத்தோங் பாசிர் அவென்யூ 2 # 10-14, சிங்கப்பூர்-1335

**35.** தொடக்கத் தமிழ்ப்பள்ளிப் பாடல்கள் (ஆண்டு 1, ஆண்டு 3)

1982ஆம் ஆண்டு அறிமுகமான புதிய தொடக்கப் பள்ளிகளுக்காய பாடத்திட்டத்தில் (K.B.S.R.) இசையும் ஒரு பாடமாய்ச் சேர்க்கப்பெற்றது. தேசிய, சீன, தமிழ்ப்

பள்ளிகளுக்குப் பொதுவாகப் பதினெட்டுப் (தேசியமொழியில் அமைந்த) பாடல்களும், தேசிய (மலாய்), சீன, தமிழ்ப் பள்ளிகளுக்கு அவ்வம் மொழிகளில் இருபத்தெட்டுப் பாடல்களும் வரையறுக்கப்பெற்றன. தாய்மொழிகளில் அமையும் பாடல்களுக்கு அவ்வம் மொழிமரபு சார்ந்த இசை அமைத்துக்கொள்ளவும் உரிமை வழங்கப்பெற்றது. முதலாம், இரண்டாம், மூன்றாம் ஆண்டு (வகுப்பு) வரை இம் முறை தொடர்ந்தது. உள்நாட்டுக் கவிஞர் எழுத, உள்நாட்டு இசைக்கலைஞர் இசையமைத்த பாடல்களைக்கொண்ட நூல்களையும் கல்வி அமைச்சின் பாடத்திட்ட மேம்பாட்டு மையம் வெளியிட்டது; இசைப்பேழைகளையும் உருவாக்கி வெளியிட்டது.

**36.** தோணி

கவிஞர் பரணன் பாடல் தொகுதியாய இந் நூல், 1985ஆம் ஆண்டு வெளிவந்தது. வெளியீடு: தமிழ்வளர்ச்சிப் பண்ணை, 15-A, மெக்கன்சி சாலை, சிங்கப்பூர்-0922

**37.** நன்னெறிப் பாட்டு

கவிஞர் முரசு. நெடுமாறன் இயற்றிய குழந்தைப் பாடல் தொகுப்பாய இந் நூல், 1987ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது. 1982இல் அறிமுகப்படுத்தப்பெற்ற தொடக்கப்பள்ளி களுக்காய (K.B.S.R.) புதிய நன்னெறிப் பாடத்திட்டத்தை முழுமையாய்த் தழுவி எழுதப் பெற்ற இந் நூல் கணினியில் அச்சிடப்பெற்ற முதல் தமிழ்நூல் என்னும் சிறப்பிற்குரியது. வெளியீடு: உமா பதிப்பகம், 85-ஏ, பெர்ஹெந்தியான் சாலை, கோலாலம்பூர்.

**38.** நாயக வெண்பா

நபிகள் நாயகம் பெருவாழ்வை வெண்பா யாப்பில் பாடும் இந் நூல், பனைக்குளம் புலவர் மு. அப்துல் மஜீது இயற்றிய காவியமாகும். "நளவெண்பாப் பாடி வெற்றிபெற்ற புலவர் புகழேந்திக்குப்பின், வெண்பாவில் பாடப்பட்டுள்ள சிறந்த காவியம்" எனத் தமிழ் இலக்கிய வரலாற்று நூலில் டாக்டர் மு. வ.வால் பாராட்டப் பெற்ற இக் காவியம், 1968ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு: அன்பு நூல்நிலையம், சென்னை.

**39.** பாடு பாப்பா

தமிழ்க்குயில் கா. கலியபெருமாள் பாடிய குழந்தைப் பாடல் தொகுப்பாய இந் நூல், 1983ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: தமிழ்க்குயில் பதிப்பகம், 40-A, ரெகட் சுங்கை பாரி II, தெலுக் சூரின், ஈப்போ.

**40.** பாட்டுப் பாடலாம்

கவிஞர் சி. வேலுசுவாமி எழுதிய குழந்தைப் பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1967ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: தமிழ்க்கலைப் பதிப்பகம், 2, நெடுஞ்சாலை சிலியாஸ்ரீ.

**41.** பாதாசனின் கவிதைகள்

கவிஞர் பாதாசன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1979ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு: பத்துமலைத் தமிழ் இளைஞர் மணிமன்றம், 35, ஜாலான் சத்து, தாமான் செலாயாங், பத்துமலை, சிலாங்கூர்.

**42.** பாத்தேறல்

மெ. இளமாறன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1981ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு : கண்ணகி பதிப்பகம், புளோக்-பி4 -99-B, காங் சசிங் சாலை, தாமான் ஆரோங், சிங்கப்பூர்-2261

**43. பூக்கள்**

பூ. முனியாண்டி பாடல் தொகுப்பாய இந் நூல், 1976ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு: சிட்டுப் பிரசுரம், 28, பெருமாள்கோவில் தெரு, மேட்டுப்பாளையம் - 621 210, தமிழ்நாடு.

**44. பூங்வாராயா**

தமிழ்கற்ற நேப்பாளியராய எல். எம். பகதூர் இயற்றிய குழந்தைப் பாடல் தொகுப்பாய இந் நூல், 1977ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது.

**45. பேரழகைக் காண்பேனோ? பிறந்தபயன் காண்பேனோ?**

1974ஆம் ஆண்டில் பினாங்கில் நடந்த மீலாது விழாக் கவியரங்கில் கவிஞர் செ. சீனி நைனாமுஹம்மது, 'வள்ளல் நாயகம்' எனும் தலைப்பில் பாடிய நீண்ட கவிதையின் கையடக்கப் பதிப்பான இந் நூல், 1974ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: மீலாது விழாக் குழுவினர், பினாங்கு.

**46. மகிழம்பூ**

மலேசியக் கவியரசு சோமசன்மா கவிதைத் தொகுப்பாய இந் நூல், 1977ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: புரட்சிப் பண்ணை, சேலம் - 636 007, தமிழ்நாடு.

**47. மணிமுழக்கம்**

மீசல் பி. எம். அபூபக்கர் பாடல் தொகுப்பாய இந் நூல், 1984ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: வண்ணக் களஞ்சியம் பதிப்பகம், மீசல் - 625 711, தமிழ்நாடு.

**48. மலாயாவில் தமிழ்க்கவிதைகள்**

ஏறத்தாழ நாற்பது கவிஞர்களின் பாட்டுத் தொகுப்பாய இந் நூல், 1962ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. இதுவரை வெளியிடப்பெற்றுள்ள கவிதைத் தொகுப்புகளுள் இதுவே சிறந்த தொகுப்பு எனக் கருதப்படுகிறது. தொகுப்பாசிரியர்: பரிதாமணாளன். வெளியீடு: அறிவு மலரகம், சிங்கப்பூர்.

**49. மலேசியாக் கழகப் பாடல்கள்**

இரா. மணிமாறன் இயற்றிய இசைப்பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1967ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: அகில மலாயாத் திராவிடர் கழகம், கோலக்கிள்ளான்.

**50. மழை**

கவிஞர் பரணன் அவர்கள் இயற்றிய குழந்தைப் பாடல்களின் தொகுதியாய இந் நூல், 1984ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: தமிழ்வளர்ச்சிப் பண்ணை, 15-A, மெக்கன்சி சாலை, சிங்கப்பூர் - 0922.

**51. மாணிக்கக் கற்கள்**

பழ. மனோகரன் எழுதிய பாடல் தொகுப்பாய இந் நூல், 1981ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு : 9, ஜாலான் தஞ்சோங், கிள்ளான்.

**52. மாயை**

கவிஞர் இரா. பெருமாள் பாடல் தொகுதியாய இந் நூல், 1967ஆம் ஆண்டில்

வெளியிடப்பெற்றது. வெளியீடு : 60, ரெக்கோ சாலை, காஜாங்.

**53.** முதல்மலர்

கவிஞர் கரு. திருவரசு இயற்றிய இசைப்பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1981ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு: தமிழ் இளைஞர் மணிமன்றம், 57, மெக்காலிஸ்தர் ரோடு, பினாங்கு.

**54.** முத்தாரம்

தமிழ்மணி எல்லோன் பாடல் தொகுதியாய இந் நூல், 1980ஆம் ஆண்டில் வெளிவந்தது. இந் நூலின் சில பாடல்கள் எஸ். பி. எம். தேர்விற்குப் பாடமாய் வைக்கப்பெற்றன. வெளியீடு : சே. கதிரேசன், 29805 ஜாலான் பெண்டகாரா, ஈப்போ.

**55.** முத்துக்கோவை

கவிவாணர் ஐ. உலகநாதன் பாடல் தொகுப்பாய இந் நூல், 1975ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: தாமரைப் பதிப்பகம், 51, 14ஆம் குறுக்குத் தெரு, 3ஆம் நெடுஞ்சாலை, பிரகாஷ் நகர், பெங்களூர் - 560 021

**56.** முத்துச்சரம்

கவிஞர் டி. வி. இராகவன் பிள்ளை பாடல் தொகுப்பாய இந் நூல், 1983ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு: முத்தமிழ், 7, ஜாலான் 1, தாமான் பத்துமலை, கோலாலம்பூர்.

**57.** முழு நிலா

'மாணவர் பூங்கா' (1956) என்னும் சிறுவர் இதழைச் சிலகாலம் பெருமுயற்சியொடு நடத்திவந்த மு. அப்துல் லத்தீப், தம் பூங்காப் பிரசுரத்தின்மூலம் 1960இல் வெளியிட்ட இந் நூலின் ஆசிரியர், காலஞ்சென்ற மு. கந்தன் (பரிதி). வெறிச்சோடிக் கிடந்த மலேசியச் சிறுவர் இலக்கியச் சோலையில் அரிதாக மலர்ந்த இம் முழுநிலா, பலர் பாராட்டுகளைப் பெற்றது.

**58.** மைதீ. சுல்தான் கவிதைகள்

கவிஞர் மைதீ. சுல்தான் பாடல் தொகுப்பாய இந் நூல், 1989ஆம் ஆண்டில் வெளிவந்தது.

**59.** வண்ணங்கள்

கவிஞர் கரு. திருவரசு பாட்டுத் தொகுப்பாய இந் நூல், 1977ஆம் ஆண்டில் வெளிவந்தது. இதன் இரண்டாம் பதிப்பு 1980ஆம் ஆண்டில் வெளிவந்தது. எஸ்.பி.எம். தேர்வுக்கான தமிழ் இலக்கியப் பாடத்துக்கு முதல்முறையாய் மலேசியப் படைப்புகள் தேர்ந் தெடுக்கப்பட்டபோது இந் நூலும் ஐ. உலகநாதன் சந்தனக் கிண்ணமும் தேர்ந்தெடுக் கப்பெற்றன.வெளியீடு: புதிய சமுதாயம், 90-A, ஜாலான் பிரிக்ஃபீல்ட்ஸ், கோலாலம்பூர்.

**60.** வண்ணை அந்தாதி

வண்ணைநகர் அந்தாதி, வண்ணைநகர் ஊஞ்சல், சிங்கைநகர் அந்தாதி, சித்திரகவிகள் எனும் நான்கு நூல்களும் ஒரே தொகுப்பாய் 1887இல் வெளியிடப்பெற்றன. இலங்கையில் பிறந்த பெரும்புலவராய சி. ந. சதாசிவ பண்டிதர் இவற்றைப் பாடிய புலவராவார். நமக்குக் கிடைத்தவரை இதுவே இந் நாட்டில் முதன்முதலில் வெளியிடப்பெற்ற கவிதைநூல் ஆகும்.

**61.** வழிநடைச் சிந்து

சிங்கப்பூரில் நடைபெற்ற தேர் ஊர்வலத்தைக் காணச் சென்ற அன்பான காதலர்

இருவர் உணர்வுகளையும் விழாச் செய்திகளையும் நாட்டுநிலையையும் நுட்பமாய்ப் புலப் படுத்திப் பாடியுள்ள இந்த வழிநடைச் சிந்து, 1933ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. நாகப் பட்டினத்தில் பிறந்த புலவராய செ.எ.அப்பாஸ் பாவலர் இதனைப் பாடியுள்ளார். பாவடிவில் ஓவியத் திறன்மிக்க இப் புலவரைப்பற்றி வேறு விவரங்கள் கிடைக்கவில்லை.

### 62. வாடாமலர் நாடகப் பாடல்கள்

மலாயா (மலேசிய)க் கூட்டரசு தமிழர் கலைமன்றம் 1964ஆம் ஆண்டில் அரங்கேற்றிய 'வாடாமலர்' நாடகத்தில் இடம்பெற்ற எட்டுப் பாடல்களையும் தனியே நூல் வடிவில் வெளியிட்டுள்ளனர். பாடல் ஆக்கம் ஆழி. அருள்தாசன். நாடகப் பாடல்களை நூல்வடிவில் வெளியிட்டது இதுவே முதல் முயற்சி என்று தெரிகிறது.

### 63. விநாயகர் புகழ்மாலை

செந்துறைக் கவிஞர் க. முனியாண்டி எழுதிய பாடல்களின் தொகுப்பாய இந் நூல், 1976ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு : செந்தமிழ்க் கலாநிலையம், பினாங்கு.

### 64. வேர்கள்

வெ. தேசகுரு எழுதிய பாடல் தொகுப்பாய இந் நூல், 1983ஆம் ஆண்டில் வெளி வந்தது. வெளியீடு : பத்துமலைத் தமிழ் இளைஞர் மணிமன்றம், ஜாலான் சுங்கை துவா, சிலாங்கூர்.

### 65. ஜமீலாவின் கவிதைகள்

ஷம்சுத்தீன் என்னும் இயற்பெயருடைய கடையநல்லூர் ஜமீலாவின் பாடல் தொகுப்பாய இந் நூல், 1975ஆம் ஆண்டில் வெளிவந்தது. வெளியீடு : பனிமலர்ப் பதிப்பகம், 51, நடு அய்யாபுரம் தெரு, கடையநல்லூர், தமிழ்நாடு.

### 66. ஸ்ரீ முனீஸ்வரர் பாமாலை

முதுபெரும் தமிழ்ப்புலவர் சுவாமி இராமதாசர் இயற்றிய இந் நூல், 1974ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்றது. வெளியீடு: ஸ்ரீ அருளானந்த முனீஸ்வரர் ஆலயம், தைப்பிங்.

## ஆ. இதழ்கள்

### 1. அறிவொளி

க. பொன்னுதுரையை ஆசிரியராய்க்கொண்டு 1977இல் கிள்ளானிலிருந்து வெளிவந்த மாத இதழ். சந்தையில் விற்கும் நோக்கமின்றி ஆண்டுக்கட்டணம் செலுத்துவோர்க்குமட்டும் அஞ்சலில் அனுப்பும் திட்டத்தொடு தொடங்கப்பெற்ற இவ் விதழ், போதிய ஆதரவின்மையால் மிகக் குறுகிய காலத்திலேயே நிறுத்தப்பட்டது.

### 2. இயக்கம்

மலேசிய இந்தியர் காங்கிரசின் வெளியீடாய இது, 1976முதல் வெளிவந்த மாத இதழாகும். கட்சிச் செய்திகளொடு பல பயனுடைய படையல்களையும் தாங்கிவந்த இவ் விதழ் குறுகிய காலமே நடைபோட்டது.

### 3. இலக்கியம்

1978ஆம் ஆண்டில் தமிழ் இலக்கியக் கழக வெளியீடாய் வெளியிடப்பெற்ற மாத இதழ். இது சிலகாலமே நடைபோட்டது.

**4. உதயம்**

அரசு தகவல்துறையின் வெளியீடாய் ஜனோபகாரி (1948), வளர்ச்சி (1959), வெற்றி (1962) முதலாய பெயர்களில் வெளிவந்த தகவல் ஏடு. பின்னர் 1972ஆம் ஆண்டுமுதல் உதயம் என்னும் பெயரில் இலக்கியத்தரம் வாய்ந்த ஏடாய் வெளிவந்தது. ச. பொன்முகத்தை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்த இந்த மாத ஏடு, சிறுசிறு துணுக்குகள் முதல் கதை, கட்டுரை, கவிதை முதலிய எல்லா எழுத்துகளுக்கும் பணம் கொடுத்த முதல் தமிழ் ஏடு. அப்பால் எம். துரைராஜ் மேற்பார்வையில் வெளிவந்தது. பின்னர்க் க. பாலகிருஷ்ணன் ஆசிரியர் பொறுப்பேற்றார். இப் போதைய ஆசிரியர் சுப. தேவராஜ்.

**5. கூட்டுறவு**

தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தின் திங்கள் வெளியீடாய் 1963இல் தொடங்கப்பெற்ற இது, 1967முதல் காலாண்டு இதழாய் வெளிவந்தது. பின்னர்ச் சங்கத்தின் கொள்கை இதழாய்த் திங்கள்தோறும் வெளிவந்து கொண்டிருக்கிறது.

**6. கொள்கை முரசு**

மலேசியத் திராவிடர் கழக வெளியீடாய இந்த மாத இதழ், சமுதாயச் சீர்திருத்தக் கருத்துகளைப் பரப்பும் ஏடாய் 1969ஆம் ஆண்டுமுதல் 1971வரை வெளிவந்தது. இதன் வெளியீட்டுக் குழுத் தலைவர் பொறுப்பு வகித்தவர் காலஞ்சென்ற பெரியவர் அ. மருதமுத்து. ஆசிரியராய்ப் பணியாற்றியவர் காலஞ்சென்ற இரா. மணிமாறன்.

**7. சங்கமணி**

1951ஆம் ஆண்டுமுதல் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்க வெளியீடாய்ப் பெட்டாலிங் ஜெயாவிலிருந்து வெளிவந்துகொண்டிருக்கும் இது, வாரம் இருமுறை ஏடாகும். அண்மைக் காலமாய் வாரம் ஒருமுறை மட்டும் வெளிவருகிறது. இதனில் தமிழறிஞர் தி. சு. சண்முகம், பைரோஜி நாராயணன், செ. குணசேகர், சங்கு சண்முகம் முதலாயோர் ஆசிரியப் பணிபுரிந்துள்ளனர். பொதுச் செயலாளர் பி. பி. நாராயணன் அச்சிட்டு வெளியிட்டு வந்தார். இப்போது இப் பொறுப்பை வகிப்பவர் சங்கப் பொதுச் செயலாளர் ஜி. சங்கரன். துணையாசிரியர் கோவி. பெருமாள்.

**8. சமநீதி**

ஓர் அரசியல்வாதியாய கி. இராமனால் 1975ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்ற இந்த மாத ஏடு, பல்வேறு இடையூறுகளுக்கிடையில் நின்றுநின்று வெளிவந்தது. இதன் ஆசிரியருமாய கி. இராமன் மறைந்தபின் இவ் வேடு நின்றுவிட்டது.

**9. சுடர்**

தில்லித் தமிழ்ச்சங்க வெளியீடாய இது, ஆராய்ச்சித்தரம் மிக்க பல நல்ல கட்டுரைகளையும் கவிதைகளையும் வெளியிட்டு இலக்கியத் தொண்டு புரிந்துவருகிறது.

**10. சுதந்திர இந்தியா**

செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமியை ஆசிரியராய்க்கொண்டு சிங்கப்பூரிலிருந்து 1943ஆம் ஆண்டில் வெளியிடப்பெற்ற நாளிதழ்.

**11. செந்தமிழ்ச் செல்வி**

எஸ். முத்துசாமியை ஆசிரியராய்க்கொண்டு 1940இல் பினாங்கிலிருந்து வெளிவந்தது.

**12.** தத்துவபோதினி

வ. இராசகோபாலை ஆசிரியராய்க்கொண்டு 1864ஆம் ஆண்டில் சென்னையிலிருந்து வெளிவந்த மாத ஏடு. முதல் இந்துசமய இதழ். 1923இல் சென்னையில் இதே பெயரில் ஓர் இதழ் வெளிவந்தது.

**13.** தமிழ் ஓசை

1.5.1981இல் வானம்பாடி (வார இதழ்) ஆசிரியர் ஆதிகுமணனை ஆசிரியராய்க்கொண்டு, முன்னாள் மேலவை உறுப்பினரும் இந் நாள் சட்டமன்ற உறுப்பினருமான க. சிவலிங்கம் வெளியிட்ட இந் நாளிதழ், குறுகிய காலத்தில் பரபரப்பாக விற்பனை இலக்கை எட்டிப்பிடித்தது; அப்பால் நிருவாகத்திற்கும் ஆசிரியர் குழுவிற்குமிடையே ஏற்பட்ட கருத்துவேறுபாடுகள் காரணமாய் நீதிமன்றத்தால் 12.3.1990இல் நிறுத்தப்பட்டது.

**14.** தமிழ்க்குயில்

கா. கலியபெருமாளை ஆசிரியராய்க்கொண்டு 1956ஆம் ஆண்டில் ஈப்போவிலிருந்து வெளிவந்த மாத ஏடு.

**15.** தமிழ்க்கொடி

1939ஆம் ஆண்டில் உ. அரு. அருணாசலம் செட்டியாரை ஆசிரியராய்க்கொண்டு மலாக்காவிலிருந்து வெளிவந்த மாத இதழ். இஃது இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் வெளிவந்த தமிழ்இதழ்.

**16.** தமிழ்நேசன்

1923ஆம் ஆண்டில் நரசிம்ம ஐயங்காரால் கிழமை இதழாய்த் தொடங்கப்பெற்ற இது, பின்னர் நாளிதழ் ஆயது; நீண்ட வரலாறுடையது; மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் சமுதாய முன்னேற்றத்திற்கும் குறிப்பிடத்தக்க தொண்டு புரிந்துள்ளது; முன்னோடி எழுத்தாளர் பலரை ஆசிரியர்களாய்க் கொண்டிருந்தது. அவர்களுள் கே. சி. அருண், டான்ஸ்ரீ ஆதி. நாகப்பன், கு. அழகிரிசாமி, முருகு. சுப்பிரமணியன் முதலாயோர் குறிப்பிடத்தக்கவர். முருகுக்குப் பின் வே. விவேகானந்தன் ஆசிரியரானார். இன்றைய ஆசிரியர் மலையாண்டி (1996). இதன் இப்போதைய உரிமையாளர் டத்தின்ஸ்ரீ இந்திராணி சாமிவேலு ஆவார். இஃது உலகத் தமிழ் நாளிதழ் வரலாற்றில் மூத்த ஏடு என்பது குறிப்பிடத்தக்கது. இவ் வேட்டுடன் திங்கட்கிழமைதொறும் சிறுவர் இதழ் (மாணவர் பூங்கா) ஒன்றும் இலவய வெளியீடாய் வருகிறது. தேர்வெழுதும் மாணவர்க்கு வழிகாட்டும் வண்ணம், மாஜு கல்வி மேம்பாட்டுக் கழகத்துடன் சேர்ந்து வெள்ளிக்கிழமைதொறும் 'கல்விக் களஞ்சியம்' என்னும் பெயரில் எட்டுப் பக்கங்களைக் கொண்ட அரிய வெளியீடு ஒன்றனையும் இது வெளியிட்டு வருகிறது (1996).

**17.** தமிழ்மலர்

1963ஆம் ஆண்டில் தமிழ்முரசிலிருந்து வெளியேறிய தி. செல்வகணபதி ஆசிரியராய்க் கொண்டு சிங்கப்பூரிலிருந்து வெளியிடப்பெற்ற இந் நாளிதழ், பின்னர் மலேசியாவிலும் தன் பயணத்தைத் தொடர்ந்தது; 30.11.1980இல் அரசாங்கத்தால் தடைசெய்யப்பட்டது. இந்த ஏட்டிற்கு ஆசிரியராய் விளங்கியவர் மு. அப்துல் லத்தீப்.

**18.** தமிழ்முரசு

1939ஆம் ஆண்டில் தமிழவேள் கோ. சாரங்கபாணி வார இதழாய்த் தொடங்கிய

சிங்கப்பூர் ஏடாய இது, பின்னர் நாளிதழாய் மலர்ச்சி கண்டது. சீர்திருத்தச் சிந்தனைகளின் வெளியீடாயும் தமிழ்மொழி, இன மறுமலர்ச்சியின் கொள்கை முழக்கமாயும், இலக்கிய மறுமலர்ச்சியின் திருப்புமுனையாயும், கணக்கற்ற கவிஞர்களையும் எழுத்தாளர்களையும் உருவாக்கிய பாசறையாயும் தன் மாணவர் மணிமன்ற (இலவச) இதழின்வழி மாணவ எழுத்தாளர்களையும் கவிஞர்களையும் உருவாக்கிய இலக்கியப் பண்ணையாயும் திகழும் இது, தமிழர் வாழ்வொடு ஒன்றிக் கலந்த உணர்ச்சிக் கனலாகும். தமிழவேள் மறைவுக்குப்பின் (16.3.1974) அவர் மூத்த மகன் ஜெயராமனை நிருவாக ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்தது. இந் நாளேட்டில் புகழ்பெற்ற எழுத்தாளர் பலரும் பணிபுரிந்துள்ளனர். அவர்களுள் முருகு. சுப்பிரமணியன், மெ. சிதம்பரம், அ. முருகையன், எஸ். சையது இபுராகிம், செல்வகணபதி, எம். எம். தாவூது, கா. அண்ணாமலை, பண்டித மு. இராமலிங்கம் முதலாயோர் குறிப்பிடத்தக்கவராவர். பழந்தமிழ் (சங்க) இலக்கியங்களை இன்றைய தலைமுறையினர் புரிந்துகொள்ளத்தக்க எளிய விளக்கவுரையுடன் (சாமி. சிதம்பரனார்) வெளியிட்டதும் தமிழர் கண்ட தண்டாமரை (சாத்தான்குளம் அ. இராகவன்) போன்ற ஆராய்ச்சிக் கட்டுரைகளையும் எச். ஜி. வெல்ஸின் 'உலக வரலாறு' என்னும் நூலை (சி. வீ. குப்புசாமி) மொழிபெயர்த்து வெளியிட்டதும் குறிப்பிடத் தக்கதாகும். இதன் இப்போதைய ஆசிரியர் வை. திருநாவுக்கரசு.

**19.** திருமகள்

கவிஞர் சி. வேலுசுவாமி மகனார் சி. வே. கிருஷ்ணனை ஆசிரியராய்க்கொண்டு 1969ஆம் ஆண்டுமுதல் வெளிவந்து கொண்டிருக்கும் சிறுவர் ஏடு. இஃது இந் நாட்டில் நீண்ட காலமாய் இடையீடின்றி வெளிவந்து கொண்டிருக்கும் ஒரே சிறுவர் இதழாகும்.

**20.** திரையொளி

எ. எச். சிங்கை அண்ணலை ஆசிரியராய்க்கொண்டு 1963ஆம் ஆண்டுமுதல் சிங்கப்பூரிலிருந்து வெளிவந்த மாத இதழ்.

**21.** தினமணி

அரசாங்கத்தால் தடைசெய்யப்பெற்ற 'தமிழ்மலர்' (1980) நாளிதழுக்கு மாற்றாய் 1981ஆம் ஆண்டில் என். டி. எஸ். ஆறுமுகம் பிள்ளையால் தொடங்கப்பெற்ற இந்த நாளிதழ், 1990ஆம் ஆண்டு நவம்பர் மாதம்வரை வெளிவந்தது.

**22.** தூதன்

இராமதாஸ் மனோகரனை ஆசிரியராய்க்கொண்டு 1984ஆம் ஆண்டுமுதல் கோலாலம்பூரிலிருந்து வெளிவந்த மாத இதழ. பின்னர் இதன் ஆசிரியர் பொறுப்பைப் பெரு. அ. தமிழ்மணி ஏற்றார். 1995இல் அரசால் தடைசெய்யப்பட்டது.

குறிப்பு: கே. அப்துல் ரசாக்கை ஆசிரியராய்க்கொண்டு 1953ஆம் ஆண்டில் சிங்கப்பூரிலிருந்து இதே பெயரில் ஓரிதழ் வெளிவந்துள்ளது.

**23.** தேசதூதன்

தமிழவேள் கோ. சாரங்கபாணி பெட்டாலிங் ஜெயாவிலிருந்து வெளியிட்ட நாளிதழ். கா. அண்ணாமலை பொறுப்பாசிரியராய்ப் பணி புரிந்தார். இஃது ஒரு மாலைப் பதிப்பாகும். 1962ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்ற இவ் விதழ் 1963ஆம் ஆண்டு நிறுத்தப்பட்டது.

**24.** நம்குரல்

'திருகிம்' என அறியப்பட்ட சிறுகதை எழுத்தாளர் ஆ. இ. முஹம்மது இபுராஹீமை ஆசிரியராய்க்கொண்டு மலேசிய இந்திய முஸ்லிம் நிறுவனங்களின் பேரவையான 'பெர்மிம்' (PERMIM) வெளியீடாய இத் திங்கள் ஏடு 1980ஆம் ஆண்டு பிப்பிரவரி மாதம் முதல் வெளிவந்தது. பின்னர்ச் செ. சீனி நைனாமுஹம்மது ஆசிரியப் பொறுப்பேற்றார். 1988ஆம் ஆண்டு ஜூலை மாதம்வரை வெளிவந்தது. நல்ல தமிழில் இலக்கணப் பிழையில்லாமல் வெளிவந்த ஏடு இது.

**25.** பருவம்

பொன்னி ந. தியாகராசனை நிருவாக ஆசிரியராய்க்கொண்டு 1976இல் வெளிவந்த மாத இதழ். இது குறுகிய காலமே நடைபோட்டது.

**26.** பாட்டாளி முரசு

வீரசேனனை ஆசிரியராய்க்கொண்டு 1946ஆம் ஆண்டு சிங்கப்பூரிலிருந்து வெளிவந்த வார ஏடு இது.

**27.** பாரதியின் குரல்

உருளச்சு (Cyclostyle) முறையில் வெளிவந்த மாதஇதழான இது, சில காலம் இலக்கியப்பணி புரிந்தது.

**28.** புதிய சமுதாயம்

முருகு. சுப்பிரமணியனை ஆசிரியராய்க்கொண்டு 27.3.1977முதல் கோலாலம்பூரிலிருந்து வெளிவந்த மாதம் இருமுறை ஏடு. பின்னர் மாத ஏடாய் வந்தது. இப்போது இது வெளிவரவில்லை.

**29.** பொன்னி

பொன்னி ந. தியாகராசனை ஆசிரியராய்க்கொண்டு 1966ஆம் ஆண்டுமுதல் கோலாலம்பூரிலிருந்து வெளிவந்த மாத இதழ். நல்ல இலக்கிய இதழான இது, ஏறத்தாழ ஐந்தாண்டு காலம் தொடர்ந்து வெளிவந்தது.

குறிப்பு: 1958ஆம் ஆண்டுமுதல் திரு. ஏ. குலாம் ரசூல் அவர்களை ஆசிரியராய்க் கொண்டு பினாங்கிலிருந்து வெளிவந்த 'பொன்னி' மாத இதழ் வேறாகும்.

**30.** மக்கள் பாதை மலர்கிறது

தமிழ் ஈழ விடுதலை கோரிப் போராடிக் கொண்டிருக்கும் இயக்கங்களில் ஒன்றாகிய 'பிளாட்' இயக்கத்தினால் 1983ஆம் ஆண்டில் சென்னையிலிருந்து வெளியிடப்பட்ட மாத ஏடு இது. ஆசிரியர் கவிமாமணி அ. மறைமலையான்.

**31.** மயில்

1986இல் தொடங்கப்பெற்ற மாத வெளியீடாய இவ் வேடு, பல்வேறு மாறுதல்களைப் பெற்றுப் பின்னர்க் கிழமை இதழாய், ஒரு சிறந்த குடும்ப இதழாய் நடைபோட்டது. சமுதாயச் சிக்கல்களைத் துணிந்து அலசி ஆராய்ந்த இவ் விதழ் தீர்விற்கும் வழிசொன்னது. புதியவர்களுக்கு ஊக்கம் நல்கியதொடு பழம்பெரும் எழுத்தாளர்களையும் மதித்துப் போற்றி அவர்களுக்குரிய வாய்ப்பளித்தது. தொடக்க, இடைநிலை, உயர்நிலைப்பள்ளி மாணவர்க்குப் பயன் நல்கும்

படையல்களை வழங்கிய கல்வி ஏடாயும் கலை, இலக்கியச் சுவடியாயும் உலாவந்தது. இதன் நிருவாக ஆசிரியர் ஆ. சோதிநாதன். சில காலமாய் இது நிறுத்தி வைக்கப்பெற்றுள்ளது.

**32.** மலேசிய நண்பன்

முரு. சொ. நாச்சியப்பனை ஆசிரியராய்க்கொண்டு 1986ஆம் ஆண்டில் வெளிவந்த நாளேடு; இப்போது ஆதி. குமணனை ஆசிரியராய்க்கொண்டு வெளிவந்துகொண்டிருக்கிறது. ஞாயிறுதோறும் இலக்கிய ஏடாய் மலர்கிறது. முன்பு திங்கட்கிழமைதோறும் சிறுவர்க்காய இலவய வெளியீடு ஒன்றை வெளியிட்டது. இப்போது அது நிறுத்தப்பட்டு, தேர்வெழுதும் மாணவர்க்கு வழிகாட்டும் வண்ணம் செவ்வாய்க்கிழமைதோறும் எட்டுப் பக்கங்களில் கல்விக்களத்தை வெளியிட்டு வருகிறது.

**33.** மலைநாடு

சுங்கை சிப்புட் சங்கநதிச் செல்வர் பெரியவர் வீ. மீனாட்சிசுந்தரத்தால் 14.1.1959இல் வார இதழாய்த் தொடங்கிய இவ் வேடு, 1965ஆம் ஆண்டுமுதல் நாளிதழாய்ப் பெட்டாலிங் ஜெயாவிலிருந்து வெளியிடப்பட்டது. 1964ஆம் ஆண்டுவரை இது வெளிவந்தது. பெரியவர் மீனாட்சிசுந்தரம், கூட்டுறவுத் தந்தை துன் வீ. தி. சம்பந்தனாரின் அண்ணன்.

**34.** மலைமகள்

அ. மு. சு. பெரியசாமியைச் சிறப்பாசிரியராயும், ஜி. சி. இளங்கோவனைப் பொறுப்பாசிரியராயும்கொண்டு 1958ஆம் ஆண்டில் ஈப்போ நகரிலிருந்து வெளிவந்த மாத இதழ். பல ஆண்டுகள் தொடர்ந்து சிறப்புடன் வெளிவந்த இது, நல்ல எழுத்தாளர் பலர் உருவாகக் களமாய் விளங்கியது.

குறிப்பு : வி. ச. முத்தையாவை ஆசிரியராய்க்கொண்டு 1956ஆம் ஆண்டிலிருந்து இதே பெயரில் ஒருவார வெளியீடு வந்துள்ளது.

**35.** மாதவி

கவிவாணர் ஐ. உலகநாதனை ஆசிரியராய்க்கொண்டு 1959முதல் வெளிவந்த இது, 1963ஆம் ஆண்டுவரை நடைபோட்டது. விருத்தப் போட்டி நடத்திக் கவிதைத் துறையை வளர்த்த இவ் விதழ், பல நல்ல இளங்கவிஞர்கள் உருவாகக் களமாய் விளங்கியது. இவ் விதழில் எழுதிப் பயின்றோரும் வாசகரும் சேர்ந்து அமைத்த மாதவி இலக்கிய மன்றம் கவிஞர் மலர்மாணிக்கம் தலைமையில் இன்றும் இயங்கிவருகிறது.

**36.** முத்தமிழ்

கவிஞர் டி. வி. இராகவன் பிள்ளையை ஆசிரியராய்க்கொண்டு 1969ஆம் ஆண்டுமுதல் 1974வரை கோலாலம்பூரிலிருந்து வெளிவந்த மாத இதழ். இதன் காப்பாளராய் இருந்தவர் நாடகவேள் ஆழி. அருள்தாசன்.

**37.** முன்னேற்றம்

ஆர். வெற்றிவேலை ஆசிரியராய்க்கொண்டு 1955ஆம் ஆண்டில் சிங்கப்பூரிலிருந்து வெளிவந்த மாத இதழ்.

**38.** முஸ்லிம் முரசு

1948ஆம் ஆண்டுமுதல் தமிழ்நாட்டின் தலைநகராய சென்னையிலிருந்து வெளிவந்து கொண்டிருக்கும் மாத ஏடு. அப்துல் ரஹீமால் தொடங்கப்பெற்ற இந்த ஏட்டில், நம் காலத்தில்

பல அரிய காவியங்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியராய செய்யது முஹம்மது ஹஸன் ஆசிரியர் பொறுப்பில் இருந்தார். பின்னர் இதன் உரிமையாளராய ஆளுர் ஜலால் ஆசிரியர் பொறுப்பையும் ஏற்றார். அன்னார் மறைவுக்குப்பின் (1996) அவர் குடும்பத்தினர் இவ் வேட்டை நடத்திவருகின்றனர். இத் தமிழக ஏடு 1987இல் மலேசியச் சிறப்பிதழ் ஒன்றை வெளியிட்டது.

**39.** வானம்பாடி

1977ஆம் ஆண்டில் அப்துல் காதரை உரிமையாளராயும் ஆதி. குமணனை ஆசிரியராயும்கொண்டு வெளிவரத் தொடங்கிய இவ் விதழ் விற்பனைக் குறியளவை எட்டிப்பிடித்து மலேசியத் தமிழ் இதழ்த் துறை (பத்திரிகை) உலகில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது; தொடர்ந்து வெற்றியொடு நடைபோட்டுவருகிறது. இந் நாட்டில் உரைவீச்சு (புதுக்கவிதை)த் துறையை வளர்த்ததில் இதற்குத் தலையாய இடம் உண்டு. இதன் இன்றைய உரிமையாளர் டாக்டர் பழநியப்பன். இதன் ஆசிரியராய் நீண்ட காலம் பணிபுரிந்தவர் பாலு; இப்போதைய ஆசிரியர் தேவா.

**40.** ஜனோபகாரி

பிச்சைப்பிள்ளையை ஆசிரியராய்க்கொண்டு 1948ஆம் ஆண்டில் அப்போதைய மலாயா அரசாங்கத் தகவல் துறையின் வெளியீடாய் வெளிவந்த இந்த இதழில், பின்னர்ச் செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமி ஆசிரியராய்ப் பணியாற்றினார். இவர் காலத்தில் கவிஞர் கா. பெருமாள், எழுத்தாளர் சி. கோன் போன்ற முன்னோடி எழுத்தாளர் பலர் இதனில் எழுதினர்.

**41.** ஜெயபேரிகை

இ. ஜே. சான்சனை ஆசிரியராய்க்கொண்டு 1966ஆம் ஆண்டுமுதல் குவாந்தானிலிருந்து வெளிவந்த மாத இதழ்.

குறிப்பு : இதே பெயரில் சிங்கையிலிருந்து ஒரு மாத இதழ் வெளிவந்ததாய் அறியமுடிகிறது.

## இ. சிறப்பு மலர்கள்

**1.** அகில மலாயாத் தமிழர் சங்கச் சிறப்பு மலர் **(1962)**

மலாயாத் தமிழரிடையே பெருஞ்செல்வாக்குப் பெற்றிருந்ததும் ஊர்தோறும் தமிழர் திருநாளை அயராமல் நடத்திவந்ததுமாய அகில மலாயாத் தமிழர் சங்கம், 1962ஆம் ஆண்டில் கிள்ளானில் நடத்திய 4ஆம் பேராளர் மாநாட்டையொட்டி ஒரு சிறப்புமலரை வெளியிட்டது. அ.ம.த.ச. கிள்ளான் கிளையின் தொடக்கம்முதல் செயலாளராய்ப் பொறுப்பு வகித்துவந்தவரும் பேராளர் மாநாட்டின் செயலாளருமாகிய க. இரா. இளஞ்செழியன் பொறுப்பாசிரியராய் இருந்து உருவாக்கிய அந்த மலரில் அன்றைய மலாயாத் தமிழர்கள்பற்றிய தகவல்கள் நிறைய உள்ளன.

**2.** அப்பர் தமிழ் உயர்நிலைப்பள்ளித் திறப்புவிழாச் சிறப்பு மலர் **(91)**

மலேசியத் திருநாட்டில் அமைந்த ஒரே தமிழ் உயர்நிலைப்பள்ளியாய கோலாலம்பூர் அப்பர் தமிழ் உயர்நிலைப் பள்ளியின் சிறப்பு மலராய இது 6.9.1958இல் வெளிவந்தது. கோலாலம்பூர் அருள்மிகு மகாமாரியம்மன் கோயில் தேவஸ்தானத்தின் முயற்சியால் அமைந்த இப் பள்ளி, இப்போது தேசிய மாதிரித் தொடக்கத் தமிழ்ப்பள்ளியாய் இயங்கிவருகிறது.

**3. ஆசிரிய தீபம்**
கல்வித்துறை அறிஞர் இரா. சுப்பிரமணியத்தை முதல்வராய்க் கொண்டிருந்த தமிழாசிரியர்க்காய விடுமுறைகாலப் பயிற்சி வகுப்பு (S.R.T.) 5ஆம் சிறப்பு மலர். (1975/76) 1970/71-லிருந்து ஒவ்வோரணியினரும் (பேஜ்) ஒரு மலரென்ற முறையில் வெளியிட்டு வந்தனர். முதல்வரின் கருத்துக்கிணங்கச் செலவை ஈடுகட்ட வேண்டும் என்ற நோக்கிலோ, ஆதாயம் கருதியோ விளம்பரம் எதுவும் வேண்டாது மாணவரே தம் சொந்தப் பொறுப்பில் இக் கல்விமலரை வெளியிட்டுவந்தனர். முரசு. நெடுமாறன், இராமநாதன் ஆகியோரை ஆசிரியராய்க்கொண்ட இம் மலரைத் தொடக்கமுதல் மலர்க் குழுவிற்குத் தகவுரைஞராய் விளங்கி அழகுற அச்சிடும் பொறுப்பேற்று வந்த முன்னாள் பகுதிநேர விரிவுரையாளர் ஆ.சோதிநாதன் முன்னின்று உருவாக்கி அருளினார். ஆசிரிய தீபம் பத்து மலர்வரை வெளிவந்துள்ளது.

**4. ஆறாம் மாணவர் பண்பாட்டு விழா மலர்**
தமிழ்நெறி மன்றம் 8.7.1984இல் 'எழுச்சியை நோக்கி' என்னும் கருப்பொருளில் 6ஆம் மாணவர் பண்பாட்டு விழா நடத்தியது. மலேசியத் தமிழர் வரலாற்று நிகழ்வுகளை நினைவூட்டிய அவ் விழாவையொட்டி வெளியிடப்பெற்ற சிறப்பு மலர். மலர்க்குழுத் தலைவர் ப. பாலகிருஷ்ணன்.

**5. உமறுபுலவர் தமிழ் உயர்நிலைப்பள்ளி வெள்ளிவிழா மலர்**
சிங்கப்பூரில் ஒரே தமிழ் உயர்நிலைப்பள்ளியாய் இருந்த உமறுபுலவர் தமிழ் உயர்நிலைப் பள்ளி, வெள்ளிவிழாக் கண்டபோது வெளியிடப்பெற்ற சிறப்பு மலர்.

**6. உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டு மலர் (மலேசியா, 1987)**
மலேசியத் தலைநகர் கோலாலம்பூரில் நடைபெற்ற 6ஆம் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டையொட்டி மலேசியாவிலிருந்து வெளியிடப்பெற்ற சிறப்பு மலர். முனைவர் தேவபூபதி நடராசா தலைமையில் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல்துறை விரிவுரையாளர்கள் பொறுப்பில் மலர் உருவானது.

**7. உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாட்டு மலர்**
உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்க ஏற்பாட்டில் இர. ந. வீரப்பன் தலைமையில் 29, 30, 31.8.1987இல் நடைபெற்ற 4ஆம் உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாட்டையொட்டி வெளியிடப்பெற்ற சிறப்பு மலர்.

**8. எட்டாம் மாணவர் பண்பாட்டு விழா மலர்**
தமிழ்நெறி மன்றம், 29.6.1986இல் கிள்ளான் அம்சா அரங்கில் (Dewan Hamzah) நடத்திய 8ஆம் மாணவர் பண்பாட்டு விழாவையொட்டி வெளியிட்ட சிறப்பு மலர். மலர்க் குழுத் தலைவர் மு. நெ. முத்தெழிலன்.

**9. ஐந்தாம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு (மலேசியா) மலர்**
1981ஆம் ஆண்டில் மதுரையில் நடைபெற்ற 5ஆம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டை யொட்டி மலேசியாவிலுள்ள தமிழ் இலக்கியக் கழகம், வெளியிட்ட ஒரு சிறப்பு மலர்.

**10. கோலாலம்பூர் அருள்மிகு மகாமாரியம்மன் கோயில் குடமுழுக்கு விழா மலர்**
1873இல் அமைக்கப்பட்ட கோலாலம்பூர் மகாமாரியம்மன் கோயிலைப் புதுப்பித்துக் குடமுழுக்கு விழா நடத்தியபோது வெளியிடப்பெற்ற சிறப்பு மலர்.

**11.** சங்கமணி மேதின மலர்கள் (1956, 1972)

தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்க வார இதழாய சங்கமணி, மேதினத்தையொட்டி 1956ஆம், 1972ஆம் ஆண்டுகளில் வெளியிட்ட சிறப்பு மலர்கள்.

**12.** சங்கமணி வெள்ளிவிழா மலர் (1978)

தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்க வெளியீடாய சங்கமணி, 25ஆம் ஆண்டு நிறைவையொட்டி வெளியிட்ட வெள்ளிவிழா மலர்.

**13.** சிங்கப்பூர் இந்து சபை - தமிழ்ப் புத்தாண்டு மலர்

சிங்கப்பூர் இந்து சபை, 1957ஆம் ஆண்டில் தமிழ்ப் புத்தாண்டை ஒட்டி வெளியிட்ட சிறப்பு மலர்

**14.** சுவாமி இராமதாசர் மணிவிழா மலர்

பினாங்குச் செந்தமிழ்க் கலாநிலைய நிறுவனரும் அதன் தலைவருமாகிய முதுபெரும் தமிழ்ப் புலவர் சுவாமி இராமதாசர் அறுபதாம் ஆண்டு மணிவிழா 16.9.1977இல் கொண்டாடப்பெற்றது. அதனையொட்டி வெளியிடப்பெற்ற சிறப்பு மலர்.

**15.** செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமி கருத்தரங்க மலர்

செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமியின் பல்வேறு துறைத் தொண்டுகளை மதிப்பிட்டு உணரவும் பாராட்டவும் பொன்னி ந. தியாகராசனைத் தலைவராய்க் கொண்டிருந்த தமிழ் இலக்கியக் கழகத்தால் ஒரு கருத்தரங்கம், 20.8.1972இல் நடத்தப்பெற்றது. அதனையொட்டி வெளியிட்ட ஒரு சிறப்பு மலர். மலர் ஆசிரியர் கா. திருவேங்கடம்.

**16.** தமிழ் ஒளி (1973-74)

மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவையின் ஆண்டு வெளியீடு. 1959 முதல் ஆண்டுதோறும் (ஒருசில ஆண்டுகள் விடுபட்டுள்ளன) வெளிவந்து கொண்டிருக்கிறது.

**17.** தமிழ்க்குயில் - தமிழர்நிலை விளக்கும் சிறப்பிதழ்

கா. கலியபெருமாளை ஆசிரியராய்க்கொண்டு ஈப்போவிலிருந்து வெளிவந்த 'தமிழ்க்குயில்' திங்களேட்டின் (1967) சிறப்புமலர். இம் மலரில் மலேசியத் தமிழரின் நிலைகுறித்த பல்வேறு செய்திகளடங்கிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

**18.** தமிழ்நேசன் மெர்டேக்கா மலர் (1967)

நாடு விடுதலைபெற்ற 10ஆம் ஆண்டின் நினைவாய்த் தமிழ்நேசன் நாளேடு வெளியிட்ட ஒரு சிறப்பு மலர்.

**19.** மகாத்மா காந்தி நூற்றாண்டுச் சிறப்பு மலர்

இந்தியாவின் விடுதலைத் தந்தையாய மகாத்மா காந்தியடிகளின் நூற்றாண்டுச் சிறப்பு மலராய இதனைத் தொகுத்து வெளியிட்டவர் என். முகமது அலி. இம் மலர் 1969இல் மலேசியாவில் வெளிவந்ததாகும்.

**20.** மலேசியத் தமிழர் மாநாட்டு மலர் (1968)

மலேசியத் தமிழரிடையே பெருஞ்செல்வாக்குப் பெற்றிருந்த அகில மலாயாத் தமிழர் சங்கம், பதிவுநீக்கம் செய்யப்பெற்ற பின்னர், மலாயாத் தமிழர்களிடையே மீண்டும் ஒருங்கிணைப்பை ஏற்படுத்தும் நோக்கத்தொடு கீழ்ப் பேராத் தமிழர் சங்க ஏற்பாட்டில்

பல்வேறு இயக்கங்களின் ஒத்துழைப்பொடு 19-21.4.1968இல் தெலுக்கான்சன் (தெலுக் இந்தான்) நகரில் மலேசியத் தமிழர் மாநாடு இராம. ந. நடேசப் பிள்ளை தலைமையில் நடந்தது. அதனையொட்டி இச் சிறப்பு மலர் வெளியிடப்பெற்றது. மலர் வெளியீட்டுப் பொறுப்பாளர் சு. வை. லிங்கம்.

**21. மலேசியத் தமிழர் மாநாட்டு மலர் (1978)**

தமிழ் இலக்கியக் கழகத்தின் ஏற்பாட்டில் 1978இல் மலேசியத் தமிழர் மாநாடு நடத்தப்பெற்றது. பல இயக்கங்களும் தனிப் பேராளர்களும் பங்குகொண்ட அம் மாநாட்டையொட்டி வெளியிடப்பெற்ற சிறப்பு மலர்.

**22. மலேசியத் தமிழ் எழுத்தாளர் இரண்டாம் தேசிய மாநாட்டு மலர்**

24, 25.11.1984ஆம் ஆண்டு கோலாலம்பூரில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் 2ஆம் தேசிய மாநாடு பொன் ஜேக்கப் தலைமையில் நடந்தது. 'மலேசியத் தமிழர்கள் ஒருநூற்றாண்டு' என்னும் கருப்பொருளில் நடந்த அம் மாநாட்டையொட்டி வெளியிடப்பெற்ற சிறப்பு மலர்.

**23. முதலாம் தமிழ்க் கல்விவளர்ச்சி மாநாட்டு மலர் (1975)**

நாட்டில் தமிழ்ப்பள்ளிகளே தேவையில்லை என்றும் தேசியப் பள்ளிகளில் தமிழ் ஒரு கட்டாயப் பாடமாகமட்டும் இருந்தால் போதும் என்றும் மலாயாப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் விரிவுரையாளர் முனைவர் இராம. சுப்பையா கொண்டுவந்த திட்டத்தைச் சமுதாயம் புறக்கணித்தது. பின்னர் உலகத் தொழிற்சங்கப் பேரவைத் (International Labour Organisation) தலைவரும் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளருமாய டாக்டர் பி. பி. நாராயணன் ஒரு திட்டத்தைக் கொண்டுவந்தார் (1974). தமிழ்ப்பள்ளிகளில் மூன்றாம் வகுப்பிற்குமேல் தமிழ்மொழியைத் தவிர்த்த அனைத்துப் பாடங்களும் தேசிய மொழியிலேயே நடைபெற வேண்டும் என்பதே அத் திட்டமாகும். அத் திட்டம் தமிழ்ப் பள்ளிகளின் தோற்றத்தையே முற்றாக மாற்றித் தமிழ்க்கல்விக்கு ஊறு விளைவித்துவிடும் என உணர்ந்த சமுதாயம் அதனைக் கடுமையாய் எதிர்த்தது. இப்படிப் பொங்கிய சமுதாய உணர்வுகளை ஒருங்கிணைக்கவும், தமிழ்ப்பள்ளிகளின் நிலைத்தன்மைக்கு உறுதியாய முடிவெடுக்கவும் தமிழிலக்கியக் கழகத்தால் முதலாம் தமிழ்க்கல்வி வளர்ச்சி மாநாடு, 19, 20.4.1975இல் கிள்ளான் உயர்நிலைப்பள்ளி மண்டபத்தில் கூட்டப்பெற்றது. அப்போது வெளியிடப்பெற்றது இம் மலர். தமிழிலக்கியக் கழகத்தால் தொடர்ந்து 1977, 1979, 1982, 1995ஆம் ஆண்டுகளில் தமிழ்க்கல்வி வளர்ச்சி மாநாடுகள் கூட்டப்பெற்றன. இம் மாநாடுகளுக்கு மூலவர் இப்போதைய தமிழிலக்கியக் கழகத் தலைவரும் உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கத் தலைவருமாய இர. ந. வீரப்பன். ந. தியாகராசன் (தமிழ் இலக்கியக் கழக முன்னாள் தலைவர்), கி. இரமேசன், முரசு. நெடுமாறன், க. இரா. இளஞ்செழியன், க. பொன்னுதுரை, சா. ப. சாமி, ந. குப்புசாமி முதலாயோரும் கல்வித்துறை சார்ந்த நல்லார் சிலரும் மாநாடுகளின் வெற்றிக்கு அடித்தளமாய் விளங்கினர்.

**24. முதலாம் மலேசியத் தமிழ்க் கலைஞர் மாநாடு (1976)**

சு. வை. லிங்கம் ஏற்பாட்டில் மலேசியாவில் தமிழ்க்கலை வளர்த்துவரும் நடிகர்கள், பாடகர்கள், நடனமணிகள், இசைஞர்கள் முதலாய கலைஞர்களை ஒன்றாய்க் கூட்டி, மலேசியத் தமிழ்க் கலைஞர் மாநாடு நடத்தப்பெற்றது. இஃது அதனையொட்டி வெளியிடப்பட்ட ஒரு சிறப்பு மலர்.

# ஈ. அமைப்புகள்

## 1. சிங்கப்பூர் வானொலி

மலேசியாவிலிருந்து சிங்கப்பூர் பிரிந்தபின் (1965) சிங்கப்பூர் வானொலி தனி நிறுவனமாயது. மலேசியா, சிங்கப்பூர் இரண்டற்கும் தலைவராய் விளங்கிய பி. எஸ். இராமன், சிங்கை ஒலிபரப்புத் துறைக்குத் தலைவரானார். அவருக்குப்பின் அ. முருகையன் தலைவரானார். நல்ல தமிழறிஞராய இவர், இலக்கிய நிகழ்ச்சிகளுக்கும் உள்ளூர் இசைப்பாடல்களுக்கும் முதன்மை வழங்கினார். கல்வி ஒலிபரப்பு என்று தனியே ஒரு துறை இல்லாததால் தரமான சிறுவர் நிகழ்ச்சிகளும் சிங்கப்பூர் வானொலியில் இடம்பெற்று வருகின்றன. அ. முருகையன் ஓய்வுபெற்றபின் எம். கே. நாராயணன் தலைவரானார். இவர் ஆற்றியுள்ள பணிகளில் குறிப்பிடத்தக்கது, மகாபாரதத்தை முழுமையாய்த் தாமே நாடகமாய் எழுதி உருவாக்கி, (64 மணி நேரம்) 64 வாரங்கள் ஒலிபரப்பியதாகும். இதன் இப்போதைய தலைவர் பால பத்மநாபன்.

## 2. மலேசிய இந்தியர் காங்கிரசு

417, 581 ஆகிய பாடல்களின் குறிப்புரைகள் காண்க.

## 3. மலேசியக் கல்வி ஒலிபரப்பு

தொடக்க இடைநிலைப்பள்ளி மாணவர்க்கு உதவும் நோக்கத்தில் 1966ஆம் ஆண்டில் மலேசியக் கல்வி ஒலிபரப்புத் துறை தொடங்கியது. அதன் தமிழ்ப் பகுதிக்குச் சியாம கிருஷ்ணன் (தலைவர்), நாராயணன், திருமதி சரஸ்வதி சியாம கிருஷ்ணன் ஆகியோர் அதிகாரிகளாய்ப் பொறுப்பேற்றனர். வகுப்பறையில் ஆசிரியர்களுக்கு உதவும்வண்ணம் மிகவும் நுட்பம் வாய்ந்த முறையில் பாடங்கள் ஒலிபரப்பப்பட்டன. குறிப்பாய்த் தமிழ்ப்பகுதியில் முதலாம் வகுப்புமுதல் ஆறாம் வகுப்புவரையிலான மாணவர்க்கு ஒலிபரப்பப்பெற்ற 'இசை பயிலுவோம், பாட்டு வேளை' முதலாய நிகழ்ச்சிகள் பெரும் வரவேற்பையும் பாராட்டையும் பெற்றன. பல இனிய இசைக்கருவிகளின் பின்னணியுடன் ஒலிபரப்பாய பாடல்களில் 95 விழுக்காட்டிற்குமேல் உள்நாட்டுக் கவிஞர்கள் எழுதிய பாடல்கள் என்பதும் ஆயிரக்கணக்காய பாடல்கள் ஒலியேறி மலேசியச் சிறுவர் இலக்கியத் துறைக்கு ஒரு பொலிவை ஏற்படுத்தியுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கன. இத் துறை, 3, 5ஆம் படிவ மாணவர்களுக்குத் தமிழ்மொழியில் பாடங்களையும், 5ஆம் படிவ மாணவர்க்கு இலக்கியப் பாடங்களையும் (சில ஆண்டுகளுக்கு முன்பு இது நிறுத்தப்பட்டது) ஒலிபரப்பியது. வி. சியாம கிருஷ்ணன் மலேசிய வானொலிக்கு மாற்றப்பெற்றபின் நாராயணன் தலைவரானார். அவருக்குப்பின் தலைமைப் பொறுப்பேற்ற கு. மாமுண்டி காலத்தில் இத் துறை வலிவும் பொலிவும் பெற்றதொடு புதிய பாடத்திட்டம் நடைமுறைக்கு (1982) வரத்தொடங்கியது; புதிய பாடத்திட்ட நுட்பங்களுக்கேற்பப் பாடங்களை உருவாக்கி யளிக்கும் பணியில் கு. மாமுண்டி அவர்கள் மேற்கொண்ட முயற்சியும் கடும் உழைப்பும் கல்வி உலகின் பெரும் பாராட்டைப்பெற்றன. அப் பெருமகனார் மறைவிற்குப் பின் (1988) கு. பவித்திரன், இப் பகுதித் தலைமையையேற்றார். அவருடன் நல்லமுத்து (1-6-1992இல் மறைவெய்தினார்), ஆரோக்கியசாமி ஆகியோர் நன்முறையில் தொண்டாற்றினர். இத் துறையில் திறம்படப் பணியாற்றியவர்களுள் திருமதி சரஸ்வதி சியாம கிருஷ்ணன் (மலேசிய வானொலி), எம். பெரியசாமி, எம். பத்துமலை, பி. கே. சாமி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் ஆவர். இதன் இப்போதைய தமிழ்ப்பகுதித் தலைவர் ஆ. ஆரோக்கியசாமி.

**4. மலேசிய வானொலி**

சப்பானியர் தம் ஆட்சிக் காலத்தில் 'JMBK' என்னும் பெயரால் இந் நாட்டில் ஒலிபரப்பு நடத்தினர். அதன் இந்தியப் பகுதியின் பொறுப்பாளாராய் இருந்தவர் தமிழறிஞர் தி. சு. சண்முகம். சப்பானியர் சரணடைந்தபின் (1945) ஆங்கிலேய அரசு, தகவல்துறையுடன் இணைத்து மலாயா வானொலி ஒலிபரப்பை விரிவுபடுத்தியது. அப்போது இந்தியப் பகுதியின் தலைமைப் பொறுப்பை ஏற்றவர் தஞ்சை எஸ். தாமஸ். அப்போது ஒலிப்பதிவுமுறை இல்லாமையால் இசைத்தட்டுகள் தவிர்த்த அனைத்து நிகழ்ச்சிகளும் நேரடி ஒலிபரப்பாகவே அமைந்தன. தஞ்சை எஸ். தாமசுக்குப்பின் டி. டி. நாயடு தலைவரானார். நல்ல தமிழார்வலராய இவர், மொழித்தூய்மை பேணுவதில் முன்னோடியாய் விளங்கினார். நெருக்கடிநிலையின்போது, (அவசரகாலம் 1948-60) அதுதொடர்பாய்த் தனிப்பகுதி அமைக்கப்பட்டு அப் பகுதிக்கு எம். எஸ். சுவாமிநாதன், ஏ. ஆர். ஐயர், எஸ். இராமச்சந்திரன் ஆகியோர் அதிகாரிகளாயினர். பின்னர் ஏ. ஆர். ஐயர் இந்தியப் பகுதிக்குத் தலைவரானார். மலாயா வானொலியின் தலைமையகம் அப்போது சிங்கப்பூரில் இருந்தது. அதனைத் தொடக்க காலத்தில் ஐசக், ஏ. ஆர். பொன்னையா ஆகியோர் அதிகாரிகளாய் இருந்து நடத்தினர். அதன் பின்னர் பி. எஸ். இராமன் என்பவர் (சிங்கப்பூர் - மலாயா இரண்டற்கும்) தலைவரானார். இவர் காலத்தில்தான், இலக்கியம், தமிழிசை, கருநாடக இசை, (செவ்விசை) கவிதை, நாடகங்கள், சிறப்பு விளக்கங்கள், கிராமியக் கலைகள் முதலாயவற்றுக்கு முதன்மை வழங்கப்பெற்றது.

மலேசியாவிலிருந்து சிங்கப்பூர் பிரிந்தபின் மலேசிய வானொலி இந்தியப் பகுதிக்கு இடைக்காலத் தலைவராய எஸ். இராமச்சந்திரன் பொறுப்புவகித்தார். குறுகிய காலத்திற்குப்பின் இரா. பாலகிருஷ்ணன் தலைமையேற்றார். இவரது காலம் மலேசிய வானொலி இந்தியப் பகுதி வரலாற்றில் ஒரு பொற்காலம் எனலாம். திறமை வாய்ந்த பொருத்தமான பலரை வேலைக்கமர்த்திக் கூடுமானவரை தூய தமிழில் ஒலிபரப்பை நிகழ்த்தி, பாமரர்முதல் பண்டிதர்வரை ஒலிபரப்பைச் சுவைத்து மகிழும் அளவிற்கு அனைத்துக் கலைகளையும் வானொலியில் இடம்பெறச்செய்தார். குறிப்பாகக் கவிதை, இலக்கிய, இதிகாச, சமூக, தத்துவ, தரமான நகைச்சுவை நாடகங்கள், வில்லுப்பாட்டு, கதாகாலட்சேபம், உள்ளூர்க் கவிஞர்கள் இயற்றிய பாடல்கள், கவியரங்கம், கருத்தரங்கம் நடத்தியதொடு, பொதுமேடையில் வானொலி விழா நடத்தி அதனை நேரடி ஒலிபரப்பாயும் ஒலியேறச் செய்தார். அவருக்குப்பின் அவர் காலத்தில் அவருக்குப் பல்லாற்றானும் உதவியாய் உடனிருந்து வானொலி நிகழ்ச்சிகளை மேம்படுத்திய கே. எம். ஹனீப் தலைவரானார். இவர் காலத்தில் மொழிவாரியான பகுதிகள் நீக்கப்பட்டுப் பல்வேறு மொழிகள் இணைந்த அலகுமுறை (யூனிட்) ஏற்படுத்தப்பட்டது. அப்போது தமிழர் நிகழ்ச்சிகளுக்காய பொறுப்பதிகாரியாய் அப்பாதுரை பொறுப்பேற்றார். அப்பாதுரைக்குப் பின் கணபதி பொறுப்பேற்றார். இப்போது வீ. பூபாலன் அப் பொறுப்பை வகிக்கிறார்.

# 4. நூலடைவு

## (அ) 1887 முதல் 1987 வரை மலேசியாவில் வெளிவந்த தமிழ்க் கவிதை/பாட்டு நூல்கள்

| எண் | நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|---|
| 1. | வண்ணை அந்தாதி | சி. ந. சதாசிவ பண்டிதர் | 1887 | அந்தாதி |
| 2. | வண்ணைநகர் ஊஞ்சல் | சி. ந. சதாசிவ பண்டிதர் | 1887 | அந்தாதி |
| 3. | சிங்கைநகர் அந்தாதி | சி. ந. சதாசிவ பண்டிதர் | 1887 | அந்தாதி |
| 4. | சித்திரகவிகள் | சி. ந. சதாசிவ பண்டிதர் | 1887 | சித்திரகவிகள் |
| 5. | பதானந்த மாலை | முகமது சுல்தான் மரைக்காயர் | 1890 | பேரின்பப் பாமாலை |
| 6. | மன்மதன் திவ்விய சரித்திர அதியுல்லாச சல்லாப லாவணி | வே. ஆ. பொன்னுசாமிப் பிள்ளை | 1893 | இலாவணி |
| 7. | அதிவிநோதக் குதிரைப் பந்தய லாவணி | நா. வ. இரங்கசாமிதாசன் | 1893 | இலாவணி |
| 8. | சீறாச் சதகம் | முகமது சுல்தான் மரைக்காயர் | 1900 | சதகம் |
| 9. | முருகவேள் பஞ்சரத்தினப் பாமாலை | | 1928 | பத்திப் பாடல்கள் |
| 10. | தண்ணீர்மலை சிவசண்முகநாதனின் பக்திரசக் கீர்த்தனை | | 1929 | கீர்த்தனை |
| 11. | பங்குனி உத்திரச் சிந்து | எம். பி. சிவராமதாசர் | 1929 | சிந்து |
| 12. | பினாங்கு தண்ணீர்மலை முருகன் ஆடுமயில் பாடல்கள் | சுவாமி அருணகிரிநாதன் | 1931 | பத்திப் பாடல்கள் |
| 13. | இந்தியக் கற்பரசி | அறப்ஷா | 1931 | |
| 14. | நாச்சியார்புரம் நாச்சியாரம்மன் தோத்திரப் பதிகம் | கூத்தனூர் இராமையா/ இராமநாத செட்டியார் | 1932 | பத்திப் பாடல்கள் |
| 15. | பினாங்குநகரில் திருக்கோயில் கொண்டருளும் ஸ்ரீ மார்க்கண்டேசுவரர் மங்களாம்பிகை தோத்திரப் பதிகங்கள் | கூத்தனூர் இராமையா/ இராமநாத செட்டியார் | 1932 | பத்திப் பாடல்கள் |

| எண் நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|
| 16. மலேயா நாட்டில் வெள்ளத்தால் விளைந்த சேதம் | சொக்கலிங்க தேசிகர் | 1932 | விபத்தின் சிந்து |
| 17. பினாங்கு ஆயர் ஈத்தாம் வெள்ளச்சேதம் | நாகலிங்கம் பிள்ளை | 1932 | விபரீத விளக்கச் சிந்து |
| 18. ஜாலான் பாரு முனியாண்டி திருவிளையாடல் | சொ. த. பரமசிவம் | 1933 | மருத்துவச் சிந்து |
| 19. நமற்கார நவீன நாகரிக நவரசக் கீர்த்தனைகள் | கே. கிருஷ்ணன் | 1933 | கீர்த்தனை |
| 20. மலாயாத் தற்காலச் சிந்து | டி. பி. கே. ராஜ் | 1934 | சிந்து |
| 21. சமத்துவ கீத மஞ்சரி | பெ. மாயாவிசாமி | 1935 | பாடல் தொகுப்பு |
| 22. பாரத சமதர்ம கீதம் | கோ. மு. கிருஷ்ணன் | 1935 | இசைப்பாடல் |
| 23. கலிகால பசார் சிந்து | வெங்கடாசல உபாத்தியாயர் | 1936 | சிந்து |
| 24. கோலாலம்பூர்ப் பத்துமலை சக்தி வடிவேல் பேரில் காவடி அலங்கார ஆசிரிய விருத்தம் | எஸ். கணபதி | 1936 | விருத்தப்பாக்கள் |
| 25. கிறிஸ்துமஸ் புதுவருடப் பாடல்கள் | | 1936/39 | இசைப்பாடல்கள் |
| 26. பத்துமலைக் கந்தசாமி பேரில் பக்திரசக் கீர்த்தனங்களும் பதிகங்களும் | மூ. வே. செல்லைய பண்டிதர் | 1937 | பத்திப் பாடல்கள் |
| 27. நவரச ஆனந்தச் சீர்திருத்தக் கீத மலர் | ப. ஆறுமுகம் | 1939 | இசைப்பாடல்கள் |
| 28. பினாங்கு ஜெனரல் ஆஸ்பத்திரியில் வீரையா செய்த பரிதாபக் கொலைச் சிந்து | | 1941 | சிந்து |
| 29. ஜெய சிந்து | ஆர். ஆர். வீரையா | 1942/45 | சிந்து |
| 30. மாட்சிமை தங்கிய நிப்பானியர் மலாயாவில் யுத்தம் புரிந்து ஜெயம் அடைந்த வெற்றிமாலை | கே. என். முத்துசாமி | 1942/45 | போற்றிப்பாக்கள் |
| 31. நிப்பானியரின் வெற்றிக் கீர்த்தனை | எஸ். பாக்கியசாமி | 1942/45 | போற்றிப்பாக்கள் |
| 32. மறுமலர்ச்சிப் பாடல்கள் | கிருஷ்ணன் | 1945 | தனிப்பாடல்கள் |
| 33. இஸ்லாமிய ஞானச்சுடர் | முகமது யூசுப் பாவலர் | 1947 | பேரின்பப் பாடல்கள் |
| 34. கவிதை மலர்கள் | ந. பழநிவேல் | 1947 | தனிப்பாடல்கள் |
| 35. கவிதைத் திரட்டு | மு. வே. தில்லைமுகம் | 1960 | பல கவிஞர்களின் பாடல் திரட்டு |

| எண் நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|
| 36. முழுநிலா | மு. கந்தன் | 1960 | குழந்தைப் பாடல்கள் |
| 37. இதய ஓசை | சிங்கை முகிலன் | 1960 | தனிப்பாடல்கள் |
| 38. கத்திக்கப்பல் | கவி மதிதாசன் | 1960 | சிறுவர் பாடல்கள் |
| 39. ஸ்ரீ மரத்தாண்டவர் வருகைப் பதிகமும் காவடிச் சிந்தும் | வே. இராமநாதன் செட்டியார் | 1961 | காவடிச் சிந்து |
| 40. இதயத் தாமரை | எஸ். எம். ஜைனுத்தீன் | 1961 | தனிப்பாடல்கள் |
| 41. பூஞ்சிட்டு (தொகுப்பு) | ா. இராமகிருட்டினன், பொன்முடி | 1965 | சிறுவர் பாடல்கள் |
| 42. மலாயாவில் தமிழ்க் கவிதைகள் | பரிதாமணாளன் (தொகுப்பாளர்) | 1962 | 40 கவிஞர்களின் பாடல் தொகுப்பு |
| 43. இஸ்லாமிய இசைப்பாடல்கள் | கன்னல்கவி ந. கரீம் | 1962 | இசைப்பாடல்கள் |
| 44. அன்பு அன்னை | மு. துரைசாமி | 1963 | |
| 45. தேனீயைப் பார் | சி. வேலுசுவாமி | 1964 | சிறுவர் பாடல்கள் |
| 46. மலேசியப் பேரொலி | இரா. பெருமாள் | 1964 | நாட்டுப்பற்றுப் பாடல்கள் |
| 47. இன்ப ம்லேசியா | மறைமுடி வல்லத்தரசு | 1964 | நாட்டுப்பற்றுப் பாடல்கள் |
| 48. நாட்டைக் காப்போம் | | 1964 | நாட்டுப் பற்றுப் பாடல்கள் |
| 49. உரிமை முழக்கம் | சுவாமி இராமதாசர் | 1964 | நாட்டுப்பற்றுப் பாடல்கள் |
| 50. போர் முழக்கம் | இரா. பெருமாள் | 1965 | நாட்டுப்பற்றுப் பாடல்கள் |
| 51. செந்நெறிப் பாமாலை | நாச்சிகுளத்தார் | 1966 | அறநெறிப் பாடல்கள் |
| 52. செந்நெறிச்சாரம் | நாச்சிகுளத்தார் | 1966 | அறநெறிப் பாடல்கள் |

| எண் நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|
| 53. சந்தனக்கிண்ணம் | ஐ. உலகநாதன் | 1966 | தனிப்பாடல்கள் |
| 54. இசைக் கவிதைகள் | புனிதவதி மகேசன் | 1966 | இசைப்பாடல்கள் |
| 55. இன்பரசன் கவிதைகள் | இன்பரசன் | 1966 | தனிப்பாடல்கள் |
| 56. செந்துறை வெண்பா | நாச்சிகுளத்தார் | 1966 | அறநெறிப் பாடல்கள் |
| 57. மங்கள மலேசியா | வீ. கே. சுப்பிரமணியம் | 1966 | நாட்டுப்பற்றுப் பாடல்கள் |
| 58. பாட்டுப் பாடலாம் | சி. வேலுசுவாமி | 1967 | சிறுவர் பாடல்கள் |
| 59. மலேசியக் கழகப் பாடல்கள் | இரா. மணிமாறன் | 1967 | கொள்கைப் பாடல்கள் |
| 60. மாயை | இரா. பெருமாள் | 1967 | தத்துவச் சிந்தனை |
| 61. கவிதைப்பித்தன் கவிதைகள் | சி. வேலுசுவாமி | 1968 | தனிப்பாடல்கள் |
| 62. தகைமிகு சம்பந்தன் தமிழ் ஊஞ்சல் | கவிமணி கிருஷ்ணதாசன் | 1968 | ஊஞ்சல் இலக்கியம் |
| 63. நன்னிலை நானூறு | நாச்சிகுளத்தார் | 1968 | அறநெறிப் பாடல்கள் |
| 64. இளந்தளிர் | முரசு. நெடுமாறன் | 1969 | சிறுவர் பாடல்கள் |
| 65. மலைத்தேன் | சி. காவேரிநாதன் | 1970 | சிறுவர் பாடல்கள் |
| 66. ஒளிபிறந்தது | கன்னல்கவி ந. கரீம் | 1970 | கவிதை நாடகம் |
| 67. நபிமணி வெண்பா | நாச்சிகுளத்தார் | 1970 | அறநெறிப் பாடல்கள் |
| 68. நாகூரார் வெண்பா | நாச்சிகுளத்தார் | 1971 | அறநெறிப் பாடல்கள் |
| 69. கூட்டுறவுக் கவிதைகள் | கிருஷ்ணதாசன் (தொகுப்பாளர்) | 1971 | கவியரங்கப் பாக்கள் |
| 70. இசைக்கொத்து | ரெ. சண்முகம் | 1972 | இசைப்பாடல்கள் |
| 71. மலாய்க் கவிதை - தமிழாக்கம் | சி. வேலுசுவாமி | 1972 | மொழிபெயர்ப்பு |
| 72. முல்லையின் நினைவு | மோகன் (தொகுப்பாசிரியர்) | 1972 | கையறுநிலைப் பாடல்கள் |
| 73. அருளொளி முருகன் பாமாலை | எஸ். கே. வடிவேலு (தொகுப்பாளர்) | 1972 | பத்திப் பாடல்கள் |
| 74. இலக்கிய நாயகி சீதை | ரெ. இராமசாமி | 1973 | பல்சுவைப்பாக்கள் |

| எண் நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|
| 75. ஸ்ரீ முனீஸ்வரர் பாமாலை | சுவாமி இராமதாசர் | 1974 | பத்திப்பாடல்கள் |
| 76. வள்ளல் நாயகம் | சீனி நைனா முஹம்மது | 1974 | நெடும்பாட்டு |
| 77. அலையோசை | காரைகிழார் | 1975 | காவியம் |
| 78. கவிமஞ்சரம் | மா. இராமையா | 1976 | தனிப்பாடல்கள் |
| 79. அழகு பாட்டு | முரசு. நெடுமாறன் | 1976 | சிறுவர் பாடல்கள் |
| 80. அன்புப் பாட்டு | முரசு. நெடுமாறன் | 1976 | சிறுவர் பாடல்கள் |
| 81. அறிவுப் பாட்டு | முரசு. நெடுமாறன் | 1976 | சிறுவர் பாடல்கள் |
| 82. விநாயகர் புகழ்மாலை | க. முனியாண்டி | 1976 | பத்திப்பாடல்கள் |
| 83. பூக்கள் | பூ. முனியாண்டி | 1976 | தனிப்பாடல்கள் |
| 84. தமிழியக்கப் பாடல்கள் | கனிமொழி | 1977 | கொள்கைவிளக்கப் பாக்கள் |
| 85. கணைகள் | காரைகிழார் | 1977 | உணர்ச்சிப் பாடல்கள் |
| 86. வண்ணங்கள் | கரு. திருவரசு | 1977 | தனிப்பாடல்கள் |
| 87. உணர்வுகள் | டி. வி. இராகவன் பிள்ளை | 1977 | தனிப்பாடல்கள் |
| 88. மகிழம்பூ | சோமசன்மா | 1977 | தனிப்பாடல்கள் |
| 89. அரங்கேறிய கவிதைகள் | ம. த. எ. சங்கம் (தொகுப்பு) | 1977 | கவியரங்கப் பாக்கள் |
| 90. கலாவள்ளி காவியம் | ஓ .எம். காதிர் சுல்தான் | 1977 | காவியம் |
| 91. உணர்ச்சிகள் | இராசகோபாலன் | 1977 | தனிப்பாடல்கள் |
| 92. பூங்காராயா | எல். எம். பகதூர் | 1977 | சிறுவர் பாடல்கள் |
| 93. பூங்கொடி | இரா. பாண்டியன் | 1978 | குறுங்காவியம் |
| 94. கிணற்றுத்தவளை | சி. அன்பானந்தம் | 1978 | குறுங்காவியம் |
| 95. புயல் | கரு. வேலுச்சாமி | 1978 | உணர்ச்சிப்பாடல்கள் |
| 96. மறைமலையடிகள் பிள்ளைத்தமிழ் | சி. அன்பானந்தம் | 1978 | பிள்ளைத்தமிழ் |

| எண் நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|
| 97. இருபா இருபஃது அந்தாதி | ரெ. இராமசாமி | 1978 | அந்தாதி |
| 98. திருமுருகன் பாமாலை | எஸ். கே. வடிவேலு | 1978 | பத்திப்பாடல்கள் |
| 99. அன்புக் கனி | செ. சந்தனசாமி | 1978 | இசைப்பாடல்கள் |
| 100. மகமாயி மாரியம்மன் | வீ. கே. சுப்பிரமணியம் | 1978 | பத்திப்பாடல்கள் |
| 101. பத்ரகாளி அம்மன் | வீ. கே. சுப்பிரமணியம் | 1978 | பத்திப்பாடல்கள் |
| 102. அன்பு என்னும் தத்துவம் இஸ்லாம் | கா. பெருமாள் | 1978 | இசைப் பாடல்கள் |
| 103. தீப்பொறி | தீ. சி. பொன்னுசாமி | 1978 | உணர்ச்சிப் பாடல்கள் |
| 104. மாநாட்டு இலக்கியம் -1 | இரா. வீரசிங்கம் (தொகுப்பாளர்) | 1978 | தொகுப்பு |
| 105. மாநாட்டு இலக்கியம் -2 | இரா. வீரசிங்கம் (தொகுப்பாளர்) | 1978 | தொகுப்பு |
| 106. பாதாசனின் கவிதைகள் | பாதாசன் | 1979 | தனிப்பாடல்கள் |
| 107. நயனங்கள் | சா. ஆ. அன்பானந்தன் | 1979 | தனிப்பாடல்கள் |
| 108. கட்டைவிரல் | கா. பெருமாள் | 1979 | கவிதை நாடகம் |
| 109. உறவுகள் | ஆதம்குமார் | 1979 | தனிப்பாடல்கள் |
| 110. கனல் | அ. பு. திருமாலன் | 1979 | தனிப்பாடல்கள் |
| 111. வெள்ளிநிலவு | வீரமான் | 1979 | தனிப்பாடல்கள் |
| 112. மணிக்குயில் | கெடா த.இ.ம.ம.பேரவை (தொகுப்பு) | 1979 | தனிப்பாடல்கள் |
| 113. பூச்சரம் | காரைகிழார் | 1980 | தனிப்பாடல்கள் |
| 114. முத்தாரம் | எல்லோன் | 1980 | தனிப்பாடல்கள் |
| 115. தாமரைப் பூந்தேனீ | நா. ஆ. செங்குட்டுவன் | 1980 | அஞ்சலிப் பாக்கள் |
| 116. உதிரிப்பூக்கள் | பொன். அன்பரசன் | 1980 | தனிப்பாடல்கள் |
| 117. எரிமலை | திருக்குறள் மணியம் | 1980 | தனிப்பாடல்கள் |
| 118. திருமுருகன் இசைப்பாமாலை | எஸ். கே. வடிவேலு | 1980 | இசைப்பாடல்கள் |
| 119. முதல் மலர் | கரு. திருவரசு | 1981 | இசைப்பாடல்கள் |
| 120. அன்னை வேளாங்கண்ணி | வே. ஏசையா | 1981 | |

| எண் நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|
| 121. முதுமொழி வெண்பா முந்நூறு | ஹாஜி பி. சவுக்கத் அலி | 1981 | அறநெறிப் பாக்கள் |
| 122. புனித அன்னம்மாள் | வீ. கே. சுப்பிரமணியம் | 1981 | பத்திப்பாடல்கள் |
| 123. மாணிக்கக் கற்கள் | பழ. மனோகரன் | 1981 | தனிப்பாடல்கள் |
| 124. திருப்புமுனைகள் | கவிவாணர் ஐ. உலகநாதன் | 1982 | தனிப்பாடல்கள் |
| 125. மகரயாழ் | கவிவாணர் ஐ. உலகநாதன் | 1982 | தனிப்பாடல்கள் |
| 126. இளங்கோ கவிதைகள் | சீ. மா. இளங்கோ | 1983 | தனிப்பாடல்கள் |
| 127. முத்துச்சரம் | டி. வி. இராகவன் பிள்ளை | 1983 | தனிப்பாடல்கள் |
| 128. வேர்கள் | வெ. தேசகுரு | 1983 | தனிப்பாடல்கள் |
| 129. நாகூரார் சதகம் | நாச்சிகுளத்தார் | 1983 | சதகம் |
| 130. மணிமுழக்கம் | மீசல் பி. எம். அபூபக்கர் | 1984 | தனிப்பாடல்கள் |
| 131. பறவைக் கப்பல் | பொன்முடி | 1984 | சிறுவர் பாடல்கள் |
| 132. தோரணங்கள் | இரா. பாண்டியன் | 1985 | தனிப்பாடல்கள் |
| 133. ஸ்ரீ மதுரைவீரன் அலங்காரப் பாமாலை | எஸ். கே. வடிவேலு | 1985 | பத்திப்பாடல்கள் |
| 134. கடற்சோழன் கவிதைகள் | சோலை முனியன் | 1986 | தனிப்பாடல்கள் |
| 135. மொழிச்செல்வம் | பொன்முடி | 1986 | சிறுவர் பாடல்கள் |
| 136. நன்னெறிப் பாட்டு -1 | முரசு. நெடுமாறன் | 1987 | சிறுவர் பாடல்கள் |
| 137. எழுத்துப்பாட்டு - 1 | முரசு. நெடுமாறன் | 1987 | சிறுவர் பாடல்கள் |
| 138. எழுத்துப்பாட்டு - 2 | முரசு. நெடுமாறன் | 1987 | சிறுவர் பாடல்கள் |
| 139. எழுத்துப்பாட்டு - 3 | முரசு. நெடுமாறன் | 1987 | சிறுவர் பாடல்கள் |
| 140. இசைமூலம் இன்ப ம. இ. கா. | எம். எஸ். கோபாலன் (தொகுப்பு) | 1987 | இசைப்பாடல்கள் |
| 141. குமரன்மலைக் கவிப்பூக்கள் | க. இராமசாமி | 1987 | தனிப்பாடல்கள் |
| 142. பத்துமலை முருகன் திருவந்தாதி | டி. வி. இராகவன் பிள்ளை | 1987 | அந்தாதி |

## (ஆ) 1965முதல் 1987வரை சிங்கப்பூரில் வெளிவந்த தமிழ்க் கவிதை/பாட்டு நூல்கள்

சிங்கப்பூர் தனிநாடாய்ப் பிரிந்து குடியரசாகும்வரை அங்கு வெளிவந்த நூல்கள் மலேசிய நூற்பட்டியலில் சேர்ந்திருப்பதால், பின்னர் வெளிவந்த நூல்கள் மட்டும் இங்கு இடம்பெற்றுள்ளன.

* இக் குறியிடப்பட்ட நூல்கள் மலேசிய நூற்பட்டியலிலும் இடம்பெற்றுள்ளன.

| எண் | நூல் | ஆசிரியர் | ஆண்டு | வகை |
|---|---|---|---|---|
| 1. | சந்தனக் கிண்ணம் * | ஐ. உலகநாதன் | 1966 | தனிப்பாடல்கள் |
| 2. | தமிழருவி | முல்லைவாணன் | 1967 | தனிப்பாடல்கள் |
| 3. | திருமுருகன் | முருகதாசன் | 1973 | பத்திப்பாடல்கள் |
| 4. | மனிதச் சுவடு | சிங்கைமுகிலன் | 1975 | தனிப்பாடல்கள் |
| 5. | ஜமீலாவின் கவிதைகள் | கடையநல்லூர் ஜமீலா | 1975 | தனிப்பாடல்கள் |
| 6. | இதய மலர்கள் | க. து. மு. இக்பால் | 1975 | தனிப்பாடல்கள் |
| 7. | அன்பு என்னும் தத்துவம் இஸ்லாம் * | கா. பெருமாள் | 1978 | இசைப்பாடல்கள் |
| 8. | கட்டைவிரல் * | கா. பெருமாள் | 1978 | கவிதை நாடகம் |
| 9. | சிங்கப்பூர்ப் பாடல்கள் | கா. பெருமாள் | 1979 | இசைப்பாடல்கள் |
| 10. | உதிரிப்பூக்கள் * | பொன். அன்பரசன் | 1980 | தனிப்பாடல்கள் |
| 11. | கவியின் கனவு | ந. பழநிவேலு | 1981 | |
| 12. | பாத்தேறல் | மெ. இளமாறன் | 1981 | தனிப்பாடல்கள் |
| 13. | ஊஞ்சல் | முல்லைவாணன் | 1981 | சிறுவர் பாடல்கள் |
| 14. | வீணை | முல்லைவாணன் | 1981 | சிறுவர் பாடல்கள் |
| 15. | கரும்பு | முல்லைவாணன் | 1981 | சிறுவர் பாடல்கள் |
| 16. | முருகன் காவடிப் பாடல்கள் | மெ. இளமாறன் | 1982 | இசைப்பாடல்கள் |
| 17. | கவிக்குலம் போற்றும் தமிழவேள் | தொகுப்பு | 1982 | தனிப்பாடல்கள் |
| 18. | எதிரொலி | பரணன் | 1982 | தனிப்பாடல்கள் |

